# ஐரோப்பா

## கடந்த ஐந்து நூற்ருண்டுகாலச் சரித்திரம்

**(Europe: The Story of the Last Five Centuries)**

ஆசிரியர் :

**திரு. ஏ. ஜே. கிரான்ட்**

(லீட்ஸ் பல்கலைக்கழகத்து முன்னுள் வரலாற்றுப் பேராசிரியர்)

தமிழாக்கம் :

**திரு. வை. விருத்தகிரீசன்**, எம்.ஏ., எம்.லிட்., எல்.டி.,

ஓய்வுபெற்ற முதல்வர்,

அரசினர் பயிற்சிக் கல்லூரி,

குமாரபாளையம்.

**தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்**

த. பா. நி. (க.வெ.) வரிசை எண் —17

# ஐரோப்பா

## கடந்த ஐந்து நூற்ருண்டுகாலச் சரித்திரம்

**(Europe : The Story of the Last Five Centuries)**

ஆசிரியர் :

**திரு. ஏ. ஜே. கிரான்ட்**

(லீட்ஸ் பல்கலைக் கழகத்து முன்னுள் வரலாற்றுப் பேராசிரியர்)

தமிழாக்கம் :

**திரு. வை. விருத்தகிரீசன்,** எம்.ஏ., எம்.லிட்., எல்.டி.,

ஒய்வுபெற்ற முதல்வர்,

அரசினர் பயிற்சிக் கல்லூரி,

குமாரபாளையம்.

**தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்**

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி - உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினோராண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.யூ.சி., பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், தத்துவம், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'ஐரோப்பா-கடந்த ஐந்து நூற்றாண்டு காலச் சரித்திரம்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் சார்பில் வெளியான 17ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும் தமிழைப் பயிற்சிமொழியாகக் கொண்ட மாணவர்களின் நல்லூக்கத்தினாலும் இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின், இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகின்றது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முன்னுரை

தாய்மொழி வாயிலாக அமையும் கல்வியே தலைசிறந்த கல்வியாகும். இந் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு தமிழகப் பல்கலைக் கழகத்தில் அடங்கிய கல்லூரிகளில், விஞ்ஞானப் பாடம் தவிர ஏனைய பாடங்களைத் தாய்மொழி வாயிலாகவே கற்றல் வேண்டும், கற்பித்தல் வேண்டு மெனத் தமிழ்நாட்டு அரசியலார் சில ஆண்டுகளுக்குமுன் ஒரு திட்டத்தைத் தீட்டினர். இதையொட்டி, பி.ஏ. கலைப் பட்டப்படிப்பிற்கு உரிய பாடங்களான வரலாறு, பொருளா தாரம், அரசியல், நிலவியல், உளநூல் போன்றவை கல்லூரி களில் நம் தாய்மொழியில் கற்பிக்கப்பட்டு வருகின்றன. பாடங்களைக் கற்கும் மாணவர்களுக்குப் பாடப் புத்தகங்கள் இன்றியமையாதனவாய் இருப்பதால், அதற்கெனத் தமிழ் நாட்டு அரசாங்கத்துத் தமிழ் வெளியீட்டுக் கழகத்தார், பல்கலைக் கழகத்தாரால் வரையறுக்கப்பட்ட பாடத்திட்டத் திற்கு ஏற்ப நூல்களை எழுதவும், தமிழாக்கம் செய்யவும் முயன்றுள்ளனர்.

ஐரோப்பிய வரலாற்றைச் [1500 முதல் இன்று வரை] சிறப்பாக எழுதியுள்ள ஏ. ஜே. கிரான்டு என்பாரின் நூலைத் தமிழ்ப்படுத்துமாறு, தமிழ் வெளியீட்டுக் கழகத்தார் என்னைப் பணித்தனர். தமிழன்னைக்குப் பணிபுரிய வாய்ப்பேற் பட்டதை மனத்தில் கொண்டு தமிழாக்கத்தைச் செய்துள் ளேன். மொழிபெயர்ப்பில் குறைகள் ஆங்காங்குக் காணப் படலாம். அச்சுப் பிழைகளும் உள்ளன. ஆயினும், மூல நூலின் கருத்துகள் மாற்றமடையாமலிருக்க முயன்றுள்ளேன்

இந் நூலைக் கற்போர், குறைபாடுகளை எனக்குத் தெரிவிப்பின், அவற்றை நன்றியுடன் ஏற்றுக்கொள்வேன்; அடுத்த பதிப்பில் அவற்றை நீக்குதற்கு எனக்கு அது மிகவும் உதவும்.

இப் பெரும்பணியை எனக்களித்த தமிழ் வெளியீட்டுக் கழகத்தாருக்கு என்றென்றும் நன்றி உள்ளவனுவேன். பணியைச் செய்யுங்கால் அடிக்கடி ஊக்குவித்து ஆதரவும் அன்பும் அளித்தவரும், தமிழன்னைக்குத் தலையாய பணி புரிந்து தமிழர்களின் அறிவுச் சுடரை மேலோங்கச் செய்கிற வரும், பேராசிரியரும், பெருந்தகையாரும், தமிழ் வெளி யீட்டுக் கழகச் செயலாளருமான உயர்திரு அ. ச. ஞான சம்பந்தம், எம்.ஏ. அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றி உரியதாகுக.

இப் பணியை மேற்கொள்ளுவதற்கு இணக்கம் அளித்த தமிழ்நாட்டு அரசியலாருக்கும், பொதுக்கல்வி இயக்குநருக்கும் நான் கடப்பாடுடையேன்.

அதனுடன் இப் பணியை நிறைவேற்றுங்கால் எனக்குப் பேருதவியாயிருந்த திருவாளர் கு. சிவமணி, எம்.ஏ. பி டி., வித்துவான்கள் சு. சேனுதிபதி, அ. நடராசன் ஆகியோருக் கும், நூல் அச்சிடுங்கால் பிழைகளைத் திருத்தியும், உரை நடையைச் செப்பனிட்டும் உதவிய உயர்திரு மகா வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களுக்கும் எனது நன்றி உரித்தாகுக.

இடம் : குமாரபாளையம்,
தேதி : 2—10—'63.

வை. விருத்தகிரீசன்

# நூலாசிரியரின் முகவுரை

இந் நூல், 1924-ல் முதன்முதலாக வெளிவந்த 'ஐரோப்பிய வரலாறு' எனும் நூலின் மூன்ருவது பகுதியின் சிறப்பான மறுபதிப்பாகும். இரண்டாம் உலகப் போரின் பொழுது லண்டன் நகரம் குண்டு வீச்சிற்கு இரையான அமயத்தில், இந்நூல் முழுமையும் இதனுடன் பல்வேறு பிரிவுகளாக வெளியிடப்பட்டிருந்த நூல்களும் சேதமுற்று அழிந்து போயின. மூன்ருவது பகுதி மட்டும் தனிநூலாக இப்பொழுது வெளிவருகிறது. ஓரளவு புதிய செய்திகள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. முதற்கண், முன்னுரையாக ஓரதிகாரம் எழுதிச் சேர்க்கப்படுகிறது. இது தொடர்ந்து வரும் நூற்ருண்டுகளின் வாழ்க்கையைச் சார்ந்துள்ள, பெரிய அரசுகள், சமயம், வாழ்க்கை பற்றிய முக்கியமான ஆற்றல்கள் முதலியவை பற்றிய கருத்துகளைக் கற்போருக்கு அளிக்கும் நோக்குடன் எழுதப்பட்டதாகும். அடுத்து, முதலாவது உலகப் போருக்குப்பின் ஏற்பட்ட செய்தித் தொகுப்புத் திருத்தி எழுதப்பட்டுள்ளது. இரண்டாவது உலகப்போர் மூண்டது, அக்காலத்து நம்பிக்கைகள், எதிர்நோக்கிய கருத்துகள் முதலியவை நம்முடைய காலத்திற்கு எவ்விதத் தொடர்பு மில்லாமல் செய்ததே திருத்தியதற்குக் காரணமாகும். போரைப்பற்றிய சிறு வரலாற்றுக் குறிப்பும், ஐரோப்பாவின் அமைப்புப் பற்றிய சில கூறுகளும் சேர்க்கப்பட்டுள்ளன. உலக வரலாறு என்றில்லாமல், ஐரோப்பிய வரலாருய் இருக்க வேண்டுமென இந்நூல் திட்டமிடப்பட்டது. ஆனல், இதை எழுதும்பொழுது என் உள்ளத்தில் ஒரே ஒரு கருத்து வன்மையாக வேரூன்றியது. அஃதாவது, ஒரு தனியரசின்

சிறப்பை விடுத்து அதற்கப்பால் காணப்படும் ஐரோப்பாவின் வாழ்க்கையை நோக்க வேண்டுவது அவசியமாகும் என்பதற்கான வாதங்கள் எல்லாம், ஐரோப்பாவின் வரலாற்றையே உலக வரலாற்றுடன் ஒன்ருக இணைத்துவிடுவதற்கு நோக்கிச் செல்லுவதே என்பதாகும். வருங்காலத்தில், ஐரோப்பாவின் வாழ்க்கையில், கிழக்கு ஆசியா, ஆப்பிரிக்கா, அமெரிக்க ஐக்கிய நாடுகள் முதலியவை உறுதியான செல்வாக்கைப் பெறுவதற்கு வாய்ப்பிருக்கக் கூடும். ஆனல், இனிவரும் நூற்ருண்டுகளில் ஐரோப்பாவின் ஊழ் எவ்வாறிருப்பினும், கடந்த காலத்தில் ஐரோப்பாவிடம் உண்மையான ஒற்றுமை காணப்பட்டதுடன் ஐரோப்பாவின் அரசியல், நாகரிகம், சமயம் போன்றவை பெற்ற வளர்ச்சி, மனித சமுதாயத்தின் வாழ்க்கையில் மிகவுயர்ந்த உண்மையுடையதாயும் இருக்கும். கவர்ச்சியுள்ள அவ் வரலாற்றைத்தான் இந்நூலில் சுருக்கிக் கூறுவதற்கு முயன்றுள்ளேன்.

ஏ. ஜே. கிரான்ட்

## பொருளடக்கம்

## படங்கள்

| எண் | | பக்கம் |
|---|---|---|

# நான்முகம்

காலத்தின் அடிப்படையில் வரலாற்றைப் பண்டைக்காலம், இடைக்காலம், இக்காலம் எனப் பிரித்துக் கூறுவது மரபில் வந்துள்ளது. ஆனால், இடைக்காலத் தொடக்கத்தில் வாழ்ந்த மக்கள், தாங்கள் பண்டைய கிரேக்கக் காலத்திலிருந்து வரலாற்று இடைக்காலத்திற்கு வந்ததையும், அதே போலப் பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் புதிய காலம் தொடங்கிற்று என்பதையும் அறியார்கள். ஆயினும், வரலாற்றை மேற்கூறியபடி பிரித்துக்கொள்ளுவது, நமக்குக் கற்பதற்கு எளிதாகவும் உதவியாகவும் உள்ளது. எனினும், இப்படிப் பிரித்துக்கொள்ளும்போது, பிரிக்கும் கோடு எவ்விதத்திலும் தெளிவில்லாதிருப்பதையும், ஒரு பிரிவில் காணப்படும் இயல்புகள் அடுத்த பிரிவில் காணப்படுவதையும், அவை முற்றிலும் துடைத்து அழிக்கப்படவில்லை என்பதையும் நாம் கருத்திற்கொள்ள வேண்டுவது இன்றியமையாததாகும்.

சமய வரலாற்றை இவ்வாறு கால அடிப்படையில் பிரிக்கும்போது, பிரிவுக்கான நிலைகளை நன்கு காண முடிகிறது. கத்தோலிக்கத் திருச்சபை அதிகாரத்திலும் செல்வாக்கிலும் பெரிதும் மேன்மையுற்றிருந்தமை, இடைக்காலத்தின் சிறப்பாகும். அப்பொழுது ஐரோப்பா பொதுவான சமயத்தையும், மனச்சாட்சியையும் பெற்றிருந்தது. சரியா தவறா என்பதைக்கூடக் கருதாமல் மனித வாழ்க்கையின் பயனும் முடிவும் எல்லோருக்கும் ஒரே மாதிரிதான் என்ற எண்ணம் ஐரோப்பிய நாட்டு மக்களிடையே நிலவியது. இணையாகச் சமயம் ஒழுக்கம் முதலியவைகளில் காணப்பட்ட ஒற்றுமைக்கேற்ப அரசியல் ஒற்றுமையையும் ஏற்படுத்த வேண்டுமென்பதற்காக முயற்சிகளும் நடந்தன. ஆனால், அவை வெற்றிபெறவில்லை. வலுவற்றிருந்த ரோமன் கத்தோலிக்கத் திருச்சபைக்கு அறைகூவலும் தோல்வியும் தோன்றிய போது இடைக்காலத்தின் இறுதியும் இக்காலத்தின் தொடக்கமும் காணப்பட்டன. 1517-ல் மார்ட்டின் லூதரின்[1] கலகம் ஏற்பட்ட

[1] Martin Luther.

பொழுதுதான் கத்தோலிக்க சமயத்தில் பிளவு தோன்றியதெனினும், அதற்குப் பலநாள்களுக்கு முன்னரே பழைய முறை ஆட்டம் கண்டிருந்தது. எனவே, 1494ஐப் புதிய காலத்தின் தொடக்கநாள் என்று கொள்ள வேண்டுவதாயிற்று. இவ்வாண்டில் பிரெஞ்சுப் படைகள் இத்தாலி நாட்டின்மேல் படையெடுத்ததைத் தவிர ஐரோப்பாவில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி வேறொன்றுமில்லை. நிகழ்ச்சிகளை முறையாக விவரித்துக் கூறப்புகுமுன் இடைக்காலம் முடிந்து இக்காலம் தொடங்குவதற்குள் ஐரோப்பாவில் நடந்த சில முக்கியமான கூறுகளைக் காண்போம்.

## சமய மாற்றம்

கத்தோலிக்கத் திருச்சபை மிகப் பெரிய அளவிற்குப் பிளவுபடும் தறுவாயிலிருந்தது. 16ஆம் நூற்றாண்டு முடியுமுன்பே மேற்கு ஐரோப்பாவிலுள்ள மக்களுட் பெரும் பகுதியினர் இத்திருச்சபையைப் புனிதத் தன்மையுடன் நோக்குவதையும் இதற்குக் கீழ்ப்படிந்து நடப்பதையும் விட்டுவிட்டனர். ஏற்கெனவே, 9ஆம் நூற்றாண்டிலேயே, ரோமத் திருச்சபைக்குக் கீழ்ப்படிதலிலிருந்து கீழைத் திருச்சபை பிரிந்துபோயிற்று. கத்தோலிக்கத் திருச்சபைக்கு வரவிருந்த பேரிடரை, மக்கள் உணர்ந்திருந்தார்கள் என்பதற்கான அறிகுறிகள் காணப்படவில்லை. அதனுடன் திருச்சபையின் நிலைமையும் மிக நெருக்கடியான நிலையிலிருந்தது என்பதனையும் ஒருவரும் எண்ணவில்லை. இதற்கு நேர்மாறாக எல்லாக் கடுமையான இடையூறுகளினின்றும் தப்பியதாயும், மேற்கு ஐரோப்பாவில் நிலையான பாதுகாப்பிருந்ததாயும், கத்தோலிக்கத் திருச்சபை கருதிற்று. 14ஆம் நூற்றாண்டில், திருச்சபை நிறுவனத்திற்கும் பற்றுறுதிக்கும் பல பேரிடர்கள் நிரம்பியிருந்தன. பிரெஞ்சு மன்னர்கள் போப்பாண்டவர்களை ரோமிலிருந்து கைதிகளாகக் கடத்திச் சென்று அவினன் என்னுமிடத்தில் வசிக்குமாறு செய்தனர். பல்லாண்டுகள் வரை ரோமிலும் அவினனிலும்[1] இரு போப்பாண்டவர்கள் ஒருவர்க்கொருவர் எதிராக ஆட்சி புரிந்தது, ஐரோப்பிய மக்களுட் பெரும்பகுதியினர் திருச்சபையிடம் கொண்டிருந்த நம்பிக்கை அன்பு இவற்றின் பற்றைத் தளரச் செய்தது. இக்காலத்தில் திருச்சபையின் ஒழுங்கு முறைகள், கோட்பாடுகள் முதலியவற்றிற்கு உறுதியான அறைகூவல்கள் இருந்து வந்தன. திருச்சபையின் போதனையையும் பழக்கங்களையும் புனிதப்பொருள் மாறும்[2] கொள்கையினையும் ஏற்கெனவே இங்கிலாந்தில் விக்லிஃப்[3] என்பாரும் பின்பு பொஹீமியாவில் ஹஸ்[4] என்பாரும் நேரிடையாகவே தாக்கியுள்ளனர். இவ்விடையூற்றை அடக்குவதற்குக் கையாண்ட முறைகளே ரோமத் திருச்சபையின் மேலாண்மைக்கு

[1] Avignon. [2] Transubstantiation. [3] Wycliff. [4] Huss.

அச்சுறுத்துதலை விளைவிப்பனவாயிருந்தன. போப்பாண்டவரின் மேலாண்மை உரிமையை விடுத்து, திருச்சபை மன்றங்களுக்கு முறையீடுகள் செய்யப்பட்டன. திருச்சபையின் முடியரசு கோட்பாட்டிலிருந்து பிரபு நாயகத்திற்கு முறையீடுகள் செய்யப்பட்டன. மன்றங்கள் முதலில் கான்ஸ்டன்ஸிலும்[1] பிறகு பேஸிலிலும்[2] கூடின. மன்றங்களின் முயற்சிகளாலும், திருச்சபைக்குப் பகையாயிருந்தவர்களுக்குள் உண்டான பிரிவுகளாலும், போப்பாண்டவரின் அதிகாரத்திற்கெதிராய் எழுந்த இடையூறுகள் மறைந்தன. ஒரே போப்பாண்டவரின் ஆட்சி மீட்கப் பெற்றது. புறச்சமயங்கள் அடக்கப்பட்டு, தலைமறைவாயின. மன்றங்கள் கூட்டப்படவில்லை. 15ஆம் நூற்றாண்டின் இறுதியில் திருச்சபையின் அதிகாரம் மீட்கப்பட்டது போலத் தோன்றியதுடன் அதன் போதனைகளுக்கும் கொள்கைகளுக்கும் வெளிப்படையான அறைகூவல் இல்லாதிருந்தது. மதச் சீர்திருத்த இயக்கம்[3] தோன்றிய பொழுது ஐரோப்பாவில், திருச்சபை மிக்க செல்வம் படைத்த நிறுவனமாயிருந்தது. செல்வத்திலும் மதிப்பிலும் இதற்கீடாக ஒரு முடியரசுமில்லை. இச்சபைகள் ஐரோப்பா முழுவதிலும், அண்டையிலுள்ள தீவுகளிலும் பரவின. அதனுடன் கிரேக்க ரோமப்பேரரசு காலங்களிலும் ஆக்கப்படாத கட்டடக் கலையின் அழகும் அவைகளில் மிளிர்ந்து காணப்பட்டது. ஐரோப்பாவின் போதனைகள் எல்லாம் திருச்சபைகள் வழியாக நடந்ததுடன் பல்கலைக் கழகங்களும் திருச்சபையோடு நெருங்கிய கூட்டாய் இருந்தன. இந்நிலைமை பற்றி 16ஆம் நூற்றாண்டிலிருந்த கத்தோலிக்கப் பெரியார் ஒருவர், 'அமைதியைப் போன்று இடருள்ள புயலுமில்லை, பகையில்லாததைப் போன்ற இடருள்ள பகையுமில்லை,' எனக் கூறியுள்ளார். 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதியின் திருச்சபையின் வரலாறு இக்கூற்றைத் தெளிவாக்குகிறது. திருச்சபைக்கு வெளியிலிருந்து இடையூறுகள் காணப்படவில்லையெனினும், அதற்குள்ளேயே சோர்வும் ஊழலும் மலிந்திருந்தன. திருச்சபை செல்வத்தையும் ஆதிக்கத்தையும் பெற்றது; சமயம் சார்ந்த குழு என்பதன் அடையாளங்களை இழந்தது. சமயம் என்னும் அதன் அரண்கள் தாக்கப்படாமலிருந்தன என்றாலும், அதனுள் வைக்கப்பட்டிருந்த படைகள் கட்டுப்பாடின்றியும் கவலையின்றியுமிருந்தன. அதற்கு எதிராக வெளிப்படையான கலகம் சிறிதும் இல்லை என்பது போல அதனிடத்தில் ஒருமுகப் பற்றுறுதி கொண்டவர்களும் இல்லை.

## மறுமலர்ச்சி

திருச்சபையின் அதிகாரம் பார்ப்பதற்குக் குறைவுறாததாய்த் தோன்றியது. அதன் மதிப்பும் பெயரளவில் முன் போலவே

[1] Constance. [2] Basel. [3] The Reformation.

ஓங்கியிருந்தது என்றாலும், ஐரோப்பாவில் சில காலமாகவே உறுதியான பகைமை என்பது இல்லாமலிருந்தும், கருத்து, கலை முதலியவைகளில் ஓர் இயக்கம் இருந்து வந்தது. இது மக்களின் எண்ணம், மனச்சான்று இவற்றின் மேல் திருச்சபை கொண்டிருந்த ஆதிக்கத்தைக் குறைத்தது. இவ்வியக்கம் பொதுவாக 'மறுமலர்ச்சி'[1] எனப்படும். இப் பெயர் சில காரணங்களைக் கொண்டு பார்த்தால், நற்பேறற்ற பெயராகும். ஏனென்றால், இப்பெயர் இடைக்காலத்தில் மக்களுக்கு அறிவாற்றலில்லை எனக் கருத இடந்தருவதுடன் கிரேக்க ரோம இலக்கிய அறிவு உயிர்ப்பித்தலை அழுத்தமாகக் கூறுவதாயு மிருக்கிறது. ஆனால், உண்மை அதுவன்று. இப்புதுப்பிறப்பு (மறுமலர்ச்சி என்பதற்குப் புதுப்பிறப்பு என்பது பொருளாம்) முதற்கண் கிரேக்க ரோமானியர்களின் கலைக் கருத்துப் பற்றிய அறிவை மீண்டும் பெறுதலையே கொண்டிருந்தது என்பது வழக்கமாகக் கருதப்பட்டது. பண்டைக் கல்வியை மீளப் பெறுவது என்பது முக்கியத்துவம் வாய்ந்ததாயும் செல்வாக்கை உண்டு பண்ணுவதாயு மிருந்தது என்பது உண்மைதான். எனினும், அப்போது ஏற்பட்ட அறிவாற்றல் இயக்கம் தோன்ற அது காரணமாகாது. ஆனால், அதன் விளைவாக அறிவாற்றல் இயக்கம் எழுந்ததெனலாம். பண்டைய இலக்கியங்களைப் படித்ததால் மக்கள் விழித்தெழவில்லை! ஏற்கெனவே, விழிப்புண்டாயிருந்ததால் மக்கள் பண்டைய இலக்கியங்களைப் படித்தார்கள். பழம்புகழ் வாய்ந்த கிரேக்கக் கலைகளின் அறிவும், மேற்கு ஐரோப்பிய மக்கள் மனத்திலிருந்து மங்கவில்லை. புகழ்பெற்ற பண்டைப் பெரியோர்களின் பெயர்களை, அவர்களைப்பற்றி நன்கறியா திருந்தும், மிக்க மதிப்புடன் மக்கள் போற்றினர்கள். 1300-க்குப் பின் தாந்தே[2] தம் நூல்களில் கிரீஸ், ரோம் முதலியவை பற்றிக் குறித்துள்ளார்; ஏதென்ஸ் நகரை எல்லா அறிவும் தோன்றுமிடம் எனக் குறித்துள்ளார். சிறிது காலத்திற்குப்பின், (பிரெஞ்சு) கலப்ரிய மாலுமியினிடமிருந்து[3] பெட்ரார்க்கு[4] என்பார், கிரேக்க மொழியைச் சிறிது கற்றார். 14ஆம் நூற்றுண்டின் இறுதிக்குள் இத்தாலியப் பல்கலைக்கழகங்கள் கிரேக்க மொழியை முறையாகக் கற்பிக்கத் தொடங்கின. அது முதல் இத்தாலியிலிருந்து கல்வியறிவு மேற்கு ஐரோப்பா முழுதும் நன்கு பரவலாயிற்று. மக்கள் முதலில் பரவி வரும் இக் கல்வியை நுண்ணுராய்வில்லாது, ஆர்வத்துடன் வரவேற்றனர் திருச்சபையால் உரிமை கொண்டாடப்பட்ட கட்டுப்பாடுகளுக்கு மாறாக, இக்கல்வி எதையும் விருப்பத்துடன், தடையின்றி ஆய்ந்தறியும் ஊக்கத்தை நோக்கமாகக் கொண்டிருந்ததால், மக்கள் இதை வரவேற்றார்கள் கிரேக்க இலக்கிய எழுச்சிக்குப் பின் இருந்ததைக் காட்டிலும் முன்னதாகவே, இத்தாலியில் புகழ் வாய்ந்த கவிஞர்களும் (குறிப்பாகத் தாந்தேயும், பெட்ராார்க்கும்) எழுத்தாளர்களுமிருந்தார்கள்.

[1] The Renaissance. [2] Dante. [3] Calabrian sailor. [4] Petrarch.

எனினும், ஐரோப்பிய இலக்கியத்தின் அமைப்பையும் போக்கையும் பரந்து பதிந்துவந்த புதுக்கல்வியின் வளர்ச்சி வெகுவாகப் பாதித்தது. இதன் விளைவாகச் சமயச் சீர்திருத்த இயக்கம் தொடங்கிய போது கற்றறிந்தோர் சமய நூல்களின் மூலங்களைப் புரட்டிப் பார்த்துச் சொற்களை ஆயத் தொடங்கினர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இது போன்று மூலத்தைப் புரட்டி முறையிட்டவர் பிராட்டஸ்டென்டுகள் மாத்திரமல்லர். புதிய ஏற்பாட்டின் முதற்பதிப்பைக் கிரேக்கமொழியில் வெளியிட்டவர் இராஸ்மஸ்[1] என்னும் டச்சுக்காரர் ஆவர். அவர் லூதரின் இயக்கத்தில் சேர மறுத்ததோடமையாமல், அவ்வியக்கத்தைக் கண்டித்தும் எழுதினர்.

## புது இலக்கியம்

மேற்கூறியவாறு, பண்டைக் கல்வியறிவு,[2] முதன்மையான முக்கியத்துவமுற்றிருந்த போதிலும், அது ஒருபோதும் மறுமலர்ச்சி இயக்கத்திற்கு முழுக்காரணமாக அமையாது. 16ஆம் நூற்றுண்டில் ஐரோப்பாவிலுள்ள ஒவ்வொரு நாட்டிலும் இலக்கிய வளர்ச்சியும் கலைகளின் வளர்ச்சியும் இருந்தன. ஆயினும், இவ்வளர்ச்சி இத்தாலியில் மிகவும் முற்பட்டதாயும், அதனுடன் இவ்வியக்கத்தினல் உண்டான மிக்க புகழ் வாய்ந்த இலக்கியப் படைப்புகளும் இங்குக் காணப்படுவனவாயிருந்தன. கவிஞர் தோன்றியிரா விட்டால், தாந்தேயின் பொருட் செறிவும் மாண்பும் பொருந்திய இலக்கியத்தோடு எவர் தாம் போட்டியிட இயலும்? இத்தாலியிலும், மேற்கு ஐரோப்பா முழுவதிலும் மிகவும் போற்றப்பெற்ற எழுத்தாளர் பலர் இருந்ததோடன்றிப் பல தலைமுறை வரை, அவர்களது புசழையும் அவர்கள் நிலைநிறுத்தினர்கள். அரியோஸ்டோ[3] (1474-1533) என்பார் அவரது 'அர்லாண்டோ ஃபியூரியோஸோ'[4] என்னும் நூலில் இடைக்காலத்தில் நெடுங்காலம் மக்களால் போற்றப் பெற்று வந்த சார்ல்மெயின்[5] அவர்தம் அரசவையார் (பாலடின்கள்)[6] பற்றிய கதைகளை மீண்டும் கூறியுள்ளார். இந் நூலில் அவரால் புதியனவாகச் சேர்க்கப்பட்ட பல கதைகள் காணப் படுவதுடன் சிறந்த கிரேக்க ரோமானியர்களின் நூல்களின் செல்வாக்கும் காணப்படுகின்றது; மேலும், வியப்பூட்டும் சந்த அமைப்பும் எதுகை மோனையும், இலக்கிய நடையழகும், நகைச்சுவையும், கற்பனைத் திறனும், இரட்டுற மொழிதலும் மலிந்து காணப்படுகின்றன. இத்தாலியக் கவிஞருள் அடுத்தவர் டஸ்ஸோ[7] (1493-1569) என்பவர் ஆவர். ரோமத் திருச்சபையாருக்கு முற்றிலும் உகந்த முறையில் பூயிலான் நாட்டு ஜ்யாஃப்ரே[8]யைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நிகழ்ந்த முதலாவது சிலுவைப் போரின் வரலாற்றை 'எருசலேம்

[1] Erasmus. [2] Classical learning. [3] Ariosto. [4] Orlando Furioso.
[5] Charlemagne. [6] Paladins. [7] Tasso. [8] Geoffrey of Bouillon.

மீட்கப்பட்டது' (Jerusalem Delivered) என்ற நூலில் புனைந்துரைத்துள்ளார். உரைநடை இலக்கியத்திலும் சிறந்த பல படைப்புகள் இருந்தன. இடைக்காலத்தில் இருந்ததைப் போலன்றி, அறிவியல் உணர்வின் அடிப்படையிலும் தருக்க முறையிலும் ஆராயப்பெற்ற வரலாறும் எழுதப்பட்டது. இத்தாலிய வரலாற்று ஆசிரியர்களில் குயிசியார்டினி[1]யும் மாக்கியவல்லியும்,[2] (1469-1527) மிகச் சிறந்தவராவர். இவர்களுள் 'இளவரசன்' (The Prince) என்ற அரசியல் தனி நூலை எழுதிய மாக்கியவல்லியை உலகம் நன்கறியும். இந்நூல் இத்தாலி நாட்டு ஃப்ளாரன்ஸ் பகுதியில் வாழ்ந்த மெடிசி என்பார்க்கு உரிமையாக்கப் பெற்றிருந்தது. இந்நூலில் அரசியல் வல்லுநர் ஒழுக்க வரம்பிற்குட்பட்டவர் அல்லர் என்பது கூறப்பட்டுள்ளது. 'இளவரசர் அதிகாரத்தை நிலைபெறச் செய்வதற்காக, கொள்கை, ஈகை, மனிதத் தன்மை, சமயம் முதலியவற்றை எதிர்த்து நடக்க வேண்டும்,' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. 16ஆம் நூற்றுண்டின் பண்பாட்டிற்கேற்ப எழுதப்பட்ட நூல்களில் இது மிகச் சிறப்பு வாய்ந்த நூலாகத் திகழ்வதுடன் இன்றும் அரசியல் அறிஞர்களிடையே செல்வாக்கிற்கும் விவாதத்திற்கும் உரியதாய் உள்ளது.

மற்றவைகளைவிட இசை, கட்டடக் கலை, சிறப்பாக ஓவியம் போன்ற பல்வேறு நுண்கலைகளின் சாதனைகளால் மறுமலர்ச்சிக் காலம் புகழ் பெற்றிருந்தது. இவற்றுள்ளும் கிரேக்க ரோமானியப் பண்பாடுகள் புத்துயிர் பெற்று, முக்கியச் செல்வாக்கைப் பெற்றிருந்தன. ஆனால், இத்தாலியக் கலைகள் தனிச்சிறப்புற்றனவாயும் மேலும் புரட்சியுடையனவாயும் விளங்கின. 13ஆம் நூற்றுண்டின் இறுதியிலிருந்து சற்றேறக்குறைய இரண்டரை நூற்றுண்டுகள் வரை, ஓவியக் கலையைப் புகழ் வாய்ந்த கலைஞர்கள் முறையாக வளர்ச்சியுறச் செய்ததுடன், ஐரோப்பாவையே புதிய கருத்தோடு வளமாக்கினர்கள். இவ்வியக்கத்தின் தொடக்கத்திலிருந்த கியாட்டோ[3] (1276-1336) விலிருந்து தொடங்கி, மைக்கேல் ஆஞ்சலோ[4] (147-41564) இரஃபேல்[5] (1483-1520) முதலியவர்களுடைய வாழ்நாள்களில், இக்கலை உச்சநிலையை அடைந்தது.

## மலர்ச்சியும் திருச்சபையும்

இப்புத்துணர்ச்சி, திருச்சபைக்கும், கத்தோலிக்கக் கொள்கைக்கும் எதிராகக் கிளர்ச்சியை உண்டுபண்ண வில்லை. திருச்சபை உண்மையில் இதற்குத் தலைமை ஆதரவாயிருந்தது. எனவே, பிராட்டஸ்டென்டு தலைவர்களில் சிலர் இதை வெறுப்புடனும் ஐயத்துடனும் கருதினர்.

[1] Guicciardine. [2] Machiavelli. [3] Ciotto. [4] Michael Angelo. [5] Raphael.

இத்தாலிய நாட்டிற்கு வெளியே, கிரேக்க ரோமானிய நாகரிகத்தில் திளைத்த சர் தாமஸ் மோர்[1] கத்தோலிக்கக் கொள்கைக்காக உயிர்த் தியாகம் செய்தார். இராஸ்மஸ், லூதரின் தாக்குதல்களிலிருந்து அதைப் பாதுகாத்தார். இரஃபேல், குருமார்களுடைய ஒழுங்கமைப் பிலிருந்தார். மான்டேயின்[2] என்பவர், பிரெஞ்சுப் பிராட்டஸ்டென்டு களின்மீது தமக்கிருந்த பெருவெறுப்பைத் தெரிவித்தார். புத்துணர்ச்சி யில் காணப்பட்ட அறிவியக்கம், திருச்சபைக்கு எதிராகக் கலகம் செய்யவில்லை என்றாலும், அதற்குத் தீமை பயப்பதாயிருந்தது; இடைக்கால முறையில் காணப்பட்ட ஒருமைப்பாட்டை முறித்தது. திருச்சபை இவற்றில் பெரும் பகுதியை அனுமதிக்காமை, மக்களி டையே ஆர்வத்தையும் தனி நலத்தையும் உண்டுபண்ணியது ; தனி மனிதனைச் சிறப்பித்ததோடு உய்த்துணரும் ஆற்றலையும் வளர்த்தது. பிராட்டஸ்டென்டு சமயத்தை இது தோற்றுவிக்கவில்லை. ஆனால், இடைக்காலத்தில் திருச்சபைகள், நன்மைக்கோ தீமைக்கோ, மனி தனின் கருத்தின் மீது கொண்டிருந்த கட்டுப்பாட்டைத் தகர்த்தது

## புதிய அரசுகள்

திருச்சபை அதன் செல்வநிலையாலும், நாடு முழுவதிலும் பரவியிருந்ததாலும், பொருள் துறையிற் காணப்பட்ட ஊழல் களாலும், ஒழுக்கக் குறைவாலும் எதிர்ப்பை எதிர்கொண்டழைத்தது இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு பயனடையச் சில அரசுகள் விழைந்தன. அவை ஐரோப்பாவில் கடந்த 50 ஆண்டுகளாய் ஆதிக்கம் பெற்று வளர்ந்து மாறிய இயல்புகளைப் பெற்ற முக்கிய அரசுகளாய் இருந்தன. 20ஆம் நூற்றாண்டில் அமைந்த அரசு என்பது எதுவாயிருந்ததோ, அதற்கு முற்றிலும் மாறுபட்டதாகவே அக்காலத்து அரசு பற்றிய கருத்து இருந்தது. வரையறை இல்லாத அதிகாரங்களைக்கொண்ட பெருங்கடல் உயிரினமாக மக்கள் அதைக் கருதி வரவேற்கவில்லை. அரசை, சர்வாதிகார ஆட்சியென்றும் ஒரு வரும் கூறவில்லை. அதனுடன் தொட்டிலிலிருந்து சுடுகாடு வரை மனித வாழ்க்கையை அது கட்டுப்படுத்தவோ, அழைத்துச் செல்லவோ முடியுமென்று கற்பனையும் செய்யவில்லை. 1946-ல் ஐரோப்பாவிலிருந்த அரசுகள் கொண்டிருந்த அதிகாரங்களைக் காட்டிலும், 1500-ல் இருந்த அரசுகள் அதிகாரத்தில் குறைந்து காணப்படினும், ஒரு நூற்றாண்டுக்கு முன்னிருந்ததைவிட, அவை வலிமை பெற்றிருந்தன. மானிய முறை விரைவாக எங்கும் வலியிழந்துகொண்டிருந்ததோடு நாட்டிலிருந்து மறைந்துகொண்டு மிருந்தது. இடைக்காலத்தில் வழக்கமாக நிகழ்ந்ததைப்போன்று சுதந்தரத்துடன் போப்பாண்டவரின் சார்பாளர்கள் (பிரதிநிதிகள்)

[1] Sir Thomas More. [2] Montaigne.

முடி மன்னர்களிடம் பேச முடியாத நிலை ஏற்பட்டது. போர் முறைகளில் உண்டான மாறுதல்களும் முடியாட்சிக்கு ஆதரவளிப்பனவாயிருந்தன. படை மானிய[1] முறையிருந்த போது, குதிரை வீரர், நிலமானியப் பிரபுக்களின் ஆட்போரில் இன்றியமையாத படைஞராயிருந்தனர். வெடிமருந்து, உபயோகத்திற்கு வந்தது முதல் போர்களில் குதிரைப் படைகளின் செல்வாக்கைக் குறைத்தது, காலாட் படையின் வெற்றிக்கு அது உறுதுணையாய் அமைந்தது. பழைய மானிய முறையில் ஆள் திரட்டப்பட்டது போல இப்போது படைகள் திரட்டப்படவில்லை. ஏனைய தொழிலாளர்களைப் போலப் போருக்கும், கூலி அடிப்படையில் வீரர் திரட்டப்பட்டனர். அதனுடன் செல்வம் மிகுதியாயிருந்ததால் சிறப்பான வெற்றி பெறுதல் திண்ணம் என்ற எண்ணமும் வலுத்தது. எனவே, மூலவளங்களால் செருக்குற்றிருந்த நாட்டுடன் வேறெதுவும் போட்டி போட முடியாத நிலை ஏற்பட்டது. இயல்பாக நாட்டின் அரசுக்குத் திருச்சபையின் அரசு போட்டி போடுவதாகக் கருதப்பட்டது. எனவே, எவ்வித எதிர்ப்புமின்றி முன்பு திருச்சபையினிடம் விடப்பட்டிருந்த அதிகாரங்களையும், செயல் கூறுகளையும், ஐரோப்பிய அரசுகள் நேரிடையாகவும், வன்முறைகளாலும், சட்டத்தைப் புறக்கணித்து மீறுவதாலும், கைப்பற்றிக் கொண்டன.

15ஆம் நூற்றுண்டின் இறுதியில் ஐரோப்பிய நாடுகளின் முன்னணியில் பிரான்சு இருந்தது என்பது பற்றி ஐயமில்லை. ஒரு காலத்தில் இங்கிலாந்துடன் நிகழ்த்திய நூற்றுண்டுப் போர்களினுல், பிரான்சு மிகவும் வலுவிழந்து துன்புற்றிருந்தது. இத்துன்பங்களையெல்லாம் வீரத்துடன் பொறுத்துக்கொண்டிருந்ததற்கு, வெற்றியே சிறந்த பரிசாயிற்று. 1453-ல் போர் முடிந்தபோது, பிரான்சிற்குத் தன்னம்பிக்கையும் துணிவும் நிரம்பியிருந்தன. முடியரசின் நடவடிக்கையால் ஆங்கிலேயர் நாடு கடத்தப்பட்டனர். பிரெஞ்சு மன்னர்கள் பெற்ற வெற்றி, அவர்கள் அதிகாரத்தை வளர்த்தது. மக்கள் சார்பாளர்களைக் கொண்ட நிறுவனங்கள், அவர்களுக்கு எவ்விதத் தடைகளையும் தோற்றுவிக்கவில்லை. பிரான்சு, மிகவும் சீர் குலைந்திருந்த சமயம், நாட்டைக் காப்பாற்றுவதற்காக ‘ஸ்டேட்ஸ் ஜெனரல்’ எனும் பாராளுமன்றம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தும், வெற்றிவாகை சூடிய மன்னர்கள் அதைப் புறக்கணித்துத் தங்களது அறிவுரைக் குழுவினைக்கொண்டே நேரடியாக ஆட்சி புரிந்தார்கள். இரு கருவிகள் மன்னுட்சியின் வலிமையைப் பெருக்கின. ஒன்று, மன்னரின் கட்டுக்குட்பட்டு அவருடைய நலத்திற்காக நீதி மன்றமாகச் செயலாற்றி வந்ததும், பாரிசிலிருந்ததுமான பார்லிமென்டு என்னும் உயர்நீதி மன்றம்; மற்றொன்று, வீடுகள், நிலங்கள் மீது

[1] Feudalism.

விதிக்கப்பட்ட டைல்லி[1] என்னும் வரி. இவ்வரிப் பணம் பிரெஞ்சு மன்னருக்குப் படைகளைத் திரட்டி அவற்றைப் பேணுவதற்கு வசதி செய்தது.

## இங்கிலாந்து

இங்கிலாந்தை நோக்கும்போது அது இப்பந்தயத்தில் தோல்வியுற்றதாய்த் தோன்றியது. நூற்றாண்டுப் போர்களினால் மிகவும் சோர்வுற்றிருந்த நாட்டில் 'உரோசாமலர்ச் சண்டைகள்'[2] நிகழலாயின. குழப்பமும் வலிவின்மையும் நாட்டை அச்சுறுத்தின. இவ்வமயத்தில் நாட்டின் நிலைமையைச் சீர்செய்யத் தக்கவர் என மக்கள் கண்ட ஏழாம் ஹென்றி இங்கிலாந்தின் மன்னராகப் பட்டமெய்தினர்; புகழை விரும்பாமல் நாட்டில் மீண்டும் அமைதியை நிலைபெறச் செய்வதிலும், நாட்டின் வலிமைக்கான அடிப்படைகளை உருவாக்குவதிலும் கவனத்தைச் செலுத்தினர். அவருக்கு நல்வினை துணை செய்தது. அரச அதிகாரத்துக்கு எப்போதும் உண்மைத் தடையாயிருந்த பிரபுக்கள், உரோசாமலர்ச் சண்டைகளினால் மிகவும் வலிமையற்றிருந்தார்கள். மன்னுட்சிக்கு எதிராயும் உள்ளியல்புத் தடையாயும் செயல் புரியக் கூடிய பாராளுமன்றமும் இருந்தது. பிரபுக்கள்சபை உள்நாட்டுப் போர்களால் மிகவும் தளர்ச்சியுற்றிருந்த போதிலும், மக்கள்சபை அதன் வலிமையைக் காட்டக் கூடிய வாய்ப்பு இன்னும் அதற்கு வாய்க்கவில்லை. எனவே, ஏழாம் ஹென்றி தமது பணியைத் தொடர்ந்து நடத்தினர். நாட்டில் அமைதி நிலவியது. பொருள் நிலை உரமூட்டப்பட்டது. மிகுதியான செலவை உண்டாக்கும் போர்கள் விலக்கப்பட்டன நீதி ஆட்சி முறையில் நட்சத்திரமன்றம்[3] மன்னருக்கு மிகுதியான அதிகாரத்தை அளித்தது. எனவே, 16ஆம் நூற்றாண்டில், ஐரோப்பிய அரசியலில், இங்கிலாந்து மீண்டும் சிறந்த பங்கைப் பெற்றது.

## ஸ்பெயின்

அடுத்த நூற்றாண்டில் ஊழ் இங்கிலாந்திற்குப் போட்டியாக ஸ்பெயினை இருக்கச் செய்தது என்றாலும், அதைப்பற்றி எவ்வித அறிகுறியும் அப்போது தெரியவில்லை. ஆங்கில அரசுக்குரியவர் ஸ்பெயின் நாட்டு இளவரசியை மணந்தார். 16ஆம் நூற்றாண்டில் நீர், நிலப்போர்களிலும், வாணிகத்திலும், கலையின் பல துறைகளிலும் ஸ்பெயின் சிறப்படையலாயிற்று. காசில்நாட்டு இளவரசி இஸபெல்லா, ஆரகன்நாட்டு இளவரசரான பெர்டினண்டை[4] மணந்தது, ஸ்பெயின்

[1] Taille. [2] Wars of the Roses. [3] The Star Chamber.
[4] Isabella of Castille and Ferdinand of Argon.

நாட்டு ஐக்கியத்திற்கு வழி செய்தது. எனினும், முழு ஒற்றுமைக்குப் பல தடைகள் இருந்தன. இஸபெல்லாவிடம் தோல்வியுற்ற மூர்கள்,[1] அடிக்கடி அமைதிக்குக் கெடுதி விளைவித்தார்கள். பிரபுக்கள் வலிமை பெற்றுச் சுதந்தரமாயிருந்ததால், நாட்டின் உறுதியான ஆட்சிக்கு அச்சத்தை விளைவித்தார்கள். நகரங்கள் மன்னரின் அதிகாரத்தை வெறுத்துச் சுய ஆட்சி நடத்தின. பெர்டினண்டு இவற்றை வெற்றியுடனும் தீவிரமாயும் எதிர்த்துப் போராடினர். போர்களால் பிரபுக்கள் அடக்கப்பட்டு, அரசாங்கத்திற்குக் கீழ்ப்படிந்தார்கள். நகரங்கள் ஒடுக்கப்பட்டு அரசின் ஆணைக்கு உட்படுத்தப்பட்டன. ஆங்கிலேய வரலாற்றில் நட்சத்திர மன்றம் ஆற்றிய செயலை, ஸ்பெயினில், காசில் நாட்டுக் குழு செய்தது. முடியாட்சிக்கு எதிராகக் கலகம் விளைவித்த எல்லா இனங்களையும் அது அடக்கி, முடியாட்சிக்குக் கீழ்ப்படியச் செய்தது.

16ஆம் நூற்றூண்டில் ஸ்பெயின் பல்வேறு துறைகளில் பெரு முயற்சியுடன் ஈடுபட்டிருந்தது; கிழக்குத் துறைமுகங்களிலிருந்து ஆப்பிரிக்காவிலிருந்த துருக்கியர்களைக் கடல்மூலம் சென்று தாக்கி, கடலில் அவர்களுடைய ஆதிக்கத்திற்கு அறை கூவியது. இத்தாலியில் அதன் அதிகாரம் மேலோங்கிற்று. மேற்கு ஐரோப்பிய நாடுகள் பெருமைப்படுத்திக்கொள்ள இயலாதவாறு ஒரு நிலப் படையையும் ஸ்பெயின் கொண்டிருந்தது. ஸ்பானியப் போர் வீரர்கள் கட்டுப்பாட்டிற்கும் எழுச்சி மிக்க போருணர்ச்சிக்கும் எடுத்துக்காட்டாய் விளங்கினர். போர் மூலமாகவோ அரசியல் வெல்திறத்தாலோ ஸ்பெயின் தலையிடாத நாடே ஐரோப்பாவில் இல்லை எனலாம். அளவற்ற சாத்தியக் கூறுகளைக் கொண்ட மிகப் பெரிய நிலப்பகுதிகள் அட்லான்டிக் பெருங்கடலுக்கப்பால் அதற்குச் சொந்தமாயிருந்தன.

## புனித ரோமப் பேரரசு

ஐரோப்பாவின் நடுவில் 'புனித ரோமப் பேரரசு'[2] என்று வழங்கப்பட்ட பகுதியிருந்தது. இது பல நிலப்பகுதிகளாலும் பல மக்கட் பிரிவுகளாலும் ஒன்று சேர்ந்துண்டான வியக்கத்தக்க ஓர் அமைப்பாகும். ஐரோப்பிய நாடுகள் விழாக்காலங்களில் கூடும்போது இப்பேரரசு முதலிடம் பெற்றது. அதனுடன் எல்லா ஐரோப்பிய மன்னர்களும் பேரரசர் என்ற பட்டத்தைப் பெறுவதற்குப் பேரவாக் கொண்டிருந்தார்கள். இப்பேரரசின் மையம், இக்காலத்தில் ஜெர்மனி என்று வழங்கப்படும் பகுதிகளைக் கொண்டிருந்தது. இப்பெயரால் வழங்கப்பட்ட பேரரசில் 16ஆம் நூற்றூண்டுத் தொடக்கத்தில், இப்போது பெல்ஜியம், ஹாலந்து என வழங்கப்படுபவையும் சுவிட்சர்

[1] The Moors. [2] The Holy Roman Empire.

லாந்து என்று வழங்கப்படும் பகுதியில் பெரும்பான்மையும் அடங்கியிருந்தன. ஐரோப்பாவின் கிழக்கில், இப்பேரரசு ஸ்லோவானிக்குகள், மாக்கியர்கள் என்னும் மக்கட்பிரிவுகளுடன் எதிர்த்துப் போரிட வேண்டியதாயிற்று. சில பகுதிகளை அது தன் அதிகாரத்தால் பேரரசுடன் சேர்த்துக்கொண்டது. மிகப் பரவலான இந்நிலப் பகுதிகளை ஆளுவதற்குப் பெயரளவில் மட்டுமிருந்த அரசர், பேரரசர் என்ற பட்டப்பெயருடன், ஏழு ஜெர்மானிய இளவரசர்களால் தேர்ந்தெடுக்கப் பட்டார். இவ்விளவரசர்களுள் நான்கு பேர் ஆட்சி புரியும் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். மற்ற மூவரும் சமயப்பிரிவைச் சேர்ந்தவர்கள். இவர்கள் 'எலக்டர்கள்' எனப்படுவார்கள்.

ஜெர்மனியில் மற்ற அரசர்களைக்காட்டிலும் இவர்களுக்குத் தனிச் சிறப்பு உண்டு. அவ்வாறிருந்தும், நடைமுறையில் பேரரசர் என்னும் பட்டத்திற்கு ஹாப்ஸ்பர்குக் குடும்பத்தினரே வாரிசுதாரராயும், ஆனால் உண்மையான அதிகாரம் சிறிதுமில்லாதவராயும் இருந்தனர். பேரரசர்கள் வலிமை பெற்றிருந்தார்கள் என்றால், அதற்குக் காரணம் அவர்களுடைய சொத்து மதிப்பேயாகும். அவர்கள் பேரரசிலிருந்து பேரரசர் என்ற பெயரைத்தான் பெற்றார்கள். 16ஆம் நூற்றாண்டின் ஐரோப்பிய வரலாற்றை நன்கு அறிவதற்கு, இப்பேரரசின் விநோதத் தன்மையையும் இதன் பகட்டான உரிமைகளையும் உண்மையில் இதன் வலியின்மையையும் பற்றி உணர்வது இன்றியமையாததாகும். பேரரசின் கீழ் ஜெர்மனியை ஆண்ட மக்கள் சபை, 'டயட்' அல்லது ரீக்ஸ்டாக்[1] எனப்படும். இது மூன்று பிரிவுகளாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது. எலக்டர்கள்,[2] இளவரசர்கள், நகரங்கள் என்ற மூன்று பிரிவினரும், எப்போதும் பேரரசின் அதிகாரம், செல்வாக்கு முதலியவைமீது கடும்பொறாமை கொண்டிருந்தனர். மாக்ஸிமில்லியன்[3] என்ற பேரரசர் ஜெர்மனிக்குப் பயனுறுதியுள்ள அரசியல் அமைப்பை ஏற்படுத்தி, அதன் பயனாகப் பிரான்சு, ஸ்பெயின், இங்கிலாந்து நாட்டு மன்னர்களுக்கு இருந்த அதிகாரம் போன்ற செல்வாக்கைப் பெற முயன்றார். எனினும், அவரது முயற்சிகள் பயனளிக்கவில்லை. ஜெர்மனி நாட்டின் உறுப்புகளான சாக்ஸனி,[4] ஆஸ்திரியா,[5] பிராண்டன்பர்கு,[6] பாலடினேட்டு,[7] பவேரியா[8] போன்றவை—மிகுதியாயிருந்த சிற்றரசுகளில் முக்கியமானவை—பேரதிகாரம் பெற்றிருந்தன. ஆனால், ஜெர்மனி என்ற பகுதி, பொதுவாக நோக்கின், அதற்கென வகுத்த தனி அதிகாரத்தையோ, ஒருமைப்பட்ட கருத்தையோ கொண்டதாய் இல்லை. ஜெர்மனியில், பிராட்டஸ்டென்டு இயக்கம் தோன்றியதற்கு இந்நிலை தலையாய காரணமாயிருந்தது.

[1] Diet or Reichstag. [2] Electors. [3] Maximilian. [4] Saxony.
[5] Austria. [6] Brandenburg. [7] Palatinate. [8] Bavaria.

## துருக்கி

அடுத்து வந்த நூற்றுண்டில் துருக்கி என்னும் நாடு முதன்மையான முக்கியப் பங்கு பெற்றது. இது ஐரோப்பாவுக்கு வெளியில் இருந்ததுடன், கிறித்துவ சமயத்தைப் பின்பற்றுத நாடாயுமிருந்தது. அந்நூற்றுண்டின் பெரும்பகுதியில் துருக்கி, ஐரோப்பாவின் மத்தியிலிருந்த அரசுகளுடனும் ஸ்பெயினுடனும் இடைவிடாது போர் புரிந்து கொண்டிருந்தது. நெடுநாள் வரையில் துருக்கியில் தரை, கடற்படைகள், அதன் பகைவர்களின்மீது உறுதியான மேன்மையைப் பெற்றிருந்தது போலத் தோன்றியது. வரலாற்றில் காணப்படும் அரசுகளில், துருக்கி மிகவும் விநோதமாயுள்ளது. அராபியர்களையும், செல்ஜக் துருக்கியர்களையும்[1] அடுத்து வாழ்ந்த ஆட்டோமன் துருக்கியர்கள்,[2] தலையெடுத்தார்கள். அவர்கள் இஸ்லாமிய சமயத்தின் தலைவரான காலிஃப் என ஏனையோரால் ஏற்றுக் கொள்ளவும் பட்டார்கள். சமயத்தின் அதிகாரம் மதிப்புரிமை முதலியவை முழுமையாகச் சுல்தான் ஆதிக்கத்தின்கீழ் வந்தன. அதனுடன் முகமதிய நாடுகளில் செல்வாக்குடனிருந்த அதிகாரிகள், துருக்கி அரசாங்கத்தின் மன்றங்களான திவானில் இடம் பெற்றுர்கள். நீதி ஆட்சித்துறையின் பெரும்பகுதி இஸ்லாமிய சமயத்தின் சார்பாளர்களின் கையிலிருந்தது. சுல்தானின் அதிகாரம், சமயத்தொடர்பால் உருவாகியது. அது காரணமாக மக்கள் அவரிடம் அளவு கடந்த நம்பிக்கையைக் கொண்டார்கள்.

## அடிமை நாடான துருக்கி

ஒரு புறம் சமயத்தின் செல்வாக்கினுலும் மற்றொருபுறம் கட்டுப்பட்டுக் கீழ்ப்படிந்து இருந்த அடிமை மக்கள் கூட்டத்தைச் சார்ந்தும் சுல்தானின் ஆட்சி அமைந்திருந்தது. துருக்கியப் பேரரசுக்குட்பட்டிருந்த கிறித்துவக் குடும்பக் குழந்தைகளுள் பெரும்பாலோர், அவர்களின் குடும்பங்களிலிருந்து அகற்றப்பட்டுச் சுல்தானின் ஆட்சிக்குட்படுத்தப்பட்டனர். வெற்றி வழியாகவும், விலைக்கு வாங்கியும் வேறு அடிமைகளைப் பெற்றனர். இரத்தக் கலப்பிலும் சமயத்திலும் ஒற்றுமையில்லாத இந்த வெளி நாட்டினர்களைத்தான், துருக்கியப் பேரரசு உண்மையிலேயே நம்பியிருந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும். இந்த அடிமைகளிலிருந்துதான் ஐரோப்பாவில் புகழ்பெற்று விளங்கிய ஜானிஸ்ஸரீஸ்[3] என்ற மெய்க்காப்பாளரின் தரைப்படை உருவாகித் திறமைக்கு உறைவிடமாயிருந்தது. இதிலிருந்து தோன்றியவர்களிடந்தான் நாட்டின் ஆட்சிப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. துருக்கியர்களிடத்தில் தேசீயச் செருக்கு மிகுதியாயிருந்தது. ஆனல்,

[1] Seljukian Turks. [2] Ottoman Trkus. [3] Janissaries.

எவருடைய துணைகொண்டு ஐரோப்பாவில் உயர் பதவியைப் பெற்ருர்களோ, அவர்கள் எல்லோரும் அடிமைத் தனத்திலிருந்த அயல் நாட்டினராவர் தவிர, சுல்தான்களும், தங்கள் மனைவியர்களாக அயல் இனத்தவரைத் தேர்ந்தெடுத்ததால், அவர்களும் அரச குடும்பங்களாக மாறினர்கள். கிறித்தவர்களான ஐரோப்பியர்களுக்குத் துருக்கி சற்றேறக்குறைய ஒரு நூற்ருண்டு வரை, நிலையான இடராய் இருந்தது. அதற்கிருந்த பெருமை அதனிடமிருந்த நிலப்படையினலானது. இப்படை சிறந்த கட்டுப்பாட்டினலும், எப்போதும் போருக்கு ஆயத்தமாய் இருந்ததாலும் நிகரற்று விளங்கியது. துருக்கியிடம் பெரிய கப்பற் படையும் சிறந்த பீரங்கிப்படையும் இருந்தன. இவை இரண்டும் அயலவரால் அமைக்கப் பெற்று நடத்தப்பட்டன.

இவ்வாறு வியத்தகு முறையில் அமைந்திருந்த துருக்கி, பல விதத்தில் இக்காலத்து நாஸிகள், ஃபாஸிஸ்டுகளின் சர்வாதிகார ஆட்சிகளை ஒத்து இருந்தது. நாட்டை வலுப்படுத்தவும் அதன் வெற்றிக்கும், மக்கள் அனைத்தையும் தியாகம் செய்தார்கள். சுல்தான் பட்டத்திற்கு வந்ததும் உள் நாட்டுக் கலகங்களுக்குக் காரணமாயிருக்கும் அவர் உடன் பிறந்தோர்களைக் கொன்றுவிடுமாறு அவருக்குச் சமயம் சார்ந்த ஆணை வெளியிடப்பட்டது. இவ்வதிகாரத்தைச் சுல்தான்கள், அவ்வப்போது பயன்படுத்தினர்கள். (சலீம் அவருடைய உடன் பிறந்தார் பதின்மரைக் கொன்ருர்.) துருக்கியப் படையின் ஒழுங்கு முறைகளே ஐரோப்பியர்களுக்குப் பெருவியப்பை ஊட்டின. கட்டுக்கடங்காதனவும் தேவைக்கேற்றபடி திரட்டப் பட்டனவுமான படைகளையே அவரவர்கள் அதுவரையில் கண்டிருந்தது இதற்குக் காரணமாகும். 1520 முதல் 1560 வரை ஆண்ட வண்ணப்பகட்டான சுலைமான்[1], அக்காலத் துருக்கிய மன்னர்களுள் மிக்க திறமையுள்ளவராய் இருந்தார். துருக்கியர்கள் பால்கன் தீபகற்பத்தைத் தம்முடைமையாக்கிக்கொண்டு, மத்திய தரைக் கடற்பகுதிகளையும் மத்திய ஐரோப்பாவையும் அச்சுறுத்தினர்கள். துருக்கிய ஆட்சி அந்த நூற்ருண்டில், அரசியலில் மாத்திரம் செல்வாக்கைப் பெற்றிருந்ததே தவிர, வேறு துறைகளில் செல்வாக்கைப் பெறவில்லை.

## புது உலகம்

இம்முன்னுரையில் இக்காலத்து மற்ருெரு கூற்றை நாம் புறக கணிக்கவியலாது. மேற்கு ஆசியா, ஐரோப்பாக் கண்டங்களுக்கு அப்பாலிருந்த பெரிய உலகத்தைப் பற்றிய எண்ணம், ஐரோப்பியர்களிடமிருந்தது. புதிய நாடுகளைக் கண்டு பிடிக்குங்காலம் தொடங்கியது. ஐரோப்பா, பல இடங்களைப்பற்றி அறியவும், அவ்விடங்கள் அதன்

[1] ol man.

ஆதிக்கத்தின்கீழ் வரவும் தொடங்கின. ஸ்காண்டிநேவியாத் தீப கற்பத்திலிருந்து தீரர்கள் நெடுநாளுக்கு முன்னமே ஐஸ்லாந்து, கிரீன்லாந்து, அமெரிக்காவின் கடற்கரைப் பகுதிகளைச் சென்றடைந் திருந்தபோதிலும், அவர்கள் செய்த கடற்பயணங்களை மக்கள் நன்கு அறியவில்லை. அதனுடன் வெளிநாடுசெல்ல மக்களின் எண்ணம் தூண் டப்படவில்லை. 1494-ல் காதே, சீஞ முதலிய நாடுகளுக்குப் புது வழியைக் கண்டுபிடிப்பதற்காகக் கிரிஸ்டோஃபர் கொலம்பஸ், கடல் வழியே சென்று, மேற்கிந்தியத் தீவுகளை அடைந்தது தனிப்பயண மாகும். குறிப்பிடப்படாத எல்லைகள், செல்வம், ஆதிக்கம் முதலியவை மேலும் வளரக் கூடிய இப்பகுதிகளை ஸ்பெயின் நாட்டு மன்னர் தமக்கு உரிமையாக்கிக்கொண்டார். இதற்கிடையில் ஸ்பெயினின் அண்டை நாடான போர்த்துகல், ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற் கரையைக் கண்டறிய ஆண்டுதோறும் முயன்று, முக்கியத்துவம் வாய்ந்த பயனைக் கண்டது. 1486-ல் பார்த்தலோமியோ டயஸ் என்பவர் நன்னம்பிக்கை முனையைச் சுற்றி வந்தார். 1497-ல் வாஸ்கோ-ட-காமா தமது யாத்திரையைத் தொடங்கி, இந்தியாவை அடைந்தார். இதன் விளைவாகப் போர்த்துகலுக்கு இந்தியாவையும், தூரக்கிழக்குப் பகுதிகளையும் கொண்ட ஒரு பெரிய பேரரசு உரிமை யாயிற்று. இது அமெரிக்காவில் ஸ்பெயினுக்குக் கிடைத்த வெற்றி களைக் காட்டிலும் மிக்க சிறப்பு வாய்ந்தது. இப்பேரரசை ஆல்புகர்க்கு என்பவர் நிறுவினர். இதன் பயனுகச் சிறிய நாடான போர்த்துகல், ஐரோப்பாவில் சிறந்த பெருநிலையைப்பெற்றது; தான் கண்டு பிடித் ததைக் காரணமாகக் கொண்டு, பிரேசிலைத் தன் கிழக்கு நாடுகளுடன் இணைத்துக்கொண்டது. இதனல், பேரவாக் கொண்டிருந்த ஸ்பெயி னுடன் சண்டையிட நேர்ந்தது. போப்பாண்டவரான ஆரும் அலெக்ஸாண்டர், இவற்றுக்கிடையே இருந்த போட்டியைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்தார். அவரது தீர்ப்பின்படி (1494-ல்) தெற்கு வடக்காகச் செல்லும் ஒரு கோடு, புதிய உலகின் பகுதிகளை, இவ்விரு நாடுகளுக்கும் பகிர்ந்தளித்தது. ஆயினும், அண்டை நாடான ஸ்பெயின், போர்த்துகீசியப் பேரரசின்மேல் கண் வைத்த படியே இருந்து, இரண்டாம் பிலிப்பின் ஆட்சியில், வலியத் தாக்கு தல் மூலம் போர்த்துகலைத் தன்னுட்சியோடு சேர்த்துக்கொண்டது (1580).

புதிய உலகின் இன்றியமையாமை ஐரோப்பாவிற்கு நாளாவட் டத்தில் மிகப் பெரியதாயிற்று என்றாலும், அதை உணருவதற்கு அதற்கு நெடுங்காலமாயிற்று. முதலில் ஸ்பெயினுக்குச் சொந்த மாயிருந்த அமெரிக்கப் பகுதிகள் ஏமாற்றத்தை விளைவித்தன. இதற் குக் காரணம், எதிர்பார்த்தவாறு தங்கம் அகப்படாமை. அதனுடன், கிடைத்ததும் மிகக் குறைவாயிருந்தது. 1519-ல் மெக்ஸிக்கோவைக்

கார்டசும்[1] 1532-ல் பெருவைப் பிசாரோவும்[2] வெற்றி கொண்ட பின்னரே விலை மதிப்புள்ள தங்கம் ஏராளமாகக் காணக் கிடைத்தது. இப்புதிய செல்வம், ஆங்கிலேயர், டச்சுக்காரர்களின் (ஹாலந்து) பொருமையையும் தாக்குதலையும் தூண்டியது. மேலும் புதிய உலகில் பிரான்சிஸ் டிரேக்கு[3] என்பவர் கொள்ளையடித்ததன் பயன், ஆங்கிலேயருக்கும் ஸ்பெயினுக்கும் இடையே போர் மூளச் செய்தது. இவைகளே போரைத் தூண்டுவதற்குத் தலையாய காரணங்கள் எனக் கூறவியலாது. ஐரோப்பாவின் சர்வதேச அரசியல், ஐரோப்பாவைப் பற்றியே இருந்ததேயன்றிக் குடியேற்ற நாடுகளின் பயனைக் கருதவில்லை. 17ஆம் நூற்றுண்டிலிருந்துதான் தூரக்கிழக்கிலும் மேற்கிலும் இருந்த சொந்தமான இடங்களுக்காக ஐரோப்பா போரில் இறங்க நேர்ந்தது.

பதினாறுவது நூற்றுண்டு முடிய, சிறந்த பயனுடன் இயங்கிய மற்றொரு சக்தியையும் நாம் மனத்தில் கொள்ளவேண்டும். வாணிகமும் நிதியும் நிறைந்த உலகம் புதிய முறையில் உருவாயிற்று. கிழக்கில் புதிய நாடுகளைக் கண்டு பிடித்து வெற்றி பெற்றதன் பயனாய் போர்த்துகல் ஐரோப்பாவிற்கு ஒரு புதிய வழியை மீண்டும் ஏற்படுத்தியது. இதற்குமுன், இவ்வழியைத் துருக்கியர் தமது வெற்றி காரணமாக ஒரு நூற்றுண்டு வரையில் தடை செய்திருந்தனர். மத்திய தரைக் கடலிலிருந்த துறைமுகங்கள் அவற்றின் முக்கியத்தை இழந்தமை இதன் விளைவில் ஒன்றாகும். நன்னம்பிக்கை முனையைச் சுற்றிச் சென்ற மரக்கலங்கள் வெனிசு, ஜினேவா, மார்சைல்ஸ் என்னும் இடங்களுக்குச் செல்லாமல் லிஸ்பன் அல்லது கேடிஸ்[4] துறைமுகத்தை அடைந்தன; அல்லது ஆன்ட்வெர்ப்பைச் சுற்றிக் கொண்டு தாழ்ந்துள்ள நாட்டுத் துறைமுகங்களை அடைந்தன. அமெரிக்காவைக் கண்டுபிடித்தது, முதலில் அவ்வளவு சிறப்பாகக் கருதப்படவில்லை யென்றாலும், விலையுயர்ந்த உலோகமான தங்கம் ஐரோப்பாவிற்கு விரைவாகக் கொண்டுவரப்பட்டது. புழக்கத்திலிருந்த செலாவணி அதிகரித்தது; வாணிகம் வளர்ந்தது. அதே சமயத்தில் நாணயத்தின் மதிப்பைக் குறைத்து, விலை வாசிகளை மிகுதிப்படுத்தியது. ஐரோப்பாவின் பொருளாதார வாழ்க்கை நிலையில், பெரு மாறுதல்கள் ஏற்பட்டன. நாடுகளின் பொருளாதார வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் இடைக்காலத்தில் மிகுந்த கட்டுப்பாடு இருந்தது. அரசாங்கத்தைவிட நகரங்களே இக்கட்டுப்பாடுகளின் பேராள்களாயிருந்தன. கைத்தொழில்களும் வாணிகச் சங்கங்களின்[5] வசமிருந்தன. இவைகளுக்கு உதவி அல்லது தடையை வாணிகச் சங்கங்கள் செய்தன. புதிய காலம் தொடங்கியது முதல் வாணிகச்

[1] Cortes. [2] Pisarro. [3] Sir Francis Drake. [4] Cadiz.
[5] Guilds.

சங்கங்கள் அழியத் தொடங்கின. அவற்றின் செல்வாக்கு இனித் தேவையில்லை எனக் கருதப்பெற்றது. அதனுடன் அரசாங்கம் அதன் பல்வேறு அலுவல்களில் வாணிகத்தைப் பெருக்குவதையும் இயக்கு வதையும் சிறந்த பணிகளாகக் கருதிற்று. அதனுடன் உற்பத்தி, வாணிகம் முதலியவை தனிப்பட்ட முதலாளிகள் வசம் விடப்பட்டன. ஐரோப்பாவில் வாணிகம், பொருளாதாரம் முதலியவற்றுக்கு ஆன்ட்வெர்ப்பு நகரம் எதிர்ப்பின்றி நடுநாயகமாய் விளங்கிற்று. நேர்த்தியாய் அமைந்துள்ள துறைமுகமும், அமைப்பும் இதற்குத் துணையாயிருந்தன. அதனுடன் வேறு பகுதிகளில் காணப்பட்டது போல ஆன்ட்வெர்ப்பில் வாணிகம், தொழிற்சாலை முதலியன வாணிகச் சங்கங்களின் ஆதிக்கத்தில் இல்லாதிருந்ததும் கருத்தில் கொள்ள வேண்டுவதாகும். 16ஆம் நூற்றாண்டில், ஆன்ட்வெர்ப்பு நகரம், இடைக்காலத்தில் விளங்கிய வெனிசு நகரம் போன்றும் இக்காலத்தில் இருக்கும் இலண்டன் நகரம் போன்றும் சிறப்புற்று விளங்கியது.

அக்காலத்துக் கூறுகளில், வங்கி[1]த் தொழிலின் வளர்ச்சியும் மற்றொரு சிறப்பாகும். பவேரியாவிலுள்ள ஆக்ஸ்பர்கு நகரம் வங்கித் தொழிலின் மையமாய் விளங்கியது. ஐரோப்பிய அரசியலில் ஃபக்கர் களின் நிறுவனம் கொண்டிருந்த அதிகாரம் போல வேறெந்த வங்கியும் கொள்ளவில்லை. அவர்களுடைய உதவியின்றி அரசாங்கம் போர் முதலியவைகளை நடத்த முடியாது. முதலாளித்துவம் புதிதன் றெனினும், அதன் அதிகாரம் புதுப்புது உருவங்களுடன் தோன்றியது. அது முற்காலத்திலிருந்ததைக் காட்டிலும் நேரிடையான செல்வாக் கைப் பெற்று இயங்க ஆரம்பித்தது.

[1] Bank.

மூன்றும் பாகம்

# 1. இக்கால ஐரோப்பா

## இத்தாலியப் போர்கள்

### இத்தாலியின் புதுப்பிக்கப்பட்ட படையெடுப்புக்கள்

ரோமப் பேரரசு வீழ்ச்சியடைந்ததிலிருந்து இத்தாலி, வலிய ஐரோப்பிய நாட்டு மக்களின் படையெடுப்புக்களுக்கு இரையாகிக் கொண்டிருந்தது. விசிகோத்ஸ்[1] முதல் ஃபிராங்கியர்[2] ஈருக நாகரிக மற்றவர்களின் படையெடுப்புக்களைப் பற்றி முன்னரே கண்டோம். அவற்றுடன் இத்தாலியின் கடற்கரையில் சாரசன்களும்[3] நார்மானியர் களும்[4] எவ்வாறு குடியேறினர்கள் என்பதையும் கண்டோம்; பத்தி லிருந்து பதின்மூன்ருவது நூற்ருண்டுவரை எவ்வாறு ஜெர்மானியப் பேரரசர்கள் இந்நாட்டின் மீது அடிக்கடி படையெடுத்தார்கள் என் பதையும் அறிந்தோம். ஆனல், 13ஆம் நூற்ருண்டு முதல் இத்தாலியில், வெளி நாட்டுத் தாக்குதலின்றி, அமைதி நிலவியது. இக்காலத்தில் இவ்வாறு இத்தாலியின் செல்வமும் புகழும் ஓங்கின என்பதை முன் அதிகாரத்தில் கண்டோம். ஆனல், அறிவு, நுண்கலை இவைகளில் முன்னேற்றமடைந்த இத்தாலி, இராணுவ வலிமையில் அந்த அளவிற்கு முன்னேறவில்லை. இத்தாலிய நகரங்கள் ஒன்ருேடொன்று போரிட்டன. பேரளவிற்கு நகரப் பாதுகாப்பின் பொறுப்பைக் கூலிக்கமர்த்தப்பட்ட போர் வீரர்களிடம் ஒப்படைத்தனர். இவ்வாறு செல்வம் கொழித்த இத்தாலி, தக்க பாதுகாவலின்றியிருந்தது. இது காரணமாக இத்தாலி, பிரான்சில் சென்ற 50 ஆண்டுகளில் வளர்ந்ததும், வலிமையுள்ளதும், ஒன்று சேர்ந்ததுமான முடியாட்சியின் தாக்குதல்களுக்கு இலக்கானது இயற்கையே.

[1] Visigoths. [2] Franks. [3] Saracens. [4] Normans.

## பிரான்சு மன்னர் எட்டாம் சார்லசு

பதினென்றும் லூயி இறந்தபோது ஐரோப்பாவிலிருந்த மற்ற முடியாட்சிகளேக்காட்டிலும் நாட்டின் மூலவளங்களே முற்றும் கட்டுப் படுத்திய பிரெஞ்சு முடி அரசை எட்டாவது சார்லசிடம் மரபுரிமையாக விட்டுச் சென்ருர். பிரான்சிடம் பேரார்வம் கொண்ட மக்கட்டொகையும், பெரிய படையுமிருந்தன. இப்படை முழுவதும் மன்னரின் செயலாட்சியி லிருந்தது. இதனுடன் பிரான்சு, பர்கண்டி, இங்கிலாந்து முதலிய நாடுகளோடு செய்த சண்டையின்போது, பீரங்கிப்படையின் பயன் பாட்டை மற்ற ஐரோப்பிய நாடுகள் அறிந்திருந்ததைக்காட்டிலும் மிகுதியாக விரிவுபடுத்தியது. தந்தையாரின் புதுமை வாய்ந்த பேரறிவு, எட்டாம் சார்லசுக்கு இல்லே. அவர் எல்லா விதத்திலும் எல்லோரையும் போன்று சாதாரணமாகக் காணப்பட்டார். ஆனல், அவர் தம்மிடமிருந்த படைக்கலங்களின் வலிமையை நன்கு உணர்ந் திருந்தார். அரிய பெரிய செய்கையைச் செய்து முடிப்பதன் மூலம் தமக்குப் பெரும் புகழைத் தேடப் பேரவாக் கொண்டிருந்தார். இத்தாலி இயற்கையாகவே அவரைக் கவர்ந்தது. பிரெஞ்சு அரச குடும்பம் நேப்பிள்ஸ்நகர் மீது கொண்டாடிய உரிமைகள் சட்டப்படி செல்லத் தக்கன அல்ல. ஆனல், வலியப் போர் தொடுப்பதற்கு அவை வெல்திறம் கொண்ட சாக்குப் போக்காயின. 1494-ல் மிலாளேயாண்ட லொடோ விகோ[1] என்ற மூர் அரசர், பிளாரன்சு நாட்டிலிருந்து அச்சுறுத்தும் படியான தாக்குதலுக்கெதிராகத் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளப் பிரான்சிடம் முறையிட்டார். இவ்வேண்டுகோளே எட்டாம் சார்லசு தாம் இத்தாலியில் புகுவதற்கு ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டார்.

## எட்டாம் சார்லசின் தொடக்க வெற்றிகள்

இத்தாலி நாட்டின்மீது முதல் தடவையாகப் பிரான்சு படை யெடுத்தது. இதற்கு முன் பிரெஞ்சுப் போர்த் தலேவர்கள் இத்தாலி யில் நிகழ்த்திய எல்லாப் போர்களேயும்விட இம்முதற்படையெடுப்புப் பல விதங்களில் மனத்தை ஈர்ப்பதாய் இருந்தது. இத்தாலிய நகரங் களின் செல்வநிலே, அழகு முதலியவைகளேக் கண்டு பிரெஞ்சுக்காரர் மலேப்படைந்தனர். இத்தாலியர், பிரெஞ்சுப் படையின் வேகத்தையும், திறமையையும், சிறப்பாக பிரெஞ்சுப் பீரங்கிப் படை எளிதாக இயக்கப் பட்டதையும் கண்டு வியந்தனர். ஆதலின், அப்படையெடுப்புக்குப் பயனுள்ள தடையை இத்தாலியர்கள் செய்யவில்லே. பிளாரன்சு,[2] பைசா,[3] ரோம்,[4] நேப்பிள்ஸ்[5] என்னும் நகரங்கள் கடும் போர் இன்றி, பிரான்சின் வசமாயின இத்தாலிய தீபகற்பம் அனேத்திற்கும் பிரான்சே தலேவியாய் விளங்கியது போலத் தோன்றிற்று.

[1] Lodovico the Moor. [2] Florence. [3] Pisa. [4] Rome. [5] Naples.




பேரரசர் 'துணிவுள்ள' சார்லசின் நாட்டு எல்லைகளும்
ஜெர்மானிய வாணிகச் சங்கப் பகுதிகளும் [பக்கம் 18

## சத்திச் சமநிலை

### பிரெஞ்சு வெற்றிகளின் இழப்பு

இவ்வமயத்தில் திடீரென 16ஆம் நூற்றாண்டில், இத்தாலிக்குச் சிறப்பியல்பினதும், அதே சமயத்தில் ஐரோப்பா முழுவதும் காணப் பட்டதுமான மாறுதல் ஒன்று ஏற்பட்டது. இதுமுதல் ஐரோப்பிய 'சத்திச் சமநிலை'[1] என்று வழங்கப்பட்ட கொள்கை பேசப்படுவ தாயிற்று. இச்சொற்றொடர் தெளிவில்லாது இருந்தும், நடப்பில் ஐரோப்பிய நாடுகளை ஒப்பிடும்போது ஒன்று மற்றொன்றைவிட வலிமை பெற்று மாறுதல் அடைவதைச் சகிக்கக் கூடாது என்றும், மற்ற நாடு களுக்குத் தீங்கு விளைவிக்கக் கூடிய அளவு ஒரு நாடு வலிமை பெற்றால், மற்றவை அதற்கு எதிராக ஒன்று சேர்தல் வேண்டும் என்றும் பொருள் பெறுவதாயிற்று. எனவே, அக்காலத்துச் சிக்கலான வெல்திறத்தை உற்று நோக்கின், ஒரு நாடு வெற்றி பெற்றதென்றால், அவ்வெற்றி அந்நாட்டுக்கெதிராக மற்ற நாடுகள் நட்புச்செய்து கொள்வதற்கான, தவிர்க்க முடியாத அறிகுறியாயிருந்தது என்பது தெளிவாகும். எனவே, எட்டாம் சார்லசின் வெற்றிகரமான முன் னேற்றம் உடனே அவருக்கு எதிராகப் பேரிடரான இயக்கத்தைத் தோற்றுவித்தது. இதில் இத்தாலிய அரசுகள் பெரும்பங்கு கொண்டன. ஆனால் அவை தனித்து நிற்கவில்லை. மிலானுடன்,[2] வெனிசு,[3] போப்பாண்டவரின் ஆட்சியின்கீழ் இருந்த நகரங்களோடு ஸ்பெயின் மன்னரான பெர்டினண்டும், பேரரசரான மாக்சிமில்லியன் என்பாரும் இவ்வியக்கத்திற் சேர்ந்தனர். இதனால், நெடுநாள் இத் தாலியில் தங்கினால், அதற்குள் புகுந்தது போல அவ்வளவு எளிதாக அதை விட்டு வெளியேற முடியாதெனக் கண்ட எட்டாம் சார்லசு நேப்பிள்ஸ் நகரை விட்டு விரைவாக வெளியேறினார். 1495ஆம் ஆண்டு சூலைத் திங்களில் ஃபோர்நோவோ[4] என்னுமிடத்தில் நேச நாடுகளின் படையைச் சந்தித்தார். நேரிடைத் தாக்குதலின் பயனாய் விளைந்த கொடுமையான சண்டை பிரான்சிற்கு வெற்றியாய் முடிந்தது. அதனுடன், நாட்டை விட்டுப் படையும் எத்தகைய ஊறும் இன்றி வெளியேறி, பிரான்சை அடைந்தது. படைகள் வெளியேறியதோடு பிரான்சின் தன்மதிப்பும் வெற்றிகளும் கரைய லாயின. 1498-ல் எட்டாம் சார்லசு இறந்தபோது அவர் வெற்றி கொண்ட பகுதிகளெல்லாம் பிரான்சின் பிடிப்பிலிருந்து நழுவிப் போய்விட்டன.

[1] Balance of Power. [2] Milan. [3] Venice. [4] Fornovo.

## பிரான்சு மன்னரான பன்னிரண்டாம் லூயி

### நேப்பிள்ஸ் பிரிவினைக்காகக் கிரானடா உடன்படிக்கை (1500)

எட்டாம் சார்லசுக்குப் பின், அவர்தம் சிறிய தந்தையாரின் புதல்வரான பன்னிரண்டாம் லூயி பட்டம் எய்தினார். அவரது உள் நாட்டு ஆட்சி, இரக்கத்துடன் வெற்றியாக நடந்ததால் அவர் 'நாட்டின் தந்தையார்'[1] எனப் போற்றப்பட்டார். வெளி நாட்டுக் கொள்கையில் எட்டாம் சார்லசின் திட்டங்களை மீண்டும் மேற்கொண்டு, இத்தாலிய வெற்றிகளை மனத்தில் கொண்டிருந்த மற்றப் பிரெஞ்சு மன்னர்களைப் போலவே முதலில் ஒளி வீசிய வெற்றிகளைப் பெற்றார். எனினும், இறுதியில் அவ்வெற்றிகள் தோல்விகளாகவே முடிந்தன. லூயி 1499-ல் மிலானை முதன்முதலில் தாக்கினார். இதற்குக் காரணம் அந்நகரத்தின் மீது அவரது குடும்பம் கொண்டிருந்த உரிமையேயாகும். தொல்லையின்றி நகரம் அவர் கையிற் சிக்குண்டது. அண்டை நகரமான வெனிசு நகரம், மிலானின்மீது கொண்டிருந்த பொறாமையால் பிரான்சிற்கு உதவி அளித்தமை இவ்வெற்றிக்கு ஓரளவு காரணமாய் இருந்தது. இவ்வெற்றிக்குப் பின், லூயி நேப்பிள்ஸ் நகரத்தை நோக்கிப் படையெடுத்தார். அங்கு அவருக்குச் சில தொல்லைகள் தோன்றின. பிரான்சைப் போன்று ஸ்பெயினும் அந்நகரின் மீது உரிமை கொண்டாடியது. ஸ்பெயினின் உரிமைகள் ஏற்றுக்கொள்ளத்தக்க வலிமையுடையனவாய் இருந்தன. எனவே, பிரான்சு நேப்பிள்ஸை நோக்கி முன்னேறியிருந்தால் ஸ்பெயின் நாட்டுப் படைகள் ஒரு வேளை எதிர்த்திருக்கக்கூடும். இத்தொல்லையான நிலை, ஸ்பெயினோடு கிரானடாவில் செய்து கொண்ட உடன்படிக்கை[2] வாயிலாகத் தவிர்க்கப்பட்டது. இவ்வுடன்படிக்கைப்படி தீங்கிழைக்காததும், பாதுகாப்பு அற்றதுமான நேப்பிள்ஸை இருவரும் சேர்ந்து தாக்கி நகரத்தை இருவரும் பங்கு போட்டுக்கொள்வதென முடிவாயிற்று. இவ்விரு நாடுகளின் கூட்டுத் தாக்குதலை எதிர்க்க முடியாமல் நேப்பிள்ஸ் அடி பணிந்தது. நேப்பிள்ஸ் மன்னர் கைதியாகிப் பிரான்சிற்குச் சென்றார். இதன் பின், உண்மையான தொல்லைகள் ஏற்படலாயின. நகரத்தை இரு கூறாக்குவது பற்றிய உடன்படிக்கை ஐயத்திற்கு இடமானதாய் வரையப்பட்டது. களவாகக் கொள்ளப்பட்ட நிலங்களில், எவை ஸ்பெயினுக்குச் சொந்தம், எவை பிரான்சிற்குச் சொந்தம் என்பது எளிதில் தெரிந்து கொள்ள முடியாமற் போயிற்று. எனவே, இது காரணமாக இவ்விரு கொள்ளையர் நாடுகளுக்குமிடையே போர் மூண்டு, ஸ்பெயின் வரிசையாக நிகழ்த்திய படையெடுப்புக்களால் பிரான்சைத் தோற்கடித்து, பிரான்சை நேப்பிள்ஸ் நிலப் பகுதியிலிருந்து விரட்டியது.

[1] Father of his country. [2] Treaty of Granada.

# போப்பு இரண்டாம் சூலியசு

**கேம்பராய்ச் சங்கம்: புனிதச் சங்கம்**

இச் சமயத்தில், போப்பு இரண்டாம் சூலியசு[1], இத்தாலிய அரசியலில் ஈடுபட்டதன் காரணமாக, ஒரு புதிய சக்தி ஏற்பட்டது. இதுவரை போப்பாண்டவர்களுள் மிகக் கடைப்பட்டவராய் இருந்த ஆறும் அலெக்ஸாந்தரோடு, பிரெஞ்சுக்காரர்கள் செயற்பட வேண்டியிருந்தது. அலெக்ஸாந்தர் பிரெஞ்சு அரசியல் தந்திரத்தின் கைப்பாவையாய் இருந்தார். ஆனால் போப்பு இரண்டாம் சூலியசு ஆற்றல்மிக்க அரசியல் வல்லுநராயும் முன்னவரைக்காட்டிலும் நல்லியல்புடையவராயுமிருந்தார். சமய ஒழுங்குச் சடங்குகளைப் பற்றி அவர் கவலை கொள்ளவில்லை என்றாலும், கலைகளில், சிறப்பாக மைக்கேல் ஆஞ்சலோவுக்கு ஆதரவு அளிப்பதில் நடுவுநிலையுள்ள புரவலராய் இருந்தார்; இத்தாலிய அரசியலில் சிறப்பானதும் உறுதி வாய்ந்ததுமான பங்கெடுத்துக்கொள்ள அவாக் கொண்டிருந்தார். எனினும், முதன்முதலாக அவர் தொடர்பு கொண்ட நிகழ்ச்சி அவருக்கு மதிப்பை அளிக்கவில்லை. வெனிசு நகரத்தின் பெருஞ்செல்வத்தையும், நிலையான ஆட்சியையும், அரசியல் நிபுணர்களின் திறமையையும், இத்தாலி நாட்டின் நடுநிலப்பகுதியில் பெரும்பகுதியை வெற்றி கொண்டிருந்ததால் அதன் பரப்பினையும், நாம் முன்பு கண்டுள்ளோம். அதனோடு போர் புரிய எக்காரணமும் இல்லை. ஆனால், அண்டையினரான பிரான்சு, பேரரசு, பிளாரன்சு, ஸ்பெயின், போப்பாண்டவரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பகுதிகள் ஆகியவை அனைத்தும் வெனிசின் நிலப்பகுதிகளைக் கவர விரும்பின. இதன் விளைவாக, 1508-ல் புகழற்ற கேம்பராய்ச் சங்கம்[2] ஏற்பட்டது. வெனிசை வென்று சிதைக்க, மேற்கூறிய அரசுகள் இச்சங்கத்தில் ஒன்று சேர்ந்தன. இப்பெரிய நட்பு உடன்பாட்டை எதிர்த்து, வெனிசு ஒன்றும் செய்ய இயலவில்லை. வெனிசின் படைகள் தோல்வியுற்று, இத்தாலி நாட்டின் பெருநிலப் பகுதியில் அதற்குச் சொந்தமாயிருந்தவைகளை விட்டுவிடும்படி நேர்ந்தது. நட்பு நாடுகள் பெற்ற வெற்றி அவற்றுள்ளேயே சண்டைகளை வளர்த்தது. திருச்சபை நாடுகளின் நன்மைகளைக் கருதி, இத்தாலி நாட்டைச் சூறையாட, அன்னியர்களை நாட்டுக்குள் வரவழைத்த தவற்றைப் போப்பு சூலியசு விரைவில் உணர்ந்தார். இவ்வமயத்தில் இத்தாலியிலுள்ள வேறு அரசுகளின் தொடர்புகள் குழப்பமடையச் செய்யக்கூடிய முறையில் விரைவாக மாறின. வலியவர்களை எதிர்த்து எளியவர்கள் கூட்டுச் சேருவது

[1] Pope Julius, II. [2] The League of Cambrai.

வழக்கமான கொள்கையாயிருந்தது. 1511-ல் இரண்டாம் ஜூலியசு, இத்தாலியிலிருந்து பிரெஞ்சுக்காரர்களை வெளியேற்றுவதற்காகப் புனிதச் சங்கத்தை[1] நிறுவினுர். பிரான்சிற்கு எதிராக ஸ்பெயின், வெனிசு, பேரரசு ஆகியவை ஒன்று சேரும்படி தூண்டப்பட்டன. சிறிது காலம் கழித்து இப்புனிதச் சங்கத்தில் இங்கிலாந்தும் சேர்ந்தது. பிரான்சு இந்த எதிரிகளுடன் திறமையாய்ப் போரிட்டு ஒரு சமயம் வெற்றி எய்தியது; ஆனுல், 1513-ல் நடுவரணுயிருந்த மிலான் நகரத்தைத் தவிர்த்து, இத்தாலியில் வென்ற பிறநாடுகள் அனைத்தையும் இழந்தது. இது மட்டுமன்றி, பிரான்சு அதன் நாட்டிலேயே ஆங்கிலேயருடன் போர் புரிந்து தோல்வியடைந்தது. இதன்பின், பிரெஞ்சு அரச தந்திரம் இவ்வுடன்பாட்டைக் கலைப்பதில் வெற்றி பெற்றது. 1515-ல் லூயி இறப்பதற்குச் சற்று முன்னர்ச் சமாதானம் செய்து கொள்ளப்பட்டது.

## மாரிக்னுனேச் சண்டை

லூயியின் சிறிய தந்தையாரின் புதல்வரான இரண்டாம் பிரான்சிசு[2] அதன்பின் மன்னரானுர். அவர் இளைஞராயும், ஆய்ந்து பாராது செயல்களில் ஈடுபடுபவராயும் இருந்தார்; போரில் வெற்றி காண வேண்டுமென அவாக் கொண்டிருந்தார். எனவே, இடருடன் கூடிய இத்தாலியப் போர்களில் பிரான்சு மீண்டும் ஈடுபடவேண்டும் என்று உறுதி கொண்டார்; வெனிசைத் தவிர வேறு நட்பு நாடு இவருக்கில்லை. ஸ்பெயின், பேரரசு, போப்பாண்டவரின் ஆட்சிக்குட்பட்ட நாடுகள் முதலியவை இவரை எதிர்ப்பதற்கு ஒன்று சேர்ந்தன. இவர் ஆல்ப்சு மலைகள் வழியாகப் பாதையை உண்டுபண்ணினுர். மக்கள் இச்செய்கையை முன்பு ஹன்னிபால்[3] செய்த தீரச்செயலுடன் ஒப்பிட்டு இவரைப் புகழ்ந்தார்கள். மிலானுக்கு அடுத்த மாரிக்னுனே[4] என்னுமிடத்தில் பகைவரின் படைகளைத் தாக்கி இரண்டு நாள்கள் போர் புரிந்து வெற்றி பெற்றுர். இச்சண்டையில் எதிர்ப்பக்கத்தில் சண்டையிட்ட சுவிட்சர்லாந்து நாட்டுக் கூலிப்படையைத் தாக்கி எதிர்த்த பிரெஞ்சுக் காலாட்படை வெற்றியுற்றது மிகச் சிறந்த புகழ் வாய்ந்ததெனக் கருதப்பட்டது. இச்சண்டையையொட்டிச் சில முக்கிய நிலையான பயன்கள் ஏற்பட்டன. முதலாவதாக, வருங்காலத்தில் பிரெஞ்சுப் படைகளுக்கு எதிராகச் சுவிஸ் படைகள் ஒரு போதும் பயன்படுத்தப்படமாட்டா எனப் பிரான்சு, சுவிஸ் மக்களுடன் உடன்படிக்கை செய்து கொள்ள முடிந்தது. அடுத்தபடியாகப் போப்பாண்டவருடன்

[1] The Holy League. [2] Francis-II. [3] Hannibal. [4] Marignano.

(பத்தாம் லியோ) ஒற்றுமைப் பத்திரம்[1] அல்லது உடன்பாட்டைச் செய்துகொண்டார். இதனுல் சற்றேறக்குறைய ஒரு நூற்ருண்டாகப் போப்பாண்டவருக்குப் பிரான்சு செலுத்த மறுத்த கட்டணங்களை மீண்டும் செலுத்துவது என்றும், போப்பாண்டவர் சமயம் சார்ந்த பெரிய அலுவலர்களை நியமிக்கும் அதிகாரத்தை அரசரிடமே விட்டு விடுவதென்றும் முடிவாயின. இதன் விளைவாகப் போப்பாண்ட வருக்குச் செல்வம் பெருகியது; பிரெஞ்சு மன்னருக்கு அதிகார ஏற்றம் உண்டாயிற்று. 18ஆம் நூற்ருண்டு வரை இவ்வொற்றுமைப் பத்திரம் பிரெஞ்சு நாட்டிலிருந்த முடியாட்சிக்கும், திருச்சபைகட்குமிடையே நிலவிய தொடர்புகளைப் போப்பாண்டவரின் ஆட்சியோடு கட்டுப் படுத்தியது.

## ஐந்தாம் சார்லசு பேரரசராகப் பட்டமடைதல்

இவ்வாறு இருக்கும்போது பிரான்சிற்கு எதிராகப் புதிய வீரனும் புதிய இணைப்பும் தோன்றியதன் விளைவாக நிலைமை முற்றிலும் மாறியது. 1519-ல் ஐரோப்பிய அரசியலில் வலிமையற்றவரும், ஆனல் விரும்பத் தக்கவரும் புதுமையானவருமான மாக்சிமில்லியன் என்ற பேரரசர் மரணமடைந்தார். பேரரசர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டியிருந்த தால், அவருக்குப் பின் எவர் வருவார் என்பது கடினமான பிரச்சினை யாயிற்று. அதனுடன் ஜெர்மனியில் தொடங்கியிருந்த பெரிய சமயக் கொந்தளிப்பும் இத்தொல்லையை மிகைப்படுத்தியது. பல நூற்ருண்டு களாகப் பேரரசு ஜெர்மானிய இனத்தவர்கள் வசமிருந்து வந்தது. என்ருலும், மற்ற இனத்தவர்களை ஏன் விலக்க வேண்டும் என்பதற்கு அரசியல் அமைப்புப்படி காரணங் கூறவில்லை. எனவே, முதலாம் பிரான்சிசு, பேரரசர் பதவிக்குப் போட்டியிடுமாறு ஊக்குவிக்கப் பட்டார். இவருக்குப் போட்டியாய் இருந்தவர் ஸ்பெயின் நாட்டு மன்னரான ஐந்தாம சார்லசு ஆவர். இவர் மாக்சிமில்லியன் பர்கண்டி நாட்டு மேரி ஆகியோரின் பேரர் ஆவர். ஆதலால், ஸ்பெயின் நாட்டுடன் பர்கண்டி நாடும் ஹாப்ஸ்பர்கு அரச குடும்பத்திற்குச் சொந்தமான ஏராளமான நிலப்பகுதிகளும் வாரிசு முறையில் இவருக்குக் கிடைத்தன. எனினும், முதலாம் பிரான்சிசுக்குப் போட்டியில் வெற்றி கிடைப்பதற்கான வாய்ப்புக்கள் அதிகமிருந்தன. சார்லசு பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பெற்ருல், ஐரோப்பாவின் சத்திச் சமநிலை, இதற்கு முன் சார்ல்மெயின் காலத்திலிருந்து ஐரோப்பா கண்டிராத அளவுக்கு ஒரு வல்லரசு தோன்றுவது வாயிலாகச் சீர் குலைந்துவிடும். எனவே, இரு வேட்பாளர்களும் கையூட்டு வழங்கு வதை மேற்கொண்டார்கள். ஆயினும், 1519-ல் பிரச்சினை முடிவுறும் தருணத்தில் சார்லசு தொல்லையின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டு, ஐந்தாம் சார்லசு பேரரசர் என ஆட்சி புரியலானுர்.

[1] Concordat.

## ஐந்தாம் சார்லசிற்கும் முதலாம் பிரான்சிசிற்கும் இடையே போர்

பேவியாச் சண்டை

இவ்விருவருக்குமிடையே தோன்றிய போட்டி, போரிலேதான் முடியுமென்று எல்லோரும் எதிர்பார்த்தனர். காரணம், 16ஆம் நூற்றுண்டில் இக்காலத்தைப் போலன்றிச் சிறிதும் பொறுப்பற்ற முறையில் போர்கள் தொடுக்கப்பட்டதேயாகும். எனவே, இரு தரத்தாரும் கூட்டுச் சேர்ப்பதில் முனைந்தனர். ஐந்தாம் சார்லசு பக்கம் சேருமாறு இங்கிலாந்து தூண்டப்பட்டது. 1522-ல் சண்டைகள் தொடங்கின. ஆனுல், 1525-லேதான் முடிவான நிகழ்ச்சி நிகழ்ந்தது. 10 ஆண்டுகளுக்குமுன், தாம் பெற்ற வெற்றிகளை மீண்டும் பெறுவதில் நம்பிக்கை கொண்டு பிரான்சிசு, இத்தாலியின்மீது படையெடுத்து, பேவியா நகரத்தை முற்றுகை செய்த போது வெற்றி கிட்டும் போலத் தோன்றியது. அத்தருணத்தில் போர்போன் கோமகனுரின் தலைமையின் கீழ் ஜெர்மனியிலிருந்து ஒரு புதியபடை வந்து சேர்ந்தது. போர்போன் கோமகனுர் பிரான்சின் சுதந்தரமான படைமானியப் பிரபுக்களில் இறுதியானவர். இப்பொழுது இவர் மன்னருக்கு எதிராகக் கலகம் விளைவித்தவராவர். நிகழ்ந்த போரில் முதலாம் பிரான்சிசு முழுத் தோல்வி அடைந்ததோடு இறுதியில் பகைவரிடம் தம்மையும் தமது போர்வாளையும் ஒப்படைக்க நேர்ந்தது. அவர் எழுதிய புகழ் பெற்ற கடிதத்தில் ''உயிர், மதிப்பு இவைகளைத் தவிர வேறு ஒன்றையும் காப்பாற்ற முடியவில்லை,'' என்று கூறுகிருர். அவர் சிறை செய்யப்பட்டு ஸ்பெயினுக்குக் கொண்டு செல்லப்பட்டு 1526-ல் மாட்ரிட் உடன்படிக்கையில் கையெழுத்திடும்படி கட்டாயப் படுத்தப்பட்டார். இவ்வுடன்படிக்கையின்படி பிரான்சின் மிகுதியான நிலப்பகுதி ஸ்பெயினிடம் சரணடைய விடப்பட்டதோடு பிரான்சின் மாண்பும் நம்பிக்கை இழக்கும் அளவிற்குப் பாழடைந்தது.

## ரோம் தாக்கப்படுதல்

போரும் ஜெர்மனியின் சமயச் சீர்திருத்த இயக்கத் தொடர்பும்

ஆனுல், சார்லசு பெற்ற வெற்றியின் பேரளவு, அவருக்கு எதிராக மீண்டும் ஐரோப்பிய நாடுகளின் சங்கத்தை உருவாக்கியது. நிதித் தொல்லைகள் பகைவனை அடிபணியச் செய்து, மீண்டும் தலையெடுக்க இயலாதவாறு தடையாய் அமைந்தன. பிரான்சும், மாட்ரிட் உடன் படிக்கையானது கட்டாயத்தின்மேல் செய்யப்பட்டதென்றும், பிரெஞ்சு முப்பேராயத்தின் ஒப்புதலில்லாமல் அதன் அரசர் நிலப்பகுதிகளை விட்டுக் கொடுக்க முடியாதென்றும் காரணங்களைக் கூறி, அவ்வுடன் படிக்கையை ஏற்க மறுத்தது. எனவே, மீண்டும் போர் மூண்டது




பேரரசர் ஐந்தாம் சார்லசின் காலத்தில்

[பக்கம் 24

1527-ல் பிரான்சிசிற்கும் சார்லசிற்குமிடையே நிகழ்ந்த போரில் நேரடி யாக ஆதிக்கத்தைக் காட்டாவிடினும், புகழ் பெற்ற நிகழ்ச்சி ஒன்று நடந்தது. அஃதாவது, இத்தாலியில் வெற்றிகரமாய்ப் போர் புரிந்து வந்த சார்லசின் படைக்கு ஊதியம் அளிக்கப்படாமலிருந்தது காரண மாக, அது 16ஆம் நூற்றுண்டில் அடிக்கடி நிகழ்ந்துள்ளது போலக் கலகம் செய்தது; அதனுடன் தனக்குக் கிடைக்கவேண்டிய ஊதியத் தைப் பெறுவதற்கு இத்தாலியின் செல்வமிக்க நகரங்களில் ஒன்றைக் கொள்ளையடிக்கத் தீர்மானித்தது. பிளாரன்சு நகரத் தாக்குதல் தோல்வியுறவே, கலகம் செய்யும் படைகள் ரோம் நகரை நோக்கி விரைந்தன. ரோமாபுரி சிறந்த பாதுகாவலின்றி இருந்தது. போப் பாண்டவரும் (ஏழாம் கிளீமென்டு) இப்படைகளிற் சிக்குண்டார். விசிகோத்துக்கள், வாண்டல்கள், லம்பார்டுகள் அல்லது பிராங்குகள் முதலியவர்களால் இது வரை தாக்கப்படாத அளவுக்கு ரோம் நகரம் கடுமையாகத் தாக்கப்பட்டுச் சூறையிடப்பட்டது. இந்நிகழ்ச்சி ஆங்கில நாட்டு வரலாற்றில் இன்றியமையாச் சிறப்பு வாய்ந்ததொன்றுகும். காரணம், ஏழாம் போப்புக் கிளீமென்டு, ஐந்தாம் சார்லசிடம் கைதியா யிருந்ததால், ஆங்கில அரசர் எட்டாம் ஹென்றி அவர் மனைவியான ஆரகன் நாட்டுக் காத்தரினுடன் திருமண விலக்குச் செய்து கொள்ளு வதற்காகச் செய்துகொண்ட விண்ணப்பத்தை ஏற்றுத் தம் விருப்பப்படி தீர்வு காண முடியாமலிருந்தது. இதன் விளைவாகத்தான் இங்கி லாந்தில் சமயச்சீர்திருத்த இயக்கம் தோன்றியது. பிரான்சிசிற்கும், சார்லசிற்குமிடையே நிகழ்ந்த போர்களில் ரோம்நகர்த் தாக்குதல் குறிப்பிடத் தக்கதாயில்லை. எனவே, இது முதல் இவ்விருவருக்கும் சிற்சில சமயங்களில் சமாதானம் நிலவியதுடன் போரும் நீடித்தது. எனினும், போர்னுவோ, மாரிக்னுனோ, பேவியாச் சண்டைகளைப்போல உள்ளத்தைத் தொடும் நிகழ்ச்சிகள் நடக்கவில்லை. இப்போரின் போக்கில் முக்கிய நிலைகளைக் காண்பது இன்றியமையாததாகும். இக் காலமுதல் போரின் போக்கில் ஜெர்மனியில் ஏற்பட்ட மதச்சீர்திருத்த இயக்கம் மேலான ஆதிக்கத்தைச் செலுத்தலாயிற்று என்பதையும் நாம் இங்கு நினைவு கொள்ளுதல் வேண்டும். எவ்வெப்பொழுது சார்லசு பிரான்சுடன் போரிடாமலிருக்கச் சமயம் நேர்ந்ததோ, அவ்வப்பொழுது ஜெர்மனியில் அவருக்குப் பகையாயிருந்த சமய விரோதிகளுடன் சண்டையிட்டார். இஃது இவ்வாறிருக்க, கத்தோலிக்கச் சமயத் தினரான பிரான்சிசு அடிக்கடி தமக்குப் பகைவராய் இருந்த சார்ல சிற்குத் துன்பம் விளைவிக்கக் கருதி ஜெர்மானிய பிராட்டஸ்டென்டு களுடன் ஒன்று சேர்ந்தார். ஜெர்மனியில் தொல்லைகள் இருந்திரா விட்டால், பிரெஞ்சு அரசியல் வீழ்ச்சியுற்றிருக்கும். பிரெஞ்சுப் போர்கள் நிகழ்ந்திராவிடில், ஜெர்மனியில் பிராட்டஸ்டென்டு சமயம் உயிர் பிழைத்திருக்குமா என்ற ஐயம் எழலாம்.

1529-ல் கேம்பராய் என்னுமிடத்தில் சமாதானம் ஏற்பட்டது இது ஏழாண்டு காலம் வரை சிரமத்துடன் நீடித்திருந்தது. 1536-ல் மிலானின் கோமகனுர் பதவி காலியாயிற்று. சார்லசும் பிரான்சிசும் இதற்கு உரிமை கொண்டாடினர். மீண்டும் போர் தொடங்கியது. ஆனுல், முன்னர் நிகழ்ந்ததுபோலக் கடுமையாகவும் தீவிரமாகவும் போர்கள் நடக்கவில்லை. 1538-ல் நைஸ்[1] ஒப்பந்தம் ஏற்படவே, போர்கள் முடிந்தன. இவ்வொப்பந்தத்தின்படி பத்து ஆண்டுகளுக்கு எல்லாப் பூசல்களும் நிறுத்திவைக்கப்பட வேண்டுமென்றும், போர் வீரர்கள் வசமிருந்த நிலப்பகுதிகளை அவரவர் கொள்ளுவது என்றும் முடிவு செய்தனர். நான்காண்டுகளே இவ்வொப்பந்தம் நீடித் திருந்தது. 1542-ல் மீண்டும் போர் தொடங்கியது. இதற்குச் சார்லசு, அவர் புதல்வர் பிலிப்பிற்கு மிலான் கோமகனுர் பதவியை அளித்ததுதான் காரணம் என்று கருதப்படாவிட்டாலும், அது போருக்குச் சாக்குப்போக்காய் அமைந்தது. இத்தாலி மண்ணில் பிரான்சு பல வெற்றிகளைக் கண்டது எனினும், ஐரோப்பாவில் இரு தரத்தாரும் வேறு விஷயங்களில் தமது கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்ததால் இத்தாலிய தீபகற்பத்தில் போர்கள் மும்முரமாக நடைபெறவில்லை. 1544-ல் கிரஸ்பி[2] என்னுமிடத்தில் சமாதானம் ஏற்பட்டது. அதன் முடிவு அவரவர் வென்ற நாடுகளை அவரவர் வைததுக் கொள்வதேயாம்

## பிரான்சு மன்னர் இரண்டாம் ஹென்றி

1547-ல் முதலாம் பிரான்சிசு இறக்கவே, அவர் புதல்வர் இரண்டாம் ஹென்றி பிரான்சின் மன்னரானுர். இவர் பட்டமெய்தியது முதல் பிரான்சிற்கும் ஸ்பெயின் ஆஸ்திரியக் கூட்டிற்குமிடையே நிகழ்ந்த போர்கள், ஜெர்மனியிலிருந்த பிராட்டஸ்டென்டு இயக்கத் துடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. தெளிவு கருதி இப்போர்களை நிலையான சமாதானம் ஏற்படும் வரையில் தொடர்ந்து இவற்றின் முக்கியப் பகுதிகளைக் கவனிப்பது நலமாகும். ஜெர்மனியி லுண்டான சிக்கல்களால் 1550-ல் போர் தொடங்கியது. பிரான்சு மன்னரான இரண்டாம் ஹென்றி கத்தோலிக்கச் சமயத்தில் மிக்க பற்றுள்ளவர். தமது நாடான பிரான்சிலேயே பிராட்டஸ்டென்டு களைத் துன்புறுத்தியவராயிருந்துங்கூட, ஜெர்மனியில் பிராட்டஸ் டென்டுத் தலைவர்களுடன் தயக்கமின்றிச் சேர்ந்தார். இதன் விளைவாக, ஐந்தாம் சார்லசு ஜெர்மனியில் கடுந்தோல்விக்குள்ளானுர். இதைப் பற்றி மீண்டும் அடுத்த அதிகாரத்தில் கவனிப்போம். இப்படு தோல்வியை ஈடு செய்யும் வகையில் பிரான்சின் எல்லையில் ஒரு பெருவெற்றி ஏற்படும்போலத் தோன்றியது. அவர் பிரெஞ்சுக்

[1] Nice. [2] Crespy.

காரர் வசமிருந்த மெட்ஸ்[1] என்னும் நகரத்தை முற்றுகையிட்டார். வெற்றி கிடைக்கும் போன்றிருந்தது. இருந்தும், பருவகாலத்தின் மாறுபாடும் வேறொரு பிரெஞ்சுப் படை அங்கு வந்து சேர்ந்ததன் விளைவும் அவருடைய எண்ணங்களைச் சிதறவடித்துப் பெரிய இழப்புடன் அவரைப் பின் வாங்கச் செய்தன. அவரது ஆட்சிக் காலத்தில் நடந்த இறுதியான இராணுவ நிகழ்ச்சி இதுவேயாம்.

## ஐந்தாம் சார்லசு பதவி துறத்தல்

### இரண்டாம் பிலிப்புப் பட்டமடைதல்: காட்டே காம்ரே உடன்படிக்கை

சார்லசு தமது உடல் நலமிழந்து, சோர்வும் ஏமாற்றமும் கொண்டவராய், தம் வசமிருந்த அரசாங்கங்களையும் முடிகளையும் துறந்து, ஆன்மா அமைதியடைதற்பொருட்டு ஸ்பெயினிலுள்ள கிறித்தவ மடத்திற்குச் செல்ல உறுதி கொண்டார்; ஆகவே, தம் புதல்வரான பிலிப்பிடம் மிகப் பெரிய பரப்புள்ள தமது நாட்டை ஒப்படைக்க எண்ணியிருந்தார். ஜெர்மனியில் தோன்றிய எதிர்ப்புக்கள் இவ்வெண்ணத்தை ஈடேறச் செய்யவில்லை. அவரது உடன் பிறந்தாரான பெர்டினண்டு ஆஸ்திரியப் பகுதிகளுக்கும் பேரரசுப் பதவிக்கும் தலைவரானார். புதல்வரான பிலிப்பு, ஸ்பெயின், நெதர்லாந்து, இத்தாலி, புதிய உலகு ஆகியவற்றின் பரந்த நிலவுடைமைகட்கு வாரிசானார். அவர்தம் தந்தையார் யூஸ்டி[2] என்னுமிடத்திலுள்ள திருமடத்தில் சேர்ந்துகொண்ட பிறகும் ஐரோப்பியப் போர்களின் போக்கை அவர் பற்றார்வத்துடன் நோக்கிக்கொண்டிருக்கும் பொழுது பிலிப்பு அவர்தம் போர்களைத் தொடர்ந்து நடத்திக்கொண்டிருந்தார். பிலிப்பிற்குச் சிறந்த வெற்றிகள் கிட்டின. பிரெஞ்சுக்காரர் இத்தாலியில் தோற்றனர். 1557-ல் பிரான்சிற்கு வடக்கில் செயின்ட் குவென்டின்[3] என்னுமிடத்தில் நிகழ்ந்த பெரும்போரில் பிரெஞ்சுக்காரர்கள் முறியடிக்கப்பட்டார்கள். தியானத்தில் ஈடுபட்டிருந்த சார்லசு, தம் புதல்வரான பிலிப்பு பாரிசை அடைந்தார் என்ற செய்தியைக் கேட்க ஆவலாயிருந்தார். இதனை நோக்கும்போது செயின்ட் குவென்டின் வெற்றி எவ்வளவு உறுதியாயிருந்ததென்பதை ஊகித்துக் கொள்ளலாம். போர், எண்ணியபடி முடியாமல், மாறாகப் பிரெஞ்சு வெற்றியுடன் முடிவுற்றது. 1558-ல் பிரான்சு, ஆங்கிலேயர் வசமிருந்த கலேயைக்[4] கைப்பற்றியது. இங்கிலாந்தின் அரசியாரான மேரி, ஸ்பெயின் நாட்டு மன்னரான பிலிப்பை மணந்ததுவாயிலாக இங்கிலாந்து ஸ்பெயினுடன் உடன்பாட்டில் சேர்ந்தது. 1559-ல் காட்டே காம்ரே[5] என்னுமிடத்தில் உண்மையில் சமாதானம் ஏற்பட்டது. இதன் விளைவாக ஸ்பெயின் இத்தாலியில் அதன் பிடிப்

[1] Metz. [2] Yuste. [3] Saint Quentin. [4] Calais. [5] Cateau Cambresis.

பினைக் கைவிடாமற் பற்றிக்கொண்டது. மிலான், நேப்பிள்சு நகரங்கள் ஸ்பெயினுக்குச் சொந்தமானவை என்பது ஒப்புக்கொள்ளப் பட்டது. போப்பு இரண்டாம் ஜூலியசு, இத்தாலி நாட்டில் பிரெஞ்சுக் காரர்கள் நாணலைப் போன்று எளிதில் களைந்து எறியத்தக்கவர்கள் என்றும், ஸ்பெயின் அரசு நன்கு வேரூன்றியதால் களையஇயலாத ஒரு செடிக்கு ஒப்பானதென்றும் கூறிய கூற்று நடைமுறையில் முற்றிலும் ஏற்றதாயிற்று. இத்தாலி வெளிநாட்டாரின் ஆட்சியின்கீழ் வந்தது. இந்நிலையைக் கண்டு சிலர் பெரிதும் வருந்தினர். இந்நூற்றாண்டிற்கு முன்னரே இத்தாலியைப் பற்றி மாக்கியவல்லி[1] என்பார், "இத்தாலி தலைமையின்றி, ஒழுங்கின்றி, அன்னியப் படையெடுப்புக்களால் முறியடிக்கப்பட்டும், சின்னபின்னப்பட்டும், கீழ்ப்படிந்தும், சீரழிந்தும் இருக்கிறதுடன், ஏற்பட்ட அவமானத்தைப் பொறுத்துக்கொண்டுமிருக்கிறது. நாகரிகம் அற்றவர்களின் ஆட்சியின் நாற்றத்தை நாம் எல்லோரும் முகர வேண்டியிருக்கிறது," என்று கூறியுள்ளார். "அநாகரிகமானவர்களின்" கட்டிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள இத்தாலியில் பொது நல்லெண்ணமும் ஒற்றுமையும் தேவையாயிருந்தன. இவை உருவாவதற்கு மூன்று நூற்றாண்டுகள் செல்ல வேண்டியிருந்தது. பிரான்சிற்குச் சில இலாபங்கள் கிடைத்தன. பிரான்சின் வடகிழக்கில் இருந்த மெட்சு, தூல், வெர்டன் என்ற மூன்று சமயஞ் சார்ந்த நிலப்பகுதிகள் பிரான்சிற்குக் கிடைத்தன. இப்பகுதிகள் இரு நூற்றாண்டுக்குப் பின்பு லொரைன் என்னும் பகுதி முழுவதையும் பிரான்சு அடைய வழி செய்தன. முடிவாக, பிலிப்பின் மனைவியாராயிருந்த ஆங்கில நாட்டரசியாரான மேரி இறந்து போகவே, பிலிப்பு, பிரான்சு நாட்டின் எலிசபெத்தை மணந்து கொள்வதென்றும் ஏற்பாடாயிற்று. இதனால் இருபெரு வல்லரசுகளும் நட்புக்கொள்ளும் என்பது நம்பப்பட்டது.

## பிரான்சிற்கும் ஸ்பெயினுக்குமிடையே இருநூற்றாண்டுப் போர்

உண்மையிலேயே இச்சமாதானம் மிகவும் முக்கியமானதாகும். எண்ணியது போல, இரு நாடுகளுக்குமிடையே உடன்பாடு கொள்வதென்பது நிகழாவிட்டாலும், ஒன்றரை நூற்றாண்டுகள் வரை இவ்விரு நாடுகளுக்குமிடையே ஏற்பட்டிருந்த பகைமை ஐரோப்பிய அரசியல் தந்திர விவகாரங்களில் உறுதியானதும், நிலையாயுள்ளதுமான செல்வாக்கைப் பெற்று இருந்தது. 1500 முதல் 1700 வரை பிரான்சிற்கும் ஸ்பெயினுக்கும் இடையே நடந்த போர்கள் 'இரு நூற்றாண்டுப் போர்' என வழங்கப்படத் தக்கனவாயின. காரணம், இங்கிலாந்தும்

[1] Machiavelli.

பிரான்சும் இதற்கு முன் ஒரு நூற்றாண்டுப் போரில் ஈடுபட்டிருந்தமையேயாம். பிரான்சும் ஸ்பெயினும் பகைமை பாராட்டிக்கொண்டிருந்தன. ஆனால், இது முதல் வல்லரசுகளின் உறவுகளில் சமயத் தொடர்பு கொண்ட சண்டைகள் மிகுதியான அளவிற்குச் செல்வாக்குப் பெற்றன. ஆதிக்கத்தை அடிப்படையாகக் கொண்ட இத்தாலியப் போர்கள் முடிவுற்றன. சமயத்தை அடிப்படையாகக் கொண்ட இப் போர்கள் தொடங்க இருந்தன. காட்டே காம்பிரே உடன்படிக்கையிலிருந்து 1648-ல் வெஸ்டுபேலியா உடன்படிக்கை ஏற்படும் வரையுள்ள காலத்தில், இச்சமயத்தின் அடிப்படையில் செய்த போர்கள் நீடித்திருந்ததாகக் கருதலாம்.

[இக்கட்டத்திலிருந்து தெளிவு பெறுவதற்குக் கேம்பிரிட்ஜ் நவீன வரலாறு மிக்க பயனுள்ளதாகிறது. ஹாசல் பதிப்பித்துள்ள டயருடைய நவீன ஐரோப்பாவும், நவீன வரலாறு குறித்து, ஆக்டன் பிரபு நிகழ்த்திய சொற்பொழிவுகளும் நேரில் படம் பிடித்துக் காட்டுவன போன்றும், உணர்ச்சியைத் தூண்டுவனவாயும் உள்ளன. இவ்வதிகாரத்திற் காணும் நிகழ்ச்சிகள் குறித்துப் புகழ் வாய்ந்த பிரான்சு நாட்டு வரலாற்றாசிரியர்கள் உற்சாகத்துடன் வருணித்துள்ளார்கள். மிக்லேட்டின் நூல் படிப்பதற்கு மிக அழகாய் அமைந்துள்ளது எனினும், ஒருதலையாயுள்ளது. கிராண்டின் பிரெஞ்சு முடியாட்சியும் (இரு தொகுப்புக்கள்); ஆர்ம்ஸ்டிராங்கு எழுதியுள்ள ஐந்தாம் சார்லசின் வாழ்க்கை வரலாறும் (இரு தொகுப்புக்கள்), இவ்வதிகாரத்திலும் இதற்கு அடுத்து வரும் அதிகாரத்திலும் காணப்படும் சிக்கலான நிகழ்ச்சிகளுக்குச் சிறந்த வழி காட்டிகளாகும். ஸ்பெயின்: அதன் பெருமையும் அழிவும்—மார்ட்டின் ஹ்யூம் எழுதியது, ஆர்ம்ஸ்டிராங்கு முன்னுரையாக எழுதியுள்ள மிகச் சிறந்த அதிகாரங்கள்; நாகரிகமற்றவர்கள் இத்தாலியை அடிமைப்படுத்தியது பற்றி விளக்கமாக மாக்கியவல்லி எழுதிய ‘இளவரசர்’ என்னும் இந்நூல்கள் படிக்கத் தக்கனவாம்.]

# 2. ஜெர்மனியில் சமயச் சீர்திருத்தம்

## லூதர்

### டெட்சலும் பாவமன்னிப்புச் சீட்டும்

லூதரின் அறைகூவல்:

மாரிக்னுனே போர்முடிந்து (1515) ஈராண்டுகள் சென்றபின், ஜெர்மனியில் நிகழ்ந்த சாதாரண நிகழ்ச்சியொன்று, இத்தாலியப் போர்களைக்காட்டிலும் ஐரோப்பிய விவகாரங்களில் பெரிய விளைவுகளைத் தோற்றுவிக்கும் ஓர் இயக்கத்தின் தொடக்கத்தைக் குறிக்கலாயிற்று. 1517-லேதான் கத்தோலிக்கத் திருச்சபையின் அதிகாரத்தையும் போப்பாண்டவரின் உரிமைகளையும் தம் வாழ்நாள் முழுவதும் எதிர்த்துப் போராடிய மார்ட்டின் லூதர், முதன்முதலில் போருக்கு அறை கூவினார்.

சமயச் சீர்திருத்தத்திற்கு ஒத்திருந்த சத்திகள்

விவசாயக் குடும்பத்திற் பிறந்த லூதர், பல இன்னல்களை எதிர்த்து வென்று, உட்டன்பர்கு என்னுமிடத்தில் அண்மையில் நிறுவப்பட்ட பல்கலைக் கழகத்தில், சமய சித்தாந்தப்[1] பேராசிரியரானார். இவர் புனித அகஸ்டின் நிறுவிய புனிதத்திரி துறவிகள்[2] சங்கத்தைச் சேர்ந்தவர். வல்கேட் (லத்தின்) மொழி பெயர்ப்பில் புனித விவிலியத்தை ஆழ்ந்து படித்தவர்; வைதிகக் கத்தோலிக்கச் சமயத்திற்கு அடிக்கடி துன்பமூட்டிய புனித அகஸ்டின் நூல்களையும் நன்கு கற்றிருந்தார். உட்டன்பர்கில் ஒன்பது ஆண்டுகளாகப் பேராசிரியராய் இருந்த வரையில், வாத எதிர் வாதத்தில் எத்தகைய பங்கும் கொள்ளக் கூடியவர் என்று காணத்தக்க வகையில் ஒன்றும் நிகழவில்லை. ஆனால்,

[1] Theology. [2] Friar,

1517-ல் அவர் இருந்த இடத்திற்கு அருகில் டெட்சல்[1] என்னும் போப்பாண்டவரின் தனிமுறைத் தூதர் வந்தார். இவர் ரோம் நகரத்தில் புனித பீட்டரின் புதிய கதிட்ரலை (மாதா கோயில்) கட்டுவதற்குப் பொருள் திரட்டுவதற்காகப் பாவமன்னிப்புச் சீட்டுக்களை[2] விற்கும் தொழிலை மேற்கொண்டிருந்தார். இடைக்காலத் தொடக்கத்தில் திருக்கோயில் இருந்த அவ்விடத்திலேயே மறுமலர்ச்சிக் காலத்தில் இக்கோயிலும் கட்டப்படுவதாயிருந்தது. பாவமன்னிப்புச் சீட்டுப் பற்றிய கொள்கை மிகச் சிக்கலானதொன்றாகும். பழக்கத்திலிருந்ததை யொட்டி ஒருவேளை தற்காப்பிற்குச் சாதகமாக இதனை விவாதிக்கலாம். ஆனால், டெட்சலின் செய்கைகளைப் பற்றித் தற்காப்பிற்காகக் கூட ஒன்றும் கூறுவதற்கில்லை. தம்மைச் சூழ்ந்திருந்த அறிவற்ற குடியானவர்களிடத்தில், அவர்கள் பாவமன்னிப்புச் சீட்டிற்கெனச் செலுத்தும் தொகையைக் கொண்டே, அவர்களுடைய தீவினைகளை மட்டுமன்றி, நண்பர்கள் உறவினர்கள் ஆகியோரது ஆன்மாக்களின் தீவினைகளையும் தீயினின்று[3] மீட்கலாம் என உறுதி கூறினார். எவ்விதத் தண்டனையுமின்றிப் பாவம் செய்வதற்கான அதிகாரத்தை மக்களுக்கு அவர் விற்றார் என்று பலருக்குத் தோன்றியிருக்கவேண்டும். பாவமன்னிப்புச் சீட்டு விற்பனை செய்வதில் தொடர்பு கொண்டிருந்த ஒழுக்கத் தவறுகளைப் பற்றி ஏற்கனவே மக்கள் குறைகூறி வந்துள்ளனர். லூதரின் நெஞ்சம் குமுறிக்கொண்டிருந்தது. 1517 ஆம் ஆண்டு அக்டோபரில் உட்டன்பர்கு மாதா கோயிற் கதவின்மீது பாவமன்னிப்புச் சீட்டுக்கெதிராக அமைந்த தொண்ணூற்றைந்து தீர்மானங்களை லூதர் எழுதித் தொங்கவிட்டார். அதனுடன் அவற்றை வாதங்களின் மூலம், தாமே மெய்ப்பிக்க இயலுமென்றும் உறுதி கூறினார். முதலில் இந்நிகழ்ச்சி தனிச் சிறப்பு வாய்ந்ததாகத் தோன்றவில்லை. இவரது எதிர்ப்பைக்காட்டிலும் ஹஸ்,[4] விக்லிப்[5] முதலியவர்கள் காலம்முதல், போப்பாண்டவரின் அதிகாரத்தின் அடிப்படைகளுக்கு நேரிடையாக அறைகூவல்கள் விடுக்கப்பட்டிருந்தன. எனினும், விக்லிப், ஹஸ் இவர்களது இயக்கம் இறந்தோ அல்லது ஒடுக்கப்பட்டோ ஒழிந்தது. ஆனால், லூதர் வேண்டுமென்ற எண்ணமில்லாமல் தொடங்கிய இவ்வியக்கம் வெற்றி பெற வேண்டுமென்றும், ஐரோப்பிய சமுதாயத்தில் நிலையான சத்தி பெற வேண்டுமென்றும் ஊழ் கூட்டிற்று. இதை நன்கறிய ஜெர்மானிய ஐரோப்பிய நாடுகளின் நிலைமையை மேலெழுந்தவாறு பார்ப்பது இன்றிமையாததாகும். தொடக்கத்தில் மிக எளிமையாயும், நேர்மையாயுமிருந்த இச்சமய இயக்கம், ஐரோப்பிய வல்லரசுகளின் சர்வதேசத் தொடர்புகளோடும், ஜெர்மனியின் அரசியல் நிலையோடும் தொடர்பு கொண்டது காரணமாக விரைவில் மிகச் சிக்கலாக மாறிற்று. லூதருடைய இயக்கம் அடுத்த

[1] Tetzel. [2] Sale of Indulgence. [3] Purgatory. [3] Huss. [5] Wycliffe.

நூற்ருண்டின் போக்கில் அதிகமாகக் காணப்படுகின்ற இரகசியச் சதிகள், அரசியற் போட்டிகள், அரசியல் தந்திரம், உள்நாட்டு வெளி நாட்டுப் போர்கள் இவற்றின் மூலம் வெற்றி கண்டது.

## ஐந்தாம் சார்லசு

**அவரது தொல்லைகள், தோல்விகள், வெற்றிகள் :**

சென்ற அதிகாரத்தில் கூறியவற்றை மீண்டும் இங்கு நினைவிற்குக் கொண்டுவர வேண்டும். 1519 - ல் ஸ்பெயின் நாட்டு மன்னரும், பர்கண்டிய நிலப் பகுதிகளுக்கு வாரிசாக இருந்தவருமான சார்லசு புனித ரோமப் பேரரசிற்குப் பேரரசராகத் தேர்ந்தொடுக்கப்பட்டார். அவர் உலகத்தின் தலைசிறந்த அரசர்களைச் சேர்ந்தவரல்லர். தவிர, போர் வீரராகவோ, அரசியல்வாதியாகவோ ஐரோப்பிய வரலாற்றை உருவாக்கிய சத்திகளின் வரிசையில் அவர் இடம் பெறவில்லை. அக்காலத்தில் தோன்றிய தீயசத்திகளில் அவரும் ஒருவராக அன்று தொட்டு இன்று வரை கருதப்படுகிருர்; பிராட்டஸ்டென்டு சமயத் திற்கும், கத்தோலிக்க நற்செய்தி பரப்பும் சங்கத்தின்[1] உண்மைக்கும் கடும்பகைவராய் இருந்தார். ஆனல், அவருடைய குணம், நிலைமை, கொள்கை இவைகளை விருப்பு வெறுப்பின்றிப் பார்க்குமிடத்து, மாருகவே முடிவு செய்ய வேண்டி வருகிறது. சார்ல்மெயின்[2] காலத்திற்குப் பின் நமக்குத் தெரிந்த பேரரசுகளில் மிகப் பரந்தபேரரசை ஆண்டவர் அவர். இப்பேரரசு சுயேச்சையான பல சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பகுதிக்கும் தனித்தனி அரசியலும், வெல்திறம் கொண்ட கையாளுமுறையும் தேவையாயிருந்தன. அவர் ஆட்சி புரிந்த நெதர் லாந்தில் அடங்கியிருந்த பதினேழு சிற்றரசுகளுள் ஒவ்வொன் றிற்கும், தனித்தனி அரசியல் அமைப்பும் இருந்தது. ஸ்பெயினில் இருந்த காசில், ஆரகன், வாலன்ஷியா, காடலோனியா முதலியவை தனித்தனி அரசியல் அமைப்பையும், பாராளுமன்றத்தையும் கொண்டிருந்தன. இத்தாலியில் அவருக்குச் சொந்தமாயிருந்த பகுதிகள், ஸ்பெயின் ஆட்சிக்கு உட்படாமல் தனி உரிமையோடு இருந்தன. அத்துடன் ஓர் அரசு மற்ருேர் அரசிற்கு உட்படவுமில்லை. மிகப் பரவியிருந்த, பல தரப்பட்ட, சொந்தமான நிலப்பகுதிகளின் நலனை வளர்ப்பதும், அமைதியையும் ஒழுங்கையும் நிலை நிறுத்துவதும், இவற்றிற்கிடையே ஒற்றுமையைத் தோற்றுவிப்பதும் எவ்வாறென்பது அவருக்குப் பிரச்சினையாய் இருந்தது. ஜெர்மனியில் அவர் அடைந்த தோல்வியை மனத்திற்கொண்டு, அவரது ஆட்சியில் அவர் பெற்ற பல வெற்றிகளை நாம் மறைத்துவிடக் கூடாது. அமெரிக்காவில், ஸ்பெயினுக்குச் சொந்தமான பெரிய குடியேற்ற நாடுகளில், மக்களுக்கு

[1] Evangelical truth. [2] Charlemagne.

நலனை அளிக்கும் மேலான அரசாங்கத்தைத் தோற்றுவித்தார். ஆப்பிரிக்காவின் வடக்குக் கடற்கரையில் இருந்த முகமதியர்களுடைய ஆதிக்கத்தைத் தளர்வுறச்செய்தற்குப் பாடுபட்டார். அதனுடன் நெதர்லாந்தில் அவருக்கு உரிமையாய் இருந்தவைகளை ஒன்ருக இணைப்பதில் முயற்சி கொண்டார். ஜெர்மனியில் அவர் முழுத் தோல்வியுற்ற போதிலும், அவருடைய நோக்கங்கள் யாவும் கண்டிக்கத்தக்கவையல்ல. மனநிலை, கொள்கை, கல்வி, அக்கறை இவற்றைக்கொண்டு பார்க்குமிடத்து அவர் உறுதியான கத்தோலிக்கராய் இருந்தார் எனலாம். லூதரின் இயக்கத்தில் கருத்து மாறுபாட்டுக்கிடமான சமயப் பிரச்சினைகளில் அவருக்கு இரக்கமில்லை; அவர்களைப் புரிந்து கொள்ளவுமில்லை. ஆனல், அவருடைய ஆட்சி முழுவதும், ஜெர்மனியில் இவ்வியக்கம் ஒழுங்கின்மையை மேலும் உண்டாக்காதவாறு தடுக்க முயன்ருர். அதனுடன், சமயத் தொல்லைகள் இருந்த போதிலும், ஜெர்மனியில், நாட்டுப் பற்றுள்ளவர்கள் விரும்பியவாறே, ஒற்றுமை, அமைதி நிலவச் செய்தற்கு முயன்ருர். சமயத்துறையில் அவர் வெறி கொண்டவரல்லர். காலப்போக்கில் லூதரின் இயக்கம் அழிந்துவிடுமென நம்பினுர். அக்காலத்தில் கடுமையான சமயப் பூசல்களுக்குக் கான்ஸ்டன்ஸ்[1] அல்லது பேசல்[2] முதலிய இடங்களில் கூடிய திருச்சபையின் மன்றங்களைப்போல ஒரு திருச்சபைக் குழு கூடி ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பது வாயிலாக அமைதியை ஏற்படுத்தலாமென நம்பினுர்.

## லூதரின் செல்வாக்கு

### ஜெர்மனியின் பிரிவுகள்: ஐந்தாம் சார்லசின் வேலைகள் :

லூதரின் இயக்கம் வெற்றிபெறுவதற்கான சூழ்நிலைகள் யாவை என நாமே நம்மை வினுவிக்கொண்டால், அதற்கு விடையைக் கீழ்க்காணும் வகையில் கூறலாம். முதன் முதலாக லூதரின் மேதையையும் குண நலன்களையும் நாம் குறிப்பிட வேண்டும். தீவிர நம்பிக்கை கொண்டிருந்த அவர் தம்மைப் பின்பற்றுவோர்களை ஊக்குவிக்கும் ஆற்றலும் வெல்லவியலாத உரமும் பெற்றிருந்தார். ஜெர்மானியர்களில் பெரும்பாலார் லூதரின் துணையால், அதுவரை, கத்தோலிக்கத் திருச்சபையின் ஊழல்களாலும் மூடநம்பிக்கைகளாலும் மேவப்பட்டிருந்த புனிதமான உண்மை அறிவைப் பெற்றதாகவும், இவ்வுண்மைகளை வெளிநாடுகளிலும் பரப்பினுல் உலகனைத்தும் இவற்றை ஒப்புக்கொள்ளுமென்றும், அறியாமை அல்லது பேராசையாலேதான் இவைகளை எதிர்த்து நிற்க முடியுமென்றும் நம்பலாயினர். எனவே, வருங்காலத்தில் ஜெர்மனியின் சமயம், அரசியல், சமூக வாழ்க்கை முதலியவைகளில் நற்காலம் கிட்டும்

[1] Constance, [2] Basal.

என்ற எண்ணம் தோன்றிற்று. இத்தோற்றத்தைத் தெளிவாக்கும் முயற்சியில் ஏமாற்றங்கள் உண்டாயின. பெரும்பாலார் கொண்டிருந்த எண்ணங்களின் வலிமையையும் உறுதியையும் நாம் நன்கறியா விட்டால், இவ்வியக்கத்தை அறியவியலாது. அதனுடன் ஜெர்மனியின் அரசியல் நிலைமைகளும் இப்புதிய இயக்கத்தின் வளர்ச்சிக்குத் துணையா யிருந்தன. ஜெர்மனி அரசியல் ஒற்றுமைகொண்ட நாடாய் இல்லை; பெயரளவில் பேரரசாய் இருந்தது ; உண்மையில் பெரும்பாலும் தன்னுரிமை பெற்ற பல சிற்றரசுகளைக் கொண்ட கூட்டாட்சியாய் இருந்தது. எனவே, மத்திய அரசின் தலையீட்டை அனுமதிக்கவில்லை. முன்னணியிலிருந்த ஜெர்மானிய அரசுகளின் அனுமதியின்றிப் பேரரசர் வரி விதிக்கவோ, படை திரட்டவோ, போர் தொடுக்கவோ முடியாது. அனுமதியைப் பெறுவதும் மிகவும் கடினமானது. அநேக நாடுகளின்மீது ஆட்சி செலுத்திய ஐந்தாம் சார்லசுக்கு இம்மாதிரிச் சட்டத்திற்குட்பட்ட தொல்லைகளால் அல்லற்படுத்திய இந்நிலையைப் போன்று வேறு இல்லையென்பது உண்மையே. அவருடைய பரந்த இராச்சியத்தில் மற்றப் பகுதிகளில் இருந்ததைவிட ஜெர்மனியில் பெரும் பான்மையான சிற்றரசுகளில் அவருடைய அதிகாரம் வலிமை யற்று இருந்தது. மற்றக் கடமைகள் இல்லாதிருந்தால் ஸ்பெயின், இத்தாலி, நெதர்லாந்து, ஆஸ்திரியா முதலிய நாடுகளிலிருந்து ஒரு பெரிய படையைத் திரட்டி, அதைக் கொண்டு அவருக்குப் பகைவர்களா யிருந்த லூதரைப் பின்பற்றிய எதிரிகளின்மீது வெற்றியடைந்திருக்கக் கூடும். ஆனால், ஐந்தாம் சார்லசின் நிலைமை அதனை ஒத்த நேரிடை நடவடிக்கைகளுக்கு இடமளிக்கவில்லை. அவர் வாழ்க்கையில் பெரும் பகுதி பிரான்சுடன் போர் புரிவதில் ஈடுபட்டிருந்ததை நாம் முன்னரே கண்டோம். நெதர்லாந்திலும் அவருக்குத் தொல்லைகள் இருந்தன.

### ஜெர்மானியரின் உணர்ச்சிக்குப் பிராட்டஸ்டெண்டு சமயம் கவர்ச்சியாயிருத்தல்

ஸ்பெயின் எப்பொழுதும் அவருக்குக் கீழ்ப்படிந்து பற்றுறுதியுடன் இருக்கவில்லை. வட ஆப்பிரிக்காவில் முகமதிய அதிகாரத்தை எதிர்த்து அவர் படையெடுத்தார். ஆஸ்திரியாவில் பகர ஆட்சியாளராக[1] அவர் உடன் பிறந்தவரான பர்டினண்ட் ஆட்சி புரிந்தார் அவருக்குத் துருக்கியப் படையெடுப்பின் அச்சம் எப்பொழுதும் ஏற்பட்டுக்கொண்டி ருந்தது. எனவே, ஜெர்மனியில் பகைவர்களை அடக்குவதற்குத் தேவை யான ஓய்வு இல்லாதிருந்தது. நீண்ட இடைவேளைக்குப் பின் கிடைத்த நேரமும் குறைவாயிருந்தது. லூதருடைய இயக்கத்தின் வேகம், சமயத்தினருக்கு அதிலிருந்த கவர்ச்சியோடல்லாமல் ஜெர்மானியர் களில் பெரும்பகுதியினருக்கு அது அன்னியர்களுக்கெதிராகத் தோன்றிய ஒரு தேசீய இயக்கம் என்றே மனத்தில் உறுதியாகத்

[8] Regent.

தோன்றியதென்பது குறிப்பிடத் தக்கதாகும். இங்கிலாந்து, பிரான்சு, ஸ்பெயின் போன்று ஜெர்மனி ஓர் ஒருமையுணர்வு நாடாய் இருக்க வில்லை. ஆனால், மக்கள் ஜெர்மன் விவகாரங்களில் அன்னியரின் தலையீட்டைத் தீவிரமாக வெறுக்கும் கடிய உணர்ச்சியைப் பெற்றி ருந்தனர். ஸ்பெயின் நாட்டினர் என்பதால் சார்லசு வெறுக்கப்பட்டார். இத்தாலியர் என்பதால் போப்பாண்டவரும் வெறுக்கப்பட்டார். ஜெர்மனி ஜெர்மானியருக்கே என்ற உரிமை கொண்டாடியதால், பெரும்பான்மை யினர் லூதரைப் பின்பற்றினர். எனவே, திடமான கொள்கைகள் காரணமாகவே லூதரின் இயக்கம் வலுவடைந்திருந்தது. அதே சமயத்தில் பேரரசின் தள்ளாடும் அரசியற்சட்டத்தை முடிவான செயல் படும்படி செய்ய முடியாதிருந்ததும், ஐந்தாம் சார்லசு பல்வேறு ஈடு பாடுகளையும் தொல்லைகளையும் கொண்டிருந்ததும், அவ்வியக்கம் தொடங்கிய போது அதற்குப் பாதுகாப்பாய் இருந்தன. எவ்வித இராணுவ எதிர்ப்புமின்றிப் பிராட்டஸ்டென்டு இயக்கம் ஜெர்மனியில் முப்பதாண்டுகள் வளர்ந்த தென்பது மறுக்கொணு உண்மையாகும். இவ்வியக்கத்தில் தலையிடுவதைப் பற்றிய பேச்சுக்கள் நடைபெற்றன. ஜெர்மானியப் பேரரசின் டயட்[1] என்னும் சட்டசபை இப்புதிய இயக் கத்தைப் பழித்தது. ஆனால், லூதர் மரணமடைவதற்குமுன் இவ்வியக் கத்தை எதிர்த்து நேரிடையாக எவரும் போரிட முன் வரவில்லை.

## லூதரின் சமய வளர்ச்சி

1517-ல் லூதரின் கண்டனம், பாவமன்னிப்புச் சீட்டுக் கொள்கை யைப் பற்றித்தான் தோன்றியது. ஆனால், விரைவிலேயே அவரையும் மீறி வேறு பல விரிவான பிரச்சினைகளைக் குறித்தும் சண்டை தொடங்க லாயிற்று. லூதர் முதலில் நம்பியிருந்ததைவிட ரோமுடன் அவரு டைய மாறுபாடுகள் மிகவும் அடிப்படையைப் பற்றியிருந்ததைக் கண் டார். அவருடைய கருத்துக்களுக்கும் ஹஸ், விக்லிப் முதலானோர்களின் எண்ணங்களுக்கும் ஒற்றுமையிருந்ததையும் நன்கு உணர்ந்தார். இக்கருத்துக்களில் சிலவற்றைக் கான்ஸ்டன்ஸ் திருச்சபை கண்டித் திருந்தும் அவர் தமது கருத்துக்களைக் கைவிட மறுத்தார். எனவே, கத்தோலிக்கத் திருச்சபை நிறுவனத்தின் அடிப்படையான போப் பாண்டவரின் அதிகாரத்தைத் தாக்குவதில் அவர் தலைவராய் விளங் கினர். 1520-ல் போப்பு பத்தாம் லியோ என்பார் அவர் மீது சாதி விலக்கு ஆணை பிறப்பித்தார். ஆனால், இவ்வாணை லூதரின் மன வுறுதியைச் சற்றும் அசைக்கவில்லை. அதனுடன் சாக்சனி நாட்டுத் தேர்வாளரும்,[2] மக்களும் லூதரைப் பின்பற்றுவதிலிருந்து சற்றும் பின் வாங்கவில்லை. விட்டன்பர்குச் சந்தைச் சதுக்கத்தில் லூதர், போப்பாண்டவரின் திருவாணையைப் பெருமிதத்துடன் கொளுத்தினர்

[1] Diet. [2] Elector.

அதனுடன், திருச்சபை விதிகளடங்கிய தொகுப்புக்களையும் தீக்கிரையாக்கினர். 1521-ல் வர்ம்ஸ்[1] என்னுமிடத்தில் கூட்டப்பட்ட பேரரசின் 'டயட்'டிற்குத் தலைமை வகிக்க ஐந்தாம் சார்லசு ஜெர்மனிக்கு வந்தார். தீர்மானிக்க வேண்டிய பல செய்திகளில் வர்ம்ஸ் பாராளுமன்றம் லூதரை எவ்வாறு நடத்துவது என்பது இன்றியமையாததொன்றாயிருந்தது. மன்றத்திற்கு வரும்படி லூதருக்கு ஆணை அனுப்பப்பட்டது. அவர் வந்து போவதற்குப் பாதுகாப்பையும் பேரரசர் அளித்தார். ஆயினும், ஹஸ்ஸிற்கு நேர்ந்ததைப் போலப் பாதுகாப்பு மீறப்பட்டுத் தீமையேற்படக் கூடும் என அஞ்சிய பலர், மன்றத்திற்குப் போகாமலிருக்க லூதருக்கு ஆலோசனை கூறினர். ஆனால், அவர் வர்மஸில் ஜெர்மானிய வல்லரசர்களைச் சந்தித்துத் தாம் எழுதிய நூல்களை ஒப்புக்கொண்டார்; தம் கொள்கையிலிருந்து பின் வாங்க மறுத்தார்; அவர்களை நோக்கி, "நான் செய்தவை இவை; மாறுதலாக என்னால் செய்ய இயலாது. கடவுள் அருள் பாலிக்கட்டும்," என்று கூறினர். இதன்பின் அவர் பேரரசினின்றும் வெளியேற வேண்டுமென உத்தரவிடப்பட்டார். அவர் நண்பரான சாக்சனியின் தேர்வாளர் (சிற்றரசர்) அவருக்கு உதவியளித்ததால் வார்ட்பர்குப்[2] பெருங்கோட்டைக்கு மாற்றுடையில் கொண்டு செல்லப்பட்டு, அங்குச் சிறிது காலம் மறைத்து வைக்கப்பட்டிருந்தார்; அப்போது விவிலியத்தை ஜெர்மன் மொழியில் எழுதினர். இம்மொழிபெயர்ப்பு 1511-ல் ஆங்கில நாட்டு வரலாற்றில் சிறப்பிடம் பெற்ற ஆங்கில மொழி பெயர்ப்பு விவிலியத்தைப் போன்று, ஜெர்மானிய மொழி இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாயிருந்தது.

1522-ல் நூரம்பர்கில் மற்றொரு 'டயட்' கூடியது. வர்ம்ஸில், லூதரின்மேல் சாற்றப்பட்ட குற்றத்தைத் தொடர்ந்து நடவடிக்கை எடுக்கப்படுமென்று அனைவரும் நம்பினர். ஆனால், பேரரசர் இத்தாலியத் தொல்லையிலும், மற்றும் பல தொல்லைகளிலும் ஈடுபட்டிருந்ததால், அவர் விரும்பியவாறு நடக்க டயட் மறுத்தது. அதற்கு மாருகப் போப்பாண்டவரின் ஆட்சியைக் குறித்து ஜெர்மானியர்களுக்கிருந்த மனக்குறைகளைக் கொண்ட பத்திரத்தைத் தயாரித்தது. இதன் பயனாக லூதரின் இயக்கம் தேசீய இயக்கமாய் மாறியது.

## குடியானவர்களின் போர் மூளல்

இதற்குப் பின் ஜெர்மானியரின் சமய வளர்ச்சியில் மற்றொரு புதிய சத்தியும் தோன்றியது. அரசியல் நிலை, லூதரின் இயக்கத்திற்கு எவ்வாறு துணையாய் இருந்ததென்பதை நாம் கண்டோம். ஆனால், சமூக நிலை அவ்வாறு வளர்ச்சியுற்றிருக்கவில்லை. ஜெர்மனியின்

[1] Diet of Worms. [2] Wartburg.

மேற்கு, தென்மேற்குப் பகுதிகளிலிருந்த குடியானவர் கடுமனக்குறை கொண்டிருந்தனர். பொதுவாக நாடு செழிப்புற்றிருந்தது. நகர மக்களும் நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் வசதிகளுடன் இருந்ததோடு ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தும் வந்தார்கள். ஆனால், குடியானவர் மாறுதலேதுமின்றிச் சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்ததைக் காட்டிலும் தாழ்மையுற்றுக் காணப்பட்டனர். அடிமைப்பட்டிருந்த அவர்கள், மானியத் தலைவர்கட்குப் பல்வேறு கட்டாயப் பணிகளையும், மானியத் திறைகளையும் அளிக்க வேண்டிய நிலையிலிருந்தனர். இன்றைய தொழிற்சாலைகளில் கூலிவேலை செய்யும் மக்கள் நிலையைக் காட்டிலும் அவர்கள் நிலை மேன்மையாய் இருந்திருக்கலாமென்றாலும், அவர்களது நிலை மாய்ச்சலுண்டுபண்ணத் தக்கதாயிருந்தது. ஜெர்மனியின் பொருளாதார மாற்றங்கள் அவர்களது நிலையை நாளடைவில் தாழ்வுறச் செய்தன. லூதரின் இயக்கம் அவர்களிடத்தில் தீமையை விளைவிக்கும் பரபரப்பை உண்டாக்கியது. லூதர் செய்த உரிமைப் பிரசாரத்தில் அவர்களது சமூக நிலைமையில் உறுதியான மாறுதல் ஏற்படுமென்று எண்ணினார்கள். தென்மேற்கில் உர்ஸ்பர்கிற்குப்[1] பக்கத்தில் அவர்கள் கலகம் செய்து, தங்கள் கோரிக்கைகளைப் பன்னிரண்டு விதிகளாகத் தொகுத்தார்கள். சமய மாறுதல்கள் குறித்து லூதர் உரிமை பாராட்டியது போல இக்குடியானவர்களும் தங்கள் கோரிக்கைகள் மறைநூல் வழியில் கவனிக்கப்படவேண்டுமென உரிமை பாராட்டினர். இயேசுநாதர் அவர்களைச் சுயேச்சையாளர்களாகச் செய்ததால் தாங்கள் இனி அடிமைகளாக இருக்க முடியாது எனக் கூறினார்கள். எனவே, அவர்களுக்குச் சுமையாயிருந்த பல மானியத் திறையொழிப்பு உடனே செயற்பட வேண்டுமென்று கோரினார்கள். டைத்[2] (பத்தில் ஒரு பகுதி) வரியை நீக்க வேண்டுமென்று கோரியதோடு கிறித்துவ சமய நூலின்கண்ணுள்ள உண்மைக்கு விளக்கமும் கோரினர். இக் கோரிக்கைகள் வளர்ச்சியுற்றுக் கட்டுக் கடங்காத கிளர்ச்சியாகி 1524-ல் உள் நாட்டுப் போராய் விளைந்தது. இருதரப்பிலும் கொடுஞ் செயல்கள் நிகழ்ந்தன. கலகக்காரர்களின் செயல்களைக் காட்டிலும் அவர்களை அடக்குவதில் கையாண்ட கொடுமைகள் விஞ்சியிருந்தன. லூதர் இவ்வியக்கத்தை இடரெச்சரிக்கையுடன் கண்ணுற்றார். இது அவரது சமய இயக்கத்தின் வெற்றிக்குத் தீங்கிழைப்பதோடு, பல சிக்கல்களையும் உண்டு பண்ணுமென்று லூதருக்குத் தோன்றியது. எனவே, இவ்வெழுச்சிக்கு எதிராகப் பேசியதோடு, குடியானவர்களைக் கடுமையாகத் தாக்கியும் எழுதினார்; முழுப் பலத்துடன் இதனை ஒடுக்குமாறும் பிரபுக்களை வேண்டினார். அதற்காகப் பின்பற்றப்படும் கொடுமைகளையும் சரியென்று சொல்லலானார். இதன் விளைவாக இயக்கம் எதிர் நோக்கிய வண்ணம் தோற்றது. இதன்பின் ஜெர்மனியின் வடபாகத்தில் இதைப்போன்று

[1] Wurzburg. [2] Tithes.

தோன்றிய கிளர்ச்சியும் தோற்றது. இத் தோல்விகள் சமய இயக்கத்தின் செல்வாக்கைக் குறைத்தன. குடியானவர் லூதரிடம் முறையிட்டனர்; ஆனுல், உதவிக்குப் பதிலாக எதிர்ப்பையே பெற்றனர். இது முதல் தொடக்கத்திலிருந்ததைப் போல லூதரின் இயக்கம் மக்களின் பேராதரவைப் பெற்று விளங்கவில்லை. மக்களால் கொண்டாடப் பெற்ற தலைமைப் பதவியை லூதர் இழந்தார். மக்கள் தொகையில் எளியவர்களின்மீது அவருக்கிருந்த செல்வாக்குத் தளர்வுற்றது. இதன் விளைவாக லூதர் நாட்டின் அதிகாரிகள், நடுத்தரமக்கள் துணையை நாட நேர்ந்தது. இவ்வாறு லூதரின் இயக்கம் வளர்வதற்கு, நாட்டு அரசாங்கத்தைச் சார்ந்திருக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இவ்வியக்கத்தின் போக்கை இக்கொள்கை புலப்படுத்தியது.

## பிராட்டஸ்டென்டு சமயம் என்ற சொல்லின் தோற்றம்

ஸ்காமல் கார்ட்டன் சங்கம்; இடைக்கால ஏற்பாடு; முல்பர்குச் சண்டை

இதற்கிடையில் லூதரின் இயக்கத்தை ஒடுக்கப் பேரரசு ஒன்றும் செய்யவில்லை. 1526 - ல் ஸ்பீயர்[1] எனுமிடத்தில் ‘டயட்’ சபை கூட்டப்பட்டது. அக்கூட்டம் எவ்விதப்பயனையும் அளிக்கவில்லை. பொறுப்பு, ஜெர்மனியின் பல அரசுகளைச் சார்ந்ததென அக்கூட்டம் அறிவித்தது. ஒவ்வோர் அரசாங்கமும் கடவுள், மாட்சிமைபொருந்திய பேரரசு இவற்றுக்குட்பட்டுப் பொறுப்புடையவைகளாய், நெறியுடன் வாழவும், ஆட்சி புரியவும், நடந்துகொள்ளவும் வேண்டுமென ‘டயட்’ கூறியது. இக்கட்டளை தங்கள் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் உறுதியான பிராட்டஸ்டென்டு திருச்சபைகளை அமைக்க வழிசெய்துள்ளது எனக் கருதி லூதர் இயக்கத்தின் பேராதரவாளர்களான சாக்சனி, ஹெஸ்ஸி இவற்றின் சிற்றரசர்கள் பிராட்டஸ்டென்டு திருச்சபைகளை அமைத்தனர். ஆனுல், 1529 - ல் மீண்டும் அதேஇடத்தில் கூடிய ‘டயட்’, கடந்த கூட்டத்தின் முடிவுகளை நேர்மாருகச் செய்து, வர்ம்ஸில் ஏற்பட்ட முடிவுகள் எல்லோரையும் கட்டுப்படுத்துமென்றும், பிராட்டஸ்டென்டு நாடுகளில் கத்தோலிக்க முறைப்படி வழிபாடு அமைக்கப்பட வேண்டுமென்றும், சமயத்தில் புத்தம்புதிய கருத்துக்களைப் புகுத்துவதை அனுமதிக்கக் கூடாதென்றும் முடிவு கட்டியது. இதைக் கண்ட சிறுபான்மையோர், “உங்கள் கருத்துக்களை நாங்கள் ஒத்துக்கொள்ள முடியாதென்றும் உங்கள் முடிவுகள் செல்லத்தக்கவையல்ல; எங்களைக் கட்டுப்படுத்தக் கூடியவையுமல்லவென்றும் இதன் மூலம் மறுக்கிறோம்,” என்று முறையாக அறிவித்தனர். இம்மறுப்பினுல்தான் இவ்வியக்கத்திற்குப் பிராட்டஸ்டென்டு சமயம் எனப் பெயர் ஏற்படலாயிற்று. அது முதல்

[1] Speier.

இப்பெயர் பல உருவங்களில் வழங்குவதாயிற்று. 1530 - ல் லூதரின் கொள்கையை உறுதியாக ஏற்றுக்கொண்டது வாயிலாக மேலும் உறுதி பெற்றது. இது 'ஆக்ஸ்பர்கு ஒப்புதல்' எனப்படும். இதில் லூதரின் கருத்துக்கள் உறுதியாகவும் அதே சமயத்தில் சமரச நோக்கத்துடனும் நடுவு நிலையுடனும் அமைத்துக் கூறப்பட்டன. ஆனால், பேரரசர் உடனே இப்புதுக் கொள்கையை எல்லோரும் அறியப் பழித்துரைத்ததுடன், கத்தோலிக்க சமயத்தில் மீண்டும் சேர மறுத்தவர் மீது பழி வாங்கப்படும் என்றும் அச்சுறுத்தினர். இதன் பயனாக 1531 - ல் பிராட்டஸ்டென்டு அரசுகள் ஒன்று கூடி, அவற்றின் பொது நலன்களைப் பாதுகாக்க, ஸ்காமல் கால்டன்[1] சங்கத்தை நிறுவியது. இச்சங்கத்தில் தலைமையாயிருந்தவர்கள் சாக்சனி, ஹெஸ்ஸி, பிராண்டன்பர்குச் சிற்றரசர்களாவார்கள். பேரரசின்அதிகாரத்திற்குஇச்சங்கம்ஏற்பட்டதே உறுதியான அறைகூவல் போல இருந்தும், பேரரசருக்கு உண்மையில் பகைமை பாராட்டிய இதன் மீது நேரிடையாகப் போர் தொடுக்கப் பதின் மூன்று ஆண்டுகள் ஆயின. இவ்வமயத்தில் பேரரசர் இத்தாலியக் கொள்கையில் ஈடுபட்டிருந்தார். டான்யூப் நதி வழியாகத் துருக்கியர்கள் ஜெர்மனிக்குள் நுழைந்து இடையூறு விளைவிப்பதாய் மீண்டும் அச்சுறுத்திக் கொண்டிருந்தனர். எனவே, அவரது முழு வலிமையையும் செலவிடும்படி நேருமாதலால், ஜெர்மனியில் அவருடைய பகைவர்மீது போர் தொடுத்தலைத் தள்ளி வைக்க நேர்ந்தது. அதனால், சிறிது காலத்திற்கு அவர்களுடன் ஒருவித ஒப்பந்தம் செய்துகொண்டார். 1544 - ல் தான் பேரரசருக்கு மற்றத் தொல்லைகள் நீங்கித் தன்னுரிமையான ஓய்வு கிடைத்தது. இவ்வாண்டில் பிரெஞ்சு மன்னருடன் சமாதானம் செய்துகொண்டார். அதே சமயத்தில் துருக்கி நாட்டுச் சிக்கலிலிருந்தும் விடுபட்டிருந்தார். எனவே, ஜெர்மனியில் தோன்றிப்பரவியிருந்த புதிய இயக்கத்தை ஒடுக்கத் தக்க அமயமென இதனைக் கண்டார். உட்டன்பர்கும், பேடனும் பிராட்டஸ்டென்டு கொள்கையை வெளிப்படையாக ஏற்றுக்கொண்டன. இவர்கள் பக்கலில் கோலோன்அதிமேற்றிராணியாரும் சேரக்கூடும் என்ற பேரிடர் இருந்தது. 1546 - ல் சார்லசு மன்னர் ஒரு படையைத் திரட்டிப் போருக்கு ஆயத்தமானர். இவ்வாண்டின் தொடக்கத்தில் லூதர் இறந்தார். அவர் அஞ்சியதும் குறை கூறி வந்ததுமான உள்நாட்டுப் போர் மூண்டதைப் பார்க்க, உயிருடன் இல்லை. தொடக்கத்திலிருந்த சமய ஆர்வம் குறைந்து கொண்டுவந்தது. இந்நெருக்கடியான நேரத்தில் பிராட்டஸ்டென்டு நாடுகள் உறுதியாக ஒன்று சேராதிருந்தன. பேரரசரின் படைகள் முதன்முதலாக எதிர்த்த பொழுது தெற்கிலிருந்த பிராட்டஸ்டென்டு நாடுகளில் பல பேரரசருக்குப் பணிந்தன. சாக்சனிக் கோமகனுரான, மாரிசு பேரரசருடன் ஏற்கனவே சேர்த்துக்கொள்ளப்பட்டிருந்தார். தம் தம்பியாரான சாக்சனியின் தேர்வாளர்மீது இவர் பொருமை கொண்டிருந்ததால், பேரரசின்

[1] Schamal kalden.

பக்கம் சேர்வதற்குத் தூண்டப்பட்டார். அத்துடன், தேர்வாளர் பட்டப் பெயரையும் அதிகாரத்தையும் பேரரசரிடமிருந்து பெறலாமென்ற எண்ணமும் பேரரசருடன் சேர்வதற்குக் காரணமாயிருந்தது. இப்போரை எதிர்த்து நிற்கும் பொறுப்பு, சிறப்பாகச் சாக்சனித் தேர்வாளரான ஜான் பிரடரிக்கிற்கும், ஹெஸ்ஸின் லாண்ட்கிரேவ் பதவியினரான பிலிப்பிற்கும் ஏற்பட்டது. இவர்களில் ஒருவரிடமும் எதிர்ப்பதற்கு வேண்டிய இராணுவ வலிமையோ ஆற்றலோ இல்லை. 1547-ல் எல்ப் நதிக்கரையில் உள்ள மூல்பர்கில்[1] நடந்த சண்டை, முடிவான சண்டையாயமைந்தது. பேரரசரின் நேரியக்குதலின் கீழ், ஸ்பெயின் நாட்டுத்தளபதி ஆல்வா, சாக்சனி நாட்டு மாரிசு இவர்களுடன், பேரரசுப் படைகளும் ஆற்றைக் கடந்து பகைவரைத் தோற்கடித்து, சாக்சனித் தேர்வாளரையும் ஹெஸ்ஸி நாட்டு லாண்ட்கிரேவ் பதவியாளரையும் சிறை பிடித்தன. பெரிய சண்டை அல்லவென்றாலும், பெற்ற வெற்றி பெரியதேயாகும். ஏனென்றால், ஐரோப்பா முழுவதுமே இதனால் பேரரசரின் அடிபணிந்தது போலத் தோன்றியது. ஜெர்மனியிலோ அன்றி அதற்கு வெளியிலோ பேரரசரை அவ்வமயத்தில் கடுமையாக எதிர்க்கக் கூடிய ஆற்றல் வாய்ந்த நாடு ஒன்றுமில்லாதிருந்தது. பேரரசரும் தமக்கிருந்த மிதக் கொள்கைக்குத் தக்கவாறு சமயப் பிரச்சினைக்கு ஒரு முடிவு காண முயன்றார். ஆக்ஸ்பர்கில் 'டயட்' கூட்டப்பட்டது. அங்கு 'இடைக்கால ஏற்பாடு'[2] வெளியிடப்பட்டது. ஏற்கனவே ட்ரெண்ட் என்னுமிடத்தில் ஒரு திருச்சபை மன்றம் கூட்டப்பட்டிருந்தது. அதன் முடிவுகளைக் கிறித்துவ உலகம் ஏற்றுக்கொள்ளுமென்னும் நம்பிக்கையும் இருந்து வந்தது. அதற்கிடையில் ஏதாவதோர் ஏற்பாடு செய்யப்பட வேண்டியிருந்ததால், இந்த 'இடைக்கால ஏற்பாடு' 1548-ல் செய்யப்பட்டது. பழைய கத்தோலிக்க பழக்கங்களைப் பின்பற்றுவதன் தேவையை முதலில் உறுதிப்படுத்துவதாய் இப்பத்திரம் தொடங்கிற்று. பழக்கங்களாவன, மாஸ் ஜபத்தை அடிக்கடி நடத்துதல், இறந்தவர்களுக்காக வேண்டுதல், உண்ணாநோன்பு மேற்கொள்ளல், திருச்சபையில் நடக்கும் புனித நாள்களைப் போற்றிக் கொண்டாடுதல் முதலியனவாம். இப்பத்திரத்தின் கடைசிப் பிரிவில் பிராட்டஸ்டென்டு சமயத்தினருக்கு மிகுதியான சலுகைகளே அளிக்கப்பட்டன. அவையாவன, மணஞ் செய்துகொண்டிருந்த குருமார்கள் மனைவியைத் தள்ளி வைக்க வேண்டுமென்று வற்புறுத்தாமை, ஒன்றுபடு முறையை[3] 'இரு வழிகளில்' பின்பற்றுவதில் பழக்கமுள்ளவர்களை மாற்றிக்கொள்ளும்படி வற்புறுத்தாமை முதலியவைகளின் மெய்ம்மை விளக்கும் பிரச்சனைகளைப் பற்றி, ட்ரெண்டில் கூடியிருந்த முழுக் கத்தோலிக்கவுலகின் திருச்சபை தீர்ப்பளிக்கும் வரை இச்சலுகைகள் நடந்து வருவன என்பனவாம். இவ்வேற்பாடு, நல்லெண்ணத்துடன் கூடிய முயற்சியாகும். லூதர் இறந்ததால், பிராட்டஸ்டென்டு தலைவர்களில் சிறந்தவரான மிலாங்தான்[4] அதை

[1] Muhlberg. [2] The Interim. [3] Communion. [4] Melancthon.

ஏற்றுக்கொண்டார். ஆனால், ஜெர்மனி, பொதுவாக அதை ஏற்றுக் கொள்ளவில்லை. கத்தோலிக்க நாடுகள், பிராட்டஸ்டென்டு குடிகளுக்கு அவ்வேற்பாட்டில் குறிப்பாகச் சொல்லப்பட்டிருந்தபடி காண்பிக்க வேண்டிய சமயப் பொறையை அளிக்க விருப்பமில்லாதிருந்தன. அதே போலப் பிராட்டஸ்டென்டு நாடுகள் அவற்றின் எல்லைக்குள் மீண்டும் கத்தோலிக்கத் திருச்சபையின் அமைப்பை அனுமதிக்க மறுத்தன. இறுதியில், பேரரசர் அவரது முடிவான கொள்கையை மக்கள் மீது சுமத்தியிருக்கலாம். ஆனால், அவ்வாறு நடக்கவொட்டாதவாறு சருவ தேச நிலையில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. இம்மாறுதலால் பிராட்டஸ்டென்டு சமயம் பயனடைந்தது.

## சாக்சனி நாட்டு மாரிசு

முதலாவதாக, மூல்பர்கு வெற்றிக்குப் பேரரசருக்கு உதவி செய்த சாக்சனி நாட்டு மாரிசு, பேரரசரிடம் சினமுற்றிருந்தார். மாரிசு நம்பிக்கையுடன் எதிர்பார்த்த நாடுகள் அவருக்குக் கிடைக்கவில்லை. அதனுடன் அவர் எதிர்பார்த்த அளவிற்குப் பேரரசரிடம் அவருக்குச் செல்வாக்கும் ஏற்படவில்லை. பேராசையும் அமைதியின்மையும் அவரிடம் காணப்பட்டன. தம் நலன்களைப் பெறுவதற்காக வேறு திட்டங்களைப் பற்றி எண்ணலானார். தவிர, சார்லசிற்கும், அவர் தம்பியாரும் ஆஸ்திரியப் பகுதிகளை ஆட்சி செய்தவருமான பர்டினண்டிற்கும் இடையே அச்சமயம் உறவு துன்பம் தருவதாயிருந்தது. 1526-ல் பர்டினண்டு, அதிகாரத்தைப் பெறவில்லையென்றாலும் பெருமதிப்பைப் பெற்றிருந்தார்.

## மோகாக்ஸ் சண்டை

### இடைக்கால ஏற்பாடுக்குப் பின் சார்லசின் தொல்லைகள்

ஆடம்பரத்தினரும், துருக்கிய அரசருமான சுலைமான் ஹங்கேரி மீது படையெடுத்து மோகாக்ஸ்[1] என்னுமிடத்தில் வெற்றி கொண்டார். அந்நூற்றாண்டில் நடந்த நற்பயனுள்ள போர்களில் இவ்வெற்றி சிறப்பு வாய்ந்த தொன்றாகும். ஹங்கேரியும் பொகீமியாவும் துருக்கிய அதிகாரத்தின் கீழ் வந்தன. வியன்னா நகரம் இடரான நிலைக்குள்ளாயிற்று. போரில், ஹங்கேரி—பொகீமியா மன்னர் கொலையுண்டார். அவர் மைத்துனரான பர்டினண்டு, அவ்விரு நாடுகளுக்கும் வாரிசு முறையில் உரிமை கொண்டாடினார். இவ்வாரிசுரிமையைத் துய்ப்பதற்கு முன், போர் புரிய வேண்டியதாயிற்று. அது முதல் ஹங்கேரியும் பொகீமியாவும், ஹாப்ஸ்பர்கு மன்னர்களின் சொந்தச் சொத்துக்களாக

[1] Mohacz

உரிமை பாராட்டப்பட்டன. அக்குடும்பத்திற்குச் சொந்தமாயிருந்தவைகளில் எல்லாவற்றையும்விட இவ்விரண்டும் மிக்க மதிப்பு வாய்ந்தவை என்று மெய்ப்பிக்கப்பட்டன. ஆஸ்திரியாவின் பிற்கால வரலாறு, இப்போரையும் இதன் பயனையும் சார்ந்ததாயிருந்தது. 'இடைக்கால ஏற்பாட்டு'க்குப் பிறகு, ஐந்தாம் சார்லசு பேரரசின் வாரிசுரிமையில் ஊக்கங் காட்டினர். அவருக்கடுத்துப் பட்டம் பெறவேண்டியவர் பர்டினண்டு என்பது ஒத்துக்கொள்ளப்பட்ட போதிலும், சார்லசு அவர் புதல்வர் பிலிப்பிற்கு—இந்தப் பிலிப்புதான் பிற்காலத்தில் ஸ்பெயின் மன்னரான புகழ் பெற்ற இரண்டாம் பிலிப்பாவார்—பர்டினண்டு இறந்த பின், வாரிசுரிமை கிடைக்க வேண்டுமென விரும்பினர். இவ்வெண்ணத்தைக் கொண்டு, சார்லசு ஐரோப்பாவில் அவரது குடும்பத்தாருக்கு இருந்த பேரதிகாரத்தை நீடித்திருக்கச் செய்ய விரும்பினர். ஆனல், பர்டினண்டு அவரது சொந்தக் குடும்ப நலனைக் கருத்தில் கொண்டு பேரரசர் திட்டத்தை எதிர்த்ததுடன், பேரரசருடன் முழுமனத்துடன் ஒத்துழைக்கத் தயாராயில்லை. ஆனல், பேரரசருக்கு, மாரிசின் கடமை தவறல், பர்டினண்டின் பொருமை இவற்றைவிடப் பிரான்சின் தலையீடு கடுமையாயிருந்தது. பிரான்சில் இரண்டாம் ஹென்றி ஆட்சி செய்துகொண்டிருந்தார்.

## ஜெர்மனியிலிருந்து சார்லசு ஓட்டம்

### மெட்சில் சார்லசின் தோல்வி

இப்போது அவர் ஸ்பெயின் - ஆஸ்திரியாவிற்கு எதிராக மீண்டும் சண்டை செய்ய ஆவலுள்ளவராயிருந்தார். எனவே, மாரிசுடனும் மற்றப் பிராட்டஸ்டென்டு தலைவர்களுடனும் ஹென்றி உறவு பூண்டார். பிராட்டஸ்டென்டு இயக்கத்திற்குத் துணை செய்வதற்குப் பரிசாக எல்லைப் புறங்களிலிருந்த மெட்சு, டூல், வர்டன் என்னும் மேற்றிராணியார்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகள் பிரான்சைச் சேர வேண்டுமென்றும், அவர்களிடமிருந்து உறுதியைப் பெற்ருர். ஐந்தாம் சார்லசு அவ்வமயம் நோய்வாய்ப்பட்டிருந்தார். எனவே, முன்பிருந்ததைப் போல அறிவு நுட்பமுள்ளவராயும், விழிப்புள்ள அரசியல்வாதியாயும் அவரிருக்கவில்லை. 1552-ல் சாக்சனி நாட்டு மாரிசு அவருக்கெதிராகப் போர் தொடுத்ததைக் கண்டு துணுக்குற்ருர். ஜெர்மனியில் அவரீட்டிய செல்வாக்கைச் சண்டையின்றி இழந்தார். போர் செய்ய வலிமையற்றவராய் இன்ஸ்புருக்கு [1] என்னுமிடத்திற்கு ஓடினர். அங்கு அவர் பல பகைவர் கையில் சிக்கவிருந்தார்; தொல்லைப் பட்டுத் தப்பி, 1552 - ல் பனி மூடியிருந்த டய்ரோல் [2] கணவாய் வழியாக இத்தாலி நாட்டில் புகுந்தார். இவ்வாறு ஒரு தாக்குதலில்

[1] Innsbruck, [2] Tyrol.

பேரரசரின் பதவிமுழுவதும் மறைந்தது. மாரிசு ஜெர்மனியின் தலை வரானது போலத் தோன்றியது. மாரிசு உயிருடன் நெடுநாளிருந்தால் என்ன செய்திருக்கக் கூடும்? அவருடைய நோக்கங்களும் பேராவலும் எத்தகைய முடிவைப் பெற்றிருக்கும்? என்பவை பற்றி வரலாற்றுசிரியர் பலவாறு ஊகித்துள்ளனர். 1553-ல் மாரிசு, விவரம் நன்கு புலப் படாத ஒரு சண்டையில் உயிரிழந்தார். ஜெர்மனி, தலைவரும் மேலோங்கிய செல்வாக்குமின்றிக் குழப்பத்தில் ஆழ்ந்தது. எனவே, இழந்த செல்வாக்கை மீண்டும் பெறுவதில் சார்லசு நம்பிக்கை கொண்டார். அவருக்கு அவமானத்தை விளைவித்தவர் பிரான்சு மன்னரானதால் பிரான்சை எதிர்த்து மற்றொரு தாக்குதலை நடத்தி, மெட்சு நகரத்தை முற்றுகையிட்டார். தமக்கு வெற்றியுறுதியென நம்பியிருந்தார். மெட்சு அவர் வசமாகியிருந்தால், அவருடைய அதிகாரம் பெரிதும் வளர்ந்திருக்கும். அதனுடன் அவர் ஜெர்மனியின் மீது கொண்டிருந்த திட்டங்களையும் மேற்கொள்ள வழி செய்திருக்கும். ஆனால், "நற்பேறு, முதியோர்களைக்காட்டிலும் இளைஞர்களை விரும்பி யது," என்று அவர் கூறியது போல, மெட்சு நகரம் கயஸ்கோமகனு ரால், எதிர்பாராத நிலையில் சார்லசின் தாக்குதலினின்று காப்பாற்றப் பட்டது.

## ஆக்ஸ்பர்கு சமாதானம்

ஆட்சி செய்வதில் சோர்வுற்றிருந்த சார்லசு, நாம் முன்பு கண்டது போல உரிமையைத் துறக்க முடிவு செய்தார். ஜெர்மனியின் தொல்லை களை முடிவு செய்யும் பணியைத் தம் தம்பியான பர்டினண்டினிடம் ஒப் படைத்தார். ஆக்ஸ்பர்கில் 'டயட்' கூட்டப்பட்டது. இதை மதச் சீர் திருத்த இயக்கப் போரின் முதலாவது சிறப்பு நிலையின் இறுதியாகக் கருதலாம். அக்கூட்டத்தின் முக்கிய உரிமைக் கட்டுப்பாடுகளாவன:- முதலில் ஜெர்மனியில் ஒரே மாதிரியான சமய அமைப்பைக் கட்டாய மாக ஏற்படுத்தும் முயற்சிகள் கைவிடப்பட்டன. ஒவ்வொரு நாடும்— ஜெர்மனி முந்நூறுக்கும் மேலான பல சிறிய நாடுகளால் ஆனதென் பதை நாம் நினைவு கூரவேண்டும்—அதைச்சார்ந்த சமயத்துக்குப் பொறுப்பாகியது. தனிப்பட்ட மனிதனுக்குச் சமயம் குறித்துச் சமயப் பொறை அளிக்கப்படாவிட்டாலும், வெளிக் குடியேற்றம் அனுமதிக்கப் பட்டிருந்ததால், நாட்டின் சமயத்திற்கு மாறுபட்ட சமயக் கொள்கை யுடைய ஒருவன், தனக்கேற்ற இடத்திற்கு எல்லையைக் கடந்து செல்ல வசதியளிக்கப்பட்டிருந்தது. அடுத்தபடியாக ஜெர்மனியில் லூதரின் சமயம், கத்தோலிக்க சமயம் எனும் இரு விதச் சமயங்களே ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியனவாயிருந்தன. நாட்டிற்குப் பொறுப்பளிக்கப் பட்டதால், இவ்விரண்டில் ஒன்றை ஒவ்வொரு நாடும் ஏற்க வேண்டு மென்றும், அவ்வாறு இவ்விரு சமயப் பிரிவுகளிலும் சேராத நாடுக-

ளெல்லாம் இந்தச் சமாதானத்தில் சேர்க்கப்படாததோடு, முழுமையும் விலக்கப்பட வேண்டுமென்றும் முடிவாயிற்று. அது காலே இம்முடிவில் உள்ளடக்கமாகக் காணப்பட்ட இடர் வெளிப்படையாகத் தெரியவில்லே. எனினும், ஜெர்மனியில் கால்வினியம் என்ற மற்ருெரு பிராட்டஸ்டென்டுக் கொள்கை, ஏற்கனவே தோன்றியிருந்தது. லூதரின் கொள்கைகளேக்காட்டிலும் ஜெர்மனியின் பல பகுதிகளில் கால்வினின் கொள்கைகள் மக்கள்மீது மிகுதியான பிடிப்பைக் கொண்டிருந்தன. எனவே, ஆக்ஸ்பர்கு சமாதானத்தின் இப்பிரிவின்படி கால்வினின் கொள்கைகளுக்கும் அதைப் பின்பற்றியவர்களுக்கும் ஜெர்மனியில் இடமளிக்கப்படவில்லே. இப்பிரிவின் விளேவாக இடைவிடாது தொல்லேகளேற்பட்டு, இறுதியில் முப்பதாண்டுப் போர் நிகழலாயிற்று. அடுத்து நாம் கவனிக்க வேண்டிய பிரிவு, ஜெர்மனியில் பிராட்டஸ்டென்டு சமயத்தை ஏற்றுக்கொண்ட சமயச் சார்புற்ற நாடுகளேப் பற்றியதாகும். புதிய சமயத்தை ஏற்றுக்கொள்வதில் சமயச்சார்புற்றிருந்த நாடுகளின் தலேவர்களுக்குப் பெருவிருப்பம் இருந்தது. ஏனென்ருல், இதை ஏற்றுக்கொள்வதால் கத்தோலிக்கத் திருச்சபைக்கு வாழ்நாள் முழுவதும் மானியக்காரர்களாக இருப்பதற்குப் பதிலாகத் தங்களது அதிகாரத்தைத் தங்கள் வாரிசுகளுக்கு அளிக்கக் கூடிய சமயச் சார்பற்ற (லௌகிக) மன்னர்களாக முடியும் என்பதுதான்.

## ஜெர்மனியில் சமயச் சார்புள்ள நாடுகள்

ஆனுல், ஜெர்மனியில் சமயச் சார்புள்ள நாடுகள் அதிகமிருந்தன. அவற்றின் ஆட்சியின் கீழிருந்த நிலப் பகுதிகளும் பரவியிருந்தன. எனவே, பிராட்டஸ்டென்டுகளாக அறிவித்துக்கொண்டனவும் சமயம் சார்ந்தனவுமான நாடுகளேக் குறித்து எவ்வாறு முடிவு செய்யவேண்டுமென்பது மிக மிக முக்கியமானதொரு செய்தியாயிருந்தது. இந்நிலப் பகுதிகளெல்லாம் திருச்சபைக்குத் திருப்பப்பட வேண்டுமென்று கத்தோலிக்கர் முறையிட்டனர். அதனுடன், சமய மாறுதல் காரணமாக, மேற்றிராணியாரோ அல்லது அதிமேற்றிராணியாரோ திருச்சபையிலிருந்து பெற்றதும் அவர்களுக்குச் சொந்தமாயிருந்ததுமான நிலங்களே உடைமை நீக்கம் செய்ய அனுமதிக்கக் கூடாதென்றும் கூறிற்று. ஆனுல், பிராட்டஸ்டென்டுகள் ஏற்கனவே நிலங்களேப்பற்றி ஏற்பட்டிருந்த மாறுதல்களே அப்படியே ஒத்துக்கொள்ள வேண்டுமென்றும், சமய அடிப்படையில் அதைப் போன்று இனி ஏற்படும் மாறுதல்களே அனுமதிக்க வேண்டுமென்றும் கூறினர். ஆக்ஸ்பர்கு உடன்பாட்டில் சமரசம் நிறைவேற்றப்பட்டது. அதன்படி, 1552க்கு முன் பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சார்ந்த நாடுகளெல்லாம் பிராட்டஸ்டென்டு மன்னர்கள் வசமிருப்பதென்றும், ஆனுல் மேற்கொண்டு சமயச் சார்பற்ற அரசு ஏற்பட அனுமதிக்கக் கூடாதென்றும்,

1552க்குப் பின் பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சேர்ந்தவை என அறிவித்துக்கொண்ட நாடுகள் மீண்டும் கத்தோலிக்கத் திருச்சபைக்கு மீட்கப்படவேண்டும் என்றும் அறிவிக்கப்பட்டது. இவை, ஆக்ஸ்பர்கு சமாதானத்திற் கண்ட முக்கியப் பிரிவுகளாயிருந்தன. நெடுநாட்களாய் நிகழ்ந்துவரும் கருத்து வேறுபாடு பற்றி ஜெர்மனிக்குச் சோர்வு ஏற்பட்டிருந்தது. எனவே, கால் நூற்றுண்டிற்கு முன் இருந்ததைப் போல, சமய ஊக்கம் அவ்வளவு தெளிவாகக் காணப்படவில்லை. பெரிய எதிர்ப்பின்றிப் புதிய ஏற்பாடுகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. ஆனல், ஐரோப்பாவைப் போலவே ஜெர்மனியிலும் சமயப் போட்டி அதன் முடிவைப் பெருமலே இருந்தது. ஆக்ஸ்பர்கு சமாதானத்தில் நல்லெண்ணத்துடன் வகுக்கப்பட்ட பிரிவுகளே, அடுத்த நூற்றுண்டின் தொடக்கத்தில், ஜெர்மனியில் நிகழவிருந்த கடுஞ்சமயப் போருக்குக் காரணமாய் இருத்தலை விதி செய்தது போலும் !

*ராங்க்கே : மதச் சீர்திருத்தக் காலத்தில் ஜெர்மனியின் வரலாறு.*
*வின்ட்ஸே : லூதரும் ஜெர்மானிய மதச் சீர்திருத்த இயக்கமும்.*
*கோஸ்ட்லின் : லூதரின் வாழ்க்கை வரலாறு.*
*ஹாய்ச்சர் : மதச் சீர்திருத்த இயக்கக் காலம்.*
*ஆர்ம்ஸ்ட்ராங் : ஐந்தாம் சார்லசின் வாழ்க்கை வரலாறு.*
*சீபாம் : பிராட்டஸ்டென்டுப் புரட்சி.*
*கிட் : ஐரோப்பாக் கண்டத்தின் புரட்சிப் பத்திரங்கள். இவை ஐரோப்பிய, ஜெர்மனி நாடுகளின் மதச் சீர்திருத்த இயக்கம் பற்றி அறியச் சிறந்த மதிப்பு வாய்ந்த நூல்களாம்.*

# 3. 16-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் சமய இயக்கங்கள்

விட்டன்பர்கு[1] கதீட்ரலின் கதவில் லூதர்[2] அவரது ஆராய்ச்சிக் கட்டுரையை எழுதித் தொங்கவிட்ட போது, சமயப் பிரச்சினை, தொடக்கத்தில் அவருக்குச் சிக்கல் நிறைந்ததாகத் தோன்றவில்லை. உரோமானியத் திருச்சபைகளின் ஊழல்களை அவர் எதிர்த்தார்; அவற்றின் மரபையும், பழக்கத்தையும் மறை நூலை ஆதாரமாகக் கொண்டே எதிர்த்தார். மேலும், அவர் மறை நூலையே அப்பழக்க வழக்கங்கள் பற்றிய தீர்ப்புக்கூறும் மன்றமாகவும் கருதினர். இப் பிரச்சினையை எவர் எந்நிலையில் அணுகினலும், அவர் கண்ட முடிவிற்கே தான் வர முடியுமென்பது அவருக்கு உண்மையாகத் தோன்றியது. தொடக்கத்தில் காணப்பட்டது போல, இப்பிரச்சினை அவ்வளவு எளிதானதன்றென்பது தெரிந்ததும், லூதரின் இயக்கம் வளர்ச்சியுறத் தொடங்கியது. மனிதவாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் சமயம் இணைக்கப்பட்டிருந்ததால், அதில் தோன்றிய இடையூறுகள், லூதருக்குத் தெரியாமலே சமூக, அரசியற் செய்திகளிலும் ஒத்த இடையூறுகளைத் தோற்றுவித்தன. இவை, முறையே லூதரின் சமய வளர்ச்சிக்கு ஆக்கம் அளித்ததோடு அவரை இடருக்கும் உள்ளாக்கின. மேலும், லூதரின் மரணத்திற்கு முன்னரே அவரைப் போலவே உரோமானியத் திருச்சபைகளைக் குறை கூறி, அவற்றில் நம்பிக்கை ஏற்படுவதற்கு விவிலிய[3] நூலைப் பார்த்தவர்கட்குங்கூட, சமய சித்தாந்தங்களில் லூதர் அடைந்த முடிவுகள் ஏற்றுக்கொள்ள முடியாதனவாயிருந்தன என்பது நன்கு புலனுயிற்று.

## சுவிங்லியும் லூதரும்

1518-ல் சுவிட்சர்லாந்திலுள்ள சூரிச்சு[4] என்னும் நகரில் சமயச் சீர்திருத்த வாதியான சுவிங்லி[5] என்பார் அவரது சீர்திருத்தப் பணி

[1] Wittemberg. [2] Luther. [3] The Bible. [4] Zurich. [5] Zwingli.

யைத் தொடங்கினர். லூதரைப் போலவே அவரும் பாவமன்னிப்புச் சீட்டுக்கள் வழங்கும் முறையைக் கண்டிக்கத் தொடங்கினர். சுவிட்சர் லாந்தின் பெரும்பகுதி அவரது தலைமையைப் பின்பற்றியதோடு ரோமுக்குக் கீழ்ப்படிவதையும் துண்டித்துக்கொண்டது. அவரது இயக்கமும் லூதர் இயக்கத்தோடு சிறிது காலம் ஒத்து இருந்தது. ஆனால், சமய சித்தாந்தம், திருச்சபையின் ஆட்சி இவைகளைப் பற்றிய தம் கருத்துக்களைச் சுவிங்லி வரையறுத்துக் கூறியபொழுது, அவர் களுக்கிடையில் கடுமையான மாறுபாடுகள் தோன்றலாயின. திருச் சபை ஆட்சியில் லூதரின் கருத்துக்களைக்காட்டிலும் சுவிங்லியின் கருத்துக்களில் மிகுதியானவை, மக்களாட்சி முறையில் அமைந் திருந்தன. இதற்குக் காரணம், ஜெர்மனியில் வாழ்ந்த மக்களைக் காட்டிலும் சுவிங்லி வாழ்ந்த நாட்டின் மக்களிடையே அரசியல் அமைப்புப் பற்றிய மக்களாட்சிக் கூறு அதிகம் காணப்பட்டதேயாகும். சுவிங்லிக்கும் லூதருக்குமிடையே காணப்பட்ட முக்கியமான மாறுபாடு திருவிருந்தைப்[1] பற்றியதாம். லூதர், புனிதப் பொருள் மாறும் கொள்கையைப்[2] புறக்கணித்து, புனிதப் பொருள் மாருக் கொள்கையை எடுத்தியம்பினர்[3], திருவிருந்து வழிபாட்டில் பயன்படுத்தப்படும் ரொட்டியும் திராட்சை ரசமும் மாறுதலின்றி அப்படியே இருந்தன வென்று கூறினர். ஆனால், புனிதச் சடங்கிற்குப்[4] பிறகு அவற்றில் பிரிக்க முடியாத ஒரு புதிய தன்மை ஏற்படுகிறது; அது, காய்ச்சப் படுகிற இரும்பில் சூடு ஏறுவதற்கொப்பாகும் என இயம்பினர். சுவிங்லி, புனிதப் பொருள் மாருக்கொள்கை, மாறுங்கொள்கை ஆகிய இரண்டையும் மறுத்தார். திருவிருந்து வழிபாட்டைப் புனித நிகழ்ச்சி யின் நினைவுகூரும் சடங்காகக் கருதினர். இவ்விரு சீர்திருத்தக் காரரையும் ஒன்று சேரச் செய்வதற்கு எடுத்துக்கொண்ட முயற்சிகள் வீணுயின. ‘இது என்னுடைய உடல்,’ என்ற சொற்களுக்குச் சுவிங்லியின் விளக்கம் லூதருக்கு முற்றிலும் கொள்ளத் தகாததாகத் தோன்றியது. ஆகவே அவர் உண்மையின் விரோதியெனச் சுவிங்லி யைப் பழித்துரைத்தார். இவ்விரு பிராட்டஸ்டென்டுத் தலைவரையும் பின்பற்றியவர்கள் எக்காலத்தும் ஒன்று சேராமலிருக்க ஊழ் வசதி செய்தது போலும்!

## கால்வின்

பேரரசின் ஆட்சிக்குட்பட்டிருந்த நன்கு தெரியாத ஒரு பகுதியில் லூதரின் மரணத்திற்கு முன்னமே மற்றொரு பிராட்டஸ்டென்டு இயக்கம் தொடங்கியிருந்தது. சுவிங்லியின் இயக்கத்தைக்காட்டிலும் மிக்க பெருஞ்சிறப்பெய்தும்படி அதன் ஊழ் அமைந்திருந்தது.

[1] Communion [2] Transubstantiation, [3] Consubtantiation.
[4] Commemorative Ceremony.

1509-ல் பிரான்சின் வடபாகத்தில் கால்வின்[1] என்பார் பிறந்தார். முதலில் அவரைக் குருமார்களின் வாழ்க்கைக்கு உரியோராக ஊழ் கூட்டியது. அவர் பாரிசு நகரில் சிறிது காலம் சமய சித்தாந்தம் பயின்றார்; பிறகு குருமார்களின் வாழ்க்கையை உதறித்தள்ளிச் சட்டம் பயில்வதற்காக ஆர்லியன்ஸ்[2] நகரத்திற்கு சென்றார். அங்கே 1533-ல் ஒரு புதிய சமயத்திற்குத் திடீரெனத் தமது மனம் மாறியதைப் பற்றி அவரே குறிப்பிடுகிறார். அப்போது நன்கு உருவாகாத பிராட்டஸ்டென்டு சமயத்தை அவர் ஒப்புக்கொண்டார். பிரான்சில் சமயத் தொடர்பான துன்புறுத்துதல் கடுமையாய் இருந்தது. எனவே, அவர் பிரான்சினின்றும் வெளியேறிச் சில காலம், ரைன்[3] நதிக்கரையிலுள்ள பட்டணங்களில் வசித்து வந்தார். பேஸில்[4] என்ற இடத்தில் 'கிறித்துவச் சமயக் கட்டளைகள்'[5] என்ற நூலை எழுதினார்; 1536-ல் ஜினிவாவுக்குச் சென்றார். அது பெயரளவில் பேரரசிற்குட்பட்டதாயிருந்தது. உண்மையில் மேற்றிராணியாரும், சவாய்க் கோமகனும் அதன்மீது அவர்கள் ஆட்சியைப் பற்றி வழக்காடினார்கள். ஜினிவா மக்கள் அண்டையினரான பெர்ன்[7] பிரீபர்கு[8] நகர மக்களுடன் கூட்டுச் சேர்ந்து கோமகனுக்கும் மேற்றிராணியாருக்கும் எதிராகக் கிளம்பினார்கள்; தங்களைப் பிராட்டஸ்டென்டுகளென்று அறிவித்தார்கள்; 1536-ல் கடவுளின் சொற்படியும் புனித நற்செய்தி பரப்புச் சங்கத்தின் சட்டப்படியும் உட்பட்டு வாழ்வதாக உறுதி பூண்டார்கள். இதற்குச் சிறிது காலத்திற்குப் பின் கால்வின் ஜினிவாவை அடைந்தார்; அங்கேயே இருக்கும்படி தூண்டப்பெற்றார். பின்பு ஜினிவாவிலிருந்து நாடு கடத்தப்பட்டு, மீண்டும் விரைவிலேயே ஜினிவாவுக்குத் திரும்பினார். அதிலிருந்து இறக்கும் வரை அவ்விடத்திலேயே தங்கினார். அவர் அங்கே தங்கியிருந்த காரணத்தால், ஜினிவா ஐரோப்பிய நகரங்களில் மிகச் சிறந்த தொன்றாயிற்று. பல நாடுகளின்மீது அவருக்கிருந்த செல்வாக்கு ரோம் அதிகாரத்திற்கு இணையாயிருந்ததாகச் சிறிது காலம் தோன்றியது.

## கால்வினியத்தின் சிறப்புக் கூறுகள்

கால்வினியம்[9] மற்றப் பிராட்டஸ்டென்டு இயக்கங்களிலிருந்து மூன்று கூறுகளினால் தனிச்சிறப்புடன் விளங்குகிறது. அவை யாவன :

1. கால்வினியத் திட்டத்தின்படி திருச்சபையும் அரசாங்கமும் வெவ்வேறானவை. லூதர் வாழ்வின் பிற்பகுதியில், ஜெர்மனியில் லூதரின் திருச்சபை இருந்ததைப் போலவும், அல்லது இங்கிலாந்தில்

[1] Calvin. [2] Orleans. [3] Rhine. [4] Basel. [5] Institutes of the Christian Religion. [6] Geneva. [7] Bern. [8] Freiburg. [9] Colvinism.

எட்டாம் ஹென்றி ஏற்படுத்தியது போலவும் அரசாங்கம் திருச்சபையை இயக்கக் கூடாதென்பது முதற்கூறாகும்.

2. திருச்சபை ஆட்சி முறை, கால்வினியக் கருத்துப்படி லௌகிகர்களும் சமய அமைச்சர்களும் சேர்ந்து பங்குகொள்ளும் ஒரு குழுவினரால் நடத்தப்பட வேண்டும். திருச்சபையை ஆட்சி புரியும் குழு, கன்சிஸ்டரி[1] என்னும் சொல்லால் 'சமயத்தலைமைக் குழு' என வழங்கப்பட்டது. அக்குழுவில், சமயஞ்சார்ந்த அமைச்சர் அறுவரும் லௌகிகத் தலைவர் பன்னிருவரும் இருந்தனர். திருச்சபையின் ஆட்சி அவர்களிடமிருந்தது.

3. மிகக் கடுமையான ஒழுங்குக் கட்டுப் பாட்டை வற்புறுத்தியதிலும் கால்வினியம் சிறந்து காணப்பட்டது. லூதரின் சமயத்தை எதிர்த்தவர்கள், அச்சமயம் கத்தோலிக்கர்களின் ஒழுக்கங்களைச் சீரமைப்பதற்குப் பதிலாக, வாழ்க்கை, நடத்தை இவைகளின் நேர்மையைத் தளர்த்தியது எனக் குறை கூறினார்கள். ஆனால், இக்குறைபாட்டைக் கால்வினியத்தில் உறுதியாகக் கூற முடியாது. ஜினிவா முழுவதும் அவருடைய முறையை ஏற்றுக்கொண்ட போது, மக்கள் நடத்தை பெயரளவில் கன்சிஸ்டரியின் மேற்பார்வையின் கீழும் உண்மையில் கால்வினாலேயே நெறியாக்கப்பெற்ற கடுமையான ஒழுங்குத் தணிக்கையின் கீழும் அமைந்தது. எனவே, கால்வினின் தலைசிறந்த சீடரான ஜான் நாக்ஸ்[2] என்பார் கூறியபடி கிறுத்துவின் நற்செய்திகளை மக்கள் வாழ்க்கையில் பின் பற்றிய போதிலும் ஜினிவாவிலிருந்ததைப் போலக் கிறித்துவ வாழ்க்கை வேறெங்கும் இல்லை.

## கால்வினின் ஆணைகள்

### இறுதி உணவு விழாவைப் (Eucharist) பற்றிக் கால்வின் கருத்து

சுவிங்லி, லூதர் இவர்களின் சமயக் கொள்கைகளிலிருந்து கால்வினியம் தனித்திருந்தது. கால்வின் எழுதிய 'கிறித்துவ சமய ஆணைகளின்' அடிப்படையிலேதான் முதலில் ஜினிவாத் திருச்சபையிலும் பிறகு ஐரோப்பியத் திருச்சபைகளிலும் பிரிஸ்பிட்டேரிய[3] சமய நிலையங்கள் (சமயச்சங்கக் குழு ஆட்சி) நிலை நாட்டப் பெற்றன. இச்சமய சித்தாந்தம் மாற்றுக் கருத்துக்கிடமில்லாமலும் தருக்க முறைப்படியும் முன் விதிப்புக் கொள்கையின்[4] பேரிலும் எழுந்ததாகும். இச்சமயக் கோட்பாட்டில் லூதர், சுவிங்லி இவர்களைப் பின்பற்றுவோர்களால் ஏற்றுக்கொள்ளக் கூடியவை மிகுதியாய் இருந்தும், மற்றச் சீர்திருத்தக்காரர்களைப் போலன்றிக் கால்வின் திருவிருந்து முறையில் மாறுபட்ட

[1] Consistory. [2] John Knox. [3] Presbyterian.
[4] Doctrine of Predestination.

கருத்தைக் கொண்டிருந்தார்; சுவிங்லியைப் போல அதை அவர் நினைவு கூரும் சடங்காகக் கருதவில்லை; ஆனால், லூதரின் புனிதப் பொருள் மாறாக் கொள்கையை முற்றிலும் ஏற்றுக் கொள்ளாமல், மூலப் பொருள்களைப் பற்றி இயற்கைக்கு அப்பாற்பட்டதாகவோ வியக்கத்தக்க நிகழ்ச்சியுடையதாகவோ கருத மறுத்தார்; ஆனால், சடங்கு சாதாரணமாக நினைவுகூறுவதாகாது என்றும், அதைத் திருவருளைப் பெறுவதற்கான வழியாகக் கொள்ள வேண்டுமென்றும் கூறினார். மற்ற மாறுபாடுகளும் இருந்த போதிலும் மேற்கூறிய கருத்தே கால்வினைப் பின்பற்றியவர்களை லூதரைப் பின்பற்றியவர்களிடமிருந்து பிரித்துக் கூறப் போதுமானதாயிருந்தது. ஜெர்மனியில் கால்வினியம் பரவியபோது பிராட்டஸ்டென்டுகளின் முகாமில் மகிழ்ச்சியற்ற சமயப்பிளவு தோன்றியது. இப்பிளவு பின்னர் முப்பதாண்டுப் போராய் மாறியது. கால்வின் விவிலியத்தைப் பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்த்தார். லூதரின் மொழி பெயர்ப்பைப் போலவே அவரது மொழி பெயர்ப்பும் அவர் காலத்திலும் அடுத்த தலைமுறையிலும் மிக்க செல்வாக்குடன் திகழ்ந்தது. கால்வின் பண்டைய கல்வியை[1] நன்கு கற்றவர். ஆயினும், அவர் காலத்துக் கலையழகும் மக்கட் பண்பும் கொண்ட இயக்கங்களில் சிறிதும் இரக்கவுணர்வற்றவராயிருந்தார். அவர் வாழ்ந்த காலத்திலும் அதற்குப் பின் சில காலம் வரையும் ஜினிவா கடுமையான ஒழுங்கு முறைக்குட்பட்டிருந்தது. இம்முறைக்கு எடுத்துக்காட்டாக, இக்காலத்தில் மேலிட அதிகாரத்தினால் விதிக்கப்பட்டு நிறைவேற்றம் செய்யப்பட்ட மக்கள் வாழ்க்கையைக்கூட கூற முடியாது. ஜினிவா மக்களின் இன்ப வாழ்க்கை கடுந் தணிக்கைக் குள்ளாயிற்று. 'மக்கள், உணவுப் பொருள்களில் எவற்றை உண்ணலாம்? திருமணக் காலங்களில் எவற்றைப் பரிசாக அளிக்கலாம்?' என்பனவற்றையும் சமய அதிகாரிகள் வரையறுத்திருந்தார்கள். சில சமயங்களில் கால்வினின் கடுமை, அச்சுறுத்தும் விளைவுகளையும் உண்டுபண்ணியது. ஜினிவாவில் அவரது சமயக் கொள்கைகளுக்கு எதிரியாயிருந்த ஒருவர் கொலை செய்யப்பட்டார்.

## சமயத்திற்காகச் சர்வீட்டஸின் உயிர்த்தியாகம்

ஸ்பெயின் நாட்டினரான சர்விட்டஸ்[2] ஜினிவாவுக்கு வந்தார். ரோமத் திருச்சபையின் கொள்கைகளை எதிர்த்த இவர், தமக்கு ஜினிவாவில் பாதுகாப்புக் கிடைக்குமென எண்ணினார்; அதற்கு மாறாகக் கடுமையான எதிர்ப்பே இருந்தது. கால்வினின் கொள்கைகளுக்கும் திருச்சபை முறைக்கும் மாறுபட்ட கருத்துக்கள் இவரிடம் காணப்பட்டதே, அவ்வெதிர்ப்புக்குக் காரணமாகும். கால்வின் நேரில் பங்கு

[1] Classical Learning. [2] Servetus.

கொண்ட ஒரு விசாரணையில், சர்வீட்டஸ் மரண தண்டனை விதிக்கப் பெற்று நகரத்தின் வெளியில் எரிக்கப்பட்டார்.

## வரலாற்றில் இடம் பெற்றுள்ள கால்வினியத்தின் பணிகள்

இதைப் போன்ற கொடுஞ்செயல்களால் 16ஆம், 17ஆம் நூற்றுண்டுகளில் கால்வினியம் பெற்றிருந்த உயர்நிலையை மூடி மறைக்க முடியாது. கால்வினியம், பிராட்டஸ்டென்டு சமயத்திற்குத் தெளிவானதும் நன்கு வரையறுக்கப்பட்டதுமான சித்தாந்தத்தை அளித்தது. 16ஆம் நூற்றுண்டினிறுதியில் லூதரைப் பின்பற்றிய பிராட்டஸ்டென்டுகளிடம் காணப்பட்ட மேலான பத்தியையும், ஆர்வத்தையும் இச்சமயம் ஊக்குவித்தது. இப்பத்தியும் ஆர்வமும் 16ஆம் நூற்றுண்டின் இறுதியில் லூதரைப் பின்பற்றியவரிடமும் காணலாம். சில வேளைகளில் இக்கட்டுப்பாடு அறிவற்றதாயும் மிகைப்படுத்தப்பட்டதாயும் நமக்குத் தோன்றிய போதிலும், இச்சமயத்தைப் பின்பற்றுவோரின் உள்ள நிலையை, எஃகு போல உறுதிப் படுத்துவதாயுமிருந்தது; அதனுடன் ஐரோப்பியக் கால்வினியர்களைச் சிறந்த போர்ப்படையினராகவும் செய்தது. பிராட்டஸ்டென்டு சமயத்தால் கைவிடப்பட்ட நம்பிக்கையைப் போன்றிருந்த இவர்கள் லூதரின் சமயம் உயிரற்று இருந்தபோது, அச்சமயஞ்சார்ந்த பகைவர்களைத் தொடர்ந்து எதிர்த்து நிற்கும் கூட்டமாயும் இருந்தார்கள். பிரான்சில் கால்வினியர்களே பிராட்டஸ்டென்டு சமயத்தின் வெற்றிக்கும் காரணமாயிருந்தார்கள். நெதர்லாந்தில் டச்சுக் குடியரசை நிறுவ இவர்கள் உதவினுர்கள். ஐரோப்பாவில் ஸ்காட்லாந்தை ஆற்றல் வாய்ந்த ஒரு நாடாகச் செய்தது இக்கால்வினியம். இது இங்கிலாந்தில் பிராட்டஸ்டென்டு சமயத்திற்கு மிதியான ஆற்றலை அளித்து, 17ஆம் நூற்றுண்டில் கடுந்தூய்மை[1] இயக்கத்தைத் தோற்றுவிக்க உதவியது.

## கத்தோலிக்கத்தின் மீட்டுயிர்ப்பு

இவ்வாறு பிராட்டஸ்டென்டு சமயம் தன்னியல்பை மாற்றிக் கொண்டு ஒரு புதிய நிறுவனமாக உருவாகிக் கொண்டிருக்குங்காலை, ரோமத் திருச்சபையிலும் பெரியமாறுதல் ஏற்பட்டுக்கொண்டிருந்தது. 16ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் போப்பாண்டவர்கள், தங்களுக்குரிய சமயச் சார்பான பணிகளை விடுத்து, இத்தாலியின் அரசியலிலும், மறுமலர்ச்சியிலும், கலை வளர்ச்சியிலும் பெரிதும் ஈடுபட்டிருந்தார்கள்; பிராட்டஸ்டென்டு இயக்கத்தின் முதல் நிலைகளைப் புறக்கணித்தார்கள். போப்பாண்டவர் 7-வது கிளிமன்டு,[2] பேரரசரான ஐந்தாம் சார்லசுடன்

[1] Puritan. [2] Pope Clement VII.

வெளிப்படையான பகைமை கொண்டிருந்ததால், லூதரைச் சார்ந்த சமயத்தினரோடு ஓரளவு நட்புறவு கொண்டிருந்தார்; ஆனால், பிராட்டஸ்டென்டு சமயம் விரைவாகப் பரவியதால், புறக்கணிப்பைக் கைவிட வேண்டி வந்தது. ஜெர்மனியில் முக்காற்பகுதி, ரோமத் திருச்சபையின் கட்டிலிருந்து விலகியது. பிரான்சும், ஹாலந்தும் இப்புதிய பாசண்டச்[1] சமயமாகிற தொற்றுநோயால் பற்றப்பட்டன. ரோமுடன் இணைக்கப்பட்டிருந்த தளைகளை இங்கிலாந்து அறுத்தெறிந்தது. டென்மார்க்கு, சுவீடன், நார்வே நாடுகள், லூதரின் சமயத்தை ஏற்றுக்கொண்டன. இப்புதிய கொள்கை, போலந்திலும் பொஹீமியாவிலும் இச்சமயத்தைப் பின்பற்றுவோரின் கூட்டத்தை வயப்படுத்தியது. இத்தாலியும் இச்சமயச் செல்வாக்கினின்றும் தனித்திருக்க முடியாதவாறு தோன்றிய பெரிய இடையூறுகளே ரோமத் திருச்சபையை விழிக்கச்செய்து, அவசர நடவடிக்கையின் தேவையை உணர்த்தின. எனவே, 16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்த போப்பாண்டவர்கள் முற்பகுதியில் இருந்தவர்களைக் காட்டிலும் மாறுபட்ட இயல்பினர்களாய் இருந்ததை அறிகிறோம். அவர்கள் இலக்கிய வளர்ச்சிக்கும் ரோமாபுரியின் கட்டடக் கலையை அழகுறச் செய்வதற்குமான கொள்கையைப் பின்பற்றிய போதிலும், தங்களது சமயத்திற்குப் பகையாயிருந்த பிராட்டஸ்டென்டுகளிடமிருந்து தங்களது சமயத்தைப் பாதுகாத்துக் கொள்ளுவதில் அக்கறை கொண்டார்கள். இந்நூற்றாண்டு முடியும் முன்னமே பிராட்டஸ்டென்டுகளின் எழுச்சி தணியலாயிற்று. கத்தோலிக்கத் தலைவர்கள், தங்கள் பகைவர்களை, அவர்கள் இருப்பிடத்திலேயே தாக்க முடிந்தது. ரோமாபுரியின் ஆட்சியின்கீழ் பெருநிலப்பகுதிகளை அவர்கள் மீண்டும் கொணர்ந்தார்கள்; எல்லாப் பகுதிகளையுமே திரும்பப் பெற நம்பிக்கை கொண்டார்கள். இவ்வியக்கம், 'ரோமன் கத்தோலிக்க எதிர் விளைவு'[2] அல்லது 'சமயச் சீர்திருத்த மறுப்பு இயக்கம்'[3] எனப் பெயர் பெறும்.

## இயேசு சங்கம்

**இக்னேஷியஸ் லயோலா**

இயேசு சங்க[4] அமைப்பு இத்திடீர் மாற்றத்துக்குச் சிறந்த காரணமாயிற்று. தொடக்க முதல் திருச்சபையின் வெற்றிகட்கு அவ்வப்போது தோன்றிய பல்வேறு சங்கங்கள் எந்த அளவுக்குக் காரணமாயிருந்தன என்பதை ஏற்கனவே கண்டோம். பெனிடிக்டைன்கள்,[5] குளூனியக்குகள்,[6] சிஸ்டர்சியர்கள்,[7] பிரான்சிஸ்கர்கள்,[8] டொமினிக்கர்கள்[9] என்பவர்களின் சங்கங்கள்செய்த பணியின் அடையாளங்கள் திருச்-

[1] Heresy. [2] Roman Catholic Reaction. [3] Counter Reformation.
[4] Jesuit Order. [5] Benedictines. [6] Cluniacs. [7] Cistercians.
[8] Franciscans. [9] Dominicans.




ரோமத் திருச்சபையும் எதிர்ப்புக்களும் [பக்கம் 52

ச்சபையின் வரலாற்றில் நன்கு காணப்படுகின்றன. ஆனல், இயேசு சங்கத்தின் பணியைப்போல முக்கியமானவையும் நிறைவுள்ளவையு மாகிய அடையாளங்கள் மற்றவைகளில் இல்லை. இப்புதிய இயக்கத் திற்கு ஸ்பெயின் தாயகமாயிற்று. இயற்கையிலேயே ஸ்பெயினிலிருந்த கத்தோலிக்கச் சமயம் அச்சமயத்தைப் பரப்புவதில் வலிய முறைகளைக் கொண்டிருந்ததைப்போன்று வேறு நாடுகளில் இல்லாதிருந்ததே இதற்குக் காரணமாகும். மூர்களுடன்[1] நடந்த நெடும்போர்களின் பயனாய்க் கத்தோலிக்கக் கொள்கை ஸ்பெயினில் சாதாரண சமயம் என்றில்லாமல், தேசீயக் கட்டுப்பாட்டை உருவாக்கிற்று. அண்மையில் மூர்களைவென்று பெற்ற வெற்றிகள் ஸ்பெயின் மக்களிடத்தில் தன்னம் பிக்கையையும் மகிழ்ச்சி தரும் சமய உணர்ச்சியையும் ஊட்டின. ஸ்பெயினின் போர்ப் படைகளில் திறமையாகப் பணி புரிந்தவர் டான் இனிகோ லோபஸ் டி ரிகால்டி[2] என்னும் உயர்குடிப் பிறந்தாரவர். பாம்பெலூனு[3] முற்றுகையில் அவர் காயமடைந்து குணமுற்ற பின்பு ஊனமுடையவரானர். அவர் கத்தோலிக்கச் சமயத்தில் பேரார்வம் கொண்டவர். எனவே, அவர் எண்ணங்கள் உலகப் போரிலிருந்து சமய ஒழுக்கப் போருக்குத் திரும்பலாயின. இவ்வழியில் அவர் திரும்பு வதற்கு நீண்ட நாட்கள் ஆயின. துறவறச் சமய நடவடிக்கைகளில் முழுமூச்சுடன் அவர் இறங்கினர்; எருசெலத்திற்கு யாத்திரை சென்றார்; புறச்சமயத்தைக் கைக்கொண்டவரெனும் ஐயத்திற்கும் உள்ளானர். எனினும், பாரிசுக்குச் சமய சித்தாந்தம் பயில அவர் சென்ற செலவு, அவர்தம் வாழ்க்கையில் பெரிய திருப்பத்தை விளைவித்தது. தம் கொள்கைகளைக் கொண்ட சிலருடன் அவர் நட்புரிமை கொண்டார்.

## இயேசு சங்கத்தைத் தோற்றுவித்தவர்

### இயேசு சங்கத்தின் சிறப்புகள்

இவ்வாறிருக்கும் நாட்களிலேதான் அவரும் அவர்தம் நண்பர் களும் எருசெலத்திற்கு யாத்திரை செல்வதென நோன்பு பூண்டதுடன் போப்பாண்டவரின் வழிகாட்டினுக்குக் கட்டுப்படுவதென்ற முடிவும் செய்தார்கள். ஆனல், துருக்கியரின் அதிகாரம் மிக வலுவடைந்திருந்த தால், வெனிஸ் வரை சென்றவர்கள், அதற்கு அப்பால் செல்ல இயல வில்லை. அங்கிருந்தபோது டான் இனிகோவின் மனத்தில் ஒரு புதிய சங்கத்தைப்பற்றிய கருத்துக்கள் உருவாயின. பிற்காலத்தில் அவர் பெயர் இக்னேஷியஸ் லயோலா[4] என்று வழங்கப்பட்டது. நாமும் இனி அவரை இப்பெயராலேயே வழங்குவோம். அவர் தாம் விலகும்படி நேர்ந்த இராணுவத்தின் கட்டுப்பாட்டையும் தைரியத்தையும் கொண்டு,

[1]Moors, [2]Don Inigo Lopez de Recalde, [3]Pampeluna, [4]Ignatius Loyola.

கத்தோலிக்கத் திருச்சபைக்காகத் திறமையுடன் போர் புரியத் தயாரா யுள்ள மக்களை ஒன்று திரட்ட விரும்பினர். போப்பாண்டவர் முதலில் இச்சங்கத்தைப்பற்றி ஐயுற்றுர். 1540-க்குப் பிறகுதான் போப்பாண்டவ ரின் ஆணைப்படி இது உறுவாக்கப்பட்டது. அது முதல் ஐரோப்பாவின் சமயத் தொடர்பான சத்திகளில் இச்சங்கம் மிகவும் இன்றியமையாச் சிறப்பு வாய்ந்ததாயிற்று. இச்சங்கத்தைச் சேர்ந்தவர்கள், (இக்னே ஷியஸ் இதைக் 'கம்பெனி' என்று வழங்கினர்) வறுமை, பிறன்மனை விழையாமை, கீழ்ப்படிதல், போப்பாண்டவரிடம் தனிப் பற்று முதலிய நோன்புகளை மேற்கொண்டார்கள். இச்சங்கத்தின் தலைவர் 'ஜெனரல்' எனப்படுவார். சங்கத்திற்குள் அவரது அதிகாரம் தலைமையாயிருக்கும். இயேசு சங்கத்தார், டொமினிக்கன் சங்க அமைப்பில் நெருங்கிய ஒற்றுமைகளைக் கண்டனர் எனினும், பல முக்கிய விவரங்களில் அச் சங்கத்தார்களிலிருந்து மாறுபட்டிருந்தனர். அவர்கள், தங்களுக்கெனச் சிறப்பான தனி உடையை அணிவதில்லை என்றும், கடுந்துறவறத்தை மேற்கொண்டு தங்கள் வலிமையை இழக்கக் கூடாதென்றும், உலக வாழ்வில் தொடர்புள்ளவர்களாய் எப்போதும் திருச்சபைக்காகப் போரிட வேண்டுமென்றும் கருதினர்கள். சங்கத்தின் உறுப்பினர்களிடமிருந்து அவரவர்களுடைய நாட்டுப்பற்றைக் களைவதில் இக்னேஷியஸ் தனிக் கவனம் செலுத்தினர்.

## இயேசு சங்கத்தாரும் கல்வியும்

இச்சங்கம் எல்லாவற்றிற்கும் மேலாக உலகக் குடியுரிமைக் கொள்கையினைக் கொண்டிருந்தது. ஜெர்மானியர், ஆங்கிலேயர், பிரெஞ்சுக்காரர் ஆகிய எந்நாட்டினராயினும் அவரவருடைய நாட்டைப் பற்றிய எண்ணம் சிறிதும் குறுக்கிடாமல் திருச்சபைக்குப் பணி செய் வதையே நோக்கமாகக் கொண்டனர்; உலக மக்கள் உள்ளத்தைக் கவர் வதற்குப் பிரசாரம் செய்தலையும், கல்வி கற்பித்தலையும் சிறந்த வழிக ளாகக் கருதினர்; உலகத்தைச் சீர்திருத்துவதற்குச் சமயப் பிரசாரம், கற்பித்தல் இவைகளை இன்றியமையாக் கருவிகளாகக் கண்டனர். தொடக்கத்திலிருந்தே அவர்களுடைய கல்வி நிலையங்கள் செல்வாக் குள்ளனவாயும் முக்கிய இடம் பெற்றும் இருந்தன. அவர்கள் இலவசக் கல்வி அளித்தார்கள். அவர்களது போதனை ஐரோப்பாவிலேயே அக் காலத்தில் மிகச் சிறந்ததாயிருந்தது. எந்தெந்த நாடுகளில் எல்லாம் அவர்கள் அனுமதிக்கப்பட்டார்களோ, அங்கெல்லாம் வளரும் சந்ததி யார்களான இளைஞர்களின்மீது பிடிப்புக் கொண்டார்கள்; அடுத்த நூற்றுண்டின் தொடக்கத்தில் கத்தோலிக்கர் ஐரோப்பாவிலிருந்த பள்ளி கள், பல்கலைக்கழகங்கள் முதலிய எல்லாவற்றின்மீதும் அதிகாரம் பெற் றூர்கள்; மிகவும் ஆழ்ந்த பத்தி ஆர்வத்தால் தூண்டப்பட்டவர்களா யிருந்தார்கள்; தளராத தைரியம் உடையவர்களாய் இருந்தார்கள்;

போப்பாண்டவரின் யோசனைப்படி அவருக்குப் பணி புரிவதில் பேரூக்கம் கொண்டார்கள். போப்பாண்டவரின் கையினுல் பிடிக்கப்பட்டு எங்கு வேண்டுமானுலும் பாயக்கூடிய கூர்மையுடையதும் ஐரோப்பாவின்மீது சுழலும் ஆற்றலுள்ளதுமான ஒரு போர்வாளுக்கு உவமையாகவும் அவர்களைக் கூறலாம். அவர்கள் மேற்கொண்ட முயற்சிகளின் பயனுகப் பிரான்சு, ஜெர்மனி, போலந்து முதலிய நாடுகளிலிருந்து பிராட்டஸ்டென்டு சமயம் விரட்டப்பட்டதுடன், இங்கிலாந்திலும் ஸ்காட்லாந்திலும் மற்றும் பல இடங்களிலும் பிராட்டஸ்டென்டு சமயம் தாக்குண்டது.

## டிரென்டு மகாசபை

சமயச் சீர்திருத்தத்தின் எதிர்ப்பு இயக்கம் வளர உதவியாயிருந்த மற்றெரு காரணம், டிரென்டு மகா சபை[1] யாகும். திருச்சபையின் ஆட்சி வரம்பிற்குட்பட்ட உலக நாடுகளின் பெரிய மகாசபையைக் கூட்டுவதன் மூலம், பிராட்டஸ்டென்டு பிரச்சினைக்கு முடிவு காணத் தொடக்கத்திலிருந்தே ஐந்தாம் சார்லசு எண்ணமிட்டிருந்தார். இவ்வாறு மகாசபை கூட்டப்படுவதே போப்பாண்டவரின் ஆட்சிக்குத் தாக்குதலாகுமெனக் கருதிப் போப்பாண்டவர்கள் இவ்வெண்ணத்தைத் தடை செய்தார்கள். எனினும், ஐந்தாம் சார்லசின் செல்வாக்கு மிகுதியாலும் சமயத்திற்கு இடர் அதிகமாயிருந்ததாலும், 1545 டிசம்பரில் மகாசபை கூட்டப்பட்டது. இது டிரென்டு நகரில் கூடியதற்குக் காரணம் பின் வருவது: ஜெர்மானியப் பேரரசின் அரசியல் எல்லைகளுக்குள்ளிருந்த போதிலும் இந்நகரம் நிலநூல் இயற்மையமைப்பின்படி இத்தாலிக்குட்பட்டிருந்தது; எனவே, இத்தாலிய மேற்றிராணியார்கள் எளிதில் மகாசபைக்கு வருவதற்கும் ஏற்றதாயிருந்தது. அதனுடன், மகாசபையில் தம் கருத்துக்களைப் பாதுகாத்துக்கொள்வதற்குப் போப்பாண்டவர், இத்தாலிய மேற்றிராணியார்களையே நம்பியிருந்தார். கடைசிக் கூட்டங்கள் 1563 இலே தான் கூடின. எனினும், மகாசபையின் போக்கில் மாறுதல்கள் ஏற்பட்டன. 1547-ல் மகாசபை பொலோனுவில்[2] கூடிற்று. 1549-ல் கூட்டம் செயற்படுவதினின்றும் தள்ளி வைக்கப்பட்டது; 1551-ல் மீண்டும் கூட்டப்பட்டு, 1552-ல் மீண்டும் தள்ளி வைக்கப்பட்டது. இறுதியாக 1562-ல் கூட்டப்பட்டு, 1563-ல் மகாசபை முடிந்தது.

## டிரென்டு மகாசபையைப் போப்பாண்டவர் கட்டுப்படுத்துதல்

ஐரோப்பாவில் சமயச் சார்பற்ற நாடுகளைக் கூட்டுவதன் மூலம் திருச்சபையினுட்சியில் சீர்திருத்தங்களைச் செய்ய ஐந்தாம் சார்லசு

[1] Council of Trent. [2] Bologna.

திட்டமிட்டிருந்தார். ஆனால், மகாசபையின் விளைவு அவரது எண்ணத்திற்கு நேர்மாறாயிருந்தது. மகாசபை, போப்பாண்டவரின் தூதர்கள் தலைமையில் நடந்தது. எனவே, தூதர் ஏற்றுக்கொண்டால் அன்றி, சபையில் எதையும் எடுத்துக் கூறுவது இயலாததாயிற்று. லூதரின் சமயத்திற்கும் கத்தோலிக்கச் சமயத்திற்கும் அடிப்படையில் சமரசத்தை இச்சபை காண முடியும் என்று எல்லோரும் எதிர்பார்த்தனர்; இதன் விளைவாகத் திருச்சபை மீண்டும் ஒன்றுபடும் எனவும் எண்ணினர். ஆனால், இந்த எண்ணம் பொய்த்தது. வல்கேட்டு[1] எனப்படும் விவிலியத்தின் லத்தீன் மொழி பெயர்ப்பே சமய விஷயங்களில் மேலாண்மையுரிமை கொண்டதென்பது அறிவிக்கப்பட்டது. சமய சித்தாந்த விஷயங்களில், மறைகளோடு திருச்சபை மரபுகளின் முடிவான தீர்ப்பைத்தான் ஏற்க வேண்டுமென்பது முடிவாயிற்று. லூதரால் வற்புறுத்திக் கூறப்பட்டதும், தனிச்சிறப்பு வாய்ந்ததும், கத்தோலிக்கர்களில் முதன்மையோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டதுமான பற்றுறுதியைக் கொண்டு நேர்மை[2] என்று காட்டப்படும் கொள்கை, திறனாய்ந்து பார்த்து, மறுக்கப்பட்டது. இம்மகாசபையில் சிறிதுகாலம் பிரிதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருந்த பிராட்டஸ்டென்டுகளின் விருப்பங்கள் அல்லது வாதங்களை எடுத்துரைப்பதையும் கவனிக்காமலே அக்கொள்கை கைவிடப்பட்டது. திருச்சபையின் ஒழுங்கைச் சீரமைக்கவும், கொள்கையை முறையாக வகுக்கவும், நிர்ணயம் செய்யவும் மகாசபை முனைந்தது. இறுதி அமர்வுக் காலங்களில் திருச்சபை விவகாரத்தில் போப்பாண்டவரின் அதிகாரத்தை மீண்டும் உறுதி செய்தது. தொடக்கத்தில் போப்பாண்டவரைச் சார்ந்த எல்லா அரசியல்வாதிகளின் கண்களுக்கும் இடருள்ளதாயிருக்கும் என்று தோன்றிய மகாசபை, திருச்சபையின் ஒவ்வொரு துறையிலும் போப்பாண்டவரின் ஆட்சியை வலுவடையச் செய்து முடிவுற்றது.

## டிரென்டு மகாசபையின் விளைவுகள்

மகாசபை, கத்தோலிக்கர்களின் எதிர் விளைவை[3] உருவாக்குவதற்குப் பெரிதும் துணை புரிந்தது; கத்தோலிக்கர்களுக்கு வரையறுக்கப்பட்ட கொள்கைத் தொகுப்பை அளித்தது; அவர்களுக்குள் நிகழ்ந்த சமய சித்தாந்தம் பற்றிய வாதங்களுக்கு முடிவு கட்டியது; அதனுடன் மடாலயக் குருமார்களிடமும் லௌகீகர்களிடமும் காணப்பட்ட குறைபாடுகளை நீக்கியது. திருச்சபையின் அமைப்பையும் ஆட்சி முறையையும் சீர்திருத்தஞ்செய்து வலுவடையச் செய்தது. எனினும், அது கிறித்துவ உலகம் ஒன்று சேருவதற்கான வழியை அமைக்கவில்லை; ஆயினும், கத்தோலிக்க சமயத்திற்குத் தற்காப்புச் செய்துகொள்ளக் கூடிய நிலையையும் போரை எதிர்க்கத்தக்க சத்தி வாய்ந்த அமைப்பையும் அளித்தது.

[1] Vulgate. [2] Doctrine of Justification by Faith. [3] Catholic Reaction

மதச் சீர்திருத்த மறுப்பு இயக்கத்திற்கு மற்றொரு காரணமாயிருந்தது, விரித்துக் கூறுதற்கு ஏற்றதல்லாத இன்குவிஸிஷன்[1] என்னும் விசாரணை மன்றமாகும். பாசண்டங்களை (சமயத் துரோகிகளை) அடக்குவதற்காகத் திருச்சபையில் ஒரு நிறுவனம் இருந்து வந்தது. இடைக்காலத்தின் முற்பகுதியில் இவ்வதிகாரம் மேற்றிராணியார் வசம் இருந்தது. 1483 ல் ஸ்பெயினில் சிறப்பாயிருந்த இன்குவுஸிஷன் ஸ்பெயினின் தீபகற்பத்திலிருந்த சமயத் துரோகிகளான மூர்களையும் யூதர்களையும் அடக்குவதற்கு நிறுவப்பட்டது. 1542-ல் போப்பாண்டவர் நான்காம் பால் என்று பதவி வகித்த கார்டினல் கரஃபா என்பவரின் யோசனையின்படி போப்பாண்டவரின் ஆணையின்கீழ்ப் பொதுவான இன்குவிஸிஷன் அமைக்கப்பட்டது. இதன் விளைவாக, சமயத் துரோகிகளை விசாரித்துத் தண்டனை அளிக்க விருப்பங் கொண்ட எல்லாக் கத்தோலிக்க நாடுகளிலும் இன்குவிஸிஷன் மன்றம் நிறுவப்பட்டது. இன்குவிஸிஷன் நடைமுறைகள் எவ்வழியிலும் கொடுமைகளுக்கும் அநீதிகளுக்கும் பெயர் பெற்று விளங்கியது. அதை எவ்வழியிலும் சார்ந்து கூற இயலாது. இன்குவிஸிஷன் கூறுகள் மிகவும் வெறுக்கத் தக்கனவாய் இருந்தன. எனினும், ஐரோப்பாவில் அக்காலத்தில் சாதாரணமாகக் காணப்பட்ட பொது நீதிமன்றங்களைப் போல இன்குவிஸிஷனும் இருந்தது என்று துன்பம் தணிப்பதற்காகச் சொல்லுவதைத் தவிர வேறில்லை. அது உண்மையை வரவழைப்பதற்கு அளவிறந்த துன்புறுத்தல்களைக் கையாண்டது. கைதிகளுக்கு விசாரணையின்போது நேருக்கு நேராகச் சாட்சிகளைக் கூற அனுமதிப்பதில்லை; கரி கூறுவோர்களின் பெயர்களைக் குற்றவாளிகளுக்கு அறிவிப்பதும் இல்லை. குற்றவாளி என முடிவானதும், அவன் லௌகிக அரசாங்கத்திடம் குறிப்பிட்ட தண்டனையைப் பெறுவதற்காக ஒப்படைக்கப்படுவான். 1542-ல் தயாரிக்கப்பட்ட இன்குவிஸிஷன் சம்பந்தமான நிபந்தனைகளில் தண்டனையை நிறைவேற்றுவதில் தாமதமோ அன்றித் தயக்கமோ கூடாதென்பது குறிப்பாக விதிக்கப்பட்டிருந்தது. தவிர, இளவரசர் என்றும், தலைமைக்குரு என்றும் எவ்விதச் சலுகையும் காண்பிக்கக் கூடாது. பெரிய அதிகாரிகளின் துணையை நாடித் தப்ப முயற்சி செய்கிறவர்களுக்குக் கடுந்தண்டனை விதிக்கப்படவேண்டும். சமயத் துரோகிகளிடம் சகிப்புத் தன்மை காட்டக் கூடாது என்ற போது, கால்வினியர்களைத் தேடிக் கண்டுபிடித்துத் தண்டனைக்குள்ளாக்க வேண்டுமென்று விதித்தது. பத்திரிகைகளைத் தணிக்கை செய்யும் அதிகாரம் இன்குவிஸிஷனிடம் இருந்தது. இதன் அனுமதியின்றி எந்த நூலையும் வெளியிடக்கூடாது 1555-ல் படிக்கத் தகாத நூல்களின் பெயர்ப்பட்டியல் தயாராயிற்று. கத்தோலிக்கர்கள் அவற்றைப் படிக்கக் கூடாது என ஆணையிடப்பட்டது.

[1] Inquisition.

## இன்குவிஸிஷனின் செல்வாக்கு

16ஆம் நூற்றுண்டின் இறுதியில் கத்தோலிக்கர்கள் பெற்ற வெற்றிக்குக் காரணமாயும், பெருந்துணையாயும் இருந்தவை இயேசு சங்கமும், டிரென்டு மகாசபையுமாகும். இவ்வெற்றிக்கு இன்குவிஸிஷன் துணையாயிருந்ததா என்பதை உறுதியாகக் கூறவியலாது. அதன் அடிப்படை நோக்கத்திற்குப் புறம்பான செயலிலும் ஈடுபட்டிருந்தது, ஸ்பெயினில் திருச்சபையின் சார்பிலும், முடியாட்சியின் சார்பிலும், இன்குவிஸிஷன் பயன்பட்டது. நெதர்லாந்தில் மிகக் கொடூரமான செயல்களைப் புரிந்ததன் பயனுகச் சமரசத்திற்கே இடம் அளிக்காது வெறுப்பை வளர்த்தது, கொடுமைச் செயல்களால் அதை நிறுவிய திருச்சபையின் பெயருக்கு இழுக்கைத் தேடியது.


ராங்கே : போப்புக்களின் வரலாறு
வின்ட்சே : சமயச் சீர்திருத்தத்தின் வரலாறு
ஃபுரூமி : டிரென்டு மகாசபை பற்றிய விரிவுரைகள்
ஹாய்சர் : மதச் சீர்திருத்த இயக்கத்தின் காலம்
டயர் : கால்வினின் வாழ்க்கை வரலாறு
லீ : இன்குவிஸிஷன் வரலாறு
மார்க்கு பாட்டிசன் } கால்வின் பற்றிய கட்டுரை (அவரது கட்டுரைத் தொகுப்பில் உள்ளது.)

# 4. ஸ்பெயினும் நெதர்லாந்தும்

## இயற்கையமைப்பில் ஸ்பெயின் தனித்திருத்தல்

## உலகம் பரவிய பேரரசில் ஸ்பெயின் தலைமை வகித்தல்

ஐரோப்பாவின் மற்றப் பகுதிகளினின்றும் பிரனீசு மலைத்தொடர்கள் ஸ்பெயினை இயற்கையில் பிரித்தன. எனவே, கண்டத்தோடு எவ்விதத் தொடர்புமின்றி அதன் போக்கில் சென்றிருக்கலாம். ஐரோப்பிய நாடுகளின் வரலாறுகளைப் போலல்லாது, ஸ்பெயின் வரலாறு மாறுபட்ட தன்மைகளைக் கொண்டிருந்தது. மூர்களான முகம்மதியர்களுடன் அது நடத்திய போர், அதன் வளர்ச்சியில் செல்வாக்குப் பெற்றிருந்ததை முன்னர்க் கண்டோம். மூர்களை விரட்டிய பிறகு பல கிறித்துவச் சிற்றரசுகள் ஏற்படலாயின. நெடுநாள் வரை இச்சிற்றரசுகளிடம் காணப்பட்ட ஒற்றுமைக்குக் காரணம், இவை கத்தோலிக்கச் சமயத்திடம் கொண்டிருந்த தீவிர நம்பிக்கையேயாகும். ஆனால், பதினைந்தாவது நூற்றாண்டில் ஸ்பெயினில் அரசியல் ஒற்றுமை ஏற்படுத்த ஓர் இயக்கம் தோன்றிற்று. முக்கியமான இரு இராச்சியங்கள் இருந்தன. அவை ஆரகனும் காஸ்டில் நாடுமாகும். ஆரகன் மன்னரான பர்டினண்டு[1] காஸ்டில் நாட்டு இளவரசியான இஸபெல்லாவை[2] மணந்துகொண்டது வாயிலாக இவ்விரு நாடுகளும் ஒன்றுபட்டன. இவர்கள் பேரரும், ஸ்பெயின் நாட்டு மன்னரும், பேரரசுப் பதவியில் ஐந்தாம் சார்லசு என்று வழங்கப் பட்டவருமான முதலாம் சார்லசு பேரரசராகி, இத்தீபகற்பத்தைப் போரார்ச்சுகல் நீங்கலாக ஆண்டு வந்தார். 15ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஸ்பெயின் தனித்து இயங்கும் தன்மையை இழந்தது; சிசிலித் தீவு, நேப்பிள்சு நகரம் முதலியவற்றை வெற்றிமூலம் அடைந்தது. ஆஸ்திரிய மன்னர் மாக்ஸி

[1] Ferdinand of Aragon. [2] Isabella of Castile.

மிலியன்,[1] பர்கண்டி நாட்டு இளவரசியார் மேரி ஆகிய இவர்களின் புதல்வரான பிலிப்பு என்பாரை ஸ்பெயின் நாட்டு இளவரசியாரான ஜோனு[2] மணந்துகொண்டது வாயிலாக ஊழ் நெதர்லாந்துடன் ஸ்பெயினை இணைத்தது. இதனால் ஸ்பெயின் உலகம் முழுவதும் பரவியிருந்த பேரரசிற்குத் தலைமை ஏற்றது. இதனால், அதன் பேரவாவும் செருக்கும் வளர்ந்தன. ஸ்பெயின் ஏற்றுக் கொண்ட பெரும்பொறுப்புக்களே பிற்காலத்து அதன் வீழ்ச்சிக்குச் சிறந்த காரணமாயின.

## 16ஆம் நூற்றாண்டில் ஸ்பெயினின் வலிமை

ஸ்பெயின் நாட்டு வீழ்ச்சியும் அழிவும் மிக முற்பட்டனவாகக் கூறும்போது நாம் எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும். 16ஆம் நூற்றாண்டு முழுவதும்—ஏன்—17ஆம் நூற்றாண்டிலுங்கூட, ஸ்பெயின் பகட்டாயும், வலிமையுள்ளதாயும் இருந்தது. அந்நாடு உண்மையில் இருந்ததைவிட அரசியல்வாதிகள் அதன் வலிமையைப் பற்றி அதிகம் எண்ணியிருந்தார்கள். அமெரிக்காவில் ஸ்பெயினுக்குச் சொந்தமாய் இருந்த பகுதிகள் 'இண்டீஸ்' என்று வழங்கப்பட்டன. அவற்றிலிருந்து ஸ்பெயின் குறைவற்ற செல்வத்தைப் பெற்றதாகக் கருதினர். மக்களுள் பெரும்பாலார் ஆர்வத்துடன் பின்பற்றிய கத்தோலிக்க சமயம் ஸ்பெயின் மக்களிடத்தில் உண்மையான ஒற்றுமையை ஏற்படுத்தியது. அந்நாட்டுப் போர் வீரர்கள் ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு ஐரோப்பாவில் மிகச் சிறந்த வீரர்களெனக் கருதப்பட்டார்கள். புது உலகத்தைக் கண்டு பிடித்ததும் ஸ்பெயின் நாட்டுக் கப்பற் படைதான். எனவே, மிகப் பரந்த வாணிகத்தை ஏற்படுத்துவதற்கான வாய்ப்பு ஸ்பெயினிடம் இருந்தது. மேற்கூறப்பட்ட நலன்களுள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் இழுக்கு இருந்தது என்பதைப் பிற்காலப் பட்டறிவு விளக்கும். அதற்குச் சொந்தமாயிருந்த அமெரிக்கப் பகுதிகளின் பொருட்டும் அதிகச் செலவு செய்ய வேண்டியிருந்தது. அவற்றின் திறனற்ற ஆட்சியினால் தேவையான கட்டணங்கள் செலுத்தப்பட்டபின் பணம் மிச்சம் ஏற்படவில்லை. மக்களுக்குச் சமயத்தில் இருந்த தீவிர எண்ணம் 'இன்குவிஸிஷன்' ஏற்படுவதற்குத் தாராளமாக வழிசெய்தது. இச்சமய நீதி மன்றத்தால் கருத்துரிமை ஒடுக்கப்பட்டது; ஐரோப்பாவில் ஏனைய பகுதிகளில் வளம்பெறச் செய்த புதிய கருத்துக்களை ஸ்பெயினுக்குள் வர விடாமற் செய்தது. மிகப்பரந்த பேரரசில் ஸ்பெயினும் ஒரு பாகமாய் இருந்ததால், முடிவிலாப் போர்களில் இறங்க வேண்டியிருந்தது. மேற்கண்டவை ஸ்பெயினின் மீட்சிக்குரிய சாதனங்களைக் குறைத்தன.

[1] Maximilian. [2] Joanna.

## ஐந்தாம் சார்லசின் வெற்றிகள்

இரண்டாம் பிலிப்பு

ஐந்தாம் சார்லசின் ஆட்சி ஸ்பெயினில் புகழ் வாய்ந்ததாயிருந்தும், ஜெர்மனியில் தோல்வியுற்றிருந்தது. முடியாட்சியின் சத்திகள், போட்டியாயிருந்த எல்லா அரசுகளுக்கும் எதிராக வெற்றியுடன் வற்புறுத்தப்பட்டன. முகமதியர்களும் டூனீசியாவின் கடற்கொள்ளைக் காரர்களும் ஒடுக்கப்பட்டார்கள். அமெரிக்கக் குடியேற்ற நாடுகளில் நல்லாட்சி முறை புகுத்தப்பட்டது. ஐரோப்பாவிலும் இத்தாலி நாட்டிலும், பல பெரும்பகுதிகள் ஸ்பெயின் அதிகாரத்தின் கீழ் வந்தன. நெதர்லாந்தில், வழக்கமாகக் காணப்பட்ட நன்மதிப்புடனும் வெற்றியுடனும் சார்லசு திறமையாக ஆட்சி செய்தார். ஐந்தாம் சார்லசு முடி துறக்கும் போது இரண்டாம் பிலிப்பு மிகப் பெரிய அதிகாரத்திற்கு வாரிசானுர். பேரரசும், ஜெர்மனியின் கிழக்கிலிருந்த ஹாப்ஸ்பர்கு நாடுகளும் பர்டினண்டிற்குக் கிடைத்தனவேயன்றிப் பிலிப்பிற்குக் கிடைக்கவில்லை. ஆயினும், இது ஸ்பெயினுக்கு இலாபமேயன்றி நஷ்டமன்று. புதிய உலகிலும் பழைய உலகிலும் மிகப் பரந்த நிலப்பகுதிகள், போரில் ஆர்வமுள்ள மக்கள், பெரும்புகழ்மேவிய செல்வம், ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையின் உதவி இவற்றினுல் எதையும் செய்ய முடியுமென்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டது.

## இரண்டாம் பிலிப்பின் ஆட்சியில் தோல்விகள்

இரண்டாம் பிலிப்பின் ஆட்சி, பொதுவாகத் தோல்வியெனக் கருதப்படுகிறது. அவர் அரிய சாதனை அடங்கிய காலத் தொடக்கத்திலிருந்தவர் போலக் காணப்பட்டார். மேலும், அவருடைய ஆட்சியின் கீழ் இங்கிலாந்தும், பிரான்சும் வருவதற்கேற்ற சூழ்நிலை அமைந்திருந்தது. ஆனுல், அவர் முயற்சிகள் முடிவான வெற்றியைப் பெறவில்லை. சமய மாறுபாடுடைய எலிசபெத்து அரசியார் அசைக்க முடியாத நிலையில் அன்று ஆட்சி செய்துகொண்டிருந்தார். அவர்க்குப் பெரிய பகைவரான நவாரே நாட்டு ஹென்றி[1]யின் கீழ், பிரான்சு அமைதியுடன் இருந்தது. இவையனைத்தையும்விட நெதர்லாந்தின் பெரும்பகுதி இவருடைய ஆட்சியினின்றும் விடுவித்துக்கொண்டு சுயேச்சையான பிராட்டஸ்டென்டு நாடாய் மாறியது. இது இவருக்குப் பேரிடியாய் அமைந்தது.

[1]Henry of Navarre.

## லெபான்டோ வெற்றிகள்

போர்ச்சுகல்: கலையும் இலக்கியமும்

எனினும், இவரது ஆட்சியில் வெற்றிகள் இல்லாமலில்லை. 1571-ல் ஸ்பெயின் கடற்படைத் தலைவரும், மன்னரின் மாற்றுந்தாயின் புதல்வரும், ஆஸ்திரியாவைச் சேர்ந்தவருமான டான் ஜான்[1] என்பார் கத்தோலிக்க நாடுகளிலிருந்து ஒரு பெரிய கப்பற்படையைத் திரட்டித் தலைமை வகித்துச் சென்று, காரிந்து வளைகுடாவருகில் லெபான்டோ[2] என்னுமிடத்தில் துருக்கியக் கடற்படையைச் சிதற அடித்தார். அதன் பின், துருக்கியக் கடலாதிக்கம் மீண்டும் தலையெடுக்க முடியாமற் போயிற்று. 1580-ல் நிகழ்ந்த அவ்வெற்றி எல்லாவற்றிற்கும் மேலானதாகும். போர்ச்சுகல் மன்னர் இறந்த பின்பு இரண்டாம் பிலிப்பு, போர்ச்சுகல் முடியரசிற்கு உரிமை கொண்டாடி, வெற்றி பெற்றுத் தீபகற்பம் (ஐபீரியா) முழுமைக்கும் மன்னரானர்; அதனுடன் அமெரிக்கா இந்தியா போன்ற நாடுகளில் போர்ச்சுகீசியருக்குச் சொந்தமாயிருந்த பகுதிகளைத் தமது ஆட்சியில் சேர்த்துக்கொண்டார். ஸ்பெயினின் புகழ், போரோடும் வெற்றியோடும் நின்றுவிடவில்லை. அக்காலத்தில் ஸ்பெயின், இலக்கியத்திலும் கலையிலும் சிறந்து விளங்கியது. 'டான் குவிக்ஸோட்டு'[3] என்னும் அரிய நூலை 1605-ல் சர்வான்டிஸ்[4] என்பவர் எழுதினர். அவர் லெபான்டோ கடற்போரில் கலந்து கொண்டவர். அவரது நூல் ஐரோப்பிய இலக்கிய படைப்புக்களுள் தலைசிறந்தனவாகக் கருதப்படுபவைகளுள் ஒன்றாகும். புதுமையூட்டுகிற ஸ்பெயின் நாட்டு நாடகாசிரியரான கால்டிரோன்[5] (1601—1687) என்பவரின் நாடகம், இங்கிலாந்து, பிரான்சு நாடுகளில் தலைசிறந்த நாடக வரிசையில் ஒன்றாய் இடம் பெற்றுள்ளது. ஸ்பெயினில் இலக்கியத்தைப் போன்று, ஓவியக்கலையும் சிறப்புற்றோங்கியது. ஸ்பெயின் நாட்டுக் கலைஞர்களுள் மிகச் சிறந்தவரும் அடுத்த நூற்றுண்டைச் சேர்ந்தவருமான விலாஸ்குவேயின்[6] ஓவியப் படைப்புக்களும் சிறப்புற்று விளங்கின.

## நெதர்லாந்தின் கலகம்

ஆனல், இரண்டாம் பிலிப்பின் ஆட்சிக் காலத்தில், ஸ்பெயினுக்குப் பேரிடியாயிருந்த நெதர்லாந்தின் கலகத்தை நாம் காண்போம். அக்கலகத்தால் ஸ்பெயின் தனது வலிமையை இழந்ததோடு ஐரோப்பாவில் ஒரு புதிய அரசினையும் தோற்றுவித்தது. அது சுயேச்சையுடையதாயும், வளர்ச்சியுடையதாயும், பிராட்டஸ்டென்டு சமயத்தைப்

[1] Don John. [2] Lepanto. [3] Don Quixote. [4] Cervantes.
[5] Calderon. [6] Velasquez.

பின்பற்றியதாயுமிருந்தது; மேலும், ஒரு நூற்றுண்டுக்காலம், உரிமைக்கும் உணர்வு ஒளி பெறுவதற்குமான நிகழ்ச்சிகளுள் எல்லாம் தலைமை பூண்டு செயலாற்றியது.

## நெதர்லாந்தின் நிலைமை

நெதர்லாந்து பர்கண்டி நாட்டுச் சார்லசின் வாரிசு என்ற முறையில் இரண்டாம் பிலிப்பின் ஆட்சியின்கீழ் வந்தது. இது பதினேழு தனித்தனி சிற்றரசுகளால் ஆனது. ஒவ்வொரு சிற்றரசும் தனித்தனி அரசியல் அமைப்பை உடையதாய் இருந்தது. ஐந்தாம் சார்லசு அந்நாடுகளை ஒருமைப்படுத்திப் பொது ஆட்சி முறையை ஏற்படுத்த ஓர் அளவு வெற்றியுடன் முயன்றும் அவற்றுக்குள் எவ்வித ஒற்றுமையும் ஏற்படவில்லை; பெயரளவில் பேரரசுடன் சேர்ந்திருந்தன. சுவிட்சர்லாந்து நாடுகளின் இணைவுபோன்று ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் இருந்த மிகவும் தொடர்பு வலிமையற்றதாயிருந்தது. வாணிகத்திலும், ஆலைத் தொழிலிலும் முதன்மையாகித் தேன் கூட்டைப் போன்று சுறுசுறுப்புடன் அவற்றின் நகரங்களும் துறை முகங்களும் காணப்பட்டன. அவற்றுள் முக்கியமானவை ஆண்ட்வெர்ப்பு,[1] கென்டு,[2] புருஜஸ்,[3] ஆம்ஸ்டர்டாம்,[4] என்பனவாம். இண்டீஸ் பகுதிகளிலிருந்து கிடைத்த வருமானத்தைவிட அதிக வருமானத்தை ஸ்பெயின் மன்னர் அந்நாட்டிலிருந்து பெற்றுர். அந்நாட்டினர்களைக் கட்டுப்படுத்தி ஆட்சி புரிவது எளிதன்று. ஆட்சி புரிவதில் ஐந்தாம் சார்லசிற்குப் பிறகு பல கடுந்தொல்லைகள் ஏற்பட்டன. ஆனுல், பெரும்பாலும் அவ்வரசுகள் மன்னரிடம் பற்றுறுதி கொண்டிருந்தன.

## இரண்டாம் பிலிப்பின் இயல்பு

தந்தையாரிடத்தில் காணப்பட்ட பட்டறிவும், பொது நோக்கும் இரண்டாம் பிலிப்பினிடம் இல்லை. அவர்தம் வாழ்நாள் முழுவதும் ஸ்பெயினிலேயே வசித்தார்; தலைநகரான மாட்ரிடிலிருந்து உலக முழுவதும் பரவியிருந்த பேரரசின் அலுவல்களை அளவற்ற கடிதப் போக்குவரத்து மூலம் ஆற்றி வந்தார்; சலியா உழைப்பு, பொறுமை, கடமையுணர்ச்சி முதலியவைகளோடு சமயத்திலும் உண்மையானதும் ஆழமானதுமான ஈடுபாடுடையவராயிருந்தார். ஆனுல், ஐரோப்பாவின் ஆண்டுக் குறிப்பு வரலாறுகளில்[5] அவர் காலத்திலிருந்தவர்களாலும் பிற்காலத்திலிருந்தவர்களாலும் அவர் வெறுக்கப்பட்டது போல வேறு எவரும் வெறுக்கப்பட்டிலர். இதற்குக் காரணம், சுயேச்சையாக வளர்ச்சியுற முயன்ற எல்லாச் செயல் நோக்கங்களுக்கும் அவர்

[1]Antwerp. [2]Ghent. [3]Bruges. [4]Amsterdam. [5]Annals of Europe,

தடையாயிருந்ததுடன் அவற்றைக் கடுமையாகவும் நெறிமுறை தவறியும் அடக்கியதேயாகும்.

## நெதர்லாந்தைப் பற்றிய கொள்கை

நெதர்லாந்தைப் பற்றிய அவரது கொள்கை வெளிப்படையாயிருந்தது; மேலும், அக்காலப் போக்கிற்கு ஒட்டியதாயும் அமைந்திருந்தது. அவர் ஒரே முடியின்கீழ் நெதர்லாந்திலிருந்த பதினேழு சிற்றரசுகளுக்குமிடையே உண்மையான ஒற்றுமையை ஏற்படுத்த விரும்பினார்; அச்சிற்றரசுகளின் தனிப்பட்ட வட்டார உரிமைகளை ஒழித்து, ஸ்பெயினில் ஆட்சி செய்தது போல நெதர்லாந்திலும் ஆட்சி செய்ய விரும்பினார். இங்கிலாந்திலும், பிரான்சிலும் முறையே ஆட்சி செய்த இராணி எலிசபெத்து, நான்காம் ஹென்றி ஆகியோரைப் போல அவரும் ஆட்சி புரிய விரும்பினார்; அக்காலத்தில், பலர் நம்பியதைப் போன்று, சமய ஒற்றுமையில்லாமல் அரசியல் ஒற்றுமை ஏற்படுத்த முடியாதென்றும் எண்ணினார்; எனவே, கொள்கை சமயம் இவை காரணமாக வடபாகத்திலுள்ள நாடுகளில் ஆழமாக வேரூன்றியிருந்த பிராட்டஸ்டென்டு இயக்கத்தை நசுக்க உறுதி பூண்டார்.

## போரின் தொடக்கம்

### ஆல்வாக் கோமகனார் அனுப்பப்படுதல்

அச்சிற்றரசுகளோடு ஏற்பட்ட போர், பிலிப்புப் பட்டத்திற்கு வந்தது முதல் தொடங்கியது. மக்கள், நாட்டிலுள்ள பிரபுக்களுள் ஒருவரை ஆட்சிப் பிரதிநிதியாக[1] நியமிப்பாரென, எண்ணினார்கள். ஆரஞ்சு நாட்டு இளவரசரான வில்லியத்தையும், எக்மண்டு கோமனாரையும் பொது மக்கள் நியமனத்திற்கெனக் குறிப்பிட்டார்கள். வில்லியம், ஜெர்மன் இனத்தில் தோன்றியவர். அவர் பதவி பிரான்சு நாட்டிலுள்ள சிறு நகரத்தின் பெயரால் ஏற்பட்டது. நெதர்லாந்தில் ஏராளமான சொத்துக்கள் அவருக்கிருந்ததால், அந்நாட்டு மக்களுள் ஒருவராகவே தம்மையும் கருதினார். ஆனால், பிலிப்போ, அவர்களை ஒதுக்கிவிட்டு, அவர்தம் மாற்றாந்தாயின் புதல்வியும் பார்மாவைச் சேர்ந்தவருமான மார்கரெட்டு என்பாரைப்[2] பகர ஆட்சியாளராக நியமித்தார். அவர் ஸ்பெயின் மன்ற உறுப்பினரின் அறிவுரையை நம்பியிருந்தார். ஆயினும், சமயத்துறையில் பூசலேற்பட்டது. அடக்கு முறைகளை இடைவிடாது பின்பற்றுவதன் மூலம் பிராட்டஸ்டென்டு சமயத்தை அடக்கிப் புதிய மேற்றிராணியார்களின் ஆட்சியை ஏற்படுத்த விரும்பினார். நாடுகள் தங்கள் உரிமைகளை வலியக்

[1] Regent. [2] Margaret of Parma.

கைப்பற்றுவதாக எண்ணிப் பேச்சு வார்த்தை நடத்தியும் முடிவு ஏற்படவில்லை. பிலிப்பு இச்சிக்கலைக் கத்தி முனையால் நீக்க உறுதி பூண்டு, 1567-ல் ஆல்வாக் கோமகனின்[1] தலைமையில் எல்லா வசதிகளும் பொருந்திய ஒரு பெரிய படையை அனுப்பினர்; படைகள் நெதர்லாந்தை அடைந்ததும் கடுமையாகத் தாக்க ஆரம்பித்தன. எக்மண்டு கோமகனர்[2] தவிர்க்க முடியாத கொலைக்கு ஆளானர். ஆரஞ்சு நாட்டு வில்லியம் தற்பாதுகாப்பிற்காக ஓட்டமெடுத்தார்; மன்பகை சமய மறுப்பு எனும் இணக்கமான குற்றங்களைச் சுருக்கமாக விசாரித்து விரைவான தண்டனை விதிக்க ஒரு மன்றத்தினை ஏற்படுத்தினர். அம் மன்றத்தை நெதர்லாந்து மக்கள் 'குருதி மன்றம்'[3] என வழங்கினர். வெளிப்படையாகத் தோன்றிய கிளர்ச்சிக்கான முயற்சிகளெல்லாம் தோல்வியுற்றன. 1569-ல் நாடனைத்தும் ஆல்வாக் கோமகனின் ஆதிகாரத்தின் கீழ் இருந்ததாகத் தோன்றிய போதிலும், மூன்று ஆண்டுகளுக்குப் பின் நாட்டில் அச்சுறுத்தும் ஒரு கிளர்ச்சி உண்டாயிற்று. அதை ஸ்பெயினல் ஒரு பொழுதும் அடக்க முடியவில்லை.

## 1572-ல் கலகம்

### அமைதியாளர் வில்லியத்தின் தலைமை

அப்புதிய இயக்கத்திற்கு அறியாமையும், துன்புறுத்தலும் கொண்ட ஆல்வாவின் நிதிக்கொள்கை முக்கிய காரணமாயிருந்தது. அவர் மக்கள் மீது வரிகளைச் சுமத்தினர். வரிப்பளுவைக் காட்டிலும் வரி வசூல் முறை நெதர்லாந்தின் வாணிகத்தை அழித்துவிடும் போன்றிருந்தது. ஆனல், 1572-ல் சிறிது காலம் வரி விதிப்பு நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. இந்நிலையில் வெளி நாட்டு உதவியை எதிர் பார்த்தலினல் ஊக்குவிக்கப்பட்ட மக்கள், தங்கள் உயிர் முதலிய எல்லாவற்றையும் வெறுத்துக் கலகம் செய்தார்கள். எலிசபெத்து இராணியார், அவர்களிடத்தில் நேசம் கொண்டிருந்தார். பிரான்சின் வட எல்லையில் ஸ்பெயின் பெற்ற வெற்றி காரணமாகப் பிரான்சு பெரும் பொருமை கொண்டிருந்தது. 1572-ல் ஏப்பிரல் மாதத்தில் 'கடற்பிச்சைக்காரர்கள்'[4] எனப்படுவோர் சீலந்து[5] மாநிலத்தில் பிரில்,[6] ஃபிளஷிங்[7] என்னும் பகுதிகளைக் கைப்பற்றினர். அக்கடற்பிச்சைக்காரர்கள் ஆல்வாவின் செயலால் நாட்டிலிருந்து விரட்டப்பட்டவர்கள். அவர்களிடம் நாட்டுப் பற்று ஒரு பகுதியும் கடற் கொள்ளையிடுவது மற்றொரு பகுதியுமாய்க் காணப்பட்டன. அவற்றோடு சீலந்து, ஹாலந்து மாநிலங்கள் ஆல்வாவுக் கெதிராகப் போர் முரசு கொட்டின.

[1] Duke of Alva. [2] Duke of Egmont. [3] Council of Blood.
[4] Sea beggars. [5] Zeeland. [6] Brill. [7] Flushing.

அமைதியாளர் வில்லியம்[1] என்று வழங்கப்பட்ட ஆரஞ்சு நாட்டு வில்லியத்திற்கு ஆட்சியைக் கைக்கொள்ள அழைப்பாணை விடுத்தனர். இவ்வாறு உண்மையான சுதந்தரப் போர் மூண்டது. அப் போர் நாற்பது ஆண்டுகள் நடைபெற்றது. அதில் ஸ்பெயின் போர்ப் படைகளும், கடற் படைகளும், ஏராளமான பணமும் ஆழங்காணு நீர்ச் சுழியில் கொட்டினுற்போல அழிவுற்றன. நெதர்லாந்தை அடிமைப்படுத்துவதற்காக மேற்கொண்ட நெடிய, பயனற்ற முயற்சி, ஸ்பெயினின் அழிவிற்குப் பெரிதும் காரணமாயிற்று.

## போரின் இயல்புகள்

அடுத்த அதிகாரத்தில் புனித பார்த்தலோமியா[2] நாட்படுகொலை எவ்வாறு பிரெஞ்சு உதவியைப் பெறும் எண்ணத்தைக் குலைத்தது என்பதைக் காண்போம். பிரான்சின் வடபாகத்திலிருந்த மாகாணங்கள் வெற்றி கிட்டும் வரை, மிக்க முயற்சியுடன் தாமாகவே போரிட்டன. அப்போர் வியப்பூட்டுவதாய் இருந்தது. ஸ்பெயின் தோல்விக்கான காரணங்கள் நன்கு புலப்பட்டன. பல தொழில் துணிவுகளில் முனைந்திருந்ததன் பயனுகக் கவனத்தை நாலா பக்கங்களிலும் செலுத்த வேண்டியதாயிற்று. போதிய நிதி வசதியின்மையால், துன்பப்பட நேர்ந்தது. இந்நிலை, முடிவில் ஸ்பெயினுக்குப் பணமுடையைத் தோற்றுவித்தது. அன்றியும், நெதர்லாந்தின் கடல் வன்மையை அழிக்க உண்மையான முயற்சியும் செய்யப்படவில்லை. கடலாதிக்கம் நெதர்லாந்தினருக்கு உரியதாய் இருந்தமையின். அவர்களது ஆதிக்கப் பரவலை மிகுதியாக ஒடுக்க முடியவில்லை. ஆனுல், திறந்த வெளியில் ஸ்பெயினை எதிர்த்துப் போரிடுவதில் அவர்களுக்கு நெதர்லாந்தினர் ஈடாகார். எனவே, நகரக் கோட்டைச் சுவர்களுக்குள் இருந்து கொண்டே விடாமுயற்சியுடன் போரிட்டனர். நிலைமை மோசமாயிருந்த சமயங்களில் எதிரிகளை விரட்டுவதற்காகக் கோட்டைக்கு வெளியிலிருந்த அணைகளை உடைத்துக் கடல் நீரை உள்ளே புகவிட்டு வெள்ளக்காடாக்கினர். அமைதியாளரான வில்லியம் செய்த பெரும் பணிகளையும் நாம் இங்குக் கருத வேண்டும். சிறந்த போர் வீரரல்லராயினும், அசைக்க முடியாத நெஞ்சுரத்தை நாட்டு மக்களுக்கு அவர் ஊட்டினுர். பொறுமை சேர்ந்த அரசியல் தந்திரமும், அமைதியான மனநிலையும், கலகத்தில் கூச்சலிடும் சத்திகளை ஒன்று சேர்த்துக் கூட்டாயிருக்கும்படி செய்ய உதவின. ஹாலந்து, வில்லியத்திற்குக் கடமைப்பட்டிருந்ததைப் போல எந்நாடும் அந்நாட்டு மன்னருக்குக் கடமைப்பட்டிராது.

[1] William the Silent, [2] Saint Batholomew's Day.

## ஸ்பெயின் சீற்றம்

கென்டின் அமைதியாக்கம்

1573 - ல் ஆல்வாக் கோமகனூர் நாட்டை விட்டு வெளியேறினர். அவருக்குப் பின் வந்தவரும் டச்சுக்காரர்களுடன் போரிட்டு வெற்றி பெற்றார். சண்டைக்கு முடிவு இல்லாதது போலத் தோன்றிற்று. 1576 - ல் வில்லியத்திற்கு அவர் பெற வேண்டியதென விதிக்கப் பட்டிருந்ததைப் பார்க்கிலும் அதிகமான மிகப்பெரிய வெற்றி கிட்டு வதற்கான நிகழ்ச்சி ஒன்று நேர்ந்தது. ஸ்பெயினின் மாநில ஆளுநர் திடீரென்று இறக்கவே, நெடுநாள் ஊதியம் வழங்கப் பெறாதிருந்த ஸ்பானியப் போர் வீரர்கள் கலகம் செய்தார்கள்; தங்களுக்குள்ளேயே தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு நாட்டைக் கொள்ளையடிக்கவும் அழிக்கவும் தலைப்பட்டார்கள். ஸ்பெயின் மக்களுக்கு எதிர்ப்பு இதுவரை வடக்கிலிருந்த நாடுகளிருந்துதான் ஏற்பட்டு வந்தது. இது தெற்கி லிருந்து தோன்றியதைக்காட்டிலும் மாறுபாடுடையது. வடநாட்டினர் மிக்க பற்றுடையவராயும், பிராட்டஸ்டென்டு சமயத்தினராயும், ஜெர்மன் மொழியைச் சார்ந்த மொழிப்பிரிவைப் பேசுபவராயும் இருந்தனர். தெற்கிலுள்ளவர்களில், பாதியளவினர் பிரெஞ்சு மொழியைப் பேசு பவராவர். இவ்வாறிருந்தும், ஸ்பெயின் நாட்டுக் கலகக்காரர்களின் கொடுமை என்னும் இடர், இவ்விருபகுதிகளையும் ஒன்றாக இணைத்தது. 1576 - ல் வில்லியம், கென்டு என்னுமிடத்தில் சமாதானத்தை ஏற் படுத்த முயன்றார். இதன் விளைவாகப் பதினேழு மாகாணங்களும் ஸ்பெயின் நாட்டினரை நெதர்லாந்திலிருந்து விரட்டுவதற்காக ஒன்று சேர்ந்தன; அதனுடன் பொதுவான தேசீய அரசாங்கத்தை நிறுவவும் முடிவு செய்தன; சமய விவகாரங்கள் சம்பந்தமாக நாடுகளுக்குள் சகிப்புத் தன்மையைப் பின்பற்றுவதாக உறுதி செய்தன.

## உட்ரெக்டு ஒன்றிப்பு

இப்புதிய இயக்கம் மிக்க வலிமையுற்றிருந்ததால், சிறிது காலம் ஸ்பெயின் இதற்கு இணங்க நேர்ந்தது. இவ்வொற்றுமை நிலைபெற் றிருந்திருக்குமானால், ஐரோப்பிய நாகரிகத்திற்கு அளப்பரிய நன்மையை அளித்திருக்கும். ஆனால், அவ்வாறு நிகழவில்லை. சமய வெறி, சமாதானத்தினால் அடக்க முடியாத அளவு மிக்க வலுவுள்ளதா யிருந்தது. சகிப்புத் தன்மை இல்லாதிருந்த கத்தோலிக்கர்களுக்குப் பிராட்டஸ்டென்டுகள் சிறிதும் சளைக்கவில்லை. இயேசு சங்கத்தாரின் பிரசாரங்களிலிருந்து புதிய சக்திகளைக் கத்தோலிக்கச் சமயம் பெற்றது. புதிதாக ஏற்பட்ட அரசாங்கம் வெற்றி பெற்றிருக்குமானால், ஒரு வேளை நிலை பெற்றிருக்கக் கூடும். ஆனால், நாட்டுப்பற்றுக் கொண்டிருந்த

அப்போர் வீரர்கள், 1578-ல் கெம்ப்லோர்ஸ்[1] என்னுமிடத்தில் ஆஸ்திரியாவைச் சேர்ந்த டான்ஜான் என்பவரால் தோற்கடிக்கப் பட்டார்கள். சின்னாள்களில் இச் சங்கம் உருவிழந்தது. வடக்கிலிருந்த பிராட்டஸ்டென்டு நாடுகளின் துணையை மாத்திரம் வில்லியம் வருத்தத்துடன் பெறலானார். 1579-ல் இந்நாடுகள் ஒன்று சேர்ந்து உட்ரெக்டு ஒன்றிப்பு[2] நாடுகள் என்னும் தளர்ச்சியான ஒரு கூட்டாட்சியை அமைத்து, ஸ்பெயினுடன் தொடர்ந்து போரிட்டன. தெற்கிலிருந்த நாடுகள் ஸ்பெயினிடமிருந்து சில சலுகைகளைப் பெற்று அதன் நேச நாடுகளாயின.

## நாடுகள் பிலிப்பை ஆணையிட்டு மறுத்தல்

கலக நாடுகளின் குறிக்கோள் நம்பிக்கையூட்டுவதாகத் தோன்றவில்லை எனினும், போரை மிகத் தீவிரமாக அந் நாட்டினர் நடத்தினர். கலகம் விளைவித்த நாடுகளை வெல்லும் முயற்சி தோல்வியுற வில்லியமே காரணமாய் இருந்தார் என்று கருதி, 1580-ல் பிலிப்பு அவரை 'மனித இனப் பகைவர்' என்று அறிவித்துத் தடையாணை பிறப்பித்தார்; அதனுடன் அவரை விரைவாக உயிருடனோ, அன்றிக் கொன்றோ பிடித்துக் கொடுப்பவர்களுக்குப் பெரிய பரிசு அளிப்பதாகவும் கூறினர். அதுவரையில் பிலிப்பிடம் நாடுகள் அரசப் பற்றுடன் இருப்பதாகப் பாசாங்கு செய்து வந்தன. அப்பொழுது அவை அவரைத் தங்கள் அரசரல்லர் என்று முறைப்படி ஆணையிட்டு மறுத்தன; "மன்னர், மந்தையைக் காக்கும் இடையரைப் போல, மக்களைக் காப்பதற்கு மாறாகக் கசக்கிப் பிழிந்து அடிமைகள் போல நடத்தியதால், நாட்டின் மக்கட் பிரிவினர் அவரைச் சட்டப்படி தள்ளிவிட்டு வேறொருவரைக் கொள்ளலாம்," என வெளிப்படையாகக் கூறின. இக் கொள்கையறிவிப்புச் சிறந்த கூற்றாயமைந்தது. பிற்காலத்தில் இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்சு ஆகிய நாடுகளின் புரட்சிகளில் இக் கூற்று எதிரொலித்தது.

## ஆஞ்சோக் கோமகனார்

### பார்மாவின் வெற்றிகள்

வில்லியம் வெளிநாட்டு உதவியைப் பெறும்பொருட்டு விருப்பத்துடன் ஏற்பாடுகளைச் செய்தார். ஆட்சிபுரிந்த பிரெஞ்சு மன்னரின் உடன் பிறந்தாரான ஆஞ்சோக் கோமகனார் இவருடன் நட்புக் கொண்டு நாடுகளின் காப்பாளராக இருக்க இசைந்தார். ஆனால், அவரது செயலில் நேர்மையில்லை; நாட்டின் வரம்பிலா இறைமையைப் பெற

[1] Gemblours. [2] Union of Utrect.

நோக்கங் கொண்டிருந்தார்; தமக்கு அளிக்கப்பட்டதும் வரையறுக்கப பட்டதுமான அதிகாரத்தைக் கண்டு மன நிறைவின்றியிருந்தார்; ஆன்ட் வெர்ப்பு நகரத்தைக் கைப்பற்றுவதற்கு அற்பத்தனமாக முயன்ருர்; தோல்வி கண்டு, பிரான்சை நோக்கிப் பின் வாங்கி, அதன் பின் சிறிது காலத்தில் இறந்து போனர். இங்கிலாந்து அவருடன் நட்புக் கொண்டிருந்தது. ஆங்கிலேயர் டச்சுப் படைகளில் தாமே விருப்பத்துடன் ஊழியராய்ச் சேர்ந்தனர். ஆனல், வில்லியம் இருந்த வரையில் அந் நாட்டிலிருந்து வெளிப்படையாக உதவி அவருக்குக் கிட்டவில்லை. பிறகு, வில்லியத்தின் பேருதவி அவர் கீழிருந்த நாடுகளுக்குக் கிட்டாமல் போயிற்று, பிலிப்பு அளிக்கவிருந்த பரிசை எண்ணிப் பல கொலையாளிகள் வில்லியத்தின் உயிரைக் கவரக் காத்திருந்தனர். 1582-ல் வில்லியம் உயிருக்கு இடர் விளைவிக்குமளவு காயமுற்ருர்; 1584-ல் 'டெல்ஃப்ட்'[1] என்னுமிடத்தில் கொலையுண்டார். அவர் தம்முடைய பொறுமை, நெஞ்சுரம், அரசியல் திறம், மக்கட்பண்பு, சுயநலமற்ற நாட்டுப்பற்று முதலியவைகளால் அக்காலத்தில் தலை சிறந்த முதல் அரசியல்வாதியாய் விளங்கினர். நவீன ஹாலந்து அவரால் உருவாக்கப்பட்டது. சமயச் சகிப்பின் அடிப்படையில் ஓர் அரசை நிறுவுவதற்கு முயன்ற முதல் ஐரோப்பிய அரசியல் வல்லுநரா யிருந்தவர் அவரேயாவர். அவரது மரணத்தினல் நெதர்லாந்தின் நோக்கம் அழிந்துவிடும் போலத் தோன்றியது. ஸ்பெயின் நாட்டுத் தலைசிறந்த போர் வீரரான பார்மா என்பார், ஆன்ட்வெர்ப்பைப் பிடித்தார். பிராட்டஸ்டென்டு நாடுகளின் கூட்டுறவு, போரிடருக்குட்பட்டு இருந்தது. எலிசபெத்து அரசியார் வளமற்ற ஒரு படையை லீஸ்டர் பிரபுவின் தலைமையில் அனுப்பிச் சிறிது உதவியளித்தார். ஆனல், ஐரோப்பாவின் நிலைமையில் உண்டான மாறுதல் திறமையான உதவியை அளித்தது. அதுவரையில் எங்கும் ஏற்பட்டிராத அளவிற்கு ஸ்பெயின் நாட்டுக் கப்பறபடை[2] ஆங்கிலேயரிடம் 1588-ல் தோல்வி யுற்றதால், ஸ்பெயினின் பெருமை குலைக்கப்பட்டது. இதையடுத்து ஸ்பெயினின் கடும்பகைவராயும் பிராட்டஸ்டென்டாயும் இருந்த நவாரே என்னும் நிலப்பகுதியைச் சேர்ந்த ஹென்றி என்பவர் பிரான்சின் முடியினைப் பெற்ருர். இங்கிலாந்து, ஹாலந்து, பிரான்சு இம் மூன்றும் ஸ்பெயினுக்கு எதிராகக் கூட்டுச் சேர்ந்தன. இதனல், ஸ்பெயினுக்கு வெற்றி பெறும் எதிர்கால வாய்ப்பு அடியோடு மறைந்தது. அமைதியாளரான வில்லியத்தின் புதல்வரான மாரிசு, தம் தந்தையாரைவிட மிக்க இராணுவத் திறமையுடன் டச்சுப் படைகளை நடத்தினர்.

[1] Delft, [2] The Spanish Armada,

## ஸ்பெயின் மக்கள் தோல்வியை ஒப்புக் கொள்ளுதல்

1597-ல் இறுதியாக டர்ன்ஹூட்டு[1] என்னும் திறந்த வெளியில் டச்சுப்படை, ஸ்பெயின் படையைத் தோற்கடித்தது. எனினும், இரு நாடுகளுக்குமிடையே நடந்த போர், மேலும் பல ஆண்டுகள் நீடித்தது, இரு கட்சிகளுக்கும் மிகுந்த சோர்வை உண்டாக்கியது. போர் நிகழ்ந்துகொண்டிருந்துங்கூட டச்சுக்காரர்கள் வாணிகத்தைப் பெருக்கி, அதில் முன்னேறவும், ஸ்பானியர் இழப்பீடின்றியும், இடருதவியின்றியும் துன்புற்றனர். இறுதியில், 1609-ல் பன்னிரண்டு ஆண்டுகட்கான தாற்காலிக உடன்பாடு கையெழுத்தாயிற்று.

இது உண்மையில் இறுதியாய் அமைந்தது. அடுத்த நூற்றாண்டில் ஐரோப்பாவில் வீரப்போரின் பயனாக அளப்பரிய மதிப்புடைய அரசாங்கம் ஏற்பட்டது. உழவுத் தொழிலும் கப்பல் கட்டுந்தொழிலும் டச்சுக்காரர்களின் கீழ் மிகவும் செழிப்புற்றன. குரோஷியஸின்[2] இலக்கியங்கள் சர்வதேச சட்டம் உருவாவதை ஊக்குவித்தன. லீடன் பல்கலைக் கழகம், இயற்கை, விஞ்ஞான வளர்ச்சிக்கு நடுநாயகமாய் இருந்தது. இலக்கியத்தில் டச்சுக்காரர்கள் உயர்தகுதியுள்ள காப்பியங்களை அளிக்காவிட்டாலும், ஓவியக் கலையில் அதற்கு முன் காணப்படாத பிறிதின் சார்பற்ற புதிய முறையில் ஊக்கமளித்தனர். ஹாலந்து, பிராட்டஸ்டென்டு சமயக் கொள்கையைப் பின்பற்றியதால், கிறித்துவின் வாழ்க்கையிலிருந்தும், கிறித்துவ அடியார்களின் கதைகளிலிருந்தும், காட்சிகளைத் தீட்டுவதற்கு டச்சு ஓவியர்களை அனுமதிக்கவில்லை. பெரும்போரின் விளைவாக ஸ்பெயினின் தளையிலிருந்து விடுபட்ட நாட்டை, அளவு கடந்த நேசத்துடன் நோக்கினர். சம நிலமாயிருந்த நாட்டின் கவர்ச்சியற்ற காட்சிகளை, அவர்களுடைய தூரிகையின் மாயத்தால் புகழ்பெற்ற இயற்கைக் காட்சிகளாகத் தீட்டினார்கள். சாதாரண மனிதனின் பொது வாழ்வில் காணப்படும் சாரமற்ற நிகழ்ச்சிகளையும் ரஃபேல்[3] அல்லது டிடியனின்[4] முழுமையான கலைத்திறத்தால் மிகச் சிறந்தவையாக்க முடியுமென்று உலகிற்கு எடுத்தியம்பினர். இயற்கைக் காட்சிகள், உருவப்படங்கள், பொது வாழ்வுக் காட்சிகள் ஆகியவைகளைத் தீட்டுவதில் புகழ் பெற்ற டச்சுக் கலைஞர்களான ரெம்பிரான்டு,[5] ஹால்ஸ்,[6] தினீயர்ஸ்,[7] கெரார்டுடௌ[8] என்பவர் ஒப்பாரும் மிக்காருமில்லாராய்க் கருதப்பெற்றனர்.

[1] Turnhout. [2] Grotius. [3] Raphael. [4] Titian. [5] Rambrandt. [6] Hals. [7] Teniers. [8] Gerard Dou.

## புதிய அரசின் தொல்லைகள்

மாரிசு இளவரசர்

ஆனால், வெளிநாட்டு இடர் நீங்கிய போதிலும் இப்புதிய அரசாங்கத்திற்கு உள்நாட்டுத் தொல்லைகள் இருந்தன. உட்ரெக்டு ஒன்றிப்பு அரசியல் சட்டத்திற்கான அடிப்படையை வகுத்தது. இக் காலத்திலுள்ள கூட்டாட்சி அரசாங்கத்திற்கு இது முதல் எடுத்துக் காட்டாய் இருந்ததென்பது நோக்கத்தக்கது. இவ்வொன்றிப்புச் செயற்படுவதில் பெருந்தொல்லையை அடைந்தது. டச்சு அரசாங்கம் அல்லது டச்சு நாட்டு இனம் என்பது ஒன்றுமில்லை ஏழு மாகாணங் களும் தனித்தனியே முழுச் சுயேச்சையைக் கொண்டாடின. எல்லா மாகாணங்களும் ஒரு மனமாய் இருந்தால்தான், நடுவரசு செயலாற்ற முடியும். ஆனால், இரு கட்சிகள் வளரத் தொடங்கின. ஒரு புறம், மாரிசு இளவரசரின் கீழ் அமைந்த ஆரஞ்சுக் கட்சி, ஆரஞ்சுக் குடும்பத் தலைமையின் கீழ் எல்லா மாகாணங்களையும் உண்மையான ஒற்றுமையடையச் செய்ய விரும்பியது. மன்னர் என்ற பதவி இல்லாமற்போனாலும், அவருக்குள்ள அதிகாரத்தைப் பெறுவதற்கு மாரிசு[1] விருப்பங்கொண்டார். மற்றொரு புறத்தில் ஓல்டன் - பார்னி வெல்ட்[2] என்பாரின் தலைமையின்கீழ், குடியரசாட்சியை உள்ளதுள்ள வாறே நிலைநிறுத்த இரண்டாம் கட்சி முனைந்திருந்தது; அதனுடன் ஆரஞ்சுக் குடும்பத்தினரின் பேரவாக்களைத் தடை செய்யவும் முற் பட்டது. பிராட்டஸ்டென்டு சமயத்துறையில் கடுமையான கருத்து மாறு பாடு, இந்நிலைமையை மேலும் சிக்கலாக்கியது மிகுந்த கட்டுப்பாடு களோடு இருந்த கால்வினியர்கள் கோமாரிஸ்[3] என்பாரின் தலைமையின் கீழ் மிகத் தாராளமாய் இருந்த அர்மீனியஸ்[4] கொள்கையினரை நேருக்கு நேர் பொருதவேண்டியிருந்தது. மாரிசு, கோமாரிஸின் கட்சியில் சேர்ந்துகொண்டார். அவர்களுடைய பகைவர்களின் கருத் துக்கள், டார்ட்டு என்னுமிடத்தில் (1619) கூடிய திருக்கூட்டத்தில்[5] கண்டனம் செய்யப்பட்டன. அக்கொள்கைகளில் தீவிரமாயிருந்த வர்கள் பதவி நீக்கமடைந்தும், நாடு கடத்தப்பட்டும் தண்டனைக்குள் ளானார்கள். இது, மாரிசுக்கு மிகப் பெரிய வெற்றியாகும். அவருக்குப் பகைவரான ஓல்டன் - பார்னிவெல்டு அருவருக்கத்தக்க விசாரணையின் முடிவில் கொலைத்தண்டனையடைந்தமை, இவ்வெற்றியின் சிகரமாகும்.

## ஆரஞ்சுக் குடும்பத்தின் தோல்வி

மூன்றாம் வில்லியம்

குடியரசுக் கட்சி எவ்விதத்திலும் அழிக்கப்படவில்லை. மாரிசு 1625-ல் விண்ணுலகெய்தினார். ஆனால், அவர் வழித்தோன்றல்களான

[1] Maurice. [2] Olden-barneveldt. [3] Gomaris. [4] Arminius. [5] Synod of Dort

பிரடெரிக்கு ஹென்றியும், இரண்டாம் வில்லியமும் சண்டையைத் தொடர்ந்து நடத்தினர். இரண்டாம் வில்லியம் 1650-ல் இறந்த போது, அவருக்கு ஒரு சிறு குழந்தையைத் தவிர வேறு வழித் தோன்றலில்லை. இக்குழந்தையே பிற்காலத்தில் இங்கிலாந்தில் ஆட்சி புரிந்த மூன்றாம் வில்லியம். குடியரசுத் தலைவரான ஜான் டி விட்டு[1] என்பார் ஆரஞ்சுக் குடும்பப் பேரவாக்களைக் தகர்க்க இறுதித் தாக்குதலை நிகழ்த்தினார். இளைஞரான இளவரசர் ஹாலந்து மாநில ஆளுநர் பதவியினின்றும் இராணுவக் கடற்படைத் தலைமையினின்றும் விலக்கப்பட்டார். ஏழு சிற்றரசுகளில், ஹாலந்து மிகுதியான செல்வம் படைத்ததாயும் வலிமை பொருந்தியதாயும் இருந்ததோடு மற்றெல்லா அரசுகளின் செல்வாக்கிற்கும் சமமாயுமிருந்தது. ஆயினும், நெதர் லாந்தின் விதி ஆரஞ்சுக் குடும்பத்துடன் நெருக்கமாய் இணைக்கப் படும்படி இருந்தது. இளைஞரான இளவரசர் நெதர்லாந்தை ஆட்சி புரிபவராயும், கிரேட் பிரிட்டனில் மன்னராயும், தம் மூதாதையாரான அமைதியாளர் வில்லியத்தைப் போல ஐரோப்பாவின் ஊழ்த்திறன்களை உறுதி செய்பவராயும் இருந்தார். ஆரஞ்சுக் கட்சியினர் எல்லோரும் இராணுவக் கட்சியினராய் இருந்ததோடு, அண்டைய ஐரோப் பியர்களைக் குறித்து விழிப்பான நோக்கத்துடன் பெரிய படையை வைத்துக் கொள்வதையும் தமக்குள் வற்புறுத்தினர் அக்கட்சியின் பகைவர், கடற்படையில் பெருநம்பிக்கை கொண்டிருந்தனர். ஆரஞ்சுக் குடும்பத்தினருக்கு முக்கியத் துணையாயிருந்த நிலப்படையை அவர்கள் நம்பவில்லை. 1672-ல் பிரான்சை ஆண்ட பதினான்காம் லூயி, நாட்டில் இராணுவ இடரைத் தோற்றுவித்தார். அமைதியாளர் வில்லியம் நேருக்கு நேராகச் சமாளித்த அவ்வளவு பெரிய இடராய் அது இருந்தது. அதை எதிர்க்க அவர்தம் பெயரரான வில்லியத்தைத் தானே இயங்கும் இயக்கம் அதிகாரத்தில் இருத்தியது.

தெளிவு ஏற்படுவதற்காக 17ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரை டச்சு வரலாற்றை இதுவரையில் கண்டோம். 16 ஆம் நூற்றாண்டில், பிரான்சின் நற்பேற்றினை இப்பொழுது கவனிப்போம்.

[1] John de Witt.

[இக்காலத்தைப் பற்றியறிய மிகச் சிறந்த நூல்கள் பல உள்ளன. மாட்லியன் எழுதிய 'டச்சுக் குடியரசின் எழுச்சி, ஐக்கிய நெதர்லாந்தின் வரலாறு' என்னும் இரு நூல்களும் வடக்கிலிருந்த நாடுகளைப் பற்றிப் புகழுரையாய் அமைந்துள்ளன. அமைதியாளர் வில்லியத்தின் வாழ்க்கை வரலாறு பற்றி பிரெடரிக் ஹாரிசனும், ருத் புட்னமும் மிகச் சிறப்பாக எழுதியுள்ளனர். பிரெஸ்காட்டு எழுதிய 'இரண்டாம் பிலிப்பு' என்னும் நூல் ஸ்பெயின் வரலாற்றையும் கூறுகிறது. 'கேம்பிரிட்ஜ் நவீன வரலாற்றில்', எட்மண்ட்சன் எழுதியுள்ள கட்டுரைகள், நெதர்லாந்து வரலாற்றைப் பற்றிச் சிறந்த தொகுப்புக்களைக் கொண்டுள்ளன.]

# 5. பிரான்சும் சமயச் சீர்திருத்தமும்

## இரண்டாம் ஹென்றியின் இறப்பு

1559-ல் காடேகாம்ப்ரேசிஸில் ஏற்பட்ட அமைதியினால் ஐரோப்பாவில் பிரான்சு வலிமை பெற்றது. அது கிழக்கு எல்லைப்புறத்தில் முக்கிய நிலப்பகுதிகளை அடைந்ததுடன் ஆங்கிலேயர் வசமிருந்த கலே நகரையும் கைப்பற்றியது. அமைதியையொட்டிப் பாரிசில் நிகழ்ந்த விளையாட்டுப் போட்டிகளின்போது பிரெஞ்சு மன்னரான இரண்டாம் ஹென்றி பந்தயத்தில் எதிர்பாராது ஏற்பட்ட அடியினால் இறந்தார். இதனால் நாட்டின் நிலை முற்றிலும் மாறியது.

## பிரான்சில் கால்வினியம் பரவுதல்

பிரான்சில் இதுவரை சமயச் சீர்திருத்த இயக்கம் எவ்விதத் தொல்லைகளையும் தோற்றுவிக்கவில்லை. அடக்குமுறை ஆணைகள் நிறைவேற்றப்பட்டிருந்தன. இவற்றிற்குப் பலர் இரையாயினர். ஆனால், பிரான்சின் சமய ஒற்றுமைக்கு எவ்வித அச்சுறுத்தலும் ஏற்படவில்லை. பிற இடங்களிலிருந்ததைப் போலவே பிரான்சிலும் மக்கள் உள்ளத்தில் ஒரு கொதிப்பு இருந்து வந்தது. கால்வினியம், பிரெஞ்சுக்காரர் ஒருவரின் செயல் விளைவு என்பதையும், அதைப்பற்றிப் பிரெஞ்சு மொழியில் நூல்கள் எழுதப்பட்டிருந்தன என்பதையும் நாம் முன்னரே கண்டுள்ளோம். விரைவிலே இவை பிரெஞ்சு மக்களுட் பெரும்பகுதியினர்மீது உறுதியான பிடிப்பைப் பெற்றது. இதைப் பின்பற்றியவர், எல்லாத் துறைகளிலும் காணப்பட்டதுடன் நகரங்களிலிருந்த தொழிலாளர்களுட் பெரும்பான்மையினராயும் இருந்தனர். ஆனால், பிரெஞ்சு பிராட்டஸ்டென்டு சமயத்தின் சிறப்பான கூறு அதன் வரிசைகளில் மிக்க உயர்குடிப் பிறந்தோரைக் கொண்டிருந்ததாகும். இம்முறையில் பிரான்சு நாட்டுப் பிராட்டஸ்டென்டு இயக்கம் ஸ்காட்லாந்து நாட்டின் சமய இயக்கத்தின் தொடக்கக் காலத்தினை ஒத்திருந்தது. ஸ்காட்லாந்துப் பிரபுக்களைப் போலவே பிரெஞ்சு

உயர்குடி மக்கள் தங்களது சமயத்திலுள்ள உறுதிக்கொள்கையாலும், மன்னரை எதிர்ப்பதில் சமய அடிப்படையில் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்ளவும் இப்புதிய இயக்கத்தில் சேர்ந்தார்கள்; அதனுடன் திருச்சபைகட்குச் சொந்தமான எஸ்டேட்டுகளைக்[1] கொள்ளையிடும் எண்ணத்தையும் கொண்டிருந்தார்கள். பிரான்சின் தெற்கு, மேற்குப் பகுதிகள் பிராட்டஸ்டென்டு சமயத்திற்குத் துணையாயிருந்தன. பாரிசு நகரம் இச்சமயத்திடம் கடும்பகைமை பாராட்டியது. கிழக்கில் அல்லது நடுப்பகுதியில் வசித்த மக்களுள் ஒரு சிலர் பாரிசு நகரைச் சார்ந்திருந்தனர்.

## பிரான்சில் மக்கள் இனக்கொள்கை

கால்வின் ஜினிவாவிலிருந்துகொண்டே தமது இயக்கம் முன்னேறுவதைக் கூர்ந்து கவனித்து வந்தார். பிரசாரம் செய்ய உரிமை அளிக்கப்படுமானுல், பிரான்சில் கத்தோலிக்க சமயம் முற்றிலும் அழிந்துவிடக்கூடுமென ஒருசமயம் அவர் நம்பினுர். ஆனுல், பிரான்சில் எக்காலத்திலும் பிராட்டஸ்டென்டுகள் பெரும்பான்மையினராய் இருந்ததில்லை. கால்வினியத்தில் காணப்பட்ட கட்டுப்பாடுகளும், கடுமைகளும் மக்களை ஒன்று சேர விடாமல் தடுத்தன. அவர்களுட் பலர் ரோமன்கத்தோலிக்க முறையிலும் வழிபாட்டிலும் காணப்பட்ட உயர்ந்த கவிதைகளாலும் கற்பனைகளாலும் கவர்ச்சியுற்றிருந்தனர். காலப்போக்கில் பிராட்டஸ்டென்டுகளின் நம்பிக்கைக்கும் ஆர்வத்திற்கும் எதிராகக் கத்தோலிக்கர் பக்கத்திலும் இவை அதிகமாகக் காணப்பட்டன. பிரான்சில், ஒன்றிற்கொன்று விரோதமாயிருந்த இவ்விரண்டு இயக்கங்களுக்கும் புறம்பான மற்றொரு தனிப்பட்ட கருத்து நிலவியதை நாம் நினைவு கூர்தல் வேண்டும். தொடக்கத்திலிருந்தே ஐரோப்பாவில் அறிஞர் இருந்து வந்தனர். டச்சு நாட்டினரான இராஸ்மஸ்[2] என்னும் அறிஞர் அவர்களுள் ஒருவராவர். அவர் இரு பிரிவுகளிலும் மனவமைதி கொள்ளாதிருந்ததோடு அவற்றில் சேருவதற்கும் மறுத்தார். பிரான்சில் இதே நடுவுநிலைமை, தொடக்கத்தில் ரபேலே[3] என்பவராலும், அக்கால இறுதியில் மாண்டேயின்[4] என்பவராலும், மேற்கொள்ளப்பட்டிருந்தது. ரபேலே நம்பிக்கை கொண்டவராய்த் தம் முழு ஆற்றலையும் பயன்படுத்தி எழுதினுர். மாண்டேயின் மேலான மாறுதலுக்கு வழியில்லையென எண்ணி மனக் கசப்புடன் நம்பிக்கையற்றவராயிருந்தார். ஆனுல், கத்தோலிக்கச் சமயத்தில் பெயரளவில் சேர்ந்திருந்த இவ்விருவரும் ரோமன் கத்தோலிக்க எதிர்விளைவுக் கருத்துக்களிலிருந்து இயன்ற அளவு விலகியிருந்தனர்; மக்கள் தன்மையைப் பிரசாரம் செய்ததோடு பகுத்தறிவையும் தூண்டினர். இரு பிரிவின் தலைவர்களாலும் விருப்புடன்

[1] Estates. [2] Erasmus, [3] Rabelais, [4] Montaigne.

கூறப்பட்ட கொள்கைகளில் இவர்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. அடுத்த ஐம்பதாண்டுகள் வரை பொது விவகாரங்களின் போக்கில் இவர்களது செல்வாக்குச் சிறிதும் காணப்படவில்லை. பின் நூற்றாண்டுகளில் பிரான்சில், கால்வின், இக்னேசியஸ் லயோலா என்பவர்களின் கருத்துக்கள் ஆதிக்கம் பெற்றிருந்தன. ரபேலே, மாண்டேயின் என்பவர்களின் கருத்துக்கள் மக்களின்மீது ஆதிக்கம் பெறலாயின.

## காத்தரின்-டி-மெடிசி

இரண்டாம் ஹென்றி இறந்த பின், பிரான்சில் அரசு புரியத் தக்க வயதுடைய புதல்வர் அவருக்கு இல்லை. தாயாரான, புகழ்பெற்ற அல்லது இகழ்வுற்ற—காத்தரின்-டி-மெடிசி இராணியாரானார். கணவரால் கைவிடப்பட்ட அவர், அதிகாரம் பெறுவதற்குத் தமக்கு வாய்ப்பு ஏற்பட்டுள்ளதாக எண்ணினார். சில வேளைகளில் மக்கள் அவரை அடக்கப்பட்டிருந்த கத்தோலிக்கச் சமயத்தை மீண்டும் நிலைநிறுத்தும் வீராங்கனையென எண்ணினார்கள்; அவருடைய செய்கைகள் தீவிர மதப் பற்றுடையனவென்றும் எண்ணினார்கள். இஃது உண்மைக்குப் புறம்பானது. அவரது நடத்தைக்குக் காரணம், அரசியல் அவாவேயன்றிச் சமயமன்று. மெடிசி என்ற பெயர் கொண்டிருந்ததால், அவர் கத்தோலிக்கராய் இருக்கவேண்டுமென்றாலும், சமயக் கொள்கைகளை அவர் அவ்வளவாகக் கருதவில்லை. சமயத்தை மனத்திற்கொண்டு அவர் செயல் புரியவுமில்லை. கத்தோலிக்கத் திருச்சபையின் கொள்கைகளை விட வானநூலில் அவருக்கிருந்த மூடநம்பிக்கைகள் வழி காட்டியாய் அமைந்தன. அவர் குடும்பம் மிகப் பெரியது. ஆனால், எல்லோரும் இளைஞராய் இருந்ததால், ஒருவராவது உடல் வலிமையாலோ, அறிவின் மேன்மையாலோ, உரம் பெற்றிருக்கவில்லை. ஆதலால் சில ஆண்டுகள் வரை பிரான்சை உண்மையில் ஆளுவதற்கு அவர்கள் தகுதியற்றவர்களாயிருப்பார்கள்.

## போர்போன்களும் கைஸ்களும்

லாஹோபிட்டல்

காலியான அரசபதவியை உறுதியாகப் பிடித்துக் கொள்ள காத்தரின் விரும்பினார். ஆனால், அதிகாரத்தைப் பெறுவதற்காக முயன்றுக்கொண்டிருந்த பல பிரபுக்களை அவர் நேருக்கு நேர் சந்திக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்பிரபுக்களுள் ஏற்பட்டிருந்த போட்டி அக்காலத்துச் சமயச் சச்சரவுகளுடன் தொடர்புள்ளதாயிருந்தது. ஒரு புறத்தில் போர்போன்களுடைய[1] குடும்பம் தலைமையாயிருந்தது.

[1] Bourbons.

அதன் முக்கியப் பிரதிநிதிகள் நவாரே நாட்டு மன்னரும் வலிமையற்ற வருமான அந்தோணியும், அவர்தம் உடன்பிறந்தாரும் காண்டே நாட்டு இளவரசரும் வலிமையுள்ளவருமான லூயியுமாவர். அவர்கள் கால்வினியத்தை வெளிப்படையாக ஆதரித்தார்கள் எனினும், அரசியல் நோக்கத்தைக் குறியாகக்கொண்டு சமயமாகிய போர்வையில் மறைந்து நடந்தார்கள் என்று கூறுவது முற்றிலும் பொருந்தும். மற்றொரு பக்கத்தில் கைஸ் குடும்பம் இருந்தது. அக்குடும்பம் தொடக்கத்தில் லொரைனைச் சேர்ந்ததாகும். அது சிலகாலம் பிரெஞ்சு அரசில் குடியேறி, பிரஞ்சு அரசாங்கத்தில் மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந்தது. கொள்கை காரணமாயும், ஊக்கம் காரணமாயும் கைஸ்கள் ரோமன் கத்தோலிக்க நோக்கத்தைச் சேர்ந்திருந்தார்கள். அக்காலத்தில் செல்வாக்குள்ள இரண்டு மூன்று திருச்சபை அதிகாரிகளுள் கார்டினல் கைஸூம் ஒருவராவர். கைஸ் கோமகனுரான பிரான்சிஸ், பிரான்சின் மிக்க புகழ்வாய்ந்த வெற்றி வீரராய் இருந்தார். அரசிற்குப் பற்றுறுதி யுடன் பணி புரிந்தவர், சான்சலர் பதவி வகித்த லாஹோபிட்டல்[1] என்பவர் ஆவர். காத்தரின், தமது அரசாங்கத்தில் அவர் ஒருவரையே நம்ப முடிந்தது. அவர் சமயப் பற்றுடையவர்; இரு போட்டிக் கட்சிகளுக் கிடையே அமைதியைக் காண விரும்பினவர். அக்காலத்து ஐரோப் பாவில் சமயச் சகிப்பு ஏற்படுவதில் உண்மையான நம்பிக்கை கொண்ட சிலருள் அவரும் ஒருவராவர்.

## ஒன்பதாம் சார்லசு-உள்நாட்டுப் போரின் திடீரெழுச்சி

ஸ்காட்லாந்தின் அரசியாரான மேரியின் கணவர் இரண்டாம் பிரான்சிஸ் என்பவர். அவருடைய குறுகிய ஆட்சிக் காலம் சமயப் பூசல்கள் நிறைந்ததாயிருந்தது. 1560ஆம் ஆண்டு டிசம்பரில் அவர் இறந் தார். அவருடைய உடன்பிறந்தவரான ஒன்பதாம் சார்லஸ் பட்டம் எய்தினர் இரு சமயங்களின் சார்பாளர்களிடையே ஒரு மாநாடு கூட்டி அமைதியை நிலைபெறச் செய்ய முயற்சிகள் செய்யப்பட்டன. ஆனல், அம்மாதிரியான இயக்கங்கள் அக்காலத்திற்கு ஏற்றனவல்ல. லாஹோபிட்டல், அரசரின் அதிகாரத்தைக் கொண்டு கட்டளை பிறப் பித்தார். இதன்படி பிராட்டஸ்டென்டுகள் சில கட்டுப்பாடுகளுக்குள் வழிபாடு செய்ய அனுமதிக்கப்பட்டனர். இருகட்சிகளும் வெற்றியை நோக்கமாகக் கொண்டிருந்ததால், உடன்பாட்டிற்கு இணங்கவில்லை. 1562ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் கைஸ் கோமகனுர்[2] ஒரு படை யுடன் வாஸி[3] என்னும் சிறிய பட்டணம் வழியாகக் கடந்து சென்றுர். கால்வினிய முறையில் வழிபாடு நடந்துகொண்டிருந்தது. போர் வீரர்கள் அவ்வழிபாட்டில் குறுக்கிட்டார்கள். அங்கு ஏற்பட்ட குழப்

[1] L' Hopital [2] Duke of Guise, [3] Vassy.

பத்தில், வழிபாட்டில் ஈடுபட்டிருந்தவருட் பெரும்பகுதியினர் கொல்லப் பட்டனர். அது 'வாஸிப்படுகொலை' என வழங்கப்பட்டது. உடனே அந்நிகழ்ச்சி நாட்டில் உள்நாட்டுப் போர்த் தீயை மூட்டியது.

## போரின் தன்மைகள்

அது முதல் முப்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பிரான்சில் நிலையான அமைதியை மக்கள் துய்க்கவில்லை. ஐரோப்பாவில் பிரான்சின் மதிப்புக் குறைந்தது. செல்வமும் வளமும் மிகவும் தாழ்வுற்றன. சமூக நிலையில் அப்போர் ஐரோப்பா அதுவரை கண்டிராத அளவிற்கு மிக மோசமான பயன்களை உண்டு பண்ணியது. அப்போர் ஏழு அல்லது எட்டுப் பிரிவாகப் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு பிரிவிலும் போர்கள் நிகழ்ந்தன. முக்கியமான முடிவை உடையதாக ஒன்றேனும் இல்லை. எல்லாப் போர்களும் உண்மையற்ற சகிப்புத் தன்மைகொண்ட உடன்படிக்கைகளோடு முடிவுற்றன. அப்போர் நெடுகிலும் கத்தோலிக்கர்களுக்குச் சாதகமாயிருந்தது. பிராட்டஸ்டென்டுகள் நேச நாடுகளின் உதவியின்றிப் போரிட்ட போதிலும் பகைவர்களின்மீது எத்தகைய முக்கிய வெற்றியையும் பெற முடியவில்லை. பிரான்சின் முடி, சத்தி வாய்ந்த அரசர் வசம் இருந்திருக்குமானல், கத்தோலிக்கக் கொள்கைகள் முழுவெற்றி அடைவதோடு போரும் முடிவுற்றிருக்கும். காத்தரின்-டி-மெடிசி வெற்றியில் விருப்புக்கொள்ளவில்லை. காரணம், கத்தோலிக்கத் தலைவர்களுக்கு அபாயகரமான செல்வாக்கை அவ்வெற்றி அளித்திருக்கும் என்பதேயாம். எனவே, எதிர்த்து நின்ற கட்சிகளுக்கிடையில் சமநிலையை ஏற்படுத்துவதைப் பெரிதும் அவர் விரும்பினர். பிராட்டஸ்டென்டுகளின் வலிமை, தொடக்கத்தில் பிரபுக்களின் கையிலிருந்தது. இந்நூற்றுண்டு முடியுமுன் பிரான்சின் மேற்கிலும் தெற்கிலும் உள்ளவர்கள் இச்சமயத்தின் தீவிரவாதிகளாய் இருந்தார்கள். நவாரே நாட்டு அந்தோணியும், காண்டே நாட்டு இளவரசரும் அதன் முக்கிய இராணுவத் தலைவர்களாய் இருந்தனர். ஆனல், கடற்படைத் தலைவரான கோலினி[1] என்பாரின் பெயர் மறுக்க முடியாத பெரும் புகழ் வாய்ந்ததாய் இருந்தது. அவர் இராணுவத் திறமையிலும், அதைவிட நடத்தையிலும் அந்நூற்றுண்டில் மிக்க பெருமையும் தூய்மையும் கொண்டவர்களோடு ஒருங்கு இடம் பெறத் தகுதி வாய்ந்தவராய் இருந்தார்.

## ஹ்யூக்நோக்கள்

முதற்போரில் எலிசபெத்தரசியார், பிராட்டஸ்டென்டுகளுக்கு உதவியளித்தார். பிரான்சில் இருந்த பிராட்டஸ்டென்டுகளை ஹ்யூக்

[1] Coligny,

நோக்கள்[1] என வழங்குவது வழக்கம். அவ்வுதவி பயனில்லாமல் போகவே, மீண்டும் அதை அளிக்க ஆங்கில நாட்டின் அரசியார் விரும்பவில்லை. இரு கட்சியினரும் நாட்டின் எல்லைக்கு அப்பாலிருந்து உதவியை எதிர்பார்த்தனர். சில சமயங்களில் ஜெர்மனியும் சுவிட்சர்லாந்தும் பிராட்டஸ்டென்டுகளுக்கு உதவியளித்தன. கத்தோலிக்கர்கள், ஸ்பெயினின் ஆதரவையும் உதவியையும் பெற்றார்கள். முன்னதிகாரத்தில் கூறியவாறு நெதர்லாந்தில் ஸ்பானியர்கள் தங்கியிருந்தது பிரெஞ்சுப் போர்களின் போக்கில் முக்கியமான செல்வாக்கைக் கொண்டிருந்தது. நாம் முதல் மூன்று போர்களின் போக்கைப் பற்றி அதிகம் விவரிக்காமல், சுருக்கமாக அறிந்துகொள்வோம்: நவாரே நாட்டு மன்னரும் காண்டே நாட்டு இளவரசரும்[2] போரின் போக்கிலிருந்து விலக்கப்பட்டனர். கைஸ் கோமகனார் ஆர்லியன்ஸ் முற்றுகையை மேற்பார்வை செய்து வருகையில் கொலை செய்யப்பட்டார். மூன்றாவது போர் மிகக் கடுமையாய் இருந்தது. பிராட்டஸ்டென்டுகள் போர் புரிந்து இரு சிறந்த சண்டைகளை இழந்தனர்.

## செயின்ட் ஜெர்மீன் சமாதானம்

அதன் பின்னர் 1570-ல் பிராட்டஸ்டென்டு இயக்கத்திற்குக் கடுந்தாக்குதலை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் போது செயின்ட் ஜெர்மீன்[3] என்னுமிடத்தில் சமாதானம் ஏற்பட்டது. முப்பதாண்டுப் போர் நடந்துகொண்டிருக்கும்போது ஏற்பட்ட சமாதானங்களில், அச்சமாதானம் சிறப்பாய் இருந்தது. மற்றவற்றுக்குச் சிறப்புக்கூறாக அதைக் கொள்ளலாம். அதன்படி எல்லோருக்கும் கருத்துச் சுதந்தரம் அளிக்கப்பட்டது; அதோடு வழிபாட்டுச் சுதந்தரமும் அளிக்கப்பட்டது. அச்சுதந்தரம் பிரான்சின் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததும், தேர்ந்தெடுக்கப்பட்டதுமான இரு நகரங்களிலும் பிரபுக்களுடைய கோட்டைகளில் மாத்திரமே அனுமதிக்கப்பட்டது. அதனுடன் பொதுப் பணிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் கத்தோலிக்கர்களுக்குச் சமமாகப் பிராட்டஸ்டென்டுகள் அனுமதிக்கப்பட்டார்கள். எனினும், சமயச் சகிப்பை ஏற்படுத்தவில்லை. இது முழுச் சகிப்பாக வளர்ச்சி பெற்றிருக்கலாம்; ஆனால், பிராட்டஸ்டென்டுகளின் நிலை பொறுத்துக்கொள்ளக் கூடியதாய் இருந்தது.

[1] Huguenots: நன்கு வழங்கிய (புகழுடன்) இப்பெயர் எவ்வாறு உண்டாயிற்று என்பதைப் பற்றி முடிவாகத் தெரியவில்லை. சிலர் இப்பெயர் சுவிட்சாலாந்தின் நாட்டுக் கூட்டத்தில் கலந்து கொண்டிருந்த பிராட்டஸ்டென்டுகளைக் குறிப்பதான இட்ஜிநோஸன்' என்னும் சொல்லிலிருந்து தோன்றியதெனக் கருதுகின்றனர்; மற்றும் சிலர், நாட்டில் குறும்பு செய்யும் சாத்தான் பெயரான ஹ்யூக்ஸ் என்னும் சொல்லிலிருந்து வந்ததெனக் கூறுவர்.

[2] Prince of Conde, [3] St. Germain,

## ஒன்பதாம் சார்லசும் கோலினியும்

### பிரான்சின் புதுக் கொள்கை

1570 முதல் 1572 வரையில் நிலைமை மிக மோசமாயும் பாதிக்கக் கூடியதாயுமிருந்தது. அக்காலத்திலேதான் செயின்ட் பார்த்தலோமியோ நாளன்று படுகொலை[1] நடந்தது. அப்படுகொலையைப் பற்றிப் பல பிரச்சினைகள் எழுந்தன. இன்னும் அவை முடிவு செய்யப்படாதன வாய் இருக்கின்றன. அக்காலத்தில் தலையாய கூறுகளாவன: இளவரசரான ஒன்பதாம் சார்லஸ் பிரான்சின் நிலைமையைப் பற்றி நன்கு அறிந்தவராயும் கடமையுணர்ச்சியுடையவராயுமிருந்தார்; உள் நாட்டுப் போரால் நாடு வலிமையிழந்து வருவதையும் பகைவர் நாடான ஸ்பெயின், தோற்றத்தில் அதிவேகமாக முன்னேறி வருவதையும் கண்டார்; கோலினியின் பக்கம் சென்றார். பிராட்டஸ்டென்டின் பெருந் தலைவரான அவருடைய ஆற்றலையும் நாட்டுப் பற்றையும் கண்டு உள்ளக் கிளர்ச்சியுற்றார். புதிய கொள்கை ஏற்றுக்கொள்ளும் நிலையில் காணப்பட்டது. 'ஒருவரையொருவர் மதித்துப் பிரான்சின் பிராட்டஸ்டென்டுகளும் கத்தோலிக்கர்களும் வாழவேண்டும்; நாட்டில் உள்ள எல்லாப் படைகளும் ஒன்று சேர்ந்து ஸ்பெயினுக்கு எதிராக நெதர்லாந்தின் பக்கலில் போர் புரிய வேண்டும்,' என்பதே அக் கொள்கையாகும். அக்கொள்கையின் மேலான கூறுகள், இருபதாண்டுகளுக்குப் பின் நவாரே நாட்டு ஹென்றியினுல் அடையப்பட்ட ஒளி மிக்க பயன்களுக்குக் காரணமானவை போன்றும், அடுத்த நூற்றுண்டில் அக்கொள்கையைப் பின்பற்றிய ரிச்சிலு[2] பாராட்டத்தக்க வெற்றியடைந்தது போன்றுமிருந்தன. இங்கிலாந்து அரசியாருக்கும் மன்னரின் உடன் பிறந்தாரான ஹென்றிக்கும் இயலுமானுல் திருமணம் செய்வது வாயிலாக உறவை ஏற்படுத்தியும், அடுத்தாற்போலப் பிராட்டஸ்டென்டு தலைமைக்கு வாரிசாய் இருந்த நவாரே நாட்டு ஹென்றிக்கும், மன்னரின் உடன் பிறந்தாரான வாலாய் நாட்டு மார்கரெட்டுக்கும்[3] திருமணம் செய்வது வாயிலாகவும் இப்புதுக் கொள்கையைப் பொருத்துவதும் உறுதிப்படுத்துவதும் இயலும் என எடுத்துரைக்கப்பட்டது.

1572-ல் இலையுதிர் காலத்தின் தொடக்கத்தில் பிரான்சு போரில் இறங்குமென்று எண்ணினர்கள். எலிசபெத்தின் திருமண உறவு நடைபெறுமல் பேச்சளவில் நின்றது; ஆனுல், ஆங்கிலேயருடன் உறவு ஏற்பட்டது. நவாரே நாட்டு ஹென்றிக்கும் மார்கரெட்டுக்கும் திருமணம் நடந்தது. பிரான்சின் வெளிநாட்டுக் கொள்கையில் பெரிய

[1] Massacre of Saint Bartholomew's Day.
[2] Richelieu. [3] Margaret of Valois.

மாறுதல் ஏற்பட இருக்கும் பொழுது (1572, ஆகஸ்டு 24) புனித பார்த்த லோமியோ நாளன்று திடீரெனப் படுகொலை நடந்தது. சமய விரோதிகளைப் படுகொலை செய்வது வாயிலாகச் சமயச் சச்சரவுகளை ஒழித்துவிடலாமென்ற எண்ணம் காத்தரின் அரசியாரின் மனத்தில் இருந்து வந்த போதிலும், அப்படுகொலை நெடுநாளாக முன்யோசனை யோடு நிகழ்ந்ததெனக் கூற இயலாது. நாட்டில் வளர்ந்து வரும் கோலினியின் செல்வாக்கைப் பற்றிய அழுக்காறும் அதைக் குறைப் பதற்கு ஏதாவது ஒருவழி தேடாவிடில் தம்முடைய நிலை தாழும் என்ற அச்சமும் அரசியாரிடம் அமைந்திருந்தமையே அப்படுகொலைக்குக் காரணம் எனக் கருத வேண்டியிருக்கிறது. இத்தாலியில் அவர் பெற்ற பட்டறிவுகள் தப்புவதற்கான வழியைக் காட்டின. கோலினி கொல்லப்பட வேண்டுமென்ற எண்ணமிருந்து வந்தது. கோலினி விடுதிக்குள் நுழையும் போது ஒரு கொலையாளி அவரைச் சுட்டுக் காயப்படுத்தினான். ஆனால், கோலினியின் உயிருக்கு ஆபத்து ஏற்பட வில்லை. அவரைப் பின்பற்றிய பிராட்டஸ்டென்டுகள் அதைப் பற்றி முழு விசாரணை நடத்தும்படி கோரினார்கள். சிறிய குற்றம் தோல்வி யடைந்தது காரணமாகப் பெரிய குற்றம் தேவைப்பட்டது. அரசரின் உடன்பிறந்தாரான ஹென்றியோடும், கைஸ் கோமகனுரான ஹென்றி யோடும், பாரிசில் முன்னணியில் இருந்த மற்றும் சில தலைவர் களோடும் காத்தரின் சேர்ந்தார். சமய வெறி கொண்டிருந்த பாரிசின் மக்களை ஹ்யூக்நோக்களின்மீது ஏவுவது என்பது தீர்மானிக்கப்பட்டது. கோலினியிடம் விருப்புக் கொண்டிருந்த பிரான்சு மன்னன் இப்படு கொலைக்கு இணங்குமாறு சிறிது சிறிதாகத் தன்வயமாக்கப்பட்டார். இதற்குத் துணையாக மன்னரது உயிரே ஆபத்திலிருந்ததாக அறிவித் தனர். கைஸ் கோமகனுர், கோலினி கொலை செய்யப்படுவதை நேரில் மேற்பார்வையிட்டார். பாரிசிலும் பிரான்சின் மற்றப் பகுதிகளிலும் ஏராளமான ஹ்யூக்நோக்கள் கொலை செய்யப்பட்டார்கள். அவ்வாறு இறந்தவர்களின் எண்ணிக்கை பத்தாயிரத்திற்கு மேற்பட்டதாகும்.[1]

## படுகொலையின் தோல்வி

### மன்னர் மூன்றும் ஹென்றி

படுகொலை முடிந்தபின் அச்செயல் குற்றமென்பதும் பெருந்தவறு என்பதும் உணரப்பட்டன. ஹ்யூக்நோக்கள் அவர்களுடைய பெரிய தலைவனையும் மற்றும் போர் வீரர் பலரையும் இழந்தது மூலம் வலுவிழந்தனர். எனினும், அவர்கள் உடனே போர்க்களங்களில் தங்களுடைய உயிர்களைக் காத்துக்கொள்வதற்கு ஒரே நோக்கத்

[1] இறந்தவர்களின் எண்ணிக்கை அறுதியிட்டுக் கூற இயலவில்லை. அக்காலத்தி லிருந்தவரான சல்லி என்பார் கொலையுண்டவர் எழுபதாயிரவர் எனக் கூறுவார். ஆனல், ஆக்டன் பிரபுவின் மதிப்பீடு எட்டாயிரம் ஆகும்.

துடன் ஆயத்தமானார்கள். கத்தோலிக்கர்களில் சிலர் இந்நிகழ்ச்சி பற்றி மன்னிப்புக் கோரினர். பொதுவாக ஐரோப்பாவில் எல்லாரும் இதனைக் கண்டித்தனர். சில காலம் பிரான்சிலிருந்து இங்கிலாந்து விலகியிருந்தது. தொடர்ந்து நிகழ்ந்த போரில் ஹ்யூக்நோக்கள் கடுந் தாக்குதலுக்குள்ளாகவில்லை. படுகொலை நிகழ்ந்த ஓராண்டுக்குள் ஹ்யூக்நோக்களுக்கு அரசாங்கம் சமாதானத்தை அளித்தது. செயின்ட் ஜெர்மீன் சமாதானத்தின் கூறுகள் புதுப்பிக்கப்பட்டன. சிறிது காலத்திற்குள் ஒன்பதாம் சார்லசு இறந்தார். அவர் உடன் பிறந்தா ரான மூன்றும் ஹென்றி ஆட்சி புரியத் தொடங்கினர். பிராட்டஸ்டென்டு களுக்கு எதிராய் நிகழ்ந்த போர்களில் அவர் தமது வன்மையை ஏற்கனவே காட்டியிருந்தார். மேலும், போலந்தின் மன்னராக அவர் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். அவர் தம் சகோதரர் இறந்தார் என்ற செய்தியைக் கேட்டதும் போலந்திலிருந்து பிரான்சிற்கு வந்தார். படுகொலையில் அவர் நேரிடையாக ஆழ்ந்த ஈடுபாடுடையவராய் இருந்ததால், அவருடைய வருகை மீண்டும் போர் மூள்வதற்கு அறிகுறியாயிற்று. போர் உற்சாகமின்றி நடந்தது. மன்னர் சிற்றின் பங்களில் ஈடுபட்டும் எப்பொழுதாவது துறவியர்க்குரிய சமய நெறி களில் தீவிரமாகப் பங்கு கொண்டும் இருந்ததே இதற்குக் காரணமாம். இதைத் தவிர, உண்மையான சமய நோக்கங்கள் அவரிடம் இல்லை. எனவே, இச்சாதாரணச் சண்டை வழக்கமாக ஏற்படும் சமாதானத் தினல் முடிவுற்றது. முடிவில்லாத போர்களும் சமாதானங்களும் தொடர்ந்து நிகழும் போலத் தோன்றின. மேலும், பிரான்சின் அழிவைத் தவிர வேறொரு பயனையும் அவை விளைவிக்கமாட்டா எனவும் தோன்றியது.

## பொலிட்டிக்குகள் கட்சி

### நவாரே ஹென்றி ஹ்யூக்நோக்களின் தலைவராதல்

அவ்வாறிருந்த போதிலும், நிலைமை மாறிக்கொண்டிருந்தது. புதிய சத்திகள் தோன்றின. அச்சத்திகள் ஹென்றியின் நேரிடை யான நடவடிக்கைகளைச் சிறப்பற்றவையாக்கின. ஒரு புறம் 'பொலிட்டிக்கு'[1] என்று வழங்கப்பட்ட புதிய கட்சி வளர்ந்து கொண்டே யிருந்தது. அக்கட்சியினரே 'பாலிட்டீஷியன்ஸ்' என்று வழங்கப்பட்டனர். அவர்கள் தங்களுடைய சமயக் கருத்துக்களில் வெற்றியடைவதைக் காட்டிலும் நாட்டின் நலனையே மனத்தில் கொண்டிருந்தார்கள். இந்த நோக்கங்களைக் கொண்டு ரோமன் கத்தோலிக்கருட்பலர் பிராட்டஸ்டென்டுகளுடன் சேர்ந்தனர். அவர் களுடைய வெளிப்படையான நோக்கம், சமயச் சகிப்புத்தன்மையுடன்

[1] Politiques.

கூடிய அரசாங்கத்தை அமைப்பதேயாகும். ஹ்யூக்நோக்களைக் கொண்டிருந்த அக்கட்சியின் தலைமைப் பதவி பற்றிய பிரச்சினை சில காலம் இருந்து வந்தது. படுகொலை நடந்த பொழுது கத்தோலிக்கச் சமயத்தில் இருக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்ட நவாரே நாட்டு ஹென்றி, கத்தோலிக்கக் கொள்கைகளை உதறித் தள்ளிவிட்டு, பாரிசி லிருந்து தெற்கிலிருந்த பிராட்டஸ்டென்டுகளிடம் தப்பியோடிய பொழுது அவர்களுடைய தலைவராக வரவேற்கப்பட்டார். அவருக்குக் கால்வினியக் கொள்கைகளிலோ கட்டுப்பாட்டிலோ பிடிப்பு இல்லை. அவர்சிறப்பாகக் குடும்ப மரபுகளைப் பின்பற்றிப் பிராட்டஸ்டென்டு பக்கத்தில் சேர்ந்து பல ஆண்டுகள் அதற்காக உண்மையுடன் உழைத்தார். அவர் பெரிய படைத்தலைவர் அல்லாமற் போனாலும் ஒப்பற்ற சண்டைகளை நடத்துவதில் அஞ்சாநெஞ்சம் படைத்தவரா யிருந்தார். பிராட்டஸ்டென்டுகள் பக்கத்தில் அவரிருந்தது மிக முக்கியமானது. காரணம், பிரெஞ்சு அரியணைக்கு அவர் வழித்தோன்ற லாகக் கூடும் என்ற எண்ணம் வளர்ந்துகொண்டேயிருந்தது. இரண் டாம் பிரான்சிஸிற்கும் ஒன்பதாம் சார்லசிற்கும் ஆண் வழித் தோன்றல்கள் இல்லை. மூன்றும் ஹென்றிக்கும் குழந்தைகள் இல்லை. அதுபோல, ஆஞ்சோ என்னும் பட்டத்தைக் கொண்டிருந்தவரும் அவர் உடன் பிறந்தவருமான அலங்கான் கோமகனுருக்கும்[1] சந்ததியில்லை. நவாரே நாட்டு ஹென்றியே அடுத்த ஆண் வழித்தோன்றலாயிருந்தார்.

பிராட்டஸ்டென்டு சமயமும் மதச் சகிப்புத் தன்மையும் ஒரு புதிய அமைப்பை அடைந்து வரும்பொழுது கத்தோலிக்கர் பக்கத்திலும் ஒரு புதிய இயக்கம் காணப்பட்டது. அவர்களுக்கு மன்னரின் செய்கையிலும் கொள்கையிலும் வெறுப்புத் தோன்றியது. தீவிரமாயிருந்த கத்தோ லிக்கர்கள் மூன்றும் ஹென்றியைக்காட்டிலும் சிறந்தவரும் இளைஞரு மான கைஸ் கோமகனுரைத் தங்கள் தலைவராகக் கருதினுர்கள். அவர் களுக்குக் கத்தோலிக்கர்களின் கூட்டு என்ற எண்ணம் ஏற்கனவே இருந்ததோடு, ரோம், ஸ்பெயின் என்னும் இரு நாடுகளின் உதவியையும் அவர்கள் பெற்றிருந்தார்கள். 1584-ல் ஆஞ்சோக் கோமகனுர் இறந்த காரணத்தினுல் அவ்வெண்ணம் மிக்க பரபரப்பை யடைந்தது. காத்தரின்-டி-மெடிசியினுடைய மக்களுள் ஆண் வழித் தோன்றல் இல்லையென்பது உறுதியாய் இருந்தது.

## கத்தோலிக்கர் கூட்டு

வாரிசு முறையை நோக்கின், பிரான்சின் அரசராகப் பிராட்டஸ் டென்டான நவாரே நாட்டு ஹென்றியே வந்திருக்க வேண்டும். இதை எப்படியாவது தடுப்பதற்காகக் கத்தோலிக்கக் கூட்டு அமைக்கப்பட்டது.

[1] Duke of Alengon.

சமய விரோதிகளை அழிப்பதும், சமய விரோதிகளையும் அவர்களுக்குத் துணைபுரிந்தவரையும் பிரான்சு அரியணையிலிருந்து விலக்குவதுமே அக்கூட்டினரின் முடிவான நோக்கங்கள். நவாரே நாட்டு ஹென்றி யின் சிறிய தந்தையாரான போர்போன் நாட்டுக் கார்டினலை அரசுரி மைக்கு வேட்பாளராக அக்கூட்டுத் தேர்ந்தெடுத்தது. இது முக்கியப் பிரச்சினையைத் தள்ளி வைத்ததாகும். ஏனென்றால், தேர்ந்தெடுக்கப் பட்டவர் வயது முதிர்ந்தவராயிருந்ததோடு சந்ததி இல்லாதவராயு மிருந்தார்.

## அரியணைக்குக் கத்தோலிக்க உரிமையாளர்கள்

எனவே, பிரான்சின் கத்தோலிக்க மன்னராக இறுதியில் யார் வருவது என்னும் பிரச்சினை முடிவற்ற தொல்லையாயிருந்தது. பிரான் சின் அரச பதவியை ஸ்பெயின் மன்னரான இரண்டாம் பிலிப்பும் ஆவலோடு நோக்கினர். அவருடைய நோக்கம் வெற்றியடைந்திருக்கு மானல், இங்கிலாந்திலும் நெதர்லாந்திலும் அவர் அடைந்த தடைகளை அதிகமாகவே ஈடு செய்திருக்கும். பிலிப்பு என்பவர் பட்டத்திற்கு வரு வது, பிரான்சின் நாட்டுணர்ச்சியைத் தாக்கும். ஆகையால், கைஸ் நாட்டு ஹென்றி மன்னராவதைப் பலர் விருப்போடு நோக்கினர். மூன்றும் ஹென்றி புனிதக் கூட்டைவிடப் பொலிட்டிக்குகளின் கட்சிக்குப் பெருந்துணையாக இருக்கமாட்டார் என்பதில் ஐயமில்லை. எனினும், அவர் கூட்டுடன் போரிடுவதற்கு நெஞ்சுரம் இல்லாதிருந் தார்; எனவே, அதற்குப் பெயரளவில் வீரத் தலைவர் ஆனர். ஆதலின், மீட்டும் ஒரு முறை பிராட்டஸ்டென்டுகளுடனும் அவர்களோடு நட்புக் கொண்டிருந்த நாடுகளுடனும் போர் முழக்கம் செய்யவேண்டி நேர்ந்தது. அப்பொழுது போர் முக்கியம் வாய்ந்ததாய் முடிவான கட்டத்தை அடைந்தது. மன்னரது பங்கு இதில் மிகக்குறைவு. அவரிட மிருந்த பழைய இராணுவ ஆர்வம் மறைந்துவிட்டது. எனவே, அவர் போரின் தலைமையைத் தம்முடைய நண்பர்களிடம் ஒப்படைத்தார்; அவர்களுள் ஒருவரை எதிர்த்து நவாரே நாட்டு ஹென்றி, கூட்ராஸ்[1] என்னுமிடத்தில் (1587) பெரிய வெற்றியை அடைந்தார். ஆனல், அடுத்தாற்போல உடனடியாக அவருக்குதவியாய் வந்த சுவிஸ் ஜெர்மன் படைகளைத் தோற்கடித்ததன் மூலம் கைஸ் நாட்டு ஹென்றி அவருக்கு வெற்றியில்லாததாகச் செய்தார்.

## தடுப்பரண்கள்

முன்பிருந்ததைக்காட்டிலும் இப்பொழுது ஹென்றி கோமகனர் கத்தோலிக்கப் பிரான்சின் தலைமகனர் ஆனர். அவர் நாட்டின் மற்றப்

[1] Coutras.

பகுதிகளைவிட மிகத் தீவிரமான கத்தோலிக்கர்கள் இருந்த பாரிசு நகரத்திற்கு வந்தார். மூன்றும் ஹென்றி, நகரத்துள் அவர் வரக்கூடாதென உத்தரவிட்டார். ஹென்றி அதைப் பொருட்படுத்தாமல் நகருக்குள் நுழைந்தார்; பேரார்வத்தோடு வரவேற்கப்பட்டார். அவருடைய மரணத்திற்கு மன்னர் சதிசெய்தார்; பாரிசிற்கு வெளியிலிருந்த படைகளையழைத்து நகரத்தை முற்றுகையிடச் செய்தார். இப்பயமுறுத்தலைக் கண்டு, பாரிசு மக்கள் வீராவேசத்துடன் கலகம் செய்ய முற்பட்டார்கள். தடுப்பு அரண்கள் கட்டப்பட்டன. இவ்வியக்கத்தை அடக்குவதற்கு, மன்னருக்கு எவ்வழியும் புலப்படவில்லை. அதனால், அவர் தம் எதிரியின்முன் அவமானம் அடைய நேர்ந்தது. கைஸ் நாட்டு ஹென்றி அவருடைய வேண்டுகோளுக்கிணங்கிக் கலகத்தையடக்கினார். தம்மை அவமரியாதை செய்த நகரத்தில் வசிப்பதற்கு மனமில்லாததால் இரவில் மன்னர் அரண்மனையிலிருந்து ஓடிவிட்டார்.

உதவியை யாரிடம் நாடுவது? கைஸ் கோமகனார் கத்தோலிக்கப் படைகளின் அன்பைப் பெற்றிருந்தார். நவாரே நாட்டு ஹென்றியுடனும் பிராட்டஸ்டென்டுகளுடனும் எவ்வித உடன்பாட்டையும் செய்வதற்கு அவரால் இயலவில்லை. எனவே, சமரசத்தின் மூலம் கைஸ் கோமகனாரிடம் போக நேர்ந்த பொழுது மீண்டும் புனிதக் கூட்டின் படைகளோடு பெயரளவில் தாமும் ஒருவரானார்.

## பிளாய் என்னுமிடத்தில் முப்பேராயக் கூட்டம்

### கைஸ்கள் கொலையுண்டல்

பாரிசு நகருக்கு வெளியில் தம்முடைய அதிகாரம் ஓங்காமல் புனிதக் கூட்டின் அதிகாரம் ஓங்கியிருந்ததை மூன்றும் ஹென்றி விரைவில் உணர்ந்தார். பிரான்சு வரலாற்றில் நெருக்கடிகள் ஏற்படும் பொழுது பின்பற்றும் வழியை அவர் மேற்கொண்டார்; பிளாய் [1] என்னுமிடத்தில் ஸ்டேட்ஸ் ஜெனரல் (பிரெஞ்சு முப்பேராயம்) என்னும் பாராளுமன்றத்தைக் கூட்டினார்; தமது அதிகாரத்திற்கு மக்கள் பிரதிநிதிகளிடமிருந்து ஆதரவு கிடைக்குமென எதிர்பார்த்தார்; ஆனால், மூன்று பிரிவுகளில் பெரும்பான்மையோர், தமக்கு எதிரிகளாய் இருப்பதைக் கண்டார். முடியுடை மன்னராய் இருந்த கைஸ் கோமகனாரே உண்மையில் ஆட்சி புரிந்தார். புனித பார்த்தலோமியோ படுகொலையில் அரசர் முக்கியப் பங்கு கொண்டிருந்தார் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். இத்தாலிய ஆட்சி முறையின் கருத்துக்களை அவர் நன்கு கற்றிருந்தார்; கைஸ் நாட்டு ஹென்றி பெரும்பகைவராயும் தமது அவமானத்திற்குக் காரணமாயிருந்ததையும் உணர்ந்திருந்ததால், அவரைக் கொலை

[1] Blois.

செய்வதன் மூலம் தம்மை எதிரிகளிடமிருந்து விடுவித்துக்கொள்ளத் தீர்மானித்தார். கோமகனூர் தமக்கு ஏற்படவிருக்கும் இடரை அறிந்திருந்தார். ஆனால், அரசர் எண்ணியவாறே செய்வதற்கு அவருக்கு நெஞ்சுரமிருக்குமென அவர் எண்ணவில்லை. 1588 டிசம்பரில் கைஸ் கோமகனூர் அரசர் அறையில் நுழையும் போது கொல்லப்பட்டார். அவருக்கு உடன் பிறந்தாரான கார்டினலும் அடுத்தாற்போலக் கொல்லப்பட்டார். அரசர் நோயுற்று இறக்கும் தறுவாயிலிருந்த தாயாரான காத்தரின் டி-மெடிசியிடம் தம் செய்கையின் பயன்களைப் பெருமிதத்தோடு அறிவித்தார். அவர் எதிர்பார்த்தபடி பிரான்சின் உண்மையான மன்னராக அவரையாக்கிக் கொள்வதற்குப் பதில் அவருடைய செய்கைகள் தமது இராச்சியத்தை ஒன்றுமில்லாமல் செய்துவிடுமென அரசியார் எச்சரித்தார்.

## மூன்றும் ஹென்றியும் நவாரே நாட்டு ஹென்றியும் ஒன்று சேர்தல்

அரசியார் கூறியவாறே நிகழ்ந்தது. கூட்டின் மன்னரென்று மக்கள் வழங்கிய கைஸ் கோமகனூர் இறந்து போனூர். ஆனால், கூட்டுப் பிழைத்திருந்தது. கத்தோலிக்கச் சமயத்தின் கொள்கையில் அல்லது அக்கறையில் ஈடுபாடுகொண்ட அனைவரும், எக்காரணத்தை முன்னிட்டும் தம் வெற்றி வீரரைக் கொன்றவருக்குக் கீழ்ப்படிய மறுத்தனர். மூன்றும் ஹென்றி, நம்பிக்கை முற்றும் இழந்தவராய், எங்கெல்லாம் உதவி பெற முடியுமோ, அங்கெல்லாம் நட்பைப் பெற நேர்ந்தது. அவர் நட்பு ஏற்பட முடியாது எனத் தோன்றிய இடத்தில் கூட்டாளிகளைக் கண்டார். நவாரே நாட்டு ஹென்றியையும் அவரைப் பின்பற்றியவர்களான ஹ்யூக்நோக்கள், பொலிட்டிக்குகள் இவர்களுடைய உதவியையும் நாடினூர். அரச பதவிக்கு வாரிசுரிமை முறையை அழிக்கக் கூடாதென அக்கட்சி விளம்பரம்படுத்தியது. இந்த முடியாட்சிக் கொள்கைகள் மூன்றும் ஹென்றி ஒன்று சேர்வதற்கு இடம் கொடுத்தன. இரு எதிரிகளும் பகைவர் படைஞர்களும் சந்தித்தார்கள். மூன்றும் ஹென்றி அற்பமான கருத்து மாறுபாட்டிற்காகக் கிறித்துவ சமயத்தின் கீழ் எல்லாரும் ஒன்று சேர்வதைக் கைவிடக் கூடாதென வுரைத்தார். புனித பார்த்தலோமியா படுகொலைக்கு முக்கியமான காரணமாயிருந்த அவரது வாயிலிருந்து இம்மாதிரியான வார்த்தைகள் வெளிவந்தது விந்தையாயிருந்தது. மூன்றும் ஹென்றி நவாரே நாட்டு ஹென்றியுடன் நெருங்கிய கூட்டுச் சேர்ந்தார். அவ்விருவருடைய படைகளும் ஒன்று சேர்ந்து, நிலைமையைச் சமாளிக்கும் போலத் தோன்றியது. கத்தோலிக்கச் சங்கத்தின் படை, அவர்களுடன் சமவெளியில் போரிட முடியாமையால், பாரிசை நோக்கி முன்னேறியது. பாரிசு வீழ்ச்சியடையுமானால்—அதன் வீழ்ச்சி உறுதியாகுமெனத்

தோன்றியது—நான்காம் ஹென்றி ஹ்யூக்நோக்காக இருந்த போதிலும் பாரிசில் அவரது ஆட்சி ஏற்படும். ஆனால், பாரிசில் சமயத்தின் தீவிரக் கொள்கை கொதிப்படைந்திருந்ததால், டொமினிக்கன் துறவியா ரொருவர் முற்றுகையிடப்பட்டிருந்த நகரத்திலிருந்து வெளியேறி மூன்ரும் ஹென்றியைக் காண அனுமதியுடன் சென்று அவரைக் குத்திக் கொன்ருர்.

## மூன்ரும் ஹென்றி கொலையுண்ணல்

மூன்ரும் ஹென்றியின் மரணம் அரசியல் மேடையிலிருந்து ஓர் எளியவரை விலக்கியது. ஆனல், நிலைமையை மாற்றிய கத்தோலிக்க ரான மூன்ரும் ஹென்றியைப் பின்பற்றக் கத்தோலிக்கர் பலர் விரும் பினர். பிராட்டஸ்டென்டான நவாரே நாட்டு ஹென்றிக்குத் துணை புரிய அவர்களது மனம் இடம் தரவில்லை. நான்காம் ஹென்றி என்று அவர் பட்டம் பெற்ருலும் அவருடைய படை அளவில் குறைந்திருந்த தால் பாரிசைத் தொடர்ந்து முற்றுகையிட முடியாமல் இருந்தது. எனவே, அவர் மன்னராவதற்கு மீண்டும் சண்டையிடுந் தீரச் செயல் புரிபவர் ஆனுர்.

அவருக்குக் குறிப்பிடத்தக்க வெற்றிகள் கிடைத்தன. அவர் எலிச பெத்து அரசியாருடன் தொடர்பு கொள்ளுவதற்காக 'டீப்'[1] என்னு மிடத்தை நோக்கி விரைந்தார். எலிசபெத்தும் ஸ்பானிய ஆர்மடாத் தோல்விக்குப் பிறகு அவருக்கு உதவி செய்ய முடிந்தது. அவர் டீப்பின் அருகில் ஆர்கஸ் என்னுமிடத்தில் பெருவெற்றியை அடைந் தார்; அதையடுத்து ஈவ்ரி[2] எனும் முக்கியமான போரில் பகைவர்களை முறியடித்தார். வெற்றி அவர் கையில் இருந்தது போலத் தோன்றியது. அவருடைய வீரத்தையும் தயையையும் பற்றிய கதைகள் தோன்றின. அவருடைய அப்பண்புகள் எதிரிகளுட்பலரை அவர் பக்கஞ்சேரச் செய்தன. ஈவ்ரிக்குப் பின், அவர் பாரிசை நோக்கி முன்னேறி முற்று கையைத் தொடங்கினுர். கோட்டையிலிருந்தவர்கள் பட்டினி கிடக்கும் நிலையை அடைந்தார்கள். நகரத்திற்குள் கத்தோலிக்கர்களது ஆர்வம் அதிகமாய் இருந்த போதிலும், சிறிது காலத்திற்குள் பிரான்சின் தலை நகரம் ஹ்யூக்நோக்களின் மன்னர் கையில் வந்துவிடும் போலத் தோன்றியது. ஆனல், மூன்ரும் ஹென்றியின் மரணம் புனிதச் சங் கத்தின் நிலையை மாற்றியது; அதோடு எதிரிகளின் நிலையையும் மாற்றியது. இப்போது புனிதச் சங்கம் பிரெஞ்சுக்காரர்களைப் பகை வர்களோடு சேராமல் தடுப்பதற்குத் தமக்குதவியாய் இருக்குமென்றும் பிரெஞ்சு முடியைத் தாம் அடைவதற்கு துணை செய்யும் என்றும் ஸ்பெயின் மன்னரான இரண்டாம் பிலிப்பு எண்ணினுர். கத்தோலிக்கச்

[1] Dieppe. [2] Ivry.

சங்கம்—முக்கியமாகப் பாரிசிலிருந்தது—நான்காம் ஹென்றி மீது கடும்பகைமை கொண்டிருந்தது.

## பார்மாவினுல் பாரிசு விடுதலையடைதல்

எனவே, எதையும் செய்வதற்குத் தயங்காது அச்சங்கத்தினருள் பலர் பிரான்சைப் பழைய விரோதியான ஸ்பெயினிடம் விட்டுவிடுவதற்கு விருப்பம் கொண்டிருந்தனர். வேறு சிலர் இவ்வெண்ணத்திற்குக் கடுமையான எதிர்ப்புக் கொண்டிருந்ததுடன் கொலையுண்ட கைஸ் கோமகனுரின் உடன் பிறந்தாரான மையினியினுடைய [1] உரிமைகளையும் ஆதரித்தனர். இங்கிலாந்திலும், நெதர்லாந்திலும் தாம் பெற்ற தோல்விகளுக்கு ஈடு செய்யக் கூடும் என்ற எண்ணத்துடன் மேலே கண்ட பெரிய எண்ணங்களை மனத்தில் கொண்டிருந்ததனுல் பாரிசு வீழ்ச்சியுறுவதைக் காண பிலிப்பால் முடியவில்லை. எனவே, நெதர்லாந்தில் போரை நடத்திக்கொண்டிருந்த அவரது படைத்தலைவரான பார்மா [2] என்பவரைப் பாரிசின்மீது படையெடுத்து அதை விடுவிக்குமாறு உத்தரவிட்டார். பாரிசை முற்றுகை செய்து கொண்டிருக்கும் போது, நான்காம் ஹென்றி ஸ்பெயின் நாட்டுப் படைகளிடம் தாம் சிக்குவதை விரும்பவில்லை. நகரம் விடுதலையடைந்தது. அவர் சண்டைக்காக ஸ்பெயின் படையைக் குறித்து முன்னேறினுர். பார்மா அவருடைய நோக்கம் நிறைவேறியதும வெளியேறினுர். ஓராண்டிற்குப் பின், ஹென்றி, ரூவன் [3] நகரத்தை முற்றுகையிட்டார். பாரிசிற்கு நதி வழியாகச் செல்லும் பாதையில், அந்நகரம் முக்கியத் தலைமை கொண்டிருந்தது. அங்கும் அவருக்கு வெற்றி கிட்டுமெனத் தோன்றிய போதிலும், பார்மாவின் வெற்றிகரமான தாக்குதலால், எதிர்பார்த்த வெற்றிகிட்டாது போயிற்று. இதுதான் ஸ்பெயின் நாட்டுப் படைத்தலைவரின் கடைசி வீரச்செயலாகும். போரிலடைந்த காயம் காரணமாகச் சிறிது காலத்திற்குள் அவர் இறந்து போனுர்.

## நவாரே நாட்டு ஹென்றியின் சமய மாற்றம்

முடிவற்ற போரின் முடிவு, அதிக தூரத்திலிருந்தாகத் தெரிந்தது. ஹென்றியால் அவருடைய பகைவர்களை வெல்ல முடியவில்லை. பிரான்சும், ஸ்பெயின் மன்னருடைய ஆட்சியை ஏற்க விரும்பவில்லை. கத்தோலிக்கச் சங்கம் முப்பேராயங்களின் கூட்டத்தைக் கூட்டியது. ஆனுல், கருத்து வேறுபாட்டால், முடிவு ஏற்படவில்லை. சிறிது காலமாகவே, இம்மாதிரியான முட்டுக்கட்டையிலிருந்து தப்புவதற்கான வழி நான்காம் ஹென்றிக்குத் தோன்றியிருந்தது. அவர் பிராட்டஸ்டென்டாயிருக்கும் வரையில், பிரான்சு அவருக்குக் கீழ்ப்படியாது; கத்தோலிக்க

[1] Mayenne. [2] Parma. [3] Rouen.

ராக அவரைக் கருதினல், அவருடைய ஆட்சியை ஓரமயம் வரவேற்கக் கூடும். அவருடைய சமயக் கருத்துக்கள் நிலையற்றிருந்தன. கடுஞ் சமயத் தூய்மையினர்,[1] கால்வினியர் ஆகியவரின் முறைகளிலிருந்து இயலும் வரை விலகியேயிருந்தார். ஒழுக்க வரம்பற்ற அவரது சொந்த வாழ்வின் போக்கு, பல ஆண்டுகளாகவே கால்வினியத் தலைவர் களைப் புண்படுத்தியது. அவர் தமது சமயத்தை மாற்றிக்கொள்ளுவதில் பேரவாக் கொண்டிருந்தார். அதனுடன் அவருடைய ஆலோசனைக் குழுவிலிருந்த பிராட்டஸ்டென்டுகளும் அவர் எண்ணியபடி செய் வதற்கு ஆலோசனை கூறினர்கள். ஒரு புறத்தில் பிரான்சில் சமா தானமும் செழுமையுமிருந்தன. மற்ருெரு புறத்தில், அவர் உறுதி யற்ற பிடிப்புடன் கொண்டிருந்த சமயக் கருத்துக்களுக்கு உண்மையாய் நடந்துகொள்ளுவதிலுமிருந்தது. 'பெரிய முழுக்கு'[2] என்று அவர் வழங்கிய மத மாற்றத்தை உறுதிப்படுத்திக்கொண்டார்; கத்தோலிக்கச் சமயத்தைக் கற்பது என்னும் கேலிக்கூத்தில் ஈடுபட்டார்; உறுதியேற் பட்டதென விளம்பரஞ்செய்துவிட்டு, 1593-ல் மாஸ் செபத்திற்குப் போனுர்.

## நான்காம் ஹென்றியிடம் பிரான்சு சரணடைதல்

அவரது கொள்கை மாற்றம் மந்திர சத்தி போல் வேலை செய்தது. கத்தோலிக்கச் சங்கத்திடம் மிக்க பற்றுறுதி கொண்டிருந்த மாவட்டங் களிலுள்ள நகரங்கள் கூட ஒன்றன்பின் ஒன்ருக, நீண்டகாலமாக எவருடைய வீரத்தையும் அமைதியையும் புகழ்ந்தனவோ, அவருடைய வருகையைத் தங்களது வாயிற்கதவுகளைத் திறந்து ஏற்றுக்கொண்டன. பாரிசு நகரம் சிறிது காலம் அவரிடம் பகைமை கொண்டிருந்தது. அது ஸ்பெயின் படைகளின் வசமிருந்தது. அங்கும் பெரும்பான்மையினர், சங்கத்தின் கடுந்தீவிரக் கொள்கைகளை உறுதியுடன் எதிர்க்கலாயினர்; பாரிசு நகரம் மீண்டும் பிரான்சுடன் இணைந்து மறுபடியும் ஒரே அரசரின் கீழ் வருவதை விரும்பினர். சதியின் விளைவாகப் பாரிசின் வாயிற் கதவுகள் திறந்து விடப்பட்டன. ஹென்றி உள்ளே நுழைந்தார். மக்கள் பேரார்வத்துடன் அவரை வரவேற்ருர்கள். ஹென்றி கூறியது போல, மக்கள் மீண்டும், மன்னர் முகத்தைக் காணுவதில் எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டார்கள்.

## ரோமுடன் ஹென்றி சமரசம் செய்துகொள்ளல்

சிறிது காலத்திற்கு மதமாற்றத்தைப் போப்பாண்டவர் ஏற்றுக் கொள்ளாமலிருந்தார். போப்பாண்டவர் மன்னிப்பு வழங்கும் வரையில் பிரான்சில் அவரது பிடிப்பு உறுதியுடனிருக்கவில்லை. 1595-ல் எதிர்

[1] Puritans. [2] The great plunge.

நோக்கிய முடிவு ஏற்பட்டது. செய்த குற்றத்திற்கு உண்மையாக வருந்துவது என்ற முறைப்படி, வருத்தம் தெரிவித்த பின்னர் நான்காம் ஹென்றி, கத்தோலிக்கத் திருச்சபையின் தலைவரால் மன்னராக ஏற்றுக்கொள்ளப்பட்டார்.

## வெர்வின்ஸ் உடன்படிக்கை

ஸ்பெயினுடன் போர் தொடர்ந்து நடந்தது. தொடக்கத்தில் இப் போரில் முன்னேறுவதில் ஹென்றியும் பிரெஞ்சுப் படைகளும் தடைகளைக் கண்டனர். பாரிசின் சுற்றுப்புறங்களில், பேரிடரை விளைவிக்கக் கூடிய தாக்குதலினின்றும் ஸ்பெயின் நாட்டினரை விரட்டியடிப்பதற்கு முன், ஹென்றி தம் முழுச்சக்தியுடன் போரிலிறங்க வேண்டியதாயிற்று. ஆனால், ஸ்பெயின் களைப்படைந்திருந்தது. ஸ்பெயின் நாட்டு மன்னர், தாம் முழுமனத்துடன் கொண்டிருந்த எண்ணங்கள் ஒன்றன்பின் ஒன்றாக நிறைவேறாததைக் கண்டார். எனவே, 1598 - ல் வெர்வின்ஸ் உடன்படிக்கையை [1] ஏற்றுக்கொண்டார். மீண்டும் பிரான்சும் ஸ்பெயினும் சமாதானமடைந்தன.

## பிரான்சின் சீரமைப்பு

இராச்சியத்தினுள்ளிருந்தும் வெளியிலிருந்தும் கடுமையான எதிர்ப்பின்றி நான்காம் ஹென்றி ஆட்சி புரிந்தார். அவர் செய்ய வேண்டியிருந்த இராச்சியப் புனரமைப்பு வேலைகள் மிகவும் கடுமையாயிருந்தன. முப்பது ஆண்டுகள் உள்நாட்டுப் போர் நடந்ததால், பிரான்சு உருக்குலைந்து காணப்பட்டது. பெரிய மாவட்டங்கள் நிலங்களைச் சாகுபடி செய்வதை விட்டுவிட்டன; ஓநாய்கள் கிராமங்களையும் பட்டணங்களையும் நோக்கிப் படையெடுக்க ஆரம்பித்தன; மக்களின் பழக்கங்கள், நாகரிகமற்றவர்களுடைய நிலையை நோக்கிச் சென்றன எனக் கேள்வியுறுகிறோம். ஸ்பெயின் நாட்டினர்களுடைய தோல்வியைக்காட்டிலும், துன்பத்திலிருந்து நாட்டை மீட்பதும், ஐரோப்பிய நாடுகளுக்குள் செழிப்பும் முன்னேற்றமும் கொண்டதாகப் பிரான்சை மீண்டும் அமைப்பதும் மிகக் கடினமாயிருந்தன.

## நான்டீஸ் கட்டளை

முதலில் செய்யப்படவேண்டுவது சமய வரையறையாகும். கத்தோலிக்கர்கள், பெரும்பாலும் அரசரிடத்தில் மனநிறைவு கொண்டிருந்தார்கள். ஆனால், மன்னருடைய பழைய பிராட்டஸ்டென்டு ஆதரவாளர்கள் பொறுமையுடனும் மனநிறைவின்றியுமிருந்தார்கள்.

[1] Treaty of Vervins.

மன்னர் நிகழ்த்திய இறுதிப் போரில், துன்ப வேளைகளில் அவரைக் காப்பாற்றியவர்களும், ஈவ்ரிப்போரில் கடுமையாகப் போராடி அவருக்கு வெற்றியைத் தேடித் தந்தவர்களுமான மக்களுட் பலர், அவருடைய படையிற்சேர மறுத்தனர். 1598-ல் அவர்களுடைய நலன் கருதி, புகழ்பெற்ற நான்டீஸ் கட்டளையை[1] வெளியிட்டார்; இக்கட்டளை, எக்காலத்துமிருக்குமென்றும், மாற்ற முடியாதென்றும் அறிவித்தார். பிரான்சிலுள்ள பிராட்டஸ்டென்டுகளுக்கு ஐரோப்பாவில் வேறெந்த நாட்டிலும் சமயத்திலிணங்காதவர்கட்கு அளிக்கப்பட்டதைவிட மேலான நிலையை இக்கட்டளையளித்தது. குறிப்பிட்ட பட்டணங்களிலும், பெரிய பிரபுக்களினில்லங்களிலும் வழிபாட்டுரிமையளிக்கப்பட்டது. அவர்களுக்கு அரசாங்கத்தில் வேலை வாய்ப்புக்களும் பல்கலைக்கழகங்களில் இடம்பெறுவதற்கு வசதியுமளிக்கப்பட்டன. பாரிசிலும் மற்றவிடங்களிலும் பிராட்டஸ்டென்டுகள் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரிப்பதற்கெனத் தனியாக நிறுவப்பட்ட நீதிமன்றங்கள் மூலம் அவர்களுக்கு நியாயம் வழங்குவது உறுதியளிக்கப்பட்டது. இந்நீதிமன்றங்களில், பிராட்டஸ்டென்டு நடுவர்கள் இடம் பெற்றார்கள். இறுதியாகச் சில பட்டணங்களும், கோட்டைகளும், பிராட்டஸ்டென்டுகள் வசம் ஒப்படைக்கப்பட்டன. கோட்டையிலிருந்த படையின் அதிகாரிகள் பிராட்டஸ்டென்டு கட்சியின் தலைவரால் நியமிக்கப்பட்டார்கள் இவ்வாறு, இந்நகரங்கள் அவர்களுக்குப் புகலிடமாய் விளங்கின. அவர்களுடைய உரிமைகளுக்கு ஊறு விளைவிக்கும் எக்கொள்கைக்கும் வலுவான எதிர்ப்பைச் செய்ய இவை உதவியாயிருந்தன. இக்கட்டளை போற்றுதற்குரியது. சமய மாறுபாடுகள் சம்பந்தமாக, நியாயமும் அறிவும் கொண்ட சட்டத்தை ஐரோப்பா அதுவரை கண்டறிந்ததில்லை. இது பழக்கத்திலிருக்கும் போது, சமய விஷயங்களிலும், பொருளாதாரப் பிரச்சினைகளிலும், பிரான்சு அதிக இலாபத்தையடைவதற்குத் துணையாயிருந்தது இதிற் காணப்பட்ட பேரிடரும், குறைபாடும், அக்காலத்து எண்ணத்திற்கு மிகவும் அப்பாற்பட்டனவாயிருந்தன. மன்னரும், அக்காலத்துக் கற்றறிந்த அரசியல்வாதியர் சிலரும் சகிப்புத் தன்மையில் நம்பிக்கை கொண்டிருக்கலாமே தவிர, பிராட்டஸ்டென்டுகளோ, கத்தோலிக்கர்களோ, இதையொரு கொள்கையாக ஏற்றுக்கொள்ளவில்லை. எனவே, நூற்றாண்டுகளுக்குள்ளாகவே, வாய்ப்பையொட்டி, நான்காம் ஹென்றியின் பேரரால் இக்கட்டளை திரும்பப் பெறப்பட்டது.

## நான்காம் ஹென்றியும் இயேசு சங்கத்தாரும்

இயேசு சங்கத்தாரால் ஹென்றிக்குத் தொல்லைகள் இருந்து வந்தன என்பதைக் கவனிக்கவேண்டும். பிரான்சில், மற்ற இடங்களி

[1] Edict of Nantes.

விருந்ததைப் போல, இயேசு சங்கத்தார், வலியத் தாக்கும் கத்தோலிக்கக் கட்சியின் தலைவராயிருந்தனர். ஹென்றியைக் கொலை செய்வதற்காக நடந்த முயற்சியில் இயேசு சங்கத்தாரும் தொடர்பு கொண்டிருப்பரோ என்னும் ஐயமேற்பட்டது. எனவே, அவர்கள் பிரான்சின் எல்லைக் கோட்டிலிருந்து கடத்தப்பட்டார்கள். சிறிது காலத்திற்குப் பின், அவர்கள் திரும்பி வந்தார்கள். போப்பாண்டவருக்கும் ஹென்றிக்குமிடையே உண்மையான பிளவு இல்லாதிருந்தது.

## முடியாட்சி வரம்பிலாவாட்சியாதல்

அரசியலமைப்பு விவகாரங்களில், பழையதைக்காட்டிலும் இப் புதிய முடியாட்சி, வரம்பிலா அதிகாரத்தைப் பெற்றிருந்தது. நீடித்திருந்த உள்நாட்டுப் போரின் பயனாக - இத்தகைய குழப்பமான காலப் பிரிவுகள் செய்தது போல—அரசாங்கத்தின் அதிகாரம் குறிப்பிடத்தக்க வகையில் வலுவடைந்தது. பிரெஞ்சு முப்பேராயம் புதிதாகக் கூட்டப்படவில்லை. முப்பேராயம், கத்தோலிக்கச் சமயம் உயர்குடியாட்சி இவற்றின் நலனைக் கருதி, முடியாட்சிக்கு எதிரியாயிருந்த சத்திகளோடு இணைக்கப்பட்டிருந்தது. பொதுமக்கள் கருத்தின் துணையை அரசர் விரும்பிய பொழுது, அவராலேயே தேர்ந்தெடுக்கப்பட்ட 'முக்கியச் சிறப்பு வாய்ந்தவர்களின்'[1] குழுவைக் கூட்டினர்; அக் குழுவின் முன், தமது தேவையையறிவித்து ஆலோசனையைக் கேட்டார். பாரிசின் உயர்நீதிமன்றம் (பார்லிமென்டு) முக்கியமானதொரு விஷயத்தில் மாறுதலையடைந்தது. அதன் உறுப்பினர்கள் 'பவுலெட்டு'[2] எனும் வரியைச் செலுத்தும்படி வேண்டிக்கொள்ளப்பட்டார்கள். இதைச் செலுத்துவதனால் அவர்களது பதவியின் காலம் பாதுகாப்புற்றதுடன் வழிவழியாக வருவதாகவும் செய்யப்பட்டது. அவர்கள் இது வரை இருந்தது போல, அரசரின் கட்டுப்பாட்டிற்கு அடங்கியவர்களாய் இருக்கவில்லை. அடுத்த நூற்றாண்டிலுண்டான தொல்லைகளில் பங்கு கொண்டதைப் பற்றி அக்குழு ஒருவாறு விளக்கம் தருகிறது.

## ஸல்லி

பொருளாதாரப் பிரச்சினையைப் பற்றி விரைவில் தீர்வு காண வேண்டியிருந்தது. இவ்விஷயத்தில் மன்னருக்கு அவருடைய புகழ் பெற்ற அமைச்சரான ஸல்லி[3] என்பார் பேருதவியாயிருந்தார். ஸல்லி பிராட்டஸ்டென்டாயிருந்தார்; மன்னருக்கு மதமாற்றத்தைப் பற்றிப் பரிந்துரைத்தார். அவர் மிகவும் நாணயமானவர். நடத்தையிலும் சிறிய விஷயங்களை அறிவதிலும் பொறுமைப் பண்பு அவரிடம்

[1] Notables. [2] Paulette. [3] Sully.

காணப்பட்டது. அவர் அறிந்துகொள்ள முடியாததும் சிக்கலுடையதுமான பொருளாதாரப் பிரச்சினைகளில் ஒழுங்கை ஏற்படுத்தினர்; கால்வாய்கள், சாலைகள் முதலியவைகளை அமைப்பதன் மூலம், விவசாயத்தைப் பெருக்குவதற்கானவைகளைச் செய்தார்; விவசாயத்தில் புதிய முறை பற்றிய கருத்தைத் தெரிவித்தார். அவரால் பிரான்சில் பட்டுப் புழு முதன்முதலாகத் தோற்றுவிக்கப்பட்டதன் மூலம், பட்டுத்தொழில் நாட்டில் முக்கியமானதாயிற்று. ஆலைத் தொழிலில் அவருக்கு அவ்வளவு விருப்பமில்லை. ஆனல், மன்னருக்கு அதில் அதிக விருப்பமிருந்தது. அடுத்த நூற்றுண்டின் நடுப்பகுதியில் மேலான நிலையையடைந்த பிரான்சின் தொழில்களின் தொடக்கங்களை நான்காம் ஹென்றியின் ஆட்சியின் இறுதியாண்டுகளில் நன்கு காணலாம்.

## ஜூலியர்ஸ் ஸ்வீகாரமும், நான்காம் ஹென்றியின் கொலையும்

அரசருக்கு நெடுநாளாக முறையான வாரிசு இல்லை. அவருக்குப் பின், பட்டத்திற்கு வருவது பற்றிய பிரச்சினை தொல்லையை உண்டு பண்ணுவதாயிருந்தது. வெலாய் நாட்டு மார்கரெட்டை மணஞ்செய்து கொண்டிருந்தது, விலக்கப்பட்டது. அவர் 1600-ல் டஸ்கனியின் மிக்குயர் கோமகனரின் உறவினரான மேரி-டி-மெடிசியை மணந்து கொண்டார். அவருக்கு ஒரு மகவு பிறந்தது. அது பதின்மூன்றும் லூயி என அவருக்குப்பின் பட்டமெய்தவிருந்தது. அவரது ஆட்சியின் இறுதியாண்டுகளில், ஜெர்மனியின் நிலை கவலைக்கிடமாயிருந்தது. ஜூலியர்ஸ் சிற்றரசு[1] அரசரின்றியிருந்தது. ரைன் நதிக்கரையில் ஜெர்மனியிலிருந்து நெதர்லாந்துக்குப் போகும் வழியில் அது அமைந்து இருந்ததால், முக்கியமான இடமாயிற்று. எனவே, ஐரோப்பா முழுவதும் இது விஷயத்தில் கவலை கொள்ளலாயிற்று. பிராட்டஸ்டென்டுகளுடன் சேருவதா, அல்லது ஹாப்ஸ்பர்கை ஆண்ட கத்தோலிக்கக் குடும்பத்துடன் சேருவதா என்பது பெரும் பிரச்சினையாயிருந்தது. இதனல் ஒரு பெரிய போர் மூளக்கூடுமோவென ஐயந் தோன்றியது. காரணம், ஜெர்மனியில் நாம் பின்னர்க் காணப்போவது போல, தீ எளிதில் பற்றிக்கொள்ளக் கூடிய பொருள் இருந்தது. நான்காம் ஹென்றி, பிராட்டஸ்டென்டுகளின் பக்கலிற் சேர்ந்தார்; ஜூலியர்ஸைக் காப்பாற்றுவதற்காக ஒரு பெரிய படையை நடத்திச் செல்லத் தம்மைத் தயாரித்துக்கொண்டிருந்தார். அவருக்கெதிராக, தீவிரக் கத்தோலிக்கர்களின் பகைமையை இந்நிலை விழித்தெழச் செய்தது. 1610-ல் புறப்படத் தயாராகிக் கொண்டிருக்கும் போது, ஒரு கொலையாளியால் அவர் கொல்லப்பட்டார்.

[1] Principality of Juliers.

சாதாரணமாகக் காணப்படும் பிரான்சின் வரலாறுகளுடன், வில்பர்ட்டு என்பார் எழுதிய **'நவாரே நாட்டு ஹென்றி'**; எடித் ஸிகேல் என்பார் எழுதிய, **'காத்தரின்-டி-மெடிசியும் பிரெஞ்சு சமயச் சீர்திருத்தமும்'**; ஆம்ஸ்ட்ராங்கு என்பார் எழுதியுள்ள, **'பிரெஞ்சு சமயப் போர்கள்'**; பெஸன்டும், ஓயிட்ஹெடும் எழுதியுள்ள **'கோலினியின் வாழ்க்கை வரலாறு'**; இக்காலத்தைப் பற்றி எம். ரோமியர் என்பார் எழுதியுள்ள நூல்கள் ஆகியவை அதிக விளக்கம் தருவனவாயுள்ளன. முக்கியமாக, **'அரசி காந்தரின் டி-மெடிசி'** என்னும் நூல் படித்தற்குரியது.

# 6. பதினாறும் நூற்றாண்டில் இங்கிலாந்து

I

## பிரிட்டன் தனி உலகு

பதினாறும் நூற்றாண்டில் ஐரோப்பாவில், பெரிய வல்லரசுகளின் வளர்ச்சியைப் பற்றிச் சுருக்கமாக முன்னர்க் கண்டோம். இதே காலத்தில், இங்கிலாந்தின் வளர்ச்சியையும் நற்பேற்றையும், பிரான்சு, ஸ்பெயின், ஜெர்மனி முதலிய நாடுகளின் வளர்ச்சியோடு ஒப்பிடுவது இவ்வதிகாரத்தின் முக்கிய நோக்கமாகும்.

## இங்கிலாந்தின் அரசியலமைப்பு—கடலளித்த வெகுமதி

ஐரோப்பாக் கண்டத்திலிருந்து, இங்கிலாந்து நிலவியல்படி பிரிந்திருப்பது, ஐரோப்பாவிலிருந்து தனித்திருக்கும் ஓர் உலகம் போன்று இங்கிலாந்தைத் தோன்றச் செய்கிறது. எனவே, கண்டத்தி லிருந்த அரசுகளுடன் சிறிதும் தொடர்புஇல்லாமலே, இந்நாட்டு வரலாற்றைக் கூற இயல்கிறது. எனினும், இங்கிலாந்து, தோற்றத்தில் தனித்திருப்பது போலக் காணப்படினும், உண்மையில் அது அவ்வா றில்லை. 'நட்பைக் கெடுக்கும் கடல்', [1] இங்கிலாந்தின் வாழ்க்கையில் பேராதிக்கம் கொண்டிருந்தது என்பது உண்மைதான். எடுத்துக் காட்டாக, 1914 வரையில் ஐரோப்பாக் கண்டத்து அரசுகளின்மீது சுமத்தப்பட்டிருந்த இராணுவச் சுமைகள், இங்கிலாந்திற்குத் தேவை யில்லாதனவாக விலக்கப்பட்டிருந்தன. இங்கிலாந்திற்கென நிலையான படையில்லை; அதற்குத் தேவையுமில்லாதிருந்தது. எனவே,

[1] 'Estranging Sea'.

முடியாட்சியின் அதிகாரங்களை மக்கள் தற்காப்புடன் எல்லைகளுக்குட் படுத்த முடிந்தது. அதனுடன் இங்கிலாந்து மன்னர்களால், பிரான்சு, ஸ்பெயின் மன்னர்களைப் போலவும், ஜெர்மனியில் பல சிற்றரசர்கள் செய்ததைப் போலவும், இராணுவ நடவடிக்கை மூலம் பாராளு மன்றத்தின் எதிர்ப்பு நசுக்க முடியாதவாறமைந்தது. பிரிட்டிஷ் பேரரசைப் போலவே, இங்கிலாந்தின் அரசியலமைப்பும் கடல் அளித்த வெகுமதியாகும். நில நூற்படி ஐரோப்பாவினின்றும் தனித்திருந்தது காரணமாக, ஓரளவு எல்லா இயக்கங்களும்—அரசியல், சமயம், அறி வாற்றல் முதலியவைகளைச் சார்ந்தன—ஐரோப்பாவிலிருந்ததைக் காட்டிலும், இங்கிலாந்தில் மாற்றுத் தோற்றத்தைக் கொண்டனவாகத் தம்மை அறிமுகப்படுத்திக்கொண்டன.

இருந்த போதிலும், இங்கிலாந்தின் வரலாற்றின் தனித் தன்மையை மிகைபடக் கூறுவது எளிதாகும். நில நூற்படியும், அரசியற்படியும், சமயப்படியும்—ஒவ்வொரு நோக்கு முனையி லிருந்தும்—பிரிட்டிஷ் தீவுகள் ஐரோப்பாவின் ஒரு பகுதியேயாகும். ஐரோப்பிய நாகரிகத்தின் முழு அரசியல் பண்பாட்டிலிருந்து இங்கிலாந்தின் வரலாற்றைப் பிரித்து நன்கு தெரிந்துகொள்ள முடியாது. 16ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் வரலாறு ஐரோப்பாவின் ஏனைய பகுதிகளோடு நெருங்கிய தொடர்பு கொண் டிருந்தது. அதன் வளர்ச்சி சில வகைகளில் பிரான்சின் வளர்ச்சிக்கு இணையாயிருந்தது.

## டியூடர் முடியாட்சித் தொடக்கம்

சிறப்பாக இங்கிலாந்தின் அரசாங்க அமைப்பில் இது குறிப்பிடத் தக்கதாயிருந்தது. லங்காஸ்டிரிய[1] வமிசத்தைச் சேர்ந்தவர்களின் ஆட்சிக் காலத்தில், இங்கிலாந்தின் அரசாங்கத்தைக் கட்டுப் படுத்துவதற்குப் பாராளுமன்றம் மேற்கொண்டதும், பருவமெய்தாத முயற்சிகளின் பயனாக ஓரளவு உரோசாப்பூக்கள் போர்கள் [2] நடந்தன. துயர் நிறைந்த அவ்வூழியில் ஏற்பட்ட துன்பம், குழப்பம் இவை களின் எதிர் விளைவு, அரசாங்க அமைப்பை ஒருமுகப்படுத்துவதற்கும், வலிமை பொருந்தியதும் சுயேச்சையானதுமான முடியாட்சியை அமைப்பதற்கும், ஏற்றதாகச் சூழ்நிலையைத் தோற்றுவித்தது. டியூடர் முடியாட்சியை [3] வல்லாட்சி என வழங்குவது தவறாகும். ஏனென்றால்—அது மக்களின் விருப்பப்படி இருந்தது எனக் காரணமிருந்தது—பாராளுமன்ற ஆட்சியைவிட அவர்களது ஆட்சி பொதுமக்களின் விருப்பத்திற்கேற்ப இருந்தது; பொது மக்கள் அம்முடியாட்சியில் அவர்களது பிரதிநிதியையும் பாதுகாப்பாளரையும் கண்டனர். உள்

[1] Lancastrian dynasty. [2] Wars of the Roses, [3] Tudor Monarchy.

நாட்டுப் போரிலிருந்து நாட்டில் அமைதியையும், பொருளாதாரம், தொழில் முதலியவைகளின் வளர்ச்சிக்கான நல்வாய்ப்பையும் அளித்ததால், ஏழாம் ஹென்றியின் ஆட்சி பொது மக்களால் வரவேற்கப்படுவதாயிருந்தது. அவரது ஆட்சியும், குணவியல்பும், பிரான்சு மன்னரான பதினொரும் லூயியின் ஆட்சிக் குணவியல்புகளுடன் பெரிதளவு நெருங்கிய முறையில் ஒத்ததாயிருந்தது. இவ்விரு மன்னர்களும் உள் நாட்டுப் போர்களுக்குப் பின், அவரவர் நாட்டில் அமைதியை ஏற்படுத்தினர். இருவரும் மரபாக வந்த தன்மதிப்பு, மேன்மை முதலியவைகளைப் பாராட்டவில்லை.

## எட்டாம் ஹென்றி

எட்டாம் ஹென்றியின் ஆட்சியின் முற்பகுதியை அவருக்கு முன் நடந்த ஆட்சியோடு ஒப்பிடும் போது, விருவிருப்பாயிருப்பதுடன் உற்சாகம் நிறைந்த வெளிநாட்டுக் கொள்கையையும், துணிகரச் செயல்களையும் கொண்டதாய் அம்முற்பகுதி இலங்கியது. பிற்பகுதியில் நாட்டில் சமயம், திருச்சபை முதலியவைகளைச் சார்ந்த மாற்றங்கள் ஆகியவற்றை அவர் தோற்றுவித்த பொழுது மக்களிற் சிலர் மாறுதலிருக்க வேண்டும் என்ற எண்ணத்திற்காகவும், மற்றும் சிலர், அரசரிடமிருந்து அவைகள் தோன்றின ஆதலின், அரசரின் அதிகாரத்தை வலுப்படுத்துவதற்குச் சார்ந்தியங்கும் என்ற நோக்கத்துடனும் அம்மாற்றங்களை ஏற்றுக்கொண்டனர். ஆரும் எட்வர்டு, மேரி இவர்களது ஆட்சியிலும் பெருமாறுதல்களிருந்தன. ஏழாம் ஹென்றியும், எட்டாம் ஹென்றியும் தேசீய மன்னர்களாயிருந்ததைப் போன்று, இவ்விருவருள் ஒருவராவதிருக்கவில்லை. இவ்விருவரும் அரசியல், சமூகம் முதலிய கட்சிகளின் பகர ஆள்களாயிருந்தார்களேயன்றி, நாட்டின் பகர ஆள்களாய் இருக்கவில்லை.

## எலிசபெத்து அரசியார்

எனவே, உள்நாட்டுப் போரின் காட்சி போன்ற குழப்பங்களுக்கு இந்நாடு உள்ளாயிற்று. எலிசபெத்து அரசியார் பட்டமெய்தியதும், முடியாட்சி மீண்டும் வலிமை பெற்றது; தேசீயமுமாயிற்று. பொது மக்களின் மதிப்பையும் பெற்று, அவ்வாட்சி, அக்காலத்திலிருந்திருக்கக் கூடிய வேறெந்தப் பாராளுமன்ற ஆட்சியைக்காட்டிலும், பொது மக்களின் உண்மையான பிரதிநிதித்துவம் வாய்ந்ததாய் இருந்தது. இராணுவ அதிகாரத்தைக் கொண்டு அவர் ஆட்சி புரியவில்லை. ஏனென்றால், அவர் வசமிருந்த படைகள் மிகவும் சிறியனவாயிருந்தன. இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து முதலிய பகுதிகளில் தொல்லைகள் ஏற்பட்டபொழுது, அமைதியை நிலை நாட்ட அப்படைகள்

போதுமான அளவில்லை என்பது மெய்ப்பிக்கப்பட்டது. ஆனால், பெரும் பகுதி, முடியாட்சிப்பற்று மிக்க ஆர்வத்துடனிருந்த நாட்டால் ஆதரிக்கப் பட்டது. அதனுடன், இக்காலத்தில் ஐரோப்பாவிற் பெரும்பான்மை நாடுகளிலேற்பட்ட உள்நாட்டு எதிர்ப்புக்களின் பட்டறிவில் ஒரு சிறிதளவு கூட இல்லாமல் இங்கிலாந்து பாதுகாக்கப்பட்டது.

## இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் புது முடியாட்சி

பொதுவாகப் பதினாறும் நூற்றாண்டு 'புது முடியாட்சியின்'[1] எழுச்சியைக் கண்டது. கத்தோலிக்கத் திருச்சபைகளின் அதிகாரம் வலிமை குன்றவே, இவ்வதிகாரத்தின் பெரும்பகுதி, ஐரோப்பாவில் ஆட்சி புரிந்த மன்னர்களிடம் மாறியது. திருச்சபைக்கும் அரசாங்கத் திற்குமிடையே நடந்து வந்த நெடுநாளைய போரில், திருச்சபை இந்நூற்றாண்டில் தோல்வியுற்றது. அதன்கண்ணிருந்த அதிகாரம் நாட்டு அரசாங்கத்தின் உண்மைப் பிரதிநிதிகளாயிருந்த மன்னர்களை யடைந்தது. இந்நிலை, ரோமுடன் தொடர்புகொண்டிருந்த நாடு களிலும் (ஸ்பெயின், பிரான்சு போன்றவை), தொடர்பற்றிருந்தவைக ளான இங்கிலாந்து போன்ற நாடுகளிலும் உண்மையில் ஒரேமாதிரியா யிருந்தது. ஏழாம் ஹென்றி, எட்டாம் ஹென்றி, எலிசபெத்து இவர் களது நிலை, அதிகாரம், பிரான்சை யாண்ட ஐந்தாம் சார்லசு, பன் னிரண்டாம் லூயி, முதலாம் பிரான்சிஸ், நவாரே நாட்டு ஹென்றி முதலியவர்களுடைய அதிகாரங்களுடன் அமைப்பு ஒற்றுமை கொண் டிருந்தது. அதனுடன், ஸ்பெயின் மன்னரான இரண்டாம் பிலிப்பின் அதிகாரத்துடன், வெளிப்படையாகக் காணப்படுவதைக்காட்டிலும் அடிப்படையிலும் அமைப்பு ஒற்றுமை காணப்பட்டது. இரண்டாம் பிலிப்பும் ஸ்பெயின் மக்களின் ஆதரவைப் பெற்றிருந்தார் என்பது இவ்வொற்றுமைக்குக் காரணமாகும். நெதர்லாந்தில் அவர் பின்பற்றிய கொள்கை, அயர்லாந்தில் எலிசபெத்துக் கையாண்ட கொள்கைக்கு இணையாய் இருந்தது.

## இங்கிலாந்தின் தனித்தன்மை

எனினும், பிரான்சு, ஸ்பெயின் இவற்றின் முடியாட்சியைப் போலல்லாது, இங்கிலாந்தின் முடியாட்சி மாறுபட்ட அடிப்படையில் அமைந்திருந்தது. நாட்டின் வட்டார நிறுவனங்களுடன், பாராளு மன்றம் சார்ந்தவை முதலியவைகளில் எவ்வித அரசியற்சட்ட மாறு பாட்டையும் அனுமதிக்காததே அது நடைமுறையில் தாற்காலிகமான சர்வாதிகாரமாய் இருந்ததற்குக் காரணமாகும். சூழ்நிலை மாறிய

[1] New Monarchy.

போதும், ஸ்டுவர்ட்டு வமிசத்தினர்,[1] டியூடர்களுக்குப் பின் ஆட்சி புரியத் தலைப்பட்ட போதும், அரசியலிலும் சமயத்திலும் கட்சிக் கொள்கைகள் கடுமையாகவும் மிகையாகவும் தோன்றிய போதும், மன்னர்கள் வலிமையற்று அல்லது அடக்குவதற்குத் தக்க ஆற்ற லில்லாதிருந்தபோதும், பாராளுமன்றம் முன்வந்து, அது வரையிற் பயன்படுத்தப்பெறாத கருவிகளை ஆயுதக் கூடத்திலிருந்து வெளிக் கொணர்ந்து, எல்லா மக்களுடைய சார்புமில்லாவிட்டாலும், ஒரு சிலரின் சார்பாக ஆட்பேராகப்[2] பேசும் பொறுப்பையேற்று, அதிகாரத் தைக் கைப்பற்றியது. பிரான்சிலும், ஸ்பெயினிலும் இவ்வாறு நிகழ வில்லை. அங்கெல்லாம் அரசியல் சட்டத்தின்படியிருந்த தேர்வு முறைகளை முடியாட்சி துடைத்து அழித்துவிட்டது. ஸ்பெயினைச் சேர்ந்த காஸ்டில் நாட்டுக் கார்ட்டெஸ்[3] (சபை) இடம் முன்பிருந்த அதிகாரத்தின் நிழல்தான் காணப்பட்டது. உறுப்பினர்களை நியமிப் பதில் பெருமாறுதல்கள் தோன்றின. பிரான்சில் முப்பேராயம், தொடக்கத்திலும், சமயப் போர்களின் இறுதிக் காலத்திலும், ஆட்சியில் முக்கியமான பங்கு கொண்டிருந்தது என்றாலும், நாட்டு மக்களின் வாழ்க்கையிலும் மரபுகளிலும் அது வேரூன்றவில்லை. முப் பேராயத்தின் கூட்டங்களை முடியாட்சி அடக்கி வைத்ததுடன், அதன் நினைவின்றியே ஆட்சி புரியலாயிற்று.

## II

## இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்த இயக்கம்

சமயப் புரட்சியில் இங்கிலாந்து, போப்பாண்டவரின் அதிகாரத் திற்குக் கீழ்ப்படிவதிலிருந்து பிரிந்ததைப் போலவே, ஐரோப்பாக் கண் டத்தின் பிராட்டஸ்டென்டு திருச்சபைகளிலிருந்தும் மிக அதிகமாகப் பிரிந்திருக்கும் போக்கைப் பின்பற்றியது. இவ்வாறு பிரிந்து போவதற்கு எட்டாம் ஹென்றியைத் தூண்டிய நோக்கம் சமய சித்தாந்தத்தைப் பற்றியதோ அல்லது ஒழுங்கு முறையைப் பற்றியதோ அன்று; அரசியலையும் சொந்த உரிமையையும் பற்றியதேயாகும். லூதரின் இயக்கம் தோன்றிய போது லூதரின் சமயக் கோட்பாடுகளைத் தாக்கி, எட்டாம் ஹென்றி ஆய்ந்தறிந்த அரிய நூல் ஒன்றை வெளியிட்டார். இதற்காகப் போப்பாண்டவரிடமிருந்து 'சமயக்காவலர்' என்ற விருதையும் அவர் பெற்றார். (இங்கிலாந்து மன்னர்கள் இன்றும் இவ் விருதைக் கொண்டுள்ளார்கள்.) ஆரகன் நாட்டிளவரசியாரான காதரின் என்பவருடன் அவர் செய்துகொண்ட திருமணத்தை விலக்குச் செய்து கொள்ள வேண்டுமென்ற விருப்பமும், அதற்குப் போப்பாண்டவரிட மிருந்து தேவையாயிருந்த ஆணையைப் பெறுவதில் ஏற்பட்ட

[1] Stewart Dynasty. [2] Spokesman. [3] Cortes.

தோல்வியும் போப்பாண்டவருடன் சண்டையிடுவதற்கு முதற் காரணங்களாய் அமைந்தன.

## எட்டாம் ஹென்றியின் நோக்கங்கள்

அடுத்து, நெடுநாளாய் இருந்துவரும் நாட்டு மக்களின் வாழ்க்கையில் வெளிநாட்டினரின் அதிகாரம் குறுக்கிடுவதை எதிர்த்து உண்டான தேசியப் பொறுமை எண்ணத்தை, வளர்ந்து வரும் தேசியத் தன்னறிவு உணர்ச்சி இப்போது அதிகப்படுத்தியதும் காரணமாயிற்று. போப்பாண்டவரின் அதிகாரத்தை நீக்கிவிடுவதைத் தவிர இங்கிலாந்தின் திருச்சபையின் கொள்கை, வழிபாடு, அமைப்பு முதலியவற்றில் எவ்வித மாறுதலையும் ஏற்படுத்தும் நோக்கம் எட்டாம் ஹென்றிக்கு இல்லை. போப்பாண்டவரின் அதிகாரத்திற்குப் பதிலாக, மன்னரின் அதிகாரத்தைப் பல வழிகளில் ஏற்படுத்த விரும்பினார்; மடங்களை அழித்தார்; போப்பாண்டவரின் அதிகாரத்தை நிலைபெறச் செய்வதில் பேரூக்கம் கொண்டிருந்த மூர், பிஷர் போன்றவர் உயிர்த் தியாகஞ் செய்தனர். எனினும், லூதர் அல்லது கால்வின் சமயக் கொள்கைகளுக்கும் வழக்கங்களுக்கும் ஏற்றதாக ஆங்கிலத் திருச்சபையைத் திருத்தியமைக்கும் எல்லா முயற்சிகளையும் எட்டாம் ஹென்றி தடுத்தார். 1539-ல் பாராளுமன்றத்தைக் கொண்டு ஆறு விதிகளடங்கிய சட்டத்தை[1] நிறைவேற்றினார். இச்சட்டம், கொள்கையில், ஹென்றி ரோமுடன் கொண்டிருந்த நல்லெண்ணத்தைக் காட்டியது. புனிதப் பொருள் மாறும் கொள்கையை மறுத்த எந்த ஆங்கிலேயரும், சமயத் துரோகி எனக் கருதப்பட்டு உயிருடன் எரிக்கப்பட வேண்டியவரானார். குருமார்கள் மணம் செய்துகொள்ளாமல் இருக்க வேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டது.

## எட்டாம் ஹென்றியின் முறைக்கு எதிர்ப்பு

### ஆறும் எட்வர்டின் ஆட்சி

நாட்டில், பொதுவாக எதிர்ப்பைத் தோற்றுவிக்காவிடினும், இச்சட்டம், இங்கிலாந்தில் வலிமையுற்றிருந்த பல குழுக்களைக் கடுமையாகச் சீற்றங்கொள்ளச் செய்தது. ஆழ்ந்த பத்தியுள்ள ரோமன் கத்தோலிக்கர்களுக்குப் போப்பாண்டவரின் அதிகாரத்தையழிப்பதென்பது பெருங்குற்றமாகும். அதனுடன் கத்தோலிக்கக் கோட்பாடு, வழிபாடு இவைகளைப் பாதுகாப்பதன் மூலம் இக்குற்றம் மன்னிக்க முடியாததாகும். கால்வினின் கொள்கைகளிலிருந்து புத்துணர்ச்சி பெற்றிருந்தவர்கள்—பிராட்டஸ்டென்டு கொள்கைகளை மிகத் தூய்மை

[1] Law of the Six Articles.

யானவையாகக் கொண்டிருந்தவர்கள்—சமயத்திற்கு மாறாயிருந்த நம்பிக்கைகளை அப்படியே வைத்துக்கொண்டிருந்ததைப் பழித்துக் கூறினார்கள். ஆங்கில செபப் புத்தகத்தைப்[1] 'பொறுத்துக்கொள்ள வேண்டிய தவறு' எனவும் உயர்ந்த முறையில் கருதினார்கள். எட்டாம் ஹென்றி இறந்தபின், சிறுவராயிருந்த ஆறாம் எட்வர்டு பட்டம் பெற்றமை, ஊக்கம் நிறைந்திருந்த பிராட்டஸ்டென்டுகளுக்குச் சிறிது காலத்திற்கு வெற்றியையளித்தது. கிரான்மெரின்[2] செல்வாக்கைக் கொண்டு ஒரு புதிய வழிபாட்டு நூல் தயாரிக்கப்பட்டது. ஆறு விதிகள் கொண்ட சட்டம் மீண்டும் விலக்கப்பட்டது. ஐரோப்பாவில் பிராட்டஸ்டென்டுகளால் தோற்றுவிக்கப்பட்டிருந்த மாதிரியை மிக நெருக்கமாய் அணுகியது போல ஆங்கிலத் திருச்சபையிருந்தது. எனினும், பழைய முறையுடன் மேலும் அதன் தொடர்பைக் கொண்டிருந்ததுடன், இடைக்காலத்துத் திருச்சபையிலிருந்து வழிமுறையாகப் பெற்ற அதன் பங்கிற்கு உரிமை பாராட்டியது. அதே சமயத்தில், மன்னர் இளம்பருவத்தினராயிருந்ததாலும் சாமர்செட்டுக் கோமகனார், நார்த்தம்பர்லாந்துக் கோமகனார் முதலியவர்கள் நடத்திய பகர ஆட்சிக் குழுவின் தன்மையாலும், அரசாங்கத்தின் வலிமை குன்றியதாலும் நாட்டில் அமைதியின்மை ஏற்பட்டது. நாட்டின் கிழக்கிலும் தென்மேற்கிலும் கலகங்கள் தோன்றின. அவைகள் அடக்கப்பட்ட போதிலும், மனக்கசப்பு மிகுதியாயிற்று. பிரான்சு, ஜெர்மனி, நெதர்லாந்து முதலிய நாடுகளில், அக்காலத்திற் குறிப்பாயிருந்த நிலைமையைப் போன்று, இங்கிலாந்தும் வலிமையற்ற ஆட்சியில் உள்நாட்டுக் குழப்பத்தில் சிக்குவது போலத் தோன்றியது.

## மேரி அரசியார்

### சமயத் துன்புறுத்தல்

இதன் பயனாக, மேரி அரசியார் பட்டத்திற்கு வருவதை எல்லோரும் வரவேற்றனர். மேரி உண்மையான அரசியல் வல்லமையைக் காட்டியிருப்பாரேயானால், இங்கிலாந்தை மீண்டும் ரோமன் கத்தோலிக்கச் சமயத்திற்குக் கொணர்ந்திருக்க முடியும் என்பது இயலாததொன்றன்று. ஏனெனில், ஆறாம் எட்வர்டு ஆட்சியிலேற்பட்டதொந்தரவு மக்களுக்கு மனவேதனையை உண்டு பண்ணியிருந்தது. அதனுடன் ஆரகன் நாட்டுக் காதரீன் என்பவருடைய மகளாரான மேரி தீவிரக் கத்தோலிக்கராயிருந்ததுடன், மக்களின் விருப்பத்தையும் பெற்றிருந்தார் எல்லாவற்றிற்கும் மேலாக, முடியாட்சி மக்களின் விருப்பத்தைப் பெற்று விளங்கியது. எனவே, வலிமையும் திறமையும் கொண்ட அரசாளுநர் பிடிவாதமாகக் கூறியிருப்பின், எந்தச்

[1] English Liturgy. [2] Cranmer.

சமயக் கொள்கையையும், ஒருகால் அந்நாட்டு மக்கள் ஏற்றுக்கொண்டிருந்தாலும் ஏற்றுக்கொண்டிருக்கக் கூடும். அவ்வாறிருந்தும், ரோமன்கத்தோலிக்கச் சமயத்துடன், இங்கிலாந்து ஒன்று சேராது என்பது மேரி அரசியாரின் ஆட்சியின்போது உறுதி ஆயிற்று. அரசியார், ரோமுக்கும், இங்கிலாந்திற்கும் சமரசத்தையேற்படுத்தினர் என்பது உண்மைதான். இதை ஒருவரும் எதிர்க்கவில்லை. தவிர, தவறுகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து ஏற்பட்டன. அரசியார், ஸ்பெயின் மன்னரான இரண்டாம் பிலிப்பை மணந்துகொண்டார். இதன் விளைவாக, பிரான்சுடன் நடந்த போரில், இவரும் இறங்குமாறு வற்புறுத்தப்பட்டார். இதனால், ஆங்கிலேயருக்குச் சொந்தமாயிருந்த கலே நகரத்தைப் பிரெஞ்சுக்காரர்களிடம் இழக்கும்படி நேர்ந்தது. இதைவிட முக்கியமானது, இங்கிலாந்தின் வரலாற்றிலேயே காணப்படாததான சமயத் துன்புறுத்துதலை அரசியார் பின்பற்றியதாகும். அவருக்கு ஏற்பட்ட எதிர்ப்புக்களால் சினமூட்டப்பட்டார். 16ஆம் நூற்றாண்டில் சமயப் பகைமையை அழிப்பது நாட்டின் கடமையெனப் பொதுவாக மக்கள் நம்பியிருந்தார்கள்; எனவே, இதில் நம்பிக்கையுடையவர்களாய்ச் சமயத் துன்புறுத்தலை மேற்கொண்டார்கள். இதற்கு இணையாக வேறு எதையும் இங்கிலாந்து வரலாற்றில் காணமுடியாது. இருந்போதிலும், பிரான்சு, ஸ்பெயின், நெதர்லாந்து போன்ற மற்ற நாடுகளில் நடந்த கொடுமைகளைப் போல, இங்கிலாந்தில் அவ்வளவாகக் கொடுமை காணப்படவில்லை. மேரியின் ஆட்சியில், ஸ்பெயினின் நலனுக்காக இங்கிலாந்தைப் பலியிடுவது, உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்களில் தளர்ச்சியையும் தோல்வியையும் உண்டாக்கியதுடன், இவையனைத்திற்கும் மேலாக, சமயத்துன்புறுத்தலும், கொடுமையும், ரோமன்கத்தோலிக்கச் சமயத்தின் அடையாளங்களாகக் கருதப்பட்டன. பிலிப்பிற்கும் மேரிக்கும் ஆண்மகவு பிறந்திருக்குமானால், நாட்டின் எதிர்காலச் சமய நிலை, மிகவும் ஐயத்திற்கு இடமளித்திருக்கும். ஆனால், மகப்பேறில்லாது போயிற்று. எனவே, அவரது ஏற்பாடு அவருடனே மறைந்துவிடுமென்பது உறுதியாகத் தோன்றியது.

## எலிசபெத்து அரசியார்

1558-ல் இருபத்தைந்தாண்டு நிரம்பிய எலிசபெத்து அரசியார் பட்டத்திற்கு வந்தார். அவர் தாயாரான ஆன்பொலீன்,[1] எட்டாம் ஹென்றியை மணந்தது, இங்கிலாந்தின் திருச்சபைக்கும் ரோமுக்குமிடையே பெருஞ்சமயப் பிளவையுண்டாக்கியிருந்தது. இதனால் எலிசபெத்து வாழ்க்கையில் பல மாறுதல்களையும் இடர்களையும் கண்டிருந்ததன் விளைவாக மிக்க எச்சரிக்கையுடனிருக்கலானார். அதனுடன், மக்களின் வாழ்க்கையைக் கட்டுப்படுத்திய சக்தியையும்

[1] Anne Boleyn,

அவரது வாழ்க்கை வெளிப்படுத்தியது. அவர் அமைச்சர்களான பர்லி,[1] வால்ஸிங்காம்[2] பேக்கன்,[3] ஆர்ச்பிஷப்புப் பார்க்கர்[4] முதலானோர், பாராட்டத்தக்க முறையில் பணிபுரிந்தனர். அவரது ஆட்சியின் வெற்றிக்கு எத்துணை அளவிற்கு அவரது திறனும் அமைச்சர்களின் திறனும் காரணமாயிருந்தன என்பது பற்றி வரலாற்று நூலறிஞர்களுக்குள் எப்பொழுதும் சச்சரவு இருந்து கொண்டேயிருக்கும். அது எவ்வாருயினும், பெற்ற வெற்றி உண்மையிலேயே பெருவெற்றியாகும். அவர் ஆட்சிக்காலத்தில் ஆங்கில நாட்டு வரலாற்றில், வேறெந்தக் காலப் பகுதியிலும் காணப்படாத அளவுக்குத் தெளிவாக இங்கிலாந்தின் வாழ்க்கையின் அடிப்படைகள் நிலையாக அமைக்கப்பட்டன.

## எலிசபெத்தின் சமயக் கொள்கை

### ஒருமையும் முதன்மையும்

அரசியாரது சமயக்கொள்கை, சிலவிவரங்களில் மாறுபாடுகளைக் கொண்டிருந்த போதிலும், எட்டாம் ஹென்றியின் சமயக்கொள்கையோடு பொது நோக்கங்களில் ஒத்திருக்கிறது. புதிதாகத் திருச்சபையைத் தோற்றுவிக்கத் தேவையில்லை. இங்கிலாந்தின் திருச்சபை, கத்தோலிக்கத் திருச்சபையின் கிளையாகும். அதுவரை உறுதியாக மறுக்கப்படாததும், நெடுநாளாக வழங்கி வருவதும், பழையகாலத்தைச் சார்ந்ததுமான கொள்கைகள், சடங்குகள், நிறுவனங்கள் முதலியவைகளைத் திருச்சபை பாதுகாக்க வேண்டியதாயிருந்தது. சமயத்தில் இயன்றவரை மிகத்தீவிரமாயில்லாதிருக்கவேண்டும்; இயன்ற அளவு, மக்கள் ஏற்றுக்கொள்ளக்கூடிய திருச்சபையாயுமிருக்க வேண்டும்; லூதருடையவோ அல்லது கால்வினினுடையவோ சமயச் சூத்திரங்களின் தொகுப்பால் கட்டுப்படுத்தக் கூடியது என்பதை ஏற்றுக்கொள்ளாததாயுமிருக்க வேண்டும் என்பனவாம். சமயசித்தாந்தம் பற்றிய வைதிகக் கொள்கையைவிட, கொள்கைநலமும், தேசீய ஒற்றுமையும் அரசியாரின் கருத்துப்படி முக்கியமாயிருந்தன. சமயச் சகிப்புத் தன்மையுடையவராகத் தம்மை அவர் கருதினர். 16ஆம் நூற்றுண்டின் அளவு முறையைக் கொண்டும், ஐரோப்பிய நாடுகளின் பழக்கத்தைக் கொண்டும் பார்ப்போமானல். அவர் கருத்தைப் பற்றி அவ்வாறுதான் தீர்ப்புக் கூறவேண்டி நேரிடுகின்றது. ஒருவரின் உள்ளத்தில் என்னவிருக்கிறது என்பதைப் பார்க்க அவரது உள்ளத்தைத் துளைக்கமாட்டார் என்று அரசியார் கூறியவாறே வெளிப்படையாகக் கூறப்பட்ட கருத்துக்களையும் வெளிப்படையாகச் சட்டத்தை எதிர்ப்பதைப் பற்றியதிலுமே அவர் கவனத்தைச் செலுத்தினர்; இவ்வாறு மாறுதல் செய்யப்பட்ட திருச்சபையே, இராச்சியத்தின் ஒரே திருச்சபையாய்

[1] Burleigh. [2] Walsingham. [3] Bacon. [4] Archbishop Parkee.

விளங்கவேண்டும் என உறுதிபூண்டிருந்தார். 1588-ல் ஏற்பட்ட ஒருமுறை வழிபாட்டுச் சட்டம்,[1] ஆங்கிலத் திருச்சபையின் வழிபாட்டு முறையைத்தவிர வேறு எம்முறையும் பெருந்தண்டனைக்குட்பட்டுத் தான் அனுமதிக்கப்படும் என்றும், திருச்சபை வழிபாட்டில் கலந்து கொள்ளாதவர்கள் மீது கடுமையான ஒறுத்தல் விதிக்கப்படுமென்றும் விளம்பரப்படுத்தியது. அதே சமயத்தில், திருச்சபையின் மாபெருந் தலைவி எனும் பட்டத்தையேற்க அரசியார் மறுத்துங்கூட மாபெருந் தலைவிச் சட்டம்[2] நிறைவேற்றப்பட்டுத் திருச்சபையின் ஆட்சியை அவர் கையில் ஒப்படைத்ததுடன், சமயம்சார்ந்த கடமைகளை நிறை வேற்றுவதில் அவருக்குத்துணையாக உயராணை நீதிமன்றத்தையும்[3] ஏற்படுத்தியது.

## ஆங்கிலேயத் திருச்சபைத் திட்டத்தின் தனித்தன்மை

கத்தோலிக்கர்

இவ்வாறு சீர்திருத்தம் செய்யப்பட்ட ஆங்கிலத் திருச்சபை, ஐரோப்பாவிலேயே தனிச்சிறப்புடையதாய் அமைந்தது. இது இங்கிலாந்திற்கு வெளியில் நன்கு அறிந்து கொள்ளப்படவுமில்லை; போற்றப்படவுமில்லை. லூதரைப் பின்பற்றுவோரும், அதைவிடக் கால்வினைப் பின்பற்றுவோரும், இதை இரண்டிற்குமிடைப்பட்ட ஏற்பா டாகக் கருதினர். காரணம், ஆங்கிலேய முறை எவ்விதக் கொள்கை அடிப்படையிலும் அமையாத சமரசமாகவும், உலகப் பற்றுள்ள நலனையே குறியாகக் கொண்டதாகவும் அமைந்தமையேயாகும். ரோமன் கத்தோலிக்கர்கள், இம்முறை கத்தோலிக்கச் சமையத்தைச் சேர்ந்தது என்ற உரிமையைப் புறக்கணித்ததுடன், லூதர் கால்வின் திருச்சபைகளைச் சேர்ந்தவர்களுடன் இதை இணையாகச் சேர்த்து, சமயத்திற்குப் பகையானது எனவும் கூறினார்கள். அரசியாரின் சமயக் கொள்கை இங்கிலாந்திலேயே பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட தெனினும், முழுமையான சம்மதத்தைப் பெறுவதில் தோல்வியுற்றது, ஆங்கிலேயருட் பெரும்பகுதியினர் ரோமன் திருச்சபைக்கு உண்மை யாகக் கீழ்ப்படிந்ததோடு, ஆங்கிலேயப் பொதுவழிபாட்டுப் புத்தகப்படி நடைபெற்ற வழிபாடுகளில் கலந்துகொள்ள மறுத்தனர்.

## பிராட்டஸ்டென்டுகளின் எதிர்ப்பு

1580-ல் இயேசு சங்கத்தார் நாட்டிற்கு வந்ததுமுதல், கத்தோ லிக்கர்களுக்கு மேலும் ஊக்கமேற்பட்டது. கத்தோலிக்கர் பழைய

[1] Act of Uniformity. [2] Act of Supremacy.
[3] Court of High Commission.

முறைகளைக் கைக்கொள்ளுவதற்கான வாய்ப்புக்கிடைக்குமென எண்ணி, அதற்காகக் காத்திருந்தனர். எலிசபெத்தின் ஆட்சிக்கும், அவரது உயிருக்கும் இடர்விளைவிக்கக் கூடிய சதிகள் தனிப்பட்ட கத்தோலிக்கர் களால் செய்யப்பட்டன. கத்தோலிக்கர்மீது கடுமையான அடக்குமுறை நடவடிக்கைகள் நிறைவேற்றப்பட்ட போதிலும், அவர்களது சமூகம் அரசியாரிடம் பகைமை கொள்ளவில்லை. பிராட்டஸ்டென்டு சமயத் துடன் இணங்காதவர்களும் அவருக்குத் தொல்லை கொடுத்தார்கள். ஒருசமயம் இங்கிலாந்து, லூதரின் சமயத்திற்கு ஒரு கோட்டையா யிருந்தது. மேரி அரசியாரின் சமயத் துன்புறுத்துதலுக்கு ஆளான போது இங்கிலாந்திலிருந்து நாடுகடத்தப்பட்டவருட் பலர், ரைன் நதிப் பகுதிகளிலும், சுவிட்சர்லாந்திலிருந்த கால்வினியர்களுடனும் தொடர்புகொள்ளலாயினர். போப்பாண்டவரைக் கிறித்துவக் கொள் கைக்குப் பகைவரென்றும், கத்தோலிக்கத் திருச்சபைத் தொடர்புள்ள எவையும் தீயனவென்றும் கருதும் கால்வினியக் கொள்கைகளை மனத்திற் கொண்டு அவர்கள் நாடு திரும்பினர்; கத்தோலிக்கர் வழிபாடு செய்யும் பொழுது அணியும் உடைகளையும், ஆங்கிலத் திருச்சபைக்கெனக் குறிப்பிடப்பட்ட வழிபாட்டையும் புறக்கணித்தனர்; திருச்சபை பிரஸ் பிட்டர்களாலும்[1] (சமய முதியோர்கள்) திருக்கூட்டத்தாலும் நடத்தப் படவேண்டுமென்றும் எண்ணினர். திருச்சபைக்கு எதிர்ப்புச் சிறிது சிறிதாக வளர்ந்தது. அரசியாரின் ஆட்சிமுடியுமுன்னரே, இணக்கமற் றிருந்த பிராட்டஸ்டென்டுகளுக்குள்ளேயே இரு தனிப்பிரிவுகள் ஏற்பட லாயின. ஒன்று ஜினீவாவிலிருந்தும், கால்வினின் கொள்கைகளி லிருந்தும் உருவான கருத்துக் கொண்டிருந்த பிரஸ்பிட்டீரியர் பிரிவு; மற்றென்று, முழுச் சுதந்தரக் கருத்துடையவர்களாய் ஆங்கிலிகன்,[2] சமய ஏற்பாட்டையும் முடிவு செய்யப்பட்டிருந்த சடங்குகளையும் விலக்குவதில் தீவிரமாயிருந்ததுடன் ஒவ்வொரு சமயக் கூட்டமும் தன்னுட்சி செய்யும் பகுதியாய் இருக்கவேண்டுமென விரும்பினர்.

## அடக்குமுறைச் சட்டங்கள்

கத்தோலிக்கர்மீது கடுமையான சட்டங்கள் இயற்றப்பட்டன. அச்சமயத்திற்கு மாற்றுவதும், மாறுவதும் பெரிய அரசத் துரோக மென்பது அறிவிக்கப்பட்டது. இயேசு சங்கத்தாரும், கல்வி பெறும் குருக்களும் மரண தண்டனைக்குட்படுத்தப்பட்டார்கள். அரசியாரின் சமயம் சார்ந்த சட்டமியற்றலுக்கு எதிராக, பல்வேறு குற்றம் புரிந்த ரோமன் கத்தோலிக்கர்கள்மீது தாங்கொணுத் தண்டம் விதிக்கப்பட்டது. குற்றம் புரிந்தவர்களுட் பெரும்பாலார் மரண தண்டனை யடைந்தனர். அனைவரும் ஒற்றர்களுக்கும் அரசாங்க அறிவிப்பாளர்களுக்கும் பயந்து

[1] Presbyters. [2] Anglicans.

நடுங்கினர். ஒற்றர் போன்றவர் பெரிய வெகுமதிகள் அளிப்பது வாயிலாகக் குற்றஞ்செய்கிறவர்களை விசாரணைக்குக் கொண்டு வருமாறு தூண்டப்பட்டனர். பிராட்டஸ்டென்டு சமயத்துடன் இணக்கம் கொள்ளாதவர் சிறிதளவு மென்மையாகத் தண்டிக்கப்பட்டனர். எனினும், ஆட்சியின் இறுதிக் காலத்தில் அவர்கள்மீதும் கடுஞ் சட்டங்கள் இயற்றப்பட்டன. அரசியாரின் சமயக் கொள்கையைத் தொடர்ந்து எதிர்த்த சிலர் உயிரிழந்தனர்.

## அரசியாரின் சமயச் சகிப்புத்தன்மை

எலிசபெத்து அரசியார், தமது அரசாங்கம் மனிதத் தன்மையும் நடுவு நிலைமையும் கொண்டிருந்ததாக எண்ணினர்; சமயத்தை எதிர்த்தவர்களை அவர் நடத்திய முறையினை நெதர்லாந்தில் இரண்டாம் பிலிப்பும், பிரான்சில் பிரெஞ்சு அரசாங்கமும் மிகக் கொடுமையாக நடத்திய முறைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்படி மக்களை வேண்டினர். அவர் கூற்றுக்கள் எதிர்க்கப்பட்ட போதிலும், இங்கிலாந்தைப் பொறுத்த வரையில் அவை சட்டப்படி செல்லக் கூடியவை. உண்மையில், அவர் கொள்கையில் நடுவுநிலையும் கடுமையின்மையும் காணப்பட்டன. இரண்டாம் பிலிப்பும், பிரெஞ்சு மன்னர்களும் அவரைப் போன்று நடக்கவில்லை. ஆனால், அயர்லாந்தில் அவருடைய கொள்கையைப் பார்க்குமிடத்து, மாற்று எண்ணமுண்டாகிறது. அங்கு அச்சமும், துன்புறுத்தலும், பொறுக்க முடியாத கொடுமைகளும் காணப்பட்டன. பிரான்சில் நான்டீஸ் ஆணைகள் ஏற்படுவதுடன் இந் நூற்றாண்டு முடிவடைகிறதென்பதை நாம் மறக்க முடியாது. இவ்வாணைகள் சமயச் சகிப்புக் கொள்கையில் பெருந்தன்மையையும் பிறவற்றையும் தம்முள் கொண்டிருந்தன. 19ஆம் நூற்றாண்டு வரை இங்கிலாந்தில் இவற்றைப்போன்ற வேறெதையும் காண முடியாது.

III

## இங்கிலாந்தின் வெளி நாட்டுத் தொடர்புகள்

### ஏழாம் ஹென்றியின் கொள்கை

இங்கிலாந்தின் வெளி நாட்டுக் கொள்கை, சமயச் சீர்திருத்த இயக்கத்தால் பெரிதும் துண்டிக்கப்பட்டது. எனவே, பார்ப்பதற்கு ஏழாம் ஹென்றியின் வெளி நாட்டுக் கொள்கைக்கும், எட்டாம் ஹென்றி தொடக்க ஆண்டுகளில் பின்பற்றிய வெளி நாட்டுக் கொள்கைக்கும், 1529-ல் கூட்டப்பட்ட சீர்திருத்தப் பாராளுமன்றத்திற்குப் பிறகு ஏற்பட்ட டியூடர்களின் வெளி நாட்டுக் கொள்கைக்கும் தொடர்பு இல்லாதது போலக் காணப்படுகிறது. உள்நாட்டுப் போரின் பயனாக

ஏழாம் ஹென்றி பட்டம் பெற்றார்; உரோசாப்பூ அடையாளப் போர்களினால் ஏற்பட்ட குழப்பத்தினால் வறுமை நிலையிலிருந்த நாட்டில், ஆட்சி, அமைதி, ஒழுங்கு, வாணிகம் முதலியவைகளையும் பெருக்கி, தம் பதவியைக் காத்துக்கொள்ளுவதில் முனைந்திருந்தார்; சமாதானத்துடனிருப்பதையே உறுதியாகக் கொண்டிருந்தார்; ஆட்சி முழுவதிலும் தவிர்க்கக் கூடிய போர்களைத் தவிர்த்தார்; அவ்வாறு செய்யும் போது மாண்பு அல்லது தன்மதிப்புப் போன்ற மரபுகளைப் பாராட்டாது, தவிர்க்க முடியாத போர்களை இயன்ற வரையில் நடத்தி, விரைவிலேயே அமைதியை ஏற்படுத்தினார். அவர் செய்து கொண்ட வாணிக உடன்படிக்கையின் பயனாக, இங்கிலாந்தில் கம்பளி உற்பத்தி செய்வோருக்கு நெதர்லாந்துடன் வாணிகம் ஏற்படலாயிற்று. அவர் தம் மூத்த புதல்வரான ஆர்தருக்கு ஆரகன் நாட்டுக் காத்தரினையும், மூத்த புதல்வியாரான மார்கரெட்டை ஸ்காட்லாந்து நாட்டு நான்காம் ஜேம்ஸிற்கும் மணம் புரிவித்தது வாயிலாக, ஸ்பெயின், ஸ்காட்லாந்து முதலிய நாடுகளுடன் நல்லுறவை ஏற்படுத்தினார். 16 ஆம் நூற்றாண்டில் இவ்விரு திருமண உறவுகளும் பெருஞ் செல்வாக்கையுடையனவாயிருந்தன. இளவரசர் ஆர்தர் இறந்தபின், காத்தரின் மீண்டும் எட்டாம் ஹென்றியெனப் பட்டத்திற்கு வந்தவரான ஏழாம் ஹென்றியின் இரண்டாம் புதல்வருக்கு மணஞ் செய்விக்கப்பட்டார். இத் திருமண விலக்கு, ரோமுடன் சமயப் பிளவு ஏற்படக் காரணமாயிருந்தது. மார்கரெட்டு, ஸ்காட்லாந்து அரசியாரும் பின்பு ஆங்கில அரியணையை வாரிசு முறையில் பெற்றவருமான மேரியின் பாட்டியாராவார். இவர் எலிசபெத்தின் ஆட்சிக் காலத்தில் பல தொல்லைகளுக்கு நடுநாயகமாயிருந்தார்.

## எட்டாம் ஹென்றியின் வெளி நாட்டுக்கொள்கை

எட்டாம் ஹென்றியின் ஆட்சி, அவர் தந்தையாரின் ஆட்சிக்கு மாறாயிருந்தது. அவர் சிறந்த அறிஞர்; மக்களால் போற்றப்பட்டவர்; பேரழகர். பேரவாக் கொண்டவராயிருந்ததால் ஏழாம் ஹென்றியின் காலத்தில் உற்சாகமற்ற வெற்றிகளைக் கண்டு சலிப்புற்றிருந்த மக்கள், மாற்றத்தை விரும்பியவர்களாய், வீரச் செயல்கள் புரியத்தக்க வெளிநாட்டுக் கொள்கையை ஏற்கத் தயாராயிருந்தார்கள். எட்டாம் ஹென்றிக்குச் சிறந்த அரசதந்திரியாரும், ஆட்சி முறையில் வல்லவருமான உல்ஸி[1] என்பார் துணைவராயிருந்தார். உல்ஸியைப் பின்பற்றி, இங்கிலாந்து, ஐரோப்பிய அரசியல் விவகாரச் சிக்கல்களில் பயனுள்ள முறையில் தலையிட்டதுடன், ஐரோப்பாவில் சத்திச்சம நிலையை முடிவு செய்வது போலவும் தோன்றியது. பெரிய மாறுதல்

[1] Wolsey.

ஏற்படாமலிருந்து, சமயப் பிரச்சனே எல்லாவற்றையும் விரைவில் விழுங்கியிராவிட்டால், உல்ஸியின் அரசியல் தந்திரத்தைப் பற்றிச் சில கூற வேண்டியிருக்கும்; அதனுடன், வெற்றியைப் பற்றியும் மதிப்பிட வேண்டியிருக்கும். இப்போதுள்ளவாறு, இங்கிலாந்தின் ஆண்டு வரலாற்றில் உல்ஸியின் பெயர் நிலேயானவிடம் பெற்றுள்ளதுடன் ஆங்கில நாட்டு வரலாற்று வளர்ச்சியையும் மறைமுகமாசப் பாதித்தது. 1592-க்குப் பின், சமயக் கருத்துக்கள் இங்கிலாந்தின் கொள்கையில் ஆதிக்கம் பெற்றன. எனினும், ஹென்றி கடைசி வரையில் ஐரோப்பா கண்டத்தில் காணப்பட்ட பிராட்டஸ்டென்டு சமயத்தை அவருடைய நாட்டுப் பிராட்டஸ்டென்டு சமயத்துடன் ஒருமைப்பட்டதாகக் கருத மறுத்துவிட்டார்.

## எலிசபெத்து அரசியார்

சுருக்கமாக வரலாற்றைக் காணும்போது, ஆரும் எட்வர்டு, மேரி அரசியார் இவர்களுடைய வெளி நாட்டுக் கொள்கை முழுவதையுமே விட்டுவிடலாம். முதலில், இங்கிலாந்து, பிராட்டஸ்டென்டு நாடுகளுடன் உறவு கொள்ள எண்ணியது. இரண்டாவதாக, ஸ்பெயின் நாட்டுப் பிலிப்புடன் மேரி அரசியார் நற்பேற்றையளிக்காத மணஞ் செய்து கொண்டது வாயிலாக, ஸ்பெயினுடன் நெருங்கிய ஒற்றுமை ஏற்படுவது உறுதியாக்கப்பட்டது. ஆனல், எலிசபெத்து அரசியாரின் ஆட்சி, இங்கிலாந்தின் வெளி நாட்டுக் கொள்கையில், மற்றவைகளிலிருந்ததைப் போலவே, புதிய சகாத்தத்தை ஏற்படுத்தியது. அவர் தமது ஆட்சியின் தொடக்கத்தில் ஸ்பெயினுடன் நட்பும், பிரான்சுடன் பகைமையும் கொண்டிருந்தார்; ஆட்சி முடியுமுன், பிரான்சுடன் நட்புறவு கொண்டதோடு, ஆட்சியின் பெரும்பகுதியில், ஸ்பெயின் மன்னரான பிலிப்பிற்கு நீடித்த இடரை விளேவிக்கக் கூடிய பகைமையுடையவராயுமிருந்தார். இம்மாற்றம் திடீரென்று ஏற்படவில்லே. எப்பொருளேப் பற்றியும் மாற்றமில்லா முடிவுகளேயேற்க அரசியார் வெறுத்தார்; 1588-ல் ஸ்பெயின் நாட்டுக் கப்பற்படை புறப்படும் வரையிலும் அந்நாட்டு மன்னரிடம் காதல் காட்டி அவரை ஏய்த்து வந்தார். ஆனல், வலிமை பெற்றிருந்த வேறு சத்திகள் இங்கிலாந்தை ஸ்பெயினுடன் பகைமை கொள்ளும்படி தூண்டின.

## எலிசபெத்து ஆட்சிக்காலத்தில் கடல் சார்ந்த துணிகரச் செயல்

ஐரோப்பிய நாடுகள் எல்லாவற்றைக்காட்டிலும் ஸ்பெயின் தீவிரமான ரோமன் கத்தோலிக்கப் பற்றுடையதாயிருந்தது; அதனுடன் கத்தோலிக்க எதிர் விளேவுக்கும் முக்கிய ஆதாரமாயிருந்தது. இது

சூழ்ச்சித் திறனுடையதாயும் மெதுவாயும் நாளடைவில் அரசியாரின் விருப்பத்திற்கு மாருக, ஸ்பெயினுடன் நல்லெண்ணம் கொள்ள இயலாதபடி செய்தது. சமய நோக்கத்திற்குத் துணை புரியும் வகையில் வாணிக நோக்கங்களும் தோன்றலாயின. கடல் வலிமையுடைய ஆட்சியாக மாறுவதற்கான கூறுகளை இங்கிலாந்து உணரலாயிற்று. ஸ்பெயினின் தடையை மீறி இங்கிலாந்தின் மாலுமிகள், வியாபாரிகள், கடற்கொள்ளைக்காரர்கள், புதிய நாடுகளைக் காணுவதில் நாட்டங் கொண்டவர்கள், வீரச் செயலிலீடுபடுவதில் விருப்பமுள்ளவர்கள் எல்லாரும் புது உலகத்திற்கு வழி கண்டனர். ஸ்பெயின் அரசாங் கத்தின் விரைவான கட்டளையை மீறி ஹாக்கின்ஸ்[1] என்னும் ஆங்கில மாலுமியார் ஸ்பெயினுக்குரிய குடியேற்ற நாடுகளில் அடிமை வியாபாரஞ் செய்தார். டிரேக்கு,[2] மெகல்லன் நீர் இணைப்பைக்[3] (ஜலசந்தி) கடந்து சென்று, தென்அமெரிக்காவின் மேற்குக் கடற் கரையிலிருந்த ஸ்பெயினுக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகளைக் கொள்ளையிட்டும், உலகைச் சுற்றிக்கொண்டும் இங்கிலாந்தை யடைந்தார். இச்சிறு படையெடுப்புகளைத் தடைசெய்ய இங்கிலாந்து முயலவில்லை. ஒருசமயம் முயன்றிருந்தாலும், அதனுல் தடுத்திருக்க இயலாது. அது ஸ்பெயினை எதிர்ப்பதில் தீவிரமாகவும், வலிந்து போர் தொடுக்கவும் பெருமுனைப்புக் கொண்டிருந்தது. உள்நாட்டிலும், பிரான்சிலும், நெதர்லாந்திலும், பொதுவாகத் தொல்லை கொடுத்த ஐரோப்பாவின் பிரச்சனைகளில் இரண்டாம் பிலிப்பு ஈடுபடாமலிருந் திருப்பாரானுல், இதற்கு முன்னரே போர் தொடங்கியிருக்கக்கூடும்.

## இங்கிலாந்தும் பிரான்சும் ஒன்று சேரல்

இவ்வாறு ஸ்பெயினுடன் போருக்குத் தயாராகிக் கொண் டிருக்கும்போது, பிரான்சுடன் இங்கிலாந்து சேர நேர்ந்தது. இதற்கு காரணம், ஸ்பெயின்மீது இவ்விரு நாடுகளுக்கும் ஏற்பட்டிருந்த பகைமையேயாகும். அதனுடன் ஆட்சியின் தொடக்கத்திலிருந்தே இப்பகைமைக் கொள்கை நடை முறையில் காணப்பட்டது. உள்நாட்டுச் சமயப் போர்களும், செயின்ட் பார்த்தலோமியா படுகொலையும், இவ்விரு நாடுகளுக்குமிடையேயிருந்த ஒற்றுமையைச் சிதைக்கவில்லை. சமயத்தை நோக்கும் பொழுது, ஸ்பெயினைவிட, பிரான்சு இயற்கையிலேயே நேச நாடாயிருப்பதற்குக் காரணமாயிருந்தது. பிரான்சில் வலுவடைந் திருந்த பிராட்டஸ்டென்டு சமயம் சிலசமயங்களில் தன் அரசாங்கத் திடம் இங்கிலாந்தின் செல்வாக்கினுல் நன்கு நடத்தப்பட்டதை நாம் முன்பு அறிந்துள்ளோம். மூன்ரும் ஹென்றி கொலையுண்டபின்பும், நவாரே நாட்டு ஹென்றி பட்டத்திற்குவந்த பின்பும், இவ்விரு நாடு

[1] Hawkins. [2] Drake. [3] Strait of Magellan.

களுக்குள்ளிருந்த நட்புத் தானாகவே நெருங்கியதாக வளர்ந்தது. ஆங்கிலப் படையும் பணமும் பிரெஞ்சு அரியணைமீது உரிமை பாராட்டிய வருக்கு உதவியளிக்கச் சென்றன. அவருடைய மதமாற்றம் இவ்விரு நாடுகளுக்குமிடையேயிருந்த நல்லெண்ணத்தைக் கெடுக்கவில்லை. இதற்குக் காரணம், அவருடைய பகைவர்கள் அரசியாருக்கும் பகைவர்களாயிருந்ததேயாகும். முதலாம் ஜேம்ஸ் இங்கிலாந்தின் அரியணையேறிய பிறகு, ஒவ்வொன்றையும் தாமாகவே செய்யவேண்டுமென்று விரும்பியதால், பிரான்சுடன் கொண்டிருந்த நட்பு உடன்படிக்கை வருந்தத்தக்க நிலையில் கைவிடப்பட்டது.

## IV

16ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் வரலாற்றைச் சுருக்கமாக அறிந்துகொள்ளும் முயற்சிக்கு, அது ஸ்காட்லாந்துடனும், அயர்லாந்துடனும் கொண்டிருந்த உறவுகளைப்பற்றி நோக்குவது தேவையாகும். எலிசபெத்து அரசியாரின் கொள்கையின் மாபெருவெற்றியை ஸ்காட்லாந்தில் காண்கிறோம். ஆனால், அயர்லாந்தில் தவறுகள் நிறைந்த தோல்வியேற்பட்டது. அந்நாட்டின் வரலாற்றைப் பார்க்கும்போது கொள்கை துயர் நிறைந்த பல பகுதிகளைக்கொண்ட ஓர் ஆவணமாயிருத்தலைக் காண்கிறோம். இதன் விளைவு எதிர்காலத்தில், மேலும் மிகுந்த துன்பியலை விளைவிப்பதாயிருந்தது.

## இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும்

டியூடர் காலத்தொடக்கத்தில், ஸ்காட்லாந்து இங்கிலாந்தின் நிலையான எதிரியாயிருந்தது. குறைந்த மக்கள்தொகை (நாட்டு மக்கள், மொத்தத்தில் அரை மில்லியனுக்கு மேலில்லை), குறைவான வளப்பொருள்கள் முதலியன இருந்த போதிலும், இயற்கைச் சூழ்நிலையும், இங்கிலாந்துடன் தொடர்பும் அந்நாட்டிற்கு ஐரோப்பாவில் கிடைக்கக்கூடாத ஒரு முக்கியமான நிலையை ஏற்படுத்தின. இராணுவக் கருத்துப்படி ஸ்காட்லாந்து, இங்கிலாந்தின் பின்புறவாயில் போன்றது. ஸ்காட்லாந்து இங்கிலாந்தின் பகைவர்களோடு சேர்ந்திருந்தால், இங்கிலாந்திற்குப் பாதுகாப்பு இராது. எனவே, எல்லையின் இருபுறங்களிலும், அரசியலறிவு பெற்றிருந்தவர்கள், சமாதானத்தையும் ஒற்றுமையையும் வற்புறுத்தி வந்தார்கள். 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், இவைகள் ஏற்படுவதற்கான சூழ்நிலை காணப்படவில்லை. எனினும், ஏழாம் ஹென்றியின் புதல்வியாரான மார்கரெட்டு, ஸ்காட்லாந்து மன்னரான நான்காம் ஜேம்ஸை மணந்துகொண்டதன் விளைவாக, நெடுநாட்களாக எதிர்பார்த்திருந்த ஒற்றுமை இந்நாடுகளுக்கிடையே ஏற்பட்டது. இவருடைய பெயரரின் புதல்வர் ஸ்காட்லாந்தில் ஆறும் ஜேம்ஸ் எனவும் இங்கிலாந்தில் முதலாம் ஜேம்ஸ்

எனவும் ஆட்சி புரிந்தார். அவ்வாறிருந்தும், திருமணம் ஏற்பட்ட பொழுது, இந்நாடுகளுக்கிடையேயிருந்த பகைமையில் எவ்வித மாறுதலும் தோன்றவில்லை. எட்டாம் ஹென்றி ஸ்காட்லாந்துடன் போர் புரிய நேர்ந்தது. அவர் 1513-ல் ஃப்ளாடன்[1] என்னுமிடத்தில் ஸ்காட்டு மக்களைத் தோற்கடித்தார். 1542-ல் சால்வே மாஸ்[2] என்ற போரில் படுதோல்வியடைந்த ஐந்தாம் ஜேம்ஸ் இறந்தபின், நிலைமையில் மாறுதலேற்பட்டது. ஜேம்ஸிற்கு மேரி என்னும் ஒரே புதல்வியார் இருந்தார். மேரி பிறந்த சில நாட்களுக்குள் அவர் இறந்து போனுர். இவரை ஆங்கிலேய இளவரசருக்கு மணஞ்செய்தால், இரு நாடுகளுக்குமிடையே ஒற்றுமையை ஏற்படுத்தலாம்.

## ஸ்காட்டுகளின் அரசியாரான மேரி

இவ்வாறு செய்தால், பிரான்சு மன்னரான எட்டாம் சார்லசு, பிரிட்டனியின் அரசியாரான ஆன் என்பாரை 1491-ல் மணந்ததன் மூலம், பிரிட்டனி[3] பிரெஞ்சு இராச்சியத்தில் இணைக்கப்பட்டதுபோல, ஸ்காட்லாந்தும் இங்கிலாந்துடன் இணைக்கப்படலாம். ஆரும் எட்வர்டிற்கும் மேரி இளவரசியாருக்கும் திருமண ஏற்பாடு நடந்தது. இங்கிலாந்தின் காப்பாளராயிருந்த சாமர்செட்டுக் கோமகனுரின் தவருன வலுக்கட்டாயத்தால், ஸ்காட்டு மக்களின் உணர்ச்சி புண்படுத்தப்பட்டிருந்தது. மேரி பிரான்சிற்கு அனுப்பப்பட்டு, அங்கே பிரெஞ்சு இளவரசரை மணந்தார். இங்கிலாந்துக்கு ஸ்காட்லாந்தால் விளையும் இடர் முன்பிருந்ததைவிட அதிகமாயிற்று; பகைமையும் நன்கு வளரலாயிற்று.

## பிரான்சிலும் ஸ்காட்லாந்திலும் சமயச் சீர்திருத்தங்கள்

ஸ்காட்லாந்திலேற்பட்ட சமயச் சீர்திருத்தத்தால், இருநாடுகளுக்குமிடையே நட்பும் நல்லுறவும் தோன்றியதுடன், ஒன்று சேருவதற்கும் வழி ஏற்பட்டது. ஸ்காட்லாந்து சமயச் சீர்திருத்த இயக்கம், திருச்சபைத் துரைத்தனம், சமயக் கொள்கை முதலியவைகளில், கால்வினியக் கொள்கைகளைக் கொண்டிருந்ததுடன், பிரான்சின் ஹியூக்நோக்களின் இயக்கத்துடன் சில ஒற்றுமைகளையும் கொண்டிருந்தது. இரண்டும் பிரஸ்பிட்டீரியக் கொள்கைகளைப் பின்பற்றின. கால்வினைப் பின்பற்றியவர்களுள் ஜான் நாக்ஸ் என்பவர் தலைசிறந்தவராவர். இரு இயக்கங்களும் உயர்குடிமக்களின் பேராதரவைப் பெற்றிருந்ததால், இவற்றின் தொடக்க வரலாற்றின் போக்கே மாறுபாடுறலாயிற்று. பிரான்சில் சமயச் சீர்திருத்தம் அரசியல் மாறுதல்களேற்படுவதற்குப் பெரிதும் வழி

[1] Flodden. [2] Solway Moss. [3] Brittany.

செய்ததால், பிரெஞ்சுப் பிரபுக்கள் இதில் விருப்பத்துடன் சேர்ந்தார்கள். அதே போன்று திருச்சபைகட்குச் சொந்தமாயிருந்த நிலங்களைக் கொள்ளையடிக்க வசதி கிடைக்குமென்ற நோக்கத்துடன் ஸ்காட்லாந்து பிரபுக்களும் இவ்வியக்கத்திலீடுபடலானார்கள். சமயத்திலீடுபடுவதற்குப் பேராசையே பெருந்தூண்டுகோலாயிருந்தது என ஜான் நாக்ஸ் கூறியுள்ளார். இருநாடுகளிலும், தலைவர்களுட்சிலர் தகாத நோக்கங்களைக் கொண்டிருந்த போதிலும், உண்மையான பத்தியும் பேரார்வமும் கொண்ட பலர், இவ்வியக்கத்தைப் பின்பற்றுவதில் எவ்விதத் தடையும் செய்யப்படவில்லை என்பது நன்கு புலனாகிறது. எனினும், பிரான்சின் சூழ்நிலை, ஹியூக்நோக்கள் நாட்டில் மேலோங்குவதைத் தடை செய்தது; ஆனால், ஸ்காட்லாந்தில் பிரஸ்பிட்டீரியர்களின் செல்வாக்கு மேலோங்கியதுடன், நாட்டின் வருங்காலப் போக்கைக் கட்டுப்படுத்துவதிலும் ஆதிக்கம் பெற்றது.

## 1560-ல் எடின்பரோ உடன்படிக்கை

ஜான் நாக்ஸ் என்பாரின் போதனையால் தூண்டப்பட்டு 1559-ல் பிராட்டஸ்டென்டுகளின் வல்லந்தச் செயல்கள் திடீரெனத் தோன்றின. துரைத்தனத்தின் படைகள் தோற்கடிக்கப்பட்டன. எனினும், எடின்பரோவும், லீத்து முதலிய நகரங்களும் உறுதியுடன் எதிர்த்துப் போராடின; லீத்துத் துறைமுகத்தின்மீது பிடிப்பைத் தொடர்ந்து நிலைநிறுத்தியிருப்பார்களேயானால், விரைவில் பிரெஞ்சு உதவி கிடைத்திருக்கும். அதன் விளைவாகச் சத்திச்சமநிலை நேர் எதிராக மாறுபட்டிருக்கும். அவர்களது துன்ப நிலையில் பிராட்டஸ்டென்டுகள் இங்கிலாந்தின் உதவியைக் கோரினார்கள். நன்கு ஆராய்ந்து முடிவு செய்த பின், எலிசபெத்து உதவி அளித்தார். லீத்துத் துறைமுகம் தாக்குதலின்றும் காப்பாற்றப்பட்டது. ஸ்காட்லாந்துடனும், பிரான்சுடனும் எடின்பரோ நகரில் உடன்படிக்கை ஏற்பட்டது. ஸ்காட்லாந்தை விட்டுப் பிரெஞ்சுப்படைகள் வெளியேறின. பிரஸ்பிட்டீரியச் சமயம் நாட்டில் நிலைபெற்றது. நாக்ஸிற்கு வெற்றிகிடைத்தது (1560). ஆயினும், ஸ்காட்லாந்தின் சமயத் திட்டம், இங்கிலாந்தின் திட்டத்திலிருந்து பெரிதும் மாறுபட்டிருந்தது. இருந்தபோதிலும் ரோமன் கத்தோலிக்க அரசுகளின்மீது பொதுவாக இவ்விரு நாடுகளுக்குமிருந்த பகைமை இவைகளை ஒன்றுசேர வழி செய்ததுடன், பல நூற்றாண்டுகளாக இவற்றுக்குள்ளிருந்த பகைமையைத் துடைக்கவும் உதவி செய்தது.

## ஸ்காட்டுகளின் அரசியாரான மேரியின் வீழ்ச்சி

எலிசபெத்து அரசியாரின் ஸ்காட்லாந்துக் கொள்கையில், இது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். ஆனால், பின்பு நடந்தவை புது உணர்வு

ஊட்டுவனவாயும் மிக்க புகழ்வாய்ந்த நிகழ்ச்சிகளையுடையனவாயு மிருந்தன. 1560-ல் கணவர் இரண்டாம் பிரான்சிஸ் இறக்கவே, மேரி ஸ்காட்லாந்திற்குத் திரும்பி, ஆட்சி புரியலானார். இரங்கத்தக்கதும் துன்பத்தை விளைவிக்கக் கூடியதுமான அவரது வாழ்க்கைக் குறிப்புகளுடன் ஸ்காட்லாந்தின் சமூக, அரசியல் வரலாறு முதலியவை நெருங்கிய பிணைப்பைக் கொண்டிருந்தன. அவரது சொந்த வாழ்க்கையைப் பற்றி நாம் இங்குக் குறிப்பிட வேண்டுவதில்லை. அவர் வீழ்ச்சியுற்று, ஸ்காட்லாந்திலிருந்து விரட்டப்பட்டு, இங்கிலாந்தில் பலநாட்கள் சிறைத் தண்டனைக்குட்பட்டு, இறுதியில் நாட்டிற்குப் பகைவர் என்று கொலைத் தண்டனை அடைந்ததற்குக் காரணங்கள் என்ன என்பதையும் நாம் அறியலாம். அவருடைய இயல்புகளே இத்துன்பங்களுக்குப் பெரிதும் காரணமாயிருந்தன என்பது ஐயமின்றி எண்ணத்தக்கது. இரு பெருஞ்சத்திகளுக்கிடையில் அவர் தள்ளப்பட்டிருந்தார். முதலாவதாக, ஸ்காட்லாந்தில் நிலமானியப் பிரபுக்கள் போன்று உயர்குடிமக்கள் இருந்தார்கள். எல்லாத் தடைகளையும் பொருதவர்களாய், அவரவர் வலிமை, செல்வாக்கு முதலியவைகளுக்கு ஏற்றவாறு அரசாங்கத்தை வெறுத்ததுடன், சிறப்பாக அவர்களுக்குள் எவரேனும் ஒருவர் அதிகாரம்பெற்று அவர்கள்மீது ஆட்சி செய்வதையும் அறவே வெறுத்தார்கள். பிரெஞ்சுப் பிரபுக்களும் இதுபோன்ற இயல்புகளையும் நோக்கங்களையும் கொண்டிருந்த போதிலும், பிரெஞ்சு உயர்குடியாட்சியை அடக்கியாளுவதில் முடியரசு தீவிரமாயிருந்தது. ஆனால், ஸ்காட்லாந்திலோ, பிரபுக்களின் அதிகாரம் மிக மேலோங்கியிருந்தது. ஸ்காட்டு முடியரசைக் காட்டிலும் மிக்க வலிமை பொருந்திய அதிகாரம் அவர்களையடக்கி ஆட்சி புரியாவிட்டால், அந்நாடு, போலந்து நாட்டைப் போலவே, தலைவரற்ற குழப்பத்திற்கு ஆளாகியிருக்கும். ஸ்காட்டுப் பிரபுக்களுள் சிலர் வார்சாவிலுள்ள 'டயட்' சபையில் எளிதாக உறுப்பினர் பதவி வகிக்கத் தகுதியுள்ளவராயிருந்ததுடன், போலந்து பிரபுக்கள் செய்ததைப் போன்று கண்மூடித்தன்மாகக் கட்டுப்பாடற்ற தடையுரிமையை[1] எழுப்பியிருக்கவும் கூடும். இரண்டாவதாக, மேரி பிரஸ்பிட்டீரிய சமயத்தோடு முரண்படலானார்.

ஜான் நாக்ஸால் நிறுவப்பட்டு ஊக்கமளிக்கப்பட்டிருந்த ஸ்காட்டுகளின் திருச்சபை, அரசாங்கத்திற்கு இடரை விளைவிக்கக் கூடிய எதிரியாயிருந்தது. மேரி கத்தோலிக்க சமயத்தில் தீவிரப் பற்றுடையவரல்லர். சமயக் கொள்கைக்காக, விருப்பத்துடன் அவர் உயிர்த்தியாகம் செய்யவுமில்லை; மனநிலை, வரலாறு, ஆர்வம் இவைகளில் கத்தோலிக்கராயிருந்தார்; பிரஸ்பிட்டீரியச் சமயம், நிலமானிய முறை இவைகளின் கூட்டுச் சேர்க்கையாலான இரு சத்திகளால் கடுமோதலுக்குள்ளானார். ஒரு சமயம் அவருக்கு வெற்றி கிடைக்கும் போலத்

[1] Liberum veto.

தோன்றியது. அவருடைய பகைவர் தாக்கப்பட்டனர். அரசியல் தந்திரம் சார்ந்த எதிர்ப்பால் இங்கிலாந்தும் தோற்கடிக்கப்பட்டது. இத்தருணத்தில் கட்டுக்கடங்காத அவருடைய சொந்த மனவெழுச்சியாகிய புயல் வீசவே, அவருடைய பகைவர் வெற்றி பெற்றனர். 1567-ல் மேரி முடிதுறக்க நேர்ந்தபொழுது, அவர் புதல்வர் ஜேம்ஸ் ஸ்காட்லாந்தின் அரசரானார். எலிசபெத்து அரசியார் மணஞ்செய்து கொள்ளப் பிடிவாதமாக மறுத்ததால், 1603-ல் ஆங்கிலேய அரியணைக்கும் இவரே உரியவரானார். இவ்வாறு முடியாட்சியின் அதிகாரம் பெரிதும் வலுவடைந்ததைக் கண்டு ஸ்காட்டுப் பிரபுக்கள் திகிலடைந்தார்கள்.

## V

# இங்கிலாந்தும் அயர்லாந்தும்

அயர்லாந்தின் சமயச் சீர்திருத்த இயக்கம்

அயர்லாந்தின் வரலாற்றிலும், 16ஆம் நூற்றாண்டு உறுதியான முக்கியத்துவம் வாய்ந்தது. ஏழாம் ஹென்றி பட்டமெய்திய பொழுது அயர்லாந்தின்மீது ஆங்கிலேயத்துரைத்தனத்தின் வலிமை மிகக் குன்றியிருந்தது. அயர்லாந்தின் தென்கிழக்கில் ஒரு சிறிய மாவட்டமான பேல்[1] எனும் பகுதிக்கு வெளியில் ஆங்கில அரசாங்கம் நிலவியதாகக் கருதமுடியாது. பேல் பகுதிக்குள்ளும், இங்கிலாந்தின் அதிகாரம் வீழ்ச்சியடைந்துகொண்டிருந்தது. நூற்றாண்டுப் போராலும் உரோசாப்பூ அடையாளச் சண்டைகளாலும் இங்கிலாந்தின் கவனம் வேறு பக்கங்களில் சென்றது காரணமாக, அயர்லாந்தின்மீதிருந்த அதிகாரம் மிகக்குன்றியது. உள்நாட்டில் டியூடர் முடியாட்சி வலுவுடனிருந்தது. அதன் வலிமையை விரைவிலேயே அயர்லாந்தும் உணர்ந்தது. ஐரிஷ் பிரபுக்களின் சுயேச்சையான அதிகாரம் வீழ்த்தப்பட்டது. அவர்கள் கோட்டைகள் தகர்க்கப்பட்டன. 1494-ல் நிறைவேற்றப்பட்ட பாய்னிங்ஸ் சட்டப்படி[2] ஆங்கிலேயப் பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரம் அயர்லாந்திற்கும் நீடிக்கப்பட்டது. எட்டாம் ஹென்றி தம் தகப்பனார் தொடங்கியதைத் தொடர்ந்து செயலாற்றினார்; ரோமாபுரியுடன் சமயப் பிளவு முற்றிய போது, அயர்லாந்தின் பிரபு என்ற பட்டத்திற்குப் பதிலாக, மன்னர் என்ற விருதைப் பூண்டார். சமயச் சீர்திருத்தம் அயர்லாந்தில் அருவருக்கத்தக்கதாயிருந்தது. அதாவது, சமய வாழ்க்கைக்கு இன்றியமையாத அடிப்படையாயிருந்த மடங்கள் அழிக்கப்பட்டன. அவர்கள் மீது திணிக்கப்பட்ட திருச்சபை வழிபாட்டு முறை, ரோமத் திருச்-

[1] Pale. [2] Poynings' Act.

சபையைக் காட்டிலும் அவர்களுக்கு அயலார் போன்றிருந்தது. தவிர, ஆங்கில மொழியில் நடைபெற்ற வழிபாடுகளை இலத்தீன் மொழியில் நடந்ததைவிடக் குறைந்த அளவிலேதான் மக்கள் புரிந்து கொண்டார்கள். இவையெல்லாம் வெளிப்படையான எதிர்ப்புக்களாக முதலில் தோன்றவில்லையெனினும், அயர்லாந்தின் நாடி மெதுவாகத் துடித்துக்கொண்டிருந்தது. பொதுமக்களின் கருத்தை அறிவிக்க எவ்வித உறுப்புமிருக்கவில்லை. தேசீய ஒற்றுமை எண்ணம் மக்களிடையே இதுவரை உருவாகவில்லை.

எட்வர்டு, மேரி இவர்களது ஆட்சிகளை நாம் கடந்துசெல்லலாம். ஆனால், அயர்லாந்து வரலாற்றில் எலிசபெத்தின் ஆட்சி ஒரு சகாத்தத்தைத் தோற்றுவித்தது. இக்காலம், அறியாமை, வலுவின்மை, கொடுமை, தோல்வி முதலியவை நிறைந்த சோகக் கதைகளைக் கூறுவதாகும். அயர்லாந்து வரலாற்றில், எலிசபெத்து நல்லரசியார் பெஸ்[1] என வழங்கப்படமாட்டார். அவருடைய நோக்கங்கள் யாவை? அவைகளை ஈடேறச்செய்ய எம்முறைகள் கையாளப்பட்டன?

## அயர்லாந்தில் எலிசபெத்தும் நெதர்லாந்தில் இரண்டாம் பிலிப்பும்

16ஆம் நூற்றுண்டில், நெதர்லாந்தும் அயர்லாந்தும் மாறுபட்டிருந்ததைப் போன்று வேறெந்த நாடும் இருந்திராது. ஆயினும், இரண்டாம் பிலிப்பு எந்தநோக்கத்துடன் 1567-ல் ஆல்வாக் கோமகனை நெதர்லாந்திற்கு அனுப்பினரோ, அது எலிசபெத்தும் அவர் ஆலோசனையாளர்களும் அயர்லாந்துடன் கொண்டிருந்த விவகாரங்களுக்கு இணையாயிருந்தது. இரண்டாம் பிலிப்பு, ஸ்பெயினில் ஆட்சி புரிந்ததுபோல நெதர்லாந்திலும் ஆட்சிபுரிய விரும்பினர். பதினேழு மாகாணங்களுக்கும் ஒரேமாதிரியான அரசியல் திட்டத்தை ஏற்படுத்த விரும்பினர்; நாட்டின் அரசியல் ஒற்றுமை, சமய ஒற்றுமையின் ஆதரவில் அமையவேண்டும் என்ற நம்பிக்கையுடனிருந்தார். எலிசபெத்து அயர்லாந்தில் ஆட்சிபுரியவும் அதிகாரம் செலுத்தவும் விரும்பினர்; அயர்லாந்தின் ஒற்றுமையைக் குலைக்கும் பிரதேச மாறுபாடுகளையும் மாநிலங்களின் பழக்கங்களையும் அழித்து, அயர்லாந்தை எல்லா வழிகளிலும் இங்கிலாந்துடன் ஒன்றுகக் கலக்கும்படி செய்யவும், ஆங்கிலத் திருச்சபையைப் பொதுவாக ஏற்றுக் கொள்ளுவதன் அடிப்படையில் அயர்லாந்தில் ஒற்றுமையை ஏற்படுத்தவும் விரும்பினர். இதனுடன் ஐரிஷ் நிலங்களின் பெரும்பகுதிகளை ஆக்கிரமித்து அங்கெல்லாம் ஆங்கிலேயர்களைக் குடிபுகச் செய்வதன் மூலம் ஆங்கிலேய

[1] Good Queen Bess.

ஆட்சிமுறையைக் காத்தற்கு நிலையான படையைத் தோற்றுவிக்கவும் எண்ணினார். (பிலிப்பின் திட்டத்தில் இதற்கிணையாக ஒன்றையும் காண்பதற்கில்லை).

## அயர்லாந்தில் எலிசபெத்தின் தோல்வி

அரசியாரின் ஆட்சியில் அவரது ஐரிஷ் கொள்கை, தோல்வியையே கண்டது. நாட்டில் வல்லந்தமாகப் புகுத்தப்பட்ட திருச்சபை முறை வளர்ச்சியடையவில்லை. குடியேறிய ஆங்கிலேயர்கள் அங்கிருந்து விரட்டப்பட்டார்கள். ஆங்கிலேயரின் பகைவர்கள்—குறிப்பாகப் போப் பாண்டவரைச் சேர்ந்தவர்களும் ஸ்பெயின் நாட்டினரும்—அயர்லாந்தில் கலகம் விளைவித்ததுடன், அங்குத் தோன்றிய கலகங்களுக்குத் துணையாயுமிருந்தனர். நாடு வெற்றி கொள்ளப்பட்டு நிலங்கள் பாழாக்கப்பட்டன. இவ்வாட்சியில் நிலையானதும் தலையாய பயனும் இதுதான்; இதற்கு முன்பில்லாதஅளவு ரோமன் கத்தோலிக்கத் திருச்சபை நாட்டினருடனும், நாட்டின் சுதந்தர உணர்ச்சியுடனும் ஒன்றியது, சமய இயக்கங்கள் காரணமாக இங்கிலாந்தும், ஸ்காட்லாந்தும் ஒன்று சேர்ந்தன. அதேகாரணமாக இங்கிலாந்தும் அயர்லாந்தும் விலகிச்சென்றன. அயர்லாந்தில் ஆங்கிலேயக் கொள்கையைப் பற்றி, பர்லி பிரபு, 'அயர்லாந்து மக்கள் ஆங்கிலேயரின் கொடுங்கோன்மைக்கு எதிராகக் கலகம் செய்யத் தூண்டுவதாயிருந்த காரணங்களைப்போல, ஸ்பெயினின் அடக்குமுறையை எதிர்த்துக் கலகஞ்செய்வதற்கு பிளிமிங்குகளுக்குக்[1] காரணமில்லாதிருந்தது,' என்று கூறுகிறார்.

## VI

## எலிசபெத்துக் காலத்து இலக்கியம்

16ஆம் நூற்றாண்டு இங்கிலாந்தின் மிகப்பெரிய செய்தி பற்றி இதுகாறும் கூறப்படவில்லை. ரஃபேல், மைக்கேல் ஆஞ்சலோ, டிடியன், மாக்கியவல்லி போன்ற பெயர்களைக் கூறாது, 16ஆம் நூற்றாண்டில் இத்தாலி நாட்டின் வரலாற்றைப் பற்றி எவ்வாறு ஒன்றும் கூறமுடியாதோ, அவ்வாறே 16ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் வரலாற்றைப் போர்கள், அரசியல் தந்திரம், சமயச் சச்சரவுகள் உடையன எனக் கூறி, நூற்றாண்டின் தொடக்கம் முதல் இறுதிக்குப் பின்பும் நன்றாகப் பூத்துக் குலுங்கி இன்பக் கனிகளையும் அளித்த ஆங்கிலேயர்களின் அறிவு ஒளியான இலக்கியங்களைப் பற்றிய செய்தியைக் கூறாது

[1] Flemings.

விடுவது பெருந்தவறுகும். அறிவு வளர்ச்சி போன்ற நிகழ்ச்சிகளுக்கு வரலாற்றில் காரணம் காண்பதென்பது கடினமானது.

எனவே, 16ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயர்களின் பேரறிவு முதிர்ச்சியடைந்ததற்கான காரணங்களை ஊகித்தறிய இங்கு முயலப் போவதில்லை. வண்ணந்தீட்டுவதில், நெதர்லாந்து, ஜெர்மனி, இத்தாலி, ஸ்பெயின் முதலிய நாடுகளிலிருந்த சிறந்த கைதேர்ந்த வல்லுநரைப் போன்று, இங்கிலாந்தில் ஒருவரும் தோன்றவில்லை. இங்கிலாந்தில் சிறந்த ஓவியங்கள் தீட்டப் பெற்றன எனினும், தீட்டியவர் ஆங்கிலேயர் அல்லர்; ஹால்பீன்[1] போன்ற வெளிநாட்டினர்களால் அவை தீட்டப் பெற்றவை. தவிர, சிறப்பாகக் கருதத்தக்க சிற்பிகளையும் இங்கிலாந்து தோற்றுவிக்கவில்லை. ஆயினும், மற்ற அறிவுத் துறைகள் பற்றியவற்றில் எல்லாம் மற்ற நாடுகளில் காணப்பட்ட சிறந்தவற்றிற்கு இணையாயிருந்ததுடன், சில துறைகளில் இணையற்றும் வினவுதற்கியலாத் தலைமை பெற்றுமிருந்தது.

## பேக்கன்

சமய சித்தாந்தங்களையும் இயக்கங்களையும் தோற்றுவித்தவர்களான லூதர், சுவிங்கிலி, கால்வின் போன்ற சிறந்த சித்தாந்திகள் இல்லாவிடினும், சர். தாமஸ் மூர், கிரான்மர், லாட்டிமர், மேற்றிராணியாரான பார்க்கர் போன்றவர்கள் சமயத்தின்மீது பல வழிகளில் முக்கியமான செல்வாக்குக் கொண்டிருந்தார்கள். கலப்பற்ற காப்பியப் படைப்பில் பேக்கன் சிறந்தவர். அதைவிட விஞ்ஞானமேதை என்று வழங்குவது பற்றிச் சிலர் சர்ச்சை செய்யக்கூடுமாதலால், விஞ்ஞானத்தில் அவர் கொண்டிருந்த பங்கைப்பற்றி அறுதியிட்டுக் கூறுவது கடினம். நேரிடையாகக் கண்டு பிடித்தவர் என்பதைவிடத் தீர்க்கதரிசி, முதன் முதலாக ஈடுபட்டவர் என்பதில் அவரது பெருமை காணலாம். டார்வின், நியூட்டன் முதலானவர்களுடைய விஞ்ஞானக் கருத்துக்களை முன்னரே கூறினர் என்று கருதும் போதும் அவரது விஞ்ஞான நூல்களைப் பார்க்கும் போதும் அவர் ஷேக்ஸ்பியர் காலத்தில் வாழ்ந்தவர் என்று நினைவு கொள்ளுவதற்கான காரணமும் தென்படுகிறது.

16ஆம் நூற்றாண்டிற்குச் சிறிது முன்பாகவே இத்தாலி எவ்வாறு ஓவியத்தில் முதன்மை பெற்று விளங்கியதோ, அவ்வாறே 16 ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் தனிச்சிறப்புப் பெற்று விளைந்தது கவிதைதான் என்பதைக் கவிஞர்களுள் தலைசிறந்த ஷேக்ஸ்பியரின் பெயர் உயர்த்துகிறது. இத்தாலி நாட்டு ஓவியர்கள் உலகிற்கு ஒரு புதிய புலனுணர்ச்சியையும், அனுபவிக்கும் மனத்

[1] Holbein.

திறனையும் அளித்தார்கள் என்பது சொல்லப்பட்டிருக்கிறது. எலிச பெத்தின் காலத்துக் கவிதைகள் ஒரு புது மாதிரியாயும், ஆனால் முக்கியமாயுமிருப்பதால், உறுதியில் மேன்மை பொருந்தியனவாயு மிருக்கின்றன. கலைகளுள் கவிதை மிகப் பழைமையானதும் மிகச் சிறப்புள்ளதுமாகும். எலிசபெத்தின் காலத்தில் ஷேக்ஸ்பியர் போன்ற வர்கள் தோன்றியிராவிட்டாலும், உலகம் சிறந்த கவிதைகளைப் பெற் றுள்ளதாயிருக்கும். எனினும், இங்கிலாந்தில் எலிசபெத்தின் காலத்துக் கவிதைகளின் செல்வாக்கால் ஊடுருவிச் செல்லாத நவீனக் கவிதை களைக் காண்பது நினைக்க முடியாதது. மக்களினத்தால் சேமித்து வைக்கப்பட்ட கருவூலங்களிலிருந்து மனிதனது இயற்கை பற்றிய புதுத் தோற்றமும், வாழ்க்கையில் கவிதை கொண்டுள்ள பங்கைப் பற்றிய புதுக்கருத்தும், புதிய அழகுணர்ச்சியும் எக்காலத்தும் மறையா.

எச். ஏ. எல். ஃபிஷரும், ஏ. எப். போலார்டும் எழுதியுள்ள ‘இங்கிலாந்தின் அரசியல் வரலாறு’ 5, 6 எனும் இரண்டு தொகுதிகள், ட்யூடர் காலத்தைப் பற்றி வியக்கத்தக்க முறையில் கூறுகின்றன. ஃப்ரூட் பத்துத் தொகுதிகளில் எழுதியுள்ள ‘இங்கிலாந்தின் வரலாறு’ எனும் நூல் 1529 முதல் 1588 வரை இங்கிலாந்தின் வரலாற்றைக் கூறுகிறது. இந்த அதிகாரத்திலுள்ளவை பற்றியும் இங்கிலாந்தின் வரலாற்றில் மற்றப் பகுதிகளைப் பற்றியும் நன்கறிய, கிரீன் எழுதியுள்ள ‘இங்கிலாந்து மக்களின் வரலாற்றுச் சுருக்கம்’ எனும் நூல் பரிந்துரைக்கப்படுகிறது. ஹாலம் எழுதியுள்ள ‘இங்கிலாந்தின் அரசியல் வரலாறு’ம் மிகவும் பயனுள்ளது. கிரெய்டன் எழுதியுள்ள ‘உல்ஸியின் வாழ்க்கை வரலாறும்’ பீஸ்லி என்பாரின் ‘அரசி எலிசபெத்தின் வாழ்க்கை வரலாறும்’ படிப்பதற்கு ஊக்கமளிப்பனவாயும் அறிவு புகட்டுவனவாயுமுள்ள. புரோதிரோ என்பாரின் ‘சட்டங்களும் அரசியற்பத்திரங் களும்’ (1558—1625) என்ற நூலும், ஏ. எப். போலார்டு எழுதியுள்ள, ‘பாராளு மன்றத்தின் முறையான வளர்ச்சி’ என்ற நூலும் மேற்கொண்டு அறிவு பெறுதற்கு இன்றியமையாதனவாகும்.

# 7. முப்பதாண்டுப் போர்

## லூதரின் சமய வீழ்ச்சி

1617-ல் பிராட்டஸ்டென்டு ஜெர்மனி, ஒரு நூற்றாண்டிற்கு முன் போப்பாண்டவரின் அதிகாரத்தை எதிர்த்து, லூதர் வெளியிட்ட அறை கூவலை நினைவு கூர்ந்து பாராட்டுவதற்காக ஒரு பெருவிழாக் கொண்டாடியது. லூதரினுடைய செயலின் விளைவாக, ரோமுக்குக் கீழ்ப்பட்டிருந்த ஜெர்மனியில், மூன்றிலிரு பங்கு அத்தளையை அறுத்தெறிந்தது. 1555-ல் நடந்த ஆக்ஸ்பர்கு சமாதானத்திற்குப் பின், ஜெர்மனியின் அமைதி நிலைக்கு இடர் ஏற்படாதிருந்தது. நகரங்களும் மாவட்டங்களைச் சுற்றியிருந்த நிலப்பகுதிகளும் முன்னேற்றம் அடைந்திருந்ததுடன், கடந்த ஐம்பதாண்டுகளில் ஜெர்மனியின் செல்வமும் அதிகரித்திருந்தது. அடுத்த ஆண்டில், அதுவரை ஐரோப்பாக் கண்டிராததும், இடைக்கால இறுதிக்குப் பின் அச்சம் விளைவிக்கக் கூடியதுமான முப்பதாண்டுப் போர் ஐரோப்பாவில் தொடங்கிற்று. இப்போருடன் ஒப்பிடக்கூடிய போர் இங்கிலாந்தில் இதுவரை நடந்ததில்லை. ஆனால், 16ஆம், 17ஆம் நூற்றாண்டுகளில், அயர்லாந்து இப்போரைப் போன்ற ஒரு பெரிய விபத்தில் சிக்குண்டிருந்தது.

இப்பெரும்போராகிய தீ மூளுவதற்கு ஏராளமான எரிபொருள்கள் நீண்ட நாள்களாகவே தயாராகி இருந்தன. ஆக்ஸ்பர்கு சமாதானத்தின் பின்னிட்ட அறுபதாண்டுகளில் சமயச் சூழ்நிலை மிக்க மாறுதலையடைந்தது. லூதரின் சமயத்தில் மக்களின் மனம் ஈடுபடவில்லை. தொடக்கத்தில் லூதரின் போதனைகள் எளியனவாயும் அன்பு நிறைந்தனவாயுமிருந்தன. ஆனால், அவர் இறந்தபின், அவரது சமயத்தைப் பின்பற்றியவர்கள், கடுஞ்சமய சித்தாந்த வாதங்களில் ஈடுபட்டதால் அவருடைய சமயக் கொள்கைக்கு இலக்கணம் காணுவது நீடித்த சச்சரவாய் இருந்தது. புதிய சமயத்தை ஏற்றுக்கொண்ட சில நாடுகளில், சமயச் சீர்திருத்தம் ஏற்படுவதற்குமுன், ஜெர்மனியில் காணப்பட்ட கொடுமைகளைவிடப் பன்மடங்கதிகமான கொடுமைகளை

விளைவித்த சமயக் கொடுங்கோன்மை நிலவியது. ஆக்ஸ்பர்கு சமாதானத்தின்படி சமயஞ்சார்ந்த விடயங்களில், அடக்கியாளுவது பல்வேறு நாட்டு மன்னர்களின் கைகளில் ஒப்படைக்கப்பட்டிருந்தது. எனினும், அவர்களுட்பெரும்பான்மையோர், வழிபாட்டுச் சுதந்தரம், கருத்துச் சுதந்தரம் முதலியவைகளை அனுமதிக்காதிருந்தனர். ஜெர்மனியில், பிராட்டஸ்டென்டு சமயத்தின் வளர்ச்சி லூதரின் கட்சியாளர்களின் ஊக்கத்தை மட்டிலும் நம்பிக்கொண்டிருந்திருக்குமேயானல் சீர் குலைந்திருக்கும்.

## கால்வினியம் வளருதல்

பாலட்டினேட்டுச் சிற்றரசர்: பிரடரிக்கு

அவ்வாறன்றி, கால்வினின் சமயம் ஜெர்மனியில் நன்கு பரவியிருந்தது. கால்வினியம், அதை முழு மனத்துடனும் சிரத்தையுடனும் கற்றுக்கொண்டு அதன்படி ஒழுகியவர்களுக்குப் பேருக்கம் அளித்ததுடன் அதற்கெதிரியாயிருந்த லூதரின் சமயத்தைப் போன்றிராமல், தெளிவாயும் மனிதத் தன்மையை வளர்ப்பதாயுமிருந்தது. இவ்விரு சமயத்தினரும் ஒருவரோடொருவர் கடும்பகைமை பாராட்டினர். இரு சமயத்திற்கும் பொதுவாக இடர் என்பது ஏற்பட்டாலொழிய ஒற்றுமையைக் காண முடியாது. பிராட்டஸ்டென்டு ஜெர்மனியின் மிக முக்கிய நாடுகளான சாக்ஸனியும் பிராண்டன்பர்கும் லூதரின் சமயத்தைச் சார்ந்திருந்தன. ஆனல், பிராண்டன்பர்கின் தேர்வாளர் நெடுநாளாகவே கால்வினியத்தைச் சார்ந்தவராயிருந்தார். கால்வினியத்திற்கு முக்கிய ஆதரவாளராயிருந்தவர் பாலட்டினேட்டின் தேர்வாளரும் இங்கிலாந்தையாண்ட முதலாம் ஜேம்ஸின் மருகருமான பிரடரிக்கு என்பாராவர். (கால்வினியத்தைச் சீர்திருத்தப்பெற்ற திருச்சபை யென்றும்,[1] லூதரின் கொள்கையினரை இவாஞ்சலிக்குகள்[2] என்றும் துரைத்தன முறையில் வழங்கினர்.) பிரடரிக்கு, சிறந்த மன்னர் அல்லராயினும், அவரிடத்தில் தேவையான சத்தியும் எடுத்துக்கொண்ட செயலை முடிக்கும் ஆற்றலுமிருந்தன. சாக்ஸனி, பிராண்டன்பர்குச் சிற்றரசர்கள் இயற்கையிலேயே கூச்சமும் தயக்கமும் கொண்டிருந்தார்கள்.

## பவேரியா நாட்டு மாக்ஸிமிலியன்

நற்செய்தி பரப்பும் சங்கம்

பிராட்டஸ்டென்டு சத்திகள் இவ்வாறு பிரிவுற்றும் செயலற்றுமிருக்கும் நிலையில், கத்தோலிக்கர்களின் எதிர் விளைவு இயக்கத்தால்,

[1] Reformed Church. [2] Evangelicals.

எவ்வாறு கத்தோலிக்கச் சமயம் புதியதொரு சத்தியைப் பெற்று வளர்ந்தது என்பதையும், அதற்கு முக்கிய காரணமாயிருந்தவை களையும் முன்னதிகாரத்தில் தெளிவாக அறிந்தோம். கத்தோலிக்கச் சமயக் கொள்கைகள், டிரென்டில் நடந்த மாநாட்டில்[1] தொகுக்கப் பெற்றன. இயேசு சங்கத்தார், நாட்டில் பரவி மிக்க திறமையுடன் சமயக் கொள்கைகளை மக்களுக்கு எடுத்துக் கூறி, சமயத்தைப் பரப்பினர்; அதனுடன் ஜெர்மனியிலிருந்த கத்தோலிக்கச் சத்திகளை ஊக்குவித்து ஆர்வ மூட்டினர். கத்தோலிக்க எதிர் விளைவு இயக்கத்தின் மீது பரிவுகொண்டிருந்த ஜெர்மன் நாட்டு இளவரசர்களில் பவேரியா நாட்டு மன்னரான மாக்ஸிமிலியன்[2] மிக முக்கியமானவர். அவரது நாட்டிலிருந்து பிராட்டஸ்டென்டுகள் வெளியேற்றப்பட்டதுடன், ரோமாபுரிக்குக் கீழ்ப்படிவதில் நிலையற்ற கருத்துக் கொண்டிருந்த நாடுகள் உண்மையான பற்றுடன் இருக்கும்படி செய்யப்பட்டன. கொலோன் நகரத்து மேற்றிராணியார், தாம் கால்வினியத்தைச் சேர்ந்தவரென விளம்பரப்படுத்திய பொழுது, அந்நகரம் பிராட்டஸ் டென்டு பக்கம் சேர்ந்துவிடும் போல ஒரு கணம் தோன்றிய போதிலும் மேற்றிராணியாரை உடனே பதவி நீக்கம் செய்து இவ்வியக்கத்தை யடக்கியதால், எண்ணியவாறு நிகழவில்லை. கத்தோலிக்கச் சமயத்தின் அச்சுறுத்தும் நோக்கத்தால் விளையும் இடரிலிருந்து மீள 1608 ல் நற்செய்தி பரப்பும் சங்கம்[3] தோன்றியது. அதன் முக்கிய உறுப்பினர் பாலட்டினேட்டு மன்னராவர். இவரைப் பின்பற்றி ஹெஸ், பேடன், உர்ட்டம்பர்கு முதலியவை சேரலாயின. ஆயினும், பிராட்டஸ்டென்டு நாடுகளான சாக்ஸனியும் பிராண்டன்பர்கும் இதில் ஊக்கத்துடன் சேராமல் தனித்திருந்தன.

## கத்தோலிக்கக் கூட்டு

அடுத்த ஆண்டில் (1609-ல்) கத்தோலிக்கக் கூட்டு,[4] நற்செய்தி பரப்பும் சங்கத்திற்கெதிராகக் கிளம்பியது. இப்புதிய இயக்கத்தின் உயிரும் உடலுமாயிருந்தவர் பவேரியா நாட்டு மன்னரான மாக்ஸி மிலியன் என்பவராவர். சமயஞ் சார்ந்த நாடுகள் இவருடன் சேர்ந்து கொண்டன. பேரரசரும் இக்கூட்டையாதரித்தார். இவ்விரு நிறுவனங்களும் தற்பாதுகாப்பை பற்றிக் கவலை கொண்டிருந்தன. எனினும், பிராட்டஸ்டென்டு சமயத்தைத் தோற்றுவித்த நாட்டிலேயே அச்சமயம் ஒடுக்கப்படுமென்று கத்தோலிக்கக் கூட்டு எதிர்பார்த் திருந்தது. இவ்வெண்ணத்தில் பெருஞ் சமயப் போருக்கான காரணங்கள் புலப்பட்டன.

[1] Council of Trent. [2] Maximilian of Bavaria. [3] Evangelical Union.
[4] Catholic League.

## போரின் அரசியற்காரணங்கள்

போருக்கான அரசியற்காரணங்கள் தெளிவானவை. பேரரசை உண்மையில் வலுவுள்ள ஆட்சியாகச் செய்யும் முயற்சிகளில் ஹாப்ஸ்பர்கு மன்னர்கள்[1] தவறினர்கள். இதற்கு ஆக்ஸ்பர்கு சமாதானமே[2] தக்க சான்ருகும். எனினும் ஒரு சமயம் வலுவடையக் கூடும் என்ற எண்ணம் கைவிடப்படவில்லை. இங்கிலாந்து நீங்கலாக மற்றெல்லா நாடுகளிலும் ஆளும் மன்னரிடம் அதிகாரம் குவிந்து நிலை பெறுவது காணப்பட்டது. இந்நிலை ஜெர்மனியில் பல்வேறு நாடுகளில் நன்கு புலப்பட்டது. இந்நிலையில், ஒன்று சேர்ந்த ஐக்கிய ஜெர்மனியில் இது ஏன் தோல்வியுற வேண்டும்?

## ஆஸ்திரியாவும் ஸ்பெயினும்

இக்காலத்தில் ஆண்ட பேரரசர்கள் திறமை மிக்கவர்களல்லர். ஹாப்ஸ்பர்கு குடும்பத்தில் திறமையுள்ளவர்கள் காணப்படவில்லை. இவ்வரலாற்றுக் கட்டத்தில் ஜெர்மனியில் ஆண்ட மன்னர்களுக்குள் திறனுயர்வு பெரிதும் குறைவுற்றிருந்தது. 1576-ல் இரண்டாம் ருடால்ஃப்[3] பேரரசுப் பட்டம் எய்தி 1612 வரை ஆண்டார். இவர் ஸ்பெயினில் வளர்ந்தவர்; இயேசு சங்கத்தின் சீடராயிருந்தவர்; தவிர, கத்தோலிக்க எதிர் விளைவில் பேருக்கம் கொண்டிருந்தவர். ஆயினும், ஹாப்ஸ்பர்கு குடும்பத்தினரிடையே பொதுவாகக் காணப்பட்ட மனக் கோளாறு இவரிடமும் காணப்பட்டது. எனவே, இவரது ஆட்சி முடிவடையுமுன்னரே இவர் உடன்பிறந்தாரான மத்தியாஸ்[4] என்பார், பட்டமெய்துவதற்கு முன்னரே சகோதரருக்காக ஆட்சி புரிய நேர்ந்தது. ஹாப்ஸ்பர்கு குடும்பத்தாரின் நிலவுடைமைகள் ஏராளமாயிருந்ததால், பேரரசரும் ஸ்பெயினுடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தார். ஸ்பெயினிலும் ஹாப்ஸ்பர்கு குடும்பத்தினரின் மற்ருெரு கிளை, ஆட்சி செய்து கொண்டிருந்தது ஜெர்மனியில் தமக்குச் சொந்தப் பகுதிகளிலிருந்தும், ஹங்கேரி, பொஹீமியா முதலியவைகளிலிருந்தும் பேரரசர் அதிக வலிமையடைந்து, ஜெர்மனியில் அவருக்கிருந்த எல்லா எதிர்ப்புக்களையும் அடக்குவதற்கான ஆதரவை ஸ்பெயினுடன் ஏற்பட்டிருந்த உறவின் பயனைப் பெற்றும், அதனுடன் பிரடரிக் பார்பரோஸா[5], நான்காம் ஹென்றி இவர்கள் காலத்திலிருந்ததைப் போன்று, தம் பேரரசை உண்மை அரசாங்கமாக்க அவருக்கு வாய்ப்பு இருந்தது அதனுடன் கத்தோலிக்கக் கூட்டின் ஆதரவையும் பேரரசர்கள் நம்பியிருக்கலாம். ஏனென்ருல், பேரரசின் அதிகாரத்திற்குப் பிராட்டஸ்டென்டு நாடுகள் பகையாயிருந்தன.

[1] House of Hapsburg. [2] Peace of Augsburg. [3] Rudolf.II.
[4] Matthias. [5] Frederick Barbarossa.

எனவே, தொடக்கத்தில் போருக்கான அரசியல், சமயம் பற்றிய காரணங்கள் சேர்ந்திருந்தன என்றாலும்; இவை இறுதி வரை ஒன்றுக்கொன்று உதவியாகச் சேர்ந்திருக்கவில்லை என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டுவது அவசியம். இவை தனித்து விலகி நின்றமையே, இவற்றின் மேலான நம்பிக்கைகளை முழுதும் அழித்தன. 1629-ல் ஜெர்மனி பேரரசின் ஆளுகைக்குட்பட்டிருந்தபோது, பவேரியா நாட்டுத் தேர்வாளரும், மற்றுமுள்ள ரோமன் கத்தோலிக்க அரசுகளும் அவற்றின் சுதந்தரம் எவ்வளவு தூரம் தடை செய்யப்பட்டிருந்ததென்பதை நன்கு உணர்ந்திருந்தன. இவர்களுக்குள்ளிருந்த பொருமையே, ஒடுக்கப்பட்டிருந்த பிராட்டெஸ்டன்டுகளை மீண்டும் தலையெடுக்கச் செய்தது.

## பொஹீமியாவில் போர் தொடக்கம்

உண்மையில் போர் தோன்றுமுன்னரே, போர் மூளுவதற்கான அச்சுறுத்தல்கள் காணப்பட்டன. போர் முதன் முதலில் பொஹீமியாவில் மூண்டது. அந்நாடு பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சார்ந்திருந்ததோடு, லூதரின் கொள்கைகளையும் பின்பற்றியதாயிருந்தது. பிரபுக்களுள் பெரும்பாலார், இப்புதிய சமயத்தை ஆதரிப்பவராயிருந்தனர். பொஹீமியா மன்னரின் பதவி இதற்கு முன்பெல்லாம் தேர்ந்தெடுக்கப் படுவதாகக் கருதப்பட்டு வந்தது. மத்தியாஸ், பொஹீமியா நாட்டின் மன்னரும் பேரரசருமாயிருந்தார்.

## பொஹீமியாவின் மன்னராக பர்டினண்டு தேர்வு

### பிராகில் கலகம் 1618

1617-ல் பொஹீமியா மக்கள், ஆஸ்டிரியா நாட்டு மன்னரான பர்டினண்டைத் தங்களது எதிர்கால மன்னராக ஏற்றுக்கொண்டார்கள். அவர் தீவிரக் கத்தோலிக்கராயும், கத்தோலிக்கக் கூட்டில் சேர்ந்தவராயுமிருந்தார்; பேரரசர் பதவியடைவது பற்றி முன்னரே வாக்குறுதியளிக்கப் பெற்றிருந்தார். இந்நிலையில், சமயத் தொடர்பான விவகாரத்தில் கருத்து மாறுபாடு ஏற்பட்டது. பேரரசரால் உறுதி அளிக்கப்பட்டிருந்ததற்கு முற்றிலும் மாறாக, பிராட்டஸ்டென்டு திருக்கோயில்கள் இடித்துத்தள்ளப்பட்டன. இதை பொஹீமியர்கள் கண்டித்தார்கள். பிராகு[1] என்னுமிடத்தில் கலகம் தோன்றியது. பேரரசின் பிரதிநிதிகள் கோட்டையிலிருந்த சன்னல்கள் வழியாக வெளியே தூக்கியெறியப்பட்டார்கள். (இச்செயல், பிராகின் புகழ் வாய்ந்த 'டிஃபனஸ்ட்ரேஷன்'[2] என வழங்கப்படுவதாகும்). இச்செயல், ஜெர்மனி முழுவதிலும் கொடுந்

[1] Prague. [2] Defenestration.

துயரை விளைவித்த முப்பதாண்டுப் போரின் தொடக்கத்தை அறிவித்தது. தங்களுக்கு ஆதரவை எதிர்நோக்கிய பொஹீமியர்கள், நாட்டின் அரச பதவியை லூதரின் சமயத்தைச் சார்ந்த இளவரசருக்கு வழங்கினர்கள். இறுதியாக, பாலட்டினேட்டுத் தேர்வாளரும் கால்வினியத்தைச் சேர்ந்தவருமான பிரடரிக்கு முடியை ஏற்றுக் கொண்டார். போரும் தொடங்கியது.

## போரின் தன்மை

### கூலிப் படைகள்

மிகப் பெரியதும், பெருகிக்கொண்டேயிருந்த கொடுமை மிக்க கொலைகளையுடையதும், ஜெர்மனியைப் பற்றியதுமான இப்போரில், முக்கியமாக அயலார் தலையிட்டதும், நீண்டு தொடர்ந்து நிகழ்ந்ததும், ஜெர்மானியரின் சொல்லொணுத் துயரும், முக்கியக் கூறுகளாகும். இம்மாதிரியான சிறப்புத்தன்மைகளுக்கு ஜெர்மனியின் அரசியல் நிலை பெரிதும் காரணமாயிருந்தது. பேரரசின் அதிகாரம் குறைவாயிருந்தது. எனினும், தேசீய அடிப்படையில் பல சிற்றரசுகளும் ஒன்று சேருவதை அது தடுத்தது. போருக்காக அமர்த்தப்பட்ட படைகளில் ஊதியம் பெறுவதும், கொள்ளையிடுவதில் பங்கு கிடைக்கும் என்பதும் நோக்கமாக உடைய கூலிப்படை வீரர்கள் சேர்க்கப்பட்டிருந்தார்கள். சுவீடன் நாட்டுப் படை மேற்கூறியவற்றிற்குப் புறம்பாயிருந்தது. 1632-ல் சுவீடன் மன்னர் இறந்த பின்பு இந்நாட்டுப் படைக்கும் மற்றப்படைகளுக்குமிடையேயிருந்த வேற்றுமைகள் மறைந்து போயின. போரின் காரணத்தைக் கருத்தில் கொண்டு போரிடாததும், நாட்டின் நலனில் நாட்டமில்லாததுமான படையின் அதிகாரத்தின்கீழ் ஜெர்மனி அகப்பட்டுக் கொண்டது. முடிவு காணப்படாத போர் நிகழ்ந்துகொண்டிருக்கும்போது, படை வீரர்களில் பெரும்பான்மையோர், போரின் நிகழ்ச்சிகளையும் அவற்றின் விளைவாகக் கொள்ளையிடுவதையும் அவர்களது வாழ்வின் தொழிலாகக் கொண்டதோடு, போரில் தொடர்பு கொள்ளாத மக்களை விலங்குகளைப் போன்று வேட்டையாடத்தக்கவர்களாயும் கருதத் தொடங்கினர்.

## அயலார் குறுக்கீடு

தவிர, ஜெர்மனியின் போராட்டம், ஐரோப்பிய அரசுகளின்—சிறப்பாக ஜெர்மனியின் அண்டை நாட்டினரின்—கவனத்தை ஈர்த்தது. பிராட்டஸ்டென்டு சமயத்தைக் காக்கவும், ஜெர்மனியில் தங்களுக்குச் சொந்தமாயிருந்த நிலப் பகுதிகளைக்காக்கவும், டென்மார்க்கும் சுவீடனும் இப்போரில் சேரலாயின. இடரை விளைவிக்கக் கூடிய ஆஸ்திரியாவின் வலிமையைத் தடை செய்வதற்காக இப்போரில் பிரான்சும்

கலந்துகொண்டது. இப்போரில் அயலார் தலையீடின்றி ஜெர்மனியைத் தனித்து விட்டிருப்பார்களாஞல், போர் விரைவிலேயே முடிவடைந்திருக்கும்; அதனுடன் கத்தோலிக்கத்திற்கும் வெற்றி ஏற்பட்டிருக்கும். அயல் அரசுகள் குறுக்கிட்டுப் பிராட்டஸ்டென்டு சமயத்தைக் காப்பாற்றின. ஆனல், இத்தலையீட்டால், ஜெர்மனி படுகுழியில் விழுந்து நம்பவியலாத அளவிற்குப் பாழுற்றது.

## பொஹிமியாப் போர்

போரின் முதற்பகுதி விரைவில் முடிவுற்றது. பொஹீமியாவின் புதிய மன்னரும், பாலட்டினேட்டுத் தேர்வாளருமான பிரடரிக்கு, ஜெர்மனியில் தமக்கு ஆதரவில்லாதிருப்பதைக் கண்டார். பேரரசுப் படை மெதுவாகத் திரட்டப்பட்டு, தில்லி[1] என்பாரின் தலைமையில், பொஹீமியாமீது படையெடுத்துச் சென்று, 1620-ல் பிராகு நகருக்கு வெளியில் வெள்ளை மலை என்னுமிடத்தில் நிகழ்ந்த போரில் பிரடரிக்கு மன்னரின் படைகளைச் சிதறவடித்தது. பிரடரிக்கு, தமக்கு நேர்ந்த துன்பத்தில் ஒருவரும் உதவி செய்ய முன் வாராததைக் கண்டார். அவருக்குச் சொந்தமான நிலப்பகுதிகள், படையெடுக்கப்பட்டதனுல், டச்சுக்காரர்களின் நாட்டில் அடைக்கலம் புக நேர்ந்தது. அவர் மீண்டும் பதவியைப் பெறுவதற்குத் தக்க உதவி புரியுமாறு தம் மாமனுரான ஆங்கிலேய மன்னரை இரந்தார்; ஆனுல், பயனில்லை. இந்நிலையில் பொஹீமியா கொடிய ஊழுக்குள்ளாயிற்று. இது போரின் பிற்பகுதியில் தோன்றவிருந்த கொடுமைகளுக்கு முன்னறிவிப்பாயிருந்தது. பேரரசின் பகைவருட்பலர் தூக்கிலிடப்பட்டனர். பெரு நிலப்பரப்புக்கள் கைப்பற்றப்பட்டன. அதனுடன் கடுமையான தண்டப் பணமும் கொடுமை செய்து வாங்கப்பட்டது. பலர் நாடு கடத்தப்பட்டனர். பொஹீமியா சொல்லொணுத் துயரிலாழ்ந்தது. முப்பதாண்டுப் போர்களினுல் பொஹீமியாவின் மக்கள் தொகை நான்கு மிலியனுக்கதிகமாயிருந்தது, ஒரு மிலியனுக்கும் குறைவாயிற்று என மதிப்பிடப்பட்டுள்ளது. சிலவாண்டுகளுக்குப் பின் அயர்லாந்தில் கிராம்வெல் செயல் புரிந்த மாதிரி பேரரசரின் பகர ஆள்கள் செயல் புரிந்தார்கள். முக்கியமாகப் பிராட்டஸ்டென்டு நாடாயிருந்தது, கத்தோலிக்க நாடாகக் கொள்கை மாற்றம் ஏற்பட்டது.

## பிராட்டஸ்டென்டு சமயத்திற்கு இடர்

விரைவிலேயே, பொஹீமியாப் போர், மற்றொரு பெருந்தீயை மூட்டியது. பேரரசரின் படைகள் பாலாட்டினேட்டை வல்லந்தமாகப் பிடித்துக்கொண்டன. வெற்றியெய்திய படைகள் நாட்டில் தங்கியிருந்

[1] Tilly.

தது, வடக்கிலிருந்த பிராட்டஸ்டென்டு நாடுகளுக்கு அச்சத்தை உண்டாக்கிற்று. கத்தோலிக்கக் கூட்டிற்கு அளித்திருந்த வாக்குறுதிகளைப் பேரரசர் நிறைவேற்ற வேண்டியதாயிற்று. பிரடரிக்கிற்குச் சொந்தமாயிருந்த நிலப்பகுதிகளில் ஒரு பகுதி (பாலாட்டினேட்டின் மேற்குப் பகுதி) பவேரியா நாட்டு மாக்ஸிமிலியனுக்கு மாற்றப்பட்டது. அதே சமயத்தில் எலக்டர் பதவியையும் அவர் பெற்றார். இதனால் 'டயட்' சபையில் கத்தோலிக்கர் பெரும்பான்மையோராயிருக்கும் நிலை சற்று அதிகமாயிற்று. தங்களுக்கிருந்த சுதந்தரம், உரிமைகள் இவற்றுள் ஏதாவதொன்றைப் பாதுகாத்துக்கொள்ள விரும்பினால், பிராட்டஸ்டென்டுகள் எழுச்சி கொள்ள வேண்டுமென்பது தெளிவாயிற்று.

## டென்மார்க்கின் குறுக்கீடு

பிராட்டஸ்டென்டுகள் தங்கள் கட்சியை நிலைபெறச் செய்ய டென்மார்க்கு மன்னரைத் தங்களுக்காகப் பரிந்து போராடுகிறவராகக் கொண்டார்கள் டென்மார்க்கு மன்னர், ஹால்ஸ்டெயின் பகுதியின் கோமகனாயுமிருந்ததால், ஜெர்மனியின் அரசராயுமிருந்தார். பிராட்டஸ்டென்டுகளுக்குத் திறமை மிக்கவரான மான்ஸ்பீல்டு[1] என்பார் தலைவரானார். பேரரசரின் இராச்சியத்தின் கீழ்க்கோடிப் பகுதியில் தோன்றிய கலகமும் பிராட்டஸ்டென்டுகளுக்குத் துணை புரிந்தது. கீழ்க்கோடியில், பெத்லன் காபோர்[2] என்பார் டிரான்சில்வேனியாவில் வெளிப்படையாக ஆட்சியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். எனினும், வெற்றிகரமாகப் பிராட்டஸ்டென்டுகள் எதிர்த்து நிற்க முடியுமென்ற நம்பிக்கை மறையலாயிற்று

## வாலன்ஸ்டீன்

தில்லியைக்காட்டிலும் திறமை மிக்க போர் வீரர் ஒருவர் பேரரசின் கட்சியில் தோன்றினார்; வாலன்ஸ்டீன்[3] எனப் பெயர் கொண்டவர் பொஹீமியாப் பிரபுக்களுள் ஒருவராவர். பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சேர்ந்த குடும்பத்தில் பிறந்த இவர், இளமையிலேயே கத்தோலிக்கராய் மாறிப் பேரரசருக்குப் பணி புரிபவரானார்; போரில் ஜெர்மானியர்களுக்குள் மிகச் சிறந்த பேராற்றல் படைத்த வீரராயிருந்தார். இவர் பொஹீமியாவைச் சேர்ந்தவர்; ஜெர்மானியரல்லர். இவர் சாதாரணமான கூலிப் படையைத் திரட்டினார். இவருடைய திறமை நன்கறியப்பட்டதனாலும், இவர் போர் வீரர்களுக்குத் தாராளமாய் ஊதியம் வழங்கியதாலும் முற்போக்கில் பேரவாக் கொண்டவர்களுக்கும் தீரச் செயல்கள் புரிவதில் நாட்டம் கொண்டவர்களுக்கும் புகலிடமாயிருந்தார். வாலன்ஸ்டீனும் மற்றப் படைத்தலைவர்களைப் போன்று திக்கற்ற குடியானவர்களை ஈவிரக்க

[1] Mansfield. [2] Bethlen Gabor. [3] Wallenstein.

மின்றிக் கொள்ளையடித்தார். என்றாலும், அது ஒழுங்கு முறையுடன் நடந்தது. அளவற்ற வெகுமதி கொடுப்பதாலும், கடுந் தண்டனை விதிப்பதாலும், படைகள் நன்முறையிலிருந்தன. இவர் சிறந்த இராணுவத் தந்திரியார் என்பதிலும், படை அமைப்பாளர் என்பதிலும் சிறிதும் ஐயமில்லை. மேலும், இவர் ஜெர்மனியின் மன்னராக வேண்டுமென்ற பேரவாவையும் கொண்டிருந்தார். நன்கு பயிற்றப்பட்டிருந்த இவர் படைகள், டென்மார்க்கு மன்னர், மான்ஸ்பீல்டு ஆகியோரின் தலைமையின்கீழிருந்த படைகளை முறியடித்தன. போரில் மான்ஸ்பீல்டு இறந்தார். டென்மார்க்கு மன்னரும் தோல்வியுற்றுர். பெரும்பாலும் வடமேற்கிலிருந்த எல்லா நகரங்களும் அரசுகளும் வாலன்ஸ்டீனின் அதிகாரத்தின்கீழ் வந்தன. 1628-ல் ஸ்ட்ரால்ஸாண்டு[1] என்னுமிடத்தை முற்றுகையிட்டு, 'விண்ணுலகுடன் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருந்தாலுங் கூடக் கட்டாயம் கைப்பற்றுவேன்!' எனச் சூளுரைத்தார். ஆயினும், கோட்டைக்குள்ளிருந்த மக்களின் தீவிரமான பாதுகாப்புப் போரினுலும், ஸ்வீடன் நாட்டுப் படையின் திறமையாலும் அதைப் பிடிக்க இயலாமற்போயிற்று. இது வருங்காலத்தில், கட்சிகளின் சத்திச் சமநிலையில் ஏற்படவிருக்கும் மாறுதலைத் தெரிவிக்கும் முன்னறிவிப்பாய் இருந்தது. என்றாலும், மதச்சீர்திருத்தம் தோன்றிய நாள் முதல், ஜெர்மனியில் பேரரசருக்கும் கிட்டாத தலைமைப் பதவியை வாலன்ஸ்டீன் தோற்றுவித்தார்.

## மீளப்பெறும் ஆணை 1629

இந்நிலைமையை நீடிக்கச் செய்திருக்கலாம்; அதிகாரத்தை நிலைபெறச் செய்யும் அடிப்படையில் நுட்பமான கொள்கையையும் கண்டிருக்கலாம். ஆனுல், கத்தோலிக்கமும் ஏகாதிபத்தியமும் வெற்றி கொண்டன என்றாலும், அவற்றின் கொள்கைகள் ஒன்றையொன்று எதிர்ப்பனவாயிருந்தன. ஜெர்மனியில் பேரரசருக்குப் பெருந்துணையாயிருந்தது, கத்தோலிக்கக் கூட்டு. இக்கூட்டின் தலைவரான பவேரியா நாட்டு மாக்ஸிமிலியன், வாலன்ஸ்டீனுடைய அதிகார வளர்ச்சியைக் கண்டு அழுக்காறுற்றதோடு திருச்சபைகளில் பழைய நிலையை ஏற்படுத்துவதிலும் நாட்டங் கொண்டிருந்தார். எனவே, 1629-ல் பேரரசர் மீளப்பெறும் ஆணையை[2] வெளியிட்டார். 1552-க்குப் பின் தனிமனிதன் வயம் வந்தனவும், சமயம் சார்ந்தனவுமான சொத்துக்கள், மீட்டும் சமயம் சார்ந்தவர்களிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என ஆணையிட்டார். இவ்வாணைக்குச் சட்டம் இடங்கொடுத்தது. இவ்வாறு செய்வது ஏற்கனவே ஆக்ஸ்பர்கு சமாதானத்தில் கண்டிருப்பதை நிறைவேற்றுவதாகும். இரு கட்சிகளும் இச்சமாதானத்தை

[1] Stralsund. [2] Edict of Restitution.

ஏற்கனவே ஏற்றுக்கொண்டிருந்தன. எனினும், இவ்வாணையில் ஒரு பெரிய புரட்சி பொதிந்திருந்தது. இரு அதிமேற்றிராணியார்களுக்கும் பன்னிரு மேற்றிராணியார்களுக்கும், ஏராளமான மடங்களுக்கும் சொந்தமானவையும், ஐம்பதாண்டுகளாக எவ்வித எதிர்ப்புமின்றிச் சொந்தமாக மக்கள் அனுபவித்துக்கொண்டிருந்தவையுமான நிலங்களைத் திருப்பிக் கொடுக்க வேண்டியதாயிற்று. யாது நிகழுமென்பது தோன்றவில்லை. ஜெர்மானியர்களால் வாலன்ஸ்டீனின் படைகளை எதிர்த்து நிற்க முடியவில்லை.

## வாலன்ஸ்டீனின் எதிரிகள்

### வாலன்ஸ்டீன் ஓய்வு பெறுதல்

வாலன்ஸ்டீனுடைய சொந்த அதிகாரத்தை அவரது தலைமையின் கீழிருந்த நேசப்படைகள் பகைமையுணர்ச்சியுடன் எதிர்த்தபோது, பிராட்டஸ்டென்டு சமயத்தின் நலனுக்காக உதவியின் முதல் அறிகுறி தென்பட்டது. அவரைக் கண்டு மாக்ஸிமிலியன் அஞ்சியதோடு, அவர்மீது வெறுப்பும் கொண்டிருந்தார். அவரைப் பற்றிப் பேரரசர் ஐயுறத் தொடங்கினர். காரணம் வாலன்ஸ்டீன் மீளப்பெறும் ஆணையைப் பற்றித் தமக்கிருந்த வெறுப்பை ஒளித்து வைக்காதிருந்ததே யாம். 1630-ல் ராடிஸ்பன்[1] என்னுமிடத்தில் 'டயட்' சபை கூடிற்று. பிரான்சு, அதன் அமைச்சரான ரிச்சிலூ[2]வின் நம்பிக்கையுள்ள ஜோசப்பு என்னும் பாதிரியை இக்கூட்டத்திற்கு அனுப்பியது. வாலன்ஸ்டீனிடம் அருவருப்புக் கொள்ளுமாறு 'டயட்' சபையிலிருந்தவர்களை இவர் தூண்டினர். இதன் விளைவாக வாலன்ஸ்டீனை பதவியிலிருந்து நீக்குமாறு பேரரசரை 'டயட்' வற்புறுத்தியது. வாலன்ஸ்டீன்மீது பேரரசருக்கிருந்த பொறாமை காரணமாகவும், 'டயட்' சபையின் நோக்கப்படி செய்தால் மேலும் பல நலன்கள் கிடைக்குமென்ற எண்ணத்தாலும் பேரரசர் அவரைப் பதவி நீக்கம் செய்யுமாறு ஆணையிட்டார். இவ்வாணைக்கு வாலன்ஸ்டீன் கீழ்ப்படிந்து நடப்பாரா வென மக்கள் ஐயங்கொண்டார்கள். ஆனல், வாலன்ஸ்டீன் உத்தரவை மறுக்காமல் ஏற்றுக்கொண்டு, பொஹீமியாவிற்குச் சென்றார். திறமை மிக்கவரும், கடந்தகாலத்தில் மிகப் பெரிய வெற்றிகளைப் பெற்றவருமான வாலன்ஸ்டீனின் வாழ்க்கை இத்தகைய முடிவிற்கு வருவது சற்றும் பொருத்தமானதன்று. அவர் அரசியல் மேடையில் மீண்டும் தோன்றுவாரானல், ஆணவம் மிக்க கொள்கையைப் பின்பற்றக் கூடும்; அதனுடன் பேரரசரையும் சிறிதும் மதியாமலும் நடக்கக் கூடும்.

மிக்க புகழ்பெற்ற போர்த்தலைவரைப் பேரரசர் இழந்தார். அதே சமயத்தில் அவருடைய படையும் எண்ணிக்கையிற் குறைந்தது.

[1] Ratisbon. [2] Richelieu.

இத்தருணத்தில் போர்க்களத்தில் புதிய ஒருவர் தோன்றினர். 1630 ஜூலையில், சுவீடன் நாட்டுமன்னர், குஸ்டாவசு அடால்பஃசு[1] ஜெர்மனிக்குள் நுழைந்தார்.

## குஸ்டாவசு அடால்ஃபசு

16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இரண்டாம் கிறிஸ்தியன்[2] என்னும் மன்னரின் ஆட்சியின்கீழ் சுவீடன், நார்வே, டென்மார்க்கு நாடுகளுடன் ஒன்றாய் இணைந்திருந்தது. அரசியல், சமயம் பற்றிய காரணங்களைக் கொண்டு பின்னர் அவரது ஆட்சிக்கு எதிராகக் கலகம் ஏற்பட்டது. மன்னர் பதவியிலிருந்து நீக்கப்பட்டுச் சிறைபிடிக்கப் பட்டார். நார்வேயும் டென்மார்க்கும் தமக்கென ஒரு தனி அரசரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டன. சுவீடன் குஸ்டாவசு வாசா[3] என்பாரின் கீழ் வந்தது. இவர், கலகத்திற்குத் தலைமைவகித்துப் பிராட்டஸ்டென்டு சமயத்தை நிறுவினர். மன்னர் பதவி இவருடைய வழித் தோன்றல் களுக்கு உரிமையாக்கப்பட்டது எனினும், லூதரின் கொள்கைகளைப் பின்பற்றுகிறவர்களே ஆட்சி செய்யமுடியும் என்ற கட்டுப்பாடும் விதிக்கப்பட்டது. 1611-ல் குஸ்டாவசு அடால்ஃப்சு அரியணை ஏறினர்.

## சுவீடன் போரிடக் காரணங்கள்

சுவீடன் படை

அடால்ஃபசு பிராட்டஸ்டென்டு சமயத்தில் தீவிரப்பற்றும் நம்பிக்கையும் கொண்டார்; எனவே, ஜெர்மனியில் தமது சமயத்தைச் சேர்ந்திருந்தவர்களின் துயர் ஒலியைக் கேட்டு மனம்புழுங்கினர். ஜெர்மனியில் இவர் நுழைந்ததற்குச் சமயச்சார்பற்ற வேறு காரணங் களும் இருந்தன. பால்டிக்குப் பிரதேசத்தின்மீது ஆதிக்கம் கொள்ளச் சுவீடன் விரும்பியது. அப்பிரதேசத்தில் பேரரசரின் படைகள் பெற்ற வெற்றிகள் இவருக்கு அச்சத்தை உண்டாக்கின. அதனுடன் போலந்து நாட்டு அரசகுடும்பத்தினர் கத்தோலிக்கச் சமயத்தைச் சேர்ந்தவர்கள்; குஸ்டாவசு வாசாவின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், சுவீடன் அரியணைக்கு உரிமை வாய்ந்தவர்கள். ஜெர்மனியில் கத்தோலிக்க எதிர் விளைவுக்கு வெற்றியேற்படுமானுல், போலந்து குடும்பத்தினர் களின் செல்வாக்கு மிக அதிகமாகிவிடக்கூடும். ஆகையால், சமயம், வாணிகம், வாரிசுரிமை முதலியவை குஸ்டாவசு அடால்ஃபசை ஜெர்மனியின் விவகாரத்தில் தலையிடத்தூண்டின. எனினும், போரில் பங்கெடுத்துக்கொண்டவர்களில் ஏனையவரைக்காட்டிலும், இவரிடத்திலே தான் எல்லா நோக்கங்களிலும் சமயப்பற்று முதலிடம் பெற்றிருந்தது.

[1] Gustavus Adolphus. [2] Christian-II. [3] Gustavus vasa.

இதுவரை ஜெர்மனி கண்டிராத புதுமை வாய்ந்த படையுடன் இவர் படையெடுத்துச் சென்றார். சுவீடன் ஏழ்மையான நாடு. எனவே, ஐரோப்பாவின் தெற்கிலிருந்த சுவிஸ்கள் (சுவிட்சர்லாந்து மக்கள்) எவ்வாறு கூலிக்காகப் போரிடுகிறவர்களாய்ப் படையில் சேர்ந்தார்களோ, அவ்வாறே வடக்கில் சுவீடன் மக்கள் பிற்காலத்தில் ஊதியத்திற்காகப் படையில் சேர்ந்தவர்கள் அல்ல. அவர்கள்படை, உணர்ச்சியாலும் சமயப் பற்றாலும் தூண்டப்பட்டுத் தோன்றிய தேசீயப் படையாயும் கட்டுப்பாட்டுடனுமிருந்தது. அக்காலத்துப் புகழ்மிக்க வீரர்களுள் குஸ்டாவசும் ஒருவராவர். இதற்குமுன் போரிட்டவர்களைக் காட்டிலும் இவர் பீரங்கிப் படையை அதிகமாகப் பயன்படுத்தினார். வீரர்களுக்கு அடிக்கடி உடற்பயிற்சியளித்தது வாயிலாக, பகைவர்கள் பெற முடியாத அளவிற்கு இவர் படைகள் விரைந்து இடம் விட்டு இடம் செல்லத் தக்கனவாயிருந்தன.

## மாக்டிபர்கின் வீழ்ச்சி

ஜெர்மனிக்குள் முதன்முதலாக நுழைந்த போது இவருக்கு ஊக்கமளிப்பதாக அங்கு ஒன்றுமில்லை. பேரரசரின் படைகள் பெற்ற வெற்றிகள் சிறந்தனவாயிருந்ததையும், அவற்றை எதிர்த்து நின்றவர்களின் துயரம் மிகக் கடுமையாயிருந்ததையும் கண்டு மக்கள் போருக்கெழ விருப்பமின்றியிருந்தார்கள். பிராண்டன்பர்குத் தேர்வாளரான ஜார்ஜ் வில்லியம், சாக்ஸனியின் தலைவரான ஜான் ஜார்ஜ் முதலியவர்களிடமிருந்து குஸ்டாவசு உதவியை எதிர்பார்த்தார். இவர்கள் தந்நலங் கருதுகிறவர்களாயும் மனவுறுதியற்றவர்களாயுமிருந்தார்கள். எல்பு நதிக்கரையிலுள்ள மாக்டிபர்கு[1] நகரை நோக்கித் தில்லி முன்னேறினார். மீளப்பெறும் ஆணையில் சேர்க்கப்பட்டிருந்த இந்நகரம் அடைக்கலமுற மறுத்தது. பிராண்டன்பர்கும் சாக்ஸனியும் ஒத்துழைத்திருக்குமானால், குஸ்டாவசு இந்நகரைப் பகைவரிடமிருந்து காப்பாற்றியிருக்க இயலும். அவர்கள் ஒத்துழைக்க மறுத்ததால், நகரம் அழிந்தது. தில்லியால் தாக்கப்பட்டு மக்கள் சூறையாடப் பட்டார்கள்; வாளுக்கும் இரையானார்கள். இந்நிகழ்ச்சி மக்களிடையே பேரச்சத்தைத் தோற்றுவித்தது. இறுதியில், பேரரசரின் அச்சுறுத்தலைக் கண்டு அஞ்சி, பிராண்டன்பர்கும் சாக்ஸனியும் இப்போது ஒன்று சேர்ந்தன; 'வடநாட்டுச் சிங்கம்' எனப் புகழ்பெற்ற குஸ்டாவசு இவர்களுடைய ஒத்துழைப்பால் வலியத்தாக்குதலை மேற்கொள்ள முடிந்தது.

[1] Magdeburg.

## பிரீட்டன்ஃபீல்டு சண்டை

1631-ல் லீப்ஸிக்கு[1] நகருக்கருகில், பிரீட்டன்ஃபீல்டு[2] என்னுமிடத்தில் குஸ்டாவசு, தில்லியைப் போரில் சந்தித்தார். பெருந்தந்திரத்தாலும், மேலும் படைகள் எளிதில் ஓரிடமிருந்து மற்றோர் இடத்திற்கு விரைந்து செல்லமுடிந்ததாலும், குஸ்டாவசு வெற்றிகாணமுடிந்தது. இவ்வெற்றியால் ஜெர்மனியில், பேரரசரின் ஆதிக்கம் அழிந்தது. வியன்னு நகரமும் குஸ்டாவசின் கருணையை எதிர்நோக்கியது. அவர் வியன்னுமீது படையெடுத்துச் செல்வதை ஒழித்து, டான்யூபு, மெயின், ரைன் என்னும் நதிகளின் பகுதிகளில் சமயத்தைச் சார்ந்திருந்த நிலப்பகுதிகளைத் தாக்கினுர். எவராலும் குஸ்டாவசை எதிர்த்து நிற்க இயலவில்லை. லெக் நதிக்கரையில் தில்லி மீண்டும் தோல்வியுற்றுக் காயமடைந்து இறந்தார். கத்தோலிக்கக் கூட்டின் தலைநகரங்களாயிருந்த பவேரியாவும், மியூனிச்சும் குஸ்டாவசிற்கு அடிபணிந்தன. அன்றுவரை உயிருக்கு மன்றுடிய பிராட்டஸ்டென்டு சமயம் இவ்வெற்றியின் பயனுகப் புத்துயிர் பெற்றது.

## குஸ்டாவசின் மரணம்

திக்கற்றவரான பேரரசர், வாலன்ஸ்டீனின் உதவியை நாடினுர். அவராலேதான் சுவீடன் மன்னரை எதிர்க்கமுடியுமென்று தோன்றியது. வாலன்ஸ்டீன் வேறுபல பெரியனவும் தெளிவற்றனவுமான திட்டங்களில் தமது கவனத்தைச் செலுத்தியிருந்ததால், பேரரசரின் உதவிக்குச்செல்லக் கூடுமா என்பது பற்றி ஐயமிருந்தது பேரரசர் அவரைத் தமக்குச் சமமாக நடத்தவும், படைகளை நடத்திச்செல்வதில் சுயேச்சையான அதிகாரம் அளிக்கவும் வாக்களித்ததால், வாலன்ஸ்டீன் மீண்டும் போர்க்கவசம் பூண உடன்பட்டார். அவரது புகழே ஒரு பெரும்படையைத் திரட்டப் போதுமானதாயிருந்தது. போர் முறைத் திறத்தில் குஸ்டாவசுக்கு அவர் இணையானவர். நூரம்பர்கு[3] என்னுமிடத்திற்கு அருகில் நடந்த முதற்சண்டையில் குஸ்டாவசிற்கு எவ்வித நன்மையும் கிட்டவில்லை. 1632 செப்டெம்பரில், முன்பு தில்லியைத் தோற்கடித்த போர்க்களத்தின் அருகில், லூட்சன்[4] என்னுமிடத்தில், குஸ்டாவசு தமக்குப் பெரும்பகைவரான வாலன்ஸ்டீனைப் போரில் சந்தித்தார். கடுமையான மூடுபனித்திரையின்கீழ் நீண்ட கடும்போர் நிகழ்ந்தது. வாலன்ஸ்டீன் தோல்வியுற்று, படைகளைப் போர்க்களத்திலிருந்து வெளியேற்றினுர். ஆனுல், பிராட்டஸ்டென்டுகளுக்கு இது வெற்றியாகாது. ஏனெனில், போர் மும்முரமாக நடந்துகொண்டிருந்தபோது, குஸ்டாவசு மரணமடைந்தார். அத்

[1] Leipzic. [2] Breitenfield. [3] Nuremberg. [4] Lutzen.

தருணத்தில், அவரது பொறுப்பையேற்கத்தக்க சிறந்த வீரரோ, அரசியல் வாதியோ இல்லை.

## வாலன்ஸ்டீனின் திட்டங்கள்

இதன் விளைவாகப் போரின் போக்கில் ஒரு கடுந்திருப்பம் ஏற்பட்டது. முதலில் வாலன்ஸ்டீனின் வாழ்க்கையில் புதுமையான துன்பியல் நிகழ்ந்தது. குஸ்டாவசு இறந்தது காரணமாக, முன்பு தேவையாயிருந்ததைப் போன்று, வாலன்ஸ்டீனின் உதவி இனித் தேவையில்லையாயிற்று. எனினும், அதே சமயத்தில், வாலன்ஸ்டீனினுடைய திட்டங்களுக்குத் தடையாயிருந்த ஒரு பெரும்பகைவர் ஒழிந்தார். லூட்சன் போருக்குப் பிறகு வாலன்ஸ்டீனினுடைய பேரவாக்களின் முடிவு என்னவென்பது திட்டமாக கூற முடியாதிருந்தது. அவரது அவா, ஒரு குடிமகனது அவாவிற்கும் அப்பாற் பட்டதாயிருந்தது. அவர் பேரரசரின் ஆணைக்குச் செவிசாய்க்காது, பிரான்சுடனும் சுவீடனுடனும் சமரசப்பேச்சு வார்த்தைகள் நடத்தினர்; ஹாப்ஸ்பர்குகளைப் பதவியினின்றும் நீக்கிவிட்டு, ஜெர்மனியைத்தமது சொந்த உரிமையுடன் ஆட்சிபுரிய எண்ணங்கொண்டிருந்தார் எனக் கருதலாம்.

## வாலன்ஸ்டீனின் மரணம்

வாலன்ஸ்டீனின் படைகளை எதிர்க்கப் பேரரசரான பர்டினண்டிடம் ஆயுதந்தாங்கிய படை வலிமை இல்லை. எனினும், பேரரசரின் நோக்கங்களை நிறைவேற்றுவதில் விருப்பங்கொண்ட அதிகாரிகள் வாலன்ஸ்டீனின் பக்கலில் இருந்தார்கள். இதைப் பயன்படுத்திக்கொண்டு பேரரசர் தம் போர்த்தலைவருக்கு எதிராகச் சதி செய்தார். 1634ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதத்தில் வாலன்ஸ்டீன் அவருடைய அதிகாரிகளால் கொலை செய்யப்பட்டார். அவரைக் கொன்றவர் தீவிரே,[1] பட்லர்,[2] கோர்டன்[3] முதலியவராவர். அவர்கள் அயர்லாந்து, ஸ்காட்லாந்து முதலிய நாடுகளைச் சேர்ந்தவர்கள்; துணிகரச் செயல் புரிவதில் நாட்டங் கொண்டவர்கள். அவர்கள் தங்கள் திறமை காரணமாக வாலன்ஸ்டீனின் படையில் சேர்ந்து பெரும்பேறு பெற்றவர்கள்.

## நார்டிலின்ஜன் சண்டை

வாலன்ஸ்டீனின் படைகள் அவரது மரணத்திற்குப் பின் பேரரசரின் கீழ் வந்தன. குஸ்டாவசு இறந்த பின், சுவீடன் நாட்டுப் படை, மற்றப்படைகளைப் போன்று சீர்குலைந்தது; இங்குமங்கும் அணி

[1] Devereux. Butler. [3] Gordon.

வகுத்துச் சென்று, சென்ற விடங்களையெல்லாம் பாழ்படுத்தியது. அப் படையிலிருந்த வீரர்களைக் காட்டிலும் பாசறையைச் சேர்ந்தவர்கள் அதிகமாயிருந்தார்கள். அவர்களுடைய பேராசையும், கொடுமையும் கட்டுக்கடங்காதனவாயிருந்தன. பேரரசரின் படை 1634ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில், நார்டிலின்ஜன்[1] எனுமிடத்தில் பிராட்டஸ்டென்டு படையை எதிர்த்து வெற்றி பெற்றது. பிரீட்டன்ஃபீல்டு சண்டையைப் போன்று இச்சண்டையும் முக்கியம் வாய்ந்தது. பிரீட்டன்ஃபீல்டு சண்டை பிராட்டஸ்டென்டு சமயத்தைக் காப்பாற்றியது என்றால், நார்டிலின்ஜன் சண்டை கத்தோலிக்கச் சமயத்தை அழிவினின்றும் காத்தது எனக் கூறலாம்.

## பிரான்சின் தலையீடு

பெருந்துயரிலாழ்ந்திருந்த நாட்டில், அமைதியேற்படப் பதினன்கு ஆண்டுகள் போர் புரிய வேண்டியிருந்தது. பிராட்டஸ்டென்டு சமயம் உதவியைப் பெற வேண்டுமாயின், ஜெர்மனிக்கப்பாலுள்ள நாடுகளிலிருந்துதான் பெற முடியும். இவ்வுதவி, பிரெஞ்சு மன்னரின் மிக்க வலிமை வாய்ந்த அமைச்சரும், ரோமன் கத்தோலிக்கச் சமயத்தில் கார்டினல் பதவியைப் பெற்றிருந்தவருமான ரிச்சிலூ என்பாரிடமிருந்து கிடைத்தது. போரின் போக்கை இவர் நன்கு கவனித்து வந்தார். 1630-ல் வாலன்ஸ்டீன் பதவியிலிருந்து நீக்கம் பெற்றதற்கும், குஸ்டாவசு பொருள் உதவி பெற்றதற்கும் இவர் காரணமாயிருந்தார்; சிதறுண்ட பிராட்டஸ்டென்டு கூட்டுப் படைகளை, பிரெஞ்சுப் படையில் சேர்த்துக்கொண்டு அவற்றுக்கு ஊதியமளித்தார். வீமர் நாட்டு பர்னர்டு[2] என்பாரின் தலைமையில் இப்படைகள் வலுவடைந்து வெற்றி கண்டன. 1635-ல் ஸ்பெயினுக்கு எதிராகப் பிரான்சு போர் முரசு கொட்டியது. ஸ்பெயின் இதுவரை பேரரசருடன் நட்பாயிருந்தது; எனவே, இப்போது நேரிடையாகப் போரிலிறங்க நேர்ந்தது.

## போரின் முடிவு

### டூரின்-கோண்டே இளவரசர்

எல்லாக் குழப்பங்களுக்குமிடையில், இது முதல் படைகளின் பகுதியைக் கவனத்தில் கொள்ள வேண்டும். போர்த் திறமையில் குஸ்டாவசிற்கு இணையான டார்ஸ்டன்சன்[3] என்பாரின் தலைமையில் சுவீடன் நாட்டு வீரர்கள் ஜெர்மனியின் கிழக்குப் பகுதியில் தங்கி, பிரீட்டன்ஃபீல்டு, லூட்சன் வெற்றிகளை நினைவுகூரும் வகையில் வெற்றிகளைப் பெற்றனர்கள். பிரெஞ்சுப் படைகள், பெல்ஜிய நாட்டு எல்லையிலும் ரைன் நதிப் பிரதேசத்திலும் ஈடுபட்டிருந்தன. தொடக்

[1] Nordlingen. [2] Bernard of Weimar. [3] Torstenson.

கத்தில் பிரெஞ்சுப் படைகள் வெற்றியடையவில்லையென்றாலும், தந்திரமும் துணிவும் மிக்கவரான கோண்டே, டூரின் இவைகளின் இளவரசரைப் போன்ற சிறந்த வீரர் பலர் தோன்றினர். அதனுடன் ரிச்சிலூவின் அரசியல்தந்திரத்தின் விளைவாக, ஸ்பெயின் தீபகற்பப் பகுதியில் ஒரு பகுதியான காட்டலோனியா,[1] 1640-ல், ஸ்பெயினுக்கு விரோதமாகக் கலகம் செய்தது. நெடுநாளாகவே இவற்றுக்கிடையே சமாதானமேற்படுவதற்கான முயற்சிகள் நடைபெற்றுவந்தபோதிலும், ஒவ்வொரு கட்சியும் முடிவான விளைவு ஏற்படுமென நம்பியிருந்தது. போரையே தொழிலாகக் கொண்டிருந்தவர்கள் இப்படைகளிலிருந்ததால், சமாதானத்தைக் காணவிரும்பாதவர்களாய், தொடர்ந்து போரிடத் தயாராயிருந்தார்கள், துன்புறும் மக்களுக்குச் சண்டையை நிறுத்துமாறு கூற ஆதரவில்லாமற்போயிற்று. முடிவான சண்டைகளும் பிரான்சிற்கு வெற்றியையளித்தன. 1643-ல் ராக்ராய்[2] எனுமிடத்தில், முதன் முதலாகக் கோண்டே இளவரசர், சிறப்புவாய்ந்த ஸ்பெயின் காலாட் படைகளைச் சிதறவடித்தார். லென்சு[3] எனுமிடத்தில் நடந்த சண்டையிலும் ஸ்பெயின் படைகள் மீண்டும் தோற்றன. 1642-ல் ரிச்சிலூ மரணமடைந்தார். ஆனால், அவருக்குப் பின்வந்த மசாரின் என்பவர் அவரைப் போலவே திறமை மிக்கவராயிருந்தார். சமாதானம் ஏற்படுவற்கு நடவடிக்கையெடுத்துக்கொண்டவர்களுள் மசாரின் முக்கியமானவர். இரண்டாம் பர்டினண்டுக்குப்பின், 1637-ல் பட்டமெய்திய மூன்றாம் பர்டினண்டு, தேவையையொட்டி, சமாதானத்திற்கு இணங்கினார். நீண்ட பேச்சுவார்த்தைகளுக்குப் பின்னர் 1648-ல் வெஸ்டுபேலியா உடன்படிக்கை[4] கையெழுத்தாயிற்று.

ஐரோப்பிய வரலாற்றில் இதைவிடச் சிறந்த சமாதானத்தைக் காண முடியாது. சீர்திருத்த இயக்கக் காலத்தின் முடிவைக் காட்டுவதாக இதைக் கருதலாம். இவ்வுடன்படிக்கையினது முடிவின் சுவடுகளை ஐரோப்பாவில் இன்றும் காணலாம்.

## வெஸ்டுபேலியாச் சமாதானம்

### வெற்றி தோல்வியில்லாச் சமயப்போர்

சமயத்தை நோக்கமாகக் கொண்டிருந்த போர், வெற்றி தோல்வியின்றி முடிவடைந்தது. குஸ்டாவசு, ரிச்சிலூ, மசாரின் போன்றவர்கள், பிராட்டஸ்டென்டு சமயத்தை மறைந்து போகாதபடி காப்பாற்றினார்கள். ஆயினும், கத்தோலிக்க மறுவிளைவின் பணியைத் தடை செய்ய அவர்களால் முடியவில்லை. ஜெர்மனியின் தெற்கு மேற்குப் பகுதிகள் கத்தோலிக்கத் திருச்சபையைச் சேர்ந்தவையாயிருந்தன.

[1] Catalonia. [2] Rocroi. [3] Lens. [4] Peace of Westphalia.

வடக்கு, லூதர் அல்லது கால்வினுடைய கொள்கைகளைப் பின்பற்றிய பிராட்டஸ்டென்டின் பகுதியாய் இருந்தது. மீளப்பெறும் ஆணை விலக்கப்பட்டது. 1624க்கு முன் பிராட்டஸ்டென்டுகளால் கைப்பற்றப் பட்ட சமயம் சார்ந்த உடைமை அவர்களிடமேயிருப்பது என முடிவு செய்யப்பட்டது. கால்வினியத்திற்கும் லூதரின் கொள்கைக்கும் அளிக்கப் பட்டிருந்த உரிமைகள் மீண்டும் வழங்கப்பட்டன. மற்றவைகளில் ஆக்ஸ்பர்கு சமாதானத்தால் ஏற்பட்டிருந்த நிலைமையே நீடிக்கப் பட்டது. நாட்டிற்குச் சமயச் சுதந்தரம் அளிக்கப்பட்டதேயன்றி, தனி மனிதனுக்குச் சமயச் சுதந்தரம் அளிக்கப்படவில்லை. சமயச் சுதந்தரம் எனும் கொள்கை, இச்சமாதானத்தின் விளைவாக நாளடைவில் உருவாயிற்று. சமயத் துன்புறுத்தல் விரைவில் மறைந்து போவ தாயிற்று.

## பேரரசு அதிகாரத்தின் தோல்வி

### ஹாப்ஸ்பர்குகளின் அதிகாரம்

கத்தோலிக்கச் சமயத்தைக்காட்டிலும் பேரரசுக் கோட்பாடு முடி வான தோல்வியைப் பெற்றது என்பதைத் தவிர, வேறு எவ்வித பய னும் ஏற்படவில்லை. முன்பிருந்ததைக் காட்டிலும் ஜெர்மனியில் பிளவு கள் அதிகரித்தன. பெரும் பகுதிகளான பிராண்டன்பர்கு, சாக்ஸனி, பவேரியா என்னுமிடங்களும் மற்றும் சில பகுதிகளும் சுதந்தரமுடை யனவாயிருந்தன. அவை பெயரளவில் பேரரசருக்கு மட்டில் பற்று நிறைந்த வார்த்தைகளைக் கையாண்டனவே ஒழிய, போரிலோ, வெளி நாட்டுக் கொள்கையிலோ, உள் நாட்டு ஆட்சி முறையிலோ அல்லது நீதித் துறையிலோ பேரரசரின் குறுக்கீட்டை ஏற்கவில்லை. ஜெர்மனியி லிருந்த அரசுகளின் உட்பிரிவுகளுடைய எண்ணிக்கை நம்பிக்கை யூட்டாத அளவு அதிகரித்தது. ஆட்சியுரிமை பெற்ற அரசுகள் 343 இருந்தன. அவைகளில் 158 சமயச் சார்பற்றவையாயும், 123 சமயச் சார்புடையனவாயுமிருந்தன. பேரரசரைச் சார்ந்த 62 நகரங்களும் இருந்தன. ஹாப்ஸ்பர்குகள் இது முதற்கொண்டு வழி முறையாகக் கிடைத்த நிலப்பகுதிகளை ஆட்சிபுரிவதிலேயே தங்கள் முழுக்கவனத்தை யும் செலுத்தலானார்கள். அவர்கள் ஆட்சி புரிந்த பகுதிகளில், ஜெர் மனி நாட்டுக் குடிகளைவிட, ஜெர்மானியரல்லாதவர்கள் அதிகமாகக் காணப்பட்டதால், இக்குடும்பத்தினரை உண்மையில் ஜெர்மனியின் அரசர்கள் எனக் கருத இடமில்லை. பேரரசு முடிவடைந்தது; எஞ்சி யிருந்தவை ஜெர்மனி மக்களிடையே வளமான தேசீய உணர்ச்சியை வளர்ப்பதற்குப் பெருந்தடையாயிருந்தன என்பதைத் தவிர, வேறெந்தப் பயனையும் அளிக்கவில்லை.

## பவேரியா, பாலட்டினேட்டுப் பகுதி

பிராண்டன்பர்கு, பிரான்சு

ஜெர்மானிய அரசுகளுக்குள்ளும் சில முக்கிய மாறுதல்கள் ஏற்பட்டன. பவேரியா, பாலட்டினேட்டு எனும் மேற்பகுதியையும் தேர்வுரிமையாளர் பதவியையும் அடைந்தது; கீழ்ப்பாலட்டினேட்டுப் பகுதி எட்டாம் தேர்வாளர் பகுதியாக்கப்பட்டு, நற்பேறில்லாத பொஹீமியா மன்னருடைய புதல்வருக்கு உரிமையாக்கப்பட்டது. இம்மன்னரின் பேரவாக்காரணமாகத்தான் இப்போர் மூண்டது. பெரிய தேர்வாளர் என்ற பெயரை அடையவிருக்கும் பிரடரிக்கு வில்லியம் 1640-ல் பிராண்டன்பர்கிற்கு மன்னரானார். பொமரேனியாவின்[1] கிழக்குப் பகுதியை இவர் பெற்றதுடன் எல்பு நதியைக் கடக்கும் வழியில் முக்கியமாயிருந்த மாக்டிபர்கு நகரத்தையும் பெற்றார். இறுதியாக, சுவிட்சர்லாந்தும், ஐக்கிய நெதர்லாந்துகளும் பேரரசுக்கு அப்பாற்பட்ட சுதந்திர நாடுகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டன.

மெட்சு, டூல், வெர்டன் எனப்படும் மூன்று மேற்றிராணியார்கட்குச் சொந்தமான பகுதிகள் பிரான்சைச் சேர்ந்தனவாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. ஆல்செயிஸ் எனும் நிலப்பகுதி ஸ்ட்ராஸ்பர்கும்,[2] சில மாவட்டங்களும் நீங்கலாகப் பிரான்சுடன் சேர்ந்தது. விட்டுக்கொடுக்கப்பட்ட இவ்விரு பகுதிகளின் எல்லைகள் தெளிவுறுமலிருந்தன. இந்நிலையின் பயனாகப் பதினான்காம் லூயி மன்னர் காலத்தில், பிரான்சு மேலும் சில பகுதிகளை வல்லந்தமாகப் பிடித்துக் கொண்டது.

### சுவீடன்

சுவீடனுக்குக் கணிசமான இலாபம் கிடைத்தது. மேற்குப் பொமரேனியாவும், ஓடர் நதியின் முகத்துவாரத்தைச் சுற்றியிருந்த மாவட்டமும், வெர்டன், பிரீமன் முதலான வேறு நகரங்களும் சுவீடனின் வசமாயின. இது சுவீடனுக்குத் தொடர்ந்து வல்லந்தமாகக் கைப்பற்றுவதற்கு வழி செய்தது போலாயிற்று. அதனுடன் மேற்கு ஜெர்மனியில் நிலையான குடியேற்ற நாட்டையும் ஏற்படுத்த இயலும் போலத் தோன்றியது. ஆனால், எதிர் பார்த்தது போல நடைபெறவில்லை. சுவீடன் நாட்டு மக்கள் தொகை சிறியது; நாடும் நிலவளமற்றது. எனவே, அந்தத் தலைமுறையிலும், அதற்கடுத்த தலைமுறையிலும் நிகழ்ந்த குடியேற்றத் துணிவுகளால் நாட்டின் செல்வ நிலை சோர்வுற்றிருந்தது. அதனால், சுவீடன் போரிலிறங்கி வெற்றி வாழ்க்கையை மேற்கொள்ளுவதற்குத் தடையேற்பட்டது, ஒரு வகையில் நன்மை-

[1] Pomerania. [2] Strasbourg.

பயப்பதாயிற்று, இதன் பயனாக நாட்டின் வளர்ச்சியை நன்கு பேணுவதில் நாட்டங்கொண்டது. இப்பணியில் சுவீடன் வியக்கத்தக்க வெற்றி கண்டுள்ளது.

## ஜெர்மனியின் தளர்ச்சி

வெஸ்டுபேலியா உடன்படிக்கையில் அரசியல் தந்திரங்களின் விளைவாக ஏற்பட்டவைகளைப் பற்றி அறிந்தோமேயன்றி, போரின் விளைவுகளைப் பற்றி அறிந்துகொள்ளவில்லை. முக்கியமாக ஐரோப்பிய அரசியல் விவகாரங்களில் அரை நூற்றாண்டிற்கும் மேலாக ஜெர்மனி ஈடுபடக்கூடிய அளவிற்குச் சக்தியற்றதாயிருந்ததுடன், போரினால் அல்லலுற்றிருந்த அந்நாடு மறுபடியும் மீட்சி பெறுவதற்கு ஒரு நூற்றாண்டிற்கு மேலாயிற்று. முப்பதாண்டுகளாக நாட்டின் எப்பகுதியிலும் அமைதியென்பது காணப்படவில்லை. நாட்டுப்புறங்கள் கவனிப்பாரற்றுக் கிடந்தன. உள்நாட்டில் போக்குவரத்தும் தடையுற்றிருந்தன. மக்கள் தொகையிலும் மூன்றில் இரண்டு பங்கு அழிந்ததென்று நன்கறிந்த வரலாற்று ஆசிரியர் மதிப்பிடுவர். பொஹீமியாவில், மக்கள் தொகை, நான்கில் ஒரு பங்கிற்கும் குறைந்தது. பெர்லின் நகரத்தில் மக்கள் தொகை, 24,000த்திலிருந்து 6000 ஆகக் குறைந்தது. வாணிகம், கல்வி, இலக்கியம், நுண்கலை முதலியவைகள் மறைந்தனவென்றே கூறலாம். கருத்திலும் பழக்கவழக்கங்களிலும் மக்கள் நாகரிகமற்று விளங்கினார்கள். சமயத்தில் உயர்ந்த குறிக்கோள் எதுவும் காணப்படவில்லை. அதே போன்று, அரசியல் வல்லமையிலும் உயர்ந்த நோக்கங்கள் தென்படவில்லை. அயர்லாந்தைத் தவிர, வேறு எந்த ஐரோப்பிய நாடும், இவ்வாறு துன்பத்தை அனுபவிப்பதாயும், ஆன்மாக்களின் தீவினை களையப்படும் இடம் போன்றும் இருக்கவில்லை. ஜெர்மனியின் சீரழிவால், பிரான்சின் பேரவாக்கள் நிறைவேறுவதற்கு வழியுண்டாயிற்று. பதினான்காம் லூயியின் ஆட்சிக் காலத்தில் காணப்படும் முக்கியமான கூறுகளுக்கு இந்நிலை பெரிதும் காரணமாயிருந்தது.

*எஸ். ஆர். கார்டினர்: 'முப்பதாண்டுப் போர்'; சி. ஆர். ஃப்ளெட்சர்: 'குஸ்டாவசு அடால்ஃபசு'; ஷில்லர்: 'முப்பதாண்டுப் போர்'; பெயின், 'ஸ்காண்டிநேவியா'; ஷில்லரின் துன்பவியல் நாடகங்களான 'பிக்கலோமினியாவும் வாலன்ஸ்டீனும்'—இவை படித்துப் பயன் பெறத் தக்கவையாகும்.*

# 8. பிரெஞ்சு முடியாட்சியின் வளர்ச்சி

## ரிச்சிலூவும் மசாரினும்

## ப்ரான்சில் எதிர் விளைவு

குழப்பம்

1610-ல் நான்காம் ஹென்றியின் மரணம் உள்நாட்டு வெளி நாட்டுக் கொள்கைகளில் அவர் வகுத்த திட்டங்களைக் கவிழ்த்துவிடும் போலத் தோன்றியது. மேரி-டி-மெடிசி அரசியார் ரீஜன்டாய் இருந் தார். அவர் கணவர் ஹென்றி அவரைக் கண்ணியமாக நடத்தவில்லை யாதலால், அவருடைய கொள்கைகளுக்கு நேர்மாறான கொள்கைகளை மனத்திற்கொண்டிருந்தார்; இதுவரையில் பிரான்சிற்குத் தீவிரப் பகை யாயிருந்த ஸ்பெயின் அரச குடும்பத்தையும் பிரான்சின் அரச குடும் பத்தையும் ஒன்று சேர்க்கும் நோக்கத்தைக் கொண்டிருந்தார். அவருடைய திட்டங்களைப் பிரெஞ்சு மக்கள் எதிர்த்தார்கள். உயர்குடி களும், பிராட்டஸ்டென்டுகளும் கலகம் செய்யலானார்கள். ஆயினும், இவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாது பேராற்றலின் துணைகொண்டு 1612-ல் மண ஒப்பந்தங்கள் முடிவாயின. பதினோராண்டுகள் நிரம்பிய பதின்மூன்றும் லூயி, ஸ்பெயின் மன்னரான மூன்றும் பிலிப்பின் மக ளாரும் ஆஸ்திரிய இளவரசியாருமான ஆன் என்பாரை மணம் செய்து கொள்வது என்றும், பிற்காலத்தில் நான்காம் பிலிப்பு என்று ஸ்பெயினை ஆளவிருக்கும் இளவரசருக்குப் பிரான்சின் இளவரசியாரான எலிஸ பெத்தைத் திருமணம் செய்து கொடுப்பது என்றும் அதே சமயத்தில் முடிவு செய்யப்பட்டது. பிரான்சின் வரலாற்றில் ஒரு பெரிய குழப்ப மான காலம் இதன் விளைவாகத் தொடங்கியது. நாம் இச்சிக்கலினின்று விடுவித்துக்கொள்ள முயலக் கூடாது. 1614-ல் பிரெஞ்சு முப்பேராயம் கூட்டப்பட்டது எனினும், முடிவான விளைவு காணப்படவில்லை. வரலாற்றில் இக்கூட்டம் நினைவு கொள்ள வேண்டுவதொன்றாகும்.

காரணம், பிரெஞ்சு மக்களின் பிரதிநிதிகள் கொண்ட இச்சபை இறுதியாகக் கூட்டப்பட்டதேயாகும். இதன் பின்னர் முப்பேராயம் 1789 இலேதான் மீண்டும் கூட்டப்பட்டது. பிரான்சில் பெரும் புரட்சித் தோற்றுவிக்கும் முன்னறிவிப்பாய் இது அமைந்தது.

## கார்டினல் ரிச்சிலூ

1624-ல் கார்டினல் ரிச்சிலூ மன்னரது ஆலோசனைக் குழுவில் இடம் பெற்றமை, பிரான்சின் வரலாற்றில் முடிவானதும் புதிய திருப்பத்தை அறிவிக்கக் கூடியதுமாகிய ஒரு நிகழ்ச்சியாயினமையை நாம் அணுகுகிருேம். அவர் பொதுவாழ்வில் அரசியாரின் ஆலோசக ராய்த் தோன்றினுர். அப்பொழுது அவர் வாழ்க்கையின் பிற்காலத்தே விளையவிருந்த மாபெருஞ்சிறப்புக்களைப் பற்றிய முன்னறிவிப்பு ஒன்றும் காணப்படவில்லை. ஆனுல், 1642-ல் அவர் இறக்கும் வரை ஐரோப்பிய வரலாற்றில் மிக்க புகழும் செல்வாக்கும் கொண்டவராய் விளங்கினுர்.

## ரிச்சிலூவின் நிலையும் கொள்கையும்

ரிச்சிலூ மேற்றிராணியாராயிருந்து கார்டினல் ஆனுர். அவர் தீவிரக் கத்தோலிக்க மதப்பற்றுடையவர். எனினும், ரோமாபுரியில் அவர் வெறுக்கப்பட்டது போன்று, ஐரோப்பாவில் வேறெந்த அரசியல் வல்லுநரும் வெறுக்கப்படவில்லை. ‘ஹ்யூக்நோக்களின் போப்பு’, ‘நாத்திகத் தலைவர்’ என்னும் இழிவுப்பெயர்கள் அவருக்கு வழங்கின. அரசியலில் அவரது நிலை பெருவிந்தையாயிருந்தது. கத்தோலிக்க ராயும், கத்தோலிக்க மன்னரின் அமைச்சராயுமிருந்த அவர், ஐரோப்பியப் பிராட்டஸ்டென்டு சத்திகளுடன் நிலையான கூட்டுறவு கொண்டிருந் தார். பிராட்டஸ்டென்டு சமயத்திற்குத் தாயகமாயும் லூதரின் பிறப் பிடமாயும் இருந்த ஜெர்மனியில், பிராட்டஸ்டென்டு சமயத்தைப் போப் பாண்டவரும் பேரரசரும் இணைந்து மேலாதிக்கம் செலுத்த ஏற்ற வாய்ப்பை எதிர்நோக்கிக்கொண்டிருந்த நேரத்தில் அவர்களுக்கு எதிராகத் தோன்றிப் பிராட்டஸ்டென்டு சமயத்தினை நிலைபெறச் செய்தவர் ரிச்சிலூவேயாவர், அவரது மாறுதலான கொள்கைக்கு விளக்கமாக, சீர்திருத்த இயக்கக் காலத்திற்கு முன்பு இருந்ததைப் போன்று அக்காலத்தில் சித்தாந்தங்களைப் பற்றிய விவாதங்கள் அவ் வளவாகச் செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை என்பதும், அக்காலத்தில், அரசியல், தேசீய மரபு வழிமுறைகளைப் பற்றிய விவகாரங்கள் சமயக் கருத்துக்களைக்காட்டிலும் முதன்மை பெற்றிருந்தன என்பதும் கூறப் பட்டன. ரிச்சிலூ இரு நோக்கங்களுக்காகப் பாடு பட்டார். இவ்விரு நோக்கங்களும் ஒரு பொருள் பற்றிய இரு தோற்றங்களாக

அவர் கண்டார். பிரான்சு நாட்டிற்குள், பிரெஞ்சு மன்னரின் அதிகாரத்தை வரம்பிலா ஆதிக்கமுடையதாகச் செய்ய வேண்டும் என்பது இவற்றுள் ஒன்ருகும். இதை ஏற்படுத்துவதற்காக மன்னருக்குப் போட்டியாயிருந்த எல்லா அதிகாரிகளேயும், பிரபுக்களேயும், பிராட்டஸ்டென்டுகளேயும், உயர்நீதி மன்றங்களேயும், மாநிலச் சபைகளேயும் அடக்கினுர்; அதே சமயத்தில் ஐரோப்பாவில் பிரான்சைத் தலைசிறந்த நாடாகச் செய்யவும் விரும்பினுர்; இவ்வெண்ணத்தைக்கொண்டு, கூட்டு அரசுகளான ஆஸ்திரியாவையும் ஸ்பெயினேயும் அழிக்க முற்பட்டார். மெலிந்த உடலமைப்பும் ஆரோக்கியக் குறைவும் உடைய இவரிடத்தில் அசைக்கமுடியாத மனவுறுதி காணப்பட்டது. ஐரோப்பா, பிரான்சு இவற்றின் உள்நாட்டு விவகாரங்களேயும், அரசியல் நிலைமையையும் நன்கு அறிந்திருந்ததால், அக்காலத்தில் இவர் பெருஞ்செல்வாக்குக் கொண்டிருந்தார். இவர் அதிகாரத்தின் மேன்மை, படைப்பலத்தின் அடிப்படையில் ஏற்பட்டது போலத் தோன்றியது. இவர் மிக்க புகழ் வாய்ந்த அரசியல் வல்லுநர்களுள் ஒருவராய் விளங்கினுர்; அதனுடன் பிரான்சு நாடறிந்த மிகச் சிறந்த அரசியல் தந்திரிகளுள் ஒருவராயுமிருந்தார்.

இவருடைய உள்நாட்டுக் கொள்கையும் வெளி நாட்டுக் கொள்கையும் இறுதி வரை நெருங்கி இணைப்புற்றிருந்தன. தெளிவு கருதி இரண்டையும் தனித்தனியாகப் பிரித்து அறிவது சிறப்புடைத்தாகும். இவருடைய உள்நாட்டுக் கொள்கையைப் பற்றி முதற்கண் நோக்குவோம்:

## ரிச்சிலூவின் உள் நாட்டுக் கொள்கை

### லா ரொஷேல் முற்றுகை

ரிச்சிலூவின் கவனத்தைக் கவர்ந்த பகைவர்களுள் முதன்மையானவர்கள் பிராட்டஸ்டென்டுகள். அவர்களின் சமயக் கொள்கை சம்பந்தமாக இவருக்கு எவ்விதப் பகையும் இல்லை. நாட்டின் அமைதியான வாழ்க்கைக்கு அடிப்படையாக எல்லாச் சமயங்களிடமும் சகிப்புத் தன்மையை ஏற்றுக்கொள்வதில் ஐரோப்பாவிலேயே இவரைப் போல வேறு எவரும் முற்படவில்லை. ஆயினும், நான்டீஸ் ஆணைப்படி பிராட்டஸ்டென்டுகளுக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்கள், இவர் நோக்கமாகக் கொண்டிருந்த மன்னர் அதிகாரத்தின்கீழ் அவர்களை ஒருமைப்படுத்துவதற்குப் பெருந்தடையாயிருந்தன. ஹியூக்நோக்கள் அவர்களது திருக்கூட்டங்களைக் கூட்டுவதற்கு உரிமை பெற்றிருந்தார்கள். இத்திருக்கூட்டங்கள் பாராளுமன்றத்தைப் போன்றவை. அதனுடன் சில நகரங்களிலிருந்த போர்ப்படைகளை நடத்திச் செல்லும் அதிகாரமும் இவர்களிடமிருந்ததால், மன்னருடைய அதிகாரத்திற்குக்

கட்டுப்படாத தன்னுரிமை பெற்ற இராணுவ அதிகாரமும் இவர்கள் பெற்றிருந்தார்கள்; முடிவு ஏற்படுவதற்கு முன் பல போர்கள் நிகழ்ந்தன. 1627-ல் பெரிய துறைமுகமாயும் கோட்டையாயும் இருந்த லா ரொஷேல்[1] என்ற நகரத்தைத் தாக்கினுர்கள், இந்நகர் பிராட்டஸ்டென்டு சமயத்திற்கு முக்கியக் கோட்டையாய் இருந்தது. இங்கிலாந்தின் உதவியைப் பெரிதும் நம்பி ஹ்யூக்நோக்கள் போர்க்கோலம் தாங்கிப் போரில் இறங்கினுர்கள். அதனுடன் பிரபுக்கள் தங்கள் இனத்தவரின் உரிமைகளுக்குப் பெரும்பகைவராயிருந்த ரிச்சிலூவைத் தாக்கக் கூடும் என்று இவர்கள் நம்பியிருந்தார்கள். சமயத் துறையில் கார்டினலாயிருந்த ரிச்சிலூ இம்முற்றுகையை மேற்பார்வை செய்தார். பிரான்சின் வரலாற்றில் இம்முற்றுகை மிக்க புகழ் வாய்ந்ததொன்ருகும். ஆங்கிலேயரிடமிருந்து கிடைத்த உதவி விரட்டியடிக்கப்பட்டது. பிரபுக்களின் சதிகள் கண்டு பிடிக்கப்பட்டு உருக்குலைக்கப்பட்டன. ஹ்யூக்நோக்கள் இதுவரை காணப்படாத வீரத்துடன் கோட்டையைக் காத்த போதிலும், உணவுப் பற்ருக்குறை இறுதியில் அதன் வேலையைக் காட்டத் தொடங்கியது. இதன் விளைவாகக் கோட்டை, ரிச்சிலூ, மன்னர், இவர்களுடைய வசமாயின.

## ஆலேச் சமாதானம்

இதைத் தவிர, வேறு சிலவிடங்களில் இதன் பின்னரும் எதிர்ப்பு இருந்து வந்தது. 1629 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் அவைகளெல்லாம் இவர்கள் ஆளுகைக்குட்பட்டன. ரிச்சிலூ, ஹ்யூக்நோக்களோடு புதிய ஒப்பந்தம் செய்துகொண்டார். இது ஆலேச் சமாதானம்[2] எனப்படும். இவ்வொப்பந்தத்தின்படி நான்டீஸ் ஆணையிற் காணப்பட்டதும் பிராட்டஸ்டென்டுகளுக்கு அளிக்கப்பட்டதும் ஆகிய சமயவுரிமை போன்ற எல்லா வாக்குறுதிகளும் மீண்டும் புதுப்பிக்கப்பட்டன. ஆனுல், அவர்கள் வசமிருந்த சிறப்பான இராணுவ உரிமையை ரிச்சிலூ எடுத்துக்கொண்டார்; மேலும், வருங்காலத்தில் அரசருடைய மாண்பையும், சொற்களையும் நம்புமாறு அறிவுரை வழங்கினுர். அவர் அளித்த வாக்குறுதிகளில் அவர் நேர்மையுடனிருந்தார் என்பதில் ஐயமில்லை. ஆனுல், பிராட்டஸ்டென்டுகள், சமயத் தீவிரக் கொள்கையின் பயனுய் மன்னரின் மாண்பு தளர்வுற்றதனை எழுபது ஆண்டுகளுக்குள்ளாகவே கண்டார்கள்.

## ரிச்சிலூவும் பிரபுத்துவமும்

தங்களுக்குப் பொது விரோதியாயிருந்த மன்னரை எதிர்த்து நிற்கப் பிரெஞ்சுப் பிராட்டஸ்டென்டுகள், பிரபுக்களின் உதவியை எதிர் நோக்கி

1. La Rochelle. 2. Peace of Alais.

யிருந்தார்கள். ரிச்சிலூ, தமது பொது வாழ்வு முழுவதும் பெரிய பிரபுக்களின் அதிகாரங்களையும், தவறான கருத்துக்களையும் எதிர்த்துப் போரிடுவதில் இடைவிடாது முனைந்திருந்தார். படை மானிய முறைப் பிரபுக்களின் காலம் முடிவுற்றிருந்தது. அரசாங்கத்துடன் சரி நிகராய் நின்று நடவடிக்கை எடுக்கத்தக்க பிரபு ஒருவரும் இல்லை. எனினும், பிரபுக்கள் செல்வந்தர்களாயும் வலியுற்றவர்களாயும், போர்ப்பயிற்சி உடையவர்களாயும் இருந்தார்கள்; தங்களுடைய இனத்திற்குரிய உரிமைகளையும் உடைமைகளையும் கருத்திற்கொண்டிருந்தார்கள்; தங்களுக்குத் தாக்குதல்களால் ஏற்பட்ட தோல்விகளையும் பொருட்படுத்தாமல் மன்னரின் ஆட்சியைக் கடுமையாக எதிர்த்துப் போரிட வேண்டியவர்களாய் இருந்தார்கள்.

## ரிச்சிலூவுக்கு எதிரான சதிகள்

பிரபுக்களின் அதிகாரங்களுக்கு எதிராக மன்னரின் அதிகாரத்தை மேலோங்கச் செய்வதில் ரிச்சிலூ ஈடுபட்டிருந்த சமயத்தில் அரச குடும்பத்தைச் சேர்ந்தவருட்சிலர் பிரபுக்களுடன் நிலையான தொடர்புகொள்ள ஆதரவளித்தது, அவர் ஆட்சிமுறையிற் காணப்பட்ட வியத்தகு செயலாகும். மன்னரும் இயல்பாகவே உயர்குடி மக்களிடத்திலும் அவர்களுடைய விருப்பங்களிலும் பரிவு கொண்டிருந்தார். பிரபுக்களுக்கு அரசியார் உதவியளித்ததோடு அவர்களுக்குப் பகைமையாய் இருந்தவர்களையும் எதிர்த்தார். மன்னரின் தலைமை அறிவுரையாளரும் அரசவதிகாரத்தை நிலை நிறுத்துவதில் முனைந்தவருமான கார்டினலைப் பதவியிலிருந்து வெளியேற்றுவதற்காக அரசியாரான தாயார் மேரி-டி-மெடிசியும், மன்னரின் உடன் பிறந்தாரான ஆர்லியன்சு நாட்டின் காஸ்டன்[1] என்பாரும் இடைவிடாது சூழ்ச்சி செய்தனர். முடிவற்ற தொடர்ச்சியான சூழ்ச்சிகள், கலகங்களிடையே ரிச்சிலூவின் வாழ்க்கை நடந்து வந்தது. இவற்றை அடிப்படையாகக் கொண்டு பல புனைகதைகளும் நாடகங்களும் தோன்றலாயின. இச்சூழ்ச்சிகளின் விளைவாக அவர் திட்டங்கள் நிறைவுறாது கடுந்தடையுற்றன. பதவியை இழந்துவிடுவாரோ என்று பல சமயங்களில் தோன்றினும், இறுதியில் அவர் வெற்றி பெற்றார். அரசியாரான தாயார் இங்கிலாந்திற்கும், பெல்ஜியத்திற்கும் நாடு கடத்தப்பட்டார். ஆர்லியன்ஸ் நாட்டின் காஸ்டனும் தோற்கடிக்கப்பட்டு, பன்முறை மன்னிக்கப்பட்டார். இறுதியில் ரிச்சிலூவின் ஆட்சிக்கு உண்மையின்றி இணங்க நேர்ந்தது. அவர் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடம் நடந்துகொண்டதைவிடச் சற்று நேர்மை குறைவாகப் பிரபுக்களிடம் நடந்துகொண்டார். 1632-ல் மான்ட்மோரன்சிக் கோமகனும்,[2] லொரைன் நாட்டுக் கோமகனும், ஆகியவர்களுடன் காஸ்டன்

[1] Gaston of Orleans. [2] Duke of Montmorency.

சேர்ந்து கலகம் செய்ததற்காக உயிரிழப்புத் தண்டனையைப் பெற்றார் 1641-ல் போலிக் கலகத்திற்குத் தலைமை வகித்த காம்டே-டி-சொய்சான்ஸ்[1] என்பார் கொலையுண்டதன் விளைவாக, ரிச்சிலூ அளிக்க இருந்த தூக்குத் தண்டனையினின்றும் காஸ்டன் தப்பினார். ரிச்சிலூவினது வாழ்க்கையின் இறுதிக்காலத்தில் மன்னரின் பேரன்பைப் பெற்றிருந்தவரான சிங்க்கு மார்சு[2] என்பார் ரிச்சிலூவிற்கெதிராகச் சதி செய்துகொண்டும், ஸ்பெயின் மன்னரோடு கூடிக் கலகம் செய்துகொண்டும் இருப்பதை ரிச்சிலூ கண்டார். ஆதலால், அவருக்கு ரிச்சிலூ தூக்குத் தண்டனை விதித்தார். மன்னரின் முக்கியப் பகைவர்களுக்கு ரிச்சிலூ எத்தகைய ஊழைக்கூட்டுவித்தாரோ அதினின்றும் சிங்க்கு மார்சின் பதவியோ, மன்னர் அவரிடம் கொண்டிருந்த அன்போ காப்பாற்றவில்லை. ஆனால், ரிச்சிலூ போர் தொடுப்பதனாலும் கொலையாளியின் மூலம் கொலைத்தண்டனை விதித்ததனாலும் மட்டும் பிரபுக்களின் எதிர்ப்பை ஒடுக்கிவிடவில்லை. அவர் நிலையானதும் மேலானதுமான முறையைப் பயன்படுத்தினார். இறுதியானதும் எஞ்சியிருந்ததுமான தனிப்பட்டவர்களுள் ஆயுதங்களைக்கொண்டு நேருக்கு நேராக மற்போர் புரியும் பழக்கத்தையும் கடுந்தண்டனை விதிப்பது வாயிலாகத் தடை செய்தார்; பிரான்சின் பல பாகங்களிற் காணப்பட்ட கோட்டைகளை வெடிமருந்தைக்கொண்டு தகர்த்தார். அக்கோட்டைகளைக் கொண்டுதான் பிரபுக்கள் ஆதிக்கமுள்ளவர்களாய் நாட்டிற்குப் பேரச்சத்தை உண்டுபண்ணினார்கள். மாகாணங்களில் பிரபுக்களின் அதிகாரம், புதிய முறையில் தோற்றுவிக்கப்பட்டு வளர்ச்சியுற்ற புதிய அதிகாரிகளால் அழிக்கப்பட்டது, மற்றவைகளைவிட மிகமிகக் கடுமையான முறையாகும். பிரபுக்கள், மாகாணங்களின் கவர்னர்கள் என்ற முறையில், பேரதிகாரத்தைக் கைக்கொண்டு, மன்னரின் அதிகாரத்தை எதிர்ப்பதற்குத் தங்கள் பதவியைப் பயன்படுத்திக்கொண்டார்கள். இம்முறையையொழித்து மாகாணங்களில் மன்னருடைய பகர ஆளாகவும் (ஏஜெண்டு) பெருங்குடி மக்களுக்குப் பதிலாகவும், நடுத்தரக் குடும்பங்களைச் சார்ந்தவர்களையே ரிச்சிலூ நியமித்தார்.

## இன்டெண்டன்டுகள்

இவ்வாறு நியமிக்கப்பட்டவர்கள் நிதி, காவல் துறை இவற்றின் மேற்பார்வையாளர்கள்[3] எனப் பட்டம் பெற்றார்கள். இவர்கள் இன்டெண்டன்டுகள்[4] என வழங்கப்பட்டார்கள். பல இடங்களில் மாகாண அரசாங்கம் பெயரளவில் பெருங்குடி மக்கள் வயமிருந்தது. எனினும், அவர்கள் இன்டெண்டன்டுகள் உண்மையாக அதிகாரம் வகித்திருப்பதை உணர்ந்திருந்தார்கள். இவர்கட்கு மத்திய அரசாங்கத்தின்

[1] Comte de Soissons. [2] Cinq Mars. [3] Superintendents. [4] Intendants.

முழுப்பலமும் கிட்டியது. நாட்டில் படை திரட்டுவதும், வரி விதிப்பதும், நீதித்துறைப் பொறுப்பும் இவர்களிடமிருந்தன. இக்காலம் முதல் பிரெஞ்சுப் புரட்சி தோன்றும் வரை, மன்னருடைய அமைச்சர்களுக்கு அடுத்தாற்போலப் பிரான்சின் முக்கிய அலுவலர்களாய் இந்த இன்டெண்டன்டுகளே இருந்து வந்தார்கள். இவர்களுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் வரம்பிலா அதிகாரத்தைப் பெற்றிருந்தது காரணமாகச் சில சமயங்களில் இவர்கள் பிரான்சின் 'மாகாண மன்னர்கள்' என வழங்கப்பட்டார்கள். ஆனால், மன்னரின் அதிகாரத்தைவிட இவர்களுடைய அதிகாரம் ஒரு பொழுதும் விஞ்சிவிடவில்லை. மன்னரின் அதிகாரத்தை வளர்ப்பதும் அதற்குத் துணை புரிவதுமே இவர்களின் முக்கியக் கடமையெனக் கருதப்பட்டன.

## பிரதிநிதி அரசு தாக்குண்ணுதல்

### நோட்டபிள்ஸ்—மன்னரின் ஆலோசனைக் குழு

ரிச்சிலூவின் அரசியல் நோக்கங்களில் மக்கள் பிரதிநிதிகளால் நடத்தப்படும் அரசாங்கங்கள் போன்ற கருத்துக்கள் இடம் பெறவில்லை, 1614-ல் கூடிய பிரெஞ்சு முப்பேராயத்தில் அவர் உறுப்பினராயிருந்தார். ஆனால், அவருடைய முறையிற் காணப்பட்ட கருத்துக்களுக்கு முரணாயிருக்கும் என்று முன்கூட்டியே நம்பிக்கை கொண்டிருந்ததால், எந்தக் குழுவையும் கூட்டுவதற்கு அவர் விரும்பவில்லை. பிரெஞ்சு முப்பேராயத்தைவிடப் பிரெஞ்சு உயர்நீதி மன்றங்களுக்கு[1] அவர் தனி மதிப்புக் கொடுக்கவில்லை. உயர்நீதி மன்றங்கள் முக்கிய நீதித்துறையாட்சி செய்யும் கூட்டுப் பொறுப்பு வாய்ந்த கூட்டவைகளாகவே[2] இருந்தன. சட்டமியற்றுவதிலோ அல்லது கொள்கையை உருவாக்குவதிலோ அவை குறுக்கிடுவதற்கு அனுமதிக்கப்படவில்லை. மாகாணங்களிலிருந்த பிரதிநிதி குழுக்கள்—'மாகாண எஸ்டேட்டுகள்' என்று வழங்கியவை அவரிடம் பகைமை கொண்டிருந்தன. போலி உரிமையின் அடிப்படையிலோ, அன்றி இடரை விளைவிக்கக் கூடிய மனக்குறைவினாலோ ஏற்பட்ட அனைத்துக் கிளர்ச்சிகளும் அறவே ஒழிக்கப்பட்டு, அவற்றிற்குப் பதிலாகத் 'துரைத்தன அலுவலர்கள்'[3] நேரிடை ஆட்சி ஏற்படுத்தப்பட்டது. எங்கெல்லாம் மாகாண எஸ்டேட்டுகள் ஆட்சி செய்ய விடப்பட்டிருந்தனவோ, அங்கெல்லாம் அவை கடுமையாக நடத்தப்பட்டதுடன் அவற்றின் அதிகாரங்களில் பெரும்பான்மையன அரசியல் அலுவலாளர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. மன்னரால் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவரால் அவைக்கு அழைக்கப்பட்ட பெருங்குடி மக்களின் அவையைத்தான் ரிச்சிலூ விருப்பத்துடன் சட்ட ஆலோசனைக்காகக் கூட்டினார். இப்பெருங்குடிகள் குறிப்பிடத்தக்கவர்கள்[4]

[1] Parlement. [2] Judicial Corporations [3] Elus. [4] Notables.

என வழங்கப்பட்டார்கள். இவர்களது கடமை மன்னருக்கு ஆலோசனை கூறுவதேயாகும். இவற்றை ஏற்றுக்கொள்வதும் விடுவதும் மன்னருடைய விருப்பத்தைப் பொறுத்து இருந்தன. எனவே, எக்காரணத்தை முன்னிட்டும் அரசரின் அதிகாரத்தில் வரம்பு மீற இயலாது. ஆதலாலேதான் இக்குழு ரிச்சிலூவின் ஆதரவைப் பெறக் காரணமாயிற்று. முடியாட்சியை இயக்கும் கருவி அவரால் நன்கு அமைத்து வளர்க்கப்பட்டது. மன்னருடைய ஆலோசனைக் குழுவிலிருந்துதான் எல்லா அதிகாரங்களும் தோன்றின. இவ்வாலோசனைக் குழு குறிப்பிடத்தக்க சிறப்புடைய பணிகளைக் கவனிப்பதற்காகத் தனித்தனி குழுக்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவ்வாறு மிகவும் கூர்ந்த நோக்குடன் நிறுவப்பெற்ற ஆலோசனைக் குழுவே பதினுன்காம் லூயியின் ஆட்சிக் காலம் முழுவதிலும் பிரான்சின் துரைத்தனத்தை இயக்கியது; அதனுடன் நாட்டின் முன்னேற்றத்தில் புரட்சி தோன்றி அனைத்தையும் தலை கீழாக மாற்றி அமைக்கும் வரை நாட்டின் நற்பேறுகளைக் காப்பாற்றியது.

## அரச தந்திரியாரான ரிச்சிலூ

உள் நாட்டுக் கொள்கையைவிட வெளி நாட்டுக் கொள்கையிலேதான் ரிச்சிலூவின் நாட்டம் அடிக்கடி சென்றது. பெரும்போரான முப்பதாண்டுப் போரிலும், ஐரோப்பாவில் பன்னாட்டுத் தொடர்புகளிலும் ரிச்சிலூவின் ஆதிக்கம் உறுதி பெற்றிருந்தது. ஜெர்மனியில் பிஸ்மார்க்கு[1] என்பவர் தோன்றும் வரை இவ்வளவு செல்வாக்குடன் தம் அதிகாரத்தை நிறைவேற்றிய அரச தந்திரியார் வேறு எவரிருந்தனர் என்னும் வினு எழலாம். இவரது அரச தந்திர வரலாறு மிகச் சிக்கலானதுடன் அதைப் பற்றிய விவரங்கள் சுவையுடையனவாயுமிருந்தன. எனவே, இயன்ற அளவு மிகச் சுருக்கமாக அதன் பயன்கள் இவண் அளிக்கப்படவேண்டும்.

## வால்டிலீன் கணவாய்

கூஸ்டாவசு அடால்ஃபசு உடன்படிக்கை

ரிச்சிலூ, பிரான்சின் உண்மை எதிரியாகத் தான் கண்ட ஸ்பெயின், ஆஸ்திரிய நாடுகளைச் சார்ந்த ஹாப்ஸ்பர்குகளின் அதிகாரக் கூட்டைத் தோற்கடிப்பதையே தம் நோக்கமாகக் கொண்டிருந்தார். இக்கூட்டாட்சி ஐரோப்பாவில் பிரான்சின் ஆட்சிக்குப் பெருந்தடையாயிருந்தது. ஸ்பெயின், பிரான்சு ஆகிய இரு நாடுகளுக்கும் இடையே போக்குவரத்தைக் கடுமையாக்க ஆல்ப்சு மலை வழியாக மிலானிலிருந்து ஆஸ்திரியா நாட்டிற்குச் செல்லும் வால்டிலீன் கணவாயைப்[2] பகைய

[1] Bismarck. [2] Veltelline Pass

சினல் வல்லந்தமாகக் கைப்பற்றும்படி செய்தார். இக்கணவாய் வழியாக ஸ்பெயின் படைகள் ஆஸ்திரியாவுக்கு அடிக்கடி சென்றன. அவர் ஜெர்மனியில் நிகழ்ந்த போரை மிக்க கவலையோடு கூர்ந்து நோக்கியதுடன் பல சமயங்களில் நெருக்கடி தோன்றிய காலங்களில் செல்வாக்கையும் பயன்படுத்தினர். பிராட்டஸ்டென்டு சமயத்தைப் பாதுகாப்பதற்காக ஜெர்மனியின் மீது படையெடுத்த குஸ்டாவசு அடால்ஃபசு நாம் முன்னர்க் கண்டவாறு, பிரான்சின் உதவியைப் பெரிதும் நம்பியிருந்தார். 1630 ல் ரிச்சிலூ அடால்ஃபசுடன் உடன்படிக்கை செய்து கொண்டதன் விளைவாக, சுவிஸ் படைகள் பிரான்சால் ஏற்கப்பட்டு, ஊதியம் அளிக்கப்பட்டன. ஸ்வீடன் அரசை நச்சுக் கொல்லியைப் போன்றதென்றும், அளவிற்கு மீறிப் பயன்படுத்தினல் உயிருக்கே ஆபத்தை உண்டு பண்ணக்கூடியதென்றும் அவர் சொன்னர். மேலும், லுட்சன் சண்டையில் குஸ்டாவசு இறந்தது அவரால் வரவேற்கப்பட்டது. நார்டிலிஞ்சன் போரில் பிராட்டஸ்டென்டுகள் பேரிடர்களுக்கு உள்ளான போது கத்தோலிக்க நாடான பிரான்சின் பயனுள்ள உதவியைத்தான் எதிர் நோக்க வேண்டியிருந்தது. இவ்வமயத்திலிருந்து பிரான்சின் உதவியை—ரிச்சிலூவின் உதவியை—போர் முடியும் வரை தெளிவாகக் காணலாம். வீமர் நாட்டுப் பெர்நார்டும் அவர் படைஞரும் இறுதி வரையில் பிரான்சின் ஊதியத்தைப் பெற்று வந்தனர். பெர்நார்டு இறந்த பின் அவரது படை பிரெஞ்சு நாட்டின் நேர்முக ஊழியத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளப்பட்டது.

## ரிச்சிலூவின் மரணம்

பிரான்சிற்கும் ஸ்பெயினுக்கும் இடையே நடந்த போரின் இறுதி நிகழ்ச்சிகள் பிரான்சின் வடக்குக் கிழக்கு எல்லைப் பகுதிகளிலேதான் நிகழ்ந்தன. அவ்வமயம் பிரான்சின் நட்பு நாடான சுவீடன் நாட்டுப் படைகள் கிழக்கில் ஆஸ்திரியர்களை நெருக்கின. பிரான்சின் படைகள் முதலில் வெற்றி பெறவில்லை. ஆனல், ரிச்சிலூவின் அரசியல் தந்திரம் ஸ்பெயினுக்கு எதிராக அத்தீபகற்பத்திற்குள்ளேயே பகைவர்களைத் தோற்றுவித்தது. இரண்டாம் பிலிப்பின் வெற்றிகளால் ஸ்பெயினுடன் இணைக்கப்பட்டிருந்த போர்த்துகல், 1640-ல் கலகம் செய்தது. காட்டலோனியா மாகாணம் பல்லாண்டுகள் நீடித்து நிற்கும் ஒரு போலிக் கலகத்தை விளைவித்தது. இப்போரின் முடிவு தெரியாதிருந்தது. எனினும், பிரான்சின் பக்கம் வெற்றி நன்கு காணப்படும் தறுவாயில், 1642-ல் ரிச்சிலூ மரணமடைந்தார். அவரது உண்மை ஊழியத்தைப் பெற்ற பதின்மூன்றும் லூயியும் தொடர்ந்து வந்த மே மாதத்தில் மரணம் எய்தினர் இதனல், பிரான்சிற்கும் ஐரோப்பாவிற்குமே ஒரு புதிய சகாத்தம் தோன்றும் போலக் காணப்பட்டது.

எனினும், மாறுதல் முதலில் எதிர்பார்த்த அளவிற்கு அவ்வளவு பெரியதாய் இல்லை. ரிச்சிலூ வாழ்க்கையின் பிற்பகுதியில் மசாரின் என்பார் அவருக்குப் பேருதவியாய் இருந்தார்; அவரையே தமக்கு வாரிசாக மன்னருக்குப் பரிந்துரைத்தார். அப்புதிய அமைச்சர் இத்தாலி நாட்டு இனத்தைச் சேர்ந்தவர்; பிரெஞ்சு மொழியை எப்பொழுதும் அவர் நன்கு பேசியதில்லை; அதனுடன் பிரெஞ்சு மக்களின் தன்மையையும் நன்கறியாதவர். உள்நாட்டு விவகாரங்களை நடத்துவதில் ரிச்சிலூ விடம் காணப்பட்ட நிலையான ஊக்கம் அவரிடம் இல்லையெனினும், வெளிநாட்டுக்கொள்கையில் ரிச்சிலூ விற்குத் தக்க வாரிசு என்பதை மெய்ப்பித்தார். ரிச்சிலூவின் கருத்துக்களை அவர் நினைத்திருந்ததைப் போலவே வெற்றியாக நிறைவேற்றினுர். பதினுன்காம் லூயி ஐந்தாண்டு நிரம்பப் பெருத குழந்தையாய் இருந்ததால், நாட்டில் நெடுங்காலம் ரீஜன்சி[1] (மன்னன் ஆளவியலாத பொழுது அமையும் ஆட்சிக் குழு) இருக்கவேண்டிய நிலை தெளிவாக ஏற்பட்டது. தாய் அரசியாரான ஆஸ்திரியா நாட்டு ஆன் என்பார் எதிர்ப்பின்றி ரீஜன்டு பதவியைக் கைக்கொண்டார். அவர் மசாரினுக்கு எவ்விதத் தயக்கமுமின்றித் தொடர்ந்து ஆதரவளித்தார். மசாரினும் கத்தோலிக்கச் சமயத்தில் கார்டினல் பதவியைப் பெற்ருர். ஆயினும், கார்டினல் பதவிக்கான தகுதி நியமனத்தை முழுவதும் பெருது இருந்ததால், இரகசியமாக, ஆனுல் உண்மையில், அரசியாரை மணந்திருந்தார் என்பது நம்பப்படுகிறது. வெளி நாட்டுடன் நிகழ்ந்த போர் முதலில் அவரது கவனத்தை ஈர்த்தது. பிரெஞ்சுப் படைகள் தொடக்கத்தில் ஏற்பட்ட சில தடைகளுக்குப் பின்னர்ப் புகழடைந்து கொண்டிருந்தன.

## கோண்டேவும் டுரீனியும்

பிரான்சின் இரு பெரும்போர் வீரர்களான கோண்டே கோமகனும் டுரீனி நாட்டுப் பிரபுவும் தோன்றினுர்கள். கோண்டே கோமகனுர் அரச குடும்பத்தைச் சார்ந்த இளவரசர். இவ்விருவருள் கோண்டே மிக்க தைரியமும், வீரச்செயல்கள் புரிவதில் ஆர்வமும் பெற்ற தொண்டராய் இருந்தார்; எனவே, தொடக்கத்தில் பிரெஞ்சு மக்களின் கவனத்தைக் கவர்ந்தார். ஆனுல், டுரீனிப் பிரபு அக்கால ஐரோப்பாவில் போர் ஆற்றல் மிக்கவருள் தலைசிறந்தவராயும், மனிதப் பண்பு நிறைந்த வீரர்களுள் ஒருவராயும் விளங்கினுர். எனவே, அவர் புகழ் வாய்ந்த தோழரும் போட்டியாளருமான கோண்டே கோமகனுரைக் காட்டிலும் மறுக்க இயலாத பெருவெற்றிகளைப் பெற்றது வாயிலாகப் பிரான்சிற்கு உண்மையான பணிபுரிந்தார்.

[1] Regency.

## லென்சு

1643-ல் பெல்ஜிய நாட்டு எல்லையில் ராக்ராய் என்னுமிடத்தில் நடந்த சண்டையில், கோண்டே கோமகனர் வெற்றிபெற்ருர். ஐந்தாம் சார்லசிற்குப் பிறகு இப்பொழுதுதான் பிறவினக் கலப்பற்ற ஸ்பெயின் நாட்டுக் காலாட்படை உறுதியான தோல்வியை அடைந்தது. இச்சண்டை, வரலாற்றில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. இதற்குப்பின் சமாதானப் பேச்சு வார்த்தைகள் தொடங்கப்பட்டன. ஆஸ்திரியா தேவையான சில சலுகைகளைக் காட்ட விருப்பமில்லா திருந்ததால், பேச்சு வார்த்தைகள் காலம் தாழ்த்தியும் எவ்வகையிலும் முடிவற்றும் நடந்தன. ஆனல், 1648-ல் அதேபகுதியில் கோண்டே லென்சு என்னுமிடத்தில் பெற்ற மற்ருெரு வெற்றி, சமாதானப் பேச்சுக்களில் அவசரநிலையை உருவாக்கியது வாயிலாக, அடுத்த ஆண்டில் வெஸ்டுபேலியா உடன்படிக்கை ஏற்பட்டது. முன்னதி காரத்தில் இவ்வுடன்படிக்கையின் வாசகத்தைப்பற்றி அறிந்ததுடன் பிரான்சிற்கு மேலான மாண்பையும், அதிகமான நிலப்பகுதிகளையும் அடைவதில் வருங்காலத்தில் பெறவேண்டியதற்கு எத்துணையளவு வழி கோலிற்று என்பதையும் கண்டோம்.

## மசாரினுக்கு எதிர்ப்புத் தோன்றுதல்

வெஸ்டுபேலியாச் சமாதானம் மசாரினின் பெருவெற்றியா யிருந்தும், பிரெஞ்சு மக்களின் நல்லெண்ணத்தையும் ஆதரவையும் அவர் பக்கம் திருப்புதற்கு இவ்வெற்றி பயன்படவில்லை. பிரான்சிற்குப் பெருஞ்சுமையாயிருந்த போரின் பெரும்பகுதி முடிவடைந்தவுடன் (ஸ்பெயினுடன் ஏற்பட்ட போர் தொடர்ந்து நடந்ததென்பதையும், அப்போர் முடியப் பதினேராண்டுகள் பிடித்தனவென்பதையும் இங்குக் கவனத்திற் கொள்ளவேண்டும்.) பிரான்சில் மனக்குறை கொண்டிருந்த பலசத்திகள் மன்னரின் அதிகாரத்தை எதிர்க்கும் இயக்கத்தில் இறுதி முறையாகத் தலைதூக்கலாயின. போரில் ஈடுபட்டதனல் உண்டான நிதிச் சுமை மிகுதியாயிருந்தது. ஜெர்மனியைப் போல அத்துணைத் துன்பத்திற்குப் பிரான்சு உள்ளாகவில்லை. தாங்கமுடியாத வரிச் சுமைகளை அகற்றுவதற்காக மக்கள் வேண்டுகோள் விடுவித்தார்கள். அதனுடன் ரிச்சிலூவை எதிர்த்ததில் தங்கள் முயற்சிகள் தோல்வி யுற்றதைக்கண்ட பிரபுக்களும் அவருடைய வலிமை குன்றிய வாரிசை எதிர்ப்பது வாயிலாக நாட்டில் தங்களுக்குச் சுதந்தரமும் பெருஞ் செல்வாக்கும் கொண்ட நிலையை அடையலாம் என்ற நோக்கத்தைக் கொள்ளலானர்கள்.

## பிராண்டேயின் போர்கள்

**அரசருடைய ஆணைகளைப் பதிவு செய்ய மறுத்தல்**

இப்பொழுது பிரெஞ்சு வரலாற்றில் திகைப்பையூட்டக்கூடிய சோதனை நிலையை நாம் அடைகிறோம். இதனைப் பொதுவாகப் 'பிராண்டே'[1] என வழங்குகின்றனர். இச்சொல் ஒருகட்சியின் அவப் பெயரன்றி வேறன்று. பிரான்சில் இது மன்னருடைய அதிகாரத்தை எதிர்ப்பதற்காகத் தோன்றிய ஓரியக்கமாகும். இவ்வியக்கம் பல்வேறு முரண்பாடான அடிப்படையில் தோன்றிய காரணத்தால் தோல்வி யுற்றது. இவ்வியக்கத்திற்கு இருமுக்கிய ஆதாரங்கள் இருந்தன. இது வரிகளைஎதிர்த்துச் சீர்திருத்தத்தை உரிமையுடன் வற்புறுத்திய பாரிசு நகரத்தின் உயர்நீதிமன்ற நடவடிக்கைகளுடன் தொடங்கியது. இந்நடவடிக்கைகளில் தொடங்கிய கிளர்ச்சிகள் நாளடைவில் வளர்ந்து பிரபுக்களின் எதிர்ப்பு இயக்கத்திற்கு வழி கோலின. இவ்வியக்கத்தில் வன்முறைச் செயல்களைப் புரியும் கோண்டே இளவரசர் முக்கியப் பங்கு கொண்டார்.

அரசியல் அமைப்புத் தொடர்பான சீர்திருத்தங்களைச் செய்யப் பாரிசு உயர்நீதி மன்றத்திற்குப் போதிய தகுதியில்லை. இக்குழுவிற்கு உயர்நீதி மன்றமாகச் செயற்படுவதே முக்கியக் கடமையாய் இருந்தது. இதன் உறுப்பினர்கள் மரபு நிலையை ஒட்டியும், பொருள்கள் கொடுத்துப் பெற்ற உரிமையையொட்டியும் பதவி வகித்தார்களே தவிர, மன்னரால் நியமிக்கப்படவோ அல்லது பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படவோ இல்லை. துரைத்தனத்தையும் சட்டமியற்றுதலையும் ஒரே ஒரு பகுதியிலேதான் இது அணுகியது. மன்னருடைய ஆணைகளை ஆவணப் பட்டியலில் பதிவுசெய்யும் உரிமையை இது பெற்றிருந்தது. இவ்வுயர்நீதி மன்றத்தின் ஆவணங்களில் பதிவு செய்யப்பெறுதவைகள் சட்டமாகக் கருதப்படமாட்டா. நிறைவேற்றப்படும் சட்டங்களைக் குறித்துத் தனது எதிர்ப்பைத் தெரிவிக்க உரிமையுண்டு என்பது ஒப்புக்கொள்ளப்பட்டு இருந்ததே தவிர, ஆவணப் பட்டியலில் பதிவு செய்வதை மறுக்கமுடியுமா என்ற பிரச்சினை தீர்மானிக்கப்படாமல் இருந்தது. இவ்வமயத்தில் தீர்மானிக்கப்படாதிருந்த இவ்வையத்திற்கு உரிய அதிகாரத்தை இப்பொழுது பயன்படுத்தி, 1648-ல் இக்குழுவிற்கு அனுப்பப்பட்ட நிதித்தொடர்புடைய அரச ஆணைகளைப் பதிவுசெய்ய மறுத்தது; அதனுடன் பாரிசிலும் நாட்டின் மற்றப் பகுதிகளிலும் நிதித்தொடர்பான ஆட்சி முறைகளிற் காணப்பட்ட மனக்குறையைப் பயன்படுத்திக்கொண்டு தீவிரமான எதிர்ப்பில் இறங்கியது. இக்குழுவைப்போலவே மன்னரின் ஆலோசனை அவையால் தோற்றுவிக்கப்

[1] Fronde.

பட்டவைகளான கணக்குக் கழகம்[1] சுங்கவரிச் சங்கம்[2] பேரவை[3] முதலியவைகளுடன் நெருங்கிய தொடர்புற்று, அதேகாலத்தில் இங்கிலாந்து பாராளுமன்றத்தில் நிகழ்ந்ததைப் போன்று, வரிகளைக் குறைத்தல், விசாரணையின்றி அரசர் ஆணையின்மேல் சிறைபிடித்தலைச் செய்தல், மாகாணங்களில் மன்னர் அதிகாரத்தை ஒதுக்கிவைத்த இன்டென்டண்டுகளைப் பதவியினின்றும் நீக்குதல் போன்றவைகளைப் பொதுக் கூட்டத்தில் உயர்நீதி மன்றம் கோரியது.

## உயர்நீதி மன்றத்தின் கோரிக்கைகள்

முதல் பிராண்டேயின் முடிவு

அரசாங்கம் முதலில் இக்கோரிக்கைகளைக் கண்டு தயங்கிற்று. லென்சுப் போரில் வெற்றிச் செய்தியைக் கேட்டதும், அரசாங்கம் அதை எதிர்த்த பாராளுமன்ற எதிரிகளைத் தாக்குவதில் ஊக்கம் பெற்றது. உயர்நீதிமன்றத் தலைவர்கள் கைது செய்யப்பட்டார்கள். கடுஞ்சண்டை மூளும்போலத் தோன்றியது. ஆனால், ஒருகணம் மன்னர் விட்டுக் கொடுத்தார். இங்கிலாந்தின் எடுத்துக்காட்டு, நெடுகிலும் சக்தி வாய்ந்த செல்வாக்காயிருந்தது. முதலாம் சார்லசு கொலைசெய்யப் பட்ட செய்தி, அரசருக்குப் பொதுமக்கள் எண்ணத்தைத் தடை செய்ததனாலுண்டாகும் பயனைப்பற்றி எச்சரித்தது. மசாரின் பின்னர்க் கடுமையாகத் தாக்கும் நோக்கத்துடன் முதலில் சிறிது விட்டுக்கொடுத்தார். பின்னர் மன்னரின் படைகள் திரட்டப்பட்டு, கோண்டே கோமகனார் தலைமையின் கீழ் ஒப்படைக்கப்பட்டன. பாரிசு கடுமையற்ற முறையில் முற்றுகை இடப்பட்டது. உயர்நீதி மன்றத்துச் சட்ட வல்லுநர்களுக்கும், இன்டென்டண்டுகளைத் தாக்கியதால் மகிழ்ச்சி கொண்ட பிரபுக்களுக்கும் இடையே உண்மையான கூட்டுறவு இல்லாதிருந்ததால், 1640-ல் சமாதானம் ஏற்பட்டது. நிதித் தொடர்பானவைகளில் அரசாங்கம் சலுகைகள் வழங்குவதாக உறுதி அளித்தது. அதனுடன் பொது மக்களின் குறைகளை எடுத்துக் கூறி வெற்றி பெறும் நோக்குடையதாய்ச் சிறிது காலம் செயல் புரிந்த உயர் நீதி மன்றமும் அதன் பங்கைக் கைவிட்டுவிட்டது.

## இரண்டாவது பிராண்டே

முதலாவது பிராண்டே எனப்படும் இப்போராட்டம் முடிந்தது. ஆனால், இரண்டாவது போராட்டம் தொடர்ந்து தோன்றியது. முதற் போராட்டத்திற்கும் இதற்கும் பொதுத்தன்மையில் ஒற்றுமை ஒன்றும் இல்லை. இரண்டாம் பிராண்டேப் போராட்டத்தில் அரசியலமைப்புப்

[1] Chamber of Accounts. [2] Chamber of Customs. [3] Grand Council.

பற்றிய நோக்கம் எதுவும் இல்லை. எனவே, அது பொது மக்களுக்கு விருப்பமான உரிமைகளைப் பற்றி வாதாடி வெற்றி பெறும் நோக்குடையதாக அமையவில்லை. இது மனக்குறைவுற்ற உயர்குடிப் பிறந்தோரின் இறுதியான அணித்திரளாகும். இவ்வணித்திரள், கோண்டே இளவரசரின் பேரவாவினையும், செயலினையும் கருத்துடன் நோக்கிற்று. 1650 ஜனவரியில் மசாரின், கோண்டே இளவரசரிடத்தில் இடர்களைத் தோற்றுவிக்க வல்ல எழுச்சியையும் மன்னரின் அதிகாரத்திற்கு எதிரியாய் விளங்கும் தன்மையையும் கண்டார்; ஆதலின், அவரையும் மற்றும் சில பிரபுக்களையும் கைது செய்தார். இதனால், மக்கள் பெருஞ் சினம் கொண்டார்கள். இயற்கையாகவே அரசரிடம் பற்றுறுதி கொண்ட டுரீனி கோமகனும், கோண்டேயின் உடன் பிறந்தாளின் செல்வாக்கிற்குக் கட்டுண்டவராய்ப் பிரபுக்கள் பக்கம் சேர்ந்தார். கலகக்காரர்களுடன் பாரிசு நகரும் சேர்ந்துகொண்டு இளவரசரை விடுதலை செய்யுமாறும், மசாரினை நாடு கடத்துமாறும் கோரினர். அறிவு நலமிக்க அமைச்சரான மசாரின் இக்கோரிக்கையாகிய புயலுக்குப் பணிந்து கோண்டேயை விடுதலைசெய்தார்; தாமும் நாட்டை விட்டு வெளியேறினர். அவரது தோல்வி போலியானது. வெளியிலிருந்து கொண்டே, பாரிசிற்குள் இருந்ததைப் போலவே, தாய் அரசியார், அரசாங்கச் செயல்களை இயக்கினர்.

## டுரீனியின் உறுதியான செல்வாக்கு

### கோண்டே கைது செய்யப்படல்

புனைந்துரைக்க இயலாத குழப்பத்துடன் கூடிய போராட்டம் தொடர்ந்தது. இதைப் பற்றிப் பல நினைவுக்குறிப்புக்கள் வாயிலாக நாம் அறிகிறோம். கார்டினல்-டி-ரெட்சு[1], திருவாட்டி-டி-லாங்குவில்[2] போன்ற எழுத்தாளர்கள் மிக்க திறமையுடன் தெளிவாக, உயிரோவியங்களாக இப்போரைப்பற்றி வரைந்துள்ளார்கள். இச்சொல்லோவியங்கள் அக்காலத்துக் கலகங்கள், சண்டைகள், மற்போர்கள் முதலியவை பற்றி எழுந்தவை ஆகும். உண்மையில் இச்சண்டை இழிவானது. தனி மனிதரின் பேரவாவே இதன் விளைவிற்கு அடிப்படையாய் அமைந்தது. அரசரின் பக்கலில் டுரீனி மீண்டும் சேர்ந்தார்: எதிரிகளின் மீது மன்னரின் படைகள் வெற்றி காண்பதற்கு விரைவில் வழி செய்தார். கோண்டே 1652-ல் பாரிசு நகருக்கு வெளியில் தோற்கடிக்கப்பட்டு, சிறை பிடிக்கப்படுவதினின்றும் தப்பினர். அதன் பின், கோண்டே பிரான்சை விட்டு வெளியேறி, ஸ்பெயின் நாட்டு மக்களுடன் சேர்ந்தார். இவர் முன்னர் ஸ்பானியரைத் திறமையுடன் எதிர்த்துப் போராடி வெற்றி கண்டவர். பாரிசு நகரம் மன்னருடன்

[1] Cardinal de Retz. [2] Madame de Longueville

சமாதானம் செய்து கொண்டது. மசாரின் நாட்டிற்குத் திரும்பினர். உயர்நீதிமன்றம் பொது விவகாரங்களில் தலையிடுவதினின்றும் தடை செய்யப்பட்டது. இன்டென்டண்டுகள் மீண்டும் பதவியில் அமர்த்தப் பட்டார்கள். ரிச்சிலூவின் திட்டம் முழுமையும் முன்பு போலச் செயற் படுவதாயிற்று. வெளி விவகாரங்களில் ஸ்பெயினுடன் போரிடுவது தான் எஞ்சியிருந்தது. இரு மருங்கிலும் நிதி நிலைமை தளர்வுற் றிருந்தது. இரு சாராரும் அமைதியை நாடினர். எனினும், அதற்கு ஏற்ற தியாகத்தைச் செய்ய இருவரும் தயங்கினர். இப்போர், 'களைப் புற்ற இரு குதிரைகட்கிடையே நிகழ்ந்த பந்தயம்,' எனப் புனைந் துரைக்கப்பட்டது. பிரான்சு பல தாக்குதல்களில் நன்மைகளைப் பெற்றிருந்த போதிலும் ஸ்பெயின்மீது உறுதியான தாக்குதலைச் செய்ய இயலாதது போலத் தோன்றியது. 1657-ல் புதுமையான அரசியல் தந்திர நடவடிக்கை பிரான்சிற்கு வெற்றியை அளித்தது. ஆலிவர் கிராம்வெல்லின் ஆற்றலும் அவர்பாலிருந்த தோல்வியுருத பெருந்திறமை பெற்ற இரும்புக்கவசமணிந்த போர்ப்படையும் ஐரோப் பியர் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தன.

## கிராம்வெல்லுடன் பிரான்சு நட்பு

டியூன்ஸ் சண்டை

பிரான்சு, ஸ்பெயின் மன்னர்கள், கிராம்வெல் குடியரசுக்கட்சியைச் சார்ந்தவர் என்பதாலும், மன்னரைக் கொன்றவர் என்பதாலும் அவர் மீது வெறுப்புற்றிருந்தார்கள். பதின்மூன்றும் லூயியின் உடன் பிறந்த இளவரசியார், கொலையுண்ட முதலாம் சார்லஸின் மனைவியா ராதலின், இரு அரசகுடும்பங்களும் நெருங்கிய உறவு கொண் டிருந்தன. ஆயினும், ஆங்கில நாட்டுப் பாதுகாப்பாளராயிருந்த கிராம்வெல்லை இரு நாட்டினரும் வெறுத்த போதிலும், அவர்கட் கிடையே இருந்த இராணுவத் தேவைகளைக் கருத்திற்கொண்டு கிராம் வெல்லுடன் நல்லுறவு கொள்வதிற் போட்டியிட்டனர். யாது செய்வது எனப் பல நாள் கிராம்வெல் தயங்கினர். எனினும், ஸ்பெயினுக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகளைக் கவர்வதில் ஏற்கனவே தம் கவனத்தைச் செலுத்தியிருந்ததால், கிராம்வெல் முடிவாகக் கார்டினல் மசாரினுடன் நட்புறவு கொண்டார். லாக்ஹார்ட்டு[1] என்பவரின் தலைமை யில் ஆங்கிலப்படை ஒன்று பிரான்சிற்கு வந்தது. 1658 ஜூன் மாதத்தில் டன்கர்க்கு[2] நகரத்திற்கருகில் டியூன்ஸ்[3] என்னுமிடத்தில் சண்டை நடந்தது. கோண்டே கோமகனர் ஸ்பானியப் படைகளுக்குத் தலைமை தாங்கினர். டுரீனும், லாக்ஹார்ட்டும் அவருக்கு எதிராகப் போர் புரிந்தனர். இறுதி வெற்றி மசாரினுக்கும் அவருடன் நட்புச்

[1] Lockhart. [2] Dunkirk. [3] Dunes.

கொண்டிருந்த ஆங்கிலேயப்படைக்கும் கிட்டியது. ஆங்கிலேயர் செய்த உதவிக்கு ஊதியமாக அவர்கள் டன்கர்க்கைப் பெற்றார்கள். சமாதானத்திற்கான பேச்சு வார்த்தைகள் உடனே தொடங்கின. 1659 நவம்பர் மாதத்தில் பேச்சுக்கள் முற்றுப்பெற்று, பிரனீஸ் சமாதானம்[1] ஏற்பட்டது.

## பிரனீஸ் சமாதானம்

இச்சமாதானம் வெஸ்டுபேலியா உடன்படிக்கைக்கு உறுதுணையாய் அமைந்தது. வெஸ்டுபேலியாச் சமாதானம் முப்பதாண்டுப் போரை முடிவிற்குக் கொண்டு வந்ததாகக் கருதலாம். வடக்கிலும் தெற்கிலும் பிரான்சிற்குச் சிலநிலப் பகுதிகள் கிடைத்தன. வடக்கில் ஆர்ட்டாயும்[2] தெற்கில் பிரனீஸ் மலை எல்லையை ஒட்டிய ரூசில்லான்[3] பகுதியும் கிடைத்தன. குறிப்பிடத்தக்கன அல்லாத நிலப்பகுதிகளைப் பெற்றதைக்காட்டிலும், முக்கியமாக ஜெர்மனியை அடிபணியச் செய்து சமாதானத்தைக் கோரும்படி வற்புறுத்தியதும், ஸ்பெயினுடன் போரிட்டுத் தனது விருப்பினை ஏற்குமாறு வலியுறுத்தியதும் பிரான்சின் புகழ் நாடெங்கும் பரவக் காரணமாயின. கோண்டே மன்னிப்பைப் பெற்று பிரான்சிற்குத் திரும்பினார்; இது முதல் கோண்டே, நாட்டுப் பற்றுறுதியுடன் சேவை புரிந்தார். இது நெடுநாளாகக் கடும் பகைமை பாராட்டி வந்த இவ்விரு நாடுகளுக்கிடையே நட்புறவைத் தொடங்கி வைக்குமென நம்பிக்கை தோன்றியது. ஸ்பானிய இளவரசியாரான மேரியா தெரிசாவிற்கும் பிரான்சு மன்னரான பதினான்காம் லூயிக்கும் திருமணம் நடத்தப் பேச்சு வார்த்தைகள் நடந்தன. திருமண ஒப்பந்தத்தில் பதினான்காம் லூயி தமக்கு மனைவியாராக வருகிறவர்க்குக் கிடைக்க வேண்டிய ஸ்பெயினின் முடியரசிற்கும், அதற்குச் சொந்தமான நிலப்பகுதிகளுக்கும் தாம் உரிமை கொண்டாடுவதை முற்றிலும் துறப்பதாக உறுதியளித்தார். ஆனால், அவர் இவ்வுரிமையைத் துறப்பதற்கு ஈடாகத் தமக்கு ஏராளமான பொருளைச் சீதனமாகத் தரவேண்டும் என வரையறை செய்தார். ஸ்பெயின் இப்பெருந்தொகையை அளிக்க ஆற்றல் அற்றிருந்தது. ஆதலால், பதினான்காம் லூயி இக்கட்டுப்பாட்டினின்றும் தம்மை விலகியவராகக் கருதினார்; எனினும், மனைவியாரின் பெயரால் ஏற்பட்ட உரிமையைப் பெறுவதில் தம் ஆட்சிக் காலத்தில் பெரும் பகுதியைச் செலவிட்டார்.

## மசாரின் மரணம்

இச்சமாதானம் மசாரினுக்குப் பெருவெற்றியாயிருந்தது. ஆனால், அவர் அதன்பின் சிறிது காலந்தான் வாழ்ந்தார். அவர் பெரும்

[1] Peace of Pyrenees. [2] Artois. [3] Roussillon.

பொருளைத் திரட்டியிருந்தார்; ஒரு பெரிய நூலகத்தையேற்படுத்துவதிலும், நுண்கலைகளை வளர்ப்பதிலும் அப்பொருளைச் செலவிட்டார். அவர் இறப்பதற்கு முன்னரே தெளிவாகியது யாதெனில், இளைஞரான அந்நாட்டு மன்னர் இதுவரை அமைச்சர் பிரான்சின் கொள்கையை இயக்குவதில் தமக்கு அளித்த அதிகாரத்தைக் காட்டிலும் மிக்க செல்வாக்குடன் ஆட்சி புரிய விரும்பியதேயாகும். மசாரினின் மறைவு பிரான்சிலும் ஐரோப்பாவிலும் ஒரு புதிய சகாத்தத்தைத் தோற்றுவித்திருப்பதை நாம் காணலாம்.

*பிரான்சு வரலாறு பற்றிய நூல்களோடு ஹாசல் எழுதிய 'பதினான்காம் லூயியும் மசாரினும்' என்ற நூலும், லாட்ஜ் எழுதியுள்ள ரிச்சிலூவைப் பற்றிய நூலும் கற்றற்குரியவை. ஜெ. எச். பிரிட்ஜ் எழுதியுள்ள 'ரிச்சிலூ, கோல்பர்ட்டு, அவர்களாட்சியில் பிரான்சு' என்ற நூல்; ஹனோடாக்ஸ் எழுதியுள்ள நூலில் 'ரிச்சிலூ' என்பது ஒரு பகுதியாய் உள்ளது; ஆனால், முதல் தொகுதி 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பிரான்சின் நிலை பற்றிய அருமையான ஒரு குறிப்புப் போன்றது.*

# 9. பதினான்காம் லூயியின் காலம்

கடந்த சில காலமாக, பிரான்சில் மன்னர் பெயரளவில் ஆட்சி புரிந்தார். உண்மையில் முதல் மந்திரிகளே அரசியலை நடத்தி வந்தார்கள். மசாரின் இறந்த பிறகு அவருக்கு வாரிசாக அமைச்சர் ஒருவர் ஏற்படலாம் எனக் கருதினார்கள் பிரெஞ்சு மக்கள். ஆனால், இளைஞரான பதினான்காம் லூயி தம் கையிலேயே ஆட்சிப் பொறுப்பை வைத்துக் கொள்ள உறுதி பூண்டார். எனவே, அவையினர்க்கு வியப்பையளிக்கும் வகையில் அவர் தாமே முதல் அமைச்சராக இருக்கப் போவதாகவும் வெளியிட்டார். இவ்வெண்ணத்தைக் கைவிட அவர் விரும்பவில்லை. அவரது ஆட்சிக் காலம் ஐரோப்பிய வரலாற்றிலேயே மிகவும் நீண்டதாய் அமைந்திருந்தது. பிரான்சின் உள் நாட்டு வெளி நாட்டுக் கொள்கைகளை நிறைவுறச் செய்வதில் தமக்குத் தாமே சிறந்த வழி காட்டியாய் அவர் விளங்கினார்.

## பதினான்காம் லூயியின் குணநலங்கள்

### ஐரோப்பாவின் சுயேச்சை நிலையங்களின் தளர்வு

ஐந்து வயதினரான பதினான்காம் லூயி, மிகவும் இளமையிலேயே அரியணை ஏறினார். அவருடைய ஆற்றல்களைக் காட்டுவதற்கு உரிய வாய்ப்பு அது வரை கிடைக்கப் பெறவில்லை. அவருடைய இயல்புகளும் செயல் திறனும் பலவாறு தீர்மானிக்கப்பட்டுள்ளன. எனினும், மிகவும் நீண்டதாகிய அவரது ஆட்சிக் காலத்தில், ஐரோப்பிய அரசியல் நிலைமையை நன்கு அறிந்துகொண்டதன் பயனாக, பிரான்சின் போக்கை நன்கு இயக்கினார். இக்காலத்து ஐரோப்பாவில், பிரான்சு, சிறந்த அரசியல் தந்திரத்திறனுடன், மிக்க வலிமையுள்ளதாயிருந்தது. அவர் சிறந்த போர் வீரரல்லர்; எனவே, எப்போரிலும் முக்கியப் பங்கு கொள்ளவில்லை; எனினும் முற்றுகையிடுங்காலை சிறந்த ஆர்வம் கொண்டிருந்தார். அதனுடன், மிகப் பெரிய கோட்டைகள் பிரெஞ்சுப் படைகளின் வசமானபோது, அவற்றை அவர் நேரிற் பார்த்தார்.

அவர் சிறந்த போர் வீரர் என்றோ, அரசியல் வல்லுநர் என்றோ ஐரோப்பிய வரலாற்றில் முக்கியமான இடம் பெறவில்லை. அவர் முடியரசின் மிக உயர்ந்ததும் அழகியதுமான முறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாயிருந்தார். பெருந்தன்மையும், பெருமிதத் தோற்றமும், கவின் மிகு முகமும், உடலும் கொண்டிருந்தார்; நடத்தையைப் பொறுத்த வரையில், ஐரோப்பா இதற்குமுன் கண்டறியாதவாறு மிகச் சிறந்த வலிமையற்றவராயிருந்தபோதிலும், மிக நேர்த்தியான முடியரசிற்கு மதிப்புக் கொடுக்கக் கூடிய பிரதிநிதியாய் இருந்தார். அவர் தம்மைச் சுற்றிப் பகட்டானதும் அதிகச் செலவு கொண்டதுமான அவையை அமைத்துக் கொண்டார். கட்டடக் கலை, ஓவியம், இலக்கியங்களில் புகழ் பெற்று அவரது ஆட்சி ஒளி வீசியது. ஐரோப்பாவிலிருந்த மன்னரெல்லாம், மன்னர் எவ்வாறிருக்க வேண்டுமென்பதற்கு அவரை ஒரு மாதிரி உருவம் போன்றும், நாடு எவ்வாறு ஆளப்பட வேண்டுமென்பதற்குப் பிரான்சை ஓர் எடுத்துக்காட்டுப் போன்றும் கருதினர். எங்கும் பெரும்பாலும் துரைத்தனத்தில், பாராளுமன்றம்' பிரதிநிதிகளடங்கிய நிலையங்கள் வீழ்ச்சியுற்றிருந்தாற்போலக் காணப்பட்டன. இவை இங்கிலாந்தில் மாத்திரம் மிக்க வலிமை பொருந்தியனவாயிருந்தன. ஆனால், அங்கும் இரண்டாம் சார்லசு அரியணையை மீண்டும் அடைந்த போது, இந்நிலையங்கள், மிகக் கடுமையானதும் வஞ்சனையானதுமாகிய தாக்குதல்களுக்கு உட்படுத்தப்பட்டன. நாகரிகவுலகில், பிரதிநிதிகளைக் கொண்ட நிலையங்கள், ஒவ்வொரு நாட்டிலும், எவ்வுருவத்திலாவது வெற்றி பெற்றுத் திகழும் என்பது ஒருவராலும் அக்காலத்தில் முன் கூட்டிச் சொல்ல இயலாதாயிற்று. எதிர் காலத்தில் கட்டுப்பாடற்ற முடியாட்சியே நிலைபெறும் எனத் தோன்றியது.

## மன்னரும் நடுத்தர வகுப்பினரும்

நாம் முன்னர்க் கூறியவாறே மன்னரே அரசாங்கத்தின் மையமாயிருந்தார். உயர்நீதி மன்றங்கள் மன்னர் அதிகாரத்தை ஏற்குமாறு கட்டாயப்படுத்தப்பட்டன. பிரெஞ்சு முப்பேராயம் கூட்டப்படவில்லை. எங்கணும் மாநில, நகர ஆட்சி நிலையங்கள், முடியாட்சியின் நேர்முகக் கட்டுப்பாட்டின்கீழ் வந்தன. மன்னரின் ஆலோசனைக் குழுவே துரைத்தனத்தின் முக்கியப் பொறியாய் விளங்கியது. இவ்வாலோசனைக் குழுவினின்றும் தோன்றிய சிறு குழுக்கள் அரசாங்கத்தின் பல்வேறு துறைகளை இயக்கின. இக்குழுக்களில் பெரும்பகுதி உயர் குடிப்பிறந்தோரல்லாத நடுத்தர வகுப்பைச் சார்ந்தவர்களால் உருவாக்கப்பெற்றிருந்தன. அரசரின் கொள்கையில் இது ஒரு திட்டவட்டமான பகுதியாயிருந்தது. 'எந்தப் பிரிவிலிருந்து அமைச்சர்களை நான் தேர்வு செய்கிறேனோ, அதைக் கொண்டே அவர்களுடன் அதிகாரத்-

தைப் பகிர்ந்துகொள்ள நான் விரும்பவில்லையென்பதை முதலில் மக்கள் நன்கறியட்டும்,' என்று அரசர் எழுதியுள்ளார். மன்னரின் ஆலோசனைக் குழுவிலேதான் ஆட்சி பற்றிய பெருமுடிவுகள் செய்யப் பட்டன. இம்முடிவுகளை நிறைவேற்றும் பொறுப்பு, மன்னரின் பல் வேறு செயலாண்மையாளரிடம்—குறிப்பாக இன்டென்டண்டு களிடம்—ஒப்படைக்கப்பெற்றது. அவர்களைப் பற்றி முன் அதி காரத்திற் கூறப்பட்டுள்ளது.

## மோலியர்

பிரான்சிற்கு இது மிக்க சிறப்பு வாய்ந்த ஒளி மிளிரும் காலமாகும். எல்லாத் துறைகளிலும், மிக்க புகழ் வாய்ந்தவர்கள் இக்காலத்திலே தோன்றினுர்கள். அவரது ஆட்சியின் புகழ், சிறந்த எழுத்தாளர்களின் படைப்புக்களில் பிரதிபலிக்கிறது. அவர்களுட்பலர், மன்னரது பேரவை யில் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். பிரெஞ்சு நாடக வரலாற்றில் மிக்கபுகழ் வாய்ந்தவர்களான கார்னீலி,[1] ரேஸீன்,[2] மோலியர்[3] என்னும் மூவரும் அவர் காலத்தில் வாழ்ந்தவரேயாவர். எனினும், இம்மூவருள் கார்னீலி பதினுன்காம் லூயியின் ஆட்சிக்கு முன்னதாகவே மிக முக்கியமான நூலைப் படைத்தவராவர். அவர் இன்பியல் நாடக ஆசிரியரான மோலியருடன் நட்புப் பாராட்டியதோடு குருமார்களுடையதும், அவையினருடையதுமான தாக்குதலினின்றும் அவருக்கு ஆதரவளித்தார். அக்காலத்து நாடகக் கலையில், சிறப்பாக மோலியரின் இன்பியல் நாடகங்கள், அரசவையின் பாங்கையும் நேர்த்தியான நாடகங்களைக் கண்டு சுவைக்கக் கூடிய நுண்ணறி வையும் பற்றிக் கவர்ச்சிகரமாக நமக்கு அளிக்கின்றன. இலக்கியத்தில் ஒவ்வொரு துறையிலும் மிக்க புகழ் வாய்ந்தவர் இருந்தனர். டெஸ் கார்ட்ஸம்,[4] பாஸ்கலும்[5] தத்துவ சாத்திரத்திலும், பாஸரயட்டும்,[6] னிலனும்[7] சமய சித்தாந்தத்திலும் தலை சிறந்தவராவர். அக்காலத்தில் தோன்றிய பலரது வாழ்க்கைக் குறிப்புக்கள், அவரது ஆட்சியின் சிறப்புக் கூறுயமைந்தன.

## சைமன்

அக்காலத்தில் எழுதப் பெற்றனவும், ஆனுல் வெளி வாராதனவு மான செயின்டு சைமன் என்பாரின் குறிப்புக்கள் மிக்க புகழ் பெற்றவை. அவர் மன்னரின் வரம்பின்மையாட்சியை மிகக் கடுமையாக எதிர்த்த துடன், உயர்குடியினரின் உரிமைகளையும், போலிக் கௌரவத்தையும் வன்மையாக ஆதரிப்பவராயுமிருந்தார்; அவர் காலத்துக் கதைகளைப்

[1] Corneille. [2] Racine. [3] Moliere. [4] Descartes. [5] Pascal. [6] Bossuet. [7] Fenelon.

பற்றியும் எழுதியுள்ளார். அவை, மன்னரையும் அவருடைய அவைக் களத்தையும் பற்றியவையாகும். இக்கூற்றுக்களைப் பற்றிய பல ஐயப் பாடுகள் ஆய்ந்து தெளிய வேண்டுபவை. எனினும், பதினான்காம் லூயியின் அவைக்களம் நேர்மையற்றும், நெறி பிறழ்ந்தும், நற்சுவை யற்றுப் பொலிவிழந்தும் காணப்பட்டது.

## கோண்டே, டுரீனி, வாபான், லூவாய்

பொது வாழ்க்கையில், பாராட்டுதலுக்குரிய முறையில் பலர் மன்னருக்குத் தொண்டு புரிந்தனர். மன்னர் கடந்த சகாத் தத்திலிருந்தே தலைசிறந்த போர்ப்படைத் தலைவர்களை உரிமையாகப் பெற்றிருந்தார். கோண்டேயும், டுரீனியும் செல்வாக்கில் உச்ச நிலையைப் பெற்றிருந்தனர். மேற்கு ஐரோப்பாவில் அவர்கட்கு நிகராக வேறு எந்தத் திறமை வாய்ந்த படைத்தலைவருமில்லை. வாபான்[1] என்பவரையும் அவர்களோடு சேர்த்துக் குறிப்பிட வேண்டும். அவர், பெரும்புகழ் பெற்ற பொறியியல் வல்லுநர். மேற்கூறப்பட்ட இரு இராணுவத் தலைவர்களையும் போன்று, அவரது இராணுவசேவையும் சிறப்புற்று விளங்கியது. மன்னருடைய ஆட்சி முடிவதற்குள்ளாகவே, அவருடைய அழிவை விளைவிக்கும் கொள்கையைத் தடுத்தது வாயி லாகத் தமது தைரியத்தையும் நாட்டுப் பற்றையும் நன்கு வெளிப் படுத்தினர். படைகளைத் திறமையாக நடத்திச் சென்றதிலும் போரிடு வதிலும் மன்னருக்குச் சிறந்த உதவி செய்தவர்களான கோண்டே, டுரீனி, வாபான் என்பாரைப் போன்று, லூவாய்[2] என்பார், மன்னரின் போரமைச்சராயிருந்தார். அவர் கொடுந்தன்மையும், மற்றவர்களை யடக்கும் இயல்பும் பெற்றிருந்தார். ஆட்சியில் அவரது செல்வாக்குத் தீமை பயப்பதாயிருந்தது. எனினும், அவர் படைகளுக்கு ஏற்ற துணைச் சாதனங்களைக் கவனித்து நிறைவுறச் செய்வதிலும், போர் அமைச்சர் என்ற முறையில் செய்யவேண்டிய பணிகளைச் செய்வதிலும் ஐரோப் பாவில் நிகரற்று விளங்கினர்.

## பிரான்சின் பேராதிக்கம்

### கோல்பர்ட்டு

பதினான்காம் லூயி, பிரான்சின் அரியணையேறியபோது நாட்டின் புகழ் உச்ச நிலையிலிருந்தது; ஐரோப்பாவில்தனித்த எந்நாடும் பிரான்சு டன் போட்டியிட இயலாத நிலையில் இருந்ததுடன், மாபெருங்கூட்டர சாங்கங்களையும் தகர்த்தெறியக் கூடிய வன்மை பெற்றிருந்தது. ஆனால், நாட்டின் நிதி நிலைமை சீரழிந்து, வருந்தக்கூடிய குழப்ப

[1] Vauban. [2] Louvois.

நிலையிலிருந்தது. நிதி அமைச்சரான ஃபோக்குவே[1] கடந்த போருக்குத் தேவையானவைகளைப் பெறுவற்குத் திறமையாக வழி வகுத்திருந்தார் என்றுலும், நேர்மையற்ற வழிகளில் அளவற்ற பொருள்களைத் திரட்டினுரென்பது நம்பப்பட்டது. அரசாங்கத்தில் அவருக்கு வலிமை அதிகமாயிருந்ததாலும், ஆதரவாளர்கள் அதிகமாயிருந்ததாலும், பதவியினின்றும் அவரை விலக்க இயலவில்லை. மன்னரே தம் அமைச்சருக்கு எதிராகக் கலகத்தைக் கிளப்ப வேண்டியதாயிற்று. இறுதியில் ஃபோக்குவே பதவியினின்றும் நீக்கப்பட்டு, வாணுள் முழுவதும் சிறையிலிடப்பட்டார். நிதித் தொடர்பான நிருவாகம், கோல்பர்ட்டு என்பாரிடம் ஒப்படைக்கப்பட்டது. மன்னரின் ஆட்சியில் அவர் மிக்க புகழ் பெற்றவர்களுள் ஒருவராவர். அவரைக்காட்டிலும், கடமையுணர்ச்சியும் திறமையும் கொண்ட மற்றேர் அமைச்சர் பிரான்சிற்கு ஏற்படட்டதில்லை. அவர் மசாரின்கீழ்ப் பணி புரிந்தவர்; அவருக்கு வாரிசாகப் பரிந்துரைக்கப் பெற்றவர். நடுத்தர வகுப்பைச் சேர்ந்த அவரிடம் சமூகத்தில் காணப்படும் பேராவலோ, கருத்தைக் கவரக்கூடிய பொலிவோ இல்லை. அவர் பிரான்சின் நிதி நிலையைச் சீரமைப்பதில் எவற்றுலும் அடக்க முடியாத ஆற்றலைக் கொண்டிறுங்கிஞர். ஒரு வேலையை விட்டு மற்றென்றைக் கவனிப்பதுதான் அவருக்கு ஓய்வு என்பது கூறப்பட்டது. அவர் தம் நாளிலேயே பிரான்சின் செல்வநிலையை மிகச் சாதகமான நிலையில் அமைத்தார். அவர் செய்த பணி மிக முக்கியமானதால், அதைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுவோம் :

## வரி வசூலை மேற்பார்வையிடல்

### தொழிற்சாலைகளின் வளர்ச்சியும் பாதுகாப்பும்

முதலில், அவர் வரிகளை வசூலிப்பதிலும், அவற்றைக் கண்காணிப்பதிலும் கவனத்தைச் செலுத்திஞர்; கொள்கையில், மாறுதலாக ஒன்றையும் தோற்றுவிக்கவில்லை; வரிகளைப் பொறுத்த வரை, புதிய வரிகளை விதிக்கவில்லை; ஏற்கனவே வசூலித்ததைப் போன்றே வசூலித்தார்; ஆனல், கடுமையான மேற்பார்வை வாயிலாக நேர்மையற்ற வழிகளில் பொருள் திரட்டிய அரசாங்க ஊழியர்களுக்குக் கண்ணேட்டமின்றிக் கடுந்தண்டனை விதித்தார்; இது காரணமாக நாட்டிற்கு ஏற்பட்ட இழப்பைப் பெரிதும் குறைத்தார்; அதே சமயத்தில், அதற்கு முன்பிருந்ததைவிட நாட்டின் வரி வசூல் வாயிலாகக் கிடைத்த வருவாயும் பெருகியது. வரி வசூலிப்பதைக் கடுமையாக மேற்பார்வை செய்வதால் மட்டும் அவர் மனநிறைவு பெறவில்லை. பிரான்சின் செல்வ நிலையை வளப்படுத்தப் புதியமூலங்களைக் காண விரும்பிஞர்.

[1] Fouquet.

இது வரையில், பிரான்சு ஆலைத் தொழிலில் சிறந்து விளங்கவில்லை. அண்டை நாடுகளிலிருந்து உருவாக்கப்பட்ட பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டன. கோல்பர்ட்டு இந்நிலைமையை மாற்றக் கருதினார். காலுறைகள் செய்தல், நெய்தல், நூல் நூற்றல், கண்ணாடிச் சாமான்கள் செய்தல் போன்ற பல தொழில்களை மக்களுக்குக் கற்பிப்பதற்காகத் தொழிலாளர்களை இங்கிலாந்து, ஹாலந்து, இத்தாலி முதலிய நாடுகளிலிருந்து வருமாறு தூண்டினார்; பிரான்சில் இத் தொழில்கள் நிலையாக ஏற்பட்டவுடன், வெளி நாட்டுச் சாமான்களின் போட்டியைத் தவிர்க்க அப்பொருள்களின்மீது அதிகப் பாதுகாப்பு வரியை விதித்தார். அதே சமயத்தில் அவர் செயலிகள்[1] வாயிலாக நாட்டில் உற்பத்தி முறைகளை மேற்பார்வையிட்டார். அவர் பணிகளில் இது மிகு புகழ் பெற்றதுடன், சில நாடுகளில் 'கோல்பர்ட்டிசம்'[2] எனும்சொல் 'பாதுகாப்பு வரி' என்னும் சொல்லுக்கு இணையாய் இலங்கியது. இவ்வாறு நிறுவப்பட்ட தொழிற்சாலைகளில் சில, நாளடைவில் மறைந்தன; மற்றவை, நாட்டின் வருவாயைப் பெருக்குவதில் நிலையான இடம் பெற்றிருந்தன.

## வியாபாரக் கம்பெனிகள்

கப்பற்படை

அதே சமயத்தில், அவர் உள்நாட்டு வியாபாரத்தையும் வெளி நாட்டு வாணிகத்தையும் ஊக்குவித்தார். ஐரோப்பாவின் கடல் கடந்த வாணிகம் இவ்வமயத்தில் முக்கியமாக இங்கிலாந்து, ஹாலந்து போன்ற நாடுகளைச் சார்ந்திருந்தது. இந்நாடுகளிலும் உரிமைப் பத்திரம் வழங்கப்பட்ட கம்பெனிகள்[3] பகர ஆள்கள் மூலமாக வாணிகத்தை நடத்தின. இதே முறைகளைப் பின்பற்றுவதால் இதே பயன் பிரான்சிற்கும் கிடைக்க வேண்டுமென முடிவு செய்தார். எனவே, பால்டிக்குப் பிரதேசம், மத்தியதரைக் கடற்பிரதேசம், இந்தியக் கடற் பகுதி, அமெரிக்கா முதலிய நாடுகளுடன் வாணிகம் செய்வதற்காகக் கம்பெனிகளைத் தோற்றுவித்தார். இதிலும் சில கம்பெனிகளே நெடு நாள் தொடர்ந்து வேலை செய்தன என்றாலும், அவருடைய ஆட்சிக் காலத்தில், பிரான்சின் வாணிக அளவு பெருகிற்று என்பதில் ஐயமில்லை. இது மட்டுமன்று. நற்சாலைகளும் அமைக்கப்பட்டன; கால்வாய்கள் வெட்டப்பட்டன; கப்பல் கட்டும் தொழில் போன்றவை மிகுதியாக முன்னேறின; பிரான்சும், இங்கிலாந்தைப் போலவே, தொழில், வாணிகம் முதலிய நோக்கங்களை அதன் முக்கியக் குறிக்கோளாகக் கொண்ட வாழ்க்கையை மேற்கொள்ளும் போலத் தோன்றியது. அவர்,

[1] Agents. [2] Colbertism. [3] Chartered Companies.

இங்கிலாந்து, ஹாலந்து ஆகிய நாடுகள் வைத்திருந்த கப்பற்படையைப் போலத் தம் நாட்டிலும் அமைக்க ஆர்வம் கொண்டார்.

## பதினான்காம் லூயியின் போர்கள்

பதினான்காம் லூயி ஆட்சியின் முற்பகுதியில், மக்களின் மதிப்புப் பெற்ற பல பகுதிகள் இருந்தன. நடுவுநிலை நீதி வழங்கப்பட்டது. சட்டம் விதித்த தண்டனைகளிலிருந்து உயர்குடி மக்களுக்கு விலக்கு அளிக்கப்படவில்லை. பிரெஞ்சு மக்களில் பெரும்பான்மையோர் அவரது ஆட்சியை ஆர்வத்துடன் உண்மையில் ஏற்றுக்கொண்டனர் என்பது பற்றி ஐயமில்லை. ஆயினும், மக்களுக்கு மனநிறைவையளித்து வந்த ஆட்சி சிறிது காலந்தான் நீடித்திருந்தது. ஏனெனில், அவர் விரைவிலேயே தொடர்ச்சியான போரிலீடுபட்டார். அப்போர்கள் தொடக்கத்தில் வெற்றியை விளைத்தபோதிலும், அவருக்கு எதிராக, ஐரோப்பிய நேச நாடுகளின் சேர்க்கையைத் தூண்டின. இறுதியில், ஐரோப்பிய நாடுகளின் எதிர்ப்பின் துன்புறுத்தலின் விளைவாக, பிரான்சில் நிதி நிலைமை தளர்ச்சியுற்றதால், மன்னரின் ஆட்சிச் சிறப்புக்கள் மக்களின் மதிப்பையிழந்து பேரிடருக்குள்ளாகின.

## உரிமை பற்றிய போர்

முக்கூட்டு

இப்போர்களுள் முதற்போர், உரிமையைப்[1] பற்றிய போர் அல்லது அரசியாரின் போர்[2] எனப்படுவதாகும். பதினான்காம் லூயி, ஸ்பெயின் இளவரசியாரான மேரியா தெரிசாவை மணந்தபோது, மனைவியாரென்ற முறையில், ஸ்பெயினின் முடிக்கு அல்லது ஸ்பெயின் நாட்டில் எப்பகுதிக்கும் உரிமை கொண்டாடுவது இல்லை என வாக்குறுதி செய்ததை முன்பு கண்டோம். ஆனால், 1665-ல் ஸ்பெயின் மன்னராகிய நான்காம் பிலிப்பு இறந்தவுடன், பதினான்காம் லூயி தம் மனைவியாருக்காக நெதர்லாந்தில் ஸ்பெயினுக்குச் சொந்தமாயிருந்த நிலப்பகுதிகளில் ஒரு பகுதிக்கு உடனடியாக உரிமை பாராட்டினார்; பிரனீஸ் உடன்படிக்கைப்படி சீதனப் பணம் அவருக்குக் கொடுக்கப்படாமலிருந்ததால், அவர் அளித்த வாக்குறுதியும் செல்லத்தக்கதன்று என்றுரைத்தார்; அதனுடன் நெதர்லாந்தில் வாரிசுரிமை புதுமை வாய்ந்ததென்றும் அறிவித்தார். அந்நாட்டு முறைப்படி, ஆண் வாரிசு இல்லாத போது மன்னரின் இரண்டாம் திருமணத்தினால் பிறந்த மகனைக்காட்டிலும் முதலாம் திருமணத்தினால் பிறந்த மகளுக்கே நாடு வாரிசு முறையில் உரியது; எனவே, ஸ்பெயின் மன்னரும் அவர்

[1] War of Devolution. [2] War of the Queen.

மனைவியாரின் ஒன்று விட்ட உடன் பிறந்தவருமாகிய இரண்டாம் சார்லசைக்காட்டிலும் அவர் மனைவியார் முதலுரிமை பெற்றார் என்றும் அறிவித்தார். இவ்வுரிமைகள் மறுக்கப்பட்டன. போரும் உடனே மூண்டது. பிரான்சின் படைகளை எதிர்த்துத் தடை செய்ய ஸ்பானியர் முற்றிலும் ஆற்றலில்லாதவராயிருந்தனர். பிரான்சின் படை துணைக் கருவிகளுடன், சிறந்த தலைமையையும் பெற்றிருந்தது. எனவே, விரைவிலேயே ஸ்பெயினுக்குச் சொந்தமான நெதர்லாந்தின்மீது படையெடுத்துச் சென்று வென்று அந்நாட்டினைப் பிரெஞ்சு மன்னரின் ஆட்சிக்குட்படுத்திவிடும் போலத் தோன்றியது. இப்போது திடீரென ஒரு மாற்றம் ஏற்பட்டது. பிரான்சின் வல்லந்தத் தாக்குதல்கள், இது வரையில் தோற்றுவித்ததைப் போன்று ஐரோப்பாவில் அச்சத்தையும் பொறாமையையும் தோற்றுவித்தன. எனவே, இங்கிலாந்து, ஹாலந்து, சுவீடன் ஆகிய மூன்று நாடுகளும் பதினான்காம் லூயியின் முன்னேற்றத்தைத் தடை செய்வதற்கு ஒன்று சேர்ந்தன. இதன் விளைவாக மிகப் பெரிய போர் மூளுவதைத் தடுத்தல் இயலாது போலத் தோன்றியது. ஆனால், எல்லோருக்கும் வியப்பையூட்டும் நிலையில் பதினான்காம் லூயி விட்டுக் கொடுக்கலானார். பிரான்சின் வட வெல்லையில் படைகள் முன்னேறின. ஆயினும், வெற்றி பெற்ற பகுதிகளில் பெரும்பாலானவை ஸ்பெயினிடமே (1668-ல்) திருப்பிக் கொடுக்கப்பட்டன.

## டச்சுக்காரர்களுடன் போர்

### டோவர் இரகசிய உடன்படிக்கை

இதன் பின், பிரான்சில் சிலவாண்டுகள் அமைதி நிலவியது. பின்னர், 1672-ல் ஹாலந்து நாட்டுடன் கொடும் போர் தொடங்கியது. இதற்கான காரணங்களை எளிதிற் காணலாம். டச்சுக்காரர்கள், பிரெஞ்சுக்காரர்களுக்குப் பெரும்போட்டியாயிருந்தார்கள். சமாதானக் கொள்கையுடைய கோல்பர்ட்டு, பிரெஞ்சு வியாபாரத்தின் வளர்ச்சிக்குப் பெருந்தடையாயிருந்த எதிர்ப்பை ஒழித்துக்கட்டுவதற்கு அவர்களுடன் போரை வரவேற்றார். மேலும், ஹாலந்து குடியரசு நாடாயிருந்தது, பிரெஞ்சு மன்னருடைய யதேச்சாதிகார ஆட்சிக்குக் கசப்பை உண்டு பண்ணிற்று. அதனுடன் அரசியல், சமயம் பற்றி நாடு கடத்தப்பட்டவர்களுக்கு ஹாலந்து புகலிடம் கொடுத்தது. பிரெஞ்சு மன்னரின் இயல்புகளையும் கொள்கைகளையும் கண்டித்து எழுதப்பட்ட நூல்கள் அண்மையில் நாட்டில் வெளியிடப்பட்டன. இவையனைத்தையும்விட, 1667-ல் முக்கூட்டின் அடிப்படையில், ஹாலந்து கொண்ட பங்கைப் பதினான்காம் லூயியால் புறக்கணிக்க இயலவில்லை. இக்காரணங்களைக் கொண்டு, சிறியதும் ஆனால் வளர்ச்சியில் முற்போக்குற்றதுமான ஹாலந்து, பிரெஞ்சு மன்னருடைய பேரவாவிற்கு முற்றுப்புள்ளி

வைத்தது போலத் தோன்றியது. வழக்கமான அரசியல் தந்திரத்துடன் பதினான்காம் லூயி போருக்கு ஆயத்தமானார். டோவரில் நிகழ்ந்த இரகசிய உடன்படிக்கை[1] வாயிலாக ஆங்கிலேய அரசர், உதவியை நாடிய பொழுது, பதினான்காம் லூயியின் பக்கத்தில் சேருவதாக உறுதியளித்தார். சுவீடனும், பிரான்சிற்குத் துணை நிற்றற்கு விலை கொள்ளப்பட்டது. 1672-ல் போர் அறிவிப்புச் செய்த போது, தம்முடன் சேர்வதற்குக் கூட்டற்ற நிலையைக் கண்டதோடு, பிரான்சின் தாக்குதலை எதிர்த்து நிற்கவும் இயலாத நிலையில் டச்சுக்காரர் இருந்தனர். பிரெஞ்சுப் படைகள் ரைன் நதியைக் கடந்தன; பட்டணங்களையும் கோட்டைகளையும் கைப்பற்றிக்கொண்டு ஆம்ஸ்டர்டாம் எனும் நகரின் அணிமையை அடைந்தன. பிரெஞ்சுப் படைகளின் முன்னர் டச்சுக்காரர்கள் நாணுறும் நிலையைத் தேடிக் கொண்டார்கள். முற்றிலும் சரணடைவதைத் தவிர, வேறெதையும் லூயி மன்னர் ஏற்றுக்கொள்ளுவதாயில்லை. அந்நிலையும் விரைவில் நிகழும் போலத் தோன்றிற்று.

## ஹாலந்தின் வீழ்ச்சியும் மீட்சியும்

அவ்வமயத்தில், ஒரு பெரிய மாற்றம் நேர்ந்தது. உள் நாட்டில் நிகழ்ந்த ஒரு புரட்சியின் விளைவாக அமைதியாளர் வில்லியத்தின் கொள்ளுப்பேரரும், ஆரஞ்சு நாட்டுத் தலைவருமான வில்லியம், பதவிக்குக் கொண்டுவரப்பட்டார். அமைதியாளர் வில்லியம் ஒரு நூற்றாண்டிற்கு முன்னர்தான், பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சேர்ந்த டச்சுக்காரர்களுக்கு மாபெரும்பணிகளைச் செய்தவர். ஆரஞ்சு நாட்டு வில்லியத்திடம் இராணுவ அரசியல் தந்திர அதிகாரங்கள் வரம்பின்றி ஒப்படைக்கப்பட்டதுடன், மற்றும் இழிநிலையுற்ற நாட்டை அவரது கொள்ளுப்பாட்டனார் காப்பாற்றியது போல இப்பொழுது அந்நாட்டைக் காக்க வேண்டப் பெற்றார். பிற்காலத்தில் இங்கிலாந்தின் மூன்றாம் வில்லியம், இக்கடமையை நிறைவேற்றுவதற்கு உரிய தகுதி வாய்ந்தவராயிருந்தார். அவர் சிறந்த போர் வீரர் அல்லராயினும், ஐரோப்பாவின் தலை சிறந்த அரசியல் தந்திரிகளுள் ஒருவராயிருந்தார்.

## பிரான்சுக்கு எதிரான பெருங்கூட்டு

முதலாவதாக, நாட்டின் கடற்கரையோரத்திலிருந்த அணைகள் வெட்டப்பட்டு, கடல்நீர் நிலவளமுள்ள ஹாலந்து நாட்டின் சமவெளிப் பகுதிகளில் பாய்ச்சப்பட்டது. அவர் திறனுறு பேச்சு வார்த்தைகள் வாயிலாக, பிரெஞ்சுக்கெதிராக நட்புறவை ஏற்படுத்தினார்.

[1] Secret Treaty of Dover.

ஸ்பெயின், ஹாலந்துடன் சேர்ந்தது. ஹாலந்தின் பழம்பகைமையும் பிரெஞ்சுக்காரர்களிடம் நட்பும் கொண்ட பிராண்டன்பர்கு இக்கூட்டில் சேர்ந்தது. பேரரசு, பிரெஞ்சுப் படையெடுப்பை எதிர்க்கத் தயாரா யிருப்பதாய் அறிவித்தது. இவ்வமயத்தில், ஆங்கிலேயர் பதினான்காம் லூயிக்கு வாக்களித்ததற்கு மாறான எதிர்க்கொள்கையை மன்னர்மீது திணிக்கலாயினர். இதன் விளைவாக, ஹாலந்தைத் தாக்குவதை விடுத்து இங்கிலாந்து பின்னிட்டு, பிரெஞ்சுப் படைகட்கு எதிராக விரைவில் டச்சுக்காரர்களுடன் ஒத்துழைத்தது. இதைத் தொடர்ந்து நிகழ்ந்த போரில்—விவரங்களை இங்குக் காண இயலாது—பிரெஞ்சுப்படைகள், ஐரோப்பியப் படைகளைவிட மேலானவை என் பதனை நிலைநாட்டின. 1678-ல் நிமீகுன்[1] சமாதானம் ஏற்பட்டபொழுது பிரான்சு கணிசமான நலன்கட்கு உரிமைகொண்டாடியது. அதன் வட பாகத்திலுள்ள நிலப்பகுதிகளில் சில சலுகைகள் பிரான்சிற்குக் கிடைத்தன. எல்லாவற்றையும்விட, கிழக்கு எல்லையிலிருந்த பிரெஞ்சு-கம்ப்டே என்னும் மாவட்டத்தைப் பிரான்சிற்கு ஸ்பெயின் விட்டுக் கொடுத்தது. தாம் விரும்பியவாறு பிரான்சு வெற்றிபெருவிட்டாலும், அதன் வெற்றிகள் கணிசமான அளவில் அதன் மதிப்பைக்குறைக்காத வாறு இருந்தன.

## மறு சேர்க்கைகள்

போரில் வென்றுகொண்டவற்றைக்காட்டிலும் சமாதானத்தின் போது கிட்டிய நிலப்பகுதிகள் மிகுதியாய் இருந்தமையின், அவை முன்னைய வெற்றிகளை மறைத்தன. இவைகளே புகழ்பெற்ற 'மறு சேர்க்கை'களாகும்.[2] இதை அறிந்துகொள்ளுதற்கு நாம் வெஸ்டு பேலியாச் சமாதானத்தை நினைவுகூர வேண்டும். அவ்வுடன் படிக்கையினால் ஆல்ஸைஸ், லோரைன் எனும் நிலப்பகுதிகளில் சில மாவட்டங்கள் பிரான்சினிடம் அவற்றுக்குரிய உரிமைகளுடனும் நிலங்களுடனும் ஒப்படைக்கப்பட்டிருந்தன. இதிற்காணப்பட்ட 'உரிமைகள்' எவை என்பது தெளிவுறுத்தப்படவில்லை. போரினால் ஐரோப்பா தளர்ச்சியுற்று சலித்துப்போயிருந்த சமயத்திலும், உண்மையில் சமாதானத்தை விரும்பி ஓய்வை எதிர்நோக்கியிருந்த தருணத்திலும் இச்சொற்களைப்பற்றி ஒருதலையான விசாரணை நடத்த லூயி தீர்மானித்தார்; விசாரணைக்காக ஒரு நீதிமன்றத்தை ஏற்படுத்தித் தம் உரிமைகளை அதன் முன்னர் வைத்தார். எனவே, இவ்வழக்கில் அவரே நடுவராயும் வாதியாயும் இருந்தார். சட்டப்படி நீதியென்று நுண்ணிய தோற்றத்தைத் துணையாகக் கொண்ட முறையால் ஆல்செயிஸ் பகுதியிலுள்ள பெரிய மாவட்டங்கள் அவரைச் சார்ந்தன என்பது தீர்மானிக்கப்பட்டது.

[1] Peace of Nimeguen. [2] Reunions.

## ஸ்ட்ராஸ்பர்கு, கசாலே, லக்ஸம்பர்கு கைப்பற்றுதல்

இத்தீர்ப்பில் ஜெர்மன் நகரமான ஸ்ட்ராஸ்பர்கும் சேர்ந்திருந்தது. அதேபோல நீதியற்ற முறைப்படியே வடக்கில் லக்ஸம்பர்கையும் பெற்றார்; இத்தாலியில் ஆல்ப்சு மலைகட்கு அப்பாலிருந்த கசாலேயையும்[1] பெற்றார். இவ்வாறு கிடைத்த இடங்களெல்லாம் தனித்தனி சிறப்பு வாய்ந்தவையாயின; அதனுடன் மேற்கொண்டு படையெடுப்புக்களுக்கு வழிவகுக்கும் விதத்திலும் மிக முக்கியமாயின. நாடுகளைத் தம் வயப்படுத்திக்கொண்டதையும், அதற்காகப் பின்பற்றிய முறைகளையும் கண்டு ஜெர்மனி சீற்றமுற்றது. இவற்றைச் சீர்தூக்கிப் பார்ப்பதற்காக 1684 - ல் ராட்டிஸ்பன் எனுமிடத்தில் ஜெர்மானிய 'டயட்' சபை கூட்டப்பட்டது. இச்சபை ஐரோப்பாவில் பிரான்சு அடைந்திருந்த உயர்நிலையைத் தெள்ளத் தெளிவாக வெளிக் கொணர்ந்தது. இச்சபைக்கு லூயி, தாம் வெற்றிகொண்ட நாடுகளனைத்தும் தம்மிடமே இருபது ஆண்டு விட்டு வைக்கப்படவேண்டும் என்றும், இதற்கு இணங்காவிடில் போர் மூளும் என்றும், இறுதி எச்சரிக்கை விடுத்தார். அவை, தனது மதிப்பிற்குக் குறைபாடு ஏற்படும் எனக்கருதி ஏற்றுக்கொள்ளத் தயங்கியது; ஆனால், இறுதியில் அவருடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்தது. 1684ஆம் ஆண்டும் ராட்டிஸ்பனில் கூடிய 'டயட்' சபையில் மரியாதைக் குறைவுடன் பெற்ற வெற்றியும் பதினான்காம் லூயியின் அதிகாரத்தில் உச்சநிலையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். இது முதற்கொண்டு பிரான்சின் அதிகாரம் குறைதற்பொருட்டே மாற்றம் நிகழ்ந்தது. சிறிது காலத்திற்குள்ளாகவே லூயி மற்றொரு தொடர்ந்த போரில் இறங்கினார். வேறு வழியின்றிப் போரிட்டதன் பயனாக வெற்றி கிடைத்த போதிலும் நாளடைவில் இவ்வெற்றிகள் தோல்விகளாகவே முடிவுற்றன.

## ஆட்சியில் சமய வரலாறு

### காலிகன் உரிமைகள் பற்றிய அறிக்கை

இப்பேரரசருடைய ஆட்சியின் பிற்பகுதி, தொடக்கக் காலத்தில் பெற்ற வெற்றிகளுக்கு மாறான தன்மையைக் கொண்டதாகும். இம் மாறுதலுக்கான காரணங்களை நாம் இங்குக் கருதுவோமாக: முதலாவதாக, ஆட்சியில் சமய வரலாற்றைக் கண்ணுங்கருத்துமாக அறிந்து கொள்வது நன்மை பயப்பதாகும். மன்னருடைய இளமை வாழ்க்கையில் கட்டுப்பாடற்ற செயல்கள் நிறைந்திருந்தன. சமயம் அவருடைய

[1] Casale.

ஒழுக்கத்தில் எவ்விதச் செல்வாக்கையும் பெறவில்லை. அவர் பிரான் சில் அரசியல் விவகாரங்களுடன் சமய விவகாரங்களிலும் தலைவராய் இருக்க உறுதி கொண்டிருந்தார்; எல்லாச் சமய அதிகாரிகளுக்கும் எதிராக மன்னரின் அதிகாரத்தை வெற்றியுடன் நிலைபெறச் செய்தார்; அதனுடன் போப்பாண்டவருடன் ஏற்பட்ட சச்சரவின் விளைவாக 1682-ல் காலிகன் உரிமைகள் [1] எனப்படும் உரிமைகளைப் பற்றியும் அறிக்கை விடுத்தார். இவ்வுரிமைகள் பிரான்சில் காணப்படும் ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையின் சிறப்புரிமைகளைப் பற்றியனவாகும். புகழ் பெற்ற இவ்வறிக்கையில் போப்பாண்டவரின் அதிகாரம் சமயத் தொடர்புள்ளவற்றிற்கு மட்டும் செல்லுதற்குரியது என்பது வரை யறுக்கப்பட்டிருந்தது. மேலும், மன்னரது அதிகாரம், எக்காரணத்தைக் கொண்டும் போப்பாண்டவரின் அதிகாரத்திற்கு உட்பட்டதன்று என்றும், மன்னரைப் பதவி நீக்கம் செய்யவோ, அன்றி மன்னருக்குக் கீழ்ப்படிந்துள்ள மக்களை அவருக்கு எதிராகத் தூண்டவோ போப் பாண்டவருக்கு அதிகாரம் இல்லை என்றும் அவ்வறிக்கை கூறிற்று. அவ்வறிக்கையின் மற்றொரு பகுதியில் திருச்சபையின்மீது போப் பாண்டவர் செலுத்தும் அதிகாரம் திருச்சபையால் உறுதிப்படுத்தப் பட்டாலன்றி, முடிவானதாகாது என்பதும் அறிவிக்கப்பட்டிருந்தது. போப்பாண்டவர் இதை எதிர்த்தும் பயனில்லை. பதினான்காம் லூயி செருக்கினால் விவகாரத்தை முடிவு செய்துவிட்டார். சமயத்தில் போப் பாண்டவருக்கு எதிராக லூயி நடந்ததாகத் தோன்றிய போதிலும் சமயக் கொள்கைகளில் பிரான்சில் வைதிக சமயத்தின் ஆட்சியை எதிர்த்தவர்களை எதிர்த்து வைதிக சமயத்தை மேலோங்கச் செய்தார்.

## ஜேன்ஸனியம்

கத்தோலிக்கத் திருச்சபையின் வரம்பிற்குள் ஒரு சமய இயக்கம் தோன்றியது. ஈப்பிரஸ் மேற்றிராணியாரான ஜேன்ஸன் [2] என்பார் இதற்குக் காரணமாய் இருந்தது பற்றி இவ்வியக்கத்திற்குச் 'ஜேன் ஸனியம்' [3] எனப் பெயர் வழங்கலாயிற்று. இதைச் சேர்ந்த முக்கியப் பிரதிநிதிகள் தங்கள் கருத்துக்களை அவரது நூல்களிலிருந்து உருவாக் கினார்கள். இதிற் சேர்ந்தோரனைவரும் கத்தோலிக்கத் திருச்சபையை ஏற்றனர்; பத்தியுடனும், உள்ளன்புடனும், பின்பற்றுகிறவர்கள் என அறிவித்ததுடன், கோட்பாட்டிலும் சடங்குகளிலும் கத்தோலிக்கத்தி லிருந்து மாறிச்செல்கிறவர்கள் அல்லர் என்பதனையும் திண்மையாக எடுத்துரைத்தனர். ஆனால், பிரெஞ்சுக் கத்தோலிக்கர்கள் பின்பற்றி யதை விட மாற்றத்தை ஏற்காததும் தூய்மையானதுமான வாழ்க்கை நெறியை வகுப்பதைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். இதற்குத்

[1] Callican Liberties. [2] Jansen the Bishop of Ypres.
[3] Jansenism.

துணையாகப் பிற்காலத்தில் எழுந்த மரபுகளையும் வளர்ச்சியையும் விட, பழங்காலத்தில் வழங்கிய கத்தோலிக்க முறைகளையும், விவிலிய நூலையும் மேற்கோளாகக் கொள்ளப் பெரிதும் விருப்பங் கொண்டிருந்தனர். புகழ் வாய்ந்த பலர் இதில் சேர்ந்தது வாயிலாக இவ்வியக்கம் பெரும்புகழ் எய்திற்று. ரேஸீன் இதிற்சேர்ந்ததுடன் இதன் செல்வாக்கினால் தூண்டப்பட்டு மிக அழகிய நூல்களையும் எழுதினார். சிறந்த அறிவியல் அறிஞரும், தத்துவ ஆசிரியருமான பாஸ்கல் என்பாரும் இவ்வியக்கத்தின் அறிவுச் சுடராய் அமைந்தார். இவ்வியக்கத்தைப் போப்பாண்டவரின் அதிகாரத்திற்கும் தம்மதிகாரத்திற்கும் எதிரான தாக்குதலாக லூயி கருதினார். இப்புதிய இயக்கத்தைக் கண்டித்துப் போப்பாண்டவரின் ஆணைகள் பல பிறப்பிக்கப்பட்டன. மன்னரும் இதை ஒழிக்கத் தம்மதிகாரத்தைப் பயன் படுத்தினார். இவ்வாறு மன்னர் செய்யாதிருந்தால், இவ்வியக்கம் பிரான்சின் வலிமையும் வாழ்க்கையும் வளமுறத் துணை புரிந்திருக்கும். கத்தோலிக்கத் திருச்சபையின் அதிகாரமும் எவ்விதத்திலும் அச்சுறுத்தப்பட்டிராது.

## ஹியூக்நோக்கள்

டி மெய்ன்டினன் அம்மையார்

இதைவிடப் பிராட்டஸ்டென்டுகளை மன்னர் எவ்வாறு நடத்தினார் என்பது மிக முக்கியமானதாகும். இங்கும் உரிமையை மன்னரது வரம்பின்மை யாட்சி அழித்தது. இவ்வாறு செய்தது மன்னராட்சியின் வலிமைக்கு அழிவைத் தேடியதோடு ஆட்சியின் அடிப்படையையே தகர்ப்பதாயும் அமைவதாயிற்று. நான்காம் ஹென்றி, ரிச்சிலூ என்பவர்கள் காலத்தில் இருந்ததைப் போன்று பிரெஞ்சுப் பிராட்டஸ்டென்டுகள் வலிமை பெற்றிருக்கவில்லை. அவர்களது எண்ணிக்கையும் குறைந்துவிட்டது; அவர்களுக்குச் சமூகத்திலிருந்த மதிப்பும் குறைந்துவிட்டது. உயர்குடிப் பிறந்தாரோடு கொண்டிருந்த அவர்களது தொடர்பும் பெரும்பாலும் மறைந்து விட்டது. அரசரிடம் பற்றின்மை அவர்களிடம் காணப்படவில்லை எனினும், பிராண்டேக் கலகத்தின் போது அவர்கள் பங்கு கொள்ளாது தனித்திருந்தார்கள். பெரும் பகுதியினர் வாணிகம் போன்ற துறைகளில் பேரூக்கம் கொண்டவராய் இருந்தனர். கோல்பர்ட்டிற்கு அவர்கள் உதவி செய்ததைப் போன்று பிரெஞ்சு மக்களுள் வேறு எப்பகுதியினரும் அவருக்கு உதவி புரிந்ததில்லை. பதினான்காம் லூயியின் ஆட்சித் தொடக்கத்தில் அவர்களுடைய சிறப்புரிமைகளை அடக்கி ஒடுக்க வேண்டும் என்ற எண்ணம் நெடுநாளாய் இருந்த போதிலும், மன்னர் தலையிடவில்லை. ஆட்சியின் பிற்பகுதியிலேதான் அவர் கவனம் சமயத்துறைகளிற் கடுமையாகத் திரும்பியது. இவ்விஷயத்தில் டி மெயின்டினன்[1] எனும் அம்மையாரின்

1. Madame de Maintenon.

ஆதிக்கம் காரணமாயிருந்தது. முதலில் மன்னரது முறையற்ற குழந்தைகளைப்பேணும் செவிலியராய் இருந்த அவர், மன்னரின் மனைவியாரான மேரியா தெரிசாவினது மரணத்திற்குப் பின் மனைவியாரானுர். இப்பொழுது மன்னருக்குச் சமயத்தில் உண்மையான ஆழ்ந்த பற்று ஏற்பட்டது. எனவே, பிராட்டடஸ்டென்டு சமயத்தை மன்னரது அதிகாரத்திற்கு நேர்ந்த அவமதிப்பாக எண்ணியதுடன் அடியோடு அழிக்க வேண்டிய பாசண்டச் சமயமாகவும் அதனைக் கருதினுர். மன்னரின் திட்டங்களுக்குப் பிரெஞ்சு திருச்சபைத் தலைவர்கள் ஊக்கமளித்தார்கள். மன்னருடைய கொடுஞ்செயல்களை எடுத்துக் கூறுவது வாயிலாக, பாசுவே என்பார் புகழ்பெற்றுர். முதலாவதாகப் பிராட்டடஸ்டென்டுகளின் சிறப்புரிமைகள் தணிக்கை செய்யப்பட்டுக் குறைக்கப்பட்டன. அவர்கள்மீது கடுமையான கண்காணிப்பும் ஏற்பட்டது. சிறு காரணங்களைக் கொண்டு அவர்களது திருக்கோயில்கள் அழிக்கப்பட்டன. போலிக் காரணங்களைக் கொண்டு அவர்கள் குழந்தைகளும் சொத்துக்களும் பறிமுதல் செய்யப்பட்டன. நாற்புறமும் சூழ்ந்து வலை வீசப்பட்டு வேட்டையாடப்படும் விலங்குகளைப் போன்று அவர்கள் இருந்தார்கள். கையூட்டு, கொடுமையான வற்புறுத்தல் முதலியவைகளால் பலர் கத்தோலிக்கர்களாக மாறும்படி விரட்டப்பட்டனர். இலஞ்சம் கொடுமை இவற்றுள் ஏதாவது ஒன்றற்குப் பலர் கீழ்ப்படிய நேர்ந்தது.

## நான்டீஸ் ஆணைகள் திரும்பப் பெறுதல்

### அதன் பயன்கள்

இறுதியாக 1685 - ல் பிராட்டடஸ்டென்டுகளுட் பெரும் பான்மையோர் கத்தோலிக்கத் திருச்சபையைச் சேர்ந்தனர். எனவே, நிலையாகக் கருதப்பட்ட நான்டீஸ் கட்டளைகள் மன்னரைக் கட்டுப் படுத்தியவையாகவில்லை. எனவே, இக்கட்டளைகள் திரும்பப் பெறப் பட்டன. வழிபாட்டுச் சுதந்தரம் பெயரளவில் நிலைபெற்றிருந்தது. பிரான்சை விட்டு வெளியேற ஒருவரும் அனுமதிக்கப் படவில்லை எனினும், இதை நிறைவேற்ற இயலாததால் பல்லாயிரக் கணக்கான பிராட்டடஸ்டெண்டுகள் பிரான்சின் எல்லைக்கப்பாலுள்ள சுவிட்சர்லாந்திலும், பிரஷ்யா, ஹாலந்து, இங்கிலாந்து நாடுகளிலும் அடைக்கலம் புகுந்தார்கள். நான்டீஸ் கட்டளைகளை நீக்கிவிட்டதனுல் ஏற்பட்ட விளைவுகளைப் பிராட்டடஸ்டென்டு வரலாற்று ஆசிரியர்கள் சில அமயங்களில் மிகைபடக் கூறுவார்கள். எனினும், தீமை விளைவித்தது என்பது பற்றிச் சிறிதும் ஐயமில்லை. பிரான்சு பல்லாயிரக் கணக்கான குடிமக்களை இழந்தது. அவர்களுட்சிலர் அமைதி, திறமை, சுறுசுறுப்பு

என்னும் நல்லியல்புகள் வாய்க்கப்பெற்றவராயும் இருந்தனர். தங்களுடன் கலைகளையும் தொழில்களையும் அவர்கள் வெளி நாடுகளுக்குக் கொண்டு சென்றார்கள். அதனுடன் அவர்கள் தங்களை நாட்டினின்றும் விரட்டிய அரசின்மீது நிலையான வெறுப்பையும் கொண்டிருந்தார்கள். அவர்களது வருகையால் ஹாலந்தும் இங்கிலாந்தும் பயனுற்றன. பிரஷ்யாவின் நிலை இதைவிடச் சிறந்ததாயிருந்தது. பெர்லினைச் சுற்றிலும் பெர்லினுள்ளும் அவர்கள் வசிப்பதற்காக நிலங்களையும் வீடுகளையும் தேர்வாளரான பிரடரிக்கு வில்லியம் அளித்தார். பெர்லினின் பெருமைக்கு அவர்கள் காரணமாயிருந்தார்கள். பல வகைகளில் சிறந்து விளங்கிய மன்னரின் கண்மூடித்தனமான கொடுமையாலும், சமயத்தில் கொண்ட தீவிரக் கொள்கையாலும் வெளியில் விரட்டப்பட்ட அக்குடியேற்ற மக்களால் எழுப்பப்பட்ட நகரம், வருங்காலத்தில் பிரான்சிற்கு அழிவையுண்டு பண்ணுவதாய் அமைந்தது.

## துருக்கியின் தோல்வி

நாட்டின் தாழ்விற்குக் காரணமாயிருந்தவைகளில், மன்னருடைய சமயக் கொள்கையும், அதன் விளைவாகப் பிரான்சின் அழிவு, வியாபார வளர்ச்சி முதலியவை நிறைந்திருந்த வாழ்க்கை மெலிவுற்று அழிந்து போனதும் அடங்கும். எனினும், மன்னருடைய ஆட்சியில் அகற்றப்படாத வேறு காரணங்களும் உள. பிரான்சிற்கும் துருக்கிக்கும் இடையே நெடுநாளாக முறைப்படியமையாத ஒரு முக்கியமான நட்புறவு இருந்து வந்தது. இது வியன்னா நகர்மீது அடிக்கடி ஏற்பட்ட துருக்கியர்களின் தாக்குதல்கள் அல்லது அச்சுறுத்தல்கள் முதலியவைகளால் பிரான்சிற்கு எதிரான இராணுவ நடவடிக்கைகளில் பேரரசர் ஒத்துழைப்பதைத் தடை செய்யப் பயன்பட்டது. 1683-ல் துருக்கியர்கள் தங்கள் வரலாற்றிலேயே முடிவாகப் பெற்ற தோல்விகளுள் ஒன்றையடைந்தார்கள்; வியன்னாவை முற்றுகையிடுவதில் முனைந்தார்கள். அந்நகரும் அவர்களது வசமாகும் போலத்தோன்றியது. அவ்வமயம் போலந்து மன்னரான சோபீஸ்கி[1] என்பார் உதவிக்கு வந்தது வாயிலாக நகரம் காப்பாற்றப்பட்டது. தாறுமாறாகப் பின்வாங்கிய துருக்கியர் பெருஞ்சேதமடைந்தனர். நிலப்போரில் துருக்கியரின் போர்க்கருவிகள் தாழ்வுறத் தொடங்கின. விரைவில் ஹங்கேரி நாட்டின் பெரும்பகுதியையும் அவர்கள் இழந்தார்கள். இது முதற்கொண்டு துருக்கிச் சுல்தானுடைய பயன் தரும் உதவியைப் பிரான்சு வீணில் எதிர்பார்த்தது. இறுதியில் பிரான்சிற்கு அநேகமாகப்

[1] Sobieski.

பேரிடராக அமையும் வகையில் இங்கிலாந்தின் விவகாரங்களிலுங்கூட திருப்பம் ஏற்பட்டது.

## பதினுன்காம் லூயியும் இங்கிலாந்தும்

### ஆங்கிலேயப் புரட்சி 1688

இரண்டாம் சார்லசுடன் மன்னர் கொண்டிருந்த தொடர்புகள் எளியவைகளாயில்லை. ஆனல், அவருக்கு எதிராக ஆங்கிலேய அரசாங்கம் சுறுசுறுப்பாகத் தலையிடுவதைப் பல வழிகளில் தடை செய்வதில் வழக்கமாகச் சமாளித்தார். இரண்டாம் ஜேம்ஸ் இங்கிலாந்தில் அரியணை ஏறியபோது, அவருடன் நல்லுறவை ஏற்படுத்திக்கொள்ளுவதில் பதினுன்காம் லூயி நம்பிக்கை கொண்டிருந்தார். இருவரும் கத்தோலிக்கர். எனவே, பொதுவான சமயக்கொள்கையினல் இருவரையும் ஒன்ருகச் சேர்த்து இணைத்தது போலத் தோன்றியது. ஆனல், இரண்டாம் ஜேம்ஸ் பிடிவாதக் குணமுடையவர்; அதனுடன் கூர்மையான அறிவுடையவரும் அல்லர். நாட்டு மதிப்பு, பிரெஞ்சு மன்னருடைய உதவியைப் பெறுவதற்கு வெறுத்தது. எனவே, மக்களுடைய தேசீயம், சமயம் பற்றிய வெறுப்புக்களுடன் எதிர்க்கும் தவற்றைச் செய்தார். இச்செயல் மூன்ருண்டுகளில் 1688-ல் ஆங்கிலேயப் புரட்சிக்கு வழி கோலியதுடன் இங்கிலாந்தில் பிராட்டஸ்டென்டு சமயத்தையும், மக்களின் பிரதிநிதிகளின் ஆட்சியையும் பாதுகாத்து, பிரான்சுடன் பகைமையையும் தோற்றுவித்தது, பதினுன்காம் லூயிக்குத் தவிர்க்க இயலாததும், அளவிறந்த தொல்லைகளை விளைவிக்கக் கூடியதும், பகைமையை ஊக்கக் கூடியதுமான விதியாயமைந்தது போலும்!

## 1688-ஆம் ஆண்டில் வெளி நாட்டு நெருக்கடி

### கொலோன்

பதினுன்காம் லூயியினுடைய நற்பேறுகளுக்கு 1688ஆம் ஆண்டு மிகக் கடுமையான நெருக்கடியை உண்டுபண்ணியது. ஒரு சார் இரண்டாம் ஜேம்ஸ் புரட்சியை நோக்கி விரைந்து சென்றுகொண்டிருந்தார். அப்புரட்சி எவ்வளவு தூரம் பிரான்சின் நற்பேறுகளை மறைமுகமாகத் தடைசெய்யும் என்பதனைப் பதினுன்காம் லூயி உணர்ந்திருந்தார். அவர் உதவி செய்ய முன்வந்ததை இரண்டாம் ஜேம்ஸ் நாட்டுப் பற்றுணர்ச்சியாலோ அன்றித் தற்பெருமை காரணத்தாலோ ஏற்கமறுத்தார். இதன் விளைவாக லூயி தமது நாட்டின் கிழக்கு எல்லையில் முக்கிய கவனத்தைச் செலுத்தலானுர். அங்குக் கொலோன் நகரத்தினுடைய மேற்றிராணியார் பதவிக்குத் தேர்தல் நெருங்கிக் கொண்டிருந்தது. ரைன் ஆற்றின்மீது அமைந்த

பாலத்தையும், நெதர்லாந்திற்குச் செல்லும் சாலையையும் கட்டுப் படுத்துவதாயுள்ள அந்நகரம் முக்கியமாய் இருந்ததால் பிரான்சு மன்னர் இயலுமாஞல் பிரான்சிற்கு நட்பினராக அமையும் அதிமேற்றி ராணியாளரையும் தேர்வாளரையும் பெறுவதற்கு விரும்பினுர். மிகவும் எளிதில் அவர் இவற்றை அடைவார் எனத்தோன்றியது. ஆனுல், கொலோனைப் பிரெஞ்சு ஆதிக்கத்தின்கீழ்க் கொணர்தற்குப் பிரெஞ்சுப் படையைப் பயன்படுத்த வேண்டும் என்பது முடிவாகத் தெளிவாயிற்று. எனவே, பிரெஞ்சுப் படைகள் திரட்டப்பட்டு, கொலோன்மீது போர் தொடுக்க ஆயத்தமாயின.

## ஹாலந்தின் மூன்ரும் வில்லியம்

ஆங்கிலேயப் புரட்சியுடன் இந்நிகழ்ச்சிகள் நெருங்கிய தொடர்புற் றிருந்தன. இங்கிலாந்தில் மனக்குறைவுற்றிருந்த தலைவர்கள், ஹாலந்து நாட்டின் தலைவரான (ஸ்டாத் ஹோல்டர்) வில்லியத்திற்கு ஏற்கனவே தங்களது புகழ்பெற்ற முறையீட்டை அனுப்பியிருந்தார்கள். அவர் இரண்டாம் ஜேம்ஸின் மிகநெருங்கிய உறவினராயிருந்ததோடு கத்தோலிக்கர் அல்லாதவராயிருந்ததாலும் அவர்கள் முறையிட்டார்கள். இத்துணிவுச் செயலைப் புரிய வில்லியமும் ஆயத்தமாயிருந்தார். ஆனுல், ஹாலந்து ஐக்கிய மாநிலங்களின் பிரதிநிதி மன்றம் பிரான்சின் செயல் உறுதியற்றதாயிருக்கும்பொழுது இங்கிலாந்திற்கு வில்லியம் செல்வதற்கு இசைவுதர விரும்பவில்லை. காரணம், ஹாலந்துமீது பிரெஞ்சுப் படைகள் படை எடுத்துவரின் அந்நாட்டில் தகுவழிகாணும் அனைத்துத் திறமைகளோடு கூடிய வில்லியத்தின் ஆற்றல் முழுமையும் அப்படைகளை விரட்டியடிக்கத் தேவைப்படும் என்பதேயாகும். கொலோன்மீது பிரெஞ்சுக்காரர்கள் தாக்கியமை, டச்சுக்காரர்களுக் கிருந்த மிகுந்த அச்சத்தைப் போக்கியது. எனவே, வில்லியம் இங்கிலாந்து செல்ல மக்கள் இசைவளித்தார்கள். அங்கு அவர் விரைவிலேயே தமது திறமையாலும் நற்பேறுகளின் பெருக்காலும் சண்டையின்றி ஜனநாயக முறையில் அமைந்திருந்ததும் பிராட்டஸ் டென்டு சமயத்தைத் தழுவியதுமான இங்கிலாந்தின் மன்னரானுர். பிரான்சிற்கு முக்கியமான நட்பை இழக்கச் செய்ததனுலும் பதினுன்காம் லூயிக்கு எதிராக அமைந்த கூட்டில் இங்கிலாந்து உடனே தலைமை உறுப்பு ஆனதனுலும் அவர் தாம் பெற்ற பதவியைப் பெரிதும் மதித்தார்.

## பிரான்சிற்கு எதிராகப் பெருங்கூட்டு

### போரின் தன்மை

கொலோன் தாக்குதலும், ஆங்கில நாட்டுப் புரட்சியும் ஒரு பெரிய ஐரோப்பியப் போரையே விரைவில் தோற்றுவித்தன. பிரான்சினிடத்து

அச்சமும் பொருமையும் மிகுதியாயிருந்தமை காரணமாக, மூன்ரும் வில்லியம் ஐரோப்பாவிலுள்ள எல்லாச் சத்திகளேயும் பிரான்சிற்கு எதிராக ஒன்று சேர்ப்பதில் வெற்றி பெற்ருர். முதலில் இங்கிலாந்து ஹாலந்துடனும், பேரரசருடனும் சேர்ந்தது. பின்னர் இவற்றுடன் ஸ்பெயினும் பிரான்டன்பர்கும் இணைந்து வலுவூட்டின. இப்பெரிய கூட்டிற்கு இறுதிக் கட்டத்தில் டென்மார்க்கும் சுவீடனும் உதவி புரிந்தன. போர் நீண்டதாயும் கடுமையானதாயுமிருந்தது. எனினும், ஐரோப்பாக் கண்டத்தில் கருத்தைக் கவரக்கூடிய தனிச்சிறப்பு வாய்ந்த நிகழ்ச்சி ஒன்றும் நிகழவில்லை. அங்கு, இப்போர் முற்றுகைகளைக் கொண்டதாயிருந்தது. பிரான்சின் எல்லைகள் மிக நேர்த்தியான முறையில் வாபான் என்பவரால் வலுப்படுத்தப் பெற்றிருந்ததால், இப்படையெடுப்பு முழுவதும் ஒரு பெருமுற்றுகை போன்றிருந்தது. எனவே, இப்படையெடுப்பின் விவரங்களை நீக்கிவிடலாம் என்றும் இவற்றை அறியும் நிலையில், பிரான்சிடம் காணப்பெற்ற மிகப் பெரிய இராணுவம் நன்கு புலனுக்கியது. அதனுடன் அந்நாட்டை எதிர்த்தவர்களைக் காட்டிலும் அதன் சேனைத்தலைவர்களது சிறந்த பண்பும், நயத்திற நடவடிக்கைகளும் புலனுயின. போரின் தொடக்கத்தில், பிரான்சிற்கு நிலத்திலும் நீரிலும் ஆதிக்கவுரிமை கிடைக்கும் போலத் தோன்றியது. 'பீச்சி ஹெட்'[1] (1690) சண்டையில் பிரெஞ்சுக் கப்பற் படை, இணைந்திருந்த ஆங்கில டச்சுக் கப்பற்படைகளின்மீது முழு வெற்றி பெற்றது. பதினன்காம் லூயி ஐயத்திற்கிடமற்ற இவ் வெற்றியை மேலும் பயன்படுத்திக்கொள்ளாதிருந்தது இயற்கைக்கு முரணுயிருந்தது. ஆனல், 1692-ல் கடற்போரிலும் லாஹேக்குச் சண்டையிலும் நற்பேறு அவரை விட்டகன்றது. மீண்டும் ஆங்கிலேயக் கப்பற்படை அதன் உயர்வை நிலை நாட்டியது. இதன் பயன், ஆங்கில நாட்டுக் கடற்கரைகளுக்குப் பிரெஞ்சுக்காரர்கள் படையெடுப்பதனுல் ஏற்படும் இடரை நெடுநாளைக்கு இல்லாமற்செய்தது. நெதர்லாந்திலும் பெருங்கடலிலும் இப்போர் நிகழ்ந்ததோடு அயர்லாந்திலும் தொடர்ந்து நடந்தது.

இரண்டாம் ஜேம்ஸ், இங்கிலாந்தினின்றும் ஓடிய பின், அயர்லாந்திற்குச் சென்று, அங்குத் தம் அதிகாரத்தை நிலை நாட்டி, அதுவாயிலாக இறுதியில் இங்கிலாந்தின்மீது மீண்டும் வெற்றி பெறலாம் என நம்பியிருந்தனர். ஐரிஷ் மக்களுக்கு இங்கிலாந்தின் மீதிருந்த வெறுப்புணர்ச்சியும், மக்களுக்கும் ஜேம்ஸுக்குமிடையே இருந்த பொதுச்சமயவுணர்ச்சியும் ஐரிஷ் மக்களுட் பெரும்பகுதியினரை ஜேம்ஸுடன் நேசமாயிருக்கச் செய்தன. ஜேம்ஸுக்குத் தொடர்ந்து கிடைத்த வெற்றிகள் அத்தீவையே அவரது ஆதிக்கத்தின்கீழ்க்

[1] Beachy Head.

கொண்டுவந்துவிடும்போலத் தோன்றியது. அவ்வாறிருந்தும், அங்கு அவருடைய நிலையற்ற நிலைமை வெளிப்பட்டது.

## பாய்ன் சண்டை

### ரிஸ்விக்குச் சமாதானம்

மூன்ரும் வில்லியம் ஆறு நாடுகளைச் சேர்ந்த போர் வீரர்களான ஒரு கலப்புப் படையுடன் அயர்லாந்திற்குச் சென்று, பாய்ன்[1] என்னு மிடத்தில் நிகழ்ந்த சண்டையில், வெற்றி பெற்று ஐரிஷ் மக்கள் மீது இங்கிலாந்தின் ஆட்சியை நிலை நிறுத்தினர். ஐரோப்பாவில் இப் போர் மிகப் பெரிய அளவில் நிகழ்ந்ததுடன் அளவற்ற செலவையும் தோற்றுவித்தது. பிரான்சு, அதன் சண்டைகளிலெல்லாம் வெற்றி பெற்றதுடன், குறிப்பிட்ட நகரைக் கைப்பற்றுமல் எந்த முற்றுகை யையும் செய்யவில்லையென்ருலும், அதன் நிதி நிலைமை மிகவும் அச்சத்தைத் தோற்றுவித்தது. இதனல், சமாதான ஏற்பாட்டை ஏற்றுக்கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டது. ஒன்பதாண்டுவரை சண்டைகள் நிகழ்ந்த பின் 1697-ல் இறுதியாக ரிஸ்விக்குச் சமாதானத் துடன்[2] இப்போர் முடிவுற்றது. இச்சமாதானத்தின்படி முன்னைய போர்களில் பிரான்சு கைப்பற்றியதையும் ஒன்றுபடுதலைச் செய்யும் நீதி மன்றங்கள் வாயிலாகப் பெற்ற நாடுகளில் சிலவற்றையும் விட்டுக் கொடுக்கும்படி வற்புறுத்தப்பட்டது. ஸ்ட்ராஸ்பர்கும் ஆல்சேஸு'ம் அதன் வயமாயின. போரில் சில நிலப்பகுதிகளைப் பிரான்சு இழந்த தெனினும், அதன் இராணுவச் செருக்குச் சிறிதும் குறையவில்லை. ஐரோப்பாவில் முதன்மையான இராணுவப் பலத்தை அந்நாடு கொண் டிருந்தது என்ற உரிமையை எவரும் மறுத்துக்கூற இயலாது. மூன்ரும் வில்லியம் ஆங்கிலேய அரியணையைத் தம்முடையதாக நிலை நிறுத்திக்கொண்டது பெரிய சாதனையாயிற்று. சமாதான வாசகங் களின்படி, பதினன்காம் லூயி, இங்கிலாந்தின் அரியணையை அடை வதற்கு ஸ்டுவர்ட்டு வமிசத்தினர் செய்யும் எம்முயற்சிகளிலும் மீண்டும் அவர்களுக்கு எத்தகைய உதவியும் செய்வதில்லையென வாக்குறுதி யளிக்குமாறு வற்புறுத்தப்பட்டார்.

## ஸ்பெயின் பிரச்சினை

பதினன்காம் லூயி ரிஸ்விக்குச் சமாதானத்தை ஏற்றுக் கொள்ள விரும்பியதற்குக் காரணம், வில்லியத்துடன் தொடர்பு கொண்ட போரைக்காட்டிலும் மிகக் கடுமையான வேறு ஒரு பிரச்சினை ஐரோப்பிய அரசியல் வல்லுநர்களின் முன் வரவிருந்ததேயாகும். ஸ்பெயின் மன்னரான இரண்டாம் சார்லசின் உடல்நிலை பல்லாண்டுகளாகவே

[1] Boyne. [2] Peace of Ryswick.

உறுதியற்ற நிலையில் இருந்தது. அவ்வமயத்தில் மாட்ரிடுத் தலைநகரின்றும் வெளியான அறிக்கைகள் அவர் இறக்கும் நிலையில் இருப்பதாகக் கூறின. அவர் இறப்பு ஐரோப்பிய அரசியல் வல்லுநர்களிடையே அரசியற்றந்திரத்தில் இது வரை நிகழ்ந்திராத ஒரு பெரிய பரிசைப் பெறுவதற்கான சூதாட்டம் போல அமைந்தது.

## ஸ்பெயினின் நிலைமை

முன்னதிகாரத்தில் பதினாறும் நூற்றாண்டின் இறுதி அல்லது பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஸ்பெயின் மீட்க இயலாத அளவிற்கு மிக்க தாழ்நிலையுற்றது என்ற கூற்றை நாம் மறுத்துள்ளோம். பதினேழாம் நூற்றாண்டின் இடைக்காலம் வரை விடா முயற்சியையும், சிறந்த இராணுவப் புகழையும் ஸ்பெயின் பெற்றிருந்ததுடன் அந்நாட்டின் கலைஞர்களும் எழுத்தாளர்களும் ஸ்பெயினை ஐரோப்பிய நாடுகளுள் மிகச் சிறப்புற்று விளங்கச் செய்தார்கள். ஆனால், பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் ஸ்பெயின் வன்மையற்று இருந்தது என்பதையும் அதற்கு ஏதுவாக நாட்டின் அரசியலமைப்பில் நிலையாய் அமைந்திருந்த சில கூறுகளும், சமூகத்திற்காணப்பட்ட சில முறைகளும் அமைந்தன என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவற்றுள் எது முக்கியமானது என்பது பற்றி மாறுபாடான கருத்துக்கள் இருந்தே தீரும். எனினும், ஸ்பெயினுடைய ஆற்றலை அடியோடு சீர் குலையச் செய்வதற்கு அமைந்த பல காரணங்கள் உள என்பதை நோக்காமலிருக்க இயலாது.

## ஸ்பெயினின் நிதி நிலைமை

முதலாவதாக, ஐரோப்பாவிலேயே ஸ்பெயினுடைய நிதியமைப்பு மிக்க இழிநிலையில் இருந்தது. திருச்சபையினுடையவும், பிரபுக்களுடையவுமான நிதி பற்றிய சிறப்புரிமைகளைத் தவறான வழியில் செலுத்தியமையால், நாடு துன்புற்றது. இவை காரணமாகவே பிரான்சும் புரட்சி ஏற்படும் வரை துன்புற்றது. மேலும், ஸ்பெயினுக்கெனவே அமைந்த வியத்தகுவழிகளும் அவ்விழிநிலைக்குக் காரணமாயின. அந்நாட்டின் வரி விதிப்பு முறை, நாட்டின் தொழில்களைப் பாழ்படுத்தியதுடன், தேசீயக் கருவூலத்திற்கு எத்தகைய வருவாயையும் உண்டாக்கவில்லை. ஸ்பெயின் அவ்வமயம் அறிவுத்துறையில் சில இடர்ப்பாடுகளுக்குள்ளாயிருந்தது. பதினாறும், பதினேழாம் நூற்றாண்டுகளின் தொடக்கத்தில் கத்தோலிக்க எதிர் விளைவு இயக்கத்தை ஆதரிப்பதில் ஸ்பெயின், மக்களின் தன்மையை ஒட்டிய வழியைப் பின்பற்றியது. ஆனால், நாட்டின் எல்லைக்குள் கத்தோலிக்கச் சமயம் பெற்ற வெற்றியாலும் 'இன்குவிஸிஷன்' (சமய நிந்தனை விசாரணை மன்றம்) வாயி

லாகக் கத்தோலிக்கத் திருச்சபை விளைவித்த கொடுமையாலும், மற்றும் பல கொடுமைகளாலும் அறிவாற்றல் மிக்க கொடுங்கோலாட்சி ஏற்பட்டது. இது பேரழிவை விளைவித்தது.

## ஸ்பெயின் அறிவிடர்ப்பாடு

ஸ்பெயின் ஏகாதிபத்தியத் திட்டங்களாற் சோர்வுறல்

அறிவியல் இயக்கம் ஐரோப்பாவில் தோன்றி வெற்றியுடன் பரவிக் கொண்டிருந்தது. பல நாடுகளும் இதனைப் பயன்படுத்திச் செல்வ வளங்களைப் பெருக்கிக்கொண்டிருந்தன. ஆயினும், இவ்வியக்கம் ஸ்பெயினில் தோன்றுதற்கே வழியில்லாமலிருந்தது. அரசியல், அறிவியல், சமயத்துறைகளில் தன்னுரிமையுடன் கூடிய கருத்துக்கள் வளர்தற்குரிய வாய்ப்பு அளிக்கப்படாமையே இதற்குரிய காரணமாகும். பதினாறும் நூற்றுண்டிலும், பதினேழாம் நூற்றுண்டின் தொடக்கத்திலும், நாட்டில் இலக்கியத்திலும், கலையிலும் குறிப்பிடத்தக்க தலை சான்ற வளர்ச்சி காணப்பட்டது. மற்றைய ஐரோப்பிய நாடுகளில் ஏற்பட்ட வளர்ச்சி இதற்கிணையாகாது. எனினும், பதினேழாம் நூற்றுண்டின் இடையில் இவ்வளர்ச்சி முடிவுற்றது. அரசியல், அறிவுத்துறைகளில் ஸ்பெயின் சோர்வுற்றது தவிர, கடந்த இரு நூற்றுண்டுகளாக ஸ்பெயின் பெரும்பாலும் உலகில் எல்லாப் பகுதிகளிலும் தொழிற்றுணிவுகளில் ஈடுபட்டிருந்தமையும் கவனிக்கப்பட வேண்டும். அது அமெரிக்கக் கண்டங்கள் இரண்டையும் வென்று குடியேற்றம் செய்வதை மேற்கொண்டிருந்தது; இத்தாலியின் ஆட்சியைப் பெற விரும்பி அநேகமாக அதனை அடைந்ததெனலாம்.

முப்பதாண்டுப் போரில் ஆஸ்திரியாவைப் போலவே ஸ்பெயினும் தொடர்பு கொண்டு இருந்தது. முன்னோதிகாரத்தில் ஸ்பெயின் எவ்வாறு பல்லாண்டுகளாக நெதர்லாந்தை மீண்டும் அடைவதற்கும் இங்கிலாந்தை வெல்வதற்கும் முயன்றது என்பதைக் குறிப்பிட்டுள்ளோம். போராட்டங்கள் ஸ்பானியப் படைகளுக்கும் அரசியல் தந்திரிகளுக்கும் வெற்றியை அளித்தன என்றுலும், நாட்டின் பொருளாதாரமும் சத்தியும் பெரிதும் இவற்றைத் தாங்க இயலாதனவாயிருந்தன. நெடுந்தொலைவிலுள்ளனவும் மிகப் பெரியனவுமான ஏகாதிபத்தியத் திட்டங்களை நிறைவேற்றுவதில் மன்னர்கள் முனைந்திருந்ததுடன், மக்களின் நல்வாழ்க்கைக்காவனவற்றையும் புறக்கணித்திருந்தார்கள். எனவே, ஏகாதிபத்திய அழைப்பிற்கு அடிப்படை, வலிமையற்று அழியலாயிற்று. ஏகாதிபத்தியத் திட்டங்களால் நாடு சீரழிந்தமைக்கு ஸ்பெயின் மிகச் சிறந்த எடுத்துக்காட்டாயிருந்தது.

# இரண்டாம் சார்லஸ் மன்னர்

## அரசுரிமைக்கு அமைந்த போட்டிகள்

இப்பொழுது பல்லாற்றானும் சிறப்புற்ற ஸ்பெயின் மக்களை இரண்டாம் சார்லசு ஆண்டார். அவருடைய முன்னோர்களுக்கு அடிக்கடி ஏற்பட்டு வந்த மனநோய் அவரிடத்திலும் கடுமையாகக் காணப்பட்டது. ஸ்பெயினை ஆட்சி புரியும் மன்னர், நன்கு அறிந்து தீர்வு காணவேண்டிய பிரச்சினைகளை அறியவும் திறமையாக ஆட்சி புரியவும் இயலாதவராயிருந்தார். அவரது ஆட்சியின் இறுதிப்பகுதி பெரும்பாலும் அறியாமையில் மூழ்கியதாயிருந்தது. அவர் மனைவியரும், சமயத்துறையில் மன்னிப்பு வழங்குநரும் அவரிடம் செல்வாக்குற்றிருந்தனர். மன்னர்களுடைய கடமைகளைச் செய்ய அவர் முயலவில்லை. அவருக்கு வாரிசும் இல்லை. கடந்த முப்பது ஆண்டுகளாகவே, இரண்டாம் சார்லசு மரணமடைந்தால் ஸ்பெயினுக்கு எத்தகைய நிலை ஏற்படும் என்பது பற்றி ஐரோப்பா எண்ணிக்கொண்டிருந்தது. இப்பிரச்சினை உரிமை அடிப்படையில் சாதாரணமாகத் தோன்றினும், பொருமை கொண்டிருந்த ஐரோப்பிய நாடுகள் தங்கள் பேராசைகளை நிறைவு செய்யாத எத்தகைய முடிவையும் ஏற்றுக்கொள்ளா. சுருங்கக்கூறின், ஸ்பெயின் அரியணைக்கு மூன்று உரிமையாளர் இருந்தனர் எனலாம்.

பதினன்காம் லூயி ஸ்பெயின் மன்னரான நான்காம் பிலிப்பின் மகளை மணந்துகொண்டிருந்தார். மனைவிக்குரிய உரிமைப்படி அவருடைய மகளுக்கு ஸ்பெயின் அரசு முழுமையும் வாரிசுப்படி உரியன என உரிமை பாராட்டலாம். பேரரசரான முதலாம் லியோபால்டு[1] நான்காம் பிலிப்பின் உடன் பிறந்தாரான மேரியா என்ற இளவரசியாரின் புதல்வராவர். தாயார் வழியில் அவர் வாரிசுரிமை பாராட்டினர். பதினன்காம் லூயியின் உரிமை இவ்விரண்டனுள் வன்மையுள்ளதாயிருந்தது. இவ்வுரிமையைப் பிரான்ஸ் ஒப்பந்தப்படி பதினன்காம் லூயி தொடர்ந்தார். பின்னர், இவ்வுரிமை துறத்தல் தன்னைக் கட்டுப்படுத்தாது என்றும் அவர் கூறியதை முன்பு கண்டோம். மூன்ருவது உரிமை பவேரியா நாட்டின் தேர்வாளர் குடும்பத்தாரால் தொடரப்பட்டது. மாக்ஸ் இம்மானுவேல்[2] என்பார் இரண்டாம் சார்லசின் சகோதரியாரின் மகளாரும் நான்காம் பிலிப்பின் பேர்த்தியாருமான மேரியா அந்தோனியா என்பாரை மணந்திருந்தார்.*

[1] Leopold. [2] Max Emmanuel.

## *வமிசாவளி




இவ்வுரிமையும் முன்னர் இக்குடும்பத்தினரால் துறக்கப்பட்டிருந்ததால் தடையுற்றது; ஆனல், பவேரியா அரச குடும்பம் பல காரணங்களைக் கொண்டு இதை ஏற்றுக் கொள்ளவில்லை. இப்பிரச்சினைக்கு முடிவு காண்பது எவ்வாறு? ஐரோப்பாவில் இவ்வுரிமைகளைப் பரிசீலனை செய்ய நீதி மன்றம் இல்லை. அதனுடன் நீதி மன்றத்தின் முடிவை ஏற்றுக்கொள்வதற்கு, உரிமை கொண்டாடியவர்கள் தயாராகவுமில்லை. எனவே, இப்பிரச்சினையில் இங்கிலாந்து மன்னரான மூன்ரும் வில்லியம் அதிக ஆர்வம் கொண்டார். இதற்குக் காரணம், அவருக்குப் பெரும்பகைவரான பதினன்காம் லூயியினுடைய அதிகாரம் பெரிதும் வளர்ந்துவிடக் கூடும் என எண்ணியதேயாகும். ஆங்கிலேய மக்களிடம் புதிய போர் தொடங்குவதில் அவருக்கு உதவியளிக்கும் மனப்பான்மை இல்லை. எனவே, அரசியல் தந்திர முறைகளில் வில்லியம் ஈடுபட்டார்; பதினன்காம் லூயியுடன் பேச்சு வார்த்தைகளைத் தொடங்கினர்; இரு பிரிவினை உடன்படிக்கைகளைத் தயாரித்தார்; எதிலும் ஸ்பெயின் மன்னரையோ மக்களையோ கலக்கவில்லை.

## பிரிவினை உடன்படிக்கைகள்

முதல் உடன்படிக்கையின்படி ஸ்பெயினுக்குச் சொந்தமான பெரும் பகுதிகள் பவேரியா நாட்டு இளவரசருக்குச் செல்லவேண்டும் என்றும், இவ்வாறு ஸ்பெயின் அரியணையை அவர் அடைவதால் ஐரோப்பாவில் சத்திச்சமநிலைக் கொள்கைக்கு எவ்விதத்திலும் இடையூறு ஏற்படாது என்ற காரணத்தினாலும் மற்ற உரிமையாளர்களான ஆஸ்திரியாவும் பிரான்சும் ஸ்பெயின் எல்லைக்கு வெளியிலிருந்தனவும் பரந்து காணப் பட்டனவுமான நிலப்பகுதிகளை அடைவது என்றும் ஏற்பாடாகி யிருந்தது. ஸ்பெயின் மன்னர் செய்திருந்த உயிலும் பவேரியா நாட்டு இளவரசருக்குத் துணையாய் இருந்ததால், இந்த ஏற்பாட்டை அனை வரும் ஏற்றுக் கொள்ளலாம் எனத் தோன்றியது. ஆனால், பவேரியா நாட்டிளவரசர் திடீரென்று இறந்தார். அதனால், மீண்டும் பிரிவினைப் பிரச்சினையைத் தீர்மானிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. புதிதாகப் பிரிவினையுடன்படிக்கை தயாராயிற்று. இதன்படி பெரும்பகுதியை வாரிசு முறையில் பேரரசரின் மகனும் ஆஸ்திரியா இளவரசருமான சார்லசிற்குக் கொடுப்பதென்றும், பிரான்சு இத்தாலி நாட்டில் ஸ்பெயி னுக்குச் சொந்தமாயிருந்த பகுதிகளை மட்டும் இக்கொள்ளையில் அதன் பங்காகப் பெறுவதென்றும் ஏற்பாடாயிற்று.

## இரண்டாம் சார்லசின் உயில்

மூன்றாம் வில்லியத்துடன் இப்பேச்சு வார்த்தைகள் நிகழ்ந்து கொண்டிருக்கும்பொழுது மாட்ரிடு தலைநகரில் இருந்த பிரெஞ்சுத் தூதர் பிரான்சு மன்னருக்குச் சாதகமாக ஸ்பெயின் அரசரையும் அரச அவை யையும் இழுக்கப் பெரும்பாடு பட்டுக்கொண்டிருந்தார். ஓரமயம் அவ ருடைய முயற்சிகள் பயன் பெறாதன போலத் தோன்றின. ஆனால், இரண்டாம் சார்லசு மரணமடைந்த பிறகு அவருடைய உயில் பதினான் காம் லூயியின் பெயரரும் ஆஞ்சோ நாட்டு இளவரசருமான பிலிப்பிற் குச் சாதகமாய் இருந்தமை தெரிய வந்தது. உயிலில் பிரான்சின் அதி காரம் வன்மையுற்று இரு நாடுகளையும் பிணித்து ஆட்சி புரிவதற்கு வழிகோலும் நிலையில் சார்லசு தமது இராச்சியம் முழுவதையும் இளவரசருக்கு அளித்திருந்தார்.

## பதினான்காம் லூயி ஸ்பெயின் வாரிசு உரிமையையேற்றல்

### ஹாலந்துக்கு விளைவித்த தாக்குதல்

பதினான்காம் லூயி, தாம் கையொப்பமிட்ட பிரிவினை உடன்படிக் கைப்படி நடந்து கொள்வாரா, அன்றி வேர்சயில்ஸ்[1] நகரத்தை

[1] Versailles.

எட்டிய உயில் பற்றிய செய்தியை ஏற்றுக்கொள்வாரா என்பது பிரச்சினையாயிருந்தது. பிரிவினை உடன்படிக்கைப்படி கிடைக்க வேண்டியதைக்காட்டிலும், அதிக அளவில் உயிலின்படி கிடைக்கின்றன. ஆதலின், அது போற்றத்தக்கதுமாயிற்று. ஆனால், ஆஸ்திரியாவும் இப்பிரிவினை உடன்படிக்கையை ஏற்றுக்கொள்ளவில்லை. எனவே, அந்நாட்டை ஏற்றுக்கொள்ளச் செய்ய வேண்டுமானால், போரிடுவதன்றி வேறு நல்ல வழி இல்லையென்பது லூயிக்குத் தோன்றியது. அன்றியும், அதிக அளவில் தமக்குப் பரிசுகள் கிடைக்க வேண்டுமாயின், அதற்காகவும் போரிட்டுத்தான் ஆக வேண்டும்.

எனவே, ஸ்பெயின் மன்னர், தம் பெயரரை ஐந்தாம் பிலிப்பு என ஏற்றுக்கொண்டு, மிகப் பெரியதாய் அமையும் போலத் தோன்றிய போருக்கு ஆயத்தமானார். அவருடைய அறிவற்ற செயல்களே போர் அமையவேண்டிய அளவைவிடப் பன்மடங்கு பெரியதாகச் செய்தன. ஸ்பெயினும் பிரான்சும் தனித்தனி அரசுகளாகவே இருக்கும் என்பது தெளிவு செய்யப்பட்டிருந்ததால், ஸ்பெயின் அரியணையைப் பிலிப்பு அடைவதை ஐரோப்பா அனுமதித்திருக்கும். ஆனால், தொடக்கமுதல், லூயி ஸ்பெயினையும் பிரான்சையும் இணைந்த ஒரே நாடாகவும், ஸ்பெயின் பிரான்சுப் படைகளையும் அவ்வாறே ஒன்றற்கு ஒன்று மாற்றிக்கொள்ளலாகும் எனவும் கருதி வந்தார்; ஸ்பெயினுக்குச் சொந்தமான நெதர்லாந்தின் நகரங்களில் பிரெஞ்சுப் போர்ப்படைகளைப் புகுத்தினார்; அதனுடன், மிகவும் கடுமையான, தவறுகளைச் செய்தது வாயிலாக, ஆங்கிலேயர்களின் மனத்தையும் புண்படச் செய்தார்.

## இங்கிலாந்து

நாடு கடத்தப்பட்டிருந்த இரண்டாம் ஜேம்ஸ், பாரிசில் இறந்த பின், ஆங்கில நாட்டு அரசியாரான அவர் மனைவியார், அவருடைய சிறிய புதல்வருக்கு அரசர் என்ற பட்டத்தையாவது கொடுக்க வேண்டுமென்று பதினான்காம் லூயியை மன்றாடிக் கேட்டுக்கொண்டார். அச்சிறுவர் பிற்காலத்தில் 'பழைய போலி'[1] எனப் பெயர் பெற்றார். ரிஸ்விக்கு உடன்படிக்கைப்படி ஸ்டூவர்ட்டு அரச மரபைச் சார்ந்தவர்களுக்கு உதவியளிப்பதில்லையென லூயி வாக்களித்திருந்தார். எனவே, அச்சிறுவரை மன்னரான லூயி ஏற்றுக்கொள்ளுவதால், அவர் வாக்குறுதியை மீறியதாக ஆங்கிலேயர் கருதினர். ஆனால், லூயி இதைப் பொருட்படுத்தாது, அரசியாரின் வேண்டுகோளுக்கிணங்கி, அச்சிறுவருக்கு இங்கிலாந்தின் மன்னர் எனும் மரியாதையளித்தார். இதன் விளைவாக, இதுவரை போரில் நாட்டை ஈடுபடுத்த

[1] Old Pretender.

முயன்ற மூன்ரும் வில்லியத்தின் முயற்சிகளைத் தடை செய்து வந்த ஆங்கிலேயப் பாராளுமன்றம், போரிலிறங்க வேண்டிய தேவையை நன்குணர்ந்தது. எனவே, தேவையான பொருள், ஆள்கள் ஆகிய உதவிகளையளித்தது. மூன்ரும் வில்லியம் இறுதியாகச் செய்தவற்றுள் ஒன்ருயும், அவரது வாழ்க்கையில் மிகவும் முக்கியமானதாயும் அமைந்த செயல் பிரான்சை எதிர்த்துப் போரிடுவதற்குப் பெருங்கூட்டைத்[1] திருத்தியமைத்ததேயாகும். ஆனல், போர் தொடங்குவதற்கு முன்னரே, வில்லியம் இறந்தார். சிறந்த போர் வீரரும், அரசியல் வல்லுநருமான மார்ல்பரோக் கோமகனுர்[2] இறந்த மன்னர் வில்லியத்தினிடத்தைப் பெற்ருர். மேற்கூறிய இரு பண்புகளுள் அவர் பண்பு மன்னர் பண்பைவிடச் சிறந்திருந்துங்கூட, செயல் நேர்மை, உயர் பண்பு ஆகியவற்றில் அவரைவிடத் தாழ்ந்தவராயிருந்தார்.

## ஸ்பெயின் அரசுரிமைப் போர்

எனவே, பெரும்போர் மூண்டது. ஸ்பெயினுடனும், பவேரியாவுடனும் சேர்த்து நோக்கினல், பிரான்சு மிக்க வலிமையுடையதாகக் காணப்படலாம். ஐயத்திற்கிடமின்றி, பவேரியா, உண்மையிலேயே உதவி செய்தது. ஸ்பெயின் பேரரசு மிகப் பெரியதாயிருந்தும், அதன் மக்கள் சிறந்த இராணுவப் போர்த்திறமை கொண்டிருந்துங்கூட, பிரான்சிற்கு உதவிசெய்ய முன் வரவில்லை. ஸ்பெயினின் அமைப்பு மிகவும் இழிவான நிலையிலும் அதன் துரைத்தனம் தாழ்வுற்றுமிருந்ததால், ஸ்பெயினுடன் பிரானசு இணைக்கப்பட்டிருந்தது, 'பிணத்துடன் உயிருள்ளதைச் சேர்த்துக்கட்டியதைப்' போன்றிருந்தது. மற்ருெரு பக்கத்தில் பெரும்பாலும் ஐரோப்பாவின் பெரிய அரசுகளெல்லாம் ஒன்ருகக் காணப்பட்டன.

## மார்ல்பரோவும் யூஜினும்

ரஷ்யா சுவிடன்போர்

இங்கிலாந்தும், ஹாலந்தும், பேரரசும், 1700-ல் பிரஷ்யா அரசு எனப் பட்டத்தைப் பெற்ற பிராண்டன்பர்கு தேர்வாளர் நாடும் ஒன்று சேர்ந்தன. இந்நட்புக்கூட்டு, தனியரசுகளாகக் கூட்டுச் சேர்ந்தவர்களிடம் காணப்பெற்ற பலவித நோக்கங்களும் சண்டைகளும் பிற எல்லா நட்புறவுகளும் பெற்ற தொல்லைகளைக்காட்டிலும் மிகக் குறைவான தொல்லையுற்றது. இங்கிலாந்தின் பிரதிநிதியான மார்ல்பரோக் கோமகனுருக்கும் பேரரசரின் பிரதிநிதியான யூஜின்[3] இளவரசருக்கும் மிக நெருங்கிய நட்பும் நல்லெண்ணமும் இருந்தன.

[1] Grand Alliance. [2] Duke of Marlborough. [3] Prince Eugene.

இங்கிலாந்து, இப்போருக்குப் படை வீரர்களைக் கொடுத்துதவியதைக் காட்டிலும், ஏராளமான பொருள் உதவி செய்தது. எனவே, போர் முடியும் வரை இவ்விரு தலைவர்களுக்கும் ஹாலந்தின் முதல் அமைச்சரான ஹீன்சியசுடன்[1] ஒன்று சேர்ந்து நல்ல இணைப்புடன் பணி புரிய முடிந்தது. ஸ்பெயின் மன்னர் பிரான்சு மன்னரின் பெயரரா யிருந்தும், பிரான்சின் பக்கத்தில் காணப்பட்டதைவிட இப் பெருங் கூட்டின் பக்கத்தில் உண்மை ஒற்றுமை நன்கு காணப்பட்டது. இப்போது தொடங்கிய போர்ச் செயலின் எல்லை மிகப் பெரிது. எல்லா அரசுகளும் நிலங்களும் சேர்ந்திருந்த இப்போரைப் போன்றதை, ஐரோப்பா இதற்கு முன் கண்டதில்லை. ஸ்பெயின் நாட்டு வாரிசுரிமைப் போர் என்று வழங்கப்பட்ட இப்போர், ஒரு சமயம் ஐரோப்பாவின் கிழக்கு எல்லைக்கப்பால், ஜெர்மனியில் சில நாடுகள், போலந்து, ரஷ்யா முதலியவை சேர்ந்து சுவீடனைத் தாக்கியதன் விளைவாக நடந்து கொண்டிருந்த மற்றொரு போருடன் தொடர்பு கொள்ளும் போன்றிருந்தது. வடக்கில் நிகழ்ந்த இப்போரைப் பற்றி அடுத்த அதிகாரத்தில் காண்போம். இங்கு ஐரோப்பாவின் மேற்கில் நடந்த போரின் பயன்களைப் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுவது இன்றியமையாததாகும்.

## இப்போரின் முனைகள்

இப்போர் நான்கு முனைகளைக் கொண்டதாயிருந்தது. முதலாவதாக, நெதர்லாந்தில் ஆங்கிலேயரும் டச்சுக்காரரும் ஸ்பெயினுக்குச் சொந்தமான பகுதிகளைத் தாக்கினர். இரண்டாவதாக, இத்தாலியில் ஆஸ்திரியா, மிலான் பகுதியிலிருந்து பிரெஞ்சுக்காரர்களையும் ஸ்பானியரையும் விரட்டுவதற்கு முயன்றது. மூன்றாவதாக, தொடக்க நிலைகளில் பவேரியா, போரின் பகைமைகளுக்கு நடுநாயமாயிருந்தது. அதனுடன் பவேரியா, பிரெஞ்சுத் துருப்புக்கள் அங்குத் தாங்களாகவே தொடர்ந்து செயலாற்ற முடிந்ததால் மார்ல்பரோவின் உதவிக்காகத் தேவைப்பட்ட ஆஸ்திரியா நாட்டுப் படைகள் வருவதற்கு இயலவில்லை. இக்களத்தில் பிரான்சு முடிவான வெற்றியை அடையக்கூடும் என்பது பல தருணங்களில் தோன்றியது. நான்காம் போர்முனை, ஸ்பெயினிலேயே நடந்தது. அங்கு மற்ற முனைகளைக்காட்டிலும், போரின் தற்பேறு ஏற்றத்தாழ்வைக் கொண்டிருந்ததுடன் இறுதியில் எதிர்பாராத முடிவையும் பெற்றது. இவற்றுடன் ஐந்தாவது போர் முனையையும் சேர்த்துக் கொள்ளலாம். பிரான்சின் படைகள் இவ்வாறு ஒரே நோக்கத்தைக் கொண்டு தொடர்ந்து நிகழ்ந்த பல சண்டைகளில் ஈடுபட்டிருந்த போது, சிவனீஸ்[2] என்னுமிடத்திலிருந்த பிராட்டஸ்டென்டுகள், தங்களைத் துன்புறுத்திய கத்தோலிக்கர்களை

[1] The Grand Pensionary of Holland, Heinsius. [2] Cevennes.

எதிர்த்துத் திடீரெனக் கலகம் செய்தார்கள். பிரான்சு இவ்விடரான எழுச்சியை அடக்க முடியாதது போல ஒரு கணம் தோன்றியது.

## பிளென்ஹீம் சண்டை

### பிரான்சு நெதர்லாந்தையும் இத்தாலியையும் இழத்தல்

ஒரே நோக்குடன் தொடர்ந்து நடந்த இப்போர்களைப் பற்றியோ அல்லது பிரான்சு இங்கிலாந்து முதலியவைகளின் படைகளுடைய ஆண்டு வரலாற்றில்[1] புகழ் பெற்று விளங்கும் பல சண்டைகளைப் பற்றியோ கூறுவதற்கு இந்நூலின் செயல் எல்லை தடை புரிகிறது. எனினும், போரின் பல பிரிவுகளையும், இறுதியாகப் போர் தோன்றியதற்கான காரணங்களையும் அறிந்துகொள்ள வேண்டும். 1704-ல் நடந்த பிளென்ஹீம் சண்டை[2] இப்போரைச் சரி சமனில்லாத இரு பகுதிகளாகப் பிரித்தது. அது வரையில், நற்பேறு, பிரான்சிற்கு எதிராக எவ்விதத்திலும் முடிவு செய்யவில்லை. அப்பொழுதுதான் மிகவியக்கத்தக்க திறனுடன் மார்ல்பரோ அவருடைய வெற்றி பெறும் படைகளை அணி வகுத்துச் சென்று யூஜின் இளவரசருடன் சேரும்படி செய்தார். இவ்விரு படைகளும் சேர்ந்து, பிரெஞ்சு வரலாற்றில் காணப்படும் படுதோல்விகளுள் ஒன்றைப் பிரான்சிற்கு உண்டாக்கின. அதனுடன் பவேரியாவில் போர் முடிவுற்றது. மேற் கூறிய பிற போர் முனைகளிலேயே சண்டைகள் நிகழலாயின. இவ்வெற்றி முதல், நீண்ட நாள்வரை போரின் எழுச்சி நேச நாடுகளுக்குச் சாதகமாகவே இருந்து வந்தது. மார்ல்பரோவின் தலைமையின்கீழ், படைகள் ஸ்பானிய நெதர்லாந்தின் பகுதிகள் முழுமையும் படையெடுத்தன. பிரெஞ்சுக்காரர்கள் இத்தாலியிலிருந்து விரட்டப்பட்டார்கள். ஸ்பெயினில், பிரான்சிற்கும் நேச நாடுகளுக்கும் ஒரே மாதிரியான பேரிடர்கள் ஏற்பட்டன. 1704-ல் ஜிப்ரால்டர்[3] ஆங்கிலேயர் வசமாயிற்று. அதன் பின் ஆஸ்திரியா நாட்டு ஆர்ச்சுக்கோமகனுரின் புதல்வர் மாட்ரிடுக்குள் புகுந்தார். அவர் ஸ்பெயின் மன்னர் மூன்றும் சார்லசு எனப் பேரறிவிப்புச் செய்யப்பட்டார்.

## ஸ்பெயினின் வீழ்ச்சி

### நேச நாடுகளின் அளவு மீறிய நம்பிக்கை

இவ்வமயம், பிரான்சிற்குப் பெரிதும் நாணம் ஏற்பட்டதுடன் போரும் முடியுமெனத் தோன்றியது. இரு காரணங்கள், ஒரே சமயம் எதிர்பார்த்ததைவிட இந்நாணத்தைக் குறைத்தன. முதலாவதாக, ஸ்பெயின் தேசிய உணர்ச்சி, அயலார் தாக்குதல் ஏற்படும் போதெல்

[1] Annals. [2] Blenheim. [3] Gibralter.

தெல்லாம் மேலோங்கி எழுவது போல, இப்பொழுதும் சுடர் விட்டோங்கியது. பிரெஞ்சுப் படைகள் மேற்கொண்டு உதவியளிக்கும் நிலையிலில்லை. எனவே, ஸ்பெயின் மக்கள் இழந்த பகுதிகளைத் தாங்களாகவே மீட்டார்கள்; அதனுடன் நேச நாடுகளைத் தோல்வியுறவும் செய்தார்கள். ஐந்தாம் பிலிப்பை மாபெருவெற்றியுடன் மாட்ரிடுக்கு அழைத்து வந்து பகைவர்களைத் தெற்கில் ஜிப்ரால்டர், கிழக்கில் பார்ஸிலோனு[1] என்ற இரு இடங்கள் நீங்கலாகப் பிற பகுதிகளிலிருந்து வெளியேற்றினர். பிரான்சிற்குச் சாதகமாய் அமைந்த மற்ருெரு காரணம், நேச நாடுகளிடையே நிலவிய செருக்கும் அளவு மீறிய நம்பிக்கையும் ஆகும். 1709-ல் பதினான்காம் லூயி சமாதானத்தைக் கருதிய போது அவருக்கு அளிக்கப்பட்ட கட்டளைகள் மானக்குறைவையும் அழிவையும் விளைவிப்பன வாயிருந்தன. எனினும், நாட்டின் கடுஞ்சோர்வையும் பொருட்படுத்தாது மீண்டும் போர் புரிய உறுதி கொண்டார். அது முதல் பல தோல்விகளை அடைய நேர்ந்தபோதிலும், நிலைமையில் மாறுதல் ஏற்படத் தொடங்கியது. பின்னர் 1711-ல் இங்கிலாந்தில் தோன்றிய மாறுதல், மற்றெல்லாவற்றையும்விட, பிரான்சிற்கு நேரவிருந்த இடரைத் தடுத்தது. தொடக்க முதல், இப்போர்க்கொள்கையை 'விக்கு'[2] கட்சியினர் ஆதரித்தனர். 'டோரி'[3] கட்சியினர் அமைதியைப் பெரிதும் விரும்பினர். 'விக்குகள்' கட்சிக்கு எதிரிகளாயிருந்தவர்களுடன், அரசியார் இணக்கமாயிருந்ததன் விளைவாக, நாளடைவில் விக்குக் கட்சியின் நிலைமை ஆட்டங்கண்டது. இந்நிலைக்குப் போரினுல் ஏற்பட்ட செலவு, இழப்புக்கள், சமயத் தகராறுகளில் அரசின் ஈடுபாடு முதலியன காரணங்களாகும்.

## இங்கிலாந்தில் டோரிகளின் வெற்றி

### உட்ரெக்டு சமாதானம்

அரசியாருக்கும் மால்பரோக் கோமகளுக்கும் ஏற்பட்ட சொந்தச் சச்சரவு இறுதியில் விக்குகள் கட்சியைக் கவிழச்செய்தது. டோரிகள் பதவியேற்றவுடனே சமாதானத்திற்கான செயல்களில் ஆவலுடன் ஈடுபட்டார்கள். அதனுடன் பிரெஞ்சு மன்னர் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே அவர்கள் அளிக்க முன்வந்தார்கள். போரைத் தொடர்ந்து நடத்த வேண்டுமென யூஜின் இளவரசரும் மால்பரோக் கோமகனும் முயன்றுங்கூடப் போரிலிருந்து இங்கிலாந்து விலகியது. தனித்து விடப்பட்ட ஆஸ்திரியாமீது டினேன்[4] என்னும் இடத்தே நடந்த சண்டையில் பிரெஞ்சினர் பொறுக்க இயலாத தோல்வியை உண்டாக்கினர். இறுதியில் சமாதானம் ஏற்பட்டது. 1713-ல் பிரான்சு கிரேட் பிரிட்டனுடன் உட்ரெக்டு[5] என்னுமிடத்திலும், 1714-ல்

[1] Barcelona. [2] Whigs. [3] Tories. [4] Denain. [5] Treatyiof Utrecht.



ஐரோப்பா 1715-இல்
ஊட்ரெக்ட், ராஸ்டாட்
உடன்படிக்கைகளுக்குப் பின்
பேரரசின் எல்லை
பீட்மாண்ட் (சேவாய் குடும்பம்)
ஹாப்ஸ்பர்க் ராச்சியங்கள்
பிரஷ்யா
ஹானோவர் (பிரன்ஸ்விக் குடும்பம்)
பவேரியாவும் பாலடினேட்டும்
வெனிஸ்
வடகடல்
பால்டிக் கடல்
ரஷ்யா
வார்சா
போலந்து
சாக்சனி
பொஹிமியா
ஹங்கேரி
கருங்கடல்
பிரான்சு
பாரிஸ்
ஸ்பெயின்
போர்த்துகல்
மாட்ரிட்
மத்தியதரைக் கடல்
சார்டினியா
சிசிலி
நேப்பிள்ஸ்
அட்ரியாடிக் கடல்
மொராக்கோ
அல்ஜியர்ஸ்
டூனிஸ்
பேரரசு
போலந்தின் பிரிவினை
1772 1793 1795
பிரஷ்யாவிற்கு
ரஷ்யாவிற்கு
ஆஸ்திரியாவிற்கு

ஆஸ்திரியாவுடன் 'ராஸ்டாட்'[1] என்னுமிடத்திலும் சமாதானம் செய்துகொண்டது.

## ஸ்பெயின் இழப்புக்கள்

### பிரான்சின் நிலையில் மாறுதல்

ஐந்தாம் பிலிப்பு ஸ்பெயின் மன்னராகவே இருந்தால், பிரான்சு ஸ்பெயின் முடிகள் எக்காலத்தும் ஒரே அரசாகச் சேருவதில்லை என வாக்குறுதி செய்தல் முதலியன இவ்வுடன்படிக்கையின் கூறுகளாகும். ஸ்பெயினின் நிலப்பரப்புக்கள் மிகவும் குறைவற்றன. நெதர்லாந்து, மிலான், நேப்பிள்ஸ், சார்டீனியா என்பவை ஆஸ்திரியாவைச் சேர்ந்தன. ஜிப்ரால்டரையும் மைனர்க்காத் தீவில் மகோன்[2] துறை முகத்தையும் இங்கிலாந்து தனக்கென வைத்துக்கொணடது. செவாய்[3] நாட்டுடன் சிசிலித் தீவு சேர்க்கப்பட்டது. எனினும், 'நம்முடைய வெளியுதவியற்ற முயற்சிகளாலேயே நாம் பரிவுடன் விரும்பிய மன்னரை ஸ்பெயின் மன்னராக அடைந்தோம்,' என்ற எண்ணமே ஸ்பெயின் மக்களது தேசியவுணர்விற்கு மகிழ்ச்சியை அளித்தது. பிரான்சு ஒரு சமயம் எவ்வளவு எதிர்பார்த்திருந்ததோ, அதற்குக் குறைவாகவே நாடுகளை இழந்தது. இங்கிலாந்தில் பிராட்டஸ்டென்டு சமயத்தினர் அரசுரிமையை ஏற்பது ஏற்றுக்கொள்ளப்பட்டது. பிரான்சிலிருந்து 'போலி' நாடு கடத்தப்பட்டார். அச்சமயத்தில் எவ்வித மனப்பதிவையும் தோற்றுவிக்காததும், பிற்காலத்தில் மிக முக்கியமான நிலையை அடைந்ததுமான நியூபவுண்டுலாந்து, நோவாஸ்கோஷியா, ஹட்சன் விரிகுடாப் பகுதிகளைப் பிரான்சு இங்கிலாந்தினிடம் விட்டு விட்டது. ஹாலந்திற்கும் ஆஸ்திரியாவிற்கும் பிரான்சு விட்டுக் கொடுத்தவைகளை ஒப்பிடும் பொழுது இவை சாதாரணமானவையாகும். இப்போரின் விளைவாக இலாபமாகக் கிடைத்த பகுதிகளைக் கொண்டு பிரான்சை நோக்கக்கூடாது. இவற்றுட் சில, அடுத்த தலை முறையில் செல்வாக்கு நிரம்பியவையாய் இருந்தன. ஆனல், உண்மையாக நோக்குமிடத்து இப்போரிலிருந்து கடுஞ்சோர்வையுடையதாய்ப் பிரான்சு வெளி வந்தது. அதன் நிலைமை சீரழிந்திருந்தது. நாட்டுக் கடன் அளவற்றதாய் வளர்ந்திருந்தது. அதன் மதிப்பு அழிக்கப்படா விட்டாலும் ஐரோப்பாவிலேயே மிகக் குறைந்துவிட்டது. அதனுடன் மன்னரிடம் மக்கள் ஆர்வத்துடன் கொண்டிருந்த பற்றுறுதி பெரிதும் தளர்வுற்றதுடன், பல காரணங்களினல் நம்பிக்கையின்மையும் மாறியிருந்தது. போர் நடந்துகொண்டிருக்கும்பொழுது முதன் முதலாக மன்னருடைய கொள்கைக்கு வெளிப்படையாக எதிர்ப்புக் கூறப்பட்டது. இவ்வாறு இடித்துக் கூறியவர்களுடன் பிரான்சின் திருச்சபையின்

[1] Rastadt. [2] Mahon. [3] Savoy

பிரதிநிதியாய் இருந்த ஃபெனிலான்[1] என்பாரும், சிறந்த வீரரும் பொறியாளருமென நாம் அறிந்த வாபான் என்பாரும் முதன்மையாயிருந்தனர். பல வகைகளில் மன்னருடைய செய்கைகளை வெளிப்படையாகக் குறை கூறினர்; நாட்டில் காணப்பட்ட அச்சுறுத்தும் ஏழ்மை நிலையைக் குறிப்பிட்டனர்; குறைகளைத் தீர்க்கச் சமமான வரி விதிப்பு முறையும் பிராட்டஸ்டென்டுகளின் பழைய குடிமையுரிமைகளும் மீட்கப்படவேண்டும் என அறிவுரை கூறினர்; பதினான்காம் லூயியினுடைய வரம்பின்மைக் கொள்கையில் சிறிதளவுகூட ஒத்த உணர்வு இல்லை. எனவே, 'அவருடைய (மன்னருடைய) கொள்கை பிரான்சை ஏழ்மையாக்கியது. நாட்டின் எல்லாப் பிரிவினரையும் பாழ்படுத்தி, அதன்மீது அவருடைய அரியணையை அமைத்திருக்கிறார்,' என அறிவித்தார்.

## முதுமையுற்ற பதினான்காம் லூயியின் துன்பியல்

### ரீஜன்சிக் குழு

போர் முடிவடையும் பொழுது பதினான்காம் லூயி பெரிதும் மூப்புற்றார். உள் நாட்டு வெளி நாட்டு இடர்கள் ஒன்றன்பின் ஒன்றாய் அவரைச் சூழ்ந்தன. பட்டத்திற்கு வாரிசு நிச்சயமாய் இருப்பதாகத் தோன்றியது. நோய் முதலில் அவர் மூத்த மைந்தரையும், பின்னர் அவர் மூத்தபெயரரையும், அதன்பின்னர் நேர் வாரிசு முறையில் இருந்த கொள்ளுப் பெயரரையும் கொன்றது. இப்போது அரசுரிமைக்கு வாரிசாய் இருந்தது ஈராண்டு நிரம்பப் பெற்ற ஒரு குழவியே. அக்குழந்தையும் இறந்துவிடுமானால், வாரிசு முறை கடுந்தொல்லைக்குட்படும். உயிருடன் இருப்பினும், நெடுநாள் வரையிற் பிரான்சு ரீஜன்சி ஆட்சியை ஏற்க வேண்டி வரும். பதினான்காம் லூயியின் இறுதிக்காலத்து முயற்சிகள் அவரது மரணத்திற்குப்பின் ஆட்சி புரிய ரீஜன்சிக் குழுவை ஏற்பாடு செய்வதில் காணப்பட்டன. எல்லாவற்றையும்விட அவரது சிறிய தந்தையாரின் புதல்வரான ஆர்லியன்சு கோமகனார் ஆட்சி ஏற்பதைத் தவிர்க்க விரும்பினார். இதற்குக் காரணம், அவரது அரசியல் கருத்துக்களைக் கண்டு லூயி அஞ்சியதும், சமயக் கருத்துக்களை வெறுத்ததுமேயாகும். அவருடைய இறுதி உயிலின்படி ரீஜன்சிக் குழுவை ஏற்படுத்தினார். அதில் அவரது முறைமையற்ற குழந்தைகள் இடம் பெற்றன. அக்குழுவிற்குத் தலைமைப் பதவியைத் தாங்குவதைத் தவிர, வேறு எந்த அதிகாரமும் ஆர்லியன்சு கோமகனாருக்கு அளிக்கப்படவில்லை. இவ்வாறு செய்வது வாயிலாக அவரது சொந்த ஆட்சி முறையே முக்கியக் கூறுகளுடன் அவரது மரணத்திற்குப் பின்னரும் நடைபெறும் எனக் கருதினார். 1715-ல் அவர் மரணமடைந்தார்.

[1] Fenelon.

ஐரோப்பிய வரலாற்றில் அவரது மரணம் ஒரு சகாத்தத்தைக் குறிக்கிறது. சற்றேறக் குறைய ஒரு நூற்றாண்டுக் காலமாக ஐரோப்பிய நாகரிகத்திற்குப் பிரான்சு வழி காட்டியது. எல்லா நாடுகளும் சமாதானக் கலைக்கும் துரைத்தன முறைக்கும் பிரான்சை ஓர் எடுத்துக் காட்டாகக் கருதின. நிகழ்ந்த போரினால் சீர் கேடுற்ற நிதி நிலைமையும் அதற்கு விரைவிலேயே ஏற்படவிருக்கும் துன்புறு துரைத்தனமும், அதன் உயர்நிலையிலிருந்து தாழ் நிலையை அடையச் செய்தன. இதனால் பிரான்சு ஐரோப்பியப் போர்க்களமாக மற்றப் போட்டியாளர்களிடம் எளிதாக விடப்பட்டது.

பிரெஞ்சு வரலாற்றில் பல வழிகளில் முக்கியமான இக்காலத்திற்கு எல்லாப் பிரெஞ்சு வரலாறுகளும் அதிகக் கவனம் செலுத்தியுள்ளன. லாவிசி தொகுத்துள்ள 'பிரான்சின் வரலாறு' என்ற நூலில் 7, 8ஆம் தொகுப்புக்கள் சிறந்த விவரங்களைக் கூறுகின்றன. செயின்ட் சைமன் எழுதியுள்ள வாழ்க்கைக் குறிப்புக்கள் அரசவை பற்றிய வாழ்க்கைக்கு முக்கிய ஆதாரங்களாயுள்ளன. பெயிலியும், செயின்டு ஜானும், ஆங்கிலத்தில் மூன்று தொகுப்புக்களாக இதைப் பயனுள்ள வகையில் சுருக்கிக் கூறியுள்ளனர். ஹாசல் எழுதியுள்ள பதினான்காம் லூயியும், ஸ்பெயின் நாட்டு வாரிசுரிமைப் போரைப் பற்றி மெக்காலே எழுதியுள்ள மிகச்சிறந்த கட்டுரையும் படிக்க வேண்டுவனவாகும்.

# 10. பதினேழாம் நூற்றாண்டில் கிரேட் பிரிட்டன்

## 17ஆம் நூற்றாண்டில் பிரிட்டனின் தனித்தன்மை

17ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவிலிருந்த முக்கியமான அரசுகளின் வரலாற்றைப் பற்றி முன்னர் நாம் நன்கறிந்தோம். இதே காலத்தில், கிரேட் பிரிட்டனுடைய வரலாற்றை அறிந்துகொள்ளுவது இவ்வதிகாரத்தின் நோக்கமாகும். நம் கருத்தை 1714-ல் முதலாம் ஜார்ஜ் அரியணையேறும்வரை செலுத்துவோம். ஆன் என்ற அரசியார் 1702-ல் அரியணையேறியதைவிட முதலாம் ஜார்ஜ் பட்ட மெய்திய காலம் இங்கிலாந்தின் வரலாற்றில் மிகத் தெளிவான முக்கியப் பகுதியாயிருந்தது.

பதினாறும் நூற்றாண்டில், இங்கிலாந்து தீவின் வரலாறு, அதே காலத்தில் மேற்கு ஐரோப்பாவின் முக்கியமான நாடுகளில் காணப் பட்டதைப் போன்று சில கூறுகளில் நெருங்கிய ஒற்றுமைகளைக் கொண்டிருந்ததை நாம் முன்னர்க் கண்டோம். அவை பின்வருவன: மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட நிறுவனங்கள் முடியாட்சியினால் மறைக்கப்பட்டிருந்தன; சமயத் தொடர்பான வாத எதிர்வாதங்கள், அவா ஆர்வங்கள் இவைகளின் ஆதிக்கம், மறுமலர்ச்சியெனப் பொது வாக வழங்கப்பட்டனவற்றில் எல்லாம் நேர்த்தியான முறையில் பங்கு கொள்ளுதல் போன்றனவாகும். ஆனால், 17ஆம் நூற்றாண்டில், இங்கிலாந்து, கிரேட்பிரிட்டன் இவற்றின் வரலாறுகள், ஐரோப்பாவி னின்றும் மிகவும் தனித்த தன்மையுடையனவாயிருந்ததுடன், மேற்கு ஐரோப்பாவில் இவற்றுக்கு இணையாக எங்கும் காணவியலாத தனிச் சிறப்புக்களைக் கொண்டிருந்தன. இக்காலம் முழுவதிலும், மற்ற நாடுகளுடன் ஐரோப்பாவின் போக்குவரத்து ஒரே சீராயிருந்தன. முடியாட்சியைக் கொண்டிருந்த இங்கிலாந்தில், ஸ்டுவேர்ட்டு மன்னர்

களின் ஆட்சிக்காலம் முழுவதிலும், பிரான்சின் முன் மாதிரி, வலு வான்தும், இடரானதும், அதைப் பின்பற்றுமளவுக்குக் கண்ணைக் கவர்வதுமாயிருந்தது. கார்டினல் ரிச்சிலூ, பதின்மூன்ரும் லூயிக்கு உதவியாயிருந்ததைப் போன்று, இங்கிலாந்தில் முதலாம் சார்லசிற்கு ஸ்ட்ராபோர்டு பிரபு[1] உதவியாயிருக்க முயன்ருர். மதத்தூய்மை யாளரின் கலகப்புயல் ஓய்ந்த பின், மீட்சியின் பயனுக இரண்டாம் சார்லசு ஆட்சியேற்றபொழுது, நாட்டை ஆளுவதில் ஓர் அரசர் 'பிரான்சின் முன் மாதிரியை,' அவரது கண்முன் வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், அரசியலிலும் சமயத்திலும் அம்முன் மாதிரியைப் பின் பற்றுவதில் விருப்பமுடையவராயிருக்க வேண்டுமென்றும் அடிக் கடி மன்னர் கூறி வந்தார்.

## 1688 புரட்சியின் முக்கியத்துவம்

ஆனல், 1688-ல் நடந்த புரட்சிப் புயலிற்சிக்குண்டு இக்கருத்துக்க ளெல்லாம் சிதறுண்டன. பாராளுமன்றம் பெற்ற இவ்வெற்றியே, ஐரோப்பாவின் அரசியல் வாழ்க்கைக்கு இங்கிலாந்து அளித்தவற்றுள் மிகவும் முக்கியமானதாகும். 1688-ல் ஐரோப்பா முழுவதையும் சுற்றிப் பார்ப்போமானல், எங்கும் மக்கள் பிரதிநிதிகளடங்கிய பாராளுமன்ற நிறுவனங்களை விடுத்து, முடியாட்சியை மையமாகக் கொண்ட துரைத் தனத்திலேயே நாட்டம் காணப்பட்டது நன்கு புலப்படும். மக்களைக் 'கூட்டுச் சேர்த்துக்கொள்ளுவதால்' அரசாங்கம் வலுவிழந்துவிடும் போலத் தோன்றியது. 1688 ல் ஆங்கிலேயப் பாராளுமன்றத்தின் வெற்றியும், அடுத்த நூற்றுண்டில் அது பெற்ற வெற்றிகளும், போர், வாணிகம், குடியேற்றம், நிதி முதலானவைகளிற் காணப்பட்ட வெற்றி களும் ஐரோப்பிய வரலாற்றுக்கே ஒரு புதிய எண்ணத்தை அளித்த துடன், அரசியல் வல்லுநர், கொள்கைக் கோட்பாட்டினர் ஆகிய இரு திறத்தாருக்கும் துணையாக அரசியல் உரிமையை மீண்டும் நிலை நாட்டியது.

## முதலாம் ஜேம்ஸ்

### மன்னர்களின் தெய்விக உரிமை

1603-ல் முதலாம் ஜேம்ஸ் ஆங்கில அரியணையேறியபோது, எலிச பெத்தரசியாரின் கொள்கையில் மாறுதல் ஏற்படுவது உறுதி யாயிருந்தது. டியூடர் ஆட்சி முறை, உள் நாட்டு வெளி நாட்டு இடர்களை எதிர்க்க உணர்ச்சியற்ற முறையில் ஏற்றுக்கொள்ளப் பட்டிருந்தது. இவ்விடர்கள் நீங்கியபோது கொள்கையும் மாறக்

[1] Lord Strafford.

கூடியதாயிற்று. இம்மாற்றத்தை முதலாம் ஜேம்ஸின் குண நலன்கள் மிக விரைவாயும் இடர் விளைவிக்கக் கூடியதாயும் செய்தன. இவர் அரசியார் எலிசபெத்துக்கு முற்றிலும் மாறுபட்டவராயிருந்தார். அரசியாரிடம் காணப்பட்ட எச்சரிக்கையும் அறிவுக் கூர்மையும் இவரிடம் இல்லை. ஐரோப்பிய வாழ்க்கையைப் பற்றி அரசியாருக்கு இருந்த அறிவும் இவரிடமில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, பெரும்பாலும் நாட்டின் பிரதிநிதியாகவே அரசியார் செயலாற்றியபோது, முதலாம் ஜேம்ஸ், அரசியலிலும் சமயத்திலும் தற்பெருமைகொண்ட ஒருதலைச் சார்பாளராகவே இருந்தார். 'மன்னர்கள் தெய்விக உரிமை பெற்றவர்கள்,' எனும் கொள்கையை விடாப்பிடியாய்க் கொண்டிருந்தார். நற்பேறற்ற இச்சொற்றொடர், பதினாரும் நூற்றுண்டில், சமயச் சார்பற்ற நாட்டின் பிரதிநிதியாயுள்ள இளவரசர் அல்லது மன்னர், திருச்சபையின் உடன்பாட்டைப் பெற்றே அல்லது பெருமலோ, ஆட்சிபுரிய உரிமையுள்ளவர் எனப் பொருள்படலாயிற்று. முதலில் இக்கருத்துப் பிராட்டஸ்டென்டுகளிடையே ஏற்பட்டது. ஆனால், 17ஆம் நூற்றுண்டில், சொற்றொடர்களின் பொருள் அடிக்கடி மாறியதைப் போல, இச்சொற்றொடரின் பொருளும் மாறுதலைப் பெற்றது; அதாவது, மன்னருடைய உடலே சிறப்பான புனிதத்தன்மையைக் குறிப்பதாயும், புனித நூலில் வெளியிடப்பட்டுள்ளபடி கடவுளின் விருப்பம், வரம்பில்லா மன்னாட்சியின் அதிகாரத்திற்குச் சாதகமாயும், மன்னருடைய உரிமைகள், சிறப்புரிமைகள் முதலியவைகளில் குறுக்கிடுவதைத் தடைசெய்வதாயும் கருதப்பட்டது. அதனுடன், சிறப்பாக மன்னர்கள் ஆதம் என்பாரின் வழித்தோன்றல்கள் என்னும் இவ்வுரிமை பற்றி, உலகம் முழுவதையும் ஆளக்கூடியவர்கள் என்ற கருத்தையும் கொண்டிருந்தது. இக்கொள்கையை எல்லா நாடுகளும் அறிந்துள்ளன என்றாலும், இங்கிலாந்தைப் போன்று பிற நாடுகளில் இக்கொள்கை அத்துணைப் பேரொலியுடன் பேரறிவிப்புச் செய்யப்படவில்லை.

## 17ஆம் நூற்றுண்டில் பாராளுமன்றம்

### பிரெஞ்சு முப்பேராயமும் இங்கிலாந்தின் பாராளுமன்றமும்

பாராளுமன்றத்தின் வாழ்க்கை, புத்துயிர் பெற்றது. 16ஆம் நூற்றுண்டில் இங்கிலாந்தையும் பிரான்சையும் ஒப்பிடுவோமானால், அவை மேற்போக்கான முறையில் ஒத்திருத்தலைப் போலக் காணப்பட்ட போதிலும், ஆழமான மாறுபாடு அவற்றிடையே தோன்றியது. 16-ம் நூற்றுண்டில் (சற்றேறக்குறைய 1560-ல்) இங்கிலாந்தின் பாராளுமன்றத்தைக்காட்டிலும், பிரான்சின் முப்பேராயம் மிக்க செல்வாக்குள்ளதாகக் கூடுமென்று சொல்லக்கூடிய தருணம் இருந்தது எனக் காண்போர் கூறலாம். ஆயினும், இக்கூற்று, முழுமையும் மேலெழுந்தவாருகக் கொண்ட தீர்ப்பு என்று கூறலாம். முப்பேராயம் அதிக

உரிமைகளைப் பாராட்டியது எனினும், வலுவற்றிருந்த துரைத்தனத் திடமிருந்து பெறக்கூடிய அதிகாரத்தை மாத்திரமே பெற்றது. துரைத்தனம் வலுவாயிருந்த காலை, முப்பேராயம் புறக்கணிக்கப் பட்டது. நாம் முன்னர் அறிந்தவாறு முப்பேராயம் 1614-ல் மறைந்து, பிரெஞ்சுப் புரட்சியின் விளைவாக நாட்டில் முதலில் ஏற்பட்ட நில நடுக்கத்தின்போது மீண்டும் ஒரு முறை கூடியது. பிரான்சின் வரலாற்றில் முப்பேராயம் ஆழமாக வேரூன்றியிருந்த போது, பிரான்சின் பாராளுமன்றம் உரிமைக்காகப் பாடுபடும், வாகை சூடுமிட மாய் விளங்கச் சற்றும் தகுதியற்றதாயிருந்தது. உரிமைக்காக வழக் கறிஞர் பாடு பட்டனர் என்றாலும், அவர்கள் குறுகியதும் ஒருதலையான திறங்கூறுதலையுந்தான் செய்திருக்க முடியும். அதனுடன், பிரெஞ்சுப் பாராளுமன்றம் அப்போதிருந்ததைவிட அதிக உணர்வு ஒளி பெற் றிருந்ததாய் இருந்துங்கூட, அரசாங்கத்தின்மீது திறமை வாய்ந்த தடையைச் செய்ய, சட்ட வரம்பிற்குட்பட்ட அதிகாரத்தைப் பெற் றிருக்கவில்லை. ஆதலால் அரசாங்கத்திற்கு எதிர்க்கட்சியாய் அமை யவும் இயலவில்லை. ஆனால், பல நூற்றாண்டுகளாகவே ஆங்கிலயேப் பாராளுமன்றம் மக்களின் பொது வாழ்வில் முக்கியப் பங்கு கொண் டிருந்தது. அதன் அதிகாரங்கள் வரையறுக்கப்படவில்லை. அதன் கோட்பாடும் ஆழ்ந்து சிந்திக்கப்படவில்லை. என்றாலும், அதை அழித்துவிடுவதென்பது, டியூடர் ஆட்சிக் காலத்திலுங்கூட எண்ண முடியாத புரட்சியை விளைவித்திருக்கும். முடியாட்சி வலுவற்றும், மக்களின் மதிப்பைப் பெறாமலும், வெளி நாட்டுப் பேரிடர்கள் இல்லா மலுமிருந்த போது, பாராளுமன்றம் செயற்பட முன் வந்து, முதலில், 'நாட்டு அரசாங்கத்தில் அதுவும் ஒன்று' என்றும், இறுதியில் நாட்டின் அதிகாரி என்றும் உரிமை பாராட்டியது. தவிர, இங்கி லாந்தில் உடனடியாகவும் உறுதியாகவும் பயனுள்ளவாறும் பாராளு மன்றத்திற்கெதிராகப் போர்ப்படையும் தன்னெதிர்ப்பைக் காட்ட எவ்வித வாய்ப்புமில்லாதிருந்தது. நாடு கடலால் சூழப்பட்டிருந்த தால், சுதந்தரத்தைக் காக்க நிலப்படை தேவையில்லாதிருந்தது.

## மன்னரின் நிலையில் சமயச் செல்வாக்கு

மன்னருக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே சமயம் எதிர்ப்பை வளர்த்தது. எட்டாம் ஹென்றியும், எலிசபெத்தும் செய்த திருச்சபை ஏற்பாட்டை, இடைக்கால ஏற்பாடாகவே பலர் கருதினர். சிலர், ஒழுங்கு முறைகள், சடங்குகள் முதலியவைகள் பற்றி அதற்கு முன் னிருந்த கால முறையளவிற்குத் திருப்ப விரும்பினர். மற்றும் சிலர், ஜினிவாக் கருத்துக்களைக் கான்டர்பரியில் தலைசிறந்தனவாகச் செய்ய வேண்டுமென்று எபிஸ்கோபலினியத்திற்குப் பதிலாக (சமயத் தலை மைப் பதவி) பிரஸ்பிட்டீரியக் கோட்பாட்டைத் தேர்ந்தெடுத்தனர்.

## முதலாம் ஜேம்ஸும் பாராளு மன்றமும்

### அரசியல் அமைப்பின்மீது வெளி நாட்டுக் கொள்கையின் ஆதிக்கம்

முதலாம் ஜேம்ஸின் ஆட்சியில், பெரும்போருக்கு ஆயத்தம் நடந்தது. வரி விதிப்பையனுமதிக்கும் சிறப்புரிமையைப் பாராளு மன்றம் கைக்கொண்டு, அவ்வுரிமையை ஏற்றுக்கொள்ளுமாறு மன்னரை வற்புறுத்தியதோடு, பொதுவான விவகாரங்களில் மன்னரின் ஆட்சி முறைகளைப் பற்றித் திறனாய்வு செய்யத் தலைப் பட்டது. இத்திறனாய்வை, ஜேம்ஸ் நயத்திறமின்றியும், மதிப்பின் றியும் ஏற்றார்; இறந்த போது அவர் புதல்வரான முதலாம் சார்லசிற்கு மிக்க தொல்லை நிறைந்த பணியை விட்டுச் சென்றார். பிரான்சின் வரலாற்றை மனத்திற்கொண்டு, இங்கிலாந்தில் நடந்த போராட்டத் தின் மற்றொரு பகுதியையும் அறியலாம். அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கையில் தோல்வி, பிரான்சில் மிகவும் புகழப்பட்ட அரசியல் அமைப்பை ஏன் இங்கிலாந்து அரசாங்கத்திற்கும் கொடுத்திருக்கக் கூடாது என இங்கிலாந்தின் மன்னர்கள் சிலசமயங்களில் அவர்களையே வினவியிருக்கவேண்டும். இங்கிலாந்தின் அயல் நாட்டு நடவடிக்கை களுக்கு அவர்கள் மதிப்போ அல்லது வெற்றியோ அளிக்கவில்லை யென்பது ஒரு விடை (மிக முக்கியமானதல்லாவிட்டாலும்) ஆகும். ரிச்சிலூவும், மசாரினும், பிரான்சை, ஐரோப்பாவின் நடுநிலை நாடாகச்[1] செய்தனர். ஆனால், முதலிரண்டு ஸ்டூவர்ட்டு மன்னர்களும் இங்கிலாந்தை அன்னிய நாடுகளின் ஏளனத்திற்கு உள்ளாக்கினர்கள். பழைய எதிரியான ஸ்பெயினிடமிருந்து இங்கிலாந்து அவமான மடைந்ததுடன், பிரான்சின் ஏமாற்றுதலுக்கும் அடிக்கடி உட்பட லாயிற்று. இங்கிலாந்தில் சட்ட வரம்பிற்குட்பட்ட ஆட்சிக்கும் அதன் வெளிநாட்டுக் கொள்கைக்கும், வேறு சில நாடுகளிலிருந்ததைப் போன்று நெருங்கிய தொடர்பு இல்லாதிருந்தது. ஆனால், அத்தொடர்பு இருப்பது முக்கியமாகும்.

## முதலாம் சார்லஸ்

### உரிமை விண்ணப்பம்

முதலாம் சார்லஸ் அவருடைய முதல் பாராளுமன்றக் கூட்டத் தொடர்களையணுகியபோது, ஸ்பெயின், பிரான்ஸ் நாடுகளுடன் நடந்த போர்களில் அவரது தோல்வியைக் குறித்தும், மக்களின் மதிப்பையிழந்த பக்கிங்காம் கோமகனுக்கு [2] ஆதரவளித்தது குறித்தும் அவை இடித் துரைத்தன. மன்னர் சினமுற்றவராய் முதல் இரு பாராளுமன்றங் களையும் கலைத்தார். ஹ்யூக்நோக்களின் சார்பில், ரோசேலுக்குப் படை

[1] Arbiter of Europ. [2] Duke of Buckingham.

யெடுத்துச் செல்லுவதை நிறைவேற்றுவதற்கு அவர் பேரவாக் கொண்டிருந்ததால், மூன்றாவது பாராளுமன்றத்தைக் கூட்டினார். (ரோசேல் முற்றுகை இங்கிலாந்து பிரான்ஸ் வரலாறுகளில் ஏறக்குறைய சமமான முக்கியம் வாய்ந்த நிகழ்ச்சியாகும். இது ரிச்சிலூவின் அதிகாரத்தை நிலைபெறச் செய்தது; ஆங்கிலேய மன்னருடைய அதிகாரத்தைத் தீமை பயக்கும் அளவிற்கு அமையச் செய்தது) மன்னருடைய பணமுடையைத் தூண்டுகோலாகக் கொண்டு பாராளுமன்றம் அதன் அதிகாரத்தையும் மக்களுடைய சுதந்தரத்தையும் பெற்றது. முதலாம் சார்லஸ், உரிமை விண்ணப்பத்தை[1] ஏற்றுக்கொள்ளும் படி கட்டாயப்படுத்தப்பட்டார் (1628). இவ்விண்ணப்பம், பாராளுமன்றத்தின் இசைவின்றி வரிகள் விதிக்கக் கூடாதென்றும், காரணம் காட்டாமலும் விசாரணை இன்றியும் எந்த ஆங்கிலேயரும் சிறைப் படுத்தப்படக் கூடாது என்றும், போர் வீரர்களுக்கும் மாலுமிகளுக்கும் தனியார் வீடுகளில் அக்குடும்பங்களின் ஒப்புதலின்றி உணவளிக்கும் படி வற்புறுத்தக் கூடாதென்றும் கூறியது. இது ஆங்கிலேயருடைய சுதந்தரத்தின் மூலதனம் போன்ற பத்திரமாகும். ஆயினும் மன்னருக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே ஏற்பட்ட தகராறு முடிவு பெறவில்லை. முந்தைய பாராளுமன்றங்களைப் போல இதுவும் விரைவிலேயே கலைக்கப்பட்டது.

## பாராளுமன்றமில்லாது பதினோராண்டுகள் ஆட்சி

பதினோராண்டுகள் (1629—1640) கழிந்தன. இக்காலத்தில் முதலாம் சார்லஸ் அவருடைய பகர ஆளான வென்ட்வொர்த்து[2] என்பாரின் (பிற்காலத்தில் ஸ்ட்ராபோர்டு ஏர்ல்கோமகனாயிருந்தவர்) துணைகொண்டு பாராளுமன்றமின்றியே ஆட்சி புரிந்து 'பிரெஞ்சு மாதிரி' யுடன் இசைவுள்ளதாக இங்கிலாந்தைச் செய்ய முயன்றார். சமாதான காலத்தில் நாட்டின் செலவுகளைச் செய்ய வேண்டிய தற்குப் போதுமான நிதியைத் திரட்டுவதற்கு வழிகளை வகுத்தார். நடுவர், கப்பற்பணம் விதிக்கலாமென்றும், அரசர் தேவையென நினைத்தவாறு தேவையான பணத்தைத் தேவையான காலங்களில் விதிக்கலாமென்றும் அறிவித்தபோது, 'பிரெஞ்சு' வரம்பிலா ஆட்சியின் எல்லையை இங்கிலாந்து மன்னர் நெருங்கிவிட்டதாகச் சிலருக்குத் தோன்றியிருக்கலாம். நடுவர்களின் கருத்து நிலைபெற்றிருக்குமானால் பிரான்ஸில் 1439-ல் காவல் துறையைக் குறித்து ஏற்பட்ட அவசரச் சட்டம்[3] பெற்றிருந்ததைப் போன்று இங்கிலாந்திலும் அதே விளைவு ஏற்பட்டிருக்கக் கூடும். அதை எவ்வாறு தடை செய்ய முடியும்? எதிர்ப்புத் தோன்றுமேயானால், அயர்லாந்தில் வென்ட்வொர்த்து எழுப்

[1] Petition of Right. [2] Wentworth.
[3] Ordonnance sur la gendarmerie.

பிய படை, எல்லா எதிர்ப்புக்களையும் அடக்குவதற்குப் போதுமானதாக இருக்கும் என்பது நம்பப்பட்டது.

## II

# லாடும் இங்கிலாந்தின் திருக்கோயிலும்

### ஸ்காட்லாந்தின் மேற்றிராணியார்களின் போர்களும் நீடித்த பார்லிமென்டும்

சமயம் சார்ந்த மனவெழுச்சிகள், அரசியல் நோக்கங்களுக்கு உதவியாயிருந்திராவிட்டால், முதலாம் சார்லசு பதவியிலிருந்து விலக்கப்பட்டிருப்பாரா? எவ்வாறுயினும், சமயத்தின் பக்கத்திலிருந்து தான் உறுதியான தாக்குதல் ஏற்பட்டது. 1633-ல் அதிமேற்றிராணியாராகச் செய்யப்பட்ட லாடு [1] என்பாருடன், இங்கிலாந்தின் திருச்சபைக்கு சில ஒப்பனைகளையும் சடங்குகளையும் மீட்சி செய்வது அல்லது அளிப்பதில் மன்னர் ஒத்துழைத்தார். இச்சடங்குகள் முதலியவை 'ரோம் நகரின் மிச்ச மீதிகள்' எனப் பியூரிட்டன்களுக்குத் தோன்றியது. இம்மாதிரியே ஸ்காட்லாந்து திருச்சபையிலும் சிலவற்றைச் செய்ய லாடு முயன்றுர். ஏற்கனவே முதலாம் ஜேம்ஸ் அங்கு மேற்றிராணியார்களைத் தோற்றுவித்திருந்தார். இப்பொழுது இங்கிலாந்திலிருந்ததற்கு நெருங்கிய இணைப்பான பொதுப் பிரார்த்தனை நூல் [2] வற்புறுத்தப்பட்டது. போப்பாண்டவரைப் பின்பற்றியதாயும், உருவ வழிபாடு என்றும் இவைகளைப் பிரஸ்பிட்டீரியர் இழிவாகக் கூறினர். இவற்றுடன் சமயச்சார்பற்ற மற்றக் குறைபாடுகளும் சேர்ந்து கலகங்களைத் தோற்றுவித்தன. இக்கலகங்கள் ஸ்காட்லாந்து மேற்றிராணியார்களின் போர்கள் [3] எனப்படும். உடனே கவனத்துடன் வகுக்கப்பட்டிருந்த முதலாம் சார்லசின் திட்டங்கள் எல்லாம் இடிந்து விழுந்தன. பதினேராண்டுகள் தம் விருப்பப்படி ஆண்ட ஆட்சி, சமாதானமான காலத்திலோ அல்லது போரில் ஓரளவு வெற்றி பெற்றது காரணமாகவோ நடைபெற வியலும். இப்பொழுது போரும் தோல்வியும் இணைந்து ஏற்பட்டன. போரில் ஏற்பட்ட செலவின் பணச்சுமையை எவ்வாறு சமாளிப்பது? எனவே மன்னர் பாராளுமன்றத்தை மீண்டும் கூட்டுவது தேவையாயிற்று. 1640-ல் பாராளுமன்றத்தை அரசர் கூட்டினுர். இது நீடித்த பார்லிமென்டு எனப்படும். மற்ற எல்லாப் பாராளுமன்றக் கூட்டங்களை விட இது மிகவும் முக்கியமானது. 1792-ல் நடைபெற்ற பிரெஞ்சுக் கன்வென்ஷன் சபை, [4] அதிகமான உரிமை பாராட்டாத வரையில் இப்பாராளுமன்றம் சிறப்புடையதாயிருந்தது.

[1] Archbishop Laud. [2] Book of Common Prayer.
[3] Scotch Bishops' Wars. [4] French Convention.

## முப்பதாண்டுப்போருடன் பியூரிட்டன்களின் புரட்சியை ஒப்பிடுதல்

1640 இலிருந்து 1660 வரையிலுள்ள காலம், அதிகமாகக் கவனத்தைக் கவர்வதாயும் ஆங்கிலேய வரலாற்றின் மற்றப் பிரிவுகளைக் காட்டிலும் அதிகமான வரலாற்று நூல்களைக் கொண்டுள்ளதாயும் உள்ளது. சுருக்கமாகக் கூட இதன் சரிதையைக் கூற முயலக் கூடாதெனினும், இங்கிலாந்தில் நடந்த உள்நாட்டுப் போரையும் (உண்மையில் ஆங்கிலேயப் புரட்சி) ஜெர்மனி, பிரான்சு நாடுகளில் நிகழ்ந்த போர்களையும் ஒப்பிட்டு ஒரு சில சொற்களைக் கூறலாம். ஜெர்மனியில் நடந்த முப்பதாண்டுப் போர்களுக்கும் பியூரிட்டன்களின் (கடுந்தூய்மைச் சமயத்தினர்) கலகத்திற்கும் இடையே அரசியல் காரணங்களுடன் சமயம் சார்ந்தவை ஒத்துழைத்தன என்பதைத் தவிர வேறு எவ்வித ஒத்திருத்தலும் இல்லை. இங்கிலாந்தின் போராட்டம் (அயர்லாந்தின் போராட்டம் முற்றிலும் மாறுபட்டிருந்தது) நாகரிகமற்றதாகவோ அல்லது மனிதத் தன்மையற்றதாகவோ இல்லை. உயிர்ச்சேதமும் பொருட்சேதமும் அதிகமேற்படவில்லை. போர் வீரர் எதற்காகச் சண்டையிட்டனரோ அதில் அக்கறையுடையவராயிருந்ததால் அவர்களைக் கூலிப் படைகள் எனக்கூற முடியாது. இங்கிலாந்து தீவுகளில் வாழ்ந்த மக்கள் அவர்களது ஊழை அவர்களே அறுதி செய்தார்கள். அன்னியர்களின் தலையீடு சிறிதும் இல்லை. அவர்களுடைய படைகளும் நாட்டின் எல்லையை மிதிக்கவில்லை. முப்பதாண்டுப் போரோ, ஐரோப்பாவின் மத்திய, மேற்குப் பகுதியிலிருந்த எல்லா நாடுகளையும் அநேகமாகச் சிக்கவைத்தது. ஆனுல், பியூரிட்டன்களின் புரட்சி, இங்கிலாந்து, அயர்லாந்து, ஸ்காட்லாந்து முதலியவைகளோடு நின்றுவிட்டது.

பியூரிட்டன் புரட்சிக்குப் பிரெஞ்சு ஃபிராண்டே போர்களை ஒரு சமயம் நெருங்கிய சரி நிகராகக் கூறலாம் என்ருலும், அவற்றிடையே ஒற்றுமையை அதிகமாகக் காண முடியாது. பிரான்சிலும் சமயம் சார்ந்த ஊக்கம் காணப்பட்டது. எனினும், ஜேன்சனியத்தின் செல்வாக்கால் தூண்டப்பட்ட பாரிசு பாராளுமன்றத்தினரிடம் ஆங்கிலேயப் பியூரிட்டன்களிடம் காணப்பட்ட வலிமை சிறிதும் காணப்படவில்லை. அதனுடன் ஜேன்சனியமும் கலப்பற்றதாயும் பரந்த செல்வாக்குடையதாயுமில்லை. ஜேன்சனியமும், பியூரிட்டானியமும் எவ்வளவு மாறுபட்டிருந்தனவோ அவ்வளவிற்கு இவ்விரு இயக்கங்களும் விரிவாக்கப்பட்டிருந்தன. அதே போன்று, பிரான்சின் உயர்நீதி மன்றம், வெஸ்ட்மின்ஸ்டரின் பாராளுமன்றத்திலிருந்தும் கிராம்வெல், கோண்டேயைக்காட்டிலும், ஆங்கிலேய நாட்டு உயர் குடியாட்சி, பிரெஞ்சு உயர் குடிப்பிறந்தோரினின்றும் முற்றிலும் வேறுபட்டிருந்தது.

## நீடித்த பாராளுமன்றத்தின் வெற்றி

நீடித்த பாராளுமன்றம் செயலில் இறங்கியதன் விளைவாக விரைவிலேயே உள்நாட்டுப் போர் ஏற்படலாயிற்று. ஸ்ட்ராபோர்டு ஏர்ல் கோமகனுர் தூக்கிலிடப்பட்டார். சார்லசு, கொலையையேற்கும்படி அவரை விட்டுவிட்டார். பதின்மூன்ரும் லூயி, ரிச்சிலூவைப் பகைவர்களிடம் விட்டு விட்டிருப்பாராளுல், பிரெஞ்சு வரலாறு எவ்வளவு மாறுதலையடைந்திருக்கும் ! ) நீடித்த பாராளுமன்றம், திருச்சபை, ஆட்சி முதலியவைகளில் மன்னரின் கொள்கைகளைத் தாக்கியது. கலகத் தலைவர்களைச் சிறை பிடிப்பது வாயிலாகப் பாராளுமன்றத்தை அச்சுறுத்த மன்னர் எண்ணினுர். இம்முயற்சி தோற்றது. இம்முயற்சியையே போர் பற்றிய அறிவிப்பாகக் கருதியது. முதலிரண்டு ஆண்டுகளில் இரு திறத்தாருக்கும் சண்டை வெற்றி தோல்வியின்றிச் சமமாய் இருந்தது. பின்னர், இரு காரணங்கள் பாராளுமன்றத்திற்கு வெற்றியை அளித்தன. முதலில், பிம்[1] என்பார், 'முழுப்பற்று நிறைவுடைய சங்கமும் ஒப்பந்தமும்'[2] என்பதை இங்கிலாந்து ஏற்றுக்கொள்வது என்ற அடிப்படையில், ஸ்காட்லாந்துடன் ஒப்பந்தம் செய்து கொள்ளப் பேச்சு வார்த்தைகளை நடத்தினர். இதன் விளைவாக, பாராளுமன்றத்தின் பக்கத்தில் சேர்ந்து சண்டை செய்வதற்காக ஸ்காட்டுப் படைகள் இங்கிலாந்திற்குள் நுழைந்தன. அடுத்துக் கிராம்வெல் என்பார், அதேசமயத்தில், அவரது புதுமாதிரிப் படையை[3] அமைத்துக்கொண்டிருந்தார். அப்படை ஒழுங்கான அமைப்பும், ஒழுங்காக ஊதியமும் அளிக்கப்பட்டதுடன், நன்கு பயிற்சி செய்விக்கப்பட்டதாயும், துணைச்சாதனங்களை நன்கு பெற்றதாயும், ஆழ்ந்த சமய ஆர்வத்தால் தூண்டப்பட்டதாயும் இருந்தது; தவிர, பிரஸ்பிட்டீரியத்தை விடச் சுதந்தரத்தை ஆதரித்ததாயுமிருந்தது. எனவே, சார்லசு 1644-ல் மார்ஸ்டன் மூர் எனுமிடத்திலும் 1645-ல் நேஸ்பி எனுமிடத்திலும் தோல்வியுற்ருர்.

## பாராளுமன்றத்திற்கெதிராகப் படையின் திருப்பம்

முதலாம் சார்லஸ் கொலையுண்ணல்

இவ்வெற்றிகளைப் பெற்ற படை சாதாரணப் படையன்று. அரசியலிலும் சமயத்திலும் மிக வலிய கருத்துக்களை அது கொண்டிருந்தது; எனவே, பாராளுமன்றத்தின் ஆணைக்குக் கீழ்ப்படிய மறுத்தது. மன்னருடன் பேச்சுவார்த்தைகள் நடத்தியது. மன்னர் ஒருசமயம் அதனுடைய யோசனைகளை ஏற்றுக்கொண்டு படைத்தலைவர்களுடன்

[1] Pym, [2] Solemn League and Covenant. [3] New Model Army.

சமாதான ஒப்பந்தத்தைச் செய்துகொண்டிருப்பாரானால், மீண்டும் பதவியையும், ஓரளவு அதிகாரத்தையும் பெற்றிருக்கலாம். ஆனால், மன்னர், ஊழ் திறம்பட்ட இன்பமே எதிர்பார்க்கும் மனப்பான்மை யையும் அரசியல் தந்திரத்தில் அசைக்க முடியாத நம்பிக்கையையும் கொண்டிருந்தார். இங்கிலாந்து, ஸ்காட்லாந்துப் படைத்தலைவர்க ளிடையே காணப்பட்ட மாறுதலான கருத்துக்களைச் சாதகமாகப் பயன் படுத்திக்கொண்டு அவருடைய சார்பில், இங்கிலாந்தின்மீது படை யெடுக்கும்படி ஸ்காட்டுகளைத் தூண்டினர். இதற்கு முன், மரணத் தைப்பற்றிய எண்ணமே அவருக்கு இல்லை. முதலில் அரசியலமைப்பை எதிர்த்ததைவிட இரண்டாவதாக ஏற்பட்ட இந்த உள் நாட்டுப் போர்தான் அவர் கொலை செய்யப்படுவதற்குத் துணையாய் முடிந்தது. மன்னருடைய ஆங்கிலேய ஆதரவாளர்களைக் கால்செஸ்டர் என்னு மிடத்தில் பேர்பாக்ஸ்[1] என்பார் தேக்கி வைத்துக் கொண்டிருக்கும் போது, பிரஸ்டன் என்னுமிடத்தில் ஸ்காட்லாந்து, இங்கிலாந்துக் கூட்டுப் படைகளைக் கிராம்வெல் சிதறவடித்தார். வெற்றியினால் பெருமிதங்கொண்டு பாய்ந்து செல்வதும், இரத்தம் சிந்துவதில் பழக்கப் பட்டதுமான படை, 'ஸ்டூவர்ட்டு மரபினரான சார்லஸ் என்ற மனிதர்' மீது நடவடிக்கையெடுப்பதற்காக இலண்டனுக்குத் திரும்பியது. வல்லந்த முறைகளைக் கொண்டு படைகள் பாராளுமன்றத்தைத் தூண்டின. படையினுடைய கொள்கைக்கு ஆதரவு காட்டாத உறுப் பினர் வெளியில் விரட்டப்பட்டனர். நீடித்த பாராளுமன்றத்தின் சிறுபான்மையோரைக் கொண்டிருந்த இப்பாராளுமன்றம் 'ரம்ப்'[2] என்று வழங்கப்பட்டது. படையின் ஆணைப்படி (ஜனவரி 1649) நீதி மன்றத்தை நிறுவி மன்னரை விசாரித்துக் கொலைத் தண்டனை அளிக்கும் படி செய்தது.

## III

## காமன்வெல்த்து

### கிராம்வெல்லும் அயர்லாந்தும்

காமன்வெல்த்து (பொதுநலக் கூட்டு) அல்லது குடியரசு ஏற்படுத் தப்பட்டது. இதற்குப் பகைவர் எங்குமிருந்தனர். ஆங்கிலேயர்களுட் பெரும்பான்மையோர், காமன்வெல்த்தை ஆதரித்தவர்களுக்கு எதிரிக ளாயிருந்தனர். அயர்லாந்தும் ஸ்காட்லாந்தும் அவர்களுக்கு எதிரி களாயிருந்தன. இப்புதிய அரசாங்கத்திற்கு உண்மையில் ஊழ்விதித்த பதினோராண்டுகள் வரை இது நீடித்திருக்கக் கூடுமா என்பது தோன்ற வில்லை. முதலில் இது பகைவரனைவரையும் வென்றது. போரிலும்,

[1] Fairfox. [2] Rump.

ஆட்சி முறையிலும் சிறப்பு வாய்ந்த தலைவராகக் காமன் வெல்த்து ஆட்சி, கிராம் வெல்லைப் பெற்றிருந்தது. கிராம்வெல் போரார்வங் கொண்டிருந்ததுடன், செயல் புரியும் ஆற்றலும் நிரம்பியவராயிருந்தார். சமயத்தில் ஈடுபாடுள்ளவராயும், இங்கிலாந்தின் நிதி, வாணிக விஷயங்களை நன்கறிந்துகொண்டவராயும், இயற்கையில் வலிமை மிக்க பழமைவாதியாயிருந்தும் சூழ் நிலைகளால் ஏவப்பட்டவராய்ப் புரட்சியாளராயுமிருந்தார்; அயர்லாந்தில் காணப்பட்ட எதிர்ப்பை அடக்கினர்; அவருடைய கொடூரச்செயல்களாலும், மக்களை அவர்களுடைய நிலங்களிலிருந்து ஈவிரக்கமின்றியும் நியாயமில்லாமலும் வெளியேற்றியது வாயிலாகவும் மறக்க முடியாத மனக் கசப்பையும் பிரச்சினைகளையும் அயர்லாந்தின் துரைத்தனத்தில் விளைவித்தார். இப்பிரச்சினைகளுக்கு இங்கிலாந்து தீர்வு காண முடியவில்லை. ஸ்காட்லாந்திடமிருந்து காமன்வெல்த்துக்கு ஏற்பட்ட அச்சம் மிகக் கடுமையாயிருந்தது. எடின்பரோவில் இரண்டாம் சார்லசு மன்னராகப் பேரறிவிப்புச் செய்யப்பட்டிருந்தார். பல பிரச்சினைகளில் ஸ்காட்லாந்தினர் அவர்களுக்குள் மாறுபட்ட கருத்துடையவராய்ப் பிரிந்திருந்துங்கூட, இங்கிலாந்தில் இராணுவம் செய்தவைகளை வெறுப்பதில் ஒருமுகமாயிருந்தனர். ஆனால், போரின் தொடக்கத்தில் ஸ்காட்டுகளிடம் காணப்பட்ட இராணுவ வலிமை இப்போது இங்கிலாந்திடம் காணப்பட்டது.

## கிராம்வெல்லும் ஸ்காட்லாந்தும்

**கிராம்வெல் இரட்சகப் பிரபுவாதல்**

டன்பார் எனுமிடத்தில் (1650) ஸ்காட்லாந்தின் படை எதிர்பாராத முறையில் தோல்வியுற்றது. இரண்டாம் சார்லசு திடீரென்று இங்கிலாந்தின்மீது படையெடுத்தபோது, ஓர்ஸெஸ்டர் என்னுமிடத்தில் அவர் சூழப்பட்டுத் தோற்கடிக்கப்பட்டார். இரு வெற்றிகளுக்கும் கிராம்வெல் ஏஜென்டாயிருந்தார்; நாட்டில் மிக்க செல்வாக்குடைய மனிதர் அவர் ஒருவரே என்னும் நிலைமையை மேன்மேலும் அடைந்தார். இங்கிலாந்தின் எதிர்கால அரசாங்கம் பலரது கவனத்தை ஈர்க்கலாயிற்று. நாடு முழுவதும் செல்வாக்கில்லாதிருந்தது. இங்கிலாந்தில் இராணுவம் மட்டுந்தான் செல்வாக்கைப் பெற்றிருந்தது. 1653-ல் கிராம்வெல், நாட்டு மக்களின் பிரதிநிதியாகப் பேசுவதற்கு உரிமையற்றிருந்த (ரம்ப் பார்லிமென்டு) எச்சப் பாராளுமன்றத்தை வெளியேற்றினர். அதிகாரிகளிடமிருந்து புதியதிட்டம் வெளியிடப்பட்டது. இத்திட்டம் அரசாட்சி அமைப்புப் பத்திரத்தில் அடங்கியிருந்தது. காமன்ஸ் சபையை மாத்திரம் கொண்ட பாராளுமன்றம் ஏற்பட்டது. இதன் உறுப்பினர் பல தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தனர். 1832-ல் ஏற்பட்ட சீர்திருத்தச் சட்டத்திற்கு இத்தொகுதிகள் முன் மாதிரியாயிருந்தன. அரசாங்கத்தின்

தலைவராக, தலைமைக் காப்பாளரும்[1] அவருக்கு உதவியாக நாட்டு மேற்சபை[2] எனும் ஆட்சிக் குழுவினரும் ஏற்பட்டனர். புரவலராகக் கிராம்வெல்லைத் தவிர மற்றவர் பதவி வகிக்கக் கூடாதென்றும், அப் பதவியில் வாணுள் முழுமையும் அவர் இருப்பதென்றும் முடிவுசெய்யப் பட்டது.

## அரசியலில் கிராம்வெல்லின் தோல்வி

### கிராம்வெல்லின் மரணத்துக்குப்பின் அரசின் கேடு

கிராம்வெல் ஒரு பெரிய மனிதராயிருந்தும், அவருடைய நேர்மையைப் பற்றி இப்பொழுது எவரும் விவாதிப்பதில்லை. அவருடைய பதவி நிலையற்றிருந்ததுடன், அவரது அரசாங்கமும் செயற்படக் கூடியதாயில்லை. மக்களிற் பெரும்பான்மையோர், பியூரிட்டானியத்தின் அதிகாரத்தை விரும்பவில்லை; முடியாட்சியை மீண்டும் ஏற்படுத்த விரும்பினர். அதனுடன் கிராம்வெல்லின் ஆட்சியையும் வெறுத்தனர். கிராம்வெல்லின் அதிகாரம் இராணுவத்தின்மீது அமைக்கப்பட்டிருந்தது. ஆனுல், அதை நம்புவதற்கு அவர் மறுத்தார்; இங்கிலாந்து மக்களுட் பெரும்பகுதியினரை ஏற்றுக்கொள்ளச் செய்வதற்காக, புதிய துரைத் தனத்தில் சில மாற்றுப் பொருத்தங்களைச் செய்ய, பயனில்லாது கடு முயற்சி செய்தார்; ஆனுல், கத்தி முனையில் அதிகாரத்தைப் பெற்றுர். எனவே, கத்தி முனையைக் கொண்டே ஆட்சி செய்ய ஊழின் தீர்ப்பு ஏற்பட்டது. 1655-ல் ஸ்பெயினும் பிரான்சும் அவரது ஆதரவைப் பெறுவதற்குப் போட்டியிட்டதிலிருந்து, அவருடைய அதிகாரம் எவ்வளவு பெரியதாயிருந்தது என்பது தெரிய வந்தது. பிரான்சுடன் அவர் கொண்ட உறவின் விளைவாக, பிரான்சிற்கு இறுதி வெற்றி கிட்டியதுடன், பிரனீஸ் சமாதானம் ஏற்படவும் வழி செய்தது. சமாதானம் ஏற்படும் வரை கிராம்வெல் உயிருடனில்லை. 1650 செப் டெம்பரில் அவர் மரணமுற்றுர்.

### மாங்கு

இதன்பின், பொதுநிலை கடந்த குழப்பம் உண்டாயிற்று. அதைப் பற்றிப் பின்காணும் வகையில் சுருக்கிக் கூறலாம். ஆங்கிலேயர்களில் பெரும்பகுதியினர்—அரசரை ஆதரிப்போர், ஆங்கியலேயத் திருச்சபையைச் சார்ந்தவர், பிரஸ்பிட்டீரியக் கொள்கையினர், ஜனநாயகவாதிகள், பாராளுமன்றத்தினர் ஆகிய அனைவரும்—இப்புதிய ஆட்சிமுறையை எதிர்த்தனர் ஒருவராவது புரவலரான கிராம்வெல்லால் ஏற்படுத்தப் பட்ட திருச்சபையாட்சி முறையை உண்மையில் ஏற்றுக்கொள்ளவில்லை.

[1] Lord Protector. [2] Council of State.

ஆட்சி இராணுவவுதவியைக் கொண்டு அமைந்திருந்தது. இப்போது அவ்வுதவி முறிந்தது. பாதுகாப்பாளராகத் தந்தையாருக்குப் பின் பதவியேற்ற ரிச்சர்டு கிராம்வெல் வலுவற்றிருந்ததால், பதவி துறந்தார். படைத்தலைவர்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டார்கள். இக்குழப்பத்தின் நடுவில் எச்சப் பாராளுமன்றம் மீண்டும் பதவிக்கு வருவதற்கான சந்தர்ப்பத்தைக் கண்டதுடன், பதவிக்கு வந்ததாயும் கற்பனை செய்தது. ஆயினும், எந்த முடிவும் இராணுவத்தினிடத்திலிருந்துதான் ஏற்படவேண்டும். ஸ்காட்லாந்தில் இராணுவத் தலைவராயும் மன்னரை ஆதரிப்பவராயுமிருந்து பிறகு பியூரிட்டானியத்தைவிடக் கிராம்வெல்லைப் பின் பற்றுகிறவராயிருந்த மாங்கென்பார்[1] இங்கிலாந்தின்மீது படையெடுத்தார். தொல்லையை விளைவிக்கும் அமைதி சிறிதுகாலம் நிலவியது. அதன்பின், சுதந்தரமான சூழ்நிலையில், தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றத்தால், இங்கிலாந்தின் உரிய நிலை முடிவு செய்யப்படவேண்டுமென அறிக்கையிட்டார். 'மன்னர், பிரபுக்கள், பொதுமக்கள் இவர்களால் துரைத்தனம் இருக்க வேண்டும்; அமைக்கப்பட வேண்டும்,' என்பதற்கு இப்புதிய பார்லிமென்டு முதலாவதாகச் சட்டமியற்றியது. அதனுடன் இறந்துபோன தந்தையாரின் பதவியையடைய இரண்டாம் சார்லசை அழைப்பதென்றும் முடிவு செய்தது. அவரும் வந்தார். ஹிஸ்டீரியாப் போன்ற மனவெழுச்சியுடன் மக்களும் அவரை எதிர் கொண்டழைத்தார்கள்.

## IV

## இரண்டாம் சார்லசின் நோக்கங்கள்

### இரண்டாம் சார்லசும் பாராளுமன்றமும்

மேற்கு ஐரோப்பிய நாடுகளைப் போன்று, இங்கிலாந்தும், மீண்டும் முடியாட்சி பெற்றது. இவ்வொத்திருத்தலை மேலும் விரிவுள்ளதாகச் செய்ய வேண்டுமென்று மன்னர் கருதியதுடன், அரசியல், சமயஞ் சார்ந்த செய்திகளில் 'பிரெஞ்சு மாதிரியை'ப் பின்பற்ற வேண்டுமென்றும் கருதினர். ஆனல், இம்முடிவு கருதி, மேற்கொண்ட முயற்சியெல்லாம் தோல்வியுறுமாறு ஊழ் கூட்டியது. 1640-ல் இருந்ததைவிட, 1660 ல் இங்கிலாந்தின் அமைப்பு, பிரெஞ்சு மாதிரிக்கு மிக நெருங்கியதாய் இருக்கவில்லை. இராணுவ ஆட்சிக்கும் பியூரிட்டானியர்களின் டொமினியனுக்கும்[2] எதிராகத் தோன்றிய வெறுப்புணர்ச்சியின் விளைவாக மீட்சி ஏற்பட்டதேயொழிய, முடியாட்சியாகிய வல்லாட்சியில் மக்களுக்கிருந்த பற்று மிகுதியால் அன்று. முடியாட்சியின் மீட்சியுடன் பாராளுமன்றத்தின் மீட்சியும் ஏற்பட்டது. மாறு

[1] Monk. [2] Purtian Dominion.

பட்ட உரிமைகளுக்காகப் போராடிக் கொண்டிருந்த மன்னரும் பாராளுமன்றமும் உண்மையான எவ்வித முடிவுமின்றி மீண்டும் நேருக்கு நேராக எதிர்த்து நின்றனர். இப்போராட்டக் கொள்கை அல்லது முன் நிகழ்ச்சிகள் முதலியவைகளைப் பற்றி ஏற்படவில்லை; அதிகாரத்தைப் பற்றியிருந்தது. 'இருவர் ஒரு குதிரை மீது சவாரி செய்ய நேரின் ஒருவர் மற்றொருவருக்குப் பின்னாலே தான் அமர வேண்டும்.'

நீடித்த நாடுகடத்தலின்போது நிகழ்ந்த வீரச் செயல்களை அனுபவித்த பின்பு, இரண்டாம் சார்லசு மன்னராக வாழ்வதைப் பேருவகைகொண்டதாகக் கண்டார்; எனவே, மீண்டும் தம் யாத்திரைகளை மேற்கொள்ளுவது இல்லையென முடிவு செய்தார். அவர் அறிவுக் கூர்மையும் சூழ்திறனில் தேர்ச்சியும், எப்பிரச்சினையிலும் வெறியுணர்ச்சியில்லாமையும், விளையவிருக்கும் இடரை விரைவில் உணர்ந்துகொள்ளுந்திறமும் உடையவராயிருந்தார். பாராளுமன்றத்துடன் நெருக்கடி மீண்டும் விரைவில் தொடங்கியது. அரசியல் அல்லது சமயம் பற்றிப் பாராளுமன்றம் கொண்டிருந்த கருத்துக்கள் மன்னருடைய கருத்துக்களுக்கு மாறுபட்டிருந்தன. பாராளுமன்றம் ஆங்கிலேயர்களின் கொள்கையை உறுதியாகக் கொண்டிருந்ததுடன், மாறுபட்டிருந்தவைகளை எதிர்த்துக் கடுமையாகத் துன்புறுத்தும் சட்டங்களையும் இயற்றியது.

## ஹாலந்துடன் போர்

### முக்கூட்டும் டோவர் இரகசிய உடன்படிக்கையும்

மன்னர் ரோமத் திருச்சபையின்மீது வலுவான சார்புடையவராயிருந்ததுடன் சமயச் சகிப்புத்தன்மையைப் பின்பற்றும் சோதனையில் ஆவலுடையவராயுமிருந்தார். அன்னிய விவகாரங்களும் இதில் பங்கு பெற்றன. நாட்டிற்குப் புகழையும் வெற்றியையும் அளிக்கும் மன்னரை அவர் விருப்பம்போல நடக்க விட்டிருப்பார்கள். ஆனால், இங்கிலாந்து 1655-ல் வாணிக, குடியேற்றக் காரணங்களுக்காக, ஹாலந்துடன் நிகழ்ந்த போரில் தவறாக இறங்கியதுடன் போரில் பேரவமானத்தையும் அடைந்தது. டச்சுக் கப்பற்படை தேம்ஸ் நதி வழியாக உள் நாட்டிற்குள் புகுந்து, சாதம்[1] என்றவிடத்தைத் தாக்கியதுடன், பலவாரங்கள் இலண்டன் நகரின் போக்குவரத்தையும் தடை செய்து முற்றுகையிட்டது. கடற்சண்டையில் இங்கிலாந்திற்கு ஏற்பட்ட அவமானங்களில் இத்தோல்வி மிகக்கடுமையானதாகும். இதனுடன், நாட்டின் அரசியல் நிலைமையிலும் உடனே எதிர் விளைவை உண்டு பண்ணியது. கொள்ளை நோயாலும், இலண்டனிலேற்பட்ட

[1] Chatham.

பெருந்தீயினுலும் நாடு மிகவும் இழி நிலையிலிருந்தது. மன்னர், தம் சிறந்த அமைச்சரான கிளாரண்டன்[1] பிரபுவைப் பலியிடும்படி நேர்ந்தது; நிதி விஷயத்தில் பாராளுமன்றத்தின் நெருக்கமான கட்டுப் பாடுகளுக்கும் அடி பணிய நேர்ந்தது.

1668-ல் வாரிசு முறையைச் செயற்படுத்துவதற்காக அமைந்த போரில், பிரான்ஸ், ஸ்பெயினுக்குச் சொந்தமான பெல்ஜிய நாட்டுப் பகுதிகளைக் கடுமையாகத் தாக்கிக் கொண்டிருக்கும்போது, இரண்டாம் சார்லஸ், நாட்டிற்குப் பெருமனநிறைவையளிக்கும் கொள்கையைப் பின்பற்றினுர். பதினுன்காம் லூயி, வல்லந்தமாக நாடு பிடித்தலைத் தடை செய்வதற்காக ஹாலந்து, ஸ்வீடன் நாடுகளுடன் முக்கூட்டிற் சேர்ந்தார். இப்புதிய அமைப்பு உடனே வெற்றியையளித்தது. பதினுன்காம் லூயி எயிக்ஸலா சாப்பல்[2] உடன்படிக்கையை ஏற்றுக் கொண்டார். ஆனுல், இங்கிலாந்தின் வெளி நாட்டுக் கொள்கையில் புதிய நோக்கம் விரைவில் கைவிடப்பட்டது. இதன் விளைவுகள் இரண்டாம் சார்லசிற்கு ஏமாற்றத்தையளித்தன. இதற்குப் பாராளு மன்றம் அவர் செலவிடுவதை உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்த துடன், கத்தோலிக்க, பிராட்டஸ்டென்டு மறுப்பாளர்களுக்குச் சமயச் சகிப்பு அளிப்பதையும் அனுமதிக்கவில்லை என்பதும் காரணமாகும். பிரான்சின் மேற்காட்டு அவரது மனத்தைக் கவர்ந்திருந்தது பிரெஞ்சு மன்னரின் உதவியால், இங்கிலாந்தில் தம்மை உண்மையான அரசராகச் செய்துகொள்ளுவதையும், தம்மை ரோமன் கத்தோலிக்கர் என்று அறிவித்துக்கொள்ள முடியுமென்பதையும் நம்பியிருந்தார். எனவே, 1670-ல் பிரான்சுடன் டோவர் இரகசிய உடன்படிக்கையைச் செய்துகொண்டார்.[3] பிரான்சு விரும்பும்போது அதனுடன் சேர்ந்து கொண்டு ஹாலந்தைத் தாக்குவதாக வாக்களித்தார். இதற்குப் பதிலாகப் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிலிருந்து சுயேச்சையான முடியாட்சியை ஏற்படுத்துவதில் சார்லசின் திட்டங்களுக்கு ஆள், பொருள் முதலியவைகளைக் கொடுத்து உதவி புரிவதாகப் பிரான்சு இசைந்ததுடன் இங்கிலாந்தில், ரோமன் கத்தோலிக்கச் சமயத்தைச் சகித்துக்கொள்ளக் கூடிய சமயமாகச் செய்வதற்கும் பிரான்சு உடன் பட்டது. இங்கிலாந்தில் எந்த மன்னரும் மக்களுக்கு எதிராக இவ்வளவு துரோகம் செய்யக் கூடிய ஒப்பந்தத்தை இதற்கு முன்னர்ச் செய்த தில்லை. எந்தச் செயல்களுக்காக முதலாம் சார்லசு உயிரை இழந் தாரோ, அவற்றை இதனுடன் ஒப்பிடும்போது மன்னிக்கக் கூடியவையா யிருந்தன. பதினுரும் லூயியின் துரோகம், அவருடைய செயல்களை மிக மோசமாக விளக்கிப் பொருள் கூறினுலும், அவ்வளவாகத் துயரம் நிறைந்ததாயில்லை.

[1] Clarendon. [2] Treaty of Aix-la-Chapelle. [3] Secret Treaty of Dover.

## இரண்டாம் சார்லசுக்குப் பிற்காலத்தில் தோன்றிய தொல்லைகள்

விலக்கு மசோதா

துரோகம் பெருங்குற்றமாயிருந்ததோடு, தவருயுமிருந்தது. அவருடைய ஆட்சியின் பிற்காலத்தில் நேர்ந்த துன்பங்கள் இதன் விளைவாய் ஏற்பட்டனவாகும். இரண்டாம் ஜேம்ஸையும் ஸ்டூவர்ட்டு மரபையும் இங்கிலாந்தின் அரியணையிலிருந்து விரட்டுவதற்கு அது உதவியாயிருந்தது. ஹாலந்து மீது பிரெஞ்சுத் தாக்குதல் எவ்வாறு தோல்வியுற்றது என்பதையும், ஆரஞ்சு நாட்டு இளவரசர் எவ்வாறு இங்கிலாந்தில் மூன்றும் வில்லியம் என ஆட்சி புரிய ஊழ் வழிசெய்தது என்பதையும் நாம் அறிந்தோம். இந்த இரகசிய உடன் படிக்கை இரகசியமாகவே வைக்கப்பட்டிருந்தது. ஆனல், இதைப் பற்றி ஐய மேற்பட்டது இறுதியில் இரகசியம் வெளியாயிற்று. பிராட்டஸ்டென்டு, பாராளுமன்றம் இவற்றுடன் மன்னருக்கிருந்த எதிர்ப்பு முன்பிருந்ததைக்காட்டிலும் கடுமையாயிற்று. 1674-ல் ஹாலந்துடன் சமாதானம் செய்துகொள்ளும்படி அவர் கட்டாயப்படுத்தப்பட்டார். ஆனல், அவருடைய எதிரிகளின் ஐயங்களும் பகைமையும் குறைய வில்லை. இரண்டாம் சார்லசிற்கு முறையான வாரிசு இல்லை. அவர் உடன் பிறந்தாரான ஜேம்ஸ், அவருக்குப் பின் ஓரமயம் ஆட்சி புரியக் கூடும். அவர் உறுதியான ரோமன் கத்தோலிக்கர். முதலில் 'நாட்டுப் புறக் கட்சி'யென வழங்கப்பட்டு, பின்பு 'விக்குகள்' என வழங்கப் பட்டவர்கள் தம்கட்சியின் முயற்சிகளையெல்லாம் விலக்கு மசோதாவில்[1] முழுமையாகச் செலுத்தினர். இம் மசோதா சமயம் காரணமாக ஜேம்ஸ் பட்டமடைவதினின்றும் விலக்குவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. இம்மசோதா நிறைவேற்றப்பட்டிருக்குமானல், விக்குகளுக்குப் பெருவெற்றியாயிருந்திருக்கும்.

## ஷேப்ட்ஸ்பரியும் போப்பினர் சதியும்

அதனுடன், 1688-ல் புரட்சி சாதித்தவைகளையும், அநேகமாகச் சாதித்திருக்கும்; ஏனென்றல், தெய்விக உரிமையுடன் கூடிய முடியாட்சியை உறுதியாக அழித்திருக்கும். அது தெய்விகவுரிமை பாராட்டிய முடியாட்சியை வரம்பிலா அதிகாரங்களுடன் சேர்ந்திருந்ததாகச் செய்ய எண்ணியது. அதனுடன் இவ்வுரிமைக் கொள்கையை அழிப்பது வாயிலாக இங்கிலாந்தில், வருங்காலத்தில் பாராளுமன்றத்தின் அனுமதியின் பேரில் முடியாட்சியை அமைக்க முடிந்

[1] Exclusion Bill.

திருக்கும். ஆனால், இரண்டாம் சார்லசு இம்முன் மொழிவை முழு வலிமையுடன் எதிர்க்க உறுதி பூண்டார்; இந்தப் போட்டியில் தமது பேராற்றலையும் மெய் நம்பிக்கையையும் வெளிக் காட்டினார்; மரபுரிமைக் கொள்கையை நம்பியதோடு, முக்கியமானதெனவும் கருதினார். விலக்கு மசோதாவை வற்புறுத்தியதற்காகப் பாராளுமன்றங்கள் மீண்டும் மீண்டும் கலைக்கப்பட்டன. மற்றொரு சார் விக்குகள் ஷேப்ட்ஸ்பரியின்[1] தலைமையில், தங்கள் நோக்கத்தை அடைவதில் சற்றும் பின்வாங்கவில்லை. இங்கிலாந்தின் வரலாற்றில், ஷேப்ட்ஸ்பரி, மிக்க திறமை வாய்ந்த சதிகாரராவார். அவர்களால் புதிதாக ஒன்றையும் கண்டு பிடிக்க முடியாவிட்டாலும் போப்பினர் சதி பற்றிய[2] அச்சுறுத்தும் பொய்க் கூற்றுக்களைப் பயன்படுத்திக்கொண்டனர். நாட்டில் உள் நாட்டுப் போர் தொடங்கும் போன்றிருந்தது.

## இரண்டாம் சார்லசின் வெற்றி

வெற்றி, மன்னர் பக்கத்திலிருந்தது. அவருடைய பகைவர்கள் தங்களது மனவெழுச்சியாலும் நெறிதவறின முறைகளாலும், தாங்களாகவே வரம்பு மீறினார்கள். மன்னருடைய முறையற்ற புதல்வரும், வன்மையற்ற தன்மையும் ஆற்றலும் கொண்டிருந்தவருமான மான்மத் கோமகனை[3] அரியணைக்கு உரிமையாளராக நியமித்தனர். மன்னர் பதினான்காம் லூயியிடமிருந்து, அவர் வேண்டிய பொருளைப் பெறுவதற்காக மீண்டும் நெருங்கிய தொடர்பு கொண்டார். இப்போர், பொருட்செலவைப் பொறுத்திருந்தது. பாராளுமன்றத்தினால் அனுமதிக்கப்படாத வரிகள் இல்லாமல், மன்னர் அரசாங்கத்தின் அலுவல்களை நடத்த முடியுமா? இப்பிரச்சினையின் விடையில் எல்லாம் அடங்கியிருந்தது. பதினான்காம் லூயியின் உதவி, இரண்டாம் சார்லசைப் பாராளுமன்றத்தைக் கலைக்கும்படி செய்தது. 1681 முதல் 1685-ல் அவர் இறக்கும் வரை, பாராளுமன்றத்தை அவர் கூட்டவேயில்லை. இதுவே அரசருக்கு ஒரு வெற்றியாயிருந்தது. அவருக்குச் சாதகமாகத் திடீரென்று கருத்தில் மாறுதலும் தொடர்ந்து ஏற்பட்டது. போப்பினர் சதி பற்றி, மெய்ப்பிக்க முடியாத உண்மைகளால், வெளியான மோசடி, கொடுமை முதலியவை அதைப் புனைந்தவர்கள் அல்லது பயன்படுத்தியவர்கள் மீதே சுமத்தப்பட்டன. விக்குகள் நன்மதிப்பை இழந்தார்கள். ஷேப்ட்ஸ்பரி ஹாலந்திற்குத் தப்பியோடி அங்கு இறந்தார். விலக்கு மசோதாவால் குறிப்பிடப்பட்டவரும் யார்க்குக் கோமகனுமான[4] ஜேம்ஸ், கருத்தின் எதிர் விளைவால், மன்னரது ஆலோசனைக் குழுவிற்குள் கொண்டு வரப்பட்டார். ஆட்சியின் இறுதி இரண்டு ஆண்டுகளில் இவருடைய செல்வாக்கு மிகுதியாயிருந்தது.

[1] Shaftesbury. [2] Popish Plot, [3] Duke of Monmouth.
[4] Duke of York.

## இங்கிலாந்தும் பதினன்காம் லூயியும்

வெளி நாட்டு விவகாரங்களில் இங்கிலாந்து வலியிழந்திருந்தது வாயிலாக மன்னருக்கு வெற்றி ஏற்பட்டது. இரண்டாம் சார்லசு பாராளுமன்றத்தைக் கூட்டுவதற்கு முடியாமலிருந்ததென்ருல், அவர் இராணுவம் அல்லது நாவாய்ப் போர் எதையும் கருத முடியாதென்பது தெளிவாயிற்று. ஏனெனில், பாராளுமன்றத்திடமிருந்துதான் போருக்குத் தேவையான நிதியைப் பெறமுடியும். இவ்வமயத்திலே தான், பதினன்காம் லூயியினுடைய அவைகள்[1] மீண்டும் ஒன்று சேர்ந்ததோடு, லக்ஸம்பர்கும் வல்லந்தமாகத் தாக்கப்பட்டது. பாராளு மன்றம் கூடியிருந்திருக்குமாளுல், இவ்விஷயத்தில் அது தலையிடு தலைக் கோரியிருக்கும். இங்கிலாந்து இவ்விஷயத்தில் வழி காட்டும் என எல்லா அரசுகளும் அதை நோக்கின. இங்கிலாந்து எவ்வழி யையும் காட்டவில்லை. எனவே, ஸ்ட்ராஸ்பர்கு, லக்ஸம்பர்கு, கசாலே என்பவை, ஜெர்மனியின் பயனற்ற மறுத்துக் கூறுதலையும் ஸ்பெயினின் நம்பிக்கையற்ற இராணுவ முயற்சியையும் மதியாது ஆட்சியுடன் இணைக்கப்பட்டன.

V

## இரண்டாம் ஜேம்ஸின் எதிர்கால வாய்ப்புக்கள்

1685-ல் இரண்டாம் ஜேம்ஸ் ஆட்சியைத் தொடங்கிய பொழுது, மன்னரின் அதிகாரங்கள் வளர்வதற்கான நிமித்தங்கள் சாதகமா யிருந்தன. விக்குகள் அவமதிப்பை அடைந்திருந்தார்கள். பார்லி மென்டும் மன்னருக்குக் கீழ்ப்படிந்துள்ளது போன்று பற்றுறுதி கொண்டிருந்தது. இரண்டாம் ஜேம்ஸ் சற்று முன்னெச்சரிக்கை யுடன் சமயத்தையும் அரசியலையும் தனிமையாகக் கருதியிருப்பாராளுல், 1688 ல் நடந்த புரட்சி ஓரமயம் மன்னரின் ஆதரவாளர்களின் திடீர்ப் புரட்சியாய் ஏற்பட்டு, இங்கிலாந்தில் பிரெஞ்சு மாதிரியைப் போன்று ஓர் அரசாங்கத்தை அமைத்திருக்கக்கூடும். ஆனல், முன்னெச்சரிக்கை யென்பது அவரிடம் இல்லை. அவர் கொள்கையைப் பின்பற்று வதில் எல்லாவற்றையும் இழப்பதற்கும், சமயத்திற்காகத் தியாகம் செய்யவும் ஆயத்தமாயிருந்தார். ஆங்கிலேயத் திருச்சபையின் சமயக் கருத்துக்கு இணக்கமல்லாத பிராட்டஸ்டென்டுகளோடு, ரோமன் கத்தோலிக்கர்களுக்கும் ஓரளவு சகிப்பை அளிப்பது அவரது நோக்கமா யிருந்தது. ஆனல், பாராளுமன்றத்தின் பிராட்டஸ்டென்டு சமயக் கொள்கை, மன்னரை ஆதரிக்கும் இயல்பைவிட மிகுதியாயிருந்ததால்,

[1] Councils.

மன்னருடைய கொள்கையோடு ஒத்துழைப்பதற்கு மறுத்தது. எனவே, பாராளுமன்றம் உடனடியாகக் கலைக்கப்பட்டது. மன்னர் தமக்கு வீழ்ச்சியை உண்டுபண்ணும் அளவிற்குத் தவறு புரிந்தார். எக் காரணத்தைக் கொண்டும் அவருடைய சமயச் சலுகைகளைக் காட்டும் அறிக்கையை நாடு எவ்விதத்திலும் ஏற்றுக் கொள்ளுவதாயில்லை. பிரான்சில், நான்டீஸ் ஆணைகள் விலக்குச் செய்யப்பட்டதால், மன்னரை எதிர்த்து நின்ற பாராளுமன்றத்தின் பகைமை மேலும் மிகுதியாயிற்று.

## புரட்சியின் தோற்றம்

நான்டீஸ் ஆணைகளை விலக்குச் செய்தபொழுது, நாட்டில் ரோமன் கத்தோலிக்கச் சமயம் நிகரான நிலையை அடைவதோடு மன நிறைவும் பெறாது என்பதைக் காட்டியது. இங்கிலாந்தில், ரோமன் கத்தோலிக்கர்களுக்கு வழிபாட்டுச் சுதந்திரம் அளிக்க மன்னர் கருதியது முற்றிலும் நியாயமானது; இடரற்றதுங்கூட. ஏனெனில், அவர்கள் நெடு நாளாகவே அரசாங்கத்திற்கு எதிராக அரசத் துரோகமான திட்டங்கள் வகுத்தலை விட்டு ஒழித்தார்கள். பிரான்சில், பிராட்டஸ்டென்டுகளுக்குப் பதினான்காம் லூயி இழைத்த கொடுமைகளும், ரோமன் கத்தோலிக்கத்தை அரசியலில் வரம்பில்லா ஆட்சியைக் குறிப்பது என மக்கள் கருதியதும், அரசியல் வரம்பின்மை நியாயமானதும் நேர்மையானதுமானதாயிருந்துங்கூட, மாற்றத்திற்கான வாய்ப்பைப் பாழ்படுத்தின. உண்மையிலேயே சட்ட விரோதமான ஆணையை எதிர்த்து மனுச் செய்ததற்காக ஏழு மேற்றிராணியார்கள் அரசத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டார்கள். இது மக்களிடையே மனக்கொதிப்பைத் தூண்டியது. அவர்கள் விடுதலை மக்களின் மகிழ்ச்சி ஆரவாரத்திற்கு வாய்ப்பையளித்தது. அதே சமயத்தில், மன்னருக்கு எதிர்ப்பாராது ஆண் மகவு பிறந்தது, மன்னருடைய மரணத்திஞல் அரசினுடைய கொள்கையில் எவ்வித மாறுதலையும் அனுமதிக்காதென்பதைக் காட்டியது. அதற்குக் காரணம், பிறந்த குழந்தையும் தந்தையாரது சமயத்தையே பின்பற்றக் கூடுமென்பதே யாகும். எனவே, அது அரசருடைய அரசியல் திட்டங்களையே பின்பற்றக் கூடும்.

## மூன்றும் வில்லியம் இங்கிலாந்திற்கு வருதல்

ஆதலால், ஹாலந்து நாட்டின் ஸ்டாத்ஹால்டரும்[1] மன்னருடைய மருகரும், ஐரோப்பாவில் பிராட்டஸ்டென்டு சமயத்தின் சிறந்த

[1] Statthalter of Holland.

வெற்றி வீரராய்ப் புகழடைந்தவரும் பிரெஞ்சு அரசிற்குக் கடுமையான எதிரியாயிருந்தவருமான மூன்றும் வில்லியம் இங்கிலாந்திற்கு வந்து பிராட்டஸ்டென்டு சமயத்தையும் பாராளுமன்றத்தின் சுதந்தரங் களையும் காப்பாற்றுமாறு அழைக்கப்பட்டார். ஐரோப்பாவின் பொது நிலைமையில் இந்நிகழ்ச்சியின் முக்கியத்துவத்தைப் பற்றி ஏற்கனவே அறிந்துள்ளோம். பதினான்காம் லூயி ஹாலந்தைத் தாக்குவது வாயிலாக மூன்றும் வில்லியம் அந்நாட்டிலிருந்து செல்வதை எவ்வாறு தடை செய்திருக்க முடியுமென்பதையும், ஹாலந்தைத் தாக்குவதற்குப் பதிலாக எவ்வாறு ரைன் பகுதியைத் தாக்கினார் என்பதையும் முன்பு அறிந்தோம். எனவே, மூன்றும் வில்லியம் 1688, நவம்பர் மாதம், ஐந்தாம் தேதி கடல் வழியாகச் சென்று, டார்பே எனுமிடத்தில் இறங் கினார். அச்சத்தினாலும் நிலைமையைத் தவறாக அறிந்துகொண்ட தாலும், பிரான்சின் உதவியால் ஆங்கிலேயர்மீது வெற்றியையும் பழி வாங்குதலையும் அடையலாம் என்ற நம்பிக்கையுடன் ஜேம்ஸ் போரிடு வதை விடுத்து, பிரான்சிற்கு ஓடினார். மூன்றும் வில்லியம் மன்ன ராக்கப்பட்டார். 1688-ல் புரட்சியும் உண்மையாய் நிகழ்ந்தது. பிரான்சின் வரலாற்றைப் பற்றிக் கூறிய போது, புரட்சியின் பயனாக ஏற்பட்ட போரைப் பற்றி ஏற்கனவே அறிந்துள்ளோம். வில்லியம் நீடித்துப் போரை நடத்தினார். இடரான சில சண்டைகளுக்குப் பின், 1697-ல் ரிஸ்விக்குச் சமாதானம் ஏற்பட்டது. இதன் விளைவாகப் 'புரட்சி ஏற்பாடு' உறுதி செய்யப்பட்டது.

## 1688-ல் புரட்சி

நீண்ட நாளாகப் 'புகழ் பெற்ற புரட்சி' என்று வழங்கப்படுவதும், ஆனால் இப்போது வழக்கொழிந்ததுமான இச்சொற்றொடர் குறிக்கும் புரட்சி எத்தகையது? இதற்குப் பிறகு ஐரோப்பாவில், அதிகமான விளைவுகளையும் கொடுமைகளையும் கொண்ட பல புரட்சிகள் நிகழ்ந்த தால், 1688-ல் நடந்த இவ்வியக்கம் புரட்சி எனும் பெயரைப் பெறு வதற்குச் சற்றும் தகுதியற்றதாயிருந்தது. ஒப்புநோக்கும் போது இப்புரட்சி, ஒழுங்கு முறையோடும், தன் அமைப்புக்களில் சட்ட முறைப்படியும் இருந்ததால் இங்கிலாந்தில் இரத்தம் சிந்துவது ஏற்பட வில்லை. 1688-ல் புரட்சியை உண்டு பண்ணிய கருத்துக்களுக்கும் 1789 அல்லது 1848-ல் நிகழ்ந்தவற்றுக்குமிடையேதான் எத்துணைப் பெரிய வேற்றுமை காணப்படுகிறது! ஆனால், 1688-ல் நடந்தது மிகப் பெரிய வெற்றியாயிருந்தது. அதன் பயன்களைச் சுருக்கமாக இரு தலைப்பின்கீழ்க் கூறலாம். முதலாவது, மன்னருக்கும் அரசாங்கத் திற்கும் எதிராக ஆங்கிலேயரின் தனியார் உரிமைகளை உறுதி செய்தது. அது முதல், பாராளுமன்றத்தின் இசைவின்றி மன்னர் வரி விதிக்கக்கூடாது என்பது பற்றிய விவாதமே ஏற்படவில்லை. அதனுடன், அதே இசைவின்றி நிலையான படையை மன்னர் வைத்

துக்கொள்ள முடியாது என்பதும், விசாரணையின்றி ஒருவரையும் சிறையில் வைக்க முடியாது என்பதும் ஏற்பட்டன. அடுத்ததாகப் பாராளுமன்றத்தின் அதிகாரம் உண்மையாகவே ஏற்பட்டது. 1688-இன் புரட்சியின் பயனுக, உடனடியாயில்லாவிட்டாலும், மன்னருக்குச் சொந்தமாயிருந்த அதிகாரம் பாராளுமன்றத்தின் கைக்குச் சென்றது. பாராளுமன்றம் அந்நாட்டு மக்களெல்லோருடைய பிரதிநிதியாக அப்போது இருக்கவில்லை. இரு சபைகளைக் கொண்டதும் மரபின்படியுமிருந்த அரசியல் அமைப்பில், நிலச்சுவான்தார்களின் உயர்குடியாட்சியே, நாட்டில் உண்மையாக அரசு புரிந்தது. சற்றேறக்குறைய ஒன்றரை நூற்றுண்டுகள் வரையில் நிலச்சுவான்தாரின் உயர்குடியாட்சிதான் இங்கிலாந்தின் ஊழிற்கு வழி காட்டியாயிருந்தது. உயர்குடியாட்சியை எல்லா அதிகாரங்களினின்றும் விரட்டிவிட்டு, தம் இன்டென்டண்டுகள், வழக்கமாக நடுத்தர வகுப்பினரிலிருந்து உருவாக்கப்பட்ட சமூக அலுவலர்கள்[1] வாயிலாக மேலான ஆட்சி புரிந்த பிரான்சு மன்னருக்கும் இங்கிலாந்து மன்னருக்கும் என்ன வேற்றுமை? நிலச்சுவான்தார்களான உயர்குடிப் பிறந்தோர், அரணுயிருந்த பார்லிமெண்டின் பாதுகாப்புடன் இலண்டன் வியாபாரிகளின் துணையையும் கொண்டு பிரிட்டிஷ் பேரரசை வென்றனர். இது ரோமப் பேரரசைத் தோற்றுவித்த ரோம் நாட்டின் மேற்சபையைப் போன்று இருந்தது.

## ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் புரட்சி

மூன்றும் வில்லியத்தின் ஆட்சியில் வெளி நாட்டு விவகாரங்கள் நிரம்பியிருந்தன. இவற்றைப் பற்றி இந்நூல் அனுமதிக்கும் அளவிற்குப் பதினன்காம் லூயியின் ஆட்சியைப் பற்றிய அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளதால் மீண்டும் கூறத் தேவையில்லை. ஆயினும், ஸ்காட்லாந்தில், பிரஸ்பிட்டீரியானிசத்தை எதிர்த்து ஸ்டூவர்ட்டு மன்னர்கள் பல முறை தாக்கியபோதிலும். அது வேருன்றலாயிற்று. ஸ்காட்லாந்து இங்கிலாந்துடன் சேர்ந்திருந்த போதிலும் தனி நாடாகவேயிருந்தது. ஒரே மன்னர் இவ்விரு நாடுகளையும் ஆட்சி புரிந்தார் என்பதைத் தவிர வேறில்லை. இவ்விரு நாடுகளுக்குமிடையே புரட்சி, நட்பை வளர்க்கும் எண்ணங்களை வளரச் செய்தது. அடுத்து வந்த ஆட்சியில், விக்கு அமைச்சரவை ஸ்காட்லாந்தின் பாராளுமன்றத்தை இங்கிலாந்தின் பாராளுமன்றத்துடன் இணைத்து, கிரேட் பிரிட்டனின் பாராளுமன்றம் என்று உருவாவதற்கு ஸ்காட்லாந்தை இணங்கச் செய்வதில் வெற்றி கண்டது. பதினேழாவது நூற்றுண்டில் அயர்லாந்தின் வரலாறு நீண்டதொரு சோகக் கதையாகும். நாட்டில்

[1] Civil Officials.

தீவிரக் கத்தோலிக்கச் சமயமும், இங்கிலாந்தின்மீது அந்நாட்டினருக்கிருந்த பகைமையும், நாட்டை இரண்டாம் ஜேம்ஸ் பக்கம் சேருமாறு செய்தன. பெரு வெற்றி கிடைக்கும் என்னும் நம்பிக்கை ஓரமயம் தோன்றியது. ஆனல், ஸ்டுவர்ட்டு மன்னர்களின் நம்பிக்கைகள், பாய்ன் சண்டையில் மூன்றும் வில்லியத்தால் முறியடிக்கப்பட்டு, அதன் பின் மார்ல்பரோக் கோமகனுல் அழிக்கப்பட்டன. அயர்லாந்து நாட்டுப் பிராட்டஸ்டென்டு நிலச்சுவான்தார்களின் ஆதிக்கம் நாட்டில் உறுதியாக்கப்பட்டு ஒரு நூற்றுண்டு வரையில் அசைக்கப்படாமலிருந்தது.

## அரசுரிமை நிர்ணயச் சட்டம்

ஆட்சியினிறுதியில், மூன்றும் வில்லியத்திற்கும், அவர் மைத்துனியாரான ஆன் இளவரசியாருக்கும், அரியணையேறுவதற்கு ஆண் வாரிசு இல்லையென்பது தெளிவான போது அரசுரிமை நிர்ணயச் சட்டம்[1] நிறைவேற்றப்பட்டது. இதனல், இரண்டாம் ஜேம்ஸின் வாரிசுகளும், ரோமன் கத்தோலிக்கக் கொள்கையுடையவர்களும் ஆங்கிலேய அரியணையை அடைவதினின்றும் தடை செய்யப்பட்டதுடன், முதலாம் ஜேம்ஸின் பேர்த்தியும் பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சேர்ந்தவருமான ஹானேவர் நாட்டுத் தேர்வாளர்க்கு முடி அளிக்கப்பட வேண்டுமென்பது ஏற்பாடாயிற்று. இவ்வாறு இரண்டாவது முறையாக, முடியாட்சியை நிறுவும் உரிமையைப் பாராளுமன்றத்தின் அதிகாரம் வற்புறுத்தியது.

## ஆன் அரசியார்

### ஜேம்ஸைச் சார்ந்த கொள்கை

இனி, ஆன் அரசியாரின் ஆட்சியைப் பற்றிச் சிறிது கூறுவோம். அதில் முக்கியமான அக்கறையுண்டாகச் செய்வது, ஸ்பானிய வாரிசுரிமைப் போராகும். இது பற்றி ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. தவிர, அவ்வாட்சியின் உள் நாட்டு விவகாரங்கள் சுவையுள்ளனவாயிருந்தாலும், ஐரோப்பிய வரலாறு முழுமையையும் நோக்குவதில் ஈடுபட்டுள்ள நம்மை அவற்றை அறிவதில் நீண்ட நேரம் தடை செய்யக் கூடாது. நடந்தவைகளின் சுருக்கமாவது: டோரிகள் மீண்டும் பதவியை அடைந்தார்கள். அவர்கள் வாரிசு உரிமை நிர்ணயச் சட்டத்தை நிலை குலையச் செய்து விடுவார்கள் போலிருந்தது. பிராட்டஸ்டென்டான ஹானேவர் தேர்வாளருக்குப் பதிலாக இரண்டாம் ஜேம்ஸின் புதல்வரான ரோமன் கத்தோலிக்கரை அரியணைக்குக்

[1] Act of Settlement.

கொண்டு வருவார்கள் போன்றிருந்தது. இவற்றில் எல்லாம் மறைவொன்றுமில்லை. 1688-ல் நடந்த புரட்சி சிறுபான்மையோரின் செயலாகும். நாட்டு மக்கள் போப்பாண்டவரின் அதிகாரத்தைக் கண்டு அஞ்சியதாலும் வெறுத்ததாலும், விருப்பமின்றிப் புரட்சியில் உடன்பட்டிருந்தார்கள். ஆனால், மூன்றாம் வில்லியம் ஒரு போதும் மக்களின் மதிப்பைப் பெறவில்லை. அதனுடன் ஸ்டுவர்ட்டுக் குடும்பத்தினரிடம் மக்களுக்கிருந்த அரசப்பற்றுறுதி அழிந்து போகவில்லை.

மன்னர்களின் தெய்விகவுரிமைக் கொள்கையைப் பிரசாரம் செய்வதை நிறுத்தம் செய்யாத ஆங்கிலத் திருச்சபை, அரசப் பற்றுறுதியை உயிர்ப்பித்துக்கொண்டிருந்தது. ஆன் அரசியாரின் ஆட்சிக் காலத்தில் டோரிகளுக்கு வாய்ப்புக் கிட்டியது. அவர்களிடத்தில் தீவிர நட்புக் கொண்டிருப்பதாகத் திருச்சபையும் அறிவித்தது. இப்போதும் முக்கியமாக விக்குகளின் போராயிருந்தது. அதனுடன் தொடக்க நிலைகளில், விக்குகளை அதிகாரத்தில் வைத்திருந்தது. ஆனால், போர் நீடித்தது. மக்கள் அதனால் ஏற்பட்ட பொருட் செலவு, உயிர்ச்சேதம் முதலியவைகளால் சோர்வுற்ற போது டோரிகள் விரைவாக முன்னணிக்கு வந்தார்கள். இம்மாறுதலுக்கு, அரசியாருக்கு மார்ல்பரோக் கோமகளாருடன் ஏற்பட்ட சொந்த சச்சரவும் துணையாயிற்று. இங்கிலாந்தின் நவீன வரலாற்றில் இது ஈடெடுப்பற்ற சதியாலோசனையின் ஒருகண நேரமாயிருந்தது. ஆக்ஸ்போர்டு, பாலிங்புரோக்குப் பிரபுக்கள் இதற்கு முக்கியப் பகர ஆள்களாயிருந்தார்கள்.

ஆன் அரசியாரின் எதிர்பாராத மரணத்தாலும், டோரிக் கட்சித் தலைவர்களுக்குள் ஏற்பட்ட கடுமையான சச்சரவினாலும், நாடு, ஸ்டுவர்ட்டுகளிடமிருந்து காப்பாற்றப்பட்டது. ஹானோவிரியர்களைப் பட்டத்திற்கு வருவதினின்றும் தடுப்பதானால், அதைப் போரினாலே தான் செய்யவியலும். போரிடுவதற்கு பாலிங்புரோக்கிற்கும் நெஞ்சுரமில்லை. 1714-ல் எதிர்ப்பின்றி முதலாம் ஜார்ஜ் மன்னராகப் பேரறிவிப்புச் செய்யப்பட்டார். இங்கிலாந்தின் வரலாற்றில் நன்கு வரையறுக்கப்பட்ட ஒரு சகாத்தம் முடிந்தது.

## VI

ஆங்கிலேய வரலாற்றில் மற்றப் பகுதிகளைக் காட்டிலும் பதினேழாவது நூற்றாண்டின் வரலாறு வெளி நாட்டு மாணவர்களின் கவனத்தைப் பெரிதளவிற் கவர்ந்துள்ளது. இக்காலத்தில் பெரியனவும் திடீரென்று ஏற்பட்டனவுமான நிகழ்ச்சிகள் நிரம்பியுள்ளன; பெரிய நடிகர்களுடன் சிறந்த கொள்கைகளும் பெரும்பங்கு கொண்டிருந்தன. இது ஆங்கிலேயர்கள் பெருஞ்செருக்குக் கொள்ளத்தக்க காலமாயு

முள்ளது. இக்காலம் முழுவதிலும் நிகழ்ந்த பெரும் போட்டியில் இரு பக்கங்களிலும் சிறப்பு வாய்ந்தவர்கள் காணப்பட்டதே இச்செருக்குக் கொள்ளுவதற்குக் காரணமாகும். இலக்கியத்திலும், கருத்து வளர்ச்சியிலும், பதினும் நூற்றுண்டோடு இடம் பெற இக்காலம் உரிமை பாராட்ட முடியாது என்ருலும், இது அதைத் தொடர்ந்து அடுத்தாற் போல வருகிறது. இங்கிலாந்தின் அரசியல் வாழ்க்கையிலும், சமூக வாழ்க்கையின் மேற்பரப்பிலும், மீட்சி, ஒரு பெருந்தாழ்வைக் குறிப்பதாயிற்று. ஆங்கிலேயச் சமூகம், பிரான்சின் போக்கிலும் கருத்திலும் மிக மோசமாயிருந்ததை எடுத்துக் கொண்டதுடன், பதினன்காம் லூயியின் காலதது எண்ணம், கலை இவற்றுள் உயர்ந்தவைகளைத் தன் வயப்படுத்திக் கொள்ளுவதற்கு ஆற்றலற்றதாய்த் தோன்றியது. ஆனல், இரண்டாம் சார்லசும் அவரது ஒழுக்கக்கேடான அவையும், அவரது ஆட்சிக் காலத்தில் இலண்டனிலிருந்த நாகரிகச் சமுதாயமும், இங்கிலாந்தின் வாழ்க்கையின் உண்மைப் பிரதிநிதிகளாய் இருக்கவில்லை; அல்லது அச்சமுதாயத்தின் ஒரு பகுதியினரின் பிரதிநிதியாக மட்டும் இருந்ததைக் காணலாம். இரண்டாம் சார்லசு, பக்கிங்காம், டைட்டஸ் ஓட்ஸ்[1] இவர்களது காலத்தில், மில்டன், நியூட்டன், ரென்[2], பனியன்[3], பென்[4] போன்ற அறிஞரு மிருந்தனர்.

## நியூட்டனின் பிரின்ஸிபியா 1687

மறுமலர்ச்சிக்குப் பின் எவராலும் வினவுதற்கியலாத இங்கிலாந்தின் மிகச் சிறந்த சிற்பியாய் ரென் விளங்கினுர். செயின்டு பால் கதீட்ரலும் மற்றும் அவர் கட்டிய திருக்கோயில்களின் அழகைப் பற்றி இன்றும் சரியாக மதிப்பிடப் படவில்லை. மனித அறிவின் மிகச் சிறந்த வெற்றியாய் உள்ளது நியூட்டனின் செயல். புகழ்பெற்ற ஈரடிச் செய்யுள், 'இயற்கையும் இயற்கையின் விதிகளும் இருளில் மறைந்துகிடந்தன. நியூட்டன் தோன்றட்டுமெனக் கடவுள் கூறினுர்; எங்கும் ஒளி வீசிற்று,' எனக் கூறுகிறது.

இது, அவருக்கு முன் எண்ணற்றவர் செய்ததைப் பற்றிக் கூறுமல் விடுத்து, அவர் செய்ததை மாத்திரம் கூறுகிறது. கணிதவியல் முறையை விருத்தி செய்ததாலும், புவி ஈர்ப்பு விதியின் குறிப்பான செயலை அவர் கண்டு பிடித்ததாலும், விண்ணகத்துள்ள அண்டங்களின் போக்கைப் பற்றிய விதிகளைக் கூர்ந்து அறிய முடிந்தது. அதனுடன், உலகத்தையறிவதற்கு வழியையும் மனிதனுக்குப் புலப்படுத்தியது.

[1] Titus Oates. [2] Wren. [3] Bunyan. [4] Penn.

## சமயத் தலைவர்கள்

இந்நூற்ருண்டு முழுவதிலும், ஆர்வமுள்ள சமயம் பற்றிய கருத்து மாறுபாடு நிறைந்திருந்தது. அதிமேற்றிராணியாரான லாடு என்பாரின் வாழ்க்கை, அரசியலில் எத்துணை முக்கியமாயிருந்ததென்பதை முன்பறிந்தோம். அவருடைய செயல்களினுல் விளைந்த அரசியற் பயன்கள் ஒருபுறமிருக்க, இடைக்காலக் கத்தோலிக்கச் சமயத்தின் வழியுரிமையில் ஒரு பங்கை ஆங்கிலேயத் திருச்சபை பெறும் உரிமையைத் தெளிவாகவும் மறுக்கப்படாததுமாக ஏற்படுத்தியது வாயிலாக, ஆங்கிலேய வரலாற்றில் அவரது பணியின் அடையாளத்தை விடுத்துச் சென்றுள்ளார். இங்கிலாந்தில் ஏற்படுத்தப்பட்டிருந்த சமயத்துடன் இணங்காதார்களிடத்துக் காணப்படும் பெரிய பெயர்கள் அல்லது அவர்களுடைய இலக்கியங்கள், பியூரிட்டானியக் கொள்கையின் வெற்றியினுல் ஏற்பட்டவையல்ல; தோல்வியினுல் தோன்றியவையாகும் என்பது விந்தையானது. நண்பர்கள் சங்கத்தை நிறுவின ஃபாக்ஸ் என்பார், 1648-ல் அவருடைய பணியைத் தொடங்கினுர். அவர் இரண்டாம் சார்லசு, இரண்டாம் ஜேம்ஸ் என்பவர்களின் ஆட்சியில் வாழ்ந்து பணியாற்றி, 1690-ல் மரணமடைந்தார். அச்சங்கத்தின் வரலாற்றில் பென் என்பாரும் முக்கியமானவர். அமெரிக்காவில் பென்சில்வேனியா என்ற குடியேற்ற நாட்டைத் தோற்றுவித்தவர் என்ற முறையில் இவருக்கு மேலும் அதிகமான சிறப்பு ஏற்பட்டது. பனியன் எழுதிய 'யாத்திரிகர் முன்னேற்றம்' என்னும் நூல், 1678-ல் வெளியிடப்பட்டது. அவருடைய வாழ்க்கையும் இலக்கியங்களும் அக்காலத்தில் இணங்காதார்[1] குழுக்களின் வலிமையையும் பெருமையையும் விளக்கின.

இணங்காதாரின் இயல்பை விளக்குவதில், ஃபாக்ஸ், பென், பனியன் இவர்களுடன் ஒன்று சேர்க்க முடியாதபடி, மில்டன் பெயர் மிகச் சிறந்ததாகும். 'அவரது ஆன்மா,' விண்மீனைப் போன்று இருந்ததுடன், தனித்தும் இருந்தது; ஆங்கிலச் செய்யுள் வரலாற்றில், மில்டனின் பெயரைக் காட்டிலும் சிறந்த பெயர் இல்லை. அவரது புகழை அறிந்துகொள்வதை, செய்யுளை அறிந்துகொள்வதன் உரைகல்லாகக் கொள்ளலாம். 'சுவர்க்கக் நீக்கம்' என்ற நூல், 1677 ல் வெளிவந்தது. அப்பொழுது இங்கிலாந்து டச்சுப் போரினுலேற்பட்ட அவமானத்தை அனுபவித்தது. இரண்டாம் சார்லசினுடைய அவையின் தீக்குணம் வெளிப்படத் தொடங்கியது.

[1] Nonconformists.

இந்நூற்றுண்டு முழுவதிலும் அரசியல் தத்துவமும் பரவியிருந்தது. இத்தத்துவம் அக்காலத்து உண்மைப் பிரச்சினைகளாலும், பட்டறிவாலும், கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. இதை நாம் முன்னர்க் கண்டோம். உள் நாட்டுப் போரின்போது ஏற்பட்ட குழப்பம் காரணமாக இங்கிலாந்து அனுபவித்த துயரங்கள், ஹாப்ஸ்[1] என்பாரை, 'அரக்கன்'[2] (1687) என்ற நூலை எழுதத் தூண்டின. இந்நூலுக்குக் 'காமன்வெல்த்தின் பொருள், அமைப்பு, அதிகாரம்' என்ற மற்றொரு பெயரும் உண்டு. நாட்டின் அதிகாரத்திலும், நாட்டின் அரச குடும்பத்தலைவரிடத்திலும் தீமைகள் மறுபடியும் தோன்றுமலிருக்கப் பாதுகாப்பை அவர் கண்டார். உலகக் கருத்தின்மீது செல்வாக்குப் பெற்ற நூல்களுள் இது ஒன்றுகும். இது அரச அதிகாரத்தின் மேன்மையை உயர்த்திக் கூறுவதில், ஜெர்மானிய எழுத்தாளர்களான டிரீட்ஸ்கி[3] போன்றவரின் அரசியல் தத்துவங்களோடு சில பொருத்தங்களைக் கொண்டிருந்தது. இதனுடைய தத்துவம் அண்மையில் நிகழ்ந்த பெரும்போர் மூளுவதிலும் அதன் போக்கிலும் மிகுதியான ஆதிக்கம் கொண்டிருந்தது. பியூரிட்டன்களுடைய கிளர்ச்சி பிரதிபலிக்குமாறு எழுதியவர் ஹாப்ஸ் ஆனுல், 1688-ல் நடந்த புரட்சியின் கருத்துக்களை எடுத்துரைப்பதில் லாக்கு[4] என்பார் சிறந்து விளங்கினர். மன்னர்களின் தெய்விக உரிமையையும் ஹாப்ஸின் வரம்பிலா அதிகாரம் கொண்ட அரசையும் இவர் ஒரே மாதிரி எதிர்த்தார்; அரசாங்கத்தின் தோற்றத்தைச் சமூக ஒப்பந்தத்தில்[5] கண்டார்; அதிலிருந்து மிக நெருங்கியதும் வரையறுக்கப்பட்டதுமான முடியாட்சியையும் சமநிலையிலுள்ள அரசியல் சட்டத்தின் அறிவையும் பெற்றுர். ஒரு நூற்றுண்டுக்கால விக்குகளின் எண்ணங்களையும் ஆங்கிலேய அரசியல் சட்டத்தின் எண்ணங்களையும் மிக விளக்கமாக எடுத்துக் கூறுவதில் இவர் நூல்கள் சிறந்தனவாயிருந்தன.

[1] Hobbes. [2] Leviathan. [3] Treitschke. [4] Locke. [5] Social Contract.

எப். ஸி. மான்டேகுவும், ஆர். லாட்ஜும் எழுதியுள்ள, 'இங்கிலாந்து அரசியல் வரலாறு' என்ற நூலின் சிறந்த இரு தொகுப்புக்கள் இக்காலத்தைப் பற்றிக் கூறுகின்றன. எஸ். ஆர். கார்டினர் எழுதியுள்ள 'பெரிய உள்நாட்டுப் போர் மூளும் வரை இங்கிலாந்தின் வரலாறு' (பத்துத் தொகுதிகள்), 'பெரிய உள் நாட்டுப் போரின் வரலாறு' (நான்கு தொகுதிகள்), 'காமன்வெல்து: பாதுகாப்பு நாட்டின் வரலாறு' (மூன்று தொகுதிகள்) என்பவை இக்காலத்தைப் பற்றிய வரலாற்றிற்கு மிகப் பெரிய ஆதாரங்கள் ஆகும். ஃபர்த்து எழுதியுள்ள 'காப்பாளர் ஆட்சியின் கடைசி ஆண்டுகள்' ராங்கேயின், 'இங்கிலாந்தின் வரலாறு' என்ற நூல்கள் இக்காலம் முழுவதற்கும் சிறப்பாக மீட்சியைப் பற்றியதற்கும் சிறந்தனவாகும். மெக்காலேயின் 'இங்கிலாந்தின் வரலாறு' (வரலாறுகளில் எல்லாம் மிக்க மதிப்புப பெற்றது), இரண்டாம் ஜேம்ஸ், மூன்றும் வில்லியம் இவர்களது ஆட்சியைப் பற்றிக் கூறுகின்றது. ஹாலம் என்பாரின் 'அரசியல் அமைப்பு வரலாறு', பர்னெட்டு என்பாரின் 'எனது காலத்தின் வரலாறு', பர்ட்டன் என்பாரின் 'ஆன் அரசியாரின் ஆட்சி', ஃபர்த்து என்பாரின் 'ஆலிவர் கிராம்வெல்', ஏய்ரி எள்பாரின் 'இரண்டாம் சார்லஸ்', டிரெயில் என்பாரின் 'மூன்றும் வில்லியம்', சீலி என்பாரின் 'பிரிட்டிஷ் கொள்கையின் வளர்ச்சி' என்பவை இக்காலத்து வரலாற்றைக் கூறும் பல சிறந்த நூல்களைச் சேர்ந்தனவாகும்.

# 11. பால்டிக்கு நாடுகளும் ரஷ்யாவின் எழுச்சியும்

## பால்டிக்குப் பிரதேசமும் மத்தியதரைப் பிரதேசமும்

மத்தியதரைக்கடல் பிரதேசங்களைப் பல முக்கியமான சிறப்புக் கூறுகளில் பால்டிக்குக் கடற்கரை பிரதேசங்கள் ஒத்திருந்த போதிலும், வரலாற்றில் பிற்கூறப்பட்டவை அவ்வளவாக முக்கியத்துவம் வகிக்கப் பெறாதிருந்ததைப் பற்றி வியப்புறுவதற்கில்லை. ஏனெனில், மத்திய தரைக்கடலைச் சார்ந்த நிலப்பகுதிகளைப் போன்று, பால்டிக்குக் கடலை அடுத்துள்ள பகுதிகள் அவ்வளவாகச் செழிப்புற்றிருக்கவில்லை என்பதுடன், அங்குள்ள துறைமுகங்கள் ஆண்டின் மிகுதியான நாள்களில் பனியால் மூடப்பட்டுக் கிடக்கின்றனவாதலின், போக்குவரத்தும் தடைபட்டுள்ளன. 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் இக்கடற்கரையைச் சார்ந்து பேரரசுகள் எழுந்தன. இவ்வதிகாரத்தில் மிகச் சுருக்கமாக அவ்வின்றியமையாத பால்டிக்குக் கடல் நாடுகளின் ஊழினைப் பற்றித் தொடருவோம்.

## மூன்று ஸ்காண்டிநேவிய நாடுகளின் தாற்காலிக இணைப்பு

பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் பால்டிக்குக் கடல் முழுவதிலும் ஸ்காண்டிநேவியா அரசாங்கமே ஆதிக்கம் செலுத்த இயலும் என்பது தோன்றியது. இரண்டாம் கிறிஸ்டியன் என்பார் டென்மார்க்கு, நார்வே, சுவீடன் என்னும் நாடுகளை ஆண்டார். இம் மூன்று நாடுகளும் எவ்வழியிலும் ஒன்றாக இணைக்கப்பெற்றிராவிட்டாலும், ஒரு காலத்தில் இம்மூன்றும் ஒன்று சேர்ந்து இணைக்கப்பெற்று இருந்ததைப்

போல் மீண்டும் ஒரு முறை ஒன்று சேரலாமென்பது தோன்றியது. ஐரோப்பாவின் வளர்ச்சிக்கு இச்சேர்க்கை பெரிதும் பயனுடையதாய் விளங்கும் எனவும் தோன்றியது. காரணம், ஸ்காண்டிநேவிய மக்கள் போர், சமாதானக் கலைகளில் ஐரோப்பிய நாட்டு மக்களில் தலை சிறந்வர்களுடன் ஒருங்கு வைத்து எண்ணத் தக்க இடம் பெறத் தகுதியுடையவர்கள் எனக் காட்டியமையே ஆகும். ஆனால், அவ்வாறு இல்லை. சமயச் சீர்திருத்தக் காலத்திலுண்டான புயல்கள் இச்சேர்க்கையைச் சிதறவடித்தன. இரண்டாம் கிறிஸ்டியன் சுவீடன்மீது ரோமன் கத்தோலிக்க ஆட்சியைத் திணிக்க முயன்றார். அத்திணிப்பு அவரால் தடுக்க வியலாத அளவில் திடீர்ப் புரட்சியைத் தூண்டியது. நார்வே இரண்டாம் கிறிஸ்டியன் வசம் இருந்தது. அதனுடன் சுவீடன் நாட்டின் தெற்கு மாநிலப் பகுதிகளும் நெடுநாளாக அவர் வசமிருந்தன. டென்மார்க்கு, சுவீடன் ஆகிய இரு நாடுகளுக்குமிடையே மொழி, சால்பு ஆகியவற்றில் உறவு காணப்பட்ட போதிலும் அவை இரு நூற்றாண்டு வரை இடைவிடாது போரில் ஈடுபட்டிருந்தன. இந் நூற்றாண்டில் முற்பகுதியிலேயே டென்மார்க்கு, லூதரின் சமயத்தைத் தழுவியது. ஆயினும், இவ்வாறு நிலை நாட்டப் பெற்றிருந்த பொதுச் சமயச் செல்வாக்குகள், அரசியல் ஒற்றுமையையோ, பொதுச் செயலையோ ஏற்படுத்தப் போதியன வாயில்லை.

## சுவீடனில் குஸ்டாவசு வாசா

### சுவீடனின் வறுமையும் சிறுமையும்

டென்மார்க்கு மன்னரையும் அவருடைய சமயக் கொள்கைகளையும் எதிர்ப்பதில் சுவீடன் நாட்டில், உயர் குடிப் பிறந்தோரான குஸ்டாவசு வாசா [1] என்பார் தலைமை வகித்தார். சுவீடன் நாட்டு அரசுரிமையை அவர் விரைவில் பரிசிலாகப் பெற்றார் (1523). அவர் குடும்பம் மீத்திறம் வாய்ந்த ஐரோப்பிய அரசக் குடும்பங்களுள் ஒன்றாகும். வாசா குடும்பத்தைச் சேர்ந்த சுவீடன் மன்னர்கள் பலவகைப்பட்ட குணவியல்புகளையுடையவர்களாய் இருந்தார்கள். சிலருடைய ஆட்சிகளில் நம்பிக்கைத் துரோகம், கொடுஞ்செயல்கள் ஆகியவற்றின் கறை படிந்திருந்தது. ஆயினும், நாட்டுப் பற்றிற்கும் திறமைக்கும் இவ்வரசர்களுடைய மரபு, புகழுடைய பிரஷ்யா நாட்டை ஆண்ட ஹோகன் சோலன் [2] மன்னர்களின் மரபைக்காட்டிலும் சிறந்து விளங்கியது. அவர்களின் கீழ்ச் சுவீடன், அதன் செல்வம், மக்கட்டொகை ஆகியவைகளில் அளவிற்கு விஞ்சி, ஐரோப்பிய விவகாரங்களிற் பங்கு கொண்டது. இக்கூற்றிற்குக் காரணம் யாதெனில், நாடு ஏழ்மையாயிருந்ததுடன், 18ஆம் நூற்றாண்டின் இறுதி வரை, சுவீடன் நாட்டு

[1] Gustavus Vasa. [2] Hohen zollern.

மக்கட்டொகை ஒன்றரை மில்லியன் எண்ணிக்கையைத் தாண்டவில்லை. அதைச் சார்ந்த நாடுகளின் மக்கட்டொகையைச் சேர்த்தாலும் இரண்டரை மில்லியனுக்கு மேற்படவில்லை. ஆனல், இம்மக்கட்டொகையிற் பெரும்பகுதினர் உடற்கட்டு வாய்ந்த குடியானவர்களாயும் மலைவாழ்நர்களாயும் இருந்ததால், இராணுவத்திற்கு இணையற்ற ஆள் வலிமையை அளித்தார்கள். இப்பொழுது நாம் அறிந்துகொள்ளும் காலத்திற்கு ஒரு நூற்றுண்டிற்குப்பின் ஏற்பட்ட முப்பதாண்டுப் போரில் குஸ்டாவசு அடால்பசின்[1] தலைமையில் அந்நாட்டு மக்கள் அவர்கள் செய்த வீர தீரச் செயல்களைப் பற்றி ஏற்கனவே அறிந்தோம். அதற்கு நெடுநாளுக்குப் பின்னருங்கூட, அவர்கள் தங்கள் பழைய வீரம், ஈடுபாடு இவைகளையிழந்து, வேலை செய்வதற்கு ஊதியத்தை இன்றியமையாத தூண்டுகோலாகக் கொண்டு, கூலிப்படைகளாய் இருந்தபோதிலுங்கூட, ஐரோப்பியப் போர்களில் சிறந்த போர்வீரர்களென மதிக்கப்பட்டார்கள். அதனுடன் அதன் அரசியல் சட்ட வரம்பிற்குட்பட்ட வாழ்க்கை சில நேரங்களில் நசுக்கப்பட்ட போதிலும் அதன் வாழ்க்கை, வலிமை பொருந்திய மன்னர்களால் முற்றிலும் அழிக்க இயலாத நிலையில் வலிமை பெற்று இருந்தது. 18ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வரம்பற்ற ஆட்சிக்கு ஆதரவான பொது மனப்பான்மை இருந்த போது, அரசியல் சுதந்தர வாழ்விற்குச் சுவீடனும் இங்கிலாந்தும் எடுத்துக்காட்டுக்களாய் இலங்கின.

## போலந்தில் வாசா குடும்பம்

1587-ல் வாசா குடும்பம் மற்ருேர் அரியணையையும் அடைந்தது. அவ்வாண்டிலேயே சிகிஸ்மண்டு வாசா[2] என்பவர். போலந்து நாட்டு அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இதனல், சுவீடனுக்கு இழப்பே தவிர, ஆக்கம் ஒன்றும் இல்லை. சிகிஸ்மண்டு ஒரு கத்தோலிக்கர். வாசா குடும்பத்தின் சுவீடன் கிளை, போலந்து கிளை என்னும் இருகிளைகளுக்குமிடையே விரைவிலேயே மிகக் கடுமையான பகைமை ஏற்பட்டது. போலந்து கிளையைச் சேர்ந்தவர்கள் சுவீடனையும் சேர்த்து ஆட்சி புரிவது என்ற கொள்கையை முற்றிலும் கைவிடவில்லை. சுவீடன் மன்னர்கள் போலந்து மன்னர்களை இடரோடு கூடிய போலிகளாகக் கருதினுர்கள். குஸ்டாவசு அடால்பசு முப்பதாண்டுப் போரில் இறங்குவதற்குப் போலந்து மன்னர்களால் ஏற்பட்ட அச்சமும், அவர்கள் சுவீடன் முடிக்கு உரிமைபாராட்டியதுமே காரணங்களாய் அமைந்தன.

[1] Gustavas Adolphus. [2] Sigismund Vasa.

## ஜெர்மன் வணிகச் சங்கம் வீழ்ச்சியுறல்

### வெஸ்டுபேலியா உடன்படிக்கைக்குப்பின் சுவீடன்

நாம் இப்பொழுது பால்டிக்குக் கடலில் தெற்குப் பகுதியில் உள்ளவற்றைப் பற்றி மேற்போக்கான முறையிற் காண்போம்: சமயச் சீர்திருத்தக் காலத்தின் தொடக்கத்தில் ஜெர்மானியச் சிற்றரசுகள்—ஹால்ஸ்டீன்[1], மெக்லன்பர்கு[2], போமிரேனியாக்[3] கோமகர் நாடுகள்—டென்மார்க்கிலிருந்து பேரரசின் கிழக்கெல்லைவரை பரவியிருந்தன. ஜெர்மன் வணிகர் சங்கம்[4] (ஹான்ஸியாட்டிக்குச் சங்கம்), அதன் தலைமை அலுவலகமான லூபெக்கிலிருந்துகொண்டு, பால்டிக்குக் கடலின்மீது ஆதிக்கம் செலுத்தியது. ஆனால், பதினாறுவது நூற்றாண்டிலும் பதினேழாவது நூற்றாண்டின் முற்பகுதியிலும் பெரு மாறுதல்கள் ஏற்பட்டன. எழுச்சியுற்ற ஹாலந்து, சுவீடன் இவற்றின் சத்திகளினால் ஜெர்மன் வணிகச் சங்கம் வீழ்ச்சியுற்றது.

வெஸ்டுபேலியாச் சமாதானத்தின்படி ஜெர்மனியில் சுவீடனும் ஒரு வல்லரசாயிற்று. மேற்றிராணியார் பகுதிகளான பிரீமன், வெர்டுன் என்பவை சுவீடன் வசமாயின. மேலும், சுவீடன், வீசர், எல்பு நதிகளின் முகத்துவாரங்களின்மீது செல்வாக்குப் பெற்றது. மேற்குப் போமிரேனியாவும் அதன் வயமிருந்ததால், ஓடர் நதியின் கீழ்ப்பகுதிகளையும் ரூஜன்[5] தீவையும் சேர்த்துக்கொண்டது. பிராண்டன்பர்கின் தேர்வாளர் தொகுதி (இப்பகுதிதான் விரைவில் பிரஷ்யா இராச்சியமாய் வளரலாயிற்று) கிழக்குப் போமிரேனியாவைப் பெற்றது காரணமாக, பால்டிக்கு விவகாரங்களில் எல்லாம் அக்கறை கொண்டது.

## பால்டிக்குக் கடலின் தென்கிழக்குக் கரைகள்

### பால்டிக்குக் கடலின் கிழக்கில் சுவீடனுக்குச் சொந்தமானவை

பேரரசின் கிழக்கெல்லை, போமிரேனியாவாகும். அதற்கப்பாலிருந்த நிலப்பகுதிகளில் ஒன்றுகூட ஜெர்மானிய இன மூலத்தைச் சேர்ந்தது அன்று. இந்நிலப்பகுதிகள் டியூட்டானிக்குப் பிரிவைச் சேர்ந்த போர் வீரர்[6] வாட்போர் வீரர்[7] ஆகியோர்களின் தொண்டிற்கு இருப்பிடமாயிற்று. அவர்களுடைய முயற்சிகளால் நாட்டில் தொழிலும் வாணிகமும் தோன்றலாயின. பெரிய அளவில் ஸ்லேவானியக் குடி

[1] Holstein. [2] Mecklenburg. [3] Pomerania.
[4] Hanseatic League. [5] Rugen. [6] Knights of the Teutonic order.
[7] Knights of the Sword.

மக்கள் அழிக்கப்பட்டார்கள். எஞ்சியவர்கள் கிறித்துவச் சமயத்தை ஏற்றுக்கொண்டார்கள். ஜெர்மன் வாணிகத்தையும் கிறித்துவச் சமயத்தையும் சேர்ந்த ஆயுதந் தாங்கிய சமயப் பரப்புக் குழுவினருக்கு எவ்வாறு பெருந்தீங்கு ஏற்பட்டதென்பதை ஏற்கனவே கண்டோம். கிழக்குப் பிரஷ்யா, பிராண்டன்பர்குத் தேர்வாளர் தொகுதியோடு இணைக்கப்பட்டது. 1660 வரை பிரஷ்யா போலந்தைச் சேர்ந்த படைமானியப் பகுதியாய் இருந்தது. கிழக்குப் பிரஷ்யாவிற்கும் ஜெர்மனியின் நிலப்பகுதிகளுக்குமிடையில் போலந்து அதன் நிலப்பகுதியைக் கடல்வரையிற் கொண்டு சென்றது. போலந்து மீண்டும் பிரஷ்யாவின் கிழக்கில் பால்டிக்குக் கடல்வரை பரவியிருந்தது. பிறகு, லிட்வோனியா,[1] எஸ்தோனியா,[2] இங்கிரியா,[3] கெக்ஸ்ஹோம்,[4] பின்லாந்து எனப்படும் பகுதிகள் ஸ்வீடனுக்கும் ரஷ்யாவுக்குமிடையே சச்சரவுக்குரியவைகளாய் அமைந்தன. நன்கறியப்படாத அந்நாட்டின் தொடக்க வரலாற்றை இவண் கருதாது விட்டுவிடுவோம். 1617-ல் குஸ்டாவசு அடால்பசு கடும்போர் செய்ததன் விளைவாக இவை ஸ்வீடனுடன் இணைக்கப்பெற்றன என்பதை மட்டும் அறிதல் போதுமானது. ரஷ்யா (அப்போது மாஸ்கோவி என வழங்கப்பட்டது) பால்டிக்குக் கடல் வழியாகவும் பெருங்கடல்கள் வழியாகவும் கிடைக்கும் வாணிகப் பயன்களைப் பெருத நிலையில் தடை செய்யப்பட்டிருந்தது. பால்டிக்குப் பகுதிகளில் ஸ்வீடன் முதன்மையாயுள்ளது என்பது உறுதியாயிருந்த போதிலும், அதன் அதிகாரம் இன்றும் உயர்நிலையை அடையவில்லை. தவிர, ஜெர்மனி பின் ஸ்வீடன் இனத்தினரல்லாத மிகப்பெரிய பகுதிகள், பின்லாந்து, புதிதாக வெற்றியால் இணைந்த நிலப்பகுதிகள் இவைகளினுல் தொல்லையுற்றிருந்ததாலும், இராணுவ மனவெழுச்சியிருந்தும் அதன் குறைந்த மக்கள்தொகையால் அவை காலப் போக்கில் பராமரிப்பதற்குப் போதுமானவையாயிராமல் போயிற்று.

### ஐரோப்பாவின் படத்தில் கிழக்கு நடுப் பகுதிகளில் பொது மாற்றங்கள்

இந்நாடுகளின் அரசியல் சார்ந்த நிலவியலில் பெருமாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. 17ஆம் நூற்ருண்டில் காணப்பட்ட எல்லைகளுள் ஒன்றைக்கூட இன்றைய ஐரோப்பாவின் நிலப்படத்திற் காணவியலாது. பிற்காலத்தில் பிரஷ்யா என்று வழங்கிய பிராண்டன்பர்கு, ஜெர்மனியின் வடக்கிலிருந்த பகுதிகளை விரைந்து தாக்கிப் போட்டியாளர்களின் உடைமைகளைப்பறித்தது. டென்மார்க்கின் நிலவெல்லை, அத்தீபகற்பத்தின் வடக்குப் பகுதியோடு நின்றது. நார்வே தனியரசாய் இருந்தது. சுவீடன் அந்நாட்டு மொழி பேசப்படும் பகுதிகளைத் தவிர, மற்றப் பகுதிகளை இழந்தது. ரஷ்யா, மேற்கு நோக்கிப்

[1] Litvonia. [2] Esthonia. [3] Ingria. [4] Kexholm.

பரவுதற்கு சுவீடன் அதன் கொள்கையாலும் வலிமையாலும் எதிராக, ஏற்படுத்திய தடைகளைத் தூக்கி எறிந்தது. ஸ்லேவானிக்கு நாடுகளுள் சிறந்த மற்றொரு நாடான போலந்து 17ஆம் நூற்றாண்டில் ரஷ்யா வைப்போன்று மக்கள் தொகையைக் கொண்டிருந்தது; ஆனால், நாகரிகத்தில் ரஷ்யாவைவிடச் சிறந்து விளங்கியது எனினும் நிலப் படத்திலிருந்து அடியோடு மறைந்தது. 1919-ல் வெர்சையில்ஸ் உடன் படிக்கையின்படி, கிழக்கு, தென்கிழக்கு ஐரோப்பாவில் வரலாற்று அடிப்படையில் மற்றும் சில நாடுகளுடன் போலந்து மீண்டும் உலகப் படத்தில் இடம் பெறலாயிற்று.

## போலந்து ரஷ்யா நாடுகளுக்கிடையே மாறுபாடுகள்

### போலந்தின் சமயவரலாறு

போலந்து ரஷ்யா இவற்றின் ஊழ்களுக்கிடையே அமைந்த வேறு பாடு நன்கு புலப்பட்டது. போலந்து மக்கள், மனித இனம், மொழி, நிலையங்கள், சமூக அமைப்பு இவைகளில் ரஷ்யாவோடு ஒன்றாகக் காணப்பட்டிருந்தார்கள். ஆனால், ரஷ்ய அரசாங்கம் திறமையான வல்லாட்சியாய் வளர்ந்தபொழுது, போலந்து, தான் சுதந்தர நாடு என வழங்கியதைப் பின்பற்றி நாட்டில் எல்லா விதமான ஒழுங்கின்மையை யும் அனுமதித்தது. இதன் விளைவாக நாட்டில் அரசியற்குழப்பம் ஏற்பட்டு, அது அண்டை அரசர்களின் ஆதிக்கத்திற்கு இலக்காயிற்று. லித்துவேனியாவுடன்[1] சேர்ந்ததன் விளைவாகப் போலந்தின் நிலப் பரப்புப் பெரிதாயிற்று. போலந்தில் ஆட்சி புரிந்த ஜாகில்லோன்[2] வமிசத்தினர் இந்நாடுகளின் சேர்க்கையைத் தோற்றுவித்ததோடு அதைத் தொடர்ந்து நீடிக்கச் செய்ததிலும் சிறப்பான புகழைப் பெற்றனர். லித்துவேனியரில் பெரும்பகுதியினர் கிழக்குக் கிறித்துவத் திருச்சபையைச் சேர்ந்தவராயிருந்தனர். போலந்து மக்கள் கத்தோ லிக்கர்களாய் மேம்பட்டிருந்தார்கள். போலந்தில் பிராட்டஸ்டென்டு இயக்கம் முதலில் முன்னேறியிருந்தது. ஆனால், இது கத்தோலிக்க எதிர் விளைவாலும் இயேசு சங்கத்தினரின் வேகத்தாலும், ஆர்வத் தாலும் முறியடிக்கப்பட்டது. கத்தோலிக்கச் சமயம் தலையாய சமயமா யிருந்தும், அது வருத்துதலையும் துன்புறுத்துதலையும் செய்யாமல் இருந்ததால், போலந்து மக்கள் பெருமைக்குரியவர்களானார்கள். சமயத் துன்புறுத்துதல் ஒரு நாட்டைக் கெடுக்கும் தீமைகளுள் ஒன்றாகும். இத்தீமையினாற் போலந்து துன்புறவில்லை.

[1] Lithuania. [2] Jagellon.

## போலந்தின் முடிவுக்குத் தேர்வு

### கட்டுப்பாடற்ற தடையுரிமை : போலந்து குழப்பம்

ஜாகில்லோன் மரபு, 1572-ல் முடிவுற்றது. அது முதல் போலந்து மன்னருக்குரிய பதவி தேர்ந்தெடுக்கப்படுவதாயிற்று. உயர்குடியினரும் பெருந்தன்மை உடையாரும் தேர்வாளராய் இருந்தனர். முடியாட்சி முறையில் தேர்தலைக் கொண்டதன் விளைவாகப் போலந்து எல்லாத் தீமைகளையும், மிகைப்படுத்திய அளவில் வெளிக்காட்டியது, அவை தேர்தலுக்கு நின்ற வேட்பாளர்களுக்கும் அவர்களை ஆதரித்தவர்களுக்கும் இடையே காணப்பட்ட கடும் போட்டி, வெளி நாட்டு அரசுகளின் தலையீடு, தேர்தலில் வெற்றி பெறுவதற்காக வேட்பாளர்கள் ஆட்சிக்குப் பேரிடரை உண்டுபண்ணக் கூடிய வகையில் வாக்களித்த சலுகைகள், இறுதியில் உதவியும் வலிமையுமின்றிப் பெற்ற இறைமை என்பவை ஆகும். போலந்தின் இறைமை மாத்திரம் வலுவிழந்ததாகக் காணப்படவில்லை. முடியரசிற்கு இயற்கையாகவே போட்டியாயிருந்த எல்லா நிறுவனங்களும் வலிமையற்றிருந்தன. ‘டயட்’ சபையிருந்தும் கட்டுப்பாடற்ற தடையுரிமை [1] இருந்தது காரணமாக, அச்சபை சத்தியற்றதாயிருந்தது. கட்டுப்பாடற்ற இத்தடையுரிமையால், ஒவ்வோர் உறுப்பினரும் அவரவருடைய தனி வாக்குரிமை வாயிலாக எந்த முன்மொழிவையும் தடுக்கவும், மறுப்பாணையைப் பயன்படுத்தவும், தமக்குத் தோன்றும் போது ‘டயட்’ சபையைக் கலைக்கவும் அல்லது அழிக்கவும் இயன்றது. கட்டுப்பாடற்ற இத்தடையுரிமையைப் பயன்படுத்தி ஒரு சமயம் பதினைந்து ‘டயட்’ சபைக் கூட்டங்கள் ஒன்றன்பின் ஒன்ருகக் கூடி, எவ்வித அலுவலையும் செய்யாது கலைந்தன. நிலமானிய முறை மற்ற நாடுகளில் இடையில் அதிகாரம் குவிந்த தேசிய அரசாங்கம் மாறுவதற்கு உதவியபோது, போலந்தில் நிலமானிய முறையில் நிலையாகக் காணப்பட்ட அரசியற் குழப்பத்தின் போக்கு வலுவடைந்து காணப்பட்டது. நாட்டின் உயர்குடி மக்கள் (அவர்கள் தொகை 80,000 என மதிப்பிடப்பட்டிருந்தது) அவர்களின் எஸ்டேட்டு மன்னர்களைப் போன்றிருந்ததால், அரசாங்கம் அழிவுறக் காரணமாயும், நல்லூழில்லாக் குடியானவர்களுக்குக் கடுமையான எதிர்ப்பாயும் இருந்தார்கள். மன்னர்கள் முடியாட்சியை வலுப்படுத்துவதற்காகவும், நாட்டில் திறமையான அரசாங்கம் எனும் இயந்திரத்தை அளிக்கவும் இடைவிடாது முயன்ற முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்றன. இத்தோல்விக்குத் தொடக்கத்தில் போலந்து மக்களின் எதிர்ப்பும், பிறகு போலந்து ஒன்று சேர்ந்து வலுவுள்ள நாடாக மாறுவதைக் காண்பதில் விருப்பமற்ற அயல்நாடுகளின் எதிர்ப்பும் காரணமாயிருந்தன.

[1] Liberum veto.

## ஜான் சோபீஸ்கி

போலந்தின் வரலாற்றை விரிவாக்க இந்நூல் இடம் தாராது. அவ்வரலாற்றில் பரபரப்பையூட்டும் இராணுவப்புகழ் பெற்ற நிகழ்ச்சிகள் நிறைந்துள்ளன. போலந்தை ஆண்ட சிறந்த மன்னர்களுள் இறுதியானவர் ஜான் சோபீஸ்கி[1] (1674-1696) என்பவர் ஆவர். துருக்கியர்கள் வியன்னு நகரை முற்றுகை செய்துகொண்டிருக்கும் பொழுது அவர் அந்நகரை நோக்கி விரைந்து சென்றதற்காக நினைவு கூரும் முறையில் உள்ளவராவர். இதைத் தொடர்ந்து துருக்கியர் தோல்வியுறுங் காலத்தை ஆக்கியவரும் அவரேயாவர். வியன்னு நகரைக் காப்பாற்றியதற்காக அந்நகர்க் கதீட்ரலில் நடந்து வந்த வழிபாட்டில் 'கடவுளால் அனுப்பப்பட்ட மனிதர் உள்ளார்; அவர் பெயர் ஜான்,' என அவரைக் குறிப்பிட்டார்கள் அந்நாட்டு மக்கள். இதைத் தவிர வேறு சில வீரச் செயல்களையும் அவர் புரிந்தார். எனினும், இவற்றின் பயனுகப் போலந்து வலுவடையவில்லை. அவர், 'டயட்' சபைமுன், 'பல வெற்றிகளைப் பெற்று உலகில் போலந்தின் புகழை ஓங்கச் செய்ததன் பயனுக நாட்டில் சீர்படுத்த இயலாத அழிவும் பழி தேடுதலுமே ஏறபட்டன என்பதை வருங்காலச் சந்ததியார்கள் அறிய வியப்புறுவார்கள். எனினும், நாற்பது நாள்களில் நினேவே[2] அழிந்துவிடும்,' என்று கூறினுர். இச்சொற்கள் போலந்து வரலாற்றின் பெரும்பகுதியைச் சிறப்பாகக் குறிக்கின்றன. போலந்தின் அழிவிற்குக் குறிப்பிடப்பட்டுள்ள நாற்பது நாள்கள் ஒரு நூற்ருண்டுக்குச் சில நாள்கள் குறைந்திருந்ததாகக் காணப்பட்டது. ஒவ்வொரு பத்து ஆண்டும் செல்லச் செல்ல அழிவு நெருங்கிக் கொண்டேவந்தது.

## ரஷ்யாவின் வளர்ச்சி

மாஸ்கோவி அல்லது ரஷ்யாவின் வளர்ச்சி முற்றிலும் மாறுபட்டிருந்தது. அங்கும் தொடக்கக் காலத்தில் எங்கும் இருந்தது போல முடியாட்சியும், சில அமயங்களில் தேர்ந்தெடுக்கும் முறையில் அமைந்திருந்தது. மேலும், அங்கும் போயர்கள்[3] என்னும் உயர்குடி மக்கள் இருந்தார்கள். அவர்கள் தங்களுடைய உரிமைகளைக் காப்பதிலும் முடியாட்சியின் அதிகாரம் வளர்வதை எதிர்ப்பதிலும் பொருமை கொண்டிருந்தார்கள். தொடக்கக் காலத்தில் இருந்தனவன்றி, மற்றவற்றில் போலந்து, ரஷ்யா இவற்றின் வளர்ச்சிக்கிடையில் வேறு ஒற்றுமை எதுவும் இல்லை. போலந்து அரசியல் குழப்பத்தையும், முறைக்கேட்டையும் நோக்கிச் சென்றது. ஆனல், ரஷ்யா, கொடுமை

[1] John Sobieski. [2] Nineveh. [3] Boyars.

யான வரம்பிலா ஆட்சியால் மிக்க வலிமை பொருந்திய நாடாக உருவாக்கப்பட்டது. அது நாற்றிசைகளிலும் முடிவற்ற வெற்றி வாழ்க்கையில் இறங்கியது. இவ்விருநாடுகளுக்கும் இடையே காணப்பட்ட வேறுபாடுகளின் காரணங்களை உறுதிப்படுத்துவது கடினம். போலந்து கத்தோலிக்க நாடு. ரஷ்யா கிழக்குத் திருச்சபையைச் (வைதிகப் பிரிவு) சேர்ந்தது. கிழக்குத் திருச்சபை வரம்பின்மை ஆட்சியை நெகிழ்ந்து கொடுக்கத் தக்க கருவியாய் இருந்தது. தார்த்தாரியப்[1] படையெடுப்புக்களிலிருந்து போலந்து தப்பியது. இப்படையெடுப்புக்கள் ரஷ்யாவின் அதிகாரம் மையத்தில் குவிந்து போவதற்கு உதவின. ஆனுல், அவ்வதிகாரத்தின் பெரும் பகுதி, பதினுருவது நூற்றுண்டு முதல் அடிக்கடி விட்டு விட்டு ஆட்சி புரிந்த சிறப்பான மன்னர்களின் செயல்களால் ரஷ்யா வலிமை பெற்று விளங்கக் காரணமாயிற்று.

## அச்சுறுத்தும் மன்னர் இவான்

நவீன ரஷ்ய வரலாற்றின் தொடக்கத்தில் அச்சம் விளைவிப்பவர் என்ற அடைமொழியைப் பெற்ற இவான்[2] (1533-1584) என்பவர் காணப்படுகிருர். அவர் தனிச்சிறப்பு வாய்ந்தவராவர். அவர் நாகரிக மற்ற கொடியராய் இருந்தார். அவர் நோவ்கோராடு[3] எனும் நகரத்தை அழித்த பின்பு, ஆடவரும் மகளிரும் சிறுவர்களும் உயிர்துணுக்குறச் செய்யப்பட்ட காட்சியைக் கண்டு மகிழ்ந்தார்; எனினும், நடுத்தர வகுப்பு, கீழ்த்தர வகுப்பு மக்களுக்கு ஆதரவாயிருந்ததுடன் மேற்கு ஐரோப்பாவுடன் நாட்டின் வாணிகத்தைத் தொடங்கினுர்; அதனுடன் கல்வியைப் பேணுவதிலும், ஊக்கங்காட்டினுர். உயர்குடி மக்களின்மீது தான் அவருடைய கடுந்தாக்குதல்கள் ஈவிரக்கமின்றி நடந்தன. அவர் ஒவ்வொரு செயலிலும் மகாபீட்டருக்கு முன்னேடியாய் விளங்கினுர். ரஷ்ய முடியாட்சி பொதுமக்களை மட்டுமதிப்பற்ற முறையில் காப்பாற்றுவதாயும், உயர்குடி மக்களுக்குக் கடும்பகைமையுள்ளதாயும், அவரிடம் காணப்பட்டது.

## மகாபீட்டர்

இவானுடைய மரணத்திற்குப் பின் ரஷ்யாவில் பஞ்சம், கொள்ளை நோய், வெளிநாட்டு உள் நாட்டுப் போர்கள் போன்ற பல விதத் தொல்லைகள் ஏற்பட்டன. இவானின் குடும்பமும் விரைவில் அழிந்தது. 1613-ல் பதினுறு வயது நிரம்பிய மைக்கேல் ரோமானுஃப்[4] என்ற சிறுவர் மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அது முதல் ரஷ்யாவில்

[1] Tartar. [2] Ivan the Terrble. [3] Novgoriod.
[4] MiChael Romanof.

ஆண்ட மன்னர்கள் பெரும்பாலும் அவர் வழித் தோன்றல்களாயிருந்தார்கள். அடுத்து வந்த எழுபத்தைந்து ஆண்டுகள், உள் நாட்டு வெளி நாட்டுச் செய்திகளில் பல சுவையான நிகழ்ச்சிகள் நிரம்பியனவாய் இருந்த போதிலும், அக்காலத்தைக் கடந்து மேற்செல்லுவோமாக: ரஷ்யாவின் வரலாற்றில் மிகச் சிறப்பான காலம் 1682-ல் மகாபீட்டர்[1] அரியணை ஏறியது முதல் தொடங்குவதாகும். அவர் 1725 வரை ஆட்சி புரிந்தார். அவருக்கு முன் ஆண்டவர்களது ஆட்சியின் தொடர்ச்சியாகவே அவரது ஆட்சி முறையும் இருந்தது. எனினும், அது வரை சமுதாயத்தில் இருந்த தன்மையை அடைவதற்குத்தடுமாறிய ஆற்றல்கள் அவரது ஆட்சிக்கு வெற்றியளித்தன. அவரது ஆட்சியின் நிகழ்ச்சிகளிலிருந்து புதிய ரஷ்யாவின் வரலாறு முறையாக வளர்ந்தது போலக் காணப்பட்டது.

## பீட்டரின் இயல்பு வேறுபாடுகள்

பீட்டரின் இளமைப்பருவம் அச்சம் நிறைந்த பல காட்சிகளின் நடுவிற் கழிந்தது. அவர் தம் மாமனர் கொலையுண்டதைக் கண்டார். அவர் தாயாரின் தலைமையமைச்சர் அவரது பிடியிலிருக்கும்பொழுதே கண்ட துண்டமாக வெட்டுண்டதைப் பார்த்தார்; அக்கொடிய நிகழ்ச்சிகளுக்கு நாட்டிலிருந்த உயர்குடிப் பிறந்தோர்களே காரணம் என்பதையும் அறிந்தார். அவரைவிட விந்தையான இயல்புகொண்ட மனிதரை வரலாற்றிற் காண முடியாது. அவர் கொடிய விலங்குகளின் கொடுமைகளையும் பழிக்கக்கூடிய கொடுமைகளைச் செய்ய வல்லவர். கலகம் செய்த நூற்றுக்கணக்கான மெய்க்காப்பாளர்களை உயிர் துணுக்குறச் செய்து கொன்றபொழுதும், அவர் புதல்வரையே கொடுங்கொலை செய்ய அனுமதித்த பொழுதும் தாம் பேரச்சத்தையுண்டாக்கும் மன்னர் இவானுடைய நேர் வாரிசென்பதை மெய்ப்பித்தார். இத்துணைக் கொடிய தன்மையுடன் கொடுங்கோலாட்சி செய்தவர், அறிவியல், தொழில் வளர்ச்சி இவற்றில் பேரார்வம் கொண்டவராய் இருந்ததுடன் எல்லாவற்றிற்கும் மேலான நாகரிகத்தைப் புகுத்துவதில் பேரவாக் கொண்டிருந்தார். அவருடைய வாழ்க்கையின் ஒரு பகுதி ஹூணர்களின் தலைவரான அட்டிலா[2] என்பவரின் கொடுமையையும், மற்றொரு பகுதி பதினான்காம் லூயி, கோல்பர்ட்டு என்பவர்களின் சீரிய ஆட்சியையும் ஒத்திருத்தலைக் தோற்றுவிக்கிறது.

முதலில் உள் நாட்டின் வாழ்க்கையையும் அமைப்பையும் பற்றி அவர் செய்தன யாவை என்பதைக் கவனிப்போம்; பின்னர் வெளி நாட்டரசுகளுடன் செய்த போர்களை அறிவோம்; இவ்விரண்டு பகுதி

[1] Peter the Great. [2] Attila.

களும் ஒன்றையொன்று சார்ந்தனவாகவே ஆட்சிக்காலம் முழுவதும் இருந்தபோதிலும் இவற்றைத் தனித்தனியாகக் கவனிப்போம்.

## உள்நாட்டுக் கொள்கை

அவரது வாழ்க்கையைக் கொண்டு அவர் நோக்கங்களைத் தெளிவாகக் காணலாம். அவர் எல்லாப் பகைவர்களுக்கும் மேலாக முடியாட்சியின் அதிகாரத்தை மேலோங்கச் செய்ய விரும்பினார்; நாட்டின் வாழ்க்கையிலும் எண்ணத்திலும் ஐரோப்பிய முறைகளைத் தோற்றுவிக்கவும், வாணிகத்தாலும் தொழில்களாலும் ரஷ்யாவின் செல்வத்தை உயர்வடையச் செய்யவும் விரும்பினார்; உயர்குடி மக்களைத் தம் அடி பணியச் செய்தார். உயர்குடிப் பிறப்பைக்காட்டிலும், கல்வியும் இராணுவச் சேவையும் மன்னரின் ஆதரவைப் பெறுவதற்கு ஏற்றவையெனக் கருதப்பட்டன. அவர் உயர்குடி மக்கள் கொண்டாடிய சிறப்புரிமைகளையும், நிதித் தொடர்பான ஊழல்களையும், கடுந்தணிக்கை செய்து ஒழித்தார். ஆயினும், ஸ்டெர்ல்ட்சி[1] எனும் ரஷ்யப்படை அவருடைய திட்டங்களுக்குக் கடும்பகையாய் இருப்பதையும் கண்டார். அப்போர்வீரர்கள் ரஷ்ய மன்னருடைய முன்னுள் மெய்க்காப்பாளர் படையில் அமைந்திருந்தவர்கள். துருக்கியிலிருந்த மெய்க்காப்பாளர்(ஜானிசாரிஸ்)[2] அல்லது முற்காலத்தில் ரோமானியப் பேரரசர்களிடமிருந்த பிரோட்டோரியன் காவற்படையோடு[3] அவர்களை ஒப்பிடலாம். அப்போர் வீரர்கள் சுறுசுறுப்பற்றவர்களாயும், செயலாற்றலில்லாதவர்களாயும், தனிச்சிறப்பற்றவர்களாயும் இருந்ததோடு புதிய முறைகளைப் புகுத்துவதற்குப் பீட்டர் மேற்கொண்ட முயற்சிகளையும் எதிர்த்தார்கள்; அது மட்டுமன்றிக் கலகமும் செய்து தோல்வியுற்றார்கள். என்றாலும், அவ்வெற்றி பீட்டருக்கு மனநிறைவை அளிக்கவில்லை. ஆயிரக்கணக்கானவர்கள் கொடிய இறப்பினை எய்தியது இராணுவத்தில் பீட்டருக்கு இருந்த மேலான அதிகாரத்திற்குச் சான்று தந்தது போல ஆயிற்று.

## ரஷ்யாவை ஐரோப்பிய மயமாக்கல்

### ரஷ்யா கடலாதிக்கம் பெறல்

பீட்டர் தமது வாழ்நாள் முழுவதும் ரஷ்யாவை ஐரோப்பிய மயமாகச் செய்வதற்கு உழைத்தார். ஆனால், திருச்சபையின் ஆதரவைப் பெற்ற மக்களின் பழக்கங்கள், மரபுகள் இவற்றின் பிடிவாதமான எதிர்ப்பை எதிர்த்து நிற்க வேண்டியிருந்தது. அவர் பழைய ரஷ்ய வாழ்க்கையில் உயர்குடி மக்களின் அடையாளமாய் இருந்த நீண்டு தொங்கும் தாடிகளைக் கத்தரித்துவிட்டுக்கொள்ள வேண்டுமென்று

[1] Streltsi. [2] Janissariss. [3] Proctorian Guards.

உயர்குடி மக்களுக்கு உத்தரவிட்டார். மன்னருடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்தவர்களைச் சமயத்தலைவர் சமயத்திலிருந்து விலக்கினர் என்றாலும், மன்னருடைய கட்டளை நிறைவேறியது. பீட்டரே தம் கையால் மெய்க்காப்பாளர்களின் (போயர்கள்) தாடிகளைக் கத்தரித்தார். பழைய முறையிலேயே தாடி வளர்த்துக்கொண்டவர்களின்மீது வரி விதிக்கப்பட்டிருந்தது. பீட்டர், மக்கள் ஐரோப்பிய உடைகளை அணிந்து கொள்வதை ஊக்குவித்தார்; மக்களிடையே ஐரோப்பிய நடனத்தைப் புகுத்தினர். கீழ் நாட்டு முறைப்படி ரஷ்ய மகளிர் தனித்து வைக்கப் படுவதை[1] எதிர்த்துப் போராடினர். ரஷ்யர்களின் ஆண்டு செப்டம்பர் முதல் தேதியில் தொடங்கிற்று. 'முதல் தோற்றத்தின் ஆண்டு நிறைவைக் குறிக்கும்' செப்டெம்பர் முதல் தேதி தொடங்கியதற்குப் பதிலாக, மேற்கு நாடுகளின் வழக்கத்தைப் பின்பற்றிப் பீட்டர், ஜனவரி முதல்தேதியிலிருந்து தொடங்குவதாக மாற்றி அமைத்தார்; அறிவியலும் கணிதமும் கற்பிப்பதை ஆர்வத்துடன் உயர்வடையச் செய்தார்; ஜெர்மனி நாட்டுத் தத்துவ ஞானியாரான லீப்னிட்ஸ்[2] என்பாரின் ஆலோசனையைப் பின்பற்றித் துரைத்தன இயந்திரத்தை முற்றிலும் மாற்றியமைத்தார். இளம்பருவ முதற்கொண்டே கப்பல் கடல் வாழ்க்கை ஆகியவை அவரது உள்ளத்தைக் கவர்ந்து வந்தன. அவர் கடலையடைவது ரஷ்யாவின் உயர்நிலையைப் பற்றியதென்பதைப் பிற் காலத்தின் அனுபவ முறையில் உறுதி செய்துகொண்டார். கடற் படையை எவ்வாறு அமைக்க வேண்டுமென்பதைக் கண்டறிவதற்காகவே ஹாலந்து, இங்கிலாந்து, பிரான்சு முதலிய நாடுகளுக்கு அவரது புகழ் பெற்ற பயணத்தை மேற்கொண்டார். அவர் டெப்ட்ஃபோர்டு[3] எனு மிடத்தில் தங்கியிருந்த போது இங்கிலாந்தின் கடற்படை முறையைக் கற்றுக்கொள்ளக் கடுமையாய் உழைத்தார்; பல கப்பல்களைக் கட்டினர்; டோன்[4] நதி வழியாகக் கப்பலிற்சென்று, 1696-ல் துருக்கியர்களின் பலம் வாய்ந்த கோட்டையான அஸோவைப்[5] பிடித்துக்கொண்டார்.

## துறைமுகமற்ற ரஷ்யா

இத்தகைய கருத்துக்களையும் பேராவலையும் கொண்டிருந்த பீட்டருக்கு ரஷ்யாவின் உண்மையான எல்லைகளை நிலையான எல்லை களாக ஏற்றுக்கொள்வது இயலாததாயிற்று. திறந்த கடல் அவரது எண்ணங்களில் எப்போதும் காணப்பட்டது. ரஷ்யா கடலோடு எவ்விதத் தொடர்புமின்றித் துண்டிக்கப்பட்டிருந்ததே இதற்குக் காரணம். தெற்கில் துருக்கிய அரசு கருங்கடலின் கரைகளின்மீது ஆதிக்கம் கொண்டிருந்தது. வடக்கில் பால்டிக்குக் கடலோடு தொடர்பு கொள்வதற்குப் போலந்தும் அதற்கு மேலாகச் சுவீடனும் தடையா

[1] Oriental seclusion. [2] Leibnitz. [3] Deptford. [4] Don. [5] Azov.

யிருந்தன. ரஷ்யாவின் எல்லைப்புறத்தின் சிறிது தொலைவிலேயே நல்ல துறை முகங்களிருந்தனவாயினும், ரஷ்ய மாலுமிகளுக்கு அவை சென்றடையக் கூடியனவாய் இருக்கவில்லை. ஆர்க்கேஞ்சல்[1] என்னுமிடத்திலே தான் ரஷ்யாவின் பகுதி கடலைத் தொட்டுக்கொண்டிருந்தது. ரஷ்யாவின் வாணிகம் விரிவடைவதற்கு ஆர்ட்டிக்கு மாக்கடல் வழியைத் தோற்றுவிக்கவில்லை.

## பன்னிரண்டாம் சார்லசு

பால்டிக்குக் கடலை எவ்வாறு ரஷ்யா அடைந்ததென்று அறிந்து கூறச் சுவீடன் வரலாற்றை மறுபடியும் பார்க்க வேண்டும். குஸ்டாவசு அடால்பசின் மகளும் அவருக்குப்பின் புதுமை உணர் வூட்டும் ஆட்சி புரிந்தவருமான கிறிஸ்தியானாவின் ஆட்சிக் காலத்தையும், பத்தாம் சார்லசு, பதினோராம் சார்லசு இவர்களின் ஆட்சிக் காலங்களையும் கடந்து நோக்கவேண்டும். பத்தாம் சார்லசு சுவீடனின் தெற்கு மாகாணங்களிலிருந்து டேனர்களை வெளியேற்றினர். பதினோராம் சார்லசு, வரையறுக்கப்பட்டதும் சட்ட வரம்பிற்குட்பட்டதுமான சுவீடனை வரம்பில்லாத தன்னாட்சியாகச் செய்தார். அதன்படி, மன்னரே எல்லாவற்றிற்கும் தலைமை உரிமை கொண்டவர் என்பதும், மன்னர் தம் செயல்களுக்குக் கடவுளுக்கே பொறுப்பாளராவர் என்பதும் ஏற்பட்டன. பதினைந்து வயதடைந்த பன்னிரண்டாம் சார்லசு, 1697-ல் அரியணை ஏறினர். 1718-ல் அவர் மரணமடையுமுன், பால்டிக்கு நாடுகளின் சத்தி ஆழ்ந்த மாறுதலை ஏற்படுத்தியது. இளைஞரான மன்னர் அஞ்சா நெஞ்சமுள்ளவராயும், பேரவாக் கொண்டவராயும், திறமை வாய்ந்தவராயும் வளர்ந்தார்.

## சுவீடனைத் தாக்குதல்

குஸ்டாவசு அடால்பசிடம் காணப்பட்ட அரசியல் வல்லமையும் நல்லுணர்வு நிலையும் இவரிடம் காணப்படவில்லை. ஐரோப்பாவின் வடகிழக்குப் பகுதிகளில் குழப்பத்தை விளைவித்து நடந்துகொண்டிருந்த வடக்குப்போரின்போது பன்னிரண்டாம் சார்லசு தற்காப்புச் செய்வதில் முனைந்திருந்தார். சுவீடனின் பரந்த நிலப்பகுதிகளின் நிலை, டென்மார்க்கு, போலந்து, ரஷ்யா இவற்றின் பேராசை பொருமை முதலியவற்றைத் தூண்டின. மன்னர் இளைஞராய் இருந்ததும்; சுவீடன் மக்களின் குறைவான மக்கள் தொகையும், மக்களின் ஏழ்மை நிலையும், சுவீடனைப் போரில் வென்று நாட்டை இருகூறுகப் பிரிப்பதற்கு எளிமையின் அமைந்தனவாய்த் தோன்றின. ஆகையால்;

[1] Archangel.

1699-ல் இம்மூன்று அரசுகளும் சுவீடனைத் தாக்குவதற்காக ஒன்று சேர்ந்தன.

## நார்வாச் சண்டை

எளிதாக வெற்றி பெறுவதற்குக் கனவு கண்டுகொண்டிருந்தவர்களை அவர்களுக்கு எதிரியான சிறுவர் தம் வீரச் செயல்களால் தட்டி எழுப்பினர். அவர் முதலில் டென்மார்க்கின்மீது திரும்பினர். ஒரு வெற்றியின் பயனுகக் கோபன்ஹேகன் நகரத்திற்கு அவர் முன்னேறினர்; இதன் விளைவாக ஏற்பட்ட சமாதானத்தின்படி நேச நாடுகளின் கூட்டிலிருந்து டென்மார்க்கை விலகச் செய்ததோடு, நஷ்ட ஈடு கொடுக்கும்படியும் செய்தார்; அதன்பின் ரஷ்யாவை எதிர்த்தார். 8000 வீரர்களடங்கிய படையின் உதவியால் அதைப் போன்று ஐந்து மடங்கு பெரிதான ரஷ்யப் படையை (பின்லாந்து வளைகுடாவிற்கருகில் இங்கிரியாவிலுள்ள) நார்வா [1] எனுமிடத்தில் அழித்தார். அடுத்த தாக்குதல் போலந்திற்கு ஏற்பட்டது. அந்நாட்டு மன்னரான அகஸ்டஸ் என்பார்தான் சுவீடன் இராச்சியப் பிரிவினைக்கு வித்திட்டவர்; நம்பவியலாத அளவிற்குத் தொடர்ந்து போர் நிகழ்ந்தது. போலந்து மக்கள் மிக்க அஞ்சாமையுடையவர்களாயிருந்தும், மிகவும் கட்டுப்பாடின்றியும், போருக்கும் மற்று எதற்கும் தேவையான அமைப்பு முறையின்றியும் இருந்தார்கள்; அதனுடன் மன்னருடன் போரிடுவதற்கு விருப்பமின்றியும் இருந்தார்கள்.

## போலந்து அடக்கப்படல்

### புல்டோவாச் சண்டை

எனவே, சுவீடன் படைகள் தடுத்தற்கரிய வலிமையோடு தாக்கின. சார்லசு முன்னேறுவதைத் தடுக்கப் போலந்து படைகளின் எண்ணிக்கை பயனற்றதாய் இருந்தது. அகஸ்டஸ், போலந்து நாட்டு மன்னராயிருந்ததுடன் சாக்ஸனி நாட்டுத் தேர்வாளராயும் இருந்தார். சாக்ஸனிப் படைகளும் போலந்து படைகளைப் போலவே வலிமையற்றிருந்தன. வார்சா கைப்பற்றப்பட்டது. சார்லசு அகஸ்டஸைப் பதவியினின்றும் நீக்கி, அவரால் நியமிக்கப்பட்ட ஸ்டானிஸ்லாஸ் லெக்ஸின்ஸ்கி [2] என்பார் மன்னராகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்று வற்புறுத்தி இராவிடின், போர் முடிவுற்றிருக்கக் கூடும். ஆயினும், இதையும் இறுதியில் ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. சாக்ஸனி முழுவதும் படையெடுத்து அழிக்கப்பட்ட பொழுது போலந்து மன்னர் சமாதானத்திற் கையெப்பமிட்டு, (1704) பதவியைத் துறக்க

[1] Narva. [2] Stanislas Leczinski.

இயைந்தார். இப்பொழுது ரஷ்யாவின் முறை வந்தது. சாக்ஸனியில் சார்லசு இருந்த பொழுது சுவீடனுக்குச் சொந்தமான பால்டிக்குக் கடற்கரையில் இருந்த மாநிலங்களை ரஷ்ய மன்னரான பீட்டர் படையெடுத்து அழித்தார்; ஆனல், அவற்றைத் தம்மிடம் வைத்துக் கொள்ள இயலவில்லை. மாஸ்கோமீது படையெடுக்கச் சார்லசு உறுதி பூண்டார்; அதைக் கைப்பற்றுவது வாயிலாகப் போரை முடிக்கக் கருதினர். ஆனல், அது அவருடைய ஆற்றலை மீறியதாய் இருந்தது. தம் சொந்த நாட்டின்மீது பிறர் படையெடுப்பதைக் கண்ட ரஷ்யர்கள், மிகக் கடுமையாக அவர்களை எதிர்க்கலானர்கள். மாஸ்கோவைக் கைப்பற்றும் எண்ணத்தை விடுத்துச் சார்லசு தெற்கு நோக்கிக் கொசாக்குக்[1] கலகக் கூட்டத்தினரின் தலைவரான மெசப்பாவுடன்[2] சேர்ந்துகொள்வதற்கு விரைந்து சென்றார். அப்பொழுது அவர் படைகளைவிட அதிகமாய் இருந்த படைகளை எதிர்த்து வெற்றி பெற முடிந்தது. ஆனல், ரஷ்யாவில் மழைக்காலம் தோன்றியதன் விளைவாக அவர் போர் வீரருட்பலர் மரணமடைந்தனர். எஞ்சியிருந்தவர்களின் ஊக்கமும் அழிந்து போயிற்று. ரஷ்யாவின் தெற்கு எல்லைப் புறத்தின் அருகில் இருந்த புல்டோவா[3] என்னும் கோட்டையில் சுவீடன் மக்கள் ரஷ்யர்களைத் தாக்கினர்கள். ரஷ்யர்களின் தொகை ஏராளமாயும் வலுவான தற்காப்புடனும் இருந்தது (1709). போரில் சுவீடன் நாட்டுப் படைகள் தோல்வியுற்றுச் சரணடைய நேர்ந்தது. மன்னர் துருக்கிக்குத் தப்பி ஓடினர். அங்கிருந்து தப்பிப் பிறகு புதிய கலகங்களில் ஈடுபட்டுப் புதிய சண்டைகளைச் செய்வதில் முனைந்து இறுதியில் நார்வேயில் நிகழ்ந்த தெளிவற்ற ஒரு சண்டையில் இறந்து போனர் (1718).

## சுவீடன் அரசின் பிரிவினை

வெற்றிகொள்ளும் இராணுவ அரசான சுவீடனுடைய அதிகாரம் அழிக்கப்பட்டு மீண்டும் தலையெடுக்காதவாறு செய்யப்பட்டது. எதிர்ப்பைத் தாங்கும் அதனுடைய ஆற்றல் முறியுமளவிற்கு நெருக்கத்திற்குள்ளாகியது. 'ஒவ்வொரு சிறு தொழிலாளியும், இரண்டு குடியானவர்களில் ஒருவரும் போர் வீரர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தனர்.' பன்னிரண்டாம் சார்லசின் மரணத்திற்குப் பின் தொடர்ந்த பல உடன்படிக்கைகட்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பிரஷ்யாவிற்கு மேற்குப் போமரேனியா கிடைத்தது. இதுமுதல் மிக்க வலிமை வாய்ந்த பிரஷ்யா, பால்டிக்கு நாடான ரஷ்யாவினுடைய தலைமை எதிரியாயும் ஆயிற்று. ஆன போதிலும் எல்லாவற்றையும்விட அதிக முக்கியமான லாபம் ரஷ்யாவிற்குக் கிடைத்தது. பின்லாந்து வளைகுடாவைச் சுற்றியிருந்த எல்லா மாநிலங்களையும் சுவீடனிட

[1] Cossacks. [2] Mazeppa. [3] Pultoya.

யிருந்து ரஷ்யா கவர்ந்து கொண்டது. அங்கே பீட்டர் செயின்டு பீட்டர்ஸ்பர்கு எனும் நகரை நிறுவினர். ரஷ்யாவின் கடற்படைக்கும் வாணிகத்திற்கும் இந்நகர் முக்கிய ஆதரவாய் அமைந்தது; அதனுடன் ஐரோப்பாவின் மேற்குப் பகுதிகளுடன் முக்கிய இணைப்பை ஏற்படுத்தியது. 1721-ல் 'தந்தை நாட்டின் தந்தையார் மகாபீட்டர் ரஷ்யா முழுமைக்கும் பேரரசர்' எனக் கொண்டாடப் பெற்றார். புரட்சிப் புயலுக்குப் பின்னரும் அவருடைய ஆதிக்கத்தின் சுவடுகளை இன்றும் ரஷ்யாவிற் காணலாம்.

அப்பொழுது ரஷ்யா வல்லாட்சி முறைப்படி ஆட்சி செய்யப் பெற்றதாயும், உறுதியான ஆட்சி முறையை உடையதாயுமிருந்தது. வல்லந்தப் பற்றுகையுடன் கூடிய அரசியல் வல்லமை எனும் மரபைப் பீட்டர் அவர்களுடைய மரபினர்களிடம் விடுத்துச் சென்றார். ரஷ்யாவைச் சுற்றியிருந்த நாடுகள், சுவீடனைப் போல வலுவற்றனவாகவோ, அல்லது துருக்கியைப் போன்று அழிந்துவிடுவனவற்றைப் போலவோ, அல்லது போலந்தைப் போன்று ஆட்சி குலைந்த நிலையிலோ, அல்லது மத்திய ஆசிய மக்களைப்போல உருவற்றனவும் முடிவற்றனவுமாகவோ இருந்தன. ரஷ்ய அரசின் பரவல் வியப்பைத் தோற்றுவிப்பதாய் அப்பொழுது தொடங்கியது. அது மந்திர சத்தியின் தோற்றமன்று. மேற்கு ஐரோப்பிய நாடுகளின் மீது முக்கியமான வெற்றிகளை அது அடையவுமில்லை. அதேபோன்று நன்கு ஆட்சி செய்யப்பட்ட எந்த ஆட்சிமீதும் புதிய வெற்றிகளைப் பெறவுமில்லை.

கீழ்க்காணும் ஆட்சிகளைப் பற்றிய வரலாற்றைத் தொடர்ந்து அறிந்து கொள்வதற்கு இந்நூலின் இப்பகுதியில் இடமில்லை. பீட்டருக்குப் பின் வந்தவர்களுள் மூன்றும் பீட்டரின் ஜெர்மன் மனைவியாரான இரண்டாம் காத்தரின் மிக்க சிறப்பு வாய்ந்தவர். அவர், 1762-ல் தம் கணவரைப் பதவி நீக்கம் செய்து கொலை செய்ததன் பயனாக அரியணையைப் பெற்றார். அவர் ஜெர்மானிய இனத்தைச் சேர்ந்தவராய் இருந்தும், ரஷ்ய முடியாட்சியின் சிறப்பு இயல்புக் கூறுகளை மீட்டும் உருவாக்கினர். தீய பழக்கங்களிலும் வல்லந்தத்திலும் எவருக்கும் அவர் பின்னடையவில்லை. பிரான்சிலும் மேற்கு ஐரோப்பாவிலும் காணப்பட்ட கருத்தியக்கத்திலும் அவர் தீவிரமாக ஊக்கம் கொண்டிருந்தார். அதனுடன் திதரோ, வால்டேர் என்பவர்களுடன் கடிதப் போக்குவரத்தும் நடத்தினர். அக்காலம் முழுவதும் கூட்டுச் சேர்க்கையையோ, அல்லது போட்டியையோ அனுமதிக்காமல், அவருடைய நாட்டை ஆட்சி புரிந்தார்; ஒவ்வொரு பக்கத்திலும் பிற நிலப்பகுதிகளைப் பிடித்துக் கொண்டார். அவர் ஆட்சி செய்து கொண்டிருக்கும் பொழுதுதான் பிரெஞ்சுப் புரட்சி தோன்றியது. மற்றோர் அதிகாரத்தில் அந்த இயக்கத்துடன் அவர் கொண்டிருந்த தொடர்பு

களையும், அவ்வியக்கத்தின் தொடக்க நிலைகளையும், அவர் பெற்ற இலாபங்களையும் பற்றிக் கூறுவோம்.

இவ்வதிகாரத்திற்கு மிகச் சிறந்த மூலமாக உள்ளவை, நிஸ்பெட்பெயின் எழுதிய 'ஸ்காண்டிநேவியாவும்' ஸ்லேவோனிக்கு ஐரோப்பாவும்'; மார்ஃபில் எழுதிய 'போலந்து'' ரபோபோர்ட் எழுதிய 'ரஷ்யா'; வாஸ்லேவ்ஸ்கி எழுதிய 'மகா பீட்டர்'; ராம்பாடு எழுதிய 'ரஷ்யாவின் வரலாறு' (பிரெஞ்சு மொழியிலுள்ளது) என்னும் நூல்களாம்.



பிரஷ்யாவின் வளர்ச்சி
1415–1914
வட கடல்
பால்டிக் கடல்
சுவீடன்
டென்மார்க்
ஹாலந்து
ஹால்ஸ்டயின்
மாக்லன்பர்க்
போமரேனியா
மேற்கு பிரஷ்யா
கிழக்கு பிரஷ்யா
பிராண்டன்பர்க்
பெர்லின்
போஸன்
வார்ஸா
புதிய கிழக்கு பிரஷ்யா
தெற்கு பிரஷ்யா
புதிய சைலீசியா (1807)
ரஷ்யா
ஹனோவர்
பிரிமன்
வெஸ்ட்பேலியா
கோலோன்
ரைன் மாகாணம்
சாக்ஸனி
துருங்கிய நாடுகள்
ப்ராக்
பொஹீமியா
பவேரியா
உவர்ட்டம்பர்க்
மியூனிச்
ஸ்ட்ராஸ்பர்க்
லக்ஸம்பர்க்
15-ஆவது நூற்றாண்டின் இறுதியில் பிராண்டன்பர்க்கின் எல்லை
மஹா பிரடரிக்கின் மரணம் வரை ஈட்டியவை
1806- இல் பேரரசு நீக்கப்படும் வரை ஈட்டியவை
ப்ரஷ்யாவின் எல்லை 1807–1815 (டில்சிட் சமாதானத்திலிருந்து பாரிசு சமாதானம் வரை.)
ப்ரஷ்யப் புனரமைப்பின்போது இழக்கப்பட்டவை மீட்கப் பெற்றன (வியன்னா காங்கிரஸ்: 2-ஆவது பாரிசு சமாதானம்)
2-ஆவது பாரிசு சமாதானத்தால் ஈட்டியவை
1875–88 ஈட்டியவை
1914 - இல் ப்ரஷ்யாவின் எல்லை
ஈட்டப்பட்டவை ஆண்டுகள்....1648. இழப்பின் ஆண்டுகள் ....(1693)

# 12. பதினெட்டாம் நூற்றாண்டில் பிரஷ்யாவும் ஆஸ்திரியாவும்

## நவீன ஜெர்மனியில் பிரஷ்யா

1914-ம் ஆண்டில் ஐரோப்பிய நிலப்படத்தில் பிரஷ்யா வட ஜெர்மனியின் குறுக்கில் ரஷ்யாவின் எல்லை முதல், ஹாலந்து, பெல்ஜியம், பிரான்சு இவற்றின் எல்லைகள் வரையில் பரவியிருத்தலைக் காணலாம். தலைமை நதிகளின் முகத்துவாரங்களும் முக்கியத் துறை முகங்களும் அதன் வயமிருந்தன. டென்மார்க்குத் தீபகற்பத்தின் கீழ்ப்பகுதியையும் அந்நாடு பெற்றிருந்தது. வட ஜெர்மனியில் எஞ்சியிருந்த சிறு நாடுகள் அத்துணைச் சிறந்தனவல்ல. ஜெர்மனிக்கு ஒற்றுமையை அளித்ததும், அந்நாட்டின் வெளி நாட்டுக் கொள்கையை அடக்கியாண்டதும் இப் பிரஷ்யாவேயாகும். ஆங்கிலேயர்கள் பிரஷ்யாவை ஜெர்மனியுடன் இணைத்தே நோக்கினர்கள். அவ்வாறு நோக்கியது தவறேயாயினும், அது பொறுத்தற்குரியது. ஏனெனில், ஜெர்மனி பிரஷ்யாவின் முயற்சியாலும் வரலாற்ருலுமே ஒரு தனியரசாய் நிலைத்திருந்தது.

## ஜெர்மனியின் பிரதிநிதி பிரஷ்யா

இந்நிலைக்குக் காரணமாயிருந்த வரலாறு வியப்பினை அளிக்கக் கூடியதொன்றாகும். முதற்ருேற்றத்தில் நவீனப் பிரஷ்யா செயற்கையில் உருவான நாடாகும். பற்பல தனிப் பகுதிகளைக் கொண்டிருந்தனவும் ஒன்றுடன் மற்றொன்று பகைமை பாராட்டித் தொடர்பின்றி இருந்தனவுமான பகுதிகள், மணவுறவாலும், வாரிசு முறையாலும் அல்லது போர், அரசியல் தந்திரம், இவற்றின் பயனாலும் ஒன்ருக இணைக்கப் பெற்றிருந்தன என்பது தோன்றும். எனினும், கூர்ந்து பிரஷ்யாவின் வரலாற்றை நோக்கினல் தற்செயலாகவும்,

செயற்கையாகவும் இந்நாடு தோன்றியது என்ற எண்ணம் மறைந்து விடும். பிரஷ்யாவின் எழுச்சியால் ஜெர்மனி புத்துயிர் பெற்றது. பிரஷ்யா உயர்நிலையை எய்தியதற்குக் காரணம், ஜெர்மனி நாட்டுப் பற்று மிக்க சிற்றரசுகளைக் கொண்டிருந்ததும், எல்லா மக்களுடைய அவாக்களையும் நன்கு பிரதிபலிக்கக் கூடியதாய் இருந்ததுமேயாகும்.

**பிரஷ்யாவின் வளர்ச்சியில் அமைந்த மூன்று தலைமைக் கூறுகள்**

பிரஷ்யாவின் வளர்ச்சியில் மூன்று தலைமைக் கூறுகள் காணப்பட்டன. நாட்டின் இதயமாயும், தோற்றத்திற்கு மூல காரணமாயும் இருந்த் பிராண்டன்பர்குத் தேர்வாளர் நாடு அத்துடன் இணைக்கப் பெற்ற பகுதிகளில் முக்கியமானதாயும், புதிய நிலப்பகுதிகட்கும் சேர்த்து ஏற்பட்ட பொதுப்பெயராயுமிருந்தது. மூன்றுவது, ஹோகன் சோலன் குடும்பத்தாருடைய மண முறைகள், அரசியல் தந்திரம், வெற்றிகள், நற்பேறு ஆகியவைகளால் முழுமையாகத் திரட்டப் பெற்று ஒன்ருக இருந்தமை.

## பிராண்டன்பர்கின் பழைய வரலாறு

பிராண்டன்பர்கு எழுச்சியைப் பற்றி நாம் முன்னரே அறிந்திருக்கிறோம். முதலில், அது எல்பு நதிக்கப்பால் வசித்த ஸ்லேவானிக்கு அல்லது ஜெர்மன் மக்கள் அல்லாத மக்களினத்திற்கு எதிராயமைந்த ஒரு கோடு அல்லது எல்லைப்புறக் காவல் அரணும் அமைந்தது. இந்த எல்லைக்கோடு முதல் அல்லது 'அஸ்கேனியன்'[1] குடும்பத்தினர் ஆட்சியில் வளர்ந்து வலிமையுற்றது. இக்குடும்பம் 1319-ல் முடிவடைந்த பொழுது, அவ்வெல்லைக் கோட்டில் ஒரு நூற்றுண்டுக் காலம் குழப்பம் ஏற்பட்டது. இதன் பயனுக அடிக்கடி தலைவர்களின் மாற்றமும், நிலப் பரப்பிற்குறைவும் ஏற்பட்டன. 1415-ல் பேரரசர் சிகிஸ்மண்டு[2] என்பார், கான்ஸ்டன்சு மன்றம் ஏற்படும் வரை நிலவிய தொல்லை நிரம்பிய காலத்தில் பேரரசருக்கு நெருங்கிய நேச நாடான நூரம்பர்கின் பர்கிரேவும்[3] ஹோகன்சோலன் குடும்பத்தைச் சேர்ந்த பிரெடரிக்கிற்கு இந்த எல்லைப்புறத்தையும் இதனுடன் இணைந்த தேர்வாளர் உரிமையையும் அளித்தார். இவ்வெல்லைக் கோட்டில் அமைதியை ஏற்படுத்துவதிலும் பிறர் வயப்பட்ட பகுதிகளை மீட்பதிலும் பிரெடரிக்கை இன்னல்கள் எதிர் நோக்கியிருந்தன. போப்பாண்டவரின் பொன்னுணையின் வாசகங்களின்படி எவ்விதப் பிரிவினையும் குறைவும் இல்லாதவாறு நாடு, தேர்வாளர்களின் ஆண் வாரிசு முறையில் அமைய வேண்டுமென்றிருந்துங்கூட ஜெர்மனியில் பெரிய நாடுகள் பல பிரிவுகளாகப் பிரிந்து செல்லும் மனப்பான்மை அவற்றிடம் நிலையாகக் காணப்பட்டது.

[1] Ascanian. [2] Sigismund. [3] Burgrave.

ஆனுல், 1473-ல் பிராண்டன்பர்குடன் நிலைபெற்ற இணைப்பு, டிஸ் பொஸிஷியா அசில்லியாவின்படி (தேர்வாளர் ஆல்பர்டு அசில்லிஸின் குடும்ப ஒழுங்கு) உறுதியளிக்கப்பட்டது. பிராண்டன்பர்கு குடும்பத்தின் முழுவுடைமைகள் குடும்பத்தின் மூத்த மைந்தரை அடைவதென்றும் பிறவுடைமைகளைக் குறைந்தவளவில் பிரிவினை செய்யலாம் என்றும் ஏற்பாடாயிற்று.

இவ்வாறு பிராண்டன்பர்கு ஹோகன்சோலரிடம் வந்தது. இவர்களுடன் பிரஷ்யா எவ்விதத் தொடர்பையும் பெறவில்லை. ஜெர்மானிய இனமல்லாத நிலங்களில் டியூட்டானியப் பிரிவைச் சேர்ந்த வீரப் பெருந்தகைகள் மதபோதனை செய்துகொண்டும் நாடுகளை வென்று கொண்டுமிருந்தார்கள். பிராண்டன்பர்கு இப்பகுதிகட்கு அடுத்தாற் போலிருந்தது. கிறித்துவச் சமயத்தைப் பின் பற்றியவர்கள் என்பதைத்தவிர வேறெவ்விதத் தொடர்பும் டியூட்டானிய வீரர்கட்கு இல்லை. ஆனுல், முன்பறிந்தவாறு வீரப் பெருந்தகைகளின் போக்கு நன்மை பயப்பதாயில்லை. தானென்பர்கு[1] சண்டையில் இவர்கள் போலந்து நாட்டினரிடம் பெருந்தோல்வியுற்ருர்கள். இவர்கள் நாட்டின் ஒரு பகுதி (மேற்குப் பிரஷ்யா) போலந்து அரசருடன் வலியச் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

### ஹோகன் சோலன் மரபைச் சார்ந்த ஆல்பர்டு 1571-ல் மிக்குயர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுதல்

மற்றைய பகுதிகளில் போலந்து மன்னரை மானிய முறையில் மேம்பட்டவராக ஏற்றுக்கொள்ள வேண்டி நேர்ந்தது. இவ்வாறு அவர்களது நிலைமை கீழ்நிலையடைந்து கொண்டு வந்தபொழுது, அயற் பாதுகாப்பாளர் அவ்வீரப் பெருந்தகைகட்குத் தேவைப்பட்டனர். எனவே, 1511-ல் ஹோகன்சோலன் மரபைச் சேர்ந்த ஆல்பர்டு என்பாரைத் தங்களுக்குத் தலைவராக (அல்லது மிக்குயர் ஆட்சித் தலைவராக)[2] தேர்ந்தெடுத்தார்கள். பிராண்டன்பர்கில் ஆட்சி செய்த குடும்பத்துடன் ஆல்பர்டு நெருங்கிய உறவுடையவர். சமயச் சீர் திருத்தம் நிகழ்ந்த பொழுது ஆல்பர்டு தம்மைப் பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சார்ந்தவர் என்று அறிவித்துக்கொண்டார். வீரப் பெருந் தகைகட்குச் சொந்தமான நிலப்பகுதிகள் சமயச்சார்பற்ற நாடாகத் தமது ஆட்சியின்கீழ் வந்துவிடும் என்றும், பிறகு தம் வழித் தோன்றல்கள் வரன்முறையாக நாட்டையாள இயலும் என்றும் அவர் கருதினுர். அதற்கு ஏற்ற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இவ்வாறு ஹோகன் சோலன் மரபின் ஒரு கிளை பிரஷ்யாவில் ஆட்சி செய்தது.

[1] Tannenberg. [2] Grand Master.

1611-ல் ஆல்பர்டின் மரபு வாரிசற்றதாயிற்று. எனவே, பிரஷ்யா, பிராண்டன்பர்குத் தேர்வாளரான ஜோச்சிம் பிரெடரிக்கின்[1] இராச்சியத்துடன் சேரலாயிற்று. ஆனால், இப்பொழுதுங்கூடப் பிரஷ்யா போலந்தின்கீழ் மானிய முறைப்படி அதனைச் சார்ந்ததாகவே இருந்து வந்தது. பிரஷ்யா, பிராண்டன்பர்கு ஆகிய நாடுகட்கிடையே போலந்து இராச்சியம் குறுக்கிட்டது. இதே அமயத்தில், பிராண்டன்பர்கைச் சேர்ந்த ஹோஎன்சோலன் மரபினருக்கு வழியுரிமையாகப் பெறுதல், மணம் செய்தல் ஆகிய இவற்றின் பயனாக மற்றொரு (இதுவும் முக்கியமானதுதான்) வழியுரிமை கிடைத்தது.

**1609-ல் ஜூலிச்சும், கிளீவ்ஸும், பர்கும் பெறப்படுதல்**

1609-ல் ஜூலிச்சு,[2] கிளீவ்ஸ்,[3] பர்கு[4] இவற்றின் கோமகனார் இறக்கவே, வழியுரிமை பெறுதல்பற்றிக் கடுமையான விவாதம் ஏற்பட்டது. அக்கோமகனாரின் உடன்பிறந்தாளின் மகளை மணம் செய்து கொண்டிருந்த பிராண்டன்பர்குத் தேர்வாளர் வாரிசுரிமை கொண்டாடுபவருள் ஒருவராயிருந்தார். பிராண்டன்பர்குக் கோமகனார் நாட்டின் பெரும்பகுதியைத் துய்ப்பதுடன் இப்போட்டி முடிவுற்றது. இந் நிலங்கள் சிறந்த மதிப்புடையவை. இவற்றை மையமாகக் கொண்டு நாளடைவில் இவற்றைச் சுற்றியுள்ள பல பகுதிகள் சேர்க்கப்பட்டன. இவ்வாறு பிராண்டன்பர்குத் தேர்வாளர்கள் பற்பல உரிமைகளுடன் ஒன்றற்கும் பிறிதொன்றற்குமிடையே பெரிய இடைவெளிகளால் பிரிக்கப்பட்டிருந்த மூன்று பகுதிகளை ஆண்டார்கள். அப்பகுதிகளாவன, (1) ரைன் நதிப் பிரதேசங்கள், (2) பிராண்டன்பர்குத் தேர்வாளரின் பகுதிகள், (3) பிரஷ்யாக் கோமகனாருடைய பகுதிகள் என்பனவாகும். வெவ்வேறான இக்கூறுகளைக்கொண்டு வலிமையுள்ளதும், ஒன்றாய் இணைந்து பொருந்தியதுமான நாடு, ஒன்று சேருதல் கொள்கை, அமைப்பு இவற்றின் அடிப்படையில் ஐரோப்பாவின் மற்றப் பகுதிகளிற் காணப்பட்டதைவிடச் சிறந்ததாக அமையும் என்று தோன்றவில்லை.

## முப்பதாண்டுப் போரில் பிராண்டன்பர்கு

**மிக்குயர் தேர்வாளர்**

முப்பதாண்டுப்போரில் பிராண்டன்பர்கு கொண்ட பங்கு மிகச் சிறியதாகும். தேர்வாளரான ஜார்ஜ் வில்லியமும் கால்வினியச் சமயத்தைச் சார்ந்திருந்தார். அவருடைய மக்கள் லூதரின் சமயத்தைப் பின் பற்றியிருந்தார்கள். எனவே, நடுவு நிலைமையைப் பின்பற்ற அவர் முயன்றார். எனினும், இரு கட்சிகளாலும் அவர்

[1] Joachim Frederick. [2] Julich. [3] Cleves. [4] Berg.

நாடுகள் வெற்றி கொள்ளப்பட்டன. ஜெர்மனியின் வேறு எந்தப் பகுதியும் இதைப் போல அக்காலத்தில் கொடுந் துன்பத்துக்குள்ளாக வில்லை. 1640-ல் மிக்குயர் தேர்வாளர் என வழங்கப்படும் பிரெடரிக்கு வில்லியம் பட்டத்திற்கு வந்தார். நவீனப் பிரஷ்யாவின் பெருமையை உண்மையில் நிறுவிய தலைவர்களுள் இவர் ஒருவராவார். பிரஷ்யாவை ஆண்ட மன்னர் பலர் இவரைப் போல அடிக்கடி ஆட்சி செய்துள்ளனர். பிரெடரிக்கு வில்லியம் வலியவராயும், இணங்கும் தன்மையில்லாதவராயும், கொடுங்கோன்மை இயல்புடையவராயும், கவர்ச்சியில்லாதவராயும், கற்பனைத் திறனற்றவராயும், ஆனால் நாட்டின் நன்மையில் தீவிரமான பற்றுதலும் அதன் பணியில் தம்மையும் பிறரையும் தொடர்ந்து ஈடுபடுத்துவதில் முனைந்தவராயும் இருந்தார். வெஸ்டுபேலியாச் சமாதானத்தில் பிராண்டன்பர்கிற்கு முக்கியமான இலாபம் கிடைத்தது. மக்டிபர்கு அதற்குச் சொந்தமாயிற்று. கிழக்குப் போமரேனியா, கடலை யடைவதற்கு நேரிடையான வழியை ஏற்படுத்தியது வாயிலாகச் சிறந்த மதிப்புடையதாயிருந்தது. தேர்வாளரின் பயனுள்ள நடவடிக்கைகள் சமாதானத்திற்குப் பின்னரே தொடங்கப்படலாயின. இவருடைய வேலைகளில் மிகச் சிறப்பானது நாட்டை ஒன்றாகச் சேர்த்ததுதான். அதனுடன் பிரஷ்யாவின் வாணிகத்தின் முன்னேற்றத்திற்கும் இவர் உதவி செய்தார். முப்பதாண்டுப் போரின்போது சீரழிவுற்றிருந்த இராணுவத்தைச் சீர்படுத்தி அமைத்தார்.

## சுயேச்சையான நிலையங்கள்

நாட்டின் ஒவ்வொரு பகுதியிலுமிருந்த பிரதிநிதிகளைக் கொண்ட நிலையங்களை அழிப்பது வாயிலாகவே நாட்டின் ஒற்றுமை அமைக்க வேண்டுவதாயிற்று. பிராண்டன்பர்கு, பிரஷ்யா, கிளீவ்ஸ் முதலியவைகளில் மிகவும் முன்னேற்ற முற்றுக் கொண்டிருந்த எஸ்டேட்டுகள் அடங்கியிருந்தன. ஆனால், ஒவ்வோரிடத்திலும் அவை அடக்கப்பட்டன. அவ்வெஸ்டேட்டுகள் தமக்கு நேரவிருந்த விதியை எதிர்த்துத் தகுதிபெற்ற உண்மையான தலைவர்களின்கீழ் பயனின்றிப் போராடின. அது முதற்கொண்டு நாட்டின் ஆட்சித் தலைவரது முடிவே அதிகாரத்திற்கு ஒரு மூலமாயிற்று. துரைத்தனமும் அவரது அறிவுரை மன்றம் வாயிலாக நடைபெற்றது. நிலையங்களில் விரிவான மாறுதல்கள் காணப்பட்டன. ஆனால், நாட்டின் பொதுவான இணைப்பைப் பற்றிய இன்றியமையாத முதல் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. இவ்விணைப்புத் தன்னுரிமையான நிலையங்களை அழித்தது வாயிலாக ஏற்பட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## மிக்குயர் தேர்வாளரின் வெற்றிகள்

மிக்குயர் தேர்வாளர் பல போர்களில் தொடர்பு கொண்டிருந்தார்; மேலும், அடிக்கடி கட்சி மாற்றமும் செய்தார். இப்போர்களில் மிக்க புகழும் இலாபமும் கிடைத்த போர்கள், போலந்தை எதிர்த்துப் புரிந்தனவாகும். அவர் சுவீடன் நாட்டு மன்னருடன் கூட்டுச் சேர்ந்துகொண்டு வார்சா என்னுமிடத்தில் பெருவெற்றியடைந்தார். இதன் முக்கிய விளைவு 1657-ல் போலந்து மன்னரைப் பிரஷ்யாமீது அவர் கொண்டிருந்த படைமானிய முறைப் பிரபுத்துவத்தைக் கைவிடும்படி தூண்டியதும், பிரஷ்ய நாட்டுத் தலைவரையே அந்நாட்டு மன்னராகவும் தலைசான்ற அதிகாரமும் வரம்பிலாவாற்றலும் உடையவராகவும் ஏற்றுக்கொள்ளும்படி செய்ததும் ஆகும்.

1675-ல் அவருடைய படைகளின் மிக்குயர் சாதனை நிகழ்ந்தது. அவர் பிரான்சு மன்னருடன் கூட்டுச்சேர்ந்து கொண்டிருந்த சுவீடன் மக்களை எதிர்த்துப் போரிட்டார். சுவீடன் நாட்டினர் பிராண்டன்பர்கு மீது படையெடுத்தனர். பிரெடரிக்கு வில்லியம் அவர்களை ஃபர்பெல்லின்[1] எனுமிடத்தில் உறுதியாகத் தோற்கடித்தார்; இவ்வெற்றி காரணமாக மிக்குயர் தேர்வாளர் எனும் பட்டத்தைப் பெற்ருர்.

அவர் பல கால்வாய்களை வெட்டினுர்; பாதுகாப்புச் சுங்க வரிகள் விதிப்பது வாயிலாக நாட்டில் தொழில்களை வளர்க்க முயன்ருர். தொழில் வளர்ச்சிக்கு அவர் மேற்கொண்ட முயற்சி 1685-ல் நடந்தது. அவ்வாண்டில் பதினுன்காம் லூயியினுடைய குறுகிய நோக்குடன் அமைந்த வல்லாட்சி காரணமாக நாடு கடத்தப்பட்ட பிரெஞ்சு ஹ்யூக்நோக்களுக்கு பெர்லினில் புகலிடமளித்தார். அவர்களது குடியேற்றத்தினுலேதான் பெர்லினுக்குப் பெருமை ஏற்பட்டது. குடியேறியவர்கட்கு ஏராளமான சிறப்புரிமைகள் வழங்கப்பட்டன. அவர்கள் வேளாண்மையிலும், தொழில்களிலும் நாட்டின் செல்வநிலையைப் பெருக்கினுர்கள்.

## பிரஷ்யா நாட்டு மன்னர் முதலாம் பிரெடரிக்கு

1688-ல் பிரெடரிக்கு வில்லியத்தின் புதல்வர் அரியணை ஏறினுர். தந்தையாருக்கு அனைத்து வழிகளிலும் முறைகளிலும் மாறுபட்ட இயல்பைப் பெற்ற அவர், தமது பதவியைச் சேர்ந்த ஆடம்பரங்களிலும் சடங்குகளிலும் பொருத்தமற்ற பேரவாக் கொண்டிருந்தார்; நாட்டின் அரசியலுக்குத் தேவையான செயல் முறை இயல்பூக்கம் இல்லாது

[1] Fehrbellin.

இருந்தார். ஆயினும், அவரது ஆட்சி நினைவுகோடற்கு ஏற்றதாகவே யிருந்தது. பிராண்டன்பர்கின் மூன்றும் பிரெடரிக்கு எனப்பட்ட அவர் பிரஷ்யாவின் முதலாம் பிரெடரிக்கு மன்னரானுர். ஜெர்மானிய இளவரசரான மூவர் ஏற்கனவே அரசப் பட்டம் எய்தியிருந்தனர். ஹானேவரின் தேர்வாளர் இங்கிலாந்து மன்னராயிருந்தார். சாக்ஸனியின் தேர்வாளர் போலந்து மன்னராயிருந்தார். ஹால்ஸ்டெயின் கோம்கனுர் டென்மார்க்கின் மன்னராயிருந்தார். பிராண்டன்பர்கின் தேர்வாளரும் அதே பதவிக்கு இயற்கையில் உரிமை பாராட்டலாம். ஸ்பெயின் வாரிசுரிமைப் போருக்குக் காரணமாயிருந்த பேச்சு வார்த்தைகள், பேரரசருக்கு, பிராண்டன்பர்கின் கூட்டுறவைப் பெருமதிப்புடையதாக்கின; எவ்வாறெனில், முதலாவதாக இங்கிலாந்து பிரான்சு நாடுகளின் மன்னர்களால் திட்டமிட்டவாறு பாகப்பிரிவினையை எதிர்க்க வழிகோலியும், பதினன்காம் லூயி, தம் பெயரரான பிலிப்பு, ஸ்பெயினைச் சார்ந்த அனைத்துப் பகுதிகளையுமடைய வேண்டும் என்ற முயற்சிகட்கு எதிராகப் போர்க் கருவி போன்றும் அமைந்ததால் அம் மதிப்பிற்குரியனவாயின. எனவே, பேரரசிற்குரியனவாயிருந்த நிலப் பகுதிகளில் எந்தப் பகுதியிலிருந்தும் பட்டப் பெயரை நீக்குவதில்லை என்ற கட்டுப்பாட்டுடன் பேரரசர் முதலாம் லியோபால்டின் இசைவாணை பெறப்பட்டது. பிரஷ்யா, பேரரசிற்கு வெளியே இருந்தது. எனவே, வரலாற்றைக் கற்கும் மாணவர்கட்குக் குழப்பத்தைத் தோற்றுவிக்குமளவில், ஜெர்மனிக்கு வழிகாட்டும் அரசு அதனுடைய பட்டப் பெயரை ஜெர்மனியைச் சேர்ந்திராத பகுதிகளிலிருந்து பெற்றிருந்தது. இப்புதிய ஏற்பாடு மரியாதை முற்படல் என்ற முறையில் மட்டும் அமையவில்லை. அரசர் எனும் பட்டப்பெயர், அரசாங்கத்திற்கு வலிமை தந்ததுடன் வரம்பின்மையாட்சியை நிறுவும் முயற்சிகட்குத் துணையாயும் அமைந்தது. ஸ்பெயின் வாரிசுரிமைப் போர் நிகழ்ந்த காலையிலும், அதே காலத்தில் சுவீடன் நாட்டு மன்னர் பன்னிரண்டாம் சார்லசின் வெற்றியையும் பேரழிவையும் விளைவித்த வடக்குப் போர்கள் நிகழ்ந்த காலையிலும் பிரஷ்யாவின் வரலாற்றைத் தொடர்ந்து அறியத் தேவையின்று. ஆனல், பிரஷ்யப் போர் வீரர்கள் வார்சா ஃபார்பெல்லின் சண்டைகளில் பெற்ற நற்புகழை பிளென்ஹீம் சண்டையிலும், மற்றும் பல சண்டைகளிலும் நிலை நிறுத்தினர்கள்.

1713-ல் முதலாம் பிரெடரிக்கு வில்லியம் தம் தந்தையாருக்குப் பின் பட்டம் எய்தினுர். இவரைப் போன்ற புதுமையான மன்னர் வேறெங்கும் காணப்படவில்லை. இவர் மிக்குயர் தேர்வாளரின் பல பண்புகளைப் பெற்றிருந்தார். எனினும், அவை மிகைபட்டும், முரட்டுத்தன்மையுடன் கூடியும், அறிவிழந்தவன் செயல்கள் போன்றும் காணப்பட்டன. இவர் பொருட்சுருக்கம் கருதி ஆடம்பரம், சடங்குகள் ஆகியவற்றில் தம் தந்தையாருக்கு இருந்த பேரவாவை வெறுத்துத்

தள்ளினர்; தந்தையாரால் அரச ஆடம்பரத்திற்காக நியமிக்கப் பட்டிருந்த அமைச்சர் பலரை தாம் பட்டத்திற்கு வந்தவுடன் விலக்கினர்; அதன் பின் சிக்கனம், பேருக்கம், திறமை ஆகிய அனைத்தும் ஒருங்கே பெற்ற ஆட்சியை நாட்டில் நிலவச் செய்வதில் கவனத்தைத் திருப்பினர். மேலும், இவர் பிரஷ்யாவில் பிரதிநிதிகளின் ஆட்சி ஏற்படுதற்கோ, அன்றிச் சுதந்தர வளர்ச்சிக்கோ சிறிதும் இடமளிக்கவில்லை. மன்னர் அதிகாரத்தில் பிறர் குறுக்கீட்டிற்கோ அன்றி அவர் செயல் பற்றிய எவ்விதத் திறனாய்விற்கோ இடமில்லாதவாறு செய்தார்; அன்றியும், 'நாம் மன்னராயும் தலைவராயும் இருப்பதால் விரும்பியதைச் செய் வோம்', என எழுதியுள்ளார். ஆட்சி, அரசருடைய அலுவலாளர் களால் நடைபெற்றது. அவர்கள் குறைந்த ஊதியத்தையே பெற்றார் கள். அவர்களுடைய செயல்களின்மீது கடுமையான தணிக்கை இருந்து வந்தது. குற்றம் செய்வோர் கடுமையாகத் தண்டிக்கப் பட்டனர். இவர் கல்வி வளர்ச்சியில், பிரஷ்யா மன்னர் சிலரைப் போலக் கவனக் குறைவாயிராமல், மிக்க ஊக்கம் கொண்டிருந்தார்; எல்லாச் செயல்களிலும் பிரஷ்யாவின் நலம் ஒன்றையே மிகவும் குறுகிய நோக்குடன் கருதியவராயிருந்தார். நாட்டின் பழைய வரலாறும், பிற நாட்டு வரலாறுகளும் எவ்விதப் படிப்பினையையும் அளிக்கக் கூடியன வல்ல எனவும், பிராண்டன்பர்கின் வரலாறுதான் மிக முக்கியமானது என்றும் இவர் கூறினர். பிரஷ்யா அல்லது பிராண்டன்பர்கில் இவரது சிந்தனையைக் கவர்ந்தவை இருபொருள்களே யாகும். அவற்றுள் ஒன்று, வரிகளை வசூலித்தல்; மற்றொன்று, இராணுவத்தை ஒழுங்குபடுத்துதலாகும். பழைய ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பிடும் போது இவருடைய நிலங்கள் தரம் குன்றியவை. அந்நிலங்களில் எவ்வெப்பயிர்களை விளைவிக்க இயலுமோ, அவ்வப்பயிர்களைப் பயிரிடு வதில் இவர் முனைந்திருந்தார்; அன்றியும், நாட்டின் பணிக்காக விளைபொருள்களில் பெரும்பகுதியை வரியாகப் பெறுவதில் முனைந் திருந்தார். நிதி விஷயங்களிற் காணப்படும் இலஞ்ச ஊழல்களைக் களைவதில் இவரது சினம் கடுமையாயிருந்தது.

இவருடைய ஆட்சி முழுவதிலும் அமைதி நிலவியது (முக்கிய மற்ற குறுக்கீடுகளுடன்). ஆனல், பிரஷ்யா சமாதானத்தை மிக அச்சுறுத்தும் அளவிற்கு விரிவாக்கித் திறமை மிக்கதொன்றாக அதனை அமைத்தார் 1713-ல் இவர் பட்டம் எய்திய பொழுது இராணுவத்தில் வீரர் முப்பத்தெட்டாயிரவர் இருந்தனர். 1739-ல் அவருடைய தொகை எண்ணாயிரத்து முந்நூற்றிற்கு மேலும் அதிகரித்தது. பிரான்சிடம் ஒரு லட்சத்து அறுபதாயிரம் போர்வீரர்களும், ஆஸ்திரியாவில் ஒரு லட்சம் வீரர்களுமே இருந்தார்கள் பிரஷ்ய இராணுவம் எண்ணிக் கையைவிடத் திறமைக்கு அதிகப் புகழ் பெற்றிருந்தது. மன்னர் சிறந்த போர்த்தலைவராய்த் தம் திறமைகளைக் காட்டுதற்கு வாய்ப்பு

ஏற்பட்டிருந்தாலும், இவர் தம் திறமையை நன்கு வெளிப்படுத்தியிருக்க இயலாது. ஏனெனில், இவரை மிகச்சிறந்த போர்த்தலைவர் எனக் கூறவியலாது. ஆயினும், இவர் சிறந்த படைப் பயிற்சியாளராய் இருந்தார். இவருடைய படைகள் போதிய உடை, ஆயுதப்பயிற்சி, சிறந்த கட்டுப்பாடு ஆகிய அனைத்தும் ஒருங்கே பெற்று விளங்கின. இவருடைய செய்கைகளில் எல்லாம் நகைத்தற்கிடமான வெறுக்கத்தக்க செயல்கள் இல்லாமல் இருந்ததில்லை என்பது இவருடைய மிகப் பெரிய அரண்மனைக் காவற்படையினின்றும் தெரியவரும். நாய் வளர்ப்பவன் நாய்க் குட்டிகளிடத்து அன்பு காட்டுவது போல, துப்பாக்கிகளுடன் கூடிய அப்படையை இவர் நேசித்து வந்தார்; அதற்கெனத் தம்முடைய நிலங்களையும், அருகிலுள்ளவர்களின் நிலங்களையும் கொள்ளையிட்டார்.

## தந்தையாரும் புதல்வரும்

### மகாபிரெடரிக்கின் இளமைப்பருவம்

இவர் புதல்வர் மகாபிரெடரிக்காய் இருந்தமையின், அவருடைய குடும்ப வாழ்க்கை ஐரோப்பிய விவகாரங்களில் முக்கிய இடம் பெற்றிருந்தது. தொடக்கத்தில தந்தையாருக்கும் புதல்வர்க்கும் இடையே கடுஞ்சச்சரவுகள் இருந்து வந்தன. தந்தையார் கொடுங்கோன்மை புரிபவராயும், நாகரிகமற்றவராயும், கல்வியறிவில்லாதவராயும், நடையுடைகளில் கண்ணியமில்லாதவராயும் இருந்தார். இவருடைய புதல்வர் ஒவ்வொன்றிலும் தம் தந்தையாரொடு மாறுபட்டவராய்க் கருதப்பட்டார். மகாபிரெடரிக்கு எண்ணங்களிலும், விருப்பங்களிலும் பரந்த நோக்குடையவராய் இருந்தார். ஜெர்மனியைவிட பிரெஞ்சுப் பழக்க வழக்கங்களையே அவர் மேற்கொண்டிருந்தார்; பிரஷ்ய விவகாரத்தில் ஆர்வமற்றவராய் வெளிப்படையாய்த் தோற்றமளித்தார்; நுண்கலைகளைத் தம் தொழிலாகக் கொள்ளாத் தன்மையினராயும், சமய விவகாரங்களில் ஐயமுடையவராயும் இருந்தார். தம் தந்தையாருக்கு மிகவும் விருப்பமாயிருந்த குடி, பெருந்தீனி, புகை பிடித்தல் இவற்றை இளைஞரான பிரெடரிக்கு முற்றிலும் வெறுத்தார். அரண்மனையில் அவருடைய வாழ்க்கை பொறுக்க இயலாமற் போகவே, தப்பியோட முயன்றுர். ஆனல், அவர் பற்றப்பட்டு, அரசவைக்குக் கொண்டு வரப்பெற்று, மரண தண்டனை விதிக்கப்பட்டார். இறுதியில் அவருடைய உயிர் காப்பாற்றப்பட்டு, அவருடைய நண்பர் கொலையுண்டார். மற்றவர்கட்குக்கொடிய தண்டனைகள் விதிக்கப்பட்டன. சிலர் மீது விசாரணையின்றியும், ஆனல், பொதுவாக நியாயமின்றியும் தண்டனைகள் விதிக்கப்பட்டன. இளைஞரான இளவரசர் இன்றியமையாமைக்கு அடி பணிந்தார். கடுந்துயருடன் தந்தையார் ஆணையிட்டவாறு சமயக் கருத்துக்களையேற்றுர்; உண்மையான ஆர்வத்துடன்

தொல்லைமிக்க அரசியல் அலுவலில் இறங்கினார். தந்தையார் ஆணைக்கு அடி பணிந்து தாம் காதலிக்காதவரும், விரும்பாதவருமான ஒரு நங்கையை மனைவியாக ஏற்றுக்கொண்டார். அவருடைய அறிவும், மனவுறுதியும் அசைக்க முடியாமல் இருந்தன. ஆனால், 1740-ல் அரியணை ஏறிய பொழுது தொடக்கத்திற் காணப்பட்ட கொள்கை யுயர்வும் அருளிரக்கமும் மறைந்து போயின. மனக்கசப்பும் அருவருப்பும் அவரிடத்தில் காணப்பட்டன. அவர் வல்லந்தச்செயல்களில் நம்பிக்கையுடையவராயிருந்தார்.

## பேரரசர் ஆறும் சார்லசின் மரணம்

இரண்டாவதாக, பிரெடரிக்கு அரியணை ஏறியபொழுது பேரரசர் ஆறும் சார்லசு இறந்தார். இதன் விளைவாக ஆஸ்திரியக் குடும்ப வரலாற்றில் ஒரு புதிய தொடக்கம் தோன்றியது. அதில் பிரெடரிக்குச் சிறப்பான பங்கு கொள்ள நேர்ந்தது. முப்பதாண்டுப் போரில் ஆஸ்திரியாவின் அரச குடும்பத்தின் திட்டங்கள் தோல்வியுற்றன. அதற்குப்பின் அது வெளிப்படையான அதிகாரத்தையும், நாடுகளின் இணைப்பையும் அடைந்தது. அது அடைந்த நிலங்கள் ஜெர்மனியின் எல்லைக்கு வெளியில் இருந்தன. எனவே, அது வருங்காலத்தில் ஜெர்மனியில் உண்மையாகவே, தலைமை வகிப்பதற்குரிய வாய்ப்பை யிழந்தது. ஆஸ்திரியா இராச்சியத்தில் ரோமன் கத்தோலிக்க எதிர் விளைவியக்கம் வெற்றி பெற்றது. கல்வி மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்தது. ஆஸ்திரியாவின் மண்ணில் விஞ்ஞானம், இலக்கியம், கலை முதலியன வளரவில்லை. ஆனால், ஆஸ்திரியாப் படைகள் ஸ்பெயின் வாரிசுரிமைப் போரிலும், தென்கிழக்கிலிருந்த துருக்கியர் மீதும் தொடர்ச்சியான வெற்றிகளை அடைந்தன. லெபான்டோச்[1] (1571) சண்டையில் துருக்கியர்களுடைய கடலாதிக்கம் முடிவாகத் தடை செய்யப்பட்டது. நிலத்தில் துருக்கியப் படைகளின் தன்மதிப்புக் குன்றாமல் இருந்தது.

1683ஆம் ஆண்டு, துருக்கியர்களின் அதிகார வளர்ச்சியைக் குறிப்பதாகத் தோன்றிய பொழுதிலும், அதன் வீழ்ச்சியின் தொடக்கத்தைக் குறிப்பதாயிற்று. துருக்கியப்படை வியன்னா நகரையடைந்து முற்றுகை செய்தது. பேரரசர் முதலாம் லியோபால்டு நகரத்தை விட்டு ஓடினார். நகரம் துருக்கியர் வயப்படும்போலத் தோன்றியது. போலந்து மன்னரான ஜான் ஸோபீஸ்கி[2] முன்னேறி வந்தது வாயிலாக வியன்னா காப்பாற்றப்பட்டது. துருக்கியர் பின்வாங்கிப் படுதோல்வியுற்றனர். மோஹாக்ஸ் எனுமிடத்தில் 1687-ல் துருக்கியர்

[1] Lepanto [2] John Sobieski.

பெருந்தோல்வியுற்றனர். இந்த இடத்தில் 1526-ல் அவர்கள் அடைந்த பெருவெற்றி காரணமாக ஹங்கேரி நாட்டையடைந்திருந் தார்கள். இதுமுதற்கொண்டு அவர்களுடைய அதிகாரமும் இராச்சியமும் ஒவ்வொரு பத்தாண்டுக் காலத்திலும் குறையலாயின. 1699-ல் சுல்தான் செய்துகொண்ட உடன்படிக்கையின்படி துருக்கியர் ஹங்கேரியினின்றும் வெளியேறினர். இதுவரையில் ஹாப்ஸ்பர்கு குடும்பத் தலைவர் ஹங்கேரி நாட்டு மன்னர் என வழங்கப்பட்ட போதிலும், மேற்கிலும் வடக்கிலும் இருந்த சிறிய நிலப்பாகத்தின்மீது தான் அவர் ஆட்சிபுரிந்தார். இதே காலத்தில் ஹங்கேரியிலும், பொஹீமியாவிலும் மானிய முறைப்படியிருந்த உயர்குடியாட்சியை எதிர்த்தும், தேசியச் சுதந்தரப் பற்றை எதிர்த்தும் அரசருடைய அதிகாரம் வளர்ந்தது. இதுவரையில் ஹங்கேரியின் மன்னர் கொள்கையளவில் தேர்ந்தெடுக்கப்படுகிறவராய் இருந்தார். ஆனால், 1687 முதல், ஆஸ்திரிய அரச குடும்பம், வாரிசு முறையிற் பட்டம் எய்துவது ஏற்றுக்கொள்ளப்பட்டது. சிறிது எதிர்ப்பு இருந்த போதிலும் ஹங்கேரி நாட்டின் அரசியற் சட்ட அமைப்பிற் காணப்பட்ட சுயேச்சைக் கூறுகள் அழிக்கப்பட்டன.

## ஆரும் சார்லசும் மேரியா தெரிசாவும்

1711-ல் ஆரும் சார்லசு பேரரசராய் அரியணை ஏறினர். அவருக்கு ஆண் வாரிசு இல்லை. எனவே, அவருடைய புதல்வியா ரான மேரியா தெரிசாவிற்கு ஹாப்ஸ்பர்கு நாடுகள் முழுமையும் சேர வேண்டுமென்பதும், அவர் கணவரான லொரைன் நாட்டுப் பிரான்சிசிற்கும் பேரரசுப் பட்டம் கிடைக்க வேண்டும் என்பதும் அவரது வாழ்க்கையின் குறிக்கோளாய் இருந்தன. பேரரசர் தனிக் கட்டளையொன்றைத் தயாரித்து, தம் புதல்வியாரின் உரிமைகளை ஏற்றுக்கொள்ளுதற்காகத் தம் நாட்டின் பல பகுதிகளிலும், பெரும் பான்மையான ஐரோப்பிய அரசுகளின் கையொப்பத்தினைப் பெற்றூர். அவருடைய சிறந்த போர்த்தலைவரான யூஜின் இளவரசர், உடன் படிக்கையைக்காட்டிலும், திறமை மிக்க இராணுவம் அதிக மதிப்பு வாய்ந்ததாய் விளங்கும் என அரசருக்கு எச்சரிக்கை செய்தார். ஆயினும், பேரரசர் மரணம் எய்துதற்கு முன்னர், தம்முடைய புதல்வி யாருக்கு நாட்டாட்சியை மரபு வழியுரிமையாகப் பெறுதற்கு நிலையான வழிகோலி விட்டதாக நம்பினர்.

## பிரெடரிக்கு, சைலீஷியாமீது படையெடுத்தல்

ஆரும் சார்லசு மரணம் எய்தியவுடன் (1740) காகிதத்தில் பெற்ற உறுதிமொழி எத்துணையளவு மதிப்பற்றதாக மாறிவிடும் என்பது

தெளிவாகியது. சைலீஷியாமீது பிரஷ்யா நாட்டுப் பிரெடரிக்குப் படையெடுத்தார். ஓடர் நதியின் மேற்பகுதியில் மிக்க வளம் பொருந்திய நாடு சைலீஷியாவாகும். அம்மா நிலத்தின் ஒரு பகுதியை வெல்வதற்கு ஏற்ற எளிய உரிமையை அவர் உருவாக்கியிருக்கக் கூடும். ஆனால், அவர் எழுதிய வாழ்க்கை வரலாற்றுக குறிப்புக்களில் சைலீஷியாவின் செல்வமும் அவரது சொந்தப் பேராசையுமே தாம் படையெடுத்ததற்குக் காரணங்கள் என்பதை அவரே ஏற்றுக்கொண்டுள்ளார். பட்டறிவில்லாமல் இருந்துங்கூட அவருடைய தந்தையாரால் மிக்க கவனத்துடன் நன்கு உருவாக்கப்பட்ட இராணுவம் தன் திறமையை வெளிப்படுத்தியது. சைலீஷியா விரைவில் பிரஷ்யர் வசமாயிற்று.

## ஆஸ்திரியா வாரிசுரிமைப் போர்

### மேரியா தெரிசாவும் ஹங்கேரியும்

விரைவிலேயே பெரிய ஐரோப்பியப் போர் வளர்ந்தது. புகழ் பெற்ற பேரரசரின் தனியாணை ஓரரசர்மீதும் செல்வாக்குப் பெற்றிருக்க வில்லை. எவ்வரசரும் அதை மதித்து நடக்கவில்லை; பிரஷ்யாவுடன் பிரான்சு சேர்ந்தது. இந்நூற்றுண்டு முழுவதிலும், கிரேட் பிரிட்டன் பிரான்சிற்குப் பகையாயிருந்ததுடன், மேரியா தெரிசாவிற்குப் பொருளுதவியும் செய்தது. பேரரசுப் பதவிக்கு பவேரிய நாட்டுத் தேர்வாளரான சார்லசின் உரிமைகளை ஆதரிக்க, பிரஷ்யாவும் பிரான்சும் இசைந்தன. இப்போர் 1748 வரை நீடித்தது. இப்போர் ஐரோப்பாவுடன் நிற்கவில்லை. இப்போரில் கிரேட்பிரிட்டன் ஆர்வம் காட்டியதற்கு, அதன் குடியேற்றமும் வாணிகமும் காரணங்களாயிருந்தன. வியன்னவைப் பற்றி வெளிப்பகட்டாக கூறிக் கொண்டு, பிரெஞ்சு, ஆங்கிலேயப் போர் வீரர்கள் வடஅமெரிக்காவிலும் இந்தியாவிலும் போரிட்டார்கள். பெரியசண்டைகள் நிறைந்திருந்த இப்போரின் சுவடுகளைத் தொடர்ந்து அறிய, முயற்சி செய்யப்பட மாட்டாது. தொடக்கத்தில் மேரியா தெரிசாவிற்குச் சாதகமாக ஒன்றும் நடைபெறவில்லை. சைலீஷியாவில் அவ்வரசியாரின் படைகள் தோல்வியுற்றன. பவேரியா, பிரான்சு இவற்றின் படையொன்று பொஹீமியாவிற்குள் நுழைந்தது. வேறு வழியில்லாத நிலையில் அவ்வரசியார் ஹங்கேரியின் உதவியை நாடினர். ஹங்கேரி இவரது மூதாதையருடன் அடிக்கடி சண்டையிட்டு வந்தது. அதனுடன் அதன் பழைய அரசியல் சட்டத்திற் காணப்பட்ட சுதந்திரங்கட்கு மீண்டும் உரிமை கொண்டாடிற்று. அரசியார் அந்நாட்டின் சிறப்புரிமைகளை மீண்டும் வழங்கியதுடன் அந்நாட்டின் 'டயட்' சுயேச்சையை மதிப்பதாயும் வாக்குறுதி செய்தார்.

மாகியார்கள்[1] (ஹங்கேரியர்களின் சரியான பெயர்) முன்பு கட்டழகியாரான அரசியார் மேரியா தெரிசா கையில் குழந்தையுடன் தோன்றியதும் அவரது பேரழகைக் கண்டு ஆர்வங் கொண்டவர்களாய், 'மேரியா தெரிசாவே, எங்கள் மன்னருக்காக நாங்கள் உயிரையும் இழப்போம்!' என ஆரவாரித்தார்கள்; அதனுடன் கூறியவாறே நடந்துகொண்டார்கள். ஒருபெரிய ஹங்கேரியப் படை மேற்கு நோக்கி விரைந்தது. முரட்டுத்தனமுள்ள அப்படை ஆஸ்திரியாவிற்கு உதவியாக, பொஹீமியாவின் நிகழ்ச்சிகளில் விரைவில் திருப்பத்தை உண்டு பண்ணியது. பிரெஞ்சுப் படை பெருந்தொல்லையுடன் பிரான்சிற்குத் தப்பி ஓடிற்று. ஆங்கிலேய அரசர்கள், சிறப்பாக அரசியாருக்குப் பொருளுதவி அளித்ததுடன்,நெதர்லாந்திற்கும்,ரைன் நதிப் பிரதேசங்கட்கும் ஒரு படையனுப்பியது வாயிலாகப் போரில் ஒரு மாற்றுப் போக்கையும் உண்டாக்கினுர்கள்; டெட்டின்ஜன்[2] எனுமிடத்தில் சிறந்த வீரச்செயல்களால் தங்கட்கு நிகழவிருந்த இடரினின்றும் தப்பினுர்கள்; ஆனுல், 1745-ல் ஃபான்டினுய்[3] எனுமிடத்தில் நிகழ்ந்த சண்டையில் கடுந்தோல்வியுற்ருர்கள். அடுத்த ஆண்டில் பிரெஞ்சுப் படைகள் தாழ்நிலப் பகுதி முழுவதையும்தம் வயமாக்கிக்கொண்டன. சைலீஷியாவைப் பிரெடரிக்கிடமிருந்து பறிப்பதற்கான முயற்சிகள் நடந்தும், சைலீஷியா அவர் வயமே இருந்தது. 1748-ல் எய்க்ஸ்லா சாபெல்[4] சமாதானம் ஏற்பட்டது. பிரெடரிக்கு வெற்றி கொண்டவை அவரிடமே இருந்தன. பிரெஞ்சுப் படைகள் வெற்றி கொண்ட பகுதிகளைப் பிரான்சு வைத்துக்கொள்வதற்காகச் செய்த அரச தந்திரம் பலிக்கவில்லை. எனவே, பிரான்சு வெற்றி பெற்ற நாடுகளையெல்லாம் விட்டுக் கொடுத்தது.

இச்சமாதானம் சிறிது மூச்சு விடுதற்குரிய நேரத்தை ஈந்ததாகக் கருதப்பட்டது. சைலீஷியாவை விட்டுவிடும் எண்ணத்தை மேரியா தெரிசா மேற்கொள்ளவில்லை. இங்கிலாந்திற்கும் பிரான்சிற்குமிடையே நிலவிய குடியேற்ற நாட்டுப் பிரச்சினையும் முடிவு பெறவில்லை. ஆனுல், மீண்டும் போர் தொடங்குவதற்குமுன் நேய உடன்படிக்கைகள் புதுமையான முறையில் மாறின. அரசியல் தந்திரப்புரட்சி எனப்படும் கூட்டுறவு தோன்றலாயிற்று.

## அரசியல் தந்திரப் புரட்சி

### மீண்டும் போர் ஏற்படுதல்

16-ம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்தே பிரான்சும் ஆஸ்திரிய அரச குடும்பமும் நிலையான பகைமை கொண்டிருந்தன. ஐரோப்

[1] Magyars. [2] Dettingen. [3] Fontenoy. [4] Aix-la-Chapelle.

16

பாவின் அரசியல் நிலைமையில் இவர்களிடையே காணப்பெற்ற எதிர்ப்பு, நிலையான கூருகக் கருதப்பட்டது. இவ்விரு பகைவர்களுடைய கட்சிகளில் மற்றைய ஐரோப்பிய அரசரும் சேர்ந்து கொண்டனர். பிரான்சிற்கும் கிரேட் பிரிட்டனுக்கும் இடையேயிருந்த பகைமை, அவ்வளவு நீடித்ததாய் இல்லை; அதனுடன் அரசியல் அறிஞர்களது கவனத்தையும் அவ்வளவாகக் கவரவில்லை. இப்பொழுது பிரான்சும் ஆஸ்திரியாவும் ஒன்று சேர்ந்தன. இதனுல் கிரேட் பிரிட்டன் பிரஷ்யா நாட்டு மன்னரான பிரெடரிக்குடன் நட்புறவு கொண்டது. இத்தகைய கட்சியமைக்கும் கருத்து ஆஸ்திரியாவில் தோன்றியது. மேரியா தெரிசாவின் அமைச்சரான கௌனிட்ஸ்[1] என்பவரே பிரான்சுடன் ஆஸ்திரியா நேயவுறவு கொள்ளுவதன் தேவையைப் பற்றி வற்புறுத்திஞர். நிகழவிருக்கும் சச்சரவில் பிரான்சு சேராமல் தனித்திருந்திருக்குமாஞல், இது அறிவுடைமையானதும் போற்றக்கூடியதுமான செயலாக இருந்திருக்கும். ஆஞல், பதினைந்தாம் லூயியின் அவையில் அறிவுடைய அறிவுரையாளர்கள் இல்லாமையாலும், மன்னர் மீது அவருடைய தலைவியாரான தீருவாட்டியார்-டி-பாம்படூரின்[2] செல்வாக்கு அதிகமாயிருந்ததாலும், அவ்வாறு நடக்கவில்லை. ஆஸ்திரியாவின் கோரிக்கைகளைப் பிரான்சு ஏற்றுக் கொண்டது; போரும் மூண்டது. ஆஸ்திரியாவிற்கும் பிரஷ்யாவிற்குமிடையேயிருந்த நெருக்கடி நிலையும், இந்தியாவிலும், கனடாவிலும், கிரேட் பிரிட்டனுக்கும் பிரான்சிற்குமிடையே இருந்த தகராறுகளும் ஓரளவு துணைக் காரணங்களாயின.

## புதிய கூட்டுறவுகள்

கனடாவிலும் இந்தியாவிலும் கிரேட் பிரிட்டனுக்கு வெற்றியளித்த குடியேற்றப் போர்களின் சுவடுகளைப் பற்றி அறிய முயல வேண்டுவதில்லை. ஐரோப்பாவில் பிரஷ்யா நாட்டுப் பிரெடரிக்கின் எதிர்காலநிலை மிகவும் தேர்ச்சி பெற்றிருந்த ஆஸ்திரியப் படைகளை எதிர்க்க வேண்டியிருந்ததுடன், மேற்கில், சென்ற போரில் பல வெற்றிகளை யடைந்திருந்த பிரான்சின் மிரட்டல்களுக்கும் ஈடுகொடுக்க வேண்டியிருந்தது. விரைவிலேயே மேரியா தெரிசா நீடித்த பேச்சுவார்த்தைகளின் பயஞக ரஷிய அரசியாரான எலிசபெத்தின் நட்புறவைப் பெற்ருர். இதன் விளைவாக ரஷ்யப் படைகள் ஆஸ்திரியப் படைகளுடன் சேர்ந்தன. அரசியற்றந்திர அடிப்படையில் ஏற்பட்ட இப்போர், பிரெடரிக்கிற்கு எதிராக முடிவுற்றது. பெரியனவும், பேரிடரானதுமான இம்மூன்று நாடுகட்கு எதிராகக் கிரேட் பிரிட்டனைத்

[1] Kaunitz. [2] Madame de Pompadour.

தவிர வேறு வலிமை பொருந்திய நேச நாட்டின் உதவி அவருக்கு இல்லை. கிரேட் பிரிட்டனுடைய வலிமை அதன் கடற்படையிலும் செல்வத்திலும் மிகுதியாயிருந்தது.

## ஏழாண்டுப் போர்

ஏழாண்டுப் போர் என வழங்கப்பட்ட இப்போரிலும், முப்பதாண்டுப் போரில் ஏற்பட்ட கடுமையான பட்டறிவுகளைப் போலவே, பிரஷ்யா கடுமையான பட்ட றிவை மீண்டும் பெற நேர்ந்தது. முதலில் சிறப்பான வெற்றிகளைப் பெற்ற பிரஷ்யப் படைகள், ஆஸ்திரிய-ரஷ்யப் படைகளால் தோற்கடிக்கப்பட்டன. பெர்லின், பகைவர் வசமாயிற்று. பிரெடரிக்குத் 'தற்கொலை செய்து கொள்ளுவோமா!' என எண்ணினார். தோல்வி, அழிவு, இவற்றுக்கு இடையில், பிரஷ்யா மறைந்து விடும் போலத் தோன்றியது. இவையனைத்தையும் எதிர்த்து நாட்டின் நிலப்பகுதிகளை இழக்காமலும், அளவற்ற வளர்ந்த செல்வாக்குடனும், புகழுடனும், போரிலிருந்து அந்நாடு மீண்டதென்றால், அதற்கான வேறு காரணங்களிருந்தன.

## ராஸ்பாக்கும் லியூதனும்

பிட்டு—இங்கிலாந்தின் முதலமைச்சர்

எல்லாக் காலங்களிலும் சிறப்புற்று விளங்கும் போர் வீரர்களிடையே இடம் பெறுதற்கான இராணுவத் தன்மைகள் பிரெடரிக்கிடம் காணப்பட்டன. தொடர்ந்து போரிடுவதிலும் அவர் தலை சிறந்து விளங்கினார். 1757-ல் பிரெஞ்சுப் படையை ராஸ்பாக்கு[1] எனுமிடத்தில் முறியடித்தார். அதனுடன் அப்படையை எவ்வளவு எளிதாக வென்றாரோ அவ்வளவு எளிதாக அதை அவமானத்திற்குட்படுத்தினார். இதற்குப் பிரஷ்யப் படைகளின் மேன்மையே காரணமாகும். அவ்வாண்டிலேயே, லியூதன்[2] எனுமிடத்தில் மற்றொரு பெருவெற்றியைப் பெற்றார். புதுமுறைத் தாக்குதல் வாயிலாகப் போர் முறைகளில் புரட்சிகரமான மாறுதலை அவர் உண்டு பண்ணினார். எதிர்பார்த்தவாறு, பிரிட்டிஷ் நட்புறவும் பயனளித்தது. பிற்காலத்தில் சாதம் பிரபு[3] எனப் பெயர் பெற்ற 'பிட்டு' எனும் ஆங்கிலேய அமைச்சர், இங்கிலாந்தின் வெளி நாட்டுக் கொள்கையை உருவாக்கத் துணை நின்றார். ஐரோப்பாவிற்கு அதிகமான படைகளை யனுப்ப அவர் முடிவு செய்தார்; இதன் விளைவாக, கனடாவிலும், இந்தியாவிலுமிருந்து பிரான்சின் மீது கவனத்தைத் திருப்பினார். இதனை, 'ஜெர்மன் சமவெளியில் கனடாவை வெல்லுதல்' எனக் கூறினார்.

[1] Rosbach. [2] Leuthen. [3] Pit,Lord Chatham.

## பிரெடரிக்கின் கடுந்தொல்லை

மூன்றும் பீட்டர் ரஷ்ய மன்னராதல்

பிட்டு தமக்குச் செய்த பேருதவியைப் பிரெடரிக்கு நன்றியறிதலுடன் பாராட்டினார். பிரெடரிக்கு, பிரான்சின் பிடிப்பிலிருந்து தப்பியதற்கு முக்கிய காரணம், பிரெஞ்சு முடியாட்சி மிக்க இழிநிலையில் இருந்ததேயாகும். தவிர, பிரான்சில் சிறந்த அரசியல் வல்லுநரோ, அன்றிப் போர் வீரரோ இல்லாமற் போயினர். அவ்வாறிருந்தும், 1761-ல் பிரெடரிக்கின் போர்த்திறனும் இணையற்ற தறுகண்மையும் நம்பிக்கையுடன் கூடிய பொறுமையும் அவரைக் காப்பாற்று எனத் தோன்றின. 1759-ல் கூனர்ஸ்டார்ஃப்[1] என்னும் பெருஞ்சண்டையில் அவர் ரஷ்யர்களால் தோற்கடிக்கப்பட்டார். ரஷ்யர்களும் ஆஸ்திரியர்களும் 1761-ல் பெர்லினுக்குள் நுழைந்தார்கள். அவ்வாண்டு முழுவதும் பிரஷ்ய நிலப்பகுதிகளை அவர்கள் தங்கள் வசம் வைத்துக் கொண்டிருந்தார்கள். சிறந்த படைகளின் உதவியோடு பிரெடரிக்குத் தொடங்கிய போரில் படைகளின் பெரும்பகுதி அழிந்து போயிற்று. அவருடைய செல்வமும் செலவழிந்து போயிற்று. இவையனைத்தையும் விட 1761-ல் இளைஞரான ஆங்கிலேய மன்னர் மூன்றும் ஜார்ஜின் கொள்கையின் பயனாக, 'பிட்டு' பதவியிழக்க நேர்ந்ததும், அதனுடன், ஐரோப்பியப் போர்களிலிருந்து பின்வாங்க வேண்டும் என்று உறுதி கொண்ட அமைச்சர்கள் பதவி யேற்றதும் தீங்காய் விளைந்தன. பிரஷ்யாவின் அழிவு மிக விரைவில் ஏற்படும் போலத் தோன்றியது. இந்நிலையில் ரஷ்ய அரசியாரான எலிசபெத்தின் மரணம் பிரெடரிக்கைக் காப்பாற்றியது. எலிசபெத்து, பிரெடரிக்கின் சொந்த உறுதி மிக்க பகைவராய் இருந்தார். அரசியாருடைய தொல்லையிலிருந்து விடுதலை பெற்றதே பிரெடரிக்குக்குப் பெரிய ஆறுதலாயிற்று. அரசியாரின் மருகரான மூன்றும் பீட்டர் ரஷ்யாவின் மன்னரானார். அவர்தம் கோழைத்தனம் காரணமாக, பிரஷ்ய மன்னரைப் பெரிதும் பாராட்டினார்; மேலும், அவரைத் தம் எசமானர், மன்னர் எனக் குறிப்பிட்டார். உடனே பிரெடரிக்குடன் ரஷ்யா நட்புக்கொண்டது; போரின் போக்கு முற்றிலும் மாறியது.

## மகா பீட்டர்

நான்கு மாதங்களுக்குப் பிறகு மூன்றும் பீட்டர் தம் ஜெர்மானிய மனைவியரால் பதவி நீக்கம் செய்யப்பட்டுக் கொலையுண்டார்; பின்னர் அவர் மனைவியார் இரண்டாம் காத்தரீன் என ஆட்சி செய்யலானார்; உடனடியாகப் பிரஷ்ய நட்புறவிலிருந்து விலகிக் கொண்டார்.

[1] Kunersdorf.

ஆயினும், பிரெடரிக்கும் பிரஷ்யாவும் காப்பாற்றப்பட்டனர். இப் போரிஞல் ஐரோப்பா மிகவும் களைப்புற்றிருந்தது. 1763-ல் பாரிசு சமாதானத்துடன்[1] இப்போர் முடிவுற்றது. சைலீஷியாவைப் பிரெடரிக் குத் தாமே வைத்துக் கொண்டார். பிரஷ்யா, ஐரோப்பிய நாடுகளுக்கு வியப்பையுண்டு பண்ணிற்று. பிரெடரிக்கின் துரைத்தனமுறை, போர் முறை ஆகியவை அவருக்கு அருகிலிருந்தவர்களின் பாராட்டுதலைப் பெற்றன. அவரிடமிருந்து துன்பத்தைப் பெற்றோரும் அவர் முறை களைப் பின் பற்றினர்.

## உணர்வு ஒளிர் வல்லரசு

பதினெட்டாம் நூற்றுண்டு உணர்வு ஒளிர் வல்லரசுக் காலமெனவழங்கப்படுகிறது. பல நாடுகளில் நல்லெண்ணம் கொண்ட அரசர் களிடம் எல்லா அதிகாரங்களும் ஒரு முனைப்பாகச் சேருவதன் மூலம் நன்மை தரும் வகையில் மாறுதல்கள் ஏற்பட்டன. இதற்கெடுத்துக் காட்டாக, டென்மார்க்கு, சுவீடன், ரஷ்யா, ஆஸ்திரியா ஆகியவை அமைந்திருந்தன. பிரஷ்யா, சிறப்பான ஓர் எடுத்துக்காட்டாய் விளங்கியது. பிரெடரிக்கின் முடியரசு, பதினைன்காம் லூயியின் ஆட்சிக்கு நேர்மாருயிருந்தது. ஆடம்பரமும் சடங்குகளும் குறைவா யிருந்தன. அரசாங்கத்தில் மன்னர் கடுமையாக உழைக்கும் வேலைக்காரராயிருந்தார். மன்னர் கடிய வேலைகளைத் தாம் மேற் கொண்டதோடு, தம்கீழ் பணி புரிவோரையும் குடிகளையும் கடும் பணிகளைச் செய்யுமாறு ஏவினர். நாட்டின் பொது நலத்தையே எல்லோரும் ஒரே நோக்கமாகக் கொள்ள வேண்டியிருந்தது. இந் நோக்கு அவருக்குச் சமய நோக்காயமைந்தது. பாரிசு சமாதானத் திற்குப் பின், பிரெடரிக்கு வேறு எந்தக் கடுமையான போரிலும் ஈடுபடவில்லை. போரிஞலேற்பட்ட பேரழிவால், நாட்டின் அமைப்பு அடிப்படையிலிருந்து மீண்டும் புதுப்பிக்கப்பட வேண்டியிருந்தது. உழவும், வாணிகமும், அரசாங்கத்தின் மேற்பார்வையின்கீழ் ஊக்கு விக்கப்பட்டன. அவருடைய கொள்கையின் நற்பயன்கள் அவர் ஆட்சி முடிவதற்கு முன்னரே வெளிப்படையாய்த் தோன்றின. பிரெடரிக்குத் தம் இளம் பருவத்தில் பிரான்சு நாட்டின் தத்துவ அறிஞர்களிடம் கல்வி பயின்ருர்; சித்திரவதை செய்வதை ஒழித்ததிலும், சமயத்தில் முழுச்சகிப்புத்தன்மையை ஏற்படுத்தியதிலும் அவர்களிடம் கற்ற அறிவைப் பின்பற்றுவதில் உண்மையாக நடந்து கொண்டார்.

[1] Peace of Paris

## போலந்தின் முதற்பிரிவினை

1786 வரை அவர் ஆட்சி செய்தார்; 1772ஆம் ஆண்டிலேயே பிரஷ்யாவிற்குப் பெருமதிப்புள்ள நிலப்பகுதியைப் பெற்ருர். அவ்வாண்டிலேதான் போலந்தின் முதற்பிரிவினை ஏற்பட்டது. பிரஷ்யா, ரஷ்யா, ஆஸ்திரியா இம்மூன்று வல்லரசுகளினிடையில் போலந்து ஒன்றும் செய்ய இயலாத நிலையில் இருந்தது. மக்கள் பல கட்சிகளாய்ப் பிரிந்திருந்தார்கள். குடியானவர்கள் நிலையிழந்து அடிமைகளானுர்கள். அரசியற் சட்டம் பயனில்லாத நிலையிலிருந்தது. மன்னரும் ரஷ்ய அரசியாருக்கு ஒருதலையாதரவு கொண்டவராயிருந்தார். 1772-ல் கிழக்கு ஐரோப்பாவில் ஒரு பெரிய போர் ஏற்படும் எனத் தோன்றியது. பிரெடரிக்கின் அறிவுரைப்படி இம்மூவரசுகட்கிடையே இருந்த சச்சரவுகளை மறந்துவிடுவதென்றும், துருக்கி நாட்டெல்லையில் அவர்கள் உரிமை பாராட்டியதை விட்டுவிடுவதென்றும், அதற்குப் பதிலாக எதிர்த்து நிற்காத போலந்து நாட்டில் ஒவ்வொருவரும் ஒரு பகுதியையடைவது என்றும் உடன்பட்டார்கள்.

பிரெடரிக்கு, சைலீஷியாவைப் பிடித்துக்கொண்டது போல நேர்மையற்ற முறையில் பங்கு கொள்வதற்கு மேரியா தெரிசா முதலில் இணங்கவில்லை. இறுதியில் மற்றவர்களுடன் அவரும் சேர்ந்து கொண்டார். இப்பிரிவினையால் ரஷ்யாவிற்கு அதிகமான பங்கு கிடைத்தது. பிரஷ்யாவிற்குக் கிடைத்தவை மிகவும் மதிப்புள்ளவையாயிருந்தன. இதன் காரணம், மேற்குப் பிரஷ்யாவை எடுத்துக்கொண்டு, அதன் பயனுக, பிராண்டன்பர்குடன் இணைத்துப் பிரஷ்யா அரசு ஒரே தொடர்புடையதாகச் செய்யப்பட்டமையேயாகும். இவ்வாறு பிரஷ்ய அரசு அதன் வலிமையிலும் ஐக்கியத்திலும் மிகப் பெரியதாயிற்று.

## மேரியா தெரிசா

1780-ல் மேரியா தெரிசா மரணம் எய்தினர். ஐரோப்பிய வரலாற்றில் இவர் மிக்க சிறப்பு வாய்ந்தவராவர்; பெருந்தன்மை பெற்றவருமாவர்; அழகு, சமயத்தில் ஈடுபாடு, நாட்டுப்பற்று, மனவுறுதி இவையனைத்தும் இருந்தும், இறுதியில் தோல்வி பெற்றவர். இப்பண்புகளைக் கொண்டிருந்தவரும், வருங்கால சந்ததியினுடைய ஒத்துணர்வையும் போற்றுதலையும் பெற்றவருமாகிய மேரியா தெரிசாவைப் போன்ற வேறோர் அரசியாரை ஹாப்ஸ்பர்குக் குடும்பம் தோற்றுவிக்கவில்லை. அவருடைய கணவர், 1765-ல் அவர் இறக்கும் வரையில், பேரரசுப் பட்டத்தைப் பெற்றிருந்தார். அதன் பின், அவர் புதல்வரான இரண்டாம் ஜோசப்பு, பேரரசுப் பட்டத்தைப் பெற்ருர். 1780-ல் அவர்

இறக்கவே, ஹாப்ஸ்பர்குக் குடும்பத்தாருக்குச் சொந்தமான பகுதிகளை எல்லாம் ஜோசப்பே ஆட்சி புரியத் தொடங்கினுர்.

## ஆஸ்திரியா நாட்டு இரண்டாம் ஜோசப்பு

இரண்டாம் ஜோசப்பு, பிரஷ்ய மன்னரான பிரெடரிக்கை வெறுப்புடனும் போற்றுதலுடனும் மதித்தார்; அவருடைய குடும்பத்திற்குக் கடும் பகைவரெனப் பிரெடரிக்கைக் கருதினுர். அதனுடன் நவீன காலத்தின் அரசருடைய குறிக்கோளாகவும் பிரடெரிக்கை மதித்தார்; அரச அதிகாரத்தைக் காப்புடன் நிறுவியவுடனே பிரஷ்ய மன்னரைப் பின்பற்றிச் சீர்திருத்தங்களைத் தொடங்கினுர். நாட்டை ஐக்கியப் படுத்தலும், வரம்பிலா முடியாட்சியை ஏற்படுத்துதலும், அவருடைய குறிக்கோள்களாய் இருந்தன. பிளவிற்குப் பெருங்காரணமாயிருந்ததை அகற்றச் சமயச் சகிப்பு, ஜெர்மானிய மொழியை ஆட்சி மொழியாக எங்கும் பயன்படுத்துதல், துரைத்தனத்திற்கு ஏற்றவாறு நாட்டை மாவட்டங்களாகப் பிரித்தல், இனம் வகுப்பு இவற்றிற்கான சிறப்புரிமைகளைப் பாராட்டாது நேர்மையுடன் ஆட்சி புரிதல் போன்ற சீர்திருத்தங்களை மேற்கொண்டார். உண்மையில், ஹாப்ஸ்பர்குக் குடும்பத்திற்குச் சொந்தமானவையும், சமயம், இனம், மொழி, பண்பு இவைகளில் பல திறப்பட்டவையுமாகிய நிலப்பகுதிகளைப் பிரஷ்யாவின் பிரெடரிக்குச் செய்த காலக்கோலத்தைப் பின்பற்றி, நவீனமான ஒரே அரசாகச் செய்ய விரும்பினுர். பிரெடரிக்கின் இராச்சியத்திற்கும் அவரது இராச்சியத்திற்கும் இடையே காணப்பெற்ற வேறுபாடுகளை அவர் மனத்திற் கொள்ளவில்லை. உண்மையில், பிரஷ்யாவும் பல வழிகளில் பிரிக்கப்பட்டிருந்தது. ஆயினும், மக்கள் அநேகமாக எல்லோருமே ஜெர்மானிய இனத்தைச் சேர்ந்தவர்களாயிருந்ததுடன், பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சேர்ந்தவர்களாயுமிருந்தார்கள். ஆனல், ஆஸ்திரியாவோ, நூருண்டு காலமாக ஏற்பட்ட மரபுகளின்படி ஒன்ருேடு ஒன்று பகைமை பாராட்டி வந்த பல சிற்றரசுகளின் சேர்க்கையாயிருந்தது. அதனுடன் சிலவிடயங்களில் இடைக்காலத்திற் காணப்பட்ட மானிய முறையில் தொடக்க நிலையில் உள்ளதுபோல நாடு காணப்பட்டது. அவருடைய இராச்சியம் பின் காணும் வகையில் முக்கியப் பிரிவுகளாய்ப் பிரிந்தது.

## பிரஷ்யாவையும் ஆஸ்திரியாவையும் ஒப்பிடல்

(1) ஹாப்ஸ்பர்குக் குடும்பத்தாருக்கு மூலமாய்ச் சொந்தமாயிருந்த ஆஸ்திரியாப் பகுதி மட்டில்; இதில் பெரும்பான்மையோர் ஜெர்மானியர்களாயும் கத்தோலிக்கப் பிரிவினராயுமிருந்தவர்கள்; (2) ஹங்கேரி, டிரான்சில்வேனியாவுடன் சேர்ந்தது. நாட்டுரிமைச் செருக்குப் படைத்தவர் பெரும்பான்மையினர் மாகியார்கள்; அவர்களுடைய

மானியமுறையில் அமைந்த நிலையங்களும் அவைகளை விடாப் பிடியாகக் கொண்டிருந்தவை. (3) பொஹீமியாவும் மொரேவியாவும் 'செக்' இனத்தினர்; (செக்கோஸ்லேவியா) பெரும் பகுதி பிராட்டஸ்டென்டு சமயத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்களிடம் தேசீயவுணர்ச்சி மறுமலர்ச்சி பெறத் தொடங்கிற்று; (4) இத்தாலியப் பகுதிகள் சமய அடிப்படையில் ஆஸ்திரியாவுடன் சேர்ந்திருந்த போதிலும், தன்மை, மொழி, அவா இவற்றில் முற்றிலும் வேறுபட்டவையாய் இருந்தன; (5) ஆஸ்திரியாவைச்சேர்ந்த நெதர்லாந்து (பெல்ஜியம்) உட்ரெக்டுச் சமாதானத்தின்படி சேர்த்துக்கொள்ளப்பட்டது; கத்தோலிக்கச் சமயத்தினர், மொழி, இயல்பு இவற்றில் முற்றிலும் வேறுபட்டவர்; இவ்விரு அடிப்படையிலும் ஆஸ்திரியாவைவிடப் பிரான்சுடன் இணங்குவதில் கவர்ச்சியுள்ளவராய் இருந்தார். மேற்கூறியவை முழுமையான பட்டியலாக அமையா. ஆயினும், இராண்டாம் ஜோசப்பு மேற்கொண்ட வேலை எவ்வளவு கடினமானதென்பதைக் காட்ட இவை போதுமானவையாகும். ஜெர்மன் மொழியை ஆட்சிமொழியாகக் கொண்டனவும் பொதுவான துரைத்தன அடிப்படையில் இத்துணை வேறுபாடுகளைக் கொண்டிருந்தனவுமான பல நாடுகளை ஒன்ருக இணைத்து ஒரே நாடாகச் செய்வது எத்துணைக் கடினமானதாகும் என்பது நன்கு புலனுகும். சமயச் சகிப்பை வற்புறுத்தியதும் பொது நிலை மக்கட்குக் கல்வியையளிக்க வசதி செய்ததும், அவர் ஏற்படுத்த எண்ணிய சீர்திருத்தங்களில் மிகச்சிறப்பு வாய்ந்தனவாகும். இவ்விரண்டிற்கும் பெரிய எதிர்ப்புக்கள் தோன்றின. மேலான முயற்சிகளடங்கிய அவருடைய ஆட்சி ஒளியிழந்தது. பொஹீமியாவிலும், ஹங்கேரியிலும் அவருடைய திட்டங்களுக்கு எதிர்ப்புக்கள் தோன்றின. பெல்ஜியத்தில் கத்தோலிக்கத் திருச்சபையினுடைய சிறப்புரிமைகளைப் பேணியதற்காக மக்கள் புரட்சியிலிறங்கினுர்கள். அவருடைய வெளிநாட்டுத் திட்டங்களும் வெற்றி பெறவில்லை. விரைவில் அவருக்கு மரணம் ஏற்பட, அவருடைய திட்டங்களின் தோல்வியே காரணமாயமைந்தது. அவர்தம் உடன்பிறந்தாரான இரண்டாம் லியோபால்டிற்கு மிகக்கடுமையான வேலையை விடுத்துச் சென்ருர். இரண்டாம் ஜோசப்பால் மிகவும் சினமூட்டப்பட்டிருந்த பல்வேறு கூறுகளைச் சமாதானப்படுத்துவது லியோபால்டின் நோக்கமாய் அமைந்தது. அவருடைய வேலையைச் செய்து முடிப்பதற்குள்ளாக, பிரெஞ்சுப் புரட்சியின் விளைவால் தோன்றினவும் அரசியல் தந்திரம் நிறைந்தனவுமான இடர்களை எதிர்நோக்க வேண்டியதாயிற்று.

இவ்வதிகாரத்திற் காணப்படும் பொருள்களைப் பற்றி அமைந்த ஆங்கில மொழியில் உள்ள நூல்கள் பல; அவை சிறந்தவையுமாம். அவை, கார்லைல் எழுதியுள்ள 'மகாபிரெடரிக்கு,' டட்டில் எழுதியுள்ள 'பிரஷ்யாவும் பிரெடரிக்கும்'; ரெட்டவேயின், 'மகாபிரெடரிக்கு,' கோக்கின், 'ஆஸ்திரிய அரசக் குடும்பம்,' மெக்காலே எழுதியுள்ள 'பிரெடரிக்கைப் பற்றிய கட்டுரை' போன்றனவாம்.

# 13. பிரான்சின் வீழ்ச்சியும் முன்னைய மன்னாட்சி முறையின்[1] முடிவும்

## ரீஜன்சியும் எதிர்விளைவும்

வரலாற்றில், பிற்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் பெற்ற அறிவைக்கொண்டு, இதற்கு முன்னதான ஒரு காலத்தைப் படித் தறிந்து கொள்ளுவதில் நாம் எப்போதும் முன்னெச்சரிக்கையுடன் இருக்கவேண்டுவது இன்றியமையாததாகும். 18ஆம் நூற்றாண்டி னிறுதியில் ஏற்பட்ட புரட்சி, ஐரோப்பாவிற்கும் மிகப் பெரிய ஒரு நிகழ்ச்சியாகும். எனவே, பதினான்காம் லூயியின் மரணத் திற்குப் பின் நடந்தவைகளிலெல்லாம், பழைய முடியாட்சிக்கு ஏற்பட விருந்த அழிவின் அடையாளங்களை மட்டும் நோக்கும் உளப்போக்கு உள்ளது. புரட்சியின் விதைகள் அப்பொழுதே எவ்வித ஐயப்பாடு மின்றி விதைக்கப்பட்டன என்றாலும், பிரெஞ்சுத் துரைத்தனம் பல வகைகளில் வெற்றிகரமாயிருந்ததுடன், உண்மையில் நடந்த புரட்சியைப் போன்ற ஒரு நிகழ்ச்சி நிகழுமென ஒருவரும் எதிர் பார்க்கவில்லை.

## லாவினுடைய திட்டங்கள்

கல்லறையிலிருந்து பிரான்சை ஆளுவதற்குப் பதினான்காம் லூயி எடுத்துக்கொண்ட முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்றன. அவர் உயிரில் கண்டிருந்த ஏற்பாடுகள் எல்லாம் காற்றிற் பறந்தன. பதினைந்தாம் லூயியின் ரீஜன்டாக (முறையான மன்னர் ஆட்சிப் பொறுப்பையேற்கும் வரை அவருக்காக ஆட்சி புரிபவர்) ஆர்லியன்ஸ் கோமகனார் இப்பதவிக்கு மரபுப்படி ஏற்பட்ட முழு அதிகாரங்களுடன்

[1] Ancient Regime.

ஆட்சி செய்தார். பதினான்காம் லூயியினுடைய கருத்துக்களால் பிரான்சு சலித்து இருந்தது. அவர் கருத்துக்கள் பெருந்தோல்வியில் முடிந்தன. ஒவ்வொரு விஷயத்திலும் எதிர் விளைவு, ரீஜன்டு ஆட்சியிற் காணலாயிற்று. பிரான்சின் நிதி நிலைமையை உடனடியாகக் கவனிக்க வேண்டியிருந்தது. கோல்பர்ட்டின் நிதி சம்பந்தமான சீர்திருத்தங்கள் எல்லாம் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த நீடித்தபோர்கள் காரணமாக, முக்கியமாக ஸ்பெயின் வாரிசுரிமைப்போரின் அதிகச் செலவினால், அழிந்து போயின. மிகப் பெரியதும் நிலையாய் வளர்ந்துகொண்டிருந்ததுமான கடன் நிலையைப் பிரான்சு நேருக்கு நேராகக் கண்டது. கடன் சுமையை வறுமையுள்ள மக்களால் தாங்க முடியாதென்பது தோன்றியது. இத்தருணத்தில் ஸ்காட்லாந்தைச் சேர்ந்த வீரச்செயல் புரிகிறவரான ஜான் லா[1] என்பார், பிரான்சின் கடனைத் தீர்த்து, நிதிப்பற்றாக்குறையை நீக்கி, ஆண்டுதோறும் மிகப்பெரிய இலாபமாக மாற்றக்கூடிய ஒரு திட்டத்தை ரீஜன்டுக்கு எடுத்துக் கூறினார். அரசியற் பொருளாதாரமும், நிதி பற்றிய திட்பமான கருத்துக்களும் அப்பொழுதுதான் தோன்றத் தொடங்கின. எனவே, லாவின் திட்டங்களெல்லாம் சிதறுண்டன என்றாலும், சில சமயங்களில் எடுத்து இயம்பியது போல, லா நிதி அறிவைப் பற்றிய வஞ்சகரல்லர். சுருங்கக்கூறின், மேற்குக் கம்பெனியின் கட்டுப்பாட்டின் கீழிருந்தனவும் வட அமெரிக்காவில் பிரான்சிற்குச் சொந்தமானவைகளுமான வரவை அடிப்படையாகக் கொண்டு ஏராளமாகக் காகித நாணயத்தை வழங்கத் திட்டம் வகுத்தார். இவை மேற்குக் கம்பெனியின் ஆதிக்கத்தின் கீழிருந்தன. இவ்வாறு வெளியிடப்பட்ட காகித நாணயங்களுக்குச் செலுத்துவதற்குத் தேவையான தங்கமும் வெள்ளியும் உண்மையிலேயே அவசியம் என்பதை அவர் உணரவில்லை.

## லாவின் தோல்வி

ஒரு நாட்டின் பொருளியல் வாழ்க்கை அதனுடைய வரவைப் பொறுத்துள்ளதென்றும் பிரான்சு உரிமை பாராட்டிய அமெரிக்காவின் வடகண்டம் முழுவதிலுமிருந்து, எவ்வளவு காகித நாணயங்களை வெளியிட வேண்டியிருந்ததோ அதற்குத் தேவையான வரவு கிடைக்குமென்றும் அவர் நம்பினார். அவரது திட்டம் கடினமானதாயும் சிக்கலானதாயுமிருந்தது. அவரது திட்டம் வெற்றி பெறுவதற்காக அவர் அமெரிக்க நாடுகளை நம்பியிருந்தார். ஆனால், கம்பெனிப் பங்குகளில் சூதாட்டப் பேரம் ஓரளவு அப்போது முன்மாதிரியில்லா முறையில் ஏற்பட்டிராவிட்டால் ஓரமயம் ஓரளவிற்கு லாவினுடைய

[1] John Law.

திட்டம் வெற்றி பெற்றிருக்கக் கூடுமெனத் தோன்றியது. முடிவில், சிறிது காலம் ஐரோப்பாவின் நிதி விஷயத்தில் நடுவுநிலைமை செய்கிறவர்போலத் தோற்றமளித்தபின் அவர் நாடு கடத்தப்பட்டார். நிதித்துன்பத்தைப் பிரான்சு தொடர்ந்து எதிர் நோக்க வேண்டியிருந்ததுடன் எதிர்ப்பில்லாத முறைகளைப் பின்பற்றுவது வாயிலாக ஈடு கொடுக்க முயல வேண்டியும் நேர்ந்தது. 1723-ல் ரீஜன்டு இறந்தார். சிறிது காலத்திற்குப் பின் பதினைந்தாம் லூயி பெயரளவில் துரைத்தனத்தை மேற்கொண்டார். எனினும், சிறிது காலம் வரையில் அவர் சிறுவராயிருந்தமை, ஆட்சியை நடத்துவதற்குத் தடையாயிருந்ததால், அவருடைய ஆசிரியரான கார்டினல் பிளூரி [1] பிரான்சின் முதல் அமைச்சராயிருந்தார்.

## பிளூரி

கார்டினல் பிளூரி எல்லா வகைகளிலும் சிறந்தவர். ஐரோப்பிய வரலாற்றில் அவ்வளவு முதிர்ந்த வயதில் வேருெருவரும் அவர் அதிகாரத்தைச் செலுத்தியதுபோலச் செலுத்தவில்லை. அவர் தமது தொண்ணூரும் வயதில் இறந்தார். அது வரையில் ஐரோப்பாவின் முன்னணியில் உள்ளதாகக் கருதப்பட்ட பிரான்சினுடைய முக்கிய அதிகாரத்தை அவர் பெற்றிருந்தார்; சமாதானக் கொள்கையைப் பின்பற்றினுர்; நட்புறவிற்கும் உதவிக்கும் இங்கிலாந்தை எதிர் நோக்கியிருந்தார். ஐரோப்பாவின் சமாதானத்திற்கும் இரு நாடுகளுடைய முன்னேற்றத்திற்கும் நன்மை பயக்குமளவிற்குப் பிளூரிக்கும் வால் போலுக்கும் [2] இடையே நல்லெண்ணம் நிலவியது. அவருடைய துரைத்தனம் நடந்த காலம் பிரான்சினுடைய மீட்சி, சமாதானம் இவற்றின் காலமாகும். அக்காலம் முடிவடைவதற்குள் கடுமையான, ஆனுல் காலத்தால் குறைவான, போர் மூண்டது. இப்போரைப் பற்றிச் சிறிது காண்போம்:

## போலந்து வாரிசுரிமைப் போர்

நாடு கடத்தப்பட்ட போலந்தின் மன்னரான ஸ்டானிஸ்லாஸின் புதல்வியாரான மேரியா லீஸின்ஸ்கா [3] என்பவரைப் பிரான்சு மன்னர் அரசியல் காரணங்களுக்காக மணஞ்செய்துகொண்டிருந்தார். போலந்து வாரிசு முறையில் இப்போது மீண்டும் ஆளின்மையே ஏற்பட்டது. பிரான்சு அரசியாரின் தகப்பனுர் மீண்டும் அரச பதவிக்கு வேட்பாளராயிருந்தார்; அதனுடன் போலந்து மக்களுள் பெரும்பான்மையாருடைய நல்லெண்ணத்தையும் பெற்றிருந்தார். போலந்து

[1] CardinalFleury. [2] Walpole. [3] Maria Leezjnska.

அரசு பெயரளவில் தேர்தல் முறைப்படி அமைந்திருந்தது. தேர்தல், சுதந்தரமாக நடைபெற்றிருந்தால், பயனைப் பற்றிச் சிறிதும் ஐயப்பட வேண்டுவதில்லை. ஆனால், போலந்தின் விவகாரங்கள் நாட்டின் வலுவின்மையாலும் துன்பமிகுதியாலும் தளர்ச்சியுற்றிருந்தது காரணமாக அயலாரின் தலையீட்டிற்கு இடமளித்தது. எனவே, போலந்து வாரிசுப் பிரச்சினைப் போரில் முக்கிய ஐரோப்பிய நாடுகள் சிக்குண்டன.

## வியன்னாச் சமாதானம்

### பிளூரியின் மரணம்

பிரான்சு, ஸ்பெயின், சார்டீனியா நாடுகள் ஸ்டானிஸ் லாஸின் உரிமைகளுக்கு ஆயுதங்களுடன் உதவி செய்யத் தயாராயிருந்தன. ரஷ்யாவும் ஆஸ்திரியாவும் அவருக்கு எதிராகப் போட்டியிட்ட சாக்ஸனி நாட்டு அகஸ்டஸை ஆதரித்தன. இராணுவ விவகாரங்களை நாம் தொடர்ந்து அறியத் தேவையில்லை. பிரெஞ்சுப் படைகள் இத்தாலியில் முக்கியமான வெற்றியை அடைந்தன. திடீரென்று சமாதானப் பேச்சுக்கள் தொடங்கப்பட்டதன் விளைவாகப் போர் முடிவிற்கு வந்தது. இதன் பயனாக ஏற்பட்ட வியன்னாச் சமாதானத்தின்படி (1738) ஐரோப்பிய எல்லைகளில் சில முக்கிய மாறுதல்கள் செய்யப்பட்டன. லோரைன் பகுதியைப் பிரான்சிற்கு முழு இறைமையுடன் மாற்றுவதென்பது உறுதி செய்யப்பட்டது. புரட்சிப் புயல் வீசுவதற்கு முன் பிரான்சு முடியரசிற்கு ஐரோப்பாக் கண்டத்தில் கிடைத்த இறுதி இலாபமாகும் இது. ஸ்பெயின், நேப்பிள்ஸ் நகரையும் சிசிலித் தீவையும் சொந்தமாக்கிக்கொண்டது. பிரான்சும் அதனுடைய நேச நாடுகளும் சேர்ந்து ஸ்டானிஸ்லாஸிற்கு அரியணையைத் தருவதில் வெற்றி பெறவில்லை லோரைன் கோமகனார் நாட்டைப் பெறுவதுடன் அவர் மனநிறைவடையவும் நேர்ந்தது. இதுதான் பிளூரியின் இறுதி வீரச் செயலாகும். பிறகு பல்லாண்டுகள் அவர் உயிரோடிருந்தார். ஆயினும், ஆஸ்திரியா வாரிசுரிமைப்போர் மூளுவதற்கு முன்னரே ஏற்பட்ட பெரிய அரசியல் தந்திர இயக்கங்களைக் கட்டுப்படுத்துவதற்கு அவருடைய தளர்ச்சியுற்றிருந்த ஆற்றல் ஏற்றதாயில்லை.

## ஐரோப்பாவில் பிரான்சின் மாறுபட்ட நிலை

முன்னதிகாரத்தில் இப்போரைப் பற்றியும் இதன்பின் நிகழ்ந்த ஏழாண்டுப் போரைப் பற்றியும் கூறினோம். இப்போர்கள் ஐரோப்பிய விவகாரங்களில் பிரான்சின் மாறிய நிலையின் சிறப்புக்கூற்றை விளக்கியதுடன், பிரான்சின் ஊழுடன் தொடர்பு கொண்டிருந்த இப்போர்களின்

வரலாற்றைப்பற்றிப் பாரிசு நகரைக்காட்டிலும், பெர்லின், வியன்னா இவற்றின் நோக்கத்தினடிப்படையில் கூறுவதற்கும் இயலுகிறது. ஐரோப்பாவில், பிரான்சு நடுவிலிருந்துகொண்டு கட்டுப்படுத்தும் நாடாகிய நிலைமையை இழந்துவிட்டது. பதினான்காம் லூயி தோற்கடிக்கப்பட்டவாறே பிரான்சும் தோல்வியடைந்ததுடன் அதனுடைய அரசியல் தந்திர மாண்பையும் இழந்தது. ஆனால், லூயி இம்மாண்பை இழக்கவில்லை. ஆயினும், இப்போர்களில் பிரான்சு பெற்ற தாழ்நிலையின் அளவை நாம் மிகைப்படுத்திக் கூறுதல் கூடாது. முன்னையபோரில் பிரான்சு உண்மையில் எவ்வித இழிநிலையையும் அடையவில்லை. பிரெஞ்சுப் போர் வீரர்கள் ஆங்கிலேயரை ஃபான்டினாய், லாஃபெல்ட்[1] எனும் இரு சண்டைகளில் தோற்கடித்தார்கள்; அதனுடன் நெதர்லாந்தின் மீதும் படையெடுத்துச் சென்று அதை வென்றார்கள். இத்தீரச்செயலைச் செய்யப் பதினான்காம் லூயி அடிக்கடி முயன்றும், வெற்றி பெற முடியாமலிருந்தது. இரண்டாம் போரான ஏழாண்டுப் போரில் பிரான்சு தொடக்கத்தில் சில சிறப்பான வெற்றிகளையடைந்தது. பின்பு, போரின் நற்பேறு மாறியதன் விளைவாக, பிரான்சிற்குத் தோல்வி மாத்திரமன்றி தாழ்நிலையும் அழிவும் ஏற்படலாயின.

## பதினைந்தாம் லூயியின் தன்மையும் அவரது அவையின் தன்மையும்

### தலைவியார் டி-பாம்படூர்

இந்தத் தாழ்நிலைக்கு ஒரு புறத்தில் ஐரோப்பாக் கண்டறியாததும், வலிமை வாய்ந்த இருபெரு இராணுவத் தலைவர்களான ஆங்கில நாட்டு முதல் அமைச்சர் சாதம் பிரபு, பிரஷ்யா மன்னர் மகாபிரெடரிக்கு இவர்களுடன் பிரான்சு எதிர்த்துப் போரிட்டது; மற்றொரு புறத்தில், மன்னருடையதும், அவரது அவையினுடையதும், அவருடைய அமைச்சர்களுட் பெரும்பாலாரினுடையதுமான இழிதன்மையும் மறுக்கக்கூடாத காரணங்களாகும். ஓரமயத்தில் பதினைந்தாம் லூயி இராணுவத் திறமையும் ஆர்வமும் உடையவரெனக் கருதப்பட்டார். இக்கருத்து விரைவிலே மாறிற்று. அவரது ஆட்சியின் பெரும் பகுதியில் அவர் மிகவும் தீநெறி வாழ்க்கையிலீடுபட்டிருந்தார். அதனுடன், பிரான்சின் வெளி நாட்டு விவகாரங்களைக் கட்டுப்படுத்துவதில் அவரது உரிமையை விட்டுக் கொடாமலும், கொள்கையில் நாட்டுப்பற்றையும் அல்லது அரசியல் தந்திரத்திறனையும் காண முடியாதவாறுமிருந்தார்; தம்முடைய அமைச்சர்களை நம்பாமலும் அவர்களுக்குத் தெரியாமல் பிணக்கை உண்டு பண்ணிக்கொண்டு

[1] Lawfeltd.

மிருந்தார், அவருடைய கொள்கையில் அவருடைய சிறந்த பணியாளர்களுள் ஒருவருடைய செல்வாக்கிற்குப் பதிலாக அவையில் தொடர்ந்து தலைமைப்பதவியை வகித்த தலைவியாரின் செல்வாக்குத் தென்பட்டது. இவர்களுள் ஆட்சியின் முற்பகுதியில் தலைவியார் டி-பாம்பாடூரும், பிற்பகுதியில் தலைவியார் டு பாரியும்[1] முக்கியமானவர் ஆவர். ஆஸ்திரியா வாரிசுப் போருக்கும் ஏழாண்டுப் போருக்குமிடையில் நிகழ்ந்த 'அரசியல் தந்திரப் புரட்சி' எனப்படும் நட்புறவில் மாறுதல் ஏற்பட்டதன் பயனாக, பிரான்சு பிரஷ்யாவின் நட்புறவை விட்டு, ஆஸ்திரியாவுடன் நட்புறவைப் பூண்டது. இம் மாறுதல் சிலசமயம் தலைவியார் டி-பாம்படூருடையதாலோ, அல்லது அவர் தற்புகழ்ச்சியாலோ ஏற்பட்டதென்று குற்றஞ்சாட்டப்படுவது மாத்திரமன்றி, உண்மையிலேயே அவருடைய செல்வாக்கைக் கொண்டு அவரால் உயர்த்தப்பட்டதாகும். பிரான்சின் வீழ்ச்சிக்கு அவரது செல்வாக்கே காரணமாயிருந்தது என்பது நியாயமான கூற்று. அவரிடத்தில் தனிப்பட்ட நற்பண்புகளிருந்தனவென்றாலும் பொது விடயங்களில் அவரது செல்வாக்குத் தீமையே விளைவித்தது.

## பிரான்சு, கனடாவையும் இந்தியாவையும் இழத்தல்

### டியூப்ளே

இப்போர்களின் முக்கியப் பயன்—ஐரோப்பிய அரசியல் தந்திர அடிப்படையில் மிக்க அக்கறையுடன் காணப்பட்டதன்று—பிரான்சு, இந்தியாவைவும் கனடாவையும் இழந்ததேயாம். இவ்விரு நாடுகளிலும் பிரான்சின் கொள்கை ஒரு காலம் வரை வெற்றிகரமாயிருந்ததுடன் மிக்க புகழ் பெற்றவர்களால் நிறைவேற்றவும்பட்டது. இந்தியச் சுதேச மன்னர்களுடைய ச்ச்சரவுகளைத் திறமையாகப் பயன்படுத்திக் கொண்டும், பிரான்சின் வலிமையை ஓரமயத்தில் ஒரு பக்கமும் மற்றோரமயத்தில் எதிர்ப்பக்கமும் சேர்த்துக்கொண்டும், ஐரோப்பியப் போர் முறைகளில் இந்தியத் துருப்புக்களுக்குப் பயிற்சியளித்துக்கொண்டும் இந்தியாவில் பிரான்சிற்குச் சொந்தமானவைகளைப் பெருக்கியவர் டியூப்ளே என்பவர். அதனுடன் உண்மையில் போர்முரசு அறைவிக்காமலே பிரான்சிற்குப் பகையாயிருந்த ஆங்கிலேயர்களுக்கு எவ்வாறு அப்பரந்த தீபகற்பத்தில் பிரான்சு அதன் பின் தலைமையை அடைந்தது என்பதையும் தெளிவாகக் காட்டினர். கனடாவில் பிரெஞ்சுக்குச் சொந்தமானது பெரியதாயிருந்ததுடன், முழு அளவில் நன்கு ஆட்சி செய்யப்பட்டுமிருந்தது. பிரெஞ்சுக்காரரின் போர்

[1] Madame du Barrei.

வீரரான மான்ட்காம்[1] என்பார் தலைசிறந்த அரசியல் வாதியா யிருந்தார்.

## மான்ட்காம்

அமெரிக்காக் கண்டத்தின் வடபகுதி பிரான்சிற்குச் சொந்தமா யிருந்ததோடு தெற்கில் நியூ ஆர்லியன்ஸ் மிசிசிப்பி நதியின்கீழ்ப் பள்ளத்தாக்கு வரையில் பரவியிருந்த பகுதியும் அவர்கள் வயமிருந்தது காரணமாக வடவமெரிக்காவின் எதிர்காலம் ஆங்கிலேயரைவிடப் பிரான்சுடனேதான் இணைந்திருந்தது போலத் தோன்றியது. இந்தியா, குடியேற்ற நாடுகள் இவைகளின் நிகழ்ச்சிகளைப் பொறுத்த வரை முதற்போர் வெற்றி தோல்வியென்று ஏற்படாவிட்டாலும், அப்போர் முடிவில்லை என்பது தெளிவாயிற்று. இந்தியாவின்மீதும் அமெரிக்காவின்மீது இங்கிலாந்து கொண்டிருந்த உரிமைகளே இரண்டாவது போரைத் தோற்றுவித்தன. இப்போரில் வெற்றி விரைவாகவும் உறுதியாகவும் தீவாயமைந்த இங்கிலாந்து நாட்டிற்குக் கிடைத்தது. 1763-ல் பாரிசு சமாதானம் கையொப்பமான பொழுது கனடாவில் பிரான்சின் கொடி பறப்பது நின்றுவிட்டது. ஆனால், இந்தியாவில் ஒரு சில சிறிய பகுதிகளின்மீது, அதுவும், ஆளுகை செய்யும் இங்கிலாந்தின் அதிகார இசைவைப் பெற்று, அக்கொடி பறக்கலாயிற்று.

## பிரெஞ்சுத் தோல்விக்குக் காரணங்கள்

### உள் நாட்டு அரசாங்கத்தின் தலையீடு

புகழ் பெற்ற இப்போராட்டத்தினுடைய நிகழ்ச்சிகளைக் கவனித் தற்குப் பதிலாக, பிரான்சிற்குப் பேரிடரை விளைவித்த காரணங்களைக் கவனிப்பது மேலானதாகும். நெடுந்தொலைவிலுள்ள பிரான்சிற்குச் சொந்தமான நாடுகளில் அவற்றின் பிரதிநிதிகளுக்கு அவர்களது விருப்பம் போல நடந்துகொள்ளும் உரிமையை பிரான்சு மறுத்தது கருத்திற்கொள்ள வேண்டுவதாகும். கனடாவில் குறிப்பாகக் குடியேற்ற நாட்டு மக்களுடைய முயற்சிகளில் பிரான்சின் உள் நாட்டு அரசாங்கம் தலையிட்டுத் தடை செய்தது. அதனுடன் ஐரோப்பாவில், வரம்பிற் குட்பட்ட பொறுப்புடன் இங்கிலாந்து சண்டையிட்டுக்கொண்டும், எச்சமயத்திலும் அதைச் சூழ்ந்து அரண் போலமைந்த கடல் எல்லைக்குள் பின்னிடுதற்கு இயலக்கூடிய நிலையில் இருந்தபோது பிரான்சு அதனுடைய ஆற்றல்கள் அனைத்தையும் முழு முயற்சியுடன் தேவைப் படும் அளவிற்குமேல் பயன்படுத்திப் போரிலீடுபட்டிருந்ததும், இது

[1] Montcalm.

காரணமாக அதனுடைய மூலவளங்களை அளவிற்கு மீறி ஈடு படுத்தியதும் ஆழ்ந்து கவனிக்க வேண்டுவனவாம்.

## ஐரோப்பாவின் சிக்கல்கள்

### பிரிட்டனின் கடற்படை ஆதிக்கம்

ஐரோப்பியச் செய்திகளில் அதிகமாகச் சிக்குண்டு இருந்தது காரணமாக ஸ்பெயினின் குடியேற்ற நாடுகளின் அதிகாரம் முறிந்து போனதை நாம் ஏற்கனவே கண்டுள்ளோம். அவ்வாறே ஐரோப் பாவில் பிரான்சினுடைய பேராசைகளும், போட்டிகளுமே அதனுடைய குடியேற்ற நாட்டுத் துணிவுகள் ஆழமாக வேரூன்றுவதையும் நிலை யான பயன்களைப் பெறுவதையும் தடை செய்தன என்பது உண்மை யாகும். போட்டிகளை உற்று நோக்கினல், அவற்றினுடைய விளைவு கடலாதிக்கத்தினல் முடிவு செய்யப் பட்டதைக் காணலாம். ஏழாண்டுப் போரில் தொலைவிலிருந்து கடல்களில் இங்கிலாந்து, பிரான்சு இவற்றி னுடைய கடற்படைகளுக்கிடையில் முக்கியமான போர் ஒன்றும் நிகழ வில்லை. அப்படி இருந்த போதிலும், இந்தியாவிலும், கனடாவிலும் நிகழ்ந்த சண்டைகள், பிரான்சு அவ்விரு நாடுகளுடைய பிரதி நிதிகளோடு நிலையான தொடர்புவைத்துக்கொள்ளாமல் இருந்த தாலும், இராணுவ உதவியை அனுப்பத் தவறியதாலும் கட்டுப்படுத்தப் பட்டன.

## பிரெஞ்சு முடியாட்சியின் வலிமை அழிதல்

பிரான்சு உடனே, 'மிகப் பெரிய ஒரு பரிசை இழந்து விட்டோமே!' என்று எண்ணவில்லை. ஆனல், ஐரோப்பாவில் ஏற்பட்ட தோல்வி களையும், தாழ்நிலையையும் மட்டும் எண்ணிக்கொண்டிருந்தது. பிரான் சில் வரம்பிலா முடியாட்சி ஏற்பட்டதற்கு அம்முடியாட்சி செய்த பணி களும் போரில் அது பெற்ற வெற்றிகளுமே காரணங்களாகும். பதினன் காம் லூயியின் அரசாங்கத்தினுடைய இராணுவத் தோல்விகள் துரைத் தனத்தின் மதிப்பை அழித்ததுடன் அரசப் பற்றுறுதியையும் ஒழித் தது. ராஸ்பாக்கு[1] (பிரெடரிக்கினல் பிரெஞ்சுக்காரர்கள் மிகக் கடுமை யாகத் தோற்கடிக்கப்பட்ட சண்டை) சண்டைதான் பிரெஞ்சுப் புரட் சிக்குக் காரணம் என்று நெப்போலியன் கூறினர் என்பது கூறப்படு கிறது. இக்கூற்றில் அடங்கியுள்ள கருத்தில் பெரிய உண்மை இருக்கிறது.

[1] Rossbach.

## போலந்து

கார்சிகா

பதினைந்தாம் லூயியினுடைய ஆட்சியினிறுதியில் வெளி நாட்டு நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன அவற்றைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுவோம்; 1772-ல் போலந்தில் முதலாவது பிரிவினை ஏற்பட்டது. அதன் பயனுகப் பிரஷ்யா, ஆஸ்திரியா, ரஷ்யா நாடுகள் போலந்து இராச்சியத்திற்கு வெளியிலிருந்த மாநிலங்களை வல்லந்தமாகப் பிடித்துக் கொண்டன. பிரான்சு இதில் தலையிட முயன்றது. ஆனுல், பயனில்லாது போயிற்று. இத்தோல்வி பிரான்சினது மாண்பின் வீழ்ச்சியைக் குறிப்பதாகும். ஆட்சி முடிவதற்குச் சற்று முன்னரே குறிப்பிடத் தக்க புதிய நாட்டுச் சேர்க்கை ஏற்பட்டது. ஜினேவாவின் ஆட்சிக்கு எதிராக நெடுங்காலமாகக் கார்சிகாத் தீவு கலகஞ் செய்து கொண்டிருந்தது. பிரான்சிடம் இத்தீவை ஒப்புவித்தது வாயிலாக இப் போராட்டம் முடிவுற்றது. தீவிலிருந்தவர்களுடைய எதிர்ப்பை முறியடித்துப் பிரெஞ்சுத் துரைத்தனம் அதை அடைந்தது. மத்திய தரைக் கடற்பகுதியில் பிரான்சிற்கு இத்தீவு மிகவும் முக்கியமான மதிப்புடன் கூடிய கப்பற்படைத் தளமாயிற்று.

இப்போது ஆட்சியின் உள்நாட்டு வரலாற்றையும், முடியாட்சிக்கு எதிர்ப்பு எப்படித் தோன்றிற்று என்பதையும், கால் நூற்றுண்டிற்குப் பிறகு புரட்சியைத் தோற்றுவித்த சத்திகள் எவ்வாறு ஒன்று திரண்டு உருவாயின என்பதையும் காண்போம். பதினுன்காம் லூயியினுடைய ஆட்சியை எதிர்த்துக் கருத்தைத் தெரிவிக்க அஞ்சிய மக்களும் நிலையங்களும் பதினைந்தாம் லூயியைத் தாக்குவதில் தீவிரமாயிருந்ததுடன், முடியாட்சி எதிராகப் பல இடங்களில் வெற்றியும் பெற்றன என்பதையும் நோக்குமிடத்து அரசாங்கத்தின் வலுவின்மைக்கும் அது மதிப்பிழந்ததற்கும் அவை அடையாளமாயிருந்தன என்பது புலனுகும்.

## ஜேன்சனியம்

பாரிசு உயர்நீதி மன்றத்தின் உதவியைப் பெறுதல்

ஜேன்சனியம் எனப்பட்ட சமயவியக்க எழுச்சியை ஏற்கனவே நாம் பார்த்தோம். அவ்வியக்கத்தின் ஆதரவாளர்கள், போப்பாண்டவரின் ஆட்சியுடன், பிரான்சு மன்னரும் ஒன்று சேர்ந்த நடவடிக்கையால் எவ்வாறு நசுக்கப்பட்டார்கள் என்பதையும் பார்த்தோம். எனினும் ஜேன்சனியத்தைச் சார்ந்தவர்கள் இருந்தார்கள். சமய, அரசியல் அதிகாரத்திற்கு அவர்களுடைய எதிர்ப்பு அவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளாற் சிறிதும் குறையவில்லை. பாரிசு

நீதி மன்றத்தை அவர்கள் தங்கள் கட்சி வீரராகக் கொண்டார்கள். நாம் ஏற்கனவே அறிந்தவாறு பிரெஞ்சு உயர்நீதி மன்றம், அடிப் படையில் நீதிமன்றமாய் இருந்ததுடன், பொதுவாகப் பிரான்சின் சட்டங்களைப் பாதுகாப்பதாயுமிருந்தது. இதற்கு முந்திய காலங்களில் மானிய மன்றங்களின் அதிகாரத்திலிருந்த வழக்குகளை அரசருடைய நீதிமன்றங்களின் அதிகாரத்திற்குட்படுத்துவதையே முக்கியமாக இவ்வுயர்நீதி மன்றம் செய்து வந்தது. இப்பொழுது சமய விவகாரங் களில் அரசருடைய அதிகாரத்தை எதிர்ப்பதே இதன் தொழிலாயிற்று. இதற்குக் காரணம், ஜேன்சனியத்தைச் சேர்ந்தவர்கள் தாங்க முடியாத சினத்தை யுண்டுபண்ணக்கூடிய அளவிற்குத் துன்புறுத்தப்பட்டார் கள். ஜேன்சனியத்தைச் சேர்ந்தவர்கள் என்று ஐயப்பட்டவர்களுக்குத் திருச்சபையின் இறுதி ஆறுதல்கள் மறுக்கப்பட்டன. இம்மறுப்பைப் பிரான்சின் சட்டங்களின் மீது விடுத்த தாக்குதல் என்று உயர்நீதி மன்றம் அறிவித்ததுடன் மீண்டும் மீண்டும் ஜேன்சனியத்தைச் சேர்ந்தவர்களின் சார்பில் தலையிடவும் செய்தது. அரசாங்கத் தாக்கு தலில் காணப்பட்ட வீரத்தைப் பாரிசு மக்கள் போற்றினுர்கள். பல எடுத்துக்காட்டுகளில் உயர்நீதி மன்றம் அதனுடைய நோக்கத்தை யடைந்தது.

## இயேசு சங்கத்தார்மீது தாக்குதல்

### பிரான்சில் இயேசு சங்கத்தார் ஒடுக்கப்படுதல்

ஜேன்சனியம் உயிரற்று இருந்தது. எனவே, உயர்நீதி மன்றம் இக்குழுவைப் பாதுகாப்பதிலிருந்து ரோமன் கத்தோலிக்கத் திருச் சபைக்குள் காணப்பட்ட மிகப் பெரிய சமயக் குழுவான இயேசு சங்கத் தாரைத் தாக்கத் தொடங்கியது. பிராட்டஸ்டென்டுகளுடைய வெற்றி யைக் குலைப்பதில் ரோமாபுரியின் ஏஜன்டுகளாக இயேசு சங்கத்தினர் எவ்வாறு இருந்தனர் என்பதையும் நாம் முன் பார்த்தோம். சமயப் போர்களின் முடிவான சகாத்தம், வெஸ்ட்ஃபேலியாச் சமாதானம் இவைகளிலிருந்து ஜேன்சனியத்தார் வேறு முயற்சிகளில் ஈடுபட லாயினர்; அயல் நாடுகட்குச் சமயப் பிரசாரத் தூதுகளை நடத்துவதில் சிறப்பாக வெற்றி பெற்றிருந்தனர். பிரான்சில் அவர்கள் கண்ணி யத்தை இழந்திருந்தனர். இதற்குக் காரணம் மன்னருடைய அதி காரத்தோடு அவர்கள் ஒன்றியவர்களாகத் தங்களையும் எண்ணிக் கொண்டதுடன் சமயத் துன்புறுத்துதலில் சில இழிவான நடவடிக்கை களுக்குப் பேருக்கம் அளித்தவர்களாகவும் கருதப்பட்டனர். அவர்கள் எதிர்ப்பின்றி மிக்க வலிமை பெற்றிருந்தபோது எதிர்ப்பாராத முறையில் பெரிய புயல் வீசத் தொடங்கிற்று. மேற்குஇந்தியத் தீவுகளில் இயேசு சங்கத்தாருடைய தூதுக் குழுவின் மேலாளரைப் போர் நடந்த காலத்தில் ஆங்கிலேயக் கப்பல்கள் கொள்ளையடித்தது

காரணமாக அவர் கடனாளியானார். அவருடைய கடன்காரர்கள், அவர் பட்டிருந்த கடன்களுக்கு இயேசு சங்கமே பொறுப்பாகும் எனக் கூறி, பிரெஞ்சு உயர்நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்தனர். இவ்வுயர்நீதி மன்றம் இயேசு சங்கத்தாரிடம் நீண்ட நாளாகவே பகைமை பாராட்டி வந்ததால், இத்தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டு இயேசு சங்கத்தின் அமைப்பைப் பற்றியே விசாரணை செய்ய முற்பட்டது. உயர்நீதி மன்றத்தின் விசாரணையிலிருந்து விலக்கி அவரால் நியமிக்கப் பட்ட ஒரு தனி நீதி மன்றத்தின் விசாரணைக்குட்படுத்துவதற்காக மன்னர் செய்த முயற்சிகள் வீணாயின. இவற்றையெல்லாம் எதிர்த்து உயர்நீதி மன்றம் விசாரணை நடத்தி இயேசு சங்கம் அப்பொழுது அமைந்திருந்த முறையில் பிரான்சில் ஏற்கத் தக்கதன்றென்று அறி வித்தது.

அதன் உறுப்பினர்கள் பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்திராத ஒரு வெளி நாட்டாரைச் சங்கத்தின் தலைவராகக் கொண்டு அவரிடம் முழுப் பற்றுறுதி வைத்துக்கொண்டிருந்ததே காரணமாயிற்று. 16 ஆம் 17 ஆம் நூற்றாண்டுகளில் இயேசு சங்கம் பன்னாடுகளிலும் பரவியிருந்த சால்பே அதன் அதிகாரத்திற்கு முக்கிய மூலமாயிருந்தது. இத்தன்மையே இப்போது அதன்மீது ஏற்பட்ட தாக்குதலுக்குக் காரணமாயிற்று. இணங்கி வருவதற்கான முன் மொழிவான ஏற்பாடுகள் நடந்தன. பிரான்சிலுள்ள இயேசு சங்கத்தார் அவர்களுக்குள்ளாகவே ஒரு பிரெஞ்சுக்காரரையே தலைவராகத் தெர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும் என்று குறிப்புணர்த்தப்பட்டது. ஆனால், சலுகை அல்லது சமரசம் என்ற கொள்கை மறுக்கப்பட்டது. 'அவர்கள் இப்பொழுதுள்ளவாறே இருக்கவேண்டும்; அன்றேல், இல்லாமற்போக வேண்டும்,' எனப் பதில் எழுந்தது. இயேசு சங்கத்தாரைக் காப்பாற்ற வேண்டுமெனப் பதினைந்தாம் லூயி விரும்பியும், அவருக்கு மிஞ்சி ஏற்பட்ட சத்திக்கு இணங்க வேண்டியதாயிற்று. 1764-ல் பிரான்சில் இவ்வியக்கம் ஒடுக்கப்பட்டுவிட்டதாக அறிவிக்கப்பட்டது. பிரான்சில் இவ்வியக்கத்திற் கேற்பட்ட தாக்குதல் எவ்விதத்திலும் தனிமையில் நிகழ்ந்த நிகழ்ச்சி யன்று. இவ்வமயத்தில் எல்லாக் கத்தோலிக்க நாடுகளிலும், குறிப் பாக ஸ்பெயினிலும் போர்த்துகலிலும், இயேசு சங்கத்தார் விசாரணைக் கும் கொடுந் தாக்குதல்களுக்கும் ஆளாயினர். அக்காலத்தில் எழுந்த அறிவுப் பெருக்கம் இவ்வியக்கத்திற்கு எதிராக அமைய ஓரளவு காரணமாயிருந்தது. இச்சங்கத்தைப்பற்றி சிறிது தாழ்த்து ஆராய் வோம்.

## இயேசு சங்கத்தார் இயக்கம் நீக்கப்படுதல்

ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையினுடைய தூண்டுதல், அதன் அதிகாரத்திற்கு மற்றவைகளைக்காட்டிலும் எதிராகத் தோன்றிய

தாலேயே இவ்வறிவுப் பெருக்கம் சிறப்புற்று விளங்கியது. போர்த்துகல், ஸ்பெயின், இத்தாலியில் பல நாடுகள், பிரான்சு இவைகளிலிருந்து இயேசு சங்கத்தார் வெளியேற்றப்பட்டபின், இவ்வாறு ஒடுக்கப்பட்டதை அங்கீகாரம் செய்து இவ்வியக்கத்தையே நீக்கிவிடுமாறு போப்பாண்டவரின் ஆட்சி கட்டாயப்படுத்தப்பட்டது. இறுதியாக 1773-ல் போப்புப் பதினான்காம் கிளீமன்டு இதற்கு இணங்குமாறு நேர்ந்தது. 'என்னுடைய வலக்கையையே அது பாவம் செய்ததற்காக நான் துண்டித்துக் கொள்ளுகிறேன்!' என்று அவர் கூறியதாகச் சொல்லப்பட்டது. எனவே, இயேசு சங்கத்தார் இயக்கம் நீக்கப்பட்டது ஆனால், இந்நீக்கம் நீண்ட நாள் நீடித்திருக்கவில்லை. திருச்சபைக்கு இவ்வியக்கம் மிகவும் மதிப்பு வாய்ந்த ஆயுதம் போன்றிருந்தமையால், அதைப் பலியிட இயலாதிருந்தது. எனவே விரைவிலேயே மீட்கப்பட்டு, மீண்டும் கத்தோலிக்கத் திருச்சபைக்குள் முக்கியப் பொறுப்பு வாய்ந்தும் செல்வாக்குப் பெற்றும் இப்பொழுது காணப்படுவதைப் போலவே ஏற்படலாயிற்று.

## உயர்நீதி மன்றமும் வரி விதித்தலும்

இவ்வாறு பிரெஞ்சு உயர்நீதி மன்றம் குறிப்பிடத்தக்க வெற்றியை அடைந்தது; எனினும், மீண்டும் மன்னரோடு சச்சரவிலீடுபட்டுக் கொண்டிருந்தது. இச்சச்சரவு, மன்னருடைய ஆட்சியின் இறுதியாண்டுகளில் மன்றத்திற்குப் பதிவிற்காக அனுப்பப்பட்ட பல்வேறு வரி விதித்தல் தொடர்பான ஆணைகளைப் பற்றிய பிரச்சினைகளைப் பற்றி ஏற்பட்டதாகும். உயர்நீதி மன்றத்தின் எதிர்ப்பு, நிலையான இடுக்கண் ஆகிவிட்டதுடன், நன்றன்றித் தீமை பயக்கவல்ல அரசாங்கத்திற்கு உண்மையான தடையாயுமிருந்தது. மன்னரின் தலைவியாரான டு பாரியால் மன்னருடைய சினம் தூண்டப்பட்டது. பிரான்சு உயர்நீதி மன்றத்தின் செயல்களை 17 ஆம் நூற்றாண்டிலிருந்து ஆங்கிலேயப் பாராளுமன்றத்துடன் அவ்வம்மையார் ஒப்பிட்டதுடன் ஆங்கில மன்னரான முதலாம் சார்லசின் உருவப்படத்தைக் காட்டி மன்னரிடம் 'உங்களுடைய உயர்நீதி மன்றமும் உங்களது தலையைக் கொய்துவிடும்,' எனக் கூறினர்.

## உயர்நீதி மன்றம் அழிக்கப்படுதல்

முடிவில் மன்னர் கடுமையான நடவடிக்கை எடுப்பதாக முடிவு செய்தார். உயர்நீதி மன்றத்து உறுப்பினர்கள் கைது செய்யப்பட்டு நாடு கடத்தப்பட்டார்கள். அவர்களுடைய நீதி மன்றங்கள் அழிக்கப்பட்டுவிட்டதாக அறிக்கை வெளியிடப்பட்டது. பிரான்சில் மிகவுயர்ந்த நீதி மன்றமாயிருந்த அதற்குப் பதிலாக மன்னருடைய புதிய நீதி மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவற்றுக்கு, உயர்நீதி மன்றத்

துக்கிருந்த பொது விவகாரங்களில் தலையிடுவது போன்ற பழைய (1771) அதிகாரங்கள் இல்லாமலிருந்தன.

## பதினைந்தாம் லூயியின் செல்வாக்கும் மரணமும்

1774-ல் பதினைந்தாம் லூயி மரணமடைந்தார். ஐரோப்பாவில், ஒப்படைக்கப்பட்ட நாட்டிற்குத் தீமை பயக்கும் வகையில் வேறெந்த மன்னரும் அவரைப் போன்று ஆட்சி புரியவில்லை. இயற்கையில் அவர் கொடியவரல்லர். பிரான்சின் வளர்ச்சி அல்லது நலத்தைக் கெடுக்கவும் அவர் விரும்பவில்லை; ஆனல், தம்மைப்பற்றியும் தம் முடைய இன்ப வாழ்வலும் குறியாயிருந்தார். சோம்பலும் மனம் போல நடப்பதும் அவரிடம் குடிகொண்டிருந்தன. அடுத்து வரவிருப்பதைப் பற்றி அறிந்துகொள்ள அவர் முயலவில்லை. அப்பொழுது நடந்த முறை நெடுநாள் நீடிக்காது என்ற ஐயம் அவரிடமிருந்தது. அவருடைய வாழ்நாள் முழுவதும் அம்முறை நீடித்திருத்தலே போதுமானது என எண்ணினர். 'எனக்குப் பின் பிரளயம்' என்று அவர் கூறினரென்பது சொல்லப்படுகிறது. அவரது மரணத்திற்குப் பின் பிரளயம் ஏற்பட நீண்ட காலமாகவில்லை.

### பிரெஞ்சுப் புரட்சிக்கு முந்திய மன்னராட்சியின் இயல்புகள்

பிரான்சின் நிகழ்ச்சிகளைப் பற்றி விவரிக்குமுன், பதினைந்தாம் லூயி கூறிய பிரளயம் ஏற்படுவதற்கு முன் நாட்டின் நிலைமையைப் பற்றி இங்கு நோக்குவது நலமாகும். பிரெஞ்சுப் புரட்சிக்கு முந்திய மன்னராட்சி என்பதுபற்றி பல நூல்கள் எழுதப்பட்டுள்ளன. ஆயினும், அவற்றின் ஒரு சில பக்கங்களோடு நமது நோக்கை நிறுத்திக்கொள்ளவேண்டும். பிரான்சில் நாம் காண்பது எவ்விதத் திலும் தனிமையானதாகவோ அல்லது அதற்கு முன் மாதிரியில்லாத நிலைமையிலிருந்ததாகவோ இருக்கவில்லை. மேற்கு ஐரோப்பாவில் பல நாடுகளில் இந்நிலையைப் போன்ற நிலைகள் இருந்தன. மேலும், பல நாடுகளில் இத்தகைய கோளாறுகள் அதிக தீவிரமாகவும் கொடுமை யுடனும் காணப்பட்டன. போலந்து, அல்லது ஸ்பெயின், அல்லது தென்ஜெர்மனியிலிருந்த சில நாடுகளிலிருந்து குடியானவர்கள் பிரான்சிற்குக்கொண்டு போகப்பட்டிருந்தால் அங்கு அவருடைய நாட்டைக்காட்டிலும் மேலான சமூக நிலைமையும் அவனுக்குப் பழக்க மானதைவிட அதிகமான சுதந்தரமும் இருப்பதைக் கண்டிருப்பர். பிரெஞ்சு மக்களுடைய துன்ப மிகுதி மட்டும் தானகவே புரட்சியைத் தோற்றுவித்து விடவில்லை. நாம் சற்றுத் தாழ்த்திக் கருதவேண்டி யுள்ள வேறு காரணங்களும் அதற்குத் துணையாயிருந்தன.

## பிரெஞ்சுத் துரைத்தனத்தின் வரம்பின்மை

**அதனுடைய எதிரிகள் வீழ்த்தப்பட்டார்கள்**

பிரான்சின் துரைத்தனம் வரம்பிலா ஆட்சியாயிருந்தது; துருக்கி நீங்கலாக, ஐரோப்பாவில் காணப்பட்ட மிக்க வரம்பிலா ஆட்சியாக அது மதிக்கப்பட்டது. இவ்வாட்சி ஒரு சமயம் மக்களின் பிரதிநிதித் தன்மை வாய்ந்ததாயிருந்தது. பிரான்சின் தேவைகளுக்கு உயர்குடியாட்சி அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட மன்றம் சாதித்த அளவைவிட, மேலானதாக உதவி செய்ததில் அதன் வலிமை காணப்பட்டது. அதன் வரம்பின்மை நிலேத்திருந்தது. ஆனுல், சமூக, தேசீயப்பணிகள் ஆற்றுவது நின்றுவிட்டது. எனவே, மக்கள் அவர்களுடைய விவகாரங்களுக்காக வாதாடும் வீரனை அதைக் கருதவில்லே. தவிர அது வரலாற்று அடிப்படையில் பெரும் பகையாயிருந்த உயர்குடி ஆட்சியோடு இணேக்கப்பட்டிருந்தது. மானிய முறையிலிருந்த பிரபுக்களின்மீது வெற்றி பெற்றிருந்தது. அதனுடன் ஒரு காலத்தில் பிரான்சிற்குச் சொந்தமாயிருந்த எல்லாப் பிரதிநிதித்துவம் வாய்ந்த நிறுவனங்களேயும் அழித்தது; அல்லது கட்டுப்படுத்தியது. முப்பேராயம் மறைந்து போய்விட்டது.

## அதனுடைய நிலேயின்மை

மாநில எஸ்டேட்டுகள் உண்மையிலோ அல்லது பெயரளவிலோ அழிக்கப்பட்டன. முனிசிபல் நிறுவனங்கள் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ் வந்தன. பிராட்டஸ்டென்டு சமயமும், ஜேன்சனியமும் துன்புறுத்தப்பட்டன. கத்தோலிக்கத் திருச்சபையும், 1516-ல் ஏற்பட்ட ஒற்றுமைப் பத்திரத்தால் அரசருடைய கொள்கைக்குத் துணேக் கருவியாக மாற்றப்பட்டது. வரம்பிலா ஆட்சிவலிமையாய் இருக்கும்பொழுது சில காரியங்களுக்கு மிகச் சிறந்ததாய் அது இருந்தது. ஆனுல், வலிமையற்று இருக்கும் பொழுது மிகவும் நிலே யற்றதாகும். பிரெஞ்சு முடியாட்சி இவ்வலிமையற்ற நிலேக்கு வந்துவிட்டது. பதினன்காம் லூயியினுடைய ஆட்சியின் பிற்பகுதியில் இம்மாறுதல் வருவதற்கான அறிகுறிகள் இருந்தன. ஆனுல், அதனுடைய வளர்ச்சி 15ஆம் லூயியின் ஆட்சிக் காலத்தில் விரைவாய் இருந்தது. அவருடைய துரைத்தனம் நாட்டுப் பற்றையோ, ஆட்சிக்கு உதவியான நிறுவனங்களேக் கவனமாகத் தேர்ந்தெடுப்பதில் திறமையையோ அல்லது வெற்றியையோ கொண்டதாய் இல்லே. எனவே, நாட்டில் ஒரே ஒரு நிறுவனந்தான் எல்லாவற்றையும் ஆட்சி செய்தது. அந்த நிறுவனம் ஊழலாகவும், வீழ்ச்சியை அடைந்து கொண்டும் இருந்தது.

## மானிய முறையின் அழிவுகள்

எல்லாவற்றையும்விட, பிரான்சின் அரசியல் நிலைமை நிலையற்று இருக்கும்பொழுது அதனுடைய சமூக நிலையும் மிகப் பழமையானதாயும், பகுத்தறிவற்றதாயும், கொடுமையாயுமிருந்தது. புரட்சிக்கு முன் பிரான்சின் சமூக நிலைமை மானிய முறையில் அமைந்திருந்ததெனச் சிலவமயங்களில் புனைந்துரைக்கப்பட்டுள்ளது. ஆனால், இக்கூற்றுத் தவறு. மானிய முறை என்பதைக் கூர்ந்து நோக்கின், முன்னர் ஓரதிகாரத்தில் கூறப்பட்டிருப்பது போல, ஐரோப்பாவில் மற்ற விடங்களைவிடப் பிரான்சில் முற்றிலும் அழிக்கப்பட்டு விட்டது புலனாகும். ஜெர்மனியையும் இங்கிலாந்தையும் விடப் பிரான்சில் பிரபுக்கள் மிகக் குறைந்த அரசியல் அதிகாரத்தைப் பெற்றிருந்தார்கள். ஆனால், நாடு மானிய முறையின் அழிவினாலும், நிறுவனங்களாலும், உரிமைகளாலும் பீடிக்கப்பட்டிருந்தது. இவை ஒரு காலத்தில் பிரெஞ்சுப் பிரபுக்கள் உண்மையாகத் துரைத்தனத்தை நடத்திய பொழுது பாதுகாத்துக்கொள்ளத் தக்கனவாயிருந்தன. ஆனால், முடியாட்சி வெற்றி பெற்று, பிரபுக்கள் அவர்களுடைய எஸ்டேட்டு களிலிருந்து (ஜமீன்) நீக்கப்பட்டு வெர்சயில்ஸ் அல்லது பாரிசு நகரத்தில் தங்கும்படி நேர்ந்தது முதல் இவை கொடுமைகளாகவே இருந்தன.

## சிறப்புரிமை பெற்ற மக்கள் வகுப்புக்கள்

பிரபுக்களுடைய நீதித் தொடர்பான உரிமைகளும், நிதித் தொடர்பான சிறப்புரிமைகளும், மானிய முறையின் முக்கியமான பழைய சின்னங்களாயிருந்தன. பிரபுக்கள் அவர்களுடைய ஜமீன் களில் வசித்தவர்களது சில நீதித்தொடர்பான உரிமைகளைக் கொண்டிருந்ததோடு, அவற்றை நிறைவேற்றவும் செய்தார்கள். வரி விதிப்பதில் அவர்கள் சிறப்புரிமை பெற்ற வகுப்பாயிருந்தார்கள். சிறப்புரிமை பெற்ற வகுப்பாய் அவர்கள் மாத்திரமன்றி, குருமார்களும் அவர்களோடு சேராத பெரும்பான்மையான செல்வந்தர்களும் அதே நீதித் தொடர்பான சிறப்புரிமைகளை விலைக்கு வாங்கினார்கள். முன்பிருந்தது போலச் சிறப்புரிமை பெற்ற வகுப்பைச் சேர்ந்தவர்கள் நேரிடையாக வரி விதிப்பதிலிருந்து விலக்களிக்கப்படவில்லை. பதினான்காவது லூயியின் காலத்திலிருந்தே நாட்டின் சுமையின் ஒரு பகுதியை அவர்கள்மீது சுமத்துவதற்கு முயற்சிகள் செய்யப்பட்டன. அவர்கள் ஆயத்தீர்வை, சுங்கத் தீர்வை இவைகளில் அவர்களுடைய பங்கைச் செலுத்தினார்கள். சில சொத்து வரிகளைச் செலுத்துவதினின்றும் அவர்கள் தப்பவில்லை. ஆனால், அவர்களுக்குச் சொந்த உபயோகத்திற்கென இருந்த எஸ்டேட்டுகளுக்கு வரி விதிப்பதிலிருந்து விலக்கு

அளிக்கப்பட்டிருந்தது. நவீன ஐரோப்பாவில் எந்நாட்டிலும் அவர்களுக்கு நிகராய் இருந்த வகுப்பார்கள் செலுத்திய வரியைவிட மிகக் குறைந்த பங்கைத்தான் அவர்கள் செலுத்தி வந்தார்கள். அவர்கள் மீது விதிக்கப்படாத வரிகள் குடியானவர்கள்மீது விதிக்கப்பட்டன. குடியானவர்களைப்பற்றி இப்பொழுது நாம் காண்போம்.

## குடியானவர்களின் நிலைமை

### உழுதொழில் முதலாளிகள்

அடிமைத்தனம் முழுவதும் பெரும்பாலும் பிரான்சிலிருந்து மறைந்துவிட்டது. நிலத்தில் வேலை செய்வதற்கு அன்றுடம் வேலை செய்பவர்கள் ஏராளமாயிருந்தார்கள். மெடாயர்கள்[1] அல்லது முதலாளிகள் எனப்பட்ட சிறு விவசாயிகளுக்கு நிலம் சொந்தமாயிருந்தது. அன்றுடம் வேலை செய்கிறவர்கள் நிலத்தின் சொந்தக்காரர்களுக்கு விளைவில் ஒரு விகிதத்தை வாரமாகக் கொடுத்தார்கள். அவர்கள் பொதுவாக ஏழைகளாயும் மனக்குறையுடையவர்களாயுமிருந்தார்கள். ஆனல், பிரான்சின் விவசாயத்தில் நிலச் சொந்தக்காரர்களான முதலாளிகள் மிகவும் குறிப்பிடத்தக்க பண்பு பெற்றிருந்தார்கள். நிலத்தின் பெரும்பகுதி அவர்கள் வயமிருந்தது. புரட்சி ஏற்படுவதற்குச் சற்று முன் பிரான்சிற்கு வந்த ஆங்கிலக் குடியானவரான ஆர்தர் யங்[2] என்பவர், நாடு சிறு கூறுகளாகப் பிரிக்கப்பட்டிருந்ததையும் அதன் விளைவாக அவர் நம்பியவாறு நலமற்றதும் பயன் தாராப் பண்ணைகளாயிருந்ததையும் கண்டு வருந்தினர். புரட்சி தோன்றுவதற்கு முன்னர் ஏற்பட்ட ஒழுங்கற்ற இயக்கங்களில் அக்குடியானவர் மும்முரமாக ஈடுபட்டனர். அவர்களுடைய மனக்குறைகளின் காரணங்களை அறிந்துகொள்ளுவது கடினமானதன்று. அவர்கள் பயிரிட்ட நிலங்கள் அவர்களுக்குச் சொந்தமானவை. அவற்றை விற்கவும், மரண உயில் சாசனம் மூலம் பிறருக்கு வழங்கவும் முடியும். ஆயினும், இவ்வாறு செய்யமுடியாதவாறு நிலங்களுக்குப் பல தன்னிச்சையானதும் துன்புறுத்தலைக் கொண்டதுமான தடைகள் ஏற்பட்டிருந்தன. சில சமயங்களில் சில மானியப் பிரபுக்களுக்குத் தானிய அரிகளில் குறிப்பிடப்பட்ட எண்ணிக்கையையோ, அல்லது குறிப்பிட்ட கோழிக்குஞ்சுகளையோ, அல்லது ஆடுகளையோ செலுத்த வேண்டியிருந்தது. சில நேரங்களில் மானியப் பிரபுக்களுக்குச் சொந்தமாயிருந்த மில்களில் அவர்களுடைய தானியத்தை அரைத்துக்கொள்ள வேண்டியிருந்தது; அல்லது முதலாளிகளுடைய திராட்சை பிழியும் இயந்திரத்தில் திராட்சைப் பழங்களைப் பிழிந்துகொள்ள வேண்டியிருந்தது. இவைகளைக் காட்டிலும் பிரான்சினுடைய வேட்டையாடும்

[1] Metayers. [2] Arthur Young.

சட்டங்கள் மிகக் கொடுமையாயிருந்தன. இச்சட்டங்களின்படி குடியானவர்கள் நிலங்களுக்கு அருகில் வசித்த பிரபுக்களுடைய பெரிய சிறிய வேட்டை மிருகங்கள் அவர்களுடைய நிலங்களின்மீது படையெடுத்துப் பயிர்களை அழிப்பதையேற்றுக் கொள்ளுமாறு கட்டாயப் படுத்தப்பட்டார்கள். இவை போன்ற பல இடையூறுகள் பிரான்சின் பழைய மானிய முறையின் சின்னங்களாயிருந்தன. துரைத்தனத்தைப் பிரபுக்கள் நடத்திய காலத்தில் இவை அறிந்துகொள்ளக் கூடியவைகளாயும் ஆதரிக்கக் கூடியவைகளாயுமிருந்தன. ஆனல், முடியாட்சியால் மானிய முறை ஒழிக்கப்பட்ட பின்னரும், பிரபுக்கள் அநேகமாகப் பாரிசு அல்லது வெர்சயில்ஸ் நகரங்களில் நிலையாகக் குடியேறிய பின்பும் இக்கடமைகள் சற்றும் பொருத்தமற்றனவாயிருந்தன.

## உரிமையற்றவர்களின்மீது அரசாங்க வரிகள்

### டெய்லி வரி

மானிய முறைப்படி செலுத்தப்பட வேண்டியவைகளாலும் கட்டுப்பாடுகளாலும் ஏற்பட்ட துன்பம் மிகவும் அதிகமாயிருந்தது. இதைவிட அரசாங்கத்தால் விதிக்கப்பட்ட வரிகளின் சுமை அதிகமாயிருந்ததும் முக்கியமான காரணமாகும். நகரங்கள் பெரிதளவில் இவற்றிலிருந்து தப்பித்துக்கொண்டன. நாட்டுப்புற மாவட்டங்களிலும் அங்கு வசித்தவர்களும் உரிமையற்றவர்களுமான குடியானவர்கள்மீது இச்சுமை அதிகமாக்கப்பட்டிருந்தது. அரசாங்கத்திற்கு குடியானவர்கள் செலுத்த வேண்டிய வரிகள் கடுமையாயிருந்தன. வரி விதிப்பது, வசூல் செய்வது முதலியவைகளில் பின்பற்றிய முறை தேவைக்கு அதிகமான அளவு மனக்கசப்பை உண்டு பண்ணின. முக்கிய வரிகளாவன: 15ஆம் நூற்றுண்டு முதற்கொண்டே அரசாங்கம் டெய்லியை [1] அதன் முக்கிய வருவாய் மூலமாகக் கருதி வந்தது. இது உரிமையற்றவர்களுடைய வீடுகள், நிலங்கள் போன்ற சொத்துக்களின்மீது விதிக்கப்பட்ட வரியாகும். வரி விதிப்பை மத்திய அரசாங்கம் செய்தது. இன்டன்டென்டுகளும் அவர்கள் ஏஜென்டுகளும் வரி வசூலிப்பதற்காகப் பிரான்சைப் பல மாவட்டங்களாகப் பிரித்துக்கொண்டார்கள். இம்முறை வரி கொடுப்போர்களால் குறிப்பாக வெறுக்கப்பட்டது. வீடு அல்லது நிலம் நன்கு பராமரிக்கப் பட்டுள்ளதாக அறிகுறி தென்பட்டால் வரி நோக்கப்படி உயர்த்தப் பட்டது.

[1] Taille.

## காபெலி வரி

புரட்சிக்கு முன் பிரான்சிற்கு வந்த பார்வையாளர்கள் புனைந்துரைத்துள்ளவாறு கிராமங்களின் மிகத் தாழ்மையுற்ற நிலை ஓரளவு வறுமையாலும் வறுமையின் தோற்றத்தைப் பயன்படுத்திக்கொண்டு வரி செலுத்துவதிலிருந்து தப்பித்துக்கொள்ளும் எண்ணத்தாலும் ஏற்பட்டிருந்ததாகக் கருத வேண்டும். அடுத்து முக்கியமானது காபெல்லி [1] எனும் வரியாகும். நேர்மையாகக் கூறுவோமானால், இது ஒரு வரியாகாது; அரசாங்கத்தின் வசமிருந்து வந்த முற்றுரிமையான உப்பு வரியாகும். அரசாங்கந்தான் உப்பு வியாபாரம் செய்ய முடியும். எனவே, ஒவ்வோர் ஆண்டிலும் குறிப்பிட்ட அளவு உப்பு வாங்கும்படி ஒவ்வோர் ஆடவர், பெண்டிர், குழந்தையையும் கட்டாயப்படுத்தியது. விலை அரசாங்கத்தால் அதன் விருப்பப்படி குறிப்பிடப்பட்டது. அதனுடன் மாவட்டத்திற்கு மாவட்டம் விலை அதிக வேறுபாடுடையதாயிருந்தது. உப்பு விலை குறைவாயிருந்த பகுதிகளிலிருந்து அதிக விலையாயிருந்த பகுதிகளுக்குக் கள்ள வழியில் கடத்தப்பட்டது. இது இடைவிடாது நடந்துகொண்டிருந்தது. உப்புக் கள்ளக்கடத்தலுக்காகக் குற்றம் சாட்டப்பட்டவர்கள் சிறைகளில் நிறைந்திருந்தார்கள். மற்றொரு வரி முறை கோர்வீ [2] எனப்படும். இதன்படி அரசாங்கம் குடியானவர்களைக் கட்டாயமாக வேலை செய்யும்படி செய்தது. இது மிகவும் குறைந்து போயிற்று. புரட்சி ஏற்படுவதற்கு முன், கட்டாய வேலை வாங்குவதானது மனக்கொதிப்பிற்கு இடமளித்ததே தவிர துன்பத்தை விளைவிக்கும் சுமையாயிருக்கவில்லை.

## வரிச்சுமை

வரிகளின் மொத்தச் சுமையும் மானிய முறைப்படி செலுத்தப்பட வேண்டியவைகளும் குடியானவர்களுக்கு மிகவும் அதிகமாயிருந்தன. சில மாவட்டங்களில் குடியானவர்கள் வருவாயில் 55 சதவீத விழுக்காடு அரசாங்கத்திற்கு வரியாகச் செலுத்தினர்கள் என்பது கணக்கிடப்பட்டுள்ளது. எனவே, குடியானவர், அரசாங்கமே தொல்லைகளுக்குக் காரணம் எனக் கருதினர்; அரசாங்கத்தைக் கவிழ்ப்பதிலும் எல்லாவிதக் கட்டுப்பாடுகளிலிருந்தும் தன்னிச்சையாக வரி விதிப்பதிலிருந்தும் நிலத்தை விடுவித்துக்கொள்ளுவதிலும் பேருக்கம் கொண்டிருந்தனர். எனவே, புரட்சி இயக்கத்தின் தொடக்கத்தில் அவர்கள் ஏன் அவ்வளவு விருப்பத்துடன் ஒத்துழைத்தார்கள் என்பதை அறிவது எளிதாகிறது.

[1] Gabelle. [2] Corvee.

## அரசாங்கத்துக்குப் பரவலான எதிர்ப்பு

இயக்கத்தின் தொடக்கத்தில் குடியானவர்களே பெரும்புரட்சி செய்பவர்களாயிருந்தார்கள். ஆனால், நாட்டில் உண்மையிலேயே கன்செர்வேட்டிவ் (பழமையில் பற்றுடையவர்) வகுப்பார் இல்லை. நகர மக்களிடம் புதிய கருத்துக்கள் நிரம்பியிருந்தன. வாணிக வகுப்பினர் அரசாங்கத்தால் அவர்கள்மீது விதிக்கப்பட்டிருந்த தடைகளால் சினமுற்றிருந்தனர்; இங்கிலாந்தில் காணப்பட்ட வாணிக வியாபாரச் செல்வப் பெருக்கைக் கண்டு சுயேச்சையைக் கோருவதில் ஊக்கம் பெற்றனர். உயர் குடியாட்சியுங்கூடப் பொருமை எண்ணங்களுடன் முடியாட்சியைக் கருதியது. குருமார்களில் மேல் பதவியைச் சேர்ந்தவர்கள் நாட்டின் நிலைமையைப் பரிவுடன் ஆதரித்தார்களாயினும், கோயில் குருமார்களுட் பெரும்பாலார் மாற்றத்தை விரும்புவதில் இரக்கம் கொண்டிருந்தனர்.

## அறிவு இயக்கம்

நாட்டில் நிறுவப்பட்டிருந்த திருச்சபையையும் அரசாங்கத்தையும் கவிழ்த்துச் சிறந்த மனிதப் பண்புள்ள சமுதாயத்தை நிறுவுவதற்காகப் பல பக்கங்களிலும் பரவிக் கொண்டிருந்த புதிய கருத்துக்களைப் பற்றிக் கவனிப்போம். எப்படியும் ஒருவிதமாற்றம் ஏற்படத்தான்செய்யும் போல இருந்தது. பழைய அரசாங்க முறைகள் பழுதாகிக் கொண்டிருந்தன. நடைபெறக் கூடிய சீர்திருத்தங்களைச் செய்ய வற்புறுத்துவதற்குரிய நியாயமான மனக்குறைகள் மக்களிடம் இருந்தன. ஆனால், புரட்சி அக்காலத்திலிருந்த எழுத்தாளர்களால் தூண்டப் பெற்று வேகம் கொள்ளும்படி செய்யப்பட்டது. இவ்வெழுத்தாளர்கள் பொதுவாகப் பிரெஞ்சு மக்களை அப்பொழுது நிலவிய முறையில் வெறுப்புக் கொள்ளச் செய்ததுடன் பிரான்சு மறுபிறப்பை எய்தும் சாத்தியக் கூறுகளில் நம்பிக்கையையும் உறுதியான எண்ணத்தையும் கொள்ளுமாறும் தூண்டினார்கள். உலக வரலாற்றில் இலக்கிய எழுத்தாளர் - திருச்சபை அல்லது அரசாங்கம் இவற்றுள் எதிலும் அரசாங்கப் பதவி கொள்ளாத எழுத்தாளர் - மக்களுடைய எண்ணங்களிலும் செயல்களிலும் அவ்வளவு செல்வாக்கைப் பெற்றிருந்த வேறு சகாத்தம் இல்லையென ஒருவாறு கூறலாம். எனவே, பதினைந்தாம் லூயியின் ஆட்சியினிறுதியில் இச் செல்வாக்கின் தன்மையை ஆராய்வது தேவையாகிறது.

## இயக்கத்தின் பொதுவான போக்கு

இவ்வியக்கம் பல பக்கங்களிலிருந்தது. அக்காலத்தில் மிகச் சிறந்து விளங்கியவர்களும் இவ்வியக்கத்தைச் சேர்ந்தவர்களுமான

எழுத்தாளர்கள், ஜெர்மனி, இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடு களைச் சேர்ந்தவர்களாவார்கள். இவ்வியக்கத்தின் முக்கியப் போக்குகள் பின்வருவன:

## புரட்சிகரமானது

**மனிதத்தன்மை—வரலாற்றுக்குமுரணானவை**

முதலாவதாக எழுத்தாளர் அனைவரும் நிறுவப்பட்டிருந்த முறைக்கு எதிரிகளாயிருந்தனர். சிலர் கன்சர்வேட்டிவ் (மாற்றத்தை விரும்பாத) குணத்தைக் கொண்டிருந்தனர். சிலர் புரட்சிக்காரரா யிருந்தனர். ஆனால், எல்லோருமே திருச்சபையும் அரசாங்கமும் நிறுவப்பட்டிருந்த முறையை வெறுப்பதில் ஒத்திருந்தனர், இரண்டாவ தாகக் காணப்பட்டது அதனுடைய மனிதத் தன்மையாகும். எல்லா நிலையங்களும் மனிதத்தன்மையாகிய நீதிமன்றத்தின்முன் கொண்டு வரப்பட்டன. விலக்கின்றி எல்லா எழுத்தாளர்களுமே சமயத்துன் புறுத்துதலையும், கொடுமையான பழிக்குப்பழி வாங்கும் தண்டனை விதித்தலையும், சட்ட விசாரணையில் சித்திரவதை செய்வதையும், புரட்சிக்கு முந்திய மன்னராட்சியில் காணப்பட்ட எல்லாக் கொள்கை களையும் மிக வன்மையாகக் கண்டித்தார்கள். எல்லா எழுத்தாளர்களும் இடைக்காலத்து ஐரோப்பாவின் வரலாற்று உண்மைகளை வெறுப் புடனும் பகைமையுடனும் பாராமல் விடுத்தார்கள் என்பது மேற் கொண்டு குறிப்பிடத்தக்கதாகும். இடைக்காலத்து நிகழ்ச்சிகளை நாகரிகமற்றவைகளாகவே பேசுவதற்குப் பழகியவர்கள் பண்டைக் கால உலகத்திலிருந்த கிரீஸ், ரோம் இவைகளைப்பற்றிக் கண்மூடித்தன மான ஆர்வத்துடன் கருதினர். கிரீஸ், ரோம் இவற்றுடைய வரலாற் றிலும் நிலையங்களிலும் சாதாரணமாகப் பல தவறுகள் இழைக்கப்பட் டிருந்தன. பரம்பரைக் கதை, திறனும் சிந்தனையின்றி வரலாறென ஏற்றுக்கொள்ளப்பட்டது. தவறுதலான எண்ணமின்றி அக்காலத்து எழுத்தாளர்கள், வீரத்திற்கும் குடிப்பண்பிற்கும் புளூடார்க்கின்[1] கிரேக்க ரோமானியரின் வாழ்க்கைகள் என்ற நூலிலிருந்தும், ரோமானியப் பேரரசைப் பற்றி டாஸிடஸ்[2] எழுதியுள்ள அச்சத்தை விளைவிக்கக் கூடிய காட்சிகளிலிருந்தும் வல்லாட்சிக் கொடுங் கோன்மை பற்றியவைகளையும், பண்டைய வரலாற்றின் விளக்கமாகவும் படிப்பினையாகவும் கொண்டனர். பிரான்சில் மக்களிடையே கல்வியறிவு பரவியிருக்கவில்லை. எனவே, அக்காலத்தில் எழுந்த மெய்யறிவு பற்றிய எழுத்துக்கள் எளிய முறையிலும் மக்களால் போற்றப்படும் முறையிலும் எழுதப்பட்டிருந்தும் மக்களில் உயர்வகுப்பிலும் நடுத்தர வகுப்பிலும் மாத்திரம் சுற்றோட்டம் கொண்டிருந்திருக்க வேண்டும்.

[1] Plutarch. [2] Tacitus.

ஆனுல், பழக்கத்திற்கு வந்த கருத்துக்களை ஓர் எல்லைக்குள் அடைத்து வைக்க இயலாது. நிலையாயிருந்தவைபற்றியத் திறனுய்வும் புதிய சகாத்தம் பற்றி மனத்தில் கொள்ளப்பட்ட தெளிவற்ற எண்ணங்களும் பிரான்சில் பல பக்கங்களிலும் பரவலாயின.

## வால்டேர்

### உணர்வு ஒளிர் அறிவூட்டு

வால்டேர்[1] (1694-1778) பதினெட்டாம் நூற்றுண்டின் பிரெஞ்சு இலக்கியத்தில் மிகச் சிறந்த பெயராகும். மிகவும் தெளிவான நடையில் எப்போதும் வெற்றி காணும் சொல்திறனுடனும், ஒளிவிளக்கத்துடனும் எழுதப்பட்டவைகளான கதை, வரலாறு, தத்துவம், செய்யுள், நாடகம் போன்ற எல்லாத் துறைகளிலும் வால்டேரின் படைப்புக்கள் விரிவுற்றிருந்தன. உயர்ந்த நோக்கைப் பரப்புவதும், அவர் காலத்திலிருந்த சமய நம்பிக்கைகள் நிலையங்களைத் தாக்குவதும், அவரது வாழ்க்கையின் குறிக்கோளாயிருந்தன. அவர் சமயத்துன்புறுத்தலைக் குறிப்பாகத் தாக்கினுர். சமயச் சகிபுத்தன்மை, அவரைக்காட்டிலும் பயனுள்ள வேறொரு தலைவரை இதற்கு முன் கொள்ளவில்லை. அரசியல் சமூக விடயங்களில் அவரது உறுதி நிலை தெளிவில்லாதிருந்தது. பிரெஞ்சு முடியாட்சி வலிமையற்று ஊழல் நிறைந்து காணப்பட்ட போதிலும் ஜனநாயகத்தை அவர் விரும்பவில்லை. அவர் பிரஷ்ய மன்னரான மகா பிரெடரிக்குடன் ஆட்சியின் முற்பகுதியில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். அவர் பிரான்சிற்கு வலிமை பொருந்தியதும், பழிசஞ்சாததும், இரக்கமில்லாததுமான வரம்பிலா ஆட்சியை உயர் நோக்குடனும் மனிதத் தன்மையுடனும் நடத்துவதற்குப் பிரடெரிக்கைப் போன்ற மன்னரை விரும்பியதாகத் தெரிகிறது.

## மான்டெஸ்க்யூ

சுருக்கமாக வரைவதில் மற்றொருவரான மான்டெஸ்க்யூ[2] (1689-1755 குறிப்பிடத்தக்கவர் ஆவர். அவர் 'சட்டங்களின் நோக்கம்' என்னும் தமது உயர்ந்த நூலில் அரசாங்கத்தைப் பற்றிய வரலாற்றுப் படிப்பினைகளைத் தொகுத்துக் கூறியுள்ளார். இங்கிலாந்தின் நிலையங்களின் மீது அவருக்கு இருந்த மதிப்பு அவருடைய கருத்துக்களில் அதிகமான செல்வாக்குப் பெற்றிருந்தது. சுயேச்சையான சம அளவான உயர்குடியாட்சியைப் பிரான்சில் காண்பதற்கு அவர் விரும்பியிருப்பார். அரசியற்கோட்பாட்டிற்குச் சிறப்பாக அவர் அளித்தது, அரசாங்கத்தில் நீதி, நிருவாகம், சட்டமியற்றுதல் இவை

[1] Voltaire. [2] Montesquieu,

தனித்தனியாகப் பிரிக்கப்படவேண்டும் என்று வற்புறுத்தியதேயாகும். இக்குறிப்புப் பற்றிக் கூறும் அதிகாரங்கள், ஐக்கிய அமெரிக்கநாட்டின் அரசியல் சட்டத்தை தயாரிப்பதிலும் 1791-ல் நடந்த பிரெஞ்சு அரசியற்சட்டத்தை உருவாக்குவதிலும் பெருஞ்செல்வாக்குப் பெற்றிருந்தன.

## ரூஸ்ஸோ

ஊக்கம்

இவ்விருவரைக்காட்டிலும் உடனடியாகச் செல்வாக்குப் பெற்றிருந்த மற்றொருவர் ரூஸ்ஸோ[1] (1712-1778) என்பவர். அவர் மற்றவர்களைக்காட்டிலும் பல விடயங்களில் தனிச்சிறப்புக் கொண்டிருந்தார். வால்டேர், மான்டெஸ்க்யூவின் பகுத்தறிவையும் சிறப்புக் கொள்கையையும்விட அவரது மனவெழுச்சியின் இயல்பு உண்மையில் ஓங்கியிருந்தது. பல கூறுபாடுகளில் அக்காலத்துப் போக்குகளை அவர் எதிர்த்து நின்ருர். இயற்கையை நோக்கும்படி பிரசாரம் செய்தார்; புகழ்பெற்ற 'இயற்கையை நோக்கல்' என்ற சொற்ருெடரின் ஊக்கத்தைக் கொண்டு தாழ் குடும்பம் முதல் மேல்குடி வரையில் பரவியிருந்த கல்விமுறையை மாற்றுவதற்கு விரும்பினர். எந்த உருவிலும் வைதிகக் கிறித்துவச் சமயத்தை உதறித் தள்ளினர். கடவுள் நம்பிக்கையை விடாப்பிடியாகக் கொண்டிருந்ததோடு நற்செய்தி பரப்பும் ஆர்வத்துடனும் நாட்டில் பரப்பினர்.

## 'சமூக ஒப்பந்தம்'

அவரது அரசியற்கொள்கைகளை அவருடைய பல்வேறு நூல்களிற் காணலாம். ஆனல், 'சமூக ஒப்பந்தம்'[2] என்ற சிறு நூலில் அக்கொள்கைகள் சுருக்கிக் கூறப்பட்டுள்ளன. அச்சிறு நூல் அவர் காலத்திலும், அதையடுத்து வந்த தலைமுறையினரின்மீதும் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தது. எனவே, அது புரட்சியின் புனித நூல் என வழங்கப்படுகிறது. அந்நூலில், எல்லா அரசாங்கங்களும் மக்களிடத்திலேதான் தோன்றின என்றும், தெய்விக உரிமை கொண்டாடிய முடியாட்சியிலோ அல்லது மக்களுக்கும் மன்னர்களுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தின் வழியோ அல்ல என்றும் திட்டவட்டமாகக் கூறுகிருர்; தொடக்கத்தில் அதிகாரம் மக்களிடத்திலேதான் இருந்தது என்றும் எப்போதும் அது மக்களுக்கே உரிமையானதென்றும் நிலைநாட்டினர். மக்களிடமிருந்து அரசாங்கங்கள் தோன்றுவதால் அரசாங்கங்களை நீக்க மக்களுக்கு உரிமையுண்டென்றும்,

[1] Rousseau. [2] Social Contract.

அவர்களுக்கு ஏற்ற அரசாங்கத்தை நிறுவியபின் அவ்வரசாங்கத்தி னுடைய அதிகாரத்திற்கு அரசியல் சமயவிடயங்களில் எல்லையமைக்க முடியாதென்றும் எடுத்துரைத்தார். ஒரு சமயம் கொடுமையான புரட்சிக் கொள்கைகளைப் பரப்பியதாகத் தோன்றுகிற போதிலும், அவர் நூலில் மற்றொரு பகுதியை வல்லாட்சியின் பயனாக ஏற்பட்ட செய்கைகள் நியாயமானவையென்று நிலைநிறுத்துவதற்குப் புரட்சித் தலைவர்கள் மேற்கோளாகக் காட்டினார்கள், நூலிற் காணப்பட்ட கொள்கைகளும், அவைகளைத் தெளிவாக இயம்புவதற்குப் பின்பற்றிய எழுத்தின் நடையும், சுருங்கக் கூறின்—வாக்கியங்களாக அமைந் திருந்ததால்—அக்காலத்து மக்கள் மீது அந்நூல் பெருஞ் செல்வாக்கை யடைந்தது எனலாம்.

## முடிவு

இறுதியாக, பிரான்சில் புரட்சி தோன்றுவதற்கு முந்திய காலத்தை எண்ணும்போது மற்ற நாட்டினரைக் காட்டிலும் பிரெஞ்சு மக்கள் பெரிதும் துன்புற்றிருந்தார்கள் என எண்ணக் கூடாது. ஆனால், மக்கள் அவர்களுடைய துன்ப நிலையை நன்கு அறிந்திருந் தார்கள். துன்பத்திற்குக் காரணமாயிருந்தவைகளை ஒழித்துவிட முடியும் என்ற உறுதியான எண்ணம் அவர்களுக்கு ஊக்கமளித்தது. எனினும், தோற்றத்தில் வலிமையுள்ளதாகக் காணப்படுவதும் உண்மையில் வலிவற்றிருந்ததுமான அரசாங்கத்தை நேருக்கு நேராகக் கண்டார் கள். அதனுடன் இதை ஒழித்துக் கட்டுவதற்குக் கலகச் சத்திகள் தலையெடுத்துப் போரிலிறங்க வேண்டும் என்பதையும் கண்டார்கள்.

*பிரான்சை பற்றிய சாதாரணமான வரலாறுகளுடன் டெயின் எழுதிய 'பிரெஞ்சுப் புரட்சிக்கு முந்திய கால முடியாட்சி,' டி, டோக்குவில், எழுதிய 'பிரெஞ்சுப் புரட்சிக்கு முந்திய கால முடியாட்சியும் புரட்சியும்'; ஆர்தர் யங் எழுதிய 'பிரான்சில் யாத்திரைகள்' ; ஜான் மார்லி எழுதிய 'வால்டேரும் ரூஸ்ஸோவும்'; ரூஸ்ஸோவி னுடைய 'சமூக ஒப்பந்தம்'; (எச். ஜே. டோஸரின் மொழி பெயர்ப்பு) லெக்கியின் 'இங்கிலாந்து வரலாறு,' 20-ஆம் அதிகாரம்; ஆக்டன் பிரபு எழுதியுள்ள 'பிரெஞ்சு புரட்சிப் பற்றிய விரிவுரைகள்' என்பன படிக்க வேண்டுவனவாகும்.*

# 14. பிரெஞ்சுப் புரட்சி

## பதினாறும் லூயியும் மேரியா அன்டாயினட்டும்

1774-ல் பிரெஞ்சு மன்னராய் வந்த பதினாறும் லூயி, நாட்டை யாண்ட மன்னர்களுள் மிகவும் நல்லெண்ணம் உடையவராயிருந்தார். அவர் பதினைந்தாம் லூயியினுடைய அவையின் தன்மையை அருவருப்புடன் பார்த்திருக்கிறார்; அதனுடன் அக்காலத்தில் நிலவிய மக்கட் பணிக் கொள்கைகளால் ஊக்குவிக்கப்பட்டிருந்தார்; பிரான்சையும் ஆஸ்திரியாவையும் ஐரோப்பாவின் நடவடிக்கைகளில் பொதுவாக ஒன்றாகச் சேர்க்க வேண்டும் என்ற எண்ணம் நிலவியபோது ஆஸ்திரியா இளவரசியாரான மேரியா அன்டாயினட்டு என்பாரை மணந்து கொண்டார். அரசியார் தம் கணவரை விட மிக்க வலிமையும் மனவுறுதியும் உடையவராயும் அறிவிற் சிறந்தவராயும் விளங்கினார். ஆனால், பிரான்சிற்கு அவர் புதியவராகவேயிருந்தார். பிரான்சின் பிரச்சினைகளையோ துரைத்தனத்தையோ அரசியார் அறிந்து கொள்ளவில்லை. தவிர கணவர்மீது அவருக்கிருந்த செல்வாக்கு, தீமை பயப்பதாயிருந்தது. தொடக்கத்திலிருந்தே, அவர் வெளிநாட்டினர், ஆஸ்திரியாவைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால் மக்களால் வெறுக்கப்பட்டார். இறுதியில், அவர் புரட்சியின் மிகக் கடுமையான எதிரியாகக் கருதப்பட்டதற்கு ஓரளவு உண்மையிருந்தது.

1774-ல் நிதி நிலைமை மிகவும் மோசமாயிருந்தது. பிரான்சிற்கு ஏராளமான கடன் இருந்தது. ஆண்டுதோறும் அக்கடன் வளர்ந்து கொண்டேயிருந்தது. முன்னதிகாரத்தில் நாட்டின் மன நிறைவற்ற நிலையின் காரணங்களை அறிந்தோம். சிறப்புரிமை காரணமாகச் செல்வந்தர்கள் நாட்டின் வரிச்சுமையை ஓரளவு ஏற்றுக்கொள்ளுவதிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கும் வரை, பிரான்சின் நிதிநிலையை நிறைவுறுமாறு அமைப்பதென்பதும் நாட்டின் தேவைக்கு வேண்டிய வருவாயைப் பெறுவதென்பதும் இயலாதனவாகும். செல்வத் தொடர்

பான சிறப்புரிமைகளை ஒழிப்பதன் தேவையிலும், இதைப் பெறுதற்காகச் செய்யப்பட்ட பல முயற்சிகளிலும் இவர் ஆட்சியின் முற்பகுதியில் ஏற்பட்ட தடைகளைக் காண வேண்டும்.

## டர்கோ

பதினாறும் லூயி நியமித்த முதல்அமைச்சர் குழு, பாராட்டும் வகையில் அமைந்திருந்தது. அதன் முக்கிய உறுப்பினர் டர்கோ[1] என்பவர், அவர் ஓர் எளிய மாநிலத்தைச் சேர்ந்த மாவட்டத்தில் நன்கு துரைத்தனம் செய்தவர் எனப் புகழ் பெற்றிருந்ததோடு அக்காலத்து மெய்யறிவுக் கொள்கைகளிற் பரிவுகொண்ட எழுத்தாளராயும் சிறப்புற்றிருந்தார். பதினாறும் லூயி, அவர்தம் மூதாதையாரான பதின்மூன்றும் லூயி ரிச்சிலூவை ஆதரித்தது போல, டர்கோவை ஆதரித்திருப்பாராஞல், சமாதான முறையில் பெரிய சீர்திருத்தங்களைச் செய்திருக்கலாம்; தொடர்ந்து நிகழ்ந்த புரட்சிச் சோதனைகளிலிருந்து பிரான்சும் தப்பியிருக்கலாம். சிறப்புரிமைகளை நீக்கவும், பிரான்சின் நல்ல அரசாங்கம் ஏற்படவும் பல திட்டங்களை டர்கோ வெளியிட்டார். சில சீர்திருத்தங்களும் செய்யப்பட்டன. ஆனால், அரசியாரின் ஆதரவுடன் நடந்த அரசாங்க உட்கிளர்ச்சிகள் அவருக்கு எதிர்ப்பாயிருந்தன. மன்னரும் மனமில்லாமல் அவரைப் பதவியிலிருந்து நீக்கினர்.

## நெக்கர்

### அமெரிக்கப் போர்

அடுத்து நெக்கர்[2] என்பார் நிதி அமைச்சராய்ப் பதவியேற்றார். அவர் ஜினிவாவைச் சேர்ந்த பாங்க்கர்; பிராட்டஸ்டென்டு சமயத்தவர். அவரை அமைச்சர் பதவியில் நியமித்தது பற்றி அரசியற் சட்டத் தொடர்பான தொல்லைகள் எழுப்பப்பட்டன. அவர் டர்கோவைப் போன்ற பெரிய சீர்திருத்த எண்ணம் கொண்ட அரசியல் வாதியல்லர்; ஆனால், சிறந்த நிதியாளர்; சிக்கன முறையாலும் திறமையுடனும் கடன் பெறுதலையும் நாட்டின் வரவு செலவுகளைச் சரிக்கட்டுதலையும் ஓரளவு செய்தார். அவர் பதவியிலிருந்த காலை இங்கிலாந்துடனும் அதைச் சேர்ந்த வடஅமெரிக்காவிலுள்ள கலகஞ்செய்த குடியேற்ற நாடுகளுடனும், பிரான்சு போரிலிறங்க நேர்ந்தது. பிரான்சிற்கு அப்போர் பெருவெற்றியாயிருந்தது. நிலத்திலும் கடலிலும் இங்கிலாந்து தோல்வியுற்றது. குடியேற்ற நாடுகளும் அவை இருந்த நிலைமையில் பிரெஞ்சு அரசாங்கம் உதவியளித்திராவிடில் ஒரு போதும் வெற்றி அடைந்திருக்க முடியாது. ஆனால், இவ்வெற்றி முடியாட்சியின்

[1] Turgot. [2] Necker.

நிலைமையை வலுவடையச் செய்வதற்கோ, அல்லது கடந்த ஆட்சியில் இராணுவத் தோல்வியினுலேற்பட்டதை மாற்றியமைத்தற்கோ உதவி செய்யவில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வெற்றியில் பிரான்சு விழிப்பாயிருந்ததே தவிர, அதன் படைகளைப் பற்றிக் கருதவில்லை. ஜனநாயகமும் குடியரசும் தோன்றியதைப் பேரார்வத்துடன் படைகள் வரவேற்றன. வெற்றிக்கு உதவியாயிருந்த அரசாங்கத்தை ஆதரிப்பதற்குப் பதிலாக, படைகள் அட்லான்டிக்குக் கடலுக்கப்பால் வெற்றிகரமாயிருந்த கருத்துக்களைப் பிரான்சிலும் இறக்குமதி செய்வதில் தீவிர எண்ணங் கொண்டவையாயிருந்தன. மற்றொரு வழியிலும் முடியாட்சியின் நோக்கத்திற்கு ஊறுவிளைந்தது. நிதி நிலையை ஈடு செய்ய நெக்கர் கையாண்ட முறைகள் சமாதான காலத்திலேதான் வெற்றியளிப்பனவாகும். போர் வெற்றியைத் தேடியிருந்தும், பிரான்சைப் பெருஞ்செலவில் ஆழ்த்திவிட்டது.

## நெக்கரின் வீழ்ச்சி

### முப்பேராயத்தைக் கூட்டக் கோரிக்கை

நெக்கருடைய சிக்கன முறைகள் முற்றிலும் பயனற்றனவாயின. அவரும் சிறப்புரிமை பெற்றிருந்தவர்மீது வரிவிதிக்கப்பட வேண்டும் என்ற முடிவிற்கு வந்தார்; மேற்கொண்டு நடவடிக்கை எடுத்துக்கொள்வதன்பொருட்டு, பிரான்சின் பொருளாதார நிலையைக் குறிக்கும் முழு விவரங்களை வெளியிட்டார். இதன் பயனுக அவருக்கும் முன்பு டர்கோவுக்கு ஏற்பட்ட அதே எதிர்ப்பு ஏற்பட்டது. அதனுல், அவர் 1784-ல் பதவியிலிருந்து ஓய்வு பெறநேர்ந்தது. நிதி நிருவாகம் மிகத் தாழ்வுறும் நிலைக்கு வந்தது. சில காலம் மிகவுயர்ந்த வட்டிக்கு எல்லையில்லாமல் கடன் வாங்கி அரசாங்கம் நடைபெற்றது. இதுவும் இயலாமற்போகவே, மன்னர், அரச ஆணைகளை வெளியிடுவது வாயிலாகப் பிரான்சில் எல்லா வகுப்பினரின்மீதும் வரி விதிக்க முயன்ருர். இவ்வாறு செய்ததில் மன்னர் தம் முன்ஞேர்கள் இதற்கு முன் செய்ததைப் போலவே செய்தார் என்பது மறுக்க முடியாததாம். ஆனுல் முடியாட்சி முன்பிருந்ததைப் போல இருக்கவில்லை. மன்னரின் தன்மையாலும், எதிர்ப்பில் நம்பிக்கை வளர்ந்துகொண்டு வந்தது காரணமாகவும் அரசாங்கம் வலிமையற்றிருந்தது. மன்னர் பட்டமடைந்தவுடன் மீண்டும் புத்துயிர் பெற்று நிலைத்த பாரிசின் உயர்நீதி மன்றம் தனது நிதியாணைகளை எதிர்த்ததையும் கண்டார். உயர்நீதி மன்றத்தின் எதிர்ப்பைப் பிரான்சு மக்களுட் பெரும்பகுதியினர் ஆதரித்தனர். இக்குழப்பங்களுக்கிடையில் மக்களும் ஆலோசனையிற் கலந்துகொள்ள வேண்டுமென்றும் முப்பேராயத்தை முன்பு போலவே கூட்ட வேண்டுமென்றும் எழுந்த கூக்குரல் அடிக்கடி ஒலித்துக்கொண்டிருந்தது. பிரான்சின் மூன்று இனங்களுடைய பிரதிநிதிகளின் பழைய

சபையாயிருந்த முப்பேராயம், 1614க்குப்பின் கூட்டப்படவில்லை. அச் சபையின் அமைப்பும் வேலைகளும் மக்களுக்கு நன்கு தெரியாத நிலையி லிருந்தன. முப்பேராயமும் பொதுவான பிரதிநிதிகளின் சபையாய் அமைந்திருந்ததென்பது தெரிந்திருந்தது. எனவே, மக்கள் அதன் மீட்சியை வற்புறுத்தினர்கள். ஓர் அளவு வலிமைக்குறைவாலும், பிரெஞ்சு மக்களின் ஆதரவைப் பெற்றிருந்த கட்சியின் நோக்கங்களில் பரிவு கொண்டிருந்ததாலும், மன்னர், நிலையாக வளர்ந்துகொண் டிருக்கும் வேண்டுகோள்களுக்கு இணங்கத் தீர்மானித்தார்; நெக்கரை மீண்டும் ஆலோசனை சபையில் அமர்த்தினர்; முப்பேராயத்தைக் கூட்ட முன்னேற்பாட்டுடன் இருப்பதாயும் அறிவித்தார்.

## 1789-ல் கூடிய முப்பேராயம்

இத்தீர்மானத்தை மக்கள் பேரார்வத்துடன் வரவேற்றூர்கள். மன்னரும் மக்களிடையே பெருமதிப்புள்ளவர் ஆனர். முதன்மையாக இரு பிரச்சினைகள் தீர்க்கப்பட வேண்டியிருந்தன. முதலாவது, சிறப்புரிமை கொண்டவர்களான குருமார்கள், உயர்குடிப்பிறந்தோர் இவர்களுடைய எண்ணிக்கையைப் போலப் பொதுமக்கள் பிரதிநிதி களின் எண்ணிக்கை ஒரே எண்ணிக்கையாய் இருக்கவேண்டுமா அல்லது இருமடங்காய் இருக்க வேண்டுமா என்பதாம். நெக்கரின் அறிவுரைப்படி இரட்டிப்புப் பிரதிநிதி என்று வழங்கப்பட்ட பொது மக்களின் உரிமைக்குச் சாதகமாக மன்னர் முடிவு செய்தார். 'பிரதி நிதிகள் சபையில் எங்கே அமருவது? எப்படி வாக்களிப்பது?' என்ற பிரச்சினைகள் முடிவு செய்யப்படாமலிருந்தன. அவர்களும் ஒருங்கு சேர்ந்து அமர்ந்து ஒவ்வொரு பிரச்சினையையும் சாதாரணமான அதிக வாக்களிப்பு வாயிலாக முடிவு செய்வதா (இப்படிச் செய்வதில் பொது மக்களின் பிரதிநிதிகள் குருமார்களின் பேருதவியாலும் உயர்குடிப் பிறந்தோரின் சிறு உதவியாலும் எதையும் சாதிக்க முடியும்) அல்லது மூன்று அறைகளில் தனித்தனியே அமர்ந்து ஒவ்வொரு பிரச்சினை யையும் தனித்தனியாகப் பெரும்பான்மை வாக்களிப்பு மூலம் முடிவு செய்வதா என்பது பிரச்சினையாய் இருந்தது.

## தேசீயச் சட்ட மன்றம் (சட்டசபை)

பிற்கூறப்பட்டது போல நிகழுமாயின், இரட்டிப்புப் பிரதி நிதித்துவம் என்பது பெருங்கேலிக்கூத்தாவதோடு சிறப்புரிமை பெற்றிருந்த இனத்தார்கள் நாட்டின்மீது அவர்களுடைய முடிவைத் திணிக்கும் நிலைமையும் ஏற்படும். இரண்டாவது பிரச்சினை, 1789 மே மாதம் 5ஆம் நாள், குருமார்கள், உயர்குடிப்பிறந்தோர், பொது மக்களின் பிரதிநிதிகளாக ஆயிரத்து இருநூறு பிரதிநிதிகள் வெர்சயில்ஸ்

நகரில் ஒருங்கு கூடியபொழுது முடிவுசெய்யப்படவில்லை. நிகழ்ச்சிகளைத் தொடங்கி வைத்த மன்னரின் பேச்சு நன்னம்பிக்கையை அளிப்பதாயிருந்தது. ஆயினும், வாக்களிப்பு முறையைப் பற்றி முடிவு செய்யப்படாதவரை ஒன்றும் செய்ய முடியாதென்பது தெளிவாயிற்று. முப்பேராயங்களுக்குள் நடந்த பேச்சு வார்த்தைகள் பயனளிக்கவில்லை. பிரான்சில் பொதுவான ஆதரவு, விண்ணப்பங்கள் இவைகளைக் கொண்டு தங்களுக்கு வலிமை கிடைத்துள்ளதெனப் பொதுமக்கள் எண்ணினார்கள். குருமார்களிலும் பெரும்பாலார் பொது மக்களின் பக்கம் சேர ஆயத்தமாயிருப்பதாக அறிவித்தனர். நீடித்த பேச்சு வார்த்தைகள், தயக்கங்களுக்குப் பின், 1788 ஜூன் 17ஆம் நாள் பொதுமக்கள் தாங்களாகவே தேசீயச் சட்ட மன்றம் எனப் பெயர் வைத்துக்கொண்டு பிரான்சுக்கு அரசியற்சட்டத்தைத் தயாரிப்பதில், சிறப்புரிமை பெற்றிருந்தவர்கள் ஒத்துழைத்தாலும் ஒத்துழைக்காவிட்டாலும், தொடர்ந்து பணியாற்றுவார்கள் என்பதை அறிவித்தார்கள்.

## மிராபோ

இச்சட்டத்தால் மூன்றாவது எஸ்டேட்டான (பொதுமக்கள்) நாட்டு மக்கள் அனைவரும் செயல் புரியும் உரிமையைக் கொண்டாடினர். இத்தருணத்தில் மன்னர் குறுக்கிட நேர்ந்தது. அரசவையிலுண்டான போட்டிச் சச்சரவுகளால் முடியாட்சி அடிக்கடி கட்சி மாற்றம் செய்ய வேண்டிய நிலையிலிருந்து வந்தது. ஆனால், இவ்வமயத்தில் அரசர் பிரதிநிதிகளிடம் சென்று தம்முடைய முடிவை வெளியிடத் தீர்மானித்தார்; அதிகமான சீர்திருத்தங்களைச் செய்வதாக வாக்குறுதி செய்தார்; அதனுடன் பிரான்சில் முப்பேராயம் நிலையான நிலையமாயிருக்க வேண்டுமென்பதை அறிவித்தார்; ஆனால், முப்பேராயம் மூன்று மன்றங்கள் கொண்டதாக அமைக்கப்படும் என்று விளம்பரம் செய்தது வாயிலாக எல்லாவற்றையும் கெடுத்துக்கொண்டார். பொது மக்கள் மிகச் சிறந்த பேச்சு வன்மையுடையவரும் உறுதியான அரசியல் வாதியுமான மிராபோ[1] என்பாரின் தலைமையில், சிறப்புரிமை பெற்றவர்களுக்கு அதிகாரத்தையளிக்கும் யோசனையை எதிர்ப்பதாக முடிவு செய்தனர். மிராபோ உயர்குடிப்பிறந்தோராயினும், பொது மக்கள் பக்கம் சேர்ந்திருந்தார். மன்னர், மக்களிடத்தில் இரக்கம் காரணமாகவும் வலிமையின்மை காரணமாகவும் அவருடைய அதிகாரத்தை எதிர்த்துத் தெளிவாகத் தொடங்கிய கலகத்தையடக்கப் படையைப் பயன்படுத்த விரும்பவில்லை. அவர் தைரியமாகப் பேசியிருந்தும், சில நாள்களிலேயே பொதுமக்கள் அவர்களது முயற்சிகளில் முழு வெற்றி கண்டார்கள்.

[1] Mirabeau.

## மன்னர் கீழ்ப்படிந்ததன் காரணங்கள்

உயர்குடிப் பிறந்தோரிலும், குருமார்களிலும் பலர் தாமே பொது மக்கள் பக்கம் சேர்ந்தனர். மற்றவர்களையும் அவ்விதமே செய்யுமாறு மன்னர் கூறினர். அம்மாத முடிவில் பிரான்சின் ஆயிரத்து இருநூறு பிரதிநிதிகள் அல்லது கூட்டத்திற்கு வர விரும்பியவர்கள் எல்லோரும் ஓர் அறையிற்கூடி, அரசியற்சட்டத்தைத் தொகுக்க விழைந்தார்கள். ஒவ்வொரு பிரச்சினையும் சாதாரணப் பெரும்பான்மையால் தீர்மானிக்கப் பட்டது. மக்களின் ஆதரவைப் பெற்றிருந்த கட்சி சட்டசபையில் முடிவான ஏற்றத்தைப் பெற்றிருந்தது. மன்னர் வியக்கத்தக்க முறையில் நிபந்தனையின்றிக் கீழ்ப்படிந்தார். இதன் அடிப்படையான காரணத்தை நாட்டின் நிதி நிலைமையிற் காண வேண்டும். எப்படி யாகிலும் மன்னர் பணத்தைப் பெற்றாக வேண்டும். சாதாரண முறை களைப் பின்பற்றி முன்னைய ஆட்சியில் பணம் பெறுவது முடியாமற் போயிற்று. மக்களுடைய உதவியைக் கொண்டே கடன் தீர்க்கும் ஆற்றல் பெறுவதை எதிர்பார்க்க முடியும். மக்களுடைய உதவியும் இப்போது அவர்களால் பெறப்பட்ட வரையறைகளை நீக்கிப் பெற முடியாததாயிற்று.

## பாஸ்டைலின் வீழ்ச்சி

ஆனால், மன்னர் நிபந்தனையின்றிக் கீழ்ப்படிந்ததென்பது பெரி தளவு வெறுந்தோற்றந்தான். அவருடைய தோழர்கள் நாள்தோறும் இடருடன் கூடியதாய்ப் பாரிசில் வளர்ந்துகொண்டிருந்த இயக்கத்தைப் படைகளைக் கொண்டு அடக்குமாறும் நடவடிக்கை எடுக்குமாறும் வற்புறுத்தினர்கள். இறுதியில் அவர் இவ்வற்புறுத்தலுக்கு இணங்கின ரென்பது தோன்றியது. படைகள் செல்வதற்கான உத்தரவு அளிக்கப் பட்டது. பாரிசு நகரத்தைச் சுற்றிப் பல இராணுவத்தின் பகுதிகள் ஒரு முனைப்பாயின. துரைத்தனத்தில் சிறந்த ஆற்றலை வெளியிடா தவரும், ஆனால் பாரிசு மக்களிடையே மதிப்புள்ள வீரராய்த் திகழ்ந்தவரு மான நெக்கர், பதவியிலிருந்து நீக்கப்பட்டு, நாடறிந்த உயர்குடிப் பிறந்தோர்களும் பிற்போக்குக் கொள்கைகளைக் கொண்டிருந்தவர்களும் அவருக்குப் பதிலாக அமர்த்தப்பட்டார்கள். இந்நிகழ்ச்சிகளின் செய்தி பாரிசை எட்டியதும் ஒரு பெரிய எதிர்ப்புப் புயல் வீசத் தொடங் கியது. நகரம் முழுவதும் அரசியற்பரபரப்புடனும் குழப்பத்துடனும் குமுறிக்கொண்டிருந்தது. சட்டசபை பன்னிரண்டு மைல்களுக்கப்பால் வெர்சயில்ஸில் கூடியிருந்தது. ஆனால், பாரிசில் மாரட்டு[1] கமிலீ

[1] Marat.

டிஸ்மோலின்ஸ்[1] போன்ற அரசியல் வாதிகளும் மக்களின் மனத்தைக் கவரும் நாவலர்களும் இருந்தார்கள். அவர்கள் மக்களைத் தலைமை பூண்டு நடத்திச் செல்வதில் திறமை வாய்ந்தவர்கள். பாரிசில் தங்கியிருந்த போர் வீரர்களுட்பலர், மக்கள் கட்சியிற்சேரலாயினர்; போர்க் கருவிகள் சேமித்து வைக்கப்பட்டிருந்த கிடங்கைத் தாக்கி வசப்படுத்திக் கொண்டனர். அதன் பின் ஜூலை 14-ல் மக்கள் திரள், பாஸ்டைல்[2] எனும் பெரிய கோட்டையைத் தாக்க விரைந்தது. அக்கோட்டை இராணுவ முக்கியத்துவம் வாய்ந்ததாயிருக்கவில்லை. சிறிய படை அதைக் காத்திருந்தது. அரசியற்கைதிகளல்லாத ஒரு சிலர், அங்குச் சிறையிலடைத்து வைக்கப்பட்டிருந்தனர். ஒரு நூற்றுண்டிற்கு முன் அது மிக்க புகழ் பெற்ற சிறையாய் விளங்கியது; அரசு, வரம் பின்மைக்கு அடையாளமாயிருந்தது. தக்க முறையில் இராணுவப் பாதுகாப்பு ஏற்படுத்தப்பட்டிருந்தால், பாரிசு நகரை அடக்குவதற்குப் பயன்படுத்தியிருக்கலாம். நெடுநாள், அதற்கேற்பட்ட தாக்குதலை எதிர்த்துப்போராடியிருக்கவும் முடியும். ஆனால், கோட்டைக்குள் சேமித்து வைக்கப்பட்டிருந்த உணவுப் பொருள்கள் குறைவாயிருந்ததுடன் அங்கு வைக்கப்பட்டிருந்த படையில் பாதிகலகம் செய்வதாயுமிருந்தது. படைத் தலைவரிடம் மன்னரே வரையறையின்றி அடைக்கலமடைந்துவிட்டதாக அறிவிக்கப்பட்டது. பிற்பகலில் படைத் தலைவர் தம்முடைய உயிரும் படைகளின் உயிரும் காப்பாற்றப்பட வேண்டும் என்ற வரையறையோடு கலகக்காரர்களிடம் புகலடைய முடிவு செய்தார். அவ்வாறே வாக்குறுதி அளிக்கப்பட்டது. ஆனால், படைத் தலைவரும் அவர் அதிகாரிகளும் கோட்டையிலிருந்து வெளியே அழைத்துச் செல்லப்படுகையில் கட்டுக்கடங்காத கூட்டம் பாதுகாப்பு எல்லையை மீறித் தாக்கி அவர்களைக் கொன்றது.

## பாரிசில் மன்னர்

பாஸ்டில் வெற்றிகரமாகத் தாக்கப்பட்டதால், மன்னரும் அவர் தோழர்களும் உடனே துணுக்குற்றார்கள். மக்களின் மதிப்பைப் பெருத அமைச்சர்கள் விலக்கப்பட்டு, நெக்கரே மீண்டும் பதவியிலமர்த்தப் பட்டார். இது முடியாட்சியின்மீது புரட்சி இயக்கம் பெற்ற முதல் வெற்றியாகும். சில மாதங்களுக்குப் பின், 1789 அக்டோபரில், முக்கியமானதும் இவ்வெற்றிக்குச் சரி நிகரானதுமான மற்றொரு வெற்றியை அடைந்தனர். தொடக்கத்திலிருந்தே பாரிசு மக்கள், மன்னர் அங்கேயே தங்கியிருத்தலை விரும்பினார்கள். ஆனால், இதுவரை மன்னர் வெர்சயில்ஸிலிருந்த அரண்மனையை விட்டு வருவதற்கு மறுத்தார். அக்டோபர் மாதம் 5-ம் நாள் பாரிஸில் உணவுப் பஞ்சத்தைக் குறித்து

[1] Camille Desmoulins. [2] Bastille.

மகளிர் செய்த ஆர்ப்பாட்டம் வெர்சயில்ஸ் அரண்மனையைத் தாக்குவதற்கு இயக்கமாக உருவாக்கப்பட்டது. ஓரளவு ஆயுதந் தாங்கிய ஒரு பெருங்கூட்டம் வெர்சயில்ஸையடைந்து, மன்னரைப் பாரிசில் வந்து தங்கும்படி கேட்டுக்கொண்டது. மன்னர் ஐயத்திற்கிடமான பதிலையளித்தார். அக்டோபர் 6-ஆம் நாள் கூட்டம் அரண்மனைக்குள் கட்டுமீறி நுழைந்து மன்னரும் அரசியாரும் வசிக்கும் அறைகளையடைந்தது. ஒரு சிறிது நேரம் மன்னரும் அரசியாரும் பேராபத்தில் சிக்குண்டனர்.

சமீபத்தில் அமைக்கப்பட்ட தேசீயக் காவற்படையின் தலைவரான லாஃபேயட்டு[1] அங்கு விரைந்து வந்ததன்பயனாக, உடனடியான ஆபத்தினின்றும் பாதுகாக்கப்பட்டனர். லாஃபேயட்டும், பாரிசு நகர மன்றத்தினிடமிருந்து மன்னர் பாரிசிற்கு வந்து அங்கேயே தங்க வேண்டும் என்ற அதே வேண்டுகோளை மன்னரிடம் அறிவித்தார். டியூலரீசு[2]விருந்த பாரிசு அரண்மனை, அவரை வரவேற்க முற்றிலும் முன்னேற்பாட்டுடன் இருக்கவில்லையாதலால், மன்னர் எப்பொழுதும் போலவே பாரிசுக்குச் செல்ல மனமில்லாதவராயிருந்தார். அதனுடன், அங்கு சென்றால் நடைமுறையில் கைதியாய் இருக்க வேண்டுமென்பதையும் உணர்ந்தார். ஆனால், போக மறுத்தால், மீண்டும் வல்லந்தச் செயலைத் தூண்டும் என்று கருதிய மன்னர் அக்டோபர் 6-ம் நாள் பிற்பகலில் குடும்பத்தாருடன் பாரிசிற்குச் சென்று டியூலரீசு அரண்மனையில் தங்கலாயினர். இதுமுதல் வரவர மக்களின் கைதியாயிருந்து வருவதை மன்னர் அறிந்தார்; எனவே, எல்லாவற்றிற்கும் மேலாக அவ்விடமிருந்து தப்புவதைப் பெரிதும் விரும்பினார்.

## அரசியல் நிர்ணய சபை

இந்நிகழ்ச்சிகளின் பயனாகப் புரட்சி சிறிது காலம் எவ்விதத் தலையீடுமில்லாமல் கவலையின்றி இருந்தது. சட்டசபையும், 'அரசியல் நிர்ணய சபை' என்ற பெயர் பூண்டு அதனுடைய அறிவிக்கப்பட்ட நோக்கமான பிரான்சின் அரசியற்சட்டத்தைத் தொகுத்து முந்தைய மன்னாட்சியின் வரம்பில்லாத் தன்மையையும் உயர்குடிப்பிறந்தோரின் சிறப்புரிமைகளையும நீக்கும் வேலையில் அதன் விருப்பப்படி ஈடுபடுவதில் முனைந்தது. அரசியற்சட்டத்தைத் தொகுத்தலைச் செய்யுமுன் மனிதனின் உரிமைகள் என்ற கோட்பாடு வெளியிடப்பட்டது. இவ்வுரிமைப் பேரறிவிப்பில் ரூஸ்ஸோவின் போதனைகளின் செல்வாக்கைத் தெளிவாகக் காணலாம். இப்பேரறிவிப்பில் எல்லா மனிதரும் பிறப்பில் சுதந்தரத்துடன் உரிமைகளில் ஏற்றத்தாழ்வில்லாது சமமானவர்களென்னும்

[1] Lafayette. [2] Tuileries.

அரசாங்கத்துடைய முடிவு, சுதந்தரம், சொத்து இவைகளைக் காப்பாற்று வதும் எதிர்ப்பை எதிர்த்துப் பாதுகாப்பை அளிப்பதும், நாட்டின் சட்டங் களை இயற்றுவதில் எல்லாக் குடிமக்களும் நேரிடையாகவோ அல்லது பிரதிநிதிகள் மூலமாகவோ பங்கெடுத்துக்கொள்ள உரிமையுண்டு என்பதும், இறைமைக்கு இருப்பிடம் நாட்டு மக்கள் எனினும், நாட்டு மக்களின் பிரதிநிதியென்ற முறையிலே தாம் முழு அதிகாரத்தையும் செலுத்த முடியுமென்பதும் உறுதியாக்கப்பட்டன.

## சமயச் சட்டம் இயற்றுதல்

அரசியற்சட்டத்தை இயற்றும் வேலை சரியாகத் தொடங்கிய பொழுது ஆங்கிலேய அரசியற்சட்டத்தின் பொதுவான வழிகளைப் பின்பற்றினர். பதினாறும் லூயி தம் முன்னோர்கள் பிரெஞ்சு ஆட்சியில் கொண்டிருந்த பதவிக்கு மாறாக அவருடைய நிலையை வெகுவாகக் குறைக்கக் கூடியதாய் இருந்த போதிலும் ஆலோசனைக்காகக் கூறப் பட்ட மாறுதல்களில் பலவற்றை ஏற்றுக்கொள்ளுவதற்கு விருப்ப முடையவராயிருந்தார். ஆனால், புதிய அரசியல் சட்டத்திற் காணப் பட்ட ஒரு பகுதி அவருக்குப் பேரிடி போன்றிருந்தது. திருச்சபையின் துரைதனம் முழுவதையும் மீண்டும் அமைப்பதைச் சட்டசபை மேற்கொண்டது. மேற்றிராணியார்களின் அதிகார வட்டங்கள் மாற்றியமைக்கப்பட்டன. குருமார்களின் வருவாய் ஓரளவு சமன் செய்யப்பட்டது. குருமார்களில் மேலோரையும் கீழோரையும் நியமிக்கும் அதிகாரம் போப்பாண்டவர், மன்னர் இவர்களிடமிருந்து நீக்கப்பட்டு விட்டு, பல்வேறு சமயக் கருத்துக்களைக் கொண்டிருந்த பொது வாக்காளர்களின் முடிவிற்குக் கொண்டுவரப்பட்டது. இம்மாறுதல்கள், புரட்சியின் சிறப்புத்தன்மையான சமத்துவம், ஜனநாயகம் (மக்க ளாட்சி) என்ற கொள்கைகளின் வாசனையைக் கொண்டிருந்ததால் போப்பாண்டவர் இவைகளை வெறுத்ததுடன் இறுதியில், சீர்திருத்தக் காரரின்மீது தண்டனை ஆணையை விதித்து அக்குற்றத்திற் காளானவர்களை எல்லாம் சமய விலக்குச் செய்தார். அவ்வாறிருந்தும், இவற்றை ஏற்றுக்கொண்டதாகக் கையொப்பமிடும்படி நேர்ந்ததால் மன்னரது உள்ளம் மிகவும் துன்புற்றது. பாவச் செயல் என்று அவர் கருதியவற்றை மாற்றுவதற்கான தக்க காலம் விரைவிலேயே ஏற்படுமென நம்பியிருந்தார்.

## மன்னரின் சண்டை

### அரசியற்சட்டம் முற்றுப் பெறுதல்

பாரிசில் மன்னருடைய நிலை வரவரக் கடினமாகிக்கொண்டிருந்தது. மேடைப் பேச்சாளர்களும் பத்திரிகைகளும் அவருடைய எண்ணங்களைப்

பற்றி ஐயங்கொள்ளத் தொடங்கியதுடன் புரட்சியின் பகைவர் என்றும் அவரைத் தூற்றத் தொடங்கினர். போரிடுவதைப்பற்றி மன்னர் நெடுநாளாகவே எண்ணினர். அரசியார் மேரியா அன்டாயினெட்டும் இதை வற்புறுத்தினர். வடகிழக்கிலிருந்த படைகளின் போர்த் தலைவருடன் ஏற்பாடுகள் செய்துகொண்டதுடன், அப்பகுதிகளில் படைகளின் பாதுகாப்பைப் பெற்று அரசியற்சட்டத்திற் சில மாறுதல்களைச் செய்ய உத்தரவிடக் கருதினர்; 1791 ஜூனில் பாரிசிலிருந்து தப்பினர். ஆனால், பாதுகாப்பான இடத்தை நெருங்கியபொழுது, கண்டுபிடிக்கப்பட்டுக் கைது செய்யப்பட்டுப் பாரிசிற்குக் கொண்டுவரப் பட்டார். நிலைமை மிகத் தாழ்வுற்றிருந்தது. எனினும், இறுதியில் சட்டசபை, அரசியற்சட்டம் முற்றுப் பெற்றவுடன், மன்னரிடத்தில் அளிக்கப்படவேண்டும்; அவர் ஏற்றுக் கொண்டால், சட்டம் அளிக்கும் அதிகாரங்களைக்கொண்டு அவர் ஆட்சிபுரிய வேண்டுமென்பதும்,ஏற்றுக் கொள்ள மறுத்தால், அதுவே பதவியைத் துறப்பதற்குச் சமமாகும் என்பதும் ஏற்பட்டன. அவ்வாறிருந்தும், பாரிசில் இருந்த பல அரசியல் வாதிகள் இம்முறை எவ்வித நற்பயனையும் அளியாதென நம்பி மன்னரைப் பதவி நீக்கம் செய்து, குடியரசு என அறிவிக்குமாறு வற்புறுத்தினர். மனுத் தயாரிக்கப்பட்டு அதில் கையெழுத்திட்டு ஆதரிப்பதற்காக, ஒருபெருங் கூட்டம் கூடிற்று. தேசியக் காவற் படைகள், இக்கூட்டத்தைக் கலைத்தன. தொடர்ந்து ஏற்பட்ட குழப்பத்தால் பலர் உயிரிழந்தனர். 1791 செப்டெம்பரில் அரசியற் சட்டம் இயற்றுவது இறுதியாக முற்றுப் பெற்றது. பிரான்சில் மன்னராட்சி நடைபெறுவது என்றும், அமைச்சர்களை நியமிக்கும் அதிகாரமும் நிலப்படை கப்பற்படை இவைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரமும் மன்னருடைய உரிமைகளாக்கப்பட்டன. ஆனால், நிலையாகச் சட்டமியற்றுதலைத் தடை செய்யும் அதிகாரம் இல்லையென்பது ஏற்பட்டது. சட்டமியற்றும் வேலை 750 பேர் கொண்ட சட்டசபையிடம் ஒப்படைக்கப் பட்டது. இதன் உறுப்பினர்கள் குறிப்பிட்ட அளவு சொத்துரிமை கொண்டிருந்தவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். தேர்ந்தெடுக்கத் தகுதியைப்பெற்றவர்களில் குடியானவர்கள் இடம் பெற்றனர்கள். ஆனால், நகரங்களில் வேலைபார்க்கும் தொழிலாளிகளில் பெரும்பாலார் விலக்கப் பட்டனர். தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை ஒரே சபையைக் கொண்டிருந்ததுடன் இரண்டு ஆண்டுகளுக்கு நீடிக்க வேண்டும் என்பதும் ஏற்பட்டது. பிரான்சின் ஸ்தல அரசாங்கமும் திருத்தியமைக்கப்பட்டது. வரலாற்று நினைவுகளுடன் அமைந்திருந்த பழைய மாகாணங்கள் அகற்றப்பட்டு அவற்றுக்குப் பதிலாக எண்பத்துமூன்று சிறிய பிரிவுகளாக அமைக்கப்பட்டன. இவைகளுக்கு ஆறு, அல்லது மலை, அல்லது இயற்கையில் காணப்படும் கூறு இவற்றின் பெயர்கள் இடப்பட்டன. அரசியற்சட்டம் மன்னரிடம் அளிக்கப்பட்டது. அதனை ஏற்றுக் கொள்வதாக மன்னர் முறைப்படி கூறினர்; அதன்படியே, ஆட்சி

புரியும் எண்ணத்தையும் வெளியிட்டார். உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் பலர் இதைக் கண்டு புரட்சி முடிந்துவிட்டதாகவும் இங்கிலாந்திற் காணப்பட்டது போலப் பிரான்சிலும் இனிச் சட்ட வரம்பிற்குட்பட்ட ஆட்சி ஏற்பட்டுவிடும் என்றும் கருதினர்.

## புரட்சி மீண்டும் தோன்றக் காரணங்கள்

### போர்

ஆனல், புரட்சி முடிந்துவிடவில்லை. புரட்சியின் வல்லந்தக் காலம் இதுகாறும் தொடங்கவில்லை. அடுத்துவந்த புரட்சியில் வல்லந்தங்கள் ஏற்படுவதற்குப் பல காரணங்கள் உதவி செய்தன. அரசியற்சட்டம் எளிதாக நடக்கச்கூடியதாயிருக்கவில்லை. மன்னரும் அச் சட்டத்திடம் பற்றுடையவராயில்லை. அரசியார் கடும்பகைமை கொண்டிருந்தார். அதுவரை நடந்தது புரட்சி தொடக்கத்தில் மக்கள் கொண்டிருந்த எல்லையற்ற நோக்கங்களையும் எண்ணங்களையும் எவ்விதத்திலும் நிறைவு செய்யவில்லை. சமத்துவம், மக்களாட்சி குறித்துச் சாதகமாக மீண்டும் இயக்கம் தோன்றுவதை எவ்விதத்திலும் தடை செய்வதென்பது மிகக் கடினமானதாகும். இத் தருணத்தில் பிரெஞ்சுப் புரட்சியின்மீது புதியதோர் ஆதிக்கம் செல்வாக்குப் பெறலாயிற்று. பிரான்சிற்கும் ஐரோப்பிய நாடுகளின் கூட்டுச் சேர்க்கைக்கும் இடையே போர் மூண்டது. இப்போர் புரட்சி இயக்கத்தின் போக்கையே மாற்றியது.

## போலந்து

ஐரோப்பாவின் அமைப்பில் போலந்து இராச்சியத்தின் நிலைமை மிக முக்கியமான மூலக்கூருயிருந்தது. முன்னேர் அதிகாரத்தில் அந்நாட்டின் வலியின்மையையும் அழிவையும் பற்றிக் கூறியதுடன் 1772-ல் எவ்வாறு பிரஷ்யா, ஆஸ்திரியா, ரஷ்யா முதலிய நாடுகள் மகிழ்ச்சியற்றதாயிருந்த இந்நாட்டின் எல்லைக்கு வெளியிலிருந்த நிலப்பகுதிகளைத் தத்தம் வயப்படுத்திக் கொண்டனவென்பதையும் கண்டோம். அதன்பின் நல்ல காலம் ஏற்படும் எனத் தோன்றியது. மக்களில் எல்லா இனத்தாரும் தமக்கிருந்த இடரை நன்குணர்ந்திருந்தனர். மன்னர் இரண்டாம் ஸ்டானிஸ்லாசு திறமையும் வலிமையும் பெற்றவராக இல்லாவிட்டாலும், உயர்குடிப் பிறந்தோரிடமிருந்து தீமை பயக்கக்கூடிய அதிகாரங்களையொழித்து நாட்டில் சட்டங்களை இயற்றுவதற்குச் சட்ட சபையையும், அரசாங்கத்தை உண்மையில் நடத்துவதற்கு அமைச்சர் குழுவையும் அமைத்து, அரசு நடைபெறுதற்குரிய அரசியற்சட்டத்தை ஏற்படுத்த உண்மையிலேயே விருப்பம் கொண்டிருந்தார். நாடும் ஐயமின்றி முன்னேறியது.


ஐரோப்பா, 1810
1802 இன் இறுதியில் பிரான்சு
1803-1806 இல் ஈட்டப்பெற்றவை
1805-1810 இல் ஈட்டப்பெற்றவை.
இத்தாலி ராச்சியம் (நெப்போலியனின் நேரிடையாட்சியின் கீழ்)
சார்ந்தவை
அட்லாண்டிக் சமுத்திரம்
பிரிட்டிஷ் தீவுகள்
வடகடல்
பால்டிக் கடல்
பிரஷ்யா
பிரான்சின் எல்லை 1792
ரைன் கூட்டரசுகளின் எல்லை
பிரெஞ்சுப் பேரரசு
ஆஸ்திரியப் பேரரசு
துருக்கியப் பேரரசு
கருங்கடல்
மத்தியதரைக் கடல்
ஸ்பெயின்
போர்த்துகல்
கார்சிகா
சார்டீனியா
சிசிலி
மொராக்கோ
அல்ஜியர்ஸ்
டூனிஸ்

## இரண்டாவது பிரிவினை

### போலந்தின் முடிவு

ஆனால், போலந்தின் அயலார்கள், குறிப்பாக ரஷ்யா அவர்களுக்குப் பலியாகவிருக்கும் நாடு புதிய வலிமை பெறுவதை விரும்பவில்லை. எனவே, 1791-ல் சீர்திருத்தப்பட்ட அரசியற்சட்டம் செயற்பட வந்தபொழுது அவர்கள் குறுக்கிட ஆயத்தமானார்கள். இவ்வாறு செய்ய எவ்வித ஆதாரமுமில்லாக் காரணங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. போலந்தின்மீது படையெடுக்கப்பட்டது. அயலார்கள் போலந்துக்குச் சொந்தமான பகுதிகளைக் கைப்பற்ற உறுதி பூண்டார்கள். எந்த அடிப்படையில் கொள்ளையைப் பகிர்ந்துக் கொள்ளுவது என்பது பற்றிக் கடுமையான சொற்போர் நிகழ்ந்தது. முடிவில் இப் பிரிவினைத் திட்டத்திலிருந்து ஆஸ்திரியா விலக்கப்பட்டு ரஷ்யா பெரும்பகுதியை அடைந்தது. ஆனால், பிரஷ்யா அதைச் சுற்றியிருந்த மதிப்புள்ள நிலங்களைக் கைப்பற்றியது. துன்பத்திலுழன்ற அந்நாட்டின் முடிவைப் பற்றி மேலும் சிறிதளவு அறிந்துகொள்வது நலமாகும். பிரிக்கப்பட்டும் சூறையாடப்பட்டும் இருந்த அந்நாடு நிலையற்றிருந்தது. மக்களும் பெருஞ்சினமுற்றவர்களாய் மனநிறைவின்றிக் காணப்பட்டார்கள். போலந்து, படைகளைக் கலைக்க வேண்டுமென்று ஆணையிட்டது வாயிலாக ரஷ்யர்கள் நாட்டின் நிலையை உச்சநிலைக்குக் கொண்டு வந்தார்கள். இவ்வாணையையெதிர்த்துப் போலந்து வீரரான கோசியுஸ்கோவின்[1] தலைமையில் ஒரு கலகம் தோன்றியது. இவர் குறிப்பிடத்தக்க சில வெற்றிகளைப் பெற்றாராயினும், இவருக்கு எதிராகக் கூட்டுச் சேர்ந்திருந்த அளவற்ற பெரும் படைகளையெதிர்த்து இவர் வெற்றி பெறுவதென்பது இயலாத செயலாயமைந்தது. 1795 அக்டோபரில் இறுதியான மூன்றாவது பாகப் பிரிவினை ஏற்பட்டது. பிரஷ்யா, ஆஸ்திரியா, ரஷ்யா மூன்றும் இக் கொள்ளையில் ஒன்று சேர்ந்துகொண்டு, ஐரோப்பாவின் நிலப் படத்தில் போலந்தின் பெயர் மீண்டும் தோன்றாதவாறு அழித்துவிடுவது என்று தமக்குள் உறுதி பூண்டன.

## பிரான்சின்மீது போலந்து செல்வாக்கு

பிரெஞ்சுப் புரட்சியின் வெளிநாட்டுத் தொடர்புகளின் தொடக்கத்தில் இந்தப் போலந்தின் துன்பங்களைக் கூறுவதன் காரணம், ஐரோப்பிய அரசுகளின் செயல்களாகிய ஒவ்வொன்றிற்கும் இக் காரணங்கள் பெரிதும் துன்பத்தை விளைவிக்கக் கூடியவையாயிருந்ததோடு பிரான்சிற்கு எதிராகத் திறமையும் வன்மையும் மிக்க கூட்டுச்

[1] Kosciusko.

சேர்க்கை ஏற்படாதவாறு தடை செய்தற்குரியவற்றைச் செய்தது. ஐரோப்பாவில் இரு புரட்சிகள் ஏற்பட்டன. அவை போலந்து, பிரான்சுப் புரட்சிகளாகும். அவற்றுள் போலந்துப் புரட்சி, ஐரோப்பிய அரசுகளின் வலிமையையும் கவனத்தையும் பெரிதளவு வேறுபக்கம் திருப்பியது வாயிலாகப் பிரெஞ்சுப் புரட்சி வெற்றி யடைய உதவி புரிந்தது.

## பிரான்சுடன் போருக்குக் காரணங்கள்

### பிரான்சின்மீது ஜெர்மனிக்கிருந்த மனக்குறைகள்

தொடக்கத்திலிருந்தே பிரெஞ்சுப் புரட்சி மக்களின் கவனத்தை மிகுதியும் கவர்ந்தது கடந்த இரு நூற்றுண்டுகளாக அடிக்கடி ஐரோப் பாவை அச்சத்தில் ஆழ்த்தி வந்துள்ள பிரான்சின் பழைய முடியாட்சி மறைவதை மனநிறைவுடன் ஐரோப்பா நோக்கியதுடன் அதன் அமைதிக்குப் பேரிடரைத் தோற்றுவிக்காதவாறு வலிமையற்றதாய்ப் புதிய அரசியல் துரைத்தனமிருக்கும் என்றும் கருதியது. ஆனுல், பிரான்சின் செயல் விரைவிலேயே பல அரசுகளின் பகைமையைத் தூண்டியது. புரட்சியறிவிப்பு வெளியிட்ட கொள்கைகள், ஐரோப் பாவின் ஒவ்வொரு நாட்டிலும் நிலைபெற்றிருந்த முறையைக் கவிழ்க்கக் கூடியனவாயிருந்தன. தவிர, ஆஸ்திரியாவும் மற்ற ஜெர்மனி நாடு களும் திட்டமான வேறு பல மனக்குறைகளையும் கொண்டிருந்தன. நிலமானிய முறையைப் பிரான்சு முற்றிலும் நீக்கிவிட்டது. டைத்து வரியும் மானிய முறைப்படி செலுத்தப்பட வேண்டிய வரித்தலைகளும் இனிச் செலுத்தப்பட வேண்டுவதில்லை என்ருயிற்று. கிழக்கு எல்லைப் புறத்தில் செலுத்தப்பட்ட டைத்து வரியில் பெரும்பகுதியும் மானிய வரித் தலைகளும் ஜெர்மனியின் கருவூலங்களில் போய்ச்சேர வேண்டி யன. இவ்வாறு கட்டணங்கள் செலுத்தப்படுவது 1648-ல் நடந்த வெஸ்டுபேலியாச் சமாதானத்தால் உறுதி செய்யப்பட்டிருந்தது.

## குடியேற்றம் செய்த பிரபுக்கள்

### போர்த் தொடக்கம்

போதுமான அளவு இழப்பீடு செய்வதைப் பிரான்சு மறுத்ததுடன், ஜெர்மானிய நாடுகளின் மறுப்புக்கள், பிரெஞ்சு விடுதலைக்கும் சுயாட் சியின் அதிகாரங்கட்கும் அவமதிப்பாயுள்ளனவெனவும் அறிவித்தது. ஜெர்மன் நாடுகளைக் குறித்து அவர்களுக்கும் மனக்குறைக ளிருந்தன. மன்னரின் உடன் பிறந்தாரும் மற்றும் பல பிரெஞ்சுப் பிரபுக்களும் பிரான்சில் புரட்சி தொடங்கியவுடன், அச்சத்தினுலும், அவர்களுக்கு அருவருப்பாயிருந்த ஓர் இயக்கத்தில் எவ்விதத்திலும் பங்கு கொள்ள வேண்டாவென்ற எண்ணத்தினுலும் பிரான்சை விட்டு

வெளியேறி எல்லேக்கப்பாலிருந்த டிரேவ்ஸ்,[1] மெயின்ஸ்[2] முதலிய இடங்களில் குடி புகுந்தார்கள்: அங்கு அரசுமுறைத் தோற்றத்துடன் வாழ்ந்தார்கள்; அதனுடன் பிரெஞ்சுப் புரட்சியைக் கவிழ்க்கவும் பிரான்சின் விவகாரங்களில் தலையிடவும் வெளிப்படையாகப் படைகளைத் திரட்டிப் பயிற்சியளித்தார்கள். பிரெஞ்சு மன்னர், முறைக்கேற்றவாறு மறுதலித்தார். 1700-ல் இரண்டாம் ஜோசப்பிற்குப்பின் பேரரசர் பதவி பெற்ற லியோபால்டும் தமது செல்வாக்கைப் பயன்படுத்தி இப்படைகளைக் கலைக்க முயன்ருரென்ருலும் இரு பக்கங்களிலும் போரின் அச்சம் வளர்ந்து கொண்டிருந்தது. பிரான்சில் எல்லா வகுப்பினரும் போரை விரும்பினர். வெளிநாட்டு இராணுவத்தினிடம் தமது விடுதலைக்குப் பாதுகாப்புள்ளதென மன்னர் நம்பினர். கன்சர்வேட்டிவ் கட்சி அரசியற் சட்டம் உறுதிப்படுத்தப்படும் என எண்ணியது. ஆனல், புரட்சிக்காரருட் பலர், இவ்வன்னியப் படைகள் மன்னருடைய வஞ்சனையை வெளிப்படுத்துமென்றும், குடியரசு ஏற்படுவதை விரைவாக்குமென்றும் நம்பினர். போருக்கு எதிராயிருந்தவர்கள், புரட்சிக்காரர்களின் கட்சியிலிருந்த தீவிரவாதிகளே. இவர்கள் ஜாகோபின்கள்[3] எனப்படுவார்கள் * இவர்களுக்குத் தலைவர்களான மாரட்டு,[4] ரோபஸ்பியர்,[5] டான்டன்[6] முதலியோர் எதிர்ப்பைத் தெரிவித்ததுடன் அப்பொழுதுள்ள நிலைமையில் ஐரோப்பியப் போரினல் ஒரு நன்மையும் ஏற்படாது எனவும் அறிவித்தனர். 1792 ஏப்பிரலில் ஆஸ்திரிய மன்னரான பிரான்சிஸ் மீது போர் தொடுக்கப்பட்டது.

## மன்னரின் நிலைமை குறித்துப் போரின் செல்வாக்கு

முதலாம் பிரான்சிஸ், மிக்க எச்சரிக்கையும், அரசியல் தந்திரமும் கொண்ட அவர் தந்தையாருக்குப் பின் பட்டத்திற்கு வந்தவர்; இருபத்துமூன்று ஆண்டுகள் நிரம்பியவர். பிரான்சு, ஆர்வத்துடனும் வெற்றியில் நம்பிக்கையுடனும் போர் தொடங்கிற்று. ஆனல், பெல்ஜியத்தின் மீது எழுந்த படையெடுப்பு முழுமையும் தோல்வியாய் முடிந்தது. இதன் உடனடிப் பயனுக அமைந்தது மன்னர் மீது பொதுமக்களைச் சினமுறச் செய்ததாகும். பிரான்சின் படைகளிடத்திலிருக்கவேண்டிய பரிவிற்கு மாருகப் பகைவனிடம் பரிவு கொண்டிருந்ததாகவும், பாரிசு மக்களிடமிருந்து தம்முடையவும் அதிகாரிகளுடையவுமான விடுதலைக்கு வழி கோலுதற்கு ஆஸ்திரியப்

[1] Treves. [2] Mainz. [3] Jacobins. [4] Marat.
[5] Robespierre. [6] Danton.

*முன்பு ஜாகோபின் துறவிகளுக்குச் சொந்தமாயிருந்த கட்டடத்தில் புரட்சிக்காரர்களில் மிகத் தீவிரமாயிருந்தவர்களின் சங்கம் கூடியதால் அவர்களுக்கு இப்புகழ் பெற்ற பெயர் ஏற்படலாயிற்று.

படைகளின் வெற்றியை மன்னர் விரும்பியதாகவும் கருதப்பட்டது. குறிப்பிட்ட எவ்வித நடவடிக்கையையும் மேற்கொள்ளச் சட்டசபை விரும்பவில்லை. எனவே, புரட்சியில் அடுத்து நடந்த செயல் ஜாகோபின்களுடைய இரகசியமான சூழ்ச்சியினால் நடந்தது. சிறந்த வழக்கறிஞரும் புரட்சியில் மிகத் தீவிரமாக ஈடுபட்டிருந்தவருமான டான்டன் இவ்வியக்கத்திற்குத் தலைவரானார். இவர், 1792 ஆகஸ்டு 10ஆந் தேதி பாரிசிலுள்ள அரண்மனையைப் புரட்சிக்காரர்கள், எல்லைப்புறத்தை நோக்கிச் செல்லும் வழியில் பாரிசை வந்தடைந்த படைகளின் உதவியுடன், தாக்கியதற்குக் காரணமாவார்.

## மன்னர் பதவியிழத்தல்

உண்மையில் தாக்குதல் ஏற்படுவதற்கு முன்னதாகவே மன்னரும், அரசியரும், மன்னருடைய அலுவலரும் ஓட்டமெடுத்து, சட்டசபை கூடும் பெரிய அறையில் அடைக்கலம் புகுந்தனர். அரண்மனை தகர்க்கப்பட்டது. அதைப் பாதுகாத்து வந்த சுவிஸ் காவலர்கள் கொலை செய்யப்பட்டார்கள். வெற்றிபெற்ற கலகக்காரர்கள் சட்ட மன்றத்தின் மீது படையெடுத்து மன்னரின் பதவியிழத்தலை வற்புறுத்தினர். இவ்வமயம் அவ்வேண்டுகோள் மறுக்க இயலாததாயிற்று. பதினாறும் லூயி முடியிழந்ததாக வெளியிடப்பட்டதுடன் வயது வந்தோர் வாக்குரிமையடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை, மாநாடு, (கன்வென்ஷன்) என வழங்கப்பட்டு பிரான்சின் வருங் காலத்தைப்பற்றி முடிவு செய்யும் என்று பேரறிவிப்புச் செய்தனர்.

## பாரிசுக் கம்யூன்

இப்பெரிய கொந்தளிப்பையடுத்து மிகக் கொடுமையான செயலொன்று நிகழ்ந்தது. இதை அறிய, பிரான்சில் பயனற்ற துரைத்தனம் சிறிது காலம் இருந்தது என்பதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும். சட்டசபையும் எடுபடும் தறுவாயிலிருந்தது. சட்டமன்றம் நியமித்த அமைச்சர்களும் அவர்களுடைய பணிக்குப் புதியவர்களாயிருந்ததுடன் அதிகாரமற்றுமிருந்தார்கள். பிரான்சில் மிக வலியதாயிருந்த செயற்குழு பாரிசின் நகராண்மைக் கழகமாகும். இது கம்யூன்[1] எனப் பெயர் பெற்றிருந்தது. இக்குழுவின் அரசியற்சட்டம் ஆகஸ்டு மாதம் 10ஆந் தேதி மாற்றியமைக்கப்பட்டதன் விளைவாகக் கடுமையான கொள்கையுடையவர்கள் இதன் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டார்கள். அவர்களுள் முக்கிய ஆட்சிச் செல்வாக்கு உடையவர் மாரட்டு என்பவர் ஆவர். முடியாட்சியின் வீழ்ச்சியைப் பற்றித் துன்பப்பட்ட மக்கள் பாரிசில் நிரம்பியிருந்தார்கள்; ஆகஸ்டு 10ஆந்

[1] Commune.

தேதி முடிவு செய்யப்பட்ட தீர்ப்பை விரைவில் மாற்றுவதற்கான வாய்ப்பை எதிர்நோக்கினர்கள். புதிதாக ஏற்பட்ட அரசாங்கத்தைக் கவிழ்க்கச் சதித் திட்டங்கள் நிகழ்ந்தன என்று குறை கூறப்பட்டது.

## செப்டெம்பர்ப் படுகொலை

மாரட்டு

பாரிசில் மறைத்துவைக்கப்பட்ட போர்க் கருவிகளையும் நாட்டுப் பகைவர்களையும் தேடிக் கண்டுபிடிக்க முடிவு செய்யப்பட்டது. ஆகஸ்டு இறுதியில் பாரிசிலிருந்த சிறைச்சாலைகள் இவ்வாறு கைது செய்யப்பட்டவர்களால் நிறைந்து போயின. பின்பு செப்டெம்பர் இரண்டாம் நாள் கம்யூனின் ஆணைப்படி முன் யோசனையில்லாமல் திடீரென்று விசாரணை மன்றங்கள் நிறுவப்பட்டு, கைதிகள் அதன் முன் விசாரணைக்குக் கொண்டு வரப்பட்டார்கள். சாதாரணக் குற்றம் புரிந்தவர்கள் மீண்டும் சிறைக்கனுப்பப்பட்டார்கள். ஆனால், முடியாட்சியிடம் நட்புக் கொண்டிருந்தவர்கள், அதனால் புதிய அரசாங்கத்திற்குப் பகைவர்கள் என நம்பப்பட்டு, சிறைச்சாலைகளினின்றும் வெளியேற்றப் பட்டுத் தெருக்களில் படுகொலை செய்யப்பட்டார்கள். மூன்று நாள்களாகவும், ஓரளவு ஐந்து நாள்கள் வரையிலுங்கூட இக்கொடுமை நிகழ்ந்தது. மகளிர் பலரும் சேர்த்துச் சுமார் 1500 பேர் குத்திக் கொலை செய்யப்பட்டனர். இக்கொடுமையின் பொறுப்பு, கம்யூனையும், அதனுடைய செயற்குழுவையும், அதில் இடம் பெற்றிருந்த மாரட்டையுமே சாரும். இதை அடுத்து மாகாணங்களில் சுற்றறிக்கை விடப்பட்ட பத்திரத்தில் இப்படுகொலை, பிரான்சு பேரிடரான போரில் ஈடுபட்டிருந்த பொழுது மக்களுக்குள் அரசியல் வஞ்சகர்களாயிருந்தவர்களை எதிர்த்து மக்களே பழிவாங்கியதாக விவரிக்கப்பட்டிருந்தது. மக்களுடைய சினமும் ஐயமும் இப்படுகொலைக்கு ஓரளவு காரணமாய் இருந்த போதிலும், பேரளவிற்குத் திட்டமிட்டும் ஒழுங்காகவும் நடந்தது என்பதைப்பற்றி எவ்வித ஐயமுமில்லை.

## வால்மிச் சண்டையும் நேச நாடுகளின் பின்வாங்குதலும்

எல்லைப்புறங்களை நோக்கினல், அங்கும் எதிர்பாராத முடிவைக் காண்கிறோம். ஆஸ்திரியர்களுடன் பிரஷ்யர்களும் சேர்ந்து பிரென்ஸ்விக்குக் கோமகனர் தலைமையில பிரான்சின்மீது படையெடுத்தார்கள். எல்லைப்புறத்திலுள்ள பட்டணங்கள் அவர்கள் வயமாயின. வழியில் எவ்விதக் கடுமையான எதிர்ப்புமின்றி அவர்கள் ஆர்கோன்ஸ்[1]

[1] Argonnes.

குன்றுகளை அடைந்தார்கள். அங்கு டுமோரிஸ்[1] என்ற படைத் தலைவரின்கீழ் ஒருபடை அமைக்கப்பட்டிருந்தது. வால்மி[2] என்னு மிடத்தில் சண்டை நிகழ்ந்தது. நேச நாடுகளின் படைகளுக்கு இச்சண்டையின் பயனாகக் கடுந்தடை ஏற்பட்டு, அத்தடை பின்னர் நிகழ்ந்தவைகளால் மேலும் கடுமையாயிற்று. பிரென்ஸ்விக்குக் கோமகனார் பாரிசுமீது படையெடுத்துச் செல்வதை ஆதரிக்கவில்லை. காலநிலை மோசமாயிருந்தது. போர் வீரர்களும் நோயினால் துன்புற்றிருந்தார்கள். உணவு சேகரிப்பது கடினமாயிருந்தது. எனவே, பகைவர்களுடைய படைகள் வழியாக ஊடுருவிச் செல்ல முயல்வதற்குப் பதிலாக பின் வாங்குவதற்கு டுமோரிஸுடன் பேச்சு வார்த்தை நடத்தினார்; அதன்பின் ஜெர்மன் எல்லையை நோக்கிப் பின்னடைந்து, இறுதியில் ரைன் நிலப்பகுதியைக் கடந்தார். வால்மிச் சண்டை மிகச்சிறியதானாலும், ஐரோப்பிய வரலாற்றில் மிக முக்கியமானவைகளுள் ஒன்றாகும். புரட்சிப் படைகளுக்கு முதலில் இச் சண்டை நம்பிக்கையை ஊட்டியதோடு வரிசையாக இராணுவ வெற்றிகளுக்குத் தொடக்கமாகவும் இருந்தது. நெப்போலியன் தலைமையில் இவ்வெற்றிகளின் பயனாக ஒவ்வோர் ஐரோப்பியத் தலைநகரத்திலும் பிரான்சின் கொடி ஏற்றப்பட்டது.

## கன்வென்ஷன் சபை, குடியரசு, மன்னர் கொலை செய்யப்படுதல்

ஆகஸ்டு பத்தாந்தேதி வாக்களிக்கப்பட்ட கன்வென்ஷன்சபை செப்டெம்பர் மாதத்தின் முதற்பகுதியில் தேர்ந்தெடுக்கப்பட்டது. முதலில் அதிக மிதவாதிகளாய் இருந்தவர்களின் கட்சிக்கு இது ஒரு பெரிய வெற்றியென நம்பப்பட்டது. ஆனால், தொடர்ந்து நடந்த நிகழ்ச்சி பிரான்சில் புரட்சிக் கட்சிகளில் மிகத் தீவிரமாய் இருந்தவர்களுக்கு ஆதிக்கத்தை உண்டுபண்ணியது. குடியரசுப் பேரறிவிப்புச் செய்யப்பட்டது. மன்னர் விசாரணைக்குட்படுத்தப்பட்டார்; 1791-ல் ஏற்பட்ட அரசியற்சட்டத்தின் வாசகங்களுக்கு எதிராக அரசத்துரோகம் செய்த குற்றவாளியெனத் தீர்ப்புக்கூறி, 1793 ஜனவரியில் கொலை செய்யப்பட்டார்.

## பயங்கர ஆட்சி

1793ஆம் ஆண்டில் பயங்கர ஆட்சி ஏற்பட்டது. துரைத்தனத்தின் அதிகாரம் ஜாகோபின்களில் மிகத் தீவிரமான புரட்சிக்காரர் கட்சியினிடம் மாறியது. எனினும், மக்களுட்சிறுபான்மையோரே

[1]Dumouriez. [2] Valmy.

இவர்களுக்கு ஆதரவளித்தனர் என்பது பற்றி ஐயமில்லை. ஆனால், இவர்கள் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்களாயும், உறுதி கொண்டவர்களாயுமிருந்தார்கள். இவர்களுக்கு எதிரிகளாயிருந்த கிராண்டிஸ்டுகள்[1] கோழைகளாயும் நிச்சயமற்ற கொள்கைகளை உடையவர்களாயுமிருந்தார்கள். இதற்கிடையில் பிரான்சு, மிகப் பெருகி வளர்கின்ற போரிலிறங்கியது. வெளிநாட்டுப் போர்களுடன் உள் நாட்டுப் போரும் இணைந்தது. மேற்குப் பிரான்சில், லாவெண்டீ[2] மாவட்டத்தில் குடியானவர்கள் குடியரசிற்கு எதிராகக் கலகம் விளைவித்ததோடு திருச்சபையின்மீது செய்த தாக்குதல்களையும், படைகளில் சேருமாறு அவர்களைத் தூண்டிய முயற்சியையும் எதிர்த்து மறுப்புச் செய்தார்கள். தெற்கிலும் மேற்கிலும் குறிப்பாக 'லயான்ஸ்[3], டூலான்[4]' என்ற இடங்களில் பேரிடரான நடமாட்டங்கள் இருந்தன. பிரான்சிற்கு வெளியே பிரான்சின் பகைவர்கள் அதிகமாகிக்கொண்டே வந்தார்கள். பிரிட்டனும், ஹாலந்தும், ஸ்பெயினும் 1793 ஆம் ஆண்டின் முற்பகுதியில் ஒன்று சேர்ந்தன. விரைவிலேயே பிரான்சு ஐரோப்பாவில், ரஷ்யா நீங்கலாக மற்றப் பேரரசுகளுடன் கூட்டை எதிர்க்க வேண்டியதாயிற்று. ரஷ்யாவும் பிரான்சுடன் நட்பில்லாததாய் இருந்தது. பிரெஞ்சுப்படைகள் தோற்கடிக்கப்பட்டன. பிரான்சின் வீழ்ச்சி உடனடியாக ஏற்படும் போலத் தோன்றியது.

## பொதுக் காவற்குழு

இவ்வாறு வெளிப்படையாகக் கட்டுக்கடங்காத பேரிடர்களையெதிர்த்து, எதிர்ப்பை அமைக்க வேண்டியதாயிற்று. அரசியற்சட்ட முறைகளைக் கையாளுவதற்கு இயலாதிருந்தது. ஏனென்றால், சுதந்தரா வாக்களிப்பு ஜாகொபின் அதிகாரத்தை உண்மையிலேயே கவிழ்த்திருக்கும். எனவே, அவர்கள் பயங்கர ஆட்சி புரிந்தார்கள். அவர்களுக்கு முன் அரசு புரிந்த அரசாங்கங்களைப் போலவே அவர்களுடைய பகைவர்களைக் கீழ்ப்படியுமாறு பயமுறுத்தி அரசு செலுத்தினார்கள். அவர்களுடைய அதிகாரத்திற்கு முக்கிய ஏஜன்ஸியாயிருந்தது பொதுக் காவற்குழுவாகும்[5]. இக்குழுவில் பன்னிருவர் இருந்தனர். முதலில் டான்டனும் பிறகு ரோப்ஸ்பியரும் மிக்க செல்வாக்குடையவராயிருந்தனர். இக்குழு எத்தகைய அதிகாரங்களையும் தள்ளி வைத்தது; எனினும், குறிப்பாகப் படைகளைத் திரட்டுவதிலும், போரை இயக்குவதிலும் அதிகக் கவனம் செலுத்தி இறுதியில் பிரான்சிற்குப் புகழைத் தரவல்ல வெற்றிகளை ஒன்றன்பின் ஒன்றாகப் பெற்றது. பிரான்சில் புரட்சி விசாரணை மன்றம் நிலையாக ஏற்படுத்தப்பட்டது. அதன்

[1] Girondists. [2] La Vendee. [3] Lyons. [4] Toulon.
[5] Committee of Public Safety.

முன்னிலையில் ஏராளமான ஆடவரும் பெண்டிரும் அரசாங்கத்திற் கெதிராகக் குற்றம் புரிந்தவர் எனக் குற்றச்சாட்டுடன் விசாரணைக்கு அனுப்பப்பட்டனர். ஜாகோபின்களை எதிர்த்தவர்கள் பெரிய அரசியல் துரோகம் செய்தவர்களாகக் கருதப்பட்டு, அவசர விசாரணைக்குப்பின் குற்றவாளிகளென முடிவு செய்யப்பட்டு, தூக்கு மேடைக்கு அனுப்பப் பட்டார்கள். இவ்வாறு பலியிடப்படுபவர்களுடைய கூட்டம் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டேயிருந்தது. மன்னருடன் அரசியாரும் தூக்கிலிடப்பட்டார். அதனுடன் புரட்சியில் தொடக்கக் காட்சிகளில் விருப்பத்துடன் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டவர்களுள்ளே பலரும் கொலை செய்யப்பட்டனர். மிதமான குடியரசுக் கருத்துட னிருப்பதும் விரைவிலேயே அரசாங்கக் குற்றம் எனக் கருதப்பட்டது. முன்னொரு போது வலிமை பெற்றிருந்த கிராண்டிஸ்டு கட்சியின் தலைவர்கள் சிறை பிடிக்கப்பட்டுக் கொலை செய்யப்பட்டார்கள்.

ஜாகோபின்களும் விரைவிலேயே அவர்களுக்குள் சச்சரவிடத் தொடங்கினார்கள். பல்வேறு கட்சிகளுடைய நோக்கங்களையும் முடிவு களையும் தெளிவாகக் காண்பது கடினமானது. தீவிர மிதவாதக் கொள்கையினரின் கட்சி டான்டனின் தலைமையிலிருந்தது. உள் நாட்டில் மிக்க கருணையுடன் கூடிய நடவடிக்கைகளையும் வெளி நாட்டுப் போர்களில் ஓரளவுடனிருப்பதையும் இக்கட்சி விரும்பியது. ஹீபர்ட்டு[1] சாமெட்டு[2] என்பவர்களின் தலைமையில் இயங்கிய மற்றொரு கட்சி பாரிசு கம்யூனை மையமாகக் கொண்டு மிகப் புரட்சிகரமான சமூக மாற்றங்களை வற்புறுத்தியது. இக்கட்சியின் செல்வாக்கினால் புதிய தொரு சகாத்தம் தொடங்கப்பட்டது. இதன் முதலாவது ஆண்டு, 1792 செப்டெம்பரில் குடியரசுப் பேரறிவிப்புச் செய்தது முதல் தொடங்குவதாயிற்று.

## பகுத்தறிவின் வழிபாடு

பிற்காலத்தில் நெப்போலியன் போப்பாண்டவருடன் உடன் படிக்கை செய்துகொண்டதன் பயனாகக் கிறித்துவ ஆண்டு மீண்டும் பின்பற்றப்பட்ட வரை, பிரான்சு இவ்வாண்டையே தொடர்ந்து அரசாங்க ஆண்டாகக் கொண்டிருந்தது. அதே சமயத்தில் ஆண்டும் மறு ஒழுங்குபடுத்தப்பட்டது. மாதங்களின் பழைய பெயர்கள் எடுபட்டுப் பருவ காலங்களின் தன்மைகளைக் குறிக்கும் பெயர்கள் இடப் பட்டன. ஏழு நாள் கொண்ட வாரத்திற்கு ஈடாகப் பத்து நாள் கொண்ட பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டன. நிறுவையிலும் அளவை யிலும் தசாமிசமுறை தோற்றுவிக்கப்பட்டது. இதன்பின் கம்யூ னுடைய செல்வாக்கைக் கொண்டு பாரிசில் கிறித்துவச் சமயம் ஒடுக்கப்

[1] Hebert. [2] Chaumette.

பட்டு, அதற்குப் பதிலாகப் பகுத்தறிவின் வழிபாடு தோற்றுவிக்கப் பட்டது. மூன்றுவது கட்சியில் ரோபஸ்பியரும் அவரைப் பின்பற்று வோர்களும் சேர்ந்திருந்தார்கள். அவர்கள் ஒரு புறத்தில் டான்ட னுடைய மிதவாத ஆலோசனைகட்கும் மற்றொரு புறத்தில் ஹீபர்ட்டின் வல்லந்த முறைகளுக்கும் எதிரிகளாயிருந்தார்கள். அவர்களுடைய அதிகாரத்திற்கு முக்கிய மூலமாயிருந்தது பொதுக் காவற்குழுவேயாம். அக்குழுவில் வீழ்ச்சியடையும் வரை ரோபஸ்பியர் பல மாதங்கள் அதி காரம் பெற்று விளங்கினர். போட்டி நிறைந்த கட்சிகளுடைய பூசல் களுள் நாம் நுழைய வேண்டுவதில்லை. சிறு நிகழ்ச்சிகளில் வெற்றி அல்லது தோல்வியென்பது ஏற்பட்டு மரணம் அல்லது உயிருட னிருத்தல் ஏற்பட்டது. பிரான்சு நாட்டின் மக்களுள் பெரும்பாலாரும், பாரிசில் இருந்தவர்களுங்கூட இந்நிகழ்ச்சிகளின் போக்கில் ஒன்றும் செய்ய இயலாத நிலையிலிருந்தார்கள். ஒவ்வொரு கட்சியின் நோக் கமும் தலைநகரிலிருந்த வலிமை பொருந்திய புரட்சிக்காரர்களின் உதவியையும் தெருக்களில் காணப்பட்ட ஆயுதந் தாங்கிய படைகளின் உதவியையும் பெறுவதாயிருந்தது.

## பரம்பொருள் வழிபாடு

இறுதியில் ரோபஸ்பியர் வெற்றியடைந்தார்; அவருக்கு எதிரிகளா யிருந்தவர்கள் தூக்குமேடைக்கு அனுப்பப்பட்டார்கள். முறை யானதும் திறமையானதுமான அரசாங்கத்தை அவர் ஏற்படுத்த முடியும் போலத் தோன்றியது. ரோபஸ்பியர் உறுதியான எண்ண முடையவர்; கொள்கையிலும் வெறி கொண்டவர். அவர் ரூஸ்ஸோவின் போதனை களை ஏற்றுக்கொண்டவராய், இயன்ற வரையில் அப்போதனைகளைச் செயற்படுத்துவதில் விருப்பங்கொண்டிருந்தார். பகுத்தறிவின் வழி பாடு அவருக்கு அருவருப்பை உண்டுபண்ணுவதாயிருந்தது. எனவே, அதைக் களைந்து, அதற்குப் பதில் கிறித்துவச் சமயத்தை விடுத்து, ரூஸ்ஸோவினுல் போதிக்கப்பட்ட தெளிவற்ற தெய்வ நம்பிக்கையை நிலைநாட்ட விரும்பினர். சட்டசபையும் எதிர்ப்பின்றி அவருடன் ஒத்துழைத்தது. பரம்பொருளை வழிபடுவதே பிரான்சிற்கு ஏற்ற வழி பாடாகும் எனச் சட்டசபை வாக்களித்தது. தனியாக ஒதுக்கப்பட்ட ஒரு நாளில் பல அடையாள நிகழ்ச்சிகளுடனும் சொற்பொழிவுகளுடனும் இப்புதிய சமயம் ரோபஸ்பியரால் தொடங்கி வைக்கப்பட்டது. இவை எல்லாம் இருந்தும், கடுமையான அச்சம் நீங்கவில்லை. ரோபஸ்பியரிடம் காணப்பட்ட அச்சம், அவரது கொடுமைகளைப் பற்றியதாகும். தம்மைப் பகைவர்கள் சூழ்ந்திருந்ததையும் அவர்களது வெற்றி தமக்கு அழிவை உண்டுபண்ணும் என்பதையும் நன்கு அறிந்திருந்தார்; எனவே, எல்லாப் பக்கங்களிலும் தாக்கினர். வாரந்தோறும் தூக்குமேடைக்குப் பலியானவர்களின் தொகுப்புக்கள் அதிகரித்துக்கொண்டிருந்தன.

அவர் ஒருவிதச் சர்வாதிகாரத்தை ஏற்படுத்துவதற்கு வெளிப்படையாக முயற்சி செய்தார். இம்முயற்சிக்கு அவர் ஆசிரியரான ரூஸ்ஸோவும் பரிந்து உரைத்திருந்தார் இந்நிலையிலிருந்து அவரது கண்முன் மிச்சுயர் குறிக்கோளாயிருந்ததற்கியைய, மக்களுக்கு இன்பத்தையும் புனிதமான நற்பண்புகளையும் உண்டாக்குவதற்கேற்றவாறு அரசாங்கத்தை அமைக்க எண்ணினர். ஆனால், அவரது அதிகாரம் நெடுநாள் நீடிக்கவில்லை. அவர் அதிக எதிர்ப்பினால் துன்புற்றார்; அதனுடன் போட்டியிட்டவர்களிடம் மிகுதியான அச்சத்தையும் விளைவித்தார். போட்டியை அவரால் பொறுத்துக்கொள்ள இயலாததால், எல்லாப் போட்டிகளையும் ஒழிப்பதற்குத் தூக்கு மேடையைத் துணையாகக் கொண்டார்.

## ரோபஸ்பியரின் வீழ்ச்சி

இறுதியில் ஒரு சூழ்ச்சி உருவாயிற்று. ஒருவருக்கொருவர் மாறான கருத்துக்களையும் பண்புகளையும் கொண்டிருந்த பலர், இச்சருவாதிகாரத்தை ஒழித்துக்கட்டுவதற்கு ஒன்று சேர்ந்தனர். 1794 ஜூலை மாதத்தில் கன்வென்ஷன்சபை கூடும் மன்றத்தில் அவர் தாக்கப்பட்டார். அவர் இத்தாக்குதலை எதிர்க்கக் கம்யூன் வாயிலாக முயற்சி செய்தார். ஹீபர்ட்டு இறந்த பிறகு கம்யூன் ரோபஸ்பியரின் ஆதிக்கத்தின் கீழிருந்தது. ஆனால், கன்வென்ஷன் இப்போது பின் வாங்க இயலவில்லை. பாரிசிலேயே நேரடியான சண்டை ஏற்படும் போல இருந்தது. ரோபஸ்பியரைப் பின்பற்றியவர்களும் அவரைக் கைவிட்டார்கள். அவர் கைது செய்யப்பட்டு, ஏற்கனவே நாடு கடத்தப்பட்டவர் என அறிக்கை செய்யப்பட்டிருந்ததால் விசாரணையின்றித் தூக்கிலிடப்பட்டார்.

## பயங்கர ஆட்சியின் முடிவு

ரோபஸ்பியரின் வீழ்ச்சியோடு பயங்கர ஆட்சியும் முடிவுற்றது. அவரது வீழ்ச்சிக்குக் காரணமாயிருந்தவருட் சிலர், அவரைவிடக் கடுமையான பயங்கரவாதிகளாயிருந்தனர். எனினும், சருவாதிகாரியின் வீழ்ச்சி பொது மக்களின் உணர்ச்சியைப் பல வழிகளில் திருப்பியது. விரைவிலேயே பொதுவுணர்ச்சி, இவ்வளவு காலமாகப் பாரிசும் பிரான்சும் பொறுக்க முடியாத அளவிற்கு நடந்த கொடுமை முறைகளுக்குக் கடுமையான எதிர்ப்பாயிருந்ததென்பது வெளிப்படையாய்த் தோன்றியது. கன்வென்ஷனிலிருந்து விலக்கப்பட்டிருந்தவர் மீண்டும் அதில் உறுப்பினராயினர். ஆண்டு முடிவதற்குள்ளாகவே சிற்சில நேரங்களில் மிகக் கடுமையான நடிவடிக்கைகள் எடுக்கப்பட்ட போதிலும், பொது நோக்கம் மிகவும் சாதாரணமான முறைகளைப் பின்பற்றுவதையே நோக்கமாகக் கொண்டிருந்தது.

## போரின் காரணங்கள்

பயங்கர ஆட்சிக்குக் காரணமாயிருந்தது மறைந்துவிட்டது. பிரான்சு ஐரோப்பியக் கூட்டுறவை எதிர்த்துத் தன் உயிருக்குப் போராடிக்கொண்டிருக்கும் போது, அதன் பொய்யான—ஆனால் இயற்கையான—தேவைகளைப்பற்றி எழுந்த கருத்துக்களில் பயங்கர ஆட்சி உருவாயிற்று. பிரான்சிற்கு ஏற்பட்டிருந்த பேரிடரை நோக்கு மிடத்து எவ்வித நடவடிக்கையும் உடன்படத்தக்கதாகும். பிரான்சின் பகைவர்களை மிகக் கொடுமையான முறையில் அடக்கியது, பிரான்சை எதிர்த்துப் படையெடுத்து வந்த படைகளை வெற்றிகரமாகத் தடுத் திருக்குமானல், போற்றக் கூடியதாயிருந்திருக்கும். 1793-ல் வேனிற் காலத்தில் பிரான்சின் இராணுவ நிலைமை மிகவும் தாழ்நிலையிலிருந்தது. தொடக்கத்தில் பெல்ஜியத்தில் பிரான்சிற்குக் கிடைத்த வெற்றிகள் தோல்விகளாய் மாறின. பிரெஞ்சுப் படைத்தலைவரான டுமோரிஸ், நீர்விண்டன்[1] என்னுமிடத்தில் தோல்வியுற்று, முடியாட்சியின் மீட்சியை ஆதரிப்பவரென்று தம்மை அறிவித்துக்கொண்டு, பகைவர் களுடன் சேர்ந்தார். ஆனால், படைகள் அவர் வழியைப் பின்பற்ற மறுத்தன.

## டுமோரிஸின் துரோகம்

### பிரான்சின் இயற்கை எல்லைகளுக்காகப் போர்கள்

1793-ல் கோடைகாலம் முழுவதும் பகைவர் பிரெஞ்சு இராச்சியத் தின் வடக்கு, கிழக்கு, தெற்குப்பகுதிகளில் நுழைந்தனர். குறிப்பாகத் தெற்கிலும் மிகக் கடுமையான உள் நாட்டுப் போர் தொடங்கலாயிற்று. இவ்விடர்களில் பெரிதளவு ரோபஸ்பியரின் வீழ்ச்சிக்கு முன்னதாகவே மறைந்து போயிற்று. ஜாகோபின் அரசாங்கத்தின் சக்தியால் பிரான்சி லிருந்த கலகக்காரர்கள் தோற்கடிக்கப்பட்டு மிகக் கொடுமையான தண்டனை விதிக்கப்பட்டார்கள். வெளி நாட்டுப் போரின் எழுச்சியும் வீழ்ச்சியும் பிரான்சிற்கு உதவியாயின. பகைவர்கள் பிரெஞ்சுப் பகுதி களின்மீது படையெடுக்கவில்லை. நாட்டின் எல்லைகட்கப்பால் வெற்றி யைக் காண்பதில் பிரெஞ்சுப் படைகள் முனைந்தன. 'எல்லாருடனும் பிரான்சு சமாதானமாய் இருக்க விரும்புகிறது; நாடுகளை வெற்றி கொள்ளுவதில்லை,' என்ற அறிக்கையுடன் புரட்சி தொடங்கிற்று. இப்பொழுது அக்கருத்துக்கள் மறக்கப்பட்டுள்ளது. இயற்கையெல்லை களாய் அமைந்திருக்கும் பகுதிகள்வரை பிரான்சு இராச்சியம் பரவி யிருத்தல் வேண்டும் என்பது வெளியிடப்பட்டது. இச்சொற்றொடர் குறைந்தது, ரைன், ஆல்ப்ஸ், பிரனீஸ் மலைகளைக் குறிப்பதாகக் கூறப்

[1] Neerwinden.

பட்டது. விரைவில் பிரெஞ்சுப் படைகள் போரில் எதிர்த்துப் போரிட்டவர்களைவிட மிகவுயர்ந்தனவாக மெய்ப்பிக்கப்பட்ட பொழுது இந்த நோக்கமும் உயர்ந்ததன்று எனக் கருதப்பட்டு, முடிவில்லாப் படையெடுப்பைப் பிரான்சு மேற்கொண்டது. எனவே, படைகளுக்கு நம்பிக்கையூட்டுவதற்கும் அரசாங்கத்திற்குச் சத்தியையளிப்பதற்கும் பயங்கர ஆட்சியை நீடிப்பது தேவையில்லையென்பது தெளிவாயிற்று. மக்கள் அஞ்சாமையை மேற்கொண்டார்கள். அது நிலைமை பற்றி அமைதியான கருத்துக்கள் ஏற்பட உதவியாயிருந்தது. எனவே, பயங்கர ஆட்சியிலிருந்தும் அதற்கு இதுகாறும் ஆதரவளித்த ஜாகோபின்களிடமிருந்தும் மக்கள் அருவருப்புடன் வேறு பக்கம் நோக்கலாஞர்கள்.

## 1795ஆம் ஆண்டு அரசியற்சட்டம்

1795 ஜூலைத் திங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்ட அரசியற்சட்டம் புதிய கருத்துக்களின் போக்கைப் புலப்படுத்தியது. பதினும் லூயியின் ஆண் மகவு அண்மையில் சிறையில் இறந்தது. பட்டத்திற்கு வாரிசாயிருந்தவர்கள், நாடுகடத்தப்பட்டிருந்ததுடன், பிரான்சினுடைய பகைவர்களுடைய படைகளில் சேர்ந்து சண்டையிட்டுக்கொண்டுமிருந்தார்கள். எனவே, மிதமான அரசியற்சட்டத்தைத்தயாரித்து அறிவிப்புச் செய்தால் இதுவரையில் குடியரசுக்குப் பகைமையாயிருந்த பொது மக்களின் கருத்தை ஈட்டுவதற்கேற்ற உண்மையான சூழ்நிலை இருக்குமென எண்ணப்பட்டது. ஆகையால், 'மூன்ரும் ஆண்டு அரசியற் சட்டம்' என வழங்கப்படுஞ் சட்டம் ஏற்பட்டது. இச்சட்டத்திற்கு முன்னதாக மனிதருடையஉரிமைகள் பற்றியஅறிக்கை வெளியிடப்பட்டதுடன், குடிமகனுடையகடமைகளைப் பற்றியும் அவ்வறிக்கை கூறியது. இரண்டு சட்டசபைகள்(1791அரசியல்சட்டத்திற்காணப்பட்டதுபோல ஒன்றல்ல) பிரான்சின் கொள்கைக்கு இனிமேல் வழிகாட்டியாக இருக்க வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. 500 உறுப்பினர்களைக் கொண்ட கௌன்ஸில் எனும் கீழ்ச்சபையும், 40 வயதுக்கு மேற்பட்டவர்களான பழைய பிரிவினர்களைக்[1] கொண்ட மேற்சபையும் இருக்க வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. மேற்சபைக்குச் சட்டம் இயற்றுவதைத் தள்ளிவைக்கும் உரிமையுண்டென்றும், பாரிசில் படைக்கலந்தாங்கிய கூட்டத்தின் தொல்லையிலிருந்து தப்புவதற்காக இவ்விரு சட்டமன்றங்களும் அவர்கள் தேர்ந்தெடுக்கப்படும் இடங்களில் கூடலாமென்றும் உடன்பாடு அளிக்கப்பட்டது. நிறைவேற்றுத் துறை அரசாங்கம் இயக்குநர் குழுவினரிடம் ஒப்படைக்கப்பட வேண்டுமென்பது அறிவிக்கப்பட்டது. ஐவர் உறுப்பினராயிருந்த இயக்குநர் குழு, பொதுப் பாதுகாப்புக்

[1] Council of Ancients.

குழுவிடமிருந்து எல்லா அதிகாரங்களையும் எடுத்துக்கொண்டு, அரசியல் தந்திரம், போர் இவைகளை இயக்குவதை அவர்களிடமே வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. சட்டசபையிலிருந்து ஆண்டுதோறும் மூன்றில் ஒரு பங்கு மக்கள் பதவி ஓய்வுபெற வேண்டு மென்பதும், முதன் முதலில் ஏற்பட்ட சட்டசபைகளினுடைய உறுப் பினர்களில் மூன்றிலிருபங்கு உறுப்பினர்கள் இப்பொழுதிருந்த கன்வென்ஷனிலுள்ள உறுப்பினர்களாய் இருக்க வேண்டுமென்பதும் ஏற்பட்டன. இறுதியில் காணப்படும் கட்டுப்பாடு, எளிதில் காக்கக் கூடியது என்றாலும், அப்போதைய பேரெதிர்ப்பிற்குக் காரணமாயிற்று. மக்கள் அடியோடு மாற்றப்பட்ட முறையை எதிர்நோக்கியிருந்தார்கள். அடுத்து வரும் சட்டசபைகள் கன்வென்ஷனின் கொள்கையையும் கருத்துக்களையும் பெரிதளவில் தொடர்ந்து மேற்கொள்ளும் என்பது இப்பொழுது தெளிவாயிற்று. எனவே, இக்கட்டுப்பாட்டிற்கெதிராக எல்லாக் கட்சியினரும் மறுத்தெழுந்தனர். 1795-ல் பாரிசில் படைக் கலகம் ஏற்பட்டது.*

### நெப்போலியன் கன்வென்ஷனுக்கு எதிராகக் கலகத்தை அடக்குதல்

இப்புதிய கலகத்தை, கன்வென்ஷன், புரட்சிக் காலத்தின் தொடக் கத்தில் கலகக் கூட்டத்தினருடைய கோரிக்கைகளை எதிர்த்து நின்ற முறைக்கு மிகவும் மாறான நோக்குடன் நோக்கியது. கன்வென்ஷனைப் பாதுகாக்கும் பொறுப்பு, போர் வீரர்களிடம் ஒப்புவிக்கப்பட்டது. இப் போர் வீரர்களுள் முக்கியமானவருள் 'நெப்போலியன் போனபார்ட்டு' என்பாரும் ஒருவராவர். கன்வென்ஷன்மீது தாக்குதலேற்பட்ட பொழுது, அது பீரங்கிப் படையால் விரட்டியடிக்கப்பட்டு, புதிய அரசியற்சட்டம் பிரான்சின்மீது சுமத்தப்பட்டது. 1795 அக்டோபர் 26ஆம் நாள் கன்வென்ஷன் முடிவுற்றது.

## நெப்போலியனின் எழுச்சி

இப்பொழுது புரட்சியானது பெரிதளவிற்கு நெப்போலியனுடைய வாழ்க்கையுடன் ஒன்றுகியது. இதுவரையில் அவர் கீழ்ப்படிந்த அதிகாரியாய்ப் பணி புரிந்தார்; இக்கலகத்தையடக்கியதில் சிறப்புற்று விளங்கினர். இது முதல் அவர் பிரான்சின் பேரரசராகும் வரையில் ஒவ்வொரு பதவியிலும் உயர்வு அளிக்கப்பட்டு வந்ததுடன் ஐரோப்பாவி லேயே மிகவும் மேன்மையானவராய் விளங்கினர். எனவே, போரின் போக்கைத் தொடர்ந்துநோக்கிப் பிறகு ஐரோப்பாவின் அரசியல் வரலாற்றைக் கவனிப்பது சாலச் சிறந்தது. ஏனென்றால், இனிமேல்

* புதிய பஞ்சாங்கப்படி இச்சம்பவம் நிகழ்ந்த மாதத்தின் பெயரால் இக்கலகம் வெண்டேமியார் (Vendemiaire) கலகம் என வழங்கப்பட்டது.

போர்தான் அக்காலத்தினுடைய மிக முக்கியக் கூறாயிருந்தது. பர்க்கின்[1] முன்னறிவிப்பு உண்மையாகிக்கொண்டிருந்தது. பிரான்சு உள் நாட்டு அரசியலிற் காணப்பட்ட குழப்பம், இழிவு முதலியவைகளை நோக்காது ஆர்வத்துடனும், உவகையுடனும் நாட்டின் படைகளின் வெற்றிகளைக் கூர்ந்து நோக்கிக்கொண்டிருந்தது. பொது மக்கள் கவனத்தின்மீது கொண்டிருந்த பிடிப்பை அரசியல் வாதிகள் இழந்தார்கள். மக்கள் மனத்தைப் போர் வீரர்கள் கவர்ந்தார்கள். இப்போக்கின் பயனாகத்தான் பிரெஞ்சுப் படைகளின் வீரரும், அன்பைப் பெற்றவருமான நெப்போலியன் விரைவிலேயே பிரெஞ்சு அரசாங்கத்தின் மேலான அதிகாரியாகத் தம்மையாக்கிக் கொண்டார்.

## பேசெல் சமாதானம்

பிரான்சிற்கு எதிராகத் தோன்றிய கூட்டுச் சேர்க்கை கலகலத்தது. போலந்து விவகாரங்களும் ஐரோப்பாவின் பல இடங்களில் காணப்பட்ட போட்டிகளும் ஆஸ்திரியாவிற்கும் பிரஷ்யாவிற்குமிடையே யிருந்த நல்லுறவில் நெருக்கடியை உண்டுபண்ணியது என்பதை முன்பு அறிந்தோம். 1749-ல் பிரான்சு பெற்ற வெற்றிகளைக் கண்டு பிரஷ்யர்கள் போர் நிறுத்தத்தில் மிக்க ஆவலுள்ளவர்களாய் இருந்தார்கள். 1795-ல் 'பேசெல் சமாதானம்'[2] கையொப்பமாயிற்று. இதன்படி பிரஷ்யா ரைன் நதியின் இடப்பாகத்திலிருந்த சில நிலப் பகுதிகளைப் பிரான்சிற்கு விட்டுக்கொடுத்ததுடன் குறிப்பிட்ட ஓர் எல்லைக்கு வடக்கில் ஜெர்மனி போரின் நடவடிக்கைகளிலிருந்து தனித்திருக்க வேண்டுமென வாக்குறுதியைப் பெற்றும் ஜெர்மனியின் வடபாகத்தில் பிரஷ்யா தலைமையான அரசாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்றும் ஏற்பாடாயிற்று. ஸ்பெயினும் போரிலிருந்து பின்னடைந்தது. எனவே, ஆஸ்திரியாவையும் கிரேட் பிரிட்டனையுமே பிரான்சு எதிர்நோக்க வேண்டியிருந்தது. ஆஸ்திரியாவை எதிர்ப்பதில் பிரான்சு தனது முழு முயற்சியையும் திருப்பியது. படையெடுப்பு இரு வழிகளில் நடக்க வேண்டியிருந்தது. முதலாவது, டான்யூபு பள்ளத்தாக்கு வழியாக வியன்னா நகரை நோக்கிப் பிரான்சு முன்னேற வேண்டுவது; இரண்டாவது, இத்தாலியில் ஆஸ்திரியாவின் அதிகாரத்தைத் தாக்குவது; வெற்றி ஏற்பட்டவுடன் அங்கிருந்து ஆல்ப்ஸ் மலைகளில் வடகிழக்குக் கணவாய்கள் வழியாக வியன்னாவை நோக்கிச் செல்வது. இத்தாலி மீது படையெடுத்துச் சென்ற படைகளுக்கு நெப்போலியன் தலைவராக நியமிக்கப்பட்டார். இங்கேயே முதன் முதலாக இராணுவத் திறமையை அவர் வெளிக்காட்டியதுடன் பிரான்சிற்கு எதிராக ஆஸ்திரியா அனுப்பிய படைகளை வென்றது வாயிலாகப்

[1] Burke. [2] Peace of Basel.

பிரெஞ்சுப் படைகளின் அளவற்ற மேன்மையையும் சுட்டிக்காட்டினர்; கடலோடு இணைக்கப்பட்ட ஆல்ப்ஸ் வழியாக உட்புகுந்து, சார்டினியா மன்னரை ஆஸ்திரியாவின் நட்புறவிலிருந்து பின்னடையச் செய்து, முன்னேறி, மிலானைக் கைப்பற்றினர். இத்தாலியர்களுட் பெரும் பாலார் அவரை வரவேற்றனர். இதற்கு இத்தாலியர்கள் ஆஸ்திரியா வின் அரசாட்சியின்மீது கொண்டிருந்த வெறுப்பும், பிரெஞ்சு வெற்றி யால் தங்களது தேசியச் சுதந்தரத்தைத் திரும்ப அடையலாம் என்ற எண்ணமும் காரணமாயிருந்தன.

## மான்டுவா முற்றுகை

நெப்போலியன் அடுத்தபடி மான்டுவாவை[1] நோக்கி முன்னேறி அந்நகரத்தை முற்றுகையிட்டார். அங்குள்ள கோட்டை இத்தாலியில் ஆஸ்திரியர்களின் வயமிருந்த பகுதிகளில் மிக முக்கியமானதாய் இருந்தது. கோட்டையைக் காப்பாற்ற ஆஸ்திரியர் தங்களது முழு வலிமையைப் பயன்படுத்தினர்கள். நகரத்தை மீட்க ஐந்து ஆஸ்திரியப் படைகள் தனித்தனியே அனுப்பப்பட்டன. ஒவ்வொரு படையும் நெப்போலியனால் எதிர்க்கப்பட்டுத் தோற்கடிக்கப்பட்டது. 1797 ஜன வரியில், ரிவோலி[2] என்னுமிடத்தில் ஆஸ்திரியர்கள் முறியடிக்கப் பட்டது, நெப்போலியனை எக்காலத்தும் விரட்ட முடியாதென்பதை விளக்கியது. மான்டுவா நகரும் அடுத்த மாதத்தில் சரணடைந்தது. இப்போது நெப்போலியன் தம்மை இத்தாலியின் தலைவரெனக் கருதியதோடு, ஆட்ரியாட்டிக்குக் கடலின் வடக்குப்பக்கமாக ஆஸ்திரியப் பகுதிகளை நோக்கியும் முன்னேறினர்.

## காம்போ பார்மியோ உடன்படிக்கை

நெப்போலியனை எதிர்க்கச் செய்த முயற்சிகள் எல்லாம் தோல்வி யுற்றன. எனினும், அவருடைய நிலைமை நல்ல பாதுகாப்புடனில்லாத தாக அவர் எண்ணியதால், 1797 ஏப்பிரலில், தாற்காலிகமான சமாதானத்தை ஏற்றுக்கொண்டார். இது 1797 அக்டோபரில், காம்போ-பார்மியோ உடன்படிக்கை[3] ஏற்படுவதற்கு வழி செய்தது. இதன்படி பேரரசர், பிரெஞ்சுக் குடியரசின் வயமிருந்த நெதர்லாந்தின் மீது தாம் கொண்டிருந்த உரிமைகளைத் துறந்தார்; அதனுடன் இத்தாலியின் வடபாகத்தில் சிஸ் ஆல்பைன் குடியரசு[4] என்னும் பெயருடன் சுதந்தரமான இத்தாலிய அரசு ஏற்படுவதையும் ஏற்றுக் கொண்டார். மற்றொருபக்கத்தில் அப்போது ஐரோப்பிய நாடுகளில் மிகவும் பழைமையானதும் சுயேச்சையுடையதுமாயிருந்த வெனிஸ்

[1] Mantua. [2] Rivoli. [3] Treaty of Campo-Formio.
[4] Cisalpine Republic.

குடியரசு, தொடர்ந்து நிகழ்ந்த அருவருக்கத்தக்க கலகங்களின் பயனுக, ஆஸ்திரியர்களுக்குச் சொந்தமாக்கப்பட்டது. இப்பெரும்போரின் போது வெனிஸ் நடுவுநிலைமை வகிக்க எண்ணிய முயற்சிகள் பயனளிக்கவில்லை; இரு தரப்பினுடைய படைகளும் வெனிஸ் நாட்டின் பகுதிகளுக்குள் நுழைந்தன; அதனுடைய செய்கைகளுக்குத் தவருன பொருள் கொள்ளப்பட்டதன் விளைவாக இறுதியில் பிரெஞ்சுக்காரர்கள் நகரத்தையே கைப்பற்ற முற்பட்டார்கள். அவர்களை எதிர்க்க வெனிஸால் இயலவில்லை. இது வரையில் 'ஆட்டோமனை எதிர்க்க ஐரோப்பாவின் கோட்டையாயிருந்தது' எனப் புகழ் பெற்று விளங்கிய வெனிஸ் நகரத்தில் போர்த்தன்மை முடிவை எய்தியது. நெப்போலிய னுடை பீரங்கிப் படைகள் நெடுந்தூரம் தாக்குவதற்கு ஏற்றனவா யிருந்ததால், வெனிஸைச் சுற்றியிருந்த காயல்கள் பாதுகாப்பிற்குப் பயனில்லாமற்போகவே, நகரம் வீரமின்றி நெப்போலியனிடம் புகலடைந்தது. அதன்பின் மக்களுடைய கருத்தை அறியாமலே நகரம் ஆஸ்திரிய அரசிடம் ஒப்படைக்கப்பட்டது. இவ்வாறு செய்த தற்கு வெனிஸ் மக்கள் கடுமையான எதிர்ப்பைத் தெரிவித்தனர். ஆஸ்திரியா வேறிடங்களிலுற்ற இழப்புக்களுக்கு வெனிஸ் அவர்கள் வயம் வந்தது ஈடு செய்வதாயமைந்தது.

## எகிப்தியப் படையெடுப்பு

காம்போ-பார்மியோ உடன்படிக்கைக்குப் பின், பிரான்சிற்கு, கிரேட் பிரிட்டன் நீங்கலாக வேறுபகைவர்கள் இல்லை. பிரிட்டிஷ் கப்பற்படையின் மேன்மை மிகப் பெரியதாயிருந்ததால், அதைத் தோற்கடிப்பதற்குப் பிரான்சால் இயலாதெனத் தோன்றியது. போரின் அடுத்த போக்குப் புதுமையாயிருந்தது. பிரான்சின் இயக்குநர்கள் நெப்போலியனை எகிப்தின்மீது படையெடுக்கும்படி உத்தரவிட்டார்கள். எகிப்து, துருக்கிய இராச்சியத்தின் ஒரு பகுதியாயிருந்தது. துருக்கிச் சுல்தானுக்கு எதிராகப் பிரான்சிற்கு எவ்வித மனக் குறையு மில்லை. ஆனல், எகிப்தின் மதிப்புடன்கூட, பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவிருக்கும் திசையில் அருகிலுள்ள ஒரு நாட்டில் நிலைபெறுவார் களானல், அது ஆங்கிலேயருடைய புகழுக்கும் அதிகாரத்திற்கும் பெரிய எதிர்ப்பாக இருக்கும் என்று எண்ணியதே படையெடுப்பிற்குக் காரணமாயிற்று. ஏற்கனவே, சூயஸ் கால்வாய் வெட்டுவதைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தனர்; அதனுடன் இந்திய மக்களின் உணர்ச்சிகளை யறியத் தூதர்களும் அனுப்பப்பட்டிருந்தார்கள்.

## எகிப்தியப் படையெடுப்பின் தோல்வி

எகிப்திற்குச் செல்லும் வழியில் நெப்போலியன் மால்டாவைப் பிடித்துக்கொண்டார். இத்தீவு அது வரையில் செயின்ட் ஜான்

பெயரால் வழங்கிய சங்கத்தைச் சேர்ந்த வாள் வீரர்களின்[1] வயமிருந்தது. நெப்போலியன் முன்னெச்சரிக்கையுடன் எகிப்தை அடைந்தார்; விரைவிலேயே அந்நாட்டின் தலைவரானார். எனினும், நைல் நதிச்சண்டையில்[2] நெல்சனும் பிரிட்டிஷ் கப்பற்படையும் பிரான்சுமீதுபெற்ற கடல் வெற்றி காரணமாக எகிப்தின் நிலைமை முற்றிலும் மாறியது. பிரான்சுடன் நெப்போலியன் தொடர்பு கொள்வது இயலாததாகச் செய்யப்பட்டதுடன் அவருடைய வருங்கால வாழ்க்கையும் தெளிவற்றதாயிருந்தது. அவர் சிரியாவைத்[3] தாக்கினார். ஆனால், ஏக்கரை[4] முற்றுகை செய்வதை விலக்க நேர்ந்தது. அவர் எகிப்திற்குத் திரும்பியவுடன் தமக்கு எதிராக அனுப்பப்பட்ட துருக்கியப் படைகளை எளிதில் வென்றார். அப்பொழுது ஐரோப்பிய நாடுகளுக்குள் இரண்டாம் முறையாகக் கூட்டுச் சேர்க்கை ஏற்பட்டிருக்கிறதாயும், பிரெஞ்சுப் படைகள் கடுந்தோல்விகளையடைந்திருந்ததாயும் அவருக்கு ஐரோப்பாவிலிருந்து செய்தி எட்டியது. அவர் பிரான்சிற்குத் திரும்ப முடிவு செய்தார். எகிப்தியப் படைகளைக் கீழ் அதிகாரிகளின் தலைமையில் ஒப்படைத்துவிட்டு, ஆங்கிலேயக் கப்பல்களால் பாதுகாப்பாக உலாவும் காவலில் வைக்கப்பட்டு இருந்த போதிலும், மத்திய தரைக் கடல் வழியாகப் பிரான்சின் கடற்கரையைச் சூழ்ச்சி செய்தடைந்தார்.

## நெப்போலியனின் மாண்பு

நெப்போலியன் எண்ணியவாறே ஐரோப்பியக் கூட்டுச் சேர்க்கையும் கடுமையாயிருந்தது. பிரஷ்யா ஒன்று சேராமல் தனித்திருந்தது. ரஷ்ய மன்னர்[5] இவ்வியக்கத்தில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். ரஷ்யப் படைகள் புகழ் வாய்ந்த தலைவரான சுவோரோவ்[6] தலைமையின் கீழ் இத்தாலியில் பிரெஞ்சுக்காரர்களை கடுந்தோல்வியுறச் செய்தன. அதனுடன் சுவோரோவ் ஜினேவா நகருக்குள் பிரெஞ்சுப் படைகளை விரட்டியடித்து வெளியேற முடியாதபடி செய்தார். நெப்போலியன் பிரான்சிற்கு வருவதற்குள்ளாகவே நிலைமை ஓரளவு சீர்பட்டிருந்தது. நேச நாட்டினர் அவர்களுக்குள்ளேயே சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள். எனவே, பிரான்சிற்குப் படையெடுப்பதன் மூலம் ஏற்படும் அச்சம் இல்லாமற் போயிற்று. இத்தாலியப் படையெடுப்புக் காரணமாக நெப்போலியன் பிரான்சின் தலைசிறந்த வீரரானார். எகிப்து நாட்டுப் படையொடுப்புக்களால் அவரது புகழ் மாசடையவில்லை. ஏனென்றால், அவர் போர் புரிந்த சண்டைகளிலெல்லாம் அவருக்கு வெற்றியே கிட்டிற்று. இங்கிலாந்தின் கடலாதிக்கத்தின் சத்தியை எதிர்த்துச் சண்டையிட அவருக்கு வாய்ப்பில்லாதிருந்தது.

[1] Knights of St. John. [2] Battle of the Nile. [3] Syria. [4] Acre.
[5] Czar. [6] Suvorof.

## இயக்குநர் குழு மதிப்பிழத்தல்

பொது மக்கள் வருங்காலத்தைப் பற்றி அவரிடம் நம்பிக்கை கொண்டிருந்தார்கள். எல்லாக் கட்சியினரும் பிரான்சில் அமைதியையும் ஒழுங்கையும் ஏற்படுத்த அவராலேதான் இயலுமென நம்பினார்கள். அவர் எண்ணியிருந்ததைத் தவிர மாறான திட்டங்களையும், அவர் கொண்டிருந்ததாக மக்கள் அவருக்கு மதிப்பு ஏற்றம் அளித்தார்கள். இயக்குநர் குழு கடுந்தொல்லைகளில் ஏற்கனவே சிக்குண்டிருந்தது. தொடக்கம் முதலே இயக்குநர் குழு, சட்ட சபைகளிடம் மாறான எண்ணங்கொண்டிருந்தது. நாளடைவில் அம்மாறுபட்ட எண்ணங்கள் ஆழமாக வேரூன்றலாயின. சமய, சமூக விடயங்களில் அவர்கள் பின் பற்றிய கொள்கை பெரும்பகுதியினருக்குச் சினத்தையுண்டுபண்ணு வதாயிருந்தது. அதனுடன் அக்கொள்கை வெற்றிகரமாயுமில்லை. ஒரு முறைக்கு மேலாகவே சட்டசபைகளுடன் நேரிடையாக அவர்கள் மோதியதோடு வல்லந்த முறைகளைப் பின்பற்றி அவர்களது முடிவுகளை அவற்றின்மீது திணித்தார்கள். இரண்டாவது கூட்டுச் சேர்க்கைக்குப் பின் பிரெஞ்சுப் படைகளுக்கு ஏற்பட்ட பேரிடர்கள் இயக்குநர் குழுவின் அதிகாரத்தைப் பாழ்படுத்தின. எனவே, பிரான்சினுடைய நிலையங்கள் அப்போதிருந்த நிலையில் நீண்ட நாள் நீடித்திரா என்பது தெளிவாயிற்று.

நெப்போலியனுடைய பேராவல் நாட்டில் மிக உயர்ந்த பதவியை அடைவதையே நோக்கமாகக் கொண்டிருந்தது. அவர் பிரான்சிற்கு வந்ததும் பல்வேறு அரசியல் நிபுணர்களுடன் பேச்சு வார்த்தைகளை நடத்தினர்; சீயேஸ்[1] என்பவர் தமக்கு முக்கிய ஆதரவளிப்பதாய்க் கண்டார். சிறந்த அரசியற்கொள்கை வல்லுநராகப் புரட்சியின் தொடக்கம் முதலே அவர் புகழடைந்திருந்தார்; அதனுடன் பிரான் சிற்கு மிகவும் தேவையாயிருந்த நல்ல அரசியலை ஏற்படுத்துவதற்குத் தக்க அரசியற்சட்டத்தைத் தம்மால் புதிதாக உண்டு பண்ண இயலும் என்ற நம்பிக்கையையும் கொண்டிருந்தார். அவருடைய கருத்துக்கள் எல்லாவற்றிலும் ஒத்துணர்வு கொள்ளாவிட்டாலும், நெப்போலியன் அவருடன் சேர்ந்தார். நெப்போலியனுடைய புகழும் மதிப்பும் மிகுதியாயிருந்ததால், நாட்டில் அவருடைய அதிகாரத்தையும் அவருடைய தோழர்களுடைய அதிகாரத்தையும் சண்டையின்றியும் படையைப் பயன்படுத்தாமலும் நிலைபெறச் செய்வதற்கான மாறுதல்களை அவர் செய்ய முடியுமென்பதும் எதிர்பார்க்கப்பட்டது. பாரிசில் வைக்கப்பட்டிருந்த வீரர்கள் அவருடைய அதிகாரத்தின்கீழ் வைக்கப்பட்டார்கள். சட்டசபைகளும் பாரிசுக்கு வெளியில் சிலமைல்

[1] Sieyes.

களுக்கப்பாலிருந்த செயின்ட் கிளௌட்[1] எனுமிடத்திற்கு மாற்றப்பட்டன. இயக்குநர்களுட் சிலர் நெப்போலியனுடைய வஞ்சனையான மறைபொருட் கருத்தை அறிந்து பதவி துறந்தனர். மற்றவர் பதவி துறக்கும்படி செய்யப்பட்டனர். இப்போது நெப்போலியனையும் சியேசுவையும், டுகோஸ்[2] என்பவரையும் சேர்த்து, பிரான்சில் நல்ல அரசாங்கம் ஏற்படவும் புதிய அரசியற்சட்டத்தைத் தயாரிக்கவும் ஒரு மூவாட்சியாளர்[3] குழுவையேற்படுத்தச் சட்டசபைகள் ஆணை பிறப்பிக்குமென நம்பினர். தொடக்கத்தில் எல்லாம் நன்றாகவே நடந்தன.

## புரூமைர்

ஆனால், இறுதியில் சட்டசபைகள் அவைகளுடைய சுதந்தரத்தை நன்கு மதித்திருந்தன என்பதும், தேவையான வாக்களிப்பைக் கட்டாயப்படுத்தினாலொழிய, கொடாவென்பது தெரிய வந்தன. நெப்போலியனைத் தாக்கியதாக ஒரு கற்பனை ஒரு சாக்காகக் கொள்ளப்பட்டது; கலகம் செய்த சட்டசபை உறுப்பினர்களைக் கலைப்பதற்குப் போர்ச் சேவகர் அழைக்கப்பட்டனர்; எஞ்சியிருந்த சிலர், பெரும்பான்மையோரின் சார்பில் தேவையான ஆணையை நிறைவேற்றினர். பொழுது போவதற்குள் 'புரூமைர் புரட்சி'[2] நிறைவேற்றப்பட்டது. ஆனால், நெப்போலியன் கான்சலோ, சருவாதிகாரியோ, பேரரசரோ ஆகவில்லை. ஆயினும், பிரான்சின் வரம்பிலா ஆட்சியேற்படுவதற்கான வழியில் அவர் செல்லலானார்.

[1] Saint cloud. [2] Ducos. [3] Triumvirate. [4] Brumaire Revolution.

*புதிய புரட்சிப் பஞ்சாங்கத்தின்படி, இந்நிகழ்ச்சி நடந்த மாதத்தின் பெயரால் இந்நிகழ்ச்சி குறிப்பிடப்பட்டது; இது விரைவிலேயே மீண்டும் பிரான்சில் தோற்றுவிக்கப்பட்ட பழைய முறைப்படி 1799ஆம் ஆண்டு நவம்பர் 10ஆம் தேதியாகும்.*

*பிரெஞ்சுப் புரட்சியைப் போன்று வேறெந்த வரலாற்றுப் பகுதியைப் பற்றியும் அவ்வளவு அதிகமான நூல்கள் எழுதப்படவில்லை. ஆங்கிலத்தில் படிக்கிறவர்களுக்கு, கார்டினர் அம்மையாரும், ஜே. எச். ரோசும் எழுதிய சுருக்கங்கள் பெரும்பயனுள்ளனவாகும். பெரிய வரலாறுகளாயக் கார்லைல் மிக்னட்டு, மார்சு ஸ்டீபன்ஸ் எனபோர் எழுதியவை, இவ்வியக்கத்தை முற்றிலும மாறுபட்ட கருத்துக்களிலிருந்து நோக்குவனவாகும. போரைப்பற்றியும் நெப்போலியனுடைய இளமை வாழ்க்கையைப் பற்றியும் திரு. ஜே. எச். ரோஸ் எழுதியுள்ள 'நெப்போலியனின் வாழ்க்கை' என்னும் நூல் மிகச் சிறந்ததாகும். 'ஃபைப்' என்பார் எழுதியுள்ள 'நவீன ஐரோப்பா' என்னும் நூல் 1792 முதல் ஐரோப்பாவின் வரலாற்றை வேறெங்கும் காண இயலாதவாறு மிக நன்றாக விவரித்து எழுதப்பட்டுள்ளது. வால்டர் ஸ்காட்டின் 'நெப்போலியனின் வாழ்க்கை', அக்காலத்து நிகழ்ச்சிகளை அறிய இன்றும் விருப்புடன் படிக்கக் கூடிய நூலாகும்.*

# 15. நெப்போலியன்

## நெப்போலியனின் தொடக்க வாழ்க்கை

புரூமைர் புரட்சியின் பயனாக நெப்போலியன் பதவிபெற்றார். நவீன வரலாற்றில் வேறெவரைக்காட்டிலும், நெப்போலியனைப்பற்றி அதிகமான நூல்களும் உரையாடல்களும் ஏற்பட்டுள்ளன. அவருடைய வாழ்க்கையிலும் ஒழுக்கம், சால்பு, பண்பியல்பு ஆகியவைகளிற் காணப்படும் பல குறிப்புக்களைப்பற்றி மாறுபாடான கருத்துக்கள் எப்பொழுதும் இருந்துகொண்டேயிருக்கும். அவர் முதலிற் புரட்சியைத் தீவிரமான உருவில் ஆதரித்தவராயும் ரோபஸ்பியரைச் சுற்றியிருந்த கூட்டத்தினரோடு சேர்ந்தவராயும் காணப்பட்டார்; புரட்சிப் படைகளுடன் போரில் ஈடுபட்டிருக்கிறார்; டூலூன் முற்றுகையின் போது விரைவாக உட்காட்சிகளை நுண்ணிய ஆராய்ச்சி வாயிலாக அறிவதிலும், அஞ்சா நெஞ்சம் படைத்திருந்ததிலும் சிறப்புற்று விளங்கினார். வெண்டிமியார் கலகத்தை அடக்குவதற்காக இத்தாலியப் படையின் தலைவராக அவர் எவ்வாறு நியமிக்கப்பட்டார் என்பதையும், அந்நாள் முதல் அவரது அதிகார வளர்ச்சி எவ்வாறு தடையில்லாதிருந்தது என்பதையும் முன்னர் நாம் கண்டோம். அவருடைய வாழ்க்கையை நோக்குமிடத்து அவர் இராணுவ முறையில் மிகச் சிறந்த மேதை என்பதும், படையெடுப்பை நடத்துவதிலும் சண்டையை இயக்குவதிலும் திறமை வாய்ந்தவர் என்பதும் தெரியவருகின்றன. அத்துடன் பிரான்சு அரசாங்கத்தில் அவர் செய்கைகள் சமாதான காலத்தில் விவகாரங்களை நடத்துவதிலும் மிகவுயர்ந்த திறமையைப் பெற்றிருந்தார் என்பதும் மெய்ப்பிக்கப்படுகிறது. பெரிய திட்டங்களை உருவாக்குவதற்குரிய தெளிவான கற்பனைத்திறன் அவரிடம் காணப்பட்டது. அவர் சிறு விவரங்களைப் பற்றியும் நுட்பமாய் அறிந்திருந்ததால், எடுத்ததைத் திறமையாகச் செய்யும் ஆற்றலும் அவரிடமிருந்தது. அவருடைய திட்டங்களிற் பல, புரட்சியின் கருத்துக்களுடனும் பிரான்சின் பழைய வரலாற்றுடனும் ஒத்தனவாயுமிருந்தன. அவர் நாடு

ஒற்றுமைப்பட்டு மையத்திலிருந்து திறமையாக ஆட்சி செய்யப்படு வதைக் காண விரும்பினர்; சிறப்புரிமையின் சின்னம் மறுபடியும் தோன்றுவதற்கு ஒப்பவில்லை; சமரசத்தை விரும்பிய எல்லா வகுப்பாரை யும் ஒத்துவாழச் செய்வதில் நோக்கமாயிருந்தார்; நாட்டின் நலம் அல்லது அவருடைய அதிகாரம் இவைகளைக் கடுமையாக எதிர்த்தவர்கள் என்று மெய்ப்பிக்கப்பட்டவர்களைத் தாக்கினர். அதிகாரத்தின் மீது அளவில்லாப் பேராசையும் ஆர்வமும் அவரது வாழ்க்கை முழுவதிலும் காணப்படாமல் இருந்திருந்தால், நாகரிக வளர்ச்சியின் பகராள்களில் மிகப்பெரியவரான ஒருவரைச் சரித்திரம் அறிந்திருக்கும். நடந்ததில் பிரான்சிலும் ஐரோப்பாவிலும் பல நன்மை பயக்கும் மாற்றங்களுக்கு அவர் காரணமாயிருந்ததைக் காண்பதுடன் பதினைந்து ஆண்டுகள் தொடர்ந்து நடந்த போர்கட்குக் காரணமாயும், சில சமயங்களில் குறைபாட்டுடன் கூடிய காரணமாயுமிருந்ததைக் காண்கிறோம்.

## சேயசின் திட்டங்கள்

அவருடைய முதல்வேலை, புருமையர் புரட்சி நாளன்று வாக் களித்தபடி, புதிய அரசியற் சட்டத்தைத் தயாரிப்பதாயிருந்தது. இது பற்றி நெப்போலியனும் சேயசும் அவர்களுடைய நோக்கங்களில் பெரிதும் மாறுபட்டிருந்தார்கள். சேயசு விநோதமானதும் புதுமை யானதும் அமைப்பில் சமநிலையுள்ளதுமான அரசியற்சட்டமியற்று வதைக் குறியாகக் கொண்டார். இதன்படி, அரசாங்கத்தின் தலைவ ராக மிக்குயர் தேர்வாளர் என வ்ழங்கப்படும் குற்றத்தண்டனை அதிகாரி[1] யாயிருப்பார். இவர் ஆடம்பரமான நாட்டுத்தலைவரைக் காட்டிலும் சிறிது மிகுதியான அதிகாரம் பெற்றிருப்பார். ஆனல், நெப்போலியன், அரசாங்கத்தின் தலைமைப்பதவி சுருசுருப்பும் பயனுள்ளதும் ஆட்சிபுரிபவரிடம் இருக்க வேண்டும் என்னும் முடிவான கருத்தைக் கொண்டிருந்தார். ஆதலின், அவருடைய கருத்து வலிமையும் விவகாரங்களில் அவரது ஆதிக்கமும் அவருடைய கூட்டாளியை விரைவிலேயே ஒதுக்கித் தள்ளின.

## அரசியற்சட்டம் ஏற்றுக்கொள்ளப்படுதல்

### செனேட்டு—விசாரணைக்குழு

நெப்போலியனல் ஏற்றுகொள்ளப்பட்ட திட்டத்தின்படி துரைத் தனத்தின் செயற்குழு முதலாம் கான்சலிடத்திலும் அவர் தோழரான இருவரிடத்திலும் இருக்க வேண்டுவதென்றும், இவ்விருவரும் கான்

[1] Magistrate.

சல்கள் என வழங்கப்பட்ட போதிலும், முதலாம் கான்சலின் கீழ் அதிகாரிகளாகத்தான் இருக்கவேண்டுமென்றும் கூறப்பட்டது. முதலாம் கான்சல் படைகளின்மீது கட்டியாள்கையும் தூதர்களை நியமனம் செய்யும் அதிகாரமும் நாட்டில் செயற்பாட்டு இயந்திரத்தை இயக்குவதில் முழு அதிகாரமும் பெற்று இருக்க வேண்டுமென்பதும் கண்டிருந்தது. அவருக்குத் துணையாக அரசாங்கச்சபையை அவரே நியமித்துக்கொள்ளவேண்டுமென்றும், அச்சபைதான் சட்டங்களை இயற்றும் என்றும் கூறப்பட்டிருந்தது. ஓரளவு மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் வேறு பல சபைகளுமிருந்தன என்றாலும், இப்புதிய முறையின் போக்கு மிகக்குறுகிய எல்லைக்குள் தேர்ந்தெடுக்கும் முறையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதாகும். இது புரட்சியின் தொடக்கத்தில் எல்லா நடவடிக்கைகளிலும் காணப்பட்ட தேர்தலில் மக்கள் ஊக்கத்திற்கு எதிராய் இருந்தது. இன்றியமையாத கீழ்ச் சபையில்[1] கன்சர்வேட்டிவ்களாக (பழைமை வாதிகள்) அறுபது உறுப்பினர்கள் இருக்கவேண்டுமென்றும், இவர்கள் முதலில் கான்சல்களால் நியமிக்கப்படவேண்டுமென்றும், பின்பு காலியிடங்கள் ஏற்படும் பொழுது செனேட்டுச் சபையே அக்காலியிடங்களை நிறைவு செய்து மற்றக் குழுக்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், சபையில் கொண்டு வரப்படும் எந்தக் கருத்தும் அரசியற்சட்டத்துடன் இசைவாக உள்ளதா இல்லையா என்பதை முடிவு செய்ய வேண்டுமென்றும், அறுபது பேர் கொண்ட செனேட்டுச் சபைக்கு அடுத்ததாகச் செனேட்டுச்சபையால் நியமிக்கப்பட்டதும் நூறு உறுப்பினர்களைக் கொண்டதுமான விசாரணைக் குழுவு[2]மிருந்தது. இச்சபைக்கே வாதம் செய்யும் உரிமையளிக்கப்பட்டிருந்தது. சட்டமியற்றும் கொள்கைகள் எல்லாம் இச்சபையில் கொண்டுவந்து விவாதிக்கப்பட வேண்டும். கொள்கைகள் விசாரணைக்குழுவால் ஏற்றுக்கொள்ளப் பட்டால், செனேட்டால் நியமிக்கப்பட்டதும் முந்நூறு உறுப்பினர்களைக் கொண்டதுமான சட்டசபையென வழங்கப்பட்ட சபையின் முன்னர் வைக்கப்படவேண்டும். இச்சபையிலுள்ளவர்கள், சபையின் முன்னர்க் கொண்டு வரப்பட்ட கொள்கைகளைப் பற்றி விசாரணைக்குழுவிலுள்ள உறுப்பினர்களுடைய வாதங்களைக் கேட்டு, அதன்பின் காரணம் காட்டாமலும் சொல்லாடலின்றியும் வாக்களிக்க வேண்டும். இத்தகைய அரசியற்சட்டம் நெடுநாள் நீடித்திருக்க இயலாது. நீடித்திருந்ததற்குள்ளாகவே முதலாம் கான்சலும் அவருடைய அரசாங்க சபையும் நாளுக்குநாள் மேலோங்கிப் பயனுள்ள பகுதியாயும் அரசாங்கத்தில் விளங்கினர்.

[1] Senate. [2] Tribunate.

## ஆஸ்திரியாவின்மீது தாக்குதல்

அரசியற்சட்டத்தை ஏற்றுக்கொண்டவுடனே நெப்போலியன் இத்தாலிமீது படையெடுத்துச் சென்றார். தொடக்கத்தில் கூட்டிற்குக் கிடைத்த வெற்றிகள் தொடர்ந்து ஏற்படவில்லை. ஆனால், ஆஸ்திரியர்களும் அவர்களுடைய நேச நாட்டினரும் இத்தாலியின் வடபாகத்தில் ஆதிக்கம் பெற்றிருந்தனர்; அதனுடன் ரைன் நதியின் மேற்பகுதியின் எல்லைக்கு அச்சமும் விளைவித்தனர். 1796-ல் நடந்தது போல நெப்போலியன் இத்தாலிமீது படையெடுக்கத் தயாரானார். படைத் தலைவரான மோரே[1] டான்யூபு பகுதியில், ஆஸ்திரியர்களைத் தாக்க ஆயத்தமானார். இப்படையெடுப்பில், நெப்போலியனுக்கு அவர் பங்கெடுத்துக் கொண்டவைகளில் ஏற்பட்டதைப் போலவே இதிலும் வெற்றி இன்றியமையாத தேவையாயிருந்தது. அவருடைய இராணுவ வெற்றிகளின் ஒளியினாலேதான், பிரான்சில் அவருக்குப் பதவி கிடைத்தது. அவருடைய அதிகாரத்திற்கு வெற்றியே எப்பொழுதும் காரணமாயிருந்தது. தோல்வி உடனே அவரது அதிகாரத்தை அழித்திருக்கும். சமாதானம் ஏற்பட்டிருப்பின், பிரெஞ்சு மக்கள், தங்களுடைய பழைய குறிக்கோள்களான சுதந்திரத்திலும் சமத்துவத்திலும் நம்பிக்கை, சுதந்தரமான அரசியற்சட்டம், உண்மையான குடியரசு முதலியவைகளில் மீண்டும் கருத்தைச் செலுத்தியிருப்பார்கள்.

## படையெடுப்பும் மாரங்கோச் சண்டையும்

### லுனேவில் சமாதானம்

1800-ல் நிகழ்ந்த படையெடுப்பு முழுவதுமே மிகச் சிறப்பாயிருந்ததுடன் இறுதியில் வெற்றியாயுமிருந்தது. முதலில் புகழ் பெற்றுள்ளதும், ஓரமயம் அளவுக்கு மீறிப் புகழப்பட்டதுமான ஆல்ப்ஸ் மலையைக் கடந்ததன் விளைவாக நெப்போலியன் அவருடைய படைகளுடன் இத்தாலியில் ஆஸ்திரியப் படைகளின் பின் எதிர்ப்பாராதவாறு சென்றடைந்ததாகும் அவர் மிலானை வயப்படுத்திக் கொண்டார்; பின்பு ஜினோவாவை நோக்கி முன்னேறினர். அப்பொழுதுதான் ஆஸ்திரியப் படையினர் அந்நகரை வயப்படுத்திக் கொண்டிருந்தனர். ஜூன் மாதத்தில் மாரங்கோச்[2] சண்டை நிகழ்ந்தது. முதலில அச்சண்டை பிரெஞ்சுக்காரருக்கு முடிவான தடையையுண்டுபண்ணும் போலத் தோன்றியது, ஆனல், நல்ல தருணத்தில் புதிய படைகள் வந்து சேர்ந்ததால் நெப்போலியன் இழந்திருந்த பகுதியை மீட்டு, ஆஸ்திரியப் படையை வெல்ல முடிந்தது தற்காலிகமாகச் செய்து கொண்ட சமாதானத்தின்படி ஆஸ்திரியர்கள் இத்தாலியின் வடகிழக்கு

[1] Moreau. [2] Marengo.

மூலைக்கு அவர்கள் படைகளுடன் பின்னடைந்தார்கள். எனினும், இப்போதுகூட ஆஸ்திரியர்கள் நிலையான சமாதானத்தைச் செய்து கொள்ள விரும்பவில்லை. 1800 டிசம்பரில் படைத்தலைவரான மோரே, பவேரியாவில் ஹோஹன்லிண்டன்[1] எனுமிடத்தில் ஆஸ்திரியர்களைத் தோற்கடித்தார். இத்தோல்வியும் மாரெங்கோத் தோல்வியைப் போலப் படுதோல்வியாயிருந்தது. எனவே, ஆஸ்திரிய அரசாங்கம் கீழ்ப்படிய நேர்ந்ததுடன் சமாதானத்தையும் கோர வேண்டியதாயிற்று இதன் பயன் 1801-ல் பிப்பிரவரி மாதத்தில் லுனேவில் சமாதானம்[2] கையெழுத்தானதாகும். காம்போ-போர் மியோச் சமாதானத்தின் நிபந்தனைகள் புதுப்பிக்கப்பட்டன. அதனுடன் இத்தாலியில் அடிகே ஆற்றுக்கு அப்பாலிருந்த பகுதிகளை யெல்லாம் ஆஸ்திரியா கைவிட நேர்ந்ததுடன், ரைன் நதிக்கு மேற்கிலிருந்த எல்லா ஜெர்மானியப் பகுதிகளையும் பிரான்சிடம் நிபந்தனையின்றி ஒப்படைத்தது. இதன் பின்பு கிரேட்பிரிட்டன் மாத்திரம் பிரான்சிற்கு எதிராகப் போரிட்டுக்கொண்டிருந்தது. ஒரு கணம் ஒரு பெரிய கூட்டால் அந்நாட்டிற்கு மனநிறைவின்றி பிரான்சுடன் சமாதானம் செய்துகொள்ளும்படி கட்டாயப்படுத்தப்படும் போலத் தோன்றியது.

## கிரேட்பிரிட்டனுக்கெதிராகச் சங்கம்

### அமீன்ஸ் சமாதானம்

கிரேட்பிரிட்டன் அதன் விருப்பப்படி கடலாதிக்கத்தைப் பயன் படுத்தியதை வல்லரசுகள் குறை கூறின. அதாவது, பகைவர்களுக்குச் சொந்தமான சாமான்களை ஏற்றிச் செல்லும் கப்பல்களை அதற்கு ஐயமேற்படின், நிறுத்திச் சோதனை செய்யும் உரிமையைக் கிரேட் பிரிட்டன் கொண்டாடியது. இந்த நடைமுறைக்குப் பல முறை ஏற்கனவே எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டிருந்தது. இப்பொழுது ரஷ்யா, டென்மார்க்கு, சுவீடன், பிரஷ்யா ஆகிய நாடுகள் இவ்வுரிமைகளைத் தடை செய்வதற்காகக் கூட்டுச் சேர்ந்தன. அரைப்பித்தராயிருந்த ரஷ்யா மன்னரான முதலாம் பால், இத்திட்டத்தில் முழு மூச்சுடன் இறங்கி நெப்போலியனோடு நட்புக்கொண்டார். எனினும், கிரேட் பிரிட்டனுடைய நாவாய் வலிமை இவர்களுடைய எதிர்ப்பிற்கும் விஞ்சி யிருந்தது. 1801 ஏப்பிரலில் கோபன்ஹேகன் சண்டை[3] வல்லரசு களின் கூட்டையழித்தது. முதலாவது பால் ஏற்கனவே சதிக்கொலைச் செய்யப்பட்டிருந்ததால் பிரிட்டனுடைய கடலாதிக்கத்தின் வலிமை யைக் குன்றும்படி செய்ய வழியிலலை. எனவே, 1802 மார்ச்சு மாதத்தில் ஐரோப்பாவின் சமாதானம், அமீன்ஸ் சமாதானத்தால்,[4]

[1] Hohenlinden. [2] Peace of Lunaville. [3] Battle of Copenhegan.
[4] Peace of Amiens.

முற்றுப் பெற்றது. இச்சமாதானம் பிரிட்டனுக்கும் பிரான்சிற்கும் ஏற்பட்டது. டிரினிடாடு, சிலோன் எனும் தீவுகளைத் தவிர ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்ற மற்றெல்லாப் பகுதிகளும் அவர்களைச் சேர வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. இவ்வுடன்படிக்கையின் முக்கியப் பிரிவு பிரான்சிடமிருந்து ஆங்கிலேயர் கைப்பற்றிய மால்டாத் தீவு சில நிபந்தனைக்குட்பட்டு, செயின்ட்ஜான் வாள்வீரர் வயம் விடுவதென்பதைக் குறிப்பதாகும். இப்பிரிவுகள் அடுத்து நிகழ்ந்த ஐரோப்பாப் பெரும்போருக்கு பெரிதும் காரணமாயிருந்ததை விரைவிலேயே காண்போம்.

## ஜெர்மனியின் உரு மாற்றம்

### ஜெர்மனியில் பிரான்சின் அரசியல் தந்திரத்தின் நோக்கங்கள்

இதற்கிடையில் நெப்போலியன் இணையற்ற இராணுவ வெற்றிகளின் புகழை நுகர்ந்ததோடு சென்ற பத்தாண்டுகளாகப் பயனில்லாது விரும்பிக்கொண்டிருந்த அமைதியை ஐரோப்பாவிற்கு அளித்த பெருமையையும் பெற்றார். அண்மையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளின் விளைவாக இச்சமயத்தில் ஜெர்மனி விரைவாக உருமாற்றத்தை அடைந்து கொண்டிருந்தது. மீண்டும் மீண்டும் பிரான்சு பெற்ற வெற்றிகள், பழைய பேரரசின் அமைப்பு ஜெர்மனியைக் காப்பாற்றுவதற்கு முற்றிலும் திறமையற்றிருந்ததை மெய்ப்பித்தது. காம்போ-பார்மியோச் சமாதானத்திலும், மீண்டும் லுனேவில் சமாதானத்திலும் ஜெர்மனியில் பெரிய மாறுதல்கள் ஏற்படுவதைக் குறிப்பாக அறிவித்தது. பேரரசின் டயட் சபையினுடைய தூதுக் குழு வல்லரசுகளான பிரான்சு, ரஷ்யா, ஓரளவு வல்லரசான ஆஸ்திரியா முதலிய நாடுகளால் நடைமுறையில் முடிவு செய்யப்பட்டிருந்தபடி ஜெர்மனி நாடுகளுக்குச் சொந்தமாயிருந்தவைகளுடைய தொடர்புகளைப் பற்றிய மாறுதல்களை ஏற்றுக்கொள்ளுவதற்காகக் கூட்டப்பட்டது. பிரஷ்யாவையும், ஆஸ்திரியாவையும் ஜெர்மனியின் கிழக்கு நோக்கித் தள்ள வேண்டியதும், மேற்கிலும் தென்மேற்கிலுமிருந்த அரசுகளைப் பிரான்சினுடைய பாதுகாப்பின்கீழ்க் கொண்டு வருவதும் நெப்போலியனுடைய தலைமுயற்சியாயிருந்தன. இதனால் பவேரியா, பேடன், உர்ட்டெம்பர்கு[1] முதலிய சிற்றரசுகள் மேற்கு ஜெர்மனியில் மிகவும் அதிகமான எண்ணிக்கையுடன் காணப்பட்ட, சமயம் சார்ந்த நாடுகளைச் சேர்த்துக் கொண்டதால் அதிகமான நிலப்பகுதிகளைப் பெற்றன, பிரான்சின் உதவியால் ஏற்பட்ட வெற்றியின் பயனாகச் சேர்க்கப்பட்ட அவ்வரசுகள் பாதுகாத்தலினாலேயே நிலைபெற்றிருக்கக்கூடியனவாயிருக்குமென்றும், எனவே மேற்கு ஜெர்மானிய அரசுகள் பிரான்சுடன்

[1] Wurtemberg.

நட்புறவுடன் இருக்குமென்றும் நெப்போலியன் நம்பினர். சமயம் சார்ந்த நாடுகள் அதிகக் கையூட்டுகட்கும் திறமையின்மைக்கும் பெயர் பெற்றிருந்ததால், இம்மாறுதல்கள் நாட்டில் நல்லாட்சியையும் சீரான வளத்தையும் உண்டாக்கத் துணை புரிந்தன. பெயரளவில் பேரரசு நிலைத்திருந்தது; நீண்ட நாள்களுக்கு முன்னதாகவே அதன் உருவம் மறைந்து அதன் நிழலே எஞ்சியிருந்தது; அதுவும் மறையத் தொடங்கியது. ஐந்து ஆண்டுகள் வரை பேரரசின் நிழல் கண்ணுக்குமட்டும் புலப்பட்டுக் கொண்டிருந்தது.

## நெப்போலியனது உள் நாட்டுக் கொள்கை

**ஒற்றுமைப்பத்திரம்**

அமீன்ஸ் சமாதானம் ஏற்பட்டதன் பயனாக உள்நாட்டுச் செய்திகளைத் திருத்தியமைப்பதில் நெப்போலியனுடைய கவனம் சென்றது. முதலில் அவர் சமயப் பிரச்சினையில் தீர்வு காணுவதில் விருப்பங் கொண்டார். சட்டசபை அறிவுக் கூர்மையற்ற 'குருமார்களின் சிவில் அரசியலமைப்பை' நிறைவேற்றியது முதல், பிரான்சினுடைய வலிமையின்மைக்கு இது ஒரு முக்கிய காரணமாயிருந்து வந்தது. நெப்போலியனுடைய சமயக் கொள்கை முற்றிலும் அரசியல் நோக்கத்தின் அடிப்படையில் எழுந்ததாகும். கத்தோலிக்கத் திருச்சபையின் அதிகாரம் எவ்வளவு அதிகமாயிருந்ததென்றும் மக்களுட் பெரும்பாலார் எந்த அளவிலே உண்மையில் அதனிடம் பற்றுக் கொண்டிருந்தனர் என்பதையும் அறிந்தபின் சமய நிலை சீர்படாமலிருக்கும்வரை எந்நாடும் நிலைபெற்றிருக்க முடியாதென்பதையும் கருத்தில் கொண்டார். குடியரசுப் படைத்தலைவர்களைக் காட்டிலும், தாம் போப்பாண்டவரின் ஆட்சிக்குச் சாதகமாய் இருந்ததை அவர் ஏற்கனவே வெளிக்காட்டியுள்ளார்; மாரெங்கோச் சண்டை முடிந்தவுடனே போப்பு ஏழாம் பயசுடன்[1] பேச்சுவார்த்தை தொடங்கினர். போப்பாண்டவரைச் சேர்ந்தன அல்லவென்று விலக்கப்பட்டிருந்த பகுதிகள், மீண்டும் அவருக்கு உரிமையாக்கப்பட்டன. இதற்குப் பதிலாக ஒற்றுமைப் பத்திரம்[2] அல்லது பிரான்சில் சமய விடயங்களில் ஏற்பாடு என்பதை ஏற்றுக்கொள்ளுமாறு தூண்டப்பட்டார் (1802: ஈஸ்டர்). இதனால் கத்தோலிக்கத் திருச்சபை மீண்டும் நிலைபெறச் செய்யப்பெற்று, அரசாங்கத்தால் அறமானியங்கள் அளிக்கப்பட்டன. முதல் கான்சல் என்ற முறையில் சமயம் சார்ந்த உயர் அதிகாரிகளை நியமிப்பதில் நெப்போலியனுக்கு உரிமை கிடைத்தது. இதனால் புரட்சிக்கு முன் திருச்சபைத் தொடர்பான பிரான்சு மன்னர்களுக்கு இருந்த பதவியைப் பெற்றார். ஒற்றுமைப் பத்திரத்தை

[1] Pope Pius. VII. [2] Concorda

சமயத் துன்புறுத்தல் பற்றிய எந்த நடவடிக்கைகளுடனும் சேர்க்கக் கூடாதென்று ஏற்பாடாயிற்று; சமயச் சகிப்பு உறுதியாக அறிவிப்புச் செய்யப்பட்டது. கத்தோலிக்கச் சமயத்துடன் மற்றச் சமயக்குருமார்கள் அரசாங்கப் பணியில் அமர்த்தப்பட்டு ஊதியம் வழங்கப்பெற்றூர்கள். ஒற்றுமைப்பத்திரத்தின் தன்மை இவ்வாறிருந்தது.

## உயிருள்ள கட்டளைகள்

இதையடுத்து, போப்பாண்டவரைக் கலவாமல் வெளியிட்டதும், பிரான்சின் திருச்சபைகளைக் கட்டுப்படுத்தக் கூடியவையென்று அறிவிக்கப்பட்டவையுமான உயிருள்ள கட்டளைகளை நெப்போலியன் வெளியிட்டபோது அவை போப்பாண்டவரால் ஏற்றுக்கொள்ளத் தக்கவைகளாய் இல்லை. பிரான்சிற்குப் போப்பாண்டவரிடமிருந்து ஆணைகள் வருதல் கூடாது; அரசாங்கத்தின் உடன்பாடின்றித் திருச் சபையின் கூட்டங்கள் நடக்கக்கூடாது; எந்த மேற்றிராணியாரும் அவருடைய சமய ஆட்சிப் பகுதியிலிருந்து போப்பாண்டவரின் வரவழைக்கும் கட்டளையின்படி புறப்பட்டுச்செல்லக் கூடாது என்பதும் அறிவிக்கப்பட்டது. 1682-ல் வெளியிடப்பட்டனவும், அக்காலத்தி லிருந்த போப்பாண்டவர்களால் கடுமையாக மறுக்கப்பட்டனவுமான 'கல்லிகன் சுதந்தரங்கள்'[1] பிரான்சின் திருச்சபை, மக்கள் இவர்களைத் தொடர்ந்து கட்டுப்படுத்தக் கூடியன என்று அறிவிக்கப்பட்டது. இவ்வுயிருள்ள கட்டளைகளைப் போப்பாண்டவர் முன்னரே அறிந் திருப்பாரானுல், ஒற்றுமைப் பத்திரத்தை ஒரமயம் ஏற்றுக்கொள்ளாம லிருந்திருக்கலாம். ஆயினும், ஏற்றுக்கொண்ட அளவில், எல்லா குரு மார்களும் மேற்றிராணியார்களும் அதன்படி பதவி வகிக்க இசைந் தார்கள். பிரான்சில் சமய ஒற்றுமை மீட்கப்பட்டது. இதன் பயனுக அரசாங்கம் பெரிதளவு வலிமை பெற்றது.

## நன்மதிப்பு அணி

எல்லாப் பட்டங்களையும் அணிச்சின்னங்களையும் குடியரசு நீக்கம் செய்தது. ஆனுல் 1802-ல் நெப்போலியன் பிரெஞ்சு மக்கள் இயல் புகள் தனிச்சிறப்புப் பெறத் தக்கவையென்று கூறி அவருடைய புகழ் வாய்ந்த நன்மதிப்பு அணியை[2] நிறுவினுர். புதிதாகத் தோற்று விக்கப்பட்ட இந்நிறுவனம் மக்களின் நன்மதிப்பைப் பெற்றிருந்ததால் நீக்கப்படாமல் இருந்து வருகிறது.

[1] Gallican Liberties. [2] Legion of Honour.

கல்வியின்மீதும் நெப்போலியன் கவனத்தைச் செலுத்தினர்; பிரான்சு பல்கலைக்கழகத்தை நிறுவினர்; இது பாரிசில் தலைமை நிறுவனமாயிருந்துகொண்டு மாகாணங்களில் தன்கீழ்ப் பதினேழு கல்விக்கழகங்களைக் கொண்டிருந்தது. இதுவரை பல முயற்சிகள் செய்யப்பட்டும் உண்மையாக ஒன்றும் செய்யப்படாதிருந்ததால் தொடக்க உயர்நிலைக் கல்விகளையும் ஒழுங்காக அமைத்தார்.

## நெப்போலியன் சட்டத்தொகுப்புக்கள்

பிரான்சில் நீதி முறையில் அவர் செய்தவை, இக்காலத்தில் செய்யப்பட்டவைகளிலெல்லாம் மிகச்சிறப்பு வாய்ந்ததாகும். அவருடைய பயிற்சியெல்லாம் போர் வீரரைப் பற்றியதாயிருந்ததாலும், சட்ட விஷயங்களைப் பற்றிய சிறப்பான அறிவு அவருக்கில்லாவிட்டாலும், விரைவிலேயே பிரான்சின் சட்டமியற்றும் முறையையும் அதனுடன் தொடர்பு கொண்டிருந்த பிரச்சினையையும் நன்கு அறிந்துகொண்டார்; ரோம் நாட்டுப் பேரரசர்களான தியோடோசியஸ்[1] ஜஸ்டினியன்[2] முதலானோர் ரோமானியச் சட்டங்களைப் பல நூற்றாண்டுகளுக்கு முன் தொகுத்ததைப் போன்று, பிரான்சின் சட்டங்களையும் வகைப்படுத்த உறுதி பூண்டார்; இவ்வேலையைச் செய்ய அரசாங்க ஆணைக் குழுவை நிறுவினர். சிறிது காலத்திற்குள் ஐந்து பெரிய சட்டத் தொகுப்புக்கள் தொகுக்கப்பெற்றன. சில விஷயங்களில் அவை பிற்போக்கான போக்கை வெளிப்படுத்தின. புரட்சிக்காலத்தில் சட்டமியற்றுவோரால் பயன்படுத்தப்பட்ட அளவுக்கு, தீர்ப்புச் சான்றுளர் குழு[3] பயன்படுமாறு செய்யப்படவில்லை. தண்டனை விதிக்கும் தொகுப்பில்[4] சூடு போடுதல் ஏற்றுக்கொள்ளப்பட்டது; சொத்துப் பறிமுதல் செய்வதற்கு உடன்பாடு அளிக்கப்பட்டது. வன்கொலையொறுத்தல் போலக் கடிய உழைப்புக் கடிதாக்கப்பட்டது. எனினும் சட்டத் தொகுப்புக்களின் கொள்கைகள் பகுத்தறிவைக் கொண்டிருந்ததால் பொதுப்பயன் மக்களுக்கு நலந்தருவதாயிருந்தது என்பது பற்றி ஐயமில்லை.

## கிரேட்பிரிட்டனுடன் மீண்டும் போர்த் தொடக்கம்

போற்றற்குரிய சமாதான வேலையில் நெப்போலியன் ஈடுபட்டிருந்தபோது ஐரோப்பாவின் அடிவானத்தில் மிகப் பயங்கரமான போர் மேகம் திரண்டுகொண்டிருந்தது. அமீன்ஸ் சமாதானம் கையெழுத்தான பிறகு நெப்போலியனுக்கும் பிரிட்டனுக்குமிடையே உறவுகள் மனநிறைவளிப்பனவாயில்லை; இப்பொழுது பிளவு ஏற்படும் போலிருந்தது. புதிதாக ஏற்பட்ட போரின் காரணங்களைப் பற்றி விவாதம் இன்றும்

[1] Theodosius. [2] Justinian. [3] Jury. [4] Penal Code.

நடந்து கொண்டிருக்கிறது. ஆனால், அதன் பொதுவான கூறுகள் தெளிவாய் உள்ளன. நெப்போலியனைப் பொறுத்த வரையில் சமாதானம்முடிந்தது முதல் அவருடைய செய்கைகள் பல விதங்களில் சினத்தைத் தோற்றுவிப்பனவாயிருந்தன என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டும். பிரான்சிற்குச் சொந்தமாயிருந்தவைகளிற் பெரும்பகுதிகள் அவரால் சேர்க்கப்பட்டவை. சிஸ்ஆல்பைன் குடியரசைப் பிரான்சுடன் அவரே வெற்றி மூலம் இணைத்தார். இப்பகுதி அதற்கு முன், இத்தாலியின் வடபாகத்தில் சுதந்தர நாடாயிருந்தது. 1802-ல் சிஸ்ஆல்பைன் குடியரசிற்கு அவரே மக்களின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## இத்தாலி, சுவிட்சர்லாந்தை வசமாக்கிக்கொள்ளுதல்

### சத்திச் சமநிலை கவிழ்தல்

சிறிது காலத்திற்குப் பின் இது இத்தாலி இராச்சியமாயிற்று. பீட்மான்டு[1] திட்டமாய் வெற்றி மூலம் சேர்க்கப்பட்டது. பார்மாவும்,[2] எல்பாவும்[3] பிரான்சைச் சேர்ந்தவைகளென அறிவிக்கப்பட்டன. சுவிட்சர்லாந்தின்மீது அவர் எடுத்த நடவடிக்கைகள் கடுஞ்சினமூட்டுவனவாய் இருந்தன. பதினைன்காம் நூற்றாண்டிலிருந்து சுயேச்சையாயிருந்த சுவிஸ் குடியரசு[4] ஜனநாயகவாதிகளும் சிறு குழுவாட்சியை[5] எதிர்த்தும் மத்திய அரசாங்கத்தை விரும்பியவர்கள், கான்டன்ஸ்களின்[6] சுதந்தரம் நிலைபெறுவதை விரும்பியவர்களை எதிர்த்துமுண்டான உள்நாட்டுச் சண்டைகளால் தொல்லையுற்றிருந்தது. இத்தருணத்தைப் பயன்படுத்திக்கொண்டு நெப்போலியன் சுவிட்சர்லாந்தை அதன் தொல்லைகளிலிருந்து காப்பாற்ற வேண்டும் எனக் கூறி நாட்டைக் கைப்பற்றியபின் சுவிட்சர்லாந்தின் சுதந்தரம் பெயரளவில் நிலைத்திருந்தது. எனினும், அது முதல் அந்நாடு பிரெஞ்சுப் படைக்குப் போர் வீரர்களை ஏராளமாக அனுப்பி உதவ வேண்டியதாயிற்று. நடைமுறையில் அந்நாடும் பிரெஞ்சுப் பகுதிகளுள் ஒன்றாயிற்று. இதைத் தவிர ஐரோப்பாவில் பிரான்சிற்குச் சொந்தமாயிருந்த நிலப்பகுதிகள் இவ்வாறு வளர்ந்துகொண்டிருந்தபோது, நெப்போலியனுடைய பார்வை மீண்டும் எகிப்தின்மீதும் இந்தியாமீதுங்கூடத் திருப்பியது என்பதற்குச் சான்று இருந்தது. அவருடைய ஆணையாளர்கள் கிழக்குப் பகுதிகளுக்கு அனுப்பிய அறிக்கைகளிலிருந்து விரைவிலேயே நைல்நதிச் சண்டையின் பயனாக அவர் கைவிட நேர்ந்த திட்டங்களை மீண்டும் மேற்கொள்ள வேண்டியதொரு நோக்கத்தை அறிவிப்பது போலத் தோன்றியது. லூனேவில் சமாதானத்தால் ஏற்படுத்தப்பட்ட

[1] Piedmont. [2] Parma. [3] Elba. [4] The Helvetic Republic. [5] Oligarchs. [6] Cantons.

சத்திச்சமநிலை ஏற்கனவே நிலை குலைந்திருந்தது. அவ்வாறு சமநிலை கவிழ்க்கப்படுவதைத் தடை செய்ய ஐரோப்பா அடிக்கடி சண்டை செய்ய நேர்ந்தது.

## மால்டாப் பிரச்சினை

சமாதானத்தின் பயன்களைக் குறித்து இங்கிலாந்தில் அதிக ஏமாற்றம் காணப்பட்டது. அது வாணிக வளர்ச்சிக்கு வழியுண்டு பண்ணுமென நம்பிக்கையிருந்தது; ஆனால் இரு நாடுகட்குமிடையே வாணிக உடன்படிக்கை ஏற்படுவதைப் பிரான்சு ஏற்றுக்கொள்ளா தென்பது தெரிந்தது. இங்கிலாந்திற்கு எதிராக முழு வாணிக விலக்குதலைக் குறிக்கும் ஓர் எல்லையை நிலை நிறுத்துவதில் நெப்போலியன் உறுதியாயிருந்தார். ஆங்கிலேய அரசாங்கமும் மால்டாவைக் கைவிட மறுத்தது. உடன்படிக்கையுடன் இணைக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகள் நிறைவேற்றப்படவில்லை. அவற்றை நிறைவேற்றுவதற்கு இங்கிலாந்து எவ்வித முயற்சியையும் மேற்கொள்ள வில்லையென்பது உறுதியாயிற்று. சமாதானமான காலத்தில் ஐரோப்பாவில். பிரான்சின் அதிகாரம் விரைவாக முன்னேறுவதே இத்தீவை ஆங்கிலேயர்கள் தங்கள் வயம் வைத்துக்கொள்ளப் போதுமான சாக்காகக் கருதப்பட்டது. தவிர மத்தியதரைக்கடலில் நாவாய் வலிமையுள்ள எந்த நாட்டினுடைய கடற்சண்டை நடவடிக்கைகளுக்கும் முக்கியமான அடிப்படையாக இத்தீவை அமைத்துக்கொள்ளலாம். பாரிசிற்கு ஆங்கிலேயத் தூதர் அனுப்பப்பட்டார். முதலிலேயே எக்காரணம் பற்றியும் மால்டாவைக் கைவிடுவதை ஏற்றுக்கொள்ளக் கூடாது என அவருக்குக் கட்டளையிடப்பட்டது. இராணுவக் காரணங்களுக்காகவும் அதன்மீது உரிமையைக் கைவிடுவதால் தம்முடைய மதிப்பிற்கு இழுக்கு ஏற்படும் என்றெண்ணி நெப்போலியன் இத்தீவைப் பெறுவதை வற்புறுத்தி வந்ததால், தொடக்கத்திலிருந்தே ஒரு வேளை போர் ஏற்படக்கூடும் போன்றிருந்தது. 1803-ல் போர்ப் பேரறிவுப்புச் செய்யப்பட்டது.

## நெப்போலியன் வாழ்நாள் முழுதும் கான்சல்

### ஏங்கீன் கோமகனுர் தூக்கிலிடப்படுதல்

போரைத் தொடர்ந்து செல்லுமுன் பேரரசுப் பட்டத்தை ஏற்க விரைவில் வழி செய்த நெப்போலியனுடைய சொந்த நிலைமை பற்றிய மாறுதல்களைத் தொடர்ந்து அறிவது நலமாகும். அமீன்ஸ் சமாதானத்தையடுத்து, அவருக்கு வாழ்நாள் முழுவதும் கான்சல் பதவியையளிக்கும் கருத்துத் தெரிவிக்கப்பட்டது. அப்பொழுது அவர் இப்பதவியை ஒரு குறிப்பிட்ட ஆண்டு வரைதான் பெற்றிருக்கலாமென

இருந்தது. இக்கருத்துப் பொதுமக்களின் வாக்களிப்பிற்கு விடப்பட்ட பொழுது முப்பத்தைந்து இலட்சம் பேர் அவருக்குச் சாதகமாகவும், எண்ணாயிரம் பேர் பாதகமாகவும் வாக்களித்தனர். அதே நேரத்தில் அரசியற்சட்டமும், வரம்பிலா ஆட்சியை ஏற்படுத்துவதற்கு உதவியாக மாற்றியமைக்கப்பட்டது. குறிப்பாக, நீதி விசாரணைக் குழு இதுவரை தன் வாதங்கள் சுதந்தர உணர்ச்சியையும் திறனாய்வு இயல்பையும் உயிருள்ளனவாகச் செய்து கொண்டிருந்ததை இனி மறைமுகமாக நடத்துமாறும், அதன் அறிக்கைகளை வெளியிடாதவாறும் ஆணை பிறப்பிக்கப்பட்டது. இதையடுத்து, அவருடைய உயிர் அல்லது அதிகாரத்தை எதிர்த்துச் சதிகள் நடந்ததாக அறிவிக்கப்பட்டது. பிரான்சின் தலைசிறந்த வீரர்களும், நாடு கடத்தப்பட்டவர்களும் ஜெர்மனியில் இப்போது வெற்றி பெற்றவர்களுமான பிசக்ரு[1] மோரே[2] போன்றவர்கள், நெப்போலியனை வெறுத்திருந்தவர்களுடன் கூட்டுச் சேர்ந்தார்கள். சதிகள் கண்டுபிடிக்கப்பட்டு அதன் தலைவர்கள் பல விதத் தண்டனைக்குள்ளானார்கள். போர்போன் இளவரசரான டி. என்கீன் கோமகனார்[3] பிரான்சின் எல்லைகட்கு அப்பால் வசித்து வந்தார். அண்மையில் நடந்த சதியில் தொடர்பு கொண்டிருந்ததாக நெப்போலியனால் ஐயமுறப்பட்டு, கைது செய்யப்பட்டு, சருவதேச உரிமைகட்கு மாறாகப் பாரிசிற்குக் கொண்டுவரப்பட்டு, இராணுவ நீதி மன்றத்தால் தண்டனை விதிக்கப்பட்டு தூக்கிலிடப்பட்டார்.

## பேரரசர் நெப்போலியன்

நெப்போலியனுடைய வாழ்க்கையில் இச்செய்கையைப் போல வேறெந்தச் செயலும் ஐரோப்பாவைத் துணுக்குறச் செய்யவில்லை. நெப்போலியனுடைய அதிகாரத்தைக் குறித்து ஏற்பட்ட இத்தாக்குதல்களையும், புதிய ஐரோப்பியப் போர் உருவாகிக்கொண்டிருந்ததையும் கண்ட அவருடைய ஆதரவாளர்கள், நெப்போலியனுக்கு அப்பொழுது அவர் பூண்டிருந்த பட்டப் பதவியைவிட மிகுதியான பட்டப் பதவியை அளிப்பது வாயிலாகப் பிரான்சு அவரிடம் கொண்டிருந்த நம்பிக்கையை நன்கு தெரியப்படுத்திக்கொள்ளுவது நலமாயிருக்கும் எனக் கருதினார்கள். சிறிது காலமாகவே, பேரரசர் என்ற பட்டம் மக்களின் கருத்தில் தோன்றியிருந்தது. நீதி விசாரணைக் குழுவில் முடிவான கருத்து வெளியிடப்பட்டு, 1804 மே மாதத்தில், செனேட்டின் ஆணைப்படி அவருக்குப்பேரரசர் என்னும் பட்டம் அளிக்கப்பெற்றது. நெப்போலியன் அரசியல் வாழ்க்கையின் உச்சியை எட்டினார். போப்பு ஏழாம் பயசு பாரிசிற்குவந்து நெப்போலியன் பட்டமேற்கும் விழாவில் தலைமை வகிக்குமாறு தூண்டப் பெற்றார் என்பதை நோக்குமிடத்து அவரது பதவியுயர்வு பெரிதும் வியக்கத்தக்கதாயிருந்தது. புதிய பேரரசர், பழைய

[1] Pichegru. [2] Moreau. [3] Duke d' Enghien.

இராணுவப் பதவியும் உயர்தனித் தலைவர் எனப்படுவதுமான 'மார்ஷல்' என்னும் பட்டத்தை மீண்டும் ஏற்படுத்தி, பிரான்சின் கொடியின்கீழ்த் திறமையுடன் போரிட்டு, ஐரோப்பாவின் புகழைப் பெற்றிருந்தவர்களான இருபது சிறந்த போர் வீரர்களுக்கு அளித்தார்.

## பிரான்சிற்கு எதிராக மூன்றாவது கூட்டு

### இங்கிலாந்தின் படையெடுப்பின் தோல்வி

இப்பொழுது ஏற்பட்ட போரில் ஸ்பெயினைத் தன்னோடு நட்புரிமை கொள்ளுமாறு பிரான்சு தூண்டியது. இதுநீங்கலாக, பிரான்சு, ஐரோப்பாவில் முன்னணியிலிருந்த நாடுகளின் கூட்டுக்கு எதிராகத் தனித்து நின்றது. கிரேட்பிரிட்டன் முதலில் எவ்வித உதவியுமின்றி இருந்தது. பிரஷ்யா, ஜெர்மனியில் தன் நிலைமை உறுதியாகவுள்ளதென நம்பி, பயனுள்ள முறையில் உதவியை அளிக்கவில்லை. ஆனால் சுவீடனும், ரஷ்யாவும், ஆஸ்திரியாவும் விரைவில் ஒன்று சேர்ந்தன. அவற்றின் நோக்கம் பிரான்சின் அதிகாரத்தை அதன் பழைய எல்லைக்குள் இருக்கச் செய்வதுதான் என்பதை அறிவித்தன. இங்கிலாந்தின்மீது படையெடுத்து இப்படையெடுப்பிற்கே உறுதியாய் லண்டனில் தம் சொற்களை மறுக்காமலேற்கச் செய்வதையே நெப்போலியன் தமது வெற்றியின் முதல் நோக்கமாகக் கொண்டிருந்தார். இங்கிலீஷ் கால்வாயில் போலோன்[1] அருகில் படையையும் மரக்கலங்களின் கூட்டத்தையும் ஆயத்தஞ்செய்வதால் அவருடைய திட்டம் நடைமுறையில் இயலக்கூடுமென்று பிடிவாதமான நம்பிக்கை கொண்டிருந்தார். ஆனால், பிரிட்டிஷ் கடலாதிக்கம் இத்திட்டத்தை மிகவும் பேரிடர் நிறைந்ததாகச் செய்தது. கால்வாயிலிருந்து கப்பற்படையை ஏமாற்றுவதற்கு அல்லது விரட்டுவதற்கான முயற்சிகள் பயனற்றனவாயின. பிரான்சும் ஸ்பெயினும் ஒன்று சேர்ந்த கப்பற்படைமீது டிரபால்கர்[2] என்னுமிடத்தில் நெல்சன் மிகவும் விஞ்சிய வெற்றியை அடைவதற்கு முன்னதாகவே (1805 அக்டோபர்) நெப்போலியன் அவரது படையெடுக்கும் திட்டத்தைக் கைவிட்டார்.

இவ்வாறு படையெடுப்புத் தோல்வியுடன் தொடங்கியது. ஆனால், இத்தோல்வியைப் பற்றிய உள்ளக்கருத்து ஜெர்மனியில் நெப்போலியன் பெற்ற வியக்கத்தக்க வெற்றிகளால் விரைவிலேயே அழிந்து போயிற்று. அவருடைய படைகள் டான்யூபு நதியின்மேல் வடி நிலத்தில் பல துறைகள் வழியாகச் சென்று ஒன்றுசேர்ந்து குவியும்படி செலுத்தப்பட்டன. தொடர்ந்து நடந்த படையெடுப்பு, அமைப்பிலும் முன்னேக்கத்திலும் வியக்கத்தக்கதாயிருந்தது. முதலில் தாம் பெறப்

[1] Boulogne. [2] Trafalgar.

போகும் வெற்றிகளைக் குறித்துத் தற்பெருமை கொண்டிருந்த ஆஸ்திரியப் படைத்தலைவரான மாக்கு[1] என்பார் உல்ம்[2] என்னு மிடத்தில் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டுள்ளதைக் கண்டார்; முப்பத்து மூவாயிரம் வீரர்களுடன் சரணடையும்படி செய்யப்பட்டார். அதன்பின் நெப்போலியன் வியன்னுவை நோக்கி முன்னேறினுர். நேச நாடுகளுடன் பிரஷ்யா சேர்ந்திருக்குமானல், நிலைமை பிரான்சிற்கு மிகவும் இடருள்ளதாயிருந்திருக்கும் ஆனல், அந்நாட்டு மன்னரான மூன்ரும் பிரெடரிக்கு வில்லியத்தின்கீழ், பிரஷ்யா நிலையற்றதும் பயனற்றதுமான கொள்கையைப் பின்பற்றியதால், நெப்போலியன் ஆஸ்திரியா, ரஷ்யா நாடுகளைத் தனியாக எதிர்த்துத் தாக்கினுர்.

## ஆஸ்டர்லிட்ஸ்

பிரஸ்பர்கு உடன்படிக்கை

1805 டிசம்பர் இரண்டாம் நாள் படைகள் ஆஸ்டர்லிட்ஸ்[3] எனுமிடத்தில் பெரிய போரில் சந்தித்தன. இதன்விளைவு நெப்போலிய னுடைய வெற்றிகளில் எல்லாம் அவருடைய இராணுவ மேதையை மிகவும் வியக்கத்தக்கதாகச் செய்வதாயிருந்தது. பகைவன் படுதோல்வி அடைந்தான். வியன்னு நெப்போலியன் வயமிருந்தது. சார் இப் பேரிடரினின்றும் பின்வாங்க முடிந்ததால் தம்மை நற்பேறுடையவராக நினைத்தார். ஆஸ்திரியாவின் எதிர்ப்பு முறியடிக்கப்பட்டது. 1805 டிசம்பரில் பிரஸ்பர்கு உடன்படிக்கையை[4] ஏற்றுக்கொள்ளுமாறு ஆஸ்திரியா கட்டாயப்படுத்தப்பட்டது. தலைதூக்க முடியாத தோல்வியை அடைந்து நெப்போலியனேடு ஆஸ்திரியா செய்து கொண்ட இவ்வுடன்படிக்கை மூன்ருவதாகும்.

## புனித ரோமப் பேரரசின் முடிவு

ஆஸ்திரியாவின் வீழ்ச்சியைத் தொடர்ந்து புனித ரோமப் பேரரசு மறையலாயிற்று. இப்பேரரசு பத்தாவது நூற்ருண்டில் மகா ஆட்டோ வின்[5] ஆட்சிமுதல் நிலைபெற்றிருந்தது. ஒரு விதத்தில் எட்டாவது நூற்ருண்டில் சார்ல்மெயின் ஆட்சிக்காலம் முதலும், மேலும் நோக்கினுல் பழைய ரோமானியச் சீசர்களான பேரரசர்கள் வழித் தோன்றல்களுடைய நினைவிற்குக் கொண்டு செல்லும்படியாகவு மிருந்தது. அடிக்கடி முயற்சிகள் செய்யப்பெற்றும், அப்பேரரசிற்கு வலிமையையும் திறமையையும் அளிக்க மேற்கொண்ட ஒவ்வொரு முயற்சியும் தோல்வியுற்றது என்பதை நாம் முன்னரே கண்டுள்ளோம்.

[1] General Mack. [2] Ulm. [3] Austerlitz. [4] Treaty of Pressburg.
[5] Otto the Great.

ஒவ்வொரு பத்தாண்டும் செல்லச்செல்ல, அது வலிமையற்றதாகிக் கொண்டே வந்ததுடன், ஐயமின்றிப் போலியும் காலவழுவும் ஆயிற்று. நெப்போலியன் பேரரசர் என்ற பட்டத்தைப் பெற்றபொழுது பேரரச ரான பிரான்ஸிஸ் தம்மை ஆஸ்திரியாப் பேரரசர் எனக் கூறிக்கொண் டார். இப்பொழுது (1806) எவருக்கும் துன்பத்தைத் தோற்றுவிக்காமல் புனித ரோமப் பேரரசு அழிந்தது.

## பிரஷ்யாவை எதிர்த்துப் போர்

ஆஸ்திரியாவின் வீழ்ச்சிக்குப்பின், சிறிது காலத்திலேயே நெப்போலியனுக்கும் பிரஷ்யாவிற்குமிடைய போர் மூண்டது. இது வரையில் பிரெஞ்சு அரசியல் தந்திரத்தால் பிரஷ்யா மிகக் கவனமாக நடத்தப்பட்டு வந்ததால், 1795 க்குப் பின் பிரான்சை எதிர்த்து அது சண்டை செய்யவில்லை; அப்படியிருந்த போதிலும், இப்பொழுது ஜெர்மனியில் மிகவும் கீழ்ப்படிந்த நிலைமைக்குத் தான் உட்படுத்தப்பட்ட தாக அறிந்துகொண்டது. நெப்போலியன் மேற்கு ஜெர்மனியில் உள்ள சிற்றரசுகளை ரைன் நதியினுடைய நாட்டுக்கூட்டமென்று வழங்கப்பட்ட ஒரு குழுவை ஏற்படுத்திப் பிரஷ்ய அரசிற்கெதிராகப் போட்டியை உண்டு பண்ணினர். அதைவிடப் பிரஷ்யாவிற்கு அரை குறையாக அளிக்கப்பட்ட வாக்குறுதிகளும் காப்பாற்றப்படவில்லை. அதனுடைய இராச்சியத்துடன் ஹனேவர் இராச்சியத்தை வெற்றியின் வாயிலாக இணைப்பதை எதிர்பார்த்திருந்தது. ஆனால், அவ்வெண்ணம் உருப்பெறவில்லை. பிரஷ்யா பேரரசுப் பட்டத்தை ஏற்கவேண்டு மென்பது ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால், இப்பொழுது அத்திட்டத்தை நிறைவேற்றுவதற்கு எவ்வித ஊக்கமும் அளிக்கப்பட வில்லை. இறுதியில், காலந்தாழ்த்துவது அதை மேலும் தாழ்வுறும் நிலைமைக்குக் கொண்டுபோய் விடும் என்றும், சாக்ஸனி ரஷ்யா இவற்றின் உறவில் நம்பிக்கை கொண்டதாய்ப் பிரான்சை எதிர்த்துப் போர் அறிவிப்புச் செய்தது.

## பிரஷ்யாவின் வீழ்ச்சி

தொடர்ந்து நடந்த போர்கள் நெப்போலியனின் வெற்றிகளில் பெருவியப்பையுண்டாக்குவனவாயிருந்தன. ரஷ்யப் படைகளின் மாண்பு சிறிதும் குறையவில்லை. மகாபிரெடரிக்கின் பெயரும், அவரால் நிலைநிறுத்தப்பட்ட மரபும், பிரஷ்யப்படைகள் திறமைக்கும் வெற்றிக்கும் உறுதியளிப்பனவாயமைந்தன. ஆனால், உண்மையில் மகாபிரெ டரிக்கின் மரபுகள் சிலகாலமாக, பிரஷ்யப் படைகளுக்கு உறுதியான குறைகளாயமைந்தன. இதற்குக் காரணம், நெப்போலியனல் தோற்றுவிக்கப்பட்ட புதிய போர் முறைகளை மேற்கொள்ளாமல் அம்

மரபுகள் தடுத்ததேயாகும். 1806 அக்டோபரில் ஜீனுச் சண்டையென்று வழக்கத்தில் வந்துள்ள இரு சண்டையில் பிரஷ்யப் படைகள் அழிக்கப்பட்டன. இது ஐரோப்பா முழுவதிலும் எல்லாவற்றையும் விஞ்சிய வியப்பாயமைந்தது. இதைவிட மேலும் தாழ்வுறு செயல் நிகழவிருந்தது. ஜீனுவில் பிரஷ்யப்படைகள் தோற்கடிக்கப்பட்டன. அதைத் தொடர்ந்து நடைபெற்றவை அவற்றுக்கு மானக்கேட்டையுண்டு பண்ணின. பெரிய பாதுகாப்புப் படைகளுடனும், தேவையான உணவுப் பொருள்களுடனும், வலுவாகப் பலப்படுத்தப்பட்டிருந்த கோட்டைகள் ஒன்றன்பின் ஒன்ருக அளவிற் குறைந்த பிரெஞ்சுப் படைகளிடம் புகலடைந்தன. ஒரே தாக்குதலில் பெரிய நாடுகளின் பட்டியலிலிருந்து பிரஷ்யா திடீரென நீக்கப்பட்டது போலத் தோன்றியது. ரஷ்யாவின் உதவியை நம்பிக்கொண்டு வடகிழக்கில், மன்னர் கடுமையாக எதிர்த்து நின்ருர். ஆனல், 1807 ஜூன் மாதத்தில் பிரஷ்யப் படைகளும் ரஷ்யப்படைகளும் படுகொலை போன்றிருந்த ஃபிரீட்லாந்து[1] சண்டையில் மீண்டும் தோற்கடிக்கப்பட்டன. பிரஷ்யாவும் ரஷ்யாவும் சமாதானத்தை ஏற்றுக்கொண்டன.

## டில்சிட்டுச் சமாதானம்

### வெஸ்ட்பேலியா இராச்சியமும், வார்சாக்கோமகனுர் நாடும்

நெப்போலியனுடைய வாழ்க்கையின் உச்சநிலையைக் குறிக்கும் டில்சிட்டுச் சமாதானம்[2] புகழ் வாய்ந்தது. சாருக்கும், நெப்போலியனுக்கும் இடையே நட்புறவான உருவத்தை இது அடைந்தது. இதன்படி நெப்போலியனுடைய திட்டங்கட்கு அவருடைய பகைவர்கட்கு—குறிப்பாக இங்கிலாந்திற்கு—எதிராக ரஷ்யா உதவி செய்வதாக வாக்களித்தது. இச்சமாதானத்தால் ரஷ்ய ஒன்றையும் இழக்கவில்லை. ஆனல், பிரஷ்யாமீது வெற்றியாளருடைய தாக்குதல் மிகக் கடுமையாய் இருந்தது. பிரஷ்யாவின் மேற்கிலிருந்த நிலங்கள் பிரிக்கப்பட்டு, வெஸ்ட்பேலியா இராச்சியமாகச் செய்யப்பெற்று, நெப்போலியனுடைய உடன் பிறந்தார்களுள் ஒருவருக்குக் கொடுக்கப்பட்டது. ரஷ்யாவைச் சேர்ந்த போலந்தின் நிலப்பகுதிகள் சுதந்தரமான வார்சாக் கோமகனுர் நாடாக அமைக்கப்பட்டு, சாக்ஸனி மன்னருக்குக் கொடுக்கப்பட்டது. குறிப்பிடப்பட்டதும், குறைந்த எண்ணிக்கையை உடையதுமான படைக்கு அதிகமான பெரிய படையைப் பிரஷ்யா வைத்துக்கொள்வதற்கு இசைவு அளிக்கப்படவில்லை. பிரெஞ்சுப் படைகள் நாட்டை ஆக்கிரமித்துக்கொண்டிருந்தன.

[1] Friedlan. [2] Peace of Tilsit.

## கிரேட் பிரிட்டனுக்கு எதிராக வாணிகக் கட்டளைகள்

டென்மார்க்குமீதும் போர்த்துகல்மீதும் பிரிட்டிஷ் ஆதிக்கம்

இப்பொழுது பகைவராக எஞ்சியிருந்தது, கிரேட் பிரிட்டனே. அது டிரபால்கர் சண்டைக்குப்பின் தோற்கடிக்க முடியாததாகத் தோன்றியது. கடலில் அதைத் தோற்கடிக்க முடியாமற் போனாலும், அதன் வாணிகத்தை அழிக்க நெப்போலியன் எண்ணினார். 1806 நவம்பரில் அவருடைய புகழ் பெற்ற பெர்லின் கட்டளைகளை[1] வெளியிட்டார். அதன்படி அவர் ஆட்சியின்கீழிருந்த ஐரோப்பியக் கடற்கரைத் துறைமுகங்கள் யாவும் பிரிட்டிஷ் வியாபாரத்திற்கு இடமளிக்காமல் மூடப்பட்டன. இவ்வாறு செய்வதால், இங்கிலாந்தில் வலிமை பெற்று வாணிகம் செய்யும் இனத்தாரை அழிப்பது வாயிலாக, கிரேட் பிரிட்டனை அடி பணியச்செய்ய முடியுமென்று எண்ணினார். ஆனால், இப்படிச் செய்வதால் பகைவரைக்காட்டிலும் அவருடைய இராச்சியம் மிகக் கொடுமையான துன்பத்தை நுகர நேரிடும் என்பதை அறிந்துகொள்ளவில்லை. இக்கட்டளைகளை எதிர்த்து, கிரேட்பிரிட்டன் ஆலோசனைக் குழுவின் உடன்பாட்டைப் பெற்ற ஆணைகளை[2] வெளியிட்டது. இதன்படி பெர்லின் கட்டளைகள் பின்னிடும் வரையில் ஐரோப்பாவின் கடற்கரைகள் வியாபாரம் செய்வதினின்றும் தடைசெய்யப்பட்டு மூடப்பட்டுள்ளதையும் நெப்போலியனுடைய இராச்சியத்திலுள்ள துறைமுகங்கள் ஒன்றோடொன்று வியாபாரம் செய்வதையும் தடைசெய்தது. மேற்கு ஐரோப்பாவில் நெப்போலியனுடைய அதிகாரத்திற்கு வெளியில் இருசிறு நாடுகளான டென்மார்க்கும் போர்த்துகலும் இருந்தன. டென்மார்க்கில் அவருடைய திட்டங்கள் பிரிட்டிஷ் கடற்படையாலும் ஆங்கில அமைச்சரான கானிங் பிரபுவினுடைய சுறுசுறுப்பான செயல்களாலும் முறியடிக்கப்பட்டன. ஒரு பிரெஞ்சுப்படை போர்த்துகல்மீது படையெடுத்ததன் விளைவாக அரசகுடும்பம் பிரேசிலில்[3] தஞ்சம் புகுந்தது.

## நெப்போலியனின் வெற்றிக்குக் காரணங்கள்

டில்சிட்டுச் சமாதானத்திற்குப் பின் நெப்போலியன் இறந்திருப்பாரானால், அவர் இயற்கை கடந்த நிலையை அடைந்தவராகக் கருதப்பட்டிருப்பார். வெற்றியில்லாமல் இதுவரை எந்த முயற்சியிலும் அவர் ஈடுபடவில்லை. தரையில் அவர் பெற்ற பல பெரிய வெற்றிகளில், பிரிட்டிஷ் கடற்படையிடம் அவர் பெற்ற தோல்விகள் மறையலாயின. ஒவ்வொரு ஐரோப்பிய நாடும் ஒன்றன்பின் ஒன்றாக அவரோடு

[1] Berlin Decrees. [2] Orders in Council. [3] Brazil.

மோதின; ஒவ்வொன்றிலும் பிரெஞ்சுப் படைகள் அவற்றின் மேன்மையை ஐயமின்றி வெளிப்படுத்தின. அதன்பயன் வியக்கத் தக்கதாயிருந்ததே தவிர, இயற்கைக்கு மாருனதாய் இல்லை. இவ் வெற்றிகளுக்குக் காரணமாக நெப்போலியனுடைய இராணுவமேதை, போர்த்துறைகளில் அவருடைய திறன், போர் முறைகளில் காணப்பட்ட புதுப்பாங்குடைமை, சுறுசுறுப்புடன் அவற்றைக் கையாண்டமை முதலியவைகளைக் கூறவேண்டும். அவற்றுடன் போர்க்களத்திற்கு அனுப்பப்பட்ட பிரெஞ்சுப் படைகளுக்கும் எதிர்த்துச் சண்டையிட்ட படைகளுக்குமிடையே காணப்பட்ட தன்மையையும் காரணமாகக் கொள்ள வேண்டும்.

## பிரான்சு மக்கள் ஆயுதந்தாங்குதல்

### பிரான்சு அதனுடைய ஆயுதங்களாலேயே கவிழ்ந்து போதல்

பிரான்சு நாடே போர்க்கருவி தாங்கியிருந்தது;அதன் தலைவரைக் குறித்துச் செருக்குக் கொண்டிருந்தது. பிரெஞ்சு மக்களும் தாம் ஈடு பட்டிருந்த இயக்கத்தில் மிக்க ஆர்வமுடையவராயிருந்தார்கள். எதிராக வேறு நாட்டினங்கள் இல்லை. மக்களுக்குப் பதிலாக அரசாங்கங்களிருந்தன. ஆட்சி செய்த இவை, மக்களுடைய கருத்து, ஒற்றுமையுணர்ச்சி இவற்றிலிருந்து பெரும்பாலும் பிரிந்து காணப் பட்டன. தவிர, இவை கட்டாயத்தினலோ அல்லது ஊதியம் கொடுப் பதனலோ திரட்டப்பட்டுப் போருக்குக்கொண்டுவரப்பட்ட படைகளை நம்பியிருந்தன. அவைகள் சண்டையிட்ட இயக்கத்தின் வெற்றியில் எவ்விதத் தம் உணர்வும் இல்லாமலிருந்தன. ஐரோப்பிய அரசாங்கங்களை நெப்போலியனல் வெல்ல முடிந்தது. இவற்றை யடுத்து ஐரோப்பிய மக்கள் எதிர்த்து எழுந்தபொழுது, நெப்போலியன் தோல்வியுற்ருர். மக்கள் இவ்வாறு எதிர்த்தெழுந்ததற்குப் போர் அவர்களைப் பற்றியது என்ற நம்பிக்கை மேலீட்டாலும், துரைத்தனத் தாருடைய ஆணை அல்லது வல்லந்தத் தூண்டுதலினுலும் அல்லாமல், பழி வாங்குவதில் அவர்களுக்கிருந்த ஆர்வமிகுதியும் பேராவலும் நன்கு போரிடுவதற்கு அவர்களை ஆயத்தம் செய்ததாலும், நெப்போலியன் தோல்வியுற நேர்ந்தது. அதனுடன் பிரெஞ்சுப் புரட்சியின் நிகழ்ச்சி நிரலில் கண்டவற்றில் பெரும்பகுதியை ஐரோப்பா வில் பல பகுதிகள் ஏற்றுக்கொண்டிருந்தும், அந்நாடுகள் புரட்சிக் கொள்கைகளின் உருவான நெப்போலியனை எதிர்த்துச் சண்டை செய்தன என்பதையும் நாம் கவனிக்கவேண்டும். இறுதியில் பிரான்சு தோற்றுவித்த கருத்துக்கள், சீர்திருத்தங்கள், போர் முறைகள் இவை களாலேயே பிரான்சு கவிழ்க்கப்பட்டதென்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

## பிரஷ்யாவில் சீர்திருத்தங்கள்

### ஸ்டெயின்

டில்சிட்டுச் சமாதானம் ஏற்பட்ட காலத்திலிருந்தே நம்முடைய விருப்பம் பிரான்சிடமும் அதன் பேரரசரிடமும் இல்லாமல் பேரரசரை எதிர்த்து ஒன்றன்பின் ஒன்ருக எழுந்த பல நாடுகளின்மீது தான் சென்றது. பிரஷ்யாவில் ஒரு புதியவுணர்ச்சி ஆரவாரத்துடன் எழுந்தது. நாட்டின் சிவில்படை முறைகளிலும் மிக முக்கியச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. பிரஷ்யாவின் வரலாற்றில் இக்காலம் வீரமான காலமாகும். அந்நாட்டுப்படைகளுக்கு ஏற்பட்ட கடுமையான இடையூறுகளையும் பொருட்படுத்தாது, அடக்கமாகத் தோல்வியுருத் தைரியத்தையும் கொண்டு நல்ல காலம் வரும் என்ற எதிர் நோக்கத்துடன் படைகளைத் திருத்தியமைத்துத் துரைத்தனத்தை ஒழுங்கு படுத்தத் தொடங்கியது. இம்மாறுதல்கள் ஏற்படுவதற்கு முக்கிய ஏஜென்டாயிருந்தவர் ஸ்டெயின்[1] என்பவராவர். அவர் தொடர்ச்சியாகக் கட்டளைகளை நிறைவேற்றுவது வாயிலாக அடிமைத்தனத்தை ஒழித்து நாட்டின் ஆட்சியில் குடிபானவர்கள் நேரிடையான ஊக்கம் கொள்ளுமாறு செய்தார் அதே நேரத்தில் ஷாரன்ஹார்ஸ்ட்[2] படையில் புதிய முறைகளைத் தோற்றுவித்தார். இராணுவ ஊழியம் ஏற்கனவே கட்டாயமாக்கப்பட்டிருந்தது. ஆயினும், அது உண்மையில் குடியானவர்களாயிருந்த அடிமைகளைப் பற்றியதாகவேயிருந்தது; இப்பொழுது எல்லோரையும் கட்டுப்படுத்தக்கூடியதாயிற்று. படை வரிசைகளில் புதிய மதிப்புணர்ச்சியும், மேலான நாட்டுப்பற்றும் தோன்றத் தொடங்கின. இவ்வாறு உருவான படை இறுதியில் நெப்போலியனுடைய வலிமையைச் சிதைக்கலாயிற்று.

## ஸ்பெயின்

### ஜோசப்பு போனபார்ட்டு ஸ்பெயின் மன்னராதல்

ஆனல், நெப்போலியன்மீது ஏற்பட்ட வெற்றித்தாக்குதல் முதன் முதலாகப் பிரஷ்யாவால் நடக்கவில்லை சிறிதும் எதிர்பாராமலிருந்த ஐரோப்பாவின் ஒரு பகுதியிலிருந்து அது ஏற்பட்டது. நம்பிக்கையற்றுச் சீர்குலைதலிலும் அரசியல் உணர்வின்மையிலும் மூழ்கியிருந்த ஸ்பெயினைப் போல ஐரோப்பாவில் வேறெந்தப் பகுதியும் காணப்படவில்லை. ஸ்பெயின் மிக நலிந்ததாயும் ஒற்றுமையின்றியிருந்ததாயும் நெப்போலியனுக்குத் தோன்றியது. எனவே, அயல் நாடுகளைக் குறித்து அவர் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளைப் போன்று, ஸ்பெயின் மீது எடாது, ஸ்பெயினை மிகவும் இழிவாகக் கருதினர்.

[1] Stain. [2] Scharnhorst.

ஆட்சி புரிந்த மன்னர் நான்காம் சார்லசுக்கும் அவருடைய புதல்வரான பெர்டினண்டிற்கும் இடையே சச்சரவு ஏற்பட்டிருந்தது. பெர்டினண்டை ஆசை காட்டி நெப்போலியன் பிரான்சிற்கு வருமாறு மயக்கிச் சச்சரவில் சந்தி செய்கிறவராக நடித்தார்; முடிவில் தந்தையையும் தனயனையும் உதறித் தள்ளித் தனிப்பட்டதும் இயற்கைக்கு மாருனதுமான கொடுஞ் செயலால் தமது உடன் பிறந்தாரான ஜோசப்பு என்பாரை ஸ்பெயின் மன்னராக நியமித்தார். ஸ்பெயின் தீபகற்பம், பெயர் நீங்கலாக மற்றெல்லா வகையிலும் பிரான்சுடன் வெற்றி மூலம் இணைக்கப்பட்டதாயிற்று. தொடக்கத்தில் எல்லாம் சரியாய் நடந்தன. ஸ்பெயின் அரசாங்கம் செயலற்றிருந்ததால், ஜோசப்பு, மாட்ரிடு நகரத்திற்குள் எதிர்ப்பின்றி வரவேற்கப்பட்டார். ஆனுல், ஸ்பெயின் மக்கள் தங்களது அரசாங்கத்தால் கைவிடப்பட்ட நிலையில் பிரெஞ்சு ஆதிக்கத்தை எதிர்த்துத் தங்களுடைய ஆட்சேபணையைத் தெரிவிக்கலானுர்கள். ஸ்பெயின் நாட்டினுடைய பல்வேறு பகுதிகளான நகரங்களிலும், நாட்டுப்புறங்களிலும், தாமாகவே இயங்கும் எதிர்ப்புக்கள் தலையெடுக்கத் தொடங்கின. பிரெஞ்சுப் படைகள் தாக்கப்பட்டு, அவற்றின் பாதுகாப்பு நிலையங்களுக்குள் விரட்டியடிக்கப்பட்டன.

## பைலன் சரண் அடைதல்

முடிவில் 1808 ஜுலையில், ஸ்பெயினின் தென்பாகத்தில் தோன்றிய ஒரு கலகத்தை அடக்குவதற்காக அனுப்பப்பட்டிருந்த சேனைத்தலைவர் டூபான்டு[1] என்பார் பைலன்[2] என்னுமிடத்தில் இரகசியமாகப் பொறி வைத்துப் பிடித்தது போலச் சிக்கவைத்து, முழுப்படையுடன் புகலடையும்படி கட்டாயப்படுத்தப்பட்டார். நெப்போலியனுடைய எழுச்சிக்குப்பின் மிகப் பெரிய அளவில் ஏற்பட்ட பிரெஞ்சுப் படைகளின் தோல்வி இதுவேயாகும். ஐரோப்பியக் கருத்தில் இத் தோல்வியின் பயன்கள் மிக்க செல்வாக்குப் பெற்றன. இத்தோல்வி பிரெஞ்சுப்படைகளும் தோல்வியுறக்கூடியவை என்பதை வெளிப்படையாகக் காட்டியது. இதன் பயனுக எங்கும் கலகங்கள் தலையெடுக்கலாயின. ஸ்பெயின் மக்களுக்கு உதவி செய்ய ஆயத்தமாயிருப்பதாக இங்கிலாந்து அறிவித்தது; இவ்வெண்ணத்தைக் கொண்டு போர்த்துகலுக்கு அதன் படைகளை அனுப்பி வைத்தது.

## ஸ்பெயினில் வெல்லிங்டனின் வெற்றிகள்

நாம் இவ்வரலாற்றைத் தொடர்ந்து செல்லக்கூடாது. இறுதியில் தீபகற்பத்தில் வெல்லிங்டன் ஆங்கிலப் படைகளின் தலைவரானுர். அவர் தலைமையில் வெற்றிக்குப் பின் வெற்றி தொடர்ந்து ஏற்பட்டது.

[1] General Dupont. [2] Bailen.

அவர் 1812-ல் சாலமாங்கா[1] சண்டையில் வெற்றியடைந்தார்; 1813-ல் பிரான்சு எல்லையை நோக்கி முன்னேறினர். ஸ்பெயினில் ஆங்கிலேயப் படைகள் கொண்ட பங்கு உண்மையிலேயே மிகவும் பெரிதாயிருந்த போதிலும், அதே நேரத்தில் மிக்க துணிவுடன் ஸ்பெயின் மக்கள் வீறுகொண்டு கலகம் செய்யத் தலைப்பட்டதற்கும், பல தருணங்களில் தனிப்பட்ட பிடிவாதத்துடன் அவர்கள் செயல் புரிந்ததற்கும் அவர்களுக்குப் பாராட்டுதலைத் தெரிவிக்க வேண்டும். 1809 மார்ச்சு மாதத்தில் சரகோசா[2] முற்றுகையில் ஸ்பெயின் மக்கள் எதிர்த்து நின்றதைக் காட்டிலும், ஐரோப்பியப் போர் வரலாற்றில் வேறெந்த வீரம் நிரம்பிய நிகழ்ச்சியையும் காண முடியாது. ஸ்பெயின் நெப்போலியனின் பேரரசினுடைய ஆதிக்கத்தின் வலிமையைக் குலைத்த புற்று நோயைப் போன்று இருந்தது. ஸ்பெயின் மாத்திரம் எதிர்த்து நின்றிருக்குமானல், அதை அடக்குவதற்கு நெப்போலியனுடைய படைகள் மாத்திரம் போதுமானவையாய் இருக்குமென்பதில் நமக்கு ஐயமேற்பட்டிராது. ஆனல், வேறு தொல்லைகள் சில மிகப் பெரிய அளவில் எல்லாவிடங்களிலும் தோன்றின. எனவே, ஸ்பெயினுடன் போர் முடிவடைவதாயில்லை. இப்போர்கள் நெப்போலியனுடைய தலைசிறந்த போர்த் தலைவர்களையும் சிறந்த படைகளையும் இழக்கச் செய்தன. நெப்போலியன் இருப்பதா அல்லது இறப்பதா என்று முடிவு காண வேண்டியதற்கான போராட்டத்திற்குப் படைகள் மிகத் தேவையாயிருந்தபோது இப்படைகளின் இழப்பு நிகழ்ந்தது.

## ஆஸ்திரியாவுடன் நான்காவது போர்

### ஆஸ்திரியாவுக்கும் பிரான்சிற்குமிடையே சமாதானமும் நட்புறவும்

1809-ல் ஆஸ்திரியாவுடன் மற்றொரு போர் மூண்டது. அப்போரில் ஆஸ்திரியா, கிரேட் பிரிட்டனுடன் நட்புக் கொண்டிருந்த போதிலும், தனியாகவே போரின் முழு எதிர்ப்பையும் தாங்க வேண்டியதாயிருந்தது. அண்மையில் ஆஸ்திரியாவும் அதன் படைகளை மாற்றியமைத்துக் கொண்டிருந்தது. எனவே, முன்பு ஐரோப்பியக் கூட்டின் உதவியால் பிரான்சிற்குக் கொடுத்த தொல்லைகளைக் காட்டிலும் அதிகமான தொல்லையை இப்போர் கொடுத்தது. எனினும், நெப்போலியன் மீண்டும் வெற்றியடைந்தார்; வியன்னவைப் பிடித்துக் கொண்டார். வாக்ராம்[3] சண்டையில் மிகத் தீவிரமாகப் போர் புரிந்து 1809 ஜூலையில் நான்காம் முறையாகச் சமாதானம் செய்துகொள்ளும்படி பேரரசரைக் கட்டாயப்படுத்தினர். சமாதானத்தின் வாசகங்களை நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். இவ்வாதிக்கம் ஐரோப்பிய வரலாற்றில் நாற்பது ஆண்டுகள்வரை மிக முக்கியமானவருள் ஒருவரா

[1] Salamanca. [2] Saragossa. [3] Wagram.

யிருக்கப்போகிற இளவரசர் மெட்டர்னிக்கு[1] என்பவரால் ஏற்படுத்தப் பட்டது. சாதாரணச் சமாதானத்தோடு மட்டுமல்லாமல், நெப்போலிய னுடன் நட்புறவை ஏற்படுத்தியவரும் அவரே. அவர், நெப்போலிய னுக்கும் ஆஸ்திரியா இளவரசியாரான மேரி லூயிக்கும்[2] திருமணம் செய்வதற்காக நடந்த பேச்சுவார்த்தைகளால் இந்நட்புறவை வலு வடையச் செய்தார். மேரியா லூயி என்பார் கொலையுண்ட மேரியா அண்டாயினட்டு அரசியாரின் மருமகளார் ஆவர். கார்சிகாவைச் சேர்ந்தவரும், அரசுரிமையை முறையின்றிக் கைப்பற்றியவருமான நெப்போலியனை ஐரோப்பாவின் அரச குடும்பங்களுடன் சேர்த்துக் கொள்ளுவதாயிருந்த இந்நிகழ்ச்சியைக் குறித்து ஐரோப்பா முழு வதுமே வியப்புற்றிருந்தது.

## ரஷ்யாவுடன் போர்

விரைவிலேயே இதனினும் கொடிய போரை நெப்போலியன் எதிர்நோக்க வேண்டியதாயிற்று. நாம் ஏற்கனவே அறிந்தவாறு, அவர் ரஷ்ய மன்னரான அலெக்ஸாண்டருடன் டில்சிட்டுச் சமா தானத்தின் போது நட்புறவு பூண்டிருந்தார். ஓரமயம், அவருடைய திட்டங்கள் எல்லாம் நிறைவேறுவதற்கு, ரஷ்யாவினுடைய நட்பை இன்றியமையாததான ஓர் அடிப்படையென நம்பியிருந்தார். ஆனல், ரஷ்யாவுடன் அவர் கொண்டிருந்த நட்பு விரைவாக மகிழ்ச்சியற்றதாய் மாறிக்கொண்டு வந்தது. கிரேட்பிரிட்டனை எதிர்த்து அவர் வாணிகத் தொடர்புள்ளதாகத் தொடுத்த போரில் அவருக்குக் கூட்டுதவி புரிவதில் சார் அரசர் பின்னடைந்து விட்டதாகத் தோன்றியது. தவிர, ஜெர்மனியில் பரந்த நிலப்பகுதிகளை வெற்றி வாயிலாக இணைத்துக் கொண்டதன் பயனுக, சார் அரசரை நெப்போலியன் தாழ்வுறச் செய் தார். எல்லாவற்றையும்விட வார்சாவைப் போலந்துக் கோமகளாரின் நாடாக நிறுவியது, போலந்து மக்களினத்திற்கு ஊக்கமளித்தது போலத் தோன்றிற்று. எனவே, போலந்து மக்கள் (போல்ஸ்) குடியேறியிருந்த பெருநிலப்பகுதியை ரஷ்யா வெற்றியால் இணைத்துக் கொண்டிருந்ததற்கு எதிராக எடுத்துக் கொள்ளப்பட்ட பேரிடரான நடவடிக்கையென்று இதைக் கருத இடமளித்தது. அரசியல் தந்திர அடிப்படையிலுண்டான தகராறுக்குப்பின் சிறிது காலத்தில் ரஷ்யாவின் மீது நெப்போலியன் போர் தொடுத்தார். அவர் நேச நாடுகளின் மக்களான ஜெர்மானியர்கள், பிரஷ்யர்கள், சாக்ஸானியர்கள், ஆஸ்திரி யர்கள் முதலியவர்களையும், தம்முடைய மிகப் பெரிய பேரரசின் மக்களையும் தமது படையெடுப்பில் உதவி செய்யுமாறு அழைத்தார்; இப்படையெடுப்பு ஐரோப்பாவில் பிரான்சின் அதிகாரத்தை நிலைபெறச்

[1] Prince Metternich. [2] Marie Louise.

செய்யவும், மறைமுகமாகக் கிரேட் பிரிட்டனைக் கவிழ்க்கவும் வழி செய்யும் என்று எண்ணினர்.

## பொரோடினோ

தொடர்ந்து ஏற்பட்ட படையெடுப்பு, ஐரோப்பாவின் எல்லா இராணுவ ஆண்டுக் குறிப்புக்களிலும் மிக வியக்கத்தக்கதாயும் மிகமிகத் துன்பம் நிறைந்த பகுதியாயுமிருந்தது. ஐந்து லட்சம் மக்கள் கொண்ட பிரெஞ்சுப்படை ரஷ்ய எல்லையைக் கடந்து உட் சென்றது. ரஷ்யப் போர்த்தலைவர்கள் இப்பெரும்படையின் முன் பின்வாங்கினர்கள். பொரோடினோ[1] ஆற்றை அடையும் வரையில் பிரெஞ்சுப் படையின் முன்னேற்றத்தைத் தடை செய்ய முயலவில்லை. அங்கு மிகப் பெரிய கொலைகள் நிரம்பிய சண்டை நிகழ்ந்தது. இறுதியில் முடிவான வெற்றி நெப்போலியனுக்குக் கிடைத்தது. உடனே நெப்போலியன் மாஸ்கோவை நோக்கி விரைந்து முன்னேறினர். அவருக்கு வியப்பை உண்டுபண்ணும் அளவில் எவ்விதத் துன்பமுமில்லாமல் ரஷ்யர்களுடைய பழைய தலைநகரான மாஸ்கோவில் நுழையும்படி அனுமதிக்கப்பட்டார். எனவே, சமாதானத்திற்கான முறையீடுகள் உடனே செய்யப்படும் என நம்பினர். ஆனல், எவ்வித முறையீடும் ஏற்படவில்லை. மாஸ்கோ நகரெங்கும் தீ மூண்டது; நகரத்தின் பெரும்பகுதி எரிந்து சாம்பலாயிற்று. ரஷ்யாவின் குளிர் காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. தேவையான உணவு இல்லாமலிருந்ததை நெப்போலியன் நேரில் உணர்ந்தார்; எனவே, மத்திய ஐரோப்பாவுக்குத் திரும்பிச் செல்லத் தீர்மானித்தார். எனவே, முதலிலிருந்தே அவர் திரும்புவதைப் பார்த்துக்கொண்டிருந்த ரஷ்யப் படைகள், அவரைத் துன்புறுத்தலாயின. பயங்கரமான ரஷ்யக் குளிர்காலக் குளிரால் திரும்புவது மிகக் கொடுமை வாய்ந்த இடராய் மாறியது.

## படையெடுப்பின் பேரிடர்

### லீப்ஸிக்குச் சண்டை—1813

நிகழ்ந்த சிறு எதிர்ப்புக்களில் எல்லாம் பிரான்சு மேலும் வெற்றி கண்டது. ஆனல், படைகளின் எண்ணிக்கை, பஞ்சததினுலும் குளிராலும் ஏற்பட்ட மரணத்தாலும், மக்கள் படையை விட்டு ஓடியதாலும், அச்சுறுத்தும் அளவிற்குக் குறைந்து போயிற்று. இறுதியில் அவருடைய பழைய படையின் ஒரு மிகச் சிறிய பகுதியுடனேதான் நெப்போலியன் எல்லையைக் கடந்து ஜெர்மனிக்குள் நுழைந்தார்.

[1] Borodino.

நூருயிரக்கணக்கில் அவருடைய வீரர்கள் ரஷ்யர்களின் கைதிகளாகப் பின்னல் விடப்பட்டார்கள். மிகக் கடுமையான இவ்விடர் உடனே ஐரோப்பாவின் எண்ணங்களை விழிப்புறச் செய்தது. ஜெர்மனியில் எழுச்சி ஆரம்பித்தது. இப்படையெடுப்பு முழுவதிலும் ஆஸ்திரியாப் படைகள் நெப்போலியனுக்காக உற்சாகமின்றிப் போரிட்டன. பிரஷ்ய மன்னர் தம்மை பிரெஞ்சுக்காரர்களுடன் நட்புக் கொண்டவர் என்று கூறிக்கொண்ட போதிலும், அவருடைய படைகள் பல தருணங்களில் ரஷ்யர்களுடன் சேர்ந்து கொண்டன. ரஷ்யர்கள், பின்னேக்கிச் சென்று கொண்டிருந்த பிரெஞ்சுப் படையின் வழிகளைத் தொடர்ந்து பின்பற்றி வந்து, ஜெர்மனிமீது படையெடுத்தார்கள். இதைத் தொடர்ந்து நடந்த படையெடுப்பு நெப்போலியன் இதுவரை ஈடுபட்டிருந்தவைகளில் எல்லாம் பல முறைகளில் மிகப் பெரியதாகும். படைகள் மிகமிகப்பெரியவை; படைகள் விரைந்த போக்கும் மிகச் சிக்கல் நிறைந்ததாயிருந்தது. பயனை மாத்திரம் நாம் முறைப்படி தொகுத்துக் கூற முடியும். நெப்போலியன் நம்பிக்கையை இழக்கவில்லை. அவருடைய பகைவர் பாரிசுக்கருகில் நெருங்கிக்கொண்டிருந்ததைவிடத் தாம் வியன்னவுக்கு அருகில் நெருங்கிக்கொண்டிருப்பதை நம்புவதாக, நெப்போலியன் கூறினர்; இறுதிச் சண்டையான டிரெஸ்டன்[1] சண்டையில் வெற்றி பெற்ருர். ஆனல், அப்பொழுது அவரிடமிருந்த 1,85,000 வீரர்களுடன், அவர் லீப்ஸிக்கில்[2] ஒன்று சேர்ந்து குவிந்து வருகிறதும், 3,00,000 பேர் கொண்டதுமான பகைவர்களின் படையை எதிர்த்துச் சண்டையிட நேர்ந்தது. அங்கு இரண்டு நாள் நடந்த சண்டை பிரெஞ்சுப் பேரரசரின் முழுமையான வீழ்ச்சியில் முடிந்தது. இப்பொழுது ஜெர்மனியும் அவர்மீது திரும்பியது. அவர் எஞ்சிய படையுடனும் மிக்க துன்பத்துடனும் பிரான்சிற்குள் திரும்பிச் சென்ருர். மேற்கொண்டு அவருடைய பழைய போர்த் திறமையையும் பிடிவாதக் குணத்தையும் காட்டினர் எனினும், அவருடைய முடிவைத் தள்ளி வைக்கத்தான் முடிந்தது. படைகள் பாரிசை நோக்கி முன்னேறின. நெப்போலியன் சரணடைய நேர்ந்தது. அவர் தமது அதிகாரத்தைத் துறந்தார்; பற்றுக்குறையான வருமானத்துடன் சிறிய தீவான எல்பாவிற்கு[3] (1814) ஓய்வு எடுத்துக்கொள்வதற்காகச் செல்ல இசைவளிக்கப் பட்டார்.

## நெப்போலியன் மீண்டும் தோன்றுதல்

இவ்வாறு, நெப்போலியனுடைய வாழ்க்கை முடிவுற்றதாகக் கருதப் பட்டது. நெப்போலியனலும் பிரெஞ்சுப் புரட்சியாலும் ஏற்பட்ட குழப்பத்தில் மீண்டும் ஒழுங்கை ஏற்படுத்துவதற்கு எத்தகைய முறை

[1] Dresden. [2] Leipzig. [3] Elba.

களைக் கையாளலாம் என்பதை ஆலோசிக்க, ஐரோப்பாவிலிருந்து எல்லா அரசியல்தந்திரிகளும் வியன்னாவில் கூடினார்கள். இவ்வாறு அரசியல் தந்திரிகள் இக்கடுமையான வேலையில் ஈடுபட்டுக் கொண்டிருந்த போதும், இது ஐரோப்பாவில் இராச்சியங்களை மீண்டும் ஏற்பாடு செய்வதில் புதியதொரு போர் மூளுவதற்குக் காரணம் ஆகிவிடுமோ என்று அவர்கள் எண்ணிக்கொண்டிருந்தபோதும், திடீரென்று அவர்கள்மீது குண்டு போட்டாற்போல நெப்போலியன் எல்பாவை விட்டுவந்து, மீண்டும் பிரான்சிற்குள் நுழைந்துவிட்டார் என்றும், மக்கள் அனைவரும் ஆர்வமிக்க வரவேற்பளிக்கத் திரண்டு முற்பட்டனர் என்றும், ஐரோப்பாவின் படைகளை மீண்டும் ஒரு முறை எதிர்க்க அவர் ஆயத்தமாயிருக்கின்றார் என்றும் செய்திகள் அவர்களுக்கு எட்டின.

## பதினெட்டாம் லூயியின் தவறு

கொலையுண்ட பதினாறும் லூயியின் உடன்பிறந்தாரும் பிரான்சின் மீட்கப்பட்ட மன்னருமான, பதினெட்டாம் லூயியின் தவறால் இவ்வியக்கத்தக்க விளைவு ஏற்படலாயிற்று. அவரால் ஏற்படுத்தப்பட்ட துரைத்தனம் விரைவிலேயே தவறுகளைச் செய்ய முற்பட்டதால், பிரான்சின் கருத்திற்கு மாறாக எரிச்சலையுண்டுபண்ணிற்று. நாட்டின் இராணுவப் புகழ் மாசுபட்டது. அதன் எல்லைகள் சுருங்கின. எல்லாவற்றையும்விட, முக்கியமாக, புதிய அரசாங்கம் புரட்சியால் ஏற்படுத்தப் பட்டதும், நெப்போலியனால் மிகக் கவனமாய் மதிக்கப்பெற்று வந்ததுமான நில ஏற்பாட்டையும் கெடுத்துவிடும் போலத் தோன்றியது. திருச்சபையின் உடைமைகள் அரசாங்கத்தால் பறிமுதல் செய்யப்பட்டு, இந்நிலங்கள் சிறு பண்ணைகளாகப் பிரிக்கப்பட்டன என்பதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும். இவ்வாறு பிரிக்கப்பட்டிருந்த உடைமைகட்கு மீண்டும் திருச்சபையும் அரசாங்கமும் உரிமை கொண்டாடக் கூடும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. இவ்வாறு உடைமை பற்றிப் புரட்சியினாலேற்படும் அச்சமும், பிரான்சில் சமாதானமான வாழ்க்கையை மேற்கொண்டிருந்த மக்களினத்தையுங்கூட நெப்போலியன் திரும்பி வருதலை வரவேற்கும்படி செய்தது.

## வாட்டர்லூ

ஐரோப்பாவில் அவருடைய வாழ்க்கையில் எஞ்சியிருந்ததைச் சில சொற்றொடர்களில் சுருக்கிக் கூறலாம். அவர் தாராளமான கோரிக்கைகளுக்குச் சலுகை அளித்தார். அவர் தமது பழைய எதேச்சாதிகாரத்தையும் பேரரசு உரிமைகளையும் பெரிதளவிற்கு விட்டுவிடத் தயாராயிருந்தது போலத் தோன்றியது. ஆனால், பிரான்சிற்கும் ஐரோப்பா

விற்குமிடையே போர் வாயிலாகத் தீர்மானம் செய்யும்வரை அரசியல் சட்டத் தொடர்பான பிரச்சினைகள் முக்கியமானவையாய் இருக்கவில்லை. வியன்னாவில் கூடியிருந்த அரசியல் தந்திரிகள் நெப்போலியனை நாடு கடத்தப்பட்டவராக அறிவித்ததுடன், பிரான்சைத் தோற்கடிப்பதற்கு, எதிர்க்க முடியாததொரு படையை அமைக்க உயர்ந்த அளவில் முயலுவ தாகவும் ஒவ்வொரு நாடும் வாக்குறுதி செய்தது. பிரிட்டிஷார்களும் பிரஷ்யர்களும் பெரும்பாலும் இதற்கு ஆயத்தமாயிருந்ததால், நெப்போலியன் அவருடைய முதல் தாக்குதல்களை அவர்கள்மீது செலுத்தினர். அவர்களிடையே சென்று தனித்தனியாக அவர்களைத் தோற்கடித்து, அவர்கள் விருப்பத்துடன் ஏற்றுக்கொள்ளும் சமாதானக் கட்டுப்பாடுகளை அவர்களுக்கு அளிக்கவும் எண்ணினர். குவாட்ரி பிராஸ்[1], லிக்னி[2] என்னுமிடங்களில் அவர் பெற்ற தெளிவான, முடிவு தெரியாத சண்டைகட்குப் பின் பிரிட்டிஷ் படைகளையும் அவர்களுடைய நட்புப் படைகளையும் வாட்டர்லூச்[3] சண்டையில் அவர் எதிர்க்க நேர்ந்தது. அவர்கள்மீது அவர் மிகக்கடுமையான நேரிடைத் தாக்குதலைச் செய்தார். ஆனால், அவ்விடத்திலிருந்து அவர்களை வெளியேற்ற முடியவில்லை. பிற்பகலின் முன்னேரத்தில் பிரஷ்யப் படைகள் வந்து சேர்ந்து வலப்பக்கத்தில் தாக்கத் தொடங்கிய பொழுது, வெல்லிங்டனின் படைகள் குறைந்து போயிருந்தாலும், வரிசை முறை உடைந்து போகாமல் நின்று கொண்டிருந்தன. பிரிட்டிஷ், பிரஷ்யப் படைகளின் இணைந்த தாக்குதலினல் பிரெஞ்சுப்படை முழுவதும் நிலைகுலைந்து ஓடியதுடன் பேரரசரும் ஓட்டம் பிடித்தார். பாரிசையடைந்து அங்கே மேற்கொண்டு எதிர்ப்பை ஏற்படுத்தச் செய்த முயற்சி வீணயிற்று. அவர் பதவி துறந்தார்; பிரிட்டிஷார்களுடைய ஈகைத் தன்மையை எதிர் நோக்கினர். பிரஷ்யர்களிடம் சிக்கியிருப்பாரானல், அவருடைய வாழ்க்கை இதனினும் கடினமானதாய் இருந்திருக்கும் என்று கூறலாம். அவர் செயின்டு ஹெலினத்[4] தீவிற்குக் கைதியாக அனுப்பப்பட வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவு செய்தது. அங்குச் சில ஆண்டுகள் அவர் வாழ்ந்து, 1821-ல் உயிர் துறந்தார்.

[1] Quatrebras. [2] Ligny. [3] Waterloo. [4] St. Helena.

ஜே. எச். ரோஸ் எழுதியுள்ள 'நெப்போலியன் வாழ்க்கை', ஆங்கில மூலத்தைப் படிக்கிறவர்களுக்கு மிகச் சிறந்த துணையாகும். லான்ஃப்ரே, தியர்ஸ், ஃபைப், ஆலிஸன் என்பார் எழுதியுள்ள வரலாறுகளும் உற்சாகத்துடனும் பயனுடனும் படிக்கத்தக்கவை. சீலி எழுதியுள்ள 'ஸ்டெயினின் வாழ்க்கை', நெப்போலியனுடைய அதிகாரத்திற்கு எதிராய் எழுந்த ஜெர்மனியைப் பற்றித் தெளிவாகக் கூறுகிறது; 1789 முதல் 1815 வரை ஐரோப்பாவுடன் பிரான்சு கொண்டிருந்த தொடர்பு பற்றியறிய முக்கிய ஆதாரமாயுள்ளது, சோரல் என்பார் பிரெஞ்சு மொழியில் எழுதியுள்ள, 'ஐரோப்பாவும் பிரெஞ்சுப் புரட்சியும்', என்ற நூலாகும். ஹெண்டர்ஸன் என்பார் எழுதியுள்ள 'புளுசரின் வாழ்க்கை' என்னும் நூலும் கற்றற்குரியதாகும்.

# 16. பதினெட்டாம் நூற்றுண்டில் (1714–1815) கிரேட் பிரிட்டன்

## பதினெட்டாம் நூற்றுண்டின் சிறப்பியல்புகள்

இவ்வதிகாரத்தில் அளவாராய்வதற்கு நாம் எடுத்துக்கொள்ளும் நூற்றுண்டு நன்முனைப்பான தன்மை கொண்டதாயுள்ளது. இந்நூறு ஆண்டுகளிலேதான் ஏனைய நாடுகளின் துரைத்தனங்களைக் காட்டிலும் மிகத் தெளிவாக வரையறுக்கப்பட்ட கூறுகளைக் கொண்டுள்ள அரசாங்கத்தைக் கிரேட் பிரிட்டன் மக்களுக்களித்ததுடன், இதே காலத்திலேதான் உலகத்தின் கவனத்தைக் கவரத்தொடங்கிய பெரிய கட்டடம் போன்ற குடியேற்ற நாடுகள், இந்தியப் பேரரசு முதலியவைகளின் அடிப்படைகள் உறுதியுடன் அமைக்கப் பெற்றன. சுருங்கக்கூறின், ஆங்கிலேய வரலாற்றில் காபினெட்டு முறையும் குடியேற்ற நாட்டுப் பேரரசும் மிகப் பெரிய விளைவுகளாயிருந்தன எனலாம்.

## அமைச்சரவை முறை

அமைச்சரவை முறையை எவரும் எதிர்பார்க்கவில்லை. எந்த உட்டோபியாவிலும் இதைப்பற்றிக் குறிப்பிடப்படவில்லை. இதைப் பற்றி முன்னறிவித்தவர் எவருமில்லை. இது ஆங்கிலேய அரசியல் வாதிகளுடைய நடைமுறையிற் காணப்பட்டதும் அவ்வப்போது எழுந்த அவசர நிலைமையை எதிர்கொள்ள அவர்களால் இயன்றவளவு அமைக்கப்பட்டதுமான மிகச் சிறந்த சூழ்திறனையுடைய ஆற்றலின் பயனாக ஏற்பட்டது.

1688-ல் நடந்தபுரட்சி, அரசியல் புவிஈர்ப்பு மையத்தை முடியாட்சியிலிருந்து பாராளுமன்றத்திற்கு மாற்றியது. எனினும், முதலிற் பாராளுமன்றம் ஆட்சி புரியவில்லை. அரசியல் அறிஞராயும்

போர் வீரராயுமிருந்த மூன்றும் வில்லியம் பெரிய மக்கள் பிரதிநிதி சபையின் கையில் தம்முடைய அதிகாரங்களை ஒப்படைப்பதற்கு எவ் விதத்திலும் மனமுள்ளவராய் இல்லை. அதனுடன் அவர் உயிருடன் இருக்கும் வரையில் நயந்து பேசியும் பாராட்டியும் பாராளுமன்றத்தை நட்பு முறையில் நடத்திஞரே தவிர, தலைவராக நடத்தவில்லை. ஆன் அரசியார் பட்டத்திற்கு வந்தது முதல் பாராளுமன்றத்தின் அதிகாரம் மிகவும் விரிவடைந்தது. அரசியாரின் செல்வாக்கு, சில தருணங்களில் அவரைப்பற்றிக் கூறப்படுவது போல, அவ்வளவு முக்கியமற்றதாய் இருக்கவில்லை. ஆனுல், நாட்டினுடைய விதிமுறையைக் கட்டுப்படுத்து வதற்குத் தேவையான அறிவோ அல்லது மனவுறுதியோ அவரிடம் இல்லை. அவருடைய ஆட்சிக் காலத்தில், அமைச்சர்களுடைய அதிகாரம் பாராளுமன்றத்தின்மீதும், அதேபோல மேலும் சிறிது அதிகமாகவே அரசியாருடைய விருப்பத்தின்மீதும் அமைந்திருந்தது என்பது தெளிவாகிக்கொண்டிருந்தது. ஸ்பெயின் வாரிசுரிமைப் போரின் முடிவில், கிரேட் பிரிட்டனுடைய கொள்கையில், பெரிய மாறுதலுடன் திடீரென்று திருப்பத்தையடைய உதவி செய்ததும், போரிடுவோர்களின் வரிசையிலிருந்த கிரேட் பிரிட்டன் பின் வாங்கியதும், பொதுத் தேர்தலின் பயஞக ஏற்பட்டனவேயாகும். இத்தேர்தலில் காமன்சுசபையில் டோரிகள் விஞ்சிய பெரும்பான்மை யான இடங்களைக் கைப்பற்றிஞர்கள். நாட்டினுடைய கொள்கையை உருவாக்கும் தேர்தலில் கட்சிகளினுடைய முடிவு இதைப்போன்று நேரிடை முக்கியம் வாய்ந்ததாக இதற்கு முன் இருந்ததில்லை. எனினும், உண்மையில் வலிமை பொருந்திய அரசர் துரைத்தனத்தில் உறுதியான இடத்தைப் பெறும் வாய்ப்பைப் பெற்றிருக்கலாம்.

## ஹனேவேரியர்களுடைய அரசியல் சட்ட ஆதிக்கம்

ஆன் அரசியாரின் மரணத்திற்குப் பின், ஹனேவேரிய வமிசத்தைச் சேர்ந்த ஜார்ஜ்களைத் தவிர, வலிமை பொருந்திய மன்னர் பட்டத்திற்கு வரவில்லை. கிரேட் பிரிட்டனின் சிக்கலான அரசியல் அமைப்பை நன்கு அறிந்துகொள்ளாததால் அவர்களது ஆட்சி வலிமையற்றிருந்தது; அதனுடன் ஹனேவர் நாட்டுத் தேர்வாளர் பகுதியில் அவர்கள் அதிக ஊக்கம் கொண்டிருந்ததாலும், உண்மையில் அவர்கள் திறமை யற்றிருந்ததாலும், முதலாம் ஜார்ஜ் இரண்டாம் ஜார்ஜ் இவர்களுக்கு ஆங்கிலம் தெரியாதிருந்ததாலும், ஆழ்ந்து ஆராயும் ஆலோசனைச் சபைக்குப் பயனுள்ள முறையில் தலைமை வகிக்க முடியாததாலும் அவர்களது ஆட்சி வலிமையற்றிருந்தது.

## அரசருக்குப் பதில் எவர் ஆட்சி புரிவது?

ஆகையால், அரசர் ஆட்சி புரிய வேண்டும், ஆளக் கூடாது; எனினும், ஆளுவதும் தேவையாயிருந்தது. அவருடைய இடத்தில் வேறு எதைக் கொள்ள முடியும்? மக்களையே நேரிடையாகக் கொள்ள முடியாது. இப்பொழுதுங்கூட அது இயலாது. பதினெட்டாம் நூற்ருண்டின் முற்பகுதியில் பொதுக் கூட்டங்கள் நடைபெறவில்லை. பொதுமக்கள் தங்களுடைய கருத்துக்களை வெளியிடுவதற்கு ஏற்ற அரசியல் இதழ்களும் இல்லை. பாராளுமன்றம் முழுமையாக ஆட்சி செய்ய இயலாது. அது ரோமானியர்களுடைய செனட்டைப் போன்று ஆட்சியை நடத்துவதற்குத் தகுதியற்றதாயும் மிகப் பெரியதாயும் இருந்தது. ரோமப் பேரரசு வளர்ச்சியடையத் தொடங்கிய பொழுது அதன் செய்திகளைக் கட்டுப்படுத்துவதில் ரோமானியச் செனட்டு வெற்றிபெறவில்லை. எவ்வாருயினும், தேவையேற்படும்பொழுது விரைவாகவும் உறுதியாகவும் செயலாற்றுவதற்குத் திறமை வாய்ந்த ஓர் அரசாங்கம் நாட்டில் அவசியம் இருக்க வேண்டும். இந்த அரசாங்கம் அளவிற்சிறியதாயும், ஆனல் நெருக்கமாயமைந்ததாயும் இருக்க வேண்டும். அவ்வாறு ஏற்படும் அரசாங்கம் பாராளுமன்றத்தில் பெரும்பான்மையோரின் இசைவு கொண்டதாயும் இருக்க வேண்டும். அவ்வாறன்றி. பாராளுமன்றம் எதிர்ப்பாயிருந்தது, முடியாட்சியின் உயிருக்குப் பேரிடராய் முடிந்தது. எனவே, முடியாட்சியின் இடத்தை அடைய முயலும் எந்த அரசாங்கத்தினுடைய உயிருக்கும் பேரிடராய் முடியும். பிரதம மந்திரியைத் தலைமையாகக் கொண்ட அமைச்சர் குழு ஆட்சி முறை இப்பிரச்சினையை மனநிறைவு அளிக்குமாறு தீர்த்தது.

## அமைச்சரவை முறை

### அமைச்சரவையின் ஒருமுகப்பாடு—பிரதம மந்திரியார்

அமைச்சரவை முறை முழு வளர்ச்சியடைந்த பின் அதன் சிறப்புக் கூறுகளாவன: அரசாங்கத்தில் முக்கியத்துறைகளின் பொறுப்பாளர்களாயிருந்த அமைச்சர்கள், காமன்சுசபையிற் பெரும்பான்மையினரால் ஆதரிக்கப்பட்ட கட்சியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாயிருந்தார்கள். (கூட்டு அரசாங்கங்கள் இருந்தன. ஆனல், இவை விதிக்கு உண்மையில் புறம்பானவையல்ல). ஒவ்வோர் அமைச்சரும் எல்லாத் துறைகளின் செயல்களுக்கும் பொறுப்பாளராயிருந்ததுடன், அவற்றுக்கு அவருடைய பொதுவான இசைவையளிக்க வேண்டியவராயுமிருந்தார். ஏதாவதொரு துறை நடத்தப்படும் முறையை அமைச்சர் ஏற்கவில்லையானல், குறிப்பிட்ட ஓர் அளவிற்கு மிஞ்சி அதை இடித்துக் கூறிக்கொண்டு அவருடைய பதவிக்கான சொந்தக்கடமைகளை இழக்காமல் வைத்துக்கொள்ள முடியாது. அவர்

ஒன்றும் கூறுமலிருக்க வேண்டும்; அல்லது பதவியை விட்டு விலக வேண்டும். இதுதான் அமைச்சரவை முறையின் ஒருமுகப்பாட்டுக் கொள்கையாகும். பிரதம மந்திரியார், அமைச்சரவை முழுவதையும் பொதுவாக மேற்பார்வையிடுகிறுர். காபினெட்டு என்பது அமைச்சர் களின் குழுவேயாகும். சமீப காலம் வரையில் பிரதம மந்திரியார் பதவி, சட்டமுறைப்படியான ஒப்புதலைப் பெறவில்லை. இப்பதவிப் பெயர் பிரெஞ்சு மொழியிலிருந்து தோன்றியதெனவும் ஆங்கிலேயப் பாராளுமன்றம் அனுமதித்ததைவிட அதிகமான சொந்த அதிகாரம் உடைய நிலையை இப்பதவி குறித்ததாயும் கருத்திற்கொண்டு அது ஏற்றுக்கொள்ள மறுக்கப்பட்டது. எப்பெயரைக் கொண்டு வழங்கினும் பிரதம மந்திரியார்பதவி இன்றியமையாததாயிற்று. மன்னருடைய நேரிடையான அதிகாரம் வலிவிழந்தபொழுது இங்கிலாந்தின் உண்மையாளுநராகப் பிரதம மந்திரியார் சிறிது சிறிதாக மாறிக் கொண்டிருந்தார். அவ்வாறு ஏற்படுவது பாராளுமன்றத்தின் ஆதரவைப் பொறுத்திருந்ததுடன் அவ்வாதரவு பிரதமமந்திரி யாருடைய திறமைக்கும் மனப்பான்மைக்கும் ஏற்றுற்போல மாறிக் கொண்டும் இருந்ததெனினும், காபினெட்டு எனும் வளைவிற்கு உண்மையான நெற்றிக்கல் போன்று எப்பொழுதும் சிறப்புடையதாய் வளர்ந்துகொண்டிருந்தது. காபினெட்டை ஒன்றுக இணைப்பவர் பிரதம மந்திரியாரேயாவர். அதனுடன் பொதுவான கொள்கையை நிறைவேற்றுவதும், துறைகள் மேலிட்ட துரைத்தனமாக உரு மாரு மலிருக்கச் செய்வதும் அவர் வேலைகளாயமைந்தன.

## காபினெட்டு முறையின் வளர்ச்சி—வால்போல்

சிறிது சிறிதாக இம்முறை வளர்ந்தது. அரசியல் வல்லமை யுடைய ஒருவரால் இது தோற்றுவிக்கப்படவில்லை. ஆனுல், இப்பதவியின் வளர்ச்சிக்கு வால்போலை விட வேறெவரும் அவ்வளவு உதவி புரியவில்லை. (வால்போல் முதலாம் ஜார்ஜின் அமைச்சராயும் இரண்டாம் ஜார்ஜ் காலத்தில் பிரதம மந்திரியார் என்றபெயர் மாத்திரம் இல்லாமல் செல்வாக்குடனிருந்தவராவர்). காபினெட்டுப் பற்றிச் சட்டம் இயற்றவில்லை. அதைப்பற்றி வெளிப்படையாக அறிக்கையும் வெளியிடவில்லை. ஆனுல், நீடித்திருந்த அவருடைய அதிகார காலத்திற்றுன் (1721—1742) இம்முறை ஒழுங்காக இயங்கியதையும், ஆழ்ந்து ஆராயும் சபையினும் மேலாகத் திறமையான அரசாங்கத்தைத் தோற்றுவிக்கும் பிரச்சினையைத் தீர்த்ததையும் முதன்முதலாகக் காண்கிறோம். இம்முறை வளருவதற்குத் திட்டமான கட்சிகளின் அமைப்பு இன்றியமையாததாயிருந்தது. இவ்வாறு ஏற்படுதற்கும் வால்போல் உதவி புரிந்தார். அவருடைய ஆதரவாளர்களை ஒன்று சேர்ப்பதற்காக ஓரளவு ஊழல் நிறைந்த வழிகளை அடிக்கடி பின்

பற்றினர் எனினும், சில தருணங்களில் தவறாகக் கருதப்பெற்ற அளவிற்கு அவ்வூழல் காணப்படவில்லை.

## பாராளுமன்றத்தின் தன்மை

இங்கிலாந்தில், பாராளுமன்ற அடிப்படையிலெழுந்த அரசாங்கத்தின் அமைப்பு அவ்வாறிருந்தது. அது இங்கிலாந்து மக்களின் ஏஜென்சியாய் இருந்தது எனக்கொள்ளுவது தவறான கூற்றாகும். ஏனெனில், வாக்காளர் தொகுதிகள் அதன் தன்மையில் மிக அதிகமாக மாறுபட்டிருந்ததுடன், பாராளுமன்றம் எல்லா மக்களுடைய பிரதிநிதியாகவுமிருக்கவில்லை. நகரங்களைக் காட்டிலும் கிராமங்களின் ஓட்டுரிமை மிக்க மதிப்பு வாய்ந்ததாயிருந்தது. இதற்குக் காரணம், அக்கிராமங்கள் பெரும்பாலும் குறுகிய மனப்பான்மையிலும் இலஞ்ச ஊழல் நிறைந்த ஆட்சியிலும் இருந்ததே. பாராளுமன்றம் வாயிலாக இங்கிலாந்தில் ஆட்சி புரிந்த சமூகப் பிரிவினர் (நிலச்சுவான்தார்களின்) உயர் குடியாட்சி என்பதில் ஐயமில்லை. ஆண்டுகள் செல்லச் செல்ல வேறுபாடுகள் உண்மையற்றன ஆன போதிலும், சில அரசியற் கருத்துக்கள் சம்பந்தமாக அப்பொழுது விக்குகளும் டோரிகளும் மாறுபட்டிருந்தார்கள். எனினும், இரு பிரிவினரும் இங்கிலாந்தின் நிலச் சொந்தக்காரர்களுடைய ஆதரவை ஒரேயளவிற் பெரிதும் நம்பியிருந்தனர்.

## மன்னராய் இருக்க மூன்றும் ஜார்ஜின் முயற்சிகள்

இம்முறையை மாற்றுவதற்கான முயற்சிகள் நடந்தன. 'எவ்வாறாகிலும் மூன்றும் ஜார்ஜ், மன்னராய் ஆட்சி புரிய வேண்டும்' என்ற எண்ணத்துடன் வளர்க்கப்பட்டு வந்தார். பாலிங்புரோக்கு என்பாருடைய கொள்கைகளால் இவர் உந்தப்பட்டவராயிருந்தார். 'நாட்டுப் பற்றுள்ள மனிதர்' எனும் நூலில் மன்னர் ஆட்சி புரிவதுடன் ஆளவும் வேண்டும் என்று பாலிங்புரோக்குக் கூறியுள்ளார். 1760-ல் பட்டத்திற்கு வந்தபொழுது, பிரான்சில் ஒரு நூற்றாண்டிற்கு முன் ஆட்சி புரிந்த பதினான்காம் லூயியைப் போன்றே ஆட்சி புரியவும், தாமே தமக்குப் பிரதம மந்திரியாராயிருக்கவும், மற்ற அமைச்சர்களை அவரவர் துறையிலேயே ஈடுபடச் செய்யவும், தமக்குப் பாராளுமன்றத்தின் ஆதரவைப் பெறவும் முயன்றார்; 1714 முதல் அதிகாரத்திலிருந்து வந்த விக்குகளின் ஆட்சியைக் களைந்ததால் இங்கிலாந்து மக்களின் கடுமையான எதிர்ப்பைப் பெற்றார்; அமெரிக்கப் போர் மூளுவதற்கும் பெரிதளவில் காரணமானார். அப்போரில் இங்கிலாந்தின் படைகள் தோல்வியுற்றன. மன்னருடைய திட்டங்களும் தோல்வியுற்றன; இளைய பிட்டின் ஆளுகையில், மன்னருக்கு ஒரு வகையில்

வெறுப்பை உண்டு பண்ணக்கூடியதாயிருந்தும், பழைய முறை மீண்டும் விரைவிலேயே ஏற்படுத்தப்பட்டது.

## பாராளுமன்றச் சீர்திருத்தத்திற்கான யோசனைகள்

### பிரெஞ்சுப் புரட்சியின் செல்வாக்கு

பழைய வாக்காளர் தொகுதிகளிற் காணப்பட்ட கடுமையான முரண்பாடுகளை ஒழித்து, மக்களின் மிகவுண்மையான கருத்தை எதிரொலிக்கும் பாராளுமன்றத்தை அமைப்பதற்கு, அதைச் 'சீர் திருத்தம்' செய்ய யோசனைகளிருந்தன. இக்கருத்துக்குப் பெரியவர்களுடைய ஆதரவு அரை மனத்துடன் இருந்தது. ஒரு சமயம் சாதம் என்பாரும் பிட்டு என்பாரும் இச்சீர்திருத்தத்திற்கு ஆதரவாயிருந்தனர். அதனுடன் இக்கருத்துக்கு யார்க்ஷைரிலும் வலுவான ஆதரவு இருந்தது. சீர்திருத்தம் பற்றிய போராட்டத்திற்கான வாய்ப்பையும் பிரெஞ்சுப் புரட்சி தொடங்கியதும் அது இழந்தது. சீர்திருத்தக் கருத்திற்கு இணங்குவதனாலுண்டாகும் பயனுக்குத் தக்க எடுத்துக்காட்டாக, பிரெஞ்சுப் புரட்சியை ஆங்கிலேயர் கருதினர். பயங்கர ஆட்சி எவ்வித மாறுதலையும் எதிர்க்கத்தக்க வலிமை பொருந்திய ஒரு வாதமென மிகத் தவருகக் கொள்ளப்பட்டது. பலர், பிரெஞ்சுப் புரட்சியையும், நெப்போலியனையும் எதிர்த்துப் போராடியது முதலியன, பழைய முறையை நீடிக்கச் செய்வதற்காகவே நிகழ்ந்ததாக எண்ணினர். எனவே, நாட்டில் அச்சம், வெறுப்பு இவற்றினுல் ஏற்பட்ட நெருக்கடியை வாட்டர்லூச் சண்டை போக்கும் வரையில் சீர்திருத்தம் செய்யப்படாத பாராளுமன்றத்துடனேயே அரசாங்கம் இணைக்கப்பட்டிருந்தது.

II

## பதினெட்டாம் நூற்றாண்டின் பெருமை

வரலாற்று ஆசிரியர் சிலர் பதினெட்டாம் நூற்றாண்டை இகழ்ச்சியாகவும் தாழ்வாகவும் கூறுவது வழக்கம். அதை வெற்றுநிலை நூற்றாண்டு என்று வழங்கியதுடன், நம்பிக்கையற்றவர்களாய்ப் புரட்சிக்கு வழி செய்ததுதான் இந்நூற்றாண்டின் முக்கியச் சிறப்பு எனக் குறிப்பிட்டனர். ஆனல், இப்படிச் சொல்லுவது தவருகும். பதினெட்டாம் நூண்ருண்டு நல்ல வரலாற்றைக் கொண்டிருந்தது; சிறப்பு, வீரம், முன்னேற்றம் இவற்றில் பங்கு கொண்டிருந்தது. இலக்கியத்தில் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் காணப்பட்ட சுவிஃப்டு, போப்பு முதலியவர்களுடன் தோன்றிய எழுத்தாளர்களின் வரிசை, நூற்றாண்டின் இறுதியில் ஒளிபெற்று விளங்கிய கவிஞர்கள்,

எழுத்தாளர்களில் புகழ் பெற்ற குழுவான வேர்ட்ஸ்வொர்த்து, ஸ்காட்டு, கோல்ரிட்ஜ், பைரன், ஷெல்லி—இவர்களுடைய முக்கியத்துவம் கடந்த, ஒவ்வொரு பத்தாண்டுக்காலத்திலும் மிகத் தெளிவாகவும், உறுதியாகவும் வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. அவர்கள் முகங்களில் விடிவெள்ளியின் ஒளி நன்கு வீசியது. பதினெட்டாம் நூற்றுண்டு நுண்கலையிலும் (கெயின்ஸ்பரோ, ஹோகார்த்து, சர் ஜோஷுவா ரீனல்ட்ஸ் என்பவர்களுடைய நூற்றுண்டாயிருந்தது) தத்துவ இயலிலும் விஞ்ஞானத்திலும் சிறப்புற்று விளங்கியது. (ஹ்யூம் 1776-ல் இறந்தார். பிரீஸ்டிலி 1804-ல் இறந்தார்).

## தொழிற் புரட்சி

ஆயினும், இந்நூற்றுண்டின் மூன்றுவது காற்பகுதியில் நாம் தொழிற் புரட்சி என்று வழங்கும் பெரிய மாறுதல் எவ்வாறு நாட்டில் உண்டாயிற்று என்பது அறிய வேண்டுவதொன்றுகும். 1764-ல் இயந்திரங்கள் பருத்தி, கம்பளி முதலியன உற்பத்தி செய்வதில் தோன்றலாயிற்று. இங்கிலாந்தின் வடபாகத்தில் தொழிலிலீடுபட்டிருந்த நகரங்கள் வளரலாயின. அதோடு தெற்கிலிருந்து மக்கள் தொகையும் வடக்கு நோக்கிச் சென்றது. சாலைகளும் வாய்க்கால்களும் அமைக்கப்பட்டன. இதன் விளைவு வாணிகம் வளருவதற்குக் காரணமாயிற்று. விவசாயம் செய்யும் முறைகள் திருத்தியமைக்கப்பட்டன. இங்கிலாந்தின் பொதுநிலங்கள் மிகப் பெரியனவாக அமைக்கப்பட்டிருந்தன. இவ்வாறு நில அமைப்புக்களிருந்ததால், நிலத்தின் உற்பத்தி பெரிதளவில் அதிகரித்தது. ஆனல், பொது நிலங்களுக்குச் சொந்தமாயிருந்த ஏழைகள், இச்செயல்முறையில் அடிக்கடி கொள்ளையடிக்கப்பட்டார்கள். இங்கிலாந்தின் அமைப்பு மாறத் தொடங்கியது. வழக்கத்திற்கு அடிமைப்பட்டிருந்த நாட்டுப்புறங்களும், இப்புதிய முறைகளால் அலைக்கப்பட்டன. இப்புதிய முறைகளைக் கைக்கொண்டதில் இங்கிலாந்து மாத்திரம் தனித்திருக்கவில்லை. ஐரோப்பாவில் மற்ற நாடுகள் இவைகளைக் கைக்கொள்ளுவதற்கு நெடுநாளைக்கு முன்னதாகவே இங்கிலாந்து இவற்றை ஏற்றுக் கொண்டிருந்தது. மிக முக்கியமான இயந்திரப் புத்தாக்கங்கள் ஆங்கிலேயர்களுடையனவாயிருந்ததும், இயற்கையில் இங்கிலாந்தின் அமைப்பு அதற்குப் படையெடுப்புக்களின் பேரிடர்களினின்றும் பாதுகாப்பளித்ததும் இதற்குக் காரணங்களாயின. செல்வம் விரைவாகப் பெருகியது. அக்காலத்து மக்கள் நாட்டுப்புறக் கிராமங்களில் இருந்ததைக்காட்டிலும், மக்கள் நெருக்கமுள்ள தொழில் நகரங்கள் வறுமையை எவ்வளவு தூரம் கடுமையாகத் தீமை பயக்குமாறு ஏற்றுக் கொண்டிருந்தன என்பதை அறியவில்லை; அல்லது உணரவில்லை. பதினெட்டாம் நூற்றுண்டில் தொழில் மயமான இங்கிலாந்தின் சில கூறுகள்

பிரான்சில் புரட்சிக்கு முந்திய காலத்தில் காணப்பட்ட நிலைமையைவிட மிகவும் தாழ்நிலையிலிருந்தன.

## வெஸ்லியனியம்

இந்நூற்றுண்டில், பெரியதும், பெருவிளைவுள்ளதுமான சமய வியக்கம் தோன்றியது. ஜான் வெஸ்லி (1703-1791) கத்தோலிக்க நற்செய்தி பரப்புச் சங்கத்தை உயிர்ப்பிக்கத் தொடங்கினுர். அவருடைய பிரசாரத்தாலும் அமைக்கும் அறிவாற்றலாலும் இவ்வியக்கத்திற்குப் பரந்த செல்வாக்கையும் நிலையான உருவையும் கொடுத்தார். இவ் வியக்கம் வெஸ்லியன் மெத்தாடிசத் திருச்சபையை ஏற்படுத்திய தோடல்லாமல் இங்கிலாந்து திருச்சபையில் புத்துணர்வையும் புத் துயிரையும் தோற்றுவித்தது. சமூகத்தில் எல்லாவினத்தாரிடமும் இது பரவியது என்ருலும், இதை முதன்முதலாகப் பின்பற்றியவர்கள் நகரங்களில் வாழ்ந்த தொழிலாளிகளும் நாட்டுப்புறத்தில் வாழ்ந்த தொழில் புரிவோர்களும் ஆவார்கள்.

## இங்கிலாந்தில் ஏன் புரட்சியில்லை ?

வரம்பின்மையாட்சியில்லை

இங்கிலாந்தில் தோன்ருமல் ஏன் பிரான்சில் புரட்சி தோன்றியது? ஏன், பிரான்சில் அது ஏற்பட்ட பொழுது அதற்கு இங்கிலாந்தில் பரிவுணர்விற்குப் பதிலாகக் கடுமையான எதிர்ப்புக் காணப்பட்டது? பொதுவாகக் கூறுமிடத்து இங்கிலாந்தின் நிலைமை பிரான்சி லிருந்ததைப்போல அவ்வளவு மோசமாயிருக்கவில்லை. எனினும், இங்கிலாந்தில் விவசாயத்திலீடுபட்டிருந்த தொழிலாளிகள், பிரெஞ்சுக் குடியானவர்கள் தாங்கள் பயிர் செய்த நிலங்களைச் சொந்தமாகக் கொண்டிருந்த நிலை குறித்துப் பொருமையடைந்திருப்பார்கள். ஆனுல், ஆங்கிலேய அரசியல், சமூகத்தினுள் காணப்பட்ட புரட்சிக்கு எதிரான கூறுகளாவன: (1) ஆங்கிலேய அரசியல் முறையில் வல்லாட்சி அதிகாரக்குவிவின்றி இருந்தது. அரசினர் நாட்டின் விவகாரங்களை நிருவாகம் செய்வதில் பொதுமக்களில் பெரும்பாலாரோடு தொடர்பு கொண்டிருந்தனர். வட்டார ஆட்சி பெரும்பாலும் நாட்டுப்புற மேன்மக்களின் கையிலிருந்தது. அரசாங்கம் மக்களாட்சி அடிப்படையில் இல்லையென்ருலும், அதை நடத்தியவர்கள் பேராற்றல் அமைந்தவர்களாய், திறமையுள்ளவர்களாய்ச் சேர்ந்து பெரிய குழுவாய் அமைந்திருந்ததனுல், நம்பிக்கையையிழந்திருந்த பிரெஞ்சு முடி யாட்சியைவிட எதிர்த்து நிற்கக்கூடிய திறமையுடன் அக்குழு இருந்தது. பிரெஞ்சு முடியாட்சியின் வரம்பின்மையே பிரெஞ்சுப் புரட்சி தோன்றுவதற்கு உண்மையான அரசியற்காரணமாயிருந்தது.

(2) இங்கிலாந்தில் புரட்சியை எவரும் விரும்பவில்லை. முன்னோர் அதிகாரத்தில் பிரான்சில் புரட்சி உண்டுபண்ணுவதற்கு முக்கியமா யிருந்த அறிவியக்கத்தைப்பற்றி நன்கு எடுத்துரைக்கப்பட்டது. இங்கிலாந்திலும் அதே இயக்கம் காணப்பட்டது என்றாலும், உறுபுலனு யிருப்பதோடு நின்றுவிட்டது. பிரான்சில் காணப்பட்ட, ஆவல் நிறைந்த எதிர்நோக்குகள், மக்களினத்தைக் கவர்ந்த முழு மொத்தமான கருத்துக்கள், கடுந்தீவிரத் தன்மை முதலியவைகள் இங்கிலாந்தில் ஒரு சிலருக்குத்தான் தெரிந்திருந்தன. பிரான்சில் எந்த இனத்தார்கள் புரட்சியில் அதிகமாக ஈடுபட்டிருந்தார்களோ அந்த இனத்தார்களில் வெஸ்லியனியம் பரவியிருந்ததால், அதன் சத்தி, புரட்சிக் கருத்துக்கள் பரவுவதற்குந் தடையாயிருந்தது.

## III

## அந்நியப் பேரரசு வரலாறு

கிரேட் பிரிட்டனுடைய வெளி நாட்டுத் தொடர்புகள் பற்றிய வரலாற்றை, பேரரசு வளர்ச்சியுடன் தொடர்புபடுத்தி எளிதாகக் கூறலாம். இவ்வாறு கூறுவதற்கு இந்நூற்றாண்டின் இயல்பும் ஏற்றதாயுள்ளது. காரணம், குடியேற்றம், இந்தியா முதலிய பிரச்சினைகள், மற்றப் பிரச்சினைகளைவிட இக்காலத்தில் அரசியல் வல்லமையுள்ளவர்களை மிகுதியாகக் கவர்ந்தன. இந்த நூறு ஆண்டு களிலும் பேரரசு எண்ணங்கள் முதன்மையாகவோ, அன்றி முக்கிய மான துணைக்காரணமாகவோ இல்லாமல், எந்தச் சண்டையும் நிகழ வில்லை. கிரேட் பிரிட்டனைவிட இந்தியா அமெரிக்காவில் பிரான்சிற்கு மிக வலுவான பிடிப்பு இருந்தது. நெடுந்தொலைவிலுள்ள இவ் வுடமைகள் பற்றி ஏற்பட்ட போட்டியால் பிரான்சிற்குக் கிரேட்பிரிட்டன் பகைமையானதுடன் இந்நூற்றாண்டில் நடந்த எல்லாப் போரிலும் கிரேட்பிரிட்டனும் ஈடுபட நேர்ந்தது.

## வால்போலும் பிரான்சும்

இந்நூற்றாண்டு தொடங்கும்போது அமைதி நிலவியது. முதலாம் ஜார்ஜூம் அவருடைய விக்கு அமைச்சர்களும் உள் நாட்டுத் தொல்லை களிலேயே முழுக்கவனத்தையும் செலுத்த நேர்ந்தது. ஸ்டூவர்ட்டு மரபினருடைய திடீர்த் தாக்குதல்களினின்றும் அரியணையைப் பாதுகாக்க வேண்டியிருந்தது. அமைதியாலும், எளிமையான வரி களாலும் ஹானோவிரிய ஆட்சியை மக்கள் ஏற்றுக்கொள்ளும்படி செய்யப்பட்டார்கள். முதலாம் இரண்டாம் ஜார்ஜூகளின் ஆட்சிக் காலத்தில் பல்லாண்டுகள் துரைத்தனத்தை நடத்திய வால்போலும்

(1721-ல் பிரதம மந்திரியாரானார்; 1742-ல் பதவியை இழந்தார்) அரசியல் வாதிகளுக்குள் மிகவும் சமாதானப் போக்கினைக் கொண்டவர், பேரரசின் வெளியாடம்பரத்தில் சிறிதும் நாட்டமில்லாதவராயிருந்தார். பதினைந்தாம் லூயியின் அமைச்சரான ஃப்ளூரியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, இப்போது பிரான்சுடன் 'மனமார்ந்த நேச வுடன்படிக்கை'யை ஏற்படுத்துவதற்கு முயன்றார். பாராளுமன்ற முறையின் வளர்ச்சிக்கு அவர் யாது செய்தார் என்பதை ஏற்கனவே கண்டோம். அவர் மிகச் சிறந்த நிதி நிபுணராயிருந்ததுடன், எல்லா வற்றையும்விட, கிரேட் பிரிட்டனுடைய செயல்முறைகளைப் பழுதற்ற தொழில் முறை அடிப்படையில் நடத்துவதில் கவலை கொண்டிருந்தார். கருத்துக்கொள்கையிலும், ஆர்வத்திலும் அவர் திறமையற்றவரா யிருந்ததால், மற்றவர்களிடத்திலும் இத்தன்மைகளின் முக்கியத்தைக் காணவில்லை. ஆனால், நல்லதும் தீயதுமான காரணங்களுக்காக வால்போலிடத்தில் இரக்கம் கொண்டிராத பலர் இங்கிலாந்தில் இருந்தனர். குறிப்பாக, இங்கிலாந்தின் உயர்விற்குச் சிறிதும் தகுதி யற்றதாக அவருடைய வெளிநாட்டுக் கொள்கை இருப்பதாகப் பலர் கருதினர்.

## ஸ்பெயினுடன் போர்

1739-ல் கிரேட் பிரிட்டனுக்கும் ஸ்பெயினுக்கும் சச்சரவு ஏற்பட்டது. உட்ரெக்டு உடன்படிக்கையினால் ஆங்கிலேயருக்கு அளிக்கப்பட்ட ஸ்பெயின் குடியேற்ற நாடுகளுடன் வரையறுத்த வியாபார உரிமையைப் பற்றியதாக இச்சச்சரவு ஏற்பட்டது. ஒரு தனியான ஆங்கிலேயருடைய மரணத்தை ஏற்படுத்தும் அளவிற்குத் தகுதியற்ற சில்லறை விவகாரமாக இது வால்போலுக்குத் தோன்றியது. ஆனால், ஆளும் இனத்தவர்களுடைய இராணுவ ஆர்வம் மேலோங் கியதால் ஸ்பெயின்மீது போர்ப் பேரறிவுப்புச் செய்யுமாறு வால்போல் கட்டாயப்படுத்தப்பட்டார்.

## ஆஸ்திரியா வாரிசுப் போர்

ஃபான்டினாய்

இப்போர் நன்கு தொடங்கப்படு முன்பே 1740-ல் ஆஸ்திரியா வாரிசுரிமை பற்றிய பிரச்சினை எழுந்தது. இப்பொழுதும் வால்போல் சமாதான நிலையிலிருந்து வந்தார். ஆனால், 1742-ல் பதவியிலிருந்து விரட்டப்பட்டார். நாம் ஏற்கனவே அறிந்தபடி, கிரேட் பிரிட்டன் பிரான்சிற்குப் பகையாய் இப்போரில் ஆஸ்திரியாவுடன் நேச நாடாகச் சேர்ந்தது. போர், கிரேட் பிரிட்டனுடைய போர்க்கருவிகளின் மேன்மை அல்லது கொள்கை இவற்றில் சிறிதும் மதிப்பில்லா

திருந்ததைப் பிரதிபலிக்கிறது. மகாபிரடெரிக்குடன் உயிருக்கு மன்ருடிக்கொண்டு போர் புரிந்த மெரியாதெரிசாவிற்கு ஆங்கிலேயர் சிறிதுகூட உதவி அளிக்கவில்லை. டெட்டின்ஜன் வெற்றிக்கு எதிராக ஃபான்டினுய் தோல்வியைக் (1745) கொள்ள வேண்டியதாயிற்று. ஃபான்டினுய் விபத்து இரண்டாம் ஜார்ஜின் அரசுரிமைக்குக் கேடு விளைத்துவிடும்போல உண்மையில் தோன்றியது. ஸ்டூவர்ட்டுக் குடும்பத்தின் ஆதரவாளர்கள் நாட்டில் இன்னும் சத்தியுள்ளவர்களாய் இருந்தார்கள். அவர்கள் இன்னும் பரம்பரை மன்னர்களின் தெய்விக உரிமைக் கொள்கையைக் கொண்டிருந்தார்கள்.

## ஜாகோபைட்டுகளின் தோல்வி

ஆதரவாளர்கள் 1688-ல் நடந்த புரட்சியையும், அதன் பயனுக ஹானேவிரிய மன்னர்கள் ஆளுவதையும் வெறுத்தார்கள். இரண்டாவது ஜேம்ஸின் பெயரரும், வரலாற்றிலும் கட்டுக்கதையிலும் இளைய புரட்டர் (ப்ரிட்டனில் மன்னர் எனப்) புகழ் பெற்றவருமான சார்லஸ் எட்வர்டு, ஸ்காட்லாந்தில் வந்திறங்கினுர்; மலை நாட்டினரிடையே சிறந்த படையைத் திரட்டியும், எடின்பரோவைக் கைப்பற்றியும் இலண்டனை நோக்கி முன்னேறினுர். ஓரமயத்தில் எதிர்த்து நிற்கத் திறமையற்றதுபோல நாடு தோன்றிற்று. இளைய புரட்டரும் பேரெதிர்ப்பின்றி டெர்பி வரையில் முன்னேறிச் சென்ருர். அப்பொழுதுதான் அவருடைய துணிவின் நம்பிக்கையற்ற நிலை வெளிப்படையாகத் தெரியலாயிற்று. ஹானேவிரியன் முடியாட்சியைப் பாதுகாத்து வந்தவர்கள் எதிர்ப்பாராத முறையில் திடுக்குற்று, இப்பொழுது அவரை எதிர்க்க ஒன்று சேர்ந்தார்கள். அவர் முழு வேகத்துடன் ஸ்காட்லாந்துக்குப் பின்னேக்கிச் சென்ருர். அங்குக் கொல்லடன் என்னும் இடத்தில் நிகழ்ந்த சண்டையில் 1746-ல் நசுக்குண்டார். இப்படையெடுப்பு, ஸ்டூவர்ட்டு இயக்கத்தை ஆதரித்தவர்களுடைய வலிமையைக் காட்டிலும் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆயத்தமற்ற நிலைமையைக் காட்டியது.

## ஆஸ்திரியா வாரிசுரிமைப் போர்

நாம் முன்பு அறிந்தபடி, ஆஸ்திரியா வாரிசுப் போரில் பிரிட்டிஷ் பேரரசும், ஜெர்மானியப் பேரரசும் நிலைபெற்று இருத்தல் பணயமாய் இருந்ததே நாம் காணும் பயங்கரமானதும் மிகப் பெரியதுமான சண்டைக்கு முற்குறிப்பாக இருந்தது. 1914—18-ல் நடந்த பெரும் போரிலிருந்து அப்பொழுது நடந்ததும், மிகப் பேரச்சமுடையதும், அழிவையுண்டுபண்ணக் கூடியதுமாயிருந்த போரில் உடன்பட்டிருந்த இவ்விரு பேரரசுகளும் அதிகாரத்தை நோக்கி முதன்மையானதும்

உறுதியானதுமான நிலையை அடைவதற்கு ஒன்றுக்கொன்று உதவி புரிந்தனவென்பதைக் காண்பது வியக்கத்தக்க முரணுரையாயிருந்தது. கிரேட் பிரிட்டனுக்குப் பிரஷ்யாவிடம் அன்பும் மெரியா தெரிசாவிடம் வெறுப்பும் இல்லை. குடியேற்றப் பேரரசு பற்றிப் பிரான்சுடன் ஏற்பட்ட போட்டிதான் அதனுடைய செய்கைகளைத் தீர்மானித்தது. ஐரோப்பா சரியாகப் போரில் உடன்படுவதற்கு முன்னதாகவே இந்தியாவிலும் கனடாவிலும் போர் தொடங்கிவிட்டது.

## சாதம் பிரபுவினுடைய இயல்பும் நோக்கங்களும்

பிரிட்டிஷ் போர்ப்படைகளின் வரலாற்றில் மிக வெற்றிகரமானவைகளில் ஒன்ருக இருக்க வேண்டிய இந்த யுத்தம் மோசமாகத் தொடங்கியது. இந்தியாவிலும், அமெரிக்காவிலும், ஜெர்மனியிலும், பிரிட்டிஷ் கப்பற்படையைத் தோற்கடிக்க முடியாது என்று எண்ணியிருந்த கடலிலுங்கூடப் பேரிடர்கள் ஏற்பட்டன. ஆனுல், 1757-ல் வலுவான அரசாங்கம் பிட்டு (பிற்காலத்தில் சாதம் பிரபு என வழங்கப்பட்டவர். இனி, இப்பட்டப் பெயரைக்கொண்டே குறிப்பிடுவோம்)(நியூகாசில் என்பவருடைய கூட்டான மேற்பார்வையின்கீழ் நிறுவப்பட்டது)நியூகாசில் முக்கியமாக உள்நாட்டு விவகாரங்களைக் கவனித்தார். சாதம் போரை நடத்துவதில், தமது முழுக் கவனத்தைச் செலுத்தினுர். இங்கிலாந்தின் அரசியல் வல்லமை பொருந்தியவர்களுள் சாதம் பிரபு புதுமையுணர்வு ஊட்டுகிறவராயிருந்தார். அவர் காலத்தில் அவர் மிகவும் விஞ்சிய செயலாற்றும் திறமையுடன் விளங்கியது காரணமாக நம் முழுக்கவனத்தையும் கவர்கிருர். அவரைச் சூழ்ந்திருந்த அரசியல் சமுதாயம் அவரது ஆர்வத்தைக் கண்டு அஞ்சியதுடன் இகழவும் செய்தது. அதனுடன் பருப்பொருளான வெற்றியை மதித்தும் நிதியூழல்களை மன்னித்தும், மரபு, வழக்கம் இவற்றின் உதவியைக் கொண்டு பழக்கமான வழிகளிற்சென்று கொண்டிருந்தது. சாதம் இவைகளிலிருந்து தனித்து நின்ருர். ஊழல்களுக்கு இடமளிக்காமலும்; கொள்கைகளுக்கும் முறைகளுக்கும் மூலமாயும், இதன் பயனைச் சேர்ந்து செயற்படுவதில் கடினமானவராயும், பிரிட்டிஷ் பாராளுமன்றம் அதுவரை கண்டிராத பேச்சு வன்மை கொண்டவராயும், நீதியையும் சுதந்தரத்தையும் அவற்றின் நன்மையைக் கருதியே விரும்புகிறவராயும், பிரிட்டன் கிழக்கிலும் மேற்கிலும் வெற்றியடையக்கூடும் என்ற பேரரசின் காட்சியின் மருட்சியால் பீடிக்கப்பட்டவராயுமிருந்தார். ஆவல் நிரம்பியிருந்த அவர், மற்றவர்களிடத்திலும் ஆர்வத்தையூட்டுவதற்கான சிறப்பைப் பெற்றிருந்தார். அவருடைய தனி அறைக்குச் சென்றவர் எல்லோருமே தைரியமுள்ளவராய் வெளி வந்தனர் என்பது கூறப்படுகிறது. ஆனுல், வார்த்தைகளோடும் கருத்துக்களோடும் அவருடைய செல்வாக்கு நின்றுவிடவில்லை. அவர் உயர்ந்த நிருவாகத் திறமையும் கொண்டிருந்தார்; வெற்றிகரமான வழிகளைக் கண்டார்.

நாட்டு மக்களை அதன் வழிச்செல்லுமாறு தூண்டினர். ஐரோப்பாவில் பிரஷ்யா நாட்டின் மகாபிரெடரிக்கிற்கு வலிமை பொருந்திய உதவியை அளிப்பது வாயிலாக ஐரோப்பாவிலேயே பிரான்சிற்குத் தேவைக்கதிக மான வேலையைக் கொடுக்கவும், இதற்கிடையில் பிரிட்டிஷ் கடற் படையின் துணைகொண்டு கடல் வழியாகப் பிரான்சு போர்த் தளவாடங்களை வெளி நாடுகளுக்கு அனுப்புவதைத் தடை செய்வது வாயிலாக அமெரிக்காவிலும் இந்தியாவிலும் இறுதி வெற்றியைப் பெறவும், தம்மை உறுதிப்படுத்திக் கொண்டார்.

## ஏழாண்டுப்போர்களின் வெற்றிகள்

இத்திட்டம் அவருடைய நாட்டை மிகப் பெரிய வெற்றியை நோக்கி முன்னேறச் செய்தது. ஐரோப்பாவில் பிரெஞ்சுக்காரர்களைத் தோற் கடிக்க ஆங்கிலப்படைகள் பிரஷ்யப் படைகளுடன் ஒத்துழைத்தன. 1759-ல் குபிரான் விரிகுடாச் சண்டையில் பிரிட்டிஷ் கடற்படை அதனுடைய கடலாதிக்கத்தை நிலை நிறுத்தியது. 1757-ல் கிளைவ் பிளாசிச் சண்டையில் வெற்றி கொண்டார். இவ்வெற்றி இந்தியாவில் பிரிட்டிஷ் டொமினியன் ஏற்பட அடிக்கல்லை நாட்டியது. 1759 ல் கியூபெக்கில் உல்ஃப் பெற்ற வெற்றி கனடாவில் பிரிட்டிஷ் டொமினியன் ஏற்பட வழிகோலியது. இவ்வெற்றிகளைக்காட்டிலும் உலக வரலாற்றின் போக்கை மாற்றிய வேறு படையெடுப்புக்கள் இல்லையெனலாம். இச்சண்டைகளை நடத்தியதன் திறமைகளை நாம் போற்றி அதன் பயனாக நாகரிக வளர்ச்சியும் முன்னேற்றமும் ஏற்படும் என நம்பிக்கை கொள்ளும்போது, இப்போராட்டத்தின் பயனாகத் தோன்றிய கடுமை யானதும் நியாயமற்றதுமான பிரான்சின் வெறுப்பைக் கண்டு நாம் துயரடைய வேண்டியிருக்கிறது. இத்துயரத்தொடர்பிலிருந்து சாதம் பிரபுவும் விலகியிருக்கவில்லை. பிரான்சுடன் ஏற்பட்டிருந்ததும் வால்போலால் தொடங்கி வைக்கப்பட்டதுமான நேசவுடன்படிக்கை நீடித்திருக்குமானல் இவ்விரு நாடுகளும் எத்தனைத் துயரங்களையும் போர்களையும் தவிர்த்திருக்கலாம்!

## மூன்றும் ஜார்ஜ் பட்டமேற்றல்

ஏழாண்டுப்போர் முடிவதற்கு முன்னரே மூன்றும் ஜார்ஜ் பட்ட மெய்தியதும், ஒரு பெரிய மாறுதலையுண்டுபண்ணியது. பிரஷ்ய உறவு கைவிடப்பட்டது. பிட்டு, பதவியிலிருந்து நீக்கப்பட்டார். 'மன்னரா யிருக்கும்' கலையில் மூன்றும் ஜார்ஜ் சோதனை நடத்தலானர். மன்னருடைய நண்பரும் மார்க்குவிஸ் பட்டமுடையவருமான 'பூட்' தலைமையில் அமைந்த அமைச்சர் குழு பாரிசு சமாதானத்துடன் (1763) இப்போரை முடிவு செய்தது. இலாபம் பெற்றிருக்கவேண்டிய அளவிற்கு இங்கிலாந்து பெறவில்லையென அக்காலத்தினர்

எண்ணினர். எனினும், ஏராளமான இலாபத்தை அது பெற்றிருந்தது. உண்மையில், கிடைத்த இலாபங்கள் உடன்படிக்கை வாசகத்தில் குறிப்பிடப் பெறவில்லை. இப்போரின் உண்மைப்பயனுக பிரிட்டிஷ் வடவமெரிக்கா, இந்தியா ஆகியவற்றில் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஏற்பட்ட போதிலும், இரு நாடுகளிலும் வருங்காலத்தில் வியக்கத்தக்க பல நிகழ்ச்சிகள் நிகழவிருந்தன.

## IV

1763-ல் ஒரு பெரிய குடியேற்ற நாட்டுப் பேரரசு கிரேட் பிரிட்டனுக்குச் சொந்தமாயிருந்தது என்றாலும், அது ஸ்பெயின் போர்த்துகல் முதலான நாடுகளுக்கிருந்ததைப் போன்று அவ்வளவு பெரியதாக எவ்விதத்திலும் இருக்கவில்லை. இவ்விரு நாடுகளின் பேரரசுகளும் அவற்றால் எவ்வளவு இலாபம் அடைந்தனவென்பதையும், எவ்வளவு பகுதியை இன்னும் அவற்றுடன் வைத்துக்கொண்டுள்ளன வென்பதையும் நாம் அறிவோம். பிரிட்டிஷ் பேரரசின் வரலாறு வேறு விதமாயிருக்கிறதென்றால், அஃது அமெரிக்கக் குடியேற்ற நாடுகளிட மிருந்து பிரிட்டனுடைய அரசியல் வல்லுநர் பெற்ற கடும்படிப்பினையின் பயனுக ஓரளவு ஏற்பட்டதாகும்.

அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் கலகம், மனிதரின் எல்லா நிகழ்ச்சிகளிலும் காணப்படுவது போல, தவிர்க்க முடியாததென்று சொல்லுவதற்கு இல்லை; மிகச் சோதனையாயிருந்த தருவாயில் அந்நிலையை அரசியல் அறிவாற்றல் பொருந்திய செயல் வாயிலாக வரலாற்றின் போக்கையே முற்றிலும் மாற்றியிருக்க முடியும்.

குடியேற்ற நாடுகள் வலிமை அடைந்த பொழுது கலகம் செய்வதற்குத் தொடங்குகின்றன. அதனுடன் அவற்றின் விவகாரங் களைச் செயலாற்றத் தொடங்கியதும் அவை சுதந்தரமடைகின்றன என்ற கருத்து, பதினெட்டாம் நூற்றாண்டில் பரவலாய் நிலவியது. அதில் பழைய குடியேற்ற முறைப்படி, குடியேற்ற நாடுகளைத் தாய் நாட்டின் உடைமைகளாகக் கருதித் தாய் நாட்டின் நலனை முன்னிட்டே குடியேற்ற நாடுகளில் ஆட்சி செய்வது என்பது ஓரளவு உண்மையா யிருந்தது. ஆனால், 1914-ல் நடந்த பெரும்போரின்பொழுது பிரிட்டிஷ் பேரரசின் பட்டறிவு, அமெரிக்கச் சுதந்தரப் போர்க்காலத்தில், அமெரிக்காவில் ஆங்கிலேயக் குடியேற்ற நாடுகளிலிருந்த மக்கள் தொகையைவிட ஐந்து மடங்கு அதிகமான மக்கள் தொகையைக் கொண்டிருந்த குடியேற்ற நாடுகள், தாய் நாட்டிலிருந்து பிரிந்து செல்ல விருப்பமில்லாமல், பேரரசின் ஐக்கியத்தைப் பாதுகாப்பதற்காக உயிர், பொருள் முதலியவைகளைச் செலவிடத் தயாராய் இருந்தது என்பதும், தாய் நாட்டினரிடம் விருப்பமும், உறுதியான அரசப்பற்றும்

இருந்ததை வெளிப்படுத்தியது. சுதந்தரம் என்ற எண்ணமே இவ்வற்புதச் செயலைச் செய்தது.

பதினெட்டாம் நூற்றாண்டிலிருந்த அரசியல் வல்லுநர்கள் இதை உணர்ந்திருப்பார்களானால், ஒருக்கால் அமெரிக்கப் புரட்சியைத் தவிர்த்திருக்கக்கூடும் ஏனெனில், பொதுவாக அமெரிக்கர்கள் அரசப்பற்றுக் கொண்டவர்கள். அவர்கள் ஏழாண்டுப் போரில் விருப்பத்துடன் ஒத்துழைத்தார்கள். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பேதைமையின் அடிப்படையில் எழுந்தவற்றையும் பாராமல் பெரும்பான்மையோர் சுதந்தரப் போர் முடியும் வரை உறுதியான அரசப்பற்றுடன் இருந்தனர். பிரிட்டிஷ் அரசியல் வல்லுநர் சிலர்—குறிப்பாக சாதமும் பர்க்கும்—சுதந்தரம், நம்பிக்கை இவற்றின் பயனைச் செயலில் பார்க்க வேண்டுமென்று ஆவலாயிருந்தனர். ஆனால், மாற்றுக் கருத்துக்கள், அரசரையும் பார்லிமெண்டையும் மேவியிருந்தன.

## அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் குறைகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகள் அவற்றின் சுதந்தரப்பேரறிக்கையில் அறிவித்ததாவது, 'இப்பொழுது கிரேட் பிரிட்டனில் ஆட்சி செய்யும் மன்னரின் வரலாறு மீண்டும் மீண்டும் செய்கிற துன்பங்களையும், உரிமையைக் கைப்பற்றுதலையும், இந்நாடுகளில் வரம்பிலாக் கொடுங்கோலாட்சியை நிறுவுவதையுமே நேரிடையான நோக்கமாகக் கொண்ட வரலாறு' என்பதாம். இப்போது ஐரோப்பிய அல்லது அமெரிக்க வரலாற்றைப் படிக்கும் மாணவர் இக்கூற்றை ஏற்றுக்கொள்ளுவதைக் காண முடியாது.

மூன்றாம் ஜார்ஜ் இரண்டாந்தரமான அறிவு படைத்திருந்ததுடன், உணர்ச்சிவயப்பட்ட உள்ளம் படைத்தவராயும் கடமையுணர்ச்சி உடையவராயுமிருந்தார். குடியேற்ற நாடுகளின் கலகம் 'கொடுங்கோன்மை, உரிமையைக் கைப்பற்றுதல்' இவற்றின் பயனாக ஏற்படவில்லை ஆனால், உலகம் முழுவதிலும் பரவியிருந்த குடியேற்றநாட்டு அரசாங்க முறைக்கும், அமெரிக்கர்களுடைய வளர்ந்துகொண்டிருந்த வலிமை, அவா இவற்றுக்கு மிடையே ஏற்பட்ட போட்டியின் விளைவாகும். எல்லாவற்றையும்விட இந்த நெருக்கடியில் நாட்டின் ஊழை வரையறுப்பதில் ஆதிக்கம் கொண்டிருந்த கிரேட் பிரிட்டனுடைய அரசியல் வாதிகளின் கற்பனையின்மையின் விளைவாயிருந்தது.

## அமெரிக்காவின்மீது வரி விதிப்புப் பிரச்சினை

ஏழாண்டுப் போரில் கிரேட் பிரிட்டனுக்கு ஏற்பட்ட செலவுகளில் இச்சண்டை ஏற்பட வாய்ப்பு உண்டாயிற்று. இப்போர் அமெரிக்கக்

குடியேற்ற நாடுகளின் நன்மையைக் கருதியே நிகழ்த்தப்பட்டது. கனடாவில் பிரெஞ்சுக்காரர்களுடைய அச்சுறுத்துதலிலிருந்து அந்நாடுகளைப் பாதுகாக்கவும், ஒஹியோ, மிசிசிப்பி ஆறுகளை இணைக்கும் கோட்டின் வழியாகக் கனடா, லூஷியாஞ இவற்றுக்கிடையே பிரெஞ்சுக்காரர்கள் அமைக்க எண்ணிய அரணை ஊடுருவிச் செல்லவும், இப்போர் ஏற்பட்டது. இவ்வாறு அரண் ஏற்படுமாஞல் அமெரிக்காவினுடைய நடுப்பகுதி மேற்குப் பகுதிகளின் நிலப்பகுதிகளிலிருந்தே ஆங்கிலேயக் குடியேற்ற நாடுகள் துண்டிக்கப்படுவதாகும். அமெரிக்க நாடுகள் போரிஞல் அடைந்த நற்பயன் காரணமாக, அவற்றைப்போருக்கும் செலவானதில் ஒரு பகுதியைக் கொடுக்க வெண்டுமென்று சொல்வது நியாயமெனத் தோன்றிற்று.

## நார்த்துப் பிரபுவும் டோரிகளும்

### விக்குகளும் பர்க்கும்

அமெரிக்கர் போரின் செலவிற்கு ஏற்கனவே, சுமாராக ஓரளவு பங்கை யளித்துவிட்டதாகப் பதிலிறுத்ததோடு, அவர்கள்மீது பிரிட்டிஷ் பாராளுமன்றம் எவ்விதமான கட்டாய வரி விதிப்பையும் செய்யும் உரிமையைக் கடுமையாக எதிர்த்து மறுப்பையும் தெரிவித்தனர். எதிர் வழக்குடைய இப்பிரச்சினையின் போக்கை நாம் தொடரவேண்டுவதில்லை; அதற்குப் பதிலாக இதுபற்றி இங்கிலாந்தின் அரசியல் வாதிகள் கொண்டிருந்த பல்வேறு கருத்துக்களை நோக்குவோம். மூன்ரும் ஜார்ஜிற்கு இப்பிரச்சினை மிகச் சாதாரணமாய்த் தோன்றியது. அமெரிக்கர்கள், அவருடைய குடிகள். அவர்களுக்குக் கீழ்ப்படிதலைக் கற்பிக்கவேண்டும். டோரிகள் கட்சியும் பொதுவாக அவருடைய எண்ணத்தையே கொண்டிருந்தது. அவர் இப்போர் நடந்தகாலத்தில் பிரதம மந்திரியாராயிருந்த நார்த்துப் பிரபுவைத் தம் முக்கிய ஏஜென்டாகக் கருதிஞர். விக்குகளில் பலர் அமெரிக்கர்களின் உரிமைகளுக்குச் சாதகமாயிருந்தனர். மார்க்குவிஸ் பட்டம் பெற்றிருந்த பக்கிங்ஹாம் (1766) என்பவருடைய விக்கு அமைச்சரவை சிறிது காலம் பதவியிலிருந்த பொழுது, உண்மையானதும் வெற்றியுடன் கூடியதுமான சமரச முயற்சி செய்யப்பட்டது. விக்குக் கட்சியின் அறிவுச் சத்தி, பர்க்கு என்பவரிடம் காணப்பட்டது. பர்க்கு அரசியல் வாதி என்ற முறையில் தோல்வியுற்ருரெனினும், சிந்தனையாளர் என்ற முறையில் ஆங்கிலேயருடைய திட நம்பிக்கைகளில் நிலையான அறிகுறியை ஏற்படுத்தியுள்ளார். இவருடையபேச்சுக்கள், ஆங்கில மொழியில் மற்றெவருக்கும் கிட்டாத நிலையில், நாட்டின் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. அமெரிக்கருக்கு எதிராக ஏற்பட்ட தவருன எண்ணங்களைக் கைவிடும்படியும், அவர்கள் முன்பிருந்ததைக் கவனிக்குமாறும் ஆங்கிலேயர்களான அவர்களிடம் ஆங்கிலேயர்களுடைய பண்புக்

கூறுகள் மிகுந்திருக்கின்றனவென்றும், அவர்கள்மீது வரி விதித்தற்குரிய எல்லா முயற்சிகளையும் கைவிட வேண்டுமென்றும், ஆனால் பாராளுமன்றத்தின் வரி விதிக்கும் உரிமையைக் கொள்கையளவில் வற்புறுத்து மாறும் மன்றத்தை மன்றாடிக் கேட்டுக்கொண்டார்.

## சாதம்

சாதம் தமது இயல்புப்படியே சுதந்தரமானதும், தனிமையானதுமான போக்கைக் கொண்டிருந்ததுடன் எந்தக் கட்சியுடனும், ஒத்துழைக்க மறுத்தார்; 'விலை மதிக்க முடியாத சுதந்தரத்தின்மீது நேரிய மதிப்பை வைக்கும்' அமெரிக்கர்களைப் புகழ்ந்தார்; பாராளுமன்றத்திற்கு அமெரிக்கர்கள்மீது வரி விதிக்க உரிமையில்லையென்றும் அவ்வாறு செய்வது கொடுங்கோன்மையென்றும் அறிவித்தார்; ஆனால் அமெரிக்கர்களைக் கிரேட் பிரிட்டனுடன் இணைந்திருந்த தொடர்புகளில் பிளவு செய்வதைப் பெருஞ்சினத்துடன் எதிர்த்து, எவ்வாருகிலும் 'பிரிட்டிஷ் சட்டசபையினுடைய மேற்பார்வையிடும் சத்தியையும் அதிகாரத்தையும்' நிலைபெறச்செய்யத் தாம் தயாராயிருப்பதாயும் அறிவித்தார். சாதம் செய்திருக்கக்கூடியவைகளையெல்லாம் அறிந்து கொள்ளுவது எளிதன்று. ஆனால், துன்புறுத்துதலைப் போன்ற எல்லா முயற்சிகளையும் கைவிட்டுவிட்டுக் கிரேட் பிரிட்டனுடன் தொடர்புகளை நீடிக்க அமெரிக்கர்கள் தாமே இயல்பாகக் கொள்ளுகின்ற பற்றுறுதியில் நம்பிக்கை கொண்டார். அவருடைய நம்பிக்கை ஒரு சமயம் பயனற்றதாயிராமல் இருந்திருக்கக்கூடும்.

## அமெரிக்கச் சுதந்தரப் போர்

### பிரான்சு ஐக்கிய நாடுகளுக்கு உதவி புரிதல்

1774-ல் போர் ஏற்பட்டபோது பிரிட்டிஷ் அரசாங்கம் தனது படை எண்ணிக்கை, செல்வம், கடலாதிக்கம் ஆகிய இவைகள் உறுதியளித்ததாகத் தோன்றியதைக் கொண்டு எளிதான வெற்றியை எதிர்பார்த்தனர். தங்களுக்குப் பாதுகாப்பைச் செய்ய மிகச் சிறப்பான தகுதியையுடையவராக வாஷிங்டனை அமெரிக்கர்கள் நோக்கினார்கள். வாஷிங்டன் அமெரிக்காவில், ஹாலந்தில் சாந்த வில்லியம் கொண்ட பங்கைப் போன்ற பங்கு கொண்டார். (சாந்த வில்லியத்தைவிட வாஷிங்டன் மிக உயர்வான வீரராயிருந்தபோதிலும்) அவர்கள் வெளிநாட்டு உதவியைப் பெருமல வெற்றி பெற்றிருக்க முடிந்திருக்குமென்பது நம்ப முடியாததாம். பழைய கடன்களைத் தீர்ப்பதற்குக் கிடைத்த வாய்ப்பைப் பெருமிதத்துடன் பிரான்சு பயன்படுத்தியது. அமெரிக்கர்கள் அவர்களுடைய சுதந்தரத்தை அறிவித்த பின், பிரான்சு புதிய குடியரசு பக்கம் சேர்ந்தது. பிரிட்டிஷாரை எதிர்த்து, அநேக

மாக எல்லா இடங்களிலும் போர் நடந்தது. ஒரு சமயம் அவர்களுடைய கப்பற்படையும், துணை புரியவில்லை. போர்த்தலைவரான காரன்வாலிஸ், யார்க்கு டவுன் எனுமிடத்தில் (1781 அக்டோபர்) சரணடைந்தார். இதன் பிறகு பிரெஞ்சுக்காரர்மீது ஆங்கிலேயர்கள் ஒரு பெரிய கடற்சண்டையில் வெற்றியை அடைந்து, எல்லாத் தாக்குதல்களிலிருந்தும் ஜிப்ரால்டரை அவர்கள் வசம் வைத்துக் கொண்ட போதிலும், ஐக்கிய நாடுகளை மீண்டும் வெல்லுவதற்கான வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

## அமெரிக்க வெற்றியின் பயன்கள்

### பிரிட்டிஷ் பேரரசின்மீது—ஐரோப்பிய அரசியல்மீது

பெரிதளவில் பயன்களைக் கொண்டதாக இவ்வெற்றியிருந்தது. அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் கிரேட் பிரிட்டனுடன் தொடர்பு கொண்டிருக்குமானுல், அவைசிறந்தவைகளாயும், செல்வச் செழிப்பு உள்ளவைகளாயும், இறுதியில் ஒன்றுபட்டு ஒருக்கால் இருந்திருக்கக் கூடும். ஆனுல், அவை உண்மையில் இப்பொழுதிருப்பதைவிடப் பேரளவில் ஆங்கிலேயரைப்போலவும், மிகக் குறைவான அளவில் ஐரோப்பியரைப் போலவும் இருந்திருக்கும். ஏனெனில், வட அமெரிக்காவின் மொழியாகஆங்கிலமே எப்போதும்இருக்குமென்றுலும், ஐக்கிய நாடுகள் அநேகமாக எல்லா ஐரோப்பிய நாடுகளின் பிரதிநிதிகளின் கூட்டு நிலையங்கள் ஆகிவிட்டன. ஐரோப்பாவின் மக்கள் இப்புது நாட்டில் நுழைந்து புதிய வாழ்க்கையைக் கொண்டதாக அந்நாட்டினையாக்கினர். அமெரிக்க ஐக்கிய நாடுகள் புதிய தொடக்கத்தைக் கொண்ட ஐரோப்பாவாய் இருந்தன. அமெரிக்காவில் ஏற்பட்ட இப்போட்டியின் முக்கியமான விளைவுகள் இங்கிலாந்திலும் காணப்பட்டன. அது குடியேற்ற நாட்டுக் கொள்கையினைப் பற்றிய பிரிட்டிஷ் அரசாங்கத்தினுடைய கருத்துக்களை முற்றிலும் மாற்றியது. துன்புறுத்தல் முறைகள் கைவிடப்பட்டன. நெடுநாள் வரையில் குடியேற்ற நாடுகளில் பேரரசுகள் ஊன்றிவிடும் என்ற எண்ணமும் கைவிடப்பட வேண்டுவது போலத் தோன்றியது. ஆனுல், பத்தொன்பதாவது நூற்றுண்டில் புதியதும், சுதந்தரம், விடுதலை இவைகளில் மிகவும் வலிமை மிக்க அடிப்படையில் ஏற்பட்டதும் ஆகிய நாடுகள் குடியேற்ற நாடுகள் என்ற பெயருடன் வழங்கப்படாமல் டொமினியன்கள் ஆயின. ஐக்கிய நாடுகளின் வெற்றியுடன் கூடிய எதிர்ப்பு, இவ்வின்பகரமான முடிவிற்குப் பெரிதளவில் உதவி செய்தது. இறுதியாக, அமெரிக்காவில் தடை செய்யப்பட்டிருந்த சுதந்தர ஒளி, பிரான்சில் மறுபடியும் விரைவிலேயே பேரொளியாய் வீசத்தொடங்கியது. 'அரசாங்கங்கள் உயிர் காப்புணர்ச்சி, சுதந்தரம், மக்களின் இன்பம் ஆகிய இவைகளுக்காகத்தான்

இருக்கின்றன,' என அறிவித்ததும், கிரேட் பிரிட்டனேடு அதனுடைய சண்டைகளில் வெற்றியடைந்ததுமான குடியரசின் இணையிலாக் காட்சி, பிரெஞ்சு மக்களுடைய சிந்தனை, கற்பனைகள் இவைகளில் மிக்க வலிமைகொண்ட ஆதிக்கம் உடையதாய், அந்நாட்டில் ஏற்பட்ட புரட்சிக்கான காரணங்களில் ஒன்ருயிற்று. நியூயார்க்குத் துறைமுகத்தின் வாயிலில், ஐரோப்பாவை நோக்கி மிக உயரத்தில் தூக்கிப் பிடிக்கப்பட்ட விளக்குடன் நிற்கும் சுதந்தரச்சிலை, வரலாற்றில் ஒருயர்ந்த உண்மையின் சின்னமாய் இருக்கிறது.

## V

## அமெரிக்கப் போருக்குப்பின் ஆங்கிலப் பாராளுமன்றம்

### பிட்டும் பிரெஞ்சுப் புரட்சியும்

அமெரிக்கக் குடியேற்ற நாடுகளை வற்புறுத்தும் முயற்சியின் தோல்வி, உள்நாட்டிலும் மூன்ரும் ஜார்ஜின் திட்டங்களை முறையாகத் தோற்வியுறச் செய்தது. அரசியல் அதிகாரத்தின் அடித்தளமாகப் பாராளுமன்றம் அதன் பழைய நிலைக்கு மீட்கப்பட்டது. இளைய பிட்டு, சாதம், ஏர்ல்கோமகனுரின் புதல்வர், அரசியல் வல்லமையுடன் தோன்றினுர். அவர் பாராளுமன்றத்தின் முழு ஆதரவைப் பெற்றிருந்ததால் மன்னராலும் ஏற்றுக்கொள்ளக்கூடியவராகத் தம்மைச் செய்து கொண்டார். அவர் தம் தந்தையாருக்கு மாருய் இருந்தார். தந்தையாரிடத்தில் நாம் கண்ட புதுமையுணர்வு ஊட்டுகிற இயல்பை மைந்தரிடத்தில் காண இயலவில்லை. அவர் மிகச் சிறந்த பேச்சாளர் எனினும், சொல்வன்மையில்லாதவர். தொழிற் கவனமுடையவராயும் ஒழுங்கு முறையைப் பின் பற்றுகிறவராயுமிருந்தார். மிகச் சிறந்த அரசியல் நிதிக்கணக்கர்; தடையில்லா வியாபாரத்தில் உறுதியான பற்றுதல் கொண்டிருந்தார். அவர் சீர்திருத்தம் செய்யக்கூடிய அரசியல் வல்லமையுடையவர் என்று வரலாற்றில் புகழ் பெறுவார் எனத் தோன்றியது. அவர் இந்திய அரசாங்கத்தைத் திருத்தியமைத்தார்; நிதிபற்றிய சீர்திருத்தங்களைத் தோற்றுவித்தார்; பிரான்சுடன் வாணிக வுடன்படிக்கைக்கு ஏற்பாடு செய்து இருநாடுகட்குமிடையே வியாபாரத்திற்காணப்பட்ட தடைகளை அகற்றினுர்; அடிமை வியாபாரத்தைத் தாக்கினுர்; பாராளுமன்றத்தைச் சீர்திருத்தம் செய்யும் எண்ணத்தையும் கைவிடவில்லை. ஆனுல், பிரெஞ்சுப் புரட்சியும் அதையெதிர்த்து ஏற்பட்ட போரும், அவருடைய வாழ்க்கையின் போக்கை ஒன்றுக்கொன்று மாறுபட்ட இருபெரும் பிரிவுகளாகச் செய்தன; இதன் பயனுக, வெளி அலுவல்களிலும், போரிலும் மிகச் சிறப்புற்றவர் ஆனதுடன் வாழுள் முழுவதும் புரட்சியையெதிர்த்தும், அதன்

விரைவாக வளர்ந்த நெப்போலியனுடைய அதிகாரத்தை எதிர்த்தும் சண்டையிட்டார்.

## இங்கிலாந்தும் பிரெஞ்சுப் புரட்சியும்

தொடக்கத்தில் இங்கிலாந்தின் உணர்வு, பொதுவாகப் புரட்சிக்குச் சாதகமாயிருந்தது. பிரெஞ்சு முடியாட்சியை எதிர்த்துப் பல தலை முறைகளாகவே போரிட்டு வந்திருப்பதால், முடியாட்சியைப் பலவீனப் படுத்துவதாகத் தோன்றியதும் அதை உண்மையில் மாற்றுவதற்குத் திடீரெனத் தோன்றிய ஓரியக்கத்தைக் கண்டு இங்கிலாந்து வருத்தப் படவில்லை. வழக்கமாகப் பிரெஞ்சு மக்கள்மீது சுமத்தப்பட்ட குற்றச் சாட்டு அவர்கள் மன்னர்களிடம் அடிமை எண்ணத்துடன் நடந்து கொண்டதுஎன்பதேயாம். 1688-ல் இங்கிலாந்தில் நடந்ததைப் பார்த்து, 1789-ல் அவர்கள் அதையே பின்பற்றுகிறவர்போலக் காணப்பட்டனர். எனவே, இப்புதிய இயக்கத்தைச் செழிப்பு, இசைவு, சமாதானக்காலம் இவற்றின் தோற்றத்திற்கு அறிகுறியாகப் புலவர்கள் கொண்டாடிய போதிலும், இங்கிலாந்தின் அரசியல் வாதிகள் ஐரோப்பாவினுடைய அமைதியின்மையை விலக்கிவிடக்கூடிய காரணமாயுள்ளதாக இவ்வியக்கத்தைப் பொதுவாக வரவேற்றுர்கள். பர்க்கு மாத்திரம் தொடக்கத்திலிருந்தே இப்பிரெஞ்சு இயக்கம் ஆங்கிலப் புரட்சியின் கருத்துக்குப் புறம்பாயிருந்ததாகக் கருதினர்; எனவே, அமைதியைக் காட்டிலும் இது போரையே உண்டாக்கும் என்றும் கருதினர்.

## 1793-ல் பிரான்சுடன் போர்

### 'ஸ்கில்டு' தொடங்கப்படல்

1793, பிப்பிரவரி மாதத்தில் கிரேட் பிரிட்டனுக்கும் பிரான்சிற்கும் போர் மூண்டது. 'அதைத் தவிர்த்திருக்கஇயலுமா?' என்று நாம் வினவுவது கடினமான பிரச்சினையாகும். பிரெஞ்சுப் புரட்சியின் கொள்கைகளில் பெரும்பகுதியை இங்கிலாந்தும் நாகரிகவுலகமும் ஏற்றுக்கொண்டிருந்தன. இங்கிலாந்திற்கும் பிரான்சிற்கும் இடையில் உடன்படிக்கையோ, நல்லெண்ணமோ ஏற்பட்டிருந்தால், புரட்சியை அதனுடைய கொடுமையான அச்சங்களிலிருந்து ஒருகால் காப்பாற்றி யிருக்க இயலும். அதனுடன் ஐரோப்பாவையும் கால் நூற்றுண்டு வரை நீடித்திருந்த போரினின்றும் அது காப்பாற்றியிருக்கும், பிரிட்டிஷ் கால்வாயின் இரு மருங்கிலும், அரசியல் வல்லமையுடையவ ரிருந்தனர்; ஏதாவதோர் உடன்படிக்கை ஏற்பட முடியும் என்றும் கருதினர். ஆனல், தொடக்கத்திலிருந்தே புரட்சியின் வன்முறைகள், இங்கிலாந்திலிருந்த கன்சர்வேட்டிவ் இயல்பூக்கங்களுக்கு அதிர்ச்-

சியை உண்டுபண்ணியதுடன், மன்னரை நடத்திய முறையும் மன முறிவை முழுமையாக்கியது. வாணிகக் கருத்து (பதினெட்டாம் நூற்ருண்டு முழுவதிலும் ஆங்கிலேயர்களுடைய கொள்கையில் மிக்க வலிமை பொருந்திய செல்வாக்குடன் காணப்பட்டது) 'ஸ்கில் டைத் தொடங்கியதால்' (போதுமான காரணங்களில்லாதிருந்தும்) அச்சுறுத்தப்பட்டது. அஃதாவது, இலண்டனுக்குப் போட்டியாக ஆன்ட்வெர்ப்பைப் பெரிய துறைமுகமாக நிறுவுவதே இத்தொடக் கத்தின் நோக்கமாகும். நியாயமான எண்ணத்துடன் பிட்டு உடன் படிக்கைகளில் அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை இது மீறியதென்றும், அரசாங்கத்திற்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்யும் எந்நாட்டிற்கும் உதவி செய்வதாகப் பிரெஞ்சுக் குடியரசு பிரகடனத்தில் கூறப்பட் டிருந்ததைச் சுட்டிக்காட்டி, அஃது ஆபத்தை விளைவிக்கக் கூடிய திட்டங்களைக் கொண்டிருந்ததை மெய்ப்பித்தலாகும் என்னும் காரணங் களுக்காக இச்செயலை இடித்துரைத்தார். பின்னர் மன்னரைக் கொலை செய்தது, விவகாரங்களை முற்றச்செய்து, போர் அறிவிப்பாய் ஆயிற்று.

## பெரும்போரில் கிரேட் பிரிட்டனின் பங்கு

முன்னதிகாரத்தில், நீடித்த இப்போரின் போக்கைப்பற்றிக் குறிப் பிடப்பட்டுள்ளது. இப்போரில் கிரேட் பிரிட்டனின் பங்கைப்பற்றி இங்குச் சில சொற்கள் கூறுவது போதுமானதாகும். நெடுநாளாக அந்நாடு தரைப்போரில் பங்கு கொண்டிருந்தது, அதற்கு எவ்விதத் திலும் மதிப்பை அளிப்பதாயில்லை. படைகள் நன்முறையில் ஆயத்தம் செய்யப்படாமலும் நன்முறையில் தலைமை வகித்து நடத்தப் படாமலுமிருந்தன. பிட்டு, 'போர் இரண்டொரு படையெடுப்புக் களில் முடிந்துவிடும்' என்று தவருய் எண்ணி முன்னறிவிப்புச் செய் தார். தான் செய்ய வேண்டியிருந்த முயற்சிகளைக் கிரேட் பிரிட்டன் சிறிது சிறிதாகத்தான் உணர்ந்தது. தாழ்ந்த நாடுகளின்மீது தொடக்கத்தில் நிகழ்ந்த பிரிட்டிஷ் படையெடுப்புக்கள் விளக்கமான தோல்விகளாயிருந்தன. அமெரிக்கப் போரின்போது கிரேட் பிரிட்டன் இருந்ததைப்போன்று திறமையாயில்லையென மக்கள் கருதும்படி செய்தது. பிரிட்டிஷ் படைகள் செயலற்றனவாயிருந்த போதிலும், கிரேட் பிரிட்டனுடைய செல்வாக்குத் தொடக்கத்தி லிருந்தே மிகவும் முக்கியம் வாய்ந்ததாயிருந்தது. மூன்று வழிகளில் இது செயல் புரிந்தது. பிட்டின் அரசியல் தந்திரத்தின் பயனுக; கூட்டுக்குப்பின்கூட்டு அடுத்தடுத்தமைக்கப்பட்டது; ஐரோப் பியப் படைகளை அடிக்கடி போர்க்களத்தில் தனிமையாக வைப்பதற்குப்

பயன் பெற்ற இங்கிலாந்தின் செல்வம், பேரிடருடன் கூடிய இராணுவக் கலகங்கள் நிகழ்ந்த போதிலும், இறுதிவரை தன் மேன்மையை நிலைநிறுத்திய கப்பற்படை ஆகியவை மேற்கூறிய மூன்று வழிகளாம்.

## டிரஃபால்கர்

1802-ல் நடந்த அமீன்ஸ் சமாதானம் கிரேட் பிரிட்டனுக்கு மூச்சுவிட இடமளித்ததே தவிர வேறில்லை. தற்காலிகமாகப் பிட்டு அயர்லாந்து தொல்லை காரணமாகப் பதவியிலிருந்து விலகினுர். இதைப்பற்றிப் பின்பு நோக்குவோம். ஆனுல், பகைமை மீண்டும் ஏற்பட்ட பொழுது அவர் மறுபடியும் பதவி ஏற்ருர்; நெப்போலியன் படையெடுப்பதாகப் பயமுறுத்திய பொழுது இங்கிலாந்திற்குத் தைரியம் ஊட்டினுர். டிரஃபால்கர் என்னுமிடத்தில் நெல்சனுக்குச் சிகரம் போன்று அமைந்த வெற்றியின் செய்தியால் மக்களுடைய ஊக்கவுணர்ச்சிகள் மேலெழுந்தன. ஆனுல், அச்சண்டை ஆங்கிலேயருக்கு இருந்ததைப் போலப் பிற நாட்டினருக்கு அவ்வளவு பொருள் கொண்டதாயில்லை. பிட்டு, உல்ம் என்னுமிடத்திலும், ஆஸ்டர்லிட்ஸ் என்னுமிடத்திலும் வெற்றிகளின் செய்தியைக் கேட்டுப் பூரிப்படைந்தார். 1806 ஜனவரியில் அவர் இறந்தார்.

## ஃபாக்ஸ், காஸல்ரீ, கானிங்கு

பிட்டின் மரணத்திற்குப் பின் ஏற்பட்ட அமைச்சர் குழுவின் மாற்றங்களைப்பற்றி நாம் மிகுதியாக ஆராயவேண்டா. அவருடைய விக்கு எதிரியான ஃபாக்ஸ் என்பார் சிறிது காலம் பதவியேற்று நெப்போலியனுடன் சமாதானத்தையும் நல்லுறவையும் ஏற்படுத்த விரும்பினுர். ஆனுல், தம்முடைய எண்ணங்கள் தோல்வியுற்றதும், அவர் 1806 செப்டெம்பரில் இறந்து போனுர். போரை நடத்துவதற்கும், வெற்றிகரமாக முடிப்பதற்கும் முக்கியப் பொறுப்பாளராய் இருந்த அமைச்சர்கள், கானிங்கும் காஸல்ரீயும் ஆவார்கள். கானிங்கைப் பிட்டினுடைய வாரிசு என்று சொல்வதுண்டு. அவர் பழைய டோரியாய் இருந்தார்; 1807 இலிருந்து 1809 வரை வெளி நாட்டு அமைச்சராயும் இருந்தார். போரின் இறுதிப் பகுதியையும் இங்கிலாந்தின் வெளி நாட்டுக் கொள்கையையும வகுத்த காஸல்ரீ, உயர்ந்த திறமையுள்ளவராயும், உறுதியான முடிவைக் கொண்டவராயும் இருந்தார். நெப்போலியனை எதிர்த்து இங்கிலாந்து நிகழ்த்திய போரின் எஞ்சிய பகுதியில் இரண்டு முக்கியமான கூறுகள் காணப்பட்டன.

## பிரான்சுடன் வாணிகப் போர்

வெலிங்டன்

முதலில் அது கடுமையான வாணிகப் போராய் வளர்ந்தது. வெற்றிகரமான கப்பற்படைச் சண்டையில் நம்பிக்கையிழந்த நெப்போலியன், ஐரோப்பாவிலிருந்து பிரிட்டிஷ் வாணிகம் முழுவதையும் விலக்குவது வாயிலாகக் 'கடைக்காரர்கள் இராச்சியத்தை' அடி பணியச் செய்ய நினைத்தார். இம்முயற்சி தோற்றது. நெப்போலியன் அதிகாரத்தின் கீழிருந்த ஐரோப்பியக் கடற்கரைகளைப் பிரிட்டிஷார் முற்றுகை செய்வது வாயிலாக எதிர்த்து நின்றனர். அடுத்தபடியாகத் தொடக்கத்திலிருந்தே நெப்போலியன் கப்பற்படை செயலாற்றியது போல, இறுதியாகப் பிரிட்டிஷ் படையும் திறமையாய்ச் செயற்படத் தொடங்கியது. இம்மாறுதலுக்கு மேலான ஏஜென்டாய் வெலிங்டன் கோமகனார் இருந்தார். ஸ்பெயின் அவருடைய படைகளுக்குப் பயிற்சியளிக்கும் இடமாயும், அவருடைய மிகப் பெரிய வெற்றிகளின் களமாயும் இருந்தது. அவர் ஸ்பெயினில் ஆஸ்திரியச் சண்டைகளோடு ஒத்துழைத்ததையும் 1872-ல் ரஷ்யாவை எதிர்த்து நின்றதையும் பற்றிய வரலாற்றை முன்னதிகாரத்திலிருந்து கற்போர் அறிந்துகொள்ள வேண்டும். 1814-ல் முதன்முதலாக நெப்போலியன் வீழ்ச்சியுற்றதில் அவர் பெரும்பங்கு கொண்டார்; 1815 - ல் இரண்டாவது தடவையாக வீழ்ச்சியடையச் செய்ததிலும் மேலும் மிகுதியான பங்கு கொண்டார். ஐரோப்பாவில் இறுதியாகச் சமாதானம் மீட்கப்பட்ட பொழுது வெலிங்டனைவிட மிகச்சிறந்த புகழ் வேறெவருக்கும் இல்லை. கிரேட் பிரிட்டனுடைய விடாமுயற்சியும், இறுதி வெற்றியும், அந்நாட்டு மக்களின் புகழையும், துரைத்தன அமைப்பையும் ஐரோப்பிய மக்கள் போற்றும் வண்ணம் நிலைபெறச் செய்தன.

### VI

நெப்போலியனுடன் நடந்த போராட்டத்தின் வரலாற்றை முடிப்பதற்காக ஒரு பக்கத்தில் ஒதுக்கப்பட்டிருந்த வேறு நிகழ்ச்சிகளைப் பற்றி அறிதல் இன்றியமையாததாகும்.

## அயர்லாந்து

அயர்லாந்தில் உள் நாட்டுப் போரும், புரட்சியும், நிகழ்ந்து கொண்டிருந்தன. இவற்றைப்பற்றி விளக்குவதற்கு இந்நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே நோக்குதல் வேண்டும். மூன்றாம் வில்லியமும், மார்ல்பரோவும், அயர்லாந்தை வென்ற பின், அயர்லாந்து

எதிர்க்கச் சக்தியற்றதாய், கிரேட் பிரிட்டனுடைய ஆட்சியின்கீழ் வந்தது. ஆனால், டப்ளினில் ஒரு பாராளுமன்றம் அமைக்கப்பட்டிருந்தது. அப்பாராளுமன்றத்தில் பிராட்டஸ்டென்டுகள் மாத்திரம் இடம் பெற்றிருந்தார்கள். தேர்தல்களிலும் பிராட்டஸ்டென்டுகள் மாத்திரமே வாக்குரிமை அளிக்க இயலும். பதினான்காம் லூயியின் காலத்தில் ஹியூக்நோக்களை ஒடுக்குவதற்காகப் பிரான்சு மேற்கொண்ட சட்டங்களை அநேகமாக ஒத்திருந்தனவும், வரிசையாய் ஏற்பட்டனவுமான சட்டங்களால், கத்தோலிக்கர்கள் துன்புறுத்தப்பட்டுப் பதவிகளிலிருந்தும் அவர்களுடைய நிலங்களிலிருந்தும் விரட்டப்பட்டார்கள். எனவே, தேசியவுணர்ச்சி முறிந்து போனதாகத் தோன்றியதோடு எதிர்ப்பும் சிறிதளவுகூடச் செய்யப்படவில்லை. அயர்லாந்தின் நாட்டு இனமும் மரபுகளும் இன்னும் அழிவுறாமல் வைக்கப்பட்டிருப்பதற்கு ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையின் ஆற்றலே காரணமாகும். இக்காலத்திற்றான் மக்கள் பேசி வந்த மொழியான ஐரிஷ் மொழிக்குப் பதிலாக ஆங்கில மொழி அதிகமாய் ஏற்பட்டது. ஆனால், அமெரிக்கப் போர் நடந்த பொழுது இங்கிலாந்தின் தொல்லைகளைப் பயன்படுத்திக்கொள்ள வாய்ப்பு இருந்ததாக அயர்லாந்து எண்ணியது. அல்ஸ்டரிலிருந்த பிராட்டஸ்டென்டுகள் சட்டமியற்றும் சுதந்தரத்தைப் பெறுவதற்காக ஓரியக்கத்தைத் தொடங்கினர். இது விரைவிலேயே அயர்லாந்தின் பிற பகுதிகளிலும் பரவியது. ஏராளமான தொண்டர்கள் திரட்டப்பட்டு, ஆயுதப் பயிற்சியளிக்கப்பட்டார்கள்.

## கிராட்டனது பாராளுமன்றம்

ஒரு சமயம் நேரக்கூடிய படையெடுப்பை எதிர்த்து அயர்லாந்தைப் பாதுகாக்க அதனால் முடியாமலிருந்தபோது சுதந்தரமாகச் சட்டமியற்றுவதை அனுமதிக்க மறுப்பது ஆங்கிலேய அரசாங்கத்திற்கு இயலாதாயிற்று. இவ்வாறு ஒழுங்காக அமைக்கப்பட்ட இத்தொண்டர்கள், முதலில் இங்கிலாந்துடன் தடையில்லா வியாபாரத்தையும், பின்பு சட்டமியற்றும் சுதந்தரத்தையும் கோரினார்கள். அயர்லாந்தின் பாராளுமன்றத்தில் இவ்வியக்கத்தின் சிறந்த பிரதிநிதியாய் நின்று பேசியவர் கிராட்டன் என்பவராவர். 1782-ல் 'மாட்சிமை தங்கிய மன்னராலும், அயர்லாந்தின் பாராளுமன்றத்தாலும் இயற்றப்பட்ட சட்டங்களுக்குக் கட்டுப்படுள்ளது' என்று அயர்லாந்தின் உரிமையில் நம்பிக்கையையுடைய தீர்மானத்தை நிறைவேற்றினர். இதை எதிர்க்கும் நிலையில், ஆங்கிலேய அரசாங்கமில்லை. எனவே, அயர்லாந்தின் சட்டமியற்றும் சுதந்தரம் அனுமதிக்கப்பட்டது. அயர்லாந்தின் சுதந்தரப் பாராளுமன்றம் பொதுவாகக் 'கிராட்டனின் பாராளுமன்றம்' என்று வழங்கப்படுவதாயிற்று.

## 'புதிய ஆட்சி' முறையின் வலுவின்மை '1798'

அயர்லாந்தின் சுதந்தரமான பாராளுமன்றத்தில் சில நல்ல தன்மைகள் காணப்பட்டன. அம்மன்றம் பிராட்டஸ்டென்டுகள் இருந்த போதிலும், ரோமன் கத்தோலிக்கர்களுக்கு (1793-ல்) ஓட்டுரிமையை அளித்தது. ஆனால், அப்பாராளுமன்றம் அதே தருணத்தி லியங்கிய ஆங்கிலேயப் பாராளுமன்றத்தைவிட மிகவும் தளர்வுற்றும் ஊழல் நிறைந்ததாயும் இருந்தது; அதனுடன் நாட்டின் துரைத்தனத்தின்மீது அதற்கு அதிகாரமில்லாதிருந்ததால் எவ்விதப் பொறுப்புமில்லாமல் செயலாற்றியது. நாட்டின் சமூக விவசாய நிலைமையில் ஊழல்கள் நிறைந்து காணப்பட்டன. பிரெஞ்சுப் புரட்சியின் ஆதிக்கம், ஆயுதந் தாங்கிய கலகத்தால் முழுச் சுதந்தரமடைவதற்கான ஓரியக்கத்தைத் தோற்றுவித்தது. 1798-ல் ஒரு கலகம் ஏற்பட்டது. பிரான்சிடமிருந்து எளிய ஆதரவைப் பெற்றிருந்த போதிலும், அது மிகுந்த குருதி சிந்திய பிறகுதான் அடக்கப்பட்டது. அதன் பயனாகக் கடும் பகைமை நாட்டில் நிலவியது.

## அயர்லாந்து ஐக்கியம்

**கத்தோலிக்கர் விடுதலை அளிக்கப்படவில்லை**

அயர்லாந்தின் பாராளுமன்றம் தனித்தியங்குவதால் அது நிலையான பயமுறுத்துதலாகும் என்றும், சிறப்பாக வெளிநாட்டுப் போர் நிகழ்ந்துகொண்டிருக்கும்போது பேரிடராயிருக்குமென்றும் பிட்டுக் கருதினர். அவர் 1707-ல் ஸ்காட்லாந்தின் பாராளுமன்றம் ஆங்கிலேயப் பாராளுமன்றத்துடன் இணைக்கப்பட்டதைப் போல அயர்லாந்தின் பாராளுமன்றத்தையும் இணைக்கும் ஆலோசனையைக் கூறினர். இதற்கிணங்குமாறு அயர்லாந்து பாராளுமன்றத்தில் இடம் பெறவும் பதவி வகிக்கவும் வழி செய்ய ஒரு சட்டத்தை இயற்றுவதாகவும் பிட்டு உறுதி கூறினர். பல்வேறு செல்வாக்குகளால் இணங்கும்படி செய்யப்பட்ட அயர்லாந்தின் பாராளுமன்றம் யோசிக்கப்பட்ட சட்டங்களையியற்றி, 1800-ல் ஐக்கியச் சட்டத்தையும் நிறைவேற்றியது. ஆனால், அயர்லாந்து மக்களின் கத்தோலிக்கக் கருத்தினைக் குணப்படுத்துவதும்,சமாதானத்தையளிப்பதுமான விடுதலைப்பற்றிய நடவடிக்கைகள் சட்டப்புத்தகத்தில் இடம் பெறவில்லை. இத்தவற்றிற்கு மூன்ரும் ஜார்ஜே பெரிதும் பொறுப்பாளராவார். அவர் ஏற்கனவே அறிவிழந்திருந்ததுடன், மீண்டும் பித்துப் பிடிக்கும் நிலையிலிருந்தார். ரோமன் கத்தோலிக்கர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய சிறப்புரிமைகளை அளிக்க அவர் அரியணை ஏறும்போது உரைத்த சூளுரை இடமளியாது என அறிக்கையிட்டார். பிட்டு மன்னரிடம் கொண்ட

இரக்கம் காரணமாக மீண்டும் இப்பிரச்சினையை எழுப்பவில்லையென உறுதி செய்ததோடு, அயர்லாந்திற்கு அவர் செய்வதாகக் கூறிய வைகளை நிறைவேற்ற இயலாதென்பது தெரிந்தவுடன் பிரதம மந்திரி யார் பதவியைவிட்டு விலகினர். இச்செய்கை அவருடைய மாண்பைக் காப்பாற்றியது ; அயர்லாந்து மக்களை மனநிறைவு கொள்ளச் செய்ய வில்லை. அயர்லாந்தின் வரலாறு முழுவதிலும் இவ்வாறு இழக்கப் பட்ட பல வாய்ப்புக்கள் நிரம்பியிருந்தன. மற்றும், 1800ஆம் ஆண்டு, வரலாற்றில் மிகவும் பொல்லாங்கு நிறைந்த காலத்தைக் குறிப்பதா யிற்று.

## இங்கிலாந்தில் பலாத்காரம்

புரட்சியை எதிர்த்து நிகழ்ந்த போருடன் பிரெஞ்சு மக்களிடத் திலும் அவர்களுடைய கருத்துக்களிலும் பரிவுணர்ச்சி கொண்டிருந் தவர்கள்மீது (இவர்களின் தொகை அதிகமாயிருந்தது) கடுமையான அடக்குமுறை நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுவது தொடர்ந்து ஏற்பட்டது. சீர்திருத்தம் பற்றிய எந்தக் கருத்திலும், இங்கிலாந்திலும் பிரெஞ்சுப் புரட்சி மாதிரியில் புரட்சியையும் பயங்கர ஆட்சியையும் விளைவிக்கக் கூடிய எண்ணமிருந்ததாக நாட்டு மக்கள் கருதினர்கள். எனவே, பாராளுமன்றத்தைச் சீர்திருத்துவதற்கான எல்லா யோசனை களும் கைவிடப்பட்டன. ஓரமயம் பிட்டு என்பவரே இச்சீர்திருத்தம் பற்றிப் பெரிதும் எடுத்துக் கூறுபவராயிருந்தார். ஏற்படக்கூடிய கலகத்தைச் சமாளிப்பதற்காக 'ஹெபியஸ் கார்ப்பஸ்' சட்டம் விலக்கி வைக்கப்பட்டது. சட்ட எதிர்ப்புக் கூட்டங்கள் பற்றி மசோதா, ஐம்பது பேர்களுக்கு அதிகமாகவும், குற்றத் தண்டனை அளிக்கும் அதிகாரி (மாஜிஸ்ட்ரேட்டு) முன்னிலையிலும் கூடாத கூட்டங்களைத் தடை செய்தது. 'அரசத்துரோகம் என்பது அரசாங்கத்திற்கு முரணுகக் கூறப்படும் கருத்துக்களைக் குறிக்கும்,' என்று விரிவான பொருள் கூறப்பட்டது. செய்தித்தாள்கள் கடுங் கணிக்கைக்குட் படுத்தப்பட்டன. நூல்களை விற்பனை செய்ததற்கும் கருத்துக் கூறிய தற்கும் ஸ்காட்லாந்தில் கொடிய தண்டனைகள் விதிக்கப்பட்டன. ஜுரி முறையாலும், சட்டத்தை வெளிப்படையாக ஆட்சி செய்ததன் பயனும் இங்கிலாந்து அவ்விதமான காட்சிகள் ஏற்படாமல் காப்பாற்றப்பட்டது. மக்கள், பொதுவாக அரசாங்கத்துடன் ஒன்று பட்டிருந்ததுடன் அரசாங்க நடவடிக்கைகளையும் வெளிப்படையாக ஏற்றுக்கொண்டனர். போரின் இறுதிநேரத்தில் தொழிலாளர் பிரிவு களிடையே குழப்பமும் துன்பமும் காணப்பட்டன; கலகங்கள் (லட்டைட் கலகங்கள் எனப்படுவன) தோன்றின இக்கலகங்கள் சிறப்பாகக் கம்பளி வியாபாரத்தில் தோற்றுவிக்கப்பட்ட புதிய அமைப்பு முறைகளையெதிர்த்துத் தோன்றின. இறுதியில், வாட்டர்லூச்

சண்டையில் வெற்றி, நாட்டிற்கு ஒரு பாதுகாப்பான நிலையை அளித்த போது, அடக்கிவைக்கப்பட்டிருந்த மனவெழுச்சிகளும் அவாக்களும் மீண்டும் தலையெடுக்க ஆரம்பித்தன.

## பேரரசின் வளர்ச்சி

1793-ல் போர் மூண்டதிலிருந்தே கிரேட் பிரிட்டனுக்கு வெளி நாட்டில் சொந்தமாயிருந்த பகுதிகள் மிகவும் முன்னேற்றமடைந்தன. வியன்னு உடன்படிக்கை, நன்னம்பிக்கை முனை, இலங்கை, சில மேற்கிந்தியத்தீவுகள் முதலியவைகள் கிரேட் பிரிட்டனுக்கு உரியன என்பதை ஏற்றுக்கொண்டது. பிரெஞ்சுக்காரர்களின் தாக்குதல் ஏற்பட்டது காரணமாகக் கிழக்கு இந்தியக் கம்பெனிக்குச் சொந்தமாயிருந்தவைகளும் முன்னேற்றமடைந்தன, இப்பெரிய தீபகற்பத்தின் அரசாங்கத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் நேரிடையாகப் பங்கு கொள்ளத் தொடங்கியது. எனினும், ஆட்சி செய்கிறவர்கட்கும் ஆளப்படுகிறவர்களுக்கும் வருங்காலத்தில் என்ன நிலையேற்படும் என்பதை ஒருவரும் ஊகிக்க வில்லை.

*ஐ. எஸ். லீடம் (1702—1760), டபிள்யூ. ஹன்டு (1760—1801) ஸி. ஜி. பிராட்ரிக்கு, ஜே. கே. ஃபாதரிங்காம் (1801—1837) இவர்களுடைய நூல்கள் இக்காலத்து இங்கிலாந்தின் அரசியல் வரலாறு பற்றியவைகள். விரிவான வரலாற்று நூல்கள் ஸ்டான்ஹோப்பு (1715—1783), லெக்கி (1800 வரை) இவர்களால் எழுதப்பட்டுள்ளன. பின் கூறியது அயர்லாந்து வரலாற்றிற்குச் சிறப்பாகப் பெருமதிப்புள்ளதாகும். மாஸியின் 'இங்கிலாந்து வரலாறு' மூன்றும் ஜார்ஜின் ஆட்சிக் காலம் முழுவதையும் பற்றிக் கூறுவதாயுள்ளது. மெக்காலேயின் கட்டுரைகளும் சிறப்பாக இக்காலத்தைப் பற்றியுள்ளன. மார்லி எழுதியுள்ள 'பர்க்கு', எப். ஹாரிசன் எழுதியுள்ள, 'சாதம்', ரோஸ்பரி பிரபு எழுதியுள்ள 'பிட்டு வாழ்க்கை வரலாறுகள்' சுருக்கமாயும் மிகச் சிறந்தனவாயுமுள்ளன. ஓகானர் மாரிஸ் எழுதியுள்ள 'அயர்லாந்து வரலாறு' (முதல் தொகுதி). ஹ்யூம் பிரௌன் எழுதியுள்ள 'ஸ்காட்லாந்து வரலாறு' (மூன்று தொகுதிகள்) பெரும்பயன் தருபவை. சானிங் கால் எழுதப்பட்ட 'அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சுருக்கமான வரலாறு' அழகான சுருக்கமாகும். அமெரிக்கச் சுதந்தரப் போரைப் பற்றி ஃபிஸ்கி என்பார் பல தொகுதிகளில் மிக அழகாக எழுதியிருக்கிறார்.*

# 17. எதிர் விளைவும், புரட்சியும், மீண்டும் எதிர் விளைவும்

## 1815க்குப்பின் எதிர் விளைவு

பல்லாண்டுகளாக நெப்போலியனின் அதிகாரத்தினாலுண்டான நெருக்கடியிலிருந்து நெப்போலியன் நாடு கடத்தப்பட்டதன் விளைவாக ஐரோப்பாவுக்குத் துன்ப நீக்கம் ஏற்பட்ட பொழுது, வியன்னாவில் கூடியிருந்த அரசியல் தந்திரவாதிகளின் முக்கியமான விருப்பம், மற்றொரு புரட்சி எப்பொழுதுமே நிகழாமலிருக்க ஐரோப்பிய நடைமுறைகளை ஒழுங்குபடுத்துவதை நாடியது. புரட்சி, அதிகாரத்தை எதிர்த்துச் சாதாரணமாய் ஏற்பட்ட ஒரு கலகமென அவர்களுக்குத் தோன்றியது. அப்புரட்சிக்கு அடிப்படையிற் காணப்பட்ட மேலானதும் நியாயமானதுமான சமூக அமைப்பைப் பற்றிய ஆர்வமிக்க நம்பிக்கைகளை அவர்கள் புறக்கணித்தார்கள். இக்கருத்துக்கள் அவ்வப்பொழுது மீண்டும் தலையெடுக்கும்; அதோடு எப்போதும் போல வலிமையுடன் வேலை செய்யும். ஆனால், அப்பொழுது இருந்த நிலையில் ஐரோப்பா எல்லாவற்றையும்விட அமைதியும் ஒழுங்கும் ஏற்படுவதை விரும்பியது. வியன்னாவிற் கூடிய அரசியல் தந்திர வாதிகள் எதிர் விளைவினுடைய கருவிகளே தவிர வேறல்லர். ஐரோப்பாவின் நிலப்படம் முழுவதும் அவர்கள் முன்னிருந்தது. அது பெரும்பாலும், எல்லா எல்லைகளும் சிந்தித்து முடிவு செய்யவேண்டுவதாயும் மீண்டும் ஒழுங்காக அமைக்க வேண்டுவதாயும் இருந்தது. 1648இல் வெஸ்ட்பேலியாச் சமாதானத்திற்குப்பின் வேறெந்த அரசியல் தந்திரவாதிகளின் குழுவும் அவ்வளவு பெரிய வேலையைச் செய்யமுயலவில்லை.

## வியன்னாக் காங்கிரசின் விளைவுகள்

### ஜெர்மனி

பிரான்சு 1792-ல் அதற்கிருந்த எல்லைகளைச் சற்றேறக் குறைய மீண்டும் அடைந்தது. சிலர் ரைன் நதிக்கு மேற்கிலிருந்த எல்லாப் பகுதிகளையும் அதனிடமிருந்து எடுத்துவிட விரும்பினர். இப்பகுதிகள் முன்பு பேரரசில் ஒரு பகுதியாய் இருந்தன. ஜெர்மானியர் மிகுதியாக அங்கு வாழ்ந்து வந்தனர். நாட்டைப் பிரிக்கும் எண்ணத்தை வெல்லிங்டன் கோமகனார் எதிர்த்து நின்றார். ஜெர்மனியின் வருங்காலப் பிரச்சினை மிகவும் கடினமானதாயிருந்தது. நெப்போலியனை எதிர்த்து நடந்த போர்க் காரணமாக மிக ஆழ்ந்த தேசியவுணர்ச்சி ஏற்பட்டிருந்தது. வியன்னாவில் கூடியிருந்த அரசியல் தந்திரவாதிகளின் முயற்சியால், சுயேச்சையானதும், சுய ஆட்சியைக் கொண்டதுமான ஐக்கிய ஜெர்மனியை அமைக்கக்கூடும் என்று பலர் எதிர் பார்த்தனர். ஆனால், இவ்வெண்ணங்கள் ஏமாற்றமடைந்தன. தளர்ச்சியுற்றிருந்த பழைய பேரரசு மீட்கப்படவில்லை. எனினும், புதிய ஏற்பாடு தொடக்க முதலே வலுவின்றியும், மக்கள் ஆதரவற்றதாயும் இருந்ததுடன், நெடுநாள் தெளிவுடன் நீடித்திருக்கக்கூடியதாயுமில்லை. முப்பத்தொன்பது இறைமையதிகாரம் கொண்ட இளவரசர்களுடன் ஒப்புக்கொள்ளப்பட்டதன்றிச் சுதந்தரமான நகரங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. வெஸ்ட்பேலியாச் சமாதானத்தின்படி ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்த முந்நூற்றைம்பது பகுதிகளும் முப்பத்தொன்பதாகக் குறைக்கப்பட்டன. இந்த முப்பத்தொன்பது அரசுகளும் இராணுவப் பாதுகாப்புகளுக்காக, ஆஸ்திரியாவின் தலைமையின்கீழ் நிலைபெற்றுள்ள 'ஜெர்மனி நாடுகளில் கூட்டாட்சியாக' ஒன்றாகச் சேர்க்கப்பட்டன.

## ஜெர்மானிய நாடுகளின் இணைப்பு

### பிரஷ்யா அடைந்தவை—பவேரியா

இக்கூட்டாட்சியில் சேர்க்கப்பட்டிருந்த ஜெர்மன் அரசுகளில் (ஆஸ்திரியா நீங்கலாக) பிரஷ்யா மிகவும் வலிமையுள்ளதாயிருந்தது. நிலையற்றிருந்த நிலைமையிலிருந்து இதற்குமுன் இல்லாத அளவிற்கு வளமுள்ள தேசிய வாழ்க்கையுடன் பிரஷ்யா தலையெடுத்தது; போலந்தில் தனக்குச் சொந்தமாயிருந்தவைகளில் சிலவற்றைக் கைவிட்டது; அதற்குப் பதிலாக ரைன் நதிப்பிரதேசத்தில் சிலவற்றையும் நெடுநாளாக அடைய அவாக் கொண்டிருந்ததும், பால்டிக்குக் கடற்கரையிலிருந்ததும், செல்வம் மிகுந்ததுமான சுவீடனைச் சேர்ந்த பொமரேனியாவையும் பெற்றது. அந்நாட்டு

மக்களுட்பெரும்பாலார் இப்பொழுது ஜெர்மன் இனத்தைச் சேர்ந்தவரா யினர். எனவே, பிரஷ்யா முன்னணியிலிருக்கும் ஜெர்மானிய அரசாயிற்று. பிரஷ்யாவிற்கு அடுத்த நிலையில் பவேரியா முக்கிய மானதாயிருந்தது. நெடுநாள்வரை இது நெப்போலியனுக்கு ஆதரவான நட்புக் கொண்டிருந்தது என்றாலும், சமாதானம் ஏற்பட்ட போது இது எதையும் இழக்கவில்லை. இது கத்தோலிக்கச் சமயத்தைப் பின்பற்றிய ஜெர்மனியின் தென்பாகத்தில், பிராட்டஸ்டென்டு சமயம் அதிகமாயிருந்த ஜெர்மானியர்கள் அடங்கிய பிரஷ்யாவின் வட பாகத்திற்கு எதிரியாய் இருந்தது.

## ஆஸ்திரியா

ஆஸ்திரியாவைப் போல வேறெந்த நாடும் நெப்போலியனால் கடுந்துன்பத்தை அடையவில்லை. ஆனால், ஆஸ்திரியாவும் அதன் தலைசிறந்த அரசியல் வல்லுநரான மெட்டர்னிக்குமே வியன்னாக் காங்கிரசில் வழி காட்டும் பங்கைக் கொண்டிருந்தனர். ஆஸ்திரியா பெல்ஜியத்தை இழந்தது. வெனிஸ், லம்பார்டி, இல்லீரியா, கிழக்கு பவேரியாவின் ஒரு பகுதி இவற்றைப் பெற்றது வாயிலாக இழந்ததற்கு மேல் செல்வம் மிகுந்த இழப்பீடு ஏற்பட்டது. இவ்வாறு சொந்த மாக்கப்பட்ட பகுதிகளில் எவ்வளவு விகிதம் ஜெர்மானியரல்லாதார் வாழும் நிலப்பகுதிகள் அடங்கியிருந்தன என்பதை நாம் கருத்திற் கொள்ள வேண்டும். ஆஸ்திரியாப் பேரரசின் ஆளுகையின்கீழ்ச் சுமார் இருபத்தெட்டு மில்லியன் மக்கள் இருந்தார்கள். இவர்களுள் சுமார் நான்கு மில்லியன் மக்களே ஜெர்மானியர்கள்; மற்றவர், பல இனங் களையும், மொழிகளையும், சமயங்களையும் சேர்ந்த ஒரு கலவை குழுவினராயிருந்தனர். பேரரசரின் குடிகள் என்ற காரணத்தால், பொஹீமியர்கள், ஹங்கேரியர்கள், இத்தாலியர்கள், போல்கள், செர் வியர்கள், ருமேனியர்கள் ஒன்று சேர்ந்திருந்தார்கள். ஹாப்ஸ்பர்கு குடும்பத்தினருடைய ஆட்சிக்குட்பட்ட பிரதேசங்கள் இவ்வளவு நெருக்கமாயும், பாதுகாக்கக் கூடியனவாயும் இதற்கு முன் இருந்த தில்லை. ஆனால், ஜெர்மானியரல்லாத மக்கள் தொகையின் ஏற்றத்தால், எப்பொழுதும் ஜெர்மனியால் அதனுடைய தலைமையாகவும் பிரதிநிதி யாகவும் ஆஸ்திரியாவை விருப்பத்துடன் ஏற்றுக்கொள்ளச் செய்ய முடியாததாயிருந்தது. இதைத்தவிர, எல்லா வகைகளிலும் வியன்னா வில், எதிர் விளைவு ஆட்சி புரிந்தது; கலை, இலக்கியம், சிந்தனைச் சுதந்தரம், சமய வாழ்க்கை போன்றவையெல்லாம் பலாத்காரத் தூண்டுதலாகிய ஆட்சி முறையின்கீழ் அழிந்தன, அல்லது சிதைந்தன. இசை மட்டும் செழித்தோங்கியது.

## இத்தாலி

வியன்னாக் காங்கிரசால் தோற்றுவிக்கப்பட்ட வேறு மாறுதல்கள் பற்றிய கருத்துக்களையும் சுருக்கமாகக் காண்போம். இத்தாலி பல சிற்றரசுகளாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது என்றாலும், பெரும்பகுதி ஆஸ்திரியாவின் அதிகாரத்தின் கீழிருந்தது. வெனிஷியாவும், லம்பார்டியும், ஆஸ்திரியாவின் ஆளுகைக்குட்பட்டிருந்தன. மடேனா, பார்மா, டஸ்கனி என்பன ஆஸ்திரிய வழித்தோன்றல் என அரசர்களுக்குக் கீழ்ப்படிந்திருந்ததுடன், ஆஸ்திரியாவுடன் நெருங்கிய நல்லுறவும் கொண்டிருந்தன. இந்நாடுகளினுடைய திருச்சபைகளில் போப்பாண்டவரின் அதிகாரம் மீண்டும் ஏற்பட்டது. போர்போன்கள் நேப்பிள்ஸையும், சிசிலித்தீவையும் மீண்டும் பெற்றனர். வடமேற்கில் சார்டீனியா மன்னர் வசம், பிட்மாண்டும், சேவாயுமிருந்தன. அடுத்த அதிகாரத்தில் இம்மன்னரின் மரபினர் எவ்வாறு ஒற்றுமையும் சுதந்திரமும் மிகுந்த இத்தாலியினுடைய மன்னராயினர் என்பதைக் காண்போம்.

## பெல்ஜியமும் ஹாலந்தும்

### பின்லாந்து

பெல்ஜியம் ஹாலந்துடன் சேர்க்கப்பட்டு, ஹாலந்து மன்னருடைய ஆட்சியின்கீழ் அமைந்தது. பிரான்சின் வடக்கு எல்லையில் வலிமை பொருந்திய நாட்டை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணத்தால், இவ்வமைப்புத் திட்டம் உருவாயிற்று. ஆனால், இரு மக்கட் கூட்டமும் தனித்தனி சிறப்புவாய்ந்தவையாயிருந்ததோடு பல முறைகளில் பகைமையும் கொண்டிருந்தன. எனவே, புதிய ஏற்பாடு விரைவிலேயே முறிந்துபோயிற்று. நார்வே, சுவீடனுடன் சேர்க்கப்பட்டு, நெப்போலியனுடைய பழைய படைத்தலைவரான பெர்னதோத்தேயின் ஆளுகையின்கீழ் வைக்கப்பட்டது. இவர் பதினான்காம் சார்லசு மன்னர் என்னும் பெயருடன் சுவீடனில் ஆட்சி புரிந்தார். பெல்ஜியம், ஹாலந்தின் ஐக்கியத்தைவிட இந்நாடுகளின் ஐக்கியம் நெடுநாள் நீடித்திருந்தது, 1905-ல் நார்வே தனியரசான போது, முறிந்து போயிற்று. ரஷ்யா, பின்லாந்தை வென்றது, ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவ்வைக்கியம் அடிக்கடி பின்கள் (பின்லாந்திய மக்கள்) பிரிந்து செல்ல முயற்சிகள் செய்தும், 1914 வரை நீடித்திருந்தது.

## புனிதக்கூட்டுறவு

### ஸ்பெயினின் தாராளவாதிகளின் இயக்கங்கள்

1815 முதல் 1830 வரையில் அதற்கு முந்திய காலத்தோடும் அதற்குப்பின் வந்த காலத்தோடும் ஒப்பிட்டுப்பார்க்கும் பொழுது மிக

அமைதியான காலமாயிருந்தது. ஐரோப்பாவின் நான்கு முக்கிய அரசுகளான ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா, கிரேட் பிரிட்டன், வியன்னுச் சமாதானத்தை நிலைபெறச் செய்வதற்காக நட்புறவில் சேர்ந்திருந்ததோடு, நான்கு ஆண்டுகட்கு ஒரு முறை தோன்றும் இன்னல்களைக் கூடி ஆலோசிப்பதற்காக முழு அரசியலுரிமை பெற்ற தூதர்களின் கூட்டங்களைக் கூட்டுவதற்கும் உடன்பட்டன. சில தருணங்களில் இதைப் 'புனிதக் கூட்டுறவு' என்றும் வழங்குவதுண்டு. உறுப்பினர் சிலரது நோக்கம் புரட்சி இயக்கங்களை அடக்குவது போலவே, பெரிதாக ஏற்பட்ட சமாதானத்தில் பிரிவுகளையும் நிலைபெறச் செய்வதாகும். 1818-ல் பிரான்சும் இக்கூட்டுறவில் சேர்ந்து கொண்டது. விரைவிலேயே ஐந்தரசுகளின் கூட்டு, புரட்சி போன்ற எல்லா இயக்கங்களையும் அடக்குவதற்குப் போதுமானதன்று என்பது தெரிந்தது. பெரும்போரின் நினைவுகள் மறையத் தொடங்கியதும் புரட்சியெண்ணங்கள் மீண்டும் தலையெடுக்கத் தொடங்கின. முதல் தொல்லை ஸ்பெயினில் ஏற்பட்டது. அங்கு மீட்சியின் பயனாக அரசு புரிந்த போர்போன்கள், பழையபடி தீய முறையில் ஆட்சி புரிந்து கொண்டிருந்தார்கள். 1820-ல் படைகள் புரட்சி செய்தன; 1821-ல் நிறுவப்பெற்ற சுதந்தர அரசியல் சட்டத்தைப் புதுப்பிக்க வேண்டுமென்று அறிவித்தன. மன்னர் இவ்வேண்டுகோட்கு இணங்க நேரிட்டது. அதனுடன் திருச்சபைகள், மடங்கள் முதலியவைகளின் மீது நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. எனினும், பிரனீசு மலைகளுக்குத் தெற்கில் தாராளவாதிகளின் கருத்துக்கள் மத்திய ஐரோப்பாவையும் பிரனீசின் வடக்கிலிருந்தவர்களையும் திடுக்கிடச் செய்தன; முக்கியமாகப் பிரான்சைத் திடுக்கிடச் செய்தன.

## ஸ்பெயின் குடியேற்றங்களின் கலகம்

இவ்வியக்கம் அடக்கப்பட்டதுடன், தனி வல்லாட்சி மீட்கப்பட்டது. ஆனால், உலகின் நெடுந்தூரத்திலிருந்த பகுதிகளில் புரட்சி முக்கியமானவையும் நிலையானவையுமான விளைவுகளை உண்டுபண்ணியது. மத்திய, தென்னமெரிக்காவில், ஸ்பெயினுக்குச் சொந்தமாய் மிகப் பரந்த குடியேற்றப் பேரரசு இருந்தது. இக்குடியேற்ற நாடுகள் மீட்கப்பட்ட தனி வல்லாட்சியை ஏற்றுக்கொள்ள மறுத்தன. இதற்குக் கிரேட் பிரிட்டன், தன் தலைவரான கானிங்கு மூலம் உதவி அளித்தது. 1830க்குள், எட்டுக் குடியரசுகள் தோன்றலாயின. இவற்றுள் முக்கியமானவை மெக்ஸிக்கோ, பெரு, சிலி, பியூனுஸ் அயர்சு என்பன ஆகும். இவற்றின் நிலைமை மிகக் கொந்தளிப்பாயிருந்தது. அமைதியான அரசியல் வாழ்க்கையை அப்பொழுதும் அடையவில்லை. என்றாலும், நாகரிகத்தின வருங்காலத்தில் அவை முக்கியப் பங்கெடுத்துக் கொள்ளும்படி விதிக்கப்பட்டிருந்ததைப் பற்றிச் சிறிதும் ஐயமில்லை.

## துருக்கிக்கு எதிராகக் கிரீஸ் கலகம்

### கிரீஸின் சுதந்தரம்

ஸ்பெயினின் தொல்லையைத் தீர்க்குமுன்னரே, கிரேக்கப் பிரச்சினை தோன்றியது. ஐரோப்பாவிலேயே முறை செய்யப்பட்ட சுதந்தரத்திற்குத் தாயகமாயிருந்த கிரீஸ், பல நூற்றுண்டுகள் சுதந்தரமென்பதையே அறியாமலிருந்தது. எனினும், அந்நாட்டு மலைப் பகுதிகளில் வாழ்ந்தமக்கள், பாதி நாட்டுப்பற்று உள்ளவர்களாயும், பாதிகொள்ளைக்காரர்களாயும் இருந்துகொண்டு கொடுமையான சுதந்தரத்தை நிலவச் செய்து வந்தார்கள். மக்கள் மிகக் கொடிய துன்பத்தை அடைந்திருந்தார்கள். நாகரிகமற்றவர்கள் கூட்டங் கூட்டமாய் நாட்டிற்குள் வந்து போவதையும் நாடு கண்டது. அன்னியர்களுடைய படையெடுப்புக்களிலிருந்து இத்தாலியைக் காட்டிலும் கிரீஸ் துன்புற்றிருந்தது. ஆனல், மக்கள் அவர்களுடைய உயர்வைப் பற்றித் (குழப்பமான) தெளிவற்ற நினைவுகளை எப்பொழுதும் பாதுகாத்து வந்தார்கள். கிரேக்க மொழியின் உருவமான மொழியையும் மக்கள் பேசி வந்தார்கள். இரகசியக்குழு, கூடி வாழ் குழுக்களால், (சங்கங்களால்) ஆயத்தம் செய்யப்பட்டது. 1821-ல் கலகம் தொடங்கியது. அது சுதந்தரத்தை விரும்பியவர்களின் உணர்ச்சி மிக்க ஆர்வத்தைத் தட்டியெழுப்பியது. பைரன் இவ்வியக்கத்திற்குத் தமது ஆதரவையும் உயிரையும் ஈந்தார். கிரேக்கர் ஒழுங்குபடுத்தப்படாத வீரத்துடன் மிகக்கோபமாய்ப் போரிட்டனர். துருக்கியர்கள் சமயம் வந்தபோது பழிக்குப் பழி வாங்கினுர்கள். தனித்து விடப்பட்டிருந்தால் புரட்சி ஒடுக்கப்பட்டிருக்கும். ஆனல், கிரேட் பிரிட்டன் முதலிலிருந்தே புரட்சியில் ஆவலோடு கவனம் கொண்டிருந்தது. இறுதியில், துருக்கியர்களைத் துன்புறுத்துவதில் ரஷ்யர்களுடன் சேர்ந்து கொண்டது. 1827-ல் நவாரினேக் கடற்சண்டையில் துருக்கியக் கப்பற்படை அழிக்கப்பட்டு, கிரீஸின் சுதந்தரம் நிலைநாட்டப் பட்டது.

## நாட்டு உணர்ச்சியின் தோற்றம்

கிரேக்கக் கலகத்தின் ஒரு சிறப்பியல்பு வருங்காலத்தில் ஐரோப்பாவிற்குச் சிறப்புப்பொருள் வாய்ந்ததாய் இருந்தது. கிரேக்கக் கலகம் அன்னிய ஆட்சியை எதிர்த்து ஏற்பட்ட தேசியக் கலகமாய் இருந்தது. இதற்கு முந்திய ஆண்டுகளில் பல தேசியக் கலகங்கள் ஏற்பட்டிருந்தன. ஆனல், 'நாட்டுக் கொள்கை' அடுத்த அரை நூற்றுண்டிற்கு ஐரோப்பிய வரலாற்றில் எல்லாவற்றிற்கும் மேலான ஆதிக்கத்தைக் கொண்டுள்ளதாய் இருந்தது. எனவே, அதைப்பற்றி ஒரு நொடி நேரமாவது பரிசீலனை செய்வது ஏற்றதேயாகும். 'எது

நாட்டை அல்லது நாட்டு மக்களைக் குறிக்கிறது?' என்று வினவுவது பயனளியாது. அது முழுவதும் ஒத்த மனிதவினமன்று. இவ்வியல்பை எங்குமே காண முடியாது. பொதுவான மொழியும் அன்று. அல்லது பொதுவான சமயமோ, அல்லது பொதுவான நோக்கங்களோ அல்ல. இவை யாவும் முக்கியமானவை. ஆனால், இவை யாவும் சேர்ந்து ஒரு நாட்டைச் செய்வதற்கு அவசியமில்லை. இவற்றுட்சில இல்லாதிருந்த போதிலும் வலுவான தேசியவுணர்ச்சி இருக்கலாம். நாட்டு இனத்தினர் பற்று எங்கிருக்கிறதோ, அங்கு நாட்டுணர்ச்சியும் இருக்கிறது. அதனுடன் நாட்டினத்தினர் எனும் பற்று, பல சக்திகளின் விளைவாகும். அவற்றுள் முக்கியமானது வரலாற்று அடிப்படையில் ஏற்பட்ட வளர்ச்சியேயாகும். காலப்போக்கில் பொதுவான நோக்கங்கள், பொதுவான போராட்டங்கள் இவைகளினுடையவும், பொது மொழியின் வழக்கத்தை ஒட்டியும், சிலர் தாம் நெருக்கமாய் ஒன்று சேர்க்கப்பட்டதாகக் கருதுகின்றனர். அவர்கள் தங்களை நாட்டின் மக்கள் என்று கூறிக்கொள்ளுகின்றார்கள்.

## புரட்சிகரமான போக்குக்கள்

பத்தொன்பதாவது நூற்றாண்டில் ஒரே மக்களினத்தைச் சேர்ந்த எல்லாரும் ஒரு தனி நாடாக அமைய வேண்டுமென்ற எண்ணமும் நம்பிக்கையும் வளர்ந்தன. அதனுடன் ஒவ்வொரு நாட்டு மக்களும் அவரவர்களுடைய சொந்த நடைமுறைகளை அவரவர்களே கண்காணிக்க வேண்டுமென்றும், அன்னிய நாடுகளின் அதிகாரத்திலிருந்தும், ஆட்சியிலிருந்தும் விலகிச் சுதந்தரமாக இருக்க வேண்டுமென்றும் மக்கள் உறுதி வளர்ந்தது. இந்த நாட்டுரிமை உணர்ச்சிக் கொள்கை தெளிவற்றதாய் இருந்ததோடு மிகவும் புரட்சிகரமாயுமிருந்தது. இக்கொள்கை அரசுகளைப் புதிதாக ஒன்று சேர்ப்பதைக் கோரியது. சில அரசுகள் ஒன்று சேருவது, மற்றவை பிளவுபடுவது ஆகிய இந்தக் கொள்கையின் வலிமையைக் கொண்டு ஜெர்மனியும் இத்தாலியும் ஒன்று சேரத் தொடங்கின. இதே சக்தி ஆஸ்திரியா அழிவதை அச்சுறுத்தியது. போலந்து, அயர்லாந்து, பெல்ஜியம், பின்லாந்து, நார்வே நாட்டு மக்கள் ஆள்வோருக்கு இடையூற்றினை விளைவிக்கும் உரிமைகளை வலியுறுத்தினார்கள்.

## பெல்ஜியப் புரட்சி—1830

1830ஆம் ஆண்டில் மேற்கு ஐரோப்பாவில் வெற்றிகரமான இரண்டு புரட்சிகள் தோன்றின. முதலில் பெல்ஜியப் புரட்சி ஏற்பட்டது. வியன்னாக் காங்கிரசில் பெல்ஜியம் ஹாலந்துடன் இணைக்கப்பட்டு ஹாலந்து மன்னரின் ஆட்சியின்கீழ் வைக்கப்பட்டதைக்

கண்டோம். எப்படியும் இவ்வேற்பாட்டை நிலைநிறுத்துதல் துன்பந் தருவதாய் இருந்திருக்கும். ஏனென்றால், டச்சுக்காரர்களைவிட பெல்ஜிய மக்கள் எண்ணிக்கையில் அதிகமானவர்கள்; கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவர்கள்; பிரெஞ்சு மொழியை ஒத்த ஒருமொழியைப் பேசுபவர்கள்; அவ்வாறிருந்தும், பிராட்டஸ்டெண்டு சமயத்தினர்களான டச்சுக்காரர்களின் ஆட்சிக்கு உட்படுத்தப்பட்டிருந்தார்கள். எனவே, பெல்ஜிய மக்களில் எல்லாக் கட்சியினரும் இவ்வியக்கத்தில் சேர்ந்தனர். டச்சுக்காரர்களால் அவர்களை அடக்க முடியவில்லை. பெல்ஜியம் சுதந்தரம் அடைந்ததாகப் பேரறிவிப்புச் செய்யப்பட்டு, சுதந்தர பெல்ஜியத்தின் முதல் மன்னராக சாக்ஸ்கோபர்கைச் சேர்ந்த லியோபால்டு மன்னர் ஆக்கப்பட்டார்.

## பிரான்சில் புரட்சி

பிரான்சில் இதைவிடக்கடுமையான இயக்கம் தோன்றியது. மீட்கப்பட்ட போர்போன் மன்னர்கள் (16ஆம் லூயியின் சகோதரர் 1824 வரை ஆண்ட 18ஆம் லூயியும், அவர் சகோதரர் பத்தாம் சார்லஸூம்) பிரெஞ்சுப் புரட்சியேற்படாதது போல ஆட்சிசெய்ய முயன்றார்கள். அரசியல் சட்ட வரம்புக்குட்பட்டு ஆட்சி செய்வதாக அளித்த வாக்குறுதிகள் திரும்பப் பெறப்பட்டன; அல்லது புறக்கணிக்கப்பட்டன. அதோடு 1830-ல் வெளியிடப்பட்ட செயின்ட் கிளௌடு தனியரசு ஆணைகள் சுதந்தரமான குடிதழீஇய அரசாங்கத்தின் எல்லாச் சின்னங்களையும் அகற்றின. பெரிய புரட்சிக் காலத்தில் இருந்தது போலப் பாரிஸ் நகரம் இந்த ஆட்சேபனைக்கும் தலைமை வகித்தது. இளம்பத்திரிகை நிருபரான தீயர்ஸ் என்பார், இத்தனி ஆணையைக் கடுமையாகத் தாக்கினார். பிரெஞ்சு முடியாட்சியின் கடந்தவரலாற்றின் நினைவுகளைக்கண்டு அஞ்சிய பத்தாம் சார்லஸ், எவ்விதத் தடையும் செய்யாது இங்கிலாந்திற்கு ஓடிவிட்டார். ஆர்லியன்ஸ் கோமகனான லூயி பிலிப்பு, மன்னராக ஏற்றுக்கொள்ளப்பட்டார்.

## ஆர்லியன்களுடைய முடியாட்சி

மீட்சியுற்ற போர்போன்களுடைய ஆட்சியினின்றும் இப்புதிய முடியாட்சியின் கொள்கை மிகவும் மாறுபட்டதாயிருந்தது. சட்ட வரம்பிற்குட்பட்ட அரசாங்கம் ஏற்படுத்துவதுடன், இங்கிலாந்துடன் நட்பும், பிரான்சின் வாணிகம் தொழில்களில் சமாதான முறையில் வளர்ச்சியும் ஏற்பட வேண்டுமென்பது முடிவாயிற்று. இம்முடிவுகள் ஏற்படவேண்டியதற்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. இருப்புப் பாதைகளும் தந்திப் போக்குவரவும் நாட்டில் அமைக்கப்பட்டன. கூட்டுப் பங்கு கம்பெனிகள் தோற்றுவிக்கப்பட்டன. பிரான்சினுடைய வாணிகத்திற்கு ஆல்ஜியர்சை ஆக்கிரமித்துக்

கொண்டது. புதிய வாணிகத் தொடர்புக்கான வழியை உண்டு பண்ணியது. நாட்டின் செல்வம் பெரிதளவில் அதிகரித்தது. மக்களும், ஓரளவு வளம் பெற்றார்கள். எனினும், பதினெட்டு ஆண்டுகளுக்குப் பின் மற்றொரு புரட்சி தொடர்ந்து ஏற்பட்டது.

## பிரான்சில் புதிய பிரெஞ்சு இயக்கம்

லூயி பிலிப்பின் ஆட்சியைக் கவிழ்க்க இரு சத்திகள் காரணமாயின. அவற்றுள் முதலாவதாயிருந்தது, நாட்டுக் கௌரவம். நெப்போலியனுடைய ஆட்சியின் போது, பிரெஞ்சுப் படைகள் ஐரோப்பாவின் தலைவிதிகளைத் தீர்மானிப்பதில் நடுவுநிலையாளர்களாயிருந்த அச்சிறந்த நாள்களைப் பிரான்சு மறக்கவில்லை. அதனுடன் இராணுவப் புகழின் விளைவாக ஏற்பட்ட துன்பம் முதலியவைகள் மறைந்து கொண்டிருந்தன. சிறப்பான புகழ் வாய்ந்த நாடுகளுடன் ஒப்பிடும்போது அவராட்சி எளியதாயும், அருவருக்கத் தக்கதாயுமிருந்தது. பிரான்சு கிரேட்பிரிட்டனைச் சுற்றி வரும் துணைக்கோள் ஆகிவிட்டதென்றும், அதற்கெனச் சொந்தமான எவ்விதக் கருத்தையும் கொள்ளத் தைரியமற்றிருந்ததென்றும் மக்கள் கூறினார்கள். தீயர்ஸ் புகழ்ந்துரையாக நெப்போலியனது வரலாற்றை எழுதினார். செயின்டு ஹெலினாவில் முதலில் அடக்கம் செய்யப்பட்டிருந்த சிறந்த பேரரசரான நெப்போலியனது சடலம் 1840-ல் பிரான்சுக்குக் கொண்டு வந்து பாரிசில் தளர்ந்தவர்களுக்கான உண்டிச் சாலையில் சிறந்த சடங்குகளுடன் வைக்கப்பட்டபோது, ஆர்லியன்ஸ் குடும்பத்தாருடைய அரசாங்கத்தை விரட்டுவதற்கு இறந்து போன வீரரின் நினைவு வலுவைக் கொடுக்கும் எனப் பலர் கருதினர்.

## புதிய கருத்துக்கள்

லூயி பிளாங்கு

பேரரசு ஆதரவாளரின் எண்ணங்கள் வளர்ந்ததோடு அறிவு இயக்கமும் காணப்பட்டது. 1789-ல் ஏற்பட்ட புரட்சிக்கு முந்திய காலத்திலிருந்த அறிவு வளர்ச்சியுடன் இதை ஒப்பிடலாம். மறுபடியும் மக்கள் நெடுந்தூரத்திலுள்ள இலக்கை நோக்கினார்கள்; அதனுடன் அப்பொழுதிருந்ததைவிட அதிக நியாயமுள்ளதும், மகிழ்ச்சியை அளிக்கக்கூடியதுமான சமூக முறையை ஏற்படுத்த முடியுமென்றும் பறை சாற்றினார்கள். சமூகப் புனரமைப்புப் பற்றி விரிவான திட்டத்தை ஃபூரியரும்,செயின்ட் சைமனும் தனித்தனியாக மக்கள் முன் வைத்தனர். ஆனால், வருங்காலத்திற்கு உடனடியாக லூயி பிளாங்கு என்பவர் சற்றேறக்குறைய இப்போது காணப்படும் முறைப்படி பொதுவுடைமைப் பிரசாரம் செய்தது மிக முக்கியமானது.

அவருடைய கருத்துக்கள் புதியனவல்ல. அக்கருத்துக்கள் பெரும் புரட்சியின் போதே காணப்பட்டன. தவிர, கிரேக்கத் தத்துவ ஞானிகளிடம் அக்கருத்துக்களைக் காணலாம். ஆயினும், முன் பிருந்ததைவிட இப்பொழுது அக்கருத்துக்கள் குறிப்பாக வெளியிடப் பட்டதுடன் மிக ஆத்திரமான சொல் வன்மையுடன் மக்கள் மனத்திற் பதியும்படி செய்யப்பட்டன. பிரான்சின் சமூக நிலையை மிகவும் பயங்கரமானதாகவும் துன்பமிகுந்திருந்ததாகவும் லூயி பிளாங்கு சித்தரித்தார். நாட்டில் அனைவருக்கும் வேலை வாய்ப்பை உண்டு பண்ண வேண்டுமென்று கோரினர்; 'வேலை செய்து உயிர் வாழ்வோம்; அல்லது சண்டையிட்டு மடிவோம்,' என்ற மந்திரத்தைப் பாரிசு மக்களுக்கு எடுத்தோதினர்.

## இரண்டாம் குடியரசு

அரசாங்கத்திற்கு எதிரிகளாயிருந்தவர்கள், மக்களுக்கு உண்மை யான அதிகாரத்தை அளிப்பதற்காகத் தேர்தல் முறையில் சீர்திருத்தம் செய்வதில் முழுக்கவனத்தையும் செலுத்தினர்கள். வன்முறையிலோ, சமாதானமாகவோ இவ்வியக்கத்தை லூயி பிலிப்பு வென்றிருக்கலாம். ஆனால், அவர் அப்படிச் செய்யாமல் விட்டுக் கொடுத்ததல்லாமல், உடனே இங்கிலாந்தில் அடைக்கலம் புகுந்தார். குடியரசுப் பிரகடனம் செய்யப்பட்ட இப்புதிய அரசாங்கத்தில் (1848) லூயி பிளாங்கின் கருத்துக்கள் பேராதிக்கம் பெற்று விளங்கின.

## தேசியத்தொழில் மன்றங்கள்

தொடக்கத்திலிருந்தே இப்புதிய அரசாங்கத்திற்குக் கவலையளிக்கக் கூடிய தொல்லைகளிருந்தன. சட்டசபைத் தேர்தலில் மிதவாத எண்ணங்களுக்குப் பெரும்பான்மை வாக்களிப்புக் கிடைத்தது. ஆனால், பாரிசில் 'தேசியத் தொழில் மன்றங்கள்' ஏற்படுத்தப்பட்டு, வேலை வேண்டுமென்று கேட்பவர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டது. எனினும், இத்தொழில் மன்றங்களை மேலாண்மை செய்தவர்கள், இச்சோதனை வெற்றி பெறுவதில் ஆர்வமின்றியிருந்தார்கள். செலவு அதிகமாயிருந்தது. முடிக்கத் தகுந்த வேலையோ, மதிப்பற்றதா யிருந்தது. 1848 ஜூன் மாதத்தில் தொழில் மன்றங்கள் மூடப் பட்டன. உடனே லூயி பிளாங்கின் போதனையின் ஆதிக்கத்துக்குட் பட்டிருந்த பாரிசு நகரத் தொழிலாளர்களிடமிருந்து கடுமையான எதிர்ப்புத் தோன்றியது. தெருக்களில் போக்குவரவு தடை செய்யப் பட்டு நான்கு நாள்கள்வரை சண்டை நடந்தது. இத்திடீர்க் கலகம் காவைனுக் என்பவரால் உயிர்ச் சேதத்துடன் அடக்கப்பட்டதோடு இரண்டாயிரவருக்கும் அதிகமானபேர் அல்ஜியர்சுக்கு நாடு கடத்தப்

பட்டனர். சட்டசபை மீண்டும் அதிகாரத்தில் நிலைபெறச் செய்யப்பட்டு, அரசியற் சட்டத்தை அமைக்கும் வேலையில் தொடர்ந்து ஈடுபட்டது. ஆனால், அச்சபை மக்களின் எக்கட்சியினுடைய ஆதரவையும் பெறவில்லை. பாரிசு நகரத் தொழிலாளர்கள் அதற்குக் கடுமையான எதிரிகளாயிருந்தார்கள்.

## லூயி நெப்போலியன்

இத்தருணத்தில் லூயி நெப்போலியன் தமக்கு வாய்ப்புள்ளதாகக் கண்டார். இவர் புகழ்பெற்ற நெப்போலியனின் சகோதரரும் ஹாலந்து நாட்டின் மன்னராக நியமிக்கப்பட்டவருமான லூயி போனபார்ட்டின் புதல்வராவார். நெப்போலியனுடைய குடும்பத்தில் இவர் தான் மூத்த பிரதிநிதியாயிருந்தார். இவர் பிரான்சிலிருந்து இரு முறைகள் வெளியேற்றப்பட்டார்; கலகத்தைத் தூண்ட இரு முறை அறிவற்ற வகையில் முயன்றார்; இப்பொழுது சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். எல்லா மக்களுடைய வாக்களிப்பாலும் குடியரசுத் தலைவர் நியமனம் செய்யப்பட வேண்டுமென்பது முடிவானதும், இவர் தலைமைப் பதவிக்கு அபேட்சகராகத் தேர்தலுக்கு நின்றார். இவருக்கு ஆதரவான முறையில் இவர் பெயரே உயர்ந்ததாயிருந்தது. மற்ற அபேட்சகர்கள், பல்வேறு காரணங்களால் மக்களின் மதிப்பைப் பெறவில்லை. லூயி நெப்போலியனுக்கு ஐந்தரை மில்லியன் ஓட்டுக்கள் கிடைத்தன. மற்ற அபேட்சகர் எல்லோருக்குமாகச் சேர்ந்து இரண்டு மில்லியன் ஓட்டுக்கள்கூடக் கிடைக்கவில்லை.

## நெப்போலியனின் திடீர்ப்புரட்சி

இவருடைய பெரிய தந்தையார் கான்சலாயிருந்து பேரரசர் பதவியைப் பெற்றதைவிட மிகக் குறுகிய காலத்திலேயே விரைவில் லூயி நெப்போலியன் ஜனாதிபதி பதவியிலிருந்து பேரரசின் தலைவரானார். வாக்குரிமையைக் கட்டுப்படுத்துவதற்காகப் புதிய சட்டசபை ஒரு மசோதாவை நிறைவேற்றியது. அதனுடன் வயது வந்தவர்களுக்கு வாக்குரிமையளிப்பதில் நெப்போலியன் முனைந்திருந்ததுடன் தலைமைப் பதவியை இரண்டாம் முறையாக வகிக்க அனுமதிக்குமாறு அரசியற் சட்டத்தைத் திருத்துவதையும் கோரினார். யோசிக்கப்பட்ட மாறுதலுக்குத் தேவையான பெரும்பான்மை வாக்களிப்புடன் சட்டசபை ஆதரவு தரவில்லை. அதனால், நெப்போலியன் திடீர்ப் புரட்சியைத் தோற்றுவித்து, எதிர்க்கட்சித் தலைவர்களைச் சிறை பிடித்தார்; சட்டசபையையும் கலைத்தார். இவருக்கு விரோதியராயிருந்தவர் ஆயிரக்கணக்கில் சிறை பிடிக்கப்பட்டனர்; ஆயிரக்கணக்கில் நாடு கடத்தப்பட்டனர். அதன்பின் இவர் அரசியல் சட்டத்தின் எல்லையைக்

குறிக்கும் சுருக்கத்தை மக்களின்முன் வைத்தார். முழு மொத்த மான வாக்கெடுப்பால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை, நாட்டின் சட்டங்கள், வரிகள் முதலியவைகளைப்பற்றி ஓட்டுச் செய்ய வேண்டு மென்றும், பத்தாண்டுகளுக்குத் தலைவர் பதவி நீடிக்கப்பட வேண்டு மென்றும் ஏற்பாடாயிற்று. இப்புதிய அரசியற் சட்டத்திற்கு ஆதர வாக ஏழரை மில்லியன் மக்கள் வாக்களித்தார்கள். அரை மில்லிய னுக்கும் சிறிது கூடுதலாக மக்கள் எதிர்த்து வாக்களித்தார்கள். இவர் பெற்ற வெற்றி மிகவுயர்வானதாயும், அதிகாரமிக்கதாயுமிருந்தது. என்றாலும், இதனினும் உயர்ந்த பதவியும், வழிவழியாகக் கிடைக்கக் கூடியதாயும் இருத்தல் நலமாயிருக்குமென்று எண்ணினர். இவர் தாம் பேரரசராய் இருப்பதா, இல்லையா என்பது பற்றி விருப்பத்தைக் கூறுமாறு மக்களைக் கேட்டார்.

## பேரரசர் மூன்றும் நெப்போலியன்

1852-ல் எழுபத்தெட்டு இலட்சம் பேர் இப்புதுப்பட்டம் ஏற்பதற்குச் சாதகமாக வாக்களித்தனர். இரண்டு இலட்சத்து முப்பத்து மூவாயிரம் பேர் எதிராக வாக்களித்தனர். எனவே, நெப் போலியன், 'பேரரசர் மூன்றும் நெப்போலியன்' என்னும் பெயருடன் ஆட்சி புரிந்தார். இவர் பதினெட்டாண்டுகள் ஆட்சி புரிந்தார். ஆட்சி தொடக்கத்தில் கண்ணைக் கவரக்கூடிய வெற்றியுடனிருந்தது. பின்பு வெற்றியும் தோல்வியும் மாறிமாறிக் காணப்பட்டன. அதன் பின் முழுமைக்கு வரலாற்றில் எடுத்துக்காட்டில்லாதவாறு பேரிடரில் முடிந்தது.

பிரான்சில் புரட்சி, எதிர்விளைவு முதலியவை நிகழ்ந்த இவ் வாண்டுகளில் ஐரோப்பாவின் நடுவிலும், இந்நிகழ்ச்சிகளுக்கு ஒப்புமை யான மாறுதல்கள் ஏற்பட்டன. குடியாட்சியின் ஆர்வமிக்க ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு பாடினர்:

> "மக்கள் மக்களால் துயிலெழுகின்றார்கள்;
> மன்னர் பின் மன்னர் மறைகின்றனர்."

## ஐரோப்பாவில் புரட்சியும் எதிர் விளைவும்

ஐரோப்பாவில் எங்கும் மன்னர்கள் ஓட்டம் பிடிப்பதுபோலத் தோன்றியது. பாரிசிலிருந்து எவ்வாறு லூயி பிலிப்பு ஓட்டமெடுத்தார் என்பதை ஏற்கனவே கண்டோம். பெர்லினிலிருந்து நான்காம் பிர டெரிக்கு வில்லியம் தப்பியோட நேர்ந்தது. முதலாம் பெர்டினண்டு, தமது தலைநகரான வியன்னா பேரிடரை விளைவிக்கக் கூடிய புரட்சி

யுடன் இருந்ததைக் கண்டார். ரோமாபுரியில் நிகழ்ந்த திடீர்ப் புரட்சியின் விளைவாக, போப்பு ஒன்பதாம் பயசும் நாட்டை விட்டு ஓடினர். ஐரோப்பாவில் முடியாட்சி முடிவுற்றதெனப் பலர் கருதினர். ஆனால், அப்பொழுது ஒவ்வொரு மூலையிலும் எதிர் விளைவு தோன்ற லாயிற்று. கரையை நோக்கி எழுந்த அலைகள், நாடு கடத்தப்பட்ட மன்னர்களை (பிரான்சு நீங்கலாக) மீண்டும் அவரவர்களுடைய நாட்டில் கொண்டுவந்து அமர்த்தின. இவ்வாறு பதவியைப் பெற்றவர்களுட் சிலர், தம் வாழ்நாள் முழுவதும் பதவியிலிருந்தனர். மற்றும் சிலர், ஒரு சில ஆண்டுகளே பதவியிலிருந்தனர். இக்கலகங்களெல்லாம், சுதந்தர அரசியல் சட்டத்தை ஏற்படுத்துவதையும், தேசிய குறிக் கோளைப் பெற்று மகிழ்வதையுமே நோக்கங்களாகக் கொண்டிருந்தன. பாரிசில் இப்புரட்சியில் மிகவும் சிறப்பாகக் கருதப்பட்ட சமூகப் புனரமைப்பு (மீளாக்கம்) முயற்சி மற்ற இடங்களிற் சாதாரணமாகத் துணைக்காரணமாயிருந்தது.

## வியன்னாவில் புரட்சி

ஆஸ்திரிய மக்களை இப்புரட்சிக் கலகங்களில் சேராதிருக்கச் செய்ய மெட்டர்னிக்கு முயன்றார். ஆனால், வியன்னாவில் அபாயத்தை விளைவிக்கக்கூடிய சரக்குப் பொங்கிக்கொண்டிருந்தது. ஆஸ்திரியாவின் துரைத்தனத்தில் மெட்டர்னிக்கைத் தவிர வலிமை பொருந்திய மூலப் பொருள் வேறில்லை. மன்னர் துணிவில்லாதவராயிருந்தார். மெட்டர் னிக்கு, தமக்குப் பிறகு வாரிசாயிருக்க ஒருவருக்கும் பயிற்சியளிக்க வில்லை. 1848-ல் வியன்னாவில் தோன்றிய கலகம், மெட்டர்னிக்கைப் பதவியிலிருந்து விலகும்படி செய்தது. விரைவில் கூடிய அரசியற்சட்ட நிர்ணயசபை எல்லா 'மானிய ஊழல்களை'யும் ஒழித்ததுடன், பேரரசின் எல்லாப் பகுதிகளுக்கும் ஏற்றதோர் அரசியற்சட்டத்தைத் தொகுப் பதிலும் முனைந்தது.

## பொஹீமியா

வியன்னா இவ்வாறு குழப்பமுற்றிருக்கும்போது ஆஸ்திரியாப் பேரரசின் ஒவ்வொரு பாகத்திலும் பயங்கரமான கலகம் குமுறிக்கொண் டிருந்தது. பொஹீமியா, சிறிது காலமாகவே தேசியத் தன்னுணர்ச் சியை மீண்டும் பெற்றுக் கொண்டிருந்ததுடன் ஆஸ்திரியாவின் ஆளுகையின்கீழ்க் கொந்தளிப்புடனுமிருந்தது. இப்போது அவர்கள் அந்நாட்டின் பழங்குடி மக்களான ஸெக்குகள், ஜெர்மானி யர்களுடன் சரி சமானமாக வைக்கப்பட வேண்டுமென்று கோரினர்கள். பின்பு பிரேகு நகரத்தில் ஸ்லாவ்களின் மாநாடு எல்லா ஸ்லேவானிக்க

மக்களுடைய வருங்காலத்தைப் பற்றியும் எண்ணுவதற்குக் கூட்டப் பட்டது.

## ஹங்கேரி

**கோஸ்ஸூத்து**

ஹங்கேரியில் காணப்பட்ட தொல்லைகள் இதைவிட மிகக் கடுமையானவை. அந்நாட்டு மக்களான மக்கியார்களைச் சுற்றிலும் அயல் இனத்தினர் (ருமேனியர், போலந்தியர், செர்வியர், குரோஷியர்) சூழ்ந்திருந்தனர்; இருந்தும், மக்கியார்கள் ஆட்சியினத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தார்கள். 1848-ல் நடந்த 'டயட்' சபையில் பல சீர்திருத்தங்களை அவர்கள் கோரியதுடன், ஆஸ்திரியாவினின்றும் ஹங்கேரி முழுச்சுதந்தரம் பெற்றிருந்ததாக அறிவித்தார்கள்; ஆனால், இன்னும் பேரரசரிடம் பற்றுக் கொண்டிருந்ததாகக் கூறினார்கள். அவர் கோரிய நிலை அரை நூற்றாண்டுக்குப் பின் தன்னாட்சியெனப் பெயர் பெற்று விளங்குவதாயிருந்தது. இதுவரை பத்திரிகை நிருபராக மட்டும் அறியப்பட்டிருந்த கொஸ்ஸூத்து என்பார் இவ்வியக்கத்திற்கு உயிர்ப் பூட்டுபவராயிருந்தார்.

## இத்தாலியில் புரட்சி

அதே தருணத்தில் ஆஸ்திரியாவிற்குச் சொந்தமாயிருந்த இத்தாலி நாட்டுப் பகுதிகளும் போர்க்கருவிகளைத் தாங்கிக் கலகம் செய்தன. இப்பகுதிகள் செல்வம் மிக்கனவாயும், நல்ல வளம் பெற்றனவாயுமிருந்ததால், ஆஸ்திரியாவிற்கு அதன் வருவாயில் அதிகமான பகுதியையளித்தன. இத்தாலியர்களின் ஒற்றுமையும் சுதந்தரமும் பற்றிய கருத்து, நெப்போலியனுடைய வெற்றியாலும் கொள்கையாலும் ஏற்கனவே நிலைபெற்றிருந்ததுடன், இதையடைவதற்காக இள இத்தாலியர்களின் அமைப்பைத் தோற்றுவித்த மாஜினியின் ஆர்வமிக்க நூல்களாலும் வளர்க்கப்பட்டு வந்தது. மிலான் திடீர்ப் புரட்சி செய்து ஆஸ்திரியர்களை வெளியில் விரட்டியது. வெனிஸ் நகரம் குடியரசு என அறிவித்தது. ஆஸ்திரியாவை எதிர்த்துக் கலகஞ் செய்தவர்கள், அந்நாட்டுப் படைகளுடன் சண்டையிட நிகரற்றவர்களாயிருந்தார்கள். நன்கு தெரிந்திருந்தும், பீட்மாண்டு, சார்டீனியா இவற்றினுடைய முழு உதவியை நம்பியிருந்தார்கள்; அதனுடன் ஆஸ்திரியாவின் உள் நாட்டில் காணப்பட்ட தொல்லைகள் அதற்குத் தடையாயிருந்ததையும் நன்கறிந்திருந்தார்கள். முதலில் பெற்ற வெற்றிகள் அவர்களுக்குப் புகழையளித்தன. ஆஸ்திரியப் படைகள் மிலான் பகுதியிலிருந்து விரட்டியடிக்கப்பட்டன.

## ஆஸ்திரியா இராச்சியத்தில் எதிர் விளைவின் வெற்றி

ஆஸ்திரியப் பேரரசு கலைந்துவிடும் போலத் தோன்றியது. அதன் ஆட்சிக்குட்பட்டிருந்த நாட்டு மக்களுள் காணப்பட்ட கடுமையான பூசல்களாலும், அதன் எல்லைப் புறத்தில் தோன்றிய கலகத்தையடக்கு வதற்கு ரஷ்யா உதவி புரியத் தயாராயிருந்ததாலும், ஆஸ்திரியா காப் பாற்றப்பட்டது. பேரரசரான பெர்டினண்டு முடி துறந்து, பதினெட்டு வயதினரான பிரான்சிஸ் ஜோசப்புப் பட்ட மேற்றது ஆஸ்திரியாவிற்கு இலாபமாயிற்று. அலுவல்களை உண்மையில் மேற்பார்வையிடுவது, சிறந்த சத்தியும் மனவுறுதியும் கொண்டவரான ஷ்வார்சன்பெர்கிடம் இருந்தது. முதலில் பொஹீமியாவின் இயக்கம் சீர் குலைந்தது. அடுத்தாற்போல ஏற்பட்டது இத்தாலியின் வடபாகத்தின் இயக்கம். ஆஸ்திரிய ப் படைத்தலைவரான ரேடட்சிக்தவைப் பலப்படுவதற்காகப் படைகள் அனுப்பப்பட்டன. சார்டீனியா மன்னரான சார்லசு ஆல்பர்ட் படையை நடத்திச் செல்லுவதில் அவர் திறமையற்றிருந்தது வெளியா யிற்று 1848 ஜூலையில் கஸ்டோஸா என்னுமிடத்தில் தோற்கடிக்கப் பட்டு, 1849 மார்ச்சு மாதத்தில் நொவாரா என்னுமிடத்தில அவர் நசுக்கப்பட்டார்.

## ஹங்கேரியில் புரட்சியின் தோல்வி

இவ்வாறு ஆஸ்திரியா அதற்குச் சொந்தமாயிருந்த இத்தாலிய நிலப்பகுதிகளை மீண்டும் அடைந்தது. சார்டீனியா மன்னர் முடி துறந் தார். அவருடைய புதல்வரான விக்டர் இம்மானுவல் பட்டத்திற்கு வந்தார். அவர் தந்தையார் உறுதியளிக்கப்பட்ட மிதவாதமான அரசியற்சட்டத்தை ஒரேநோக்குடன் நிலைபெறச் செய்தார்; ஐக்கிய மான இத்தாலியில் ஆட்சி புரியும்வரை உயிர் வாழ்ந்திருந்தார். ஆஸ்திரியாவிற்கெதிராக ஹங்கேரி கோபத்துடன் கலகஞ்செய்தது. வியன்னாவிலிருந்து எவ்வித உதவியும் எதிர்பார்க்க இயலாத நிலையிலிருந்தது. எதிர் விளைவின் கொள்கைகள் வெற்றி யடைந்தன. மிதவாதிகள் மிகக்கொடுமையாகத் தண்டிக்கப்பட்டார்கள். 1849 ஏப்ரலில் கொஸ்ஸூத்து (ஒரு சமயம் நன்கு யோசியாது) ஆஸ்திரியாவின் அரசியற் சட்டத்தினின்று பிரிந்திருந்ததால், ஹங்கேரி யின் முழுச் சுதந்தரத்தையும் அறிவித்தார். தொடக்கத்தில் கிடைத்த சில வெற்றிகள் அவர் எதிர்பார்த்தவற்றுக்கு உதவியளிப்பனவா யிருந்தன. ஆனால், மாக்கியார்களுடைய தலைமையைக் குறிக்கும் உரிமைக்கு எதிராக, செர்புகளும், குரோஷியர்களும், ருமேனியர்களும், ஆஸ்திரியாவிற்கு ஆதரவளித்தார்கள். கொஸ்ஸூத்து வீரரல்லர்; படைத் தலைவர்களுடனும் சண்டையிட்டார். இவ்வியக்கத்திற்கெதிராக உறுதியான தாக்குதல் ரஷ்யாவிடமிருந்து வந்தது. புரட்சி இயக்

கத்தை அடக்குவதற்காக, சார் தம் படைகளை ஆஸ்திரியப் படைகளுடன் உடனடியாக ஒன்று சேர்த்தார். 1849 ஏப்பிரலில் மாக்கியார்களின் படை வில்லகோஸ் என்னுமிடத்தில் நிபந்தனைச் சரணடைந்தது. கொஸ்ஸூத்து நாட்டை விட்டு விரட்டப்பட்டுத் தப்பியோடினர். அவருடைய இயல்பான நடைமுறையே முற்றிலும் வீழ்ச்சியுற்றது போலத் தோன்றியது. அப்படியிருந்தும், இருபதாண்டுகட்குள்ளாகவே அவரது நாட்டு மக்கள் எந்த நோக்கத்திற்காக சண்டையிட்டுக்கொண்டிருந்தனரோ அதன் பெரும் பகுதியை அடைவதற்கு ஊழ் வழி செய்தது.

## ஜெர்மனி

ஜெர்மனியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் மிகவும் சிக்கலாயிருந்தன. ஜெர்மனியில் எல்லா ஜெர்மானியப் பிரதேசங்கட்கும் சேர்த்துச் சமஷ்டி அரசியற்சட்டத்தை ஏற்படுத்தும் நோக்கத்துடன் அரசியற்சட்டத்தை அடிப்படையாகக் கொண்ட ஓரியக்கம் இருந்தது. பிரஷ்யாவிலும் பலாத்காரத்தில் ஈடுபட்டிருந்த புரட்சியியக்கமும் இருந்தது. தொடக்கத்தில் இரண்டியக்கங்களும் வெற்றிகளைப் பெற்ற போதிலும், பின்பு இரண்டும் தோல்வியுற்றன.

## ஃப்ராங்க்பர்ட்டுப் பாராளுமன்றம்

ஆஸ்திரியாவின் கஷ்டம்

1815-ல் அமைக்கப்பட்ட ஜெர்மன் நாடுகளின் இணைப்பு ஆளும் அரசாங்கமாயில்லை. சேர்ந்திருந்தவர் எல்லோரும் ஒருமுகமாக இல்லாததனால், அது எச்செயலையும் செய்ய ஆற்றலில்லாத அரசியல் தந்திரிகளின் கூட்டமாய் விளங்கியது. இக்கூட்டத்தில் ஆஸ்திரியா ஆதிக்கம் கொண்டிருந்ததுடன் ஜெர்மனியின் நலங்கருதி எவ்வித உருவத்திலும் ஒன்றும் செய்யவில்லை. 1848-ல் வெற்றியுடன் திகழ்ந்த பிரெஞ்சுப் புரட்சி, புதிய எண்ணங்களைத் தூண்டியது. ஆஸ்திரியாவில் பல கலகங்கள் தோன்றி நாட்டிற்கு இன்னல்களை விளைவித்த போதிலும், அவற்றை எதிர்த்து நிற்க ஆஸ்திரியாவால் இயலவில்லை. ஆச்சரியமாகவும் எளிதாகவும், ஃப்ராங்பர்ட்டில் ஜெர்மனி பாராளுமன்றம், ஜெர்மனியினுடைய புதிய அரசியற்சட்டம் பற்றி விவாதிப்பதற்காகக் கூட்டப்பட்டது. மிதவாதக் கொள்கை எளிதாக வெற்றியை எதிர்பார்த்தது. ஆனால், நிலைமை தொடக்கத்தில் காணப்பட்டது போல அவ்வளவு சாதகமாயில்லை. பாராளுமன்றம் விவாதிக்கலாமே தவிர, முடிவு காண அதிகாரம் பெற்றிருக்கவில்லை. எடுத்துக் சொள்ளும் எவ்விதத் தீர்மானத்தையும் ஜெர்மனியின் உறுப்பு நாடுகளுக்குத் தெரிவித்து அனுமதி பெற வேண்டியிருந்தது. விவாதங்கள்

தொடங்கியதும், ஆஸ்திரியா அரசின் தன்மை காரணமாகத் தோன்றிய இன்னல்கள் வளரலாயின. இப்புதிய ஜெர்மனி நாட்டில் ஆஸ்திரியா ஒரு பகுதியாயிருந்ததா, இல்லையா என்பது பிரச்சினையாயிருந்தது. ஆஸ்திரியாவைச் சேர்த்துக்கொண்டால் ஆஸ்திரியாவிலிருந்த இருபத்தெட்டு மில்லியன் குடிகளுக்கும் ஜெர்மனியின் பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் அளிப்பதா, அல்லது நான்கு மில்லியன் ஜெர்மானியர்களுக்கு மட்டும் பிரதிநிதித்துவம் அளிப்பதா? ஆகவே, எவ்வழியிலும் இன்னல்கள் இருந்தன. ஆஸ்திரியாவைச் சேர்த்துக்கொண்டால், ஜெர்மானியர்களைப் பாராளுமன்றம் எவ்விதத்திலும் மனநிறைவு கொள்ளச் செய்ய முடியாமற் போகும். ஆஸ்திரியாவிலிருந்த ஜெர்மானியர் அல்லாத மக்களை விலக்குவதானுல், ஆஸ்திரியப் பேரரசர் ஜெர்மன் குடிகள் பாராளுமன்றத்திற்கு வருவதை ஒரு சமயம் அனுமதிக்காமலிருக்கலாம். ஆஸ்திரியாவை அடியோடு விலக்குவதானுல், புதிய அரசியல் சட்டத்திற்கு ஆஸ்திரியா விரோதியாயிருப்பதுடன் ஆபத்தை விளைவிக்கக்கூடியதாயுமிருக்கும்.

## ஜெர்மன் பேரரசைப் பிரஷ்யாவுக்கு அளித்தல்

இறுதியில், ஆஸ்திரியாவின் பகைமையை எதிர்ப்பதென்று கருதி ஆஸ்திரியாவை விலக்குவதென முடிவு செய்யப்பட்டது. பலமான எதிர்ப்புக்கிடையே ஜெர்மானியப் பேரரசை மீண்டும் ஏற்படுத்துவதென்று பெரும்பான்மையோர் அறிவித்தனர். இப்பேரரசின் தலைவரை 'ஜெர்மனியார்களின் பேரரசர்' என வழங்குவதென்பது அறிவிக்கப்பட்டது. அவருடைய பதவி வழிவழியுரிமையாக்கப்பட்டபின், இப்புதிய பட்டத்தையும் பதவியையும் பிரஷ்யா மன்னரான நான்காம் வில்லியத்திற்கு அளிப்பதென்றும் (1849 மார்ச்சில்) முடிவு செய்யப்பட்டது.

## பிரஷ்யா மறுத்தல்

பிரஷ்யாவும், அந்நாட்டின் புரட்சியியக்கத்துடன் போராடிக்கொண்டிருந்ததைக் காண்போம். எனவே, அந்நாட்டு மன்னர், பதவியளிப்பதற்கு உரிமையுண்டாவென ஐயுறக்கூடிய உரிமையைப் பெற்றிருந்த சட்டசபையால் அளிக்கப்பட்டதும், அதனுடன் ஆஸ்திரியாவின் பகைமையை உறுதியாகக் கொண்டிருந்ததுமான பதவியை ஏற்றுக்கொள்ள விருப்பமில்லாதவராயிருந்தார். அவர் ஏற்றுக்கொள்ள மறுத்தார். அவர் மறுத்ததுடன் இயக்கமும் சிதைந்து போயிற்று. பாராளுமன்றம் சிறிது காலம் நீடித்திருந்தது என்ருலும் உறுப்பினர்களின் எண்ணிக்கை குறைந்துகொண்டே வந்தது. உர்ட்டம்பர்கு மன்னர் விரைவிலேயே அதைக் கலைத்தார். ஜெர்மனியினுடைய தேசியக் கொள்கைகள் பாராளுமன்ற முறைகளால் அடையத்தக்கனவாயில்லை.

## பிரஷ்யா

பிரஷ்யாவின் விவகாரங்கள் இதனினும் அதிகமான குழப்பத்துடன் கூடிய நெருக்கடியிற் சிக்கியிருந்தன. நாட்டில் அரசியற்சட்டப்படி வாழ்க்கை நடக்கவில்லை. மன்னரிடத்தில் தொடர்புபடுத்தப்பட்ட வலுவான அரசாங்கம் இருந்தது. எல்லோருக்கும் மொத்தமான இராணுவச்சேவை இருந்ததுடன், நன்கு வளர்க்கப்பட்டிருந்த கல்வி முறையும் காணப்பட்டது. ஆனல், பார்வைக்குப் பொதுவாக மக்களிடத்தில் அரசியல் ஊக்கம் சிறிதளவுமில்லை போலத் தோன்றியது.

## பெர்லினில் புரட்சி

### பிரஷ்யா, ஜெர்மனியுடன் சேர்க்கப்படுதல்

1847-ல் மன்னர் சட்டசபையைக் கூட்டி, வரிகளை ஓட்டுச் செய்யவும், சட்டமியற்றுவதில் ஆலோசனை கூறும் உரிமைகளைக் கொடுப்பதாகவும் கூறினர். ஆனல், முடிவு செய்யும் அதிகாரம் அளிக்கப்படவில்லை. அவர், 'கடவுள், நாடு இவைகளின் கட்டளைப்படி சுதந்தரமான முடிவுடன் மன்னர் ஆட்சி புரியவேண்டுமே தவிர, பெரும்பான்மையோரின் விருப்பப்படியன்று,' என்று கூறினர். சட்டசபை அதிகமான அதிகாரங்களைக் கோரினபோது கலைக்கப்பட்டது. இத்தருணத்தில் பாரிசில் புரட்சி என்ற செய்தி பெர்லினைப் பயங்கரமான பரபரப்பில் ஆழ்த்தியது. தெருக்கள் தடை செய்யப்பட்டன. நகரத்திற்குள் கடுஞ்சண்டை நிகழ்ந்தது. மன்னர் படிந்தார்; அதுமுதல் பிரஷ்யாவை ஜெர்மனியுடன் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று அறிவித்தார்; அரசியற்சட்டத்தை விரிவுபடுத்துவதற்காகத் தேசியச் சட்டசபை கூடுவதையும் அனுமதித்தார். தாராளப் போக்குடன் இச்சட்டசபை பணிபுரியத் தொடங்கி படைமானியமுறை அழிக்கப்பட்டதாயும், தனியுரிமை பற்றிய பல நடவடிக்கைகளைப் பற்றியும் உத்தரவிட்டது.

## பிரஷ்யாவில் எதிர் விளைவின் வெற்றி

வியன்னுவில் கலகம் அடக்கப்பட்டதாயும், பேரரசரின் படைகள் நகரத்தை மீண்டும் கைப்பற்றியதாயும் அறிவித்த செய்தி பிரஷ்யா மன்னருக்குத் தைரியத்தையூட்டியது. இதன் பயனுக அவர் சட்டசபையைத் தாக்கலானர். இச்சபையின் முறையற்ற வாதங்கள் பெரும் பழிக்குள்ளாயின. அவர் பிற்போக்கான எண்ணங்களைக் கொண்டிருந்த பிரான்டன்பர்கைத் தமக்கு அமைச்சராக்கிக் கொண்டார். பெர்லினை விட்டு வெளியேறுமாறு சட்டசபைக்கு உத்தரவிடப்பட்டது. அவ்வாறு செய்ய மறுத்த சபை, இராணுவத்தைக் கொண்டு கலைக்கப்பட்டது.

1848 டிசம்பரில் மன்னர் அவருடைய சொந்தத் தொடர்புடையதாக ஓர் அரசியற்சட்டத்தை எடுத்துக் கொடுத்தார். அரசரின் அதிகாரம் பாதுகாக்கப்பட்டது.

## பிரஷ்யா, ஆஸ்திரியாவின் போட்டி

உள்நாட்டுப் புரட்சியில் வெற்றி பெற்றிருந்தும், நான்காம் பிரெடரிக்கு வில்லியம், ஜெர்மனியின் முடியை ஏற்றுக்கொள்ள விருப்பமில்லாதிருந்தார். இம்முடி, ஃப்ராங்பர்ட்டில் கூடிய புரட்சிக் கட்சியால் அளிக்கப்பட்டதாகும். 'இரத்தத்துடன் கலந்த சேற்றிலிருந்து எடுக்கப்பட்ட முடியை' அவர் எவ்வாறு மறுத்தார் என்பதை ஏற்கனவே கண்டோம். ஆனால், அவர் ஜெர்மனிக்கு ஒரு புதிய அரசியலமைப்பை அளிக்க முயன்றார்; புதிய சமஷ்டி அரசியற்சட்டத்தை அமைக்கும் நோக்குடன், பொலினுக்கு ஜெர்மன் அரசாங்கங்களை அழைத்தார். தொடக்கத்திலிருந்தே, இப்புதிய அரசாங்கம் எல்லா ஜெர்மனியையும் கொண்டதாக இராதென்பது வெளிப்படையாயிற்று. காரணம், ஆஸ்திரியாவும் பவேரியாவும் இதிற்சேர மறுத்ததும், ஹானோவரும், சாக்ஸனியும் விரைவிலேயே வெளியேறியதும் ஆகும். இறுதியில், பிரஷ்யாவின் தலைமையில் வடஜெர்மனியைக் குறித்துச் சமஷ்டி அரசியற்சட்டம் வகுக்கப்பட்டது. இருபத்தெட்டுச் சிற்றரசுகள் இதை ஏற்றுக்கொண்டன. ஃப்ராங்பர்ட்டில் இதற்குப் பதிலாக ஆஸ்திரியா, சமஷ்டிச் சட்டசபையை மீண்டும் அமைத்தது. இவ்வாறு ஜெர்மனியில் இரு போட்டிச் சட்டசபைகள் ஜெர்மன் சிற்றரசுகளுக்குள் இருந்த இரு பெரிய எதிரிகளால் ஆதிக்கம் செலுத்தப்பட்டனவாயிருந்தன.

## ஆஸ்திரியாவின் வெற்றி

### ஆல்முட்ஸில் சரணடைதல்

முதலிலிருந்தே மோதல் ஏற்படும் போன்று இருந்தது. ஹெஸ்ஸி காசல் சம்பந்தமான சச்சரவு ஒரு பிரச்சினையாயிற்று. பிரஷ்யாவின் சமஷ்டிச் சட்டசபை ஹெஸ்ஸி காஸிலினுடைய 'எஸ்டேட்டு'க்களின் கட்சிக்கு ஆதரவளித்த போது, அதன் அரசாங்கம் ஃப்ராங்பர்ட்டிலிருந்த 'டயட்' சபையிடம் முறையிட்டது. போராட்டத்தில் பிரஷ்யா வெற்றி பெறக்கூடும் ஆனால், பிரஷ்யாவின் அரசியல் வல்லமை பொருந்தியவர்களும் மன்னரும், கோழைகளாயும், துணிச்சல் இல்லாதவர்களாயும் இருந்தார்கள். ஷ்வார்சன்பர்கு ஆஸ்திரியாவின் பிரதிநிதியாய் இருந்தார். இவர் பேரவாவுடையவராயும், தெள்ளறிவு வல்லமையுடன் கூடியவராயும் இருந்தார். இவர் உயிருடனிருந்திருந்தால், பிரஷ்யாவுக்கு பிஸ்மார்க்கு எப்படிச் சேவை

செய்தாரோ, அதைப் போலவே ஆஸ்திரியாவிற்குச் சேவை புரிந்திருப்பார் எனச் சிலர் எண்ணுவர். ஹெஸ்ஸி காசிலின் பிரச்சினை சார் மன்னரின் நடுவுநிலைக்கு விடப்பட்டதும், அவர் எல்லாவற்றையும் ஆஸ்திரியாவிற்குச் சாதகமாக முடிவு செய்தார். இதன் பின்பு, உடனே போர் தொடுப்பதாக அச்சுறுத்தி, பிரஷ்யாவின் ஆதரவின்கீழ் நிறுவப்பட்டிருந்த சமஷ்டிச் சட்டசபையைக் கலைத்துவிட வேண்டுமென்றும், ஃப்ராங்பர்ட்டில் ஆஸ்திரியாவால் மீண்டும் ஏற்படுத்தப்பட்டிருந்த சமஷ்டி 'டயட்' சபையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் கோரினர். எதிர்க்கும் எண்ணத்தைப் பிரஷ்யா கைவிட்டது. ஆல்முட்ஸ் என்னுமிடத்தில் எல்லா முனைகளுக்கும் எவ்வித நிபந்தனையுமின்றிச் சரணடைவது வாயிலாகச் சமாதானத்தைப் பெற்றது.

ஆஸ்திரியா, ஜெர்மனிமீது ஆதிக்கம் செலுத்துவது போலத் தோன்றியது: பிரஷ்யா கொண்டிருந்த ஆதிக்க எண்ணங்கள் தோற்றுவிட்டது தெரிந்தது. எனினும், இரு நாடுகளுக்கும் மாறுதலான நிலையேற்படவிருந்தது. ஆல்முட்ஸில் அடைந்த அவமானத்தின் நினைவு, பிரஷ்யாவினுடைய செயல் கொள்கைகளுக்குப் புதிய தன்மையைக் கொடுத்து, அடுத்த தலைமுறையில் வரும் அரசியல் வல்லுநர்களை உறுதியுடனிருக்கச் செய்வதற்குக் காரணமாயிற்று.

ஃபைப் என்பார் எழுதியுள்ள 'நவீன ஐரோப்பாவின் வரலாறு', ஆலிஸன் பிலிப்பு என்பார் எழுதியுள்ள 'நவீன ஐரோப்பா', டிக்கின்ஸன் எழுதியுள்ள 'நவீன பிரான்சில் புரட்சியும் எதிர் வினையும்', 'கேம்பிரிட்ஜ் நவீன வரலாறு' (பத்தாவது தொகுப்பு), சீனபாய் எழுதியுள்ள 'நவீன ஐரோப்பாவின் அரசியல் வரலாறு' என்னும் நூல்கள் கற்றற்குரியன.

# 18. இத்தாலிய ஐக்கியத்தின் வெற்றி

## மூன்றும் நெப்போலியனுடைய நிலையும் தனி மதிப்பும்

1852-ல் மூன்றும் நெப்போலியன் ஐரோப்பாவில் மிக அதிக வலிமை பெற்ற அதிகாரம் உடையவராய் விளங்கினர். அவருடைய ஒழுக்கம், ஆற்றல்கள் பற்றி இப்போது முடிவு செய்யப்படாமல் இருந்தும், அவருடைய வெற்றியைப்பற்றி எவ்வித ஐயமும் இல்லை. பிரான்ஸ் மக்களிற் பெரும்பாலார் பேரரசர் என்ற பட்டத்துடன் மற்ருெரு நெப்போலியன் பிரான்ஸில் ஆட்சி புரிவதைக் கண்டு பெருமகிழ்ச்சி யுறுவதாக அறிவித்தனர். இரு நெப்போலியன்களையும் ஒப்பிட்டுப் பார்ப்பது இயற்கையிலேயே தோன்றும் ஆவல் ஆகும். அவர்களுடைய வாழ்க்கை, தொழில், பதவி இவற்றில் ஒப்புமை காணப்பட்ட போதிலும், அவ்விருவருடைய ஒழுக்கம், ஆற்றல் இவற்றிற் பெரிய மாறுபாடுகள் இருந்தன. காலம் செல்லச்செல்ல, இம்மாறுபாடுகள் தெளிவுடன் காணப்பட்டன. மூன்றும் நெப்போலியன் பேராற்றல்கள் படைத்திருந்தார். ஆனல், முதலாம் நெப்போலியனிடத்திற் காணப் பட்ட உறுதியும் பிடிவாதக் குணமும் இவரிடம் இல்லை. அதனுடன் அரசியல் சமூகம் பற்றியவைகளில் அவருக்கிருந்த பரந்த நோக்கும் இராணுவ அறிவாற்றலும் இவரிடம் சிறிதளவும் இல்லை. இயற்கையில் நட்புத் தன்மையும் உயர்நோக்கமும் கொண்டவராயும், அவைகளைப் பற்றிக் கனவு காண்பவராயும் இருந்தார். சில நேரங்களில் இவர் கனவுகள் நனவானதுடன் இவருடைய அரசியல் தந்திரம் அரசியல் வல்லமை இவைகளில் இவரது அறிவாற்றல் ஒளி வீசியது. எனினும், உலகின் உண்மைகள், சாத்தியக்கூறுகள் இவற்றைப்பற்றித் தேவையான அளவு புரிந்துகொள்ளாமலிருந்தார். ஒருவகையில் இவரது நிலை முதலாம் நெப்போலியனுடையதைப் போன்றிருந்தது. இவரால்

அமைதியாக இருக்க முடியாது. நாட்டு மக்களின் கண்களைப் பறிக்கக் கூடிய துணிவுச் செயல், புதுமை, வெற்றி முதலியவைகளைச் செய்வது என்ற உறுதியின்மேல் இவர் பதவி ஏற்றுர். எனவே, சாதாரணமான கொள்கையைப் பின்பற்றினுல் இவருடைய பதவிக்கு அது தீமையுண்டு பண்ணியிருக்கும். தோல்வியோ, இவருடைய பதவியிலிருந்து இவரைக் கீழே தள்ளியிருக்கும்.

## துருக்கியர் சிதைவு

### அண்டை நாடான ரஷ்யாவின் பயமுறுத்தல்

இவர் முதன்முதல் நடவடிக்கையெடுக்க வேண்டிய ஐரோப்பியப் பிரச்சினை, துருக்கிய அதிகாரத்தின் வலிவின்மையால் எழுந்ததாகும். பதினேழாவது நூற்றுண்டிலிருந்தே துருக்கியர்கள் அதிகாரம் தொடர்ந்து வீழ்ச்சியுற்று வந்தது. அவ்வீழ்ச்சிக்கான காரணங்கள் மறைபொருளாயில்லை. ஐரோப்பாவில் துருக்கியர் சிறுபான்மை யோராய் இருந்தனர்; அதனுடன் இராணுவ வலிமையால் ஆட்சி புரிந்தனரேயன்றி, வெற்றி கொண்ட மக்களைச் சமரசத்தாலோ அல்லது பிறிதாலோ இணைத்துக்கொள்ள முயலவில்லை. ஐரோப்பிய நாகரிகத்தின் சிறப்புக் கூறுகளை வெறுத்தனர். அவற்றைத் தம் வயப்படுத்த முயலவில்லை. துருக்கி, இராணுவ வல்லாட்சியாயிருந்தது. அங்குத் தொழில், அறிவியல், சுதந்தரம் முதலியவை இல்லை. வரலாற்றில் பொதுமை காண்டல் பேரிடரானது. எனினும், அதன் அரசியல் நிலையுள்ளதன்றென்று சொல்லுவதுடன் பேரிடரற்றது. ஆட்டோமன் பேரரசு 1571-ல் லெபான்டோவில் ஸ்பெயின் அதனுடைய நேசநாடுகள் இவற்றிடம் பெற்ற கடற்படைச் சண்டையின் தோல்வியிலிருந்து மீட்சி பெறவில்லை. அதனுடன் 1683-ல் வியன்னு முற்றுகையில் அதற்கு ஏற்பட்ட விபத்து, மேற்கு ஐரோப்பாவிற்கு எதிராக நிலச்சண்டையிலும் அதன் போர் முறைகள் வெற்றியை உண்டு பண்ணுவதற்கு உறுதுணையாக ஆற்றல் பெற்றிருக்கவில்லை என்பதையும் தெளிவாக்கியது. பதினெட்டாம் நூற்றுண்டில் எழுச்சியுற்ற ரஷ்யா, துருக்கியின் வடக்கு எல்லையில் வலிமையும், பகைமை நாடுகளைப் பிடிக்கும் இயல்பையுங்கொண்ட அண்டைய அரசை ஏற்படுத்தியது. இரு நாடுகளுக்குமிடையே காணப்பட்ட சமயவேற்றுமையும், கருங்கடலின் வடக்குக் கரைப்பகுதிகளுக்குச் சொந்தமாயிருந்த ரஷ்யாவின் போக்குவரத்தைக் கருங்கடலிலிருந்து வெளியே செல்லுதற்குத் தடையாகக் கான்ஸ்டான்டிநோப்பிள் இருந்ததும், இந்நிலையைத் தூண்டும் காரணமாயிருந்தன.

## கிரிமியாப்போரின் மூலகாரணங்கள்

அற்பமான நிகழ்ச்சியின் பயனாய்க் கிரிமியாப் போர் ஏற்பட்டதாகத் தோன்றுகிறது. எருசலேமில் வைதிகக் கிறித்துவர்களுக்கும் கத்தோலிக்கக் கிறித்துவர்களுக்குக்கிடையே புனிதமான இடங்களைப் பயன்படுத்துவது குறித்துச் சச்சரவு தோன்றியது. இவ்விரு கட்சிகளுக்கும் முறைப்படி பாதுகாப்பாயிருந்த ரஷ்யாவையும் பிரான்சையும் இச்சண்டையில் சிக்க வைத்தனர். இச்சச்சரவைக் காரணமாகக் கொண்டு கான்ஸ்டான்டிநோப்பிளிலிருந்த ரஷ்யத் தூதர், துருக்கியர் பேரரசில் வாழ்ந்த கிறித்துவர்களின் காப்பாக ரஷ்யாவை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கோரினார். இவ்வுரிமையை அனுமதிப்பது இடைவிடாத குறுக்கீட்டிற்கு வழி செய்வதாகும். எனவே, ஆங்கிலேயத் தூதரான ஸ்டாராட்ஃபோர்டு டி ரெட்கிளிஃப் உதவியைக் கொண்டு துருக்கி இக்கோரிக்கையை மறுத்தது. விவகாரத்திற்குட்பட்டிருந்த இப் பிரச்சினையைத் தீர்ப்பதில் வியன்னாவிற்கூடிய மாநாடுகளும் பயனற்றனவாயின. 1853-ல் போர் தொடங்கப்பட்டது. அடுத்த ஆண்டில் துருக்கிக்கு உதவியாய்ப் பிரான்சும் இங்கிலாந்தும் போரிற்சேர்ந்தன. ரஷ்யாவினுடைய பரவுதலின் அச்சம், பொறாமை இவைகளால் தூண்டப்பட்டும், வாணிக சம்பந்தமான போக்கை மனத்திற்கொண்டும் இங்கிலாந்து இப்போரில் இறங்கியது. வீரம் பொருந்திய இராணுவச் செயலைச் செய்வது வாயிலாகத் தமது அதிகாரம் புகழையடையும் என்ற எண்ணத்துடன், மூன்றாம் நெப்போலியனும் போரிற் கலந்து கொண்டார்.

## கிரிமியாமீது படையெடுப்பு

### செபாஸ்டபோல் முற்றுகை

ரஷ்யர்கள் பால்கன் மாகாணங்களின்மீது படையெடுத்தார்கள். ஆனால், அவர்கள் எதிர்பார்த்ததைவிட முரட்டுத்தனமான பாதுகாப்பை எதிர்க்க வேண்டியதாயிற்று. எனவே, மேற்கிந்தியப் படைகள் எதிர்ப்பட்டதும் பின்வாங்கினார்கள். அப்பொழுது ஒரு வேளை சமாதானத்தை ஏற்படுத்தியிருக்கலாம். ஆனால், கிரிமியாத் தீபகற்பத்தின்மீது படையெடுக்க வேண்டுமென்று ஆங்கிலேய அமைச்சர் குழுவும் மூன்றாம் நெப்போலியனும் உறுதி கொண்டனர். இதனால் விரைவில் வெற்றியையும், ரஷ்யாவின் கடலாதிக்கத்தின் அழிவையும், அவர்கள் எதிர் நோக்கினார்கள். ஆனால், எதிர்பார்த்தபடி குறுகிய காலப்போக்கிற்குப் பதிலாகப் பயங்கரமான பொருட்செலவைக் கொண்டதும், சற்றேறக்குறைய ஈராண்டுக் காலம் நிகழ்ந்ததுமான போராய் அது முடிந்தது. ஆல்மாச் சண்டையில் ரஷ்யர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். உடனடியாக ஒருசமயம் தாக்கியிருந்தால்

செபாஸ்டபோல் வீழ்ச்சியுற்றிருக்கும். ஆனால், பாதுகாப்புக்களைத் தயார் செய்துகொள்ள ரஷ்யர்களுக்கு அவகாசம் கொடுக்கப்பட்டது காரணமாக ரஷ்யர்கள் டாட்லிபென் என்பாரின் தலைமையின்கீழ் எதிர்த்தனர். இங்கிலாந்து, பிரான்சு, துருக்கி இவற்றின் படைகளுக்குத் துணையாகச் சார்டினியா மன்னரால் அனுப்பப்பட்ட இத்தாலியப் படையும் வந்து சேர்ந்தது. சண்டையில் இக்கூட்டுப் படைகள் தோற்கடிக்கப்படாவிட்டாலும், போதுமான உணவும் உடையும் இல்லாததாலும், கடுங்குளிரின் தொல்லையாலும், பிணியின் கொள்ளையாலும் கடுந்துன்பம் அடைந்தார்கள். ரஷ்யாவின் தொடர்பிலிருந்து செபாஸ்டபோல் துண்டிக்கப்படவில்லை; 1855 டிசம்பர் வரை முற்றுகையை எதிர்த்து நின்றது. அதன்பின் போர் விரைவில் முடிந்தது.

## பாரிஸ் சமாதானம்

பாரிஸ் சமாதானத்தால் துருக்கியிலிருந்த கிறித்துவர்களுக்குப் பாதுகாப்பளிக்கும் உரிமையை ரஷ்யா கைவிடும்படி நேர்ந்தது. அதனுடன் கருங்கடலிற் போர்க்கப்பல்களை வைத்துக்கொள்வதில்லை என்று ரஷ்யா வாக்குறுதி செய்தது. துருக்கிய வலிமையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதும் ஏற்பட்டது. இச்சமாதானம் நீரில் எழுதிய எழுத்தாகியது. துருக்கியின் வீழ்ச்சியை இச்சமாதானத்தால் தடைப்படுத்த இயலவில்லை. சிறிது காலத்திற்குள்ளாகவே நிலம் கடல் வழியாக ரஷ்யா மீண்டும் முன்னேறத் தொடங்கியது.

## 1848க்குப்பின் இத்தாலியின் நிலைமை

### பீட்மான்டும் (Piedmont) சார்டீனியாவும்

19ஆம் நூற்றாண்டில் நடந்த போர்களின் சிறப்பான இயல்புகள் கிரிமியாப் போரிற் காணப்படவில்லை. தேசியப்பற்று என்பதேயில்லை. அரசியல் தந்திரம், சத்திச்சமநிலை பற்றிய விவகாரமாய் இருந்ததால், இப்போர் 18ஆம் நூற்றாண்டில் நடந்த போர்களை ஒத்திருந்தது. ஆனால், விரைவிலேயே முற்றிலும் மாறான வேறொரு பிரச்சினையில் மூன்றாம் நெப்போலியன் ஈடுபட நேர்ந்தது. 1848-ல் இத்தாலியில் நடந்த புரட்சிகளெல்லாம் தோல்வியுற்றன. ஆஸ்திரியாவில் பிற்போக்கான சத்தி முன்பிருந்ததைவிட உறுதியாக வேரூன்றியது போலத் தோன்றியது. ஆல்ப்ஸ் மலையிலிருந்து அயோனியன் கடல் வரையிலும் காணப்பட்ட அரசுகளில் ஒன்று நீங்கலாக மற்றவற்றின் மக்கள், இனம், நோக்கங்கள், எண்ணங்கள் இவற்றிலெல்லாம் பலதரப்பட்டவர்களாயிருந்தார்கள். இத்தாலி முன்பிருந்ததைக் காட்டிலும் அதிகமாகக் கலப்பில்லாத 'நிலவியல் தோற்றம்' போலக் காணப்

பட்டது. இத்தாலியப்பற்று எவ்விதத்திலும் வீழ்ச்சியுறவில்லை. தவிர, ஆஸ்திரியாவின் ஆதிக்கத்தை இத்தாலிய மக்கள் முன்னைவிட அதிகமாக ஏற்றுக்கொள்ளவுமில்லை. எல்லாவற்றையும்விட முன் கூறியபடி கொடுமையானவையும் அன்னியத் தன்மை காணப் பட்டவையுமான அரசாங்கங்களுக்கு விலக்காக ஓர் அரசு இருந்தது. சார்டீனியா மன்னரின் கீழிருந்த பீட்மான்டின் அரசாங்கம், மக்களின் ஆதரவைப் பெற்றிருந்தது. அதனுடன் தாராளப்போக்குடைய பிரதி நிதிகளடங்கியதுமான நிறுவனங்களைக் கைவிட வேண்டுமென்ற விருப்பம் அதிகமாயிருந்துங்கூட அவ்வாறு செய்யாமல் அதன் அரசாங்கம் அமைந்திருந்தது.

## விக்டர் இம்மானுவேலும் கவூரும்

மன்னரான விக்டர் இம்மானுவேல், மிகச் சிறந்தவர் என்ற புகழ் பெருவிட்டாலும், துணிவு மிகுந்தவராயும், நேர்மையான அரசியல் வாதியாயுமிருந்தார். அவருடைய அமைச்சரான புகழ் பெற்ற கவூர் என்பவர், அவருக்குச் சிறந்த பணியாற்றினர்; வாட்டர்லூச் சண்டைக்குப் பிறகு ஐரோப்பிய வரலாற்றில் மிகவும் விரும்பத்தக்கவரா யிருந்தார். அவர் பெரிதும் இத்தாலிய நாட்டுப் பற்றுடையவர். அவருடைய கொள்கைத் திறனிலும், இத்தாலியருடைய தன்மையைக் கொண்டிருந்தார்; இருந்தும், இங்கிலாந்தையும், அதன் அரசியற் சட்டத்தையும் நன்கறிந்திருந்தார்; ஆங்கிலேய முறையைப் பின்பற்றும் அரசியல் வல்லமை பொருந்தியவர் என்று வழங்கப்படுவதில் பெருமை கொண்டிருந்தார்; இத்தாலியச் சுதந்தர இயக்கத்திற்காகத் தமது உயிரைக் கொடுத்தார்; இந்நோக்கத்தைப் பின்பற்றுவதில் தமது புகழையும் தியாகம் செய்யத் தயாராயிருந்தார்.

## கவூரும் மூன்றும் நெப்போலியனும்

### பிரான்சின் உறுதி மொழிகள்

கவூர் இரு சத்திகளை அடிப்படையாகக் கொண்டவர். ஒன்று, இத்தாலியின் பற்று; மற்றொன்று, பீட்மான்டின் படை. இத்தாலியி லிருந்து ஆஸ்திரியர்களை விரட்டுவதற்கு இவ்விரண்டு மாத்திரம் போதா. எனவே, அவர் பயனுள்ள உதவியைப் பெறுவதற்காகப் பிரான்சை நோக்கினர். இத்தாலியின் சுதந்தர இயக்கத்தில் உண்மை யான இரக்கம் நெப்போலியனிடமிருந்தது. அதனுடன் பிரான்சின் அதிகாரத்தையும் தமது அரசியல் தந்திரத் திறமையையும் வெளிக் காட்டச் சிறந்த வாய்ப்பாகக் கொள்ள ஆவலுள்ளவராயிருந்தார். 1858 ஜூலையில் பிளாம்பியர்ஸில் கவூருடன் மறைவானதும் புகழ் பெற்றதுமான சந்திப்பைக் கொண்டார். அதன்படி சார்டினியா

மன்னருக்கும் ஆஸ்திரியாவிற்கும் போர் மூண்டால், விக்டர் இம்மானுவேலின் உதவிக்கு இரண்டு லட்சம் போர் வீரர்கள் கொண்ட படையை அனுப்பவதென்னும் கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது. இத்தாலியிலிருந்து ஆஸ்திரியாவை விரட்டுவதும், லம்பார்டி, வெனிஷியா, மத்திய இத்தாலியிலிருந்த கோமக நாடுகளைப் பீட்மான்டுடன் இணைத்துக்கொள்வதென்பதும் முடிவு செய்யப்பட்டன. சேவாய்க் குடும்பத்தாரின் தோற்றுவாய்க்கு மூலமாயிருந்த சேவாய், நைஸ் என்னுமிடங்களைப் பிரான்சு பரிசாகப் பெறுவதென்பதும் ஏற்பாடாயிற்று.

## கவூர் போரைத் தூண்டிவிடல்

இவ்வமயம் சண்டையைத் தூண்டுவது கவூரின் வேலையாயிற்று. இறுதியில், நெப்போலியன் சிறிது தயங்கினுர். ஆயினும், கவூர் அவருடைய ஒப்பந்தத்தைச் செய்யுமாறு வற்புறுத்தினுர்; ‘நான் முதலில் சுடுகிறேன்; இத்தாலியின் இரத்த வெள்ள பெருக்கெடுக்கும் போது நீ விரைந்து அணி வகுத்து நுழைய வேண்டும்,’ என்று கூறினுர். இத்தாலியினுடைய இராணுவ ஆயத்தங்கள், ஆஸ்திரியா அரசாங்கத்திற்குப் பெரிய அச்சத்தை விளைவித்தன. ‘பீட்மான்டின் படையைச் சமாதான காலத்திற்கு ஏற்பட்ட அளவுக்குக் குறைக்க வேண்டுமென்று ஆஸ்திரியா இறுதி எச்சரிக்கை செய்தது. மிகவும் பேரார்வத்துடன் எதிர்நோக்கியிருந்த போர் முழக்கத்தைக் கவூர் கேட்டார். பாராளுமன்றத்தில் அவர், பீட்மான்டின் இறுதியான பாராளுமன்றமாக இக்கூட்டம் இருக்கும்; அடுத்த கூட்டம் இத்தாலி இராச்சியத்தின் பாராளுமன்றக் கூட்டமாயிருக்கும்,’ என்று கூறினுர்.

## மாஜென்டா, சால்ஃபிரினேச் சண்டைகள்

மூன்ரும் நெப்போலியனின் நம்பிக்கைத் துரோகம்

மூன்ரும் நெப்போலியன் தம் சொல்லைக் காப்பாற்றினுர்; தாமே இத்தாலிக்குள் படையை அணி வகுத்துச் சென்ருர்; 1859 ஜூனில் கடும்போருக்குப்பின் மாஜென்டாச் சண்டையில் வெற்றி பெற்றதுடன் அம்மாத இறுதியில் ஆஸ்திரியர்களை மறுபடியும் சால்ஃபிரினே எனுமிடத்தில் தோற்கடித்தார். இச்சண்டை நெடுநேரம் வரை யாருக்கு வெற்றியை அளிக்குமோ என்ற ஐயமிருந்தது. இப்போரில் பன்னிரண்டாயிரம் பிரெஞ்சு வீரர் உயிரிழந்தனர். தமது முழு விருப்பத்தையும் அடைவதைக் கவூர் முழு ஆவலுடன் எதிர்நோக்கியிருந்தார். ஆனல், திடீரென்று மூன்ரும் நெப்போலியன் ஆஸ்திரியா மன்னரான பிரான்சிஸ் ஜோசப்புடன் பேச்சு வார்த்தை தொடங்கிச்

சமாதானம் செய்துகொண்டார். அவருடைய கருத்துக்கள் ஓரளவு நிலையற்றனவாயிருந்தன. அவர் சால்ஃபிரினோவில் ஏற்பட்ட படுகொலையை நன்கு கருத்தில் கொண்டவரானார்; அதனுடன் பிரெஞ்சு இராணுவத்தின் பெருவலிமையில் முழு நம்பிக்கை கொண்டவராயுமில்லை; அவர் எதிர்பார்த்தபடி எல்லாவற்றிலும் அவர் சொற்படி நடக்க இத்தாலியர்கள் முழு விருப்பமுடையவர்களாயில்லை என்பதையும் கண்டார். இவை எல்லாவற்றைக் காட்டிலும் ஜெர்மனியில் அச்சத்தை விளைவிக்கும்படி பிரஷ்யா அதன் படைகளைத் திரட்டிய நடவடிக்கைகளும் காரணமாயின. எனவே, சமாதானம் செய்துகொள்ளப்பட்டது. லம்பார்டியும், பார்மாவும், பீட்மான்டுடன் இணைக்கப்பட்டன. வெனிஸ் ஆஸ்திரியாவின் ஆட்சிக்குள் இருக்க வேண்டும். தவிர, போப்பாண்டவரின் தலைமையின்கீழ் இத்தாலிய நாடுகளின் சமஷ்டியை ஏற்படுத்துவதாக முடிவற்ற எண்ணங்கள் வெளியிடப்பட்டன. ஆஸ்திரியாவும் பிரான்சும் கொண்ட எண்ணங்களைத் தடைசெய்ய வழியில்லாதவராயிருந்தார். விக்டர் இம்மானுவேல் இத்தாலிக்கு நம்பிக்கைத் துரோகம் விளைவித்ததாகத் தோன்றியதாற் சினமுற்ற கவூர், பதவியைத் துறந்து, தனி வாழ்வை மேற்கொண்டார்.

## மத்திய இத்தாலி தேசிய இயக்கத்துடன் சேர்தல்

### சேவாயும், நைஸும் பிரான்சுக்கு அளிக்கப்படுதல்

கவூர் எளிதில் நம்பிக்கையை இழந்தார். இத்தாலியில் ஒற்றுமையையும் சுதந்தரத்தையும் அடைவதற்காகத் தனிவே இயங்கிய இயக்கம், மிக்க வலிமையுள்ளதாயும், பிரான்சு ஆஸ்திரியப் பேரரசர்களால் எளிதாக அடக்க இயலாததாயும் விளங்கியது. மத்திய இத்தாலியிலிருந்த கோமக நாடுகள்—பார்மா, மொடேனா, ரோமக்னாவுடன் சேர்ந்த டஸ்கனி என்பவை—போப்பாண்டவரின் அதிகாரத்தின் வடபகுதிகள்—அவற்றின் மன்னர்களை நாட்டை விட்டு விரட்டிவிட்டு ஒன்று சேர்ந்தன. அவற்றின் இயக்கம் முதலிற் குடியரசுத் தன்மையைக் கொண்டிருந்தது; எனவே, பீட்மான்டின் ஆதரவைப் பெறவில்லை. கலகம் செய்த நாடுகள், இருபத்தையாயிரம் வீரர்களைக் கொண்ட படையைத் திரட்டிய போதிலும், ஆஸ்திரியா போப்பாண்டவர் படைகளை எதிர்த்துத் தனித்து நிற்க முடியாதென்பது அவைகளுக்குத் தெளிவாயிற்று; எனவே, விக்டர் இம்மானுவேலிடம் பணிக்கமர்ந்தது. அவர் மறுப்பதாகப் பாசாங்கு செய்தார்; ஆனால், அமைச்சர் குழுவிற்குக் கவூரை மீண்டும் அழைத்தார்; பிரான்சின் உதவியிருந்தால்தான் இப்புதிய நோக்கம் வெற்றி பெற முடியும் என்பதை உடனே அறிந்துகொண்டவராய், மூன்றும் நெப்போலியனுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தினார்; பிளாம்பியர்ஸில் ஏற்கனவே

ஏற்றுக்கொண்டவாறு சேவாய், நைஸ் இரண்டையும் பிரான்சிற்கு அளிப்பதாகக் கூறினர். இவை யிரண்டும் நெப்போலியன் அவருடைய வாக்குறுதிகளை நிறைவேற்றுமற் போனதால் கொடுக்கப் படாமலிருந்தன. அதோடு பிரெஞ்சுப் பேரரசருக்கு மற்றொரு வாக்குறுதியும் சமாதானப்படுத்தும் வகையில் அளிக்கப்பட்டது. அஃதாவது, மத்திய இத்தாலியப் பகுதிகளில் பொது மக்களின் வாக்கெடுப்பு எடுக்கவேண்டுமென்பதும், மக்கள் அவர்கள் விருப்பத்தைத் தெளிவாக வாக்களிப்பது வாயிலாக அறிவித்தாலன்றி அப்பகுதிகளைப் பீட்மான்டுடன் இணைப்பதில்லையென்பதும் கூறப்பட்டன. பொதுமக்கள் வாக்கெடுப்பில் (பிளிபிசைட்டு) மிகு பெரும்பான்மையோர், (3,86,000 பேருக்கு எதிராக 15,000 பேர்) இணைப்பிற்கு ஆதரவளித்தனர்.

## முதல் இத்தாலியப் பாராளுமன்றம்

1860 ஏப்பிரலில் முதல் இத்தாலியப் பாராளுமன்றத்தை விக்டர் இம்மானுவேல் தொடங்கி வைத்தார். டூரின் எனும் நகரம் இத்தாலியின் முடிவு செய்யப்பட்ட தலைநகரமாக ஏற்படவில்லை யென்றாலும், பழைய வரலாறு ரோம் நகரை மனநிறைவான தலைநகராகக் கொண்டிருந்தது. எனினும், அந்நகரம் போப்பாண்டவரின் வசம் இப்போதிருந்தது.

## இனிச் செய்ய வேண்டுவது என்ன ?

இத்தாலியின் ஐக்கியத்தைக் குறித்துப் பெரிய நடவடிக்கை எடுக்கப்பட்டது என்றாலும், மேலும் செய்ய வேண்டுவன அதிகமாய் இருந்தன. போப்பின் நாடுகள் புரட்சிக் கருத்துக்களாற் கொதித்து எழுந்தன. ஆனல், போப்பு ஒன்பதாம் பயஸ் என்பவர், தாராளப் போக்கின் தொடக்கத்தில் அவர் அடைந்த ஏமாற்றங்களைக் கண்டு இத்தாலியினுடைய விடுதலை, அரசின் தனித்தன்மை இவைகளை எதிர்ப்பவரானர். தெற்கில் இரு சிசிலிகளின் இராச்சியங்களும் போர்போன் மன்னரான இரண்டாம் பிரான்ஸினுடைய கொடுங் கோன்மை வாய்ந்ததும் பிற்போக்கானதுமான ஆட்சியின்கீழ் இருந்தன. மக்கள் மூடநம்பிக்கைக் கொண்டவர்களாயும், அறிவற்றவர்களாயுமிருந்தார்கள். ஆனல், அங்கும் சுதந்தர மாறுதல் பற்றிய தெளிவற்ற கருத்துக்கள் மக்களின் மனத்தைக் கலக்கிக்கொண்டிருந்தன. ஏற்கனவே கலகம் விளைவிக்க முயற்சிகள் செய்யப்பட்டன. அம்முயற்சிகள் தோல்வியுற்றன.

## சிசிலியின்மீது கரிபால்டியின் படையெடுப்பு

இத்தாலியின் சுதந்தர வளர்ச்சியின் அடுத்த நிலை, கவூரைவிட, கரிபால்டியின் பெயரோடு தொடர்பு கொண்டிருந்தது. அவ்வியக்கத்தின் வீர வரலாற்றுத் தலைவராய் அவர் விளங்கினுர். கவூர் அவ்வியக்கத்தின் அரசியல் வல்லமை பொருந்தியவராய் இருந்தார். மாஜினி அவ்வியக்கத்தின் நற்செய்தியைப் பரப்புபவராய் இருந்தார். கரிபால்டி, 1859-ல் நடந்த சண்டையில், ஆல்ப்ஸ் மலையில் வேடர்கள் என்று வழங்கப்பட்ட அவருடைய படை வீரர்களின் தலைவராய்ப் புகழ் பெற்ருர். இப்பொழுது மிகப்பெரிய வீரச்செயல் புரிய வரலாற்றிலேயே மிக வியக்கத்தக்க முறையில் தயாரானுர். 1860ஆம் ஆண்டு மே மாதத்தில், 1072 தொண்டர்களுடனும் கவூரினுடைய உடன்பாட்டுடனும் ஜினேவாவை நோக்கிப் புறப்பட்டார். அத்தொண்டர் படையில் பலர் அவருடைய பழைய படைப்பகுதியிலிருந்து சேர்க்கப்பட்டிருந்தனர். அவர்களிற் பலர் தீவிர நாட்டுப் பற்றுடையவர். சிலர், சிறப்பான வீரச்செயல்கள் புரிவதில் நோக்கம் கொண்டிருந்தனர். 'சிவப்புச் சட்டைகள்' அவர்களுடைய சீருடைகளாய் இருந்தன. சிறிது காலத்திற்குள்ளாகவே ஐரோப்பா முழுவதிலும் தேசியச் சுதந்தரத்தின் அடையாளமாக அவர்கள் புகழ் அடைந்தார்கள்.

## சிசிலியையும் நேப்பிள்ஸையும் வெல்லுதல்

மர்சாலா எனுமிடத்தில் அவர் இறங்கினுர்; அப்பொழுதுள்ள நிலையில் துணிச்சலான செய்கைதான் பாதுகாப்பிற்கு ஒரே வழியென்று அறிந்துகொண்டு, பாலர்மோவை நோக்கி முன்னேறினுர். பகைவர்கள் துணிவுடனும் பொறுமையுடனும் போர் புரிந்திருப்பார்களானுல், கரிபால்டி தோற்றிருப்பார். ஆனுல், பாலர்மோ சரண் அடைந்தது. அத்தீவு முழுவதும் அவர் வசமாயிற்று. இது ஒரு பெரிய நிகழ்ச்சி. மேலும் பெரிய நிகழ்ச்சிகள் பல தொடரலாயின. நேப்பிள்ஸ் மக்களின் வெறுப்புணர்ச்சியை நம்பிக்கொண்டு 1860 ஆகஸ்டில் கரிபால்டி ஜலசந்தியைக் கடந்தார். முதலில் இரண்டாம் பிரான்ஸிஸ் அப்படையை எதிர்க்க எவ்வித முயற்சியும் செய்யவில்லை. நகைப்பையூட்டும் எளிய முறையில் கரிபால்டியும் அவரது தேசிய இயக்கத்தினரும், அவ்விராச்சியத்தின் தலைவர்கள் ஆனுர்கள்.

## கவூரும் கரிபால்டியும்

கரிபால்டியின் வெற்றிகரமான முன்னேற்றத்தை ஐயத்துடன் கவூர் நோக்கினுர்; நேப்பிள்ஸ் அரசாங்கம் கவிழ்ந்ததைக் கண்டு மகிழ்ச்சியுற்ருர்; ஆனுல், கரிபால்டி என்ன செய்வாரோ என்பதைப்

பற்றிச் சஞ்சலம் அடைந்தார். தீரச்செயல் புரிவதில் கருத்துள்ளவரும் அதிர்ச்சியை உண்டுபண்ணக்கூடிய மனப்பான்மை கொண்டவருமான கரிபால்டி, அடக்கமான இயல்போடு கூடிய கவூரைக் காட்டிலும் வேறுபாடு உடையவராய் இருந்தார். இத்தாலியின் வடபாகத்தைப் போல ஒரே அரசின்கீழ் நேப்பிள்ஸையும் சிசிலியையும் கொண்டு வருவதைக் கரிபால்டி மறுக்கக்கூடும் என்று எதிர்பார்த்தார்; தெற்கில் குடியரசு நிறுவப்படலாமென்றும் பயந்தார். சிவப்புச் சட்டையர்கள், அவர்கள் அறிவித்த நோக்கப்படி போப்பாண்டவரின் நாடுகளின்மீது படையெடுப்பார்களானால், அன்னிய நாடுகளின் சிக்கல்கள் ஏற்படு மென்றும் அஞ்சினர். எனவே, போப்பாண்டவரின் நாடுகளில் கரிபால்டி படையெடுப்பதற்கு முன்னரே தாமே முந்திக்கொள்ள வேண்டுமென்று கவூர் உறுதி கொண்டார்; மூன்றும் நெப்போலியனோடு செய்த ஒப்பந்தத்தின் மூலம் அயலார்கள் தலையீட்டிலிருந்து தமக்கு வலிமையைத் தேடிக் கொண்டார், பிறகு படையைத் திரட்டிக் கொண்டு போப்பாண்டவருக்குச் சொந்தமாயிருந்த நாடுகளின்மீது படையெடுத்தார்.

## போப்பு நாடுகளின்மீது வெற்றி

### மன்னருடன் கரிபால்டி சச்சரவிட்டுக்கொள்ளுதல்

போப்பாண்டவரின் அரசாங்கம் நன்றாயிருக்கவில்லை; குடி மக்களுடைய மதிப்பைப் பெற்றிருக்கவில்லை; எனினும், ஐரோப்பாவி லிருந்து எல்லா அரசுகளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. அதனுடன் கவூர் அவற்றைத் தாக்கியது அனைத்துலகவுரிமையை மிகக் கொடுமையான முறையில் மீறியதாயிருந்தது. போப்பாண்ட வரின்மீது விக்டர் இம்மானுவேலுக்கு எவ்வித வருத்தமும் இல்லை. ஆயினும், அவர் போப்பின் படையிலிருந்த இருபதினாயிரம் வீரர்களைப் பற்றிக் கவலை கொண்டவராய் அறிக்கை விட்டார்; அதனுடன் அப்படையைக் கலைப்பதற்கும் கோரினர். இதற்குப் போப்பாண்டவர் இணங்க மறுத்ததும், இத்தாலியப் படைகள் படையெடுத்துச் சென்று, போப்பாண்டவரின் படைகளைக் காஸல்பிடார்டோ எனுமிடத்தில் தோற்கடித்தன. வெற்றி கண்ட படைகள் நேப்பிள்ஸ் நகரை நோக்கி முன்னேறிச் சென்றன. இப்போது சரி நிகரான நிலைமையில் கவூர் கரிபால்டியைச் சந்திக்க முடிந்தது. தவிர, கவூர் அவரை நம்பாமலிருந்ததால் தவறு செய்தவரானர். தாம் பெற்ற வெற்றிகளை விக்டர் இம்மானுவேலிடம் கரிபால்டி ஒப்பித்தார். எனினும், விரைவிலேயே மன்னருக்கும் அவருடைய சிறந்த போர் வீரருக்கு மிடையே சச்சரவுகள் தோன்றலாயின. அவருடைய செஞ்சட்டைத் தொண்டர்களுடைய ஊழியங்கள் போதுமான அளவிற்கு ஏற்றுக் கொள்ளப்படாமலும் பரிசளிக்கப்படாமலும் இருந்ததாகக் கரிபால்டி

எண்ணினர். உள் நாட்டு, வெளி நாட்டு விவகாரங்கள் இரண்டிலும் கவூரின் கொள்கையிலிருந்து அவர் மாறுபட்ட கருத்துடையவரா யிருந்தார்; வெறுப்புற்ற நிலையில் (1860-ல்) மன்னருடைய பணியிலிருந்து விலகினர்.

## கவூரின் மரணம்

இத்தாலிய ஒற்றுமையை நிலைநாட்டுவதில் மிகப்பெரிய முன்னேற்றம் ஏற்பட்டது. போப்பாண்டவரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததும் ரோம் நகருடன் சேர்ந்திருந்ததுமான ஒரு சிறுபகுதி, இத்தாலியப் படைகளின் வசமாகாமல், பிரெஞ்சுப் படையின் பாதுகாப்புக்குட்பட்டிருந்தது. அதனுடன் வெனிஸ் நகரமும் அடிகே நதி வரையிலிருந்த நிலப்பகுதிகளும் இன்னும் ஆஸ்திரியாவின் வசமிருந்தன. அடுத்த பத்தாண்டுக் காலத்திற்குள்ளாக இவ்விரு பகுதிகளையும் இத்தாலி பெற்றது என்றாலும், நேப்பிள்ஸ், சிசிலி முதலியவைகளை வெற்றியின் மூலம் சேர்த்துகொண்டதுடன் இத்தாலிய ஒற்றுமைக்காக நடந்த போரின் வீரம்பொருந்திய காலம் முடிவுற்றது. 1861 ஜூனில் கவூர் மரணமடைந்தார்.

இப்புதிய அரசிற்குப் பொருளாதார அரசியல் சமயம்பற்றிய இன்னல்கள் பல ஏற்பட்டன. மிக எளிதாகக் கிடைத்த சுய ஆட்சியை ஏற்க மக்களிற் பெரும்பகுதியினர் ஆயத்தமாய் இல்லை.

## வெனிஸை அடைதல்

1866-ல் வெனிஷியா இத்தாலியுடன் இணைக்கப்பட்டது. இந்தப்பரிசைப்பெற இத்தாலியர்கள் சண்டையிட்ட போதிலும், அவர்களுடைய சண்டையால் இது பெறப்படவில்லை. இத்தாலியின் வரலாறு இங்கு ஜெர்மனியின் வரலாற்றுடன் நெருங்கிய தொடர்பு கொள்கிறது. இதைப்பற்றி அடுத்த அதிகாரத்தில் காண்போம். இங்குப் பிரஷ்யா 1866-ல் ஆஸ்திரியாவுடன் போரிடுவதற்காக நேச நாடுகளை நோக்கிக்கொண்டிருந்தது என்று கூறுவதே போதுமானது. வியன்னாவில் ஆஸ்திரியர்களை இத்தாலி தாக்குவதா யிருக்குமானால், ஜெர்மனியில் ஆஸ்திரியர்களுடைய முயற்சிகளைப் பலவீனமடையச் செய்து அவர்களுடைய கவனத்தைத் திருப்பவும் போதுமானதாகும். விக்டர் இம்மானுவேலுக்கு, இத்தாலிக்கு வெனிஸ் நகரைச் சரணடையச்செய்யும் நிபந்தனையற்ற சமாதானத்தையும் தாம் ஆஸ்திரியாவுடன் செய்துகொள்ளுவதில்லையென்று வாக்குறுதியளித்து, பிஸ்மார்க்கு இத்தாலி நாட்டைப் பெற்றார்.

## 1866-ல் போர்

**பிரஷ்யாவால் வெனிஸ் இத்தாலியுடன் சேர்க்கப்படுதல்**

1866 ஏப்பிரலில் போர் மூண்டது. பிரஷ்யா எவ்வாறு தன்னுடைய பகைவர்கள்மீது பேராதிக்கம் பெற்று, எவ்விதப் போட்டியுமின்றி ஜெர்மனியின் தலைமையாகத் தன்னை அமைத்துக்கொண்டதென்பதைப் பற்றி அடுத்த அதிகாரத்திற் காண்போம். இத்தாலியில் அந்நாட்டின் நேசநாடுகளின் நிலை வேறுவிதமாயிருந்தது. கவூரினுடைய நிலையை ஏற்றுக்கொள்ள இத்தாலியில் வேறெந்த அரசியல் வல்லமை பொருந்தியவருமில்லை. டைரோடில், முறையற்ற படைகளின் துணை கொண்டு எவ்வித வெற்றியையும் கரிபால்டி பெறவில்லை; திறமைமிக்க படைத்தலைவர்களும் இல்லை; ஒழுங்குமில்லை; படையெடுப்பைக் குறித்து முடிவான திட்டமுமில்லை. கஸ்டோசாவில் அவர்கள் முறியடிக்கப்பட்டார்கள். அதில் அவர்களுடைய இராணுவ மாண்பும் காப்பாற்றப்பட்டதாகச் சொல்லவியலாது. அவர்களுடைய கப்பற்படையும் மிக இழிவாகக் கருதப்பட்டு வந்த ஆஸ்திரியாவின் கப்பற்படையால் தோற்கடிக்கப்பட்டது. அன்னியர்களுடைய தலையீடில்லாமல் அப்போர் நிகழ்ந்திருக்குமானுல், இத்தாலியின் எதிர்கால நிலை மிக மோசமாயிருந்திருக்கும். ஆஸ்திரியாவின் பெரிய படையொன்றை இத்தாலியர்கள், இத்தாலியில் தங்கியிருக்கும்படி செய்ததுவாயிலாகப் பிரஷ்யாவுக்கு மதிப்பிட முடியாத உதவியைச் செய்தனர். இத்தாலியின் மாற்ற முடியாத பற்றுறுதியை, பிஸ்மார்க்குப் புகழ்ந்ததோடு, அவரும் அவருடைய வாக்குறுதிகளுக்கேற்ப உண்மையாய் நடந்தார். விரும்பியவற்றையெல்லாம் இத்தாலி பெறவில்லை. தெற்கு டைரோல் இன்னும் விடுதலையற்றதாய் இருந்தது. ஆனுல், வெனிசு அதன் விருப்பப்படி அமைய சுதந்தரம் பெற்றது. 60 வாக்களிப்புக்கு எதிராக 6,40,000 வாக்களிப்புக்கள் மூலம் இத்தாலிய இராச்சியத்துடன் ஒன்றுபட்டு இணைவதை அஃது அறிவித்தது.

## இத்தாலியும் ரோமும்

ரோம் நகரம் மாத்திரம் வெற்றி கொள்ளப்படாமலிருந்தது. வெனிசுப் பிரச்சினையைவிட ரோம் நகரப் பிரச்சினை சிக்கலுள்ளதாயிருந்தது. ஒன்பதாம் பயஸின்கீழ் ரோம் மிதவாதக் கொள்கைக்கு எதிராயிருந்த எதிர்ப்புச் சத்திகளுடன் மேன்மேலும் ஒன்று சேரலாயிற்று. 'நம் காலத்து முக்கியத் தவறுகளின் திட்டம்' என்னும் நூல் 1864 டிசம்பர்த் திங்களில் வெளியாயிற்று. அதில், 'முன்னேற்றம், அல்லது மிதவாதம், அல்லது நவீன அரசுடன் போப்பாண்டவர் இணங்க முடியும், அல்லது இணங்கவேண்டும்,' என்பது தவறென்று அறிவிக்கப்பட்டிருந்தது. போப்பாண்டவருக்குச் சொந்தமான பகுதி

களைப் பாதுகாப்பது பற்றி இத்தாலிய மன்னர், பிரான்சிற்கு வாக்குறுதி அளித்திருந்தார். எனவே, 1867 அக்டோபரில் ஒரு தொண்டர் படையுடன் ரோம் நகரத்து மக்களின் திடீர்க் கலகம் விளைவிப்பதாலுண்டாகும் உதவியை நம்பிக்கொண்டு, கரிபால்டி படையெடுத்தார். போப்பாண்டவரின் உதவிக்கு விரைந்து சென்ற பிரெஞ்சுப்படை அவரைத் தோற்கடித்தது. அதனுடன் ரோம் நகரைக் கைப்பற்றுவதற்கு, இத்தாலியைப் பிரெஞ்சுத் துரைத்தனம் ஒருபோதும் அனுமதிக்காதென அறிவித்தது.

## வாடிகன் மன்றம்

1870-ல் ஆல்ப்ஸ் மலைகளுக்குப்பாலுள்ள ஐரோப்பா, பிரான்சிற்கும் ஜெர்மனிக்கும் இடையே நிகழவிருந்த பெரிய போராட்டத்தில் ஈடுபட்டு முனைந்திருந்த போது, ரோமாபுரியில் கத்தோலிக்க உலகின் பிரதிநிதிகளடங்கிய திருச்சபை நடந்துகொண்டிருந்தது. போப்பாண்டவரின் சமயம் சாரா அதிகாரம் (லௌகிக அதிகாரம்) மறையும் நேரத்தில் பிரான்சிற்கும் ஜெர்மனிக்குமிடையே போர்ப் பேரறிவிப்புச் செய்த நாளன்றே போப்பாண்டவரின் பிழைபடாமையாணை பயபத்தியுடன் பேரறிவிப்புச் செய்யப்பட்டது. அஃதாவது, 'அரியணையில் அமராது, சமயம் அல்லது நீதி முறைபற்றிய கொள்கை குறித்துப் போப்பாண்டவர் கூறுவதை எல்லாத் திருச்சபைகளும் பின்பற்ற வேண்டியதாகும்' என்பதாம்.

## ரோம் நகரைக் கைப்பற்றுதல்

பிரான்சில் நிகழ்ந்த விபத்துக்கள் காரணமாக, பிரெஞ்சுப் படை பின்வாங்க நேர்ந்தது. எனவே, போப்பாண்டவரின் பகுதிகளை மதித்து நடக்க வேண்டியதை அவர்கள் அளித்த வாக்குறுதி கட்டுப்படுத்தாது என இத்தாலி அறிவித்தது. இத்தாலியப் படை எல்லையைக் கடந்து, 1870 செப்டம்பர் மாதம் 20ஆம் தேதி ரோமைக் கைப்பற்றியது. தங்கள் வருங்காலத்தை முடிவு செய்யும் முறையில் மக்கள் வாக்களிக்குமாறு கோரப்பட்ட போது 1500 வாக்குகளுக்கு எதிராக 1,33,000 வாக்குகளையளித்து இத்தாலி இராச்சியத்துடன் இணைவதாகத் தீர்மானித்தனர். படையெடுத்தவர்கள்மீது சாதி விலக்குத் தண்டனையை விதிப்பதில் பயனற்ற முறையில் போப்பாண்டவர் முயன்றார்; சமாதானத்திற்கான பேச்சுவார்த்தைகளையும் பயனில்லாதவாறு ஒதுக்கித் தள்ளினர். இத்தாலியின் தலைநகர் ரோமுக்கு மாற்றப்பட்டது. இத்தாலியின் நாட்டுப்பற்றுக் கொண்டவர்களான தாந்தேயிலிருந்து மாஜினி வரையிலுள்ள எல்லோருடைய

தலைநகர் பற்றிய கனவு உண்மையாயிற்று. அந்நியத் தளையிலிருந்து விடுபட்டு இத்தாலி, ஓரரசின்கீழ் ஒன்றுபட்டு, அதனுடைய வருங்கால நிலையை முடிவு செய்வதில் முழு அதிகாரம் அடைந்தது.

ஃபைப் என்பார் எழுதியுள்ள 'நவீன ஐரோப்பா'வும், ஆலிசன் பிலிப்பு என்பார் எழுதியுள்ள 'நவீன ஐரோப்பா'வும் இச்சம்பவங்களைப் பற்றிய மிகச் சிறந்த வரலாறுகளாகும். மேலும், அதிக விரிவாக அறிய ஸ்டில்மன் என்பார் எழுதியுள்ள 'இத்தாலியின் ஐக்கியம்', போல்டன்கிங் என்பார் எழுதியுள்ள 'இததாலிய ஐக்கியத்தின் வரலாறு', சிகரஸ்கோ சிமாட்டியார் எழுதியுள்ள 'கவூரின் வாழ்க்கை வரலாறு' பேரியட்டு எழுதியுள்ள, 'நவீன இத்தாலியை உருவாக்கியவர்கள்' என்னும் நூலையும் நோக்கலாம். பிரான்சின் பக்கததிலிருந்து கூறப்படும் முழு வரலாறும், பிர்டிலா கோர்ஸ் என்பார் எழுதியுள்ள 'இரண்டாம் பேரரசின் வரலாறு' என்ற நூலிலும் மிகச் றபபாகக் கூறப்பட்டுள்ளது. முழு வரலாறும் ஜி. எம் டிரவிலியன் என்பார் எழுதியுள்ள மூன்று தொகுப்புக்களிலும் கூறப்பட்டுள்ளது. அம்மூன்று தொகுப்புக்கள், 'கரிபால்டியின் ரோமக் குடியரசு பாதுகாக்கப்படுதல்', 'கரிபால்டியும் ஆயிரம் வீரர்களும்,' 'கரிபால்டியும் இத்தாலி உருவாக்கப்படுதலும்' என்பனவாம்.

# 19. ஜெர்மனியின் இணைப்பும் ஜெர்மன் பேரரசிற்குக் கால் கோலுதலும்

## ஜெர்மனியின் ஒற்றுமை குறித்து முன்னேற்றமின்மை

1848-ல் நடந்த புரட்சிகள் ஜெர்மனியில் ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கு ஒன்றும் செய்யவில்லை. பிரஷ்யா மன்னரான நான்காம் ஃபிரெடரிக்கின் முனைப்பான சொற்கள் புகைந்து போயின. எல்லா ஜெர்மன் நாடுகளுக்கும் சேர்த்து, தேசிய அரசாங்கத்தை ஏற்படுத்தப் பிரஷ்யாவின் முயற்சியானது, ஃபிராங்ஃபர்ட்டில் பாராளுமன்றத்தை ஏற்படுத்தத் தோன்றிய இயக்கம் போன்று, பேரிழப்பாகத் தோல்வியுற்றது. ஆயினும், புரட்சியாண்டிற் காணப்பட்ட உயர்ந்த அவாக்களும், உயர்தரமான போராட்டங்களும் ஏமாற்றங்களையழித்து நடைமுறைக்கான நடவடிக்கைகளை எடுக்க வழிசெய்தன. அதனுடன் ஆல்முட்சுப் போரில் பெற்ற மானக்குறைவு ஜெர்மனியின் தலைமைப் பதவிக்கு ஆஸ்திரியாவுடன் போட்டியிட்டு பிரஷ்யா வெற்றி பெற வேண்டுமானால், மாற்றுக்கொள்கையும் மாற்றுத் தயாரிப்புக்களும் அதற்கு மிகத் தேவையானவையென்பதை அதன் மனத்திற் பதிய வைத்தது.

## பிரஷ்யா மன்னர் முதலாம் வில்லியம்

1857-ல் மனநோய் காரணமாக நான்காம் ஃபிரெடரிக்கு வில்லியம் பதவி துறக்க வேண்டியதாயிற்று. 1861 வரை இளவரசரான வில்லியம், மன்னரின் பேராட்சியாளராய் ஆட்சி புரிந்து, பின்பு முதலாம் வில்லியம் என அரியணை ஏறினர். 1848-ல் தாராளமான கொள்கைகளைக் கடுமையாக எதிர்த்தவர் என்ற பெயர் அவருக்

கிருந்தது. பெர்லினில் அக்கருத்துக்கள் ஒரு சிலகாலம் வெற்றி பெற்றபோது அவர் இங்கிலாந்திற்குச் சென்ருர்; ஆங்கிலேய நாட்டு அரசியல் சட்டக் கருத்துக்களும் அவருக்குக் கவர்ச்சியை உண்டுபண்ண வில்லை. தொடக்கத்திலிருந்தே அவர் சிறந்த போர் வீரராயிருந்த துடன் உச்சநிலையில் மன்னருடைய தனிச்சிறப்புரிமைகளையும் ஆதரித்தார். அவர், 'புதிய நிறுவனங்களால் ஆதரிக்கப்பட்ட அரியணையில் முதன்முதலில் ஏறியவன் நானே எனினும், இறைவனிட மிருந்துதான் இம்முடியை நான் பெற்றேன் என்பதை நான் மறக்க வில்லை,' எனக் கூறினர். அவருடைய ஆட்சி முழுவதிலும் மன்னர் களின் தெய்விக உரிமைக்கும், நவீன நிறுவனங்களுக்குமிடையே நடந்த சச்சரவுகள் நிரம்பியிருந்தன. இறுதியில் மன்னர்களின் தெய்விக உரிமைக்கொள்கை வெற்றி பெற்றது.

## பிரஷ்யா நாட்டு சால்வரின்

பிரஷ்யாவின் தலைமையில் ஜெர்மனியின் ஒற்றுமைக்குப் பொருளாதார இராணுவ அமைப்பு முறைகளால் வழி செய்யப்பட்டது. 1815க்குப் பிறகு பிரஷ்யாவின் இராச்சியம் பல பகுதிகளாகப் பிரிக்கப் பட்டு மிகவும் நீண்ட எல்லையையுடையதாயும் உள்நாட்டுச் சுங்க எல்லைக் கோடுகளைக் கொண்டதாயும் அமைக்கப்பட்டது. கள்ளக் கடத்தலுக்குத் தூண்டுகோலாயிருந்ததைக் குறைக்க எல்லைப் புறங் களில் விதிக்கப்படும் வரிகளைக் குறைத்து அதே தருணத்தில் பிரஷ்யா நிலப்பகுதிகள் வழியாகச் செல்லும் எல்லாச் சரக்குகள்மீதும் கடுமை யான இடப்பெயர்வு வரிகளை விதிப்பது வாயிலாக அதன் சொந்த ஆட்சிக்குட்பட்டிருந்த நிலப்பகுதிக்குள் தடையில்லா வாணிகத்தை ஏற்படுத்துவதில் பிரஷ்யாவின் முயற்சி முதலாவதாகக் காணப்பட்டது. இது புகழ் பெற்ற சால்வரின்களுடைய முதற் செய்கையாகும். (சால்வரின்—வெளியார்களுக்கு எதிராக, உள் நாட்டில் தடையில்லா வியாபாரத்தை ஏற்படுத்தப் பொதுவான சுங்கவரிகளைக் கொண்ட நாடுகளின் கூட்டு இணைப்பு முதலியன.)

## ஜெர்மனியின் வாணிக ஒற்றுமை

இந்த ஏற்பாடுகள் பிரஷ்யாவிற்குப் பெருந்துணையாய் இருந்தன. இவை ஜெர்மனியின் மற்றப் பகுதிகளுக்குக் கடுமையான இடர்ப் பாடாய் இருந்தன. இதன் விளைவாக மற்றச் சுங்கக் கூட்டுகள் அமைக்கப்பட்டன. பவேரியா, உட்டன்பர்கு என்பவைகளைச் சேர்ந்த தென்ஜெர்மனிக்கூட்டு, மிகவும் முக்கியமாயிருந்த ஹானேவர் சேர்ந்த மத்திய ஜெர்மனிக்கூட்டு, ஆகிய இம்மூன்று கூட்டுகளுக்குமிடையே சிறிது காலம்வரை கடுமையான அழுக்காறு காணப்பட்டது. ஆனல்

ஜெர்மனி முழுமைக்கும் தடையில்லா வாணிகத்தின் துணைப்பேறுகள் சிறந்தனவாயும் தெளிவாயுமிருந்தன. 1834-ல் தெற்கு ஜெர்மனிக் கூட்டின் பெரும்பகுதி பிரஷ்யாவுடன் சேர்ந்துகொண்டது. 1854-ல் ஹானேவரும் சேர்ந்துகொண்டது. இவ்வாறு அரசியல் நடைமுறையில் ஜெர்மனியின் அரசியல் ஒற்றுமை ஏற்படுவதற்கு நெடுநாளைக்கு முன்னதாகவே ஜெர்மனி முழுவதும் வாணிக ஒற்றுமையை நிறைவேற்றியது. ஆஸ்திரியா இதிலிருந்து விலக்கப்பட்டிருந்தது.

## பிரஷ்யாவின் இராணுவப் புனரமைப்பு

பிரஷ்யர்களின் இராணுவப் புனரமைப்பும் முக்கியமானதாயிருந்தது. இது முதலில் ஐரோப்பாவின் கவனத்தைக் கவரவில்லை. 1806 க்குப் பின் ஜெர்மனியில் நெப்போலியனுடைய அதிகாரத்தைத் தோற்கடிக்க முயன்றவர்களான சீர்திருத்தக்காரர்களுடைய கருத்துக்கள் அனைத்தையும் கைவரப் பெறும் முயற்சிகள் இப்புனரமைப்பிற் காணப்பட்டன. முதலாம் வில்லியத்தின் போரமைச்சர் 'ரூன்' என்பவர் ஆவர். பிரஷ்யா ஐரோப்பாவில் மிக வலிமை பொருந்திய நாடாய் எழுச்சியுற நடவடிக்கைகள் எடுத்துக்கொண்ட மோல்ட்கே, பிஸ்மார்க்கு ஆகியவருடன் இவரும் பங்குகொள்பவராவர். மூன்றாண்டுகட்கு அனைவருக்கும் கட்டாய இராணுவப் பணிபுரிதல் என்பது நிறைவேற்றப்பட்டது. அதனுடன் மேற்கொண்டு மூலதனப்படையில் (லாண்டுவேர்) நான்காண்டுகள் பணி புரியவேண்டுமென்பதும் கடமையாக்கப்பட்டது. அதே நேரத்தில் புதிய போர்க்கருவிகள் (குறிப்பாக ஊசித்துப்பாக்கி) மேற்கொள்ளப்பட்டதுடன், உடற்பயிற்சியும் நுண்ணிய முறைகளும் கவனமாகக் கற்றுக்கொள்ளப்பட்டன.

## மக்கள் சபைக்கும் மன்னருக்கும் போராட்டம்

பிரஷ்யா மன்னர் தம் நோக்கங்களை நிறைவேற்றுவதில் உடனே மக்கள் பிரதிநிதிகள் சபையோடு உணர்ச்சி மிகுந்த சச்சரவை எதிர்நோக்க வேண்டியதாயிற்று. முன்னேற்றக்கட்சி 1861-ல் பெரும்பான்மையாயிருந்த பொழுது மன்னரின் அமைச்சர்கள் மக்கள் சபைக்கு ஆங்கிலேய முறைப்படி பொறுப்புள்ளவர்களாயிருக்கவேண்டுமென்றும், மேற்சபையைச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்றும், கட்டாய இராணுவப் பணியை இரண்டு ஆண்டுக்காலமாக வரையறுக்க வேண்டுமென்றும் கோரினர். மன்னர் இவற்றுக்கு இணங்க மறுக்கவே அசெம்பிளி 1862 செப்டெம்பர்த் திங்களில் இராணுவச் செலவிற்குப் பொருள் தர வாக்களிக்க மறுத்தது. மன்னர் பணிந்து போக வேண்டியது போலத் தோன்றியது. முடி துறப்பதைப் பற்றியும்

மன்னர் எண்ணினர்; ஆனால், இத்தருணத்தில் தம் முதலமைச்சராக பிஸ்மார்க்கை நியமித்து, அது வாயிலாக ஜெர்மனியின் வரலாற்றில் சார்லமேனுக்குப் பிறகு மிக்க சிறப்பு வாய்ந்த புதியதோர் நிலையைத் தோற்றுவித்தார்.

## பிஸ்மார்க்கு

பிஸ்மார்க்கு, வடஜெர்மனியில் நிலப்பிரபு குடும்பத்தில் தோன்றியவர்; புரட்சிக் காலத்தில் பிரஷ்ய மக்கள் சபையில் உறுப்பினராயிருந்தவர்; பிரஷ்யாவை ஜெர்மனிக்கு உட்படுத்துவது வாயிலாக அமைக்கப்படும் எவ்வித ஜெர்மனியின் ஒற்றுமைப்படுத்துதலுக்கும் பகைவராயிருந்தார்; 'நாங்கள் பிரஷ்யர்கள்; பிரஷ்யர்களாகவே இருப்போம்,' என்று கூறினர்; ஏற்கனவே அரசியல் தந்திரத் தூதுகளில் பணிபுரியும் வேலையிலீடுபடுத்தப்பட்டிருந்தார்; மனவுறுதியுடன் ஆஸ்திரியாவிற்கு எதிராகப் பிரஷ்யாவின் உரிமைகளை ஆதரித்துப் பேசினர்; மன்னருடைய வேண்டுகோளுக்கிணங்கிப் புதிய பதவியை ஏற்ற பொழுது, 'நான் ஒருபோதும் விட்டுக்கொடுக்க மாட்டேன்!' என உறுதி கூறினர். பிரஷ்யாவின் ஆட்சி முறை (இங்கிலாந்தைப் போல) மக்கள் பிரதிநிதிகள் சபையைச் சார்ந்திருக்கவில்லை; மன்னரையே முழுவதும் சார்ந்திருந்தது. பிஸ்மார்க்கு வாக்களித்தலிலோ, சொற்போரிலோ நம்பிக்கையில்லை. 'இக்கொள்கைகள் மூலம் ஏற்படும் முடிவு பாராளுமன்றத்தின் விவாதத்தாலும் பெரும்பான்மையான வாக்களிப்பாலும் ஏற்படாது. உடனடியாகவோ அல்லது சிறிது காலம் சென்றோ, போரை இயக்கும் கடவுள் இரும்புப் பகடையை எறிவதன் மூலம் ஏற்படும்,' என ஒருபோது கூறினர்.

## மன்னரும் மக்களும்

ஆங்கிலேயச் செயல் அறிவுப்படி பிஸ்மார்க்குப் பயனற்ற போராட்டத்தில் ஈடுபட்டிருந்தார். ஆங்கிலேய மன்னரான முதலாம் சார்லசையும் அவர் அமைச்சரான வென்ட்வொர்த்தையும் போலவும், பதினாறாம் லூயியும் அவர் அமைச்சர்களும் முப்பேராயம் அல்லது சட்ட சபையைப் போலவும், முதலாம் வில்லியமும் பிஸ்மார்க்கும் மக்கள் பிரதிநிதிகளை எதிர்நோக்கினர்கள். ஆனால், முதலாம் சார்லசு, அல்லது பதினாறாம் லூயிக்கு வரலாற்றில் ஏற்பட்ட நிலை முதலாம் வில்லியத்திற்கு ஏற்படவில்லை. அவரது ஆட்சி, பாராளுமன்றத்தின் எதிர்ப்பின்மீது முடியாட்சி பெற்ற மிகச்சிறந்த வெற்றிகளைக் காட்டுவதாயிற்று. இம்மாறான முடிவிற்குப் பிரஷ்யாவின் சிறப்பான வரலாறும் அந்நாட்டின் சூழ்நிலையும், பிரஷ்யாவினுடைய மன்னர் அமைச்சர் இவர்களுடைய வலிமை வாய்ந்த ஆளுகையும் காரணங்களாகும்.

ஆனல், போரிலும், வெளிநாட்டு விவகாரங்களிலும் கிடைத்த வெற்றியே வில்லியத்தையும் பிஸ்மார்க்கையும் முக்கியமாகக் காப்பாற்றியது. இவ்விரண்டு துறைகளிலும் பெற்ற தோல்வியே இங்கிலாந்திலும் பிரான்சிலும் முடியாட்சியின் அழிவை உண்டு பண்ணியது.

## பிஸ்மார்க்குக்கும் சட்ட சபைக்கும் போராட்டங்கள்

ரஷ்ய ஆட்சிக்கு எதிராகப் போலந்து மக்கள் திடீரென்று கலகம் செய்தது பற்றி மக்கள் சபையுடன் பிஸ்மார்க்குச் சண்டையிடலானர். முன்னேற்றக் கட்சியினர் போலந்தியர்களிடம் பரிவு காட்டினர்; ஆனல், கலகத்தை அடக்குவதில் ரஷ்யர்களுடன் பிஸ்மார்க்கு ஒத்துழைத்தார். ஜெர்மனிக்குப் புதிய அரசியல் திட்டத்தைக் கொணர்ந்த புது ஏற்பாட்டை எண்ணிப்பார்க்கவும் மறுத்தது வாயிலாக ஆஸ்திரியாவின்மீது அவருக்கிருந்த கடுமையான எதிர்ப்பைக் காட்டினர். எல்லாவற்றையும்விட மிக முக்கியமான பிரச்சினை, ஷீல்ஸ்விக்கு—ஹோல்ஸ்டைன் பகுதியின் வருங்காலத்தைப் பற்றி அவர் நடவடிக்கை எடுக்கவேண்டுவது பற்றியதாயிருந்தது. ஐரோப்பாவின் அரசாங்கங்களின் கவனத்தையீர்த்த பல அரசியல் தந்திரப் பிரச்சினைகளில் இந்நிலப்பகுதி பற்றிய விவரங்கள் மிகவும் தெளிவற்றனவாயிருந்தன. ஆனல், இப்பிரச்சினையை முடிவு செய்தது வாயிலாக, பிஸ்மார்க்கு வெற்றியின் உச்சியை அடைந்தார்.

## ஷீல்ஸ்விக்கு ஹோல்ஸ்டைன் பிரச்சினை

டென்மார்க்கு மன்னரான மூன்ரும் ஃபிரெடரிக்கு ஷீல்ஸ்விக்கு—ஹோல்ஸ்டைன் பகுதிகளின் கோமகனுராயுமிருந்தார். எனினும் இராச்சியத்திற்கும் இக்கோமகனுரின் பகுதிகட்கும் இடையே அரசியற் சட்ட அடிப்படையில் எவ்வித ஒற்றுமையுமில்லாதிருந்தது. மூன்ரும் பிரெடரிக்கிற்கு வாரிசு இல்லாதிருந்ததால், அவர் மரணத்திற்குப் பின் கோமகனுர் பகுதிகளின் வருங்கால அமைப்புக் கடும் பிரச்சினையைத் தோற்றுவிப்பதாயிருந்தது. ஷீல்ஸ்விக்கிலும், ஹோல்ஸ்டைனிலும் பெண்டிர் பட்டமேற்க முடியாது. அதனுடன் வாரிசுரிமையும் பெண் வழியில் ஏற்பட முடியாததாயிருந்தது. டென்மார்க்கில் 'சாலிக் சட்டம், வழக்கத்திலில்லை. இப்பிரச்சினையின் முடிவு, சட்ட உரிமைப்படி நோக்கினுலும், தெளிவில்லாதிருந்தது. ஆனல், பிஸ்மார்க்கு, 'போர்க் கடவுள் இரும்புப் பகடையை உருட்டுவதன் மூலம்' இப்பிரச்சினைக்குத் தீர்வு காண உறுதி பூண்டார்.

## கோமகர் நாடுகளின் வருங்காலம்

'கோமகர் நாடுகளை டென்மார்க்குடன் நிலையாக இணைத்துவிடுவதா, அவற்றை டென்மார்க்கிலிருந்து பிரித்து ஜெர்மனியுடன் இணைப்பதா, அல்லது ஷீல்ஸ்விக்கை டென்மார்க்குடனும் சேர்த்து ஹோல்ஸ்டைனை ஜெர்மனியுடன் வைத்துக்கொள்ளுவதா?' என்னும் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில், ஜெர்மனியிலும் வெளிநாடுகளிலும் ஆதரவு ஏற்பட்டது. படிப்படியாக, பிஸ்மார்க்கு ஒரு திட்டத்தை உருவாக்கினார். அதன்படி கோமகர் நாடுகள் ஜெர்மனியுடனோ அல்லது டென்மார்க்குடனோ இணைக்கப்படாமல், பிரஷ்யாவுடன் இணைக்கப்படுவதாய் இருந்தது.

## டென்மார்க்குடன் இணைக்கப்படுதல்

### போர்

டென்மார்க்கின் மன்னர் அவர் இறப்பதற்கு முன் ஷீல்ஸ்விக்கு, ஹோல்ஸ்டைன் பகுதிகளைத் தனித்தனியாக நடத்தும் முறை பற்றிய ஆணை பிறப்பித்ததுடன், ஷீல்ஸ்விக்கை அநேகமாக டென்மார்க்குடன் இணைத்தார். (1863) ஃபிராங்பர்ட்டிலிருந்த 'டயட்' சபை இவ்வாணைக்கு எதிராகத் தன் மறுப்பை அறிவித்தது. 'டயட்' சபை செயல் புரிந்துகொண்டிருந்தது. எனினும், பிரஷ்யா, ஆஸ்திரியா இவற்றின் டயட்களுடன் ஒப்பிடும்போது இச்சபையின் அதிகாரம் மிகக் குறைவாயிருந்தது. இதன் முடிவுகாணும்வரை கோமகர் நாடுகளை ஜெர்மன் படை கைப்பற்றவேண்டுமென்று அறிவித்ததுடன், இவ்விரு கோமகர் நாடுகளும் வலுவான பதவியுரிமை பெற்றிருந்த அகஸ்டன்பர்க்கு கோமஹரான ஜெர்மானியரைச் சேரவேண்டுமென்றும் விரும்பியது. ஹோல்ஸ்டைன் கோமகர் நாடு கைப்பற்றப்பட்டது. ஆனால், ஆஸ்திரியாவும் பிரஷ்யாவும் 'டயட்' சபையின் முடிவின்படி விட்டுவிடுவதற்குச் சற்றும் விரும்பவில்லை; ஜெர்மனியின் பெயரால் தாங்கள் செயல் புரிவதென்றும், வன்முறை மூலம் கோமக நாடுகள் அனைத்தையும் கைப்பற்றுவதென்றும் முடிவு செய்தன. இதையெதிர்த்து டென்மார்க்கு மன்னர் ஐரோப்பிய அரசுகட்குப் பயனில்லாது முறையிட்டார். எங்கும் அவருக்கு இரக்கம் காட்டப்பட்டதே தவிர, உதவியளிக்க ஒருவரும் ஆயத்தமாயில்லை. எனினும், போர் புரியாது பின் வாங்குவதில்லையென அவர் உறுதிகொண்டார். ஆனால், ஒன்று சேர்ந்த பிரஷ்யா ஆஸ்திரியாப்படைகளை எதிர்த்து டேனிஷ் படைகள் ஒன்றும் செய்ய முடியாமலிருந்தன. அவர்கள் வசமிருந்த இச்சிற்றரசு திக்கற்றதாயிருந்தது.

### கோமகர்நாடுகளை ஆஸ்திரியாவும் பிரஷ்யாவும் கைப்பற்றுதல்

இவ்விருபேரரசுகள் பெற்ற வெற்றியினால், கோமக நாடுகளின் எதிர்காலம் மிகத் தெளிவாக்கப்படவில்லை. பிஸ்மார்க்கின் எண்ணம் உறுதியாயிருந்தது. அகஸ்டன்பர்கு கோமகனுருக்கு இக்கோமக நாடுகளை யளித்ததற்காக டென்மார்க்கு மன்னரை அவர் வெளியேற்ற வில்லை. சாக்குப் போக்குடனோ, அன்றி இல்லாமலோ, அவை பிரஷ்யாவிற்குக் கிடைக்கவேண்டுமென்பது அவர் முடிவாயிருந்தது. ஆனால், ஆஸ்திரியா அகஸ்டன்பர்கு கோமகனுரின் உரிமைகளுக்கு ஆதரவாயிருந்தது. இம்முடிவிற்கு 'டயட்' சபையின் முக்கியவுறுப் பினரும் ஆதரவாயிருந்தனர். விட்டுக்கொடுப்பது வாயிலாக ஒப்பந்தம் செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டனவென்றாலும், அவை வெற்றி அளிக்கவில்லை. சமாதானத்திற்கு வழி காண்பதைப் பிரஷ்யா மன்னர் வரவேற்றிருப்பார். ஆனால், பிஸ்மார்க்குப் போர் செய்வதில் உறுதி பூண்டார். இப்பிரச்சினையை 'டயட்' சபைக்கு முன் கொணர்ந்த ஆஸ்திரியாவின் செயலை மறுத்துப் போர் மூளுவதாயிற்று.

### பிரஷ்யாவுக்கும் ஆஸ்திரியாவிற்கும் இடையே போர்

சட்டவுரிமை போன்ற தனித்துறைப் பிரச்சினைகள் எல்லாம் இப் போது புறக்கணிக்கப்பட்டன. கோமகர் நாடுகளுக்காகமட்டும் போர் நடக்கவில்லை. ஆஸ்திரியாவின் மீதும் மற்ற ஜெர்மன் பகுதிகளின் மீதும் ஜெர்மனியில் ஆதிக்கம் பெறுவதற்காகப் பிரஷ்யா சண்டை செய்ய வேண்டியதாயிற்று. நாம் முன்னதிகாரத்தில் அறிந்தவாறு, பிஸ்மார்க்கு இப்போரில் இத்தாலியின் சிறந்த உதவியைப்பெற்றார். இவ்வுதவி ஆல்ப்ஸ் மலைகளுக்குத் தெற்கில் ஆஸ்திரியப்படைகளைத் தங்கி இருக்கும்படி செய்வது வாயிலாக ஏற்பட்டது. ஜெர்மனியில் பிரஷ்யாவிற்கு நேசமாக ஒரு நாடும் இல்லை. ஆஸ்திரியா, பவேரியா, சாக்ஸனி, ஹானோவர் நாடுகளையும், சிறிய ஜெர்மானியச் சிற்றரசு களையும் பிரஷ்யா எதிர்த்து நிற்கவேண்டியதாயிற்று.

இவ்வாறு தொடர்ந்த போர் ஐரோப்பாவிற்கு, அதன் நடுவில் புதிதாக எழுச்சிபெற்றுள்ள அரசைப்பற்றி முன்னறிவிப்பதாய் அமைந்தது. நவீனப்போர் முறைகளைக் கையாண்ட போர்களில் இப் போர் முதலாவதாயிருந்தது. மோல்ட்கே, இப்போரைப் பெர்லினி லிருந்து தந்திமூலம் இயக்கினார்; முடிவான தாக்குதல் செய்ய வேண்டி யிருந்தபொழுதுமட்டும் போரின் முன்னணிக்குச் சென்றார். இருப்புப் பாதைகள் படைகளைக்கொண்டு செல்லுவதற்குப் பெரும்பாலும் பயன் படுத்தப்பட்டன. இப்போர் முறைகளுடன் கிரிமியாப்போர் முறைகளை ஒப்பிடும்போது அம்முறைகள் பழைய காலத்தைச் சார்ந்தவைகளாகத் தோன்றின.

## 1866இல் போர்

பிரஷ்யா விரைவில் முழு வெற்றியடைந்தது. ஹானேவிரியன் படை, பவேரியா ஆஸ்திரியப்படைகளுடன் முயன்றபோது ஜூன் மாதத்தில் லாங்கன் ஸால்ஸா எனுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டது. ஜூலை மாதத்தில் பொஹீமியாவிலுள்ள கோனிக்கிராட்ஸ் என்னுமிடத்தில் முடிவான சண்டை நிகழ்ந்தது. வெற்றி யாருக்குக் கிடைக்குமென்பது சில சமயம் தெளிவில்லாதிருந்தது. ஆனால், பிரெடரிக்கு இளவரசர் போர்க்களத்தை வந்தடைந்ததும், வெற்றி பிரஷ்யாவின் பக்கம் உறுதியாயிற்று. அதனுடன் போரும் முடிவுற்றது. போர்களில் மிகவும் குறைந்த கால அளவில் நிகழ்ந்தது இப்போர். எனினும், இன்றியமையாமை வாய்ந்த பிரச்சினைகளுக்கு இப்போர் முடிவு கண்டதுபோல, வேறெப் போரும் முடிவு காணவில்லை.

## போருக்குப்பின் ஒப்பந்தம்

### தெற்கு நாடுகள்

போர் நடந்தபோது, மோல்ட்கேயின் இராணுவத்திறன் எவ்வாறு சிறப்புற்றிருந்ததோ, அவ்வாறே, போருக்குப்பின் பிஸ்மார்க்கின் அரசியல் வல்லமை சிறந்து விளங்கியதுடன், பிரஷ்யா பெற்ற அடுத்த பெருவெற்றிக்கும் வழிகோலியது. ஜெர்மனியின் எல்லா அலுவல்களிலும் ஆஸ்திரியா விலக்கப்பட்டது. பிரஷ்யாவை எதிர்த்த வடபாகத்திலிருந்த சிற்றரசுகள் ஷீல்ஸ்விக்கு, ஹால்ஸ்டைன், ஹானேவர், ஹெஸ்ஸே-காஸல் முதலியன பிரஷ்யாவுடன் வலுத்தாக்குதல் வாயிலாக ஒன்றுக இணைக்கப்பட்டன. இதன் பயனுக, பிரஷ்யாவின் இராச்சியம் ஜெர்மனியின் வடபகுதியில் வேற்றரசு எல்லையின் குறுக்கீடில்லாமல் தொடர்ந்து பரவியதாயிற்று. தெற்கிலிருந்த நாடுகள்—பவேரியா, உர்ட்டம்பர்கு, பேடன் முதலியன—மிகவும் அருளுடன் நடத்தப்பட்டன. இந்நாடுகள், பிரஷ்யாவை விரோதியாகக் கருதியதன் விளைவாகப் பிரான்சுடன் நட்புக்கொள்ளக் கூடும் என்ற உண்மையான பேரிடர் இருந்தது. இம்மாதிரி நட்பு ஏற்படுவதற்காக மூன்றும் நெப்போலியன் முயன்றுகொண்டிருந்தார். இந்நாடுகளைப் பேராதரவுடன் பிஸ்மார்க்கு நடத்தியதோடு, அவர்களிடம் காணப்பட்ட ஜெர்மனி இனப்பற்றை அழுத்தமாக எடுத்துக் கூறி அவர்களுடைய சுதந்தரத்தையும் அவர்களுக்களித்தார். சிறிது காலம் கழித்து இந்நாடுகள் பிரஷ்யாவுடன் மறைவான உடன்படிக்கைகள் செய்துகொண்டன. இதன்படி, போரேற்படும்பொழுது அவற்றின் படைகளைப் பிரஷ்யாவின் படைகளுடன் அனுப்பி வைப்பதாக வாக்குறுதி செய்தன.

## வடஜெர்மனி நாடுகளின் இணைப்பு

**'ரைக்ஸ்டாக்'**

வடஜெர்மனியில் இன்னும் சுதந்தரமாகவிருந்த நாடுகள் வடக்கு ஜெர்மனியின் சுதந்தர நாடுகளுடன் நாட்டுக் கூட்டாக இணைக்கப் பட்டன. இதைச் செய்து முடித்த பெருமை பிஸ்மார்க்கைச் சாரும். பிறகு தோன்றிய ஜெர்மனிப் பேரரசு, தெற்கு ஜெர்மனியிலிருந்த நாடுகளை இக்கூட்டிற் சேர்த்துக்கொண்டதன் விளைவாக விரிவடைந்த தாகும். இக்கூட்டுச் சேர்க்கையில் பல மூலக்கூறுகளிருந்தன. ஐரோப்பாவில் அரசியற்சட்டத்தொடர்பாக நடந்த சோதனைகளுக் கெல்லாம் அதுவரையில் ஒரு மாதிரியாகக் கொள்ளப்பட்ட பிரிட்டிஷ் அரசியற்சட்டத்தின் விதி முறைகளிலிருந்து இக்கூட்டரசின் கூறுகள் மிகவும் மாறுபட்டனவாயிருந்தன. இக்கூட்டுச் சமஷ்டிக்கு, சமஷ்டி மன்றம் தலைமையாயிருந்தது. இதன் உறுப்பினர்கள், மக்களின் சார்பில் தேர்ந்தெடுக்கப்படவில்லை. மன்றம் ஜெர்மனியிலிருந்த பல்வேறு துரைத்தனங்களின் தூதர்களைக் கொண்டிருந்தது. சட்ட மியற்றுதலின் தொடக்கம், ஆட்சி நிருவாகக் கட்டுப்பாடு முதலியவைக ளெல்லாம் இம்மன்றத்தினிடமே இருந்தன. இதற்கடுத்தது பாராளு மன்றம் (ரைக்ஸ்டாக்). வயது வந்தவர்கள் வாக்களிப்பது வாயிலாக இம்மன்றத்தின் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவ்வாறு ஏற்பட்டதற்குக் காரணம் ஜெர்மன் நாட்டு இடைநிலை மக்களிடம் காணப்பட்ட மிதவாதக் கொள்கையை பிஸ்மார்க்கு வெறுத்ததேயாகும். அதனுடன் அவருடைய திட்டங்களுக்கு மிகவும் உண்மையான (பற்றுறுதி மாறாத) ஆதரவைப் பொதுமக்கள் அளிப்பார்கள் என அவர் எண்ணினர். நிதியையும் இம்மன்றம் கட்டுப்படுத்தியது. கூட்டாட்சி அமைப்பு மன்றத்தால் தோற்றுவிக்கப்பட்ட சட்டங்களை இம்மன்றம் நிறைவேற்றவோ அல்லது தள்ளுபடி செய்யவோ உரிமை கொண்டிருந்தது. எனினும், ஆங்கிலேயப் பாராளுமன்றத்தினைப் போன்று இப்பாராளுமன்றம் இருக்கவில்லை. ஆட்சி புரியும் அதிகாரம் இதனிடம் இல்லை. அமைச்சர்களின்மீது இதற்கு எவ்விதக் கட்டுப் பாட்டுரிமையுமில்லை. நிறைவேற்றுத் துறையில் நேரிடையாகத் தலையிடுவதற்கும் இதற்கு உரிமை இல்லை.

## சான்ஸலர்

ஆட்சி நிருவாகம், அமைச்சர்களிடமும், அவர்கள் தலைவரான சான்ஸலரிடமும் இருந்தது. ஆங்கிலேய நாட்டு முதலமைச்சரின் அதிகாரத்தைவிட அதிகமான அதிகாரம் சான்ஸலருக்கு இருந்தது. அமைச்சர்கள் சான்ஸலருக்குப் பொறுப்புடையவர்களாயிருந்தார்கள். சான்ஸலரே அமைச்சர்களுடைய செயல்களுக்கும் மன்னருக்கும்

பொறுப்பாளராயிருந்தார். அதிகமான அதிகாரம் சான்ஸலருக்கு இருந்ததைப் போல வேறிடங்களில் பார்க்க வேண்டுமானால், துருக்கி நாட்டு மிக்குயர் விஸீர் அல்லது அரண்மனையைக் காத்த ஆயுதந் தாங்கியப் பீரங்கிப் படையினரிடந்தான் காணலாம். பிஸ்மார்க்கே முதலாம் சான்ஸலராயிருந்தார். போர் அவரைக் காப்பாற்றியது. பிரச்சினைகளின் ஈர்ப்புச் சக்தி, எதிர்ப்பை அடக்கியது. அவர் பெற்ற வெற்றியின் பெருமை அவரை மக்களின் மதிப்பைப் பெற்ற வீரராகச் செய்தது.

## ஹங்கேரியின் முடிவு

இப்போரின் முக்கிய விளைவுகள் ஆஸ்திரியாவுக்கும் ஏற்பட்டன. ஹங்கேரி நாட்டுடன் நெடுநாளாக அதற்கிருந்த தொல்லைகளுக்கு முடிவுகாண அது விரைந்தது. தனிப்பாராளுமன்றம் (டயட்) துரைத்தனம் முதலியவற்றுக்கு ஹங்கேரியர்கள் உரிமை பாராட்டியதை, 'டேக்' தன்னடக்கமுள்ள கோரிக்கையாகக் கொண்டிருந்தார். ஆஸ்திரியா இக்கோரிக்கைக்கு இப்பொழுது இணங்கியது. மற்ற இனத்தார்கள் கோரியவுரிமைகள் மறுக்கப்பட்டன. அது முதற்கொண்டு ஆஸ்திரியா மன்னர் இரட்டைத் துரைத்தனத்தின்மீது ஆட்சி புரியலானார். ஒரே மன்னருக்குக் கீழ்ப்படிந்திருந்ததைத் தவிர, ஹங்கேரிக்கும் ஆஸ்திரியாவிற்கும் வேறெவ்விதத் தொடர்புமில்லாதிருந்தது.

## மூன்றும் நெப்போலியனும் போரும்

போர் மூண்டதை நெப்போலியன் மனவமைதியுடன் நோக்கினார் என்றாலும், அதைத்தொடர்ந்து ஏற்பட்ட முடிவைப்பற்றித் தமக்கு எவ்விதச் செல்வாக்கையும் பயன்படுத்த முடியாமற்போனதைக் காண, அச்சம் கொண்டார். பிரஷ்யாவும் பிரான்சும் நேரிடையான போட்டியில் இறங்கின. நான்காண்டுக் காலத்திற்குள்ளாக மீண்டும் 'இரும்புப் படைக்கு' முறையீடு செய்யப்பட்டது.

### மூன்றும் நெப்போலியனின் அதிகாரத்தின் அடிப்படைகள்

மூன்றும் நெப்போலியனுடைய அதிகாரம் வலுவுடன் அமைக்கப்பட்டிருந்ததுபோலச் சிறிதுகாலம் தோன்றியது. நாட்டின் தொழில் வாணிக முன்னேற்றம், பெரிதளவு வளர்ச்சியடைந்தது. பாரிசு நகரம் பெரிதளவிற்கு மீண்டும் கட்டப்பட்டதுடன் ஐரோப்பிய நாகரிகத்தின் உறைவிடமாயுமமைந்தது. பேரரசுக்கு ஒரு புறத்தில் திருச்சபையின் உளமார்ந்த ஆதரவும், மற்றொரு புறத்தில் வாணிகம் செய்யும் மக்களுடைய ஆதரவும் கிடைத்தன. தம்மிச்சையாக ஆட்சி புரியும் இயல்பை அவர் கொண்டிருந்த போதிலும், பிரெஞ்சு மக்களுள்

பெரும்பான்மையோரின் நன்மதிப்பைப் பேரரசர் பெற்றிருந்தார். வயது வந்தோர் வாக்குரிமை அளிப்பதன் மூலம் மன்றம தேர்ந்தெடுக்கப்பட்டது என்றாலும் அதனிடம் அதிகாரத்தின் சாயல்தான் காணப்பட்டது. எதையும் அது தோற்றுவிக்க முடியாது. அதனுடைய விவாதங்கள் மறைவாய் நடந்தன. தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும் பெரிதளவிற்கு அரசாங்க ஏஜென்டுகளின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருந்தார்கள்.

செனேட்டு அல்லது மேற்சபையில் 150 உறுப்பினர் இருந்தனர். இவர்கள் பேரரசரால் நியமிக்கப்பட்டவர்கள்; எனவே, பேரரசரின் செல்வாக்கிற்குக் கீழ்ப்படிந்திருந்தார்கள். இச்சபையின் முக்கியவேலை மன்றத்தின் செயல்களைத் தணிக்கை செய்வதாயிருந்தது. மன்னரால் நியமிக்கப்பட்ட அமைச்சர்களையும் மற்றவர்களையும் கொண்ட இராச்சிய சபை, நாட்டின் பொதுவாட்சி முறையை மேற்பார்வை செய்தது. ஆனால், இதிலும் பேரரசர் தமது முழுஆதிக்க நிலையைப் பாதுகாத்து வந்தார். அமைச்சர்பேரரசருக்கு நேரிடையாகப் பொறுப்புள்ளவராயிருந்தனர். பேரரசர், அவருக்கே முதலமைச்சராக எப்பொழுதும் இருந்து வந்தார். பிரான்சின் தலவாட்சிமுறை பேரரசரின் மாகாணத் தலைவர்களின் ஆதிக்கத்தின் கீழிருந்தது. அரசியல் எதிர்ப்பாளர்களைத்தண்டிப்பதற்காக நீதி மன்றங்களைத் துணிவான முறையில் பயன்படுத்தினர்; அதனுடன் பத்திரிகைகள்மீதும் கல்வியின் எல்லாக் கிளைகளின்மீதும் கடுமையான காவலை ஏற்படுததினர்.

## வெற்றியின் தேவை

பேரரசர் நயமான முறையில் ஆட்சி புரிந்திருந்தால் முடியை இழந்திருக்க மாட்டார் என நுண்ணறிஞர் சிலர் எண்ணினர். ஆனால், அவர் தமக்குள் மாறாக முடிவு செய்தார்; 'பிரான்சின் அடக்கியாளும் இராணுவ இயல்புணர்ச்சிகளை மகிழச் செய்யவேண்டுவது தேவை,' என நம்பினர். கிரிமியாப்போரில் எத்துணைப் பெரும்பங்கை அவர் பெற்றார் என்பதையும், அதேபோல இத்தாலியின் சுதந்தரப் போரின் முதல் நிலையிலும் பங்கு கொண்டதையும், பிரான்சின் இராணுவ வெற்றிகள் எவ்வளவு அதிகமாக அவருக்கு ஏற்பட்டன என்பதையும் ஏற்கனவே நாம் கண்டுள்ளோம். இவ்வழிகளில் மக்களின் நன்மதிப்பை அவர் பெற்றார் என்றாலும், வலுவுள்ள ஆதரவாளர் சிலரது தொடர்பை அகற்றிக்கொண்டார். பேரரசருக்கும் சேவாய்க் குடும்பத்தாருக்குமிடையே ஏற்பட்ட உறவைக் கண்டு பிரான்சிலிருந்த குருமார் சினங்கொண்டனர். இதற்குச் சேவாய்க் குடும்பத்தினர், இத்தாலியில் போப்பாண்டவரின் ஆட்சிக்கு எதிராயிருந்தது காரணமாகும். நைஸ், சேவாய்ப் பகுதிகளைத் தமது நாட்டுடன் இணைத்துக்

கொண்டதும் முதலாக நெப்போலியனிடம் காணப்பட்ட நாடு பிடிக்கும் பேராசை எண்ணம் இவரிடமும் இருந்ததென்பதை அச்செயல் எடுத்துக் காட்டுவது போன்றிருந்ததாம்.

## இங்கிலாந்துடன் வாணிக ஒப்பந்தம்

தவிர, அவர் 1860இல் இங்கிலாந்துடன் வாணிக உடன்பாட்டில் கையெழுத்திட்டது வாயிலாக நாட்டில் வணிகர்கள், செல்வந்தர்கள் முதலானவர்களின் தொடர்பை அகற்றிக்கொண்டார். மூன்றாம் நெப்போலியன், காப்டனுடையதும் அவரது கூட்டாளிகளுடையதுமான தடையில்லா வாணிக இயக்கம்பற்றிய வழக்காடுதலில் நம்பிக்கை கொண்டார்; அதனுடன் ஆங்கில நாட்டுச் சரக்குகளின் மீது வரிகளைக் குறைப்பது பிரெஞ்சு வாணிகத்திற்கு நன்மை பயக்கும் என உறுதியாக நம்பினார்; எனவே, பிரான்சிலிருந்த முக்கிய வாணிக நிலையங்களைக் கலந்தாலோசியாமல், சொந்தப் பொறுப்பிலேயே உடன்படிக்கையில் கையொப்பமிட்டார். நம்பிக்கை காரணமாக மூன்றாம் நெப்போலியன் தடையில்லா வாணிகத்தை ஆதரிப்பவராயிருந்தபோது பிரான்சின் வணிகர்கள் அக் கொள்கையில் நம்பிக்கையுள்ளவர்களாயில்லை. எனவே, அவர்களுடைய நன்மைகளுக்குத் துரோகம் விளைவிப்பதாகத் தோன்றியதைக் கண்டு கோபம் கொண்டிருந்தார்கள்.

## மெக்ஸிக்கோவில் துணிகரச் செயல்

1860க்குப் பிறகு, நெப்போலியனின் வெளிநாட்டுக் கொள்கை ஒருபோதும் வெற்றியுடன் காணப்படவில்லை. 1863இல் அவர் புதுமைமையான மெக்ஸிக்கோத் துணிகரச் செயலில் ஈடுபட்டார். அவருடைய சிந்தை ஏற்கனவே மத்திய அமெரிக்காவின்மீது சென்றுகொண்டிருந்ததுடன், பனாமா நில இணைப்பு வழியாக கால்வாய் வெட்டுவதையும் கனவாகக் கொண்டிருந்தது. ஆனால், இத்தருணத்தில் அமெரிக்காவின் சூழ்நிலைகள் ஐரோப்பாவின் தலையிடுதலுக்குச் சிறிதும் ஏற்றனவாயில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகள், உள்நாட்டுப் போரில் இறங்கும் தறுவாயிலிருந்தன. மீண்டும் மீண்டும் தோன்றிய புரட்சிகளால் மெக்ஸிக்கோ தொல்லையுற்றிருந்தது. தவிர, ஐரோப்பியர்களுக்கு மெக்ஸிக்கோ பணம் கொடுக்க வேண்டியிருந்தது என்பது தலையிடுவதற்குத் தக்க காரணமாயிருந்தது. முதல் திட்டம், இங்கிலாந்து, பிரான்சு, ஸ்பெயின் ஆகிய மூன்று நாடுகளும் கூட்டாக ஆக்கிரமிப்பதாயிருந்தது. ஆனால், மற்ற இருநாடுகளும் இதிலிருந்து விலகிச் சென்றதால், பிரான்சு மாத்திரம் தனித்துச் செல்ல வேண்டியதாயிற்று.

**மெக்ஸிக்கோவில் ஆஸ்திரியா நாட்டு மாக்ஸிமிலியன்**

இது வெறி கொண்டதும் பகட்டானதுமான திட்டமாயிருந்தது. ஒரு பிரெஞ்சுப்படை மெக்ஸிக்கோவைப் பிடித்துக்கொண்டது. அரசியல் சட்ட நிர்ணய சபை கூட்டப்பட்டு, ஆஸ்திரியா நாட்டு மாக்ஸிமிலியனைப் பேரரசராகத் தேர்ந்தெடுக்க வாக்குரிமை பெறப்பட்டது. எனினும், அட்டைகளாற் கட்டப்பட்ட வீடுபோன்று இது தகர்ந்து போயிற்று. இப்புதிய ஏற்பாட்டை மெக்ஸிக்கோ மக்கள் சிறிதும் ஏற்றுக்கொள்ளவில்லை. மாக்ஸிமிலியனுக்கு ஆதரவளித்த பிரெஞ்சுப் படைகள் தொடர்ந்து நிகழ்ந்த கொரில்லாப் போர்முறையால் அல்லற் படுத்தப்பட்டன. ஐக்கிய அமெரிக்க நாடுகளில் சமாதானம் ஏற்பட்டவுடன், குடியரசு அரசாங்கம், நெப்போலியனுடைய திட்டத்திற்கு எதிராக அதனுடைய வலிமையைக் காட்டியது, முடிவான செயலாயிருந்தது. பிரெஞ்சுப் படைகள் திருப்பி அழைக்கப்பட்டன. அதிகாரிகளால் கைவிடப்பட்ட மாக்ஸிமிலியன் சுட்டுக் கொல்லப்பட்டார். இத்துணிகரச்செயல் துயரம்நிறைந்த தோல்வியையும் கடும் பொருளிழப்பையும் பதிவு செய்ததைத் தவிர வேறொன்றையும் விளைவிக்கவில்லை.

## தாராளநோக்கங் கொண்ட பேரரசு

நெப்போலியனுடைய அதிகாரம் ஆட்டங்கொண்டது. மத குருமார்களும், வணிக மக்களும், பெரும்பாலும் அவரிடம் தொடர்பு அகற்றும் எண்ணம் கொண்டார்கள். எனவே, அவர் தமக்கு ஆதரவை வேறிடத்தினின்றும் தேட வேண்டியதாயிற்று. அவர் தாராளமான கொள்கைக்கு அதிகமாகச் சலுகைகள் அளிக்க எண்ணினர்; எனவே, நெப்போலியனுடைய அதிகாரத்திற்குக் கடும்பகைவரும் குடியரசுக் கொள்கையுடையவருமான ஒலீவியர் என்பாரைத் தமக்கு முதல் அமைச்சராக அமைத்துக்கொண்டார்; ஒரு புதிய அரசியற்சட்டத்தை அளிப்பதாயும் வாக்களித்தார். தேர்ந்தெடுக்கப்பட்ட மன்றம் சட்டங்களைத் தோற்றுவிக்கும் உரிமையைப் பெற வேண்டுமென்றும், அம்மன்றத்திற்கு அமைச்சர்கள் பொறுப்புள்ளவர்களாயிருத்தல் வேண்டுமென்றும், செனேட்டுச் சபையின் கூட்டங்கள் வெளிப்படையாக நடைபெற வேண்டுமென்றும், வரவு செலவுத் திட்டத்தின்மீது மக்கள் சபைக்கு உண்மையான அதிகாரம் இருக்கவேண்டுமென்றும் ஏற்பாட்டைச் செய்து நெப்போலியன் மக்களுடைய வாக்களிப்புக்காக முறையிட்டார். எழுபத்து மூன்று இலட்சம் மக்கள் இப்புதிய அரசியற் சட்டத்திற்கு ஆதரவாக வாக்களித்தார்கள். பதினைந்துலட்சம் மக்கள் எதிராக வாக்களித்தார்கள்.

## 1870 ஜூனில் நன்னம்பிக்கை

1870ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 30ஆம் நாளன்று பொது மக்கள் வாக்கெடுப்பு முடிந்தபின், ஒலீவியர், 'எந்தப் புறத்தில் நோக்கினும், தொல்லை கொடுக்கக்கூடிய பிரச்சினைகளைக் காண முடியவில்லை; ஐரோப்பாவில் சமாதானத்தை நிலை நிறுத்துவதற்கு இப்போதிருப்பதைப் போன்று வேறெந்தச் சமயமும் வாய்ப்பளிப்பதாயில்லை,' எனக் கூறினர். பதினைந்து நாளைக்குப்பின் பிரஷ்யாவுடன் போர் தொடங்கப்பட்டது. இரண்டு மாதங்களுக்குச் சிறிது அதிகமான காலத்திற்குள்ளாக இரண்டாவது பேரரசு லீப்ஸிக்கு வாட்டர்லூ முதலியவைகளிற் காணப்பட்டதைவிட அதிகமான பெரு விபத்துக்களுக்கிடையே மறைந்தது.

## போருக்குக் காரணங்கள்

திடீரென்று ஏற்பட்ட இப்பெரும்போருக்குரிய காரணங்களில் நேரான கூறுகளை அறிந்துகொள்வது கடினமானதன்று. ஜெர்மனியோ, பிரான்சோ, போரை விரும்பவில்லை. ஆனல், வெற்றியாகப் போரை நடத்துவது வாயிலாக வீழ்ச்சியுறுகிற தமது அதிகாரத்தை நிலையான அடிப்படையில் நிலை நிறுத்தலாம் என மூன்றும் நெப்போலியன் எண்ணினர். அவர் உடல் நலமில்லாதிருந்தார். எனவே, அவருடைய உறுதியோ, அல்லது அறிவோ, முன்பு காணப்பட்ட வலிமையைக் கொண்டிருக்கவில்லை. ஓரமயம் போரை அவர் விரும்பாதிருக்கலாம் என்றாலும், போரைத் தவிர்க்க அவர் முயலவில்லை. மற்றொரு புறத்தில் பிஸ்மார்க்கு, மோல்ட்கே, ரூன் போன்றவர்கள், தங்களுடைய பணிக்குச் சிகரம் போன்றமையும் என்ற காரணத்தால் பேராவலுடன் போரை விரும்பினர்கள். ஆஸ்திரியாவின் தோல்வி, ஜெர்மனியில் பிரஷ்யாவின் ஆதிக்கத்தை நிலைபெறச் செய்தது. பிரான்சின் தோல்வி, பிரஷ்யாவின் தலைமையில் ஜெர்மானியப் பேரரசை ஏற்படுத்துமென எண்ணினர். பிரான்சு, ஜெர்மனி முதலிய நாடுகளின் கடந்தகால வரலாற்றை நோக்கும் பொழுது ஆதிக்கப் பிரச்சினையைத் தீர்மானிக்க அவற்றுக்குள் இறுதிப் போர் தேவையென்பது தோன்றியது.

## ஸ்பெயின் பிரச்சினை

போரின் காரணம்—காரணமாகக்கருதும் செயல்—மிகவும் போலியானது. ஸ்பெயினில் ஒரு புரட்சி ஏற்பட்டிருந்தது. அரசியாராகிய இசபெல்லா, பிரான்சிற்கு ஓடிவிட்டார். அவருக்கு அடுத்த வாரிசை முடிவு செய்ய வேண்டியதாயிற்று. பிரஷ்ய மன்னருக்குத் தூரத்து

உறவினராயும், ரோமன் கத்தோலிக்கராயும், ஹோஹன்சோலனைச் சேர்ந்தவராயும் இருந்த லியோபால்டு ஒரு வேட்பாளராய் இருந்தார். ஸ்பெயின் அரசிற்கு ஹோஹன்சோலன் மரபைச் சேர்ந்தவர் வாரிசாய் வரும் எண்ணத்தை மூன்ரும் நெப்போலியன் எதிர்த்தார். பிரஷ்யா மன்னரான வில்லியமும் இவ்வெதிர்ப்பில் சேர்ந்துகொண்டதன் பயனுக, லியோபால்டு வேட்பாளராயிருக்கும் தம் எண்ணத்தைக் கைவிட்டார். இச்சமயத்தைப் பயன்படுத்திக்கொண்டு, அரசியல் தந்திரம் சார்ந்த வெற்றியைப் பெறுவதற்கு நெப்போலியன் எண்ணினுர்; 'வேறெந்தச் சமயத்திலும் லியோபால்டின் வேட்பாளரா யிருக்கும் விண்ணப்பத்தைக் கிளப்பினுலும், அதையெதிர்ப்பது' என்ற உறுதிமொழியைப் பிரஷ்யா மன்னரிடமிருந்து கோரும்படி தம் தூதரான பெனிடெட்டிக்கு உத்தரவிட்டார். மன்னரை எம்ஸ் எனுமிடத்தில் பெனிடெட்டி சந்தித்தார். உறுதி மொழியளிக்க மன்னர் இணங்கவில்லை. ஆனுல், லியோபால்டின் அபேட்சையைத் திரும்பப் பெற்றதற்குத் தாம் இசைந்ததை மீண்டும் உறுதி செய்தார். எவ்விதச் சினமுமில்லாமல் நேரிற்காணுதல் முடிந்தது, அலுவலும் முடிந்தது போலத் தோன்றியது.

## எம்ஸ் தந்தி

அப்படியிருந்தும், இவ்விவகாரம் கொடுமையான போர்த்தீயை மூட்டியது. நடந்த செய்திகளைப் பற்றி மன்னர் பிஸ்மார்க்கிற்குத் தந்தி மூலம் அறிவித்தார். இச்செய்தியைக் கேட்டவுடன் பிஸ்மார்க்கு மனச்சோர்வடைந்தார். காரணம், உடனே போரை உண்டு பண்ணுவதற்கு வழியில்லாமற் செய்ததுபோலத் தோன்றியதேயாகும். அவர் தம் பதவியைத் துறக்கவும் எண்ணினுர். ஆனுல், மன்னரிட மிருந்து பெற்ற செய்தியின் சொற்ருெடரை மாற்றியமைத்து, பிரஷ்ய மன்னருக்கு நாணிழப்பை உண்டுபண்ணியதாகவும் பிரான்சுடன் எல்லாத் தொடர்புகளையும் அறுத்துக்கொண்டுவிட்டதாகவும் பொருள் படும்படி தோன்றுமளவிற்குச் செய்தியை வெளியிட்டார். உடனே, ஜெர்மனியில் போர்க்குரல் உரத்துக் கேட்டது. பாரிசிலிருந்து கிளம்பிய எதிர்ப்புக் குரலும், இதற்கு விடையாய் அமைந்தது.

## படைகளின் ஒப்புமை

பிரான்சு நம்பிக்கையுடன் வெற்றியை எதிர்நோக்கியது; ஆனுல், ஒரு சண்டையிலும் வெற்றி பெறவில்லை. அதனுடன் பெரிதும் நாணடையும்படியும் நேர்ந்தது. ஜெர்மனியினுடைய ஆயத்தங்கள் நல்ல முறையில் அமைந்திருந்தன. பிரான்சின் பக்கவிலோ, அனைத்துமே ஒரே குழப்பமாயிருந்தன. பிரான்சின் படைகளின்

எண்ணிக்கைக்கு ஜெர்மனியின் படைகள் மிகவும் அதிகமாயிருந்தன; மோல்ட்கேயின் தலைமையின் கீழிருந்தன. ஆனுல், பிரான்சின் பக்கத்திலோ, போர்த்தலைமையில் ஒற்றுமையோ, போர்த்திட்டமோ இல்லாதிருந்தது. ஜெர்மன் பீரங்கிப் படையும், பிரான்சின் பீரங்கிப் படையைக் காட்டிலும் மிகச் சிறந்ததாயிருந்தது.

### பிரான்சின் பேரிழப்புக்கள்

மூன்று பெரும்பிரிவுகளாக, அரை மில்லியன் ஜெர்மன் போர் வீரர்கள், பிரான்சின் எல்லையில் திரண்டார்கள். வரலாற்றில் காணப் படாத விரைவுடன் சண்டை தொடர்ந்து நடந்தது. போரின் முதல் நிகழ்ச்சிகளிலே பிரான்சின் வெற்றிக்கனவுகள் பெரும்பாலும் மறைய லாயின. ஒர்த்து எனுமிடத்தில் மாக்மகோன் பெருஞ்சேதத்துடன் தோல்வியுற்றுர். அதன்பின், மார்ஷல் பசைனின் படை தோற்கடிக்கப் பட்டு, அவர் மெட்சு எனுமிடத்தில் சூழப்பட்டார். பேரரசரும் மாக்ம கோனும் (பேரரசர் போரின் நிகழ்ச்சிகளைக் கட்டுப்படுத்துதலை நிறுத்தி விட்டார் என்ருலும்) பாரிசிற்குப் பின்வாங்குவதென்றும் நகரத்தின் கோட்டைக்கருகில் முடிவான சண்டையிடுவதென்றும் முடிவு செய்தனர்; ஆனுல், பேரரசியார் பின்னடைவது அரச மரபின் வீழ்ச்சியை உண்டுபண்ணும் என்று எண்ணினுர். எனவே, படை அதன் போக்கை மாற்றிக் கொண்டு எதிரியை நோக்கி, மெட்சு நகரத்தைப் பகைவர்களிடமிருந்து மீட்கலாம் என்ற எண்ணத்துடன் அணிவகுத்துச் சென்றது. 1870 செப்டெம்பர் மாதம் 1-ம் தேதி செடான் எனுமிடத்தில் ஜெர்மானியப் படையாற் சூழப்பட்டு, பதினேழாயிரம் வீரர்களை இழந்தபின், 85,000 வீரர்களுடன் நெப் போலியன் ஜெர்மனியிடம் சரணடைந்தார்.

## பேரரசு நீக்கப்படுதல்

### பாரிசு சரணடைதலும் போரின் முடிவும்

இவ்விபத்தைக் கேள்வியுற்றதும் பாரிசில் பேரரசு ஆட்சி ஒழிக்கப் பட்டுக் குடியரசு தோற்றுவிக்கப்பட்டது. அரசாங்கம் வெளிநாட்டு அலுவல்களையும் (ஜூலெஸ்ஃபாங்) உள்நாட்டு அலுவல்களையும் (காம்பட்டரி) முக்கியமாகக் கொண்டது ஸ்டராஸ்பர்கு, மெட்சு என்னுமிடங்களில் அடைக்கலமடைந்ததைப் புதிய குடியரசு ஏற்றுக் கொண்டிருக்குமானுல், ஒருக்கால் சமாதானம் ஏற்பட்டிருக்கக்கூடும். ஆனுல், பிரெஞ்சுப் பெருநாட்டில் ஓரங்குல நிலத்தையும் அடைக்கல மாக அளியாது எனச் செருக்குடன் அறிவித்ததால், போர் தொடர்ந்து நடக்கலாயிற்று. பாரிசைச் சுற்றி ஜெர்மன் படைகள் சூழலாயின. நீண்ட முற்றுகையும் தொடங்கியது. முற்றுகையின்பொழுது பாரிசு மக்கள் துணிவுடன் பொறுத்துக் கொண்டிருந்ததைப்பற்றி ஒருவரும்

மறுத்துக் கூறவில்லையென்றாலும், ஐரோப்பாவில் அவர்களுக்கு உதவி செய்வதற்கு எவரும் அறிகுறிகளைக்கூடக் காட்டவில்லை. 1871-ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 28-ம் நாள் முற்றுகை முடிந்து பாரிசு அடைக்கலம் அடைந்தது. ஃபிராங்பர்ட்டு உடன்படிக்கைப்படி ஸ்டராஸ்பர்கு, மெட்சுடன் ஆல்ஸேஸ் லொரைனும் ஜெர்மனி வசம் ஒப்படைக்கப்பட்டதுடன் ஏராளமான நஷ்ட ஈடும் ஈந்தது.

## ஜெர்மனிப் பேரரசின் தொடக்கம்

முடிவு காண்பதற்குள்ளாகவே பிரஷ்யா மன்னர் ஜெர்மன் பேரரசரானார். பதினான்காம் லூயியின் சிறப்புக் காட்சியாயிருந்த வெர்சயிலில் பெரிய அறையில் புதிய பேரரசர் பட்டத்துடன் விளம்பரப் படுத்தப்பட்டார். அப்போது பிஸ்மார்க்கும் மோல்ட்கேயும் பேரரசரின் பக்கலில் நின்றனர்.

## பாரிசில் கம்யூன்

போர் முடிந்தது. ஆனால், சமூகம், அரசியல் முதலியவற்றை மீண்டும் அமைக்கும் வேலையைப் பிரான்சு மேற்கொள்ளுவதற்கு முன்னதாக, மற்றொரு கடுமையான நிலையை ஏற்க வேண்டியதாயிற்று. வெர்செயில்ஸில் கூடியிருந்த தேசிய மன்றம், 'பிரான்சு, முடியரசாய் இருப்பதா அல்லது குடியரசாய் இருப்பதா?' என்பது பற்றிக் கருதத் தயங்கிக் கொண்டிருந்தது. இதற்கிடையில் பாரிசில் கட்டுக்கடங்காத புரட்சிக் கருத்துக்கள், தீவிரமாகத் தோன்றின. அண்மையில் நிகழ்ந்த பெருவிபத்துக்களைக் கொண்டு சோஷலிசம், கம்யூனிசம், அராசகம் போன்ற கருத்துக்கள் மிகவும் வன்மையான முறையில் மக்களிடையே பரப்பப்பட்டன. பாரிசு 'கம்யூன்' என அறிவிக்கப்பட்டதாக விளம்பரஞ் செய்தது; அதாவது, நகரத்திற்கெனத் தனி அரசாங்கத்தை அமைத்துக்கொண்டு பிரான்சின் மற்றப் பகுதிகளுடன் எவ்விதத் தொடர்புமில்லாமல் சுதந்தரமாக அதன்வழி நடத்தல் என்பதாகும். இவ்வறிவிப்பைத் தோற்றுவித்த இயக்கம் வெர்சயில்ஸ் சபையில் சிலர் கொண்டிருந்ததாகக் கருதப்பட்ட முடியரசுக் கொள்கைகட்கு எதிராகக் குடியரசுக்கொள்கையினரால் ஓரளவு ஏற்படுத்தப்பட்ட எதிர்ப்பாகும். எனவே, எவ்விதத்திலும் இவ்வியக்கத்தையடக்க வேண்டுமென்று எண்ணி, பிரான்சின் படைகள், பிரான்சின் தலைநகரான பாரிசின் மீது செலுத்தப்பட்டன. நாட்டைவிட்டு வெளியேறாதிருந்த ஜெர்மன் படைகள் போருக்குப்பின் கொடிய இந்நிகழ்ச்சியை நோக்கின. கடுமையான சண்டைக்குப்பின் இரு பக்கங்களிலும் பெருங்கொடுமைகள் நிகழ்ந்தபின் கம்யூன் ஒடுக்கப்பட்டது.

## மூன்ரும் குடியரசு

மூன்ரும் குடியரசு இத்துன்பமான மகவுயிர்ப்பு வேதனைகளுக்கு இடையே தோன்றியது. எவ்விதமாக இவ்வாட்சி அமையவேண்டு மென்பதைப்பற்றி நீண்டதும் கடுமையானதுமான வாதம் நிகழ்ந்தது. தீயர்ஸ் முதல் தலைவராஞர். எனினும், 1875-க்கு முன்னதாகக் குடியரசு முறையாக அமைக்கப் பெறவில்லை.

ஃபைப் எழுதியுள்ள 'நவீன ஐரோப்பா,' ஆலிசன் பிலிப்ஸ் எழுதியுள்ள 'நவீன ஐரோப்பா,' டிலா கோர்ஸ் எழுதியுள்ள 'இரண்டாம் பேரரசின் வரலாறு,' எச். எ. எல். ஃபிஷர் எழுதியுள்ள 'போனபார்ட்டு,' ஹிட்லாம் எழுதியுள்ள 'பிஸ்மார்க்கு,' கிராண்ட் ராபர்ட்ஸ்ன் எழுதிய 'பிஸ்மார்க்கு' என்னும் நூல்கள் கற்றற்குரியன.

# 20. பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டன்

## 19-ம் நூற்றுண்டின் தனி இயல்புகள் தொழிலும் வாணிகமும்

பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டனுடைய வரலாற்றை அளவிடும் கடினமான வேலையையும், அதனை நாம் இதுவரை ஐரோப் பாவின் முக்கிய நாடுகளின் வரலாற்றுடன் ஒப்பு நோக்குவதையும் இவ்வதிகாரத்தில் செய்ய நாம் முயல வேண்டும்.

### மக்களாட்சி

இக்காலத்துச் சில தனிப்பட்ட இயல்புகளைக் குறிப்பிடுவோம்: (1) இக்காலத்தில் இதற்கு முன் நிகழ்ந்திராத அளவிற்கு வாணிகம், தொழில் முதலியவை விரிவடைந்தன. பத்தொன்பதாம் நூற்றுண்டில் இத்தனிப்பட்ட இயல்பு, உலகம் முழுவதிலும் காணப்பட்டது; என்றாலும், இந்நூற்றுண்டின் முதல் மூன்று பகுதிகளில் மிகச் சிறப்பாகக் கிரேட் பிரிட்டன் எல்லாப் போட்டிகளையும் விஞ்சியது. கிரேட் பிரிட்டனைக் காட்டிலும் ஐரோப்பாவைப் பேரளவிற்கு நெப்போலியனுடைய போர்கள் சோர்வடையச் செய்தன. இங்கிலாந்து போரிலிருந்தும் படையெடுப்பிலிருந்தும் தடையற்றதாயிருந்தது. வாட்டர்லூச் சண்டைக்கு முன்னரே தொழில் வளர்ச்சியின் காலம் தொடங்கிவிட்டது. அதன்பின் அதன் வளர்ச்சியின் வேகம் மிகவும் அதிகமாயிற்று. புதுப்புனைவுச் செயல்கள் பெரும்பாலும் தொடர்ந்து ஒன்றன்பின் ஒன்றுய் நிகழ்ந்தன. நீராவியின் ஆற்றலாலும், மின் ஆற்றலாலும் நாட்டின் தோற்றம் மாறுதலடைந்தது. (2) நாட்டின் அரசியலமைப்பிற்கொத்த வாழ்க்கையும் இக்காலத்தில் தாராளமாக மக்களாட்சியமைப்பை நோக்கி முன்னேறியது. 1815-ல் பலர் இங்கிலாந்தில் அரசியல் வாழ்க்கையில் மாறுதல்களைத் தவிர்ப்

பதற்காகப் புரட்சியையும் நெப்போலியனையும் எதிர்த்துப் போராடிய தாகக் கூறியிருப்பார்கள். எனினும், எழுச்சி வெள்ளத்தைத் தடை செய்ய முடியாமற் போயிற்று. நூற்றாண்டின் இறுதியில் நாட்டில் பெரும்பாலும் வயது வந்தோர் அனைவருக்கும் ஓட்டு உரிமை அளிக்கப் பட்டது. அதே சமயத்தில் அமைச்சரவை முறையும் வளர்ச்சியுற்று அரசாங்கத்தில் மாற்றக்கூடாத முறையாக நன்கு ஏற்றுக்கொள்ளப் பட்டது. பாராளுமன்றம், இறைமைக்கு இருக்கை ஆயிற்று. பாராளு மன்றத்திலும்அதிகாரத்தின் ஈர்ப்பு மையம் பிரபுக்கள் சபையிலிருந்து மக்கள் சபைக்கு முடிவாகச் சென்றது. இம்மாறுதல்கள், முடியரசைக் கவிழ்த்துக் குடியரசை நிறுவுவதிற் கொண்டு போய்விடும் எனச் சிலர் எண்ணினர்.

## சமூகப் பிரச்சினைகளின் தோற்றம்

ஆனால், முடியரசு, புதிய கொள்கைகளுக்கு ஏற்றவாறு இணக்க மாக நடந்துகொண்டதுடன், இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் முழுப் பற்றுறுதியைத் துய்த்தது, கடல் கடந்து பரவிய பேரரசின் வளர்ச்சி யால் அரசு முடிவொற்றுமையின் அடையாளமாக, இதற்கு முன்னிராத முறையில் மதிப்பைப் பெற்றது. (3) பத்தொன்பதாம் நூற்றாண்டில் வளர்ச்சியுற்றிருந்த எல்லா நாகரிக நாடுகளிலும் காணப்பட்டது போல, இங்கிலாந்திலும் தலைமைக்கூறாகச் சமூகப் பிரச்சினை தோன்றியது. இப்பிரச்சினை, இதற்குமுன் அரசியல் தர்க்கம் எவ்வளவு முக்கியமாகக் கருதப்பட்டதோ, அந்த அளவிற்கு முக்கிய மானதாயிற்று.

இங்கிலாந்திலும் பிறவிடங்களிலும் இக்காலத்தின் புதிய கூறாக இப்பிரச்சினை உண்மையாகவிருந்தது. அரசாங்கங்களின் அமைப்புக் களைப் பற்றிய பிரச்சினைகள் தமது இன்றியமையாமையை இழக்கவில்லை யென்றாலும், மக்களுடைய நிலை, வாழ்க்கை இவைகளில் அரசாங்கங் களில் அமைப்புக்கள் எத்துணை ஆக்கம் கொள்ள இயலும் என்ற வினா மிக உரமாயெழுந்தது.

## சமாதான முறையில் இங்கிலாந்தின் வளர்ச்சி

### பேரரசின் வளர்ச்சி

(4) பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிரேட் பிரிட்டனுடைய பொது வாழ்வு மற்ற நாடுகளுடன் ஒப்பிடும் போது மிகவும் அமைதி யாயும் ஒழுங்காயுமிருந்தது. பேரரசின் வரலாற்றில் மற்றப் பகுதி களுடன் வரிசையில் அமையாத அயர்லாந்து வரலாற்றை நாம் நீக்கி விடுவோமானால், புரட்சிகரமான திடீர் எழுச்சி ஒன்றுமில்லை.

அதனுடன் உள்நாட்டுப்போரும் நிகழவில்லை. கட்சியுணர்ச்சிகள் அடிக்கடி மேலெழுந்து காணப்பட்டன. ஆனால், எல்லாக் கட்சிகளும், கருத்து மாறுபாடுள்ள பிரச்சினைகளையெல்லாம், அரசியற்சட்டம் அனுமதிக்கும் முறைப்படி தீர்த்துக்கொள்ளுவதற்கு இசைந்தன. இவ்வாறு கிரேட் பிரிட்டன் தனிச் சிறப்பான வேறுபாட்டைக் கொண்ட நாடாயிருந்தது. சில வகைகளில், மிக்க சுதந்தரத்துடனும் நாடுகளிலெல்லாம் மிகவும் 'நவீனமாயும்' இருந்த கிரேட் பிரிட்டன், கடந்த காலத்திற் காணப்பட்ட நிறுவனங்களையும், சடங்குகளையும்' கருத்துக்களையும் விடாமற் பின்பற்றியது. மற்ற நாடுகள் பெரும் பான்மையாக இவைகளைக் கைவிட்டுவிட்டன. (5) குடியேற்ற நாடு, இந்தியப் பேரரசுகளின் வளர்ச்சி, சிறப்பாக இந்நூற்றாண்டின் இறுதியில், நாட்டின் குடும்ப வாழ்க்கை வரலாற்றில் மிக முக்கியம் வாய்ந்த ஆதிக்கத்தைக் கொண்டது. இவ்வாதிக்கம் குறைவதற்குப் பதிலாக அதிகமாவதாகத் தோன்றியது.

## II

## சீர்திருத்தத்திற்கு எதிர்ப்பு

காசில்ரீ, கானிங், வெல்லிங்டன், பீல்

நெப்போலியனுடைய வீழ்ச்சி, கிரேட் பிரிட்டனுக்குப் பாதுகாப்பை யளித்தவுடன், அரசியல், சமூக முறைமைக்கு எதிர்ப்பின் முதல் அறிகுறிகள் வெளிப்படையாகத் தலையெடுக்கத்தொடங்கின. 1815-ல் கிரேட் பிரிட்டனுடைய புகழும் அதிகாரமும் தொழிலாளர் வகுப்பினருக்கு வாழ்க்கை நலனையோ அல்லது செழுமையையோ உண்டுபண்ண வில்லை. அதனுடன் நாட்டின் அரசியற்சட்டத்தில் மாறுதல்களை யேற்படுத்துவதற்குப் பல சங்கங்கள் விருப்பங்கொண்டிருந்தன. ஆனால், இவைகளெல்லாம் அடக்கப்பட்டன. அதிகாரத்திலிருந்தவர்கள், எல்லாவற்றிற்கும் முன்னரே புதுமையான அமைப்புக்களைக் கண்டிக்க உறுதி பூண்டிருந்தார்கள். 1820 ல் மூன்றாம் ஜார்ஜ் மரணம் எவ்வித மாறுதலையும் உண்டுபண்ணவில்லை. கடந்த சிலகாலமாகவே அவருடைய அறிவு இருளடைந்திருந்தது. அதனுடன் நாட்டின் உண்மையான அரசர் என்பதற்குத் தேவையான பண்போ அல்லது அறிவோ நான்காம் ஜார்ஜிடமில்லை. அரசியல் அதிகாரத்தை டோரிகள் தனியுரிமையாகக் கொண்டிருந்தார்கள். இந்த டோரிகளில் மிக்க புகழ் பெற்றவர் வெல்லிங்டன் கோமகனாவர். தீபகற்பப் போர், வாட்டர்லூச் சண்டையின் புகழால் சூழப்பட்ட இவர், உள்நாட்டு அரசியலில் பேராதிக்கம் கொள்ளலானார். அடுத்தபடியாக, மிகுந்த அறிவு, சொல் வன்மை, ஓரளவு நெறி தவறுதல் முதலியவற்றை யுடைய கானிங் இருந்தார். இவர் வெளிநாட்டில் பெரும்பிரச்சினை

களில் வெற்றி வீரராயும், ஆனல் உள்நாட்டில், பாராளுமன்ற முறையைச் சார்ந்த எல்லா மாறுதல்களையும் எதிர்ப்பவராயுமிருந்தார். காசில்ரீ என்பார், இரக்கமில்லாத பண்புடையவராயும், பொது மக்கள் கருத்தில் எதிர்விளைவு காரணமாக அறிமுகம் செய்யப்பட்டவராயும், ஆனல் கடுமையான உழைப்பாளராயும், திறமையுள்ளவராயும், சமாதானத்தில் உண்மையான ஈடுபாடுடையவராயும் இருந்தார். இறுதியாக, சர் ராபர்ட்டுப் பீல் என்பாரும் இருந்தார். இவருடைய செல்வாக்கு அப்பொழுது தொடங்காவிட்டாலும், எல்லாரையும்விட மிகவும் முக்கியமாயிருப்பதற்கு ஊழ் கூட்டி வைத்தவர் போன்றிருந்தார்.

## அயர்லாந்தின் நிலையும் செல்வாக்கும்

### டேனியல் ஓகானல்

சுதந்தரம், முன்னேற்றம் முதலியவைகளுக்கான முதல்தாக்குதல் அயர்லாந்தில் ஏற்பட்டது. ஐக்கியச் சட்டத்திற் குறிப்பிடப்பட்ட கட்டுப்பாடுகள் மாற்றப்படவில்லை. அயர்லாந்து மக்களிற் பெரும்பாலார் ரோமன் கத்தோலிக்கராய் இருந்ததால் பாராளுமன்றத்திற்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுதியற்றவராயும், ஆனல் தேர்தல்களில் வாக்களிக்கத் தகுதியுள்ளவராயுமிருந்தனர். ரோமன் கத்தோலிக்கர்களுக்கு ஏற்பட்டிருந்த இக்கறை, பெருங்குறையாயிருந்தது; எனவே, அயர்லாந்தில் மன நிறைவற்றிருந்தவர் அனைவரையும் ஒன்ருகத் திரட்டுவதற்கான கூக்குரலாய் அமைந்தது. டேனியல் ஓகானல் அயர்லாந்தின் தலைசிறந்த தலைவர்களுள் ஒருவராயிருந்தார். அவரது உயரமான தோற்றம், சொல்வன்மை, துணிவு, வலிமை வாய்ந்த குரல் முதலியவை அவரை இத்தருணத்தில் ஐரிஷ் மக்களின் மிகச் சிறந்த பிரதிநிதியாகச் செய்தன. வலிமை பொருந்திய கத்தோலிக்கச் சங்கம் அவரை ஆதரித்தது. அயர்லாந்து தீவிரமாக அவருக்கு ஆதரவளித்தது. அவர் கத்தோலிக்கராயிருந்ததால் பாராளுமன்றத்தில் அமர முடியாத போதிலும், 1828-ல் கிளார் கோட்டத்துத் தேர்தலில் வேட்பாளராக நிற்க முன்வந்தார். பிராட்டஸ்டென்டு நிலச்சுவான்தார்களால் பரிந்துரைக்கப்பட்ட வேட்பாளர்களுக்கு வழக்கமாகப் பணிந்து வாக்களித்து வந்த குடியானவ வாக்காளர்கள், ஓ கானலுக்கு ஆதரவளிச்கத் துணிவு கொண்டார்கள். (இரகசிய வாக்களிப்பு முறை அப்போது தோற்றுவிக்கப்படவில்லை) ஓ கானல், அவரை எதிர்த்து நின்றவரைக் காட்டிலும் மிகப் பெரும்பான்மையான வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## கத்தோலிக்கர் விடுதலை

இந்நிகழ்ச்சி இதனளவில் முக்கியமில்லாததால் இருந்தாலும், கத்தோலிக்கச் சமயத்தைப் பின்பற்றிய அயர்லாந்து, கிளர்ச்சிக்கு ஆதரவளிக்கத் தயாராயிருந்ததுடன், தேவையேற்படுமானல், உள் நாட்டுப் போருக்கும் தயாராயிருந்ததென்பதைத் தெளிவுபடுத்தியது. இக்கிளர்ச்சியைத் தடைசெய்வது உள்நாட்டுப் போரைத் தூண்டும். எனவே, வெல்லிங்டன், விட்டுக்கொடுக்குமாறு பிரபுக்கள் சபைக்கு அறிவுரை கூறுவதற்குத் துணிவு கொண்டார். கிரேட் பிரிட்டனிலும் அயர்லாந்திலும் கத்தோலிக்கர்களேயும் பிராட்டஸ்டென்டுகளுடன் ஒரே நிலையில் அமைக்கும் மசோதா 1829-ல் நிறைவேற்றப்பட்டது. இம்மசோதா, சிலரிடையே அச்சத்தையும், மற்றும் சிலரிடையே அளவற்ற அவாவையும் உண்டுபண்ணிய போதிலும், எதிர்பார்த்த அல்லது அஞ்சிய புரட்சிகரமான விளைவுகளை உண்டுபண்ண வில்லை.

## சீர்திருத்தம் வேண்டிக் கிளர்ச்சி

### உள்ள பிரதிநிதித்துவ முறையின் குறைகள்

ஆயினும், நிலையாக அமைக்கப்பட்டிருந்த ஒழுங்கு முறையில் இஃது ஒரு பிளவை ஏற்படுத்தியதுடன் பாராளுமன்றச் சட்ட அரசியலிலும் மாறுதலை உண்டுபண்ணியது; அதிகச் சீர்திருத்தத்தை விரும்பியவர் களுக்கு ஊக்கமளித்தது. இக்கத்தோலிக்க விடுதலைச் சட்டத்தை நிறைவேற்றியதால் டோரிகளுக்குள்ளேயே பிளவு உண்டாயிற்று. பாராளுமன்றத்தையே முற்றிலும் சீர்திருத்தஞ் செய்யச் சிலகால மாகவே ஒரு கிளர்ச்சி இருந்து வந்தது. பதினெட்டாம் நூற் ருண்டிலேயே வலுத்திருந்த இயக்கத்தை இக்கிளர்ச்சி மேலும் மிகுதிப்படுத்தியது. ஆனல், அப்பொழுது பிரெஞ்சுப் புரட்சியையும் நெப்போலியனையும் எதிர்த்துப் போராட வேண்டியிருந்ததால், இவ் வியக்கம் புறக்கணித்து ஒதுக்கப்பட்டது. இதனையாதரித்தவர் இப் பொழுது அதிக நம்பிக்கையுடன் முன்னேறினர். வழக்கிலிருந்த வாக்குரிமை முறையை, நிலையாக ஏற்படுத்தப்பட்டிருந்த அரசியல் ஒழுங்கு முறையின் பகுதியாகத்தான் பாதுகாக்க முடியும்; அம் முறையை எப்படியாகிலும் மாற்றுவதென்ருல் பாராளுமன்றத் தேர் தலுக்குப் புது முறைகளைத் தோற்றுவிப்பது தவிர்க்க முடியாததாயிற்று. நாட்டின் மக்கள் பரவியிருந்ததற்கு ஏற்றாற்போல அப்போதிருந்த வாக்காளர் தொகுதிகள் சிறிதும் பொருத்தமுள்ளனவாயில்லை. பதினெட்டாம் நூற்ருண்டிலேற்பட்ட தொழிற்புரட்சியின் விளைவாக, மக்கள் இங்கிலாந்தின் வடபாகத்திற்குக் குடி பெயர்ந்தார்கள். சிறப் பாக நடு நாட்டில் தொழில் வளர்ச்சியடைந்த நிலப்பகுதிகளான

யார்க்ஷைரிலும், வெஸ்ட்ரிட்ஜிலும், இலங்காஷைரிலும் குடி பெயர்ச்சி ஏற்பட்டது. ஆனால், இங்கிலாந்தின் தெற்கிலும் மேற்கிலும் மக்கள் நெருக்கம் குறைந்திருந்த மாவட்டங்கள், மக்கள் சபைக்குப் பெரும் பான்மையான உறுப்பினர்களை அனுப்பின. மான்செஸ்டர், ஷெப்பீல்டு, லீட்ஸ், பர்மிங்காம் போன்ற தொழில் நகரங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை.

## 1832-ல் சீர்திருத்த மசோதா

பழைய முறை ஆதரித்துக் காக்கக் கூடியதாகத் தோன்றவில்லை; ஆனால், போராட்டம் நீண்டதாயும் கடுமையாயுமிருந்தது. பல்லாண்டுகளாக மக்கள் மனத்தில் மாறுதல் பற்றிய அச்சம் குறைவுபடாமலிருந்தது. நாட்டின் பல பகுதிகளில் சீர்திருத்தக்காரர்களின் சங்கங்கள் மும்முரமாக வேலை செய்ததுடன், உணர்ச்சியும் கடுமையாயிருந்தது. அவர்கள் சீர்திருத்தம் செய்வதால் ஏற்படும் விளைவுகளைப் பற்றி முரட்டுத்தன்மை வாய்ந்த எண்ணங்களைக் கொண்டிருந்தார்கள். பெல்ஜியப் புரட்சியும் 1830-ல் பிரான்சில் நடந்த புரட்சியும் இங்கிலாந்தில் மாறுதலுக்கு எதிர்ப்பின்றித் துணையாக இப்பொழுது விளைவை உண்டு பண்ணின. இயன்ற அளவு வெல்லிங்டன் இவ் விளைவை எதிர்த்தபோதிலும், மக்கள் சபையில் மிகவும் வலிமையுள்ள பெரும்பான்மையோர் சீர்திருத்தத்திற்கு ஆதரவாயிருந்தனர். வெல்லிங்டன் தொடர்ந்து எதிர்த்திருப்பாரானால், ஒரு வேளை உள்நாட்டுப் போர் மூண்டிருக்கக்கூடும். எதிர்காலப் பேரறிவுடன் வெல்லிங்டன் விட்டுக் கொடுத்ததால், 1832 ஜூனில் சீர்திருத்த மசோதா பிரபுக்கள் சபையில் நிறைவேறி மன்னருடைய ஒப்புதலைப் பெற்றது.

## சீர்திருத்த மசோதாவின் விளைவுகள்

1688-ல் நடந்த புரட்சியைப் போன்று 1832-ல் நிறைவேறிய சீர்திருத்த மசோதாவும் இங்கிலாந்தின் வரலாற்றில் முக்கியமானதொரு வரலாற்றுக் கட்டத்தைக் குறிப்பதாகும். 1688-ல் நடந்த புரட்சி அதனளவில் முழுமையாய் அமைந்தது. ஆனால், சீர்திருத்த மசோதா, அரை நூற்றாண்டிற்கு மேல் நடக்கவிருந்த அரசியற்சட்டம், சட்டமியற்றுதல் இவைகளில் மிகுதியான மாறுதல்களை ஏற்படுத்துவதற்கு முதற்படியாயிருந்தது. இம்மாறுதல்கள் கிரேட்பிரிட்டனில், அரசியல், சமூக ஆற்றலில் சமநிலையை முற்றிலும் மாற்றின. இம்மசோதாவின் உடனடியான விளைவு, நடுத்தர வகுப்பு மக்கட்கு அதிகாரத்தையளித்ததாகும். இம்மசோதாவிற்கு மிக முக்கியமாக ஆதரவளித்த தொழிலாளிகள், வாக்குரிமை பெறவில்லை. அதனுடன் தொழிலாளி

களின் தலைவர்கள் இம்மசோதா அவர்களை ஏமாற்றிவிட்டதாகக் கருதினார்கள். கிரேட் பிரிட்டனில் பிரதிநிதித்துவ முறை ஒழுங்காகவும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகவும் செய்யப்பட்டது. முக்கியமல்லாத சிறு இடங்களுக்குப் பிரதிநிதிகள் அளிக்கப்பட்டிருந்தது நீக்கப்பட்டது. ஆங்கில நாட்டு வட்டப் பிரிவுகளில் வாக்குரிமை ஒரே மாதிரியாக்கப் பட்டதுடன் கோட்டங்களில் அதிகமாக்கவும் பட்டது. உயர்குடிமக்களுட் பெரும்பாலாரும் நடுத்தர வகுப்பைச் சேர்ந்த ஆதரவாளர்களும் இச்சட்டநடவடிக்கையை முடிவாகக் கருதி, மேற்கொண்டு மாறுதல் வேண்டா என்றும் எண்ணினார்கள். ஆனால், மசோதா, மற்ற மாறுதல்கள் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாததாகச் செய்யுமெனக் கூறியவர்கள் உண்மை கூறியவர்களாயிருந்தார்கள். 1832 ல் மசோதா நிறைவேறியதற்குத் துணையாயிருந்த வழக்குரைகள் இறுதியில் நாட்டின் அரசியற்சட்டத்தை மக்களாட்சி அடிப்படையில் அமைக்க வழிகோலின.

III

## விக்குகள் பதவி வகித்தல்

**அவர்கள் இயற்றிய சட்டங்கள்**

விக்குகளின் தலைவரும் சீர்திருத்த இயக்கத்திற்குத் தலைமை வகித்தவருமான கிரே பிரபு, முதல் சீர்திருத்தப் பாராளுமன்றத்தில் மிகவும் அதிகமான பெரும்பான்மையோருடன் முதல் அமைச்சரா யிருந்தார். தாற்காலிகமாக டோரிகள் குறிப்பிடத்தக்க வகையில் நிலையற்றவர்களாகச் செய்யப்பட்டார்கள். இப்புதிய பாராளுமன்றம் மிக முக்கியமான சில சட்டங்களை நிறைவேற்றியது. 1833 ல் நிறைவேற்றப்பட்ட சட்டப்படி பிரிட்டிஷ் பேரரசில் வாழ்ந்த எல்லா அடிமைகளுக்கும் விடுதலையளிக்கப்பட்டது. புதியதும் முக்கியமானதுமான இரவலர் சட்டம் மேற்கொள்ளப்பட்டது. எல்லாவற்றையும்விட 1835-ல் மாநகராட்சிக் குழுச் சீர்திருத்தச் சட்டம், இக்காலத்தில் பிரிட்டனில் மிகவும் சிறந்த கூறுயுள்ள நகர வாழ்க்கையின் வளர்ச்சிக்கு வழி வகுத்தது. பிரான்சு, இத்தாலி, ஜெர்மனி அல்லது நெதர்லாந்து ஆகிய நாடுகளின் நகர வாழ்க்கையுடன் இங்கிலாந்தின் நகர வாழ்க்கையை ஒப்பிடும் பொழுது அஃது இதுவரை தாழ்நிலையிலிருந்தது. இப்பொழுது நகரங்கள் பொதுவாகச் சுயஆட்சி புரியும் சமூகங்கள் ஆயின. எனினும், அவற்றுக்குக் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுவதில் தாமதமாயிருந்தன. நாளடைவில் அறிவு, கலை முதலியவற்றைப் போல நாட்டின் வாணிக வாழ்க்கைக்கும் இத்தாலி, ஜெர்மனி முதலிய நாட்டுப் பெருநகரங்கள் எவ்வாறு துணை

புரிந்தனவோ, அவ்வாறே கிரேட் பிரிட்டனுக்கும் நன்மை பயப்பனவாய் இந்நகரங்கள் அமைந்தன.

1830-ல் நான்காம் ஜார்ஜ் இறந்தார். 1837 வரை நான்காம் வில்லியம் ஆட்சி புரிந்தார். அவர் காலத்தில் நிகழ்ந்தவை பற்றி அவரைக் குறிப்பிடாமலே சொல்லலாம் என்பதை எண்ணும்போது நாட்டின் வாழ்க்கையில் அவர் எவ்வளவு தூரம் செல்வாக்கில்லாதவரா யிருந்தார் என்பது நன்கு புலனுகும்.

## விக்டோரியா

### இங்கிலாந்தும் ஐரோப்பாவும்

1837-ல் பதினெட்டாவது வயதில், விக்டோரியா அரசியார் அரியணையேறினுர். அவரது ஆட்சியின் தொடக்க ஆண்டுகள், ஐரோப்பாவில் 1848-ல் நிகழவிருந்த புரட்சிகள் உருவாகிக்கொண் டிருந்த காலமாகும். இவ்வியக்கத்தால் இங்கிலாந்தும் ஓரளவு பாதிக்கப் பட்டது. இங்கிலாந்தில் இப்புரட்சி தனிப்பட்ட முறையில் ஏற்பட்டது. எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் காணப்பட்டதுபோல எவ்வித வன் முறையும் நாட்டிற் காணப்படவில்லை. ஆனுல், இங்கு மிகுந்த தொல்லேயும் துன்பமுமிருந்தன. இதற்குப் பரிகாரம் அரசியற் சட்டத்திற்குள் இருந்ததாகவே கருதப்பட்டது. அயர்லாந்தில் மாத்திரம் இவ்வியக்கம் வன்மையான புரட்சியின் இயல்பை மேற் கொண்டது.

## மக்கள் உரிமைச்சாசன இயக்கம்

இங்கிலாந்தில் சமூகவியக்கம் ஈரியல்புகளேக் கொண்டதாயிருந்தது. ஒரு புறத்தில் தொழிலாளர்களின் உண்மை இயக்கமான மக்கள் உரிமைச் சாசனவியக்கம் இருந்தது. இவ்வியக்கம் சமூக நோக்கங் களால் தூண்டப்பட்டிருந்தும், அரசியல் மாற்றத்தையே கோரியது, மக்களின் உரிமைச் சாசனத்திற்கு ஒரு கிளர்ச்சியாய் மாறியது. வயது வந்த ஆடவருக்கு வாக்குரிமை, மறைமுறைத் தேர்தற்சீட்டு வாயிலாக வாக்களித்தல், ஆண்டுதோறும் தேர்தலுக்குப்பின் பாராளுமன்றம் கூடுதல், பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் சொத்துடையவர் களாயிருக்க வேண்டும் என்ற விதியை நீக்குதல், உறுப்பினர்களுக்கு ஊதியம் அளித்தல் ஆகிய ஐந்து கோரிக்கைகளே இவ்வியக்கம் கொண்டிருந்தது. உரிமைச் சாசனத்திற்கு ஆதரவான இயக்கம் உண்மையிலேயே மிகவும் பரவியிருந்தது. அதற்குப் பரிவுரையாகக் கூறப்பட்ட கடுமொழி அச்சத்தையூட்டியது. ஆயினும், உரிமைச் சாசனத்தார்களுக்குத் திறமை வாய்ந்த தலேவர் கிடைக்கவில்லே

யாதலால், இயக்கம் மறைந்து போயிற்று. எனினும், அரசியற்கருத்தில் மறைமுகமாகச் செல்வாக்கைப் பேரளவிற் பெற்றது. உரிமைச் சாசனம் கோரியவைகளில் பெரும்பகுதிகள், பின்னர் வழங்கப்பட்டன.

## தடையில்லா வாணிகத்துக்குக் கிளர்ச்சி

காப்டனும் பிரைட்டும்

மக்களுரிமைச் சாசன இயக்கத்துடன் அடிக்கடி அதற்குக் கடுமையான எதிர்ப்பாக, தடையில்லா வாணிகம், தானியச் சட்டங்களை நீக்குதல் ஆகியவைகளுக்காகக் கிளர்ச்சியெழுந்தது. தானியச் சட்டம், நாட்டில் இறக்குமதியாகும் தானியங்களின்மீது வரி விதிப்பது வாயிலாகத் தானியங்களின் விலையைச் செயற்கையாக உயர்த்தியிருந்தது. நாட்டில் உழவு ஒரு முக்கியத்தொழிலாய் இருந்த காலத்தில் தானியச் சட்டங்கள் தோன்றின. ஆனால், இப்பொழுது எங்கு நோக்கினும் தொழில் மிகுந்த நகரங்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. தவிர, கைத்தொழிலாளிக்கு உணவின் உயர்ந்த விலை மிக்க தொல்லையை உண்டு பண்ணியது. ஆடம்ஸ்மித்தின் காலம் முதல் பொருளாதார நிபுணர்கள் நாடுகட்கிடையே சரக்குகளின் தடையில்லா மாற்றத்தை எடுத்துரைத்தார்கள். தடையில்லா வாணிகக் கொள்கையை உடனடியாகச் செயற்படுத்துவது தானியச் சட்டங்களை நீக்குவதேயாகும். இங்கிலாந்தின் வரலாற்றிலேயே இதைப்போல வேறெந்தச் சீர்திருத்த இயக்கமும் அவ்வளவு நல்ல அமைப்பாகவும், வலிமையுள்ளதாகவும் நடத்தப்படவில்லை. காப்டனும் பிரைட்டும் இவ்வியக்கத்தின் தலைசிறந்த தலைவர்கள். காப்டன் இணையற்றப் பேச்சாளர்; அறிவு சான்றவர்; வாதாடும் திறமையும் கொண்டவர்; நிதி பற்றிய கொள்கைகளை மிக நேர்த்தியாக எடுத்துக்கூறும் ஆற்றலுடையவர். அவர் இங்கிலாந்தில் வேறெவரும் சிறிதளவு கூடக் கண்டிராத அளவிற்குப் பெருங்கூட்டங்களைத் தம்பக்கம் இழுத்தார். அவருடைய பேச்சுக்கள் ஆங்கிலேய இலக்கியத்தில் நிலையான பகுதியாகும் போலத் தோன்றியது. இவர்கள் நாட்டின் நாநா பக்கங்களுக்கும் சென்று தானியச் சட்டங்களைக் கண்டித்தார்கள்; தடையில்லா வாணிகத்தை மேற்கொள்ளுவதால் தொடர்ந்து உள்நாட்டில் ஏற்படும் செழுமை அனைத்துலக இணக்கம் முதலியவைகளை எடுத்துக் கூறினார்கள்.

## பீலும் தானியச் சட்டங்களும்

அயர்லாந்தில் பஞ்சம்

பீல், வெல்லிங்டன் கோமகனார் இவர்களுடைய டோரி அமைச்சர் குழு, இவ்வியக்கத்தை நெடுநாள் எதிர்த்தது. தானியச் சட்டங்களைக்

காரணகாரியங் காட்டிப் பாதுகாக்க முடியாதென்பதைச் சிறிது சிறிதாகப் பீலினுடைய தெளிவான அறிவு உணரலாயிற்று. உருளைக் கிழங்குப் பயிர் பயனளியாமற்போனதன் விளைவாக 1845-ல் அயர்லாந்தில் மிகக் கடுமையான பஞ்சம் உண்டாயிற்று. பஞ்சத்தால் வாடிய குடியானவர்களுக்கு அனுப்பக்கூடிய ஒரே தானியம் மிக அதிக விலையுள்ளதாயிருந்தது. இதற்குக் காரணம், தானிய வரிகளைச் செலுத்த வேண்டியிருந்ததேயாகும். தானியச் சட்டம் அயர்லாந்து சம்பந்தப்பட்ட வரை நீக்கப்படவேண்டும் என்பதைப் பீல் உணர்ந்தார்; அதனுடன் ஒருதடவை நீக்கினால் மீண்டும் அதைக் கொணர முடியாதென்றும் நம்பினார்; எனவே, மிக்க துணிச்சலுடன் செயலில் இறங்கினார். காப்டனுக்கு நாடு கடமைப்பட்டதை ஏற்றுக்கொண்டு, மக்கள் சபையில் எதிரிகளாயிருந்த விக்குகளின் ஆதரவுடன் தானியச் சட்டங்களை ஒழித்தலை நிறைவேற்றினார். இது இங்கிலாந்தின் சமூக, பொருளாதார வாழ்க்கையில் குறிப்பிடத்தக்கதொரு நிகழ்ச்சியாகும்; அரசியல் வாழ்விலுங்கூடக் குறிப்பிடத்தக்கதாகும்.

## தானியச் சட்டங்கள் அழிக்கப்படல்

பீலின் செயல் டோரி கட்சியிற் பிளவை உண்டு பண்ணியதுடன், அதை அழித்தும்விட்டது. இதற்குப்பின் தோன்றியதும் இங்கிலாந்தின் வரலாற்றுப் போக்கிற் பெருஞ்செல்வாக்கைப் பெற்றதுமான கட்சி, பழமைவாதக் கட்சியாகும். இக்கட்சியினர் டோரிகளைப் போன்று சீர்திருத்தத்தையும் மாறுதலையும் கடுமையாக வெறுக்கவில்லை; ஆனால், தோற்றுவிக்கும் மாறுதல் நாட்டில் ஒழுங்கின்மையை உண்டாக்கும் வண்ணம் அச்சத்தை உண்டு பண்ணக்கூடாது என்பதில் அவாவுள்ளவராயிருந்தனர். கன்சர்வேட்டிவ் கட்சியைத் தோற்றுவித்தவர் பீல் என்றாலும், அக்கட்சிக்குத் தலைமை வகிக்க அவர் உயிருடனில்லை. 1850-ல் திடீரென்று அவர் மரணமுற்றார்.

## IV

## பால்மர்ஸ்டன்

### அவரது வெளி நாட்டுக் கொள்கை

இனி, பிரிட்டிஷ் வரலாற்றில் பதினைந்து ஆண்டுகள் பால்மர்ஸ்டன் பேரளவில் ஆக்கம் கொண்டிருந்ததை அறிவோம். நாட்டின் வரலாற்றில் உயர்ந்த அரசியல் வல்லமை பொருந்தியவர்களுடைய கூட்டத்தில் அவருக்கு உண்மையில் இடம் இல்லை. அவர், வால்போல், சாதம், பிட்டுப்போன்றவர் அல்லர்; பீல், டிஸ்ரேலி, கிளாட்ஸ்டன், சேம்பர்லேன் போன்று கிரேட்பிரிட்டனுடைய அரசியல் வாழ்க்கையில் நிலையாகச் செல்வாக்குக் கொள்ளவில்லை; சிறந்த அறிவாளருமல்லர்;

ஆழ்ந்த சிந்தனையாளருமல்லர். அரசியல் அலுவல்களில் அவரது தீர்ப்பு உறுதியாயுமில்லை. எனினும், எப்பொழுதும் கவனத்தை ஈர்க்கக் கூடிய புகழைப் பெற்றுள்ளார். அவர் நாகரிகமில்லாத முரட்டுத் தனமான நாட்டுப் பற்றுள்ளவராய் இருந்தார்; ஐரோப்பாவிலிருந்த வலிமையான முடியரசுகளின்மீது இழிவான எண்ணங்கொண்ட வராயும் அவற்றுக்கு எதிரியாயுமிருந்தார்; அதனுடன் வெளி நாடு களில் சுதந்தர இயக்கங்களுக்கு உதவி செய்வதில் விருப்பமுடைய வராயும், ஆனால் உள்நாட்டிற் காணப்பட்ட மாறுதல்கள் எல்லா வற்றையும் குறித்து ஐயம் கொண்டவராயுமிருந்தார். அவருடைய கருத்துப் பட்டியல் எதுவும் அவருடைய தன்மையைப் பற்றி விளக்கு வதாயில்லை. அவர் அரசியலை ஒரு விளையாட்டாகக் கொண்டார்; எனவே, விளையாட்டை விரும்பும் ஆங்கிலேய மக்களிடையே மதிப்பைப் பெற்றவராயிருந்தார்; பிரிட்டிஷ் வெளிநாட்டுக் கொள்கையில் முரட்டுத்தனத்தையும் வலியத் தாக்கும் தன்மையையும் ஏற்படுத்தினர். அவ்வியல்புகள் மறைந்த பின்பும் வெளிநாட்டார் மேற்கூறிய இயல் புகளை அவரது வெளிநாட்டுக் கொள்கைக்கு அடைமொழியாகக் கூறி வந்தனர்.

## பால்மர்ஸ்டனின் போர்கள்

**இந்தியக் கலகம் முன்னேற்றமடைந்தது**

இந்தப் பதினைந்து ஆண்டுகளில் போர்கள் நிறைந்திருந்தன. அவற்றிற்பெரும்பாலானவற்றைப் பற்றி முன்னரே கூறப்பட்டுள்ளது. புதிதாக நிலைநாட்டப்பட்ட கிரேக்க ராச்சியத்துடன் தொல்லைகள் ஏற்பட்டன. சைனுவுடன் நடுவுநிலையற்றதும் கொடியதுமான போரும் நடந்தது. எல்லாவற்றிற்கும் மேல் கிரிமியாத் தீபகற்பப் போரும் நடந்தது. இப்போரைப் பற்றிப் போதுமான அளவு ஏற்கனவே கூறப்பட்டுள்ளது தவிர, பிரிட்டிஷ் பேரரசிற்குக் கிரிமியாப் போரைவிட இந்தியாவில் ஏற்பட்ட கலகம் மிகவும் முக்கிய மானதாய் இருந்தது. இங்கிலாந்தின் உள்நாட்டு அரசாங்கம் இந்தியத் துரைத்தனத்தைப் பேரளவில் நடத்தியும் ஆதரித்தும் வந்த போதிலும், துரைத்தனம் இன்றும் பெயரளவில் கிழக்கிந்தியக் கம்பெனியின் கையிலேதான் இருந்தது. இந்தியப் படை சுதேசப் போர் வீரர்களை முக்கியமாகக் கொண்டிருந்தது. படையில் சில பகுதி களில் பிரிட்டிஷ் தோன்றல்களான அதிகாரிகள் பதவியிலிருந்தார்கள். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் எல்லைகள் சமீப காலத்தில் விரைவாக முன்னேறின; டல்ஹௌசிப் பிரபு சிறப்பாக, முக்கியமான சுதேச நாடுகளைப் பட்டத்திற்கு நேரான வாரிசு இல்லாத காரணத்தைக் கொண்டு பிரிட்டிஷ் ஆட்சியுடன் சேர்த்துக்கொண்டார். அதன் விளைவாக 1857-ல் அவர் பதவியிலிருந்து ஓய்வு கொண்டபின் கலகம்

மூண்டது. அதன் பெயரே அவ்வியக்கத்தின் தன்மையை முறையாக்கிக் கூறுகிறது. அக்கலகம் படையின் கலகமே தவிர, மக்களின் கிளர்ச்சியன்று. பிரிட்டிஷ் போர் வீரர்களின் எண்ணிக்கை இந்தியாவில் மிகக் குறைவாயிருந்த காரணத்தால் நிலைமை சிறிது காலம்வரை மிக ஆபத்தான நிலையிலிருந்தது. படையின் ஒரு பகுதியினுடையதும் முக்கிய சுதேச மன்னர்களுடையதுமான பற்றுறுதியால் இக்கலகத்தைச் சமாளித்து, பிரிட்டிஷ் ஆட்சியை மீட்க முடிந்தது. இதன் உடனடியான விளைவு, கிழக்கிந்தியக் கம்பெனி கலைக்கப்பட்டு, இந்தியத் துரைத்தனம் முடியாட்சிக்கு மாற்றப்பட்டதாகும். இந்தியாவைப் பொறுத்த மட்டும் இது முதல் இந்தியாவில் அரசப் பிரதிநிதியும் (வைசிராயும்), தாய்நாட்டில் இந்தியா மந்திரியாரும் முக்கிய அதிகாரிகளானுர்கள்.

V

## 1866ஆம் ஆண்டில் சீர்திருத்த மசோதா

1865-ல் பால்மர்ஸ்டன் இறந்தார். தாய்நாட்டில் சீர்திருத்தம் பற்றிய திட்டங்களுக்கெல்லாம் அவர் தடையாய் இருந்ததால், அவர் இறந்தவுடனே பாராளுமன்றத்தை மேலும் மக்களாட்சித் தன்மைமயமாக்குவதில் அடுத்த கட்டம் ஏற்பட்டது. விக்குகள் அமைச்சர் குழுவிலிருந்தார்கள். ஜான் ரஸ்ஸல் பிரபு முதலமைச்சராயிருந்தார். கிளாட்ஸ்டன் கருவூலத் தலைவராய் இருந்தார். அவர் 1866-ல் சீர்திருத்த மசோதாவைத் தொடங்கி வைத்தார். டோரிகளிடமிருந்தும் இதுவரை பால்மர்ஸ்டனுடைய தலைமையைப் பின்பற்றி உள்ள நிறைவில்லாதவர்களான விக்குகளிடமிருந்தும் கடுமையான எதிர்ப்பை நோக்க வேண்டுவதாயிற்று. அரசாங்கம் சிறுபான்மையோரைக் கொண்டதாகச் செய்யப்பட்டதால், பதவியிலிருந்து நீங்கியது.

## கிளாட்ஸ்டனும் டிஸ்ரேலியும்

சீர்திருத்த மசோதாவைப் பற்றி விவாதம் நடந்தபொழுது கிளாட்ஸ்டனுடைய சட்டத்தின்மீது டிஸ்ரேலி தாக்குதலை நடத்தினர். இவ்விரு தலைவர்களும், டிஸ்ரேலியின் மரணம் வரையில், நிலையான எதிர்ப்புடையவர்களாயிருந்தார்கள். நம்பிக்கை, உணர்ச்சியியல்பு, நோக்கம் இவற்றில் இருவரும் ஒருவரையொருவர் எதிர்க்கிறவராயிருந்தனர். ஆங்கிலேயர்களுடைய கட்சி ஆட்சிமுறை, அரசியற் போட்டிகளை, இரு கட்சிகளின் நம்பிக்கையுள்ள தலைவர்களிடையே போராட்டமாக வளர வழிசெய்வதாகும். இதற்குச் சான்ருக வரலாற்றில் இயற்கையாக இணைந்து வருவன, பிம், வெண்ட்வொர்த்து, ஹாலிஃபாக்ஸ், ஷேப்ட்ஸ்பரி, வால்போல், சாதம், பிட்டு, ஃபாக்ஸ் என்பவர்களின் பெயர்கள். ஆயினும், கிளாட்ஸ்டனும்

டிஸ்ரேலியும் போன்று ஒருவரையொருவர் எதிர்க்கும் புகழ் பெற்ற வீரர்களின் இணைப்பைப்போல வேறெந்த இணைப்பும் பாராளுமன்ற அரங்கத்தில் மற்போர் செய்யவில்லை. கிளாட்ஸ்டன் ஈடனிலும் ஆக்ஸ்ஃபோர்டிலும் கல்வி பயின்று புகழ் பெற்ற மாணவராயிருந்தார்; அதோடு ஆங்கிலேயத் திருச்சபையில் மிக்க தீவிரப் பற்றுறுதியுள்ளவ ராயுமிருந்தார்; 'வளைந்து கொடாத டோரி'யாகப் பாராளுமன்றத்தில் முதன்முதலாகத் தோன்றினுர்; என்றுலும், கானிங்கிடம் சிறந்த மதிப்புக் கொண்டவராயிருந்தார். பின்னர் முதலில் பீலின் நிதிச் சட்டங் களில் சார்புடையவராயும், அதன் பின், பால்மர்ஸ்டனின் முரட்டுத் தனமான வெளிநாட்டுக் கொள்கையை வெறுத்தலின் மூலமும் நாளடைவில் சீர்திருத்தத்தில் விருப்பமுடையவராயும் மாறினுர். முதிர்ந்த வயதையடைந்தபொழுது புதிய கருத்துக்களையே ஏற்றுக் கொள்ள அதிகம் தயாராயிருந்ததுடன், ஜனநாயக மாதிரியில் மாறுதலின் தேவையைப்பற்றி உண்மையான நம்பிக்கை கொண்டவ ராஞர். டிஸ்ரேலி யூதர்வழித் தோன்றலாயினும், ஆங்கிலேயத் திருச்சபையைச் சேர்ந்த உறுப்பினராயிருந்தார். முதலில் அவர் பொதுப் பண்பை மீறியவராயும் நாவலாசிரியராயும் புகழ் பெற்ருர்; தீவிரவாதிகளிடம் முதலில் பரிவுணர்வைக் கொண்டிருந்தார். ஆயினும், சிறப்பாக வெளிநாட்டு அலுவல்களில் அவருடைய ஊக்கமும் வெளிநாட்டினர்களை நடத்துவதில் அதிகமான உயர்நிலைக் கொள்கையில் அவருக்கிருந்த விருப்பமும் அவரை எதிர்க்கட்சியிற் சேரும்படி செய்தன.

## டிஸ்ரேலியின் சீர்திருத்த மசோதா—1866

கன்சர்வேட்டிவ் கட்சியின் தலைவர் ஆனபோதிலும், இறுதி வரையில் கட்சியினரைக்காட்டிலும் மாறுதல்களை ஏற்பதற்கு ஆயத்த மாயிருந்தார்; தம்மைக் கட்சிக்கு அறிவு புகட்டுகிறவராகக் கூறிக் கொண்டார்; 1866-ல் கருவூலத் தலைவராஞர். அப்போது டெர்பீ பிரபு முதலமைச்சராயிருந்தார். சீர்திருத்த மசோதாவைத் தள்ளுபடி செய்வதற்குக் காரணமாயிருந்த அவர், அதைப்போல ஜனநாயகத் தன்மையுள்ள சீர்திருத்த மசோதாவைத் தாமே தோற்றுவித்தது வாயிலாக, தம் கட்சியினரையும் இங்கிலாந்தையும் வியப்புறும்படி செய்தார். அவர் கட்சியினருட் சிலர் இதை மறுத்தனர். ஆயினும், எதிர்க்கட்சியாளர்களாயிருந்த மிதவாதிகள் (தாராளப் போக்கினர்) அவரை ஆதரிக்கக் கடமைப்பட்டிருந்தார்கள். இம்மசோதா நகரங் களில் ஒவ்வொரு வீட்டு ஆடவருக்கும் உறைவிடம் பெற்றிருந்த சிலருக்கும் வாக்குரிமையை அளித்தது. கோட்டங்கட்கு வாக்குரிமை விரிவுபடுத்தப்பட்டது. ஆனல், ஜனநாயக முறை ஏறக்குறைய நெருங்கிய அளவில் நகரங்களில் ஏற்பட்ட போதிலும், கோட்டங்கள் சுமார் இருபதாண்டுகள் வரையில் நடுத்தர மக்கள் வசமிருந்தன.

## கிளாட்ஸ்டனின் வாக்குரிமை மசோதா

வாக்குரிமை இறுதியாக விரிவுபடுத்தப்படுதலை எதிர்நோக்கு வோம். இப்படிச் செய்வதால் கால வரைமுறையை விட்டு நாம் விலகிச் செல்ல நேரிடும். 1884-ல் கிளாட்ஸ்டன் நகரத்திலுள்ளதைப் போன்று கோட்டங்களிலும் வாக்குரிமையை அதேநிலையில் வைக்க ஒரு மசோதாவைத் தோற்றுவித்தார். அதிகவாத எதிர்வாதத்திற்குப் பின் மறு பங்கீட்டு மசோதாவுடன் இணைத்து இரு கட்சிகளாலும் இம்மசோதா ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதனால் ஸ்தானங்களின் வகைப்படுத்தும் முறையிற் காணப்பட்ட சில மோசமான முரண்பாடுகள் நீக்கப்பட்டன. இச்சட்டத்தால் பிரிட்டிஷ் அரசியல் சட்டத்திற்கும் ஜனநாயக அடிப்படைக்கும் மிக நெருக்கமுள்ள நிலை நாட்டப் பட்டது. கிரேட் பிரிட்டனில் குடிமக்களான ஆடவர்கள் சம்பந்தப் பட்ட வரையில் நீண்ட வாத எதிர்வாதம் ஒரு முடிவிற்குக் கொண்டு வரப்பட்டன. ஏற்கனவே ஊடுருவிச் செல்லுவதாயும், இணங்கச் செய்வதாயும் உள்ள ஒலிகள், பெண்டிருக்கு வாக்குரிமை, முழு அரசியல் உரிமைகள் முதலியன அளிப்பது பற்றியும் பிரச்சினைகள் எழுப்பப்பட்டன. இங்கிலாந்தின் அரசியல் வரலாற்றில் இவ்வுரிமைகள் புதியதும் முக்கியமானதுமானதோர் அதிகாரத்தைத் தொடங்குவனவா யிருந்தாலும், இந்நூலில் அவற்றைப்பற்றிக் கருதவேண்டு வதில்லை.

டெர்பி பிரபு பதவி துறந்தபின் 1868-ல் டிஸ்ரேலி முதலமைச்ச ரானபொழுது, பாராளுமன்றத்தைக் கலைத்துவிட்டுச் சீர்திருத்த மசோதாவால் தோற்றுவிக்கப்பட்ட புதிய வாக்காளர் தொகுதிகளை நாடினர். கன்சர்வேட்டிவ்களுக்கு உறுதியாக இவை எதிரியாயிருந்த தால், நூற்றுக்கு மேற்பட்ட பெரும்பான்மை வெற்றிகளால், தாராளப் போக்குக் கட்சி (மிதவாதிகள்) மீண்டும் அதிகாரத்திற்கு வந்தது. கிளாட்ஸ்டன் முதலமைச்சரானார்; உடனே சீர்திருத்தங்களைச் செய்யத் தொடங்கினர்.

## கிளாட்ஸ்டனின் ஆட்சி முறை

மசோதாக்கள் ஒன்றன்பின் ஒன்றாக விரைந்து தொடரலாயின. 1879-ல் தொடக்கக் கல்விச் சட்டம் ஏற்பட்டதன் பயனாகக் கிரேட் பிரிட்டன், ஐரோப்பாவின் மற்ற நாடுகளைப் பின்பற்றி, மொத்தமான தேசியக் கல்வி முறையை நிறுவியது. ஆனால், தனிமனிதர் முயற்சி தனியார் தொடக்கம் இவைகளைக் கொண்டதான கல்வியை நாட்டி னுடையவும் தேசமக்களுடையவும் விவகாரமாய் பொறுப்பாகச் செய் தலில் சிறப்பியல்புகளையெல்லாம் மக்கள் அப்பொழுது நன்குணரா திருந்தார்கள்.

## அயர்லாந்து

எல்லாப் பாராளுமன்றத் தேர்வுகளிலும் மறைவான வாக்களிப்பு முறை தோற்றுவிக்கப்பட்டது. இராணுவத்தின் நீதித்துறையமைப்பிலும் இன்றியமையாத சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. எனினும், கிளாட்ஸ்டனுடைய பெயர் எப்பொழுதும் அயர்லாந்து பிரச்சினையுடன் மிக நெருக்கமான தொடர்புள்ளதாயிருக்கும். இப்பொழுதுதான் அயர்லாந்தின் குறைகளைக் குணப்படுத்துவதற்காக அவர் எடுத்துக்கொண்ட பல முயற்சிகளுள் முதலாவது முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது. கிரேட் பிரிட்டன், அயர்லாந்து இவற்றுக்கிடையேயிருந்த தொடர்பு காரணமாகப் பெரிய தீவை இடைவிடாது உட்படுத்திய தொல்லைகளையும் தீமைகளையும் ஒரு முடிவிற்குக் கொண்டுவர முயன்றூர். அவர் பின்பற்றிய கொள்கை மேலும் கடுமையான விவாதத்திற்குட்பட்டதாயிருக்கிறது. அக்கொள்கையின் போக்கின் படிகளை காலவரைப்படி கோவைப்படுத்துவோம்.

## அயர்லாந்து திருச்சபைக்கு ஆதரவு நிறுத்தப்பட்டது

அயர்லாந்து பிரச்சினையில் இரு புறங்களும் கிளாட்ஸ்டனூல் கவனிக்கப்பட்டன. ஒன்று, சமயத்தைப் பற்றியது; மற்றூென்று, உழவைப் பற்றியது. பிராட்டஸ்டென்டு, தலைமக்கள் ஆட்சியாளர்களின் திருச்சபை மிகச் சிறுபான்மையோரின் திருச்சபையாயிருந்தது. குடிமக்களிற் பெரும்பகுதியினர் ரோமன் கத்தோலிக்கராயிருந்தனர். பிராட்டஸ்டென்டுகளுக்குள்ளும் பாதியளவினர் பிரஸ்பிட்டீரியர்களாயிருந்ததோடு ஆதிக்கம்கொண்டிருந்த திருச்சபையிடம் அதிகம் குறைகூறவும் வேண்டியிருந்தது. 1869-ல் கிளாட்ஸ்டனூல் தோற்றுவிக்கப்பட்ட மசோதா, திருச்சபையிடமிருந்து அதனுடைய பணித்துறை சார்ந்த செல்வாக்கையும் அதன் வருவாய்க்கு முக்கியமாயிருந்த தலைவாய்களையும் பறித்தது. திருச்சபைக்கு ஆதரவு நிறுத்தப்பட்டதோடு, அறக்கொடையும் நிறுத்தப்பட்டது.

## அயர்லாந்து நில மசோதா

இதன்பின், அயர்லாந்தின் நிலப் பிரச்சினையில் கிளாட்ஸ்டன் கவனம் செலுத்தலானூர். அயர்லாந்து நிலப்பிரச்சினை பெரும்பாலும் இரண்டாம் ஹென்றி அத்தீவை வென்றதுமுதல் சமீப காலம்வரையுள்ள அயர்லாந்தின் வரலாறே ஆகும். தொல்லைகளின் மூலங்களாவன: (1) அயர்லாந்தின் நிலக்கிழார்களுட் பெரும்பாலார் நாட்டில் இல்லாமல், இங்கிலாந்தில் வசித்தனர்; அயர்லாந்திலிருந்த நிலத்தின் வாரத்தைப்பெற்றனர். (2) அயர்லாந்தின் நிலவுரிமை

முறைப் பழக்கம் இங்கிலாந்திலிருந்ததைவிட மிகவும் கடுமையாயிருந்தது. குத்தகைக் குடி அவர் செய்த முன்னேற்றங்கட்கு எவ்வித இழப்பு ஈட்டையும் பெறவில்லை. இங்கிலாந்திலோ, அவ்வாறு செய்யப்பட்ட முன்னேற்றங்களுக்கு இழப்பு ஈட்டைப் பெறுவது வழக்கமாயிருந்தது. (3) அயர்லாந்தின் மக்கள்தொகை மிக அதிகமாயிருந்ததால், பண்ணைகளை உயர்ந்த வாரத்திற்கும் கடுமையான நிபந்தனைகட்கும் உட்பட்டு, குத்தகைக்கு விடுவதில் எவ்விதத் தொல்லையுமில்லை. இக்குறைகளை அகற்றக் கிளாட்ஸ்டனுடைய மசோதா முயன்றது. குத்தகைக் குடியானவர்கள் அவர்கள் வசமிருந்த நிலங்களில் முன்னேற்றம் செய்ததற்காக அவர்களுக்குப் பணம் அளிக்கப்படவேண்டும்; வாரம் செலுத்தாமை என்ற காரணம் நீங்கலாக அவர்கள் நிலத்திலிருந்து வெளியேற்றப் படுவார்களேயானல், அவர்களுக்கு இழப்பீடு செலுத்தப்படவேண்டும் என்றும் மசோதா குறிப்பிட்டது. குத்தகைக் குடிகளின் நிலை முன்னேற்றமடைந்தது. ஆனல், மசோதா முழுமையுறவில்லை என்பதினை நாடு உணர்ந்தது. நிலச் சீர்திருத்தமெனும் சாலையில் குடியானவனே நிலத்தின் முழுச் சொந்தக்காரன் எனச் செய்யப்படாத வரையில் அவனுக்கு நிற்கக்கூட இடம் காணப்படுவதாயில்லை.

## பிரான்சு ஜெர்மன் போர்

### அலபாமாவைப்பற்றிய நடுவுநிலைத் தீர்ப்பு

கிளாட்ஸ்டனின் துரைத்தனம் உள்நாட்டு அரசியலில் ஈடுபட்டிருந்ததுடன், எல்லாவற்றிற்கும் மேலாக வெளிநாட்டுப் பிரச்சினைகளில் சிக்கிக்கொள்வதினின்றும் தப்பித்துக்கொள்ள அவாக் கொண்டிருந்தது; சமாதானத்தை நிலவச் செய்வதில் வெற்றி பெற்றது. ஆனல், மிகவும் விரைவுடன்கூடிய வெளிநாட்டுப் பிரச்சினைகள் தோன்றலாயின. 1870 - ல் நடந்த பிரெஞ்சு—ஜெர்மன் போர் இங்கிலாந்தில் தீவிரமான பரபரப்பைக் கிளப்பியது. எனினும், கிளாட்ஸ்டன் எவ்விதத் தலையிடுதலையும் மறுத்தார். அவருடைய செயல், நாட்டு மக்களாற் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனல், 1914-ல் பெரும்போர் நேர்ந்தபொழுது, ஐரோப்பாவில் முதன்மையாயிருந்த இரு நாடுகளுக்குமிடையே, அவற்றுள் ஒன்று படுதோல்வியடையும்வரை போரிடுவதான பெரும்போரைத் தடுக்கச் செய்யக் கூடிய அளவு முயற்சிகளை இங்கிலாந்து பயன்படுத்தியிருக்குமானல் மிக நன்றுயிருந்திருக்கும் என எண்ணுபவர் பலரிருந்தனர். சிறிதுகாலம் கழித்து, அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்குச் செலுத்த வேண்டியிருந்த தொகையைக் குறித்து கிளாட்ஸ்டன் நடுவுநிலைத் தீர்ப்புக்குப் பணிந்தார். இத்தொகை அமெரிக்க உள்நாட்டுப் போரின் போது சுற்றித்திரிந்ததும் இங்கிலாந்தில் கட்டப்பட்டதுமான அலபாமா

எனும் போர்க்கப்பல் தவருகச் செய்த கொள்ளையிடுதலுக்கு ஈடாகச் செலுத்த வேண்டியதாயிற்று. அப்பொழுது அவர் வலிமையற்ற செயல் புரிந்ததாகக் கருதப்பட்டது. ஆனால், நாட்டின் மாண்பிற்கு ஊறுவிளைந்ததென்பது நீங்கலாக ஐக்கிய நாடுகளுடன் போரை எப்படியோ தவிர்த்ததற்காக அவரைக் கடிந்துகொள்ளும் யாரையும் இப்போது காண முடியாது.

1874-ல் கிளாட்ஸ்டனுடைய ஆட்சிக்காலம் முடிவடைந்தது. நடந்த பொதுத் தேர்தல் டிஸ்ரேலிக்குச் செயல் புரியத் தேவையான பெரும்பான்மையை அளித்தது. 19ஆம் நூற்ருண்டில் இங்கிலாந்தில் தேர்தல் தொகுதிகளின் நோக்கம் (சில விலக்குகள் இருந்தன) பொதுத் தேர்தலில் எதிர்க்கட்சிக்கு அதன் ஆதரவை மாற்றுவதாக எவ்வாறு இருந்ததென்பது குறிப்பிடத்தக்கதாயிருந்தது. அயர்லாந்து, வேல்சு, ஸ்காட்லாந்து இவற்றின் வாக்களிப்புக்கள் மிகவும் நிலையாயிருந்தன.

## டிஸ்ரேலியின் ஆட்சி

### ரஷ்ய—துருக்கிப் போர்

1874-லிலிருந்து 1880 வரை, வழக்கமான காலவளவில் டிஸ்ரேலியின் துரைத்தனம் அதிகாரத்திலிருந்தது. நாட்டின் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க எவ்விதச் சட்டமியற்றுதலும் நடைபெறவில்லை. டிஸ்ரேலியின் உண்மையான ஆர்வம் வெளிநாட்டு அலுவல்களில் இருந்தது. அவர் பதவியிலிருந்த காலத்தில் இத்துறையில் கடுமையான பிரச்சினைகளை நோக்க வேண்டியிருந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக ரஷ்ய—துருக்கிப் போர் (1877-1878) இருந்தது. இப்போர் இருபேரெதிரிகளாயிருந்த கிளாட்ஸ்டனையும், டிஸ்ரேலியையும் கடுமையான மோதலுக்குட்படுத்தியது. துருக்கி, பல்கேரியாக் கலகத்தை மிகக் கொடுமையாக நசுக்கியது குறித்துக் கிளாட்ஸ்டன் இடித்துக் கூறியபோது டிஸ்ரேலி துருக்கியர்கள் முற்றிலும் வீழ்ச்சியுறுவதையும் கான்ஸ்டான்டிநோப்பிளை ரஷ்யர்கள் கைப்பற்றுதலையும் தடுப்பதில் முழுமையான அக்கறையுடையவராயிருந்தார். பிரிட்டிஷாரின் தலையிடுதலான அச்சுறுத்தல்தான், ரஷ்யாவின் முன்னேற்றத்தைத் தடை செய்ததற்கும் கான்ஸ்டான்டிநோப்பிளையும் டார்டனல்சையும் துருக்கிய அரசாங்கம் தொடர்ந்து கைப்பற்றியிருந்ததற்கும், முக்கிய காரணமாயிருந்தது. பெர்லினிலிருந்து டிஸ்ரேலி இங்கிலாந்திற்குத் திரும்பினர். அங்கு ஐரோப்பிய மாநாட்டில் கிரேட் பிரிட்டனின் பிரதிநிதியாக, பால்கன் தொல்லையை முடிவு செய்யச் சென்றிருந்தார்; 'புகழுடன் சமாதானத்தை' நாட்டிற்குக் கொணர்ந்ததாக உரிமை பாராட்டினர். ஆனல், 1914இலிருந்து 1918 வரை

கடுமையாய் நிகழ்ந்ததும் ஐரோப்பியப் போர்களிலேயே மிகப் பெரியது மான போரில், ரஷ்யாவின் துணையுடன் பிரிட்டன் டிஸ்ரேலியின் வேலையைப் பயனற்றதாகவாக்கக் கடுமையாகப் போரிட நேர்ந்தது. பிரச்சினைக்கு அவர்கண்ட முடிவு, அவர் எதிர்பார்த்த நன்மை அவரது அச்சம் எல்லாவற்றிற்கும் வரலாற்றின் தீர்ப்பு ஆதரவளிக்காத தாயிற்று.

## எகிப்து

எகிப்து மற்றொரு பிரச்சினையை உண்டாக்கியது. வருங்காலத்தில் முக்கியம் நிறைந்ததாயுள்ள முறையில் அவர் அப்பிரச்சினையை நடத்தினார்; 1876-ல் கீடிவுக்குச் சொந்தமாயிருந்த சூயஸ்கால்வாயின் பங்குகளை அவரிடமிருந்து வாங்கினார்; பின்பு, கீடிவிற்கு மீண்டும் மோசமான நிதித்தொல்லை ஏற்பட்டபோது எகிப்தின் நிதி நிலையை இங்கிலாந்தும் பிரான்சும் சேர்ந்து கூட்டுக் கட்டுப்பாடுகொள்ள ஏற்பாடு செய்தார். இவ்விஷயத்தில் மற்றெல்லா நாடுகளையும் விட இவ்விரு நாடுகளின் நிதி சார்ந்த தன்னலம் மிகவும் பெரிய தாயிருந்தது. 1880-ல் நடந்த பொதுத்தேர்தல் தாராளவாதிகளை மீண்டும் அதிகாரத்திற்குக் கொணர்ந்தது. டிஸ்ரேலி, பீக்கன்ஸ்பீல்டு பிரபு எனும் பட்டத்துடன் பிரபுக்கள் சபைக்கு ஏற்கனவே சென்று விட்டார். 1801-ல் அவர் இறந்தார்.

## VI

இவ்விடத்திலிருந்து, இதுவரை செய்ததற்கும் குறைவாகக் கால வரைமுறையைப்பற்றிக் கவனத்தில் கொள்ளுவோம். அதற்குப் பதிலாக, ஒன்றற்கொன்று தொடர்பில்லாது தனித்தனியாகத் தொடக்கத்திலிருந்து முக்கியமான இருதலைப்புக்களைத் தொடருவோம். அவை, அயர்லாந்து பிரச்சினையும், இங்கிலாந்தின் வெளி நாட்டுத் தொடர்பு வரலாறுமாகும்.

## அயர்லாந்து விவகாரங்கள்

### பார்னல்

கிளாட்ஸ்டன் நல்லெண்ணத்துடன் நிறைவேற்றிய நிலச்சட்டம் அயர்லாந்தில் சமாதானத்தை ஏற்படுத்துவதில் முற்றிலும் தோல்வியுற்றது. டிஸ்ரேலி பதவியிலிருந்தபோது, அயர்லாந்து இயக்கம், புதிய தலைவர், புதிய அமைப்பு இவற்றுடன் முன்னிருந்ததைக் காட்டிலும் வலிமையுடையதாயிற்று. சார்லஸ் ஸ்டுவர்ட்டு பார்னல் என்பார் தலைவரானார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் அரசியல் வரலாற்றில் முக்கியமானவர்களுள் இவர் ஒருவராவார். ஆங்கிலவழித்

தோன்றலான இவர், பிராட்டஸ்டென்டு சமயத்தினராயும் நிலச்சுவான்தாராயுமிருந்தார். ஆனால், நிலச்சுவான்தார்களுடைய தனிநலம், இங்கிலாந்து பாராளுமன்றத்தின் ஆதிக்கம் இவற்றுக்கு எதிராக நடந்த போரில் அயர்லாந்து கத்தோலிக்கர்கள் இதற்குமுன் அவர்கள் கண்டிராத அளவு நற்பயனை விளைவிக்கத்தக்க தலைவராயிருந்தார்.

## அயர்லாந்துக் கட்சியின் புதிய நுண்ணரிய முறைகள்

### நிலச்சங்கம், தன்னாட்சி

அயர்லாந்து மக்களுடைய இயல்புகளில் ஒன்றைக்கூட இவரிடம் காண முடியாது. இவர் சொல்வன்மையுடையவரல்லர்; உணர்ச்சி வயப்பட்டவரும் அல்லர்; அயர்லாந்திற்கு இழைக்கப்பட்ட பழைய குறைகளைப்பற்றி ஒன்றும் அறியாதவராயிருந்ததுடன் அவற்றைப் பற்றிக் கவலையில்லாதவராயுமிருந்தார். ஆனால், உண்மையான மனவெழுச்சியுடன் இங்கிலாந்தை வெறுத்தார். மிக அமைதியான நடுவு நிலையுடன் அதன் போர்க்கவசத்திலிருந்த நலிவான இடங்களைத் தேடினார்; தம்முடைய எண்ணங்களை ஈடேறச் செய்வதில் மக்கள் சபையிலிருந்த அயர்லாந்து கட்சியை முக்கியத் துணைக்கருவியாகப் பயன்படுத்தினார். இக்கட்சி நல்ல கட்டுப்பாடுடனும் இவருக்குக் கீழ்ப் படிந்ததாயுமிருந்தது. மேலும், வரலாற்றில் காணப்பட்ட கட்சிகளின்றித் தனித்துச் சுதந்தரமாயிருந்தது. மகிழ்ச்சியுடன் தகர்த்தெறிய விரும்பிய பிரிட்டனுடைய அரசியல் சட்டத்திடம் எவ்விதப் பற்றுறுதி எண்ணமுமில்லாதிருந்தது. நிலச்சங்கம் புதிதாக அமைக்கப் பட்ட நிறுவனமாகும். தன்னாட்சிபற்றிய இயக்கம் எப்பொழுதும் சமூக நோக்கத்தைக் கொண்டிருந்தது. இப்பொழுது அந்நோக்கம் வெளியிடப்பட்டது. அயர்லாந்து மக்கள் நிலங்களின் உரிமையாளர்களாகச் செய்யப்பட வேண்டும். இவ்வியக்கத்தையொட்டிப் பல மானக் கேடும் வன்முறையும் நிறைந்த காட்சிகள் நிகழ்ந்தன. அயர்லாந்தின் நிலமுறையிலோ, அல்லது துரைத்தனத்திலோ, எவ்விதச் சீர்திருத்த முயற்சியையும் டிஸ்ரேலியின் அரசாங்கம் செய்யவில்லை. ஆனால், கிளாட்ஸ்டன் இரண்டாம் அமைச்சரவை (1880-1885) அமைத்தபோது உண்மையிலேயே அவரது வாழ்க்கையில் முதன்மை கொண்டிருந்த அயர்லாந்து பிரச்சினையை மீண்டும் கவனிக்கலானார்.

## அயர்லாந்து நிலச்சட்டம்—1880

### ஃபிரெடரிக்குக் காவெண்டிஷ் பிரபுவின் கொலை

1880-ல் அயர்லாந்து நிலச்சட்டத்தைக் கொணர்ந்தார். இஃது அவர் முன்பு நிறைவேற்றியிருந்த சட்டத்தின் விரிவாயிருந்தது. நீதி

மன்றக் கட்டளையின் மூலம் வாரத்தை உறுதிசெய்ய நில நீதிமன்றம் ஏற்படுத்தப்பட்டது. இதனுல் நிலத்தின்மீது நிலச்சுவான்தாருடைய ஆதிக்கம் மேலும் தளர்வடைந்தது. (வாரம் பல வழக்குகளில் குறைக்கப்பட்ட போதிலும்) அயர்லாந்து மக்களின் எண்ணத்தில் உடனடியாக வளர்ச்சியேற்படவில்லை. அதற்குப் பதிலாகத் துரைத் தனத்திற்கும் அயர்லாந்தின் தலைவருக்குமிடையே நல்லுறவில் அதிகமான கசப்பு வளர்ந்தது. பார்னல் சிறை செய்யப்பட்டு விடுதலை செய்யப்பட்டார். ஏதாவது நடக்கக்கூடிய ஏற்பாட்டைக் கண்டிருக்க லாம். ஆனுல், 1882-ல் டப்ளினில் அயர்லாந்தின் செயலாளரான ஃபிரெடரிக்குக் காவெண்டிஷ் பிரபுவின் கொலை நிகழ்ந்தது. உடனே துன்புறுத்தக்கூடிய புதிய சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றுடன் அயர்லாந்தின் தலைவர்கள், தொடர்ந்து ஏற்பட்ட பொதுத் தேர்தலில் தாராளப்போக்கினர் கட்சிக்கு எதிராக அவர்களது வலிமையைக் காட்டினுர்கள்.

## கிளாட்ஸ்டனுடைய முதல் தன்னுட்சி மசோதா

1886-ல் ஒன்று சேர்ந்து அமைந்த புதிய மக்கள்சபையில் கன்சர்வேட்டிவ்களைவிடத் தாராளப் போக்கினர் அதிகமாயிருந்தனர். ஆனுல், சபையில் தெளிவான பெரும்பான்மையைப் பெற்றிருக்கவில்லை. பார்னலின் தன்னுட்சிக்கட்சி, சபையில் எக்கட்சியும் சாராது நடுநிலைமை வகித்தனர். 1886 ஏப்பிரலில், கிளாட்ஸ்டன் அவரது முதலாவது தன்னுட்சி மசோதாவைக் கொணர்ந்தார். அயர்லாந்தின் அலுவல்கள் அனைத்தையும் தனிப்பட்ட முறையில் நடத்துவதற்கு ஏற்ற அதிகாரத்துடன் அயர்லாந்து பாராளுமன்றம் ஏற்படுத்துவது; ஆனுல் அயர்லாந்து ஐக்கிய அரசாங்கத்தில் ஒரு பகுதியாய் இருக்க வேண்டியதுடன் இராணுவ, நிதி, வெளிநாட்டுக் கொள்கையில் தனித்த கொள்கையைக் கைக்கொள்ளக் கூடாதென்பது கூறப்பட்டது. நிலச்சுவான்தார்களிடமிருந்து நிலத்தை வாங்குவதற்காக இன்னெரு சட்டம் இயற்றுவதாக வாக்குறுதி அளிக்கப்பட்டது.

## தன்னுட்சி பற்றிய சர்ச்சை

### சாலிஸ்பரியின் துரைத்தனம்

1832-ல் சீர்திருத்த மசோதா ஏற்பட்டதிலிருந்து இம்மசோதா உண்டுபண்ணிய அளவிற்கு அவ்வளவு கொடிய கட்சிப்பொங்குதல் (குழப்பம்) ஏற்படவில்லை. கிளாட்ஸ்டனுடைய நோக்கங்கள் சிலரால் சினத்துடன் அறைகூவப்பட்டன. அயர்லாந்தின் வாக்களிப்பின் உதவியால் அதிகாரத்தில் தம்மை நிலைநிறுத்திக்கொள்வதுதான் அவரது முழுநோக்கம் என்பது வெளிப்படையாக அறிவிக்கப்பட்டது.

இந்நடவடிக்கையின் நுண்ணறிவை மற்றவர்கள் ஏற்க மறுத்தார்கள். அதோடு பிராட்டஸ்டென்டாயிருந்த அல்ஸ்டர் பகுதியின் உரிமைகளை எண்ணிப்பார்க்கும்படி வேண்டப்பட்டது. பிரைட்டு, சேம்பர்லின், டேவன்ஷைர் கோமகனர் முதலானவர் உள்ளிட்ட சற்றேறக்குறைய நூறு தாராளப்போக்கினர், கிளாட்ஸ்டனுடைய கொள்கையை ஏற்றுக் கொள்ள மறுத்தனர். அவர்கள் கட்சியிலிருந்து பிரிந்து சென்றதன் பயனுகத் துரைத்தனம் வீழ்ந்தது. பொதுத்தேர்தல் நடத்தப்பட்டது. வாக்காளர் தொகுதிகள் முடிவில் கிளாட்ஸ்டனின் கொள்கையைத் தள்ளும்படி செய்தன. சாலிஸ்பரிப் பிரபுவின் தலைமையில் (1886—1892) கன்சர்வேட்டிவ் அமைச்சரவை ஏற்பட்டது. ஆனல், அயர்லாந்து பிரச்சினை இன்னும் மிக விரைவுடையதாயிருந்தது. தம்முடைய தன்னுட்சிக் கொள்கையை மேலும் சிறிதளவு பழக்கப்பட்ட வுடன் நாடு ஏற்றுக்கொள்ளும் என்று கிளாட்ஸ்டன் நம்பியதோடு, அடுத்த பொதுத்தேர்தல் தேவையான உயர்கட்டளையைத் (மாண்டேட்டு) தமக்கு அளிக்குமென்றும் எதிர்நோக்கினுர். ஃபிரெடரிக்குக் காவென்டிஷ் பிரபுவின் கொலைக்கு உடன்பாடு அளித்ததாக, பார்னல் மீது 'டைம்ஸ்' பத்திரிகை கொணர்ந்த குற்றச்சாட்டுக்கள், அவருக்குச் சாதகமாயிருந்தன. காரணம், எந்தக் கடிதங்களை அடிப்படையாகக் கொண்டு குற்றம் சாட்டப்பட்டதோ, அந்தக் கடிதங்கள் பொய்க் கையொப்பமிட்டவைகளாக மெய்ப்பிக்கப்பட்டன.

## பார்னலின் வீழ்ச்சி

1890-ல் பார்னலுக்கு எதிராகக் கொண்டுவரப்பட்ட இணைப்பறு (மணவிலக்கு) விண்ணப்பத்தில் குற்றச்சாட்டுக்களால் நிலைமை மாற்றப்பட்டது. விசாரணையின்போது வெளிப்படுத்தப்பட்டவைகளால் பார்னலின் நற்பெயர் மிகஇழிவு படுத்தப்பட்டதாகக் கிளாட்ஸ்டன் எண்ணினுர்; குறிப்பாகத் தாராளப்போக்கினர் கட்சியை ஆதரிப்பவர்களிடையே இது காணப்பட்டதால் அயர்லாந்தின் தலைவர் என்று அவருடன் இனி ஒத்துழைக்க முடியாதென்றும் கருதினுர். அப்படியிருந்தும் பதவியிலிருந்து ஓய்வு பெற, பார்னல் மறுத்தார். அவருடைய கட்சியும், அவரைப் பின்பற்றுகிறவர்களுக்கும் கிளாட்ஸ்டனுக்கும் ஆங்கிலேய தாராளப் போக்கினருக்கும் மனநிறைவு அளிக்க வல்ல மற்றெரு தலைவரை ஏற்றுக்கொண்டவர்களுக்குமிடையே கடுமையாகப் பிரிந்திருந்தது.

## பிரபுக்கள் சபையுடன் கிளாட்ஸ்டனின் சச்சரவு

1892-ல் நடந்த பொதுத்தேர்தல், கிளாட்ஸ்டனுக்கும் அவரை ஆதரித்தவர்களுக்கும் சிறிதளவு பெரும்பான்மையை அளித்தது. அவர் எதிர்பார்த்ததைவிடப் பெரும்பான்மை மிகவும் குறைவாயிருந்தது.

அவர் 1893-ல் புதிய தன்னுட்சி மசோதாவைக் கொணர்ந்தார்; மிக முயன்று மக்கள் சபையின் ஒப்புதலைப் பெற்றுர். ஆனுல், பிரபுக்கள் சபை எவ்விதத் தயக்கமுமின்றி இம்மசோதாவை நிராகரித்தது. இதுதான் கிளாட்ஸ்டனுடைய இறுதி அரசியல் முயற்சியாகும். அவர் மக்கள் சபையில் நிகழ்த்திய இறுதிப் பேருரையில் பிரபுக்கள் சபையின் அதிகாரத்தைத் தாக்கினுர்; 1894-ல் பதவியைத் துறந்தார்; நான்கு ஆண்டுகள் கழித்து, 88ஆம் வயதில் மரணமடைந்தார். அயர்லாந்து பிரச்சினை பாராளுமன்றத்தைக் கலக்குவதை ஒருபோதும் நிறுத்தவில்லை. ஆனுல், 1901–ல் அரசியார் விக்டோரியாவின் மரணத்திற்கு முன் நாம் காலப்படி தொகுக்க வேண்டிய ஒரு நிகழ்ச்சியுமில்லை.

## VII

வெளிநாட்டு அலுவல்களைப்பற்றி ஏதாவது உண்டோ இல்லையோ என்ற மிகச் சுருக்க நிலையே போதுமானது. அடுத்த அதிகாரத்தில் சர்வதேச உறவுகளின் பொது இயல்பைப்பற்றி மீண்டும் மேற்போக்காகக் காண்போம்.

## பிரிட்டனின் வெளிநாட்டுக் கொள்கை

### எகிப்து

கிரேட் பிரிட்டன் எகிப்தில் நன்கு சிக்கியதாயிற்று. எகிப்தின் நிதி நிருவாகத்தில் இங்கிலாந்தும் பிரான்சும் ஒன்று சேர்ந்து தொடர்புற்றிருந்ததை ஏற்கனவே அறிந்தோம். ஆனுல், அது நிலை தடுமாறுவதை மெய்ப்பித்தது. அரபி பாஷா தலைமையில் வேற்று அரசாங்கத்தை எதிர்த்து ஒரு கலகம் மூண்டது. அதை அடக்குவதற்கு உதவியளிக்கப் பிரான்சு மறுத்தது. எனவே, கிரேட் பிரிட்டனுக்கு மாத்திரம் அப்பணியேற்பட்டது. 1882–ல் டெல்-எல்-கபீர் எனுமிடத்தில் சுதேசப்படை தோற்கடிக்கப்பட்டது. கீடிவின் அரசாங்கம் நீக்கப்படவில்லை. ஆனுல், நாட்டின் உண்மை அதிகாரம் பிரிட்டிஷார்களின் கையிலேதானிருந்தது. எகிப்தில் தங்குவது தற்காலிகமாயிருக்க வேண்டுமென்றும், சூழ்நிலை ஏற்றதானவுடன் ஆங்கிலேயர் வெளியேறுவர் என்றும் உறுதிமொழியளித்த போதிலும், சமீப காலம்வரை பிரிட்டிஷார் எகிப்தில் தங்கியிருக்கலாயினர். மூன்றுண்டுகட்குப் பின், மீண்டும் எகிப்தின்மீது கவனம் திரும்பியது. எகிப்தின் தெற்கிலுள்ள பெரிய மாவட்டமான சூடானில் மஹ்தி என்ற சமயத் தலைவர் தோன்றினுர். இது சூடான் கீடிவின் ஆட்சிப் குதிகளுக்குள் ஒரு பகுதியாயிருந்தது.

## போர்த்தலைவர் கோர்டன்

மஹ்தி, நாடு முழுவதிலும் படையெடுத்து, கார்டூமிலும் மற்ற இடங்களிலுமிருந்த கோட்டைப் பாதுகாப்புப் படைகளை (காவற்படை) முற்றுகையிட்டார். நிலைமை மிகக்கடினமாயிருந்தது. கிளாட்ஸ்டனுடைய அரசாங்கம் கொள்கை மாறாமலும், உரத்துடனும் நிலைமையைச் சமாளிக்கவில்லை. இறுதியில் படைத்தலைவரான கோர்டன் காவற்படைகளை அழைத்துவர அனுப்பப்பட்டார். அவர் காலத்திற்கு ஏற்ற தன்மையில்லாத ஒரு வீரத் திருத்தொண்டர். அவரையனுப்பிய தன் நோக்கம் மஹ்தியிடம் நாட்டை விட்டு விடுவதாகும். ஆனால், கோர்டன் கார்டூமையடைந்ததும், நாட்டைச் சீரமைக்கும் வரையில் வெளியேற மறுத்தார்; விரைவில் மஹ்தியால் முற்றுகை செய்யப்பட்டவரானார்.

## உம்துர்மான் சண்டை

அவரைத் தப்புவிக்க உல்ஸியின் தலைமையில் மற்றொரு படையை அனுப்ப வேண்டிய தேவை ஏற்பட்டது. ஆனால், உதவிப்படை அருகிலிருந்தபோது நகரம் வீழ்ச்சியுற்றது. கோர்டனும் கொலையுண்டார். மஹ்தியின் வெறிகொண்ட படைகள் எவ்வித எதிர்ப்பும் இன்றிச் சூடான் முழுவதிலும் (1885) பரவிற்று. பன்னிரண்டாண்டு கட்குப்பின், பிரிட்டிஷ் செல்வாக்கின்கீழ் எகிப்து மீண்டும் அமைக்கப்பட்டு, அரசாங்கம் பெரிதளவு வலிமையுடையதாகச் செய்யப்பட்டிருந்தபோது, சூடானில் மஹ்தியின் வாரிசின் அதிகாரத்தைத் தாக்க, கிட்சினரின் தலைமையில் ஒரு படை அனுப்பப்பட்டது. கார்டூமுக்கு வெளியில் உம்துர்மானில் நடந்த சண்டையில் பகைவரின் அதிகாரம் தோற்கடிக்கப்பட்டு, அதுமுதல் (1889) சூடானில், எகிப்திலிருந்ததை விட அதிகமான நேருரிமையுடன் பிரிட்டிஷார் ஆட்சி புரியலாயினர்.

## போயர் சண்டை

### ஆங்கிலேயரின் வெற்றி

அரசியாரது ஆட்சியின் இறுதிக்காலத்தில் தென்னாப்பிரிக்காவில் மேலும் அதிகக் கடுமையான போர் மூண்டது. டச்சுக் குடியரசு நாடான டிரான்ஸ்வாலில் ‘அவுட்லாண்டர்கள்’ என்னும் வெளிநாட்டினர்கள் (தாயகத்திற்கு மாறான பண்புடையவர்கள்) அதிகமிருந்தார்கள். இவர்கள் பெரும்பாலும் பிரிட்டிஷ் குடிகளாயிருந்தார்கள். இவர்கள் அங்குள்ள தங்கச் சுரங்கங்களால் கவரப்பட்டு அங்குச் சென்றவர்கள். அரசாங்கத்திற்கும் இவர்களுக்குமிடையே

உறவு மனத்தாங்கலுடன் தொல்லையை உண்டு பண்ணுவதாயிருந்தது. இவ்வுறவு, டிரான்ஸ்வாலின் அரசாங்கத்தை முறியடித்துப் பிரிட்டிஷ் பேரரசுடன் வன்முறையில் இணைக்கும் நோக்கத்துடன் கேப்புக் காலனியிலிருந்து ஜேம்ஸன் நடத்திய திடீர்த்தாக்குதலால் மேலும் மோசமடையலாயிற்று. படையெடுப்புக் (1896) கடுந்தோல்வியாய் முடிந்தது. அவுட்லாண்டர்களுக்கு முழுமையான குடியுரிமைகளை உடன்படிக்கை செய்துகொள்ளுவது வாயிலாக அடைவதற்கு ஜோசப்பு சேம்பர்லின் தலைமையில் பிரிட்டிஷ் அரசாங்கம் முயன்றது. ஆனால், பிரச்சினை கடுந்தொல்லை கொண்டதாயிருந்தது. டிரான்ஸ்வாலின் ஜனாதிபதியான குரூகர், ஆங்கில அரசாங்கத்தின் யோசனைகளை மறுத்தார். போர் மூண்டது. அது தொடக்கத்தில் பிரிட்டிஷ் படைகளுக்கு ஏமாற்றத்தையும் தோல்வியையும் உண்டு பண்ணியது. ஆனால், போயர்கள் திறமையுடனும் துணிவுடனும் போரிட்ட பொழுதும், ஒரு பெரிய பேரரசுடன் எதிர்த்துப் போரிடுவதற்கு குறைந்த அளவு உள்ளவர்களாயிருந்தார்கள். வெளிநாட்டு உதவியில்லாதபொழுது முடிவு நிச்சயமானது. போயர் குடியரசின் தலைநகரங்களை ராபர்ட்சும், கிட்சினரும் ஏற்கனவே (1901) கைப்பற்றினர். விக்டோரியா அரசியார் மரணமடையும்போது போரின் முடிவு புலப்படுவதாயிருந்தது.

விக்டோரியாவின் ஆட்சிக் காலத்தில், கிரிமியாப்போர், இந்தியாவிலும் குடியேற்ற நாடுகளிலும் பெரும்பாலும் நிலையாய் நடந்த சண்டைகள் முதலியவை நடந்தபோதிலும் உள்நாட்டில் ஆழ்ந்த சமாதானம் குறைந்ததாயிருந்தது. போர் வீரர்களாலும் அவர்களுடைய வெற்றிகளாலும் நாடு தன்மதிப்புக் கொண்டிருந்தது. ஆனால், மக்களுடைய முக்கிய ஆற்றல்கள் நாட்டினுடைய சமாதான முன்னேற்றங்களான வாணிகம், தொழில், அறிவியல், கலை, இலக்கியம் போன்ற துறைகளில் திருப்பப்பட்டிருந்தன. இப்போதைய நிலை நெடுநாள் நீடிக்காது எனவும், மிக வலிவுள்ள எதிரியான பகைவனிடமிருந்து கிரேட் பிரிட்டன் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டியிருக்குமென்றும் சொன்ன சிலருடைய அறிவுரைகள் கேட்கப்படவில்லை. மக்கள் மனநிலை, நம்பிக்கை, நன்மையை எதிர்பார்த்தல், இறுமாப்பு முதலியவைகளைக் கொண்டதாயிருந்தது. அரசியாருடைய நீண்ட ஆட்சியில் கிரேட் பிரிட்டன் பெரிய சாதனைகளை உண்மையிலேயே செய்திருந்தது. தொழிலிலும் வாணிகத்திலும் நாடு முதன்முயற்சி செய்வதாய் இருந்தது. பழைமையுடன் தொடர்பை அறுத்துக்கொள்ளாமல் புதிய தேவைகளுக்கு ஏற்றவாறு பழைய அரசியற்சட்டத்தை அமைத்துக்கொண்டது. இம்மாதிரி செய்த முறை வரலாற்றில் மிகப்பெரிய அரசியல் சாதனைகளுள் ஒன்றாகும். கல்வியமைப்பில் நாடு மற்ற ஐரோப்பிய நாடுகளுக்குப் பின்னணியிலிருந்தது. ஆனால், இக்காலத்தில் இலக்கியம், அறி

வியல் இவற்றில் ஆங்கிலேயரைக் காட்டிலும் அதிகமாகச் செய்த தாக வேறெந்த மக்களும் உரிமை பாராட்ட முடியாது. தேசிய வுணர்ச்சியிலும் கருத்திலும் பெருமாறுதல்களையுடைய அவ்வளவு நீண்ட காலத்தைப் பற்றிப் பொதுப்படையாகக் கூற முடியுமாஞல், விக்டோரியாவின் காலத்தின் குறைபாடு கிரேட் பிரிட்டன், ஐரோப்பா அல்லது உலகின் மற்றப் பகுதிகளை நோக்காமல் தனியுலகமாயிருந்தது என்ற நம்பிக்கையும் ஒருவித இணக்கவணக்கமுள்ள எண்ணமு மாயிருந்ததெனலாம். 1914-ல் ஏற்பட்ட பெரும்போரில் இந்தம் பிக்கை கடுமையாக ஆட்டம் கொண்டது.

இங்கிலாந்தின் அரசியல் வரலாறு, எஸ். லோவும் எல். சி. சாண்டர்ஸும் எழுதியது. இதன் இறுதிப் பகுதி, 1837 முதல் 1901 வரை உள்ள நிகழ்ச்சியைக் கூறுகிறது. 1815க்குப் பின் இங்கிலாந்தின் உயர்ந்த புகழைப் பற்றிக் கூறும் விரி வான வரலாறு எதுவும் இல்லை. ஆனல், மிஸ். மார்ட்டினேவின் முப்பதாண்டு சமாதானத்தின் வரலாறு, மக்கார்த்தி எழுதியுள்ள நம்முடைய கால வரலாறும் பயனுள்ளவைகளாயும் சுவை மிகுந்தனவாயும் உள்ளன. இக்காலத்திற்குள் வாழ்க்கை நினைவுக் குறிப்புக்கள் மூலம் நுழையலாம். இக்காலத்தில் இவை ஏராள மாயுள்ளன. குறிப்பாக மார்லி எழுதியுள்ள 'மெக்காலே,' மார்லி எழுதியுள்ள 'கிளாட்ஸ்டன்',ஓ. பிரியன் எழுதியுள்ள 'பார்னல்' 'டிஸ்ரேலியின் வாழ்க்கை' என்று மணி பென்னியும் பக்லேயும் எழுதியவை, ஜி. எம். டிரவீலியன் எழுதியுள்ள 'பிரைட்டு' மார்ட்டின் எழுதியுள்ள 'இராணியின் வாழ்க்கைத் துணைவரின் வாழ்க்கை' முதலியன. கிரென்வில்லின் வாழ்க்கை நினைவுக் குறிப்புக்களும் விக் டோரியாவின் கடிதங்களும் வேறு பிரிவைச் சேர்ந்தனவாயினும் பயனுள்ளவை யாகும்.

# 21. சமீப காலம்—இரு போர்களுக்கிடையில்

## I

### 1914-ல் நடந்த பெரும்போர் எதிர் பார்க்கப்படாதது

நெடுங்காலத்துக்கப்பால் இக்காலத்தைப் பற்றி வரலாற்று ஆசிரியர்கள் எழுதும்பொழுது, 'அரசியல் வல்லமையுடையவர்களின் குருடான காலம்' என ஒருவேளை கூறலாம். இது சமூக வாழ்க்கை நூலை (கூடி வாழ்வியல்)—சமூகத்தைப் பற்றிய நுண்ணறிவை—பொதுவாக அறிந்துகொள்ளும் காலமாயிருந்தது. இயற்கை விஞ்ஞானத்தின் வழி முறைகளைப்போல மாற்றமில்லாத முறைகளுக்கு எல்லாமனித அலுவல்களும் கீழ்ப்படிய வேண்டுமென்றும் மக்கள் பேசலானார்கள். இயற்கை விஞ்ஞானத்தின் முறைகளிற் பெரும்பகுதி ஏற்கனவே கண்டு பிடிக்கப்பட்டிருந்தது. மக்களின் பார்வை எதிர்காலத்தைக் குறித்து நோக்கியது. அது கற்பனை உலகக் காலமாயிருந்தது. எல்லா நாடுகளின்—சிறப்பாக அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு ஆகிய நாடுகளின்—எழுத்தாளர்களும், வருங்காலத்தைப்பற்றிய கனவுத் தோற்றங்களில் ஈடுபடும்படி தங்களுடைய கற்பனையைச் செலுத்தினார்கள்: அக்கற்பனையில் வறுமை, நாட்டிலிருந்து விரட்டப்படுவதையும் மக்களிடையே சமாதானம் ஏற்படுவதையும் எப்பொழுதுமே கண்டார்கள். ஆனால், எவரும் 1914-ல் போரை எதிர்பார்த்திருப்பாரேயானால், அது மிகச் சிறியதாயும் மிகக் குறைந்தகாலம் நீடிப்பதாயுமிருந்திருக்கும். அதனுடன் அதுவரை பெயரிடப்படாததும், சரியான (போதுமான) சொற்களைக்கொண்டு வழங்கப்படாததுமான இப்போரைவிட, அவர்கள் கருதிய போர் மிகவும் குறைந்தஅளவு பயங்கரமானதாய் இருந்திருக்கும். வருங்காலத்து வரலாற்றாசிரியர்கள் ஒருவேளை இப்போரைத் தவிர்க்க முடியாததெனக் கூறலாம். (தவிர்க்க

முடியாதது என்ற சொல்லை வரலாற்று ஆசிரியர்கள் மிகத்தெளிவாகவும் மேலெழுந்தவாரியாகவும் பயன்படுத்துகிறார்கள்). அதனுடன் இரு போர்களுக்குமிடையில் வாழ்ந்த தலைமுறையினரை, பிரளயம் ஏற்படும் போது வாழ்க்கையினுடைய சாதாரண இன்பத்தையும் தொழிலையும் நடத்தி வந்த மக்களுடன் ஒப்பிடலாம்.

## சமாதானம் பற்றிய எண்ணங்கள்

போரைப்பற்றிய எண்ணம் அச்சம் முதலியவை ஐரோப்பாவின் அரசியல் வல்லுநர்களிடம் ஐயமின்றி நிலையாகக் குடிகொண்டிருந்தன. உலகின் பல்வேறு பகுதிகளில். பெரியனவும் சிறியனவுமாகிய போர்கள் நடந்தன. ஆனால், மேற்கு ஐரோப்பாவிலிருந்த மக்களும், சிறப்பாகக் கிரேட் பிரிட்டனிலிருந்தவர்களும், வரப்போகும் பேரிடியின் சாயலைப் பற்றித் தொல்லையுறாதிருந்தார்கள். மேற்கு ஐரோப்பா, ரோமப் பேரரசின் சமாதானமான காலத்தின் இறுதியிலிருந்து நாற்பத்து மூன்று ஆண்டு காலமாகப் போரின்றி நீண்ட பாதுகாப்பை நுகர்ந்ததைப் போல வேறெந்தச் சமயத்திலும் உண்மையில் நுகரவில்லை. சமாதானத்தை விரும்பிய நண்பர்கள், இப்போர் காலவரையறையின்றி நீடிக்கப்படலாம் என எதிர்பார்க்கத் தொடங்கினார்கள். பலர், வரலாற்றில் மிகப்பெரிய இராணுவ எழுச்சி ஏற்படுவதற்கு முன்னாலிருந்த சமயத்தில் தாம் இல்லை என்றும் அதற்குப் பதிலாக ஐரோப்பாவின் ஒற்றுமைக்கு உண்மையான அடிப்படையை நிறுவும் சமயத்தில் இருப்பதாகவும் எண்ணினர்.

பொற்காலம் போன்றிருந்த இவ்விடைவேளையின் வரலாற்றை அறியுமுன், இதன் பொது இயல்புகளைப் பற்றிக் காண்போம்.

## விஞ்ஞானமும் புதியன கண்டுபிடித்தலும்

அறிவியலிலும், புதிய இயந்திரங்களைக் கண்டுபிடித்தலிலும் விரைவான முன்னேற்றத்தைக் கொண்டிருந்தது இக்காலம். முன்னேற்றமேயில்லாத அறிவியலே இல்லை. அறிவியலறிஞர்கள் உலகைக் கட்டுப்படுத்துவதைத் தங்கள் வசம் கொண்டிருந்ததாகச் சிலருக்குத் தோன்றியது. புதியவற்றைக் கண்டுபிடிப்பதில் முன்னேற்றம் மிகவும் தெளிவாயிருந்தது. தடையில்லாது எண்ணப்பட்ட கனவுகள் நனவாயின. காற்றில் பறக்கவும் கடல் அலைகளின்கீழ் வழி காணவும் மனிதன் கற்றுக்கொண்டான்; வானவூர்தியையும் 'ஸெப்ளின்களையும்' கண்டுபிடித்தது வாயிலாக முதலாவதையும், நீர்மூழ்கிக் கப்பல்களை வளர்ச்சியடையச் செய்தது வாயிலாக இரண்டாவதையும் கற்றான். நிலத்தின்மேல் போக்குவரவுகள் மிக அதிகமாயின. நீராவிப்பொறி பழைய காலத்தைச் சேர்ந்ததாயிற்று. மின் விசையுடன் பாரம்

இழுத்துச் செல்லும் பெட்ரோல் பொறியும், தெருக்களை (மின்னூர்தி) வண்டிகள் நிறைந்தனவாயும் செய்தன. மருந்தும் அறுவைச் சிகிச்சையும் புகழ் பெற்றவெற்றிகளைக் கொண்டதுடன், பிணிகளை வெற்றிகரமாகத் தாக்கின.

பாராளுமன்றமுறைத் துரைத்தனம் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுதல்

அரசியல் துறையிலும் அரசியற்சட்டத்துடன் கூடிய அரசாங்கத்தின் ஏதாவதோர் அமைப்பை ஏற்படுத்துவதில் பெரிய முன்னேற்றம் எல்லாவிடங்களிலும் இக்காலத்தில் காணப்பட்டது. பிரிட்டனுடைய அரசியற்சட்டம் ஒரே வகையானதாக இனியும் இருக்கவில்லை. நாகரிகமடைந்தனவும், பாதி நாகரிகமடைந்தனவுமாகிய நாடுகளிலும், ஆட்சியியல், மக்களிடமிருந்து தனித்திருப்பதை நிறுத்தி, அவர்களுடன் ஏதாவதொரு கூட்டாளியமைப்பைக் கொண்டது. ரஷ்யாவிலும் ஜெர்மனியிலும் கூட்டாளிமுறை மக்களாட்சியாயிருப்பதிலிருந்து நெடுந்தொலைவிலிருந்தது. ஆனால், மேற்குத் தெற்கு ஐரோப்பாவில், அரசாங்கம் உண்மையான மக்களாட்சியடிப்படையின் மேல் நிலைத்திருக்கத் தொடங்கியது. இப்போக்கிற்கெதிராக, கார்லைலினுடைய குரலைப்போன்று சிலகுரல்கள் ஒலித்ததுடன் நாகரிகம் எட்ட முடியாததை எட்டுவதற்கு முயற்சி செய்கிறதெனப் பேரறிவிப்புச் செய்யப்பட்டது. ஆனால், இப்போக்கு, பொதுவாகத் தவிர்க்க முடியாததாயும் விரும்பத்தக்கதாயும் கருதப்பட்டது.

## புதிய அரசாங்கம்

அரசாங்கத்தைப்பற்றிய கருத்து மாறியதுடன், விரிவாயும் ஆழமாயும் ஏற்பட்டது செயல் முறையிலும் கொள்கையிலுங்கூட மாறுதல் காணப்பட்டது. அரசாங்கத்தின் அதிகாரம், மக்களுடைய உயிரைப் பாதுகாத்தல், நாட்டின் எல்லைப்புறங்களைப் பேணுதல் முதலியவற்றுடன் நிறுத்திக்கொள்ள வேண்டுமென்று கருதிய சிந்தனையாளர் சிலர் (இங்கிலாந்தில் ஹெர்பர்ட்டு ஸ்பென்சரைப் போன்றவர்) இருந்தனர். ஆனால், பொதுவான போக்கு, அரசாங்கத்தினுடைய செயலின் எல்லை மிகவும் விரிவடைவதை நோக்கியதாயிருந்தது. கிரேக்கர்களின் அரசியற்கருத்திற்கும், அரிஸ்டாட்டிலின் தத்துவத்திற்கும் பொதுநோக்கு, தன்னறிவுடன் நோக்கித் திரும்பியது. அரசாங்கம் குடிமக்கட்கு வாழ்க்கையைப் பாதுகாப்பதோடல்லாமல் “நல்வாழ்க்கை’யையும் ஏற்படுத்த வேண்டுமென்று இப்போது எண்ணியது. கண்டனங்கள் எழுந்தன. ஆனால், அத்திசை நோக்கி அலைகள் வலுவாய் எழுந்ததால் எதிர்ப்பு முடியாததாயிற்று. 1871இலிருந்து எல்லா ஐரோப்பிய நாடுகளும், ஐம்பதாண்டுகட்கு முன் துணிவுடன் தொடங்காத செயற்கூறுகளை மேற்கொள்ளத்

தொடங்கின. வாழ்க்கையின் ஒவ்வொருதுறையையும் பெரும்பாலும் அரசாங்கம் கட்டுப்படுத்துகிறது அல்லது இயக்குகிறது. எழும் இன்னல்கள், அரசாங்கத்தின் கட்டுப்பாட்டை விரிவாக்குவதைக் கோருவதால் விலக்கப்படுகிறது; குடிமக்களில் பெரும் பகுதியினருக்குக் கல்வியை அளிக்கிறது ; அவர்களுடைய உடல் நலத்திற்காக நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுகிறது; எந்தச் சூழ்நிலைகள், சுற்றுப் புறங்களின்கீழ் அவர்கள் பணிபுரிய வேண்டுமென்பதை முடிவு செய்கிறது; என்ன கூலி கொடுக்கப்பட வேண்டுமென்பதை முடிவு செய்யவும் தொடங்குகிறது.

## எல்லாத் தகுதியுமுள்ள அரசாங்கம்

அரசாங்கமே மிகப்பெரிய முதலாளியாயும் நிலவுடைமையாளர்களில் தலைமை வாய்ந்ததாயுமிருக்கிறது. இலக்கியம், செய்தித்தாள்கள், சமயம் முதலியவை அதன் செயல்களின் எல்லைக்கு அப்பால் இன்னும் தனித்திருக்கும் வழக்கத்திலிருக்கின்றன. ஆனால், அவற்றையும் கட்டுப்படுத்துவதைத் தொடங்குவதற்கான அறிகுறிகள் காணப்படாமலில்லை. இன்றைய அரசாங்கம், 'எல்லாத் தகுதியுமுள்ளது; எங்கும்நிறைந்தது,' என வழங்கப்படுகிறது. வருங்காலத்தில் திருச்சபையின் (வாழ்க்கையின்) இடத்தை அது எடுத்துக்கொள்ளும் எனக் கருதப்பட்டுள்ளது. சில கொள்கைகளை உருவாக்குகிறவர்கள் சிறப்பாக ஜெர்மனியைச் சேர்ந்தவர்கள். அவர்கள் 'அரசாங்கம் தன் அதிகாரத்தை முன்னேற்றமடையச் செய்வதைத் தவிர வேறெவ்வித ஒழுக்கம் சார்ந்த சட்டத்தையும் ஏற்றுக்கொள்ளக்கூடாது; தனி மனிதனுக்கு, அரசாங்கத்திற்குப் பணி செய்வதுதான் ஒழுக்கமாகும்,' என்று உறுதி கூறினர்கள்.

## தேசிய அரசு

அரசாங்கத்தின் போக்கும் நாட்டினம் சார்ந்ததாகிக் கொண்டிருந்தது. அரசாங்கத்தை நாட்டினத்தோடு இன உறுதி செய்வதும், நாட்டினம் (நாட்டு மக்கள்) என்ற எண்ணங்கொண்ட எந்த மக்களுக்கும் அதன் அலுவல்களை நடத்துவதை அனுமதிப்பதும் பத்தொன்பதாம் நூற்றுண்டின் உயர்ந்த நோக்கங்களில் ஒன்ருகும். 1914-ல் நடந்த பெரும்போர் பல பொருள்களில் வனமானதுகம் ஆழ்ந்ததுமான கருத்தை வற்புறுத்தியது. ஆனல், தேசியத் தன்மையைவிட வேறெந்தப் பிரச்சினையிலும் அதிகக் கவனத்தை வற்புறுத்தவில்லை. தேசியத்தன்மை நூலியலான அல்லது பருப் பொருள்சார்ந்த உண்மையைவிட ஒருகருத்து என்பதுடன் மெய்ப்பாடு என்பது முன்னைவிட இப்போது தெளிவாகக் காணப்பட்டது. கலப்பில்லாத இனமே இல்லை. ஒவ்வோரினக் கூட்டத்திற்கும் அதற்

கான அரசாங்கத்தைக் கொடுப்பதென்பது இயலாதென்பதும், கடந்த காலத்தில் இருந்ததைப் போலவே பல தேசிய முதற்பொருள்களைக் கொண்டிருந்த அரசாங்கங்கள் வருங்காலத்திலிருக்க வேண்டுமென்பதும் தெளிவாயின. ஆனுல், பத்தொன்பதாம் நூற்றுண்டில் அரசாங்கத்தின் தேசியதன்மை அடிப்படை உறுதியாகக் கூறப்பட்டதுடன், கருத்தாளர் ஒரு சிலர் மேற்படி எண்ணத்தைத் தருக்க ரீதியில் செயற்படுத்துவதிலிருந்து பொங்குகிற எல்லா விளைவுகளையும் கண்டனர்.

## பொதுவுடைமை

பொதுவுடைமையின் வளர்ச்சி, (மிகவும் பொதுவாக இச்சொல்லைப் பயன்படுத்தி) அரசாங்கத்தைப் பற்றிய இக்கருத்தை விரிவுபடுத்துவதோடு ஒன்ருகவும் உள்ளது. காரணம், பொதுவுடைமையின் நோக்கங்களைப் பற்றித் தோராயமான இலக்கணம், 'தொழிலாளர்களின் நன்மையைக் கருதித் தொழில்கள் அரசாங்கத்தால் ஆமைக்கப் பெறுவதே,' என்பதாம். அரசாங்கத்தைப்பற்றிய பழைய கருத்துக்களையே பற்றிக்கொள்ளுவோமானுல், மேற்கூறிய இலக்கணம் மனத்தாலும் கருத முடியாததாகும். இக்காலத்துப் பொதுவுடைமையும், சமூக இயக்கங்களும், மிகவும் புதியதும், தனிப்பட்ட இயல்பின் சிறப்புக் கூறுகளுள் ஒன்றுமாகும். அரசியல் வாழ்க்கையில் சமூகப் பிரச்சினைகள் அடக்கியாளும் ஆற்றலாய் வெளிவந்தன. அதனுடன் அக்காலத்துச் சமயக் கருத்துக்களிலும் அவை ஒரு முக்கிய அடிப்படைக்கூருய் விளங்கின. ஒவ்வொரு நாட்டின் வளர்ச்சியிலும் தன்மையிலும் சமூக நிலைமைகள் பேராதிக்கம் பெற்றிருந்தன. அத்தீனியர்களுடைய (ஏதன்ஸ் நாட்டு மக்கள்) அரசாங்கத்தின் வெளிநாட்டு உள்நாட்டு வாழ்க்கையை உறுதி செய்வதிலும் ரோமப் பேரரசின் வீழ்ச்சியை உண்டுபண்ணியதிலும் இவை கொண்ட பங்கைப் புத்தாராய்ச்சி வலியுறுத்துகிறது. நாம் ஏற்கனவே அறிந்தவாறு, அக்காலத்துச் சமூக நிலையின் ஒவ்வொரு கூற்றிற்கும் மானியமுறை ஒத்ததாயிருந்தது. ஆனுல், இக்காலத்தில் சிறப்புற்றிருப்பதும், நன்கமைக்கப்பட்டிருந்ததுமான சமூக இயக்கங்கள், இப்போது காணப்படும் அளவிற்கு அப்போதிருந்த உலகம் முன்பு அறியாதிருந்தது. 1871க்கும் முற்பட்ட காலத்திலேயே இவ்வியக்கங்கள் தோன்றலாயின. முதல் பிரெஞ்சுப்புரட்சியில் அவை காணப்பட்டன. 1848 முதல் 1852 வரையில் பிரான்சில் காணப்பட்ட எல்லா இயக்கங்களிலும் இவை மிகவும் மிகுதியான ஆதிக்கத்தைச் செலுத்தின. 1871-ல், கம்யூனில் இவை கொடுமையான தோற்றத்துடன் வெளிப்பட்டன. அதுமுதல் இவற்றின் ஆற்றல் (வல்லமை) வளர்ந்ததுடன், அமைப்பும் சீரடைந்தது.

## பொது உடைமையும் ஜெர்மனியும்

மேற்கு ஐரோப்பாவில் ஒவ்வொரு நாட்டிலும் வலிமை பொருந்திய தொழிலாளர்களின் இயக்கங்கள் இருக்கின்றன. ஆனால், பிரான்சிலேதான் அவை மிகவும் புரட்சிகரமாயிருக்கின்றன; ஜெர்மனியில் மிக்க வலிமையுள்ளனவாயிருக்கின்றன. பெரும்போருக்கு முன்னர் ஐரோப்பாவில் ஜெர்மனிப் பேரரசும், பிரஷ்யா இராச்சியமுமே மிக்க வலிமையுள்ள நிறுவனங்களெனக் கருதப்பட்டன. பொதுவுடைமையின் வளர்ச்சியைத் தடுக்க நேரிடையாயும் மறைமுகமாயும் அந்நாடுகள் தங்களாலியன்றவரை முயன்றன; ஆனால், எவ்விதப் பயனையும் உண்டு பண்ணாது தோல்வியுற்றன. பொதுவுடைமையின் கோரிக்கைகளுக்கு இணங்குவதில் பிறவிடங்களைக்காட்டிலும் ஜெர்மனியில் மிகக் குறைந்தவளவிற்றான் அறிகுறிகள் காணப்பட்டன. அரசியல் அரங்கில் போற்றுதற்குரியதும் நன்கமைக்கப்பட்டதுமான இருபடைகள் ஒன்றையொன்று எதிர்த்தன. அப்பொழுது 1914—ல் போர் தொடங்கியது. பொதுவுடைமைப் பிரச்சினைகளில் இயங்கிய மக்களின் கவனத்தைத் திருப்புவதற்கு ஜெர்மனி அரசாங்கம் விரும்பியது. இப்பெரும்போர் மூளுவதற்குத் துணையாயிருந்த காரணங்களுள் இதுவும் ஒன்றாகக் கருதப்படுதல் வேண்டும்.

## நாட்டுணர்ச்சியும் பன்னாட்டு ஒற்றுமையுணர்ச்சியும்

அதே காலத்து ஐரோப்பாவை நோக்கும்பொழுது நம் கண்களில் தென்படுபவைகளில், தேசியச்சார்புள்ளதும் எல்லாத் தகுதியுமுள்ளதுமான அரசாங்கம் முதற்பொருளாகும். ஆனால் வேறு திசைகளில் செல்லும் இயக்கங்களின் அறிகுறிகளும் காணப்பட்டன. அக்காலத்தில் நாட்டு உணர்ச்சி ஒரு கூறாயிருந்ததால் அதேபோல அனைத்து நாட்டு ஒற்றுமையுணர்ச்சியுமிருந்தது. சென்ற ஐம்பது ஆண்டுகளில் பிற்கூறிய மனப்பான்மை மிகவும் முன்னேறியுள்ளது. முதற்பொருள், தொழில் என்று கூறப்படுவனவும் புதியவுலகில் இன்றும் சரிசெய்யப்படாத எதிரிகளாகக் காணப்படுவனவும் ஆகிய இரண்டும் பன்னாடுகளையும் பற்றியவை. அதனுடன் பெரும்போர் மூளும்வரையில் அவை அதிகமாகிக்கொண்டிருந்தன என்பதை நாம் கூறவேண்டும். உள் நாட்டில் இருந்ததைப் போலவே முதற்பொருள் வெளிநாடுகளிலும் தயக்கமின்றி முதலீடு செய்யப்பட்டது. முதற்பொருளின் அனைத்து நாட்டு ஊக்கங்களும் சில காலங்களில் அனைத்துநாட்டு அமைதியை ஏற்படுத்தும் ஓர் ஆற்றலாய்க் காணப்பட்டன. தொழிலின் அமைப்பும், பரிவுகளும் மேலும் அதிக வெளிப்படையான அனைத்து நாடுகளைப் பற்றியனவாயிருந்தன. உலகில் எல்லாவற்றிற்கும் பொதுவுடைமை ஒரு பொது

வியக்கமாயிருந்ததுடன் பல நாடுகளிலிருந்து தொழிற்சங்கத்தைச் சார்ந்தவர்கள் மாநாடுகளிற் கூடத் தங்களுடைய நலன்கள் ஒரே மாதிரியாய் இருந்ததாகக் கருதினார்கள். மேலும், கலை, அறிவியல், இலக்கியம், கருத்து முதலியவையெல்லாம் உலகிற்கே பொதுவாயிருக்கின்றன. 15ஆம் 16ஆம் நூற்றாண்டுகளிலிருந்ததைவிடப் பல்கலைக் கழகங்கள் தனிப்பட்ட நாட்டைச் சார்ந்தவைகளாயின. ஆனால், அறிஞர்களும் ஆசிரியர்களும் முன்பிருந்ததைவிடக் குறைவாக ஒரு பல்கலைக் கழகத்திலிருந்து மற்றொன்றிற்குக் குடியேறுவார்கள் என்றாலும், மொழிபற்றிய தொல்லைகள் ஏற்பட்ட போதிலும், முன்பு இலத்தீன் கற்றறிந்தோரிடையே பொதுப்போதனமொழியாயிருந்த போது எவ்வாறு கருத்துக்கள் பரவினவோ, அவ்வாறே இப்பொழுது நூல்களும் கருத்துக்களும் மிக எளிதில் பரவுகின்றன.

## அரசாங்கத்தின் பகைவர்களும் எதிரிகளும்

அரசாங்கத்திற்கும் எதிரிகளும் போட்டிகளும் இல்லாமலில்லை முதலாவதாக அரசாங்கத்தினரின் கருத்துக்களில் அதிக அளவு அல்லது குறைந்த அளவிற்கு அனுதாபம் கொண்டவர் உள்ளனர். இவர்கள் அரசாங்கம் கட்டாயப்படுத்தலைத் தவறெனக் கருதுகின்றனர். தவிர, மேற்கு ஐரோப்பாவில் எல்லாவிடங்களிலும் மக்கள் கூட்டுச் சேரும் சுதந்தரம் இருந்தது. ஒன்றுசேரும் உரிமை இருக்கும்போது எச்சமயத்திலும் சில நிறுவனங்கள் தோன்றலாம். தொழிற்சங்கம், அனைத்து நாட்டுச் சங்கம் அல்லது திருச்சபை என்னும் எப்பெயரைக் கொண்டு வழங்கப்பட்டாலும் அவை அரசாங்கத்தினிடம் முதலில் காட்ட வேண்டிய மேலுரிமைப்பற்றை அவற்றின் உறுப்பினர்களிடமிருந்து முதலில்பெற உரிமை கொண்டாடலாம். ரோமப் பேரரசு அதனால் கட்டுப்படுத்த முடியாத சங்கங்களைக்கண்டு எவ்வாறு அஞ்சியதென்பதை நாம் அறிந்தோம். இந்த அச்சம் ஏற்றுக்கொள்ளக் கூடிய அடிப்படையில் காணப்பட்டது.

## சமயமும் அரசாங்கமும்

### சமயப் பொறையுடைமை

இவ்வமயத்தில் அரசாங்கத்தைக் குறித்து மாறுபட்ட நிலையிலிருந்த சமயத்தையும் அறியலாம். சமயம் எவ்வித ஐயமுமின்றி ஒரு பெரிய ஆற்றலாயிருந்தது. எப்பொழுதும் இருந்ததைப் போலவே வலிமையுள்ளதாயிருந்தது; ஆனால், அதனுடைய ஆதிக்கத்தைச் செலுத்தும் முறைகளும், வழிகளும் பெரிதும் மாறுபட்டிருந்தன. இதை நோக்குமிடத்துப் பதின்மூன்றாவது நூற்றாண்டில் இருந்த ஐரோப்பாவிற்கும் இருபதாவது நூற்றாண்டில் இருந்த ஐரோப்பா

விற்குமிடையே வேறுபாடு எவ்வளவு இருந்தது என்பதை அறியலாம். ஒற்றுமைக்கான எல்லா முறைகளும் மறைந்து போயின. ஐரோப்பா முழுமைக்கும் பேரரசர் என்று உரிமை பாராட்டுபவர் ஒருவருமில்லை. முழுமைக்கும் பேரரசர் விரும்பத்தக்கவர் என்ற நம்பிக்கையும் எங்குமில்லை. பொதுவாக ஏற்றுக்கொள்ளக் கூடிய திருச்சபை, கொள்கை, வழிபாட்டுமுறை ஆகியவையும் இல்லை. ஐரோப்பாவின் சமய வாழ்க்கையும் அரசியல் வாழ்க்கையும் பிரதிநிதியில்லாதிருந்தன. ஒன்றற்கொன்று அண்மையில் காணப்பட்ட பல்வேறு திருச்சபைகள் அனைத்தும், கட்டாயப்படுத்தும் வழக்கத்தைக் கைவிட்டுவிட்டன. அதனுடன் கட்டாயப்படுத்தும் விருப்பத்தையுங்கூட அவை இழந்தன. சமயப்பொறை எனும் சொற்றொடரின் மிகப்பரவிய கருத்து, புதியவுலகின் நற்பேறுகளுள் மிகவும் உறுதியானதொன்றாகும். பதினாறுவது நூற்றாண்டில் அரசியல் வல்லமையுடையவர்களுட் பெரும்பாலார் கடினம் எனக் கருதியது, உண்மையில் மிகவும் எளிதாயிருக்கிறது என்பதை அறிகிறோம். ஒரே நாட்டில் பல்வேறு சமயங்களைப் பின்பற்றுகிறவர் ஒருவர் பக்கத்தில் ஒருவராய் வாழலாம் என்பது அறிகிறோம்.

பொதுவாக ஐரோப்பிய அமைதி நிலவிய இவ்வாண்டுகளில், ஐரோப்பாவின் பெரிய நாடுகளைப்பற்றிய வரலாற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

## II

## பிரான்சு

1870ஆம் ஆண்டுப் போரினால் ஏற்பட்ட பேரழிவு பெரிய ஐரோப்பிய அரசுகளின் வரிசையிலிருந்து பிரான்சை அகற்றவில்லை. அனைத்து நாட்டு அலுவல்களில் அந்நாட்டின் ஆதிக்கம் முதலில் மிகவும் குறைந்தது. ஆனால், கலை, அறிவியல், இலக்கியம் இவற்றில் ஃபிராங்க்பர்ட்டுச் சமாதானத்தினால் அந்நாட்டின் கௌரவம், தான் முதலில் அடைந்த இழிநிலையிலிருந்து அதற்குமுன் எப்பொழுதுமில்லாத அளவிற்கு உயர்ந்திருந்தது. அந்நாட்டின் அரசியல் வாழ்க்கை, பல வழிகளில் வெற்றிகரமாயிருந்தது. ஐரோப்பாவை அமுக்கிக்கொண்டிருந்த பிரச்சினைகளை வேறெந்த நாடும் இந்நாட்டைப் போல இவ்வளவு வெற்றியுடன் சந்திக்கவில்லை. ஆனால், அவ்வெற்றி கற்பனையிலோ அல்லது நினைவிலோ நிலைத்திருக்கக் கூடிய முறையில் அமையவில்லை. அரசியற்சட்டத்தை உருவாக்குவதில், சட்டமியற்றுவோர், இயலுமானால், முடியாட்சி அல்லது பேரரசுத்தன்மை முதலியவை மீண்டும் படையெடுக்க வழிசெய்யும் எவ்விதமான இடுக்கையும் தவிர்க்க வேண்டுமென அவாக்கொண்டிருந்தனர்.

ஜனுதிபதியை மக்களின் வாக்களிப்பால் தேர்ந்தெடுக்காமல், இரு சட்ட மன்றங்களும் ஒன்றுசேர்ந்து தேர்ந்தெடுத்தன.

## தீயர்ஸ்

பிரெஞ்சு முதலமைச்சர்கள்

1871 முதல் *தீயர்ஸ்* நீங்கலாக, மற்ற ஜனுதிபதிகளுள் எவரும் பிரான்சின் வரலாற்றில் கட்டுப்பாடான ஆதிக்கம் செலுத்தவில்லே. அதனுடன் *தீயர்ஸ்* போரின் அடிப்படையிலும் புதிய குடியரசின் தொடக்ககாலத்தில் தலைமைப்பதவியை வகிக்க வலுவானவர் தேவைப்பட்டனரென்பதனுலும் தேர்ந்தெடுக்கப்பட்டார். குடியரசு அரசியற்சட்டத்தில் விதிக்கப்பட்டுப் பிறகு ஏற்றுக்கொள்ளப்பட்ட முறைப்படி அவர் தேர்ந்தெடுக்கப்படவில்லே. பிரான்சின் முதலமைச்சர்களும், ஜனுதிபதிகளேவிட அதிக நிலேயான கருத்தைச் சட்டப்படி உண்டுபண்ணவில்லே. அமைச்சர்களின் பதவிக்காலம் மிகக் குறைவாயிருந்தது. காம்பெட்டா, ஃபெர்ரி, வால்டக் ரூஸ்ஸோ, கிளீமன்ஸோ போன்ற முக்கியமான முதலமைச்சர்கள் இருந்தார்கள். ஆனுல், இங்கிலாந்தில் பழக்கத்திலிருந்த மாற்றமில்லாத கட்சி முறைகளேயும் அவற்ருல் ஏற்றுக்கொள்ளப்பட்ட தலேவர்களேயும், அவற்றின்மீது ஊன்றியிருந்த முதலமைச்சரின் அதிகாரத்தையும் ஒத்ததாய்ப் பிரெஞ்சு அரசியல் வாழ்க்கையில் ஒன்றுமில்லே. எனவே, பிரெஞ்சு அரசியல், முதலாவதாக, தொடர்ந்து காணப்பட்ட அராசரிகமும் சுழற்சியும் கொண்டதாய்த் தோன்றும். அப்படியிருந்தும், ஆட்சிமுறை தொடர்ந்ததாயும் வெற்றியாயுமிருந்தது. ஆட்சிமுறையின்மீது சட்டமன்றம், இங்கிலாந்தில் பாராளுமன்றம் இருப்பதைவிட, மிக நெருக்கமான பிடிப்பைக் கொண்டுள்ளது. மற்ற இடங்களேப் போலவே, பிரான்சிலும், நிலேயான அதிகாரிகள் படையொன்று உள்ளது. இவர்களுடைய அரிய ஆற்றல்கள் அரசியல் வாதிகளுடைய ஆற்றல்களேக் காட்டிலும் மிகவும் முக்கியமானவையாயிருந்தன.

## குடியரசின் ஆபத்துக்கள்

இக்காலத்துப் பிரெஞ்சுக் குடியரசின் வரலாற்றை, குடியரசிற்கு அச்சத்தைத் தோற்றுவித்த பேரிடர்களுடன் ஒன்று சேர்க்கலாம். மக்களினத்திலும், சட்டமன்றங்களிலும் அரசுக் கட்சியினர் அல்லது பேரரசுக் கட்சியினரைப் பின்பற்றுபவர்கள் இருந்த போதிலும், இக்கட்சியினர்களிடமிருந்து வெளிப்படையான எவ்விதத் தாக்குதலும் இல்லே. குடியரசிற்கு ஏற்பட்ட தாக்குதல்கள் மறைமுகமாயிருந்தன.

## போர்த் தலைவர் பொலாங்கர்

1887-ல் பொலாங்கியர்களின் இயக்கம் தோன்றியது. போர்த் தலைவரான பொலாங்கர், நற்புகழ் உடையவராயிருந்ததுடன், போரமைச்சர் என்றமுறையில் படைகளின் நன்மதிப்பைப் பெற்றவராயுமிருந்தார். 1886-ல் வியப்பைத் தருகிற ஓரியக்கத்திற்குத் தலைவர் அல்லது பெயரளவில் தலைவர் ஆனுர். அவர் சிறந்த பேச்சு வன்மையுடையவராகவோ அல்லது அரசியல் வல்லுநராகவோ தோன்றவில்லை. அவர் பெயரால் வழங்கப்பட்ட இயக்கம் (குடியரசைப் பொதுவாகத் தாக்கும்) தனக்குள்ளேயே விரிவான மாறுபாடுகளைக் கொண்டிருந்தது; பல்வேறு குழுக்களைக் கொண்டிருந்தது. அவரைப் பின்பற்றியவர்களின் வெளிப்படையான நோக்கம், அரசியல் சட்டத்தைத் திருத்தியமைத்துப் பொதுமக்கள் மொழியுரிமைப்படி தனிப்பொருளைப் புகுத்துவதும், எப்படியாகிலும் பாராளுமன்ற நிறுவனங்களின் செல்வாக்கைக் குறைப்பதும் ஆகிய செயல்களைப் பற்றியதாம். ஆனுல், அவர் பெயரைச் சொல்லிக்கொண்டு கத்தோலிக்கர்கள் திருச்சபையின் சிறப்புரிமைகளை மீட்பதை எதிர்நோக்கினுர்கள். சட்ட முறையை விரும்பியவரும் ஏகாதிபத்தியக் கொள்கையினரும், அரசியற்சட்டத்தைக் கொந்தளிக்கும் நிலைக்குக் கொண்டுவந்து வைத்தால் அது தாம் விரும்பியவாறு சிறப்பானதோர் உருவத்தில் அமையும் என எதிர்பார்த்தனர். சிறிது காலம் பொலாங்கரை மக்கள் பேரார்வத்துடன் ஆதரித்தார்கள். இதன்விளைவாக, பாரிசுடன் பல வாக்காளர் தொகுதிகளும் இவரைத் தேர்ந்தெடுத்தன. இவர் குடியரசைத் தாக்கியிருப்பாராஞல் குடியரசு உயிர் பிழைத்திருக்க முடியாது என எண்ணினர். ஆனுல், இவர் தம்மைக் கைது செய்வதற்கு (1889) ஆணை பிறப்பிக்கப்பட்டிருந்தது என்று கேள்வியுற்றவுடனே பிரான்சிலிருந்து தப்பியோடிச் சிறிது காலத்திற்குப்பின் பிரஸ்ஸல்ஸில் தற்கொலை புரிந்து கொண்டார். இந்நிகழ்ச்சி முழுவதும் குடியரசின் காப்பில்லாத் தன்மையின் துயரக்காட்சியாயிருந்தது.

## டிரைபஸ் வழக்கு

### கர்னல் பிக்கார்ட்

குடியரசின் வாழ்க்கையில் அடுத்த நெருக்கடி உண்டுபண்ணியது டிரைபஸின் வழக்காகும். ஐரோப்பிய வரலாற்றில் இவ்வழக்கு மிகச் சிக்கலான விவகாரமாகும். யூதர் பீரங்கிப் படைத் தலைவரான காப்டன் டிரைபஸ் 1894-ல் ஜெர்மனிக்கு இராணுவ மறைபொருள்களைக் காட்டிக்கொடுத்ததாகக் குற்றம் சாட்டப்பட்டார். இதற்காகப் பதவி இறக்கம் செய்யப்பட்டு மேற்கிந்தியத் தீவுகளுள் ஒன்றுன டெவில்ஸ் தீவிற்கு நாடு கடத்தப்பட்டார். முதலில் பத்திரிகையாளரின் ஒரு

பகுதினர் யூதர்களை எதிர்த்து நடத்திவந்த இழிவான நடவடிக்கைகளில் இவ்விவகாரம் ஒரு போர்க்கருவி போன்றிருந்ததைத் தவிர மேற்கொண்டு எவ்வித விளைவுகளையும் தோற்றுவிக்காததைப் போலத் தோன்றியது. ஆனுல், 1896-ல் கர்னல் பிக்கார்ட்போர் அலுவலகத்தில் குற்றஞ் சாட்டப்பட்ட டிரைபஸ், குற்றமற்றவர் என மெய்ப்பிக்குமாறு சாட்சியத்தை எடுத்துக் காட்டினர். டிரைபஸ் குற்றவாளியா அல்லரா என்றும், குற்றமற்றவராகில் அவருக்கு விதிக்கப்பட்ட தண்டனையைத் திருத்துவதற்கான முறையீட்டை அனுமதிப்பதா இல்லையா என்பதைப் பற்றியும் பிரான்சில் மிகச்சீற்றமான விவாதம் எழுந்தது. இதில் ஐரோப்பா முழுமையும் கலந்து கொண்டது.

## விவாதத்திற்குட்பட்ட பிரச்சினைகள்

தனி முறையுரிமைப் பிரச்சினை—துன்புற்றிருந்த கைதியின் விதியைப் பற்றியது—மக்களைக் கடுமையாகத் தூண்டியது. ஆனுல், இது தனியுரிமை பற்றிய பிரச்சினையையும் கடந்த பிரச்சினையாயிருந்தது. டிரைபஸை எதிர்த்து நின்றவர்கள் பொதுவாகக் குடியரசுக்கும் பகைவர்களாயிருந்தார்கள். சமய அதிகாரிகளும், முடியாட்சி ஆதரவாளர்களும் ஏகாதிபத்திய வாதிகளும் அவருக்கு எதிரிகளாயிருந்தார்கள். தொடக்கத்தில் எதிர்க்கட்சியில் புகழ் பெற்றவர்களுள் ஒரு சிலரான ஸோலா, பிக்கார்ட், அனட்டோல் பிரான்சு, சியூரர் - கெஸ்ட்னர் போன்றவர்கள் காணப்பட்டார்கள். ஆனுல், சிறுகச்சிறுக நீதி, மனிதப் பண்பு இவற்றைக் குறித்து அவர்கள் செய்த முறையீட்டால் நாட்டு மக்களிற் பெரும்பாலாரைத் தங்கள்பால் திரட்டிக் கொண்டார்கள். இப்போராட்டம், குடியரசு நிலைப்பது பற்றியதாயிற்று. முடிவு, மனநிறைவற்றதாயும் உணர்ச்சியைத் தூண்டுவதாயும் அமைந்தது. டிரைபஸ் நாட்டிற்கு மீண்டும் கொண்டு வரப்பட்டு ரெனீஸ் எனுமிடத்தில் விசாரணைக்குட்படுத்தப்பட்டார். மறுபடியும் அவர் குற்றவாளியெனத் தீர்ப்பளிக்கப்பட்டுத் தண்டனை விதிக்கப்பட்டார். ஆனுல், ஜனுதிபதி உடனே அவருக்கு மன்னிப்பளித்தார். பேரிடரை விளைவிக்கக் கூடிய இப்புயலிலிருந்து குடியரசைப் பாதுகாத்த பொறுப்பு, தலைமையமைச்சாரயிருந்த வால்டக்-ரூஸ்ஸோவைச் சார்ந்ததாகும்.

## திருக்கோயிலின் தொடர்பு அறுத்தல்

'டிரைபஸ் விவகாரம்' பிரச்சினைக்குரிய மிக முக்கியமான நிலையைக் கொண்டுவிட்டது. பிரான்சின் கத்தோலிக்கத் திருச்சபையும் சமயச் சங்கங்களும், டிரைபஸ் குடியரசு இவைகளுக்கு எதிராக நடந்த கிளர்ச்சியில் முதன்மையான பங்கை எடுத்துக்கெண்டன என்று

குற்றஞ்சாட்டப்பட்டது. எனவே, இவ்விரண்டும் கடுந்தாக்குதல் களுக்குள்ளாயின. சமயச் சங்கங்கள் கடுஞ்சோதனைக்குட்படுத்தப் பட்டன. பல சங்கங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது. பிரசாரம் செய்ய எதற்கும் இசைவளிக்கப்படவில்லை. உறுப்பினர் நாடு கடத்தப் பட்டு வெளி நாடுகட்குச் சென்றனர். இதன்பின் பிரான்சில் திருச்சபையின் நிலைமையின்மீது தாக்குதல் தொடர்ந்தது. நெப்போலியனால் ஏற்படுத்தப்பட்ட ஒற்றுமைப் பத்திரம் புறக்கணிக்கப் பட்டதுடன் அரசாங்கமும் திருச்சபையும் இவற்றினின்றும் முழுமை யாகப் பிரிந்துபோக ஆணையிடப்பட்டது. அது முதல் அரசாங்கத்தி லிருந்து எந்தச் சமயத் தலைவருக்கும் ஊதியம் அளிப்பது கூடாது என்றும், ஆனால் வழிபாட்டிற்காகத் திருச்சபையின் அமைப்பில் சங்கங்கள் அமைக்கப்பட வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. போப்பாண்டவர் (1906) பயனற்ற வகையில் இதனை எதிர்த்தார்.

## சிண்டிகலிசம்

அந்நாள் முதல் பிரெஞ்சுக் குடியரசு, சிற்சில நேரங்களில் வேலை நிறுத்தம், கடும்போராட்டம் ஆகியவைகளைக் கொண்டிருந்த தொழிலாளர் பிரச்சினைகளில் ஈடுபடுவதாயிற்று. பிரான்சின் தொழிலாளர் இயக்கத்தில் இரு கூறுகள் குறிப்பாக நோக்கத்தக்கவை. சிண்டிகலிசம் (தொழிலாளர் குழுவாட்சி) வளர்ந்ததுடன்—அரசாங் கத்தினின்றும் தனித்துச் சுயேச்சையான தொழிலாளர் சங்கங்களின் செயல்பற்றிய இயக்கம்—தொழிலாளர் தலைவர்களுட் பலரின் வலுவான சமாதானக் கொள்கை ஆகியவையும் ஏற்பட்டன. ஆனால், 1914-ல் போர் மூண்டதும் பிரெஞ்சு நிலத்தை மிதித்துப் படையெடுத்தவர்களை விரட்டியடிப்பதில் பிரெஞ்சு மக்களில் மற்றப் பகுதியினர் கொண் டிருந்த மனவுறுதியைப் போலவே தொழிலாளர்களும் மனவுறுதி கொண்டிருந்தார்கள்.

## ஜெர்மனி

பன்னாட்டுத் தொடர்புகளின் சரிதத்தை இவ்வதிகாரத்தின் பிற் பகுதிக்கு நாம் ஒத்திப்போடுவதால், ஜெர்மனியின் வரலாற்றைப் பற்றி நாம் விரைவாகக் கடந்து செல்லலாம். வாணிகத்திலும் தொழிலிலும் இந்நாடு சிறப்பாக முன்னேறியிருந்ததுடன் இவ்வாண்டுகளில் அமைப்பு முறையிலும் முன்னேறியிருந்தது. ஐரோப்பா அறியுமுன்பே புதிய ஜெர்மனி தோன்றியிருந்தது. அது உணர்ச்சி வயப்படல், மிகச் சிறந்த கற்பனை நோக்கம், பிளவுபட்டிருத்தல் முதலியவை களில்லாமல், ஒன்றுபட்டதும் நெருக்கமானதும், வளையாத அமைப்பு முறையைக் கொண்டதும், ஐரோப்பாவில் வேறெந்த நாடும் பெற்றி

ராததும் ஆகிய சிறப்பமைந்த இராணுவத்தையும், இங்கிலாந்தைவிட அதிகமாக ஒருமுகமான ஆவலுடன் செல்வத்தை ஈட்டுவதில் முயற்சியும், அதிகாரத்திற்கு வணக்கஞ்செலுத்தலும் ஆகியவற்றைக் கொண்டிருந்தது. இக்காரணத்தின் முதற்பகுதியில், பிஸ்மார்க்கின் ஆட்சி அடங்கியிருந்தது. ஜெர்மன் பேரரசைத் தோற்றுவித்தவர் அவரே. ஆனால், அவர் புதிய தலைமுறையினரிடத்தில் சில போக்குக்களையும் நோக்கங்களையும் எச்சரிக்கையுடன் கண்டார். இப்பெரிய மாற்றம் 1888-ல் முதலாம் வில்லியம் இறந்தபொழுது ஏற்பட்டது. அவருக்குப் பின் அவர் புதல்வர் மூன்றும் ஃபிரெடரிக்குப் பட்டமடைந்தார்; ஆட்சி புரிந்த மூன்று மாதகாலத்தில் வலுவான தாராளப் போக்கை வெளிக்காட்டினர். 1888 ஜூனில் அவர் இறந்தார். இரண்டாம் வில்லியம் ஆட்சி புரியலானர்.

## இரண்டாம் வில்லியம்

இரண்டாம் வில்லியத்தின் இயல்பு, நோக்கங்களைப்பற்றி மேலும் பல ஆண்டுகளுக்கு வரலாற்றாசிரியர்கள் எழுத முற்படுவார்கள். இப்பொழுதும் அவரைப்பற்றி ஐயப்படக் கூடாதவை பலவுள. அவர் செருக்கும் காமவுணர்ச்சியும் மிக்கவராயிருந்தார்; முடியரசின் அதிகாரத்தைப்பற்றி முழுமையான கருத்துடையவராயிருந்ததுடன் இறைவனிடமிருந்து முடி நேராகத் தமக்குக் கிடைத்ததாகவும் கருதினர்; ஜெர்மனியின் உண்மையதிகாரம் தம்மிடம் இருக்க வேண்டுமென்று உறுதி பூண்டிருந்தார். அவருடைய இயல்பும் நோக்கங்களும் அவருடைய தந்தையாரான மூன்றும் ஃபிரெடரிக்குடன் மாத்திரமல்லாமல், பிஸ்மார்க்குடனும் பொருதும்படி ஆயிற்று. அவருக்கும் பிஸ்மார்க்கிற்கும் ஏற்பட்ட போட்டியும் ஓரளவு அதிகாரம் வகிப்பதைப் பொறுத்ததாகும். அவருடைய தனிப்பட்ட வரம்பிலா ஆட்சிக்கு, பிஸ்மார்க்குத் தடையாயிருந்தார். ஆனல், இது கொள்கையில் காணப்பட்ட ஒரு சச்சரவாயுமிருந்தது. ஐரோப்பிய அரசியல் முறையில் ஜெர்மனியையும் ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒருறுப்பாகச் செய்ய விரும்பினர் பிஸ்மார்க்கு. குடியேற்றத் தொழிற்றுணிவில் அல்லது முயற்சியில் அவருடைய ஆர்வம் ஓரெல்லைக்குட்பட்டிருந்தது அவர் கடல் ஆதிக்கக் கொள்கையை விறுவிறுப்படையச் செய்வதால் நாட்டிற்கு நேரக்கூடிய பேரிடர்களையும் உணர்ந்திருந்தார். பேரரசரிடம் எவ்வித அச்சமும் தயக்கமும் காணப்படவில்லை. அவர், ‘ஜெர்மனியின் வருங்காலம் கடலிலேதானிருக்கிறது,’ என்பதை அறிவித்தார்; நிலப்படையை வலுவுள்ளதாக்க அவர் பாட்டனர் எதைச் செய்திருந்தாரோ, அதை ஜெர்மனியின் கப்பற்படையை வலுவடையச் செய்யப் பயன்படுத்தப் பேரவாக் கொண்டிருந்தார்.

## பிஸ்மார்க்கின் வீழ்ச்சி

எல்லாவற்றையும்விட, பிஸ்மார்க்குப் பதவியிலிருப்பதானுல், தமக்குக் கீழ்ப்படிந்திருக்க வேண்டும் என்றும் அறிவித்தார். இதற்குப் புகழ்பெற்ற சான்ஸலரான பிஸ்மார்க்கு இணங்க மறுத்ததால், 1890-ல் பதவியிலிருந்து நீக்கப்பெற்ருர். இவருடைய கொள்கைக்கும், இவருக்குப்பின் பட்டமெய்திய இளைஞரான பேரரசருக்கும் மாறுபாடு மிகப் பெரியதாயிருந்தது. ஆனுல், பிஸ்மார்க்கு ஜெர்மனியை மட்டும் உருவாக்கவில்லை. அவர் காலத்திலிருந்து அந்நாட்டின் கொள்கையில் சிறப்பாகக் காணப்படுகிற தனி இயல்புகளைத் தம்முடைய அறிவுரையாலும் வெற்றிகளாலும் உருவாக்கினுர். அச்சிறப்பு இயல்புகளாவன, படைப்பலத்தில் நம்பிக்கை, அனைத்து நாட்டுச் சட்டம் நீதி முதலான கருத்துக்களை அவமதித்தல், அரசாங்கத்திற்கும் மேலானதாக அல்லது புனிதமாக வேறு எதையும் ஏற்றுக்கொள்ளாமை என்பனவாம்.

### ஜெர்மனியின் கப்பற்படையும் குடியேற்ற நாடுகளின் பேரரசும்

இரண்டாம் வில்லியம் அதிகாரத்தைத் தாமே ஏற்றபின், வலிமையான கடற்படையை அமைத்தல், குடியேற்றப் பேரரசிற்கு அடிகோலுதல், பொதுவுடைமையின் வளர்ச்சியை முறையாக அமைத்தல் போன்றவை ஜெர்மனியின் முக்கியக் கூறுகளாயிருந்தன. 1800-ல் கிரேட்பிரிட்டனுடன் ஏற்பட்ட ஏற்பாட்டின் பயனுகக் கிடைத்த ஹிலிகோலாந்து ஜெர்மனிக்கு ஒரு முக்கியமான கப்பற்படைத்தளமாயிற்று. 1895-ல் முடிவுற்ற கீல் கால்வாய், ஜெர்மனியின் கப்பற்படையின் வலிமையை மிக அதிகமாக்கியது; இதனுல் டென்மார்க்கின் கடலைச்சுற்றிச் செல்லாமல், பால்டிக்கு, வடகடல், கப்பற்படைகள் ஒன்ருக இணைவதற்கு வழிசெய்தது. இக்கொள்கையை ஜெர்மனி கப்பற்படைச்சங்கம் பொதுமக்களின் பெருந்துணையுடன் ஆதரித்தது. 1897-ல் ஒரு பெரிய கபபற்கட்டும் திட்டம் மேற்கொள்ளப்பட்டுத் தொடர்ந்து வளர்ச்சி செய்யப்பட்டுள்ளது. இப்புதிய கப்பற்படை இங்கிலாந்திற்கும் ஜெர்மனிக்குமிடையே பகைமை ஏற்படத் தலையாய காரணமாயிற்று.

### ஆப்பிரிக்காவிலும் சீனுவிலும் ஜெர்மனியின் அதிகார வளர்ச்சி

1980-ல் சாலிஸ்பரி பிரபுவால் முடிவு செய்யப்பட்டபடி ஆப்பிரிக்காவின் பிரிவினையின் பெரும்பயனுக ஜெர்மனியின் குடியேற்ற நாட்டுப் பேரரசு தோன்றலாயிற்று. 1897-ல் சீனுவில் தோன்றிய கலகங்களைப் பயன்படுத்திக்கொண்டு பேரரசர் கியாசோவை வயப்படுத்திக் கொண்டார். பிற்காலத்தில் சீனுவில் ஜெர்மனியின் வாணிகத்தைத் தொடர்ந்து வெற்றிகரமாக அமைப்பதற்கு இப்பகுதி அடித்தளமாகச்-

செய்யப்பட்டது. இது பேரரசின் சிறந்த வெற்றிகளுள் ஒன்றாகக் கருதப்பட்டது. கணக்கற்ற அர்மீனியர்களைப் படுகொலை செய்த குற்றத்தைப் புரிந்திருந்த துருக்கி நாட்டுச் சுல்தானுடன் ஜெர்மனி மிக நெருக்கமான நட்புறவு கொண்டது. இதன்பயனாக ஆசியா மைனர், மெசபட்டோமியாவிற்குள் நுழைய வசதி பெற்றது. பெரும் போர் ஏற்பட்ட பொழுது ஜெர்மனி, பாக்தாதிற்கு இருப்புப்பாதையை அமைத்துக்கொண்டிருந்தது. இவ்விணைப்பு, உலக நாகரிகத்தின் பிறப்பிடமும் பல நூற்றாண்டுகளாகப் பாழாகியிருந்ததும் ஆன பகுதியை வாணிகம், ஐரோப்பாவின் செல்வாக்கு முதலியவற்றுடன் தொடர்புகொள்ள வழியை உண்டுபண்ணியிருக்கும். 'அண்மைக் கிழக்கில்' ஜெர்மனியின் பேரவாக்கள் மற்ற நாடுகளைக் காட்டிலும் அப்பாற்பட்டனவாயிருந்தன.

## ஜெர்மனியில் சோஷலிசம்

சோஷலிசக் கொள்கையின் வளர்ச்சி, ஜெர்மனியினுடைய வெற்றிகளின் முன்னேற்றத்திற்குத் தடையாயிருந்தது. அரசாங்கத்தின் தன்னரசு சுதந்தரமான நாடுகளில் மிதவாதிகள் அல்லது பழைமையை ஆதரிப்போராக இருக்கவேண்டியவருட் பலரைச் சோஷலிசத்தைப் பின்பற்றுகிறவராகச் செய்தது. தொழிலாளர்களின் சட்டங்களை இயற்றுவது வாயிலாக, இவ்வியக்கத்தை உடன்பாடு செய்ய முதலிற் பேரரசர் விரும்பினர்; பின்பு இவ்வியக்கத்தை நாட்டுப்பற்றற்றதென்றும் நாட்டுக்குத் துரோகம் செய்வதென்றும் கண்டித்தார். ஆனால், பொதுவுடைமைவாதிகளின் வாக்களிப்பின் வளர்ச்சியில் எவ்விதத் தடையும் ஏற்படவில்லை; ரீக்ஸ்டாகில் (ஜெர்மன் பாராளுமன்றம் மிகப்பெரிய கட்சியாயிருந்தது. அதனுடன் ஜெர்மனியின் தேர்தல்முறை ஏற்றுக்கொள்ளக்கூடிய அடிப்படையில் திருத்தி அமைக்கப்பட்டிருக்குமானால், அக்கட்சியின் உறுப்பினர்களின் எண்ணிக்கை மிக அதிகமாகியிருக்கும். அரசாங்கத்திற்கு இக் கட்சியின் எதிர்ப்பு மிக வெளிப்படையாயிருந்ததுடன் மிகக் கடுமையாயுமிருந்தது. ஜெர்மனியினுடைய இராணுவஞ்சார்ந்த பேரவாக்களுக்கு இக்கட்சி பயனுள்ள தடையாயிருக்குமெனக் காண்போர் கருதினர். காரணம், இதன் தலைவர்கள் இது அடிக்கடி நாடுகளை வலியத்தாக்கி வயப்படுத்தும் போர்களில் ஒத்துழைக்காதென அறிவித்து வந்தார்கள். ஆனால், 1914-ல் தோன்றிய பெரும்போர் இவ்வெண்ணங்கள் எவ்வளவு தூரம் தவறென்பதை உணர்த்தியது. இக்கால அரசாட்சியில், இராணுவ நெருக்கடியேற்படும் போதெல்லாம், பெரிய அளவில் காணப்படும் சிறுபான்மைக் கட்சிகளின் செயல்கள் சிறிதளவு செல்வாக்கைக்கூட அரசாங்கத்திற் பெறுவதில்லை. எனவே, சோஷலிஸ்டுகளும் வலியத் தாக்கி நாடு பிடிக்கும் போரை உண்மையில்

வெறுத்திருந்தும், ஜெர்மன் படைகளிற்சேர்ந்து பெல்ஜியத்தை அழிக்கவும் பிரான்சின்மீது படையெடுக்கவும் முற்பட்டார்கள். போருக்குப்பின் ஜெர்மனியின் சோஷலிசத்தின் வருங்காலமும், அதன் அரசியல் சமூகத் திட்டங்களும், விருப்புடன் அல்லது வெறுப்புடன் ஒத்துழைத்த கொள்கையைக் குறித்து அதன் மனநிலையும் மிகவும் உற்சாகமான பிரச்சினைகளாயின.

ஆஸ்திரியா—ஹங்கேரியின் வரலாற்றை ஒரு சில வரிகளில் சுருக்கமாகக் கூறுவோம்: உள்நாட்டில் வாக்குரிமையளித்தல் பேரரசில் அடங்கியிருந்த பல்வேறு மக்களினங்கள் ஒன்றோடொன்று கொண்டுள்ள தொடர்புகள் முதலிய பிரச்சினைகளில் அரசு ஈடுபட்டிருந்தது. உள்நாட்டு வரலாற்றில் இது சிறப்பாகக் காணப்பட்டது. பிரச்சினையைத் தீர்க்க முன்னிலை முயற்சிகட்குப் பின் 1907-ல் ஒரு மசோதா நிறைவேற்றப்பட்டது. இதன்பயனாக ஆஸ்திரியாவில் இருபத்து நான்கு வயது நிரம்பியவர்களுக்கெல்லாம் வாக்குரிமை வழங்கப்பட்டது. ஜெர்மானியர்களுக்கு அதிகமான இடங்கள் கிடைத்தன. எண்ணிக்கைக்கு ஏற்ப இல்லாமல், ஸெக்குகளுக்குக் குறைவானவிடங்கள் கிடைத்தன. ஆனால், சட்டம் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. பொஹீமியாவிலிருந்த 'ஸெக்கு' களுக்கும் கலீஷியாவிலிருந்து போல்களுக்கும் சலுகைகள் அளிக்கப்பட்டன. எனினும், இனப் பிரச்சினை கடுமையாயிருந்தது. 1867முதல் முழுமையான உள்நாட்டுத் தன்னாட்சியைப் போன்றதோர் ஆட்சி ஹங்கேரியில் நிலவியது. அரசியற்சட்டமும் முழுவாக்குரிமையின் அடிப்படையில் அமைந்திருந்தது. சுதந்தரத்தையும், அதிகாரத்தையும் மிக்க வலிமையுடன் உறுதிப்படுத்தலும், முடியாட்சியின் கீழிருந்ததும் கீழ்ப்பட்டிருந்ததுமான இனங்களின்மீது மாக்கியார் இனத்தின் பேராதிக்கத்தை நிலை நிறுத்துதலும் ஹங்கேரியின் முக்கியமான முயற்சிகளாயிருந்தன. பெரும்போரேற்படும் வரையில் (நிலப்படத்திலிருந்து ஆஸ்திரியா—ஹங்கேரியை நீக்கிவிடுவதாய்) அமைந்திருந்தது. இப்போர் நாட்டில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டுக்கொண்டிருந்தது போலத் தோன்றியது. இனி அந்நாட்டு மன்னர்கள் 'ஐரோப்பாவின் மண்டாரின்களாக' (சீன உயர்குடிமக்கள்) இருக்கவில்லை. நாட்டின் பெரும்பகுதியில் தொழிலிலும் அறிவிலும் வளர்ச்சி காணப்பட்டது. கவர்ச்சியுள்ள அரசியற்சட்டம் சார்ந்த சோதனைகள் செய்யப்பட்டுவந்தன. பேரரசர் ஃபிரான்சிஸ் ஜோசப்பு இறக்கவே, பேரரசு தவிர்க்க முடியாதவாறு தகர்த்தெறியப் படுவதைப்பற்றிக் கேள்விப்படவில்லை. ஆஸ்திரியப் பேரரசை, அதன் பல்வேறு பிரிவுகள், எதிர்ப்புக்கள் இருந்த போதிலும், ஒரு நிலையான அடிப்படையில் அமைக்க ஏதோ ஒருவழி கண்டுபிடிக்கப்பட்டது போலத் தோன்றியது. ஆனால், எதிர்பார்த்தவைகளெல்லாம் பெரும்போரில் அடித்துச் செல்லப்பட்டன.

## ரஷ்யா

ரஷியாவின் உள்நாட்டு வரலாறு, எவ்வளவு முக்கியமாயிருந்ததோ அவ்வளவு கடினமானதாயுமிருந்தது. அரை நூற்றாண்டிற்கு மேலாகவே, கருத்து, சமயம், அரசியல், சமூகவமைப்பு முதலியவைகளிற் பெரிய கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது. மேற்கு ஐரோப்பாவில், ரஷ்யாவின் கருத்தும் எடுத்துக்காட்டும் மேலான ஆதிக்கத்தைப் பெறுவதற்குத் தொடங்கின. அவை அதிகமாகலாமெனவும் தோன்றியது.

## அடிமைகளின் விடுதலை

கிரிமியாப் போருக்குப்பின் ரஷ்ய வரலாற்றை நாம் காணவில்லை. போர் நடக்கும்பொழுது பட்டத்திற்கு வந்த இரண்டாம் அலெக்ஸாண்டருடைய ஆட்சி இரு முக்கியமான சமூகம் சார்ந்த நிகழ்ச்சிகளாற் சிறப்புற்றிருந்தது. அடிமைகளுக்கு விடுதலை அளிக்கப்பட்டது. சூனியவாதம் தலையெடுத்தது. அடிமைகளுக்கு விடுதலை அளிப்பதென்பது புதிய கருத்தன்று. மனிதப் பண்பு, பொருளாதார அடிப்படையில் நெடுநாளாய் அடிமைத்தனம் விவாதிக்கப்பட்டு வந்துள்ளது. ரஷ்யாவில் சற்றேறக்குறைய ஐம்பது மில்லியன் அடிமைகள் இருந்தார்கள். அவர்கள் நிலைமை பெரிதும் மாறுபட்டிருந்தது. ஆனால், எல்லாரும் நிலத்துடன் இணைக்கப்பட்டிருந்தனர். நிலச் சொந்தக்காரரின் தனிச்சொத்தாக அவர்கள் இருக்கவில்லை; ஆயினும், ஜமீனின் ஒரு பகுதியாகவே இருந்தனர். அடிமைகளை வாங்கவும் விற்கவும் முடியாது. அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சிறுநிலமும் அவர்களுடைய குடியிருப்பும் அவர்களுக்குச் சொந்தம் என்பது உறுதியாயிருந்தது. ஆனால், அவர்கள் நிலப்பிரபுவிற்குக் கட்டாயப் பணி புரிந்தார்கள். சிவில் விவகாரங்கள்பற்றி அவர்களுக்கு நிலச்சொந்தக்காரரே நீதித் தலைவராயிருந்தார். அவர்களுக்கு உடலை வருத்தக்கூடிய தண்டனைகளைப் பிரபுக்கள் வழங்கலாம். அவர்களுக்கு மரபுவழியாக வந்த அதிகாரங்கள் சட்டப்படி ஏற்பட்டிருந்த அதிகாரங்களையும் விஞ்சியிருந்தன. அடிமையின் உண்மைநிலை, இடச்சூழ்நிலை, எசமான் இயல்பு இவற்றுக்கு ஏற்பப் பலதரப்பட்ட மாற்றம் உடையதாயிருந்தது என்பது உறுதி. ரஷ்ய மன்னர் (சார்) அடிமைகளின் விடுதலையைச் சட்டமாக்கினார். 1858-ல் முதலில் அரசருக்குச் சொந்தமான நிலங்களிலிருந்த அடிமைகளுக்கு இவ்விடுதலை வழங்கப்பட்டது. இதனால் அடிமையாயிருந்தவர் உரிமையுடைய மனிதராயினர்; எனவே, அவருடைய நிலத்தலைவரின் நீதிக்குப் பணிவதற்குப் பதிலாக உடனே நாட்டின் நீதி மன்றங்களுக்கு வழக்குகளை எடுத்துச்செல்லும் உரிமையைப் பெற்றனர்; பல்வேறு முறைகளில், ஆனால் வழக்கமாக நிலத்தை விலைக்கு வாங்குவது என்ற முறைப்படி,

நிலத்தின் ஒரு பகுதிக்குச் சொந்தக்காரரானர். சீர்திருத்தம் மிகப் பெரியதாயும் நலஞ்செய்வதாயுமுள்ளது என்பதைப் பற்றி எவ்விதப் பிரச்சினையும் எழாது. ஆனால், தொடக்கத்தில் இச்சீர்திருத்தம் பெரிய ஏமாற்றத்தை உண்டுபண்ணியது. அதிகம் எதிர்பார்க்கப்பட்டது. நிலத்தின் விலை மிக அதிகமாயிருந்தது. குடியானவருட்பலர், பழைய அடிமை நிலையில் அதிகமான நலன்களைப் பெற்றிருந்தனர்.

## சூனியவாதம்

இந்த ஏமாற்றம் சூனியவாதம் தோன்றுவதற்கு உதவியாயிற்று. இரண்டாம் அலெக்ஸாந்தரின் ஆட்சியின் பிற்பகுதி, முற்பகுதியில் குறிப்பாகக் காணப்பட்டது போல, தாராளமனப்போக்கைக் கொண்டதாயில்லை. சூனியவாத இயக்கத்திற்குப் பல்வேறு பிரிவினர் ஆதரவளித்தனர். ரஷ்யாவுக்கும் முழு அரசியற்சட்டம் சார்ந்த சுதந்தரங்களைக் கோரியவர் பலரிருந்தனர். இவர் மேற்கு நாடுகளில் தாராளக் கொள்கையினராக இருந்திருப்பர். அதிகாரம் செல்வம் இவ்விரண்டையும் கவர்ந்துவிட்டதால், அடிமைகட்கு விடுதலையுள்ளதைக் குறித்துப் பிரபுக்களுள் பலர் சீற்றமடைந்திருந்தனர். இவ்விடுதலை இயக்கம் இன்னும் அதிகமான நலன்களை அளிக்கத் தவறியதால், குடியானவர் சிலர் இவ்வியக்கத்தின்மீது சீற்றம் கொண்டிருந்தனர். வாழ்க்கையில் ஏமாற்றம், நம்பிக்கையிழப்பு முதலியவற்றுக்குத் துணிச்சலாக ஏதாவது கழுவாய் தேடுவதற்காக இவ்வியக்கத்தில் நல்ல கல்வியறிவுள்ள இளைஞர்களும் மகளிரும் சேர்ந்தார்கள். அப்பொழுது இருந்த முறையைக் கவிழ்ப்பதில் எல்லோரும் ஒன்று சேர்ந்தனர். ஆனால், பிரதிநிதிகளடங்கிய மன்றம் அல்லது ‘டூமா’ கூட்டப்படுவதற்கான கோரிக்கையில் எல்லோரும் ஒற்றுமையுணர்ச்சியுடனிருந்த போதிலும், அப்போதிருந்த முறைக்குப் பதிலாக எதையமைப்பது என்பதுபற்றிக் கருத்தொற்றுமையில்லாதிருந்தது. வன்முறை செய்தல், அச்சுறுத்துதல், கொலை செய்தல் முதலியவை இவ்வியக்கத்தில் சிறப்பாயிருந்தன. இரண்டாம் அலெக்ஸாந்தர், ‘டூமா’ மன்றத்தைக் கூட்டும் தறுவாயிலிருந்தபோது, 1881 - ல் கொலை செய்யப்பட்டார். அவருக்குப்பின் பட்டத்திற்கு வந்த மூன்றும் அலெக்ஸாந்தர் எவ்விதச் சலுகையையும் அளிக்க மறுத்தார்; அதனுடன் சூனிய வாதத்தையும் மிகக் கடுமையான அடக்குமுறைகளைக் கையாண்டு ஒடுக்கினர். சூனியவாதிகளுடன், சமயத்தில் இணங்காதிருந்தவர்களையும்-பிராட்டஸ்டென்டுகளையும், யூதர்களையும், கத்தோலிக்கர்களையும் — கடுமையாக நடத்தினர். நாடு துன்புற்றது. ஆனால், 1894-ல் அவர் இறப்பதற்கு முன் நாட்டில் கடுமையான எவ்விதக் கலகமும் ஏற்படவில்லை.

## இரண்டாம் நிக்கோலஸ்

இரண்டாம் நிக்கோலசின் ஆட்சி, மூன்ரும் அலெக்ஸாந்தரின் ஆட்சியின் தொடர்ச்சியாயிருந்தது. ஆனல், தொடக்கத்திலிருந்தே நாட்டின் தொழில் வாணிகம் இவைகளை மேலோங்கச் செய்வதற்கு அவர் இயன்றவரை பாடுபட்டார். எதிரியாயிருந்தவர்மீது துன் புறுத்தும் கொள்கை கடுமையாக நிலை நிறுத்தப்பட்டது. ஜப்பானுடன் போரும், அப்போர் நடந்த போது ரஷ்யா பெற்ற நாணத்தக்க செயல் களும், அவற்றுடன் ரஷ்ய அதிகாரிகள் தகுதியின்மை, கையூட்டு முதலியவைகளை வெளிக்காட்டினர்கள் என்ற நம்பிக்கையும், பழைய முறையைத் தொடர்ந்து நிலைநிறுத்துவதென்பது இயலாதென்பதைக் காட்டின. நிலப்படையிலும், கப்பற்படையிலும் கடுமையான இராணுவக் கலகங்கள் ஏற்பட்டன. பீட்ரோகிராடிலும் மற்ற ரஷ்ய நகரங்களிலும் வன்முறையாகப் புரட்சிக் கலகங்கள் காட்சியளித்தன. 1905 அக்டோபரில் விரிவான வாக்குரிமை அடிப்படையிலும், வரி விதித்தலில் அதிகாரம் உள்ளதும் சட்டமியற்றுவதில் ஓட்டுரிமை கொண்டதுமான 'டூமா' வைக் (பாராளுமன்றம்) கூட்டுவதாக வாக்களித்தார். 1906-ல் மன்றம் கூடியது. ரஷ்யாவில் தொல்லை ஏதுமின்றிச் சட்ட வரம்பிற்குட்பட்ட ஆட்சி ஏற்படுமென்று சிலர் வருவதை முன்மொழிந்தனர். உறுப்பினர்களுள்ளேயே கடுமையான கருத்து மாறுபாடுகளிருந்தன. ஆனல், தீவிரவாதிகள் பெரும் பான்மையோரால் ஆதரிக்கப்பட்டார்கள்.

## 'டூமா' மன்றம்

ரஷ்யாவும் பெரும்போரும்

எனவே, அச்சங்கொண்ட சார், முதல் டூமாவைக் கலைத்தார். இது மட்டுமின்றி, அடுத்து நடந்த டூமாவும், அதே மனநிலையை வெளிப் படுத்தியதால், புரட்சிக் கருத்துக்களை அடக்குவதற்கு கடுமையான பலாத்கார முறைகள் கையாளப்பட்டன. தூக்குத்தண்டனை, சைபீரியா விற்கு நாடு கடத்தப்படுதல் போன்ற நிகழ்ச்சிகளைக் கேட்டு மேற்கு ஐரோப்பா திடுக்குற்றது. இறுதியாக முடிப்பற்றுள்ளதும் பணிவுடன் கூடியதுமான டூமா, முறையற்ற வழிகளைக்கொண்டு கூட்டப்பட்டது. ஆனல், நிலையான அரசியற்சட்டம் சார்ந்த வாழ்க்கை அல்லது ஆட்சிக்குட்படுத்தப் பட்டிருந்த குறிப்பாக ஃபின்களும் (பின்லாந்து மக்கள்), போல்களும் (போலந்து மக்கள்) போன்ற நாட்டினத்தார்களை உடன்படுத்துவதில் எவ்வித முன்னேற்றமும் செய்யப்படவில்லை. இவ்வமயத்திற் பெரும்போர் மூண்டது. உடனே ஐரோப்பாவில் ரஷ்யாவிற்குப் புதியதொரு முக்கியத்துவம் உண்டாயிற்று. சுதந்தரத்

திற்குப் பகையாக இனி ரஷ்யா இருக்கவில்லை. அதற்குப் பதில் நட்பாகவும் ஜெர்மனியின் இராணுவ ஆட்சிக்கு எதிரான ஐரோப்பாவின் கொத்தளமாயுமிருந்தது. முதலில் எதிர்பார்த்ததைக் காட்டிலும் ரஷ்யப் படைகளும் போர்த்தலைவர்களும் மிஞ்சியிருந்தார்கள்.

## III

## கிரேட் பிரிட்டன்

முன்னேரதிகாரத்தில் கிரேட் பிரிட்டனுடைய வரலாற்றை அரசியார் விக்டோரியாவின் மரணம் வரையில் அறிந்தோம். அந்நிகழ்ச்சிக்கும் பெரும்போர் மூண்டதற்குமிடையேயிருந்த பதின்மூன்று ஆண்டுகள், மிக முக்கிய நிகழ்ச்சிகள் நிரம்பியனவாயிருந்தன. அவை நாட்டிற்கு ஏற்படவிருந்த ஊகிக்கவியலாத துன்பியல் நாடகத்தைப்பற்றிய எவ்விதமான குறிப்பையும் கொண்டிருக்கவில்லை.

## போயர் போரின் முடிவு

### செம்பர்லினும் பாதுகாப்பு வரியும்

1902 ஏப்பிரலில் போயர் போர் முடிவுற்றது. பிந்திய நிலைகளில் அப்போர் நீடித்திருந்த கட்சியின் போராயிருந்தது. நாட்டின் படைகள் நடைமுறையில் அழிக்கப்பட்டதன் பின்புதான் போயர்கள் அடைக்கல முற்றூர்கள். இங்கிலாந்தில் கன்சர்வேட்டிவ் அரசாங்கம் ஆட்சியிலிருந்தது. சாலிஸ்பரி பிரபு முதலில் முதலமைச்சராயும், அவர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றபின் பால்ஃபர் முதலமைச்சராயுமிருந்தனர். 1903-ல் இரு கட்சிகளுக்குமிடையே காணப்பட்ட தொடர்புகள், ஜோசப்பு சேம்பர்லின் பாதுகாப்பு வரியின் சார்பில் எடுத்துரைத்ததால் மாறலாயின. காப்டனுடைய கருத்துக்களை சர் ராபர்ட்டுப் பீல் ஏற்றுக்கொண்டதுமுதல் நாட்டின் கொள்கை தடையில்லா வாணிகமாய் அமைந்தது. மனமுறிந்த ஒரு சிறு குழுவினரே, இதை எதிர்த்தனர். அரசியல், பொருளாதார அடிப்படைகளில் திரு. சேம்பர்லின் பாதுகாப்பு வரிகளை விதிக்கும் கருத்தை மேற்கொண்டார். அவருக்கு அரசியல் நோக்கம் அதிக வலிமையுள்ளதாய் இருந்திருக்கலாம். குடியேற்ற நாட்டுச் செயலாளராகப் பதவியிலிருந்தபொழுது சேம்பர்லின் மனவெழுச்சி நிறைந்த பேரரசு வாதியானூர். ஜெர்மனிக்குச் சால்வரீன் துணை புரிந்ததுபோல, கிரேட்பிரிட்டனுக்குப் பாதுகாப்பு வரிகள் துணை புரியுமென எதிர்நோக்கினூர்; குடியேற்ற நாடுகளும், டொமினியன்களும் (குடியேற்ற உரிமை நாடுகள்) வாணிகத்திற்காக முதலில் ஒன்று சேர்ந்து செயல் புரியும் வழக்கத்தை

மேற்கொள்ளுமென்றும் பின்பு பொதுவான அரசியல் அமைப்பை வளர்த்துக்கொள்ளக் கூடுமென்றும் எதிர்பார்த்தார்.

அரசியற்கட்சிகளின்மீது பாதுகாப்பு வரியின் செல்வாக்கு

கிளாட்ஸ்டனுடைய அயர்லாந்து தன்னுட்சி மசோதாவை எதிர்த்தது வாயிலாகத் தாராளவாதிகளின் கட்சியில் பிளவை உண்டு பண்ணிக் கன்செர்வேட்டிவ்களுக்கு அதிகாரத்தில் நீடித்திருத்தலை யளித்தார். அவருடைய புதிய கொள்கை கன்செர்வேட்டிவ்களுக்கும் ஊழ்திறம்பட்டதாயிற்று. கட்சியிலிருந்து பல வெளியேற்றங்கள் ஏற்பட்டன. இதன் விளைவாக 1905 நவம்பரில் பால்ஃபர் பதவி துறக்க நேரிட்டது. சர். ஹென்றி காம்பெல் பானர்மன் பதவியேற்றுப் பாராளுமன்றத்தைக் கலைத்தார். பொதுத் தேர்தலில் தாராளக் கொள்கையினர் முழுமையான வெற்றி பெற்றனர். அரசியார் ஆண்ட காலத்திலிருந்து இவ்வளவு முழுமையான வெற்றியை வேறெந்தக் கட்சியும் இக்கட்சி அடைந்ததுபோல அடையவில்லை.

## காம்பெல் பானர்மன்

சர். ஹென்றி காம்பெல் பானர்மன், 1908-ன் தொடக்கத்தில் உடல்நிலை சரியின்மை காரணமாகப் பதவியைத் துறக்க நேர்ந்தது. ஆனால், அவருடைய குறுகியவாட்சி, அண்மையில் வெற்றி கொள்ளப் பட்ட போயர்களின் குடியரசுகட்கு முழுச்சுதந்தரத் தன்னுட்சி அளித்ததற்காகச் சிறப்புற்று விளங்கியது. விரைவில், கேப்புக் காலனியும் நேட்டாலும் அவற்றுடன் ஒன்றுசேர்ந்து ஒரு தனியாசா யிற்று. போர்த்தலைவரான போத்தா, அண்மைக்காலம்வரை கிரேட் பிரிட்டனுக்குப் பகைவராய்ப் போர் புரிந்தவர். அவர் ஐக்கியத் தென்னுப்பிரிக்காவின் முதலாம் தலைமை அமைச்சரானுர்; வாணுள் முழுவதும் அப்பதவியை வகித்தார். இவ்வாறேற்பட்ட மாறுதலை வரலாற்றில் வேறெங்கும் காணவியலாது. அதுமுதல் தென்னுப்பிரிக் காவின் போக்கு, உரிமை, நீதி இவற்ருல் நமமடைந்ததற்குப் பெரிதும் சான்ருயுள்ளது.

## ஆஸ்குவித்தும் லாயிட் ஜார்ஜும்

ஓய்வு ஊதியம்; பாதுகாப்புறுதி

காம்பெல் பானர்மனையடுத்து ஆஸ்குவித்துப் பிரபு பதவியேற்ருர். அதுமுதல் மற்றெல்லாவற்றையும்விட இரு பிரச்சினைகள் முனைப்பா யிருந்தன. முதலில், கருவூலத் தலைவராயிருந்த லாயிட் ஜார்ஜின் தெளிந்த அறிவில் முக்கியமாகத் தோன்றியதும் எளியவர்களின் நிலையை மேன்மையுறச் செய்வதும் ஆகிய ஒன்றை நோக்கமாகக்

கொண்டு, முறையாகச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. அவை எழுபது ஆண்டு நிறைந்தவர்களுக்கு வாரந்தோறும் ஐந்து ஷில்லிங்குகள் ஓய்வு ஊதியமாக வழங்குவதற்கான முதியோர் ஓய்வு ஊதியச் சட்டமும், நோயினுற்பீடிக்கப்பட்டு வேலை செய்யவியலாத கூலிபெறும் தொழிலாளர்களுக்கு வாரம் ஒன்றிற்கு ஒரு குறிப்பிட்ட தொகையை அளிக்கக் காப்புஉறுதி செய்வதற்காகத் தொழிலாளியும் தொழில் முதலாளியும் சேர்ந்து பங்காகக் கொடுக்கும் தொகையுடன் அரசாங்கமும் உதவித் தொகையளிக்க வழிசெய்த காப்புறுதிச் சட்டமும் ஆகும். இவ்விரண்டு திட்டங்களுக்கும் கடுமையான எதிர்ப்புக்கள் ஏற்பட்டு, முடிவு காணப்படாமலிருந்தன. ஆனல், இக்கால இங்கிலாந்தில் ஏழைகளின் நிலையைச் செம்மைப்படுத்துவதற்கான அக்கறை கொள்ள வேறெந்த ஆட்சியும் முயலவில்லை.

## பிரபுக்கள் சபையும் தாராள மனப்பான்மைக் கட்சி ஆட்சியும்

### 1909-ல் வரவு செலவுத் திட்டம்

அக்காலத்து மற்ெருரு பெரிய பிரச்சினை, பாராளுமன்றத்தில் பிரபுக்கள் சபையின் அதிகாரம், நிலைமை முதலியவைகளைப் பற்றியதாகும். இது புதிய பிரச்சினையன்று. பிரபுக்களின் அதிகாரத்தைப் பழித்துக் கூறுவதாகப் பாராளுமன்றத்தில் கிளாட்ஸ்டனுடைய கடைசிப் பேச்சு அமைந்திருந்தது. தாராளப் போக்கினர் கட்சி, அது மிக்க ஆர்வத்துடன் கொண்டிருந்த பிரச்சினைகளுக்குப் பிரபுக்கள் எதிராயிருந்ததைக் கண்டது. சமூகப் புதிய நலனுக்குத் தேவையாயிருந்த பிரபுக்கள், தன்னுட்சி மசோதாக்களை ஏற்க மறுத்தார்கள்; 1909-ல் வரவு செலவுத் திட்டத்தையும் ஏற்க மறுத்தார்கள். மக்கள் சபைக்கும் பிரபுக்கள் சபைக்குமிடையே எழுந்த பிரச்சினையைப் பற்றி மக்கள் கருத்தைச் சோதிக்கலாம் என்றெண்ணி உடனே பாராளுமன்றம் கலைக்கப்பட்டது. தாராளப் போக்கினர் கட்சியின் பெரும்பான்மை பெரிதளவிற் குறைந்தது. ஆனல், அவர்கள் தொழிற்கட்சியுடனும் அயர்லாந்து தேசியக் கட்சியுடனும் சேர்ந்து, 122 ஓட்டுக்களைக் கொண்ட பெரும்பான்மைக் கட்சியாய் அமைந்தார்கள்.

## பிரபுக்கள் சபையின் அதிகாரம் குறைக்கப்படல்

ஏற்கனவே ஏற்க மறுத்த வரவு செலவுத் திட்டத்தை இப்பொழுது பிரபுக்கள் ஏற்றுக்கொண்டார்கள். ஆனல், ஆஸ்குவித்துப் பிரபு, பிரபுக்கள் சபையின் தடைசெய்யும் அதிகாரத்தை இரண்டு ஆண்டுக் காலத்திற்கு மேற்படாமல் இருக்கச் சட்டமியற்றினர். அக்காலத்திற்குப்

பின் தடைசெய்வது ஏற்பட்டால், அத்தடையைப் புறக்கணிக்க வேண்டுமென்பதும், மன்னருடைய கையொப்பம் கிடைத்த பிறகு சட்டம் தானுகவே நடைமுறைக்கு வரும் என்பதும் ஏற்பட்டன. இச்சட்டமே பிரபுக்கள் சபையால் அனுமதிக்கப்பட வேண்டியதா யிருந்தது. இறுதியில் ஏழாம் எட்வர்டு மன்னருக்குப்பின் பட்டமேற்ற ஐந்தாம் ஜார்ஜ், மேலும் இம்மசோதாவிற்குத் தடையேற்படுமானுல், இதை நிறைவேற்றுவதற்குத் தேவையான பிரபுக்களை நியமிப்பதாக வாக்களித்தபின் இது நிறைவேறியது.

அயர்லாந்து தன்னுட்சி மசோதா நிறைவேற்றப்படுதல்

தன்னுட்சி மசோதாவை நிறைவேற்றுவதை முடியச்செய்யக் கூடிய கருவி இப்போது தாராளவாதிகளின் கையிலிருந்தது. எனவே, அவர்கள் உடனே அதைப் பயன்படுத்தக் கருதினுர்கள். மக்கள் சபையில் தன்னுட்சி மசோதா விரைவில் நிறைவேற்றப்பட்டது. பிரபுக்கள் அவர்கள் எதிர்ப்பை விட்டுவிடவில்லை. ஆனுல், அண்மையில் தோற்றுவிக்கப்பட்ட சாதனம், செயலில் ஈடுபடுத்தப்பட்டு மசோதா நிறைவேற்றப்பட்டது.

## அயர்லாந்தில் அச்சுறுத்தப்பட்ட மறுப்பு

இச்சட்டம் நிறைவேற்றிய பின்புங்கூட இனிய சூழ்நிலைக்கு வழி யேற்படவில்லை. அயர்லாந்தில்—சிறப்பாக அல்ஸ்டரில்—இம்மசோதாவைக் கடுமையாக எதிர்க்க ஆயத்தங்கள் தோன்றலாயின. இஃது உள்நாட்டுப் போராக முடியும்போலத் தோன்றியது. சமாதானத் திற்காக எடுத்துக்கொள்ளப்பட்ட முயற்சிகள் பயனற்றனவாயின. அயர்லாந்தின் வருங்கால நோக்கம் ஐயமின்றி மிகவும் தாழ்நிலையி லிருந்தது. அப்பொழுது திடீரென்று மிகவும் தாழ்நிலையிலிருந்த எல்லாப் பிரச்சினைகளும் போர் அல்லது சமாதானம் என்ற பெரிய பிரச்சினையால் விழுங்கப்பட்டன. போர் மூண்டபோது தன்னுட்சி மசோதா, ஏற்றுக்கொண்டவாறு மன்னருடைய கையொப்பத்தைப் பெற்றது. ஆனுல், போர் முடியும்வரை அது நிறைவுறுவதினின்றும் தள்ளிவைக்கப்பட்டது.

IV

## மூன்று பேரரசர்களின் சங்கம்

வருங்கால வரலாற்று மாணவருக்கு இந்தக் குடும்ப நிகழ்ச்சிகள், ஆங்கிலேயர்களின் முழுக் கவனத்தையும் கவர்ந்திருந்தன என்பதை உணருவதற்கு ஓரமயம் தொல்லை தருவனவாயிருக்கலாம். அரசியல்

தந்திரிகள் புயல் வீசுவதற்காகத் திரண்டு வருவதை மிகவும் கவலை யுடன் நோக்கினுர்கள். ஆனுல், சாதாரணமான குடிமக்களுக்கு 1914-ல் மூண்டபோர் பேரிடியாய்த் தோன்றியது. இரு பெரிய கூட்டுக்கள் எவ்வாறு ஏற்பட்டனவென்பதையும், எவ்வாறு இணையற்ற போரில் அவை மோதினவென்பதையும் தேவையான அளவு நன்கறிந்து கொள்ள ஐரோப்பிய நாடுகளின் பன்னுட்டுத் தொடர்புகளைத் தொடரு வோம்.

ஐரோப்பாவில் 1871க்குப் பிறகு ஜெர்மனியின் பேராதிக்கம் ஏற்பட்டதென்பது மறுக்கக் கூடாததாயிருந்தது. நாட்டின் மாண்பைக் காரணமாகக் கொண்டு பிஸ்மார்க்குத் தமக்கு அருகில் ஆஸ்திரியா ரஷ்யாப் பேரரசர்களைச் சேர்த்துக்கொண்டார். இதுதான் முப்பேரரசர் களின் சங்கமென வழங்கப்படுவதாகும். முறையான கூட்டு ஏற்பட்ட தாகத் தெரியாததால், இச்சொற்ருெடர் தவருனது. மேற்கு ஐரோப்பாச் சமாதானமாயில்லாது போனுலும், அமைதியாயிருந்தது. மேற்கில் அரசு முறை நிலையான தன்மையை அடைந்தது போலத் தோன்றியது. ஆனுல், பால்கன் தீபகற்பம், இயக்கங்களாலும் அச்சுறுத்துதல் போன்ற கிளர்ச்சிகளாலும் தொடர்ந்து நிறைந்திருந்தது. 1914-ல் போர் மூளும் வரையில் ஐரோப்பாவிற் காணப்பட்ட எல்லா அரசியல் தந்திரம் சார்ந்த மாறுதல்களும் இப்பகுதியின் முன்னேற்றத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டனவாயிருந்தன.

## துருக்கி சிதறுண்டல்

**கிரீஸ்**

துருக்கியின் நலிவும் சிதறலும் தொடர்ந்து நிகழ்ந்தன. அதன் சுற்றுப்புறங்களிலெல்லாம் புதிய அரசுகள் தோன்றியதால், எல்லைகள் சுருங்கின. துருக்கியின் அதிகாரத்தை நிலையாகக் குறைத்துக் கொண்டிருந்த சமயமும், நெருங்கிய உறவு கொண்டிருந்த இனப் பற்றும் ஆற்றல்களாயிருந்தன. ஐரோப்பாவில் துருக்கியின் ஆட்சிக் குட்பட்டிருந்த நிலப்பகுதிகளில் வாழ்ந்த மக்களிற்பெரும்பான்மை யோர் கீழைச் சமயம் அல்லது 'வைதிகத்' திருச்சபையைச் சேர்ந்த கிறித்துவராயிருந்தனர். முகம்மதியர்களுடைய பிணைப்பு, சினமூட்டு வதாயும் வருத்துவதாயுமுள்ள ஆற்றலுடன் அவர்களை அழுத்தியது. மேலும், அவர்கள் துருக்கியர்களை அயலார்கள் என்றும், பாதுகாப்பு, பரிவு முதலியவற்றுக்கு ரஷ்யாவை நோக்குவதே வழக்கமாகக் கொண் டிருந்தவர்கள் என்றும் எண்ணினுர்கள். 1829 முதல் கிரீஸ் தெற்கில் முழுச் சுதந்தர நாடாய் நிலைபெற்றிருந்தது. மேற்கிலிருந்த மலை நாடான மான்டிநீகிரோ, வீரம் செறிந்த போர்களுக்குப் பின், நடை முறையில் தன்னுரிமையைப் பெற்றது.

## ருமேனியா

### பல்கேரியா

ஆனல், துருக்கிய அரசாங்கம் அதன் சுதந்தரத்தை ஒரு போதும் ஏற்கவில்லை. டான்யூபு நதிக்கு வடக்கில் ருமேனியா தன்னுட்சியைப் பெற்றிருந்ததென்ருலும், பெயரளவில் துருக்கியப் பேரரசின் எல்லைக் குள்ளிருந்தது. டான்யூபிற்குத் தெற்கில் பாஸ்ன்யா, ஹெர்ஸி கோவினு, செர்பியா, எல்லாவற்றிற்கும் மேலாக பல்கேரியா முதலிய நாடுகள் தொடர்ந்து அமைதியற்றனவாயிருந்தன. அம்மக்களின்மீது தங்கள் பிடிப்பு வலிமையற்றிருந்தது என்பதை நன்குணர்ந்த துருக்கியர்கள், அவர்களைத் தங்களுக்குக் கீழிருக்கச் செய்ய அச் சுறுத்தும் முறைகளைப் பின்பற்றலானுர்கள். சீர்திருத்தம் செய்வது பற்றிப் பல வாக்குறுதிகள் அளிக்கப்பட்டனவென்ருலும், எப்பயனு மேற்படவில்லை. 1875-ல் கலகஞ்செய்வது பற்றியெழுந்த முணு முணுப்புக்கள், பாஸ்னியா, ஹெர்ஸிகோவினு முதலிய இடங்களில் துருக்கிய அதிகாரத்திற்கு வெளிப்படையான எதிர்ப்புக்களாய் மாறின. கலகம் விளைவித்தவர்கள் தொடக்கத்தில் சில வெற்றிகளைப் பெற்ருர்கள். ஆனல், துருக்கியப்படைகள் அவர்களை விஞ்சின. அதே நேரத்தில் அதே மாதிரியான சுதந்தர இயக்கத்தின் தொடக்கத்தி லிருந்த பல்கேரியர்களும் மிகக் கொடுமையான இரக்கமற்ற செயல் களால் ஒடுக்கப்பட்டார்கள். பல்கேரியப் படுகொலைகள் ஐரோப்பா முழுவதிலும் அஞ்சத்தக்க சிலிர்ப்பை உண்டுபண்ணின.

## துருக்கி ரஷ்யப் போர்

பால்கன் தீபகற்பம், ஐரோப்பாவின் புயலைத் தோற்றுவிக்குமிட மென்பது எல்லா அரசியல் வெல்திறம் கொண்டிருந்தவர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. ரஷ்யாவும் ஆஸ்திரியாவும் அண்மை நாடுகளென்ற காரணத்தால் ஊக்கங்கொண்டிருந்தன. மத்திய தரைக் கடலில் வாணிக நலன்களைக் கொண்டிருந்த கிரேட் பிரிட்டனும் ஊக்கம் கொண்டிருந்தது. மாநாடுகளும் திட்டங்களும் மாற்றுத் திட்டங்களும் ஏராளமாய் இருந்தன. ரஷ்யாவினுடைய கோரிக்கைகள் ஏற்கப்படாமற்போகவே, இறுதியாக, 1877-ல் இறுதி எச்சரிக்கையை விடுத்தது. உடனே போர் மூண்டது. மற்றப் பெரியவரசுகள் விலகி நின்று இவ்விரு நாட்டுச் சண்டையையும் பார்த்துக்கொண் டிருந்தன.

## ஸான் ஸ்டீஃபானே உடன்படிக்கை

### பெர்லின் உடன்படிக்கை

போரில் துருக்கியப் படைகளும் அவற்றின் தலைவர்களும் எதிர் பாராதவாறு ஆற்றல்களைக் காண்பித்தார்கள். டான்யூபு நதிக்கப்பால் ரஷ்யர்கள் விரட்டியடிக்கப்படுவார்கள் போல ஓரமயம் தோன்றியது. ஆனால், இறுதியில் ரஷ்யர்களுடைய எண்ணிக்கை, செல்வம், அமைப்பு முறைகளும், துருக்கிய அரசாங்கத்தின் கையூட்டு ஊழல்களும் தவிர்க்க முடியாத பயன்களை உண்டுபண்ணின. ருமேனியர்களால் மட்டும் உதவி செய்யப்பட்ட ரஷ்யர்கள் கான்ஸ்டான்டிநோப்பிளின் அணிமை வரை ஊடுருவிச் சென்றார்கள். துருக்கி அவர்களுடைய அருளை எதிர்நோக்கியது. துருக்கியர்மீது ஸான் ஸ்டீஃபானே உடன்படிக்கை திணிக்கப்பட்டது. அவ்வுடன்படிக்கை நிறைவேற்றப்பட்டிருந்தால், ஐரோப்பாவில் துருக்கி ஒரு முக்கிய அரசாய் நிலைபெற்றிருக்க முடியாது. ஆனால், ஐரோப்பிய அரசுகள் மீண்டும் தலையிட்டன. கிரேட் பிரிட்டன், டிஸ்ரேலியின் தலைமையிற் சிறப்புப் பங்கெடுத்துக் கொண்டது. ஐரோப்பியமாநாடு கூட்டப்படுவதற்காக, பெர்லின் நகரம் தேர்ந்தெடுக்கப்பட்டதிலிருந்து, ஜெர்மனியின் அதிகாரமும் பிஸ்மார்க்கின் செல்வாக்கும் நன்கு வெளிக்காட்டப்பட்டன. இம்மா நாட்டில் கலந்து பேசியதன் பயனாய், பெர்லின் உடன் படிக்கை ஏற்பட்டது. ஸான் ஸ்டீஃபானே உடன்படிக்கையில் மறைமுகமாகக் காட்டப்பட்டிருந்த துருக்கியின் பேர்வமானம் பற்றியது பெர்லின் உடன்படிக்கையில் விலக்கப்பட்டது என்றாலும், அதன் நாடுகளி னிழப்பும், மாண்பின் இழப்பும் மிகுதியாயிருந்தன. ருமேனியா, மான்டிநீகிரோ, செர்பியா என்பவை முழு அதிகாரம் கொண்ட சுயேச்சை நாடுகளென்பது அறிவிக்கப்பட்டது.

துருக்கிய ஆட்சிப் பகுதிகளுக்குள் பெயரளவில், பாஸ்னியாவும் ஹெர்ஸிகோவினாவும் இருந்த போதிலும், அவை ஆஸ்திரியாவின் ஆட்சியியலின்கீழ் வைக்கப்பட்டன. ஸான் ஸ்டீஃபானே உடன்படிக் கையில் திட்டமிடப்பட்டிருந்த பெரிய நாடான பல்கேரியாவிற்குப் பதில் அதே பெயரால் வழங்கப்படும் ஒரு சிறியநாடு ஏற்படுத்தப் பட்டது. அது தெற்கில் பால்கன் மலைகள் வரையிலுமே பரவியிருந்த தென்றாலும் நடைமுறையில் சுயேச்சை ஆட்சியைத் துய்த்தது. அம் மலைகளுக்குத் தெற்கில் ருமேனியா என்ற ஓரரசு உருவாக்கப்பட்டது. அது மிகுதியான தன்னாட்சியதிகாரத்தைப் பெற்றிருந்த போதிலும் சுல்தானின் மேலதிகார உரிமைக்குட்பட்டிருந்தது. சுல்தானுக்குப் பாதுகாப்பளித்ததற்கு வெகுமதியாகக் கிரேட் பிரிட்டன் சைப்பிரசை உரிமை கொண்டாடிப் பெற்றது. ஆனால், அத்தீவிலும் சுல்தானின் பெயரளவில் மேலதிகார உரிமை நிலைநிறுத்தப்பட்டிருந்தது.

## முக்கூட்டு

**இத்தாலி, ஜெர்மனி, ஆஸ்திரியா**

முப்பேரரசர்களின் கூட்டு, இப்போரின் பயனாக நீடித்திருக்க இயலவில்லை. ரஷ்ய மன்னரும் (சார்) அவர் அமைச்சரான கோர்ட்ஸ்சாகோப்பும் பால்கன் பகுதியில் தங்களுடைய திட்டங்கள், ஜெர்மனியாலும், பிஸ்மார்க்காலும் பெரிதும் ஏமாற்றப்பட்டிருந்ததாகக் கருதினர். எனவே, வெளிப்படையாகக் காணப்படாத மனத்தாங்கல் ரஷ்யாவிற்கும் ஜெர்மனிக்குமிடையே இருந்த நல்லுறவுகளில் காணப்படலாயிற்று. மற்றொரு புறத்தில் ஜெர்மனி ரஷ்யா இவைகளிடையே தொடர்பு அகற்றப்பட்டிருந்த காரணத்திற்காக ஜெர்மனியின் பக்கலிற் சேர்ந்திருந்ததாக ஆஸ்திரியா தன்னை கருதியது. ஆஸ்திரியாவும் ரஷ்யாவும், பால்கன் பகுதிகளில் அதிகாரம், செல்வாக்கு முதலியவைகளைப் பெறுவதற்குத் தவிர்க்கவியலாத போட்டியிடுபவைகளாகத் தங்களைக் கருதியது இதற்குக் காரணமாயமைந்தது. விரைவிலேயே ஆஸ்திரியா-ஜெர்மனிக் கூட்டுறவில் இத்தாலியும் சேர்ந்தது. இத்தாலி யிராச்சியத்தில் அமைதி காணப்படவில்லை. உள்ளேயும் வெளியிலும் பகைவர்கள் எதிர்த்து நின்றதால், முடியாட்சி, மத்திய ஐரோப்பாவி லிருந்த வலிமையான இராணுவ முறையில் அமைந்திருந்த முடியாட்சி களினுதரவை விரும்பியது. மேலும், பிரான்சின் குடியேற்றங்கள் பற்றியிருந்த பேரவாவும் இந்த முடிவிற்கு ஆதரவாயிருந்தது. அண்மையில் பிரான்சு, டூனீசை வயப்படுத்திக்கொண்டிருந்தது. தனது தெற்குக் கடற்கரைக்கு அருகில் பிரெஞ்சதிகாரம் தோன்றியதைக் கண்டு இத்தாலி அச்சங்கொண்டது. எனவே, 1883-ல் முக்கூட்டேற் பட்டது. ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி இம்மூன்றும் ஐரோப்பா வில் அமைதியை நிலைபெறச்செய்வதே தங்களுடைய நோக்கமென அறிவித்தன. தொடக்கத்திலிருந்தே இத்தாலியில் அந்நாட்டின் வழிவழிப் பகையாயிருந்த ஆஸ்திரியாவுடனும் 'நாகரிகமற்ற வடவர் களு'டனும் ஏற்பட்ட சேர்க்கையை வெறுத்த வலிமையான ஒரு கட்சியிருந்தது.

## பிரான்சு - ரஷ்யா உறவு

ஐரோப்பாவில், இம்முக்கூட்டால் எதிர்க்கப்பட்ட பிரான்சு, தான் தனித்து வைக்கப்பட்டதாகக் கருதியது. முக்கூட்டின் சமாதானமான நோக்கங்களில் பிரான்சு நம்பிக்கை கொள்ளவில்லை ; இங்கிலாந்துடனும் சீற்றங் கொண்டிருந்தது; நிகழும் பல இடையூறுகளை அகற்றுவதற்குத் தன்னிடம் போதிய இராணுவ வலிமையில்லாதிருந்ததையும் உணர்ந்திருந்தது. ரஷ்யாவிடமிருந்து பிரான்சிற்கு உதவி கிடைத்தது. ரஷ்ய அரசு, வரலாறு, அரசியல் சட்டம், நோக்க

மிவைகள் பிரான்சிற்கு முற்றிலும் எதிராயிருந்தன. ஆனால் ஜெர்மனியின்மீது இரு நாடுகளுக்கும் பொதுவாயிருந்த பகைமை, இவற்றை ஒன்று சேரச் செய்தது. ஃபிராங்க்பர்ட்டு உடன்படிக்கையால் பிரான்சிலிருந்த மக்களின் விருப்பத்திற்கும் எதிராக அல்சேயிஸ், லோரைன் பகுதிகள் அகற்றப்பட்டு ஜெர்மனியுடன் இணைக்கப்பட்டது காரணமாக இவ்விரு நாடுகளுக்குமிடையே தோன்றிய பகைமை, ஐரோப்பிய அரசியலில் ஒரு நிலையான பகுதியாயிருந்தது. ஜெர்மனிக்கும் ரஷ்யாவுக்குமிடையே காணப்பட்ட பொருமையும் பகைமையும், நடிப்பைப் போன்று குறைவாக அறிவிக்கப்பட்டிருந்த போதிலும், அவை மிக்க வலிமையுள்ளனவாகவேயிருந்தன. மிகப் பெரிய அடிப்படைகளையும் எல்லையற்ற ஆற்றல்களையும் கொண்டிருந்த ரஷ்யாவை தனக்குத் துணை புரியும் நேச நாடாக ஐரோப்பாவில் மீண்டும் பெற்றிருந்தது, பிரான்சிற்கு எடுத்துச் சொல்லவியலாத ஆறுதலாயிருந்தது. ஜப்பானுடன் செய்த போரில் (1905) ரஷ்யா தோல்வியுற்றது, சிறிது காலத்திற்கு அதன் செருக்கை முறித்து விட்டது. ஆனால், அத்தோல்வி அதனாற்றல்களைப் புதுப்பித்து அமைக்க வழி செய்தது ; உலகப் பெரும்போரின் தொடக்கத்தில் நிறைவேற்றிய பெரிய வீரச்செயல்களைச் செய்ய ரஷ்யாவைத் தயாரித்தது.

## பிரான்சுக்கும் கிரேட் பிரிட்டனுக்குமிடையே மனமார்ந்த நேச உடன்படிக்கை

1903 - ல் ஓரியக்கம் தொடங்கியது. இதன் பயனாகக் கிரேட் பிரிட்டன், பிரான்சுடன் மனமார்ந்த நேசவுடன்படிக்கையிற் சேர்ந்து, ஏற்கனவே அமைந்ததாய் நாம் அறிந்த முக்கூட்டிற்கு நேரெதிராக மற்றொரு முக்கூட்டை ஏற்படுத்தியது. இது பெயர் நீங்கலாக மற்றவற்றில் ஒத்திருந்தது. இவ்வியக்கமும் திடீரென்று ஏற்படவில்லை. ஆப்பிரிக்கா, குடியேற்றம் முதலிய பிரச்சினைகளினால் உண்டான மனக்கசப்பு இருந்த போதிலும், கடந்த சில காலமாகவே பிரான்சிற்கும் கிரேட் பிரிட்டனுக்குமிடையே உறுதியான இணைந்து வாழ்தல் இருந்தது. பெருந்துன்பந்தரும் பேரிழப்புக்களுடனிருந்த பிரான்ஸின் வீரஞ்செறிந்த விடாப்பிடியாக ஒட்டிக்கொள்ளும் தன்மையைக் குறித்தும், கலை, அறிவியற் கருத்து முதலியவைகளுக்கும் பொதுவாக வியந்து பாராட்டுதலிருந்தது. ஓரமயம் போயர் சண்டையின்போது கிரேட்பிரிட்டனிடம் ஜெர்மனி பகைமை நோக்கம் கொண்டிருந்தது, இந்த நடவடிக்கையேற்பட உடன் அமைந்த காரணமாயிருக்கலாம். அதனுடன் அதைத் தொடர்ந்து ஏற்பட்ட வலிமையுள்ள கப்பற் படையை ஜெர்மனி தோற்றுவித்ததும் காரணமாயிருக்கலாம். கிரேட் பிரிட்டன், பிரான்சுடன் செய்துகொண்ட உடன்படிக்கையைப் பற்றித் தெளிவாக நமக்குத் தெரியாது. ஆனால், அவ்வுடன்படிக்கை

தொடர்ந்து வளர்ச்சியுற்றதுடன் நடைமுறையில் ஒரு கூட்டுடன் படிக்கையாயும் வளர்ச்சியுற்றது.

## ஐரோப்பாவில் போர்க்கருவி அணிந்த அமைதி

கூட்டு உடன்படிக்கைக்குநேர் எதிராகக் கூட்டு உடன்படிக்கை யேற்பட்டது. சிறிது காலம்வரை ஐரோப்பிய நாடுகள் தொகுதியாகச் சேர்ந்தமை அமைதிக்கு ஆதரவாகத் தோன்றியது. இரு பெரிய போர்களுக்குமிடையே கழிந்த நாற்பத்து மூன்றாண்டுகள் நெடுங் காலமாயிருந்த இக்காலத்தில் மேற்கு ஐரோப்பாவிலிருந்த நாடுகள், நம் வரலாற்றுப் பிரிவின் இரண்டாவது நூற்றாண்டிலிருந்து அமைதியாயிருந்தன. அமைதியான நிலையில் அரை நூற்றாண்டையடைந்தால், ஏராளமாகத் தயாரிக்கப்பட்டவைகளின் பயனற்ற தன்மை வெளிப் படையாகத் தோன்றுமென்றும், ஒருவரையொருவர் நம்புவதன் அடிப்படையில் ஐரோப்பாவில் ஏதாவதோர் அமைப்பு ஏற்கப்படலா மென்றும் மக்கள் எதிர் நோக்கத் தலைப்பட்டார்கள். ஐரோப்பா உட்கருத்தையும் சமாதானத்தையுமே எதிர்நோக்கியது போலத் தோன்றிற்று. பழி வாங்கக் கனவு காண்பதைப் பிரான்சும் மறந்து விட்டது போலத் தோன்றிற்று. அதனுடன் கிரேட் பிரிட்டனிலும் போரால் பெருந்தீமை என்பதைத் தவிர வேறுவிதமாகப் பேச முற்பட்ட அரசியல் வல்லுநர், பொது வாழ்விலிருந்து மறைய வேண்டி யிருந்தது. ஜெர்மன் கருத்து இடரை உண்டு பண்ணக் கூடியதாயும் போர் புரியும் மனநிலையிலும் இருந்ததென்பது இப்பொழுது தெரிகிற அளவிற்கு அவ்வளவு நன்றாகத் தெரிந்திராவிட்டாலும், ஓரளவு மிகுதியாகத் தெரிந்திருந்தது. ஆனால், தனிப்பட்ட ஜெர்மானியரிட மிருந்தும் முக்கியமான குழுக்களிடமிருந்தும் அமைதி நிறைந்த நோக்கங்கள் நன்கு வெளிப்பட்டன. அவை உண்மையானவையா யிருந்தன. 1914 - ல் நடு முதுவேனிற்காலத்தில் ஐரோப்பிய சமாதானத்தைப் பற்றிப் பலர் கொண்டிருந்த போற்றத்தக்க நம் பிக்கைகளை உணர்ந்துகொள்ளுவதனால் வருங்கால வழித்தோன்றல்கள் துன்புறுவார்கள்.

## அமைதிக்குத் தேவையான அமைப்பு முறை இல்லை

### ஹேக் மாநாடு

உலகப் பெரும்போரின் காரணங்களைப் பற்றித் தேர்ந்தாராயும் எண்ணற்றவர் ஓரமயம் வருங்காலத்தில் பல நூற்றாண்டுகளிலும் எழுதுவர். போரிடுவதற்காக ஐரோப்பாவிற் பல அமைப்பு முறை களிருந்தனவேயன்றி அமைதிக்காக மன நிறைவு ஏற்படுத்தும் நிலையில்

எவ்வித அமைப்பு முறையும் இல்லை. 1898-ல் ரஷ்ய மன்னர் சமாதானத்தைக் குறித்து மேலானதும் ஓரளவு வெற்றியுள்ளதுமான உதவி செய்தார். அஃதாவது, ஐரோப்பாவிலிருந்த வல்லரசுகளை ஐரோப்பாவில் படைக்குறைப்பைப் பற்றி வாதிப்பதற்காக ஹேகுவில் நடந்த மகாநாட்டிற்கு அழைத்தார். படைக் குறைப்புப் பற்றியவரை மாகநாடு முழுத்தோல்வியடைந்தது. காரணம், பெரிய இராணுவ அரசுகளுள் எதுவும் திட்டத்தை வினையியலானவகையில் கருத்திற் கொள்ளவில்லை. ஆனால், ஹேகுவில் சர்வதேச உயர்முறை மன்றத்தை நிறுவுவதற்கு இம்மாநாடு பயன்பட்டது. பன்னாடுகளுக்கிடையே தோன்றிய பூசல்களை உடன்பாடு வாயிலாகத் தீர்த்து வைக்க இம்மன்றம் உதவியது. 1907-ல் மாநாடு மீண்டும் கூடியதென்றாலும், ஏற்கனவேயிருந்த திட்டத்திற்கு எவ்வித இன்றியமையாத புதிய சேர்க்கையையும் செய்யவில்லை. ஹேகுவில் அமைக்கப்பட்டிருந்த இயந்திரம் போதுமானதன்று என்பது தெளிவாயிற்று. ஐரோப்பிய அரசுகளின் மனநிலை, வேறெந்த முழுமையான முறையையும் மேற்கொள்ளப்படுவதை அனுமதிக்கவில்லை.

## ஜெர்மனியின் குடியேற்றம் பற்றிய பேரவா

### மொராக்கோ

உலகப் பெரும்போர் முக்கியமாக இருவழிகளில் ஏற்பட்டது. அவை குடியேற்றங்கள் பற்றிய போட்டியும், பால்கன் பகுதியில் வல்லரசுகளின் எதிர்ப்புக்களும் ஆகும். செல்வம், அமைப்பு, அதிகாரம் இவற்றின் முன்னேற்றத்தால் செருக்குற்றிருந்த ஜெர்மனி, ஐரோப்பாவிற்கு வெளியிலிருந்த உலகத்திலும் ஏற்றாற்போல அதிகாரத்தில் பங்குகொள்ள உரிமை கொண்டாடியது. ஜெர்மனி, மக்களிடம் செழுமையைப் பற்றிய ஐயமில்லாததால், மக்களுக்குத் தேவையா இல்லையா என்பதைக் கவனியாமல், தனது பேரவாவிற்கு நிறைவளிக்கும் வகையில் இவ்வுரிமையைப் பாராட்டியது. ஆனால், உலகில் எல்லாப் பகுதிகளும் பெரும்பாலும் பிடித்துக்கொள்ளப்பட்டிருந்ததால், பெரும்பாலும் வேற்று நாட்டினரை ஓரிடத்திலிருந்து வெளியேற்றுவது வாயிலாகத்தான் குடியேற்ற நாடுகளைச் சேர்த்துக்கொள்ள இயலும். ஆயினும், நல்ல வாய்ப்புக்களடங்கிய குடியேற்ற அதிகாரத்தைப் பெற்றது; மற்ற அரசுகளுடன் ஏற்பாடு செய்துகொண்டு, ஆப்பிரிக்காவில் மிகப் பெரியனவும் வாய்ப்புக்களைக் கொண்டனவுமான பகுதிகளைச் சொந்தமாகப் பெற்றது. சைனாவில் ஷிங்கோ எனும் பகுதியைப் பிடித்துக்கொண்டு, சைனாவில் பெரிய வாணிக அதிகாரத்தை நிறுவுவதற்காக அவ்விடத்தில் உயர்ந்த அமைப்பையும், வெற்றிகரமான முயற்சியையும் செய்தது. ஐரோப்பியர்களின் ஆதிக்கத்திற்கு வெளியிலிருந்ததும் வட ஆப்பிரிக்காவிலுள்ளதுமான மொராக்கோவின்மீது

கண் வைத்தது; ஆனல், அங்கு அதன் முயற்சி பயனளிக்கவில்லை. கிரேட் பிரிட்டனுலாதரிக்கப்பட்ட பிரான்சின் பகைமையைத் தூண்டி விட்டது. ஓரளவு நாணுறும் நிலைமை உண்டு பண்ணிய திடீர்த் தடையை ஜெர்மனி அடைந்தது. மொராக்கோவில் காப்பாளர் அரசைப் பிரான்சு தான் ஏற்படுத்தியது.

## ஜெர்மனியும் சமீபக் கிழக்கும்

போரின் காரணத்திற்கு மொராக்கோப் பிரச்சினை நெருங்கிய தாயிருந்தது. ஆனல், நெருப்பை மூட்டிய தீப்பொறி பால்கன் பகுதியில் பரவியது. தன்னுடைய செல்வாக்குக்கும் வாணிகத்துக்கும் ஆசியாப் பகுதியிலிருந்த துருக்கியிலும் பால்கன் பகுதியிலும் சிறந்த வாய்ப்பிருந்ததாக, ஆஸ்திரியாவுடன் நெருங்கிய நட்புக்கொண்டிருந்த ஜெர்மனி கண்டது. பேரரசர், சுல்தானுடன் கொண்டிருந்த நட்பைச் செருக்குடன் வெளிப்படுத்தினர். பிற்காலத்தில், பாக்தாது இருப்புப் பாதையை அமைப்பதில் மிக்க செல்வாக்குடன் கூடிய பங்கை ஜெர்மனி பெற்றது. ஆனல், பால்கன் பகுதிகளின் நிலையை நன்கறிந்து கொள்ளுவதற்கு பெர்லின் உடன்படிக்கைக்குப்பின் அவண் நிகழ்ந்த முக்கியமான நிகழ்ச்சிகளிற் கருத்துக் கொள்ளவேண்டும்.

## பெர்லின் உடன்படிக்கைக்குப் பின் துருக்கியின் உறுப்புக்கள் வெட்டி நீக்கப்படுதல்

துருக்கி இராச்சியத்தின் உறுப்புக்களை வெட்டி நீக்குதலில் இந் நிகழ்ச்சி இறுதியானதாக வெல்திறம் நினைத்தது. 'சுல்தானுடைய ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகளின் எதிர்கால முழுமையாக்குதல்' என்னும் சொற்றெடர் மீண்டும் தோன்றியது. ஆனல், துருக்கிய ஆட்சிக்குத் துணைச் சுவராக எந்த ஆற்றலும் இல்லை. 1885-ல் ருமேனியாவும் பல்கேரியாவும் இணைந்தன. 1882-ல் எகிப்து பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வந்தது. 1898-ல் கிரீட்டு, கிரேக்க ஆட்சி யின்கீழ் அமைக்கப்பட்டது. 1908-ல் அரியணையிலிருந்து சுல்தானை விரட்டி உள்நாட்டில் சீர்திருத்தங்களை ஏற்படுத்தும் எண்ணங்களை உண்டு பண்ணிய புரட்சிக்குப் பின், ஆஸ்திரியப் பேரரசு, துருக்கியின் உள்நாட்டிற்காணப்பட்ட வலியற்ற தன்மையைப் பயன்படுத்திக் கொண்டு, பாஸ்னியா, ஹெர்ஸகோவினுப் பகுதிகளை வன்முறைமூலம் சேர்த்துக்கொண்டதாக அறிவித்தது. அதே நேரத்தில் பல்கேரியா, அதனுடைய முழுச்சுதந்தரத்தை அறிவித்தது. 1912-ல் இத்தாலியர் படையெடுத்துச் சென்று டிரிபோலியை ஆக்கிரமித்துக்கொண்டனர். அவர்கள் எதிர்பார்த்திருந்ததைவிட இவ்வீரச்செயல் மிகக் கடுமையா யிருந்தது. ஆனல், அவர்களை விரட்டுவதற்காக எடுத்துக்கொள்ளப்




புக்காரஸ்ட் உடன்படிக்கை (1913)யின்படி பால்கன் அரசுகளின் எல்லைகள்

[பக்கம் 463

பட்ட முயற்சிகளை எதிர்த்து அசையாதிருந்தனர். இறுதியில் பெயரள விற்காணப்பட்ட சுல்தானுடைய அதிகாரத்தின் கீழ், பால்கனில் மூண்ட பெரும்போரின் விளைவாக, துருக்கி அப்பகுதிகளை அவர் களிடமே விட்டுவிடநேர்ந்தது.

1908 - ல் கான்ஸ்டான்டிநோப்பிளில் நடந்த புரட்சியும், பாஸ்னியா, ஹெர்ஸகோவினுப் பகுதிகளை ஆஸ்திரியா வல்லந்தமாக மேற்கொண்ட செயலும், தீபகற்பப் பகுதியில் பொதுவான குழப் பத்தை உண்டு பண்ணின. துருக்கியர்களுக்கும் அவர்கள் ஆட்சியின் கீழிருந்த மக்களுக்கு மிடையே சமரசமேற்படுவது பற்றிய எண்ணங்கள் மறைந்தொழிந்தன. பால்கன் பகுதியிலிருந்த கிறித்துவ நாடுகள், துருக்கியர்களிடம் காணப்பட்ட கருத்து வேறுபாடுகளைக் கருத்திற் கொண்டு, அவர்களை ஐரோப்பாவின் பகுதியிலிருந்து விரட்டியடிக்கத் தக்க தருணத்தைக் கண்டன. எனவே, கிரீஸ், பல்கேரியா, மான்டி நீகிரோ, செர்பியா இவற்றுக்கிடையே 'மறைநிலையான பால்கன் கூட்டு' அமைக்கப்பட்டது. அந்நாடுகளுக்குள்ளிருந்த (சிறிது காலத் திற்குப் பின் மிகக் கொடுமையான போருக்கு வழி செய்த) சச்சரவுகளை ஒதுக்கித் தள்ளித் துருக்கியர்களைத் தோற்கடிக்கச் செய்வதில் அவர்கள் முயற்சிகளை ஒருமுகப்படுத்தி முடிவு கொண்டார்கள். 1912 அக்டோபரில் போர் தொடங்கியது. துருக்கியர்கள் போருக்குத் தயாராயில்லை. கிரேக்கர், செர்பியர், மான்டிநீகிரோக்கள், பல்கேரியர் ஆகிய எல்லோரும், துருக்கியர்மீது வெற்றி கொண்டனர். ஆனால், பல்கேரியரே மிகத் தீவிரமாகச் சண்டையிட வேண்டியிருந்தது. பல் கேரியர் துருக்கியரை இரு சண்டைகளில் தோல்வியுறச் செய்தனர். கான்ஸ்டான்டி நோப்பிளுக்குப் பாதுகாப்பாயிருந்த சாடல்ட்ஜாவை நோக்கி முன்னேறிய பின், வலிமையாயிருந்த ஆட்ரியாநோப்பிள் நகரத்தைக் கைப்பற்றினர். போர் முடிந்தது போலத் தோன்றியது. சமாதானத்தின் உட்பிரிவுகளை முடிவுசெய்ய இலண்டனில் மாநாடு கூட்டப்பட்டது.

உண்மையாகச் செய்யப்பட்டனவும், புதுபிக்கப்பட்டனவுமான இம்முயற்சிகள் பலனளிக்கவில்லை. மேற்கில் வெல்திறமுள்ளவர்கள் சமாதானத்தைப் பற்றிப் பேசிய போதிலும், பால்கனில் அதிக அச்சத்தை விளைவித்த புதிய போர் மூண்டது. அரசுகளின் அழுக்கா றுடன் கூடிய எண்ணங்கள் மிகக் கடுமையாயிருந்தன. பல்கேரியாவும், அதன் மன்னரான ஃபர்டினண்டும் செய்த முயற்சிகளுக்காகக் கொள்ளையில் அதிகப் பங்கைப் பெறுவதற்கு உரிமையிருந்ததாகக் கருதினர்கள். முதற்போரின்போதே, சலோனிக்காவை வயப்படுத்திக் கொள்ளுவதை முன்னிட்டு, கிரீஸுக்கும் பல்கேரியாவிற்கும் போட்டி யிருந்தது. இப்போட்டி இரண்டாவது போரில் முக்கியப் பிரச்சினையா

இருந்தது. இப்பொழுது எல்லா பால்கன் அரசுகளுடனும் பல்கேரியா போரிடுவதாயிற்று.

1913 ஜூனில் மூண்ட சண்டையில், துருக்கியர்களைக் காட்டிலும் பல்கேரியர்கள் மிகவும் இழிந்த நிலையை எய்தினுர்கள். ருமேனியர்கள் பகைவர்களுடன் சேர்ந்துகொண்டார்கள். ஆட்ரியோநோப்பிளைத் துருக்கியர் மறுபடியும் வயப்படுத்திக்கொண்டனர். தோல்விக்குமேல் தோல்வியையடைந்த பல்கேரியர்கள், ஐரோப்பியவரசுகளிடமிருந்தும் பகைவர்களிடமிருந்தும் சமாதானத்தை வேண்டினுர்கள். இடைக் காலத்தில் நிகழ்ந்த போர்களைவிட இப்போது நிகழ்ந்த இரண்டாவது போர், விஞ்சிய கொடுமைகளை உண்டு பண்ணியது. 'பால்கன் நாடுகள் ஒரு பெரிய பித்துடையோர் விடுதி; அங்கு நல்லுணர்வு நிலை ஏளனம் செய்யப்பட்டுக் கூரறிவு குற்றமாகக் கருதப்படுகிறது போலத் தோன்றுகிறது,' என நேரிற்கண்டவர் கூறினர். ஜூலைத் திங்கள் இறுதியில் தற்காலிகப் போர் நிறுத்த ஒப்பந்தம் கையெழுத்திடுவது அனுமதிக்கப்பட்டுச் சிறிது காலத்திற்கு அமைதி ஏற்பட்டது.

பால்கன் பகுதிகளுக்கு ஒரு புதிய நற்காலம் தொடங்கியது. போரின் தொடக்கத்தில் பார்த்தவை—பால்கன் நாடுகளின் இணைப்பு இயல்வதெனத் தோன்றியது—நிறைவுருமற்போயின. கான்ஸ்டான்டி நோப்பிள் துருக்கியர் வசமிருந்ததுடன், அவர்கள் ஆட்ரியா நோப்பிளையும் மீண்டும் பெற்ருர்கள். ஆனுல், ஐரோப்பிய வல்லரசு களில் ஒன்ருயிருந்த நிலை முடிந்தது. ஏஜியன் கடலுக்குள் புகுவதற்கு, பல்கேரியாவிற்கு வழியுண்டாயிற்று. ஆனுல், ஓரமயம் அது தன் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தனவாய்த் தோன்றிய பெரிய ஆட்சிப் பகுதிகளை இழந்தது. செர்பியா, எல்லைகள் விரிவடைந்தது காரணமாகப் பெரிய அரசாயிற்று. 1938-ல் செர்பியாப் பேரரசைத் துருக்கியர்கள் கொஸ்ஸோாவாச் சண்டையில் முறியடித்தற்குச் செர்பியா பழி தீர்த்துக்கொண்டது போலத் தோன்றியது. ஆனுலும், கடலுடன் தொடர்புகொள்ள வழியில்லாதிருந்ததுடன், அந்நாட்டு மக்க ளினத்தில் பல்லாயிரக் கணக்கானவர்கள் பாஸ்னியா, ஹெர்ஸ கோவினுவில் அதைப் போன்றே ஆஸ்திரியாவின் ஆட்சிக்குட்பட் டிருந்ததைக் கண்ட கிரீஸ், ஆட்சிப் பகுதிகளையும் மாண்பையும் மிகுதியாகப் பெற்றிருந்தது. கிரீட்டு அதனுடன் இணைந்திருந்தது. சலோனிக்காவும் கிரேக்கப் பகுதியென ஏற்றுக்கொள்ளப்பட்டது. பல நூற்ருண்டுகட்குப் பின், ஐரோப்பிய அலுவல்களில் ஏதென்ஸ் நகரம் முக்கியமான செல்வாக்கை மீண்டும் பெறக் கூடுமென்று தோன்றியது. பால்கன் நாடுகட்கு நல்ல எதிர்காலம் உறுதி செய்யப்பட்டது போன் றிருந்தது. எனினும், 1914-ல் ஐரோப்பாவில் கொழுந்து விட்டு எரியத் தொடங்கிய நெருப்புப் பொறி இங்கிருந்துதான் உண்டா யிற்று.

# 1914-ல் நடந்த உலகப் பெரும்போரின் காரணங்கள்

1914 ஜூலையில் ஐரோப்பாவைப் பாதாளத்தில் வீழ்த்திய பல்வேறு ஆற்றல்களின் சிக்கலிலிருந்து பிரித்துக் கூறுவதற்கு இங்கு முயல இயலாது, ஆண்டுகள் செல்லச் செல்ல நிகழ்ச்சிகளின தொலைவுத் தோற்றம் மாறுபடக்கூடும். அதனுடன் தனிமுறை அல்லது நாட்டைப் பற்றிய பல்வேறு செல்வாக்குகளின் தொடர்புச் சிறப்பைப் பற்றியும் அமைதியான நிலையில் சீர்தூக்க இயலாது. பகைவர்களுள் பெரிய மூன்று குழுக்கள் இருந்தன. பிரான்சும் ஜெர்மனியும் இணங்க முடியாதனவாயிருந்தன. தீவுப் பேரரசின் பாதுகாப்பிற்கு அறைகூவல் விடுத்த ஜெர்மனியின் கடற்படையால், ஜெர்மனியும் கிரேட்பிரிட்டனும் பகைமை கொள்ள நேர்ந்தது. ரஷ்யாவும், ஆஸ்திரியாவும் நம்பிக்கையில்லாதிருந்ததுடன், பால்கன் தீபகற்பத்தில் ஆதிக்கம் குறித்துக் கடும்போட்டியிட்டன. முதற் றுக்குதல் எங்கு ஏற்படும் என்பது பற்றிக் கவலையில்லை. பெரிய அரசுகளுள் நட்புக் கூட்டுக்களும் நல்லெண்ணங்களும் ஐரோப்பா முழுவதையுமே இப்போரிற் குதிக்கச் செய்யுமென்பது உறுதியா யிருந்தது.

பால்கனில் போர் மூளுவதற்கு உண்மையான வாய்ப்பு ஏற்பட்டது. ஆஸ்திரியாவுக்கும் ரஷ்யாவுக்குமிடையேயிருந்த போட்டிகளுடன், கிரேக்கர்கள், பல்கேரியர்கள், செர்பியர்கள் இவர்களின் இனம் பற்றிய பேரவாவும் நிலையாகச் சமாதானத்தை இடருக்குட் புகுத்தியது. தீபகற்பத்தின் வட மேற்கில், செர்பிய இனத்தார் வாழ்ந்தனவும் சிதறுண்டு கிடந்தனவுமான பகுதிகள் சேர்ந்த ஒரு பெரியஅரசு நிறுவப்படுவதைப்பற்றிச் செர்பியர்கள் சிறப்பாகக் கனவு கண்டார்கள். இப்பேரவா இயற்கையானதுடன், போற்றுதற்குமுரியது. ஆனால், செர்பியா, ஆஸ்திரியாவின் பாதுகாப்பிற்கு, தவிர்க்க முடியாத நிலையான பேரிடராயிருந்தது. ஆஸ்திரியாவின் எல்லைக்குள் செர்பிய இனத்தாருட் பலர் காணப்பட்டதே இதற்குக் காரணமாயிருந்தது. 1913-ல் செர்பியாவைத் தாக்க ஆஸ்திரியா திட்டமிட்டிருந்தது. இஃது இத்தாலியால் தடுக்கப்பட்டது. 1914-ல் ஏற்பட்ட நிகழ்ச்சி போருக்குக் காரணமாயிற்று. ஆஸ்திரியாவின் அரியணைக்கு உரிமை பெற்ற இளவரசர், ஜூன் மாதம் 28ஆம் நாள், சிரஜீவோவிற் கொலை செய்யப்பட்டார். இக்கொலைக்குற்றத்தில் செர்பியா அரசாங்கம் பங்கு கொண்டதாக ஐயம் ஏற்பட்டது. ஆஸ்திரியா—ஹங்கேரி இக் கொடுமையின் குறை தீர்க்கக்கோரி இறுதி எச்சரிக்கையை விடுத்தது. அவ்வெச்சரிக்கையே போர் தொடுப்பதாயிருந்தது. பால்கன் பகுதி களில் எப்பொழுதும் ஸ்லோவானிக்கு அரசுகளின் பாதுகாப்பாய்

இருந்த ரஷ்யா, ஆஸ்திரியாவின் மிகக் கொடிய கோரிக்கைகளை யெதிர்த்துச் செர்பியாவைப் பாதுகாக்க ஆயத்தமாயிருப்பதாக அறிவித்தது. ஆஸ்திரியாவை ஆதரிப்பதில் தனது உறுதியை ஜெர்மனி அறிவித்தது.

ரஷ்யாவுடன் செய்துகொண்டிருந்த ஒப்பந்தத்தின்படி நடந்து கொள்ளப் பிரான்சு மறுக்க முடியாமலிருந்தது. சமரசம் மாநாடு இவை வாயிலாக இச்சண்டைக்கு முடிவுகாண பிரிட்டிஷ் வெளிநாட்டு அமைச்சரால் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனால், அனைத்தும் வீணாயின. அவர்கள் பக்கலில் வன்முறைத் தாக்குதலைக் கொண் டிருந்த போரில், முக்கூட்டிற் சேர்ந்திருந்த நேசநாடுகளை ஆதரிக்கக் கடமைபபட்டதன்றென இத்தாலி அறிவித்தது. இதன் பயனாக அது சிறிது காலம் நடுவு நிலையாய்த் தனித்திருந்தது. ஆனால், பிரான் சுடன் ஏற்பட்டிருந்த நெருங்கிய உறவால் கிரேட் பிரிட்டன் இச் சண்டையில் தலையிட நேர்ந்தது. அதனுடன் ஜெர்மனியால் தாக்கப் பட்ட பெல்ஜியத்தின் நடுவு நிலையைப் பாதுகாக்க உறுதி செய்திருந் தாலும், பெல்ஜியத்தின் நடுவுநிலையை உறுதி செய்த கிரேட்பிரிட்டன் இப்போரில் இறங்க நேர்ந்தது. ஜெர்மனியும் அதன் நடுவு நிலையைக் காக்க உறுதி செய்தது. ஐரோப்பிய மக்களுட் பெரும் பான்மையோர் சமாதானத்தை விரும்பினர் என்பதுபற்றி ஐயங் கொள்ள இயலாது. ஆனால், ஐரோப்பியவரசில் வல்லுநர்களால் அரை நூற்றாண்டுகாலமாக முக்கியத் தொழிலாகக் கருதி அமைக்கப்பட்ட இக்கொடுமை நிரம்பிய பொறியின் பற்களிற் சிக்குமாறு, வேறு உதவி யின்றி, மக்கள் இழுத்துச் செல்லப்பட்டார்கள்.

கேம்பிரிட்ஜ் நவீன வரலாறு 12ஆம் தொகுப்புச் சுருக்கமாகக் கூறுவதுடன் நூற்றொகுப்பையும் கொண்டுள்ளது. ஜே. எச். ரோஸ் எழுதியுள்ள '1870 முதல் ஐரோப்பிய நாட்டினங்களின் வளர்ச்சி;' கூச்சு என்பார் எழுதியுள்ள 'நம் காலத்து வரலாறு' (1885-1911) மிகவும் பயனுள்ள சுருக்கமாகும். பால்கன் நாடுகள் பற்றிப் பலர் எழுதிய வரலாறு ஹானோடாக்யா எழுதியுள்ள 'நவீனப்பிரான்சு;' ஹோகன்லோ ஹியின், 'நினைவுக் குறிப்புகள்,' ஹெட்லாம் எழுதியுள்ள 'பதினான்கு நாள்களின் வரலாறு,' கில்பர்ட்டு மர்ரே எழுதியுள்ள 'சர் எட்வர்டு கிரேயின் வெளி நாட்டுக் கொள்கை' போன்றவை பயன் தருவனவாகும்.

# 22. பெரும்போர்
# (முதலாம் உலகப் போர்)

பெரும்போர்என வழங்க நாம் இப்பெரும்போரால் உலகம் சின்னபின்னப்பட்டிருந்த ஐந்தாண்டுகளில் வாழ்ந்தவரெவராலும், முப்பது பக்கங்களுக்கு மேற்படாமல் இப்போரைப்பற்றி மிகச் சிறு அளவிற்கூடக் கூறுவதென்பது மிகக் கடினமானதாகும். காலையில் வெளிவந்த செய்தித்தாள்கள் வெளியிட்ட செய்திகளை மையமாகக் கொண்டு சுழல்வது போல உலகின் நிலைகள் காணப்பட்டன. எல்லாம் உருத்திரிந்ததும் உண்மையற்றதுமான இயற்கைச் சூழ்நிலையில் மனிதர்களுடன் நிகழ்ச்சிகளும் காணப்பட்டன. நம்பத்தக்கனவும், திரித்துக் கூறப்படுவனவுமான செய்திகள், அடிப்படையற்ற வதந்திகள், முழுப் பொய்கள் இவைகளாற் பெரும்பான்மையோரின் கருத்துக்கள் மூழ்கச் செய்யப்பெற்ற செய்திகளின் ஒழுக்கை, வரலாற்று மாணவர் என்ற முறையில் நோக்கும்பொழுது சில அமயங்களில் வரலாற்றை எழுதுவதற்கு மூலப்பொருள்களானவையும், பாரசீகப் போர்களைப் பற்றிய வரலாற்றையெழுதுவதற்கு ஹெரடோட்டஸ் என்பாருக்கு மூலமாயிருந்தவைகளையும் இடைக்காலத்துச் செய்திக் கோவைகளினியல்புகள் ஒருபொழுதும் வினவப்படாததான வரலாற்றில் பல முடிவுகளின் நிலையற்ற அடிப்படைகளையும், 'வரலாறென்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட பொய்' எனும் நெப்போலியனின் கூற்று முதலியவைகளையும் இருபொருளுடையவையென ஆழ்ந்து சிந்திக்கலாயினர். ஆனல், நம்பிக்கையுறுதியற்ற நிலை, பொருத்தமானதன்று. வரலாறு முற்றிலுமுண்மையன்று; சற்றேறக்குறைய உண்மையானது. நாளுக்கு நாள் இவ்வுண்மை பற்றி நம் நம்பிக்கை நெருக்கமாக வளர்ந்து வருகிறது. இவ்வதிகாரத்தில் இப்பெரும் போரைப்பற்றி, நெடுநாள் கழிந்தது போன்றும், நம் மனத்திலும் எண்ணங்களிலும் சுவடுகளை விட்டுச் செல்லாதது போன்றும் கூற முயல்வோம்.

## சண்டையிட்ட நாடுகள்; மையமாயிருந்தவை

வரலாற்றில் இடம் பெற்றுள்ள போர்களைக்காட்டிலும் இப்போர் அளவிலும், அழிவையுண்டுபண்ணியதிலும் விஞ்சியிருந்தது என்று கூறுவது குறைத்துக் கூறுவதாகும். உலகின் நிலப்பரப்பில் முக்காற் பங்கிற்குமேல் இப்போரில் ஈடுபட்டிருந்தது. போரிட்ட நாடுகள் மிக அதிகமாயிருந்ததால், அவற்றின் முழுப்பட்டியலை உறுதி செய்வது கடினமானதாகும். தொடக்கத்தில், ஜெர்மனிக்கும் ஆஸ்திரியா விற்கும், பிரான்சு, கிரேட் பிரிட்டன், செர்பியா, மான்டி நீகிரோ, பெல்ஜியம், ஜப்பான் ஆகிய நாடுகள் எதிரிகளாய் இருந்தன. ஆனால், விரைவிலேயே மற்ற நாடுகளும், இச்சண்டையில் இழுக்கப்பட்டன. நெடுநாளாகவே ஜெர்மனி, துருக்கியின்மீது அதன் கவனத்தைச் செலுத்தி வந்தது. நன்முறையில் அமைக்கப்படாததும், மிகவும் பெரியதுமான அந்நாட்டில் அதன் மூலதனத்திற்கும் ஒழுங்காக அமைக்கும் தகுதிக்கும் ஏற்ற ஒருவழியை ஏற்படுத்த ஜெர்மனி முயன்றது. போர் மூளுவதற்கு முன்னதாகவே இவ்விரு நாடுகளுக் கிடையே சிறிது நல்லெண்ணம் இருந்தது கோபன், பெரஸ்வர் என்னும் இரு ஜெர்மன் போர்க்கப்பல்கள்—1914 ஆகஸ்டில் பிரிட்டிஷ் போர்க்கப்பல்களால் விரட்டப்பட்டு, கான்ஸ்டான்டிநோப்பிளுக்குத் தப்பிச் சென்றன. உடனே துருக்கிக்கும் ஜெர்மனிக்கும் இருந்த நட்புறவு வெளிப்படையாகத் தோன்றலாயிற்று. 1915-ல் கோடை காலத்தில் பல்கேரியா மன்னரான பர்டினண்டு இவற்றின் பக்கம் சேர்ந்தார். இந்நான்கு நேச நாடுகளும் போர்முடியும் வரை வேறெந்த நாட்டின் கூட்டுச் சேர்க்கையையும் பெறவில்லை. எதிர்ப் பக்கத்தில் போர் முடியும்வரையிலும் பல நாடுகள் சேர்ந்துகொண் டிருந்தன. அவற்றுள் கீழ்க்காண்பவை முக்கியமானவை :

## நேச நாடுகள்—இத்தாலி

ஆஸ்திரியா, ஜெர்மனி இவற்றுடன் ஏற்பட்ட முக்கூட்டுச் சங்கத்தில் இத்தாலியும் ஓர் உறுப்பாயிருந்தது. இச்சேர்க்கை இயற்கைக்கு மாறாயிருந்ததுபோலக் கருதப்பட்டதுடன், போர் ஏற்பட்டதும், ஜெர்மனியுடன் இத்தாலி கொண்ட உடன்படிக்கை, பாதுகாப்பிற்காக நடக்கும் சண்டையில் தான் உதவி செய்வதைக் குறிப்பதாயிருந்ததென்றும், இப்போது ஏற்பட்டுள்ள போரில் ஜெர்மனி வல்லந்தமாக நாடுபிடிக்கும் முயற்சியிலீடுபட்டதாகவும், எனவே இத்தாலி நடுவுநிலையாயிருக்கும் என்றும் அறிவித்தது. இத்தாலியர்கள் கருத்து மிகவும் குழப்பநிலையிலிருந்தது. 'விடுவிக்கப் படாத இத்தாலி'யை மீண்டும் அடைய விருப்பமும், லூஸிடானியாக் கப்பலைமூழ்கடித்தது போன்ற பெருநாணத்தை விளைவிக்கும் கொடுஞ்

செயலால் ஏற்பட்ட சீற்றமும், பாதுகாப்பு, பணத்தைப் பொறுத்த பெரும்பயன் இவற்றின் எதிர்ப்பயன்களுடன் முரண்பாடாயிருந்தன. ஆனால், 1915 மே மாதத்தில், இத்தாலி ஆஸ்திரியாமீது போர்ப் பேரறிவிப்புச் செய்து, நேச நாடுகளின் பக்கலிற் சேர்ந்து கொண்டது.

## ருமேனியா

அடுத்ததாக ஐரோப்பாவின் இணைப்பில் ருமேனியா மிக முக்கிய மானது. அது பால்கன் போர்களில் பிற்பகுதி நிலைகளில் தன் இராணுவ வலிமையை வெளிக்காட்டியிருந்தது. அது வழக்கமாகப் பிரான்சுடனும், மேற்கு நாடுகளுடனும் இரக்கம் கொண்டிருந்தது. இதற்கு அதன் இலத்தீன் வழித்தோன்றல் என்பதும் ஈடுபாட்டிற் குதவியாயிருந்தது. ஆனால், நாட்டின் அரச குடும்பம் ஹோகன் சோலன்களின் ஒரு கிளையாயிருந்ததால், குடும்ப உறவு அதன் கொள்கையின்மீது அடிக்கடி செல்வாக்குப் பெற்றிருந்தது. ஆயினும், 1914-ல் மன்னர் கரோல் இறந்த பொழுது, நிலைமை மாறி, ஈராண்டு கட்குப் பின் (ஆகஸ்டு 1916) ருமேனியா ஆஸ்திரியாமீது போர் அறிவிப்புச் செய்தது. அதன் நீண்ட எல்லையும், பயன்படுத்தப்பெறாத வளமூலங்களும் பெரு வெற்றியைப் பற்றி எழுச்சியான எண்ணங்களைத் தூண்டின. விரைவிலுண்டான அதன் வீழ்ச்சி, போரின் பெரிய ஏமாற்றங்களுள் ஒன்றாயிருந்தது.

## கிரீஸ்

நெடுநாள் வரை கிரீஸ் மனத்தடுமாற்ற நிலையிலிருந்தது. கிரீஸ் நாட்டு அரசியார், ஜெர்மன் நாட்டுக்கெய்சரின் உடன் பிறந்தாராவார். இச்சிறு நாடு இருபுறங்களிலும் கொடுமையான வற்புறுத்தலுக்கு இலக்காகியிருந்தது. இந்நாட்டில் சிறந்த அரசியல் வல்லுநரான, வெனிசீலாஸ், தொடக்கத்திலிருந்தே நேசநாடுகளின் நோக்கத்தை ஆதரித்து வந்தார். 1917-ல் மன்னர் கான்ஸ்டன்சு முடி துறக்கும்படி நேர்ந்தது. சிறிதுகாலத்திற்குப்பின், கிரீஸ் நேச நாடுகளுக்குப் பயனுள்ள உதவியை அளித்தது.

## ஆப்பிரிக்காவின் குடியேற்றங்கள்

### ஐக்கிய நாடுகளும் தென்னமெரிக்காவும்

போரின் முடிவில், நடுவுநிலையிலிருந்த ஐரோப்பிய நாடுகள், சுவீடன், நார்வே, டென்மார்க்கு, ஹாலந்து, சுவிட்சர்லாந்து, ஸ்பெயின் என்பவை. ஐரோப்பாவிற்கு வெளியில் நடுவுநிலையி

விருத்தவைகளும் மிகுதியானவையாகும். தொடக்கத்திலிருந்தே உலகில் நெடுந்தொலைவிலிருந்த பகுதிகளும் இப்போட்டியில் தொடர்பு கொள்ளும் எனத் தோன்றியது. ஜெர்மனியின் பகைவர்கள், ஆப்பிரிக்காவிலும், பசிபிக்குக் கடலிலும் அதன் குடியேற்றங்களின் மீதும் பாய்ந்தார்கள். ஜப்பான் சீனுவில் ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த பகுதிகளைத் தாக்கியது. எனவே, தொடக்கத்திலிருந்தே ஆப்பிரிக்கா முழுவதும், அதேபோலக் கிரேட்பிரிட்டன், பிரான்சு, பெல்ஜியம் இவற்றின் குடியேற்ற நாடுகளும், சொந்தமான பகுதிகளும் இப்போரில் சேரலாயின. ஆனுல், ஒரு காலம்வரை அமெரிக்கக் கண்டங்கள்-கனடா நீங்கலாக - இப்போரில் கலவாதிருந்தன. கனடா மட்டும் பிரிட்டிஷ் பேரரசின் ஒரு பகுதியாகச் சண்டையில் சேர்ந்திருந்தது. போரின் இறுதி நிலை, அமெரிக்க ஐக்கிய நாடுகளும் இப் புயலில் இருப்பதாகக் கண்டது. வடவமெரிக்காவின் போக்கைத் தொடர்ந்து தென்னமெரிக்காவின் குடியரசுகளில் பெரும்பாலன போரிற் கலந்தன. போரின் முடிவில் ஜெர்மனியுடன் ஏற்பட்ட சமாதானத்தில் இருபத்தேழு நாடுகள் கையொப்பம் இட்டன. படைகள், நாடுகளின் வியக்கத்தக்க கூட்டத்தைப் பிரதிபலித்தன. பிரான்சின் பெருவழிகளிலும், எல்லைகளிலும், பல குரல்களையும் மொழிகளையும் சமயங்களையும் கொண்டவர்கள் நிறைந்திருந்தார்கள். இவ்வளவு முழுமையாய் நடந்த போரைப்பற்றி, வருவது பற்றி உரைப்பவர் எவரும் முன்னதாகக் கூறவில்லை.

## போரிட்டவர்களுடைய பெரிய எண்ணிக்கை

தொடக்கத்திலேயே, ஐரோப்பா நாட்டு மக்களும், 1915 முதல் கிரேட் பிரிட்டனும், போரில் சேர்ந்தது முதல் ஐக்கிய நாடுகளும், கட்டாய இராணுவச் சேவையை மேற்கொண்டதுடன், நாட்டு ஆடவரினத்தையே போர்க்கருவிகளைத் தாங்கும்படி கட்டளையிட்டன. இதன் பயனுக முன் மாதிரியில்லாதவாறு படைகளில் மிகப்பெரியவையாயிருந்தன. இதைக்காட்டிலும் மேலும் பெரிய படைகளைக்காண உலகத்தை ஊழ் கூட்டுவிக்கும் என்பது இயலாததாயிருந்தது. எதிர்பார்த்ததைக்காட்டிலும் போர் நெருக்கமாயும் இடர் நிறைந்ததாயும் இருந்ததால், எண்ணிக்கையாற் குறிப்பாகவுணர்த்தக் கூடியதைக் காட்டிலும் விபத்துக்குள்ளானவர்கள் அதிகமாயிருந்தார்கள். இராணுவத்தைப்பற்றி எழுதுகிறவர்களுட் சிலர், நேருக்கு நேர் சண்டையிடுவதென்பது இனி இயலாது என நம்பிக்கையுடன் கூறியதுடன், போர்க்கவசம் பூண்ட வீரர்களின் துப்பாக்கிமுனை ரோமானியர்களுடைய குட்டையான கத்தி சென்ற வழியே செல்லும் என்றும் கூறினர். சில வாரங்கள் திறந்த வெளிச்சண்டை செய்தபின் மேற்கிலிருந்த படைகள், நீண்ட பள்ளங்களில் நிலைபெறலாயின. அப்பள்ளங்கள்




போரிலீடுபட்ட ஐரோப்பிய நாடுகளும் ஆண்டுகளும்

(பக்கம் 470)

| நேச நாடுகள் | | பகைவர்கள் | |
|---|---|---|---|
| செர்பியா, மாண்டிநீக்ரோ, ரஷ்யா, பெல்ஜியம், பிரான்சு, கிரேட் பிரிட்டன் | 1914 | ஆஸ்திரியா, ஹங்கேரி, ஜெர்மனி, துருக்கி, | 1914 |
| இத்தாலி | 1915 | பல்கேரியா | 1915 |
| அல்பேனியா, போர்த்துகல், ருமேனியா | 1916 | | |

ஆஸ்டெண்டிலிருந்து சுவிட்சர்லாந்துவரை நீண்டிருந்தன. அப் பள்ளங்களிலிருந்து குறுகிய தொலேவில் எல்லாவிதப் போர்க்கருவி களுடனும் படைகள் தாற்காலிகப் போர் நிறுத்தம், தாற்காலிக உடன் பாடு அல்லது ஓய்வு இல்லாமல், மண்ணுக்குள்ளிருந்தும், வானிலும் அதே போலப் பூமியின் மேலிருந்தும், கொலே நிறைந்த இப்போரை நடத்தின. புள்ளி விவரங்கள் கணக்கிடப்படவில்லே. மதிப்பீடுகளும் மிகவும் மாறுபட்டனவாயுள்ளன. ஆனுல், இப்போரில் ஐம்பது மில்லியன் மக்களுக்கு மேல் ஈடுப்பட்டிருந்தார்கள். கொலேயுண்டவர் களின் எண்ணிக்கை எட்டு மில்லியனுக்குக் குறையுருது. காய முற்றவர்கள் அதைப்போல நான்கு மடங்கிருக்கலாம். ஐரோப்பிய நாடுகளில் இளேஞர்களுள் ஒருதலேமுறையினர்—உலகில் அரசியல் வல்லுநர்கள், கலேஞர்கள், விஞ்ஞானிகள், சமயத்தலேவர்களாயிருந் திருக்கவேண்டியவர்கள்—அடித்துச் செல்லப்பட்டார்கள்.

தொடக்கத்திலிருந்தே விஞ்ஞானம் போர்வீரரின் நட்பினேக் கொண்டிருந்தது. ஆனுல், இந்நட்பு இக்கடுந்துன்பமான ஆண்டு களில் கொடிய தோற்றத்தின் உச்சியை அடைந்தது. நீண்ட பள்ளங்கள் பல்வேறு நாடுகளுடைய விஞ்ஞானச் சோதனேச்சாலே களேயும் பொறியியல் வேலேக்கூடங்களேயும்விட இப்போரின் உறுதி யான போர்க்களமாய் இருக்கவில்லே. ஜுலியஸ் சீசரின் போர்களேக் காட்டிலும்,நெப்போலியனுடைய போர்கள் சிறிதளவும் மாறுபட்டிருக்க வில்லே. ஆனுல், நெப்போலியனுடைய போர்களேக்காட்டிலும் போர்க்கருவிகள், பின்பற்றிய போர்முறைகள் ஆகிய இவைகளில் இப்போர் மிகவும் மாறுபட்டிருந்தது. கடந்த நூற்ருண்டில் உலகின் இரகசியங்களில் பலவற்றை விஞ்ஞானம் நன்கறிந்திருந்தது. இதன் பயன், இணேயற்ற மக்கள் அழிக்கப்பட்டதாகும். போருக்கு முன் புத்தம்புதிய சில கண்டுபிடிப்புக்கள் போர் வீரருக்கு மிகமிக உதவியா யிருக்குமென்பது தெளிவாயிருந்தது. பல்லாண்டுகளாகவே எல்லாக் கப்பற்படைகளிலும் நீர் மூழ்கிக்கப்பல்கள் முறையான பங்காயிருந்தன. வானவூர்தியும் குறித்த திக்கிற் செலுத்தக்கூடிய பலூனும் (ஜெர்மனியில் முதன் முதலாகக் கண்டு பிடித்தவரின் பெயரால் வழங்கப் பட்ட சொல்) அண்மையில் கண்டு பிடிக்கப்பட்டவையாயிருந்ததால் அவற்றின் இராணுவத்திறனேக் காட்டக்கூடிய அளவு வளர்ச்சி பெற்றிருக்கவில்லே. போரின் நடைமுறைகள், பயன், இவற்றின் தன்மையில் இவ்விரு புதுக் கண்டுபிடிப்புக்களும் மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந்தன. போர் மூண்டதும் எல்லா நாடுகளிலுமிருந்த புதுப் புனேவாளர்கள் தாக்குதல் அல்லது பாதுகாப்பு இவைகளில் புதிய முறைகளேக் கண்டுபிடிப்பதில் கடுமையாய் ஈடுபட்டிருந்தார்கள். முதன்முதலாக நச்சுக் காற்றுக்களும், எரியும் நீர்ப்பொருளும் ஜெர்மானியர்களால் பயன்படுத்தப்பட்டன. ஆனுல், அப்பொழுதே

சண்டையில் கலந்திருந்தவர் எல்லோரும் இவற்றை மேற்கொண்டனர்.

## டாங்குகள்

1915 செப்டெம்பரில், பிரிட்டிஷ் படைகளிற் கவசம்போல மூடப்பட்ட மோட்டார்கார்கள் தோன்றின. இவை இயந்திரத் துப்பாக்கிகளைத் தாங்கிச் செல்லவும், பகைவர்கள் தோண்டியிருந்த பள்ளங்களைக் கடந்து செல்லவும் ஏற்றனவாய்ச் சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தன. இதனால், 'டாங்குகள்' எனும் புனைபெயரால் வழங்கப்பட்டன. தங்களுடைய தோல்விக்கு இவை பெரிதும் காரணமாயிருந்தன வென்பதை ஜெர்மன் போர்த்தலைவர்கள் ஒப்புக்கொண்டார்கள். டாங்குகள், வானவூர்திகள், செப்லின்கள், நீர்மூழ்கிக் கப்பல்கள் எல்லாம் உள்ளேயே எரியக்கூடிய பொறியைப் பற்றியனவாயிருந்தன. இவைகளில்லாமல் போரிட முடிந்திராது. போர்க்காலத்தில் முகாம்களின் நோய்த் தடுப்பு, புண்களை ஆற்றுதல் போன்ற வாழ்க்கை நல ஏற்பாடுகள் பற்றியும் விஞ்ஞானம் வியக்கத்தகுந்த துணைகளை உதவியது. ஆனால், கொலை செய்வதற்கு விஞ்ஞானம் துணை செய்ததுபோல, அவ்வளவு தூரம் இவற்றுக்குத் துணையாயில்லை. போரின் இத்தோற்றம், வருங்காலத்திலும் கவலை நிறைந்த எண்ணத்தையும் விளக்கத்தையும் தூண்டக்கூடும். விஞ்ஞானம் மனித சமுதாயத்தின் நீதி மன்றத்தின்முன் குற்றம் சாட்டப்பெற்று நிற்கிறது.

## போர்த்துறையில் ஈடுபடாத மக்கள் தொகை

இதற்குமுன் இப்போரைப் போன்று எதுவும் மனித சமுதாயத்தின் ஆற்றல்களைத் தொலைப்படுத்தவில்லை. போர் செய்யாதவர் ஒருவருமில்லை. முதலில் இத்துணைப் பெரும்போர், மிகக் குறைந்த காலம் நடப்பதாயிருக்குமெனவும், அதனுடன் மிகப் பெரிய படைகளைப் போர் முனைக்கு எடுத்துச் செல்லமுடிந்த போதிலும் போரில் ஈடுபட்டிருந்தநாடுகளின் பொருளாதாரச் செலவு காரணமான சோர்வினால், படைகளைப் போர் முனைகளிலேயே வைத்துக்கொண்டிருக்க முடியாதெனவும் கூறப்பட்டது. ஆனால், நவீன அரசாங்கங்கள் ஐயம்கொண்டதற்கும் மேலான வளமூலங்களைக் கொண்டிருந்தன வென்பது நிலைநிறுத்தப்பட்டது. இதற்குமுன் காணாத வகையில் மகளிர் வேலை செய்ய அழைக்கப்பட்டனர். கிரேட் பிரிட்டன், பாராளுமன்றத் தேர்தல்களில் வாக்குரிமையளிக்கப்பட்டது வாயிலாக மகளிரின் சேவையைப் பாராட்டியது. மகளிரின் உடையும் தோற்றமும் மாறின. டிராம் வண்டிகள், தபாற்பணி மனைகள், அலுவலகங்கள், வெடி

மருந்து தொழிற்சாலைகள், பல்வேறு நிலங்களின் விவசாயம் போன்றவை அதிகமாக மகளிரிடம் ஒப்படைக்கப்பட்டன. இறுதியில், எங்கும் பஞ்சம் ஏற்பட்டது அல்லது ஏற்படுவதாக அச்சுறுத்திய போது ஒவ்வொருவரும் விருப்பத்துடனோ, விருப்பமின்றியோ, போரில் ஈடுபட்டிருந்தது தெளிவாயிருந்தது. சிறிதளவு உணவு உட்கொள்ளுவது நாட்டுப்பற்றின் அடையாளமாயிற்று. கிரேட் பிரிட்டனும் அதன் நேய நாடுகளும் அதிகக் கொடுமையாலும் வசதிக் குறைவாலும் துன்புற்றபோது நடு நாடுகளில் கடுமையான பஞ்சம், உண்டாயிற்று.

## முக்கியமாக ஆற்றல் சமநிலைக்கான போர்

இஃது அளவிலும் நடைமுறையிலும் இணையில்லாதபோர்! ஆனால், முக்கியமான நோக்கத்தில், இப்போர், நான்கு நூற்றாண்டுகளுக்கு முன் ஐரோப்பாவில் நிகழ்ந்த பெரிய போர்களை ஒத்திருந்தது; சத்திச் சமநிலைக்காக முக்கியமாக ஏற்பட்ட போராயிருந்தது சரியென்ற எண்ணம் இல்லாதவிடத்தும், நிறைவேற்றுவதற்கு அதிகாரமில்லாத விடத்தும், தனிப்பட்டோர், வலியவர்களை எதிர்த்து எளியோர் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்காக ஏற்பட்ட குழுக்களில் தாங்களே விரும்பிச் சேரலானார்கள். நாடுகளின் போக்கிலும் சத்திச் சமநிலை இதே (தானே இயங்கும்) கொள்கையினை உட்கொண்டிருந்தது. உலகில் ரோமப் பேரரசு பேராதிக்கம் கொண்டிருந்த பொழுது சத்திச் சமநிலை இல்லை. இடைக்காலத்தில் கத்தோலிக்கத் திருச்சபையும் புனிதரோமப் பேரரசும், சில நேர்மையின் அளவுகளின் அடிப்படையில் ஐரோப்பாவின் ஒற்றுமைக் கருத்தை நிலைபெற்றிருக்கச் செய்வதற்காகப் போரிட்டபோதும் இக்கொள்கை பயன்படுத்தப்படவில்லை.

## முந்தைய எடுத்துக்காட்டுக்கள்

கழுவாய்

ஆனால், 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து ஐரோப்பாவை ஒன்றாக இணைத்து வைத்திருந்த வலுவற்ற பிணைப்புக்கள் முறிக்கப்பட்டன. ஒவ்வொரு நாட்டிற்கும் அந்தந்த நாட்டின் தற்பெருமையே சமயக் கொள்கை போலாயிற்று. கடந்த நான்கு நூற்றாண்டுகளில் அவ்வப்போது ஒரு நாடு ஸ்பெயின் அல்லது பிரான்சு அல்லது ஆஸ்திரியா அல்லது பிரஷ்யா அல்லது கிரேட் பிரிட்டனுடைய கடலாதிக்கம்—அதன் தோழர்களின் சுதந்தரத்தையும், உரிய தன்மையையும் அச்சுறுத்துவது போலத் தோன்றுமாறு தொடர்ந்து போரிட்டதைக் கண்டிக்கிறது. வலிமையற்றிருந்த

நாடுகள் வலிமையாயிருந்த நாட்டிற்கு எதிராய் ஒன்று சேர்ந்தன ; அதனுடன் வலிமையாயிருந்ததைக் கீழே இழுப்பதில் தோல்வியுற வில்லே. ஒரு நூற்ருண்டுக்கு மேலாகவே ஆஸ்திரியா—ஸ்பெயின் அரசு அதன் எதிரிகளின்மீது போரிட்டது; நாற்பது ஆண்டுகளில் பதினுன்காம் லூயி கவிழ்க்கப்பட்டார் ; அமெரிக்கச் சுதந்திரப் போருக்குப்பின் அதன் பகைவர்களிடம் கிரேட் பிரிட்டன் கீழ்ப்படிய நேர்ந்தது ; சற்றேறக்குறைய இருபது ஆண்டுகள் நெப்போலியன் ஐரோப்பாவில் பேராதிக்கம் கொண்டிருந்தார் ; 1866 வரை பிரஷ்யா ஐரோப்பாவை அச்சத்தில் ஆழ்த்தி வைத்திருந்தது. தற்பாதுகாப்பு இயல்பூக்கம் போன்று, சத்திச் சமநிலேக் கொள்கையை இடித்துக் கூறுவது பயனற்றதாகும். அரசு தோற்றத்தினுல் தனிப்பட்டவரின் வாழ்க்கையில் காணப்பட்ட கொள்கையின் ஒப்புமை விலக்கப்பட்டது. சர்வதேச சங்கம் இணக்கமான உலக முறையைக் குறித்து ஒரு முக்கியமான நிலேயமாக எதிர்பார்க்கப்படுகிறது. இதனுலேதான் உலக நாடுகளில் மிக வலிமையான நாட்டிற் பகையைக் காணுவதையும் தற்பாதுகாப்பிற்காக அதற்கெதிராக ஒன்று சேருவதையும் தடை செய்ய இயலும்.

## II

போரை நன்கு அறியக் கற்பனேயில் ஓரளவு உயரச்செல்ல வேண்டும். இங்கிருந்து, போர் அரங்கங்களேக்—குறைந்த பட்சம் ஐரோப்பா, மேற்கு ஆசியாவிலிருந்தவைகளேயாவது—பார்க்கலாம் இவ்வாறு நோக்கினுல், போர் சுருங்கக் கூறின், (நடுவிலிருந்த) அரசுகளே முற்றுகை செய்ததாகும் எனலாம். பகைவர்களின் முற்றுகை அரண் வரிசைகளேத் தகர்ப்பதற்காக அவைகள் போரிட்டன. ஓரமயம் அவற்றை மேற்கில் வெல்லும் போலத் தோன்றுகிறது. பின்பு ஓரளவு கிழக்கில் வெற்றி பெறுகின்றன. இதற்கிடையில், முற்றுகையிடும் பகைவரின் வலிமை உயர்கிறது. அதனுல், முற்றுகை யிடப்பட்டவர்கட்கு எவ்விதப் படை வன்மைப் பெருக்கும் வரமுடியாது. மேற்கில் அரணேத் தகர்ப்பதற்காக இறுதிப்பெருமுயற்சி காண்கிறது. வெளித்தோற்றத்தில் வெற்றி பெறப்படுகிறது. ஆனுல், தற்கொலே யாகும் செலவில் அவ்வெற்றி பெறப்படுகிறது. பகைவர் மீண்டும் தாக்குகின்றனர். நடுவிலிருந்த அரசுகள், நிலேக்கேற்ற முடிவு காணும் வகையில் சரணடைய வேண்டியிருக்கிறது.

இதனேயே தெளிவாகக் கூறவேண்டுமானுல், நடுவிலிருந்த நாடுகள், பிரிட்டிஷ் நேசநாடுகள் ஆகிய இவற்றின் கப்பற்படைகளால் முற்றுகையிடப்பட்டன ; மேற்கில், ஆங்கிலேய பிரெஞ்சுப் படை களாலும், தெற்கில் இத்தாலியாலும் முற்றுகையிடப்பட்டன. கிழக்கில், ரஷ்யாவும் பால்கன் நாடுகளும் எதிர்த்தன. மேற்கு, தெற்கு

அரண்களை அவற்ருல் உண்மையில் உடைக்க முடியவில்லை. கிழக்கில் ரஷ்யர்கள், ருமேனியர்கள், செர்பியர்களின்மீது பெரிய வெற்றிகளைப் பெற்ருர்கள்; எகிப்தில் ஆங்கிலேயரின் பிடிப்பையும் அச்சுறுத்தினர்கள். அவை வெற்றிகளின் ஒரு பெரிய வரிசையாயினும், அவை போதுமானவையல்ல. மேற்கிலும் தெற்கிலுமிருந்த அரண்கள் வாளாவிருந்தன. அப்பொழுது அமெரிக்கா அதன் போர்வாள், செல்வம், ஆர்வம் முதலியவற்றைத் தராசில் இட்டது. அமெரிக்கப்படைகள் அவற்றின் முழுச் சுமையையும் உணரச் செய்வதற்கு முன்னதாகவே நேச நாடுகள் உட்புகுந்து ஆஸ்திரியர்களையும் ஜெர்மானியர்களையும அடிபணியச் செய்தன.

மீண்டும், தெளிவு கருதி, போரின் முக்கிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிட முயலுவோமானுல், அவை இவ்வாறு இருந்தன: (1) 1866-ல் ஆஸ்திரியாமீதும், 1870-ல் பிரான்சின்மீதும் வெற்றி கண்டதுபோல, ஜெர்மானியர்கள் ஒரே தாக்குதலில் இப்போரை முடிக்கக் கருதிய வேகம், இது 1914 செப்டெம்பரில் தோற்றது, (2) தொடர்ந்து நான்கு ஆண்டுகளாக மேற்கிலிருந்த படைகள், அதிகமான பெரிய சண்டைகளையிட்டு, எண்ணற்ற உயிரிழப்புக்களைப் பெற்றிருந்த போதிலும், அவற்றின் நிலைமையில் அதிகமாறுதலின்றிப் போர் செய்தன. இதற்கிடையில் ரஷ்யா தோல்வியுற்றது. கடும்புரட்சி ஏற்பட்டதன்பின் 1918 மார்ச்சு மாதத்தில் பிரஸ்ட்-லிட்டோவ்ஸ்க் எனுமிடத்தில் சரணடைய நேர்ந்தது, (3) ஐக்கிய நாடுகள் 1917 ஏப்பிரல் மாதத்தில் போர் வெளியீட்டறிக்கை செய்தது, (4) 1918 மார்ச்சு மாதத்தில் மேற்கில் ஜெர்மனியின் படைகளின் தாக்குதல் ஓரமயம் வெற்றியை உறுதி செய்வதுபோலத் தோன்றியது, (5) 1918 ஜுலையில் தொடங்கி, நவம்பர் மாதம் 11ஆம் தேதி தாற்காலிகப் போர்நிறுத்தம் செய்யும் ஒப்பந்தத்துடன் முடிந்த காலத்தில் நேச நாடுகளின் எதிர்த் தாக்குதலால் எல்லாம் முடிந்தது, (6) இந் நிகழ்ச்சிகளையெல்லாம் அடிப்படையில் கட்டுப்படுத்திய பிரிட்டனும் அதன் நேச நாடுகளின் கடற்படைகளின் தொடர்ந்த விழிப்பும், நெருக்கமும் காணப்பட்டது. கடலில் நெடுந்தொலைவிலிருந்ததாய்த் தோன்றும் இராணுவ நடவடிக்கைகட்குக் கடலாதிக்கத்தின் அளவற்ற முக்கியத்துவத்திற்கு மற்ருேர் எடுத்துக்காட்டாக இப்போர் இருந்தது.

## III

## பெல்ஜியத்தின்மீது ஜெர்மனி படையெடுத்தல்

வெற்றியைக் குறித்து ஜெர்மன் அரசாங்கமும், மக்களும் நம்பிக்கையுடன் இருந்தார்கள்; ஆனுல், தங்களுக்கு எதிரிலிருந்த வேலையின் மிகுதியை நன்கு உணர்ந்திருந்தார்கள். பிரான்சின் கிழக்கு எல்லை

மிக விரிவாக வலுப்படுத்தப்பட்டிருந்தது. நேரிடையாகத் தாக்குவது வாயிலாக விரைவில் வெற்றியை எதிர்பார்க்க முடியாது. ஆகையால், பெல்ஜியம் வழியாகத் தாக்குவதென முடிவு செய்யப்பட்டது. ஜெர்மனியே அதன் நடுவுநிலையை மதிப்பதாக வாக்குறுதி செய்திருந்த வாறு நடுவுநிலை நாடு என்ற உரிமைகளை இழக்குமாறு பெல்ஜியம் ஒன்றும் தவறு புரியவில்லை. அச்சுறுத்துதல் அல்லது இணங்கச் செய்தல் வாயிலாக ஜெர்மன் படைகளை நாட்டின்வழியே செல்ல அனுமதிக்குமாறு பெல்ஜியம் தூண்டப்பட்டிருக்குமானால், 1870-ல் ஊழ் திறம்பட்ட தாயமைந்த தாக்குதலைக்காட்டிலும் விரைவான தாக்கு தலால் பிரான்சு முறியடிக்கப்பட்டிருக்கலாம். அதனுடன் கிழக்கிலிருந்த பகைவர்களைப் பின்பு ஜெர்மனி தனியாகத் தாக்கலாம். எனவே, பெத்மான்-ஹால்வெக்கு ஏற்றுக்கொண்டவாறே சருவதேச உரிமைப் பிளவு மிக இழிந்ததாகச் செய்யப்பட்டது எனினும், இவ்வாறு செய்தது போருக்குத் தேவையானது என்று ஏற்றுக்கொள்ளப்பட்டு ஜெர்மன் படைகள், வெற்றிக்கு 'வழி கோலுவதற்காக' அணி வகுத்துச் சென்றன.

## பெல்ஜியத்தின் எதிர்ப்பு

தொடக்கத்திலிருந்தே பெல்ஜியத்தின் மீதான துணிகரச்செயல் ஏமாற்றத்தை உண்டுபண்ணுவதாயிருந்ததுடன் நாள் செல்லச்செல்ல ஜெர்மனியின் எண்ணங்கட்கு ஊழை விளைவிப்பதாயுமிருந்தது. முதலில் சிறு நாடான பெல்ஜியத்தின் வீரத்துடன் கூடிய எதிர்த்து நிற்கும் தன்மையையும் எதிர்பாராத வலிமையானது தடை செய் வதையும் ஜெர்மன் படைகள் எதிர்த்து நிற்க வேண்டியிருந்தது. அச்சுறுத்துதல் அல்லது வாக்குறுதிகள் இவற்றுக்கு இணங்கமறுத்தது, வரலாற்றில் மிக உயர்ந்தவைகளின் ஒன்றாகும். சில பொன்னான நாள்கள் வரை லீஜ் நகரம், முற்றுகையிடுவதற்கான பீரங்கிகள் கொண்டுவரப்படும் வரை, எதிர்த்து நின்றது. அதன்பின் கொடுமை யாலும் துன்புறுத்துதலாலும் நிறைந்த ஜெர்மனி படையெடுப் பாளர்கள், பெல்ஜியத்தைச் சரணடையச்செய்ய முயன்றார்கள். ஜெர்மானியர்கள் பின்பற்றியவை அனைத்து நாட்டு ஒப்புதலுக்கும் முற்றிலும் மாறாயிருந்தன. அதனுடன் நாகரிகம் வாய்ந்த நாடு களுக்கிடையே நிகழ்ந்த போர்முறையில் எடுத்துக் காட்டு இல்லாம லிருந்தது. பெல்ஜியம் எல்லாவற்றையும் உறுதியுடன் எதிர்த்து நின்றது; பிரான்சிற்கும் கிரேட் பிரிட்டனுக்கும் உதவிக்காக முறை யிட்டது. பெல்ஜியத்தின் நடுவுநிலைமையைக் குறித்து உறுதியளித்த வைகளுள் இவ்விரு நாடுகளும் சேர்ந்திருந்தன. பெல்ஜியம் தொடுத்த போரில் அதன் படைகள் நகரங்களிலிருந்து ஒன்றன்பின் ஒன்றாக விரட்டியடிக்கப்பட்டு, இறுதியில் பெல்ஜிய நாட்டின் ஒருசிறு மூலையில்

இருந்தன. நான்கு ஆண்டுகளுக்குப் பின், அதன் தைரியத்திற்கும் விடாமுயற்சிக்கும் பரிசாக வெற்றி கிட்டியது.

## போரில் கிரேட் பிரிட்டன் நுழைதல்

பெல்ஜியத்தின் எதிர்ப்பால் ஜெர்மானியர்கள் தாமதப்படுத்தப் பட்டதோடல்லாமல், அந்நாட்டின் நடுநிலைமையை அவமதித்ததன் பயனுகக் கிரேட் பிரிட்டன் தவிர்க்க முடியாத தலையிடுதலைச் செய்தது. 1866க்கு முன்பே பிரஷ்யா பெல்ஜியத்தைத் தொடக்கூடாது என்று அந்நாட்டிற்கு ஸ்டான்லி பிரபுவால் எச்சரிக்கப்பட்டிருந்தது. இப்பொழுது மாண்பும் பாதுகாப்பும் பற்றிய ஒவ்வோர் எண்ணமும் கிரேட் பிரிட்டனைப் பிரான்சுடன் போரிடுமாறு இழுத்தது. ஆஸ்குவித்தைப் பிரதமராயும், லாயிட் ஜார்ஜை கருவூலத் தலைவராயும், சர் எட்வர்டு கிரேயை வெளிநாட்டு அமைச்சராயும் கொண்டிருந்த தாராளக் கொள்கை அரசாங்கம் கன்செர்வேட்டிவ் (மாற்றம் விரும்பாதவர்) கட்சியினரால் ஆதரிக்கப்பட்டு, பிரான்சிற்கும் போர்மேல் விரைந்து செல்லும் பிரிட்டிஷ் படையை அனுப்பியது. இப்படையைப் பிரெஞ்சு ஜனுதிபதியான பாயின்கரேயும் பிரான்சின் பிரதமரான விவியானியும் வரவேற்றனர். இவ்வாறு போரில் தொடங்கிய கூட்டுறவு, வியக்கத் தக்க முறையில் நான்கு ஆண்டுகளில் ஏற்பட்ட கடுமையான துன்புறுத்தலை நன்கு எதிர்த்து நின்றது; அதனுடன் இவ்விரு நாட்டினருக்குமிடையில் நிலையான நல்லெண்ணத்திற்கு அடிகோலுவதாகவும் கருதப்பட்டது.

## ஜெர்மன் முன்னேற்றம்

அவ்வாறிருந்தும், அவ்வமயத்தில் ஜெர்மனியில் பெரு வெள்ளத்தை எதுவும் எதிர்த்து நிற்க இயலாததாயிற்று. படையெடுப்பாளர்களின் அமைப்புமுறை வியக்கத் தக்கதாயிருந்தது. ஒவ்வொன்றும் நன்கு சிந்திக்கப்பட்டுத் தயாரிக்கப்பட்டது போன்று, லீஜ் நகரத்திற்குப் பின் ஏமாற்றத்தை உண்டாக்கும் வகையில் நாமூர் நகரமும் பகைவரின் கையில் சிக்கியது. விடாப்பிடியாகச் சண்டை செய்த பின் சார்லிராய் எனுமிடத்தில் பிரெஞ்சுக்காரர்கள் படுதோல்வியடைந்தார்கள். மான்ஸ் நகரத்திலிருந்து விரைவில் பின்வாங்கியதால், ஆங்கிலேயப்படை அதைச் சுற்றி வளைத்துக்கொள்ளும் போக்கிலிருந்து தப்பித்துக்கொண்டது. பாரிஸிலிருந்து பன்னிரண்டு மைல்களுக்குள் ஜெர்மன் குதிரைப்படை முன்னேறியிருந்தது. பாரிசின் வீழ்ச்சி முன்னறிவிக்கப்பட்டது. அரசாங்கத்தின் தலைமையிருப்பிடம் போர்டோவிற்கு அவசரமாக மாற்றப்பட்டது. பல இருள் மணிகளைக் கொள்ளும் ஊழ்த் திறத்துடன் கூடிய இப்போரில் இவ்வமயம் இருள்நிறைந்த நேரமாயிருந்தது. அப்பொழுது

நற்பேற்றில் திடீரென்று உறுதியான நேர்மாறான நிலை வந்துற்றது. ஜெர்மனியின் தலைவர்களின் அளவு மீறிய நம்பிக்கையும் பிரெஞ்சுக் காரர்களின் அசைக்கவியலாத தைரியம், ஆற்றல், அமைப்பின் தகுதி ஆகியவையும் இந்நிலைக்கு மிக முக்கியமான கூறுகளாயமைந்தன.

## மார்ன் சண்டை 1914, செப்டெம்பர் 6, 12

பிரெஞ்சுப் படையைச் சூழ்ந்துகொள்ளும் எண்ணத்துடன் 'வான் கிளக்கு' என்பார் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிச் சென்றார்; இது வாயிலாக எதிர்த்தாக்குதலுக்கு வழியை உண்டுபண்ணினர். போர்த் தலைவரான ஜாஃப்ரே, இதைப் பெருமுயற்சியுடன் பயன்படுத்திக் கொண்டார். பக்கங்களில் தாக்குதலுக்கு இலக்காகச் செய்யப்பட்ட ஜெர்மன்படை தொடர்ச்சியாக நிகழ்ந்ததும் மார்ன் சண்டை என்று வழங்கப்பட்டதுமான இச்சண்டையில், இதன் அரண் நெடுகிலும் அதிகத் தொலைவிற்குப் பின்னடையும்படி செய்யப்பட்டது. இவ்வாறு பிரெஞ்சு ஆட்சிப் பகுதியில் ஒரு பெரிய நிலப்பரப்புப் பகைவரிட மிருந்து மீட்கப்பட்டதுடன் வெற்றியுமேற்பட்டது. இது போரில் உறுதியான எதிர்பாராத நிகழ்ச்சியாய்க் காணப்பட்டது. ஜெர்மனி முழுவதையும் இழந்தது; இழக்காமலிருந்திருக்குமானால், போரைப் பயனுள்ளதாகத் தொடர்ந்து நடத்தவியலாதவாறு பிரான்சையும் பிரிட்டனையும் ஓரமயம் குறைத்திருக்கக்கூடும். ஜெர்மானியர்கள் அதன்பின் வெற்றியடையும் வாய்ப்பைப் பெறவில்லை.

## குழிகளிலிருந்து போரிடுவதன் தொடக்கம்

அவ்வாறிருந்தும், நேச நாடுகளுக்கு ஏமாற்றங்கள் தொடர்ந்து உண்டாயின. ஜெர்மானியர் பின் வாங்கியது, அவர்களை நிலைகுலையச் செய்யவில்லை. அவர்கள் நன்கு முன்னிலை ஏற்பாட்டுடனிருந்த அரண்களையடைந்தார்கள்; அவற்றைத் தகர்க்கும் எவ்வித முயற்சி யையும் எதிர்த்து நின்றார்கள். விரைவில் பக்கத்திலிருந்த இரு படைகள் கடலிலிருந்து ஆல்ப்ஸ் மலைகள் வரை நீண்டிருந்த குழிகளைவெட்டின. அடுத்த நான்காண்டுகளில் இக்குழிகளில் மனித இனத்தின் பொறுமையின் கற்பனை எல்லையையும் கடந்த துன்பங்களை இலட்சக் கணக்கான மக்கள் பொறுத்துக்கொண்டிருந்தார்கள்.

## டானன்பர்கில் ரஷ்யர்களின் தோல்வி

ரஷ்யர்கள் அடைந்த கடுந்தோல்விக்கு ஈடுசெய்ய மார்ன் வெற்றி மிகத் தேவையாயிருந்தது. ஜப்பானியப் போரில் பெற்ற தோல்விக்குப் பின் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டிருந்ததாக நம்பப் பட்டிருந்த ரஷ்யப்படையின்மீது மேலான நம்பிக்கை வைக்கப்பட்

டிருந்தது. பிரெஞ்சுப்போர்முனைக்கு இங்கிலாந்து வழியாக ரஷ்யப் படைகள் சென்று கொண்டிருந்ததாக ஆதாரமற்ற செய்திகள் நிலவின. உண்மை ஊக்கமளிக்கத் தக்கவையாயில்லை. பிரஷ்யாவின் கிழக்குப் பகுதிகளின்மீது ஒரு ரஷ்யப்படை படையெடுத்து, முக்கியமான வெற்றிகளைப் பெற்றது. பின்பு 1914 ஆகஸ்டு 26-ல் ஹிண்டன்பர்கின் தலைமையில் ஜெர்மன் படை டானன்பர்கு எனுமிடத்தில் இரஷ்யர்களைத் தாக்கியது; ஹிண்டன்பர்கு, நிலைமை கோரிய இன்னல்களை மனத்திற்கொண்டு ரஷ்யர்களுக்கு அளவு கடந்த தோல்வியை விளைத்தார்; இவ்வாறு தொடக்கத்தில் கிழக்கு மேற்கிலிருந்த போர் முனைகள், இறுதி வரையில் நிலையாகப் பெற்றிருந்த இயல்புகளின் மாறுதல்களைக் காட்டின. மேற்கில் விடாமுயற்சியுள்ள நேச நாடுகளுக்கு வெற்றி ஏற்பட்டது; கிழக்கில் சிறந்ததும் ஆனால் நிலையில்லாததுமான ரஷ்யர்கள்மீது கொண்ட வெற்றியும், பின்பு முழுமையான அழிவும் ஏற்பட்டன.

## IV

## மேற்குப் போர் முனை

1914ஆம் ஆண்டு செப்டெம்பர்த் திங்களிலிருந்து, 1918ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள்வரை மூன்றரையாண்டுகள், போர் கடுமையில் அதிகரித்தது. இரு திறத்தாரும் வெற்றியைப் பற்றி முன்னறிவிப்பாக உரக்கக் கூறுவதில் முனைந்திருந்தனர். ஒவ்வோராண்டிலும் இலையுதிர் காலத்திற்கு முன், முழு வெற்றி உறுதியென ஜெர்மானியர் அறிவித்தனர். ஜெர்மனி தகர்த்தெறியப்படுவதையும் விரைவிலேயே அரண்கள் ‘வழியாக உடைத்து’ச் செல்லுவதையும் நேச நாடுகள் எதிர்பார்த்திருந்தன. இக்காலத்தில், மிகப் பெரிய படைகளைக் கொண்டிருந்த மேற்கு இத்தாலியப் போர் முனைகள் மக்களின் கவனத்தை ஈர்த்தன. ஆனால், இருபுறங்களிலும் ஹெர்குலிஸைப் போலச் செயற்கரிய முயற்சிகள் நடந்த போதிலும், தொடர்ந்து துயருறுவோர் எரிந்து அழிதலால் உறுதியான பயன் கிடைக்கவில்லை. கிழக்கில், வெற்றியும் தோல்வியும் மாறிமாறியிருந்தன. பெற்ற பெரும்பயன்கள் ஜெர்மானியர்களின் மேலான எதிர்பார்த்தல்கட்குப் புகழ்ந்துரை போலத் தோன்றின.

### கடலாதிக்கம்

முதலில் கடற்போரைப்பற்றி விரைவான கண்ணோட்டம் கொள்ளுவோம். இதில் நேச நாடுகட்குத் தோல்வி, அமெரிக்கர்களிடமிருந்து உணவுப் பொருள்கள் போர்த்தளவாடங்கள் பெறுவதில்

தோல்வி, கிரேட் பிரிட்டனுடையவும் அதன் குடியேற்றவுரிமை நாடுகளி (டொமினியன்கள்) னுடையவும் ஆன உறுதியான தோல்வி அதனுடன் பிரான்சு, இத்தாலி இவைகளின் பட்டினியால் வருந்தும் நிலை போன்றவற்றைத் தோற்றுவித்திருக்கும். இதன் பயனை விரைவிற் கூறிவிடலாம். ஜெர்மானியர்கள் தாற்காலிகமான வெற்றிகளைப் பெற்ருர்கள். நேச நாடுகளின் வாணிகத்தைத் தனிப்பட்ட போர்க்கப்பல்கள் கொள்ளையிட்டுத் துன்புறுத்தின. அவர்களது நீர் மூழ்கிக் கப்பல்கள் அஞ்சாமையையும் திறமையையும் வெளிப்படுத்தின. ஆனுல், நேச நாடுகளின் கப்பற்படையின் உண்மையான ஆதிக்கம் எதிர்க்கப்படாமலும் அசைக்கபடாமலுமிருந்தது.

## ஜட்லந்து சண்டை

1914-ல் ஒரு சிறிய பிரிட்டிஷ் போர்க்கப்பல் தொகுதியைத் தோற்கடித்த ஜெர்மன் கப்பற்படையை, ஃபால்க்லண்டுத் தீவுகளில் கப்பற்படைத் தலைவரான ஸ்டர்டி அழித்தார். 1916 மே மாதத்தில் ஜெர்மானியர்களால் மிக மேலான முயற்சி செய்யப்பட்டது. அப்போது கீல் கால்வாயிலிருந்து ஜெர்மன் கப்பற்படை வெளியேறி, ஜட்லந் திற்கப்பால் கடற்படைத் தலைவரான பெட்டியையும், பிரிட்டிஷ் கடற் படையின்முன்சென்ற பாதுகாப்புப் படையையும் எதிர்த்து நின்றது, பிரிட்டிஷ் கப்பல்கட்குப் பெருஞ்சேதத்தை உண்டு பண்ணியதுடன் தானும் பெருஞ்சேதத்தை யடைந்தது. ஜெல்லிகோ என்பார், தலைமையான பிரிட்டிஷ் கடற்படையுடன் தோன்றவே, ஜெர்மானியர்கள் மிக விரைவாகத் தப்பியோடினுர்கள். அதன்பின், நேச நாடுகளின் கடற்படைகள்மீது கடுந்தாக்குதலைச் செய்ய இயலவில்லை. அது முதல் அவர்கள் தங்கள் நீர்மூழ்கிக் கப்பல்களை முழுமையாக நம்பி யிருந்தார்கள். ஜெர்மனியைச் சுற்றி நெருக்கமான போக்குவரத்தைத் தடைசெய்யும் முற்றுகையிடப்பட்டது. 1916க்குள் கடுமையான உணவுப் பஞ்சமும், சில போர்த்தளவாடங்களின் பஞ்சமும் ஏற் பட்டன.

மற்றவைகளைக்காட்டிலும் பிரான்சு, பெல்ஜியம் இவைகளில் நடந்த போர் மக்களின் கவனத்தை ஈர்த்தது. வாட்டர்லூச் சண்டையைவிட பெரிய எண்ணிக்கையையும், கடுமையாகச் சண்டையிடுவதையும் கொண்ட பல சண்டைகள் நிகழ்ந்தனவென்ருலும், பொதுவான பயனைச் சுருக்கமாகக் கூறிவிடலாம். 1918 மார்ச்சில் ஜெர்மானியரின் மிகப் பெரிய தாக்குதல் ஏற்படும் வரை, போர் அரண் தளர்ந்தும், நிலை குலைந்தும், ஓரமயம் விரிந்தும், மற்ருேரமயம் குறுகியும், ஆனுல் வழக்கமாக நேச நாடுகட்கு நன்மையை அளிப்ப தாயும் காணப்பட்டது. மனிதகுலத்தின் அறிவின் திறம் வகுக்கப் பட்ட எல்லாவகைக் கொலைகளைச் செய்யும் முறைகளும் அங்குப் பயன்



1914, 1918-இல் ஜெர்மன் படைகளின் முன்னேற்றமும்
தற்காலிகப் போர் நிறுத்தத்தின் பொழுது படைகளின் எல்லைகளும் [பக்கம் 480

படுத்தப்பட்டன. அவை, நச்சுக்காற்று, எரிநீர்ப்பொருள், புகைக் கூண்டுகள், வானவூர்திகள், பல மைல் தொலைவு குண்டுகளைச் செலுத்தும் பீரங்கிப்படை, அகழிகளுக்கான சிறு பீரங்கிகள், கையால் எறியப்படும் வெடிகுண்டுகள், அகழி தோண்டும் கத்திகள், துப்பாக்கி முனைகள் போன்றவற்றுள் வேறு ஒன்றும் தேவைப்படவில்லை. குளிரும் வெப்பமும் துன்பங்களை மிகைப்படுத்தின. இரு திறத்தாரும் வியக்கத்தக்க மனவுறுதியுடன் பொறுத்துக்கொண்டனர். இம்முனையில் மிகப் பெரிய முயற்சிகளில் முக்கியமானவைகளைக் கூறுவதைவிட வேறு விவரித்துக் கூற இவண் உள்ள நிலை இடமளிக்காது.

## படைகளின் வரிசை

**ஈப்பிரஸ் சண்டை**

கடற்கரைக்கருகில் ஒரு பெல்ஜியப்படை போர் முனையைப்பற்றி நிலைத்திருந்தது. சிறிது காலஞ்சென்றபின் முதலில் சர் ஜான் பிரெஞ்சு என்பவரின் தலைமையிலும், பிறகு சர் டக்லஸ் ஹெய்கு என்பவரின் தலைமையிலும் பிரிட்டிஷ் படை வந்தது. அவர்களது எதிர்ப்பின் நடுஇலக்கு ஈப்பிரஸ் நகரமாயிருந்தது. போருக்குமுன் இஃது இடைக்காலத்தைச் சேர்ந்த அழகு வாய்ந்த நகரமாயிருந்தது; நேர்த்தியான மாதா கோயிலையும், பல சிறப்பு வாய்ந்த கட்டடங்களையும், மிகவும் புகழப்பட்ட ஆடைக்கூடத்தையும் பெற்றிருந்தது. அனைத்தும் விரைவில் உருக் காண முடியாத பாழடைந்தவைகளின் குவியலாயின. மேற்கு முனையில் ஏராளமான நகரங்கள், நூற்றுக் கணக்கான கிராமங்களுக்கு ஏற்பட்ட ஊழுக்கு இது மாதிரிப் படிவமாயமைந்தது. ஜெர்மானியர்கள் மேற்கரணை முறித்து, அது வழியாக ஊடுருவிச் செல்ல முடிந்திருந்தால், ஓரமயம் கால்வாய்த் துறைமுகங்களின்மீது ஆதிக்கம் பெற்றிருக்கக் கூடும். 1914 அக்டோபரில் ஏற்பட்ட கடுந்தாக்குதல் மிகுதியான இடருக்குள் விரட்டியடிக்கப் பட்டது. 1815 ஏப்பிரலில் மற்றொரு தாக்குதல் ஏற்பட்டது. முதன் முதலாகப் பிரிட்டிஷார்கட்கு நுகர் அறிவு ஏற்பட விடவாயு உபயோகிக்கப்பட்டதால் பிரிட்டிஷ் போர் வரிசையில் ஓரமயம் பெரிய இடைவெளி ஏற்பட்டது. அப்படை பின்னடையச் செய்யப்பட்டுச் சிறிய தாக்கப் பட்டது. ஆனால், ஈப்பிரஸ்முனை கடந்து செல்ல இயலாததாயிருந்தது. மூன்றும் முறையாக ஈப்பிரஸில் நடந்த சண்டையில் பிரிட்டிஷார்கள் வலுவில் தாக்குகிறவர்களாயிருந்தார்கள். 1917 ஜூலை முதல் நவம்பர் வரை, முன்பு நகரமாயிருந்து பாழாக்கப்பட்ட குவியலின்முன் கடுஞ்சண்டை நிகழ்ந்தது. நிலம் வெற்றி கொள்ளப் பட்டுச் சிலவாயிரம் வீரர் கைதி செய்யப்பட்டனர். பிரிட்டிஷார்கள் பாஷண்டேல் முகடுவரை தங்களை நிலையாக அமைத்துக் கொண்டார்கள். ஜெர்மனியின் போர்த் தலைமையின் நம்பிக்கை

முரட்டுத்தனமாக அசைக்கப்பட்டது. ஆனால், செலவு மிகவும் கடுமையாயிருந்தது. பிற்காலத்தில் இச்சண்டை வலிமையுள்ள தாகச் செய்வதற்கு இணையாகப் படைகளைச் சோர்வுறச் செய்தது என்று சர் டக்ளஸ் ஹெய்கு அறிவித்தார்.

## சோம் நதி

சோம் நதியின் மேற்பகுதிகளில் அர்ராஸ் எனுமிடம் இப்போரின் அடுத்த பெரிய மையமாயிற்று. இங்கு முதலில் பிரெஞ்சுப் படையும் பின்பு பிரிட்டிஷ் படையும் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. இவ்விடத்தில் 1916 ஜூலையில் பெரிய சண்டையான சோம் சண்டை நடந்தது. நீடித்த சண்டைக்குப்பின் ஜெர்மன் வரிசை மிகுதியான தொலைவு பின்னுக்கித் தள்ளப்பட்டது. அதிகத் தொலைவு விரட்டியடிக்க முடியாதது காரணமாக ஏமாற்றம் ஏற்பட்ட போதிலும், வெர்டனில் பிரெஞ்சுக்காரர்கட்கு ஏற்பட்டிருந்த நெருக்கடியை நீக்குவதற்கு இச்சண்டை அதிகவுதவியாயிருந்ததென்பது பிற்காலத்தில் உணரப்பட்டது.

## ரீம்ஸ் நகரம்

இதற்கப்பால் தெற்கிலும், கிழக்கிலும், பிரெஞ்சுக்காரர்கள் அசைக்க இயலாதவாறு விடாப்பிடியாக ரீம்ஸ் நகரை வைத்துக் கொண்டிருந்தார்கள். எனினும், அந்நகரமும் அதிலிருந்த பெரிய மாதாகோவிலும் (ஐரோப்பியக் கலையில் விலை மதிக்கவியலாத கருவூலம் போன்றிருந்தது). பீரங்கிக்குண்டுகளால் தாக்கப்பட்டு வருந்தத்தக்க நிலையில் சேதமாக்கப்பட்டன. ரீம்ஸைச் சுற்றிப் பெருஞ்சண்டை விளைந்தது. ஆனால், பிரெஞ்சுக்காரர்களுடைய அடுத்த அரண்—செப்பம் செய்யப்பெற்ற இடம்—நம் கவனத்தைக் கவர்வதாயிருக்கிறது.

## வெர்டன்

மியூஸ் நதிக்கரையிலிருந்த வெர்டன் நகரம், பாரிசுக்குச் செல்லும் வழிகளில் முக்கியமானதொன்றை அடக்கியாள்வதாயிருந்தது. எனவே, தாக்குவதிலும், பாதுகாப்பதிலும், அவர்கள் ஆற்றல்களைப் புகுத்துவதற்கான நோக்கமிருந்தது. தாக்கும் படைத்தலைவராக ஜெர்மனியின் முடிக்கு உரிமை கொண்டவரான இளவரசர் இருந்தார். பாதுகாத்தல் முக்கியமாகப் போர்த் தலைவரான பிடெயின் கையில் இருந்தது. பிரான்சு நாட்டின் போரைப் பற்றிய ஆண்டுக் குறிப்புக் களில் மிக்க செருக்கு வாய்ந்த அதிகாரமாயிருப்பதான வெர்டனைச்

சுற்றிலும் நிகழ்ந்த சண்டையின் வரலாற்றில் எல்லா அஞ்சத்தக்கவை களும் போரில் எல்லா 'வீரச் செயல்களும்' ஒன்றாகத் திரட்டப்பட்டிருந்தன. போர் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. 1916 பிப்பிரவரியி லிருந்து 1917 செப்டெம்பருக்குள்ளாக வெவ்வேறான நான்கு 'சண்டைகள்' எண்ணப்படுகின்றன. சில தருணங்களில் அவ்விடம் வீழ்ச்சியுறும் போலத் தோன்றியது. அதற்குள் இழுக்கப்பட்டிருந்த பிரெஞ்சு வரிசைகள் வீழ்ச்சியுறவில்லையென்றாலும், 1917 ஆகஸ்டில் தொடர்ச்சியானவையும், மிகச் சிறப்பானவையுமான தாக்குதல்களால், பிரெஞ்சுக்காரர்கள் இழந்த நிலப்பகுதிகளுட் பெரும்பான்மையை மீண்டும் பெற்றார்கள். ஈப்பிரஸிலிருந்ததைப் போன்று வெர்டனிலும் ஜெர்மானியர்களால் எதிர்பார்க்கப்பட்டவை புதையுண்டன.

இச்சண்டையின் பொதுவான பயன் ஜெர்மானியர்கட்குச் சாதகமில்லாததாயிருந்தது என்பது பற்றி ஐயமில்லை. 1917 மார்ச்சு மாதத்தில், நெடுநாளாக முழுமையாகத் தயாரித்து வந்துள்ள கோட்டிற்கு—ஹின்டன்பர்கு கோடு என்று வழங்கப்பட்ட இடத்திற்கு—அவர்கள் பின்வாங்கினார்கள். மிக்க திறமையுடனும் சற்றும் இழப்பில்லாமலும் இந்நகருதல் நடைபெற்றதால், நேச நாடுகளின் செயல்முறைகளுக்குத் தொல்லையைக் கொடுத்தது. 1917 ஏப்பிரலில், போர்த் தலைவரான நிவிலி என்பார் ஒரு பெரிய தாக்குதலுக்குத் திட்டமிட்டார். உறுதியான நம்பிக்கையுடன் பயன்களும் முன்னரே கூறப்பட்டன. ஓரளவு வெற்றி கிட்டியது. ஆனால், நம்ப முடியாத செலவால் அது கிடைத்தது. வருத்தத்தை விளைவிக்கக் கூடியதான மக்கள் எண்ணிக்கை குறைந்துபோன பிரான்சால் அச்செலவு பொறுத்துக்கொள்ள இயலாததாயிற்று. ஆயினும், மேற்கில் போர் தனித்து நிலைத்திருக்குமானால், அடுத்த ஆண்டின் நிகழ்ச்சிகளைப் பற்றிச் சற்று நம்பிக்கை ஏற்பட்டிருக்கும். ரஷ்யப்போர் முனையிலிருந்து வந்த செய்தி, மிகுந்த பரபரப்பை உண்டுபண்ணியது. இப்போது நாம் ரஷ்யப் போர் முனைக்குத் திரும்புவோம்.

## V

## கிழக்குப் போர் முனை

போரின் போது, ரஷ்யாவின் வரலாற்றை விவரிக்கக் கூடிய நேரம் இன்னும் வரவில்லை. அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப்பற்றி விவரித்தலைப் பொய்யாக்குவதற்காகப் பல்வேறு ஆற்றல்கள் வேலை செய்து கொண்டிருந்தன; எதிர்நோக்குதலும், அச்சமும், ஏமாற்றமும், வெறுப்பும் காணப்பட்டன. இப்புதுமையான வரலாற்றில் முக்கியமான நிகழ்ச்சிகளை மட்டும் இங்கு நாம் குறிப்பிட இயலும்.

## ரஷ்யாவின் வெற்றிகள்

டானன்பர்கு வெற்றி எவ்வாறு ஜெர்மானியர்களின் மனத்தில் மார்ன் எனுமிடத்தில் ஏற்பட்ட இடைத்தடைக்குச் சரிசெய்வதாயிருந்த தென்பதை ஏற்கனவே கண்டோம். ஆனால், அப்பெரிய தாக்குதலைப் பொருட்படுத்தாது ரஷ்யப்படை அதன்பின் பன்னிரண்டு மாதங்களில் பெரிய வெற்றிகளைப் பெற்றது. ரஷ்யர்கள் கலீஷியாவிற்குள் நுழைந்தார்கள். அங்கு வாழ்ந்த மக்களுட் பலர் அவர்களை வரவேற்றனர். 1914 செப்டெம்பரில் லம்பார்கு எனும் பெரிய நகரம் வீழ்ந்தது. ரஷ்யர்கள் விரைவிலேயே க்ராகோவையடைவர் என நம்பிக்கை உண்டாயிற்று. ஆனால், போகும் வழியில் பிரெஸிமிஸில் மிகப் பெரிய கோட்டை இருந்தது. 1915 மார்ச்சிற்கு முன் அக்கோட்டை சரணடையவில்லை. அப்பொழுது ஆறு இலட்சத்திற்கு மேற்பட்ட ஆஸ்திரியர் சரணடைந்தனர். கார்ப்பேத்தியன் மலைகள் வழியாகக் கடந்து ஹங்கேரியில் படையெடுப்பதுபற்றிப் பெரிதும் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், போரின் போது ரஷ்யாவிடமிருந்து இவ்வெதிர்ப்பார்த்தல் ஏமாற்றத்தை உண்டு பண்ணுவதாயிருந்தது. இந்த உடைக்க முடியாத மேற்கில் இரும்புக் கோட்டைச் சுவருக்கு ஒத்தாற் போன்றது கிழக்கில் ஒன்றுமில்லை துணிவு அல்லது பொறுத்துக்கொள்ளுதலைவிட அமைப்பு, விஞ்ஞானம், விடாமுயற்சி இவை அதிகமாகக் கருதப்பட்ட போரில் வெற்றியைப் பெறுவதற்கு ரஷ்யா தகுதி பெற்றிருந்ததென நம்பிக்கையூட்ட அந்நாட்டின் பழைய வரலாற்றில் உத்தரவாதமளிக்க ஒன்றுமில்லை. ரஷ்ய முனை நிலைத்திருக்குமானால், ஜெர்மனியின் தோல்வி குறுகிய காலத்திற்குள் உறுதியானது. கடுந் தாக்குதலுக்கு ஜெர்மானியர்கள் தயாரானார்கள். மாக்கன்சன் என்பாரின் தலைமையில் பெரிய படைகள் அமைக்கப்பட்டன. போரில் ஜெர்மானியர்களால் பெறப்பட்ட இராணுவப் புகழிற்குக் காரணமாயிருந்த லூதண்டார்ஃப், ஹின்டன்பர்கு முதலியவர்களோடு மாக்கன்சனும் பங்கு கொள்ளுகிறவர். அவர் கடுமையாக விரட்டியதால் ரஷ்யர்கள் பிரெஸிமிஸில், லம்பார்கு, வார்சா முதலியவைகளைக் கைவிட்டுவிட நேர்ந்தது. மிக்குயர் கோமகனான நிக்கோலசின்கீழ் ரஷ்யப்படைகள் ஒழுங்காகப் பின்வாங்கின. ஆனால், 1915 ஆகஸ்டுக்குள்ளாகப் பெருநிலப் பகுதிகள் ஜெர்மானியரின் கையிற்சென்றன. போலந்து, லித்துவேனியா, கூர்லாந்து என்பவைகளை அவர்கள் வயப்படுத்திக் கொண்டார்கள்.

## பிரஸிலாஃப் மேற்சென்று தாக்குதல்

இத்தோல்வி ஏற்பட்ட போதிலும், ரஷ்யர்கள் பெருவெற்றியடைவதைப் பற்றிய எண்ணங்கள் 1916-ல் இருந்தவற்றைவிட வேறெந்தக்

காலத்திலும் மேலானவையாய் இருந்ததில்லை. ஆயுதங்களும், போர்க் கருவிகளும், வெடிமருந்து முதலியவையும் பெரிதளவு ஆர்க்கேஞ்சலுக்கு அனுப்பப்பட்டு அங்கிருந்து ரஷ்யப்படைகளைச் சென்று அடைந்தன. அதிகமான போர் வீரர்களுடன் மாற்றியமைக்கப்பட்ட படையுடன் பிரஸிலாஃப் ஆஸ்திரியர்களை வால்ஹீனியாவிலும் புகோவினுவிலும் தாக்கினுர். வியக்கத்தக்க பயன்கள் ஏற்பட்டன. ஒவ்வொரு நாளும் கைப்பற்றப்பட்ட நகரங்கள், ஆக்கிரமித்துக்கொள்ளப்பட்ட நிலப் பகுதிகள், சிறை பிடிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான போர் வீரர்களைப் பற்றிய செய்திகள் வந்துகொண்டிருந்தன. புகோவினு கைப்பற்றப் பட்டுச் சிறை செய்யப்பட்டவர்கள், நான்கு இலட்சம் பேர்கள் என்பது கூறப்பட்டது. கைதியானவருட் பலர் போரில் சிறைபிடிக்கப்பட்டவர் களைக்காட்டிலும் தாமே சரணடைந்தவராயிருந்தனர். ஆனுல், அப் பொழுது இந்நிலை உணரப்படவில்லை என்பதுடன் பிரஸிலாஃபிற்கு எதுவும் முடியும் போலத் தோன்றியது. பெற்ற வெற்றிகளுள் மிகப் பெரியதாயிருந்தது, நெடுநாள் உறுதி கொள்ளாதிருந்த ருமேனியா நேச நாடுகளுடன் சேருவதற்குத் தயாராயிருந்ததென்று வெளி யிட்டதேயாகும். இப்பொழுது ஒரு பெரிய வெற்றி உறுதி செய்யப் பட்டது போன்றிருந்தது. நீண்ட புதியதொரு போர் முனை தோற்று விக்கப்படும். அப்போதிருந்த பேரரணைப் பாதுகாப்பதற்கு அல்லலுற்ற ஜெர்மனி ஆஸ்திரியாப் படைகள், புதிதாக ஏற்பட்ட அரணை எதிர்க்க வலிமையற்றவையாயின. போரின் முடிவு நெருங்கியது என்பது முழு நம்பிக்கையுடன் முன்னதாகவே கூறப்பட்டது.

## ருமேனியாவின் தோல்வி

போரின் ஏமாற்றங்களுள் இது மிகவும் வெறுக்கத்தக்கதாயிருந்தது. இப்பயனுக்கு எவ்வளவு மாக்கன்சனுடைய துணிச்சலும் அமைப்பு முறையும் பொறுப்பாயிருந்தன என்பதையும், சோர்வும், அரசியற் கொந்தளிப்பும், ஒருவேளை மன்பகையுங்கூடப் பொறுப்பாயிருந்தன என்பதையும் நாம் ஒரு நாள் அறியலாம். அவ்வாண்டு முடிவு முன்னரே டிரான்ஸில்வேனியாவின்மீது படையெடுக்கத் தொடங்கிய ருமேனியாப் படைகளை மாக்கன்சன் விரட்டியடித்தார் என்றும், தலை நகரான புக்காரெஸ்டையும் ருமேனியாவையும் கைப்பற்றிக்கொண்டார் என்றும் கூறுவதே போதுமானது. இதன்பின், ஜெர்மனியின் போர்க்கத்தி வீசும் பரப்புக்குட்பட்டிருந்த வேறெந்தச் சிறிய நாடும், அதற்கெதிராக இப்போரில் சேருவதென்பது சற்றுமில்லா திருந்தது.

## ரஷ்யப் புரட்சி

1917-ல் இளவேனிற்காலம், ரஷ்யாவின் அதிகாரத்தில் புதுமையான மாறுபாடுகளின்மீது திண்ணமான விளக்கக் குறிப்பைக் கொணர்ந்தது. போரில் முழுமனத்துடன் நாடிறங்கியதாகத் தோன்றியது. ஆனால்; மிக்க புதுமையான அரசியல் கொந்தளிப்புக்கள் தோன்றியிருந்தன. இவற்றைப் பற்றி எவ்விதக் குறிப்பும் மேற்கு ஐரோப்பாவை எட்டும்படி அனுமதிக்கப்படவில்லை. 1916 ஜூனில், கிட்சியினர் பிரபு—பிரிட்டிஷ் படைகளின் அமைப்பாளர்—ரஷ்யாவிற்குச் செல்லும் வழியில் மூழ்கி இறந்தார். புரட்சிகள் நடக்க வேண்டியதற்கு ஏற்ற சூழ்நிலையில் ரஷ்யா இருந்ததென்பது, வரலாற்று மாணவருக்கு நன்கு புலப்பட்டது. சட்ட வரம்பிற்குட்பட்ட அரசு செய்யவியலாதவைகளைத் தன்னரசு, முனைப்பான அரசு செய்ய முடியும். ஆனால் இவ்வரசு, மிகவும் நிலையற்ற அரசாங்கமாயிருப்பதுடன், இதன் நீடிப்பும் வெற்றியைப் பொறுத்த தாகும். ரஷ்ய மன்னரின் (சார்) ஆட்சியில் தோல்வியுடன் கூடிய போர்கள் பதிவாகியிருப்பதுடன், ரஷ்ய மக்களில் பெரும்பகுதியினரின் மாற்றம் குறித்து மனவெழுச்சி நிறைந்த கோரிக்கையை எப்போதும் எதிர்த்து நிற்க வேண்டியதாயிருந்தது. மெய்யறிவை ஊக்குவிக்கும் அல்லது முன் கவனத்தைத் தோற்றுவிக்கும் அளவு சுதந்தரத்தின் பட்டறிவு ரஷ்யாவில் இல்லை. இந்தப் போரில் ஒரு பெரிய வெற்றி அரசாங்கத்தை வலுவடையச் செய்திருக்கும் வெற்றிகள் ஏற்பட்டன. ஆனால் அவைகளைச் சரிக்கட்டும் அளவு விஞ்சியவாறு தோல்விகளும் ஏற்பட்டன. மக்களின் துயருறுதலும் போரில் ஏற்பட்ட இழப்புக்களும், மேற்கு ஐரோப்பா பெற்ற அளவைக்காட்டிலும் மிக அதிகமாயிருந்தன.

1917 மார்ச்சு மாதத்தில் புரட்சி தோன்றியது. சார் மன்னர் முடி துறந்தார்; நன்கு தெரியாததும் கொடுமையானதுமான விதியை நோக்கிச் சைபீரியாவுக்குக் கொண்டு போகப்பட்டார். புதிய அரசாங்கத்தைத் தோற்றுவிக்கும் பணி மிகக் கடினமாயிருந்தது. ஆங்கிலேயர்கள் அல்லது பிரெஞ்சுக்காரர்களுடைய அரசியற்சட்டம் ஏற்றுக்கொள்ளக் கூடியதாயில்லை. சோஷலிசம் வெற்றி பெற்றது. அதிலும், சோஷலிஸ்டுகளுள் மிகத் தீவிரமாயிருந்தவர் வெற்றிகண்டனர். ஜெர்மன் சோஷலிஸ்டான கார்ல்மார்க்ஸ் என்பவரின் போதனையும் 1871-லிருந்த பிரெஞ்சுக் கம்யூனிஸ்டுகளின் எடுத்துக்காட்டும் ரஷ்யாவின் செழிப்பான நிலத்தில் முளைக்கலாயின. இறுதியில் முன்னணிக்கு வந்தவர்கள் லெனினும், டிராட்ஸ்கியும்—சரிநிகரான மக்களாட்சிக் கருத்தை மறுத்துப் பாட்டாளிகளின் சர்வாதிகாரத்தை—அஃதாவது மிக எளிய இனத்தவரின் அதிகாரத்திலிருந்து மற்ற எல்லா வினத்தாரையும் முழுமையாக விலக்குவதை அறிவித்தனர். ஜூலை

மாதத்தில், பிரஸிலாஃப் மற்ருெருமுறை தாக்கிப் பெரிய தொடக்க வெற்றிகளைப் பெற்ருர். ஆனுல், அரசியல் அதிகாரிகளின் செயலால் எல்லாம் சிதறிப்போயின.

புதிய அரசாங்கத்திற்குப் போர் பொருளற்றதாயிற்று. அரசு, அரசாங்கம் என்ற முறையில் பிராஞ்சு, இங்கிலாந்து, அமெரிக்கா முதலியவற்றைவிட ஜெர்மனி அவ்வளவு வெறுக்கப்படவில்லை. 1918 மார்ச்சு மாதத்தில் பிரஸ்ட்-லிட்டோவ்ஸ்க் சமாதானம் ஏற்படா யிற்று. ரஷ்யா பெரிய இழப்பீடு செலுத்துவதும், பரந்த நிலப்பகுதி களைக் கொடுப்பதும் முடிவாயின. ரஷ்யாவின் வரலாற்றைத் தொடர்ந்து நாம் செல்ல வேண்டா. அங்கு ஒரு பெரிய பிரிவு தொடங்குவதாயிருந்தது. உண்மையிலேயே, சமூகவரசியல் அமைப் புக்களில் ஒரு பெரிய சோதனை நடந்துகொண்டிருந்தது. கிழக்கில் செல்ல முடியாதவாறு அடைத்து வைக்கப்பட்டிருந்த எல்லை முழு வதையும் ஜெர்மனி தகர்த்தெறிந்தது என்பதை நாம் அறிவது போதுமானதாகும்.

## VI

## பால்கன் பகுதிகள்

கல்லிபோலிப் படையெடுப்பு

பால்கன் பகுதிகளில் மத்திய அரசுகளின் வெற்றியும் மிகக் குறை வாயிருந்தது. அங்கும் அதிகமாக எதிர்பார்த்தவைகளைப் பெற இயலவில்லை. செர்பியர்கள், இருமுறை பெரிய இழப்புடன் படை யெடுத்து வந்த ஆஸ்திரியப்படைகளை விரட்டியடித்தார்கள். உடனே துருக்கியும் தாக்கப்பட்டது. துருக்கி மத்திய அரசுகளில் சேர்ந்திருந் ததே, இத்தாக்குதலுக்கு மிக முக்கியமான காரணமாகும். டார்டனல்ஸ் பாஸ்பரஸ் மூலமாக வழியேற்படுத்தப்பட்டிருக்குமானுல், ரஷ்யப் படைகளுக்கு எளிதாகவும், விரைவிலும் போர்த்தளவாடங்கள் கிடைத் திருக்கும். அதனுடன் ரஷ்யாவின் தானியங்கள் மேற்கு அரசு களுக்கு மிகவும் பெரிய அளவில் பயன்பட்டிருக்கும்.

## செர்பியா நசுக்கப்படுதல்

முக்கியமாக, பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் முதலியவை அடங்கிய நேச நாடுகளின் படைகள் 1915 ஏப்பிரலில் கல்லிபோலித் தீபகற்பத்தில் இறங்கியதும், விரைவானதும், உறுதியானதுமான வெற்றி எதிர்பார்க்கப்பட்டது. அதற்கு மாருகப் பல மாதங்கள் மனவுறுதி இழக்கக்கூடிய சண்டை வழக்கத்திற்கு மாருன துன்ப

நிலையில் தொடர்ந்து நடந்தது. பெரிய வீரச்செயல்கள் புரிந்தபின் 1915 டிசம்பரில் படை பின்னிழுத்துக்கொள்ளப்பட்டது. அதற்கு முன் செர்பியாவிற்கு மோசமான அழிவு ஏற்பட்டிருந்தது. பால்கன் நாடுகளின்மீது படையெடுப்பதற்காக ஒதுக்கப்பட்ட படைகள் மாக்கன்சன் என்பாருடைய பொறுப்பில் விடப்பட்டிருந்தன. அவர் மற்றொரு தடையற்ற வெற்றியைப் பெற்றார். செர்பியாவின் படையும் மக்களும் மலைகள் வழியாக விரட்டப்பட்டுப் பிரான்சு அல்லது இத்தாலி, அல்லது இங்கிலாந்திற்கு நாடு கடத்தப்பட்டு, புகலிடம் தேடச் செய்யப்பட்டார்கள். மொனாஸ்டிர் கைப்பற்றப்பட்டது. சலோனிக்காவில் நேச நாட்டுப்படை இறங்கியது. அங்குப் பிரெஞ்சுக்காரர், செர்பியர், கிரேக்கர், பிரிட்டிஷார் முதலியவரடங்கிய பலவகையான கூட்டம், வெற்றியைச் சிறிதும் எதிர்பார்க்கவியலாத நிலையில் கடற்கரையின் ஒரு சிறிய நிலப்பகுதியைப் பற்றிக்கொண்டிருந்தனர். தென்மேற்கிலும் கிழக்கிலும் இவ்வாறு ஜெர்மானியர்களும் அவர்களுடைய நேச நாடுகளும், அவர்களுக்குத் தடையாய் எழுப்பப்பட்டிருந்த சுவர் வழியாக நுழைந்திருந்தார்கள்.

## VII

## இத்தாலி

போரில் நேச நாடுகளின் பக்கம் இத்தாலி சேர்ந்தது, பெரிய ஆரவாரத்துடன் வரவேற்கப்பட்டது. இத்தாலி சுதந்தரமடைந்தது பத்தொன்பதாம் நூற்றாண்டில் மிக்க புகழ் வாய்ந்த நிகழ்ச்சியாகப் பலருக்குத் தோன்றியது. அதனுடன் சட்ட வரம்பிற்குட்பட்டு ஆட்சி நடக்கும் நாடுகளுடன் இத்தாலி அதனிடத்தைப் பெறுவது சரியானதென்றும் தோன்றியது. இத்தாலியின் உதவி வெற்றியை உறுதி செய்வது போலத் தோன்றியது. இவ்வெதிர்பார்த்தலில் ஏமாற்றமேற்படவில்லை. ஆனால், போர் எதிர்பார்த்ததற்கு மேலாக மிகக்கடுமையாயும் நீடித்ததாயும் இருந்தது.

## இத்தாலிய வெற்றிகள்

### காபோரெட்டோச் சண்டை

இத்தாலியப்படைகள் உடனே ஆல்ப்ஸ் மலையின் கிழக்குப் பகுதியில் தாக்கின. நிலையாகப் பனியால் மூடப்பட்டிருக்கும் மிகவுயரமான பகுதிகளிலும் சண்டை தொடர்ந்து நடந்தது. 'புதுமையுணர்வு ஊட்டுகிற' எனும் அடைமொழி கொடுமை நிறைந்த இப்போரின் எந்தப்பகுதிக்காவது அமைக்கப்படுமானால், அது சாதாரண மனிதர்களாற் சென்று அடைய முடியாத நிலையிலிருந்த இப்பகுதிகளில்

சண்டையிட்ட மலையேறுபவர்களுக்குத்தான் பொருத்தமுடையதாகும். 1916ஆம் ஆண்டில், வெற்றி தோல்விகளில் ஏற்றமும் இறக்கமும் காணப்பட்டன. ஆனால், அவ்வாண்டு இத்தாலியர்களுக்குத் துணையாயிருந்தது. டிரெண்டினோ வழியாக ஆஸ்திரியர் உட்புகுந்தனரெனினும், விரட்டியடிக்கப்பட்டனர். இத்தாலியின் கிழக்குப் போர் முனையில், ஆகஸ்டு மாதத்தில் கோரிஸியாவைக் கைப்பற்றியது வாயிலாக இத்தாலியர்கள் பெரிய வெற்றியை அடைந்தார்கள். இவ்வாறு 1917ஆம் ஆண்டு உயர்ந்த எதிர்பார்த்தல்களுடன் தொடங்கியது. ஆகஸ்டு மாதத்தில் கடோர்னா எனும் போர்த் தலைவர் பெயின்ஸிஸ்ஸா எனும் பீடபூமியின் ஒரு பகுதியைக் கைப்பற்றியதோடு பலரைக் கைதிகளாகவும் கொண்டார். ஆனால், அவருக்கு ஏற்பட்ட இழப்பு மிக அதிகமாயிருந்ததுடன் அவர் தம்படைகளின் பக்கங்களைத் தாக்குதல்கட்கு இலக்காகச் செய்யுமளவு முன்னேறியிருந்தார். கிடைத்த வாய்ப்பை ஆஸ்திரியர் பயன்படுத்திக்கொண்டு மாக்கன்சனுக்குப் பெருவெற்றியை அளித்த படைகளில் சிலவற்றின் உதவியைக் கொண்டு, காபோரெட்டோ என்னுமிடத்தில் போர்த் தலைவரான கடோர்னாவைத் தாக்கினர். மேற்கில், நேச நாடுகளுக்கு ஏற்பட்ட மிகப்பெரிய இடர்களில் ஒன்று தொடரலாயிற்று. ஓரித்தாலியப்படை முறியடிக்கப்பட்டது. 2,50,000 போர் வீரர்களைச் சிறை பிடித்ததாக ஆஸ்திரியர் உரிமை கொண்டாடினர்; அதனுடன் வெனிசிற்கு மேற்பகுதியிலுள்ள சமவெளிக்குள் புகுந்தனர். ஆனால், இப் பேரிடரின் முன் இத்தாலியர்கள் செவ்வியறிந்து தங்கள் அறிவைக் காட்டினார்கள். வெனிஸ் நகரம் அவர்கள் வசமாகவில்லை. இங்கிலாந்திலிருந்தும் பிரான்சிலிருந்தும் உதவி கிடைத்தது. இத்தாலிய நிலப்பகுதிகளிற் சிறிது அதிகமாகக் கைவிடப்பட்ட போதிலும் படை வரிசை மீண்டும் நிலை நிறுத்தப்பட்டது.

## VIII

## துருக்கி

ஈடும் எடுப்புமற்ற இப்போரின் எல்லாப் போர்க்களங்களைப் பற்றியும் தொட்டுப்பார்ப்பதுகூட நம்மால் இயலாது. ஜெர்மனியின் குடியேற்றங்களைப் பற்றிச் சண்டைகளையோ அல்லது எவ்வழிகளில் சீனாவிலிருந்து ஜெர்மனியின் அதிகாரம் விரட்டியடிக்கப்பட்டதென்பதையோ, இங்கு எடுத்துக்கொள்ள இயலாது; அதனுடன் ரஷ்யச் சண்டையின் பிந்திய தோற்றங்களைக் கடந்தும் செல்ல வேண்டியிருக்கும். ஆனால், மனித சமுதாயத்தின் ஊழ்வினைக்கும் போரின் பிரச்சினைக்கும் துருக்கியின் ஊழ் மிக முக்கியமாயிருந்தது. அந்நாட்டு அரசாங்கம் இராணுவ அடிப்படையிலமைந்த தனி வல்லாட்சியாகும். எனவே, அந்நாட்டு அரசியலுடன் ஒரே மாதிரி இயல்புள்ள அரசு

களான ஜெர்மனி, ஆஸ்திரியா முதலியவற்றுடன் இயற்கையாகப் பரிவு கொண்டிருந்தது. 1683-ல் வியன்னாவை முற்றுகையிட்ட பொழுது துருக்கி பெற்ற தோல்வி முதல், அந்நாடு அதிகாரம் அல்லது நிலப் பகுதிகள் இவற்றின் இழப்பில்லாமல் ஒரு பத்தாண்டுக்காலமும் இல்லை. எல்லாவற்றையும் வெற்றி கொள்ளும் போர்க்கத்தியைப் பெற்றிருந்த ஜெர்மனியின் உதவியால், இழந்தபகுதிகளை மீட்பதை ஐயமின்றி எதிர்நோக்கியது. அது ஜெர்மனிக்குத் துருக்கிய நிலப்பகுதிகள் வழியாக எகிப்திலும் இந்தியாவிலும் பிரிட்டிஷ் அதிகாரத்தைக் குறித்துத் தாக்குவதற்கான வழியை ஏற்படுத்துவதாகும். கான்ஸ் டான்டிநோப்பிளிலிருந்து பாரசீக வளைகுடாவிற்குச் செல்ல ஏற்கனவே திட்டமிடப்பட்டிருந்த இருப்புப்பாதையும் நல்ல அளவிற்கு அமைக்கப் பட்டிருந்தது.

## டளன்ஷண்டின் வெற்றிகளும் தோல்விகளும்

1915-ல் எகிப்தைத் துருக்கி தாக்கியது. ஆனால், வெற்றியில்லை. ஆண்டின் முற்பகுதியில் இந்தியத் துருப்புக்கள் யூஃப்ரட்டிஸ் ஆற்றின் முகத்துவாரத்தில் இறங்கியிருந்தன. போர்த் தலைவரான டளன் ஷண்டின் தலைமையில் ஒருபடை நதிவழியாக உட்சென்று மிகச் சிறப்பான வெற்றிகளுடன் பாக்தாது நகரை நோக்கி முன்னேறியது. ஆனால், அவரிடம் போதுமான அளவு படையில்லை; எனவே, படை வலுப்பெருக்குக் கொண்டிருந்த துருக்கியப்படைகளின் முன் பின்னிட நேர்ந்தது. குட் என்னுமிடத்தில் அவர் முற்றுகையிடப்பட்டு அவரை விடுவிப்பதற்காக முயற்சிகள் செய்யப்பட்ட போதிலும், 1916 ஏப்ரல் மாதத்தில் சரணடைய நேர்ந்தது. இது பெருந்தடையாயிற்று. உறுதியான வெற்றியாயில்லாத போதிலும், இது கிழக்கில் பிரிட்டிஷார் களின் மதிப்பைக் குலைப்பதாகத் தோன்றியது.

## பாக்தாதின் வீழ்ச்சி

1917-ல் நிலையில் நேர் மாறுதல்கள் ஏற்பட்டன. நவீன முறையில் அமைக்கப்பட்டதும் ஆயுதங்களைக் கொண்டிருந்ததுமான ஓர் அரசுடன் ஏற்படும் போட்டியில் ஜெர்மனியின் துணையின்றித் துருக்கி இணை யற்றதாயிருந்தது. ஜெர்மனிக்கும் வேறிடங்களிலிருந்து அழைப் புக்கள் வந்திருந்ததால், அதுவும் துருக்கியர்களுக்குத் துணை புரிய முடியாத நிலையிலிருந்தது. 1917 ஜனவரி மாதத்தில் டைகிரிஸ் நதியின் முகத்திலிருந்து போர்த் தலைவரான மாடே என்பார் மிகக் கவனமாய் ஆயத்தம் செய்யப்பட்டிருந்த படையுடன் உள் நோக்கிச் சென்றார். கடும்போர் நிகழ்ந்தது. வெற்றிக்குப்பின் வெற்றியேற் பட்டன. பிப்பிரவரியில் குட் மீண்டும் கைப்பற்றப்பட்டது. பாக்தாது நகரம்—இது வரை புனைவியல் திறத்திற்கும் அறிவைக் கடந்ததற்கும்

பெயராயிருந்தது—மார்ச்சு மாதத்தில் வீழ்ந்தது. அப்பகுதிகளில் துருக்கியின் அதிகாரம் தெளிவாக முறிக்கப்பட்டது.

## எருசலேம் கைப்பற்றப்படுதல்

பாலஸ்தீனத்தில் துருக்கியின் அழிவு மேலும் முழுமையாகவே ஏற்பட்டது. எகிப்தின் எல்லையிலிருந்து அதன் படைகள் திருப்பி யடிக்கப்பட்டன. ஆனால், பாலஸ்தீனத்திற்குள் ஊடுருவிச் செல்லும் முயற்சி, காஸா எதிர்த்து நின்றதால் நெடுநாள்வரை தடை செய்யப் பட்டது; 1917 கோடைக்காலத்தில் பாலஸ்தீனத்தின் போர்த் தலை வரான ஆலன்பியின் தலைமையில் படை அமைக்கப்பட்டது. அவர் அக்டோபர் மாத முடிவில் உடனடியான வெற்றியுடன் தாக்கினர். காஸாவை ஒரு புறத்தில் ஒதுக்கிவிட்டு பிரஷியாவிற்குச் செல்லும் வழி தேர்ந்தெடுக்கப்பட்டது. பிரஷியா வீழ்ச்சியுற்றதுடன், எருசலே முக்குச் செல்லும் வழி திறக்கப்பட்டது. 1917 டிசம்பர் மாதம் ஒன்பதாந் தேதியன்று எவ்வித எதிர்ப்புமின்றிப் புனித நகரமான எருசலேம் கைப்பற்றப்பட்டது. பாக்தாது, பாபிலோன், நினேவா, எருசலேம், எகிப்து—நாகரிகத்திற்கு முதலில் தாயகமாயிருந்த வைகள்—எல்லாம் இப்போது பிரிட்டிஷார்களின் கட்டிற்குள் வந்தன.

IX

# 1918

## தடையில்லா நீர் மூழ்கிக் கப்பற்சண்டை

1918ஆம் ஆண்டு தொடங்கிய பொழுது நேச நாடுகளின் எதிர் கால நிலவரம் மகிழ்ச்சியளிப்பதாயில்லை. நான்கு ஆண்டுகள் கொடுமையான போருக்குப்பின், 'மத்திய அரசுகள் போரில் முதலிற் சென்று தாக்குவதை மேற்கொள்ளும் நிலையிலிருந்தன. ரஷ்யா வீழ்ச்சியுற்றிருந்தது. பால்கன் பகுதிகள் படையெடுத்தழிக்கப்பட்டன. இத்தாலிக்குத் தோல்வி ஏற்பட்டிருந்தது. சிலர் இதை உறுதியான தோல்வியாகக் கருதினர். மெசபட்டோமியாவிலும், பாலஸ்தீனிலுமே நேச நாடுகள் ஏதோ வெற்றியெனப் பெற்றிருந்தன. மத்திய அரசுகள் ஐரோப்பாவில் வெற்றி பெற்றிருக்குமானல், அங்கு சத்திச் சமநிலை விரைவில் மீட்கப்பட முடியும். கடலிற்செல்வதில் ஜெர்மானியர்களுக்குத் தடை ஏற்பட்டது. பகைநாடுகள் அல்லது நடுவு நிலைமை வகித்த எல்லா நாடுகளுடைய போர்க்கப்பல்கள் அல்லது வாணிகக் கப்பல்களைத் தாக்குவதற்காக ஜெர்மானியர்கள் நீர்மூழ்கிக் கப்பற்சண்டையிலிறங்கினர்கள். இத்தாக்குதல் உறுதி செய்வதாகத்

தோன்றியது. 1917 ஏப்பிரல் திங்களில் ஒரு வாரத்தில் ஐம்பத் தொன்பது பெரியகப்பல்கள் அழிக்கப்பட்டன. இத்தாக்குதல் தொடர்ந்து நடந்திருக்குமாஞல், நேச நாடுகளின் கையிருப்புக்கள் தவிர்க்க முடியாதவாறு தோல்வியுற்றிருக்கும். தொடர்ந்து இத்தாக்கு தலில் ஜெர்மனியின் முயற்சிகளும், பேரளவு வியப்புக்குரியன வாயிருந்தன. ஜெர்மனிக்கு இதிலிருந்த அளவிற்கு மிஞ்சிய ஊக்கம் அதைச் சோர்வடையச் செய்யும் என்பது தெளிவாயிருந்தது. ஆஞல், அதன் பகை நாடுகளில், ஐக்கிய அமெரிக்க நாடுகள் நீங்கலாக மற்றவை உண்மையிலேயே களைப்பால் துன்புற்றிருந்தன. அமெரிக் கப்படைகள் வந்துகொண்டிருந்தன. அது பெருநம்பிக்கையை ஊட்டு வதாயிருந்தது. ஆஞல், ரஷ்யாவுடன் ஏற்பட்ட உடன்பாட்டால் ஜெர்மனியின் படைகள் வேறிடங்களிற் பயன்படுத்துவதற்காக விடுவிக்கப்பட்டன. இளவேனிற்காலம் தொடங்கியதும் மேற்கில் நேச நாடுகளின்போர் வரிசையை எதிர்த்து ஒரு தாக்குதல் ஏற்படலாம் என்பது உறுதியாயிருந்தது.

## ஜெர்மனியின் பெரிய தாக்குதல்

**அமீன்ஸ், ஈப்பிரஸ், ரீம்ஸ்**

ஜெர்மனியின் முன்னேற்பாடுகள் லூடன்டார்ஃப் என்பவரால் செய்யப்பட்டன. இப்பொழுது அவர் எல்லாவற்றிற்கும் மேலான தலைமைப்பதவியை ஏற்றிருந்தார். முன்னேற்பாடுகள் வியத்தகு மறைநிலையிலேயே நடைபெற்றன. நெடுநாளாக ஆயத்தம் செய்யப் பட்ட தாக்குதல், 1918 மார்ச்சு 21ஆம் நாளில் செயின்ட கொண்டின் என்னுமிடத்தில் ஏற்பட்டது. இது பிரிட்டிஷ் படைகளும் பிரெஞ்சுப் படைகளும் சந்திக்கும் முனையாயிருந்தது. தாக்குதல் பிரிட்டிஷ் ஐந்தாம்பிரிவுப் படையின்மீது முக்கியமாக நடந்தது. உடனடி வெற்றி ஏற்பட்டது. போர் தொடக்கமானதிலிருந்து அவ்வளவு பெரிய வெற்றி ஏற்பட்டதில்லை. ஜெர்மானியர்கள் தேவைக்கெனக் காப்புநிலைப் படைகளை வைத்திருந்ததால்,உணர்ச்சியறச் செய்யக்கூடிய விரைவில் தாக்குதலையடுத்துத் தாக்குதல் நடந்தது. முதலில் மார்ச்சு மாதத்தில் நிகழ்ந்த தாக்குதல்களால் ஜெர்மானியர்கள் அமீன்ஸ் நகரத்திலிருந்து சில மைல்கள்வரை முன்னேறியிருந்தார்கள். இதஞல், முக்கியமான ஓர் இருப்புப்பாதை வழியாகப் போக்குவரத்தைத் தடை செய்யலாஞர்கள். பின்பு, ஏப்பிரல் மாதத்தில், பாழடைந்து போன ஈப்பிரஸ் நகரம் மீண்டும், நீண்டதாயும் இடர் நிறைந்த தாயும் உள்ள சண்டை நடக்குமிடமாயிற்று. இச்சண்டையில் பகை வர்களை ஊடுருவிச் சென்று பிரிட்டிஷ் கால்வாய்த் துறைமுகங்களை அடைவதே நோக்கமாயிருந்தது. ஈப்பிரஷ் உறுதியாய் எதிர்த்து நின்றது. ஆஞல், அந்நகருக்குத் தெற்கில் போர் வரிசை இடர்

விளைவிக்குமாறு வளர்ந்து காணப்பட்டது. பெய்லூல் வீழ்ச்சியுற்றதும் போர் வரிசை முறிந்து போனதாகத் தோன்றியது. மே மாதத்தில் பிரெஞ்சுப் படைகள் ரீம்ஸ் நகருக்கு அருகில் தாக்கப்பட்டன. பெரு முயற்சியுடன் காத்து வந்த சீமின்டிடேம்ஸ் என்ற நகரைப் பிரெஞ்சுக்காரர் இழந்தனர். ஈப்பிரஸைப் போன்று ரீம்ஸ் நகரமும் கடுமையாக எதிர்த்து நின்ற போதிலும், ஜெர்மன் படைகள் மார்னை நோக்கி நெடுந்தொலைவு முன்னேறின. ஜூலை மாதத்தில் ஜெர்மன் படைப் பிரிவுகள் மார்னைக் கடந்தன. நான்காண்டுகளாக ஏற்பட்ட முயற்சிகள் துன்பங்களுக்குப் பின் மீண்டும் பாரிசு நகரத்தை அச்சுறுத்தினர். மார்ச்சு மாதத்தில் தொடங்கிய பெருந்தாக்குதலுக்குச் சிறிது காலத்திற்கெல்லாம், எழுபத்தைந்து மைல்களுக்கு அப்பாலிருந்து பெரிய பீரங்கிகளை மிகப் பெரியன வாக்கிக்கொண்டு பாரிசு நகரை முற்றுகையிடத் தொடங்கியது, பொதுவாக நோக்குகிறவர்களுக்கு அவர்களது வெற்றியைக் குறிக்கும் கருத்தை மிகைபடச் செய்தது.

## நற்பேற்றின் திடீர் மாற்றம்

### படைத்தலைவர் ஃபோச்சு

அடுத்த நான்கு மாதங்களிற் காணப்பட்ட நற்பேற்றின் நேர் மாறுதலைவிடத் திடீரென்று ஏற்பட்டதும் முழுமையானதுமான நேர்மாறுதல் வரலாற்றில் காணக்கிடக்கிறதா? வெற்றிக் கொடிகளுடனும், வெற்றி இசையுடனும், ஜெர்மனி நிறைந்து காணப்பட்ட பொழுது, அதன் படைகளையும், அரசாங்கத்தையும், பேரரசரையும் அழிப்பதற்கான எதிர்த்தாக்குதலுக்கான ஆயத்தம் நடந்துகொண்டிருந்தது. பெரிய வெற்றிகளைக் கொண்டிருந்தும் ஜெர்மானியரின் முயற்சி, பேரளவிற்கு அதன் சேமப்படைகளை[1]ச் சோர்வடையச் செய்தது. இவ்வாறு ஏற்பட்டது ஓரமயம் தவருயிருக்கலாம். நேச நாடுகளின் அருகில் கிலி காணப்படவில்லை. ஆனால், இறுதிவரை போரிடுவது பற்றிய உறுதிமட்டும் மிகுதியாய்க் காணப்பட்டது. இங்கிலாந்திலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் படைகள் மிக விரைவாகக் கொண்டுவரப்பட்டன. எல்லாவற்றிற்கும் மேலாக, மேற்குப் போர் முனையில் எல்லாப் படைகளின்மீதும் மேலான ஒரு தலைமையைப் படைத் தலைவரான ஃபோச்சு என்பாரிடம் ஒப்படைத்தது வாயிலாகப் போர்த்தலைமையில் ஒற்றுமை ஏற்படுத்தப்பட்டது. போருக்கு முன் ஃபோச்சு, இராணுவத் தொடர்புள்ள பொருள்களின் ஆசிரியராகப் புகழ் பெற்றிருந்ததுடன், போர் நிகழ்ந்தகாலை தமது அமைதியாலும் திறனும் புகழ் பெற்ருர். போர் அவரது பெரிய இராணுவப்புகழைத் தான் வரலாற்றிற்கு விட்டுச் செல்லும். எதிர்த்துத் தாக்குதலை

[1] Reserves.

எப்பொழுதும் அவர் எடுத்துரைத்தவராயும் போர் வீரர்களின் நம்பிக்கையில் வெற்றிக்குக் காரணம் கண்டவராயுமிருந்தும், மதியறிஞர்கள் செயற்பட வேண்டுமென்று எடுத்துக் கூறியபோதிலும், எப்படித் தாக்குதலுக்காகக் காத்திருக்க வேண்டுமென்பதையும் நன்கறிந்தவராயிருந்தார்.

## இரண்டாவது மார்ன் சண்டை

ஜெர்மனியின் துன்பநாள்

ஜுலை மாதம் 18ஆம் நாள் போர்ச் செயல் தொடங்கியது. இதை இரண்டாவது மார்ன் சண்டையென வழங்கலாம். ஏற்கனவே, சில எதிர்த்தாக்குதல்கள் சிறப்பாக ஆஸ்திரிரேலியாப்படைகளால் நடைபெற்றிருந்தன. ஆனால், இப்பொழுது ஜெர்மன் படைவரிசை முறிந்து போகலாயிற்று. முதலிற் சிறிதுசிறிதாயும் பின்பு அதிக மான தடையெதிர்ப்புக்குப் பிறகும் எங்கும் முழுமையான தோல்வியை அடைந்தது. இப்பணியில் நேச நாட்டுப் படைகளின் எல்லாப் பகுதிகளும் பங்கெடுத்துக்கொண்டன. முதல் தாக்குதல், சிறப்பாகப் பிரெஞ்சு அமெரிக்கப்படைகளால் நடத்தப்பட்டது. பிரெஞ்சுப்படைகளைவிட அதிகம் சோர்வடையாத பிரிட்டிஷ் படைகள், போரின் எஞ்சிய பகுதியில் முதன்மையான பங்குகொண்டன; ஆகஸ்டு மாதம் 8ஆம் நாள், அமீன்ஸ் போர்முனையைத் தாக்கின. ஜெர்மானியர்கள் மிக அதிகமான இழப்புடன் திருப்பி விரட்டியடிக்கப் பட்டார்கள். 'டாங்குகள்' பேருதவி புரிந்தன. ஜெர்மன் படையில் 'துன்பநாள்' என்று இதை லூடன்டார்ஃப் தமது வரலாற்றுக் குறிப்புக்களில் குறிப்பிட்டுள்ளார்.

## தாற்காலிகப் போர் நிறுத்தம்

இதன்பின்பு மூன்று திங்கள் வரையிற் போர் நடந்தது. பிரிட்டிஷார்களுக்கு இச்சண்டை மிக்க செலவுள்ளதாயிருந்தது; ஜெர்மனிக்குத் தொடர்ந்து ஏற்பட்ட தோல்விகளின் பதிவாய் இருந்தது. அரணகச் செய்யப்பட்ட அவர்கள் வரிசைகள் (ஹிண்டன் பர்கு வரிசை) மிகக்கவனமாக ஆயத்தப்படுத்தப்பட்டிருந்தும், கைப் பற்றப்பட்டன. பெல்ஜியப் படைகள் புரூஜஸையும் கென்டையும் பிடித்துக்கொண்டன. 1866முதல் ஐரோப்பா முழுவதிலும் பரவியிருந்த ஜெர்மனியின் இராணுவ ஆதிக்கம் மண்ணிற்சாய்ந்தது. ஜெர்மன் மன்னரான கெய்சர் முடிதுறந்தார். புதிய அரசாங்கம் தாற்காலிகமான போர் நிறுத்தத்திற்காக முறையிட்டது. அதிகப் பேச்சு வார்த்தைகள் நடந்தபின் 1918 நவம்பர் மாதம் 11ஆம் நாள் போர் நிறுத்தம் ஏற்பட்டது.

## ஆஸ்திரியா, பல்கேரியா, துருக்கி இவற்றின் வீழ்ச்சி

மேற்குப் போர்முனையில் ஏற்பட்ட பேரிடரை ஈடுசெய்யும் வகையில் வேறெங்கும் ஜெர்மனிக்கு நலம் கிடைக்கவில்லை. எல்லாப் பக்கங்களிலும் நேச நாடுகள் வெற்றிபெற்றன. (1) காபோரெட்டோவில் பெற்ற பேரிடரை இத்தாலியர்கள் முழுமையாக ஈடுசெய்து கொண்டார்கள். ஜூனில் அவர்கள் ஆஸ்திரியர்களை மிகக் கடுமையாகத் தோற்கடித்தார்கள். ஃபோச்சு என்பாரின் எதிர்த்தாக்குதலுக்கு ஒரு மாதம் முன்னதாக இது நடந்தது. அக்டோபரில் படைத்தலைவரான டயஸ் என்பார் ஒரு பெரிய தாக்குதலை நிறைவேற்றினர். இதன் விளைவாக ஆஸ்திரியர்கள் எல்லாவிடங்களிலும் முறிவுற்றனர். இலட்சக்கணக்கான ஆஸ்திரியர்கள் இத்தாலியர்களின் கையில் கைதிகளாய்ச் சிக்குண்டார்கள். ஜெர்மானியர்களுடைய உதவி, கட்டுப்பாடு முதலியவையில்லாமல் அவர்கள் பகைவர்களை எதிர்க்கக் கூடிய சரிநிகராகார்கள். செர்பியர் முதன்முதலாகப் படைவரிசையை ஊடுருவிச் சென்றனர். விரைவில் நேச நாடுகளின் படைகள் யாவும் முன்னேறின. பல்கேரியா காலத்திற்கேற்றவாறு தன்முடிவு செய்து (செப்டெம்பர் 29-ல்) சரணடைந்தது. (2) துருக்கியின் எதிர்த்து நிற்கும் சத்தி முடியும் தறுவாயிலிருந்ததென்பது நன்கு தெளிவாயிருந்தது. செப்டெம்பர் மாதத்தில் படைத்தலைவர் ஆலன்பி, சூழ்ச்சித்திறம் கொண்ட மிகச் சிறப்பானதும் தொடர்ச்சியானதும் குதிரைப் படைகள் முக்கியப் பங்கு கொண்டதுமான போர் நடவடிக்கையால் பாலஸ்தீனத்திலிருந்து துருக்கியர்களை விரட்டியடித்ததுடன், எதிர்க்க முடியாதவாறு, டமாஸ்கஸ் நகரைநோக்கி முன்னேறினர். அக்டோபர் மாத முடிவில் துருக்கியும் சரணடைந்தது.

ஜட்லந்து கடற்போர், பெரியதாக ஒன்றையும் நிகழ்த்தாவிட்டாலும், போரின் வெற்றியே அதைச் சார்ந்ததாயிருந்தது. ஒரு சமயம் 'ஊறு செய்ய முடியாத இங்கிலாந்து எனும் அகில்லீஸின் உயிர்நாடியை' ஜெர்மனியின் நீர்மூழ்கிக் கப்பல்கள் கண்டுபிடித்தது போல் தோன்றியது. ஆனால், நேச நாடுகளின் கப்பற்படைகள் நெருக்கடியைச் சமாளிக்கக் கூடியதென்பதனைப் புலப்படுத்தின. கப்பல் கட்டுவது விரைவாக மேற்கொள்ளப்பட்டது. நீர்மூழ்கிக் கப்பல்களை உளவறிந்து கண்டுபிடித்து அழிப்பதற்கான புதிய கண்டுபிடிப்புக்கள் செய்யப்பட்டன. பெரியனவாயும், வெற்றிகரமாயும் அமைந்த வீரச் செயல்களால், ஸீபுருக்கும், ஆஸ்டெண்டு துறைமுகங்கள் நீர்மூழ்கிக் கப்பல்களுக்கு எவ்விதத்திலும் பயன்படாதவாறு செய்யப்பட்டன. தாற்காலிகப் போர் நிறுத்தம் ஏற்பட்டபோது, ஜெர்மன் கப்பற்படையின் பெரும்பகுதியை ஒப்படைப்பது வற்புறுத்தப்

பட்டது. ஈடு எடுப்பில்லாத இவ்வெற்றியும் பகைவர்களின் மாண் பிழப்பும் நவம்பர் 21ஆம் நாள் ஏற்பட்டன.

X

## ஜெர்மானியக் கடற்படை சரணடைதல்

ஜெர்மானியக் கடற்படை சரணடைந்தது. ரைன் நதியை நோக்கி நேச நாட்டுப்படைகள் முன்னேறின. போர் முடிந்தது. போரில் வெற்றி பெறுதல் போன்ற கடினமானதும் முக்கியமானதுமான பணி எஞ்சியிருந்தது. சமாதானம் நிறுவப்பட வேண்டியிருந்தது.

## உட்ரோ வில்ஸன்

சருவதேச சங்கம்

சமாதானப் பேச்சு வார்த்தைகளில் மூவர் ஆதிக்கம் கொண்டனர். அம்மூவர், அமெரிக்காவின் ஜனாதிபதியான உட்ரோவில்ஸன் என்பாரும், பிரிட்டிஷ் பிரதமரான லாயிட்ஜார்ஜும், பிரெஞ்சுப் பிரதமரான கிளீமான்சோவும் ஆவர். போரில் அமெரிக்கர் பங்கு கொள்ளுவதன் அவசியத்தை அமெரிக்க ஜனாதிபதி தாமதமாக ஏற்றுக் கொண்டார். ஆனால், 'தடையில்லா' நீர்மூழ்கிக் கப்பல் படையெடுப்பு, ஐக்கிய நாடுகள் ஒரு பெரிய வல்லரசாக நீடித்துக் கருதப்படவேண்டு மானால் அவர் போரில் பங்குகொள்வதைத் தவிர வேறு மாற்றுக் கருத்தைக் கொள்ளக்கூடாது. போரைப்பற்றிய அவர் கூற்றுக் களிலெல்லாம், வருங்காலத்தில் இப்பெரிய போரைப் போன்ற இடர்ப் பாட்டைத் தவிர்க்கக் கூடியதான நிறுவனத்தை நாகரிகவுலகத்திற் காணவேண்டுவதுதான் சிறந்தது என்ற முதன்மையான தேவையை வற்புறுத்தியுள்ளார்; சருவதேச சங்கத்தின் கருத்தையெடுத்துக் கூறுவதில் சிறப்பு வாய்ந்த வெற்றி வீரராய்த் தம்மைச் செய்து கொண்டார். போரினால் தடையின்றி விடுவிக்கப்பட்ட மனவெழுச்சி, பொறாமை, அச்சம் ஆகியவற்றின் சூறாவளி போன்ற வேகத்தைக் குறைப்பதிற் காணப்பட்ட கடினத்தை அவர் முழுவதும் உணரவில்லை போலும்! ஆனால், எதிர்பார்த்தபடி உலகத்திற்குச் சமாதானத்தைச் சருவதேச சங்கம் அளிக்குமானால், மனித இனத்திற்கு நன்மை புரிந்த பெரியோர்களில் உட்ரோ வில்ஸனுடைய பெயரும் ஒளிவீசும்.

## லாயிட் ஜார்ஜ்

கிளீமான்சோ

1916இன் இறுதியில் ஆஸ்குவித்துப் பிரபுவைத் தொடர்ந்து லாயிட் ஜார்ஜ் பிரதமரானார். அவருடைய நம்பிக்கையும், சொல்

வன்மையும் சத்தியும் நேச நாடுகளின் வெற்றிக்குப் பேருதவியா யிருந்தன. நேச நாடுகள் பக்கத்தில் அவரைப்போன்று, போர் முழு வதிலுமே வேறெவரும் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கவில்லை. போரின் தொடக்கத்திலிருந்து இறுதி வரையிலும் ஐரோப்பிய அரசியல் வல்லுநர்களுள் அவரும், ஜெர்மன் பேரரசருமே தலையான பங்கு கொண்டிருந்தனர். 1917 நவம்பர் மாதத்தில் கிளிமான்சோ பிரெஞ்சுப் பிரதமரானார். அவர் வயது முதிர்ந்தவர். அவர் 1870-ல் நடந்த போரின்போதும் கம்யூன்கள் ஆட்சி நடந்த போதும் வாழ்ந்த துடன் அரசியல் வல்லுநராகவும், கடுமையாகத் தாக்கியெழுதும் பத்திரிகை ஆசிரியராகவும் நெடுநாளாகப் புகழ் பெற்று விளங்கினார்; பிரெஞ்சு ஆட்சி முறைக்குச் சத்தியையும் நிலையான தன்மையையும் அளித்தார். சமாதானத்திற்காகப் பேச்சு வார்த்தைகள் பாரிசு நகரில் தொடங்கியபொழுது, தலைமை தாங்குவதற்கு அவர் தேர்ந்தெடுக்கப் பெற்றார். அங்கு உண்மையிலேயே அவர் பதவி மிகவும் கண்கவர் வனப்புடையதாயிருந்தது. அவர் சுடப்பட்டார். அவரது தோளினுள் சென்ற துப்பாக்கி ரவையை வெளிப்படுத்த முடியவில்லை. ஆனால், அவர் மிகக்குறைந்த இடைவேளைக்குப் பின், மீண்டும் மாநாட்டில் சுறுசுறுப்புடனும் வெல்ல இயலாத வன்மையுடனும், அவரது பதவியை மேற்கொண்டார்.

## பதினான்கு கொள்கைகள்

1918 ஜனவரி 8ஆம் நாளன்று ஜனாதிபதி வில்சன் மாநாட்டிற்குச் சமாதானத்தின் நிபந்தனைகளைக் குறிப்பிட்டிருந்தார். இவைகளே புகழ் பெற்ற பதினான்கு கொள்கைகளாகும். சமாதான உடன்படிக்கை யில் இவை சேர்க்கப்படும் என்ற எண்ணத்தினால்தான் ஜெர்மனி நவம்பர் 11ஆம் நாள் ஏற்பட்டதும், துன்பம் விளைவிக்கும் நிபந்தனைகள் அடங்கியதுமான தாற்காலிகப் போர் நிறுத்தத்தை ஏற்றுக் கொண்டது. இந்நிபந்தனைகளில் ஜெர்மனியும் நேச நாடுகளும் கைப்பற்றியிருந்த எல்லா நிலப்பகுதிகளிலிருந்தும் வெளியேறி அவரவர்களிடம் ஒப்புவிக்க வேண்டும் என்பதும் சேர்ந்திருந்தது. சுயேச்சையான போலந்து, கடலில் சுயேச்சை, எல்லாப் பொருளாதாரத் தடைகளையும் விலக்குதல், அல்சேஸ் லோரைன் பகுதிகளைப் பிரான்சிற்கு மீளவும் தருதல், ஆஸ்திரிய ஹங்கேரியிற் சேர்ந்திருந்த எல்லா நாட்டினத்தாருக்கும் சுதந்தரம் அளித்தல்; நாட்டினத்தின் அடிப்படையில் இத்தாலி நாட்டு எல்லைகளைத் திருத்தியமைத்தல் முதலியவை சேர்க்கப்பட்டிருந்தன. முடிவாக, எல்லாவற்றிற்கும் சிகரம் போன்று, சருவதேச சங்கம் அமைக்கப்படுதலும் காணப்பட்டது.

சமாதானத்தைக் குறித்துத் திட்டமான கொள்கைகளை உருவாக்கு வது மிக முக்கியமாயிருந்தது. ஆனால், வெல்திறங்கொண்டவர்கள்,

கூடியபோது இக்கொள்கைகளை ஓர் உடன்படிக்கையின் உட்பிரிவுகளாகப் பிரித்து விளக்கம் கூறுவதிலும், போட்டியாயிருந்த மன வெழுச்சிகளையும் பேரவாக்களையும் இணக்கமாகச் செய்யும் பணி கடக்க முடியாததாயிருந்தது. கூடியிருந்த வெல்திறங்கொண்டவர்கள் ஜனதிபதி வில்ஸன் கனவு கண்ட புதிய உலகச் சமுதாயத்தைச் செயல் முற்றியதாகச் செய்யும் மன நிலையைக் கொண்டிருக்கவில்லை. ஆயினும், சமாதான உடன்படிக்கைப் பத்திரத்தின் தொடக்கத்தில் சருவதேச சங்கத்தில் உடன்படிக்கையைச் சேர்ப்பதில் சாதனை வெற்றி பெற்றூர். இதைப்பற்றி ஒரு கணம் விவரிப்பது அவசியமாகும்.

## சமாதான மாநாட்டின் தன்மை

மாநாட்டில், மத்திய அரசுகளைச் சார்ந்தவர்களுள் ஒருவரும் பிரதிநிதியாக அனுமதிக்கப்படவில்லை. நேச நாடுகளின் பிரதிநிதிகள் சிலவமயங்களில் வெளிப்படையாயும் சிலவமயங்களில் மறைவான கூட்டங்களிலும் விவாதித்ததன் பயனுயிருந்த முடிவுகளை முதலில் ஜெர்மனி பிரதிநிதிகளுக்கும் அதையடுத்து மற்றப் பகைவர்களுக்கும் அனுப்பினர். அரசியல் வெல்திறங்கொண்டவர்களும், அரசியல் தூதரும் நிரம்பியிருந்த அப்பெரிய கூட்டத்தில், ஐக்கிய அமெரிக்கா, கிரேட் பிரிட்டன், பிரான்சு, இத்தாலி, ஜப்பான் என்னும் நாடுகளின் பிரதிநிதிகளின் செல்வாக்கு மிகுதியாயிருந்தது. ஜப்பான் ஆசியாவின் பிரச்சினைகளில் மட்டும் முக்கிய அக்கறை கொண்டிருந்ததால், முக்கியமான முதல் நான்கு அரசுகளின் பிரதிநிதிகளால் முதன்மையான முடிவுகள் செய்யப்பட்டன. அப்பிரதிநிதிகள் 'பெரிய நால்வர்' என்று வழங்கப்பட்ட வில்ஸன், லாயிட் ஜார்ஜ், கிளீமான்சோ, ஆர்லாண்டோ என்னும் நால்வராவார்கள்.

இவ்வளவு அதிகமாகவும், இவ்வளவு முக்கியமாகவும் உடன்படிக்கைகள் இதற்குமுன் எப்பொழுதும் செய்யப்படவில்லை. எனினும், எல்லாக் கோரிக்கைகளும் பயனுள்ளனவாகச் செய்யப்படுமா என்பது பற்றி மேலும் உறுதியில்லாதிருந்தது. ஆனல், உடன்படிக்கையின் முக்கியமான கூறுகள் தெளிவாயிருக்கின்றன.

## ஜெர்மனியின் ஊழ்

உலக ஆதிக்கம் பற்றிய கனவிலிருந்து ஜெர்மனி முரட்டுத்தனமாகத் தட்டியெழுப்பப்பட்டது. உலக ஆதிக்கத்தை அந்நாட்டின் சில அரசியல்வாதிகளும், அரசியல் வல்லமையுடையவர்களும், பாராட்டி வந்தார்கள். நாட்டில் புரட்சி அலை பரந்து மோதியது. கெய்சர் முடி துறந்து ஹாலந்திற்கு ஓடினர். மற்ற முடிமன்னர்களும் ஜெர்மனியிலிருந்து திடீரென்று மறைந்தார்கள். பேரரசு என்ற பெயரை வைத்துக்

கொண்டு குடியரசு என்பது அறிவிக்கப்பட்டது. பெல்ஜியம் பிரான்சு முதலிய நேசநாடுகளில் எஞ்சியவற்றுக்கும் ஏற்பட்ட அழிவிற்குமேற்ற வீதப்படி பெரிதளவு இழப்பீடு செலுத்தப்படவேண்டுமென்று ஏற்பா டாயிற்று. அல்சேஸ், லோரைன் பகுதிகள் மீண்டும் பிரான்சிற்குச் சொந்தமாக்கப்பட்டன. ஆனால், ஜெர்மனியின் ஐக்கியத்தைக் குலைப்ப தான எவ்வித அடையாளமும் காணப்படவில்லை. மகாபிரெடரிக்கும், பிஸ்மார்க்கும் செய்த பணி பாழாக்கப்படவில்லை. ஜெர்மனி பெரிய வல்லரசாய் நிலைத்திருக்கிறது. முன்போலவே, அந்நாட்டு மக்கள், உழைப்பாளிகளாயும், திறமை மிக்கவர்களாயுமிருந்தார்கள்; உலக அரங்கில் பெரும்பங்கெடுத்துக்கொள்ள வேண்டியவர்களாய் இருந்த துடன் முன்போலவே உலகின் கருத்து, விஞ்ஞானம் இவற்றுக்கு உதவி புரிபவர்களாயு மிருந்தார்கள்.

## ஆஸ்திரியப் பேரரசு சிதறிப் போதல்

ஆஸ்திரியப் பேரரசு இதனினும் அதிகமாகத் துன்புற்றது. நிலப் படத்திலிருந்து அது மறைந்தே போயிற்று. ஹாப்ஸ்பர்கு குடும்பத்தின் தலைவரால் ஆட்சி புரியப்பட்ட அப்பேரரசு, ஆறு சுயேச்சையான அரசுப் பிரிவுகளாய்ப் பிரிந்தது. அப்பிரிவுகளாவன: (1) ஆஸ்திரியா (2) இப்போது சுதந்தரமடைந்த ஹங்கேரி, (3) ஜூகோஸ்லேவியா ஆஸ்திரியாவின் ஸ்லோவானிக் மக்களைக் கொண்டதாயும் முன்பு செர்பியாவும் மான்டிநீகிரோ எனும் பகுதிகளாயும் இருந்தவை, (4) ருமேனியா, டிரான்ஸில்வேனியாவை வலியத் தாக்குதல் வாயிலாக இணைத்துக்கொண்டது, (5) போலந்து, முன்பு ரஷ்யா, பிரஷ்யா, ஆஸ்திரியா முதலியவை பங்கு போட்டுக்கொண்டிருந்ததை மீண்டும் ஒன்று சேர்த்துக்கொண்டது, (6) செக்கோஸ்லோவியா, முன்பு பொஹீமியா மொரேவியா என்று வழங்கப்பட்டவை இவ்விநோதமான பெயரால் ஒன்று சேர்ந்தன.

## போலந்தும் செக்கோஸ்லோவியாவும்

மத்திய ஐரோப்பாவில், போலந்தும் செக்கோஸ்லோவியாவும் புதியனவாகத் தோன்றியவற்றுள் முக்கியமானவை. ஜூகோஸ் லோவியா என்பது பழைய செர்பியா விரிவாக்கப்பட்டதைத் தவிர வேறன்று. இவ்விரு நாடுகளும், உள்நாட்டு வெளிநாட்டு அலுவல் களில் மிகக் கடுந்தொல்லைகளை வலுவான அண்டை நாடுகளிடமிருந்து பாதுகாத்துக் கொள்ளுவதில் ஆதரவிற்கும் உதவிக்கும் சருவதேச சங் கத்தை நோக்கின. இவை வரலாற்று ஆசிரியருக்கு வரலாற்று மரபு களின் உயிர்ச்சத்தியைக் காட்டுவனவாயிருந்தன. உலகம் பாழடைந்து கிடக்கும் பொழுதும், மனித இனத்தின் பழைய நினைவுகளால் கருத்துத்

தோற்றுவிக்கப்பட்ட முறையில், அதன் புதிய நிலைநிறுத்தம் தவிர்க்க முடியாத நிலையில் தொடர்கிறது. முன்னோர்களின் முறைகள் புதுப்பிக்கப்படுகின்றன.

## பல்கேரியா

**கிரீஸ்**

பல்கேரியா, அதிக மாற்றமில்லாது வெளித்தோன்றியது. பால்கன் பகுதிகளில் மேலாதிக்கம் செலுத்தும் பேரவாக்களைக் கைவிட நேர்ந்ததுடன், அங்குச் செர்பியா, ருமேனியா, கிரீஸ் நாடுகளோடு சேர்ந்து செல்வாக்கைப் பகிர்ந்துகொள்வதுடன் அமைய வேண்டியதாயிற்று. கிரீஸுக்கு அதிகமான நிலப்பகுதிகள் சேரலாயின. ஆசியா மைனரின் மேற்குப் பகுதியில் பெரிய நிலப்பரப்புக்களைச் சொந்தமாகப் பெற்றன. பண்டைய நிலைமைக்கு வியத்தகு முறையில் திரும்பியது போலத் தோன்றியது. காரணம், இப்பகுதிகளிலேதான், சரித்திரம் தோன்றிய காலை கிரேக்கர்கள், விஞ்ஞானம், தத்துவம், கவிதை, இலக்கியம், இவற்றில் மிகப் பெரிய முதற்படிகளைப் பெற்றார்கள்.

## துருக்கி

துருக்கி அதன் வரலாற்றில் இதற்குமுன் காணாத அளவு இவ்வுடன்படிக்கையால் கடுந்துயருற்றது. கான்ஸ்டான்டிநோப்பிளும் டார்டனல்சும் அதன்வயம் விடப்பட்டன. ஆனால், ஐரோப்பாவில் அதன் ஆதிக்கம் அடியோடு மறைந்தது. ஆசியாவில் மிகவும் ஊனமடைந்தது. சிரியா, பிரெஞ்சு ஆதிக்கத்தின் கீழ் வரவேண்டுமென்றும், அதுபோலப் பாலஸ்தீனம், பிரிட்டிஷ் ஆதிக்கத்தில் வரவேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. போர் அதனுடைய கெடுதல்களுடன் இறுதியில் இதுவரையில் துருக்கியர்களின் கெட்ட ஆட்சியின்கீழ்த் துன்புற்றிருந்த நாடுகளுக்கு உண்மையான விடுதலையை அளிக்கும் என்பதை எதிர்பார்க்க நல்ல வாய்ப்பிருந்தது.

## சருவதேச சங்கம்

எல்லா உடன்படிக்கைகளும், சருவதேச சங்கத்தின் உடன்பாட்டை முற்கொண்டனவாயிருந்தன. அவ்வுடன்பாட்டின் தொடக்க வாக்கியங்கள் மனித இனத்தின் எதிர்நோக்குடன் பிணைக்கப்பட்ட இயக்கத்தின் நோக்கங்களை நடுத்தரமான மொழியில் கூறுகின்றன. "போரிடுவதை நாடாமலிருக்கும் கடமைகளை ஏற்றுக்கொள்ளுவதாலும், நாடுகளுக்கிடையே வெளிப்படையானவும், நேர்மையும் கண்ணியமும் வாய்ந்தனவுமான தொடர்புகளை வரையறை செய்வதாலும், அரசாங்

களின் உண்மை நடத்தை நெறியாகச் சருவதேச சட்டத்தின்மூலம் உறுதியான நல்லுறவுகளை ஏற்படுத்துவதாலும், ஒழுங்காக அமைக்கப்பட்டுள்ள மக்களில் ஒருவருக்கொருவரிடமுள்ள செயல் தொடர்புகளில் நியாயத்தை நிலைபெறச் செய்வதாலும், எல்லா உடன்படிக்கைகளின் கட்டுப்பாடுகளிலும் சிறிதளவும் நெறிதவுறாது மரியாதையைக் கைக்கொள்ளுவதாலும், சருவ தேசங்களின் கூட்டுறவையும், சருவதேச சமாதானத்தையும், அமைதியைப் பாதுகாப்பதையும் வளர்க்க ஒப்பந்தம் செய்யும் உயர்ந்த கட்சிகள், இந்தச் சருவதேச சங்கத்தின் உடன்பாட்டை ஏற்றுக்கொள்கின்றன,' என்பது குறிப்பிடப்பட்டிருந்தது.

## உடன்படிக்கையிற் கையொப்பமிட்டவர்கள்

இப்புதிய முழுப்பற்றுடைய சங்க உடன்பாடு, இப்பத்திரம் உலக சமாதானத்தின் பெரிய பத்திரமாயிருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. இருபத்தேழு அரசுகளின் பிரதிநிதிகள் இதிற் கையொப்பமிட்டார்கள். மத்திய அரசுகளின் பிரதிநிதிகள் அவ்வமயம் சேர்க்கப்படவில்லை. வேறு பதின்மூன்று நாடுகளும் இதற்கு 'இணங்க அழைக்கப்பட்டன'. அந்நாடுகள் பூண்ட உறுதி என்ன?

## இதன் வாசகங்கள்

இருபத்தாறு விதிகளில் (ஷரத்துக்களில்) அவர்களுக்குள் எழும் எச்சச்சரவையும் நடுவர் தீர்ப்புமன்றத்துக்குமுன் எடுத்துச் செல்லுவதென்றும், அல்லது நடுவர் தீர்ப்புக்குவிடச் சச்சரவு ஏற்றதாயில்லாமலிருந்தால், விசாரணைக்காகவும் கருத்து வெளியீட்டிற்காகவும் சங்கத்தின் மன்றத்துக்குமுன் எடுத்துச் செல்வதென்றும் உறுதி கூறினர். தாக்குதல்களிலிருந்து சங்கத்தின் எல்லா அங்கத்தினர்களையும் பாதுகாப்பதாக வாக்களித்தனர். எல்லா முன் எச்சரிக்கைகளும் எடுக்கப்பட்டும், போர் மூளுமானால் பொருளாதாரம் அல்லது அரசியல் போன்ற எல்லா முறைகளையும் பின்பற்றி வலுவில் தாக்கும் நாட்டைப் போரை நிறுத்த வற்புறுத்தவும் வாக்குறுதி செய்தனர்.

## பொதுச்சபையும் அவையும்

இத்தகைய முன்னேற்பாடுகள் சமாதானத்தை நிலைபெறச் செய்வதைக் குறித்து நோக்கின. ஆனால், சங்கம் உலக நாடுகளின் அரசை ஏற்படுத்துவதல்லாமல், நாகரிக வுலகில் அக்கறைகளைக் கருதக்கூடிய நிலையான நிறுவனங்களை ஏற்படுத்தி எல்லோருடைய நலனையும் கருதி எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும் செயல்களை நிறைவேற்று

வதையும் எதிர்பார்த்தது. சங்கத்தின் அங்கத்தினர்களின் பிரதிநிதிகளடங்கிய கலந்தாலோசிக்கும் சபையிருக்க வேண்டுமென்பது ஏற்பாடாயிற்று. ஆனால், ஐக்கிய நாடுகள், கிரேட் பிரிட்டன், பிரான்சு, இத்தாலி, ஜப்பான் இவற்றின் பிரதிநிதிகளும் சபையின் அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு நாட்டுப் பிரதிநிதிகளும் கொண்ட அவை உண்மையில் முக்கியமானதாயிருந்தது.

இம்மாதிரி வழிகளில் சங்கத்தைத் தோற்றுவித்தவர்கள், மனித சமாதானத்தையும் முன்னேற்றத்தையும் ஏற்படுத்த எண்ணினுர்கள். நாகரிக உலகம் எதிர்நோக்கிய பெரிய பிரச்சினைகளில், இப்புதிய நிறுவனத்தின் எதிர்காலம், வெற்றி முதலியவைகளைப் பொறுத்தது மிகப் பெரிய பிரச்சினையாயிற்று.

## நல்லெண்ணங்களும் அச்சங்களும்

முதலில், உணர்ச்சி வயப்பட்டதும் ஒன்றுசேர்ந்து இசைப்பதும் போன்ற வரவேற்பு இச்சங்கத்திற்கு அளிக்கப்பட்டது. உடனே எல்லா மனவெழுச்சிகளையும் தணிக்கக் கூடியதும், போரை எப்பொழுதுமே நடக்கவொட்டாமல் செய்யக்கூடியதுமான ஒரு மெய்காப்பைப் (ரட்சையைப்) போல இச்சங்கம் வரவேற்கப்பட்டது. பின்பு, போர் கொடுமையானது. நன்கு உருவாக்கப்பட்டுப் பருத்த மனவெழுச்சியையும், பேராசையையும் விட்டுச் சென்றுள்ளது என்பதைக் கண்டபோது மனிதவினத்தைப் பற்றிய அக்கறைகளில் பற்றுறுதி சமாதான மாநாட்டின் ஆலோசனைகளை ஊக்குவிக்கவில்லையென்றும் கண்டபொழுது தொடக்கத்திலிருந்த ஆர்வத்துக்கெதிராக எதிர்விளைவு குறிப்பாகக் காணப்பட்டது. சங்கம் ஒரு போலியென்பதும் சூழ்ச்சி நிறைந்த கண்ணியென்பதும் அறிவிக்கப்பட்டன. சிலவேளைகளில் பழையதும், கொடுமையானதுமான சருவதேசப் போட்டியாகும் சண்டையை விரும்பிய சிலர், மிக்க மகிழ்ச்சியுடன் மேற்கண்டவாறு கூறினர். மற்றும் சிலவேளைகளில் உடனடியாகச் சமாதானமும் நல்லெண்ணமும் ஏற்படுவதை எதிர்நோக்கிய சிலர் கடுமையான கழிவிரக்கத்துடன் மேற்கூறியவாறு இயம்பினர்.

## புதிய மகாசாசனப் பத்திரம்

ஆங்கில நாட்டு வரலாற்றில் காணப்படும் மகாசாசனப் பத்திரத்துக்கு இணையாகக் குறிப்பிடுவது அமைதியான நம்பிக்கை கொள்ளுவதற்கு உதவும். அச்சாசனப் பத்திரத்தை உருவாக்குவதில் எவ்வளவு இடர் விளைவிக்கும் செய்முதற்பொருள்கள் கலந்தன ! அது தன் வாக்குறுதியை உடனடியாக உணர்வதில் எவ்வளவு தூரம் தவறியது ! ஆயினும், இதுமுதல் நாட்டின் சட்டவரம்பிற்குட்பட்ட

வெற்றி காணும் வரையில் சுற்றிலும் ஒன்று திரண்ட அணியையுடைய ஒரு கொடி ஆயிற்று. எல்லாக் குறைத்தல்களையும் செய்தபின், சருவதேச சங்கம், மகாசாசனப் பத்திரத்தைக்காட்டிலும் மிகவும் தெளிவான நோக்கங்களையுடையதும் கேள்விக்குரியதாகாதவாறு அதிக நேர்மைவாய்ந்ததாயுமிருந்தது. மனிதவினத்தின் நலனை ஏற்படுத்துவதில் ஒரு கருவியாகத் தங்கள் நாட்டை நேசத்துடன் கருதுகிறவர்கள் சருவதேசக் கருத்து மாறுபாட்டின் வழிகாட்டியாயுள்ள ஓர் அடையாளத்தையும், அடிப்படை அளவையும் இதுமுதல் பெற்றவர்களானார்கள்.

# 23. பெரும்போருக்குப் பின்

## போரின் முடிவில் எதிர் நோக்கியவை

பெரும்போர், நன்கு வரையறுக்கப்பட்ட ஊழின் முடிவையும் மற்றோர் ஊழின் தொடக்கத்தையும் குறிப்பதாயிற்று. இதன் இயல்புகள் நன்கறிந்துகொள்ளுவதற்கு எளியனவல்ல. போர்த்துன்பங்களின்போது போரின் முடிவு பரிவுடன் எல்லா நன்மைகளையும் கொண்டுவரும் போலத் தோன்றியது. 'போரை ஒழிக்கும் போர்' என அஃது அறிவிக்கப்பட்டது. சமாதானத்துடன் சருவதேச அமைதியும் கூட்டுறவின் பொற்காலமும் வரும் என்று பலர் கருதினர். சருவதேச சங்கம் அதன் உடன்பாட்டின்படி, நாடுகள் ஆயுதப் பரிகரணம் செய்யவேண்டுமென்றும், வாணிகத் தொடர்புகளுக்குத் தடையாக எழுப்பப்பட்டிருந்த சுங்கவரி விதிப்பதை முற்றிலும் நீக்க முடியாமற்போனாலும் குறைத்துத் தடைகளை நீக்கவேண்டுமென்பதை அறிவித்திருந்தது. எல்லா மக்களுடைய தேசிய நோக்கங்களையும் நிறைவுபெறச் செய்யவேண்டும். வெற்றி பெற்ற நாடுகள் அவற்றுக்குப் போரின் 'இழப்பீடாக' ஜெர்மனி செலுத்தும் பெருந் தொகையின் பயனாக வரிவிதித்தலைத் தணிப்பதையும் செழுமையையும் துய்க்கவேண்டும் என்றும் ஏற்பாடு ஆயிற்று.

## எதிர் விளைவு

வேர்செயில்ஸ் சமாதானம் கையொப்பமிடப்படுவதற்கு முன்னதாகவே இவ்வெண்ணங்களிற் பல மறையத் தொடங்கின. பகைமையின் முடிவு அதனுடன் கொணர்ந்த உள்மகிழ்ச்சியில் விரைவிலேயே ஆழமான சோர்வு மனப்பான்மை நிலைக்க இடமளித்தது. போரைப் பற்றிய விலங்குத் தன்மை, காட்டுமிராண்டித்தனம் முதலியவை நாவல்கள், நாடகங்கள், வரலாற்றுக்குறிப்புக்கள் போன்ற மிக விரிவான இலக்கியங்களில் விளக்கப்பட்டுள்ளன. இவற்றுக்குச் சற்றேறக்குறைய எல்லா நாகரிக நாடுகளும் உதவி செய்துள்ளன.

ஆங்கில நாடகத்தையும், ஆர். சி. ஷெரீப் என்பார் எழுதியுள்ள 'யாத்திரையின் முடிவு' என்ற நூலையும், ரீமார்க்கு என்பார் எழுதியுள்ள 'மேற்குப் போர் முனையில் எல்லாம் அமைதி' என்ற ஜெர்மன் நாவலையும் இதற்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடுவது போதுமானது. புதுமைக்கதை, வீரவுணர்ச்சி அல்லது ஒழுங்குக் கட்டுப்பாடு இவற்றுடன் இப்போரைத் தொடர்புபடுத்துவதாக ஒரு குரலும் எழவில்லை. போரைப் பற்றிய எல்லாச் சிறந்த கற்பனைகளும் அப்போதைக்கு முடிவுற்றிருந்தன.

## போரும் மக்களாட்சியும்

போர்க்காலத்தில் அரசியற்கருத்துக்களின் எதிர்விளைவும் சரிசமனுன சிறப்புக் குறிப்புடன் இருந்தது. போரின் நோக்கம் 'உலகிற்குப் பாதுகாப்பாக மக்களாட்சியை அமைப்பது' என்ற சொற்றொடரைவிட அடிக்கடி நிலையாக வேறெந்தச் சொற்றொடரும் கூறப்படவில்லை. பல நாடுகளில், வாக்காளர்களின் எண்ணிக்கைக்கு ஏராளமானவர் சேர்க்கப்பட்டதன் பயனை இப்போர் உண்டுபண்ணியது. மத்திய ஐரோப்பாவிலிருந்து பழைய பேரரசுகள்—ஜெர்மனியும் ஆஸ்திரியாவும்—முற்றிலும் மக்களாட்சியடிப்படையிலுண்டானதும் மக்களுக்கு வாக்கை அளிப்பதுமான அரசியல் சட்டங்களை மேற்கொண்டன. இலத்தீன் மரபு நாடுகளில்—பிரான்சு, இத்தாலி, ஸ்பெயின்—இம்மக்களாட்சி எண்ணம் சற்றுக் குறைவாயிருந்ததுடன் பெண்களுக்குச் சுறுசுறுப்பான குடிமையுரிமைகள் அனுமதிக்கப்படவுமில்லை. ஆனால், பொதுவாகக் கூறுமிடத்து, போரின் முடிவால் மக்கள் தொகையில் மிகப் பெரும்பகுதியினர் செய்விளைவுடன் கூடிய குடிமைக்குச் சேர்க்கப்பட்டனர்.

ஆனால், இது வரையில் மக்களாட்சிக் கருத்துடன் இணைக்கப்பட்டிருந்த முறைகள்—பேச்சுச் சுதந்தரம், ஒன்று சேரும் சுதந்தரம், மக்கள் உடன்பாட்டுடன் கூடிய துரைத்தனம், நிறைவேற்றுத் துறைச் செயற்குழுவின்மீது பொது விருப்பமான கட்டுப்பாடு—முழுமையான ஒப்புக்கொள்ளுதலை எவ்விதத்திலும் பெறவில்லை. கிரேட் பிரிட்டன், பிரான்சு, ஐக்கிய நாடுகள் அவற்றின் பழைய துரைத்தனப் பொறிகளையே (முறைகளையே) எவ்வித மாற்றமுமில்லாது வைத்துக் கொண்டிருந்தன. ஐரோப்பாவின் வடக்கிலிருந்த நாடுகள் மக்களாட்சியைக் கொண்டனவாயும், பொது மக்களால் விரும்பப்படுவனவாயும் இருந்தன. பெரிய இடர்கள் இருந்தபோதிலும், ஜெர்மனி, அதன் அரசியல் சட்டத்தில் விளம்பரஞ்செய்யப்பட்டிருந்தவாறு சுதந்தரக் கொள்கைகளுக்கு மாறுபடாதிருந்தது. ஆனால், ஐரோப்பாவினுடைய நடுப்பகுதி கிழக்குத் தெற்குப் பகுதிகளில் அதிகாரம் நிறைந்த அரசைக் குறித்துப் பொது நோக்கம் மிக்க வலிமையுள்ளதாயிருந்தது.

சருவாதிகாரிகள் எண்ணற்றவர்களாயிருந்தார்கள். பேச்சுச் சுதந்தரமும் ஒன்றுசேரும் சுதந்தரமும் கடுமையாகக் குறைக்கப்பட்டன. போருக்கு முன் 'மக்களாட்சி' என்னும் சொல் எப்பொருள் கொண்டதாகப் பழக்கத்திலிருந்ததோ, அது 1914க்கு முன்பிருந்ததைக் காட்டிலும் பெரும்பகுதிகளில் மிகவும் குறைந்த பொதுமக்கள் விருப்பமுள்ளதாயிருந்தது.

## நாட்டுப்பற்று

சருவதேசக் கொள்கையை எல்லா நாடுகளும் பொதுவாக ஏற்றுக் கொள்ளும் என்பது எதிர்பார்க்கப்பட்டது. அதனுடன், நாட்டு இளவரசாங்கங்கள், நாட்டுப்பற்றுடனும், தங்கள் இனத்தைப்பற்றிச் செருக்குடனுமிருந்த போதிலும், சருவதேச சங்கத்தின் கொள்கைகள், பொறி இயக்குதல் முதலியவைகளின் வழித்துணை கொண்டும், போர்த் துன்பங்களால் ஏற்பட்ட படிப்பினையைக் கொண்டும் ஓர் உலக ஒழுங்கிற்குத் தாங்களாகவே விருப்பத்துடன் கீழ்ப்படியும் என்பதும் எதிர்பார்க்கப்பட்டது. இவ்வெண்ணம் உலகிலிருந்து அடியோடு மறையவில்லை. சருவதேச சங்கம் பிழைத்துள்ளது; இன்னும் சிறந்த பணியாற்றி வருகிறது; ஆனால், போருக்கு முன் அறியப் படாததும், மிகக் கொடுமையானதும், தான் என்ற எண்ணம் மிகுதியாகக் கொண்டதுமான ஒரு மாதிரியான நாட்டுப்பற்றை எதிர்த்துச் சண்டையிட்டு வருகிறது. இஃது ஓரமயம் தவிர்க்க இயலாததாயிருக்கலாம். புதிய போர்களை நாட்டுணர்ச்சி, வெளிநாட்டாரின் மீது பகைமை முதலியவற்றுக்கு முறையீடு செய்யாமல் நடத்தவே முடியாது. மேலும், சமாதானத்தின் பயனாகப் பல புதிய நாடுகள் தோன்றியதுடன் மற்ற நாடுகளுக்கு நிலப்பகுதிகளை அதிகமாகச் சேர்த்தலுமாயிற்று. இவை, நாட்டுச் செருக்கையும் தன்னம்பிக்கையையும் வெளிக்காட்டியதுடன், விடுதலைக்காக நிகழ்ந்த போர்களின் பயனாய் அமைந்திருந்தன. இத்தாலி, துருக்கி, ரஷ்யா, போலந்து என்னும் நாடுகளிலிருந்து நாட்டுச்செருக்கின் குரல் பேரிரைச்சலுடனும் தெளிவாகவும் ஒலித்தது. ஒப்பிட்டுப்பார்த்தால், பன்னாட்டொற்றுமையுணர்ச்சி, சருவதேச சங்கம் முதலியவைகளை ஆதரித்துப் பேசுகிறவர்கள் குரல் பணிவாகவும், வருத்தத்தைத் தெரிவிக்கும் உரையாகவும் ஒலித்தது.

## பன்னாட்டு ஒற்றுமையுணர்ச்சி

ஆயினும், பன்னாட்டொற்றுமையுணர்ச்சி உலக ஐக்கியம் போன்ற உரிமைகள் ஓரளவு அன்பற்ற முறையில் ஏற்றுக்கொள்ளப்பட்ட போதிலும், கழிந்து போன ஒவ்வோர் ஆண்டும், இவ்வுரிமைகளை உண்மையிலேயே அவசரமானதும் தடுக்க முடியாததுமாகச் செய்தது.

நாடுகள் தங்களுக்கும் அண்டை நாடுகட்கும் இடையே மிகவுயரமான எல்லைக் கோடுகளை எழுப்பின ; சுங்கவரிகளை அதிகப்படுத்தின ; பல நாடுகளுள் போக்குவரத்தைக் கடினமாகச் செய்தன. போருக்கு முன், நாடுகளுக்குள் பொதுவான நாணயம் அஞ்சல் வசதி முதலியவைகளை ஏற்படுத்துவதற்காக மேற்கொள்ளப்பட்ட வேலை, சில நாடுகளுக்கிடையே கைவிடப்பட்டது. ஆனால், முதலாவதாக, 1918க்குப் பின் போக்குவரவு சாதனங்கள் மிகப்பெரிய அளவிற்கு முன்னேறியிருந்தன. ஐரோப்பாவிலிருந்து வானூர்தி செலுத்துபவர்கள், அமெரிக்காவிற்கும், ஆஸ்திரிரேலியாவிற்கும், தூரக்கிழக்குப் பகுதிகட்கும் பறந்து சென்றார்கள். இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்பு இச்செயல்கள் அருஞ்செயல்களாய்த் தோன்றியிருக்கும். 16ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் நாடுகள் இணைந்திருந்ததைவிட அதிக நெருக்கமாக உலகத்தின் எல்லாப் பாகங்களும் ஒன்றாக இணைக்கப்பட்டிருந்தன. கம்பியில்லாத் தொலைபேசி வாயிலாக ஒரே குரலை மனித இனத்தையே கேட்கும்படி செய்துள்ளது. அடுத்தாற்போலப் பொருளாதாரத்தில் நாடுகள் ஒன்றையொன்று சார்ந்திருப்பதும் நிலையாகவும் தெளிவாகத் தெரிகிறதாகவும் வளர்ச்சியுற்றது. போருக்குப் பின் விரைவிலேயே ஜெர்மனியின் ஏழ்மைத்தனம், உலகத்தின் மற்றெல்லா நாடுகட்கும் இலாபமாக இல்லையென்பதையும் பெரிய இழப்பாயிருந்ததென்பதையும் கண்டோம். மற்ற நாட்டு வங்கிகள் தொல்லைகட்குள்ளாகியபொழுது, ஒருநாட்டின் வங்கிகள் அவற்றுக்கு விருப்புடன் துணைபுரிவதையும் கண்டோம். எந்நாட்டிற்கும் பொருளாதாரத்தின் தனித்தன்மை இயலாதது என்பது சமாதானத்திற்குப்பின் நிகழ்ந்தவைகளால் முழுமையாக உறுதியாக்கப்பட்டது. பொருளாதாரத்தில் தனித்தன்மை பற்றிப் 'பெரிய பொய்த் தோற்றம்' என்ற நூலில் போருக்கு முன்னதாகவே திரு. நார்மன் ஏஞ்சல் என்பார் வலிமையாகப் போதித்துள்ளார். ஆயினும், அது போரினால் தாற்காலிகமாகத் தெளிவற்றதாயிருந்தது. மேலும், இறுதியாகப் பரிசீலனை செய்யச்செய்ய, பன்னாட்டொற்றுமைஉணர்ச்சி பற்றி அறிவுசார்ந்த உரிமைகள் மிகவும் வலுவுள்ளனவாய் வளர்வனவாயிருந்தன. தேச மக்களின் ஒற்றுமையென்பது, பெரும்பாலும் ஒரு பொய்த்தோற்றமாகும். என்றாலும், இக்கருத்து அடிக்கடி உயர்ந்ததாயும், பயனளிப்பதாயும் இருந்திருக்கிறது. மனிதவினத்தின் ஐக்கியம் என்பது உண்மையானதுடன், நிலையாகத் தெளிவாக வளர்ந்து வருகிறது. எந்த நாட்டினுடைய அல்லது மக்களுடைய நல்வாழ்வும் முன்னேற்றமும் எல்லாநாட்டு மக்களுடையவும் ; எல்லா நாடுகளுடையவும் ஆன பணியாய் இருக்கின்றன. உலகின் ஒரு பகுதி துன்புற்றால், அதனுடன் மற்றப் பகுதிகளும் ஓரளவு துன்பப்பட்டுத்தான் ஆகவேண்டும். இஃது ஒரு பிரசாரமோ, மெய்ப்பாடோ ஆகாது ; வரலாற்றின் தெளிவான பாடபோதனையாகும்.

## ஐரோப்பாவின் பெரிய அரசுகள்

**கிரேட் பிரிட்டன்**

போரில் தான்கொண்ட பெரும்பங்கைப் பற்றி விழிப்புணர்ச்சியுடனும் தன் போர் வீரர்களும், மாலுமிகளும், அரசியல் வல்லுநர்களும் ஆற்றிய பணிகளால் ஏற்பட்ட நேர்மையான செருக்குடனும் கிரேட் பிரிட்டன் வெளிப்பட்டது. ஆனுல், இம்மனநிலை விரைவில் அது பெற்ற மிகக் கடுமையான இழப்புக்களாலுண்டான உணர்வால் நீக்கப்பட்டது. பேரரசு ஒரு மில்லியன் மக்களை இழந்தது. போரில் காயமுற்றவர், தீங்குற்றவர் எண்ணிக்கை மேலும் அதிகமாயிருந்தது. குறுகிய காலத்தில் மிதப்புணர்ச்சிக்குப்பின், நாட்டின் பொருளாதார நிலை அச்சுறுத்துவதாயிற்று. ஐரோப்பியப் போர்க்களங்களிலிருந்து நாடு திரும்பிய போர் வீரர்கட்கு வேலையில்லாதிருந்ததுடன், ஓரமயம் பட்டினிகிடக்கவும் அவர்களை விடுவதற்கில்லை. போரில் ஊழியம் புரிந்தோருக்கு அளிக்கப்பட வேண்டிய ஓய்வுச் சம்பளத்தின் சுமை நாட்டை மிகஅழுக்கியது. வேலை தேடவியலாத நிலையிலுள்ளவர்கட்கு நிவாரணம் அளிக்க ஒருமுறை ஏற்படுத்தப்பட்டது. இதனுல், நாட்டின் துயரம் பெரிதளவு நீங்கியது; ஆனுல், நாட்டின் செல்வ நிலையில் பெரியதும், வளர்ந்துகொண்டிருந்துமான சுமை உண்டாகியது. புதுப்புனைவுச் செயல்களின் முன்னேற்றம் அதிகமான ஆடவரையும் பெண்டிரையும் வேலையை இழக்கச்செய்தது. வெளி நாட்டு வாணிகம் தேக்கமுற்றது. புதிய நிலைக்கு நாட்டின் வாழ்க்கையைப் பொருந்த வைப்பது துன்பம் விளைவிப்பதாயும் நீடித்ததாயும் இருந்தது.

## பொது வேலை நிறுத்தம்

போருக்குப்பின் முதற் பத்தாண்டுகளில் பல வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டன. 1926-ல் நிகழ்ந்த பொதுவேலை நிறுத்தங்கள் நாடறிந்த தீய பெயர் பெற்றனவாயிருந்தன. அவ்வாண்டில் தொழிலியக்கம் தன் நிறுவனங்கள் வாயிலாகத் தன் வேலைகளைத் தொடர்ந்து செய்ய மறுத்ததுடன், நாட்டின் தொழில் சார்ந்த வாழ்க்கையும், முழுமையாகச் சீர்குலைந்துவிடும்போல அச்சத்தை உண்டுபண்ணியது. ஆனுல், அதிக அளவு எதிர்பார்க்கப்பட்டதும், அச்சத்தைத் தோற்றுவிப்பதுமான நடவடிக்கை கைவிடப்பட்டது. திறமையுடனும் குறிப்பிடத்தக்க விரைவுடனும் எதிர்ப்பு அமைக்கப்பட்டதுடன் சமரசத்திற்கான பேச்சுவார்த்தைகளும் தொடர்ந்து நடைபெற்றன. பத்து நாள்களுக்குப்பின் பொது வேலை நிறுத்தம் செய்யப்பட்டது. மீண்டும் வேலை செய்வது தொடங்கியது. ஆனுல், நிலக்கரித் தொழில் பற்றிய வேலை நிறுத்தம், நீடித்ததாயும், பேரிடர்களை விளைவிப்பதாயும்

இருந்ததுடன், இங்கிலாந்தின் வடபகுதியில் தொழில் சார்ந்த வாழ்க்கையின்மீது நிலையான கெடுதல்களையும் உண்டு பண்ணியது. அது முடிவுற்றபின் இங்கிலாந்தின் தொழில் சார்ந்த வாழ்க்கை மிகச் செழிப்பற்றதாயிருந்த போதிலும், மிக மென்மையாய் நடந்தது. 1931–ல் உலகம், முதலில் கருவூலத் தலைவரான திரு. பிலிப்பு ஸ்னோடென் என்பாரின் அறிவிப்பால் எச்சரிக்கை செய்யப்படும்வரை நிலைமை ஒருவாறு தொடர்ந்து காணப்பட்டது. நாட்டின் வருவாயை விஞ்சியதாகச் செலவு மிக அதிகமாயிருக்கிறதென்றும், சீர்திருத்தங்களும் சிக்கன முறைகளும் மிகத் தேவையென்றும் அவர் அறிவித்ததுடன், மேலும் அதிக பரபரப்பையூட்டும் செய்தியையும் வெளியிட்டார்.

அஃதாவது, இங்கிலாந்தின் நிதி பற்றிய நிலைமையில் வெளிநாட்டினர் நம்பிக்கையற்றவர்களா யிருந்ததைக்கொண்டு, தேவையான அளவு பொன் இங்கிலாந்தின் செலாவணியிலிருந்து எடுக்கப்பட்டதால், பொன் செலுத்தப்படவேண்டியவைகள், தாற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட்டன என்பதாம். ஒரு குறுகிய கால அளவிற்கு இங்கிலாந்து பொன் நாணயத் திட்டத்தைக் கைவிட நேர்ந்தது. இந்நடவடிக்கைகள் அரசியல் உலகில் மிக முக்கியமான பயன்களைக் கொண்டிருந்தன. ஏனென்றால், 1931–ல் நடந்த பொதுத்தேர்தலில் தொழிலாளர் கட்சி வீழ்ச்சியுற்றதுடன் மக்கள் சபையில் அக்கட்சி முழுமையாக அழிவுற்றதும் ஆகும்.

## பாராளுமன்றம்

மிகக் கடுமையான தொழிற்றொல்லைகள் ஏற்பட்டபோதிலும் இங்கிலாந்தில் எவ்விதப் புரட்சித்தன்மையும் இக்காலத்தில் தலையெடுக்கவில்லை. நாடு பழையபடி பாராளுமன்ற முறைக்குத் திரும்பியது. போரின்போது ஆட்சிபுரிந்த கூட்டு அமைச்சரவை 1922-ல் வீழ்ச்சியுற்றது. பழைமையை விரும்பும் கட்சி முதலில் திரு. போனர்லா தலைமையிலும், பின்னர் பால்ட்வின் தலைமையிலும் தொடர்ந்து ஏற்பட்டது. தொழிற்கட்சி இரு முறை—1923-லும் 1929 லும்—பதவியிலிருந்தது. எனினும், மக்கள்சபையில் அது வலியப் பெரும்பான்மையான ஆதரவு பெறுதிருந்ததால்; அக்கட்சி ஆட்சி புரிந்தது என்று கூறவியலாது. இரு முறைகளிலும் திரு. ராம்ஸே மாக்டனல்டு பிரதமராயிருந்தார். இச்சூழ்நிலையில் புரட்சிகரமான நடவடிக்கைகள் எடுப்பது இயலாததாயிற்று. ஆனல், அவைகளைத் தொழிற்கட்சி விரும்பிற்று என்பதற்கான அடையாளமும் காணப்படவில்லை. இங்கிலாந்தின் வரலாற்றில் சோஷலிஸ்டு என்ற பெயரைக் கொண்டிருந்த ஒரு கட்சி பதவியிலிருந்தபோது நாட்டின் நிறுவனங்

களின் நிலையான தன்மையைக் குறித்து ஏற்பட்ட கருத்திற்கு ஆக்க மளித்தது. 1931-ல் பொருளாதாரப் பேரிடரால் நாடு அச்சுறுத்தப் பட்ட பொழுது, தொழிற்கட்சியின் தலைவர்களான திரு. ராம்ஸே மாக்டனுல்டும், திரு. பிலிப்பு ஸ்னேடனும் கன்சர்வேட்டிவ் கட்சி, லிபரல் கட்சி(தாராளப் போக்குடையவர்)களுடன் நாட்டின் நிலைமை யால் ஏற்பட்ட கெட்ட பயன்களைத் தவிர்க்கும் முயற்சியில் கூட்டுச் சேர்ந்தனர்.

## அயர்லாந்து

புரட்சியெனச் சொல்லப்படும் ஒரு மாறுதல் வந்தது. அயர்லாந்து பிரச்சினை ஒரு நிலையை எய்தியது. இது நிலையான திட்டம் ஆகக் கூடும். 1914 - ல் போரின் தொடக்கத்தில் அயர்லாந்திற்குத் தன்னுட்சி வழங்குவதற்கான மசோதா நிறைவேற்றப்பட்டிருந்தது; ஆனுல், போர் நடக்கும் காலம்வரை தள்ளி வைக்கப்பட்டிருந்தது. அயர்லாந்து முதலில் போரில் நேச நாடுகட்கு ஆர்வம் நிறைந்த உதவியையளிப்பதுபோலத் தோன்றியது. ஆனுல், விரைவிலேயே இணக்க மறுப்புக்கள் தோன்றியதன் பயனுக, வலுவான தேசியப் பற்றுக்கொண்ட கட்சி வெளிப்பட்டது. இக்கட்சி பார்னல் என் பாருடையவும் பழைய தேசியவாதிகளுடையவும் பேரவாக்களையும் விஞ்சியதாயிருந்ததுடன் அயர்லாந்திற்கு முழுச்சுதந்தரத்தையும் கோரியது. இக்கட்சி ஸீன்ஃபின் என்று வழங்கப்பட்டது. (கெய்லிக் மொழியில் 'நாங்கள் எங்களுக்காக' என்று பொருள்படும்.) இதன் தலைவர்களில் டி வாலிரா ஒருவராவார்.

இக்கட்சி, இங்கிலாந்தின் பாராளுமன்றத்திலிருந்து அயர் லாந்தின் உறுப்பினர்களை மீண்டும் அழைத்தது; அயர்லாந்தில் சொந்தமான அரசாங்கத்தையே ஏற்படுத்தியது. போருக்குப்பின், நாடு ஒழுங்கற்ற நிலையிலிருந்தது. உள்நாட்டுக் கலகமும் தோன்றியது. பிரிட்டிஷ் அரசாங்க அதிகாரம் ஆயுதப்படையைக் கொண்டு தென்பகுதியில் நிலைநிறுத்தப்பட்டது. பழைய முறையை மீட்பது என்பது எப்படியாவது இயலுமானுல், நீண்ட பொருட்செலவு கொண்டதான போரினுற்றுன். இயலும். இதைப் பின்பற்றும் நிலையில் நாடு இல்லை. 1919-ல் ஆங்கிலேயப் பாராளுமன்றம் அயர்லாந்தை இருபிரிவுகளாக ஆக்கவேண்டும் எனவும், ஒவ் வொன்றிற்கும் தனித்தனியான அரசு இருக்கவேண்டுமென்றும் மசோதா கூறியது. இத்தகைய ஏற்பாட்டைத் தென்பகுதி தள்ளி வைத்தது. ஆனுல், இது ஸீன்ஃபின் கட்சியுடன் தீர்வுகாண வழி செய்தது. இறுதியாக, 1921-ல் இவ்வேற்பாடு முடிவு செய்யப் பட்டது. அயர்லாந்து 'டொமினியன் அந்தஸ்து' பெறவேண்டு

மென்றும், பெரிய டொமினியன்களைப்போன்று சுதந்தரமாயும், தன்னாட்சி புரிவதாயுமிருக்க வேண்டுமென்றும் பிரிட்டிஷ் பேரரசின் கீழ் நிலைத்திருக்க வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. அல்ஸ்டர் மாகாணம் மாத்திரம் தனிப்பட்ட முறையில் நடத்தப்படுவதற்கான உரிமை இசைவளிக்கப்படவேண்டுமென்றும், அவ்வுரிமையின்படி அதற்கெனச் சொந்தமான மன்றமே ஏற்படுமென்றும் முடிவு செய்யப் பட்டது. ஐரிஷ் மக்கள்முன் இம்முடிவுகள் வைக்கப்பட்டன. தென் பகுதியில் மிகக் குறுகிய பெரும்பான்மை வாக்குக்களால் இது (1922) ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவ் வேற்பாட்டிற்கு வெளியில் தனித் திருக்கும் உரிமையை அல்ஸ்டர் கொண்டாடியது. அதற்கான தனிப் பாராளுமன்றம் இருப்பதுடன் ஆங்கிலேயப் பாராளுமன்றத்திற்கும் பிரதிநிதிகளை அனுப்புகிறது. இவ்வேற்பாட்டிற்கு எதிராக வலிமை பொருந்திய எதிர்ப்பு, குடியரசு சுயேச்சைக் கட்சியிடமிருந்து வந்ததுடன், குழப்பமும் உள்நாட்டுக் கலகமும் இருந்து வந்தன. ஆனால், இவ்வேற்பாடு நிலைபெற்றுவிட்டது.

## பிரான்சு

பிரான்சில் நிகழ்ந்தவைகள், வேறு சில நாடுகளில் நிகழ்ந்ததைப் போன்று மக்கள் கவனத்தை அவ்வளவாக ஈர்க்கவில்லை. ஆயினும், பெரும்போரிலிருந்து பிரான்சின் வரலாறு நெருங்கிய கவனத்தைப் பெறத் தகுதியாயுள்ளது. நேச நாடுகளில் ரஷ்யாவைத் தவிர வேறெந்நாடும் பிரான்சைப் போன்று அவ்வளவு கடுமையான துன்பத்தைக் காணவில்லை. போர் நடந்த நான்காண்டு காலத்தில் அந்நாட்டின் மிகப் பெரியதும் முக்கியமானதுமான பகுதி பகைவரிடம் சிக்குண்டிருந்தது; அப்பகுதியிலிருந்த நகரங்கள் அழிக்கப்பட்டன; தொழிற்சாலைகள் பாழடைந்தன. நாட்டுமக்களின் உயிர், செல்வம் ஆகியவைகளின் இழப்புக் கணக்கிலடங்காது. அந்நாட்டு அரசியல் சமூக நிறுவனங்களால் போரினாலேற்பட்ட சுமையைத் தாங்கவியலா தெனவும் அதனுடன் புரட்சி இயக்கங்கள் அல்லது தீவிரமான மாறுதல்கள், சமாதானத்துடன் தோன்றலாம் எனவும் சிலர் கருதினர். ஆனால், இம்மாதிரி ஏதும் நடைபெறவில்லை. ஐரோப் பாவில், ஒரு நூற்றாண்டு காலமாகப் புரட்சி மாறுதற்கு நடுநாயகமா யிருந்த பிரான்சு அரை நூற்றாண்டு காலமாகப் பழமையை விரும் பியதில் மிக்க புகழுடன் முனைந்திருந்தது. எல்லாத் திறனாய்வுகட்கும் எதிர்மாறாக அந்நாட்டின் பாராளுமன்ற முறை எவ்வித மாறுதலு மின்றியிருந்தது. பிரான்சின் மகளிர் பாராளுமன்றத் தேர்தலில் வாக்களிப்பின்றியிருந்தனர். மற்ற நாடுகளிற் காணப்பட்டதைப் போல, சருவாதிகாரத்தை நோக்கிச் செல்ல அந்நாடு விருப்பமும் கொண்ட தாகத் தோன்றவில்லை. போரில் மிகச்சிறந்து விளங்கிய போர்த்

தலைவரான ஃபோச்சு அந்நாட்டைச் சேர்ந்தவர். ஐரோப்பாவின் தலைசிறந்த அரசியல் வல்லுநர்களில் கிளீமான்சு, பாயின் கரே, பிரயண்டு என்பவர் முக்கியமானவராயிருந்தனர். ஆனால், ரிச்சிலூ, மசாரினு, நெப்போலியன் என்பவரைப் போன்று இயங்க வேறு எவரும் தலையெடுக்கவில்லை. நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களிலும், விருப்பத்திலும், மக்களாட்சிமுறை வன்மையுடன் வேரூன்றியிருந்ததாகத் தோன்றியது; புரட்சிக்காலம் முற்றுப்பெற்றதாகத் தோன்றியது.

17ஆம், 18ஆம் நூற்றுண்டுகளிலிருந்ததைப் போன்று பிரான்சு உறுதியையும் மாற்றத்தில் வெறுப்பையும் கொண்டிருந்ததற்கு அறிகுறியாயிருந்தது. அவ்வாறிருந்தும் அந்நாடு கடுந்துன்பங்கட்கு ஆளாகியிருந்தது. நாட்டின் பொருளாதாரச் சோர்வு ஃபிராங்கின் மதிப்புக் குறைந்ததில் (பிரதிபலித்தது) உருநிழல் காட்டியது. 1924ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதத்தில் ஆங்கில நாட்டுப் பவுன் எழுபது ஃபிராங்குகட்குச் சமமாயிருந்தது. 1926ஆம் ஆண்டு ஜூலையில் இருநூற்று முப்பத்தைந்து ஃபிராங்குகட்குச் சமமாயிருந்தது. ஜெர்மனியில் நிகழ்ந்தவாறு பொருளாதார வீழ்ச்சியை மக்கள் முன்கூட்டிக் கூறினர்கள். ஆனால், அப்பேரிடர் தவிர்க்கப்பட்டது; ஃபிராங்கின் மதிப்பு நிலைபெற்றது. மேலும், கிரேட் பிரிட்டனிலும் மற்ற இடங்களிலும் சிறப்பாகக் காணப்பட்டது போலப் பிரான்சில் வேலையில்லாத் திண்டாட்டம் எனும் தொற்றுநோயால் மக்கள் துன்புறவில்லை.

## பிரான்சும் வெளிநாட்டு விவகாரங்களும்

சருவதேச அலுவல்களில் மற்ற நாடுகளைவிடப் பிரான்சு உயர்ந்த இடம் பெற்றிருந்தது. அதன் கொள்கை எப்பொழுதும் இங்கிலாந்தின் மக்கள் மதிப்பைப் பெற்றிருக்கவில்லை. அது புரட்சிசெய்த ரஷ்யாவிற்கு எதிராகப் போலந்திற்கு அன்பு நிறைந்த ஆதரவை அளித்தது; கிரீசை எதிர்த்துப் போராடிய துருக்கிக்கு உதவி புரிந்தது; இப்பொழுது ஆப்பிரிக்காவில் மிகப்பெரிய குடியேற்ற நாடுகளின் பேரரசைப் பெற்றிருந்தது; இது வருங்காலத்தில் நல்லது நிகழக் கூடியதாய் இருந்தது எனினும் நிலைமை இடருடன் காணப் பெற்றது. பிரான்சைவிட ஜெர்மனி பெரிய நாடாயிருந்தது. ஆல்ப்ஸ் மலைகளுக்குத் தெற்கில் புதிதாக உருவான இத்தாலி ஒற்றுமையுடனும், பேரவாவுடனும் இருந்ததுடன், திடீர்த்தாக்குதலுக்கும் தயாராயிருந்தது. ரிச்சிலூ, மசாரின் முதலியவர்கள் மதித்துவந்த ஜெர்மனி, இத்தாலி நாடுகளின் அரசியற்குழப்பம் அடியோடுமறைந்தது.

## இத்தாலி

போரிலிருந்து கழிந்த பத்தாண்டுக் காலத்தில் இத்தாலியின் வரலாறு, பிரான்சுடன் ஒப்பிடும்பொழுது, பெரும் வேறுபாடுகளைக் கொண்டதாயிருந்தது. போரின் பயனாக இத்தாலிக்கு ஆட்சி சார்ந்த நிலப்பகுதிகள் விரிவடைந்ததோடு அன்றி அரசியல் சமூக வாழ்க்கை முதலியவைகளில் ஒரு புதிய (சகாத்தத்தை) காலத்தையும் தொடங்கி வைத்தது. இத்தொடக்கம், கடுமையான திறனாய்வைத் தூண்டியும், கிரேட் பிரிட்டன், ஐக்கிய நாடுகள், பிரான்சு முதலியவைகளில் அரசியற்சட்டங்கட்கு ஆக்கமளித்த மிகச் சிறந்தகருத்துகட்கும் நேரிடையாக முரண்பாடுடையதாயிருந்தும், வருங்காலத்தில் அரசியற்கோட்பாட்டியல், நடைமுறை முதலியவைகளிற் சிறந்த செல்வாக்குப் பெறும் என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

## ஃபியூம்

வேர்செயில்ஸ் உடன்படிக்கைக்கு முன்னதாக நிகழ்ந்த நடவடிக்கைகளில், நேர்மையின்றித் தாங்கள் நடத்தப்பட்டதாக இத்தாலியர்கள் நம்பினார்கள். இத்தாலியின் உரிமைகளுச்கு எதிராக ஜுகோஸ்லேவியா (செர்பியா) கிரீசு முதலிய நாடுகளின் உரிமைகட்கு ஆதரவாயிருந்ததாக ஜனாதிபதி வில்ஸனை ரோம் நகரில் கடுமையாகப் பழித்துக் கூறினர். நாட்டுச் செருக்கு, பேரவா முதலியவற்றுடன், இத்தாலியின் ஆட்சிப் பகுதிகள் மேற்கொண்டு விரிவடைவதைத் தடுத்த அரசுகளின்மீது ஏற்பட்ட சினமும் இணைந்ததாய் நாட்டின் மனநிலையிருந்தது. ஃபியூம் மீது இத்தாலி உரிமை பாராட்டியது. ஃபியூம் ஆட்ரியாட்டிக்குக் கடலின் கிழக்கில் அமைந்திருந்தது; வரலாற்றின்படியும் பொருளாதாரத் தேவையின்படியும் இத்தாலிக்குச் சொந்தமானதென்றும் உரிமை பாராட்டப்பட்டது. கவிஞர் டி அன்னன்ஸியோ தலைமையில் ஓர் இத்தாலியப்படையால் கைப்பற்றப்பட்டது. இறுதியில், அக்கவிஞரால் காலி செய்யும்படி நேர்ந்தது. எனினும், இந்நகரத்திற்கும் இதையடுத்திருந்த பகுதிகளின்மீதும் இறுதியாக இத்தாலியர் உரிமை பாராட்டலாயினர்.

## ஃபாசிஸம்

மிகக் கடுமையான சமூக, பொருளாதாரத் தொல்லைகள் நாட்டை வருத்தின. ரஷ்யாவின் மாதிரியைக் கொண்டு, சமூகப் புரட்சியை முன்னறிவிப்பதாகக் கொடிய வேலைநிறுத்தங்கள் ஏற்பட்டன. நாட்டின் சில பகுதிகள் அரசியற்குழப்பத்திற்கு இரையாயின. 1920-ல் 'ஃபாசிஸ்டுகள்' என்ற குழுக்களைப்பற்றி மக்கள் பேசலானார்கள். இவை புரட்சிக்காரர்களை எதிர்ப்பதற்காக அமைக்கப்

பட்டன. ஃபாசஸ் அல்லது ரோமன் கான்சலுக்குமுன் எடுத்துச் செல்லும் நீண்ட குச்சிகளின் கட்டு என்று குறிப்பிடும் சொல்லி லிருந்து இப்பெயர் கொள்ளப்பட்டது. எனவே, இச்சொல் குறிப்பாக ஒற்றுமையை உணர்த்தியது. தவிர, பண்டைய ரோமின் மரபுகள், எடுத்துக்காட்டு முதலியவற்றுக்கு முறையிடுதல் ஃபாசிஸ்டு இயக் கத்தின் சிறப்பியல்பாகும். நாடு முழுவதிலும் உள்நாட்டுப் போருக் கான விதைகள் விதைக்கப்பட்டன. அப்பொழுது பல்வேறு பாசிஸ்டு குழுக்கள் ஒன்றுசேர்ந்து மிகச் சிறப்புற்றிருந்த பெனிட்டோ முசோலினியின் தலைமையின் கீழ் ஒரு பொது நிறுவனம் ஆயிற்று. முசோலினி, முதலில் சோஷலிஸ்டு கொள்கைகளில் தீவிரப்பற்றுடைய வராயும், கார்ல் மார்க்ஸ் என்பாரின் சீடராயுமிருந்தார். கார்ல் மார்க்ஸ், ஜெர்மன் நாட்டுப் பொருளாதார நிபுணர். இவரது இலக்கியப்படைப்புகளிலிருந்து ரஷ்யாவினுடைய போல்ஷ்விக்குக் கொள்கைகள் தோன்றின. புரட்சியில் கம்யூனிஸ்டுகளின் முயற்சிகளை எதிர்த்து, ஒழுங்கை ஏற்படுத்துவதில் வெற்றிவீரராய் இருப்பார் என்பது முற்றிலும் பொருத்தமற்றதாகத் தோன்றியது. ஆனால், அவருடைய எதிர்காலத் தோற்றத்தில் போர் மிகப்பெரிய விளைவை யுண்டு பண்ணியது. அவர் போரில் நன்கு பணியாற்றி இத்தாலியின் பெருமைபற்றிய கருத்து நிறைந்தவராய் வெளிவந்தார்; வருங் காலத்தில் இத்தாலிக்கு வாய்க்கவிருக்கும் பங்கையும் மனத்திற் கொண்டிருந்தார்; பேருறுதியும் சொல் வன்மையும் தன்னம்பிக்கையும் நிறுவுவதிற் பேராற்றலும் பெற்றிருந்தார்.

## ரோமுக்கு அணிவகுத்துச் செல்லுதல்

1921 அக்டோபர் மாதத்தில் நேப்பிள்ஸ் நகரில் ஃபாசிஸ்டுகளின் மாநாடு கூடியது. ஆட்சியின் ஆதிக்கத்தை உறுதியாகக் கைப்பற்று வதற்காக ரோம் நகருக்கு அணிவகுத்துச் செல்வது என்பது முடிவு செய்யப்பட்டது. படையும் ஃபாசிஸ்டுகளுக்கு ஆதரவாயிருந்தது; மன்னரும் இவர்களை எதிர்க்கவில்லை. ரோம் அடிபணிந்தது. அது முதல், இத்தாலி அரசாங்கம் ஃபாசிஸ்டு கட்சியிடம் இருக்கலாயிற்று. அக்கட்சியின் கொள்கைகளை ஏற்றுக்கொண்டவர்கள் மட்டும் அதிற் சேர்க்கப்பட்டார்கள். அவர்கள் இத்தாலியின் பொது வாழ்வில் எந்தப் பதவியையும் பெறலாம் என்பதும் ஏற்பட்டது.

## ஃபாசிஸத்தின் இயல்புகள்

இத்தாலியின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகள் முசோ லினியின்கீழ் வலிமைவாய்ந்த ஒரு புத்துணர்ச்சியைப் பெற்றன. ஃபாசிஸ்டு ஆட்சியின்கீழ்ச் சிறப்பு வாய்ந்த தன்மைகளைக் கவனிப்பது நலமாகும்.

முதலாவதாக, அவ்வியக்கம் நாட்டுணர்ச்சியில் தலைசிறந்து விளங்கியது. அரை நூற்றாண்டிற்கு மேலாகவே இத்தாலி ஓர் ஐக்கிய நாடாயிருந்து வந்தது. கரிபால்டி, கவூர், விக்டர் இம்மானுவேல் என்பவர்களின் வீரச்செயல்களினால் இத்தாலி மிகச் செருக்குற்றிருந்தது. ஆனால், இப்போது தேசியச் செருக்கும் தன்னுணர்ச்சியும் இதற்கு முன் காணப்படாதவாறு எரியும் தீப்போல மேலோங்கின. மனிதவினத்தைக் கட்டுப்படுத்தவோ, அன்றி அதற்கு வழிகாட்டியாயிருக்கவோ, சிறப்புரிமை கொண்டிருந்ததாகக் கற்பனை செய்து கொண்டு, பல நாடுகள் அந்நிலையில் சென்று கொண்டிருந்தன. ஆனால், இங்கிலாந்தோ, பிரான்சோ, ஜெர்மனியோ, ரஷ்யாவோ அவ்வாறில்லை. ஃபாசிஸத்தின் வெற்றிக்குப் பின்வந்த ஆண்டுகளில் மற்ற நாடுகளின்மீது தங்களுக்கிருந்த மேலான உணர்ச்சியை இத்தாலியைப்போன்று அவ்வளவு வெளிப்படையாக எடுத்துரைக்கவில்லை. பன்னாட்டு ஒற்றுமை உணர்ச்சியின் உரிமைகள் புறக்கணிக்கப்பட்டன. சருவதேச சங்கம் பயனற்றதாக எண்ணப்பட்டது. விடுதலையடைவதற்கு நீதி, சிந்தனை முதலியவைகளை விடுத்து, ஆயுதவலிமையை இத்தாலி நோக்கியது. பிற்காலத்தில் நல்லெண்ணம் தோன்றியது. ஆனால், ஃபாசிஸ்டு ஆட்சியின்கீழ் இத்தாலி வலிமை பொருந்தியதும் போர் முறையில் விருப்பமுள்ளதுமான நாட்டுணர்ச்சியுடன் இருந்தது.

## ஃபாசிஸமும் பண்டைய ரோமும்

நாட்டு உணர்ச்சியில் அதிதீவிரமாயிருந்ததுடன், இத்தாலியர்களிடம் பொதுவாக இருந்ததைவிட இப்பொழுதும் நாட்டின் பழைமையைப்பற்றி உணர்ந்துகொள்ளுவதிற் காணப்பட்ட ஆர்வ மிகுதியும் சேர்ந்தது. நவீன இத்தாலியர்கள் தாந்தே முதல் பின் தொடர்ந்த நூற்றாண்டுகளில் தலைசிறந்து விளங்கிய எழுத்தாளர்கள், கலைஞர்கள் முதலானவர்களை நன்றியுடன் போற்றிய போதிலும், இனம், அரிய சாதனைகள் முதலியவைகளால் ரோமானியர்களும் தங்களைச் சேர்ந்தவர்கள் என்று கருதும் வழக்கம் அவர்களிடம் இல்லை. இடைக்காலத்தில் உருவான இத்தாலியை வாரிசுமுறையிற் பெற்றதாக ஃபாஸிஸ்டு இத்தாலி செருக்குற்றது. ஆனால், குடியரசு ஆட்சியையும் பேரரசு ஆட்சியையும் நடத்திய ரோமின் வீரச்செயல்களையும் வாரிசு முறையில் அடைந்ததாகவும் உரிமை பாராட்டியது. ரோமானிய மாதிரிகளிலிருந்து ஃபாசிஸ்டு பட்டப்பெயர்களும் சடங்குகளும் தழுவிக்கொள்ளப்பட்டன. ரோமப் பேரரசின்கீழ்ப் பரவியிருந்த நிலப்பகுதிகளைப் போற்றியது; சிலவேளைகளில் அவற்றின்மீது பொறாமை நிறைந்த பார்வையைச் செலுத்தியது.

## ஃபாசிஸமும் சுதந்தரமும்

சமூக அரசியல் நிலையங்களில், ஃபாசிஸ்டு இத்தாலி, குடியரசாயிருந்த ரோமைக்காட்டிலும், பேரரசாயிருந்த ரோமின் எடுத்துக் காட்டுக்களைப் பின்பற்றியது. முசோலினியிடமிருந்து 'கிரேக்க' சகோதரர்கள் சிறு மன்னிப்பைப் பெறலாம். ஆனால், அவருக்குச் சீசரின் மாற்றத்திற்கு இடமளிக்காத ஆட்சிமுறையில் மிகுந்த பரிவு இருந்தது. புதிய இயக்கத்தின் மையக் கொள்கை, ஃபாசிஸ்டு உயர்கருத்துக்களையும் ஃபாசிஸ்டு குழுவின் ஆட்சியையும் எல்லோரும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதாம். அரசாங்கத்தை எதிர்ப்பதையோ குறை கூறுவதையோ அனுமதிக்கக்கூடாது. ஃபாசிஸ்டு குழுவைச் சேர்ந்தவர்கள், அதன் போதனைகளை ஏற்றுக்கொண்டவர்களைத் தவிர, சட்டசபை மன்றத்தின் உறுப்பினர், ஆட்சித்துறையினர், ஆசிரியர், தொழிற்றலைவர் முதலியவராக வேறெவருக்கும் இடமில்லை. ஃபாசிஸத்தின் புதுமுறையைப் பள்ளிகளும், பல்கலைக்கழகங்களும், ஆசிரியர்களும் சேர்ந்து இசைத்ததுடன் செய்தித்தாள்களும் நன்கு பயிற்றுவிக்கப்பட்ட முறையில் கூட்டு இசையை ஒலித்தன. ஃபாஸிசத்தின் அரியசாதனைகள் மிகப்பெரியவைதாமா என்பதுபற்றி வினு வெழாது. ஆட்சி முறையிற் புதிய திறமை காணப்பட்டது. இத்தாலியின் தொழில் சார்ந்த வாழ்க்கையில் புதியசத்தி ஏற்பட்டது. வேலையின்மை என்பது அடியோடு அங்குக் காணப்படவில்லை. 'லீரா'வின் மதிப்புக் குறைந்தபோதிலும், ஃபிராங்கைப் போல மதிப்பு வீழ்ச்சியுறவில்லை. ஐரோப்பியச் சபைகளில் இத்தாலி பெரும்பங்கு கொண்டிருந்தது. இத்தாலியின் வெற்றிகள், மேற்கு நாடுகள், சுதந்தரத்திற்கும், அதன் தோற்றங்களான கருத்து, பேச்சு, செயல், ஒன்ருக இணைதல் போன்றவைகளுக்கும் அளவுகடந்த மதிப்பைக் கொண்டிருந்தவைகளா என்ற வினவை எழுப்புகிறது. பற்றுறுதி, கீழ்ப்படிதல், ஒற்றுமை முதலியவைகளுக்கு நாம் அதிக முக்கியம் கொடுக்கவில்லையென்பது எளிதில் தோன்றலாம். ஆனல், வரலாற்றின் போக்கு, சுதந்தரத்தைக் குறித்து வலுவுள்ள வாதமாகும்.

## ஃபாசிஸமும் போப்பின் ஆட்சியும்

வெளிநாட்டு விவகாரங்களில் இத்தாலியின் சாதனைகள் பிறகு எடுத்துக்கொள்ளப்படும். முசோலினியின் ஆட்சிமுறை உள்நாட்டில் ஒரு மாற்றத்தையுண்டுபண்ணியது என்பதை நாம் கவனியாமல் மேற்செல்ல முடியாது. இத்தாலியின் ஒற்றுமைக்காக ஏற்பட்ட இவ்வியக்கத்தின் தொடக்கத்திலிருந்து இத்தாலியச் சிற்றரசுகட்கும் ரோமன் சமயத் தலைவருக்குமிடையே இருந்த உறவுகள் கடினமாய் இருந்ததுடன் கடுமையான தொல்லைகளைத் தோற்றுவிப்பனவாயு,

மிருந்தன. இத்தாலியின் கூட்டாட்சிக்குத் தலைவராகப் போப்பாண்டவரைக் கொள்ளுவதென்ற பழைய கனவு பலிக்கவில்லை. ரோமின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த பகுதி, கவூர், கரிபால்டி இவர்களால் தடைமீறப்பட்டது. 1870-ல் ரோம் இத்தாலிய அரசின் தலைநகர் ஆன பொழுது போப்பாண்டவர்கள் இதற்கு இணங்க மறுத்தார்கள் ; வாடிகன் அரண்மனையில் தங்களைக் கைதிகளாகக் கருதினார்கள். தவிர, முடியாட்சியின் அதிகாரிகளின் கட்டுப்பாட்டின் கீழிருக்கும் நிலையை அளிக்கும் நகரத்திற்குட்செல்ல மறுத்தார்கள்; தங்களுக்கு அளிக்கப்பட்ட பெருவருவாயை ஏற்றுக்கொள்ளவும் மறுத்தார்கள். இவ்வாறு அரை நூற்றாண்டு கழிந்தது. தொடக்கத்திலிருந்து கடும் பகைமை ஓரளவு குறைந்தது எனினும், சமயப் பிணக்கு நாட்டில் தோற்றுவித்த பிளவு, சிலவேளைகளில் துன்பம் நிறைந்ததாகத் தோன்றியது. ஃபாசிஸ்டு அரசு, ஒற்றுமையையே எல்லாவற்றிற்கும் மேலானதாகக் கருதியது. போப்பாண்டவரின் அதிகாரத்தை அழிப்பது வாயிலாக ஒற்றுமையையே ஏற்படுத்துவது எதிர்பார்க்க முடியாதிருந்தது. சமரசம் காண்பது மீண்டும் சமரசம் சாற்றும் வழியில் முயற்சிசெய்ய வேண்டியதாயிற்று. முன்பு இவ்வழி முயற்சிசெய்யப்பட்டுப் பயன் ஏற்படவில்லை. திருச்சபைக்கும் அரசிற்கும் இடையே உறவை எளிதாக்கி உடன்பாடு காணுவது முசோலினிக்கு ஏற்பட்டது. இதன் பயனாக ஏற்படும் உடன்பாடு நிலைத்திருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. உடன்பாடு முக்கியமான குறிப்புக்களைக் கொண்ட ஒருடன்படிக்கையுடன் விவரங்களடங்கிய ஓர் ஒற்றுமை உடன்பாட்டையும் கொண்டிருந்தது.

## வாடிகன் உடன்படிக்கை

சமய நிலையப் பணிகளைச் செய்வதற்கு அரசியற்சுதந்தரம் தேவையெனப் போப்பாண்டவர்கள் எப்பொழுதுமே கூறி வந்தார்கள். இப்பொழுது, வாடிகனும், புனிதப் பீட்டரின் திருக்கோவிலைச் சுற்றியிருந்த மாவட்டமும் சுதந்தர நாடென்பது அறிவிக்கப்பட்டது. இப்பகுதியில் ஒரு சில நூற்றுக்கணக்கான மக்களே குடியிருந்தார்கள். ஆனால், இப்பகுதிக்கென நாணய முறையும் அஞ்சல் முறையும் தனியாயிருந்தன. இறைமைக்கான சடங்குகளும் தனிப்பட்டனவாயிருந்தன. மேலும், இத்தாலியிலிருந்த திருச்சபை தன்னாட்சியுடையதாய் இருக்க வேண்டும். சமயம் சார்ந்த பதவிகளில் மக்களை நியமிப்பதில் அரசாங்கம் எவ்விதக் குறுக்கீடும் செய்யக்கூடாது என்பதும் ஏற்பட்டது. இது பிரான்சில் ஏற்பட்ட உடன்பாடுகளிலும் சிறப்புக் கூறாய் இருந்தது. புதிதாகத் தோன்றிய போப்பாண்டவரின் அரசிற்கு மிகப்பெரிய பொருள் செலுத்தப்பட வேண்டுமென்பதும் ஏற்பட்டது.

இத்தாலியின் அரசிற்குப் பற்றுள்ளதாகத் திருச்சபை அறிவித்ததுடன் ரோம் நகரைத் தலைநகராகவும் ஏற்றுக்கொண்டது. குருமார்களிடத்திலும் மேற்றிராணியாரிடத்திலும் பற்று இல்லாதவர்களைத் தண்டிப்பதற்காகத் துணைக்கருவி ஏற்படுத்தப்பட்டது. நாட்டு மக்கள் எல்லோருக்கும் கல்வி புகட்டுவதில் அரசாங்கத்தின் உரிமை ஏற்றுக்கொள்ளப்பட்டபொழுது, சமய போதனை திருச்சபையிற்றான் நடைபெறவேண்டுமென்பது விதி ஆயிற்று. பேச்சு வார்த்தைகள் கடினமாயிருந்ததுடன் இருபக்கங்களிலும் தாக்கும் சொற்கள் பயன்படுத்தப்பட்டன. தொடக்கத்திலிருந்தே கல்வி போதிப்பது என்ற பிரச்சினை, துன்புறுத்தும் பிரச்சினையாயிருந்தது. அதனுடைய தொல்லைகள் நடைமுறையில் மறையவில்லை. ஆனால், உடன்படிக்கை நிலைத்தது. ரோமன் திருச்சபையைப் பின்பற்றியவர்களும், இத்தாலியில் சமயத்தை மதிக்கிறவர்களுள் பெரும்பான்மையோராய் இருந்தவர்களும் அவர்களுடைய சமயக் கீழ்ப்படிதற்கு வஞ்சனையின்றி அரசாங்கத்திடம் பற்றுடையவர்களாயிருக்கலாம்.

## ஜெர்மனி

போருக்குப்பின் பத்தாண்டுகளில் ஜெர்மனியின் வரலாறு, அதன் வரலாற்றிலேயே மிக்க வீரம் பொருந்திய அதிகாரங்களில் ஒன்றாகக் கருதப்பட வேண்டியதாகும். ஜெர்மனி மிகவும் களைப்புற்றிருந்ததுடன் ஏழ்மையும் தோல்வியும் பெற்றிருந்தது. கிழக்கிலும் மேற்கிலுமுள்ள மாநிலங்களும், எல்லாக் குடியேற்ற நாடுகளும் அதனிடமிருந்து பறிக்கப்பட்டன. ஜெர்மானியர்கள் உண்மையிலேயே பசியால் வாடினார்கள். ஜெர்மனியைப் பழித்துக் கூறுவதில் உலகம் முழுவதுமே ஒன்றுசேர்ந்தது போலத் தோன்றியது. ஒற்றுமை எண்ணம் மறைந்து அதனுடைய நிலையங்களும் குழப்பத்தில் ஆழ்ந்திருக்குமானால் மக்கள் அதைக் கண்டு வியப்புற மாட்டார்கள். ஆனால், இம்மாதிரி எதுவும் நிகழவில்லை. ஜீனாச்சண்டைக்குப் பிறகு எதிர் நோக்கியதைப் போல ஜெர்மனி தனது ஊழை நோக்கியது; மீண்டும் உலகத்தின் பெரிய பேரரசுகளுடன் சேர்ந்து ஐரோப்பிய அரசியலில் முக்கியமான பங்கைக் கொள்வதற்கு மீண்டும் முயன்றது.

## ஜெர்மன் புரட்சி

அரசாங்கத்தின் புறத்தோற்றங்களில் எல்லாம் முழுமையான புரட்சி ஏற்பட்டது. கெய்சர் நாட்டை விட்டு ஓடினார். அவருடன் ஜெர்மனியின் சிற்றரசர்களும், இளவரசர்களும் பதவியை இழந்தார்கள். இன்னும் ஜெர்மனி பேரரசு என வழங்கப்பட்டது. ஆனால், குடியரசு ஏற்படுத்தப்பட்டது. இது தாராளமான ஜனநாயக முறையில் (சோஷலிஸ்டு) பொதுவுடைமைக் கொள்கைகளின்மீது அமைந்தது.

ஆனல், புதிய அரசியற்சட்டம், பல முக்கியமான பகுதிகளில் பிஸ்மார்க்கால் ஏற்படுத்தப்பட்ட பழைய சட்டத்தைப் பின்பற்றியது. மொத்தமான வாக்குரிமையின்மீது அமைக்கப்பட்ட ரீக்ஸ்டாக்கும்—ஜெர்மானிய மகளிரும் ஓட்டுரிமை பெற்றனர்—பழைய ரீக்ஸ்டாக்கைப் போலக் கூட்டாட்சியும் பல்வேறு அரசியல்களைப் பிரதிநிதிகளாகக் கொண்டிருந்தன: அதுவரை பழைய அரசியற்சட்டத்தில் இயற்றப்பட்டது போல நாட்டின் ஒற்றுமை கலைக்கப்படுவதினின்றும், புதிய அரசியற் சட்டத்தின் வலுவான அழுத்தத்தைப் பெற்றது. இது முதல் வரிகள் நடுவரசிற்கு நேரிடையாகச் செலுத்தப்பட வேண்டுமென்பதும், முன்பிருந்ததைப் போலக் கூட்டாட்சியில் சேர்ந்திருந்த நாடுகள் வாயிலாகச் செலுத்தப்படக் கூடாதென்பதும் ஏற்பட்டன. அரசியற் சட்டத்தை உருவாக்கியவர்கள் தங்களைப் பொதுவுடைமைக் கொள்கையினர் எனக் கூறிக்கொண்டார்கள்.

## ஜனுதிபதி ஹிண்டன்பர்கு

ஆனல், தனியாரிடமிருந்து எதையெடுத்துக்கொண்டாலும், அதற்கு அரசாங்கம் விலை கொடுக்க வேண்டுமென்று அதன் கொள்கை வரையறுக்கப்பட்டது. எல்லாக் குடிகளும் வாக்களிப்பது வாயிலாக நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனுதிபதி பேராட்சிக் குடியரசின் தலைவராயிருப்பார். ஜனுதிபதி தேர்ந்தெடுக்கப்படும் முறை, மூன்றும் நெப்போலியன் ஆட்சிக்குவர வழி செய்த முறையைத் தழுவியிருந்தது. இம்முறை மூன்றும் பிரெஞ்சுக் குடியரசாற் கைவிடப் பட்டதாயிருந்தது. முதலாம் ஜனுதிபதி ஈபர்ட்டு என்பவராவர். இவர் பொதுவுடைமைக் கொள்கையினராயும் தொழிலாளராயுமிருந்தார். ஆனல், 1925-ல் இவர் மரணத்திற்குப்பின், முடிவான பயன் தெரியாது நடந்த ஒரு தேர்தலையடுத்து, போர்த்தலைவரான ஹிண்டன்பர்கு என்பவர் தேர்தலில் வேட்பாளரா யிருக்கும்படி தூண்டப்பெற்று, குறுகிய பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1934 - ல் அவர் மரணமடையும்வரை பதவியிலிருந்தார். அவர் பெரும்போர் தொடங்கிய பொழுதே படையில் வயது முதிர்ந்தவராகக் கருதப்பட்டிருந்தார்.

## குடியரசுக்கு எதிர்ப்பு

புதிய அரசியற்சட்டம், இரு புறங்களிலிருந்தும் எதிர்ப்பை நோக்க வேண்டியிருந்தது. அதனுடன் மிகக்கடுமையான பொருளாதார நிலையையும் நோக்க வேண்டியதாயிற்று. இதைப்பற்றிப் பின்னர்க் கூறப்படும். ஹோஹன்சோலர்களிடமிருந்து ஜெர்மனிக்குண்டான இராணுவப் புகழைக் கருத்திற்கொண்டிருந்தவர்களுடைய ஆர்வமிக்க

எதிர்ப்பைத் தூண்டாமல் பழைய இராணுவ அடிப்படையில் அமைக்கப் பட்டிருந்த பேரரசை ஒதுக்கி வைக்க முடியாது. போரின்போது படைத்துறைத் தலைவராயிருந்த லூடண்டார்ஃப் என்பார் தலைமை பூண்டார். வேர்செயில்ஸில் கையொப்பமிட்ட சமாதான உடன் படிக்கையின் வாசகங்கள் வெளியிடப்பட்ட பொழுது வெடி வெடித்தது. பெர்லின் சிறிது காலத்திற்குப் புரட்சிக்காரர்கள் வயமிருந்தது. ஆனால், இறுதியில் அவர்கள் முழுதும் அடக்கப்பட்டார்கள். அதன்பின், ரஷ்யாவில் நடந்த போல்ஷ்விக்கு ஆட்சியின் முக்கியக் கூறுகளைப் பின்பற்ற விரும்பிய கம்யூனிஸ்டுகளின் எழுச்சி ஏற்பட்டது. ஆனால், மிகக் கடுமையாக இதுவும் அடக்கப்பட்டது. எனினும், மேலும் துன்பமும் வல்லந்தமும் மிகுந்திருந்தன. நாகரிகமற்ற அரசியற் கொலைகளும் நடந்தன. ஆனால், ஜெர்மனியில் முனைப்பாயிருந்த இனத்தார்கள், குழப்பம், கம்யூனிசம் போன்றவைகளை எதிர்த்து நின்றார்கள்.

## ரூர்ப் பகுதியில் பிரெஞ்சு ஆதிக்கம்

ஜெர்மனியின் மாற்றம் விரும்பாத மனநிலை மிகச் சிறப்பா யிருந்தது. இதற்கு நாட்டின் பொருளாதாரம், போரில் இழப்பீடுக ளாகச் செலுத்த முடியாத பெருந்தொகைகளைச் செலுத்தும்படி கோரப் பட்டதால், திக்குமுக்காடச் செய்யப்பட்டது காரணமாயிருந்தது. செலுத்த வேண்டும் என்ற கோரிக்கைப்படி ஜெர்மனியால் செலுத்த முடியாமற் போனதால், 1922ஆம் ஆண்டு டிசம்பரில் பிரெஞ்சு அரசாங்கம் நிலக்கரிவளம் நிறைந்த மாவட்டமான ரூர் எனும் பகுதியைக் கைப்பற்றுவதில் முனைந்தது. போருக்குபின் நிகழ்ந்தவை களில் வேறெதுவும் இச்செய்கையைப் போன்று ஜெர்மனியில் மிகுந்த சினத்தைத் தூண்டுவதா யிருக்கவில்லை. எனினும், இதைத் தடுக்க முடியவில்லை. வரலாற்றில் இணையாகக் காணப்படாத அளவு ஜெர்மனியின் செலாவணி முழுமையாகவும் விரைவாகவும் வீழ்ச்சி யுற்றது 1923-ல். ஆங்கிலேயப் பென்னியைக்கொண்டு இரண்டு மில்லியன் ஜெர்மன் மார்க்குகளை வாங்கலாம்; மார்க்குகள் இன்னும் கேவலமான அளவிற்கு மதிப்பை இழந்தன. ஜெர்மனியின் உள் நாட்டுக்கடன் மறைந்து போயிற்று. இதற்குக் காரணம் மதிப்பில்லாச் செலவாணியேயாகும். பரவியிருந்ததும், உண்மையி லிருந்ததுமான பட்டினிகிடத்தல் மறைவது தாமதமாயிருந்தது.

## ஸ்ட்ரெஸ்மான்

இந்நிலையிலும் ஜெர்மனி பிழைத்திருந்தது. இம்மீட்சியில் ஸ்ட்ரெஸ்மான், ஷாக்ட் முதலியவர்களின் பெயர்கள் சிறப்புக்குக்

காரணமாயிருந்தன. பன்னாட்டு நடவடிக்கைகள் உதவி புரிந்தன. அமெரிக்காவைச் சேர்ந்தவரான டாஸ் என்பவரால் நுணுக்கமாக விரிவு படுத்தப்பட்ட திட்டத்தால், இழப்பீடுகளைச் செலுத்துவதிற் காணப் பட்ட இயலாத நிலைமைகள் குறைக்கப்பட்டன. மார்க்கின் மதிப்பை மீட்பதற்கான முயற்சிகள் செய்யப்படவில்லை. ஆனால், (1924) புதிய நாணயமான ரெண்டன் மார்க்குத் தோற்றுவிக்கப்பட்டு, பொன் நாணயத்தினடிப்படையில் அமைக்கப்பட்டது. ஜெர்மனியின் மீட்சியைக் குறிக்கும் பாதை மிக்க தொல்லையுடன் காணப்பட்டது; ஆனால், இதையடுத்து இதனினும் தாழ்நிலை காத்திருந்தது.

## ஜெர்மனியின் பண்பாடு

1918-ல் ஜெர்மனியின் நிலைமை, முப்பதாண்டுப் போர்களுக்குப் பின் வீழ்ச்சியுற்றிருந்த நிலைமையோடு அடிக்கடி ஒப்பிடப்பட்டது. ஆனால், ஒரு விதத்தில் வேறுபாடு சிறப்பாயிருந்தது. 1648-ல் ஜெர்மனியின் செயலற்ற தன்மை (வலுவின்மை), அரசியல், போர், கருத்து ஆய்வு முதலியவைகளி லிருந்ததைப் போன்று வெளிப்படையா யிருந்தது. ஆனால், 1919க்குப் பின் ஜெர்மனியிடம் அறிவாற்றல் கலைத்திறம் முதலியவை சிறந்து விளங்கின. இந்த அறிவு மீட்சியில் மிகச் சிறந்தவர்கள், கணித வல்லுநரான எயின்ஸ்டீன், ஆஸ்திரியாவைச் சேர்ந்தவரும் உளநூல் வல்லுநருமான ஃப்ரூடு, வாழ்க்கையியலில் வல்லுநரான லட்விக் முதலானோர் யூதர்ப் பிரிவைச் சேர்ந்தவர்கள். இவர்களின் செயல் விளைவுகள் பின்னர் ஜெர்மனியால் கைவிடப்பட்டன. ஆனால், இவர்கள் ஜெர்மனியின் வாழ்க்கையில் மீட்சியேற்பட்டுக் கொண்டிருந்ததெனும் ஐரோப்பாவின் கருத்திற்கு வலிமை யூட்டினார்கள்.

## போரும் புரட்சியும்

பெரும்போர் பல பயனுள்ள புரட்சிகளைத் தோற்றுவித்தது. நவீனப்போர்கள், சமூக, அரசியல் மாற்றங்களைத் திடீரென்று தோற்று விப்பதில் சிறப்பான இயல்புடனிருந்தது என்பது உண்மை. தோல்வி யுற்ற நாட்டு மக்களை துன்புறுவது வழக்கமாயிருந்தது. 1870-ல் ஒரு பிரெஞ்சு எழுத்தாளர், 'எல்லா அரசாங்கங்களும் தங்களது கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டுதான் போரில் இறங்குகின்றன,' எனக் கூறினார். ஆனால், இப்பெரும்போரின் பயனாக ஏற்பட்ட புரட்சிக்குள் மிகச் சிறந்த புரட்சி, இறுதியில் பகைவர்கள்மீது உடன்படிக்கை வாசகத்தைச் சுமத்திய கட்சியைச் சேர்ந்த ஒருநாட்டில் ஏற்பட்டது. போரின் பயன்கள் எல்லாவற்றிலும் மிக முக்கியமானது, ரஷ்யப் புரட்சியாய் இருந்தது.

## ரஷ்யா

ரஷ்யாவைப்பற்றிக் கூறுவது எளிதன்று. ஆர்வமும், வெறுப்பும், நம்பிக்கையும், அச்சமும் அதன் சரிதையைத் தெளிவுறுமற் செய்ய ஒன்றுயிணைந்ததுடன் தீர்ப்புக்கூறுதலையும் கடினமாக்கியுள்ளன. ஆனால், ஐரோப்பிய நாடுகளி லெல்லாம் ரஷ்யா புரட்சியை மேற் கொள்ள ஆயத்தமாயிருந்ததென்பது தெளிவாயிற்று. அங்கு வரம்பிலா முடியாட்சி நடைபெற்றது. அரசாங்க முறைகள் மிகவும் நிலையற்றன என்பது பழமொழி. சுதந்தரமுள்ள நிறுவன அமைப்பு, தலசுய ஆட்சி ஆகிய இரண்டும் அங்கும் காணப்படவில்லை; இவை, முழுமையான மாறுதல்களுக்குப் பெருந்தடையாயிருந்தன. சமூக, அரசியல், சமயப் பிரச்சினைகள் பற்றிய நீணினைவு சிறப்புடனிருந்தது. புரட்சி வேலையிற் பிரான்சில் காணப்பட்ட கூறுகள், அளவு கடந்த முறையிற் புதுப்பிக்கப்பட்டன. பின்பு, சீர்திருத்தம் பற்றிய பேச்சு நிலவியபொழுது, சில சீர்திருத்தங்கள்—பாராளுமன்ற முறையில் அமைந்த அரசாங்கம் உட்பட—ஏற்கனவே இசைவளிக்கப்பட்டிருந்த பொழுது, பெரும்போர் ஏற்பட்டது. பிரான்சில் பயங்கர ஆட்சியைத் தோற்றுவித்ததும் போரே. முதலில் நேச நாடுகளின் செயல் நோக்கத் திற்கு மிக்க ஆர்வமிருந்தது. ஆனால், மேற்கு நாட்டினருக்குத் தெரிந்திராத அளவிற்குத் துன்பமும் வறுமையும் உண்டாயின. முன்னதிகாரத்தில் ரஷ்ய மன்னர் எவ்வாறு பதவி நீக்கம் செய்யப் பட்டுக் கொலை செய்யப்பட்டார் என்பதையும், ஜெர்மனியுடன் ரஷ்யா எப்படிச் சமாதானம் செய்துகொண்டது என்பதையும், புரட்சியியக்கம் எவ்வாறு லெனின், டிராட்ஸ்கி முதலியவர்களின் தலைமையில் நாட்டில் ஓங்கியதென்பதையும் கண்டோம்.

## பழமையை ரஷ்யர்கள் புறக்கணித்தல்

இந்த ரஷ்யப் புரட்சியைப் போன்று எந்தப் புரட்சியும் பழமைகளை முற்றிலும் அடியோடு புறக்கணிக்கவில்லை. சாரின் தனிஆட்சியின் மீது பெருவெறுப்பைத் தவிர வேறெதையும் இப்புரட்சி கொண்டிருக்கவில்லை. மகா பீட்டரின் செயலையும் பெயரையும் நினைவு கூர்வதாயிருந்த புனிதப் பீட்டர்ஸ்பர்கு எனும் நகரம், 'லெனின்கிராடு' எனப் பெயர் மாற்றி வழங்கப்பட்டது. வைதிகத் திருச்சபையின் பணியையும், அதைப் போலவே புறக்கணித்தது. சுதந்தரம் சுயஆட்சி இவற்றைக் குறித்து மேற்கு ஐரோப்பாவில் நிகழ்ந்தவையெல்லாம் நடுத்தர வகுப்பினர் (பூர்ஷ்வா) அவர்களது நலத்தைக் கருதிச் செய்தவைகளாக வெறுக்கப்பட்டன. ரஷ்யப் புரட்சியுடன் ஒரு புதிய சகாத்தம் தொடங்கியது. கார்ல் மார்க்ஸால் 'தாஸ் காப்பிட்டல்' எனும் நூலிலும் மற்றவைகளிலும் கொள்கைகளின்மீது அஃது எழுப்பப்பட


1914ல் ஐரோப்பா
ரஷ்யா
ஜெர்மனி
போலந்து
ஆஸ்திரியா ஹங்கேரி
பிரான்சு
இத்தாலி
ஸ்பெயின்
போர்த்துகல்
இங்கிலாந்து
அயர்லாந்து
வட கடல்
பால்டிக் கடல்
ஸ்வீடன்
நார்வே
ஹாலந்து
பெல்ஜியம்
லக்சம்பர்க்
சுவிட்ச.
அட்லாண்டிக் சமுத்திரம்
ருமேனியா
பல்கேரியா
துருக்கி
கிரீஸ்
கருங்கடல்
கார்சிகா
சார்டீனியா
சிசிலி
மத்தியதரைக்கடல்
ஜிப்ரால்டர் (பிரிட்டீஷ்)
மால்டா (பிரிட்டீஷ்)
ஆப்பிரிக்கா
கிரீட்
ஜெர்மானியப் பேரரசின் எல்லை
பிரான்சு
பிரஷ்யா
ஆஸ்திரியா-ஹங்கேரி
இத்தாலி

[பக்கம் 522

வேண்டியதாயிருந்தது—அடிமைத்தனத்தைப் பின்பற்ருது நேரிடையாக எழுப்பப்பட வேண்டியதாயிருந்தது. பாட்டாளிகள்—உலகில் இதுவரை நாட்கூலி பெற்றவர்கள்—அவர்களுக்குள்ளாகவே எல்லா அதிகாரத்தையும் மேற்கொள்ள வேண்டும். புதிய சமுதாயம் அவர்களின் நலனைக் கருதியமைக்கப்பட வேண்டியதோடு, அச்சமுதாயத்தைத் திட்டமிடுவதில் மற்றவர்கள் எவ்விதப்பங்கும் கொள்ளாது விலக்கப்படவேண்டும் என்பதும் ஏற்பட்டது.

இப்புதிய அரசாங்கம் பழக்கத்திலில்லாத உருவங்களைக் கொண்டதுடன், மேற்கு ஐரோப்பிய நாட்டினருக்கு விளங்காத புதிய பெயர்களால் தன்னை அறிவித்துக்கொண்டது; புரட்சியை நடத்துவதில் செயற்கருவியாயும், அவ்வமைப்பின் அடிப்படையாயுமிருந்தது. தொழிலாளர்கள் போர் வீரர்கள் அடங்கிய மன்றங்கள் அல்லது சோவியத்துக்களாகும். இவை ரஷ்யாவின் பழைய வாழ்க்கையை எல்லா மாவட்டங்களிலும் ஒழித்துக் கட்டின. 1924-ல் அரசியற் சட்டம் முறைப்படுத்திக் கூறப்பட்ட பொழுது இது 'ரஷ்யாவின் சோஷலிஸ்டு பெடரல் சோவியத்துக் குடியாசு' எனவழங்கப்பட்டது. 371 உறுப்பினர்கள் அடங்கிய மத்திய செயற்பாட்டுக் கமிட்டி உள்ளது. 21 பேர்களைக் கொண்ட அமைச்சர் குழுவும் (பிரசிடீயம்) உள்ளது. இவை எல்லாவற்றிற்கும் மேலாகவும் முக்கியமாகவும் உள்ளவை, மக்களுடைய கமிஸ்ஸார்களின் சோவியத்துக்கள் இவற்றிலேதான் அரசை நடத்தும் பொறி நிலையம் அமைந்திருந்தது

## சோவியத்து ரஷ்யாவும் கருத்தும்

புதிய அரசாங்கம் உறுதியாகச் சமயப்பற்றில்லாத் தன்மையுடனிருந்தது. எனினும், சமயச் சடங்குகளைக் கொண்டாடுவதைத் தண்டிக்கவோ அல்லது அடக்கவோ முற்படவில்லை. அரசின் வலிமைக்குக் கருத்து முக்கியத்தைப் பற்றி வேறெந்தநாடும் அவ்வளவு தெளிவாக உணரவில்லை. பல்கலைக்கழகங்கள், பள்ளிகள், செய்தித்தாள்கள், சினிமா, நாடகங்கள் முதலிய எல்லாவழிகளாலும் பொதுவுடைமைக் கோட்பாடுகள் போதிக்கப்பட்டன. எவ்வித எதிர்ப்புக்கும் இசைவளிக்கப்படவில்லை. புதிய சோவியத்துக் குடியரசு பழைய சார் மன்னராட்சியின் கொள்கையைப் பின்பற்றியது. ரஷ்யாவிலிருந்து கலப்பற்ற கம்யூனிசக் கோட்பாடுகளைத் தாக்கும் அல்லது அடிப்படையை அகற்றும்போலத் தோன்றும் எல்லா நூல்களும் விலக்கப்பட்டன.

சோவியத்துக் குடியரசைத் தோற்றுவித்தவர்கள் உலகப் புரட்சி ஏற்படுவதைப் பற்றிக் கனவு கண்டார்கள். அறிவு மிக்க பிரசாரத்

தாலும், உட்கிளர்ச்சியாலும், வல்லந்தச் செயலாலும் அவர்கள் கருத்துக்கள் உலகம் முழுதும் பரவுமென நம்பினார்கள். தொழிலாளர் களின் நலன்கருதி விடுக்கப்படும் முறையீடுகள் தடுக்க முடியாதவை யெனக் கருதப்பட்டன. 1792-லும், 1793-லும் பிரெஞ்சுக்காரர்கள் கொண்டிருந்த பொய்த்தோற்றத்தையே சோவியத்து ரஷ்யாவும் போற்றி வளர்த்தது. சோவியத்து அரசாங்கம் அதன் உள்நாட்டுப் பகைவர்கள்மீது தொடக்கத்தில் பெற்ற வெற்றிகள் உண்மையிலேயே குறிப்பிடத் தக்கனவாயிருந்தன. எதிர்த்துச் செயல்புரிபவர்களும் அரசரை ஆதரிப்போர்களும் மிதவாதிகளான பொதுவுடைமை வாதிகளும் தொடக்கத்தில் சிறிது வெற்றி கண்டபின், அழிக்கப் பட்டார்கள். ஆனால், வேர்செயில்ஸ் உடன்படிக்கைகளின்படி ரஷ்யா விடமிருந்து பிரிக்கப்பட்ட நாடுகள் அவற்றின் சமூக, அரசியற்றிட்டங் களைப் பின்பற்றின. அவை, பின்லாந்து, லாட்வியா, எஸ்தோனியா, லித்துவேனியா, போலந்து என்பவை. ஒரு சமயம் ரஷ்யப்படைகள் போலந்தின்மீது படையெடுத்துச் சோவியத்து முறையை அங்கு ஏற்படுத்தக் கூடும் எனத் தோன்றியது. ஆனால், அவ்வெண்ணம் 1920-ல் நடந்த வார்சாச் சண்டையால் சிதறுண்டது. அச்சண்டை 'தெய்விக அருள் சார்ந்ததாயும்' (இயற்கையை மீறியது), 'உலகில் முடிவான போர்களில் ஒன்றாயும்' கூறப்பட்டுள்ளது. போலந்தின் வரலாற்றைக் கவனிக்கும்பொழுது அச்சண்டையைப் பற்றி மீண்டும் கூறுவோம். இப்போது ரஷ்யமுறை மற்ற நாடுகளில் பெரிதும் பரவியுள்ள வெற்றிகளைப் பெற முடியாதென்பது தோன்றலாயிற்று. இம்முறை மிகப் பழமையானதும், நிலைத்திருக்கக் கூடியதுமான ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளுடைய சமூக முறையை மேற் கொள்ள வேண்டும். இம்முறை மாறிக்கொண்டு வருகிறது; உறுதி யாக மாறும்.

III

## புதிய நாடுகள்

போரின் விளைவாகத் தோற்றுவிக்கப்பட்ட அல்லது பேராதிக்கம் கொள்ளும்படி செய்யப்பட்ட நாடுகளின் வளர்ச்சி சுவைமிக்கதா யிருந்தது. சுதந்தரத்தின் போக்கு எப்பொழுதுமே எவ்விதத்திலும் மென்மையாயிருக்கவில்லை; அதனுடன் நெடுநாளாகப் போற்றிவரும் தனியாள் உரிமைக் கொள்கை பாராளுமன்றத்திற்குரிய அரசாங்கம் முதலிய வழிகளைப் பின்பற்றியதாயுமில்லை.


பெரும்போருக்குப் பின் தோற்றுவித்த புதிய நாடுகள்
பெரும் போருக்குப் பின் பிரான்சு, பெல்ஜியம், டென்மார்க் இத்தாலி, ருமேனியா, கிரீஸ், செர்பியா (யூகோஸ்லேவியா) முதலியவைகளால் ஈட்டப்பெற்றவை.
ரஷ்யா
1927ல் ஐரோப்பா
அட்லாண்டிக் சமுத்திரம்
வடகடல்
கருங்கடல்
மத்தியதரைக் கடல்
நார்வே
சுவீடன்
பின்லாந்து
எஸ்தோனியா
லாட்வியா
லித்துவேனியா
டென்மார்க்
ஜெர்மனி
போலந்து
ஹாலந்து
பெல்ஜியம்
லக்சம்பர்க்
பிரான்சு
ஸ்விட்ஸ்.
ஆஸ்திரியா
செக்கோ-ஸ்லோவாக்கியா
ஹங்கேரி
ருமேனியா
யூகோஸ்லேவியா
செர்பியா
பல்கேரியா
துருக்கி
அல்பேனியா
கிரீஸ்
இத்தாலி
கார்சிகா
சார்டீனியா
சிசிலி
ஸ்பெயின்
போர்த்துகல்
இங்கிலாந்து
ஸ்காட்லாந்து
வேல்ஸ்
வட அயர்லாந்து
ஐரிஷ் தனியரசு

## போலந்து

புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட நாடுகளில் போலந்து மிகவும் கவனத்தைக் கவர்வதாயிருந்ததுடன், கூர்ந்த அறிவையும் ஈர்த்தது. கடந்த ஒன்றரை நூற்றாண்டாக அடிக்கடி ஏமாற்றமடைந்த போலந்து நாட்டின் நாட்டுப்பற்று மிக்கவர்களின் மனவெழுச்சி நிரம்பிய எண்ணங்கள் இறுதியாகக் கைவரப் பெறுவனவாயின. ஐரோப்பாவின் நிலப்படத்திற் போலந்து சிறப்பிடம் பெற்றது. ஆனால், அதன் எல்லைகள் பற்றிய பிரச்சினை, தொல்லை கொண்டதாயிருந்தது. 16 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் போலந்து மிக்க பரப்புள்ள நாடா யிருந்தது. முன்பு இருந்ததைப் போன்று, மத்திய ஐரோப்பாவில் அது விரிவாக மீண்டும் பரவுதல் கருதுதற்கரியதாயிருந்தது. அதனுடன் போலந்து நாட்டு மக்களினத்தை வரையறுத்துக் கூறுவ தென்பதும் கடினமாயிருந்தது. 'போலந்து போல்களுக்கே,' எனும் ஒலி ஏற்றதுதான்; ஆனால், போல்கள் யார் என்பதுதான் பிரச்சினையா யிருந்தது. கடலுள் நுழைவுரிமைப் பிரச்சினையும் துயரார்ந்ததா யிருந்தது. புதிதாகச் சேர்த்துருவாக்கப்பட்ட இந்நாட்டிற்குக் கடலுள் நுழைவுரிமையுண்டு என ஜனாதிபதி வில்ஸன் அறிவித்திருந் தார். ஆனால், பிரஷ்யா நாட்டின் வெற்றிகரமான முன்னேற்றத்தால் ஒன்றரை நூற்றாண்டுக் காலமாகப் போலந்து, பால்டிக்குக் கடலி லிருந்து துண்டிக்கப்பட்டிருந்தது. இப்பகுதியில் முன்பு போலந்திற்குச் சொந்தமா யிருந்தவைகளையெல்லாம நாட்டுப்பற்றுக் கொண் டிருந்தவர்களிற் சிலர் மீண்டும் பெறுவதைக் கோரினர். ஆனால், அவ்வாறு செய்வது, புதிய நாட்டிற்குக் கிழக்குப் பிரஷ்யாவை ஒப்படைப்பது போலாகும். கிழக்குப் பிரஷ்யாதான் பிரஷ்யாவின் பெயர் ஏற்படுவதற்கு வளரும் தொட்டிலா யிருந்தது. எனவே, கிழக்கு, மத்திய பிரஷ்யாவுக்கிடையே கடல்வரை செல்லும் அகலமான நிலப் பகுதி அல்லது இடைவழியைப் போலந்திற்கு அளிப்பது வாயிலாகக் கடலுள் நுழையும் உரிமை ஏற்படுத்துவது முடிவு செய்யப்பட்டது.

## சைலீஷியா

டான்ஸிக்கு என்ற பெரிய பட்டணம் இவ்விடை வழியைச் சேர்ந் திருந்தது. அந்நகரினர் ஜெர்மானிய இனத்தினரா யிருந்ததால் புதிய போலந்து நாட்டிடம் ஒப்படைக்க முடியாததாயிற்று. டான் ஸிக்கு 'சுதந்தர நகரம்' என அறிவிக்கப்பட்டது. தெற்கு எல்லைக்கு அப்பால், போலந்து சைலீஷியாவுடன் சந்திக்குமிடத்தை உறுதியாகக் குறிப்பிடுவதும் கடினமாயிருந்தது. பேச்சு வார்த்தை நடவடிக்கை களில் பல தோல்விகள் ஏற்பட்டன. ஆனால் இறுதியில் சருவதேச சங்கப் பொறி வாயிலாக ஒருடன்பாடு ஏற்படுத்தப்பட்டது. புதிய

போலந்தில் முப்பது மில்லியன் மக்கள் உறைந்தார்கள். இவர்களில் அதிகமானவர்களைப் போல்கள் என்று வழங்கமுடியாது. நாட்டினக் கொள்கைக்கு வேண்டுமென்றே கூறப்படும் பற்றுறுதி மாற்றம் இல்லை. ஆனால், கொள்கையை நடைமுறையிற் பயன்படுத்துவதில் எதிர்பாராத தொல்லைகள் ஏற்பட்டன.

## பில்ஸுட்ஸ்கி

புதிய போலந்து மக்களாட்சி அடிப்படையிலும் குடியரசாயும் அமைய வேண்டியதாயிற்று. ஆனால், போல் மக்களுக்குச் 'சுதந்தரத்திற் பயிற்சி' இல்லாதிருந்ததால், அவர்கள் பிரிட்டிஷ் அமெரிக்க ஜனநாயக முறைகளைப் பயன்படுத்தத் தகுதியற்றவர்களாய் இருந்தார்கள். ஒரு ஜனாதிபதி கொலையுண்டார். பியானோ எனும் இசைப்பெட்டியை இசைப்பதிற்சிறந்து விளங்கிய படிரீஸ்கி என்பார், ஒருகாலம்வரை பிரதமமந்திரி பதவியை வகித்தார். ஆனால், போலந்தின் வரலாறு உண்மையில் ஜோஸப் பில்ஸுட்ஸ்கி என்பாரை மையமாகக் கொண்டிருந்தது. அவர் பழைய ரஷ்யாவை எதிர்த்த புரட்சிச் சதியாளராய், சைபீரியாவிற்கு அனுப்பப்பட்டிருந்தார்; வேர் செயில்ஸ் சமாதானத்திற்குப்பின், போலந்திற்குத் திரும்பி, விரைவிலேயே அங்கு நடைமுறையில் சருவாதிகாரியின் அதிகாரத்தை நடத்தலானார். ஓரளவு முசோலினியை ஒத்திருந்த அவர், முசோலினியைப் போலவே தம்மையும் சோஷலிஸ்டு எனக் கூறிக்கொண்டார்; கார்ல் மார்க்ஸின் நூல்களை நன்கு கற்றிருந்தார். ஆனால், அவரது சோஷலிசம் மாஸ்கோவில் வெற்றியடைந்த சோஷலிஸத்தைப் போன்றதன்று. போலந்திற்கும் ஐரோப்பாவிற்கும் புதியநாடு ரஷ்யாவுடன் தொடர்பு கொள்ளுவது பற்றிய பிரச்சினை முக்கியமான உறுதி வாய்ந்ததாயிருந்தது.

இனத்திலும், மொழியிலும் போல்கள் ரஷ்யர்களுடன் குருதிக் கலப்புக் கொண்டிருந்தார்கள். இவர்கள் சமூக நிறுவன அமைப்புக்களில் ரஷ்யாவின் தலைமையைப் பின்பற்றுவார்களா அல்லது சொந்தமான வழியையும் கொள்கையையும் பின்பற்றுவார்களா? வரலாறு மீண்டும் திரும்பியது. பழைய ரஷ்யா, அதன் முறையுடன் உடன்பாடுடையதாகப் போலந்தைக்கொண்டு வரவில்லை. சார்கள் வெற்றி கொண்டு போலந்தின் பெரும்பகுதியைத் தங்கள் ஆட்சிக்கு உட்படுத்திய போதிலும், அது தன்னுடைய சமயம், சமூகக் கூறுகளைத் தனியாகக் கொண்டிருந்தது. எனவே, இப்பொழுது போலந்து அதன் அறிவு சார்ந்ததையும், சமூகத்தையும், அரசியல் சுதந்திரத்தையும் பாதுகாத்து வந்துள்ளது.

## வார்ஸாச் சண்டை

1920-ல் போல்ஷ்விக்கு ரஷ்யா, அதன் கொள்கைகளைப் போர் மூலம் பரப்பும் எண்ணத்தைக் கொண்டிருந்தது. உலகம் முழுவதிலும் பரவக்கூடிய வெற்றியைப் பற்றி டிராட்ஸ்கி கனவு கண்டார். 1920-ல் போலந்திற்கும் ரஷ்யாவிற்குமிடையே போர் மூண்டது. ரஷ்யா ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் வீரர்களுடன் படையெடுத்தது. போலந்து உடனடியாக வீழ்ச்சியுறும்போலத் தோன்றியது. பயனற்ற முறையில் போல்கள் தற்காலிகப் போர் நிறுத்தத்தையும் கூட்டுப் பேச்சையும் வேண்டினார்கள். நாட்டை அடிமைப் படுத்துதலையும் போல்ஷ்விக்குப் புரட்சியை மேற்கொள்ளுதலையும் குறிக்கும் வாசகங்களை ரஷ்யர்கள் அளித்தார்கள். எனினும், வார்ஸாவிலிருந்து பதினைந்து மைல்களுக்குள்ளாக அவர்கள் படை முன்னேறியிருந்தது- அது தப்புவது இயலாது. ஆனால், எது முடியாதென்று தோன்றியதோ, அது தற்செயலாய் முடிந்தது. பிரெஞ்சுப் படைத் தலைவரான வேகண்ட் என்பவரால் பில்ஸுட்ஸ்கி உதவியளிக்கப்பட்டார். அவர் மேலான நம்பிக்கை ஏற்படும் வேளையில் ரஷ்யர்கள் இடப் பக்கத்தில் தாக்கினார்கள். நற்பேற்றில் நேர்மாறான நிலை ஏற்பட்டதற்கு இணையாக எதுவுமிருக்க முடியாது. பேரிழப்புக்களுடன் ரஷ்யர்கள் நாட்டிலிருந்து விரட்டப்பட்டார்கள். எழுபது ஆயிரம் ரஷ்யர்கள் போலந்து மக்களிடம் கைதிகளானார்கள்.

இவ்வெற்றியினால் பில்ஸுட்ஸ்கியின் அதிகாரம் இயற்கையாகவே பெரிதும் கூடிற்று. அவர் சட்டம் சுதந்தரம் இவற்றுக்கு மதிப்பு அளிக்காமல், ஆட்சி புரிந்தார். போலந்தைச் சூழ்ந்திருந்த தொல்லைகள் பெரியனவாயும் மிகையாயுமிருந்தன. ஆனால், புதிய நாட்டின் நிலையான தன்மை, முன்பு ஒருவேளை நிகழக்கூடியதாய்த் தோன்றியதைக் காட்டிலும், மிக மேலானதென உறுதிப்படுத்தப் பட்டது.

## துருக்கி

துருக்கி 'அச்சுமீது சுழலும்' மற்றொரு நாடாகும். ஐரோப்பாவின் பெரும்பகுதியின் ஊழ் இந்நாட்டின் செயல்களைச் சார்ந்திருந்தது. டார்டனல்ஸ் சண்டையில் வெற்றிகிடைத்த போதிலும், போரில் வேறெந்த நாடும் இதைப்போல நம்பிக்கையிழக்கும்படி மோசமாகத் தோற்கடிக்கப்படவில்லை. பால்கன் தீபகற்பத்திலிருந்து துருக்கி விரட்டியடிக்கப்பட்டது. நேச நாடுகளின் தாராள மனப்பான்மையால் கான்ஸ்டான்டிநோப்பிளின்மீது பிடிப்பு வைத்துக் கொண்டிருந்தது. எகிப்தும், சிரியாவும், அரேபியாவும், மெசபட்டேமி

யாவும் அதனிடத்திலிருந்து கவரப்பட்டன. அதன் பயனற்ற வீழ்ச்சியைப்பற்றி மக்கள் கூறியதுடன், தனியரசான துருக்கி அழிக்கப்படுவது இயலுமெனவும் எண்ணினுர்கள். ஆனுல், துருக்கியர்களின் தாயகமாயும் வளர்ச்சித் தொட்டிலாயுமிருந்த ஆசியா மைனர், அவர்கள் வயமிருந்தது. இப்போது ஆசியா மைனர்மீது படையெடுக்கப்பட்டது. கடற்கரையோரமிருந்த நகரமான ஸ்மைர்ஞைவைச் சுற்றிலும், அதனுள்ளும் கிரேக்கர்களின் தொகை குறிப்பிடக் கூடிய அளவில் இருந்தது. 1920 மே மாதத்தில், இம்மக்களைப் பாதுகாப்பதற்காக ஒரு பெரிய கிரேக்கப் படை அதனுள் கடலிலிருந்து இறங்குவதற்கு ஏற்றுக்கொள்ளப்பட்டது. இப்படை தீவிரமான சண்டைக்குப் பின், ஸ்மைர்ஞைவைச் சுற்றியுள்ள பகுதிகளில் ஆதிக்கம் கொண்டது. எதிர்த்துப் போராடுவதற்குத் திறமையற்றவர்களெனத் துருக்கியர்கள் கருதப்பட்டார்கள்.

## முஸ்தாபா கமால்

ஆனுல், இவ்வமயத்தில், துருக்கியில் ஓரியக்கம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இஃது இயற்கையானதாயிருந்தபோதிலும், ஐரோப்பாவில் வியப்பை யுண்டுபண்ணியது. துருக்கியர்களின் தேசியச் செருக்கு எவ்விதத்திலும் அழிவுறவில்லை. துருக்கியர்களால் மக்களினத்திலேயே முற்றிலும் வெறுக்கப்பட்டவர்களும், இகழப்பட்டவர்களுமான கிரேக்கர்களின் படையெடுப்பு, துருக்கியர்களின் நாட்டு விழிப்புணர்ச்சிகளை மிகத்தூண்டியது. இப்புதிய இயக்கம், முஸ்தாபா கமால் என்பவரை உருவாக்கியது. இத்தாலி முசோலினியின் கீழும், போலந்து பில்ஸுட்ஸ்கியின் கீழும் வந்ததுபோல, துருக்கியும் இவரது தலைமையின்கீழ் ஒன்று கூடியது. இவ்வியக்கத்தின் நோக்கமும் பொருளும் தெளிவானவை. துருக்கியின் உளதாம் தன்மையைக் காப்பது இதன் நோக்கம். இதன்கண் சில விசித்திர உருவமான கூறுகள் தென்பட்டன. ஆனுல், இஃது ஐரோப்பாவல்லாத உலகில் விரிவாக ஏற்பட்டவைகளோடு ஒன்றுசேருவதாயிருந்தது. ஐரோப்பிய விஞ்ஞானம், ஐரோப்பிய நிறுவன அமைப்பு முறை இவைகளை ஐரோப்பாவைத் தோல்வியுறச் செய்வதற்காகவும், நாட்டினத்தின் உளதாம் தன்மையைப் பாதுகாக்கவும் மேற்கொண்டது.

## கமால் பாஷா

துருக்கியின் சிறப்பு இயல்புகள் எனத் தோன்றியவைகளையெல்லாம் மனவெழுச்சியுடன் கமால் எதிர்த்தார்; பெண்டிர் பயன்படுத்திய முகத்திரைகளையும், ஆடவர் அணிந்த துருக்கிக் குல்லாக்களையும் அகற்றினுர். இவற்றை அணிந்துகொண்டவர் தண்டிக்கப்

பட்டனர். அராபியர்களிடமிருந்து கடன் வாங்கிய துருக்கி எழுதும் முறை—துருக்கி மொழி அராபிய மொழியுடன் எவ்விதக் குருதித் தொடர்பும் கொண்டிருக்கவில்லை—அடியோடு அகற்றப்பட்டு, அத னிடத்தில் எளிதில் எழுதப்படும் மேற்கு ஐரோப்பாவின்முறை தோற்று விக்கப்பட்டது. மேற்குக் கல்விப்போதனைமுறைகள் சிறுவர்க்கும் சிறுமியர்க்கும் அளிக்கப்படுவது வற்புறுத்தப்பட்டது. இது மக்களின் பழக்கவழக்கங்களில் மிகவியத்தகு புரட்சியாயிருந்தது. ஆனல், கமாலின் வலிமைமிக்க உறுதியால் இது நடைபெற்றது. அதே தருணத்தில் ஒரு பெரிய சமய மாறுதலும் தோற்றுவிக்கப்பட்டது. 16ஆம் நூற்ருண்டு முதல் துருக்கிச் சுல்தான், முகம்மதிய உலகின் சமயத் தலைவரான கலீஃபாய் இருந்து வந்தார். எங்கெல்லாம் இஸ்லாம் சமயம் ஏற்றுக்கொள்ளப்பட்டதோ, அங்கெல்லாம் கலீஃபின் பெயர் கொண்டாடப்பட்டது. இப்பொழுது சுல்தானுடைய ஆட்சி அகற்றப்பட்டு, குடியரசு தோற்றுவிக்கப்பட்டது. ஒரு காலவளவில் காலிஃபேட்டு (காலிஃபின் தலைமை) மற்றவர்களிடம் மாற்றப்பட்டது. ஆனல். பின்பு அது முற்றிலும் அகற்றப்பட்டது. இதனல், துருக்கியின் தன் மதிப்பு மேலோங்கியது; ஆனல், துருக்கியின் சிறப்பான நாட்டுத் தனியடையாளத்தைக் குறைத்தது. இது தனக்கு ஊக்கமில்லாத போர்களில் துருக்கியைச் சிக்க வைத்ததுடன், அதனிடம் பொய்யான எண்ணங்களையும் வளர்த்தது. எனவே, காலிஃபுக்களின் ஆட்சி மறைந்தது. இஸ்லாம் சமயம் தலைமையின்றி யிருந்தது. நாட்டின் தன்முனைப்புத்தான் கமாலின் மனவெழுச்சியில் ஒன்ருயிருந்தது. இது வேறெங்கும் வெற்றிகரமாக இருந்திருக்க முடியாது.

கமால் ஒரு பெரிய படையையும் தோற்றுவித்து, சிறந்த நவீனப் போர்க் கருவிகளைக்கொண்டு ஒறுக்கச் செய்தார். பிரெஞ்சுக்காரர்கள் அவருக்குப் பேருதவி செய்தது புதுமையாயிருந்தது. துருக்கிப்படை களின் வலிமையின் மீட்டுயிர்ப்பு, கடந்த இருபதாண்டுகளில் நிகழ்ந்த பேரருட்செயலாகும்.

கிரேக்கர்களின்மீதுதான் தாக்குதல் ஏற்பட்டது. போரினல் சலித்திருந்ததும், எண்ணற்ற பிரச்சினைகளால் தொந்தரவுற்றிருந்தது மான ஐரோப்பா, ஆசியா மைனரின் நிகழ்ச்சிகளில் தன் கவனத்தைச் செலுத்த இயலாதிருந்தது. கிரீஸின் நிலைமையும் அமைதியற்றதா யிருந்தது. பெரும்போரின்போது கான்ஸ்டன்டைன் மன்னர் பதவியி லிருந்து நீக்கப்பட்டார். அவர் புதல்வரான அலெக்ஸாந்தர் பட்ட மெய்தினர். அவரும் அவருக்கு அமைச்சரான வெனிசீலாஸ் என்பவருமே ஐரோப்பாவில் கிரீசிற்குச் சிறப்பு நிலையைத் தேடிக் கொடுத்தனர். 1920 அக்டோபரில், குரங்கு கடித்தது காரணமாக

மன்னர் அலெக்ஸாந்தர் இறந்து போனார். அதன்பின் ஏற்பட்ட தேர்தலில் வெனிசீலாஸ் தோல்வியுற்றார். மன்னர் கான்ஸ்டன்டைன் மீண்டும் பதவியளிக்கப்பட்டார். மீட்சி பெற்ற மன்னருடைய அரசாங்கம் துருக்கியத் தாக்குதலை ஏற்க வேண்டியிருந்தது. துருக்கியின் புதிய தலைநகரான அங்கோராவின்மீது அணி வகுத்துச் செல்வதால், கிரேக்கர்கள் இத்தாக்குதலை எதிர்க்க முயன்றார்கள். ஆனால், சில தொடக்க வெற்றிகளுக்குப்பின் அவர்கள் தோற்கடிக்கப் பட்டு நசுக்குண்டார்கள். ஸ்மைர்னா துருக்கியர் வயமாயிற்று. கிரேக்கர்கள் மிகக் கடுமையான பழி வாங்குதலுக்கு உட்பட வேண்டிய தாயிற்று. ஆசியா மைனரிலிருந்த கிரேக்கர், இறுதியில், பேரளவில் கிரீசுக்கு நாடு கடத்தப்பட்டனர்.

## லாசேன் உடன்படிக்கை

லாசேன் உடன்படிக்கையில் துருக்கியர்களுடன் சமாதானம் ஏற்பட்டது. ஐரோப்பாவில் அதிகமான நிலப்பகுதிகளைத் துருக்கி பெற்றது; ஆசியா மைனரின்மீது அதன் உரிமைகளை உறுதி செய்தது. துருக்கியர்கள்—நெடுநாளாக மரணத் தறுவாயிலிருக்கிறவர்கள் எனக் கருதப்பட்டவர்—மீண்டும் உரம் வாய்ந்தவர்களானார்கள் என்பது தலை சிறந்த உண்மையாயிருந்தது. ஐரோப்பாவை எதிர்நோக்கிய பெரும் பிரச்சினைகளில் துருக்கியின் வருங்கால வளர்ச்சியும் ஒன்றாயிருந்தது.

## ஆஸ்திரியப் பேரரசு

பழைய ஆஸ்திரியப் பேரரசிலிருந்து முழுமையாகவோ அல்லது பகுதிகளாகவோ துண்டித்து உருவாக்கப்பட்ட நாடுகள், அவற்றின் கடுகடுப்பான பிரச்சினைகளிற் சிலவற்றை நவீன ஐரோப்பாவின் முன்னிலையில் வைத்தன. ஆஸ்திரியா, நாட்டினக் கொள்கைக்கு நேரடியான எதிர்மறையாயிருந்தது. பெயரளவில், ஜனாதிபதி வில்ஸனின் பதினான்கு குறிப்புக்களின் அடிப்படையிலமைந்த சமாதானம் ஏற்பட்டபொழுது, ஆஸ்திரியா கடுமையாகத் துன்புறுவ தென்பது தவிர்க்க முடியாததாயிருந்தது. ஜெர்மனியும் துருக்கியும் கடுமையாயிழந்தன; ஆனால் பழைய ஆஸ்திரிய அரசு உண்மையில் அழிக்கப்பட்டது. ஆஸ்திரியா ஆட்சிபுரிந்த பெருநிலப்பகுதியி லிருந்து போலந்து, செக்கோஸ்லோவியா, ருமேனியா, ஜூகோஸ் லோவியா நாடுகள் எப்படி மாற்றி உருவாக்கப்பட்டன என்பதைக் கண்டோம். அதனுடன் தெற்கில் ஆஸ்திரியாவிற்குச் சொந்த மானதில் போதுமான அளவு துண்டுப்பகுதியை இத்தாலி எவவாறு உரிமை பாராட்டிப் பெற்றது என்பதையும், ஹங்கேரி எப்படி முழுமை யான சுதந்தரத்துடன் அமைக்கப்பட்டது என்பதையும் கண்டோம்.

தற்காலிகப் போர் நிறுத்த உடன்படிக்கை கையெழுத்தான அன்றே பேரரசரான சார்லஸ் பதவி துறந்தார். தமது முடிவைக் குறித்து வருந்தியும் முடியாட்சியை மீண்டும் நிலைபெறச் செய்ய இருமுறை முயன்றுங்கூட அவர் தோல்வியுற்றார். ஆஸ்திரியா குடியரசாய் நிலைத்தது. அதன் பொருளாதாரநிலை, ஜெர்மனியைக் காட்டிலும் மிகவும் தாழ்நிலையில் இருந்தது. உண்மையில் பசிக்கொடுமையும் அச்சுறுத்தியது. ரஷ்யமுறை போன்றதொரு சோதனையைச் செய்து பார்க்கச் சூழ்நிலை ஏற்றதாய்த் தோன்றியது. அதை நோக்கிச் சில முயற்சிகளும் செய்யப்பட்டன. ஆனால், அவை தோற்றன. போல்ஷ்விஸத்தின அறிவு ஆற்றலின் தோற்றங்கள் ஜெர்மனியில் தோன்றின. ஆனால், ஜெர்மன் மக்களிடையே எங்கும் அதற்கு வரவேற்புக் கிட்டவில்லை. ஆஸ்திரியாவில், தாராளமான போக்குடையதும் ஒழுங்கு முறையுடன் தோன்றியதுமான சோஷலிசம் வெற்றி பெற்றது.

ஜெர்மனியிலிருந்ததைப் போலவே இங்கும் நாணயச் செலாவணி முழுமையாக வீழ்ச்சியுற்றது. ஆனால், சருவதேச சங்கத்தின் பொருளுதவியால் செலாவணி இறுதியில், நிலைபேருக்கம் கொண்டது. ஆஸ்திரியாவின் எதிர்காலம் தெளிவற்றிருந்தது. வரலாறு, நாட்டினம், பொருளாதார நலன்கள் முதலியவையெல்லாம், ஆஸ்திரியாவும் ஜெர்மனியும் ஒன்று சேரவேண்டும் என்பதைக் காட்டின. ஆனால், வேர்செயில்ஸ் சமாதானம் சருவதேச சங்க மன்றத்தின் ஆணையின்றி அவ்வாறு ஒன்று சேர்வதற்குத் தடை செய்திருந்தது. அம்மன்றத்தில் ஆஸ்திரியாவின் பெரிய எதிரிகளான பிரான்சும் இத்தாலியும் இடம் பெற்றிருந்தன. 1930-ல் ஜெர்மனியுடன் ஏதோ ஒரு மாதிரியான பொருளாதார ஒற்றுமையை உருவாக்க முயற்சி செய்யப்பட்டது. இவ்வொற்றுமை, உடன்படிக்கையின் (ஷரத்துக்களுடன்) காப்பு வாசகத்துடன் நேரிடையான மோதுதலை ஏற்படுத்தாது எனக் கருதியும் இது கடும் எதிர்ப்பைப் பெற்றதால் இறுதியில் கைவிடப்பட்டது.

## ஹங்கேரி

ஹங்கேரி தோல்வியடையும் தருணத்தில், முழுமையான சுதந்தரம் பெறும் விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டது. எனினும் அச்சுதந்தரம் அந்நாடு வரவேற்கும் உருவத்தில் வரவில்லை. கடந்த காலத்தில் குறிப்பாக 1848-ல் நிகழ்ந்த புரட்சியின்போது, ஹங்கேரி நாட்டினக் கொள்கைக்கு ஆதரவாயிருந்தது. ஆனால், நாட்டினக் கொள்கை என்பது, மக்களிடையே பெருங்குழப்பத்தையும் சிதறிப் போகும் தன்மையையும் கொண்டதாயிருந்தது. செருக்கும் திறமையும் கொண்டிருந்த மக்கியார் இனத்தினர், அந்நாட்டு மக்களுடன் தொடர்பற்றிருந்த வேற்றினத்தாரின்மீது குரோட்டுக்கள், செர்புகள்,

ருமேனியர்கள், ஜெர்மானியர் போன்ற பெரும்பகுதியினரின்மீது ஆட்சி புரிந்து வந்தனர். இவர்கள் இப்பொழுது அந்நாட்டினின்றும் பிரிந்து சென்றனர். நாட்டின் மக்கள் தொகை இருபது மில்லியனிலிருத்து ஏழரை மில்லியனுய்க் குறைந்தது. டான்யூபு நதியின் வடிநிலத்தில், ஐரோப்பாவில் மற்றப் பகுதிகளைக்காட்டிலும் மக்களினங்களை ஒன்றிலிருந்து ஒன்றைக் கணக்காகப் பிரித்தெடுப்பது எளிதன்று. அன்னிய இனத்தார்களிற் பலர் ஹங்கேரியில் பின்னரும் வாழ்ந்துகொண்டிருந்தனர். சற்றேறக்குறைய இரு மில்லியன் ஹங்கேரியர், புதிய நாடுகளான செக்கோஸ்லோவாக்கியா, ருமேனியா, ஜுகோஸ்லேவியாவிற்கு ஒப்படைக்கப்பட்டனர். அதற்கு இழைக்கப்பட்ட முறைகேட்டைக் குறித்து ஹங்கேரி தொடர்ந்து எதிர்ப்புக் கூறியது.

ஹங்கேரியில் கம்யூனிஸத்தை ஏற்படுத்த முயற்சி நடந்தது. முதலில் அம்முயற்சிக்குப் பெரிதளவு வெற்றியும் கிட்டியது. ஆனுல், ஹங்கேரியில் பேராதிக்கம் கொண்டிருந்த மக்கியார் இனத்தினர், கம்யூனிஸத்தைக் கடுமையாக எதிர்த்ததுடன் ஜனநாயகச் சமத்துவ அடிப்படையில் எந்த அரசியல் முறையையும் எதிர்த்தனர். புதிதாகத் தோன்றிய ஹங்கேரி, ஐரோப்பாவில் வேறெந்த நாடுகளையும்விட, அதிகமான உண்மையான உயர்குடியாட்சியின் இயல்பைக் கொண்டிருந்தது.

## ஜுகோஸ்லேவியா

சிதறிப்போன ஆஸ்திரியப் பேரரசிலிருந்து முக்கியமாக மூன்று நாடுகள் பெருநிலப்பகுதிகளைப் பெற்றன. போரின்போது, வீரத்துடன் சண்டையிட்டதும் கடுந்துன்பத்தை அடைந்ததுமான செர்பியா, போர் முடிந்ததும் முதல் தரமான நாடாய் வெளிவந்தது. அதன் மக்கள் தொகை சற்றேறக்குறைய மூன்று மில்லியனிலிருந்தது பன்னிரண்டு மில்லியனுய் உயர்ந்தது. ஜுகோஸ்லேவியா எனும் பெயரைக் கொண்டது (தெற்கிலிருந்த ஸ்லாவ்களின் நாடு) அந்நாட்டில் வாழ்ந்த மக்கள்—ஸ்லாவ் என்று கூறிக்கொண்டவர்கள் கூட—எல்லோரும் ஒரேயினத்தைச் சேர்ந்தவர் எனக் கருதவில்லை. பாராளுமன்ற முறையுடன் கூடிய நிலையங்கள் செயற்படுவதில் தொல்லையிருந்தது. 1929-ல் மன்னர், மக்களிற்பெரும்பான்மையோரின் ஒப்புதலைப் பெற்றதான வெளித்தோற்றத்துடன், சருவாதிகாரியின் ஆட்சியை மேற்கொண்டார்.

## ருமேனியா

### செக்கோஸ்லோவாக்கியா

நிலப்பரப்பிலும் மக்கள் தொகையிலும், மிகப்பெரிய இலாபத்தைப் போரின் பயனுகப் பெற்றது, ருமேனியா எனும் மற்றொரு நாடாகும். ரோமப் பேரரசின் இறுதியாக ஏற்பட்ட வெற்றிகளில் இந்நாட்டின் பெயரும் இதன் தொடக்கமும் தோன்றின என்பதைக் காண்பது சுவை நிறைந்ததாகிறது. இலத்தீன் மொழியிலிருந்து ஏற்பட்ட சிறப்பான மொழியை இந்நாட்டு மக்கள் இன்றும் பேசி வருகின்றூர்கள். இந்நாடு முக்கியமும் ஆதிக்கமும் கொண்டு வெளிவந்தது. பொஹீமியா, மொரேவியா என்ற பகுதிகளின் மரபுகளுடன் புதுமையான பெயருடன் செக்கோஸ்லோவாக்கிய நாடு தோன்றி, முப்பதாண்டுப் போரின் தொடக்கத்திலும் ஹஸ் என்பாரின் காலத்திலும் ஆற்றின் பெரும்பங்கைச் செருக்குடன் நினைவுகூர்ந்தது. இப்புதிய நாட்டில் பதினன்கு மில்லியன் மக்கள் வாழ்ந்தார்கள்; சிறந்த முறையில் வளர்ச்சியுற்ற தொழிற்சாலைகள் இருந்தன. இந்நாடு புதிய ஐரோப்பிய அமைப்பில் ஒரு குறிப்பிட்ட காலம்வரை ஊறுபடாத மூல முதற்பொருளாயிருந்தது,

## கிரீஸ்

ஐரோப்பாவின் எல்லா நாடுகளையும் பற்றிக் கூறுவதென்பது இயலாதது. பல்கேரியா மைய நாடுகளைவிட மிகக்குறைவாகத் துன்புற்றிருந்தது. மன்னர் ஃபர்டினண்டின் கீழிருந்ததைப் போலவே, முடியரசு தோற்றங்களிலும் அதே நிலையிலிருந்தது. ஆனல், பால்கன் நாடுகளின் (சமஷ்டியில்) இணைப்பரசாங்கத்தில் பயனுள்ளதாகப் பங்குபெறும் வாய்ப்பு இருந்ததாகத் தோன்றியது. கிரீஸின் வெற்றிகளையும் ஏமாற்றங்களையும் பற்றி ஏற்கனவே நாம் சிறிது கூறியுள்ளோம். ஆசியாவில் அதன் துணிவுச் செயல்களில் தோல்வியுற்ற போதிலும், சென்ற இருபதாண்டுகளில் நடந்த நிகழ்ச்சிகளால் மக்கள் தொகையிலும், வலிமையிலும் பெரிதளவு (ஆதாயத்தை) முன்னேற்றத்தை அடைந்திருந்தது. ஆசியாவிலிருந்து வந்து குடிபுகும் மக்கள் நுழைந்ததன் விளைவாக, ஏதென்ஸில் மக்கள் தொகை ஒன்றேகால் மில்லியனுயிற்று. வெனிஸீலாஸ் என்பவர், கிரீஸ் நாட்டின் பேராற்றலும் நுண்ணறிவும் கொண்ட தலைசிறந்த அரசியல் வல்லுநராயிருந்தார். துருக்கியர்களிடம் பெற்ற தோல்வியின் விளைவாக முடியாட்சி வீழ்ந்தது. தோல்வியுற்ற படைத்தலைவர்கள்மீது கிரேக்கர்கள் எடுத்த பழி வாங்கும் நடவடிக்கைகள், ஒரு விதத்தில், பிலப்போனீஷியப்

போரில் ஏதென்ஸ் மக்களுக்கு ஏற்பட்ட நிலைமையை நினைவுறுத்துவ தாயிருந்தது.

## பெல்ஜியம்

பெல்ஜியம், போரில், ஐரோப்பாவின் இரக்கத்தையும் பாராட்டு தலையும் வெளிவரச் செய்தது. நான்காண்டுகள்வரை அதன் ஆட்சிப் பகுதியில் சற்றேறக்குறைய எல்லாப் பகுதியுமே ஜெர்மானி யர்களின் கையிற் சிக்கியிருந்தது. புனரமைப்பு வேலைப் பிரச்சினைகள் மிகக் கடினமாயிருந்தன. ஃபிளமிங்ஸ் இனத்தாருட் பலர்—அந்நாட்டு மக்களிற் பாதியாயிருந்த ஜெர்மானியவினத்தினர் - ஜெர்மானியர் களுடன் சதியாலோசனை செய்து, பிரெஞ்சு மொழி பேசும் வாலூன் களிடமிருந்து பிரிந்து செல்லும் கருத்தில் பங்கு கொண்டனர். ஆனால், போரின் துன்பங்கள், ஒற்றுமையுணர்ச்சியை ஏற்படுத்தின. மன்னர் மக்களின் மதிப்பைப் பெற்றிருந்தார். 1830-ல் நடந்த புரட்சியினால் உளதாம் தன்மைக்குக் கொண்டு வரப்பட்டதிலிருந்து, வேறெக்காலத்திலும் இல்லாத அளவிற்கு, பெல்ஜியம் மிக உறுதியாய் அமைக்கப்பட்டிருந்தது.

இப்போரில், ஸ்பெயின் பங்கு கொள்ளவில்லை. ஆனால், ஐரோப் பாவில் பரவியிருந்த புரட்சி இயக்கங்களைத் தவிர்க்கவில்லை. 1931-ல் குடியரசு அரசாங்கம், மன்னரைப் பதவியிலிருந்து நீக்கி, பாராளு மன்ற ஆட்சியை மீண்டும் ஏற்படுத்தியது. சென்ற பதினைந்து ஆண்டுகளில் ஐரோப்பா பலவிதமானவையும் வியத்தகு தன்மை யுடையனவுமான மாற்றங்களைக் கண்டிருந்ததால், ஸ்பெயின் முடி யாட்சி மறைந்தது, எதிர்பார்க்கக் கூடியதைக்காட்டிலும் குறைவான அறிவிப்புடன் நிறைவேறியது. புதிய ஸ்பெயின், அதன் வரலாற்றில் பெரும்பங்கு கொண்டிருந்த வலுவான மாகாணம் உணர்ச்சி பிரிந்து செல்லும் மனவெழுச்சி முதலியவை வலுவுற்றதை விரைவிலேயே உணரலாயிற்று.

## சருவதேச சங்கமும் பன்னாட்டு நிகழ்ச்சிகளும்

### புதிய அமைதிக் கோட்பாடு

போரின் முடிவோடு, ஐரோப்பாவின் அரசியல் வாழ்க்கையிலும் ஒரு புதிய கூறு ஏற்படலாயிற்று. உலக அரசுகளுக்குள் சமா தானத்தை நிலைபெறச் செய்வதும் கூட்டுறவும் இப்போது அரசியல் வல்லமையின் நிலையானதாகவும் மிக முக்கியமானதாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. பத்தாண்டுக்கொரு முறை ஐரோப்பாவைத் தாக்கும் நோய்போன்றது போர் என்றும், அப்படி நோய்வருவதைத்

தள்ளிப் போட்டால் இது மிகவும் கொடுமையானதாகும் என்றும் மகாபிரெடரிக்குக் கூறியதைப் போன்று மக்கள் மேற்கொண்டு கூற வில்லை. எனினும், இதைப்போன்ற கருத்தைச் சிலர் இன்னும் கொண்டிருந்தனர். ஆனால், எல்லா நாடுகளின் அரசியல் வல்லமை பொருந்தியவர்களும், பொது உரைகளில் எல்லாம், 'சமாதானத்தை நிலைபெறச் செய்வது எல்லா நாடுகளுக்கும் உயர்நிலையான தேவை யானது; மற்றொரு பொதுப்போர் நாகரிகத்தின் ஊழ்திறம்பட்டதாக முடியும். போரைத் தடுக்க வழிகளைக் கண்டுபிடிக்கவேண்டும். கண்டு பிடிக்கவும் முடியும்,' என்று உறுதியாகக் கூறினார்கள்.

## சருவதேச சங்கம்; இன்மை

வழி கண்டுபிடிக்கப்பட்டுள்ளதெனப் பெரும்பாலாரான அரசியல் வல்லமை பொருந்தியவர் கூறினர். உண்மையாக அவ்வழி சிறிதும் தவறற்ற தல்லாவிட்டாலும், பெரும்பாலும் எந்த நெருக்கடியையும் சமாளிக்கத் தக்கதாயிருந்ததென்று கூறினர். இதற்குக் காரணம், உலக நாடுகளில் மிகுதியானவை சருவதேச சங்கத்தில் உறுப்புக் களாயிருந்ததுதான். நான்கு நாடுகள் இதிற் சேராமல் இருந்தன என்பது குறிப்பிடத் தக்கதாகும். அவை, ஜெர்மனி, அமெரிக்க ஐக்கிய நாடுகள், ரஷ்யா, துருக்கி என்பவை. சமாதானத்தில் போரின் மனவெழுச்சிகளைக் கொண்டிருந்த வல்லரசுகளின் அறிவற்ற செயலால், இச்சங்கத்தில் ஜெர்மனியைச் சேர்க்காமல் தள்ளி வைத் தனர். பிறகு இதிற் சேரும்படி அழைக்கப்பட்டபொழுது ஜெர்மனி சிறிதுகாலம் சேரமறுத்தது. இறுதியில் அறிவு சார்ந்த ஆலோசனைகள் பரவின. அது சங்கத்திற் சேர்ந்து அவையில் நிலையான உறுப் பாயிருந்தது. அச்சங்கம் தோன்றுவதற்கு அமெரிக்க ஐக்கிய நாடுகள் பெரிதும் உதவியாயிருந்தன. அதன் ஜனாதிபதியான வில்சனின் முயற்சியாலேதான், வேர்செயில்ஸில் கைப்யொப்பமிடப்பட்ட உடன் படிக்கை ஒரு பகுதியாகச் செய்யப்பட்டது. பின்புதான் மனித வினத்தின் ஒற்றுமையைக் கனவு கண்டவர்களுக்கெல்லாம் ஏமாற்றம் உண்டாயிற்று.

ஜனாதிபதி வில்ஸன், குடியரசுக் கட்சிக்கு நேர் எதிரியாயிருந்தார். அவருடைய எண்ணங்கள், கட்சி ஊக்கவடிப்படையில் பெரிதளவு தகர்க்கப்பட்டன. ஐக்கிய நாடுகள் ஐரோப்பாவின் அரசியல் இராணுவ அலுவல்களில் சிக்காமலிருப்பது என்பது நெடுங்கால மரபாயிருந்தது. ஜனாதிபதியாயிருந்த வாஷிங்டன், கடைசி மூச்சுள்ள வரையிலும், தனித்திருக்கும்படி தம்நாட்டு மக்களை வற்புறுத்திவந்தார். எனவே, உடன்படிக்கைகள், கூட்டுக்கள் முதலியவைகளில் முடிவு

செய்யும் அதிகாரத்தைப் பெற்றிருந்த செனேட்டுச் சபை, ஐரோப்பாவில் ஒப்பந்தத்தை நிலைபெறச் செய்வதில் பொறுப்பு ஏற்றுக்கொள்ள முடியாதென்று சங்கத்தில் அமெரிக்க நாடுகள் சேரும் யோசனையைத் தள்ளிவிட்டது. எனினும், சேருவதற்குச் சாதகமாகக் கணிசமாயும் உண்மையாயு மிருந்த பெரும்பான்மை வாக்குகள் இருந்தன வென்பதைக் குறிப்பிட வேண்டும். ஆனல், அரசியற்சட்டப்படி வெறுமையான பெரும்பான்மை மாத்திரம் போதாது. தேவையான வீதப்படிக்கு வாக்களிப்புக் கிட்டவில்லை. ரஷ்யா தொடக்கத்தில் இச்சங்கத்தை அவமதிப்புடனும் வெறுப்புடனும் கருதியது. அவர்களால் வெறுக்கப்பட்ட நடுத்தர வகுப்பினர் அவர்களுடைய ஆதிக்கத்தை மேலும் சிறிதுகாலம் நீடித்து நிலைபெறச் செய்வதற்காகக் கொண்ட ஒரு கருவியாக இச்சங்கம் கருதப்பட்டது. ரஷ்யாவும் உலக சமாதானத்தை விரும்பியது; ஆனல், உலகத்தில் சோவியத்து ரஷ்யாவின் கொள்கைகள் வெற்றிபெற்ற பின்புதான் சமாதானம் ஏற்பட முடியுமெனக் கருதியது.

முன்னதிகாரத்தில், சங்கத்தின் அரசியலமைப்பையும் தன்மையையும் பற்றிச் சுருக்கமாகக் கூறப்பட்டது. 1926-ல் ஜெர்மனி சங்கத்தில் சேர்ந்தபோது, சங்கத்தின் நிலையான உறுப்புக்களுடன் அது சேர்க்கப்பட்டதுடன், தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்புக்களின் எண்ணிக்கையும் ஒன்பதாக உயர்த்தப்பட்டது. அவ்வாறிருந்தும், சங்கத்தை உருவாக்குதல் சங்க அரசியலமைப்பில் மிக்க தொல்லை வாய்ந்ததாயும், மிகவும் மனநிறைவற்றதாயும் இருந்தது. சங்கத்தின் குணவியல்பு தவிர்க்க இயலாததாயிருந்ததால், ஓரளவு மாற்றப்பட்டது. வலுவில் தாக்குகிறவரை எதிர்த்துத் தொல்லைகொடுக்கக் கூடிய வாசகங்கள் நிறைவேறும்படி செய்யவில்லை. அதனுடன் அவற்றின் மதிப்பும் வாதத்திற் குரியதாயிருந்தது. ஆனல், மற்ருெரு புறத்தில், பல நாடுகளுக்குள் கூட்டுறவைத் தோற்றுவிக்க வழி செய்வதில் எதிர்பார்த்ததைவிடப் பயனுள்ளதெனச் சங்கம் மெய்ப்பித்தது. அதனுடன் உலக அரசியல் வல்லமை கொண்டிருந்தவர்களுள் நேச முறையில் தொடர்பு கொள்ளச் சங்கத்தின் கூட்டங்கள் மதிக்க வொண்ணுத வாய்ப்புக்களா யிருந்தன.

## சங்கமும் சமாதானமும்

இச்சங்கம், போரைத் தடைசெய்வதற்காக ஏற்பட்ட நிறுவனம் என்பதுடன் அதிகப் பயனுள்ளதாயுமிருந்தது. ஆனல், போரைத் தடுப்பதுதான் இதன் தலையாய பணியாயிருந்தது. இதில் வெற்றியில்லையென்ருல், இதனுடைய மற்ற நடவடிக்கைகள் எல்லாம் வி

வில் இயலாதனவாகும். முதற்கடமையில் இஃது எவ்வாறு வெற்றி கண்டது? உண்மையில் இதன் வெற்றி எவ்விதத்திலும் முழுமையான தன்று. உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டபின் விரைவிலேயே உலகில் போர்கள் நடந்தன. போலந்தில் ஒன்றும், ஆசியா மைனரில் ஒன்றும் ஆக மிக முக்கியமான இரு சண்டைகள் நிகழ்ந்தன. ஐரோப்பாவின் எதிர்காலத்தில் இச்சண்டைகள் பேராதிக்கம் கொண்டவையாயிருந்தன. ஆனால், இச்சண்டைகளுள் எதிலும் சங்கத்தின் கருவிகள் பயன்படுத்தப்பெறவில்லை.

## சங்கத்தின் வெற்றிகள்

1932-ல் ஜப்பானுக்கும் சீனாவுக்குமிடையே போர் மூண்டது. சங்கத்தால் முடிவு காணவியலாப் பிரச்சினைகளுமிருந்தன. போலந்தாலும், லித்துவேனியாவாலும் உரிமை கொண்டாடப்பட்ட வில்னாப் பிரச்சினையை இதனால் தீர்க்க இயலவில்லை. இதன் சிறப்புக் குறிக்கோள்களுள் ஒன்றான சிறுபான்மையோர் பெருந்தன்மையுடன் நடத்தப்படுவதையும் இதனால் பாதுகாக்க இயலவில்லை. எனினும், பொதுவாக அடுத்த பதின்மூன்றாண்டுகளில், பன்னாட்டு நிறுவனத்தின் இப்புதிய சோதனையில் நம்பிக்கையை ஊக்குவிக்கத் தேவையானவை இருந்தன. போலந்திற்கும் சைலீஷியாவிற்குமிடையே எல்லை பற்றிய கடும்பிரச்சினையைத் தீர்த்துவைப்பதில் மற்ற முறைகள் எல்லாம் தோல்வியுற்ற பொழுது, சங்கம் அதைத் தீர்த்துவைக்குமாறு கோரப்பட்டது. எடுத்துக்கூறப்பட்ட வழி இருமருங்கினருக்கும் மனநிறைவை உண்டு பண்ணவில்லை. ஆனால் அஃது ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆஸ்திரியப் பேரரசின் நிதி நிலையை மீட்சி செய்தது, இச்சங்கத்தின் சிறப்பான வெற்றிகளில் ஒன்றாகும். மிகக்கடுமையாக ஏற்படக் கூடியதாயிருந்த இரு போர்கள் இச்சங்கத்தால் தடுக்கப்பட்டன.

## இத்தாலியும் கிரீசும்

முதலாவதாக, 1923-ல் ஃபாசிஸ்டு ஆட்சியினால் பேருவகையிலிருந்த இத்தாலிக்கும் கிரீசிற்குமிடையே புண்படுத்தும் சச்சரவு எழுந்தது. இரத்தம் சிந்தியது. இத்தாலியர்கள் சிறிதளவு உயிர்ச் சேதத்துடன் கார்ஃபூவைக் குண்டுகளால் தாக்கினார்கள். சண்டை உண்மையிலேயே தொடங்கியபின், சண்டையைத் தொடர்ந்து நடைபெறுதவாறு தடுப்பதென்பது கடந்தகாலத்தில் எப்பொழுதும் இயலாததாயிருந்தது என்பது மெய்ப்பிக்கப்பட்டது. செருக்கும், அச்சமும், வெற்றியில் நம்பிக்கையும், தன்மதிப்புணர்ச்சியும் பிறவும்

போரைத் தூண்டுகின்றன. ஆனால், சங்கத்தின் துணைக் கருவிகள் உடனே செயலில் ஈடுபடுத்தப்பட்டன. வழக்கமான அரசியல் வல்திறம் சார்ந்த செயலாண்மை நிலையங்களால் போர் தடுக்கப்பட்டது.

## கிரீசும் பல்கேரியாவும்

ஆனால், இங்கிலாந்தின் பிரதமர், சங்கமும் அதன் செயலுமே அமைதியை நிலை நிறுத்துவதை நிகழக் கூடியதாகச் செய்தனவென அறிவித்தார். பின்பு, 1925-ல் கிரீசிற்கும் பல்கேரியாவிற்குமிடையே போர் மிகவும் நெருங்கியது. பல்கேரிய நாட்டு ஏஜென்டுகள் (தூதர்கள்) கிரேக்கர்களாற் கொலை செய்யப்பட்டார்கள். இரு நாடுகளுக்கு மிடையே காணப்பட்ட உறவு ஏற்கனவே பழுதடைந்திருந்தது. எனவே, உடனே போரிடும் நிலைமை ஏற்பட்டது. இவ்விஷயத்தில் சங்கத்தின் கருவி திறம்பட வேலை செய்தது. சங்க உடன்பாட்டிற் கண்டிருந்த கட்டளைகளைப் பின்பற்றுமாறு அழைக்கப்பட்டதைப் போரிடுபவரான இருவரும் ஏற்றுக்கொண்டனர்; இவ்வுடன்பாட்டிற்குப் பொருத்தமாக நடந்துகொள்ளுவதாகவும் வாக்களித்தனர். வழக்கிலிருந்த பொருள் வெளிநாட்டினரின் பரிசீலனைக்கு உட்படுத்தப்பட்டது. தீர்ப்பு ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஒரு சில வாரங்களில், மகிழ்ச்சியற்றிருந்த பால்கன் நாடுகளை மீண்டும் இரத்தப் பெரு வெள்ளத்தில் ஆழ்த்தியிருக்கக் கூடிய ஒரு சச்சரவு, நல்லிணக்கமாக முடிவு செய்யப்பட்டதுடன், மக்களின் உள்ளத்திலிருந்த நினைவும் மறைந்து போயிற்று. இத்தாலிய-கிரேக்கச் சச்சரவிலோ, அல்லது பல்கேரியா-கிரேக்கச் சச்சரவிலோ, பின்னர் எவ்விதச் சினங்கொள்ளுதற்கும் வழியேற்படாதிருந்தது குறிப்பிடத் தக்கதாகும்.

உலகின் பல நாடுகளின் உறவுகளில் இடையூறுகளை உண்டு பண்ணிய கடினமான பிரச்சினைகளையும் சச்சரவுகளையும் ஒப்பந்தம் வாயிலாக இணக்கமாக்கி வைப்பதில் சருவதேச சங்கத்தின் அமைப்புக் கருவிகள் போதுமானவையாயிருக்கும் என்பது முதலிற் கருதப்பட்டது. ஆனால், விரைவிலேயே அஃது அவ்வாறு அமையவில்லை என்பது தெளிவாயிற்று. அதன் அமைப்புக்கருவி அருமதிப்புள்ளதாயிருந்தது. அதன் உறுதி வெளியீடான நோக்கங்களும் கொள்கைகளும் புதிய சகாப்தத்தை உருவாக்குவனவாகவும் நிகழக்கூடியனவாகவும் கருதப்படலாம். ஆனால், அதன் திறமையும், அதிற் பொது மக்களின் நம்பிக்கையும் மிகவும் காலம் தாழ்த்தே வளரும் என்பது தவிர்க்க முடியாததாயிருக்கின்றது. அதன் அமைப்புக் கருவி போதுமானதாயில்லையென்று காண்பிக்கக் கூடியதும், அதன் முறைகளில் வலுவான ஐரோப்பியக் கருத்தில்லாதிருந்தது என்று வெளிப்படுத்தக் கூடியதுமான பிரச்சினைகள் விரைவிலேயே தோன்றலாயின.

ஐரோப்பாவை இரு பெரும்பிரச்சினைகள் எதிர் நோக்கலாயின. அவை, போர் இழப்பீடும் ஆயுதப் பரிகரணமுமாகும்.

## இழப்பீடுகள்

போர் இழப்பீட்டைப்பற்றி இங்குக் கூறுவதற்கில்லை. அப்பொருள் சிக்கலானது; கடினமானதுங்கூட. ஜெர்மனியும் அதன் நேச நாடுகளுமே போருக்குப் பொறுப்பாயிருந்தனவென்று வேர்செயில்ஸ் சமாதானம் அறிவித்தது. எனவே, அவற்றின் பகைவர்கட்குத் துன்பம் விளைவித்த எல்லா இழப்புக்களுக்கும் ஈடுசெய்வது அவற்றின் பொறுப்பென்றும் அறிவித்தது. இவ்வறிவிப்பை எதிர்த்து மறுப்பதை ஜெர்மனி நிறுத்தவில்லை. இழப்பீட்டின் நேர்மையின்மை பொதுவாக இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. ஜெர்மனியிடமிருந்து கேட்கப்பட வேண்டிய தொகையை உறுதி செய்யவும், எம்முறையில் தொகை செலுத்தப்பட வேண்டுமென்று முடிவு செய்யவும், இழப்பீட்டுச் சிறப்புக் குழு ஏற்படுத்தப்பட்டது. போருக்குப்பின், ஒப்பந்தத்தில் நிகழ்ந்த தோல்விகளுள் இது மிகவும் தாழ்நிலையானது. இதற்குக் காரணம், வேண்டுமென்றே குருட்டுத்தனமாய் நடந்துகொண்டது தான். செலுத்தும்படி கேட்கப்பட்ட பெருந்தொகைகளை ஜெர்மனியால் செலுத்த முடியாதென்பது மெய்ப்பிக்கப்பட்டது.

இதுபற்றி, கிரேட்பிரிட்டனும் பிரான்சும் நட்பை இழந்தன. கோரப்பட்ட தொகையைக் கொடுக்கத் தவறியதால் ஜெர்மனியை எதிர்த்து ரூர் மாவட்டத்தின்மீது மாத்திரம் 1923-ல் பிரான்சு படையெடுத்து வல்லந்தமாக அதைக் கைப்பற்றிக்கொண்டது. 1924-ல் அமெரிக்கரான திரு. டாஸ் என்பாரின் தலைமையின்கீழ் ஒரு திறமையான குழு, இப்பளுவைத் திரும்ப ஒழுங்கு படுத்துவதற்காகக் கூடியது. புதிய விகிதப்படி ஜெர்மனியாற் செலுத்த முடியுமென்று நம்பிக்கை கொள்ளப்பட்டது. ஆனால், இந்த நம்பிக்கையும் ஏமாற்றத்தை விளைத்தது. 1930-ல் ஓராண்டிற்குக் 'காலந் தாழ்த்துக் கடனைச் செலுத்துவது என்ற கருத்துத் தோற்றுவிக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந்த ஓராண்டில் எல்லா இழப்பீட்டுத் தொகைகளையும் செலுத்துவது', என்பது நிறுத்தி வைக்கப்பட்டது. விரைவிலேயே ஜெர்மனியில் தோன்றிய புதியவரசாங்கம், வலுவுள்ளதாயும் தன்னம்பிக்கை யுள்ளதாயும், இழப்பீடுகளைக் கொடுமை செய்து பெறுவது என்ற எண்ணத்தை நுண்ணுணர்வுக் குறைவுடன் செய்ததுடன் அவ்வாறு பெறுவதை அடியோடு கைவிடுதலையும் பெற்றது.

## படைக்குறைப்பு

படைக்குறைப்பு, சங்கத்தின் முக்கிய நோக்கங்களில் ஒன்றாக உறுதி செய்யப்பட்டிருந்தது. உலகத்தில் படைக்குறைப்பைப் பரப்பும் முறையில் ஜெர்மனியின் படைக்குறைப்பும் முதற்படியாக எடுத்துக் காட்டப்பட்டது. ஜெர்மனியின் படைக்குறைப்பு நடந்த போதிலும் உலகின் மற்ற நாடுகள் இதைப் பின்பற்றுவதில் மிகவும் காலம் தாழ்த்திருந்தன. படைக்குறைப்பு எனும் பொருளை நுணுகி ஆராய்ந்தபொழுது, அது பாதுகாப்பெனும் கருத்துடன் நெருங்கிய சார்பு கொண்டிருந்ததாக விரைவிலேயே தோன்றிற்று. (பாதுகாப்பு எனும் சொல், சருவதேச சங்கத்தின் ஒப்பந்தத்தின் முதலாவது வாக்கியத்தில் கூறப்பட்டுள்ளது.) அதனுடன் ஓரமயம் நிகழக்கூடிய தாக்குதலிலிருந்து, நாடுகள் பாதுகாப்புடன் இருப்ப தாக எண்ணினாலன்றி, அவை விருப்புடன் படைக்குறைப்பை மேற் கொள்ள மாட்டாவென்பது தோன்றியது.

## உடன்பாட்டின் பிளவு

சங்கத்தால் அளிக்கப்பட்ட பாதுகாப்புப் போதுமானதா? பன் னாட்டுச் சமாதானத்தையும் கூட்டுறவையும் மேலோங்கச் செய்வதே அதன் நோக்கங்களுள் ஒன்றாகும். ஆனால், நாடுகளுக்கிடையே கடுமையான சச்சரவு ஏற்படுமானால், அதன் காப்பு வாசகங்கள், உண்மையாகவே, மனிதனின் மனவெழுச்சியைக் கட்டுப்படுத்துமா அல்லது தடை செய்யுமா? சங்கத்தின் திறமை உலகத்தோருக்கு வெளிப்படையாகச் செயல் விளக்கமாக அளிக்காத வரையில், போர்க் கருவிகளைக் கீழே வைப்பது பாதுகாப்பாக இருக்குமா? மேலும், சங்கத்தின் காப்பு வாசகங்களை எவ்விதத் தனிச்சிறப்பான பொருட் பிளவும் ஏற்படாமல் போர் ஏற்படமுடியும் என்றும் தோன்றியது. இரு நாடுகள் சச்சரவிட்டாலும், அச்சச்சரவு மன்றத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டாலும், பதினான்கு நாடுகள் அடங்கிய மன்றம் ஒருமனமாயில்லாத முடிவு செய்தாலும் (இவ்வாறு ஏற்படுவது நிகழக் கூடியதன்று) அப்போது பிரச்சினையிலிருக்கும் இருநாடுகளும், அவற்றுக்குச் சரியெனத் தோன்றும் நடவடிக்கையெடுக்க உரிமை யுள்ளவைகளாகின்றன. அஃதாவது, போரிலீடுபடுவது என்பதாம். போர்க் கருவிகளைக் குறைத்தல் என்பது, பாதுகாப்பு எனும் கருத்து, உண்மையான பாதுகாப்பு என்ற மிகையானவெண்ணத்துடன் ஏற்பட்டால்தான், இயலும்.

## புரோட்டகோல்

ஐரோப்பிய அரசியல் வல்லுநர்கள் இப்பிரச்சினையில் சங்கத்தின் மன்றம், சபை முதலியவற்றுடன் சேர்ந்து கடுமையா யுழைத்தார்கள். ஐரோப்பாவின் வாழ்க்கையைத் திக்குமுக்காடச் செய்த நிலைமையி லிருந்து ஒருவழியைக் காண்பதற்கு உண்மையான பேரவாக் கொண்டிருந்ததைப் போன்று, தேசிய ஐயப்பாடுகளும் குறிப்பிடத் தக்கவையா யிருந்தும், உண்மையில், முக்கியம் வாய்ந்த சிலவே நிறைவேற்றப்பட்டன. திரு. இராம்ஸே மாக்டனல்டு என்பாரின் கீழ் அமைந்திருந்த தொழிற்கட்சி அரசாங்கம், உடன்படிக்கைப் பேச்சுக்களில் வரையப்படும் முதற்குறிப்பு என்று வழங்கப்படும் முறையைக்கொண்டு இக்கடினமான பிரச்சினையைத் தீர்க்க முயன்றது. இது பன்னாட்டு வழக்குகளுள் ஒவ்வொன்றும் நடுவர் தீர்ப்புக்கு உண்மையிலேயே விடப்பட வேண்டுமென்றும், ஓரமயம் போர் ஏற்பட்டால், வல்லந்தமாகத் தாக்குகிறவரைத் தெரிந்துகொண்டு பொதுமக்களின் வசைச்சொற்கு இலக்காகும்படி வெளிப்படுத்த வேண்டும் என்றவைகளை உறுதி செய்வதற்காகக் கருத்தைத் தெரிவிக்கும் தொடராகும். ஆனால், தொழிற்கட்சி அரசாங்கம் வீழ்ச்சி யுற்றது. புரோட்டகோலின் யோசனைகளிற் பெரும்பாலான, அவற்றை ஏற்றுக்கொண்ட நாடுகளின்மீது அதிகப்படியான பொறுப்பை ஏற்படுத்தக் காரணமாயிருக்கின்றன என்பதைக்கொண்டு மறுக்கப்பட்டன.

## ரைன் எல்லை

சங்கத்தின் செயல்முறையைப் பொதுவாகச் சரி பார்த்து மாற்றம் செய்வதைக்காட்டிலும், பிரச்சினைகளை விவரமாக நுணுகி ஆராய்வது எளிதாயிருந்தது. உலகிலும், ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளிலும் மிக நெருக்கடியான நிலைமைகள் காணப்பட்டன. ஆனால், பிரான்சிற்கும் ஜெர்மனிக்குமிடையே உறவும் ரைன் எல்லைப்புறமும் மிக்க பேரிடராயிருந்தன. மேற்கு எல்லை சம்பந்தப்பட்டவரை வேர்செயில்ஸ் உடன்படிக்கையின் முடிவை ஏற்றுக்கொள்ள ஜெர்மனி இணங்கியதுடன், போலந்து எல்லைபற்றித் திருத்தம் செய்வதில் போர்புரியும் எண்ணத்தைக் கைவிடுவதற்கும் இணங்கியது. இதுபற்றிய பேச்சு வார்த்தைகளை நடத்தியதில் மூவர் பெயர்கள் தகைசான்றனவாய்த் தொடர்பு கொண்டிருந்தன. ஜெர்மனியில் ஸ்ட்ரெஸ்மான், பிரான்சில் பிரயண்டு, இங்கிலாந்தில் சர் ஆஸ்டின் சேம்பர்லின் என்பவர் இம் மூவராவர்.

## லொகார்னே ஒப்பந்தம்

லொகார்னே ஒப்பந்தம், ஜெர்மனி, பெல்ஜியம், கிரேட்பிரிட்டன், பிரான்சு, இத்தாலி என்னும் நாடுகளின் பிரதிநிதிகள் அடங்கியதும் 1925-ல் லொகார்னே எனுமிடத்திற் கூடியதுமான கூட்டத்தில், இறுதியாக முடிவு செய்யப்பட்டது. அஃதாவது எந்த அரசும் வேர் செயில்ஸ் ஒப்பந்தப்படி அப்போதுள்ள ஜெர்மனியின் குறிப்பிடப் பட்டுள்ள மேற்கு எல்லைக்கு ஒவ்வொருவரும் செயல் எதிர் செயலான முறையில் பாதுகாப்பளிக்க வேண்டுமென்றும், எல்லா வழக்குகளும் நடுவர் தீர்ப்புக்கோ அல்லது முறைமன்றச் சார்பான முடிவிற்கோ விடப்பட வேண்டும் என்றும் முடிவாயிற்று. இவ்வுடன்பாட்டை எந்த அரசு முறித்தாலும், அல்லது மற்ற அரசுகளில் எந்த அரசின் மீது எதிர்ப்பான இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டாலும், அப்பொழுது துன்புறுத்தப்பெறும் நாட்டின் உதவிக்காக உடனே கையொப்பமிட்டுள்ள மற்ற நான்கு அரசுகளும் ஒன்று சேரும் என்பதும் குறிப்பிடப்பட்டிருந்தது. லொகார்னே ஒப்பந்தம் சங்கத்தின் நோக்கத்திற்கு எவ்விதத்திலும் எதிர்ப்பாயில்லை. சங்கத்தின் செயல்முறை, இவ்வொப்பந்தத்தில் முழுவதும் மேற் கொள்ளப்பட்டது. சங்கத்தின் கொள்கைகளை ஓரிடத்தை அல்லது ஒரு பிரச்சினையைக் குறித்துச் சிறந்த விளக்கவுரையுடன் செயற்படுத்து தலாயிருந்தது. லொகார்னேவில் ஏற்றுக்கொள்ளப்பட்ட உடன்படிக் கையின் கட்டுப்பாடுகளைச் சம்பந்தப்பட்ட நாடுகள் ஏற்றுக்கொண்டன. அதனுடன், பாதுகாப்பளித்தல், படைக்குறைப்பு முதலியவைகளை நோக்கிச் செய்துகொள்ளப்பட்ட மேற்போக்கான இவ்வொப்பந்தம், பொதுவாகக் கருதப்பட்டது. ஆனால், படைக்குறைப்புத் தொடர்ந்து ஏற்படவில்லை. நாடுகள் பின்னரும் படைகளையும், கப்பற்படை களையுமே உண்மையான பாதுகாப்பாகக் கருதின ; பெரும்போர் கற்பித்த படிப்பினைகளைத் தெரிந்துகொள்ளவில்லை. அதனுடன், போரையுருவாக்கிய நவீன விஞ்ஞானம், நவீனப் பொருளாதாரத் தொடர்புகள் முதலியவைகளாலுண்டான மாற்றத்தையும் அறிந்து கொள்ளவில்லை.

## ஐரோப்பாவும் உலகமும்

இருபதாம் நூற்றுண்டில், ஐரோப்பிய வரலாற்றைத் தன்னுள் அமைந்ததாகக் கருத முடியாதென்பது தெளிவாகக் காணப்பட்டது. எந்த நாட்டின் வரலாற்றையும், மற்ற நாடுகளின் நோக்கங்கள், செயல்கள் முதலியவைகளைக் கருதாது கூற முடியுமென்பதும் இயலாத தொன்றென்பதும் தெளிவாயிற்று. எனவே, தேசிய வரலாறு ஐரோப்பிய வரலாற்றுடன் ஒன்றுகக் கலக்கும் தன்மையை உடையதா

கிறது. ஆனால், இப்போது ஐரோப்பிய வரலாறுமட்டும் போதாது என்பதும் தெளிவுறுகிறது. எப்பொழுதுமே, ஐரோப்பா, அதனை அறியப்படாமலே, வெளி உலகால் வயப்படுத்தப்பட்டிருந்ததென்பதிற் சிறிதும் ஐயமில்லை. ஆனால், இப்பொழுது, அமெரிக்கா, ஆசியா, ஆப்பிரிக்கா, பசிபிக்கு நாடுகள் முதலியவற்றுள் அழுத்தம் தெளிவாயும் தொடர்ந்தும் உணரப்பட்டது; உலகம் முழுவதும் இன்றியமையாத ஒரு பொருளாயிருக்கிறதுடன், இப்பொழுது நாமெளிதில் எண்ணிப்பார்க்கக் கூடியதாயும், பாராட்டுவதாயும் உள்ளது. சருவதேச சங்கம் மிக முக்கியமானதாயிருந்த உலக நிறுவனங்களின் பல்வேறியக்கங்களில் சேருவதுபற்றி, ஐரோப்பா வல்லாத நாடுகள் சற்றுத் தயக்கம் கொண்டிருந்தன. சருவதேச சங்கத்தின் தோற்றத்திற்குப் பெரிதும் துணையாயிருந்த ஐக்கிய நாடுகள், இச்சங்கத்தை மறுத்தன. சங்கத்தில் ஜெர்மனி சேர்க்கப்படும்போது பிரேஸில், மன்றத்தில் அதற்கு நிலையான இடம் வேண்டும் என்ற கோரிக்கையுடன், சங்கத்திலிருந்து விலகியது. நெடுந்தொலைவி லிருந்ததும் கிரேட்பிரிட்டனின் டொமினியன்களாயிருந்த நாடுகளும், ஐரோப்பியப் பிரச்சினைகளைத் தாய்நாட்டின் கண்கொண்டு பார்க்கவில்லை.

## ஐரோப்பாவும் ஐக்கிய நாடுகளும்

எனினும், உலகில் எம்முனையிலும் போர் மூளக்கூடுமென்பது மிகுதியான அளவில் தெளிவாயிற்று. அதனுடன், போர் எங்கு ஏற்பட்டாலும், அது நாகரிக நாடுகள் எல்லாவற்றையும் தழுவக் கூடுமென்பதும் தெளிவாயிற்று. மனித இனத்தின் பொது அக்கறைகளில் மிகவும் தெளிவானது சமாதானத்தை நிலைபெறச் செய்வதாகும். சங்கத்தில் அவை உறுப்புக்களாயிருப்பதை ஐக்கிய நாடுகள் மறுத்தன. ஆனால், அவை சங்கத்துடன் நெருக்கமான நட்புக்கொண்டு ஒத்துழைத்தன; சமாதானத்தை நிலைபெறச் செய்வதற்கும் முக்கியமான யோசனையைக் கூறின. பிரயண்டு மூலம், பிரான்சு, முதல் முதலாக, போர் என்பது சமூகத்திலிருந்து விலக்கப்பட்டதாகக் கூறியது. பின்பு, ஐக்கிய நாடுகளின் வெளிநாட்டு அமைச்சரான திரு. கெல்லாக்கு என்பார், எல்லா நாடுகளும், போரிடுவதை நாட்டுக் கொள்கையின் ஒரு கருவியாகக் கொள்வதில்லையென அறிக்கையில் கையொப்பமிடுவது வாயிலாக வாக்குறுதி செய்யவேண்டுமென்ற முன்மொழிவைச் செய்தார். இவ்வறிக்கை மிகச் சுருக்கமானதாயிருந்ததுடன், நம்பிக்கை, நோக்கம் முதலியவைகளின் எளிய அறிவிப்பைத் தவிர வேறொன்றையும் தழுவியதாயில்லை.

முதலில் இம்முன்மொழிவு பற்றுறுதியில்லாமலும் நம்பிக்கையில்லாமலும் ஏற்கப்பட்டது. போரிட்டுக்கொண்டிருந்த உலகிற்கு

வேறு ஓர் உள்ளார்ந்த சொற்றொடர் சமாதானத்தை அளிக்க முடியுமா? உண்மையில் அதன் கூட்டு மதிப்புத்தான் என்ன? எடுத்துக்காட்டாக, படையெடுப்பவனை விலக்குவதற்கு ஒரு நாட்டிற்குச் சுதந்தரமில்லை யென்பது ஏற்பட்டதா? உண்மையில் அவ்வாறில்லை. இது மனிதனுக்கு இயற்கையில் ஏற்பட்ட உரிமைகளின் ஒரு பகுதியென அறிவிக்கப்பட்டது. அப்பொழுது அது தற்காப்புக்கான போரைத் தடைசெய்யவில்லை. பெரும்போரில் காரணமில்லாது ஏற்பட்ட தாக்குதலுக்கு எதிராகத் தங்களைப் பாதுகாத்துக்கொண்டதாக, ஜெர்மனி, பிரான்சு, கிரேட் பிரிட்டன், ஐக்கிய நாடுகள் உரிமை பாராட்டின. தற்பாதுகாப்பிற்காகப் போருக்கு இசைவளிப்பதானால், எல்லாப் போர்களுக்கும் இசைவளித்தாக வேண்டும். அப்படியானால், நடைமுறையில் அறிக்கையால் ஏதாவது பயனுண்டா?

## கெல்லாக்கு ஒப்பந்தம்

எனினும், அமெரிக்கர்கள் ஊக்கத்தை இழக்கவில்லை; இறுதியில் அவர்களது அறிக்கையில் பெரும்பாலும் உலக அரசாங்கங்களுடைய கையொப்பங்களைப் பெற்றார்கள். ரஷ்யா கையெழுத்திட்டது. துருக்கியும் சேர்ந்தது. முதலில் கையெழுத்திட்டவற்றுள் ஜெர்மனியும் ஒன்றாகும். எல்லா நாடுகளும் நாட்டுக்கொள்கையில் போரைச் சட்டப்படி அமைந்துள்ள ஒரு கருவியாகத் தாங்கள் கருதவில்லையென அறிவித்தன. செயல் முறையில் அதன்விளைவு என்ன? உலகிற் பன்னாட்டுச் சமாதானத்தின் செயல்நோக்கத்தை முன்னேற்ற மடையச் செய்ததாகத் தோன்றியது. சருவதேச சங்கத்திற்குப் போட்டியாகவோ, அல்லது எதிரியாகவோ செயற்படுவதற்கு மாறாக, அதன் வேலையை உருவாக்குவதற்குத் துணைபுரிந்தது. ஏனென்றால், போரைத் தவிர்க்க வேண்டுமானால், அதனிடத்தில் வேறு ஏதாவ தொன்றைக் கொள்ள வேண்டும். சச்சரவுகள் ஏற்படத்தான் செய்யும். அவற்றைத் தீர்த்துக்கொள்ள வேறு வழியில்லையென்றால், அது வல்லந்தச் செயல்களாலேதான் முடியும். சங்கம் மாத்திரமே நடுவர் தீர்ப்பு, சமரசம் முதலியவை பற்றிக் கவனத்துடன் ஆராயப் பட்ட திட்டத்தைக் கொண்டிருந்தது. சங்கமில்லாவிட்டால், அறிக்கை நீர்மேல் எழுதியதற்கொப்பாகும். சங்கத்தின் உளதாம் தன்மை யாற்றான், உலகத்தின் மிகப் பெரிய பிரச்சினைகளில் மக்களின் கவனத்தைத் திருப்புவதற்கான தூண்டுதலையுடையதாக அறிக்கையைச் செய்தது. எனவே, இவ்வொப்பந்தம், முதலில் எவ்வளவு இயலுமென்று எண்ணியதைக்காட்டிலும், சங்கத்தின் கருவிகளுடன் ஐக்கியநாடுகள் மிக அதிகமாக ஒத்துழைப்பதைப் பயனாகத் தோற்றுவித்தது.

# 24. இறுதியாண்டுகள்

## 1933-ல் ஏற்பட்ட நெருக்கடி

1933ஆம் ஆண்டை, நவீன ஐரோப்பிய வரலாற்றைப் பகுக்கும் ஒரு கோடாகக் கொள்ளலாம். மக்கள் அந்நாள் வரையில், பெரும் போரைத் தொடர்ந்து, சிறந்த சமாதானம் ஏற்படும் எனும் நம்பிக்கையை உறுதியாகக் கொண்டிருந்தார்கள். ஐரோப்பாவின் நிலைமையிற் பல அமைதியற்ற கூறுகளிருந்தன. எதிர்பார்த்தவாறு, முழுவுலகையும் பற்றிக்கொள்ளுதலைச் சருவதேச சங்கம் பெறவில்லை. ஐக்கிய நாடுகள், சங்கத்தில் சேராதிருந்தது முக்கியமானது. வேறு சில நாடுகளும் சேராதிருந்தன. அதனுடன் பலநாடுகளின் ஆதரவு சிற்றூர்வ முடையதாயிருந்தது என்பது தெரிந்தது. கமாலின் கீழ் உருவான புதிய துருக்கி, மேற்கு ஐரோப்பாவில் ஆட்சி செய்த மக்கள் தன்மை, தாராளப்போக்கு முதலியவை நிரம்பிய கருத்துக்களுக்கு நேர்மாறாயிருந்தது. ஐரோப்பியப் பண்பாட்டின் எல்லைக்கு வெளியிலிருந்த மக்களாலான துருக்கியின் வளர்ச்சியைத் தள்ளுபடி நீக்கிக் கழிவு செய்தாலும், முசோலினியின் கீழிருந்த இத்தாலியை அவ்வாறு கருதவியலாது. இத்தாலி பின்னும் சிறிது காலம் சங்கத்திலிருந்து வந்தது. ஆனால், டூசின் (Duce)—முசோலினி இப்பெயரால் அதிகார முறையில் வழங்கப்பட்டார்—உரைகளெல்லாம், போரையும் வலிமையையும் மிகைப்படுத்திப் புகழ்வனவாயிருந்தன. ஜினிவாவில் நடைபெற்ற மன்றம், சபை ஆகிய இவற்றின் கூட்டங்கள், முன்பிருந்த ஆர்வத்தையும் நம்பிக்கையையு மிழந்தன. ஆனால், இவையனைத்தும் இவ்வாறிருந்தும், ஐரோப்பா மீண்டும் பெரும் போரின் துன்பமும் இழிவும் ஏற்படுத்துவதற்கு உடன்பட்டது என்றும் படுகுழியின் ஓரத்திற்குக் கொண்டுவரப்படும்பொழுது சுருங்கிப் பின்னிடுமென்றும் பலர் நம்பிக்கையை உறுதியாகப்

பற்றிக் கொண்டிருந்தனர். ஆனல், 1933-ல் ஹிட்லர்—அவர் எப்பொழுதும் இப்பெயரால் அறியப்படுபவர்—ஜெர்மானியப் பேரரசின் சான்ஸலராஞர். அதுமுதல், வல்லந்தத்தைச் செய்யும் சத்திகளும், பழைய இராணுவப் பேரவாக்களைப் புதுப்பிக்கக் கூடியதும் மிகைப் படுத்தக் கூடியதுமான ஆற்றல்களும் மேலோங்குவது தெளி வாயிற்று. முன்பும் பின்பும் இருந்த சமூக அமைப்பின் குறிக் கோள்களை ஒப்பிட்டுப் பார்ப்போம்.

## லிபரலிசத்தின் வீழ்ச்சி

ஆங்கிலேயர்களுடையவும், அமெரிக்கர்களுடையவும் ஆன அரசியல் அமைப்புக் கருத்துக்கள் 19ஆம் நூற்ருண்டில் சிறப்பாக மேலோங்கியிருந்தன. பிரெஞ்சுப் புரட்சியின் செல்வாக்காலும் இக் கருத்துக்கள் மீண்டும் வலுவடையச் செய்யப்பட்டிருந்தன. இவற்றுடன், பிரான்சின் முன்னேற்றத்தாலும், பிரெஞ்சுக் கருத் தாளர்களின் போதனையாலும், கருத்துக்கள் உரமூட்டப்பட்டன. பலர், சுயேச்சையானதும், தளர்ச்சியுடன் அமைக்கப்பட்டதுமான அரசைக் காண்பதில் ஆதரவு கொண்டிருந்தனர். நாட்டில் வாழும் பலர்—பெரும்பாலார்—ஆட்சியாளர்களை அமர்த்துவதில் வாக் குரிமையை அளிக்கக் கூடியதும், மக்கள் தேர்ந்தெடுப்பதில் அமையக் கூடியதும், தனிப்பட்ட குடிமகனுக்குப் பெரிதும் உரிமையை அளிக்கக் கூடியதுமான அரசை ஆதரித்தனர். குடிமக்களுக்குத் தேவையான உரிமைகள் வரையறுக்கப்பட்டன. அவை, பேச்சுரிமை, நிறுவன அமைப்புரிமை, வெளியீட்டுரிமை, ஒருதலை முடிவின் பயனுகக் கைது செய்யப்படுவதிலிருந்து உரிமை, வாக்களிப்பது வாயிலாக அரசாங்கத்திற் பங்குகொள்ளும் உரிமை என்பனவாம். அந்நூற்ருண்டின் முடிவுக்குள்ளாகவே, மேற்கு ஐரோப்பாவில் இக்கொள்கைகள் பொதுவாக வலுவடைந்து கொண்டிருப்பதாகத் தோன்றின. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வலிமையும் வெற்றியும் மக்களின் திறமைக்கும் மகிழ்ச்சிக்கும் மேற்கூறிய உரிமைகள் இன்றியமையாதவை எனும் நம்பிக்கையை உரமூட்டின. சுருங்கக் கூறின், பெரும்போரில் இக்கருத்துக்களே வெற்றி பெற்றன என்பதுடன் வேர்செயில்ஸ் சமாதானத்தின் வாசகங்களை அமைப் பதிலும் கட்டளையிட்டன எனலாம். உலக அரசாங்கத்தை ஏற்படுத்து வதற்குச் சருவதேச சங்கம் இக்கருத்துக்களைப் பயன்படுத்திற்று.

## ரஷ்யாவில் சோஷலிஸத்தின் எதிர்ப்பு

ஆனல், அரசாங்கத்தின் தாராளமான அரசியலமைப்புக் கருத்தைப் பற்றித் திறனுய்வு செய்கிறவர்களும் எதிர்க்கிறவர்களும்

இல்லாமலில்லை. இக்கருத்திற்குப் பேரிடரை விளைவிக்கும் எதிரியைச் சோஷலிசத்திலும் அதன் பல்வேறு உருவங்களிலும் காணல் வேண்டும். ஏனெனில், சோஷலிஸ்டுகள், தங்களுக்கு எவ்வளவு மாறுபட்டிருப்பினும், தாராளமான கொள்கையுடைய அரசாங்கம் நவீனவுலகின் பிரச்சினைகட்கு முடிவு கண்டதாகக்கூறும் உரிமைகளை எதிர்த்து அறைகூவுவதில் ஒன்ருய் இணைந்திருந்தார்கள்; ஒவ்வொரு நவீன அரசாங்கத்திலும் மக்கள் தொகையிற் காணப்பட்ட பெருந்தொகுதியினரின் துன்புற்ற நிலையைப் பற்றி, அழுத்தமாகக் கூறினுர்கள். மக்களாட்சியின் கொள்கைகளைப் பற்றி அவர்கள் சிறிதும் கவலை கொள்ளவில்லையென்ருலும், அவர்களுடைய நோக்கங்களை அடைவதற்கு மக்களாட்சியின் கருவியைப் பயன்படுத்திக் கொள்ள ஆயத்தமா யிருந்தார்கள்; அரசாங்கத்தினிடமே எல்லா அதிகாரங்களையும் ஒப்படைப்பதோடல்லாமல், 'தேவையான உரிமைகளை'ப் புறக்கணித்தும் கூறினுர்கள். அளவிறந்த அதிகாரத்தைக் கொண்ட அரசாங்கம், அவர்களது குறிக்கோளாகும். அவ்வரசாங்கம் முழுமையான மக்கள் தொகையில் பொருள்வள நலத்தைப் பாதுகாப்பதில் அதன் அதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டுமென்பதும், அக்குறிக்கோளில் அடங்கியதாகும்.

1848-ல் நடந்த புரட்சிகளின்மீது எவ்வாறு இவ்வியக்கம் ஆட்சி புரிந்ததென்பதைக் கண்டோம். அதனுடன், 1870-ல் பாரிசில் எவ்வாறு இஃது ஒரு நொடிநேரம் வெற்றி கொண்டதென்பதையும் கண்டோம். பெரும்போருக்குப்பின் ரஷ்யாவில் இதன் முழு வெற்றியையுங்கூட நோக்கினேம். அங்கு ஒரு மிகப்பெரிய அரசாங்கம் தோற்றுவிக்கப்பட்டுக் கார்ல் மார்க்ஸின் சோஷலிஸக் கொள்கைப்படி அமைக்கப்பட்டது. அஃது ஏற்றுக்கொண்ட பழைய பொருளில் 'உரிமை' எனும் சொல் ஆட்சியில் இடம் பெறவில்லை. அரசாங்கத்தினிடம் சட்டம் ஒரு கருவியாயிருந்ததைத் தவிர்த்து, அதன்மீது ஏற்பட்ட தடையா யிருக்கவில்லை. லெனினும் அவருக்குப் பின் ஸ்டாலினும், மகாபீட்டர் அல்லது பிரஷ்யா மன்னரான பிரெடரிக்கு நெப்போலியன், பிஸ்மார்க்கு என்பவர்க ளிடமிருந்த தனிப்பட்ட சொந்தமான அதிகாரங்களைக்காட்டிலும் அதிகமாகவே துய்த்தார்கள். இச்சோதனை, வெற்றி தோல்வியைப் பொறுத்ததாயிருந்தது. ஒரு புதிய சமுதாயத்தை ஏற்படுத்துவதில் ரஷ்யா வெற்றி பெறுமானல், உலக வரலாற்றிற்கே அஃது உறுதியான இன்றியமையாமை வாய்ந்த நிகழ்ச்சியாயிருக்கும். இப்புதிய சமுதாயமே, மக்களின் மகிழ்ச்சி, அது வளரச்செய்யும் நாகரிகத்தின் உருவ மாதிரி முதலியவைகளால் தானே அனைவருக்கும் பரிந்து கூறப்படுவதாயிருக்க வேண்டும். ரஷ்ய முறையின் விளைவைப்பற்றிக் கூறுவதற்கு மேலும் பல நாள்கள் செல்ல வேண்டும். அவ்வர

சாங்கம் நெடுநாளைக்கு முன்னரே தோற்கடிக்கப்படுமென்பது அடிக்கடி முன்கூட்டி யறிவிக்கப்பட்டது; எனினும், இது வரையில் தோல்வியுறவில்லை.

அரசாங்கத்தின் கருவி வளையாதது, தணியாதது திறனுய்ந்து குறை கூறுதலையோ அல்லது வெளி யோசனைகளையோ ஏற்காதது —தொடர்ந்து செயல்படுகிறது. ஆனால், அதன் முக்கியப்பணியாளர்களின் பற்றுறுதியைக் கொள்ள முடியாததென்பது தெளிவாயிற்று. ஜாகொபின்கள் அவர்களுடைய கூட்டாளிகளைத் தூக்குமேடைக்கு அனுப்பிய பொழுது, பிரெஞ்சுப் புரட்சி அதன் குழந்தைகளையே விழுங்குவதாகக் கூறப்பட்டது. தொடக்கத்தில் ரஷ்யப்புரட்சி, அதற்கு முன் ஏற்பட்ட பிரெஞ்சுப் புரட்சியைப் பின்பற்றுவதாகத் தோன்றவில்லை. டிராட்ஸ்கி என்பவர், அரசாங்கத்துடன் கொடுமையாகச் சச்சரவிட்டார். ஆனால், அவர் நாடு கடத்தப்பட்டார்; தூக்கு மேடைக்கு அனுப்பப்படவில்லை. அது முதல், எத்தனையோ முறைகள் மாறிவிட்டன. ஸ்டாலினின் கையில் அரசாங்கம் மேன்மேலும் தனிப்பட்ட சொந்தமானதாக வளர்ந்ததுடன், சோஷலிஸத்தின் குறிக்கோள் நெறி, அதற்குட்பட்ட பங்கைப் பெற்றது.

அரசுக்கெதிராகச் சதி செய்தல், வேவு பார்த்தல் போன்ற குற்றம் புரிந்ததாகக் குற்றஞ்சாட்டப்பட்ட அதிகாரிகளின் வழக்கு விசாரணைகள் பல—கணக்கற்றவை—நடந்தன. இவ்விசாரணைகளில் எல்லாம் பெரும்பாலும் குற்றவாளி என மெய்ப்பிக்கப்பட்டுக் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டது. குறிப்பாகப் படைத்தலைவர்கள் துன்புற்ருர்கள். அதனுடன் சோவியத்துக் குடியரசின் பழைய வெற்றி வீரர் அனைவரும் நாடு கடத்தப்பட்டனர்; அல்லது தூக்கு மேடையை அடைந்தனர். இதைப் போன்ற சூழ்நிலை, பிரான்சில் குடியரசின் வீழ்ச்சிக்கும் நெப்போலியனின் எழுச்சிக்கும் வழி வகுத்தது. ஆனால், ரஷ்யாவில் ஸ்டாலினே நெப்போலியன் போன்றவராவார். ரஷ்யச் சோதனை பெரும்பாலும் மற்ற நாடுகளிலும் நடைபெறும் என்பதற்கான அடையாளங்கள் இப்போது காணப்படவில்லை. பெரும்பாலும் எல்லா நாடுகளிலும் கம்யூனிஸ்டு கட்சிகள் இருக்கின்றன. சில வேளைகளில் அவை, ரஷ்யாவின் நேரிடையான ஆணையின்கீழ் இயங்குகின்றன. ஆனால், அந்நாடுகளுக்குச் சொந்தமான தொழில் இயக்கங்கள்மீது இக்கட்சி அதிகாரம் செலுத்தவில்லை. அதனுடன் முழுமையாக எல்லா நாடுகளின் வாழ்க்கையின்மீதும் ஆளும் திறமை பற்றி வெளிப்படையாக எதிர்பார்ப்பதற்குமில்லை.

## சர்வாதிகார நாடுகள்

பெரும்போருக்குமுன், தாராளப்போக்குக் கொள்கையும் சோஷலிஸமும் அக்காலத்துக் காட்சிகளாயிருந்தன. போர் முடிந்ததிலிருந்து இருபதாண்டுகளின்—முக்கியமாக இறுதிப் பத்தாண்டுகளின்-தனிச்சிறப்பான கூறு, சர்வாதிகார அரசாங்கத்தின் தோற்றமேயாகும். ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு கருத்து நோக்கத்திலும் மக்களின் வாழ்க்கையின்மீது முழுமையான கட்டுப்பாட்டைப் பெற்றுள்ள நாட்டைப் பொதுவாக இப்பெயராற் சுட்டுகிறோம். இங்கு அரசாங்கம் ஒரே மனிதனின் கையிலிருக்கிறது. இத்தாலியில் முசோலினியின் எழுச்சியையும் துருக்கியில் கெமால்பாஷாவின் செயல் விளைவையும் ஏற்கனவே கண்டோம். இவ்விரு நாடுகளும் புதிய அரசு முறைக்கு எடுத்துக்காட்டாக, 1933-ல் இவற்றுக் கொப்பானதாயும், வியக்கத்தக்க வெற்றியுடனும் ஜெர்மனியை ஹிட்லர் அமைக்கும்வரை இருந்தன.

இப்புது முறை அரசாங்கத்தில், தனிப்புதுமை யொன்றுமில்லை. இது முதல் இரண்டு நூற்றுண்டில், ரோமப் பேரரசுடன் ஒத்திருக்கும் குணங்களைக் கொண்டிருந்தது. எந்தக்காரணங்களின் அடிப்படையில் அப்பேரரசு கிறித்துவத் திருச்சபையுடன் போரிட்டதோ, அதே காரணம் ஹிட்லரின் அரசாங்கத்தைக் கிறித்துவ சமயத்தின் எல்லா அமைப்புக்களுடனும் கலக்கும்படி செய்தது. ஏனென்றுல், அம்மாதிரியான அரசாங்கங்கள் மக்களின் முழுமையான கீழ்ப்படிதலை உரிமையாகக் கொள்ளுகின்றன. அதற்கு எதிரியாக மெய்ப்பிக்கக்கூடிய எந்த அதிகாரமும் நிலைத்திருப்பதையும் அதனுல் பொறுத்துக்கொள்ள இயலாது. கடந்த காலத்திலிருந்த வலிமையான அரசாங்கங்களெல்லாம், சற்றேறக்குறையச் சர்வாதிகார முறையை விரும்பிச் செல்வனவாயிருந்தன. இவை, உரிமையையும் அதன் பல்வேறு தோற்றங்களையும் அரசாங்கங்களைச் சிதைவுருமற் பாதுகாக்கும் கலகத்திற்குப் பிறப்பிடமாகக் கருதின. போரின்போது பிரான்சு, கிரேட் பிரிட்டன், ஐக்கிய நாடுகளின் அரசாங்கங்களும் சற்றேறக் குறையச் சர்வாதிகார ஆட்சியைப் போன்றிருந்தன. புதிய சர்வாதிகாரிகள், போரினுல் விளைவிக்கப்பட்ட கருத்துக்களையும் அமைப்பையும், அவை சமாதானத்திலும் சிறப்புக் கூறுகளைக் கொண்டிருக்கும் என்ற நம்பிக்கையுடன் பின்பற்றுகின்றுர்கள்.

## ஹிட்லரின் 'மெயின்காம்ஃப்'

1933-ல் சான்ஸலராகப் பதவியேற்றபின் ஹிட்லரின் ஆட்சி முறை விரைந்து வளர்ந்தது. ஆனுல், அவரது 'எனது போராட்டம்'

(மெயின் காம்ஃப்) எனும் நூலில் சாரமான அவருடைய கருத்துக்கள் ஏற்கனவே ஜெர்மன் மக்களுக்கு எடுத்துக் கூறப்பட்டுள்ளன. முகம்மதியர்களுடைய நாடுகளில் குர்-ஆன் ஆட்சியில் எந்தவிடத்தைப் பெற்றுள்ளதோ, அந்நிலைமையில் அவர் எழுதிய நூல் பெறவேண்டும் என்பது அவரது அவாவாய் இருந்தது. இலட்சக்கணக்கில் அந்நூல் அச்சிடப்பெற்று ஜெர்மனியில் வழங்கப்பட்டதுடன், ஜெர்மானியருள் ஒவ்வொருவரும் அந்நூலை வைத்திருப்பது கடமை என்பதும் அறிவிக்கப்பட்டது. படிப்பதற்குக் கடினமான அந்நூலின் மையமான கருத்துக்கள் தெளிவாயுள்ளன.

(1) மக்களாட்சி, தாராள தேசியக் கொள்கை, மக்கள் ஒப்புதலில் அமைந்த அரசாங்கம்—மேலை நாட்டு மக்களாட்சி முறையில் மிகச் சிறந்தவைகளாகப் போற்றப்படுவன—முதலியவை உறுதியாக மறுக்கப்பட்டுள்ளன. அதிகாரம் ஆளுகிறவரிடத்தில் தோன்ற வேண்டும்; ஆளுகிறவரைப் பற்றிக் குறைகூறக் கூடாது. பொது மனிதனிடமுள்ள அறிவைப் பற்றி ஹிட்லர் இழித்துக் கூறினர். சாதாரணமான குடிமக்களின் கடமை கீழ்ப்படிவதேயாகும்.

(2) அரசாங்கம் ஓர் இனத்தாரின் அடையாளமாக உறுதி செய்யப்பட்டது. ஹிட்லருடைய போதனைகளில் இக் கூற்று மிகவும் புதியது—ஜெர்மானியர்கள்—ஒன்று நீங்கலாக—ஒரே இனத்தைச்சேர்ந்தவர்களாகக் கருதப்பட்டார்கள். மத்திய ஐரோப்பாவின் நாடுகளிற் காணப்படுவது போல, ஜெர்மனிப் பகுதியிலும் மனிதவினங்களின்—ஸ்காண்டிநேவியர்கள், டியூட்டானியர்கள், கெல்டுகள், ஸ்லோவானியர்கள்—கலவை காணப்பட்டது. ஹிட்லர் இக்கருத்தை மறுத்தார். ஜெர்மானியர் கலப்பற்ற இனத்தினர் என்றும், இனக்கலப்பில்லாது தனித்து வைக்கப்பட வேண்டுபவரென்றும் கருதினர்.

(3) இதை அடிப்படையாகக் கொண்டதால், ஓரளவு அவரது முறையில் மிகத் தாழ்மையானகூறு வருவிக்கப்பட்டது; அஃதாவது, யூதர்களை மிகக் கொடுமையாகவும் நெறியற்ற முறையிலும் நடத்துவது. நவீன உலகிலிருந்து மறைந்ததாகக் கருதப்பட்ட இன சமூகத் துன்புறுத்தல்கள், கொடுந்தோற்றத்துடன் உருவெடுத்தன. யூதர்களை குடிமையுரிமைக்குத் தகுதியற்றவர்கள் என ஹிட்லர் உறுதி செய்தார்.

(4) மக்களின் எண்ணங்களையும் கருத்துக்களையும் எல்லா வழிகளையும் பயன்படுத்துவது வாயிலாகக் கட்டுப்பாட்டுக் குட்பட்டதாக்க வேண்டும். தனிப்பட்ட தீர்ப்பு என்ற உரிமைக்கு எவ்வித மதிப்பும் அளிக்கக்கூடாது என்றுர்; ஒவ்வொரு பகராண்மையும்—இலக்கியம், செய்தித்தாள், கலை, நாடகத்துறை, வானொலி—புதிய ஆட்சியை

ஆதரிக்கப் பொது மக்களை இணங்கச் செய்வதற்கு அல்லது உள் ஆற்றலால் மயங்கச் செய்வதற்குப் பயன்படுத்தப்படவேண்டும் என்று கூறினர்.

எனவே, இப்புதிய ஆட்சியின்கீழ், பொது மக்களின் வாக்களிப்பால், ஜெர்மனியின் அரசாங்கத் தலைமைப்பதவிக்கு உயர்த்தப்பட்டவர் தனிச்சிறப் புடையவராயிருந்தார். வரலாற்றில் இவருக்கு இணையாக ஒருவரைக் காண்பது கடினம். நற்பேறு, ஒன்றையும் இவருக்குச் சிறப்பாக அளிக்கவில்லை. இவர் கல்வியறிவு இல்லாதவர்; வரலாற்றை அறியாதவர்; இலக்கியம் அல்லது கலையழகு நிறைந்த பண்பாடே இல்லாதவர். இவரது பேச்சு வன்மை காதால் கேட்பதற்குப் பொறுக்காது. ஏனென்றால், குரல் கட்டைக்குரல்; தவிர, பொதுப் பேச்சாளருக்கு இருக்கவேண்டிய நயம் இவரிடம் காணப்படவில்லை. இவருடைய பேச்சு, கிளர்ச்சியைத் தூண்டுகின்ற சமயப் பிரசாரகரின் பேச்சைப் போன்றிருந்தது. ஆனால், இவர் தந்நலங்கருதும் எந்த அவாவு மில்லாதவர்; சொந்த வாழ்க்கையில் துறவியைப் போன்ற எளிமையுடைவர். அரசியற்றலைவரை விடச் சமயத்தலைவரிடம் காணப் பெறுவதைப் போன்று, இவர் தம் நோக்கங்களை விடாப்பிடியாகப் பின் பற்றினர். பெரும்போரினலும் அதைவிட மிகுதியாக வேர்செயில்ஸ் சமாதானத்தினலும் ஏற்பட்ட பேரிழப்பிலிருந்து தங்களைப் பாது காத்துக்கொள்ளுவதற்குத் தங்கள் பிரதிநிதியாயும் ஒரு துணைவராயும் ஜெர்மானியர்கள் இவரைக் கொண்டார்கள்.

ஹிடலரின் கொள்கை முழுமையாகவும், விரைவிலும் வெற்றி கண்டது. உலகிலுள்ள நாடுகளில் ஜெர்மனி மிகப் பெரியது; எனவே, அதைக் கீழ்த்தரமான நிலையிலும், மற்றொரு நாட்டைச் சார்ந்திருக்கும் நிலையிலும் வைக்க இயலாது. சமநிலையை ஜெர்மனி உரிமையுடன் வேண்டினல், ஒரு நீண்ட போரிடுவதைத் தவிர்த்து வேறுவழிகளில் ஜெர்மனியை அமைதியாயிருக்கக் கட்டாயப்படுத்த இயலாது. போரிடுவதற்கு உலக மக்கள் விருப்பமில்லா திருந்தார்கள். இந்நிலையை ஹிட்லர் தெளிவாகக் கண்டார்; இந்நிலையைப் பயன்படுத்திக்கொண்டு செயல்புரிய உரங்கொண்டவரானர். வேர்செயில்ஸ் சமாதானத்தை இவர் மறுப்பதாக அறிவித்தார். சமாதானத்தின் வாக்கியங்களுக்கு நேர்மாருக, ஜெர்மனி வெளிப்படையாகப் போர்க்கருவிகளைத் தயாரித்தது; மீண்டும் ஐரோப்பாவில் மிக்க வலிமையான இராணுவ அரசாயிற்று. தம்மைச் சமாதானத்தில் விருப்பங்கொண்டுள்ளவரென ஹிட்லர் கூறினர்; கிரேட் பிரிட்டன் கப்பற்படையைவிட ஜெர்மனியின் கப்பற்படை வலிமையில் கீழ்த்தரமான நிலையிலிருந்ததை ஒப்புக்கொண்டார்; வேர்செயில்ஸ் சமாதானத்திற் குறிப்பிடப் பட்டுள்ள மேற்கு எல்லையை மாற்றும் நோக்கம் தமக்கில்லையெனவும் அறிவித்தார். எனவே, ஆல்சேய்சும், லோரைனும் பிரான்சிடம்

விடப்பட்டன. 'மெயின் காம்ஃபில்' ஜெர்மனி, குடியேற்ற நாடுகளை இழப்பதற்கு உடன்பாடு கொண்டது போலத் தோன்றியது. ஆனால், ஸ்லோவானிக்கு நாடுகளின் செலவிழப்பில், ஜெர்மனியின் கிழக்கு எல்லையில் ஜெர்மனி விரிவடைவது தன் தேவையைப் பற்றியதெனக் கூறியுள்ளார். இவர் அதிகாரத்தையேற்றதால், ஐரோப்பிய நாடுகளின் வெளிநாட்டுக் கொள்கை கவலைக்கிடமானதாயும் உறுதியற்றதாயும் இருந்தது.

## ஹிட்லரின் வெற்றி

ஜெர்மனியில் இவருடைய வெற்றி மிக விரைவாயும், முழுமையாயுமிருந்தது. முதலில் இவருக்குச் சிறிது எதிர்ப்பு இருந்தது. ஆனால், இவர் 1934ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் எதிரிகளைத் தாக்கி, நூற்றுவருக்கும் அதிகமானவருக்கு விசாரணையின்றியே கொலைத் தண்டனை விதித்தார். இவ்வாறு கொலையுண்டவர்களில் இராணுவத்தைச் சேர்ந்தவர் மிகுதியாயிருந்தனர். அரசியலமைப்புச் சார்ந்த அரசாங்கம் மறைந்தது. நீதி அரசாட்சி—கிரேட் பிரிட்டனிலும், பிரான்சிலும் சுதந்தரமாயிருந்து உரிமைக்குப் பெரும்பாதுகாப்பளித்தது—இவருடைய அதிகாரத்திற்குக் கீழ்ப்படிந்ததாகச் செய்யப்பட்டு, அரசாங்கத்தின் பகராளாக வெளிப்படையாக அறிவிக்கப்பட்டது. ஜெர்மனியில் பொதுவுடைமைக் கட்சி வன்மையுற்றிருந்தது. ஆனால், ஹிட்லரின் ஆட்சியில் அஃது ஒடுக்கப்பட்டு,எதிர்ப்பின்றித் தோல்வியை ஏற்றுக்கொண்டது. கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்திருந்தவர்கள், சிறைக்கும் ஒன்று திரட்டப்பட்ட பாசறைகளுக்கும்[1] அனுப்பப்பட்டார்கள். அங்கு அவர்களை நடத்திய கொடுமை மக்களின் செவிகளுக்கு எளிதில் எட்டவில்லை. 'மெயின் காம்ஃபி'ல் அடங்கியிருந்தனவும், யூதர்களுக்கு எதிர்ப்பா யிருந்தனவுமான அச்சுறுத்தல்கள் கொடிய உண்மைச் செயல்களாய் மாறின. யூதர்கள், பல்கலைக்கழகங்களிலிருந்தும். பல்வேறு தொழில்களிலிருந்தும், எல்லாவித வாணிக அமைப்பினின்றும் விலக்கப்பட்டார்கள். பிறகு பாரிசில் போலந்து நாட்டு இளைஞர் ஒருவர் ஜெர்மனியின் பிரதிநிதியைக் கொலை செய்ததைக் காரணமாகக் கொண்டு, யூதர்களுடைய சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன. நீதியற்ற இச்செயலுக்கு இணையாக ஒரு செயலை எந்த நவீன அரசாங்கத்திலும் காண முடியாது. வன்கொலையொறுத்தல்[2] செய்யப்படும் இடம் போன்றிருந்த ஜெர்மனியை விட்டு எங்கெல்லாம் செல்ல இயலுமோ அங்கெல்லாம் யூதர்கள் உயிர் தப்புவதற்காக ஓடினார்கள். திறமை மிக்கவர்களாயிருந்த அவர்கள் ஆயிரக்கணக்கில் வெளிநாடுகளுக்கு ஓட்டம் பிடித்தார்கள்; சென்றவிடங்களிலெல்லாம் ஏற்கனவே ஜெர்மனி அரசாங்கத்தைப்பற்றிப்

[1]Concentration Camps [2]Torture chamber

பரவியிருந்த ஐயத்தை அதிகமாக்கினர்கள். 1685-ல் பதினன்காம் லூயி நான்டீஸ் ஆணைகளை மாற்றிய பொழுது ஏற்பட்ட நிலையைப் போன்று இப்பொழுது இருந்தது. மேற்கூறிய நிகழ்ச்சி, லூயியின் அதிகார வீழ்ச்சியின் காரணங்களுள் ஒன்ருகக் கணக்கிடப்பட்டுள்ளது. ஜெர்மனியின் புதிய அரசாங்கம், இத்தாலியிலிருந்த ஃபாஸிஸத்திற்கு நெருங்கிய போலியைப் போன்றிருந்தது. ஆனல், இதன் பெயர் 'நாஸி' என வழங்கப்பட்டது. இச்சொல் 'தேசிய சோஷலிசம், என்பதன் சுருக்கமாகும்.

## யூதர்கள்

யூதர்கள் மிகக் கொடிய துன்பத்திற் காளானர்கள். எனினும், இக்கொடுமை அவர்களோடு நின்றுவிடவில்லை. எவ்விதச் சமய நிலையச் சுதந்தரத்தையும் ஹிட்லரால் பொறுத்துக்கொள்ள இயல வில்லை. கிறித்துவத் திருச்சசையின் நடவடிக்கைகள் கட்டுப்படுத்தப் பட்டன. திருச்சபையின் தலைவர்களுடையவும், போப்பாண்டவருடைய தான மறுப்புரைகள் புறக்கணிக்கப்பட்டன. பன்னட்டுத் தொடர்பு கொண்டிருந்த செய்வினைகள் எல்லாம் தடை செய்யப்பட்டதுடன், எவ்விதத் தீமையுமற்ற செயல்களுங்கூட, பிறநாடுகளுடைய கூட்டுறவிற் கொண்டு வருவதாயிருக்குமானல் அவைகளும் தடை செய்யப்பட்டன. ஜெர்மனி தனித்துள்ள ஒருலகமாயும், தன் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளுவதாயும், தன்னம்பிக்கையுடனும் இருக்கவேண்டியதாயிற்று.

தொடர்ச்சியான வெற்றிகள் ஹிட்லரின் வெளிநாட்டுக் கொள் கையில் ஏற்பட்டன. 1815-ல் ஏற்பட்ட வியன்ன ஒப்பந்தத்தைப் போன்று வேர்செயில்ஸ் சமாதானம் நீடித்துப் பயனளிக்கக் கூடியதா யில்லை. பெரும்போருக்கும், அப்போரினல் விளைந்த அழிவுகளுக்கும் ஜெர்மனியே பொறுப்பாளி எனக் கூறிய வாசகம் ஏற்கனவே மறுக்கப் பட்டிருந்தது. ஜெர்மனி மீண்டும் மிக விரைவாகவும் முழுமை யாகவும் படைக்கலந்தாங்கியது. அதன் இராணுவ வலிமையின் தன்மையைக் கண்டறிவது கடினமாயிருந்தது. ஆனல், மிகச் சிறந்த இராணுவ வலிமை பெற்றிருந்த நாடுகளில் ஒன்ருக ஜெர்மனி எண்ணப்பட்டதுடன், அதன் படைகள் எல்லைகளில் எம்முனையிலும் பயனுள்ள திடீர்த் தாக்குதலைச் செய்ய ஏற்றதாய் அமைக்கப்பட் டிருந்தது. விரைவிலேயே பெருவெற்றிகள் கிடைத்தன.

## சார் பள்ளத்தாக்கு

முதலாவதாக, 1935-ல் சார் பள்ளத்தாக்கைப்பற்றிய பிரச்சினை, ஜெர்மனி ஏற்றுக்கொள்ளும் வகையில் முடிவு செய்யப்பட்டது.

வேர்செயில்ஸ் சமாதானத்தின்படி மதிப்பு வாய்ந்ததும், தொழில் சார்ந்ததுமான இம்மாவட்டம் சருவதேச சங்கத்தின் சிறப்புக்குழு வால் (கமிஷனல்) ஆட்சி செய்யப்படுவதற்கு ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஒப்படைக்கப்பட்டிருந்தது. தொடர்ந்து சருவதேச சங்கத்தின் மேற்பார்வையிலேயே இருப்பதா, அல்லது பிரான்சுடன் இணைவதா, அல்லது ஜெர்மனியுடன் ஒன்ருகச் சேர்வதா என்பதை அப்பகுதி வாக்களிப்பதன் மூலம் முடிவு செய்யவேண்டிய வேளை இப்பொழுது அதற்கு வந்தது. அங்கு வாழ்ந்த மக்கள் பெரும்பான்மையும் ஜெர்மானியரா யிருந்தனர். எனவே, அளவிறந்த வாக்களிப்பால், தந்தையர் நாடான ஜெர்மனியுடன் சேர்வதை முடிவு செய்தது. சார் மாவட்டத்திற்குள் நுழைந்தது, ஹிட்லரின் எதிரொலியைக் கிளப்பிய வெற்றிகளில் ஒன்ருகும். 1938-ல் அதைவிடப் பெரிய வெற்றி ஏற்படவிருந்தது. மகாபிரெடரிக்கும் பிஸ்மார்க்கும் வெற்றி பெற முடியாத செயலை ஹிட்லர் புரிந்து, ஆஸ்திரியாவை ஜெர்மனியுடன் ஒன்ருகச் சேர்த்தார்.

## ஆஸ்திரியாவின் தொல்லைகள்

இப்போரின் பயனக ஆஸ்திரியாவைவிட வேறெந்த நாடும் பொறுத்துக்கொள்ள முடியாத அளவு துன்புறவில்லை. முதல் தரமான நாடாயிருந்தது, இரண்டாம் தர நாடாக மாறியது. ஹங்கேரி, போலந்து, பொஹீமியா, மொரேவியா என்பவை ஆஸ்திரியாவி லிருந்து துண்டிக்கப்பட்டதுடன், மில்லியன் கணக்கில் ஜெர்மானியர்கள், போலந்து, ஹங்கேரி, இத்தாலி நாடுகளுக்கு மாற்றப்பட்டார்கள். நாட்டின் நிதி நிலைமை வீழ்ச்சியுறும் போலிருந்ததுடன் மக்கள் தொகையிற் பெரும்பகுதியினர் பெருந்துயருற்றிருந்தனர். ஜெர்மனியுடன் ஒன்ருகச் சேருவதே இயற்கையில் நாட்டின் முதிர்ச்சி பெறுவதாகும். ஆனல், அவ்வாறு சேர்வதற்கு வேர்செயில்ஸ் சமாதானத்தில் இசைவளிக்கப்படவில்லை. சருவதேச சங்கத்தின் மன்றந்தான் இதை ஏற்றுக்கொள்ள இசைவளிக்கவியலும். ஆனல், மன்றம் இதைப் பெரும்பாலும் ஏற்காது. நாடு கட்சிகளாற் பிளவுபட்டிருந்தது. குடியரசு அரசாங்கம் நீடித்திருப்பதற்குக் கடுமையாகப் போராட வேண்டியதாயிற்று. பதவியிலிருந்து நீக்கப்பட்ட ஹாப்ஸ்பர்குகள் பெருமை இழந்தார்கள்; ஒருபக்கத்தில் ரஷ்யாவைப் பின்பற்றும் நோக்கத்துடன் வலிமை பொருந்திய கம்யூனிஸ்டு கட்சியும், மற்ருெரு புறத்தில் ஹிட்லரின் ஆட்சியைப் போன்ற ஆட்சியை ஆஸ்திரியாவில் ஏற்படுத்தி அவருடைய ஆட்சியின் கீழ் இருநாடுகளையும் ஒன்று சேர்க்கும் விருப்பங்கொண்ட ஃபாஸிஸ்டு அல்லது நாஸி கட்சியுமிருந்தன.

1934ஆம் ஆண்டு, நாட்டிற்கு ஒரு பெரிய நெருக்கடியான காலமாயிருந்தது; ஆனால், குடியரசு உயிர் பிழைத்திருந்தது. 1934ஆம் ஆண்டு, பிப்பிரவரியில், ஒரு கடுமையான கம்யூனிஸ்டு கலகம் தோன்றிச் சிறிது காலம் வியன்னுவை வயப்படுத்திக்கொண்டிருந்தது. ஆனால், சான்ஸலராயிருந்த டால்ஃபஸ், பேருக்கத்துடன் அதையடக்கினர்; அதற்குக் காரணமாயிருந்தவர்களை மிகக் கொடுமையுடன் தண்டித்தார். அதே ஆண்டில் ஜூலை மாதத்தில், ஃபாஸிஸ்டு இயக்கம் தோன்றியது. அது நன்கு தயாரிக்கப்படாதிருந்ததால், விரைவில் அடக்கப்பட்டது. ஆனால், கிளர்ச்சியாளர்கள், மிகக் குறுகிய காலம்வரை அரசாங்க அலுவலகங்களைக் கைப்பற்றியிருந்த பொழுது டால்ஃபஸ் கொலை செய்யப்பட்டார். ஷுஸ்நிக்கு என்பார் சான்ஸலர் பதவியை ஏற்றார். அரசாங்கத்தின் தன்மை மாற்றமடையவில்லை. கம்யூனிஸ்டுகளுக்கும், பாஸிஸ்டுகளுக்குமிடையே நடுவு நிலையைக் கொள்ள அரசாங்கம் முயன்றது. 1936-ல் ஆஸ்திரியாவின் முழு இறைமையை ஹிட்லர் ஒப்புக்கொண்டு, அந்நாட்டின் உள்நாட்டு அரசியல் அலுவல்களில் தலையிடுவதில்லையெனவும் வாக்குறுதி செய்தார். எனினும் ஓராண்டு நிரம்பியவுடனே ஹிட்லரால் ஆஸ்திரியாவின் சுதந்தரம் அழிக்கப்பட்டது.

## ஆஸ்திரியா இணைக்கப்படுதல்

நாட்டில் நிலையான மீட்பின் அறிகுறிகள் காணப்படவில்லை. நிதித்தொடர்பான பழிச்சொற்கள் வெளியாக்கப்பட்ட பொழுது துரைத்தனத்தின் மதிப்பு அழிந்தது. ஃபாஸிஸ்டுகள்—இவர்களை நாஸிகள் என வழங்குவது மேலானது—உறுப்பமைதியையும் முன்னேற்பாட்டையும் செய்துகொண்டிருந்தார்கள். ஹிட்லர் தாக்க முடிவு செய்தார். சான்ஸலரான ஷுஸ்நிக்கு ஜெர்மனிக்கு வரவழைக்கப்பட்டார். திடீரெனத் தீவிர நடவடிக்கைக்கான ஒப்பந்தப் பேச்சுக்கள் அவரிடம் கூறப்பட்டன. குறிப்பாக, ஆஸ்திரிய அமைச்சர் குழுவில் அதிக ஆதிக்கம் கொண்டு கட்டுப்படுத்துவதற்காக நாஸிஸக் கொள்கையில் பற்றுறுதி கொண்டிருந்த ஒருவரை நியமிக்க வேண்டுமென்று ஹிட்லர் வற்புறுத்தினர்.

(1938 பிப்பிரவரி) ஷுஸ்நிக்கு இதற்கிணங்க மறுத்ததுடன், 'நாட்டின் உரிமையையும் சுதந்தரத்தையும் பாதுகாப்பதில் அவருக்கிருந்த அசைக்க முடியாத உறுதியையும் அறிவித்தார்; அதே தருணத்தில், ஹிட்லருடைய கருத்துப் பற்றி மக்களின் வாக்கெடுப்பு (பிளிபிசைட்டு) எடுக்கப்படவேண்டுமென்னும் கருத்தை வெளியிட்டார். மக்களின் வாக்கெடுப்பு முறை தம்மால் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று என ஹிட்லர் அறிவித்தார். அதனுடன் இச்சிக்கலை இராணுவ

நடவடிக்கையான ஆற்றல் கொண்டு வெட்டியெறிய முடிவு செய்தார். ஆஸ்திரியாவிற்குள் ஜெர்மன்படைகள் அணி வகுத்துச் செலுத்தப் பட்டன. அப்படைகள் பொதுவாக ஊக்கத்தையே நாட்டிற்கண்டன. ஷுஸ்நிக்கு, கைது செய்யப்பட்டுச் சிறை செய்யப்பட்டார். ஆஸ்திரியா ஜெர்மனியுடன் இணைக்கப்பட்டது. இன்பத்தை நாடும் மக்கள், நாஸி ஆட்சி முறையிற் கடுமைகளுக் குட்படுத்தப்பட்டார்கள். ஆனுல், பெரிதும் முழுமையானதுமான ஆட்சியுடன் ஒன்று சேர்ந்த ஒற்றுமையுணர்ச்சியும், ஒரு பெரிய வல்லரசிற்குச் சொந்தமாயிருப்ப தால் ஏற்பட்ட பாதுகாப்பும், மதிப்பும், மற்றவைகளுக்கெல்லாம் இழப்பீடு செய்வன போலத் தோன்றின.

## செக்கோஸ்லோவாக்கியா

நாஸி ஜெர்மனியின் முன்னேற்றத்தின் நிலை விரைவில் தொடர்ந்தது. ஹிட்லர் அவரது 'மெயின்காம்ஃப்' எனும் நூலில், வேர்செயில்ஸ் சமாதானத்தில் உருவாக்கப்பட்டிருந்தவாறு ஜெர்மனியின் மேற்கு எல்லை பற்றிய ஏற்பாட்டிற்கு உடன்படக் கூடுமெனவும், ஆனுல், கிழக்குப் பக்கத்தில் மாற்றங்கள் தேவையா யிருக்கும் எனவும் அறிவித்திருந்தார். இவ்வியக்குதலில், ஆஸ்திரி யாவின் ஒருமைப்பாடு (ஆன்ஷுலஸ்) ஏற்பட்டது மிகப்பெரிய படியாகும். ஆனுல், ஜெர்மனியையும், மற்ற நாடுகளையும் சேர்ந்த அரசியல் வல்லுநர்களின் பார்வை நெடுநாளாகவே செக்கோஸ்லோ வாக்கியாவின்மீது திரும்பியது. அடுத்துத் தொல்லை நிகழக்கூடியதாக இவ்விடம் கருதப்பட்டதே இதற்குக் காரணமாகும். இந்நாடு, இதன் பிறப்பிற்கு ஜனுதிபதி வில்ஸனுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருந்தது. இந்நாட்டில் முன்பு பொஹீமியா மொரேவியா என வழங்கப்பட்ட மாவட்டங்கள் இணைக்கப்பட்டிருந்தன. இங்கு வசித்த மக்கள் ஒரே இனத்தைச் சார்ந்தவர்களாயிருந்தார்கள். எனினும், இந்நாடு அயல் இனத்தினரையும் கொண்டதாயிற்று. மேற்கில் இரண்டு மில்லியன் ஜெர்மானியர்களும் தெற்கில் அதைப்போன்று ஹங்கேரியர் களுமிருந்தார்கள்.

இப்புதிய நாடு செழித்தோங்கியது; வேர்செயில்ஸ் உடன்படிக்கை யால் தோற்றுவிக்கப்பட்ட நாடுகளில் இது மிக வெற்றிகரமாயிருந்த தாகப் பலர் எண்ணினர். இதன் குரல் தாராளப் போக்கைக் கொண் டிருந்தது; இதன் அரசியல் வல்லுநர்களான மஸாரிக்கு, பெனீஷ் எனும் இருவரும் மனிதத்தன்மை, உயர்ந்த பண்பு, மேதை ஆகிய வற்ருல் மிக்க புகழ் பெற்றவர்கள். ஸெக்கு ஆட்சியின் கீழ்ஜெர்மானிய மக்கள் அமைதியற்றிருந்தார்கள். சுடேட்டன் ஜெர்மானியர்கள் என வழங்கப்பட்ட இவர்கள், முதலில் தன்னுட்சியைக் கோரினுர்கள்,

பின்பு ஜெர்மனியோடு மீண்டும் இணைவதை வற்புறுத்தினுர்கள். பன்ளுடுகளின் ஆற்றலாகச் செயல் புரிவதினின்றும் நின்று போன சருவதேச சங்கத்தினின்று எவ்வித உதவியையும் பெறுவதற்கில்லை. ஆனல், இப்புதிய நாட்டின் முழுமையைக் குறித்து, பிரான்சு உறுதியளித்திருந்தது. ரஷ்யாவிடமிருந்தும் உதவி பெறுவதில் நம்பிக்கைக் கொண்டிருந்தது. ஜனதிபதி பெனீஷை ஹிட்லர் அவருடைய சொற்பொழிவுகளில் முரட்டுத்தனமாக அச்சுறுத்திப் பேசினர். இது போரிலேதான் கொண்டுவிடும் என்பதும், போர் மூண்டால், ஒரு பெரிய ஐரோப்பியப் போராய் வளர்ந்து ஒருவேளை உலகப் போராய்க்கூட வளரக்கூடும் என்பதும் தெளிவாயின.

இத்தருணத்தில், பிரிட்டிஷ் பிரதமரான நெவில் சேம்பர்லின், ஐரோப்பாவில் சமாதானத்தைப் பாதுகாப்பதற்காக நம்பிக்கையற்ற இறுதி முயற்சியைச் செய்தார்; வளரும் போரின் அச்சத்தைக் கடுமையான எச்சரிக்கையுடன் கவனித்து வந்தார். அவர் ஒரு கன்சர் வேட்டிவாய் இருந்தார். மற்றக் கட்சிகளைக்காட்டிலும், போரின் இடர்களை நோக்குவதற்குத் தயாராயிருந்ததாக வழக்கமாகக் கருதப் பட்டு வந்த கன்சர்வேட்டிவ் கட்சியின் தலைவராயிருந்த போதிலும், அவர் போரை முழுமனத்துடன் வெறுத்தார். போரில் அவருடைய நாட்டினுடையவும், உலகினுடையவும், மிகச் சிறந்தவை எல்லாம் அழியும் என்பதை அறிந்தார். சருவாதிகாரிகளின் நோக்கங்களிலோ, முறைகளிலோ, அவருக்குச் சிறிதும் இரக்கமில்லை. ஆனல், அவர்களுடன் சமாதான உறவுகளை ஏற்படுத்த முடியுமென்றும், உலகை இரத்தப் பெருவெள்ளத்தில் மூழ்கடிக்காமல், அவர்களுடைய நோக்கங்களிற் சிலவற்றையேனும் ஓரளவு கைவரப் பெற வழிகாட்ட இயலுமென்றும் நம்பியிருந்தார். ‘பேரவாத் தணிப்பு’ எனப்பெயர் பெறும் இக்கொள்கை கடுமையான கருத்து மாறுபாட்டிற் குரியதாயிருந்தது. அவருடைய கட்சியே சற்று விருப்பமில்லாது, அவரைப் பின்பற்றியது. உறுப்பினர் சிலர்—சிறப்பாக, சர்ச்சில், ஈடன் போன்றவர்—அவரது கட்சியிலிருந்து வெளியேறினர். தொழிற்கட்சியும் தாராளப்போக்குக் கொள்கைக் கட்சியும், சருவாதிகாரிகளிடம் அவநம்பிக்கை கொண்டனவாய், அவர்களுடன் எவ்வித உடன்படிக்கைப் பேச்சுக்களையும் செய்ய வியலாதென்றும் நம்பினர்.

## மியூனிச்சு

செக்கோஸ்லோவாக்கியாவுடன் போர் தொடங்குமென்பது தெளிவான போது, நெவில் சேம்பர்லின் ஹிட்லருக்கு முறையிட்டதுடன், நேர்முகப் பேட்டியளிக்குமாறும் கேட்டார். இதற்கு இசைவு கிடைத்தவுடன் பிரிட்டிஷ் பிரதமர் மியூனிச்சுக்குப் பறந்துசென்று, (ஐரோப்பிய அரசியல் தூதாண்மையில் முதன்முதலாக வானவூர்தி உபயோகப்

பட்டது இப்பொழுதுதான்) அங்கு ஹிட்லரையும் முசோலினியையும் சந்தித்தார். மீண்டும் மீண்டும் பேட்டி கண்டதில், சமாதானத்தைப் பாதுகாக்க ஓர் ஏற்பாட்டைச் செய்ய முடியுமென்பது தோன்றியது. சுடேட்டன் ஜெர்மானியர்கள் வசித்த பகுதிகளை ஜெர்மனி கைக் கொண்டது. ஆனுல், ஹிட்லர், நாடுகளைக் கைப்பற்றுவதில் தமக்கிருந்த விருப்பம் இப்பொழுது நிறைவுற்றதென்றும், மேற்கொண்டு ஜெர்மானியரல்லாதவர்களின் நாடுகளை வன்முறை மூலம் கைப்பற்றுவதில் விருப்பங் கொள்ளவில்லையென்றும் அறிவித்தார். கிரேட் பிரிட்டனுடன் பொது அக்கறையுள்ளவைகளிற் காணப்படும் தொல்லைகளில் ஒத்துழைப்பதாக ஹிட்லர் எழுத்து வாயிலாக அளித்த வாக்குறுதியைப் பெற்றுக்கொண்டு சேம்பர்லின் இலண்டனுக்குத் திரும்பி, காமன்ஸ் சபையில் கிறுக்கியெழுதப்பட்டிருந்த துண்டுக் காகிதத்தைப் பெருஞ்செருக்குடன் பலரறியக் காட்டினுர். திடீரென்று வெளிப்பட்ட மகிழ்ச்சியுடன், தனிச்சிறப்பு வாய்ந்த முறையில், இச் செய்தி இங்கிலாந்தில் வரவேற்கப்பட்டது. இதற்குக் காரணம், நாட்டின் மனம் சமாதானத்தில் உறுதி பூண்டிருந்ததேயாகும்.

## செக்கோஸ்லோவாக்கியாவை ஜெர்மனி கைப்பற்றுதல்

முதலிலிருந்தே ஒப்பந்தம் என வழங்கப்பட்ட இதை, போலி என்றும் கண்ணியென்றும் பலர் இகழ்ந்து கூறலாயினர். இப்பொருள் விளக்கத்தைத் தொடர்ந்துண்டான நிகழ்ச்சிகள் விரைவிலேயே மெய்ப்பித்தன. கிழக்கில் வருங்காலத்தில் ஏற்படும் தொல்லைகளுக்கு முடிவு காண்பதில் கிரேட் பிரிட்டனுடன் ஒத்துழைப்பதாக ஹிட்லர் எழுத்து வாயிலாகக் கொடுத்த வாக்குறுதி, இகழ்ச்சிபொருந்திய மற்ருெரு 'துண்டுக் காகிதம்' என்பது, சேம்பர்லின் தாமாகவே அறிந்துகொள்ள வேண்டியதாயிற்று. செக்கோஸ்லோவாக்கியாவில் எஞ்சியிருந்த பகுதியும் கைப்பற்றப்பட்டது. இப்போது நாஸிகள், போலந்து நாட்டிற்கெதிராக அவர்களுடைய பிரசாரச் செயலாண்மை நிலையங்களைத் திருப்பி, டான்ஸிக்கையும் இடைவழியையும் ஜெர்மனியிடம் ஒப்படைத்தலை உரிமையுடன் கோரினுர்கள். போரின் இடரை நோக்குவதைக்காட்டிலும், கிரேட் பிரிட்டன் எதற்கும் இணங்குமென்பது தெளிவாகக் காணப்படுவதாய் ஹிட்லர் நம்பினுர். ஆனுல், மியூனிச்சு ஒப்பந்தம் தோல்வியுற்றது, மேற்கொண்டு சலுகையை இயலாததாக்கியது. ஜெர்மனிக்கு அண்மையிலிருந்த நாடுகளுக்கும்—குறிப்பாகப் போலந்திற்கும்—பாதுகாப்பளிக்கும் உறுதிமொழியை இங்கிலாந்தும் பிரான்சும் அளித்தன. போலந்தை ஜெர்மனி தாக்கினுல், அது மரபுரிமையிற் கட்டுப்படுத்தக்கூடிய பொதுப் போராகிவிடும் என்பது இப்போது தெளிவாயிற்று. கம்பியில்லாத் தந்தி, மற்றும் பல வழிகளிற்

போலந்தை ஹிட்லர் இகழ்ந்துரைத்தது, வல்லந்தத்தை அதிகரித்த துடன், ஐரோப்பிய வெல்திறத்தின் ஒலி இதற்கு முன்காணப்படாத உயர்நிலையை அடைந்தது. இதே தருணத்தில், இத்தாலி, தக்க காரணம் ஏதுமின்றி அல்பேனியாமீது படையெடுத்தது. மேற்கு ஐரோப்பாவின் வாழ்க்கையில், உடனடியான போருக்கு ஆயத்தம் செய்வது மேலோங்கியிருந்தது. இங்கிலாந்தில் இருபது ஆண்டு நிரம்பியவர்களுக்கெல்லாம் இராணுவப் பயிற்சி கட்டாயமாக்கப்பட்டது.

கடந்த இவ்வாண்டுகளில் ஜெர்மனியின் வெளிநாட்டுக்கொள்கை, போல்ஷிவிசத்தையும் சோவியத்து ரஷ்யாவையும் எதிர்த்துப் போரிடுவதில் வெளிப்படையாக ஈடுபட்டிருந்தது. 1936-ல் ஹிட்லர், ஒரே மாதிரியான இயல்புள்ள ஜப்பானுடன் ஒப்பந்தம் செய்துகொண்டார். அப்பொழுது ஜப்பான் சீனவுடன் போரிட்டுக்கொண்டிருந்தது. ஹிட்லர் முசோலினியுடன் நெருங்கிய மனவொற்றுமையையும் ஏற்படுத்திக்கொண்டார். இது முதற்கொண்டு ஐரோப்பா, பெர்லின் ரோம் அச்சு என்று வழங்கப்பட்டதன்மேற் சுழல்வதாயிற்று.

## இத்தாலியும் ஜெர்மனியும்

நாஜி ஜெர்மனியின் தோற்றம் ஐரோப்பாவில் ஒவ்வொரு நாட்டையும் பாதித்தது. இத்தாலியும் அவ்வாறிருந்தது. முசோலினியை ஹிட்லர் எப்பொழுதுமே வியந்து பாராட்டுபவராகக் கருதிய துடன், அவருடைய முறையையும் நெருக்கமாகப் பின்பற்றினர். இரு அரசாங்கங்களுக்கு மிடையே நல்ல மன ஒற்றுமை இருந்ததுடன், வெளிநாட்டுக் கொள்கையில் செயற்படக் கூடிய கூட்டுறவுமிருந்தது. ஆனால், இத்தாலியின் தலைவாயில், மிக்க வலிமையுள்ள ஜெர்மன் அரசைக் கொண்டிருந்தது. வேர்செயில்ஸ் சமாதானத்தின்படி நூறாயிரக்கணக்கான ஜெர்மானியர் இத்தாலி நாட்டின் குடிமையை ஏற்றுக் கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டிருந்தனர். அதனுடன் ஒரு காலத்தில் ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த மதிப்பு மிக்க நீண்ட நிலப் பகுதியையும் துறைமுகங்களையும் இத்தாலி வைத்துக்கொண்டிருந்தது. 'மெயின் காம்ஃபி'ல் கூறப்பட்டுள்ள கொள்கைகள், புதிய ஜெர்மனி இத்தாலியுடன் தாக்குதலை நிகழச் செய்வனவாயிருந்தன. ஆனால், அப்போது அவற்றுக்குள் நட்பு மிகுதியாயிருந்ததுடன், ஒன்றையொன்று பாராட்டுவதாயுமிருந்தது.

## இத்தாலியும் அபிசீனியாவும்

கடந்த பத்தாண்டுகளில் ஃபாஸிஸ்டு இத்தாலியும் வியக்கத்தக்க இலாபங்களைப் பெற்றதெனினும், நாஜி ஜெர்மனி பெற்ற வெற்றிகளைப்போன்று அவை அவ்வளவு உறுதி வாய்ந்தவையாயில்லை. இத்தாலியின் நிதி நிலைமை பெருந்தொல்லையாயிருந்ததுடன், தேசிய

முறிவை உண்டுபண்ணும் போலத் தோன்றியது. ஆனல், அபிசீனியாவை இத்தாலியுடன் இணைக்கும் வெளிநாட்டுப் போரில் இத்தாலி ஈடுபடுவதை இந்நிலை தடை செய்யவில்லை. செங்கடற் பகுதியில் ஏரீடிரியா எனும் நிலப்பகுதி இத்தாலிக்கு ஏற்கனவே சொந்தமாயிருந்தது. அதற்குத் தென்மேற்கில் அண்டை நாடான அபிசீனியா அரசு, மிகப் பெரியதாயிருந்தது. அபிசீனியா ஒரு கிறித்துவ அரசாகும். அதன் நாகரிகம் பிற்போக்கானதாயும், அதன் அமைப்பு மிக்க குறைபாடுள்ளதாயும் இருந்தும், அந்நாடு சருவதேச சங்கத்தில் உறுப்பாகச் சேர்க்கப்பட்டிருந்தது. இதற்கு முக்கியப் பிணையா யிருந்தவற்றுள் இத்தாலியும் ஒன்ருகும். வலியோருக்கு எதிராக எளியோரைக் காப்பாற்றுவதில் சருவதேச சங்கம் உண்மையிலேயே பயனுள்ள கருவியாயிருந்திருக்குமானல், அபிசீனியா வெளித் தாக்குதலிலிருந்து பாதுகாக்கப்பட்டிருக்கும். ஆனல், அதன் குடியேற்ற நாடுகளை விரிவுபடுத்துதலில் விருப்பங் கொண்டிருந்தது; 1933-ல் அபிசீனியாவைத் தாக்க உறுதிபூண்டது. ஆனல், 1935 லேதான் உண்மைத் தாக்குதல் ஏற்பட்டது. இத்தாக்குதலுக்கு முன் முக்கியமல்லாத எல்லைப்புற நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. தொடர்ந்தேற்பட்ட தாக்குதலுக்கு இந்நிகழ்ச்சிகள் காரணமாகச் சாக்குப் போக்காகவேயிருந்தன. சருவதேச சங்கத்தின் குறுக்கீட்டை இத்தாலி வெறுப்புடன் மறுத்தது. அபிசீனியா, பிரான்சைவிட நிலப்பரப்பில் பெரியதாயிருந்தது. நைல் நதியின் மேற்பகுதியில் அஃது அமைந்திருந்தது. அதன் ஆட்சியின் தன்னியல்பு சார்ந்த மதிப்பைக் காட்டிலும் முக்கியமான போர்முறை திறம் வாய்ந்ததாயிருந்தது. சங்கம் உதவி புரியத் தவறியதைப் பற்றி விரைவிற் கூறுவோம். இத்தாலியப் படையெடுப்பு மிக்க கருத்துடன் ஆயத்தம் செய்யப்பட்டு, திறமையாக இயக்கப்பட்டது. நவீன காலத்தைச் சேர்ந்த போர் வீரருக்கு விஞ்ஞானம் அளித்துள்ள எல்லாத் துணைகளையும் இத்தாலி பண்டைக் காலத்தைச் சேர்ந்ததும், ஆனல் இன்றும் நாகரிகத்தில் பாதிக்குக்கூட முன்னேற்றமடையாதிருந்ததுமான நாட்டின்மீது பயன்படுத்தியது. இவ்வாறு பயன்படுத்தப்பட்டவைகளில் வான ஊர்திகள், டாங்குகள், விஷவாயு என்பன குறிப்பிடத் தக்கனவாகும். அபிசீனியாவின் பேரரசரான ஹெய்லி ஸெலாஷி பயனுள்ள எதிர்ப்பைக் கொள்ளாமல், அருகிலிருந்த பிரெஞ்சு நிலப்பகுதி வழியாக இங்கிலாந்திற்கு ஓடினர். இத்தாலிய மன்னர் இப்புதிய பகுதிகளின் பேரரசர் என அறிவிக்கப்பட்டார். ஆனல், இவ்வெற்றிக்குக் காரணமாயிருந்தவர் முசோலினியேயானதால், ஃபாஸிஸத்திற்கு இவ்வெற்றி புதியதொரு பெருவெற்றியாகும்.

அபிசீனியாப் போர் முடிந்தபின், இத்தாலியின் துரைத்தன முறை மேலும் வளர்க்கப்பட்டு, பழைய பாராளுமன்ற முறையின் அடை-

யாளங்கள் கைவிடப்பட்டன. ஃபாஸிஸ்டு ஆட்சி வலிமை பொருந்திய தாயும் ஒழுங்காயுமிருந்தது. முசோலினியின் அதிகாரத்திற்கு எதிராக ஒன்றுமில்லை. ஆனால், பத்திரிகைகளின்மீதும் கருத்து வெளியிடுவதற்கான உறுப்புகளின்மீதும் கட்டுப்பாடு மிகக் கடுமையாயிருந்ததால், நாட்டின் உள் வரலாற்றை ஊடுருவிப் பார்ப்பது வழக்கத்திற்கு மாருகக் கடினமாயிருந்தது.

## இத்தாலியும் பிரான்சும்

இப்புதிய இத்தாலி, பண்டைய ரோமின் வாரிசு என, நாம் முன்னர்க் கண்டவாறு, தன்னை அறிவித்துக்கொண்டது. 'எங்கெல்லாம் ரோமானியரின் ஆட்சியிருந்ததோ, அங்கெல்லாம் இத்தாலியின் ஆட்சி நிலவும்,' என்று அதன் இலக்குரையாகப் பணித்துறைத் தொடர்பற்ற முறையில் அறிவிக்கப்பட்டது. பண்டைய ரோமப் பேரரசை மீட்பது என்பது இப்போது சற்றும் பொருந்தாத பேரவாவாகும். எனவே, அதைப் பற்றிக் கவலைகொள்ள வேண்டுவதில்லை. ஆனால், அண்மையில் இத்தாலி நாட்டுப் பத்திரிகைகளும், அரசியல் வல்லமையுடையோரும், இத்தாலிக்கு உரிமைப்படி சொந்தமான பகுதிகளைப் பிரான்சு வைத்துக்கொண்டிருந்தது என அறிவித்துக்கொண்டிருந்தனர். 18ஆம் நூற்றுண்டிற் கைப்பற்றப்பட்ட கார்ஸிகா, ஜினேவாக் குடியரசிற்குச் சொந்தமாயிருந்தது. 1866-ல் ஆஸ்திரியாவை எதிர்த்து இத்தாலி போரிட்டபோது அதற்குப் பிரான்சு செய்த உதவிக்கு விலையாக, நைஸ், சேவாய் என்னுமிடங்கள் பிரான்சிற்குக் கொடுக்கப்பட்டிருந்தன. நைஸ், கரிபால்டி பிறந்த ஊராகும். சேவாய் இத்தாலிய அரச குடும்பத்தினரின் தாயகத்தின் ஒரு பகுதியாகும். பிஸ்மார்க்கின் தூண்டுதலின் பேரில் 1881-ல் பிரான்சு டூனிஸ் எனும் பகுதியைக் கைப்பற்றியது. டூனிஸில் இத்தாலியர்கள் எண்ணிக்கை அதிகமாயிருந்தது. அதனுடன் இஃது இத்தாலியின் கடற்கரையை ஒட்டினுற் போலுமிருந்தது. இவ்வாறு பெற்ற பகுதிகளைப் பிரான்சு மதிப்புள்ளதாகக் கருதியது. ஐரோப்பாவின் பொதுச் சட்டமும் இதை ஏற்றுக் கொண்டிருந்தது. இத்தாலி கொண்டாடியதைப் போன்ற உரிமைகளை விட்டுக்கொடுப்பதானுல் இக்காலத்து நாடுகளுள் ஒவ்வொன்றும் பெரும்பான்மையும் சிதறிப்போவதற்கு வழி செய்யும். இவ்வுரிமைகள் பிரான்சிற்கும் இத்தாலிக்குமிடையே இருந்த தொடர்புகளை வெறுக்கச் செய்ததுடன், 1939ஆம் ஆண்டிற் காணப்பட்ட வருந்தத்தக்க நெருக்கடி நிலையையும் மிகைப் படுத்துவதாயிற்று.

## ஸ்பெயின்

இரண்டாம் உலகப் போருக்கு முன்னதாகவே, ஐரோப்பாவில் பல முனைகளில் போர் ஏற்படுவதற்கான அச்சுறுத்துதல்கள் காணப்

பட்டன. ஆனுல், ஸ்பெயினிலேதான் கொடுந்தோற்றத்துடன் போர் மூண்டது. பெரும்போரில், ஜெர்மனிக்கு எதிராக, போர்த்துகல் நேச நாடுகளுடன் சேர்ந்தபொழுது, இச்சண்டையிற் கலவாது தனித்திருக்கும் நற்பேற்றை ஸ்பெயின் பெற்றிருந்தது. ஆனுல், சமாதானம் அந்நாட்டு மக்களுக்குச் செழுமையையோ அல்லது மன நிறைவையோ அளிக்கவில்லே. கடுமையான எதிர்ப்புக்கொண்டிருந்த கட்சிகளினுல் நாடு பிளவுபட்டிருந்தது. சோஷலிஸ்டுகளும், அரசியற்குழப்பத்தை உண்டுபண்ணுகிறவர்களும்—பின் கூறப்பட்டவர்கள் ஸ்பெயினில், ஐரோப்பாவில் வேறெந்தப் பகுதியைக்காட்டிலும் மிக்க வலிமையுடையவர்கள்—முடியாட்சியினரும், குடியாட்சியினரும், பிற்போக்கான கத்தோலிக்கர்களும், கொடுஞ்செயல் புரியும் சமயச் சார்பற்றவர்களும் போன்ற பல கட்சியினரிருந்தனர். எல்லாவற்றிற்கும் மேலாக, மாட்ரிடு அரசாங்கத்தினின்றும் சுதந்தரம் பெறுவதற்காகக் காட்டலோனியா, பார்ஸிலோனு முதலிய பகுதிகளின் வன்மையான உரிமைக் கோரிக்கையுமிருந்தது.

பதினைந்தாம் நூற்ருண்டில் நாட்டின் ஒற்றுமை யேற்பட்டதிலிருந்து ஸ்பெயின் நாட்டு வரலாற்றில், வலிமை மிக்க மாநிலவுணர்ச்சி பேராதிக்கம் பெற்றதாயிருந்தது. பத்தொன்பதாம் நூற்ருண்டில் அவ்வுணர்ச்சி சற்றும் தணியவில்லே. தாராளக் கொள்கையுடைய ஆட்சியேற்பட்டிருந்தும், மன்னர் ஆல்ஃபான்ஸோ மக்களின் பற்றுறுதியைப் பெற முடியாமலிருந்தது. வளர்ந்துகொண்டிருந்த மன நிறைவைக் கட்டுப் படுத்தக் கூடிய வலிமையைக் கொண்டிருந்ததாகத் தொடர்ந்து ஏற்பட்ட துரைத்தனங்களும் காட்டவில்லே. 1931-ல் புரட்சி தோன்றியது. ஆல்ஃபான்ஸோ, பதவியிலிருந்து நீக்கப்பட்டார். நாட்டிலிருந்து அவர் ஓடியபொழுது குடியரசு ஆட்சி அறிவிக்கப்பட்டது. ஐரோப்பாவில், முந்நூறு ஆண்டுகளாக ஆட்சி புரிந்த குடும்பங்களில் ஒரு குடும்பத்தினராயிருந்த போர்போன்கள், ஹாப்ஸ்பர்குகள், ஹோஹன் சோலன்கள் முதலிய குடும்பத்தினருடன் கூட இப்பொழுது மேடையிலிருந்து மறைந்தார்கள். புதிய குடியரசு, காட்டலோனியா மாநிலத்தின் ஆர்வமிக்க விருப்பங்கட்கு மனநிறைவு அளிக்கவும், சமூகம் தொழில் பற்றிய தொல்லேகளேத் தீர்த்து வைக்கவும் முயன்றது. ஆனுல், நாடு அமைதியற்றிருந்தது ; துரைத்தனங்களும் நிலேயற்றனவாயும் பயனற்றனவாயுமிருந்தன.

1936-ல் ஸ்பெயினுக்குச் சிறப்பியல்பாகக் காணப்பட்ட ஓரியக்கம் ஏற்பட்டது. மனநிறைவற்றவர்களுட் பலரின் ஆட்பேராகப் பேசுகிறதாக இராணுவம் தன்னே ஏற்படுத்திக்கொண்டது. போர்த்தலேவரான ஃபிராங்கோ என்பார் வாயிலாக, இத்தாலியில் முசோலினி, ஜெர்மனியில் ஹிட்லர், இவர்களின் தலேமையின்கீழ் அமைக்கப்பட்டிருந்த அரசாங்

கங்களை ஒத்ததான ஒரு துரைத்தனம் அமைக்கப்படுவதைக் கோரினர். ஃபிராங்கோவிற்குத் திருச்சபையும், செல்வந்தர்களும், ஃபாஸிஸ்டு களும் ஆதரவளித்தார்கள். தொடக்கத்தில், இராணுவம், எல்லா வற்றையும் வெற்றியுடன் முடித்து விடும்போலத் தோன்றியது. இராணுவம் மாட்ரிடு நகரைச் சென்றடைந்தது. குடியரசுக் கட்சியும் பல ஆர்வமிக்க ஆதரவாளர்களைப் பெற்றிருந்தது.

எதேச்சாதிகார அரசாங்கம் ஏற்படுவதாலுண்டாகும் இடர், அவர் களது வரிசைகளில் ஒரு வித ஒற்றுமையைத் தோற்றுவித்தது. ஃபிராங்கோ எதிர்பார்த்த விரைவானதும் வெற்றிகரமானதுமான போருக்குப் பதிலாக, மிகப்பெரிய அளவில் உயிருக்கும் பொருளுக்கும் சேதத்தை விளைவித்ததும், ஸ்பெயின் மக்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்த முன்பிருந்ததைக்காட்டிலும் மிகக் கடினமாகச் செய்தது மான போரேற்பட்டது. அவர்களுக்குள்ளாகவே சண்டையிட்டு இவ்விவகாரத்தை முடிவு செய்துகொள்ள விடப்பட்டிருந்தால், ஸ்பெயின் மக்கள் ஒரமயம் விரைவிலேயே போரை முடித்து ஒரு முடி விற்கு வந்திருக்கக்கூடும். ஆனல், பல நாடுகள் அவைகளின் அரசாங்கங்கள் அமைக்கப்பட்டிருந்த கொள்கைகளுக்கே இடர் ஏற்பட்ட தாகக் கருதினர். இத்தாலியும் ஜெர்மனியும் போர்த்தலைவரான (ஜெனரல்) ஃபிராங்கோவிற்கு உதவி அனுப்பின. குடியரசுக் கட்சி யினருக்குச் சோவியத்து ரஷ்யா உதவிபுரிந்தது. குடியரசுக் கட்சி யினர், தாமே தெளிவில்லாத கம்யூனிஸ்டுகளா யிருந்துகொண்டு, ரஷ்யாவின் கம்யூனிஸத்திற்குப் பகைவர்களா யிருந்தவர்களுடன் போரிட்டுக்கொண்டிருந்தனர். பேரளவில் இத்தாலியப் படைகள் போரில் அமர்த்தப்பட்டன. இச்சண்டை ஒரு பெரிய ஐரோப்பியப் போராக வளரும் போல அச்சுறுத்தியது.

## சருவதேச சங்கம்

போரை அறவே ஒழிக்கும் போராக இருக்கவேண்டுவதும், உலகத்தில் மக்களாட்சியை வாழ வைக்கவேண்டுவதுமான போர், ஆட்சியை ஒருமுகப்படுத்திய யதேச்சாதிகாரத்தை அல்லது நாம் இக்காலங்களில் பெயரிட்டு வழங்கும் சருவாதிகார ஆட்சியை, ரஷ்யா, ஜெர்மனி, இத்தாலி, துருக்கி என்னும் நாடுகளிலும், மற்ற இடங் களிலும் இக்கொள்கைகளை நடைமுறையிற் பின்பற்றச் செய்வதிலும் முடிந்தது. இதைத் தொடர்ந்து மக்களினத்தின் ஒற்றுமையும், பன்னாட்டுச் செயலுக்குத் தேசியக் கருத்தை உட்படுத்துவது என்ற நம்பிக்கையும் பெரிய ஏமாற்றத்திற்கு உள்ளாயின என்பது தவிர்க்க முடியாததாயிற்று. முதலில் ஆவலுடன் வரவேற்கப்பட்டதும் மக்களினத்திற்கு உறுதியான நம்பிக்கையையூட்டுவதும், சிறிது

வளர்ச்சிக்கும் வெற்றிக்கும் பின் திடீரென்று மறுதலிப்பைப் பெற்றது. மான சருவதேச சங்கம், சமாதானத்தை நிலைபெறச் செய்ய ஓர் அரிய கருவியாகவும், வல்லந்தமாகத்தாக்கும் வலிமை பெற்றிருந்த நாடுகளுக்கு எதிராகக் குற்ற மற்றனவும் எளியவையுமான நாடுகளுக்குப் புகலிடமாயும் இருந்த தன்மை பெரும்பாலும் மறைந்துவிட்டதெனலாம். சங்கம் ஜினீவாவில் அதற்கென ஏற்பட்ட இடத்தில் இன்னும் உயிர் பிழைத்திருந்ததுடன், சமூகப் பொருளாதாரப் பிரச்சினைகளில் பெரும்பயனுள்ள பணியாற்றியும் வந்தது. ஆனால், ஜனாதிபதி வில்ஸனும், சங்கத்தைத் தோற்றுவித்தவர்களும் தளர்ச்சியுற்ற இந்நிலையம், அவர்கள் அன்புடன் செலவிட்ட நேரம் ஆற்றல் முதலியவைகளின் மதிப்புக்கு ஏற்றதாயிருந்ததாவெனக் கருதியிருக்கமாட்டார்கள். உறுதியாக எதிர்பார்த்ததைப் போன்று, உலக மக்களின் மனம் சமாதானத்தை நோக்கவில்லை.

ஐரோப்பிய மக்களிற்பெரும்பகுதியினரும், அவர்தம் ஆட்சியாளர்களும், போரினால் ஏற்படும் மனவெழுச்சிகளையும் பயன்களையும் எண்ணி மகிழ்ந்தார்கள். எல்லைகளைச் சரிப்படுத்துவதற்கோ, அல்லது புதிய குடியேற்ற நாடுகளைப் பெறுவதற்கோ, ஜெர்மனியும் இத்தாலியும் சண்டையிடத் தயாராயிருந்தபொழுது, சமாதானத்தின் நண்பர்களும், சங்கத்தை ஆதரித்தவர்களும் அவர்கள் கொண்டிருந்த பெரிய அக்கறைக்காகச் சிறிய தியாகத்தைச் செய்ய மனமில்லாதவர்களாயும், அல்லது இயலாதவர்களாயும் எந்த இடருக்குள்ளாவதையும் ஏற்க ஆயத்தமில்லாதவர்களாயும் இருந்தார்கள். சருவதேச சங்கத்தின் அடிப்படையான உயர்ந்த நோக்கங்கள் சிதைவுற்றிருந்தன. மனிதவினம் அவற்றை மீண்டும் நாடவேண்டி வரும்; ஆனால், அவற்றை எம்முறைகளிற் கைவரப் பெறலாம் என்பது அடிப்படையையே மாற்றியமைக்கும் மாறுதல்களை வேண்டிற்று.

## ரஷ்யாவும் சங்கமும்

சங்கம் தோல்வியுற்றதில் முக்கியப் படிகளை மட்டும் கூறவியலும். ஜெர்மனியும், துருக்கியும், எல்லாவற்றிற்கும் மேலாக ரஷ்யாவும் ஒட்டிக்கொண்டிருந்ததால், உயர்ந்த நம்பிக்கைகள் ஏற்பட்டிருந்தன. முதலில் ரஷ்யாவிடமிருந்து ஏளனம் செய்வதுதான் சங்கத்திற்குக் கிடைத்தது. அச்சுறுத்திய கம்யூனிஸ்டு புரட்சியை விலக்குவதற்கு 'நடுத்தரவகுப்பு' (பூர்ஷ்வா) மக்களாலியங்கும் அரசாங்கங்கள் நம்பியிருந்த ஒரு கருவியென இச்சங்கம் இகழ்ந்துரைக்கப்பட்டது. ஆனால், நாஸி ஜெர்மனியின் வளர்ச்சியால் பேரச்சம் ஊட்டப்பட்ட ரஷ்யா, இச்சங்கத்திற் சேர்ந்து, குற்றங்காணுமியல்போடு அன்புடன் இருந்தது. ஐக்கிய நாடுகள், இச்சங்கத்தில் சேரவில்லை. ஆனால்

உறுப்பாயிருக்கும் எண்ணத்தை மறுத்தபோதிலும், இதன் பணிகளில் நன்கு ஒத்துழைத்தது. ஐக்கிய நாடுகள் சேராமலே இச்சங்கம், உலக விவகாரங்களில் கட்டுப்படுத்துதலிலும், ஆதிக்கம் செலுத்துவதிலும் சூழ்நிலைக் கேற்ப நன்கு செயல்புரிந்தது போலத் தோன்றியது ; நற்பணியைச் செய்வதற்கான கருவியாயிருந்தது எதிர்காலம் எடுத்துக் காட்டியது போல, அது பயனுள்ளதாக இருக்குமாறு பயன் படுத்திக்கொள்ள மக்களிடையே உறுதியே அமைய வேண்டுவதாகும்.

## ஜப்பான்

சங்கத்திற்கு எதிராக உறுதியான தாக்குதல் ஜப்பானிடமிருந்து ஏற்பட்டது. ஜப்பான் சீனவுடன் போரிலிறங்கியது. அதற்கான காரணங்களும் போரின் போக்கும் இந்நூலுக்குப் புறம்பானவை. சீனவும், ஜப்பானும் சங்கத்தின் உறுப்புக்களாயிருந்தன. இவற்றுக் கிடையே தோன்றிய இப்போரைத் தடை செய்வதற்காகவே சங்கம் இருந்தது. இச்சண்டைக்கான காரணங்கள் தெளிவற்றவை. சிலவற்றில் ஜப்பானின் செயல் ஒருக்கால் நேர்மையாயிருக்கலாம். ஆனல், சங்கத்தின் கருத்துப்பற்றி எவ்வித ஐயமுமில்லை. ஓர் ஆணைக்குழு இச்செய்தி பற்றி விசாரணை செய்து, ஜப்பானுக்கு எதிராக ஒருமுகமான முடிவு செய்தது. இங்கு முடிவான சோதனை யிருந்தது. உலகம் ஒரு தனியரசிற்கு எதிராயிருந்தது. அவ்வரசு, விஞ்சி மேற்செல்லும் பளுவைக் கொண்டிருந்த பொதுக்கருத்திற்கு இணங்குமா ? இணங்காவிட்டால், சங்கம் அதை இணங்குமாறு கட்டாயப்படுத்துமா ? சங்கத்தினல் சுமத்தப்படுகிற கொள்கைக்குப் பின் ஆதரவாக உண்மையான அதிகாரம் இல்லையென்பதை ஜப்பான் கண்டுகொண்டது ; எனவே, அதன் செயலை எவ்விதத்திலும் மாற்றம் செய்ய மறுத்தது. சங்கமும் அதன் முடிவை நிறைவேற்ற முற்பட வில்லை. சங்கம் இல்லாதிருந்தால் எப்படியிருக்குமோ, அப்படியே சண்டை தொடர்ந்து நடந்தது.

## சங்கத்தின்மீது இத்தாலியின் தாக்குதல்

சங்கத்தை எதிர்த்து ஜப்பானின் வெற்றி, வலிமையான மற்றெல்லா ஆட்சிகளுக்கும் பேருக்கத்தை அளித்தது. இத்தாலியும் இப் படிப்பினையை ஏற்றுக்கொள்ளாமலில்லை. அபிசீனியாப் போரும் இதே பிரச்சினையைத்தான் எழுப்பியது. அபிசீனியா, ஐரோப்பா விற்குச் சீனவைவிட அருகிலிருந்ததும், சங்கத்தின்மீது ஏற்பட்டிருந்த நம்பிக்கை தோல்வியுற்றதும் மிகவும் வருத்தத்தை உண்டுபண்ணின. இத்தருணத்தில், ஏதாவது செயல் புரிய வழி காணுமாறு துன்புறுத்தப் பட்டது. உண்மைப் போரின் அச்சத்தை எதிர்த்து நிற்க ஒருவரும் தயாராயில்லை. ஆனல், ஒப்பந்தத்தின் சொற்கள் பொருளாதார

நடவடிக்கைகள் எடுப்பதைக் கருதின. இவை 'சாங்க்ஷன்கள்' என வழங்கலாயின. சங்கத்தின் உறுப்புக்களான நாடுகள், இத்தாலியுடன் வாணிகம் செய்ய மறுத்தாலும், போருக்குத் தேவையான பொருள்களைச் சிறப்பாகப் பெட்ரோல் முதலியவைகளை இத்தாலிக்கு அளிக்க மறுத்தாலும், போரை வெற்றிகரமான முடிவிற்குத் தொடர்ந்து நடத்த முடியாதென்பது நம்பப்பட்டது. ஆனால், மிகவும் அமைதி வாய்ந்த இந்நடவடிக்கையை மேற்கொள்ளுவதற்குச் சங்கத்தின் உறுப்பினர்கள் தயாராயில்லை. இத்தாலிக்குச் சில பொருள்கள் அனுப்பப் படுவது மறுக்கப்பட்டது. ஆனால், இப்பட்டியலில் மிகமிக முக்கியமான பெட்ரோல் சேர்க்கப்படவில்லை. அதற்குக் காரணம், இப்பொருளைப் பட்டியலிற் சேர்த்திருந்தால், இத்தாலியிடமிருந்து போர்ப் பேரறிவிப்பை உண்டுபண்ணும் என்று நம்பியதேயாகும். சங்கத்திற்கு எவ்விதக்குறிப்பும் தாராமலே முசோலினி அவரது இலக்கை நோக்கி முன்னேறினர். அதன் பின், ஐரோப்பாவை நடுங்கச் செய்த பெரும்பிரச்சினைகளில், சங்கம் தலையிடுவதுபற்றி வினவே தோன்றவில்லை. ஆஸ்திரியாவும், சுடேட்டன் ஜெர்மனியும், ஜெர்மனியுடன் இணைக்கப்பட்ட பொழுது சங்கத்தின் பெயர்கூடக் குறிப்பிடவில்லை.

எனவே, சங்கத்தின் உறுப்புக்களாயிருக்கும் பொறுப்பிலிருந்து பல நாடுகள் திரும்பப் பெற்றனவென்பதைப் பற்றி வியப்பதற்கில்லை. இத்தாலியும் ஜெர்மனியும் திரும்பப்பெற்றதோடு, அதன் அடிப்படைக் கொள்கைகளை முழுமையாக மறுத்ததாயும், அதன் கொள்கைகளும் முறைகளும் மாற்றியமைக்கப்பட்டாற்கூட மீண்டும் சேராவெனவும் அறிவித்தன.

## போர் மூளுதல்

1914ஆம் ஆண்டு நடுவேனிற் காலத்திலிருந்ததைவிட, சமாதானத்தை நிலைபெறச் செய்வதில் ஒரு சிறிதளவுகூட ஐரோப்பாவின் வடக்கிலிருந்த சிற்றரசுகள் பேரமைதியைக் கொண்டிருந்தன. ஆனால், போரை நிறுத்துவது என்பதில் அவற்றின் செயல் ஒரு பயனையும் அளிப்பதாயில்லை. கிரேட் பிரிட்டனும், பிரான்சும், மனவெழுச்சியுடன் பெரும்பாலும் நரம்புத்தளர்ச்சியடைந்தவை போல, சமாதானத்தைக் காப்பாற்ற ஆவலுள்ளனவாயிருந்தன. ஆனால், போரைத் தடை செய்வதில் அவற்றுக்கிருந்த விருப்பம் மத்திய அரசுகளால், தன் நினைவுள்ள வலிமையின் அறிகுறியாக விளக்கம் கூறப்பட்டது. ரஷ்யாவின் நிலையும் நோக்கமும் பெரும் பிரச்சினையாயிருந்தன. சோவியத்து அரசாங்கம், ஜெர்மனிக்குப் பகையாயிருந்ததுடன் சருவதேச சங்கத்தைச் சமாதானத்தைக் காப்பாற்றுவதற்குப் பயனுள்ள கருவியாகச் செய்வதில் விருப்பங்கொண்டிருந்ததாகக்

காட்டிக்கொண்டது ; ஆனல், அதற்கும் மேற்கு நாடுகளுக்குமிடையே யிருந்த உறவுகள் உள்ளன்புள்ளனவாயில்லே. அதனுடன் ஒன்று மற்றென்றை அவநம்பிக்கையுடன் கருதியது. ஈடுசெய்ய வியலாத நெருக்கடியில், ரஷ்யா ஐரோப்பாவைக் கைவிட்டது. ஐக்கிய நாடு களின் ஒத்துணர்வுகள் பற்றி ஒருபொழுதும் ஐயமில்லே. ஆனல், ஒதுங்கியிருக்கும் கொள்கை அமெரிக்காவின் மரபுகளில் வேரூன்றி யிருந்தது ; அமெரிக்காவினுடைய இரக்கம் அல்லது ஒத்துக்கொள்ள மறுப்பு முதலியவற்ருல், இராணுவ அரசுகள் அசைக்கப்பட முடியாம லிருந்தன. அமைதி சார்ந்த இரக்கங்களும் அவாக்களும் நிறைந்த நெகிழ்ச்சித் தன்மையுடைய பொருட்டிருளே யெதிர்த்து, ஜெர்மனியும் இத்தாலியும், அச்சுறுத்தக் கூடியதும் நன்கு தெளிவாக்கப்பட்டது மான கொள்கையுடன் விளங்கின. தாராளக் கொள்கையென வழங்கப்பட்டவைகளையெல்லாம், அந்நாடுகள் வெறுத்துப் பழித்துக் கூறின ; போரையும் மனிதத் தன்மையின்மீது அதற்கிருந்த செல் வாக்கையும் புகழ்ந்தன ; வலிமையைப் பயன்படுத்தியோ அல்லது அச்சுறுத்துதலாலோ, பெரிய இலாபங்களைப் பெற்றன. அம்முறை களைக்கொண்டே மேலும் வெற்றி காண உறுதியுடன் நோக்கின. மனித வொற்றுமை, பல்வேறு நாடுகள் ஒன்றற்கொன்று துணை புரிவது இவற்றின்மீது அவை வெறுப்பைத் தவிர வேறென்றையும் கொள்ள வில்லை.

இத்தாலியில் முசோலினி, இனத்தைப்பற்றிய ஹிட்லரின் கொள் கையை ஒரு பொழுதும் ஏற்கவில்லை; ஜெர்மனியின் நெருக்கத்தால், யூதர்களுக்கு எதிராகக் கடுமையான நடவடிக்கைகளைப் பயன்படுத் தினர். ஆனல், ஹிட்லரின் சமயக் கொள்கையின் உள்ளுறை தத்துவம், மற்றவர்களைக் காட்டிலும் ஜெர்மன் அல்லது நார்டிக்கு இனந்தான் மிகச்சிறந்தது என்பதும், கீழ்த்தரமான இனங்கள் கீழ்ப்படிந்த நிலையில் வைக்கப்படவேண்டும் அல்லது தேவைப்படின் அழிக்கப்படவேண்டும் என்பதுந்தான். யூதர்களைக் குறித்து எப்பொழுதுமே அவர் வெறி பிடித்த வெறுப்பைக் கொண்டிருந்தார் ; அவர்களுக்கு இரக்கம் காட்டுவது குற்றமன்ருயினும் வலுவின்மையைக் குறிப்பதாகும் என அறிவித்தார் ; அவர்கள் அழிவை வெளிப்படை யாக உரிமையுடன் கோரினர். இவ்வாறு உருவாக்கப்பட்ட உலகம் சமாதானத்துடன் இருப்பது என்பது இயலாதது.

## பிரான்சும் இங்கிலாந்தும்

இந்நிலையில் துணையாயிருந்த கூறுகளில் கிரேட் பிரிட்டனுடன் பிரான்சும் கொண்டிருந்த நெருக்கமான நேசத்திற்குக் காரணங் களுள், இவ்விரு நாடுகளுக்குமிடையே இருந்த ஆர்வமுள்ள இரக்க

மும் ஒன்றாகும். பிரெஞ்சுப் பிரதமரான எம். டலாடியர், இரு நாடு களின் ஒற்றுமையைப் பற்றி மிகவலிமையான முறையில் உறுதி கூறினர். இரு நாடுகளிலுமுள்ள பெருந்தலைவர்களுக்கிடையே போய்ப் பார்ப்பது ஏற்பாடு செய்யப்பட்டது. இச்செய்தி, மிகச் சிறந்த ஆர்வத்தைத் தூண்டியது. இங்கிலாந்தைக்காட்டிலும் பிரான்சு, உடனடியாக ஏற்படக்கூடிய போரால் அச்சுறுத்தப்பட்டது. முசோலினி, வெளிப்படையாக டூனிஸ், டிஜிபூடி முதலிய பகுதிகள் இத்தாலியுடன் இணைவதை உரிமையுடன் கோரினர். இத்தாலியிற் பொதுமக்களின் கருத்து, கார்ஸிக்கா, நைஸ் முதலிய வைகளை இத்தாலியின் வழித்தோன்றல்களாக உரிமை பாராட்டிற்று. போருக்கான தயாரிப்புகள், பிரான்சில், புதிய போர்முறைகளின் வளர்ச்சிகள் நோக்கியதைவிட நற்பேறில்லாது மிகவும் பின்னணியி லிருந்தன.

## இங்கிலாந்தின் கருத்துக்கள்

இங்கிலாந்தில் மக்களின் மனநிலை, முன்பு அறியாதவாறு இரு கூறுபட்டிருந்தது. நாடு தீக்கனவு காண்பது போன்றிருந்தது. ஒருபுறத்தில், ஒவ்வொரு வகையில் சமாதானப் பேச்சுக்களும் கொள்கைகளும் ஆதரவு பெற்றன. சருவதேச சங்கமும் வலுவான ஆதரவைப் பெற்றது. ஆனல், அதே தருணத்தில், பிரான்சைவிட மிக்க வலிமையுடன் போருக்கான ஆயத்தங்களும் ஊக்கத்துடன் முயற்சியும் தூண்டப்பட்டன. எல்லோரும் இராணுவப் பணியில் ஈடுபட வேண்டும் என ஆணைபிறந்தது. போர்ப்பணிகட்குச் செல விடப்படுவதற்காக இதற்குமுன் கண்டறியாத பெருந்தொகைகள் ஒதுக்கப்பட்டன. இப்போரின் ஒருகூறு, வானிலிருந்து தாக்கு வதாகும் என்பது தெரிந்ததுடன் விஷவாயுவும் பயன்படுத்தக்கூடும் என்றும் அச்சம் ஏற்பட்டது. பல திறப்பட்ட பாதுகாப்பிடங்கள் விரைவில் கட்டப்பட்டன. இலண்டனிலிருந்தும், மற்ற இடர்ப் பகுதிகளிலிருந்தும் குழந்தைகள் வெளியில் அனுப்பப்பட்டன. ஒரு வேளை படையெடுப்பேற்படுமானல், உள்ளூரைச் சார்ந்த தேசியப் பாதுகாப்பிற்கான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன. போர் அறிவிழந்த செய்கையாகும் என அன்றும் நெவில் சேம்பர்லின் கூறி வந்தார்; அவருடைய எதிர்ப்பாளர்களின் நம்பிக்கையைப் பெருமலே எல்லாவிதமான பாதுகாப்புக்களுக்கும் ஆயத்தம் செய்வதில் முழு மூச்சுடன் ஈடுபட்டார். 1930ஆம் ஆண்டு கோடைகாலம் முழுவதிலும் போர் நிகழும் என்ற நினைவு சாதாரணமாயிருந்தது.

தெளிவற்ற அச்சங்கள் நன்கு உணர்ந்துகொள்ளப்பட்டன. ஜெர்மனியின் செயல், அதன் பேரவாக்களைக் குறித்துக் கூறப்பட்ட மிகத் தாழ்ந்த விளக்கங்களைச் சரியென்று மெய்ப்பித்தது.

செக்கோஸ்லோவாக்கியா, வல்லந்தமாகச் சேர்க்கப்பட்டது. ஹிட்லரின் அடுத்த முன்னேற்றம் போலந்தைக் குறித்ததாகும். போலந்துடன் ஜெர்மனி வலியத் தாக்காமலிருப்பதான உடன்படிக்கையைச் செய்துகொண்டிருந்தது உண்மைதான். அதிற் குறிப்பிடப்பட்டிருந்த காலவளவில் பாதிகூட முடியவில்லை. அவ்வுடன்படிக்கைகள் ஜெர்மனியின் அக்கறைகளுடன் முரண்பாடாயிருந்த பொழுது, அவற்றின் மதிப்புப்பற்றி ஹிட்லரின் கருத்து நன்குதெரிந்த தொன்றாகும். கிரேட் பிரிட்டன் இப்பொழுது நேரிடையாகத் தொடர்பு கொள்ள வேண்டியிருந்தது. ஏனெனில், சேம்பர்லின், தாக்குதலேற்பட்டால், போலந்துக்குப் பாதுகாப்பளிப்பதாக உறுதி ஒப்பந்தத்தைச் செய்திருந்தார். 1939 ஏப்பிரல் மாதத்தில் இச்செய்தி பாராளுமன்றத்திற்கு அறிவிக்கப்பட்டது. போலந்தைக் கடல் வழியாகவோ அல்லது தரை வழியாகவோ அடைய முடியாத நிலையில், எவ்வாறு போலந்திற்கு உதவியை அளிக்க முடியுமென்பது பற்றி ஒருவராலும் கூற இயலவில்லை. டான்ஸிக்கு, போர் மூளுவதற்கான தறுவாயிலிருந்தது. வேர்செயில்ஸ் உடன்படிக்கைப்படி, டான்ஸிக்கு 'சுதந்தரமான நகரம்' என அறிவிக்கப்பட்டிருந்ததுடன், போலந்தின் ஆதிக்கத்தின் கீழும் இருந்தது. ஜெர்மன் பேரரசில் அது மீண்டும் சேர்க்கப்பட வேண்டுமென்று ஹிட்லர் உரிமையுடன் கேட்டதுடன், போலந்து ஆட்சிப் பகுதியின் குறுக்காகக் கிழக்குப் பிரஷ்யாவிற்குச் செல்லும் ஒரு வழியையும் கோரினார். போலந்து மறுத்தது. போரும் பெரும்பாலும் தவிர்க்க முடியாததாயிருந்தது.

## ரஷ்யாவும் போலந்தும்

ரஷ்யா ஒருவேளை போரைத் தடை செய்திருக்கலாம். போர் மூளுவதற்குச் சில வாரங்களில், ரஷ்யாவின் செயல், அக்காலத்தில் அறியவியலாத மாயமாயிருந்தது. அது சமாதானத்திற்குச் சாதகமாக மொழிந்தது; சருவதேச சங்கத்தில் ஆர்வமிக்க உறுப்பாயுமிருந்தது. போலந்து, ரஷ்யா, பிரான்சு, கிரேட் பிரிட்டன் இவற்றை முக்கியமாகக் கொண்டதும் வலிமையுடையதுமான வலியத் தாக்குதலின்மை ஒப்பந்தம் ஏற்படுவதை விரும்பியது போலத் தோன்றியது. பிரிட்டன் முழுமையாக இதற்கு ஆயத்தமாயில்லாதிருந்ததே அதனுடன் வெளிப்படையாகச் சச்சரவு இடுவதாயிருந்தது. இங்கிலாந்தின் மக்கள்—சிறப்பாகத் தொழிற்கட்சியின் உறுப்பினர்கள்—ரஷ்யாவுடன் மனவொற்றுமை ஏற்படுவதன்மீது சமாதானத்தைப் பற்றிய நம்பிக்கைக் கொண்டிருந்தார்கள். இருநாட்டுப் பிரதிநிதிகளுக்குமிடையே கூட்டங்கள் நடந்தன. முன்மொழிவுகளும் எதிர்மொழிவுகளும் மொழியப்பட்டனவெனினும், செயற்படுவதான முடிவு ஏற்படவில்லை. ஜெர்மனியின் வலியத் தாக்குதலைக் குறித்து எவ்வித

எதிர்ப்பை மேற்கொள்ளுவது, எல்லைப்புற நாடுகளான பின்லாந்து, எஸ்தோனியா, லாட்வியா போன்றவைகள் எவ்விதம் செயல் புரிய வேண்டும் என்பன பற்றியவைகளில் முடிவு காண்பது கடினமாயிருந்தது போலத் தோன்றியது. ஆகஸ்டு திங்களின் பாதிவரையில், எல்லாம் சரிவர நடந்து கொண்டிருந்ததாகக் காமன்ஸ் சபையில் சேம்பர்லின் உறுதியளித்தார்.

## ரஷ்யாவும் ஜெர்மனியும்

ஆனால், வெடிகுண்டு அப்பொழுது வெடித்தது. ஆகஸ்டு 20ஆம் நாளன்று ரஷ்யா ஒரு வாணிக ஒப்பந்தம் செய்துகொண்டதாயும், அதைத் தொடர்ந்து ஜெர்மனியுடன் வலியத் தாக்குதலின்மை ஒப்பந்தமும் செய்து கொண்டுள்ளதாயும் அறிவிக்கப்பட்டது. பிரிட்டிஷ் பிரதிநிதிகள் ஏற்கனவே வந்து சேர்ந்திருந்தார்கள். அவர்களின் இருக்கையினுல் மேற்கொண்டு எவ்விதப் பயனுமில்லையென்பது தெளிவாயிற்று. உறுதியான போரை நேருக்கு நேராகக் காணும் நிலையில் நாடு திரும்பினர். வியப்பூட்டுவதும், மிக முக்கியமானதுமான 'அயல் நாட்டு அரசியற்புரட்சி'யின் பொருளை ஊடுருவிப் பார்க்கவோ, அல்லது விளக்கம்கூறவோ முடியாது. சமாதானக் கொள்கைக்கு பிரிட்டனிடமிருந்து பெரும் துணையைப்பற்றி உண்மையில் ரஷ்யா ஏமாற்றமடைந்திருந்தா? வேர்செயில்ஸ் உடன்படிக்கைப்படி சுதந்தரமாகச் செய்யப்பட்டிருந்த எல்லைப்புற நாடுகளை வன்முறைமூலம் கைப்பற்றும் விருப்பத்திற்கு எதிர் பார்த்ததைவிடக் குறைவான ஆதரவைப் பெற்றதா? ஹிட்லரின் தாக்குதலை எதிர்க்க அதன் வலிமையைப் பற்றி நம்பிக்கை யுறுதியற்றிருந்ததா, அல்லது ரஷ்யாவின் பல்வேறு செயல்களினுல் ஏற்படக்கூடிய நலன்களைச் சீர் தூக்கிப் பார்த்து, உணர்ச்சியற்ற உண்மை நோக்குடன் வரப்போகும் போரில் எப்படியும் போரிலீடுப்பட்டவர்கள் கலக்காமலிருப்பது என்று முடிவு செய்ததாயும், நீடித்ததாயும், தற்கொலை புரிந்துகொள்ளுவதாயுமிருந்த போரினுல் சோர்வடையும்போது தனக்குப் பெருநன்மைகளைப் பெறுவது என்ற நோக்கத்துடன் இருந்ததா? இவை சிந்தனைக்குரியன.

## போர் மூண்டது

போர்ஏற்படுவதுஇப்பொழுதுஉறுதியாயிற்று. ஆகஸ்டு 25ஆம்நாள் போலந்துடன் கிரேட் பிரிட்டன் செய்துகொண்டிருந்த உடன்படிக்கை புதுப்பிக்கப்பட்டது. ஒரே வேகமாகப் போருக்கான ஆயத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. இரு பக்கங்களிலுமிருந்து இறுதி நேரத்தில் முன்மொழிகள் செய்யப்பட்டன. ஆனல், அவை வெற்றி பெறவில்லை.

போலந்திற்கு ஜெர்மனி இறுதி எச்சரிக்கையை அளித்தது; ஆனால், எச்சரிக்கை விடுத்தது. அதற்கு விடையளிக்கவும் அல்லது அதன் வாசகங்களை அறிந்து கொள்ளுவதற்கும் போலந்திற்குப் போதிய நேரம் கொடுக்கவில்லை. 1939ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம், முதல் நாள் ஜெர்மனிப் படைகள் போலந்தின்மீது படையெடுத்தன. 3ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை கிரேட் பிரிட்டனும் ஜெர்மனியும் போர் தொடுத்தன.

போலந்தின் அழிவு முடிவுற்றது. வீரம், ஒழுங்கு, படை வீரர்களின் எண்ணிக்கை முதலியவையெல்லாம் மிக விரிவானதும், தொழில் நுணுக்கத்துடன் தயாரிக்கப்பட்ட வானவூர்திகள், டாங்குகள், துப்பாக்கிகள் முதலியவற்றின் துணையின்றி எவ்விதப் பயனும் இல்லை என்பதைப் போர் முடிவாகக் காண்பிக்கிறதாயிருந்தது. இப்புதிய சாதனங்களில் எல்லாம் போலந்து வருந்தத்தக்க நிலையில் குறைவுடனிருந்தது. 'பிளிட்ஸ்கர்க்' என்பதன் பொருளை ஐரோப்பா முதன் முதலாகப் பட்டறிவு வாயிலாயறிந்தது. போலந்து மக்கள் அவர்களுடைய மரபு சார்ந்த வீரத்தைக் காட்டினார்கள். எனினும், அது பயனளிக்கவில்லை. ஒருமாதத்திற்குள்ளாகவே ஜெர்மானியர்கள் வார்சா நகரை அடைந்தார்கள். ஜெர்மனி மாத்திரம் தனிமையில் போரிட்டிருந்தால், போலந்து மக்கள் நீடித்து எதிர்த்திருக்க முடியுமா என்பது ஐயத்திற்குரியதாகும். ஆனால், ஜெர்மனி தனித்திருக்கவில்லை. கிழக்கிலிருந்து ரஷ்யர்கள் தாக்கினார்கள். இவ்வாறு, கிழக்கிலும் மேற்கிலும் ஏற்பட்ட இரு கொள்ளிகட்கு இடையிற் சிக்கிய போலந்தின் எதிர்ப்பு வீழ்ச்சியுற்றது. போலந்தின் பிரிவினை—நான்காவது பிரிவினை—வெற்றி பெற்றவர்களுள் ஏற்கனவே முடிவு செய்யப்பட்டிருந்தது. வெற்றி பெற்ற இருவரின் கைகளிற்சிக்குண்ட நலக்கேடுற்ற மக்கள் கொடுந்துயருற்றார்கள். யூதர்கள் வன்கொலையொறுத்தற்கும் படுகொலைக்கும் ஆளானார்கள். இக்கொடுமைகள் போரின் இறுதிவரை நாளுக்குநாள் வளரும் முனைப்பைப் பெற்றிருந்தன.

# 25. இரண்டாம் உலகப் போர்

## இயல்புகள்

1914—18-ல் நடந்தபோர், நாகரிகத்திற்குப் பேரிடியாயிருந்ததுடன், போரிட்டவர்களும் அவர்களுக்கு ஏற்பட்ட இழப்புக்கள் காரணமாகச் சோர்வுற்றிருந்தார்கள். இவ்வளவு பெரிய அளவிற்கு மற்றொரு போர் நிகழாது எனவும், அவ்வாறன்றி மற்றொரு போர் ஏற்படுமானால், அது நாகரிகத்தை அறவே அழித்துவிடும் எனவும் பொதுவாகக் கருதினார்கள். 1919-ல் ஏற்பட்ட தற்காலிகப் போர் நிறுத்தத்திற்குப் பின், இருபத்தோராண்டுகள் கழித்து, மிகப்பெரிய அளவில் மீண்டும் மற்றொரு போரில் உலகம் குதித்தது. இப்போர், முன்னைய போரை விட நீடித்ததாயும் ஐரோப்பாவின் வாழ்க்கையில் பேரிழப்புக்களை உண்டு பண்ணியதாயும் இருந்ததுடன், ஐரோப்பாவின் நகரங்களையும் பண்டைக் காலத்தின் நினைவுச் சின்னங்களையும் பெரிதும் அழித்தது. போரின் போக்கைப் பற்றிச் சிறியதான வடிவமைதியை அளிக்குமுன், அதன் சில தலைமையான இயல்புகளை இங்குக் குறிப்பிடுவோம்:

## போரின் பரப்பு

முதல் உலகப் போரைவிட, இது மிகவும் விரிந்த நிலப்பரப்பைப் பற்றியிருந்தது. ஐரோப்பாவில், துருக்கி, ஸ்வீடன், ஸ்பெயின், போர்த்துகல், சுவிட்சர்லாந்து, அயர்லாந்து ஆகிய நாடுகள் மட்டும் இப்போரின் அழிவுகளிலிருந்து காப்பாற்றப்பட்டன. இரண்டு அமெரிக்க நாடுகள், ஆப்பிரிக்கா செயற்படுவதில் ஆசியா முதலிய நாடுகள் முழுமையாக இப்போரில் ஈடுபட்டிருந்தன. எனினும், இப்போரில் சில நாடுகள் பெயரளவில் பங்கு கொண்டிருந்தன. நீடித்த போரினால் ஐரோப்பா அழிக்கப்பட்டது; பல பகுதிகளில் போர்விடாது தொடர்ந்து நடைபெற்றது. போரின்முதற்பகுதியில் ஆப்பிரிக்காவின் வடக்கில் கடுஞ்சண்டைகள் நிகழ்ந்தன. இறுதி நிலையில், ஜப்பான் போரில்

இறங்கியதும் பசிபிக்குக் கடலையொட்டியிருந்த பல நிலப்பகுதிகளைச் சிறப்பாகக் கொடுமை நிறைந்ததும் அழிவைத் தோற்றுவிப்பதுமான போரில் தொடர்பு கொள்ளுமாறு செய்தது.

ஒருவிதத்தில் முதல் உலகப் பெரும்போரைவிட, இரண்டாம் போர் பெரிதும் வேற்றுமையுற்றிருந்தது. முதற்போர், விரைவிலேயே அக்கறையுடன் முன்கூட்டியே ஏற்பாடு செய்யப்பட்ட போர்க்காலப் பள்ளங்களில், பாதுகாப்புடன் இருந்த இருபடைகட்குமிடையே நிலைத்த சண்டையாயிற்று. பிரான்சு, ஜெர்மனி முதலிய பலவிடங்களில், பெரு வரிசைகளாக அரண்கள் கட்டப்பட்டிருந்தும், நேருக்கு நேர் புரிந்த தாக்குதலால், அவைகளை உடைத்து உட்செல்ல இயலாதிருந்தும், டாங்குகள், வானவூர்திகள் இவற்றின் உபயோகத்தினுல், இவ்வரண்கள் பயனற்றனவாகச் செய்யப்பட்டன. அதனுடன் தொடக்கத்திலிருந்து இறுதிவரை போர் புடைபெயர்ச்சியுடையதாயிருந்தது. முதற்போரைப் போன்று இப்போரும், பொறியியல், அறிவுநூல் முதலியவற்றைச் சார்ந்த புதுப் புனைவுச் செயல்களைச் சார்ந்திருந்தது. இப்புதுப் புனைவுகள், பல நிலைகளில், முதற்போரின்போது அறியப்பட்டிருந்தவைகளின் விரிவுகளாயிருந்தன. டாங்குகளின் உருவம் மிகப் பெரிதாக்கப்பட்டது. அவற்றின் வேகமும் அதிகமாக்கப்பட்டது. எண்ணிக்கையிலும் அவை மிகப் பெரிய அளவிற் கட்டப்பட்டன.

## முழுவதும் புடைபெயர்ச்சியான போர்

ஆனுல், இரண்டாவது போரைப்பற்றி ஏதாவதொன்று குறிப்பிட்டுக் கூறுவதானுல், அது வானவூர்திகளின் பயனுடையதாயிருந்தது. இவ்வானவூர்திகள் மிக முக்கியமான போர்க்கருவியாயிருந்ததுடன், பல விரிவுகளைப் பெற்றிருந்ததால், முதற்போரிற் காணப்பட்டவைகளுடன் ஒப்பிடும்பொழுது, இவை ஊறு செய்யாதவையாயும் முக்கிய மற்றவையாயுமிருந்தன. எந்தப் போர்க்கலமும் உறுதியாயில்லை. ஆனுல், வானூர்திகள் ஒவ்வொரு தாக்குதலுக்கும் பாதுகாப்பிற்கும் மிகவும் இன்றியமையாததும் தேவையானதுமான உடனியங்கும் கருவிகளாயுமிருந்தன. முதலாம் போர் அறிந்திராத ஒரு கூறு, பரவுகுடை (Parachute) தாங்கியிருந்த படை இப்போரிற் பயன்படுத்தப்பட்டமையாகும். வானூர்தியில் ஏற்றிச் செல்லப்பட்ட வீரர்கள், பகைவர்களின் நாடுகளிற் பரவுகுடைகள் வாயிலாக இறக்கப்பட்டார்கள். பத்தாயிரக் கணக்கில் இவவாறு வானில் எடுத்துச் செல்லப்பட்டு, பகைவர்களின் போர் வரிசைகளுக்குப் பின்னுல், பாரசூட்டுப் படையினர் எவ்வித ஊறுமின்றி இறக்கப்பட்டனர் என்பது நம்ப இயலாததாகத் தோன்றியது. முதலாம் போரில் நன்கறியப்பட்டிருந்தவைகளில் அமைந்த இருபொருள்களே இரண்டாம் போரில்

காணப்படவில்லை. ஒன்று, ஸெப்ளின் அல்லது குறித்த திசையில் செல்லத்தக்க புகைக் கூண்டு. வானூர்தியைவிட இது மிகவும் மெதுவாகச் செல்லக் கூடியது என்பதுடன், ஊறுபடத்தக்கதாயு மிருந்ததால், அறவே பயன்படுத்தப்படவில்லை. இரண்டாவதாக, நன்கு விளக்க இயலாததாயிருந்தது நச்சுவளி (விடவாயு) ஆகும். முதற்போரில் இவ்வளி பெரியஅளவிற் பயன்படுத்தப்பட்டது. இத்தாலியர், அபிசீனியாப் போரில் இதை மிகப் பரவலாகப் பயன் படுத்தினர். எனினும், இரு பக்கங்களிலும் தயாரிக்கப்பட்டிருந்தும் இஃது இப்போது பயன்படுத்தப்படவேயில்லை.

தொடக்கத்திலிருந்தே போர், 'சருவாதிகாரப் போர்' என அறிவிக் கப்பட்டது; ஐரோப்பாவின் மொழிகளிலெல்லாம், இப்பெயர், நன்கு பழக்கப்பட்டதாகச் செய்யப்பட்டது. இச்சொல், முதலில் நாட்டின் அரசாங்கம், நாட்டின் செய்வினைகள் எல்லாவற்றையும் முழுமையாகக் கட்டுப்படுத்தியதுடன், கல்வி, களிச்செயல்கள், மக்களின் சமயம் போன்றவைகளை இயக்கி, அவற்றிற்குப் பகைவராயிருந்தவர்களுடன் போட்டியிடுவதில் அரசாங்கத்தை வலுவடையச் செய்யும் நோக்குடன் அமைந்ததெனப் பொருள்பட்டது. அதனுடன், நாட்டில் வாழும் ஆட வரும் பெண்டிரும், அவ்வரசாங்கத்தின் கையாட்சியிலிருந்தனரென்றும் பொருள் பட்டது. பெரும்பாலும் எல்லா நாடுகளிலும், ஆடவரைப் போன்று பெண்டிரும், போர் முயற்சிகளுக்கு உறுதுணையாகத் தேசியப் பணிகளில் ஒழுங்காக அமர்த்தப் பட்டார்கள். அவர்கள் பணிகள் பல தரப்பட்டவை. அவர்கள் தாதிகளாயும், நிலத்தை உழுது பயிரிடுவோர்களாயும் பணி புரிந்ததுடன், போர்ப் படைகளின் எல்லாப் பிரிவுகளினுடைய அரசாங்கப் பணி நிலையங்களிலும் உறுப்பினர் களாயுமிருந்தார்கள்; சண்டையிடுவதற்கு வழி காணும் ஆயத்த வேலை களில் எல்லாம் துணை புரிந்தார்கள். போரில் நேரிடையாக ஈடு படுதலினின்று பிரிட்டனில் பெண்டிருக்குப் பொதுவாக விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. ஆனால், மற்ற நாடுகளில், நேரிடைச் சண்டையில், ஊறு விளைவித்தும், ஊறு பெற்றும், மரணம் எய்தினார்கள். ரஷ்யாவில் இந்நிலை மிகச் சிறப்பாயிருந்தது. ரஷ்ய வீரப் பெண்மணிகள் இங்கிலாந்தில் சுற்றிவந்த பொழுது, பகைவர் களைப் பன்னிரண்டு தொகுதிகளாயும் (dozens) நூற்றுக்கணக்கிலும் குறிபார்த்துச் சுட்டு வீழ்த்தியதற்குத் தாங்களே பொறுப்பாளிகள் எனச் செருக்குடன் அறிவித்துக்கொண்டார்கள்.

எங்கும் நாட்டின் நிதி மூலவளங்களெல்லாம் அரசாங்கத்தின் கையாட்சியின்கீழ் அமைக்கப்பட்டன. போரினுடைய நிதி சூழ்வினைத் திறம்கொண்டிருந்தது. முக்கியமான கூறாயிருந்ததுடன், முதலாம் உலகப்போரின் பயனாக ஏற்பட்ட நெருக்கடியான நிதித் தொல்லைகளை

அது தவிர்க்கக்கூடியதாயிருக்குமென நம்பவேண்டியிருந்தது, 'பணத்தைக்கொண்டு எதையும் வாங்கலாம்,' என்ற கூற்று உண்மையற்றதாயிற்று. ஒரு பொருளை விலைக்கு வாங்கும் தருணத்தில், 'வெட்டுச் சீட்டுகள்' (coupons) கொடுக்கப்படாவிட்டால் பணத்தைக் கொண்டு எதையும் வாங்க முடியாதென்பது தெளிவாயிற்று. பெரும்பாலும் பொருள்களின் விலைவாசிகள் சட்டம் வாயிலாக வரையறுக்கப்பட்டன. மற்றவைகளிலிருந்ததைப் போலவே இதிலும், போர், ஒரு புதிய காலத்தின் தொடக்கத்தைக் குறிப்பிட இயலும்.

போர்ச் சுமையின் பங்கீடு பொருத்தமற்றதாயிற்று. எங்கும் சுமை தாங்கயியலாததாயிருந்தது. ஆனால், படையெடுக்கப்படுவதிலிருந்து கடலினால் பாதுகாப்பளிக்கப்பட்டு விலக்கப்பட்டிருந்த கிரேட் பிரிட்டனில், பட்டினி கிடக்கும் நிலை ஏற்படவில்லை. நாட்டின் நிருவாகத்தைத் திறமையுடன் புரிந்த உணவுத்துறை அமைச்சவை புகழுக் குரியதாயிருந்தது. போர் முடியும்வரை, ஜெர்மனியிலும் போதுமான உணவு இருந்தது.

## போரின் பேரச்சங்கள்

போரிலீடுபட்டிருந்த நாடுகளில் மிகப் பெரும்பாலானவை கொடுந்துயருற்றன. 'ஐரோப்பாவின் கடுந்துயர இடைநிலப் பகுதி'(misery belt of Europe) என்று வழங்கப்பட்டதும், பால்டிக்குக் கடலிலிருந்து கருங்கடல் வரை நீண்டிருந்ததுமான பகுதிகளில், போர் குறிப்பாகக் கொடிய தன்மையை உடையதாயிருந்தது. செக்கோஸ்லோவேக்கியாவிலும், போலந்திலும், நாடு பாழடைந்ததுடன், ஒரு கிராமங்கூட இவ்வழியிலிருந்து தப்பவில்லை. படைத்துறை சாராப் பொதுமக்களுக்கு உணவு கிடைப்பது அரியதாயிற்று. போரின் இறுதியாண்டில், ஐரோப்பாவின் மற்றெந்த நாட்டையும்விட, அதன் நகரங்களும் கட்டடங்களும் அழிந்தது வாயிலாக ஜெர்மன் பெருந்துயருற்றது. யூதர்கள், போலந்து மக்கள், நாஸி ஆட்சிக்கு எதிராயிருந்த அரசியல் எதிரிகள் ஆகியவர்களுக்காக நிறுவப்பட்டிருந்தெனவும், மிகப் பெரியவைகளாயிருந்தனவுமான கைதிகளுக்கான ஒருமுகப்படுத்தப்பட்ட பாசறைகளின் (concentration prison camps) நிலைமை மிகக் கொடுமைக்குள்ளாயிருந்தது. மேலும், அக்கொடுமை பல நூற்றுண்டுகளாக ஐரோப்பிய நாகரிகத்தின் முன்னணியிலிருந்த மக்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடுமாவென நம்புவதற்கும் முடியாதவாறு அவ்வளவு கொடுமைவாய்ந்ததாய் விளங்கியது.

போரில் இறந்தவர்களின் தொகை முழுமையாக மதிப்பிடப்படவில்லை. பிரிட்டனுடைய இழப்புக்கள், முதல் உலகப் போரிலிருந்ததில்

அரையளவைச் சுற்றியதாயிருந்தது. முன் நடந்த போரில், உயிர்ச் சேதத்தை மிகுதியாக விளைவித்த நீண்ட அகழிகளிலிருந்து சண்டையிடுவது இல்லாதிருந்தது இதற்குக் காரணமாகும். ஆனால், 3,50,000 வீரர் உயிரிழந்தனர். படைத்துறையைச் சாராமக்களிடையே, ஜெர்மனியின் வான் வழித்தாக்குதல்களால் உயிரிழந்தவர்களின் தொகை பல்லாயிரக் கணக்கிலிருந்தது. ஆனால், இந்தத் தொகை, கணக்கிடப் படாத ரஷ்யா, ஜெர்மனி முதலிய நாடுகளின் இழப்புக்களுடன் ஒப்பிடும்போது, மிகக் குறைவாயிருந்தது. ஹாலந்து, பெல்ஜியம், பிரான்சு ஆகிய நாடுகளின் படைத் துறைசாரா மக்கள் சில தருணங்களில் பட்டினி கிடக்கும் நிலையிலிருந்தார்கள். போரிற்காணப்பட்ட சில கூறுகள், வரலாற்றில் மிகத்தாழ்வான இழிநிலையோடு கூடிய காலப்பகுதிகளை நம் நினைவுக்குக் கொண்டு வருவனவாயிருந்தன. பிணையாக நிறுத்தப்பட்டவர்கள் கொலை செய்யப்பட்டார்கள். ஒருவன் செய்த குற்றத்திற்காக அவனுடைய உறவினர்களும் ஒறுக்கப்பட்டார்கள். பல தலைமுறைகளாகவே போரின் ஆவணங்களிலிருந்து மறைந்துபோன, மனிதனையே உண்ணும் மனிதனைப்பற்றிக் கேள்வியுறுகிறோம். முன்னேற்றம்பற்றிய கருத்தை முழுவதிலும் திருப்பிப் பார்க்கவேண்டுவது அவசியமில்லையா என்ற வினா மக்களுக்குள் எழுகிறது.

## வெளிப்படுத்தப் பெருத போர்க் கருவிகள்

பகைவர் எத்தகைய பாதுகாப்பையும் செய்துகொள்ள இயலாததும் வெளிப்படுத்தப் பெருததுமான போர்க் கருவிகளைக் கொண்டிருந்ததாக ஹிட்லர் அறிவித்தார்; முசோலினியும் இத்தற்புகழ்ச்சியை மறு எதிரொலி வாயிலாகச் செய்தார். ஜெர்மன் பொறியியல் வல்லுநர்கள் திறமையுள்ளவர்கள் என்பதிலும், பேரழிவுகளை உண்டுபண்ணும் பொறிகளைத் தோற்றுவித்தவர்கள் என்பதிலும் எத்தகைய ஐயமுமில்லை. போரின் தொடக்கத்தில் காந்தக் கவர்ச்சியுள்ள கடற்கண்ணி இருந்தது—பிரிட்டிஷ் உதவிச் சாதனங்களால் இது விரைவிலேயே முனைப்பழிக்கப்பட்டது. போர்முடியும் தறுவாயில், பறக்கும் குண்டுகளை ஜெர்மானியர் கண்டுபிடித்தனர். இவை நூறு மைல் தொலைவரை பாய்ந்து செல்லக் கூடியவையாயிருந்தன. அதனுடன் வேகமாய் உயரக்கிளம்பிச் செல்லக்கூடியனவும், வெளிமண்டலத்தில் எழுபது மைல் உயரம் வரையில் தாவிச் செல்லக் கூடியனவுமான குண்டுகளை வீசினர். இவை குறி நுட்பத்திறமில்லாது இலண்டன் நகருக்கருகில் விழுந்தன. இப்போர் மேற்கொண்ட கொடிய உருவத்தைப்பற்றித் திரு. எச். ஜி. வெல்ஸ் என்பவராலும் எவ்விதக் கற்பனையும் செய்ய முடியவில்லை. போர் அண்மையில் நிகழ்ந்ததால், அது பாராட்டுவதற்கான கற்பனையைச் செய்ய விடாது. எனினும்,

நாகரிகம் போரினல் அழிக்கப்பட்டதென்று கூறுவது தவருகும் நேச நாடுகளின் பக்கலில், கவிதை, மக்களால் விரும்பப்பட்ட பாட்டு, சிறப்பான சிறு விழாக்காட்சி அல்லது வெளிப்படையான ஆர்வம் முதலியவற்றுள் எதுவும் இருக்கவில்லை. ஆனல், பிரிட்டனில் இசை, சிறப்பாக ஜெர்மானிய இசை, முன்பில்லாத அளவில் மக்களால் பெரிதும் விரும்பப்பட்டதாயிருந்ததுடன், இசையரங்குகளும், நாடக மேடைகளும் செழிப்பான காலத்தைப் பெற்றிருந்தன. கடந்த போர் முதற்கொண்டே கம்பியில்லாத் தந்தி அல்லது வானெலியும் நிலைபெற்றுவிட்டது. போர் நோக்கங்களுக்காக இது பயன்படுத்தப்பட்டது. ஒவ்வொரு நாட்டிலும், அந்தந்த அரசாங்கம் ஏற்றுக்கொண்டதாய் விரும்பிய போரைப்பற்றிய கருத்தை வெளியிட்டது. ஜெர்மனி சிறப்பாக, நிகழ்ச்சிகளையும், இயல்புகளையும்பற்றி, தவருன எண்ணத்தையும், உருத்திரிந்த கருத்துக்களையும் பரப்புவதில் முயற்சியுடையதாயிருந்தது. முடிவில், இது ஹிட்லருக்குத் துணை செய்வதற்குப் பதிலாக ஊறு விளைவித்தது. ஆனல், வானெலி, ஒவ்வொரு நாட்டிலும் மிகச் சிறந்த இயல்புடைய இசையுடன் எல்லாச் சுவைகளுக்கும் ஏற்ற பொழுதுபோக்கான களியாட்டத்தை எல்லா இனத்தாருக்கும் அளித்தது.

## II

## போரின் படிவம்

தெளிவுறுவதற்காகப், போரின் திரும்பு கட்டங்களை மிகச் சுருக்கமாக இவண் குறிப்பிடுவோம் :

போரின் தொடக்கம், தனிச்சிறப்பு வாய்ந்ததும் எதிர்பாராததுமான அமைதியுடன் இருந்தது. செக்கோஸ்லோவேக்கியாவும் போலந்தும், ஜெர்மானியர்களிடமும் ரஷ்யர்களிடமும் கொடுந்துயருக்குள்ளாயின. ஆனல் இங்கிலாந்தும் பிரான்சும் துன்புருது தப்பின. பிரான்சிற்குப் பாதுகாப்பையளித்த மாகிநாட்டு அரண் தாக்கப்படவில்லை. ஜெர்மானிய நீர்மூழ்கிக் கப்பல்கள் ('யூ' படகுகள்) அழிவை உண்டுபண்ணவில்லை. விண்ணில் நடந்த போரும் அதிகமாகவில்லை. ரஷ்யர்களுடைய வல்லந்தத் தாக்குதலைப் பின்லாந்தினர்கள் வீரத்துடன் எதிர்த்து நின்றதில் இங்கிலாந்தின் கவனம் முக்கியமாகச் சென்றது.

## ஜெர்மனியின் வெற்றிகள்

1940-ல் இளவேனிற்காலத்தில், காத்திருக்கும் காலம் உறுதியான முடிவிற்கு வந்தது. ஒரு குறையைக்கூடக் குற்றமாகச் சுமத்தாது,

ஹிட்லர், அவருடைய படைகளையும், டாங்குகளையும், நீர்மூழ்கிக் கப்பல் களையும் ஐரோப்பாவின் வடமேற்கிலிருந்த அரசுகளுக்கு எதிராக அனுப்பினர். ஜெர்மனியின் படையெடுப்பின் பருவகாலம் எல்லா எதிர்ப்புக் களையும் விஞ்சியது. டென்மார்க்கும் நார்வேயும் கைப்பற்றப்பட்டன; பெல்ஜியமும் ஹாலந்தும் ஒப்பந்தத்தின் அடிப்படையில் சரணடையும்படி தூண்டப்பட்டன. பிரெஞ்சு நிலத்திலிருந்த பிரான்சு, இங்கிலாந்து முதலியவைகளின் படைகள், துண்டிக்கப்பட்டு, தோற்கடிக்கப்பட்டன. 1940ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 22ஆம் நாள் பிரான்சு சரணடைந்தது. பிரிட்டிஷ் படை, டன்கர்க்கு எனுமிடத்திலிருந்து தப்பியது. அது தன்னிடமிருந்த படைத்தளவாடங்களை இழந்தது. இங்கிலாந்தின்மீது படையெடுப்பு அண்மையில் நிகழக்கூடியதாய்த் தோன்றியது. இலண்டன் மிகக்கடுமையான குண்டு வீச்சிற்கு இலக்காகியது. ஆனால், உடனடியாக ஏற்படவிருந்த இடர், பிரிட்டன் சண்டை என வழங்கப்பட்டதும், வானில் நீடித்து நிகழ்ந்ததுமான சண்டையினால் தவிர்க்கப்பட்டது. பால்கன் தீபகற்பம், கிரீஸுடன் ஜெர்மானியர்களால் படையெடுத்தழிக்கப்பட்டது. ஆப்பிரிக்காவிலே தான், இந்த ஜெர்மனியின் வெற்றிகளுக்கு எதிராக ஆதாயங்கள் இருந்தன.

## ஜெர்மனி ரஷ்யாவைத் தாக்குதல்

1941-ல் நடுவேனிற்காலத்தில், ஜெர்மனி, ரஷ்யாவைத் தாக்கியதி லிருந்து, போரில் முற்றிலும் மாறுபட்ட இயல்பு கொண்ட புதியகாலம் தொடங்கியது. இது போரின்முடிவான நிகழ்ச்சியாயிருந்தது. தொடக்கத்தில் இப்படையெடுப்பு ஜெர்மனிக்கு வெற்றிகளை உண்டு பண்ணியது. மாஸ்கோவும் லெனின்கிராடும் அச்சுறுத்தப்பட்டன. ஒடெஸ்ஸா, கார்க்கோவ், ராஸ்டோவ் என்னும் நகரங்களை ரஷ்யா இழந்தது. இதன்பின், டிசம்பரில், போர் மற்றொரு மிகப்பெரிய பகுதிக்குப் பரவியது.

## ஜப்பான் ஐக்கிய நாடுகளைத் தாக்குதல்

பெர்ல் துறைமுகத்திலிருந்த ஐக்கிய நாடுகளின் கப்பற்படையை ஜப்பான் தாக்கியது. மேற்குப் பசிபிக்குக் கடலிலிருந்த பிரிட்டன் படைகளும் தாக்குண்டன. ஐக்கியநாடு இப்பொழுது அதன் முழு வலிமையுடன் போரிலிறங்கியது. அது ஜெர்மனியைத் தன் நேரிடையான பகை என அறிவித்தது. எனினும் ஜெர்மனியின் வெற்றிகள் தடையின்றி ஏற்பட்டுக்கொண்டிருந்தன. ஆப்பிரிக்காவிலும் ஜெர்மானியர்கள் சுறுசுறுப்பாயும் வெற்றி பெறுகிறவர்களாயுமிருந் தார்கள். கெய்ரோவுக்கு நாற்பது மைல்களுக்குள்ளாகவே முன்னேறி

யிருந்தார்கள்; 1942ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதத்திற்குள், ஜெர்மானியர்கள் ஸ்டாலின்கிராடு நகரை அடைந்து, அதற்கு ஏற்பட விருக்கும் அழிவைப்பற்றி அறிவித்தார்கள்.

## பருவ காலம் மாறுதல்

1942ஆம் ஆண்டு ஜனவரியுடன், பருவகாலம் ஜெர்மனிக்கு எதிராகத் திரும்பியது. வடமேற்கு ஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ் பிரதமரும், அமெரிக்க ஜனாதிபதியும் சந்தித்து, ஜெர்மனியின் வில்லங்க மற்ற சரண்தான் தங்களுடைய நோக்கமென அறிவித்தனர். இது முதற்கொண்டு, நெஞ்சுரமும் இராணுவத்திறனும் ஊக்குவித்த போதிலும், ஜெர்மானியர்கள், இழப்பை நல்கும் போரை நடத்தி வந்தார்கள். 1943 பிப்பிரவரியில் ஸ்டாலின்கிராடு நகரில் ஜெர்மன் படை சிறை பிடிக்கப்பட்டது, இப்போரின் முடிவான இராணுவ நிகழ்ச்சியாகும். மே மாதத்தில் ஆப்பிரிக்காவிலிருந்த ஜெர்மானிய, இத்தாலியப்படைகள் சரணடைந்தன. சிசிலித்தீவு மீதும், இத்தாலி மீதும் படையெடுக்கப்பட்டது. 1943 செப்டெம்பரில், இத்தாலியில் ஜெர்மனியின் படை மேலும் சண்டையிட்டுக்கொண்டிருந்த போதிலும், இத்தாலியின் அரசாங்கம் சரணடைந்தது.

## இத்தாலியும் ஜெர்மனியும் சரணடைதல்

இத்துன்ப இயலின் இறுதிக்கூறு 1944ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில் தொடங்கியது. 'டி' நாளில் (ஜூன், 6) நேசநாடுகளின் படைகள் பிரான்சில் இறங்கின. பிரான்சு, பெல்ஜியம், ஹாலந்து முதலியவற்றின் விடுதலை தொடர்ந்து நிகழ்ந்தது. ரைன் ஆற்றைக் கடந்து, பெர்லின் தொடர்ந்து குண்டு வீச்சுக்களால் தாக்கப் பட்டது. பெர்லின் நகரம் தகர்க்கப்பட்டுப் பாழடைந்த குவியலா யிற்று. முசோலினியும் ஹிட்லரும் துன்புற்று அழிந்தனர். 1945ஆம் ஆண்டு மே மாதம், ஏழாம் நாள் ஜெர்மனியில் போர்ப்படைகள் அனைத்தும் வில்லங்கமின்றிச் சரணடைந்தன.

III

## வலிய தாக்குதலால் வெற்றி பெறுதல்

ஒரு புறத்தில் ஜெர்மனியின் 'பிளிட்ஸ்கர்க்' காலும் மற்றொரு புறத்தில் ரஷ்யாவின் தாக்குதலாலும் எவ்வாறு போலந்து வீழ்ச்சி யுற்றதென்பதைக் கண்டோம். ஹிட்லர் அவருடைய கவனத்தை மேற்கு முகமாகத் திருப்பிய காலையில் அதற்கு என்ன நேரிடும் என்பதைப்பற்றி மேற்கு ஐரோப்பா இப்போது அறிந்திருந்தது.

எனினும், அதைப் பொருட்படுத்தாதிருந்தது. ஜெர்மனி நேரிடையாகத் தொடர்பு கொண்டிராத மற்றொரு சண்டை சிந்தையைப் பெரிதளவு கவர்ந்தது. முக்கியத்துவம் வாய்ந்த இம்மாதங்களில், ரஷ்யாவின் கொள்கையும் செயலும் பிரச்சினையாயிருந்தன. இதை ஆய்ந்தறியத் துணையாக இச்சமயம் நம்மிடம் எதுவுமில்லை. 1939-ல் ரஷ்ய அரசில், சில ஆண்டுகளுக்குப்பின், ஜெர்மனியிடமிருந்து ஐரோப்பாவை உறுதியாக விடுவித்ததற்குத் துணைபுரிந்த எச்சத்தினைத்திருந்ததென்பதைக் காண இயலவில்லை. ஏற்கனவே, போலந்தின் ஒரு பெரும்பகுதியை ரஷ்யா தன்னுடன் இணைத்துக் கொண்டிருந்தது. இவ்வாறு செய்ததற்கு ஹிட்லருடன் செய்து கொண்டிருந்த ஏற்பாடு துணையாயிருந்தது. எஸ்தோனியாவையும், லாட்வியாவையும் ரஷ்யா கைப்பற்றிக்கொண்டது.

## ரஷ்யாவும் பின்லாந்தும்

இப்போது ரஷ்யா பின்லாந்தைத் தாக்கியது பின்லாந்து, சிறந்த நாகரிகம் வலிமை முதலியவைகளைப் பெற்றிருந்தவர்களும் சமாதானத்தைவிரும்புகிறவர்களுமான மக்களின் தாயகமாயிருந்தது. இஃது ஒரு பெரிய உருவத்திற்கும் மிகச் சிறிய குறளனுக்குமிடையே நடந்த சண்டைபோன்று இருந்தது. ஆனால், எதிர்பாராத வகையில் குறளான பின்லாந்து மிகப்பெரிய கோலியாத்தை எதிர்த்துக் கடுஞ் சண்டை செய்தது. ரஷ்யர்கள் நான்கு முனைகளிலிருந்தும் பின்லாந்தைத் தாக்கினார்கள். எனினும், அந்நான்கு முனைகளிலும் கடுஞ்சேதத்துடன் ரஷ்யர்களைப் பின்லாந்தினர் விரட்டியடித்தனர். இங்கிலாந்தின் உணர்ச்சியில் பரபரப்புக் காணப்பட்டது. ஆங்கிலேய அரசாங்கம், பின்லாந்துக்கு உதவிபுரிய முடிவு செய்தது. ஆனால், நார்வேயோ, அல்லது சுவீடனோ, அவை வழியாகப் படைகள் செல்லுதற்கு இசைவளிக்க மறுத்தன. ஜெர்மனி, ரஷ்யாவிடம் இரக்கம் காட்டியது. எனவே, இறுதியில் ரஷ்யப் படைகளின் எண்ணிக்கை மிகுதியால் வெற்றியேற்பட்டது. ரஷ்யா, பின்லாந்தினர் ஏற்றுக்கொள்ளக்கூடிய வாசகங்களை அவர்களுக்கு அளித்தது. ஆனால், அதே தருணத்தில் உரிமையின் குறிக்கோளுக்கு மற்றொரு பேரிடி ஏற்பட்டது போலத் தோன்றியது.

1940-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பிரான்சிலும் பிரிட்டனிலும் உணர்ச்சி தன்னிறைவு கொண்டதாயிருந்தது. மேற்கில், ஜெர்மனி ஒன்றையும் செய்யவில்லை. மாகிநாட்டு அரண் உறுதியாயிருந்தது. நெவில் சேம்பர்லினது கொள்கையைப்பற்றி அவரது கட்சிக்குள்ளும் குறை கூறுவோரிருந்தனர். ஆனால். இதுவரையில் அவரது கொள்கை, நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் நேர்மை என்பது காட்டப்பட்டது.

## ஜெர்மனி நார்வேயைத் தாக்குதல்

அதன்பின், 1940ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம், 9ஆம் நாளன்று ஜெர்மனி, டென்மார்க்கு, சுவீடன் நாடுகளின்மீது படையெடுத்தது இவ்விரு நாடுகளுடைய மக்கள், ஐரோப்பாவிலேயே வாழ்ந்த மக்களுள் மிக அமைதியானவர்களாயும் செழிப்புற்றவர்களாயுமிருந்தார்கள். இவர்களின்மீது படையெடுக்க ஜெர்மனிக்குச் சிறிதளவும் காரணம் இல்லை. நார்வேயின் இயற்கையமைப்பு, அதைத் தாக்குவதற்குக் கடினமாகச் செய்யும் சிறப்பியல்பைக் கொண்டிருந்ததுபோலத் தோன்றியது. போரிடுவதில் புதிய ஜெர்மன் முறைகளைப் பற்றிய செயலறிவு முதன்முதலாக ஐரோப்பாவிற்கு இப்பொழுது ஏற்பட்டது. முற்றிலும் இயற்கைக்கு மாறாக, நார்வேயில் ஒரு கட்சியை ஹிட்லர் கண்டார். இக்கட்சி சிறியதாயிருந்த போதிலும், நாட்டின் உரிமைகளைத் தாக்குவதற்குத் துணைபுரிவதாயிருந்தது. இக்கட்சி குவிஸ்லிங் என்பாரின் தலைமையிலிருந்தது மற்ற நாடுகளிலும் நாட்டுக்கு எதிராயிருந்தவர் அனைவரும் இவரது பெயர் கொண்டு வழங்கப்படலாயினர். உடனே பிரிட்டன் உதவியை அனுப்பியது. ஜெர்மானியர்களின் தோல்வி மிக்க நம்பிக்கையுடன் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், பகைவர்களை எதிர்த்து நிற்க, பிரிட்டிஷ் படையெடுப்பில் வீரர்களின் எண்ணிக்கையோ, அல்லது நயத்திற நடவடிக்கைகளோ இயலாதனவாயின. பிரிட்டிஷ்படை தோல்வியுற்று மே மாதத்தில் மீண்டும் பெறப்பட்டது.

## சேம்பர்லினுக்குப் பின் வின்ஸ்டன் சர்ச்சில் பதவி பெறுதல்

நார்வேயில் தோல்வியுற்றமை, நன்னம்பிக்கைக் கோட்பாட்டின் மீது உறக்கம் கொண்டிருந்த நாட்டைத் தட்டியெழுப்பியது. அங்கு சண்டையை நடத்தியதில் தவறுகக் கணக்கிடுதலும் வலிமையின்மையும் காணப்பட்டன. அதனுடன் துரைத்தனத்தில் மாற்றமும் கோரப்பட்டது. சேம்பர்லினைப் பின்பற்றியவர்கள்கூட, போரின் தேவைகளுக்குச் சரி சமானமாயிருப்பாரென அவரை நினைக்கவில்லை, காமன்ஸ் சபையினர் அவரை ஆதரித்தனர் என்றாலும், அவருக்குப் பெரும்பான்மை மிகக் குறைந்த எண்ணிக்கையைக் கொண்டதாயிருந்ததால், பதவியைத் துறக்க உறுதி பூண்டார். வின்ஸ்டன் சர்ச்சில் பிரதமரானர்; ஆனல், அவரது அமைச்சர்குழுவில் சேம்பர்லினும் சேர்க்கப்பட்டார். அவர் சிறிது காலம் பற்றுறுதியுடன் பணிபுரிந்தபின், உடல்நலங் காரணமாகப் பதவியிலிருந்து ஓய்வுபெற்றுச் சிறிது காலத்திற்குள் மரணமடைந்தார். குறிக்கோள் நெறி, உயர்ந்த நோக்கங்கள் முதலியவற்றுக்கு அவர் சிறப்புற்றிருந்ததால், பலர் அவர் பெயரைப்

போற்றி வளர்ப்பர். மனவெழுச்சியுடன் சமாதானத்தை அவர் விரும்பியும், அவரால் அதைப் பெறமுடியாது போயிற்று. இதில் ஏற்பட்ட தோல்வியினுல், அவர் மனம் உடைந்து போனுர். அவருக்குப் பின் பதவியேற்றவர், பெரிய மாறுதல்களைக் கொண்டவராவர். அக்காலம் விரும்பியவரும் அவரேதான். அவருடைய பெயர், நெப்போலியனுடைய போரில், பிட்டு என்பாரையும், முதலாம் உலகப்போரில் லாயிடு ஜார்ஜ் என்பாரையும், சேர்த்து அடையாளம் காண்பதைவிட, ஜெர்மனியை எதிர்த்து நிகழ்ந்த இப்போரிலும், உரிமையின் குறிக்கோளின் வெற்றியிலும், அதிக நெருக்கமான அடையாளத்தைக் கொண்டிருந்தது. நடுத்தர வயதைக் கடந்தவரான சர்ச்சில், இளைஞரின் மனவெழுச்சி நிறைந்த ஆர்வத்துடன் போரில் ஈடுபட்டார். அவர் பேசுவதில் ஒரு சிறிய தடை காணப்பட்டபோதிலும், உள்ளத்திற்பதியும் ஆற்றல் வாய்ந்த சிறந்த பேச்சுவன்மையுடையவர்; ஊக்கமிழப்பதைத் தடை செய்யவும், உரமூட்டவும், நன்னம்பிக்கைக் கோட்பாட்டில் ஏற்படும் இடரைப்பற்றி எச்சரிக்கை செய்யவும், பொருத்தமான சொற்களைப் பயன்படுத்தவும் வெற்றி கண்டவர். அவருடைய கூற்றுக்களில் சில, ஆங்கிலேய இனத்தினரின் கருவூலங்களில் நிலையான இடம் பெற்றவையாகும். ஆனுல், அவருடைய திறமை சொல்லோடு நின்றுவிடவில்லை. அவர் தொடக்கம் முதல் வெற்றியைக்காண வழி கண்டார். அவர் முன்னறிவித்த பாதையை நோக்கி மிக நெருக்கமாக மக்களும் உடன் சென்றுர்கள். ஆனுல், பதவியைப் பெற்றபோது, விரைவிலேயே அவரை நேருக்கு நேராக நோக்கிய இடுக்கணின் மிகுதியைப்பற்றி அவர் நன்குணர்ந்திருக்க இயலாது.

## ஹாலந்தும் பெல்ஜியமும் வீழ்ச்சியடைதல்

ஜெர்மானியர்களின் படையெடுப்பு, மேற்கில் எரிகுழம்பு போன்று வழிந்தோடியது. ஹாலந்தும் பெல்ஜியமும், போலந்தையும் செக்கோஸ்லோவேக்கியாவையும் போன்று, சிறிதளவுகூட எதிர்த்து நிற்க முடியவில்லை. முதல் உலகப்போரில் ஏற்பட்டதைவிட, மிக விரைவாகவும், முழுமையாகவும், பெல்ஜியம் வீழ்ச்சியுற்றது. அந்நாட்டு மன்னர் கைதியாக்கி, ஜெர்மனிக்கு அழைத்துச் செல்லப்பட்டார். நாற்பதாண்டுவரை ஸ்பெயினை எதிர்த்து நின்றும், ஐம்பதாண்டுவரை உன்னத நிலையிலிருந்த பிரெஞ்சு முடியாட்சியை எதிர்த்துப் பகைமை பாராட்டியும் வந்த ஹாலந்து ஐந்தே நாளில் வீழ்ச்சியுற்றது. நாடு வெள்ளக்காடாயிற்று. ஆனுல், இவ்வாறு செய்தது பயன் பெருது போயிற்று. மூழ்கிக் குண்டு வீசும் பொறிகள், தீ மூட்டும் குண்டுகள், வான் வழியாகச் சுமந்து செல்லப்பட்ட படை வீரர்கள் முதலியவர்களால் ராட்டர்டாம் தாக்குண்டு, நகரத்தின் பழையபகுதி சேதமுற்றது. சுமார் 30,000 பேர் உயிரிழந்தனர். இராணி வில்ஹெல்மியா, பெரு

முயற்சியுடன் இங்கிலாந்திற்குத் தப்பியோடினாள். அங்குப் போர் முடியும் வரையில், இலண்டனில் சுதந்தர டச்சு அரசாங்கம் பணியாற்றியது.

## பிரான்சின் வீழ்ச்சி

### டன்கர்க்கு அருஞ்செயல்

பெல்ஜியமும் ஹாலந்தும், ஜெர்மனியை எதிர்த்து நிற்பதில், பிரான்சிற்குக் காவலரண்களாயிருந்தன. அவற்றின் வீழ்ச்சி, பிரான்சைத் துயரார்ந்த பேரிடருக்கு உள்ளாக்கியது. பெல்ஜியத்திற்கும் பிரான்சிற்குமிடையே, தற்பாதுகாப்பிற்காக வலுப்படுத்தப்பட்ட அரண் வரிசை இல்லை. பெல்ஜியத்திற்கு ஏற்கனவே ஒரு பிரிட்டிஷ் படைசென்றிருந்தது. அஃது எல்லையின் வடக்கிலும், வடமேற்கிலும் பிரெஞ்சுப்படையுடன் ஒத்துழைத்தது. போர்த்தலைவரான வேகண்டு—1920-ல் ரஷ்யர்களை வார்சா நகருக்குமுன் எதிர்த்து வெற்றி வாகை சூடியவர்—பிரெஞ்சுப் படைகளுக்கும், கோர்ட் பிரபு பிரிட்டிஷ் படைகளுக்கும் தளபதிகளாயிருந்தார்கள். அவர்களுடைய வீரத்தைப்பற்றியோ, அல்லது திறமையைப்பற்றியோ விவாதிக்க இடமில்லை. ஆனால், ஜெர்மானியர்களின் போர் முறைகளால் அவர்கள் உதவியற்றவர்களானார்கள். பிரெஞ்சுக்காரர்களிடமிருந்து பிரிட்டிஷ் படை பிரிக்கப்பட்டு, போர்க்கருவிகளையும் தளவாடங்களையும் கைவிட்டுவிட்டு டன்கர்க்கு வழியாகத் தப்பிச் செல்வதைத்தவிர வேறு தகுவழிகாணும் திறமில்லாது செய்யப்பட்டது. இவ்வாறு தப்பியது மிக்க பேரிடர்வாய்ந்த துணிகரச்செயலாகும். ஏனென்றால், ஜெர்மனியர் மண்ணிலும் விண்ணிலும் முதிர் திறங்கொண்டவராயிருந்தனர். எனினும், 'டன்கர்க்கு அருஞ்செயல்' நிறைவேறியது. இதில் சற்றேறக்குறையப் பல திறப்பட்டனவும் பல அளவுகளைக் கொண்டனவுமாகிய 900 கப்பல்கள் பங்கு கொண்டன. பிரிட்டிஷ் படைகள் கலே நகரிலும் மற்ற இடங்களிலும் எதிர்த்து நின்றது, இவர்கள் தப்புவதற்குத் துணைசெய்தது. பிரான்சிற்கு அனுப்பப்பட்டதும் 3,60,000 வீரர்களடங்கியதுமான படையில், சுமார் 30,000 வீரர்கள் திரும்பவேயில்லை. இதனால் ஏற்பட்ட விடுவிப்பு உணர்ச்சி மிகப் பெரியதாயிருந்ததால், இதுவே ஒரு வெற்றியாகத் தோன்றியது. எனவே, உண்மையில் இஃது ஒரு துயரார்ந்த தோல்வி எனச் சர்ச்சில் நாட்டை நினைவுபடுத்த வேண்டியதாயிற்று.

## இத்தாலி போரில் இறங்குதல்

பிரான்சிற்கு இது மாதிரி தப்புதல் என்பது இல்லை. முசோலினியின் கீழிருந்த இத்தாலி இப்போராட்டத்தைக் கூர்ந்து கவனித்து

வந்தது. அஃது இப்போது ஜெர்மனியின் வெற்றி பெரும்பாலும் உறுதியாகத் தோன்றியதால், ஜெர்மனிக்கு உதவிபுரிய ஆயத்தமா யிருந்தது. வெற்றியடைந்தவரின் உதவிக்குப் பறந்து சென்றது கடந்த காலத்தில் பிரிட்டனும், இத்தாலியும் பிளவுபடாத நட்புறவு கொண்டுள்ளன என்றும், இச்சமயத்தில் குறைபற்றிய எவ்விதமான குற்றச்சாட்டும் இல்லையென்றும், பிரிட்டிஷ் பிரதமர் முறையிட்ட போதிலும், செவி சாய்க்காமல், ஜூன் 10ஆம் நாள் இத்தாலி, பிரான்சிற்கும் பிரிட்டனுக்கும் எதிராகப் போர்த் தொடக்கத்தை அறிவித்தது.

## பிடெயின்

பிரான்சு இரு நெருப்புக்களுக்கிடையே சிக்கியது. அஃது எவ்வித மான பிரிட்டிஷ் உதவியும் கிட்டாதவாறு துண்டிக்கப்பட்டது. பிரெஞ்சுப் பிரதமரான ரீனுட், போரைத் தொடர்ந்து நடத்த அவாக்கொண்டார். ஆனால், வேகண்டு நிலைமை நம்பிக்கையூட்டுவதாயில்லை என்றும், போர் நிறுத்த உடன்பாட்டை ஏற்படுத்த வேண்டுமென்றும் உறுதி யாகத் தெரிவித்தார். மேற்கொண்டு எதிர்ப்பைச் செய்ய இயலா தென்பது தெளிவானபொழுது, ரீனுட் பதவிதுறந்தார். பிடெய்ன் அவருடைய பதவியை ஏற்றார்; 1917-ல் வெர்டன் நகரைச் சிறந்த வீரத்துடன் வெற்றிகரமாகப் பாதுகாத்தவர் எனப் புகழ் பெற்றிருந் தார். அவர் உயர்ந்த கொள்கையினர்; தூய உள்ளமும் படைத்தவர்; ஆனால், பிரான்சின் எதிர்த்துநிற்கும் சத்தியில் விரைவிலேயே நம்பிக்கையை இழந்தவரானார்.

## ஜெனரல் டி கால்

தவிர, நாட்டிலும் பல்வேறு காரணங்களைக் கொண்டிருந்த மூலக் கூறுகள் இருந்தன. அவை, ஃபாஸிசம், கம்யூனிசம், பண்பியலான அமைதிக் கோட்பாடு முதலியவைகளின் உயர்குறிகளில் ஒத்துணர்வு கொண்டிருந்தன. இவர்கள் போரைத் துறப்பதில் ஆர்வங்கொண் டிருந்தார்கள். எதிரான உணர்ச்சிக்குப் பிரதிநிதியாக டி கால் என்பார் இருந்தார்; எங்கெல்லாம் மூலதனத்தைக் காணமுடியுமோ அங்கெல்லாமிருந்துகொண்டு, போரை நீடிப்பதற்கு விரும்பினர்.

## விசியில் பிரெஞ்சு அரசாங்கம்

டி கால், 1793-ல் பிரான்சை ஊக்குவித்ததைப் போன்ற மனநிலை யால் உந்தப்பட்டிருந்தார். ஆனால், அத்தருணத்தில் ஒன்றும் செய்வதற்கில்லை. பிடெயின் ஜெர்மனியுடனும் இத்தாலியுடனும் சமாதானம் செய்துகொண்டார். ஹிட்லர் படைகள், பிரான்சின் ஒரு

பாதியைப் பாரிசு நகருடன் கைப்பற்றின. விசி எனுமிடம் பிடெயினின் தேசிய அரசாங்கத்தின் தலைநகராயிற்று. பிடெயின் எண்பத்தெட்டு வயது நிரம்பியவரானதால், பெயரளவில் அரசாங்கத்தின் தலைவரா யிருந்தார். உண்மையான அதிகாரம் லவால் என்பாரிடமிருந்தது. இவருடைய நோக்கம் ஃபாஸிஸ்டு கொள்கையில் உறுதியாயும், பிரிட்டிஷ் மக்களுக்கு எதிராயுமிருந்தது.

## பாரிசில் ஹிட்லர்

புது அரசாங்கம், ஜெர்மனியின் அரசாங்கத்துடன் உண்மையாய் ஒத்துழைத்தது. ஹிட்லரின் வெற்றி மிகப்பெரியது; அவருடைய முடிவுக்கு இடரை உண்டுபண்ணுவதாயிருந்தது. ஹிட்லர், பாரிஸ் நகருள் நுழைந்து, ஈஃபல் கோபுரத்தின்மீது ஏறி, வியப்பையளிக்கத் தக்க அவரது வெற்றியை அங்கிருந்து அளவிட்டார். பிஸ்மார்க்கும் மோல்ட்கேயும் சேர்ந்து செய்யக்கூடியதைக் காட்டிலும் மிகுதியாக ஹிட்லர் சாதித்திருந்தார். 'மிக்குயர் பதவியினுலுண்டாகும் தலை சுற்றும் மயக்கம்' என்று ஜெர்மானியர்களே கூறியதற்கு ஹிட்லர் பலியானுர்.

## இங்கிலாந்தின்மீது விமானத் தாக்குதல்

கிரேட் பிரிட்டன் அடுத்தாற்போல அதற்கு இரையாகுமா? இலண்டனுள் நுழைவதற்கு ஒருநாளை ஹிட்லர் குறிப்பிட்டார். கிரேட் பிரிட்டன் வீழ்ச்சியுறுமாளுல், உரிமையின் உயர்நோக்கங்களை ஐரோப்பாவில் ஒரு தலைமுறையினர் இழக்க நேரிடலாம். பிரிட்டிஷ் கடற்படை, பெருத்த இப்படையெடுப்பிற்குத் தடையாயிருந்தது. இக்கப்பற்படையினுலேதான் 'டன்கர்க்கு அருஞ்செய'லை நடத்த முடிந்தது. ஒரு சமயம் விமானப்படை, மாகிநாட்டு அரணையும், ஹாலந்தின் பாதுகாப்புக்களையும் பயனற்றனவாகச் செய்தது போன்று, பிரிட்டிஷ் கடற்படை வாயிலாகத் தாக்குதலுக்கு, இங்கிலாந்தின் கடற்கரையில் விமானம் இறங்குமிடங்கள் முதலிற் பெற வேண்டும் என்பதுடன் பிரிட்டிஷ் விமானங்களைத் தோற்கடிக்கவும் வேண்டும். எனவே, இங்கிலாந்தை விமான மூலம் தாக்க உத்தரவிட்டார்.

## இலண்டன் சண்டை

1940-ல், ஆகஸ்டு, செப்டெம்பர், அக்டோபர், நவம்பர் மாதங்களில் தாக்குதலின் முதற்பருவம் உச்சநிலையையடைந்தது. ஆகஸ்டு மாதத்தில், முதன் முதலாகத் தெற்கிலிருந்த மாவட்டங்கள்மீது பகலில் விமானத்தாக்குதல் தொடங்கியது. இஃது ஒரு வாரகாலம் நீடிக்கப்பட்டது. ஆங்கிலேய விமானங்கள் இத்தாக்குதலை உறுதியாக

முறியடித்தன. இராணுவஞ் சார்ந்த ஆயத்தங்களுக்கு இதனுல் எவ்விதத் தீமையும் உண்டாகவில்லே. பாரசூட்டு வீரர்களே நாட்டில் இறக்கவும் முயற்சி செய்யப்படவில்லே. ஜெர்மானியர்கள் 645 விமானங்களே இழந்தார்கள். இதன்பின், இங்கிலாந்தின் நகரங் களின்மீதும், இலண்டன்மீதும், வழக்கமாக இரவில் நடத்தப்படும் தாக்குதல் தொடங்கியது. இத்தாக்குதலே உண்மையான 'பிளிட்ஸ் கர்க்' ஆகும். பெருஞ்சேதம் விளேவிக்கப்பட்டது. இலண்டனில் வசித்தவருட் பலர், நகரத்திலிருந்து வெளியேறினர். நகரில் தங்கி யிருந்தவர்கள், இரவில் இதற்கெனவே கட்டப்பட்ட மறைவிடங் களிலும், பூமிக்கடியிற்செல்லும் இருப்புப்பாதைகளிலும், அடைக்கலம் புகுந்தார்கள். நாட்டில் கிலி என்பது இல்லே உடன்படிக்கையை ஏற்படுத்துவது வாயிலாகத் தப்புவது பற்றிய எண்ணம் சிறிதளவும் காணப்படவில்லே. உள்நாட்டிலும், வெளிநாட்டிலும், இலண்டன் மக்கள் நடந்துகொண்ட விதம் பெரும்புகழைப் பெற்றது.

## விமானப் படையின் ஊழியம்

பிரிட்டிஷ் விமானம் ஓட்டிகளின் சேவை முழுமையானதும் நன்றி யறிதலுள்ளதுமான நினேவுகூர்தலேப் பெற்றது. சர்ச்சிலின் கூற்றுக்கள், இங்கிலாந்தின் வரலாற்றில் ஒரு பகுதியாகிவிட்டன. இடர் கண்டு அஞ்சாமலும், இடையருத் தாக்குதலேயும் உயிருக்கு ஊறு நேரத்தக்க பேரிடரையும் கண்டு கலங்காமலும், விமான ஓட்டிகள் தங்களது வீரத்தாலும், பற்றுறுதியாலும் உலகப் போரின் எழுச்சியை மாற்றினுர்கள். மானிடப் போர்க்களத்திலே, பேரளவில் பலர் ஒரு சிலருக்குக் கடமைப்பட்டிருந்தது, இதற்குமுன் கண்டறியாத தாகும். போர்முடியும்வரை, ஜெர்மானியர்கள் விமானத்தாக்குதலேத் தொடர்ந்து நடத்தினுர்கள் ; ஆனுல், படையெடுப்பின் இடர்— இங்கிலாந்து இதுவரை கண்டறியாத அளவுகடந்த துயரார்ந்தது; 1588ஆம் ஆண்டு, 1805ஆம் ஆண்டுகளேக்காட்டிலும் மிகத்துய ரார்ந்தது—1941ஆம் ஆண்டு கோடையுடன் முடிவுற்றது.

இவ்விடுதலேயின் முக்கியத்துவத்தைப் பிரிட்டனில் உள்ளவர்கள் ஏற்றவாறு உணர்ந்துகொள்ளவில்லே. இது வெளிநாடுகளிலும் ஏற்றவாறு மதிக்கப்படவில்லே. ஜெர்மனியின் படைகள் மற்றெங்கும் வெற்றிக்குமேல் வெற்றியைப் பெற்றன. இத்தாலியர்கள், பெருஞ் சேதத்துடன் கிரேக்கர்களால் தோற்கடிக்கப்பட்டதுடன், தனித்து இருப்பார்களேயானுல், பால்கன் தீபகற்பப் பகுதியிலிருந்து ஒருகால் விரட்டியடிக்கப்பட்டிருக்கவும் கூடும். ஆனுல், அவர்களுக்கு உதவி புரிய ஜெர்மானியர்கள் சென்ருர்கள். பிரிட்டிஷ் விமானப்படையினர் மதிப்பிடக்கூடிய உதவி புரிந்தபோதிலும், கிரேக்கர்கள் தோற்கடிக்கப்

பட்டு, கிரீஸிலிருந்தும் கிரீட்டிலிருந்தும் பிரிட்டிஷார் விரட்டப்பட்டனர். ஜெர்மனி வெல்ல முடியாததென்று மக்கள் பேசிக்கொண்டார்கள். எவ்விதப் பாதுகாப்பையும் செய்துகொள்ள இயலாத ஒரு போர்க்கருவியை ஹிட்லர் வைத்திருந்தார் என்பது உண்மைதானா?

## ஆப்பிரிக்காவில் போர்

ஆப்பிரிக்காவில் மாத்திரம், பிரிட்டிஷார்கள் முக்கியமான வெற்றிகளைப் பெற்றார்கள். ஹிட்லரின் அதிகாரத்தின் கீழ் ஒருங்கமைக்கப்பட்ட ஐரோப்பா முழுமையையும் எதிர்த்து இங்கு பிரிட்டிஷார் தன்னந்தனியராயிருந்தனர். வேவல் என்பார், கிரேக்கர்களுக்கு உதவியாக அனுப்பியதனால் குறைந்திருந்த ஒரு படையின் தலைவராய் இருந்தார்; ஆனால், மிகவும் பாதுகாப்பான கொள்கை, துணிச்சலாயிருப்பதுதான் என்று நம்பியிருந்தார்; அதனுடன் இத்தாலியர்கள் போர்த்திறமற்றவர்கள் என்பதையும் கண்டுபிடித்தார். இத்தாலி நாட்டிற்குத் திறமையையும் ஆர்வத்தையும் அளித்ததாக ஃபாஸிஸமுறை உரிமை கொண்டாடியது.

## வேவலின் வெற்றிகள்

ஆனால், போரின்போது இப்பண்புகளை எங்கும் காணஇயலவில்லை. நிலத்திலோ, கடலிலோ, விண்ணிலோ, இத்தாலி ஒருநொடி நேரங்கூட வெற்றி பெறவில்லை. ஆப்பிரிக்காவில் ரோம் ஏப்பரரசின் வாரிசாக இத்தாலி அதனை மிக்க நம்பிக்கையுடன் எண்ணியிருந்த போதிலும், போர்த்தலைவரான வேவலின் படைகள், இத்தாலியப் படையைவிட மிகச் சிறியதாயிருந்தும், பெங்காஸி வரை முன்னேறி, டொப்ருக்கு எனும் முக்கியத் துறைமுகத்தைக் கைப்பற்றிக்கொண்டன. இப்படையெடுப்பில் கலந்துகொண்டவர்களின் எண்ணிக்கை சிறிதும் நம்ப இயலாததாயிருந்தது. வேவலின் படையில் 30,000 வீரர்களுக்கு மேல் இல்லை. சண்டையில் சிறை பிடிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கையோ இலட்சம்.

### ஜெர்மானியர்கள் வடஆப்பிரிக்காவை இத்தாலிக்கு மீட்டுக்கொடுத்தல்

1941 மே மாதத்தில், அயோஸ்டாக் கோமகனார் சரணடைந்ததுடன், அபிசீனியாவின் விடுதலையும் முற்றுப்பெற்றது. இதன்பின், ஆப்பிரிக்காவில் ஜெர்மானியர்கள் பெற்ற வெற்றிகள், இத்தாலியர் பெற்றிருந்த மாண்பிழப்பை மேலும் துன்புறச் செய்வனவாயிருந்தன. ஏனென்றால், போரின் எழுச்சியைப் பால்கன் தீபகற்பத்தில், கிரேக்கர்களுக்கு எதிராகத் திருப்பியதுடன், கிரீஸுக்குச் சொந்தமாயிருந்தவை அனைத்தையும் கைப்பற்றினர். பிரிட்டிஷ் கப்பற்படையும், காவற்-

படையும் இருந்தும், ஜெர்மானியர்கள், பிரிட்டிஷார்களைக் கிரீட்டுத் தீவினின்றும் விரட்டிவிட்டு, ஆப்பிரிக்காவில் பெரும்படைகளைக் குவித்தார்கள். பிரிட்டிஷார் பெற்ற வெற்றிகளை அவர்களிடமிருந்து ஜெர்மானியர் பெற்றனர் ; எகிப்தின்மீது படையெடுத்துச் சென்றனர். கிரீஸில், ஜெர்மன் வெற்றியின் எழுச்சியைத் தடை செய்வதில் பிரிட்டிஷாரின் தோல்வியையும், அதே போன்று, ஆப்பிரிக்காவில் அவர்களது நற்பேற்றின் தலைகீழான திருப்பத்தையும் கண்டு பிரிட்டனிலுள்ளவர்கள் கடுந்துயருற்றார்கள்.

1941ஆம் ஆண்டின் நடுவேனிற்காலம், கிரேட் பிரிட்டனின் எதிர்கால வாய்ப்புக்களின் மிக்க கீழ்நிலையைக் குறிப்பதாயிருந்தது. நிலத்துக்கடியில் மறைந்திருந்த ஆற்றல்களைத்தவிர, பிரிட்டிஷாருக்குப் போரில் எந்த நேசநாடுகளுமில்லை. ஹிட்லரால் வெற்றி கொள்ளப் பட்ட நாடுகளில் எல்லாம் தலை மறைவாயிருந்த படைகள், ஜெர்மானியரிடம் ஒருவித எதிர்ப்பைக்கொண்டிருந்தன. ஆனால், பிரிட்டனின் கருத்து நன்மையை எதிர்பார்ப்பதாயும், நம்பிக்கையுடையதாயும் இருந்தது. ஜெர்மனியின் தாக்குதல் பயன்படுத்தப்பெற்று வீணாகிக் கொண்டிருந்தது போலத் தோன்றியது. பிரிட்டிஷார்களின் போர்ப் பொறிகளைத் தயாரிப்பதிலும் முழு அளவை அடையவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளிடமிருந்து தொடர்ந்து வந்த இரக்க எண்ணமும் உதவியும் சர்ச்சிலுக்குப் பேரார்வமூட்டுவனவாயிருந்தன. போரில் நேரிடையாக ஈடுபடாமலே, எல்லா வழிகளிலும் இயன்ற அளவு உதவி புரிந்தனர். போரில் முழுமையாக அவர்களும் சேருங்காலம் நீண்டு தாமதிக்க முடியாதது போலத் தோன்றியது.

## VI

## போர் உலகம் முழுவதும் பரவுகிறது

### ஜெர்மனி ரஷ்யாவைத் தாக்குதல்

'ஜெர்மன் படை ரஷ்யாவின்மீது படையெடுத்தது,' என்று 1941 ஜூன் 22ஆம் நாள் வானொலி வாயிலாக அறிவிக்கப்பட்ட செய்தியைக் கேட்டு உலகம் முதலில் நம்பிக்கை கொள்ளவில்லை. ஹிட்லரின் பகைவர்கள் குறிப்பாக எதைச் செய்யவேண்டுமென்று விரும்பினார்களோ, அதை அவர் செய்தார். இது முதல், ஜெர்மனியின் இரு முனைகளில் போரிட நேர்ந்தது—எல்லாவற்றிற்கும் மேலாக இதைத்தான் தவிர்க்க வேண்டுமென்று பிஸ்மார்க்கு அவரது நாட்டு மக்களுக்கு அறிவுரை கூறியிருந்தார். ஜெர்மனியின் அழிவு உறுதியெனப் பொதுவாக நம்பப்பட்டதுடன், பின் நடந்தவை இப்பொதுக் கருத்தை நேர்மை எனக்காட்டின.

போரின்போது ரஷ்யாவைப்பற்றி ஒன்றுமே நன்கு புலப்படக் கூடியதாயில்லை. இப்பொழுது அறிந்துள்ளதைவிட எதிர்காலத்தில், இரகசியமான ஆவணங்கள், மறைந்து கிடைக்கும் அரசியல் வெல்திறம் இவைகளிலிருந்து வெளிப்படும் உண்மையான செய்திகளைக்கொண்டு தெளிவாகக் காணக்கூடும். ரஷ்யாவை ஏன் ஹிட்லர் தாக்கினார் ? ஜெர்மனியின் வரலாறே எச்சரித்து வந்ததற்கு மாறாக ஏன் ஹிட்லர் சரி செய்ய இயலாத ஒரு தவற்றைப் புரிந்தார் ? ஹிட்லரின் குணமும் வரலாறும் இதற்கு மிகுதியான—மிக மிகுதியான—சார்புடையனவாயிருந்தன. ஹிட்லர் மாபெரு வெற்றிகளைப் பெற்றிருந்தார். ஐரோப்பாவில், ஜெர்மனியின் ஆட்சியை ஏற்படுத்துவதென்ற அவரது கனவு நனவானது போலத் தோன்றியது.

## ஹிட்லரின் பண்பு

1807-ல் நெப்போலியன் பெற்றிருந்த அதிகாரத்தைவிட ஹிட்லரின் அதிகாரம் மிகுதியாயிருந்தது. ஆனால், அவர் அறிவின் பண்பட்ட நிலையற்றவர் ; வரலாற்றை நன்கறியாதவர். பகுத்தறியும் ஆற்றலைவிட அவரிடம் கற்பனைத் திறன் எப்பொழுதும் இடர் நிறைந்ததாய் மேலோங்கியிருந்தது. அவர் வெல்ல முடியாதவரெனத் தம்மைக் கருதினார்; தம்மைச் சிறையின் கருவியென உரிமை கொண்டாடினார். சிறிதுகாலத்திற்குப்பின், அவர் இராணுவ அறிவுரை கூறுவோர்களின் அக்கறை நிறைந்த முன்னேற்பாடுகள் தமக்குத் தேவையில்லையென அறிவித்தார். தாமே போர்த் தலைமையை ஏற்றுத் தமது உள்ளுணர்வுகளில் நம்பிக்கையுடன் செயலாற்ற விரும்பினார். அவருடைய வீழ்ச்சி அதுமுதல் தொடர்ந்து ஏற்படுவதாயிற்று. இவ்வீழ்ச்சி, தொடக்கத்தில் படிப்படியாயும் அவரது படையின் இராணுவச் சிறப்புத்திறமை அஞ்சாமை முதலியவைகளுடன் கூடிய மாறுபட்ட போர்களாலும் இறுதியில் விஞ்சிய பேரிடராலும் ஏற்பட்டது.

## ரஷ்யா ஜெர்மனி இவற்றின் போட்டிகள்

ஹிட்லர் தன்னம்பிக்கையோடு ரஷ்யாவைத் தாக்கியதற்கு வேறு காரணங்களும் உள. ரஷ்யாவைப்பற்றி அவர் கொண்டிருந்த மனநிலை, 1812-ல் நெப்போலியன் கொண்டிருந்த மனநிலையை மீண்டும் எடுத்துக் கூறுவது போன்றிருந்தது. ரஷ்ய நட்புறவைப்பற்றி ஹிட்லர் பெரிதாகக் கருதினார். இவ்வுறவு அசைக்க முடியாததெனவும், சிறப்பாக ஜனநாயகத்துப் பொதுவான பகைமையின் மீது இவ்வுறவு அமைந்ததெனவும் அறிவித்தார். ரஷ்யப் பிரதிநிதிகளைப் பெர்லினுக்கு ஆர்வத்துடன் வரவேற்றார். இரு நாடுகளுக்குமிடையே 'நட்பு

ஒப்பந்தம்' முடிவு செய்யப்பட்டு, சமீபத்தில் மீண்டும் உறுதிப்படுத்தப் பட்டது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தன்மை, நோக்கங்கள் முதலிய வைகளைப் பழித்துக் கூறுவதில், ஹிட்லரைவிட ஸ்டாலின், சிறிதளவு நடுத்தரமாயிருந்தார். ஆனால், தொல்லைகள் காத்திருந்தன. சிறப் பாக, டான்யூபு நதி வரையிலும் பால்கன் தீபகற்பத்திலுள்ளும் ஜெர்மனி முன்னேறியதை ஐயப்பாட்டுடனும் வெறுப்புடனும் ரஷ்யர்கள் நோக்கலானார்கள். பால்கன் பகுதிகளில் ஆட்சித் திறமை பெறுவதையும் சூயஸ்கால்வாயின்மீது ஆதிக்கம் கொள்ளு வதையும் ஹிட்லர் வெளிப்படையாக அவரது குறியாகக் கொண் டிருந்தார். இம்மாதிரியான பேரவாக்கள், ரஷ்யர்களுடைய நோக்கங் களுடன் சச்சரவை உண்டுபண்ணுவனவாயிருந்தன. எல்லா வற்றிற்கும் மேலாக, கிரேட் பிரிட்டனுடன், ரஷ்யா, பெயரளவில் கூட்டாளியாயிருந்தது. 'பிரிட்டிஷ் பேரரசை அழிப்பதற்காக எல்லா வாய்ப்புத் திறங்களையும் எங்களிடம் ஒப்படைப்பது வாயிலாக, அவர் களது நட்பை மீண்டும் உறுதி செய்வதற்கு ஐக்கியச் சோவியத்து நாடுகளுக்கு நான் வாய்ப்பை அளித்தேன்,' என்று ஹிட்லர் கூறினர். 1812-இலும் நெப்போலியனுடைய குற்றங்கூறலைப்போலவே இக் கூற்றும் சிறிது மாறுபடாதிருந்தது. ரஷ்யாவைத்தாக்குவது எனும் முடிவிற்கு வருவதற்கு ஜப்பானின் கொள்கையினுடைய செல்வாக்கும் ஓரளவு காரணமாயிருந்திருக்கக் கூடும். ஐக்கிய நாடுகளுடன் சண்டை ஏற்படுவதென்பது தெளிவான முன்னறிவிப்பாயிருந்தது. ஜப்பானுடன் நட்புறவு விரும்பத்தக்கது என்பதுடன், மிகத்தேவை யாயுமிருந்தது. எனினும், மேற்கில் பழைய காரணங்களைக்கொண்டு பழிதீர்த்துக்கொள்ளுவதற்கு ரஷ்யா தடையற்றதாக விடப்படுமானால், ஐக்கிய நாடுகளை ஜப்பான் தாக்கவியலாது.

## ரஷ்யாமீது ஜெர்மனியின் தொடக்க வெற்றிகள்

ரஷ்யாவுடன் போரிட்டது இறுதியில், ஹிட்லருக்கும் நாஜி ஜெர்மனிக்கும் முழுமையான அழிவை உண்டுபண்ணியது எனினும் ஊழ் காத்திருந்தது. இதற்கிடையில் ஹிட்லர் திகைப்பை உண்டு பண்ணக்கூடிய வெற்றிகளில் சிலவற்றைப் பெற்றார். பதினெட்டு மாதங்களுக்கு, ஜெர்மனிக்குச் சாதகமாக வெற்றியின் எழுச்சி எத்தடையு மின்றிப் பொங்கியோடியது. அதன் வீழ்ச்சிக்கான அறிகுறியே காணப்படவில்லை. முனைப்பான வெற்றியுடன் ஜெர்மனியால் விரிவு படுத்தப்பட்ட தாக்குதல் முறைகளை எதிர்த்து நிற்க ரஷ்யா ஆயத்தம் இல்லாதிருந்தது. உடனே கிரேட்பிரிட்டன், ரஷ்யாவுடன் ஒன்றுக் கொன்று துணைபுரியும் உடன்படிக்கையில் கையொப்பமிட்டதுடன், ஆர்க்டிக்குக் கடல்வழியாக டாங்குகள், ஆகாயவிமானங்கள், துப்

பாக்கிகள் முதலியவைகளை ரஷ்யாவுக்கனுப்ப முழுமுயற்சி செய்தது. ஆனால், இங்கிலாந்து தனக்குத் தேவையானதை இன்னும் திரட்டிக் கொள்ளவில்லை. அதனுடன், ஆர்க்டிக்கு, இந்தியக் கடல்கள் வழியா யமைந்த கடல் வழிகளும், நீண்டனவாயிருந்ததுடன் இடர் நிரம்பியன வாயுமிருந்தன.

எனவே, ஜெர்மானியர் வெற்றியின்மேல் வெற்றிபெற்று முன்னேறினர். ரஷ்யர்கள், போலந்தையும் பால்டிக்கு நாடுகளையும் கைவிட்டார்கள். தொடக்கத்திலிருந்தே 'தீயிடப்பட்ட நிலம்' (burnt earth)—அஃதாவது ஜெர்மானியர்கள் முன்னேறி வருவதற்கு உதவியா யிருக்கும் எல்லாவற்றையும் அழித்தல்—என்ற கொள்கையை மேற் கொண்டனர். உணவு, கட்டடங்கள், பாலங்கள், சாலைகள் முதலி யவையெல்லாம், கூடியவரையில், பகைவனுக்குப்பயனற்றனவாகச் செய்யப்பட்டன. ரஷ்யப் படை, ஸ்டாலின் கோட்டிற்குள் பின்வாங் கியது. இக்கோடு, போலந்துக்குக் கிழக்கிலிருந்தது; ஆனால், பிரான் சிலிருந்த மாகிநாட்டு அரணைவிட மனநிறைவற்றதாயிருந்ததைமெய்ப் பித்தது. ஜுலை மாதம் முடிவதற்குள்ளாகவே இக்கோடு ஊடுருவிச் செல்லப்பட்டது: ஸ்மாலென்ஸ்கு கைப்பற்றப்பட்டு, லெனின்கிராடின் சுற்றுப்புறங்களை அடைந்தது கார்க்கோவ் எனும் நகரம் அதன் தொழிற்சாலைகளுடன் வீழ்ச்சியுற்றது. கிரிமியாத் தீபகற்பத்தைத் தாக்கி, செபாஸ்டபூலை எட்டினர். ஜெர்மானியர் மாஸ்கோவிலிருந்து சிறிது தொலைவில் இருந்தனர். அவர்களது பணித்துறை சார்பான வானொலி, மாஸ்கோ, லெனின்கிராடு நகரங்களின் வீழ்ச்சி உடனடியானது என்ற பேரறிவிப்பைச் செய்தது. இவ்வெற்றிகள், ஹிட்லரைப் பாரிசுக்குள் அழைத்துச் சென்றதைப் போன்று, அவ்வளவு பெரியவை களாயிருந்தன.

## ஜப்பான் ஐக்கியநாடுகளைத் தாக்குதல்

டிசம்பர் மாதத்தில், ஜெர்மனிக்கும் ரஷ்யாவுக்குமிடையே போர் மூண்டதற்குச் சரிநிகரான முக்கியமான நிகழ்ச்சிகள் உண்டாயின. ஐக்கிய நாடுகள், ஜப்பானால் தாக்கப்பட்டு, இதன் விளைவாக ஜெர்மனி யுடனும் அதன் நேசநாடுகளுடனும் போரிலிறங்கியது. இதுமுதல், ரஷ்யாவுடனும், கிரேட் பிரிட்டனுடனும், ஐக்கிய நாடுகள், ஜெர்மனியையும், 'அச்சு' நாடுகளையும் எதிர்த்தும் போரை இயக்குவதில் பங்கு பெற்றன.

## பேர்ல் துறைமுகம்

ஜப்பான், அதன் மரபுக்கேற்ற வகையில், முன்னெச்சரிக்கை அல்லது போர் அறிவிப்பின்றி, பேர்ல் துறைமுகத்திலிருந்து

அமெரிக்கக் கடற்படையையும், சிங்கப்பூரிலிருந்து வந்த பிரிட்டிஷ் கப்பற்படையையும் திடீரென்று தாக்கியது. சருவதேசச் சட்டம் மீறப்பட்டது என்பது தெளிவாயிற்று. எனினும், ஜப்பானுக்கும் ஐக்கிய நாடுகளுக்குமிடையேயிருந்த உறவு நெடுநாளாகவே மனத் தாங்கல் கொண்டதாயிருந்தது. சீனமீது வலியத்தாக்கும் போரில் ஜப்பான் ஈடுபட்டிருந்தது. சீனர்களிடம் அமெரிக்கர்கள் இரக்கம் காட்டியதும் வெளிப்படையாயிருந்தது. இவ்விரக்கம் காட்டுதல், சொற்களோடு நின்றுவிடவில்லை சீனர்களுக்குப் போர்க்கருவிகள் பெரிதளவு அனுப்பப்பட்டன. ஜப்பானியர்களுக்கு இவ்வுதவி மறுக்கப் பட்டது. பிரிட்டிஷார்களுக்கு அமெரிக்கர்கள் அளித்த உதவி இதைவிட அதிகமானது. விமானங்கள், வெடிமருந்து, துப்பாக்கிகள், டாங்குகள் ஆகியவற்றை அனுப்பியதுடன், அவர்கள் அனுப்பியவை இங்கிலாந்தை அடையவேண்டுமென்பதில் சிந்தையையும் செலுத் தினர். இப்பாதுகாப்பைப் பெறுவதற்காக, ஐஸ்லாந்து மக்களின் ஒப்புதலைப் பெற்று அத்தீவைக் கைப்பற்றிக்கொண்டனர்.

பெர்ல் ஹார்பர் தாக்கப்பட்ட செய்தி எட்டியவுடனே, ஐக்கிய நாடு களின் சார்பில், ஜப்பானை எதிர்த்து, ஜனாதிபதி ரூஸ்வெல்டு போர் அறிவிப்புச் செய்தார். இது ஜெர்மனியும் இத்தாலியும், ஜப்பானுடன் கூட்டுச் சேர்ந்ததை அறிவித்தது. உலகம் முழுமையும் போரிலீடு பட்டது.

## V

## எழுச்சியின் திருப்பம்

அமெரிக்க ஐக்கிய நாடுகள், அவற்றின் மூலவளங்கள், சத்தி இவற்றின் முழு அளவுக்கு ஏற்றவாறு, போரில் செயலுரிமை ஒப் படைக்கப்பட்டபோதிலும், நூற்றுநாற்பது மில்லியன் ரஷ்யர்களோடும், நானூறு மில்லியன் சீனர்களோடும், பிரிட்டிஷ் பேரரசின் எல்லையற்ற மூலவளங்களோடும், பக்கத்திற்குப் பக்கமாக அமெரிக்கர்கள் வரிசையாக வைக்கப்பட்டபோதும், போரின் பயன் முன்னதாகவே முடிவு செய்யப் பட்டதுபோலத் தோன்றியது! 'நேசநாடுகள், சருவாதிகார நாடு களைத் தோற்கடிக்கும் என்பது கணக்கின் கூட்டுத் தொகை போன்று உறுதியாயிருந்தது', என மக்கள் கூறினர்கள்; அஃது இறுதியில் அவ்வாறே மெய்ப்பிக்கப்பட்டது. ஆனால், தொகையைக் கூட்டு வதற்குக் காலம் நீடித்தது. அதனுடன், வெற்றியைப் பெறு முன், எல்லா நேசநாடுகளுக்கும் கடுமையானவையும், மாண்பிழப்பைத் தோற்றுவிப்பவையுமான தோல்விகளைப் பெற்றிருந்தன.

## ஜனாதிபதி ரூஸ்வெல்டு

அடிக்கடி சந்திப்பது வாயிலாகப் பேரரசுகளுள் ஏற்பட்டிருந்த ஒற்றுமை உறுதி செய்யப்பட்டது. இவ்வாறு சந்திப்புக்கள் ஏற்படுவதற்குப் போக்குவரவில் ஆகாய விமானங்களின் வளர்ச்சி வழிசெய்தது. எல்லாவற்றிற்கும் மேலாக, சர்ச்சில், ரஷ்யா, அமெரிக்கா, கிரேட் பிரிட்டன் இவற்றுக்கிடையே உராய்தலிலும், தப்பெண்ணம் ஏற்படுவதைத் தவிர்ப்பதிலும் கவலையுள்ளவராயுமிருந்தார். தாற்காலிகமாக சீனு, அதன் சோர்வினுலும், போக்குவரத்திற் காணப்பட்ட தொல்லைகளினுலும், இப்போரை இயக்குவதிலிருந்து தள்ளிவைக்கப்பட்டது. அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்டு, இப்போரில் முழுமனத்துடன் ஈடுபட்டதுடன், அமெரிக்காவுக்கும் கிரேட்பிரிட்டனுக்குமிடையே கருத்திலும் செயலிலும் ஒற்றுமையைப் பாதுகாப்பதில் 'குறிப்பிட்ட கவனத்துடன் முயற்சி செய்தார்.

## ஸ்டாலின்

அயலார்களில் கிரேட் பிரிட்டன் இதுவரையில் கண்ட நண்பர்களுள், மிகச் சிறந்த நண்பரென ஸ்டாலினைச் சர்ச்சில் அறிவித்தார். ரஷ்யத் தலைவரான ஸ்டாலின், ஜனநாயக அரசுகளைப்பற்றி ஐயங்கொண்டிருந்தார். சொல், செயல் முதலியவைகளால் இவ்வையத்தை வெற்றிகரமாகப் போக்குவதற்குச் சர்ச்சில் இடைவிடாது பாடுபட்டார். 1942 ஜூனில் இருபதாண்டுகளுக்கு இருநாடுகளையும் கட்டுப்படுத்தக் கூடிய ஒருவருக்கொருவர் துணைபுரியும் உடன்படிக்கை ஏற்பட்டது. வரலாற்றில் முரண்பாடான சக்திகளுக்கிடையே ஏற்பட்ட நட்பு, இதைப் போன்று வேறு எப்பொழுதும் அவ்வளவு இசைவு இணக்கமாகச் செயல் புரியவில்லை. எனினும், போரில் ஐக்கிய நாடுகள் சேர்ந்த ஓராண்டுக்கு, ஜெர்மானியர் வெற்றிமேல் வெற்றி பெற்றனர். அதற்கு இத்தாலி உதவியாயிருப்பதற்கு மாருகச் சுமையாயிருந்தது; ஆனுல், அதன் நட்பாயிருந்த ஜெர்மனியால் வெற்றியை நோக்கி இழுத்துச் செல்லப்பட்டது. இங்கிலாந்தில் மக்களின் மனநிலை, இறுதி வெற்றியில் நம்பிக்கையுடையதாயிருந்தது. ஆனுல், 'எவ்வளவு நாள் கழித்து? எவ்வளவு நாள் கழித்து?' என்ற பேரொலி இடைவிடாது எழும்பியது.

## வானில் போர்

விண்ணிலும் கடலிலும் போர் இடைவிடாது நடந்தது. தொடக்கத்திலிருந்து பகைவர்களைக்காட்டிலும், அவர்களுடைய பொறிகளின் குணவியல்புகளில் மேம்பட்டிருந்த நேசநாடுகள், இறுதியாக ஆகாய விமானங்களிலும் பகைவர்களின் எண்ணிக்கையைவிட மேம்

படத் தொடங்கின; ஆயிரத்துக்கும் அதிகமான விமானப்படைகளைக் கொண்டு ஜெர்மன் நகரங்களைத் தாக்கிப் பெருஞ்சேதத்தை விளை வித்தன. சிறிய படைகளைக் கொண்டு ஜெர்மானியர் எதிர்த்தாக்கு தலைச் செய்தனர்; ஆனால், மிகுதியான பொருள், உயிர்ச்சேதத்தை உண்டுபண்ணினர். கடலில், எதிர்காலம் நம்பிக்கையை அளிக்கக் கூடியதாக அறிவிக்கப்பட்டது. ஆனால், பிரிட்டிஷ் கப்பல் போக்கு வரத்திற்கு ஏற்பட்ட அழிவு தொடர்ந்ததாயும் இடர் எச்சரிக்கை யூட்டுவதாயுமிருந்தது. மிக முக்கியமான மூன்று பகுதிகளில், இவ் வாண்டின் சாதனைகள், நேச நாடுகளுக்கு மிகவும் சோர்வூட்டுவனவா யிருந்தன.

## செபாஸ்டபூலின் வீழ்ச்சி

ஸ்டாலின்கிராடு அச்சுறுத்தப்படல்

முதலாவதாக, ஜெர்மானியர்கள் ரஷ்யாவில் விரைவாக முன்னேறி னர்கள்; கிரிமியாவை அடைந்தார்கள்; ஜூலை மாதம் முதல் தேதி செபாஸ்டபூலைக் கைப்பற்றிக்கொண்டார்கள்; சிறிது காலம் கழித்து, டான் நதிக்கரையிலுள்ள ராஸ்டாவ் எனும் நகரையும் கைப் பற்றினர்கள்; இங்கிருந்து காக்கஸஸ் பகுதிகளைத் தாக்கினர்கள். இங்குச் சிறந்த வெகுமதியாகக் கருதப்படுவது பெட்ரோலைப் பெறுவதாகும். செப்டெம்பரில் ஜெர்மன் படைகள், வால்கா நதியின் மேலிருந்த ஸ்டாலின்கிராடின் வாயிலை அடைந்தன. இந்நகரம் வீழ்ச்சியுற்றால், மேலும் முக்கியமான முன்னேற்றம் உறுதியாயிருந்தது. சின்னாள்களுக் குள்ளாகவே ஸ்டாலின்கிராடு வீழ்ச்சியுறுவது திண்ணம் என்று ஜெர்மன் வானொலி பேரறிவிப்பைச்செய்தது. ஆகஸ்டு மாதத்தில் மிகக் கடுமையான நிலையைக் குறித்து ஸ்டாலினுடன் கலந் தாலோசிக்கச் சர்ச்சில் மாஸ்கோவுக்கு விமான மூலம் சென்றிருந்தார்.

## ஆப்பிரிக்காவில் ரோமல்

வட ஆப்பிரிக்காவின் நிலையும் கடுமையாகவே இருந்தது. அங்குப் படைவீரர்களின் எண்ணிக்கையிலும் போர்க்கருவிகளிலும் நேச நாடுகள் சிறந்து விளங்கின என்பது கருதப்பட்டிருந்தது. ஆனால், ஜெர்மானியர், ரோமல் என்ற பெரிய தலைவரைப் பெற்றிருந்தனர்; அதனுடன் படைவலி பெருக்குதலை உண்டுபண்ணுவதிலும் வெற்றி அடைந்திருந்தனர். 1942 ஜூனில், ரோமல் கடுந்தாக்குதலைச் செய்த பொழுது, பிரிட்டிஷார்களுக்குப் பேரிழப்புக்கள் விரைவாயும் கடுமை யாயும் ஏற்பட்டன. முன்பு நீண்ட முற்றுகையை எதிர்த்து நின்ற டோப்ருக்கு, விவரிக்க இயலாத அளவு விரைவில் சரணடைந்தது. ரோமல் எகிப்தின் எல்லையை நோக்கிப் படைகளைச் செலுத்தி,

எல்லையைக் கடந்து ஐம்பது மைல் முன்னேறினர். ஆப்பிரிக்காவில், நற்பேற்றின் மாறுதலைக் கண்டு பிரிட்டிஷ் மக்கள் ஆழ்ந்த துயருற்றார்கள். ஆனால், போரை நடத்துவது பற்றிச் சர்ச்சிலின்மீது ஏற்பட்ட தாக்குதலுக்கு மிகச் சிறிய ஆதரவிருந்தது. போர்த்தலைவரான மான்ட்கோமரி என்பார் எகிப்தியப் படைகளுக்குத் தலைவராக அமர்த்தப்பட்டது நற்காலம் ஏற்படுவதை உறுதி செய்தது. ஆனால், ரஷ்யாவும் ஆப்பிரிக்காவும் தாழ்நிலையுற்ற செய்திகளை அளித்தபோது, தூரக் கிழக்குப் பகுதிகளில், பிரிட்டிஷார்களுடையதும், அமெரிக்கர்களுடையதுமான நிலை மேலும் தாழ் நிலையிலிருந்தது.

## பசிபிக்குப் பகுதிகளில் ஜப்பானின் வெற்றிகள்

ஜப்பானியர்கள் நன்கு ஆயத்தம் செய்திருந்ததுடன், அவர்கள் போரிடவேண்டிய நாடுகளின் இயற்கையையும் நன்கறிந்திருந்தார்கள். அவர்களுடைய பகைவர்களோ, கொடும்பட்டறிவினால் இவற்றை அறிய வேண்டியவர்களானார்கள். பிப்பிரவரியில் சிங்கப்பூர் வீழ்ச்சியுற்றது. இது டொப்ரூக்கு வீழ்ச்சியைப் போன்று மிகுதியான சோர்வை யூட்டுவதாய் இருந்தது. ஜப்பானியர் பர்மாவின்மீது படையெடுத்தனர். இரங்கூனைக் கைப்பற்றினர்; மலேயாத் தீபகற்பத்திலிருந்து பிரிட்டிஷாரை விரட்டினர். நேசநாடுகளின் பக்கலில் வெற்றியின் பருவமிருந்தது. ஆனால், காத்திருப்பது நீடித்ததாயிருந்தது.

## அமெரிக்காவின் இழப்பீடுகள்

ஐக்கிய நாடுகளிலிருந்தும் இலையுதிர் காலத்தில் இறுதிவரையில் ஆறுதலளிக்கக் கூடியதாக அதிகம் பெறுவதற்கில்லை. முதலில் அறிந்துகொண்டதைவிட பெர்ல் ஹார்பரில் பெற்ற இழப்புக்கள் மிகப் பெரியனவாயிருந்தன. மிகப் பெரிய ஐந்து போர்க்கப்பல்கள் அழிந்தன; அல்லது சேதமுற்றன. போர்க்கப்பல்களில் அமெரிக்கா மொத்தமாக ஏற்றிச் செல்லக்கூடிய பாரத்தில் பாதிக்கும் அதிகமாகவே போரில் பயன்படுத்த இயலாததாயிற்று. இப்பெருந்தாக்குதலிலிருந்து, எல்லையற்ற மூல வளங்களும், அமெரிக்க மக்களுடைய முடிவற்ற சத்தியுந்தான், அவர்கள் மீட்சி பெறுவதற்கு இணங்கின. மற்றொரு தாக்குதல் விரைவிலேயே தொடர்ந்தது. உடனே பிலிப்பைன்கள் தாக்கப்பட்டன. பேருறுதியுடனும், ஆங்காங்கு வெற்றிகள் பெறுவது வாயிலாகவும் அத்தீவுகள் பாதுகாக்கப்பட்டும், மே மாதம் 10ஆம் தேதிக்குள்ளாகவே, அத்தீவுகளின் குழு ஜப்பானியர் வசமாயிற்று.

ஜெர்மானியர்களைப் பற்றி மக்கள் வினவியதைப் போன்று ஜப்பானியர்களைப் பற்றியும், 'அவர்கள் சாதாரண மனிதரைக்காட்டிலும் மிகுதியான திறமைகளையும், வீரத்தையும் கொண்ட பொதுநிலை

கடந்த மனிதர்களா என்ன''? என வினவினர்கள். உரிமை, திறமையின் இன்றியமையாத நிலை என்பது பள்ளிகளில் எல்லோரும் அறிந்ததாயுள்ளது. இது தவருனதா? கருத்து, பேச்சு உரிமைகளை அளித்து, அரசாங்கத்தைத் திறனுய்வு செய்ய ஊக்கமளிக்கும் நாடுகளை விட, சருவாதிகார ஆட்சித் துரைத்தனங்கள் உயர்வைப் பெற்றுள்ளனவா? இலண்டனிலோ அல்லது வாஷிங்டனிலோ உரிமையின் மேலுரிமையை ஏற்பதில் மக்கள் தயங்கவில்லை. இறுதியில் அவர்களின் நம்பிக்கை நேர்மையென்பது விளக்கம் பெற்றது.

## விண்ணிலும் கடலிலும் அமெரிக்கர்களின் வெற்றிகள்

1942-ல் இலையுதிர்காலத்தில் நிலைமையைக் கூர்ந்து கவனித்து வந்தவர்கள், மாற்றத்தின் அறிகுறிகளைக் கண்டார்கள். பசிபிக்கிலிருந்து அமெரிக்கர்கள் விரட்டப்படுவது முடியாது என்பது தெளிவாயிற்று. வியக்கத்தக்க விரைவுடன் கப்பல்களும் விமானங்களும் உற்பத்தி செய்யப்பட்டன. ஜப்பானியர்கள் நிலத்தில் மேலும் முன்னேறிக் கொண்டிருந்தார்கள். என்ருலும், அமெரிக்கர்கள் கடலிலும், விண்ணிலும் அவர்களது மேலாண்மையை ஏற்படுத்திக் கொண்டிருந்தது போலத் தோன்றியது. அதனுடன் போர் முழுவதிலும், செயல்புரியும் களமாயிருந்த விண்ணும் கடலும் மிக நெருங்கிய நட்புக் கொண்டவைகளாயிருந்தன. எனவே, நவம்பர் மாதத்தில், குடால்கனல் தீவில் நடந்த சண்டையில் ஜப்பானியர்கள் உறுதியாகத் தோற்கடிக்கப்பட்டார்கள். இஃது அமெரிக்கர்கள் வெற்றி பெற்ற பல கடலைச் சார்ந்த நேருக்குநேர்த் தாக்குதல்களில் தனிப்பட்டதாய் இருந்தது.

## ஆப்பிரிக்காவில் மான்ட்கோமரி

அச்சு நாடுகளின் உயிருக்கே அச்சத்தை விளைவித்த முதல் தாக்குதலை, வடஆப்பிரிக்காவில், பிரிட்டிஷ் படைகள் செய்தன. இது நிகழ்ந்த மாவட்டமே பிரிட்டிஷார்களுக்குக் கதிரெறிகின்ற வெற்றிகளும், துன்பந்தருகிற நேர் மாறுதல்களும் நிகழ்ந்த இடமாயிருந்ததுடன், இருபக்கங்களிலும் ஏதாவது முடிவான பயனைப்பெற முடியும் என்று நம்புவதற்கே கடினமாகத் தோன்றியது. ஆனல், தளபதி மான்ட்கோமரி இப்போது பிரிட்டிஷ் படைக்கு ஆட்சியாளராயிருந்ததுடன் படை வீரர்களுடையதும் தாய் நாட்டின் மக்களுடையதுமான நம்பிக்கையையும் பெற்ருர்.

எல்லாவிதப் போர்க்கருவிகளும் படிப்படியாகத் திரட்டப்பட்டிருந்தன. அவற்றுடன் புது முறையான தாக்குதலையும் அவர்

உருச்செய்திருந்தார். முதலாவதாக, நீடித்த பீரங்கிக் குண்டுகளால் தாக்குவதும், அதன்பின் பகைவர்களின் வரிசையை முறித்து உட்செல்லுவதும், அதன்பின் பகைவர்களது படை வரிசைகளில் ஏற்படுத்தப்பட்ட இடைவெளிகள் வழியாகப் பெரிதளவில் டாங்கிகள் செல்வதுமாயிருந்தன. தளபதி மான்ட்கோமரியும் ரோமலும் நெருங்கி நேராகச் சந்தித்தனர். போரின்போது ஜெர்மனியால் உருவாக்கப் பட்ட மிக்குயர் போர்த் தலைவர்களில் ரோமல் ஒருவராவார். அவர் தோல்வியுற்றும் பிடிவாதமாகப் போர் புரிந்தார். ஆனால் ஜெர்மன் படை முழுமையாக அழிவதை அவரால் தடைசெய்ய இயலவில்லை.

## எல் அலாமீனும் ஜெர்மனியின் பின் வாங்குதலும்

1942 அக்டோபர் மாத இறுதியில், மான்ட்கோமரி, எல் அலா மீனைத் தாக்கினர். இரண்டு வாரங்களுக்குள் மேல்நோக்கி ஜெர்மானியர் களும் இத்தாலியர்களும் முழுமையாகப் பின் வாங்கினர்கள். முன்பு வேவலின்கீழ் அவர்கள் வெற்றிபெற்ற இடம் வழியாகப் பிரிட்டிஷ் படைகள் வெற்றிகரமாகக் கடந்து சென்றன. ஆனால், இதற்கிடையில், வடமேற்கு ஆப்பிரிக்காவில், மலைப்படையைச் செய்யும் நிகழ்ச்சிகள் நடந்தன. இவை மான்ட்கோமரியின் முன்னேறுதலுக்கு முற்றிலும் புதியதானபொருளை விளக்கியதுடன் அவற்றின் நிலையான தன்மை யையும் உறுதிப்படுத்தின.

## ஆப்பிரிக்காவில் அமெரிக்கப்படை

வடமேற்கு ஆப்பிரிக்காவில், ஆங்கிலேயர்களும் அமெரிக்கர்களும் கூட்டுச் சேர்ந்த படை இறங்கியது. இப்படைப் பெயர்ச்சி, ரூஸ்வெல் டுடன் சர்ச்சில் நடத்திய மாநாடுகள் ஒன்றின் பயனாகும். ஆகாய விமானத்தின் வளர்ச்சி இத்தகைய மாநாடுகள் நடக்க வசதி செய்தது. ரஷ்யாவில் நீண்ட காலமாகப் போரிடுவதனால் ஏற்பட்ட சுமையை நீக்குவதற்காக, ஐரோப்பாவில் 'இரண்டாவது போர் முனையை' அமைக்க வேண்டும் எனச் சிறிது காலமாகவே ரஷ்யத் தலைவரான ஸ்டாலின் வற்புறுத்திவந்தார். முதலாவதாக ஐரோப்பாவிலேயே தாக்காமல், வெற்றியை உறுதி செய்யக்கூடிய ஆப்பிரிக்காவில் தாக்குவது தீர்மானிக்கப்பட்டது. 850 கப்பல்கள் கொண்ட ஒரு பெரிய படை, எவ்விதமான கடுஞ்சேதமுமின்றி ஜிப்ரால்டரில் திரட்டப் பட்டன. இங்கிருந்து, வடஆப்பிரிக்காவின் கடற்கரையில் பல இடங்களுக்குப் பரவலாகச் சென்றன. படைகள் இறங்கிய செய்தியைக் கேட்டு இங்கிலாந்து மக்கள் இறும்பூதெய்தியதுடன்—இதைப் 'போரின் இரண்டாவது அருஞ்செயல்' எனவும் வழங்கினர்; அநேகமாக விரைவி லேயே வெற்றியை எதிர்நோக்கினர்.

## ஆப்பிரிக்காவில் நேசநாடுகளுக்கு முழு வெற்றி

ஆனால், ஜெர்மானியர்கள்மீது வெற்றி எளிதில் ஏற்படவில்லை. நாட்டின் இயற்கை நிலையும் அவர்களுக்கு உதவியாயிருந்தது. அமெரிக்கத் தளபதி ஐஸன்ஹோவர், முழுப் படைக்கும் தலைவரானார். ஆனால், அலெக்ஸாந்தரும், மான்ட்கோமரியும் கிழக்கிலிருந்து முன்னேறுவதில் அவர்களுக்குச் சுதந்தரம் அளிக்கப்பட்டது. 1943 மே மாதத்திலேதான் பிசர்டாவும், டூனிஸும் கைப்பற்றப்பட்டன. அதனுடன் பகைவரின் முழுப்படையும் சரணடையும்படி செய்யப் பட்டது. கடல் வழியாக அவை தப்புவது கடற்படையால் தடை செய்யப்பட்டது. 2, 50,000 வீரர்கள் தங்கள் போர்க் கருவிகளைத் துறந்தார்கள்.

## ஸ்டாலின்கிராடு

ஆப்பிரிக்கப் படையெடுப்பு முடிவதற்குள்ளாகவே ஜெர்மனி இதை மிஞ்சுகிறதாயிருந்த தாக்குதலை ரஷ்யாவில் பெற்றது. 1942 நவம்பர் மாதத்தில் ஸ்டாலின்கிராடைக் கைப்பற்றிவிடுவார்கள் போலத் தோன்றியதுடன், அந்நகரம் வீழ்ச்சியுறுவதையும் அறிவித் தனர். 1943 பிப்பிரவரியில், ஒரு ஜெர்மன்படை ரஷ்யர்களால் சூழப் பட்டுச் சரணடைய நேர்ந்தது. ஜெர்மனிக்கேற்பட்ட அடி, மிகப் பெரியதாயிருந்தது. ஜெர்மானியர்களில் 3,43,000 பேர் கைது செய்யப் பட்டும், 8,50,000 பேர் கொலையுண்டும், ஊறுபட்டும் இருந்ததாக மாஸ்கோவிலிருந்து அறிவிக்கப்பட்டது. இப்பேரிடரிலிருந்து ஜெர்மனி மீட்சி பெறுவதென்பது இயலாததாயிற்று. பெற்ற பேரிடரின் பேரளவை ஜெர்மனி ஒப்புக்கொண்டு, போரில் உயிரிழந்தோருக்காக மூன்று நாள்களுக்கு ஜெர்மனி அதிகாரமுறையில் துக்கம் கொண்டா டியது. பேரம் பேசியிருந்தால், ஓரமயம் போர் இதனுடன் முடிவுற்றி ருக்கும். ஆனால், ஆப்பிரிக்காவில் கஸ்பிளாங்கா எனுமிடத்தில், ரூஸ்வெல்டு சர்ச்சிலைச் சந்தித்து, தடையற்ற சரணடைவதைத் தவிர வேறெதையும் ஏற்றுக்கொள்ளுவதில்லையென அங்கு அறிவித்தனர்.

இம்முடிவுக்கு ஹிட்லரின் 'மெயின் காம்ப்' ஓரளவு காரணமா யிருந்தது. அதில், 1918-ல் ஜெர்மனி சரணடையத்தேவையே இல்லையென்றும், தொடர்ந்து போரிட்டிருக்குமானல், வெற்றி பெற்றி ருக்கும் என்றும் அறிவித்திருந்தார். இம்முறை அதனுடைய தோல்வி யைப்பற்றி எவ்வித ஐயமும் இருக்கக்கூடாது. எனவே, போர்வீரர் களுக்கும், சாதாரணக் குடிமக்களுக்கும் ஒரே மாதிரியாக ஏற்பட்ட படுகொலை, அழிவு முதலியவைகளை உண்டுபண்ணிக்கொண்டு போர் அதன் போக்கில் சென்றது. இத்துன்பங்களுக்கு வரலாற்றிலும்




வடஆப்பிரிக்காவி-
லும், இத்தாலியிலும்
நேசநாடுகளின்
முன்னேற்றம்

முதலாவது உலகப்போரின் வரலாற்றிலுங்கூட எடுத்துக்காட்டுக்காண இயலாததாய் இருந்தது.

## ஜெர்மனியின்மீது அழுத்தம்

போரின் வடிவமைப்பு இப்போது குறிப்பிடப்பட்டதுடன் இறுதி வரை அதன் உள்ளுறை தன்மைகளில் மாறுதலின்றி இருந்தது. போரில் சேர்ந்திருந்த நாடுகளில் தொழிற்சாலைகளும் பட்டறைகளும் ஒன்றோடொன்று போட்டியிட்டதுடன், அச்சு நாடுகளின் உற்பத்தியின் அளவை நேசநாடுகள் இப்பொழுது உண்மையிலேயே விஞ்சிக்கொண்டிருந்தன. கடலிலும், கடலினுள்ளும், விண்ணிலும் போர் ஓயவில்லை; இவ்விரு துறைகளிலும் நேசநாடுகள் அவற்றின் மேன்மையை ஏற்படுத்திக்கொண்டிருந்தன. அடிக்கடி இங்கிலாந்தின் மீது ஏற்பட்ட விமானத் தாக்குதல்கள் மிகுதியான இறப்பை உண்டு பண்ணின. அதனுடன் விலை மதிப்புள்ளனவும் அழகானவையுமான பொருள்களையும் அதிகமாகச் சேதப்படுத்தின. ஆனால், ஜெர்மனியின் மீது ஏற்பட்ட விமானத்தாக்குதல்களும் அவர்களுடையதைவிடப் பன்மடங்கு அதிகமாயிருந்தன. பதினெட்டு நாள்களில் ஜெர்மானியர்கள் இங்கிலாந்தின்மீது விமானத்திலிருந்து வீசிய வெடி குண்டுகளைப் போன்று, இருமடங்கு எடையுள்ள குண்டுகளை ஒரே மணி நேரத்திற்குள்ளாகவே டார்ட்மண்டு எனுமிடத்தில் ஆங்கிலேய விமானங்கள் வீசின என்பது அதிகார முறையில் அறிவிக்கப்பட்டது.

ஜெர்மனியின் நீர்மூழ்கிக் கப்பல்கள் இதனினும் இடரை விளைவிப்பனவாயிருந்தன. ஆனால், அவை படிப்படியாக உழைத்துத் தேய்ந்து கொண்டு வந்தன. இதற்கிடையில் கிழக்கிலிருந்து ரஷ்யாவில் வெள்ளம் பெருக்கெடுத்தது. ஜெர்மானியர்களின் எதிர்த் தாக்குதல்களைச் சந்தித்து இன்னலுற்றபோதிலும், ஜெர்மானியருக்கு வெற்றி கிடைக்கும் என்ற எண்ணத்தை உண்டாக்காதவாறு வெள்ளம் பெருக்கெடுத்தது. தொடர்ந்து அமெரிக்கர்களும் பிரிட்டிஷார்களும், ஜெர்மானியரையும் அவர்களுக்கு நட்பினரான இத்தாலியர்களையும் எதிர்த்துக் கடுமையாகத் தாக்கினர்கள். இத்தாலியர்களின் எதிர்ப்பு அநேகமாகத் தகர்ந்து விழுந்தது; இத்தாலியப் போர் வீரர்களிடம் திறமையோ, ஆர்வமோ காணப்படவில்லை. நேசநாடுகள் முன்னேறுவதற்கு ஜெர்மானியர்களே பெருந்தடையாய் அமைந்திருந்தார்கள்.

## சிசிலித் தீவின்மீதுபடையெடுப்பு

இவ்விரு பெரிய படையெடுப்புக்களைப்பற்றியும் மிகச் சுருக்கமாகக் கூறவேண்டும். ஆப்பிரிக்காவில், பகைவர் சரணடைந்தபின், அடுத்த தாக்குதல் எங்கு ஏற்படும் என்ற ஆழ்ந்த ஆராய்ச்சியைப்

பற்றிய ஊகங்கள் விறுவிறுப்பாகக் காணப்பட்டன. தாக்குதல் தெளிவான இடத்தில் ஏற்பட்டது. சிசிலி என்பது ஒரு தீவு ; ஆகையால், ஜெர்மானியரின் படைவலுப் பெருக்குகள் எளிதில் சென்று அதை அடைய முடியாது. மக்கள் தொகையின் பெரும்பகுதி ஃபாஸிஸ்டு ஆட்சியிடம் நேசமில்லாதிருந்தது. இத்தீவு இத்தாலிக்குச் செல்லும் நேர்வழியில் அமைந்திருந்ததுடன், ஜெர்மனியின் அதிகாரத்தின் நடுப்பகுதியாயுமிருந்தது.

1943 ஜூலை, 9ஆம் நாள் அமெரிக்க, பிரிட்டிஷ் படைகள் எதிர்பார்த்ததைவிட மிகக் குறைவான இழப்புடன் சிசிலித் தீவிலிறங்கின ; தீவின் மத்தியை வயப்படுத்திக்கொண்டன. சிராகூஸ் வீழ்ச்சியுற்றது. பாலர்மோவை அமெரிக்கர்கள் பிடித்துக்கொண்டார்கள். ஆனல், போர்த்தலைவர் மான்ட்கோமரியையும் எட்டாம் படைப்பிரிவையும் எதிர்த்துக் கடானியா சிறிது காலம் அதன் முன்னேற்றத்தை நிறுத்தியது. இந்த எல்லையைக் கடந்தபின், எதிர்ப்பதற்கான எல்லா வாய்ப்புக்களும் முடிவுற்றன. இத்தாலியில் தோன்றிய அரசியற் புரட்சி அந்நாட்டின் இடுக்க நிலையை அறிவித்தது. முசோலினியைப் பதவியிலிருந்து நீக்கிச் சிறையிலிட்டனர். எனினும், அவர் உடனே ஹிட்லரால் விடுவிக்கப் பெற்ருர். சர்ச்சிலும், ஐஸன்ஹோவரும் சரணடைவது வாயிலாக மேற்கொண்டு கொலை செய்யப்படுவதைத் தவிர்க்கும்படி இத்தாலிய மன்னருக்கு முறையிட்டனர்.

## இத்தாலி சரணடைதல்

இத்தாலி நேசநாடான ஜெர்மனியிடம் தொந்தரவுற்றிருந்ததைப் போன்று பகைவர்களின் தாக்குதல்களாலும் தொல்லையுற்றிருந்ததால், சமாதானப் பேச்சுவார்த்தைகள் விரைவில் தொடங்கப்பட்டு, 1943 செப்டெம்பர், 8ஆம் நாள் சரணடைந்தது. அதன் ஊழ் கடுமையாயிருந்தது ; என்ருலும், ஜெர்மனிக்கு ஏற்படவிருந்தவற்றுடன் ஒப்பிடும்போது அமைதி வாய்ந்ததாயிருந்தது. மன்னருடைய ஆட்சி ஏற்றுக்கொள்ளப்பட்டதுடன், இத்தாலி ஒன்றுபட்டதாயும், சுதந்தரமாயும் இருக்கவேண்டுமென்பதும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதன் பேரரசுக்குரிய கனவுகள் முடிவுற்றன ; ஆனல், திரிபோலியைச் சொந்தமாகத் தொடர்ந்து வைத்துக்கொள்ளலாம்என்பது அனுமதிக்கப்பட்டது. அவ்வாறிருந்தும், நாடு அமைதியின் நல்வாழ்வை எவ்விதத்திலும் துய்க்கவில்லை.

## ரோம் வயமாதல்

நாட்டின் பெரும்பகுதி ஜெர்மானியர் வயமிருந்தது ; முசோலினியின் தலைமையைப் பின்பற்றிய இத்தாலியர் சிலர் அவர்களுக்கு

ஆதரவாளராயிருந்தனர். மன்னரின் கீழிருந்த இத்தாலி ஜெர்மனியின் மீது போர் அறிவிப்புச் செய்து பிரிட்டிஷ் அமெரிக்கர்களுடன் சேர்ந்து சண்டையிட்டது. நேசநாடுகள், பெருந்தொல்லைகளை எதிர்த்து. சாலன்ஞே எனுமிடத்தில் இறங்கி, நிலைபெற்றபின் வடக்கு நோக்கி முன்னேறின. இப்போர் நடவடிக்கை, தொலைவிலிருந்து நோக்கியவர் களுக்கு மெதுவாக முன்னேறிக்கொண்டிருந்ததாகத் தோன்றியது. ஆனால், ஜெர்மானியர்கள் வெகு தைரியமாகப் போரிட்டும் எவ்வித முக்கியமான நலனையும் பெறவில்லை. காஸினோவில் நீடித்த கடும் போர் நிகழ்ந்ததுடன், 1944 ஜூன் மாதத்திற்கு முன் ரோம்நகரைக் கைப்பற்ற முடியவில்லை. அப்பொழுதும், முடிவுகாணும் வரை தெளிவற்ற சண்டை நெடுநாள் தொடர்ந்து நடந்தது. மேற்கு முனைக்குப் பேரளவில் படைகளை அனுப்பினர். இம்முனைதான் போரின் மிக முக்கியம் வாய்ந்த களமாயிருந்தது. நேசநாட்டுப் படைகளின் முன்னேற்றத்திற்குப் பல மாதங்கள் வரை அப்பினைன் மலைத் தொடர்கள் தொல்லை கொடுக்கும் எல்லையாயமைந்திருந்தன.

## ஜெர்மனிமீது ரஷ்யப் படையெடுப்பு

மேற்கு முனையில் போர் நடவடிக்கைகளைப் பற்றி நோக்குவதற்கு முன், ரஷ்ய முனையைப் பற்றி மிகச் சுருக்கமாக நாம் அறிய வேண்டுவது இன்றியமையாததாகும். ஸ்டாலின்கிராடு சண்டையைப் போன்று அவ்வளவு உள்ளத்தைக் கவரக்கூடியது வேறொன்றுமில்லை. ஆனால் ரஷ்யர்களின் முன்னேற்றம் தொடர்ந்தது. பெரும்பாலும் ரஷ்யா, போலந்து இவைகளிலிருந்து முழுமையாகப் பகைவர்கள் விரட்டப்பட்டு, ரஷ்யர்கள் ஜெர்மன் எல்லையை அடைந்தார்கள். இவ்வெற்றறிவிப்பில்[1] அடங்கியிருந்த போர் நடவடிக்கையில், மிகப் பெரிய அளவிற்குப் போர் வீரர்கள் ஈடுபட்டிருந்தார்கள். அதனுடன் இந்நடவடிக்கைகள் மிக நுணுக்கமாக விவரிக்கப்பட்டுள்ள நெப் போலியனுடைய போர் நடவடிக்கைகளைக்காட்டிலும் மிகச் சுவையான நுண்ணிய முறைகளைக் கொண்டிருந்தன.

ஆனால் 1943 ஆகஸ்டு மாதத்தில் ரஷ்யர்கள் கார்கோவ் என்னு மிடத்தைக் கைப்பற்றினார்கள் என்பதை மட்டும் காலக் கோவைப்படி நிகழ்ச்சியைக்கொள்ள இயலும்; அக்டோபரில் நீப்பர் ஆற்றை ரஷ்யர் கடந்தனர்; நவம்பரில் கீவ் என்னுமிடத்தைக் கைப்பற்றின. அதனுடன் கிரிமியாப் பகுதியிலிருந்து ஜெர்மானியர்கள் பின் வாங்குவது துண்டிக்கப்பட்டது. இந்நிகழ்ச்சிகளெல்லாம், நேச நாடுகள் பிரான்சில் இறங்குவதற்கு முன் நிகழ்ந்தவையாகும்.

[1] Bald Statement

பிரான்சில் நேசநாடுகள் இறங்கியபின் ஜெர்மனியர்களின் ஊழ் எவ்வாறு இருக்கும்? முப்பெரு நேசநாடுகளை ஒன்று சேர்த்துப் பிணைத்த முடிச்சுக்கள் இறுக்கப்பட்டன. ஸ்டாலின்கிராடு வெற்றியின் உட்பொருள் முழுதும் உணர்ந்த போது ரஷ்யப்படையைக் குறித்து மக்களின் உணர்ச்சி ஆர்வம் வெளிப்பட்டது. கிரேட்பிரிட்டனைச் சேர்ந்த மக்கள், ஸ்டாலின்கிராடில் வாழ்ந்த மக்களுக்குப் புகழ் வாளைப் பரிசாக அளித்தார்கள். நவம்பர் மாத இறுதியில், ஜனுதிபதி ரூஸ்வெல்டு, ஸ்டாலின், சர்ச்சில் ஆகிய மூவரும் டெஹ்ரானில் சந்தித்தபோது சர்ச்சில் இப்புகழ்வாளை ஒப்படைத்தார். சர்ச்சில் நடத்திய பல கூட்டங்களில் இக்கூட்டம் மிகவும் முக்கியமாயிருந்த துடன், மிக்க வீரச்செயல் நிறைந்ததாயுமிருந்தது. முக்கிய முடிவுகள் செய்யப்பட்டன. இக்கூட்டம் இம்மூவரசுகளுக்குமிடையே நெருங்கிய ஒத்துழைப்பின் அடையாளமாக இருந்ததுடன், இவற்றுக்குள் அது முதல் காணப்பட்ட உறவுகளைக் குறிப்பதாயும் இருந்தது.

## VI

## சக்கரம் சுழன்றது

### மேற்கு முனை

மேற்கு முனையில் தாக்கும் பிரச்சினை, டெஹ்ரான் மாநாட்டில் கூர்ந்து விவாதிக்கப்பட்டவற்றுள் ஒன்று என்பது உண்மைதான். இத்தாக்குதல் ஏற்படும் என்பது பொதுவாகத் தெரிந்ததுதான் அதனுடன் 1944 ஜனவரியில், போர்த்தலைவரான ஐஸன்ஹோவர் விரைந்து தாக்குதலுக்கான படையின் தளபதியாக அமர்த்தப்பட்டார். தாக்குதல் எங்குத் தொடங்கும் என்பது பற்றி ஆய்வு ஊகங்கள் அதிகமாயிருந்தன. தொடங்குவதில் தாமதம் மிகுதியாக ஏற்பட்ட தால் சிலர் மனவமைதியின்மையை வெளிக்காட்டினர். "அட்லான் டிக்குச் சுவரில்" மேலும் ஓர் உடைப்பு ஏற்படுத்த முடியாதென ஹிட்லர் அறிவித்திருந்தார். படையெடுப்பு ஏற்படுவதற்கு முன்னரே ரஷ்யர்கள் குறிப்பிடத்தக்க முன்னேற்றங்களைப் பெற்றிருந்தார்கள். கெர்சானும், ஒடெஸ்ஸாவும், செபாஸ்டபூலும் அவர்கள் வயமா யிருந்தன. இத்தாலியிலுங்கூடப் போர்த்தலைவரான அலெக்ஸாந் தரின் தலைமையின்கீழ் நேசநாட்டுப் படை காஸினோவைக் கைப்பற்றிய தோடு மேலும் சில பகுதிகளையும் வென்றது.

## நார்மண்டியை நேசநாடுகள் தாக்குதல்

முடிவில், ஜூன் மாதம் ஆரும் நாள் எதிர்நோக்கிய பெருநாள் வந்தது. வீரர்களின் பொருளற்ற பேச்சில் 'டி—நாள்' என அது


ஐரோப்பாவில் போர்
1939 – 1945
ஹிட்லரின் வெற்றி பெற்ற எல்லைகளின் மிகப் பெரிய அளவு.
ஹிட்லரின் கட்டுக்குட்பட்ட நாடுகள்
ஜெர்மனியின் மீது நேச நாடுகளின் முன்னேற்றத்தைக் காட்டும் கோடுகள். 1944 — 5
அட்லாண்டிக் மஹா சமுத்திரம்
நார்வே
ஸ்வீடன்
பின்லாந்து
ரஷ்யா
மாஸ்கோ
லெனின்கிராட்
எஸ்தோனியா
லாட்வியா
லித்துவேனியா
பிரிட்டிஷ் தீவுகள்
வட கடல்
டென்மார்க்
பால்டிக் கடல்
பெர்லின்
ஜெர்மனி
வார்சா
போலந்து
செக்கோஸ்லவாக்கியா
உக்ரெயின்
ஸ்டாலின்கிராட்
காஸ்பியன் கடல்
பாரிஸ்
பிரான்சு
விசி
சுவிட்ஸர்
ஆஸ்திரியா
ருமேனியா
கருங்கடல்
இத்தாலி
அல்பேனியா
போர்ச்சுகல்
ஸ்பெயின்
மத்திய தரைக் கடல்
மொராக்கோ
அல்ஜீரியா
துருக்கி
ஈரான்
ஈராக்

வழங்கப்பட்டது. போர் நிகழ்ந்த காலை, அது மிகச்சிறந்த பொறியியற்சாதனையாயிருந்தது. துறைமுகம் ஒன்று அக்கறையோடு கட்டப்பட்டு, பிரிட்டிஷ் கால்வாயில் குறுக்காக இழுத்துச் செல்லப்பட்டது. வயிட்டுத் தீவிலிருந்து செர்ப்ரோ, கெயின் என்னுமிடங்களுக்கு இடையே ஐம்பத்தாறு மைல் நீளத்திற்குப் படைகள் இறங்கிய இடத்திற்குப் பெட்ரோல் எடுத்துச் செல்லுவதற்காகக் குழாய்கள் அமைக்கப்பட்டன.

ஜெர்மானியர் உறுதியுடன் எதிர்த்து நின்றனர். கெயினிலிருந்த பிரிட்டிஷ் படையுடன், போர்த்தலைவர் மான்ட்கோமரியும் சில வமயங்களில் கடுந்தாக்குதலுக்குள்ளாயினர். ஆனால், எதிர்பார்த்த அளவிற்குக் குறைவான தொல்லைகளுக்குட்பட்டுப் படைவலிமைப் பெருக்கிற்கானவை வந்து சேர்ந்தன. நேசநாடுகள், ஜூலை மாதத்தின் பனியிலேயே தடையின்றி முன்னேறத் தொடங்கின. ஜெர்மானியர்கள் பிரான்சை விட்டு வெளியேறவேண்டுமென்பது தெளிவாயிற்று. போர்த்தலைவரான டி கால் என்பவரின் தலைமையில் பிரெஞ்சு நாட்டுரிமை உணர்ச்சியுள்ள படை நேசநாட்டுப்படைகளுக்குப் பேருதவியளித்ததுடன் 1944 ஆகஸ்டு, 25ஆம் நாள், பிரெஞ்சுப்படையினுற்ருன் பாரிசு நகரம் விடுதலையடைந்தது.

### போர்த்தலைவர் டி காலும் பாரிசு நகரம் விடுதலையடைதலும்

ஜெர்மனியில் ஹிட்லருக்கு எதிராக மூளுவதற்குத் தயாராயிருந்த எதிர்ப்புத் தானகவே தலையெடுத்தது. ஜூலை இருபதாம் நாள் ஹிட்லரைக் கொலை செய்ய அதிகாரிகள் முயன்ருர்கள் ; இம்முயற்சி தோல்வியுற்றதன் பயனகப் படையிலிருந்த முக்கியமானவர் பலர் தூக்கிலிடப்பட்டனர். ஜெர்மானியர் சிலர் புதிய குண்டுகள், அப்பொழுதுகூட கிரேட்பிரிட்டனை அடிபணியச்செய்யுமென்று நம்பினர். இந்தக்குண்டுகள் செலுத்துபவரில்லாமல் தாமாகவே இயங்குவன ; எனவே, சரியான குறியற்றனவாயுமிருந்தன. சில, வளிமண்டலத்தில் எழுபது மைல் உயரச் சென்றன. ஆயிரக்கணக்கில் இக்குண்டுகள் இலண்டன் நகருக்குள்ளும் அருகிலும் விழுந்து பெருஞ்சேதத்தை விளைவித்தன. அப்போது ஏற்பட்ட சேதம் எண்ணியசேதத்தைவிட மிகுதியானது என்பது பின்பு தெரிய வந்தது. ஆனல் இத்தாக்குதல் எவ்வித இராணுவ உட்குறிப்பையும் பெற்றிருக்கவில்லை என்பதுடன், சிறிதளவுகூட நேசநாட்டுப் படைகளின் முன்னேற்றத்தைத் தடை செய்யவில்லை. படைகள் லிஹாவ்ரே, பிரஸ்ட்டு, பொலோன், கலே என்பவைகளை வயப்படுத்திக்கொண்டன. நவம்பர் மாதத்திற்குள்ளாக ஜெர்மானியர் பெல்ஜியத்தினின்றும் விரட்டப்பட்டனர்.

ஆனல், இறுதிவரை ஜெர்மானியர் அஞ்சா நெஞ்சத்துடனும், திறனுடனும் எதிர்த்துத் தாக்கினர். 1944-ல் போர்த்தலைவர் ரன்ஸ்டெட் என்பாரின் தலைமையில் எதிர்த்தாக்குதல் நிகழ்ந்தது. இது ஜெர் மானியர்களின் இறுதி வீரச் செயலாகும். இத்தாக்குதல், நேசப்படை களால் கைப்பற்றப்பட்டிருந்த பெல்ஜிய எல்லையின் இரு புறத்திலும் ஆழமாக ஊடுருவிச் சென்றதுடன், முடிவைச் சிறிது காலம்வரை தள்ளிவைத்தது. ஆனல், அமெரிக்க பிரிட்டிஷ் படைகளை ஆட்சி செய்த மான்ட்கோமரி அத்தாக்குதலைத்தடுத்து விரட்டியடித்தார்.

### கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் ஜெர்மனியை நேச நாடுகள் தாக்குதல்

ஜெர்மானியத் தலைவர்களுக்கு எங்கும் நம்பிக்கையை யூட்டுவதாக என்றுமில்லை. போல்ஷவிசத்தை எதிர்ப்பதில் தமக்கு உதவி புரியுமாறு ஐரோப்பாவிற்கு ஹிட்லர் பயனில்லாது முறையிட்டார். ஆனல், இதற்கு ஒருவரும் செவி சாய்க்கவில்லை. போரின் இறுதிக் கட்டத்தில் இது ஹிட்லருடைய நிலையான கூக்குரலாயிருந்தது. கிரீஸ் அதன் சுதந்தரத்தை மீண்டும் பெற்றது. கிழக்கிலும் மேற் கிலும் ஜெர்மனியின் நிலப்பகுதிகள்மீது படையெடுக்கப்பட்ட ஜனவரி மாதத்திற்குள், பழைய ஜெர்மனியின் இதயம் போன்றிருந்த பிரான்டன் பர்கிற்குள் ரஷ்யர் புகுந்தனர். ஏப்பிரல் மாதத்தில் வியன்னவைப் பிடித்துக்கொண்டனர் ; மார்ச்சு மாதத்தில் அமெரிக்கப் படை கொலோனைப் பிடித்துக்கொண்டது. தொடர்ந்து நடந்த குண்டு வீச்சால் பெர்லின் நகரம் அழிவின் குவியலாயிற்று. இப் போது அதன் எல்லைப்பகுதிகளை ரஷ்யர் எட்டிப்பிடித்தனர். நகருக்குள் ஹிட்லரே யிருந்தார்; ஆனல், அவர் ஒலிபரப்பிய உரைகள் நம்பிக்கை யிழந்ததைக் காட்டின. ஜெர்மானியப்படைகள் சரணடைவதை ஏற்றுக்கொள்ள, கிரேட் பிரிட்டனும் ஐக்கிய நாடுகளும் விரும்பியிருக்கு மானல், முடிவு சிறிது முன்ன தாகவே ஏற்பட்டிருக்கும். ஜெர்மானியப் படைகள், ரஷ்யர்களிடம் சிக்காமலிருக்க அக்கறை கொண்டிருந்ததே சரணடைய விரும்பியதற்குக் காரணமாயிருந்தது.

ஆனல், ஒப்பந்தத்தின்மேல் சரணடைவதானது, ஒன்று சேர்ந்த மூன்று அரசுகளுக்கும் உரியதாயிருத்தல் வேண்டுமென்பது தெளி வாக்கப்பட்டது. இத்தாலியிலிருந்த ஜெர்மன் படைகள் அவற்றுடன் நட்புக்கொண்டிருந்த இத்தாலியப் படைகளுடன் ஏப்பிரல் மாதம் 29ஆம் தேதி போர்த்தலைவர் அலெக்ஸாண்டரிடம் சரணடைந்தன, மே மாதம் ஒன்பதாம் நாள், ஹாலந்து, டென்மார்க்கு, ஜெர்மனியின் வடமேற்கிலிருந்த ஜெர்மன் படைகள் மான்ட்கோமரியிடம் சரணடைந்தன. மே மாதம் இரண்டாம் நாள், ரஷ்யர்களால் பெர்லின் கைப்பற்றப்பட்டது. மே மாதம் ஏழாம் நாள் ஜெர்மனியின்

படைகள் அனைத்தும் போர் நிறுத்தம் செய்வதற்கு அடையாளமாகப் போர்க் கலன்களைக் களத்தேயிட்டன.

## ஹிட்லருடையதும் அவருடைய கூட்டாளிகளினுடையதுமான முடிவு

வெற்றி முழுமையாயிற்று. ஹிட்லரைப் போன்று, மிகப் பெரிய அளவு தனிமுறை உரிமையில் ஏற்பட்ட வெற்றிக்கும் அதைத் தொடர்ந்து மிக விரைவாயும் அவ்வளவு முழுமையாயும் ஏற்பட்ட வீழ்ச்சிக்கும் எடுத்துக்காட்டாக வரலாறுகளிலெல்லாம் வேறொன்றைக் காண்பதரிது. நெப்போலியனின் வாழ்க்கை, இதற்கு இணையாயிருக்கலாம் என்ற கருத்துந் தோன்றலாம். ஆனால், அவர் அவ்வளவு வெறுக்கத்தக்க அழிவையும் அடையவில்லை. ஃபாஸிஸம், நாஸிஸம் இவைகளின் முக்கியமான தலைவர்கள் தற்கொலை செய்துகொண்டோ, அல்லது அவர்களின் நாட்டுமக்களால் கொலையுண்டோ அழிந்தார்கள். முசோலினி அவருடைய 'கட்சியாரால்' கொலையுண்டார். அவரது உடல் மிலான் நகரத் தெருக்களில் காட்சிக்கு வைக்கப்பட்டது.

ஹிட்லரின் முடிவைப் பற்றிய விவரங்கள் உறுதியாகக்கிடைக்கவில்லை. அவர் இடிந்து விழுந்துகொண்டிருந்த பெர்லின் நகரப் பாழ்களில் ஏதாவதொரு முறையில் தற்கொலை புரிந்துகொண்டிருக்க வேண்டும். ஹிட்லரின் ஆட்சியில் வானொலிப் பிரசாரம், பாதுகாப்பு இவற்றில் மிக முக்கியமாயிருந்த கோயபில்ஸ், தம் மனைவியுடனும், குடும்பத்தினருடனும் தற்கொலை புரிந்துகொண்டார். நாஸிகளின் பகைவர்களைஅச்சுறுத்துவதில் பெரும்பணியாற்றியதும், இழிவார்ந்ததுமான ஜெர்மன் மறை ஒற்றர் கூட்டம் அல்லது இரகசியக் காவற் படையின் தலைவரான ஹீம்லரும் தற்கொலை புரிந்துகொண்டார்.

போரின் இறுதி வாரங்களிற் காணப்பட்ட மற்றொரு கொடுங் கூற்றையும் விட்டுவிட இயலாது. நேச நாடுகள் ஜெர்மனிக்குள் முன்னேறிய போது, நூறாயிரக் கணக்கில் போர்க் கைதிகளுக்கு விடுதலையளித்தன. அவர்கள் வழக்கப்படி மனிதத் தன்மையுடன் நடத்தப்பட்டார்கள். ஆனால், அவர்கள் ஹிட்லர் ஆட்சியின் எதிரிகளால் சிறை பிடிக்கப்பட்டுத் தனியாக அடைத்து வைக்கப்பட்டிருந்த சில முகாம்களையும் கண்டார்கள். இங்கு நிலைமை நம்ப இயலாதவாறு கொடுமையாயிருந்தது. இங்குத் துயருற்றோரில் மிகுதியாயிருந்தவர்கள் யூதர்களும், போலந்து மக்களுமாவார்கள். நாஸிகள் இவர்களைக் கீழினத்தைச் சேர்ந்தவர்களென வெறுப்புடன் தாக்கினார்கள்; எனவே, சட்டப்படி தண்டனையளித்து, விலங்குகளையோ குற்றவாளிகளையோ நடத்துவதைக்காட்டிலும் கேவலமாக அவர்களை

நடத்தினர்கள். இம்முகாம்களைப் போன்று திடுக்கிடச் செய்கிற அளவிற்கு வேறு எந்தப் பகுதியையும் வரலாறு பெற்றிருக்கவில்லை. இவற்றைக் கவனியாது அமைதியாக மேற்செல்லுதல் இடருதவியா யிருக்கும்; ஆனல், சிறிதளவாகிலும், இவற்றைச் சுட்டுவது இன்றி யமையாததாகும்.

## VII

## ஜப்பான்மீது போர்

ஐரோப்பிய வரலாற்றைச் சுருக்கிக் கூறும்போது, பசிபிக்கு மாக் கடலில் ஜப்பானுக்கும் நேசநாடுகளுக்குமிடையே நடந்த போரைப் பற்றிக் கூறுவது இயலாததாகும். ஆனல், இப்போர் ஐரோப்பாவில் நடந்த போரின் போக்கை மிக ஆழமாகத் தாக்கியதுடன் சர்வதேச அமைப்பு முழுவதையும் உறுதியாகக் கட்டுப்படுத்துவதாயுமிருந்தது. ஆகையால், இப்போரின் முக்கியக் கூறுகளைச் சுருக்கிக் கூறுவது தேவையாகும்.

### ஜப்பானும் அச்சு நாடுகளும்

ஐரோப்பாவில் போர் மூளுவதற்குச் சிறிது காலம் முன்னரே, ஜப்பான் இத்தாலியுடன் நட்புறவும் அதைவிட அதிகமாக ஜெர்மனி யுடன் மிக நெருங்கிய நட்புறவும் கொண்டிருந்தது. நாஸிக ளுடையவும் ஃபாஸிஸ்டுகளுடையவும் கருத்துக்களும் முறைகளும், ஜப்பானியர்களை எளிதாகக் கவர்ந்தன. ஜப்பானியர்கள், மேற்கு ஐரோப்பாவினுடைய மக்களாட்சி, இரக்கம் முதலிய கொள்கைகளைக் காட்டிலும், எப்போதும் கீழ்ப்படிதலைப் புகழ்ந்தும் போரை உயர்குறிக் கோளாகக் கொண்டுமிருந்தனர். மேலும், 1937 இலிருந்து ஜப்பான், சீனமீது வல்லந்தமாகத் தாக்குவதில் ஈடுபட்டிருந்தது. இப்போர், ஹிட்லர் ஐரோப்பிய உரிமைகளைத் தாக்கியது போன்று, கொடுமை யாயும், சினமூட்டப் படாததாயும் இருந்தது. அமெரிக்க ஐக்கிய நாடுகள், தங்கள் ஒத்துணர்வு எந்தப்பக்கத்தில் இருந்ததென்பதைக் காட்டக் காலத் தாழ்ப்புச் செய்யவில்லை. சீன மக்களுக்கு ஐக்கிய நாடுகள் போர்த் தளவாடங்களை அனுப்பின ; ஜப்பானுக்கு இவ்வுத வியை மறுத்தன. சீனர்களுக்கு அனுப்பிய உதவி, பிரிட்டிஷார்களின் அதிகாரத்தின் கீழிருந்த பர்மாச்சாலை வழியாக அனுப்பப் பெற்றது.

வாஷிங்டனிலோ, அல்லது இலண்டனிலோ, ஜப்பானுடன் போர் ஏற்படக்கூடும் என்ற பொய்த்தோற்றங்கூடஇல்லை. ஆயினும், ஜப்பான் செயலிலீடுபடுவதற்கு இரண்டாண்டுகளுக்கு மேலாக

ஐரோப்பாவில் போர் சீற்றங்கொண்டிருந்தது. இறுதிவரையில் ஜப்பான், ஐக்கிய நாடுகளுடன் சமாதானத்திற்கான பேச்சு வார்த்தை நடத்தும் தோற்றத்தை நிலைக்கச் செய்தது. ஆனால், 1941ஆம் ஆண்டிற்குள் ஐரோப்பாவில் ஜெர்மனி பெற்ற வியத்தகு வெற்றிகள், நேசநாடுகளின் மீட்பை அநேகமாக இயலாததாகச் செய்தது போலத் தோன்றிய காலை ஜப்பான் தாக்கியது.

## ஜப்பான் ஐக்கிய நாடுகளைத் தாக்குதல்

1941 டிசம்பர், ஏழாம் நாள், ஜப்பானுடைய விமானப்படை பெர்ல் துறைமுகத்திலிருந்த ஐக்கிய நாடுகளின் கப்பற்படையைத் தாக்கியது. அமெரிக்கர்கள் இதற்கு மாறாக ஆயத்தமில்லாதிருந்ததையும் கண்டனர். ஜப்பானியர்கள் பெருஞ்சேதத்தை விளைவித்தார்கள். அக்காலை இச்சேதத்தின் அளவைப்பற்றி அறிவிக்கப்படவில்லை. சிறிது காலம்வரை ஐக்கிய நாடுகள் பசிபிக்கு மாக்கடலில் வல்லந்தச் செயலில் ஈடுபட இயலாதனவாயிருந்தன. எனவே, ஜப்பானியர்கள் விரும்பியவாறு தாக்குவதற்குத் தடையின்றியிருந்தனர். சின்னாள்களுக்குப்பின் முதல் தரமான இரு பிரிட்டிஷ் போர்க்கப்பல்கள் கடலில் மூழ்கடிக்கப்பட்டன. ஜப்பானின் தாக்குதல் அத்தீவுகளிலும், பசிபிக்குக் கடற்கரைகளிலும் வியக்கத்தக்க விரைவுடன் பரவியது. பர்மாவும், பிலிப்பைன் தீவுகளும், மலேயாவும், போர்னியோவும் படையெடுக்கப்பட்டு, பெரும்பகுதிகள் கைப்பற்றப்பட்டன. பிரிட்டிஷாருக்குச் சொந்தமான ஹாங்காங்கும் சிங்கப்பூரும் பிடிக்கப்பட்டன. போர் நடந்த காலை, பிரிட்டிஷாருக்குச் சொந்தமான இவை சரணடைந்ததைக்காட்டிலும் வேறெந்தத் தாக்குதலும் அவ்வளவு துயருண்டாக்கியதாகக் கருதப்படவில்லை. போர், அதன் இரு களங்களிலும் ஒரே இயல்புடையதாகக் காணப்பட்டது. ஜப்பானியர்கள் நெடுநாளாக அக்கறையுடன் தயாரிக்கப்பட்டிருந்த படைகளைக் கொண்டு தாக்கினார்கள்; அவர்கள் பகைவர்கள் துணைத் தளவாடங்களற்றவர்களாயிருத்தலைக் கண்டார்கள். வியக்கத்தக்க வீரம், தவருப்பணிவு, அரசாங்கத்திடம் ஆர்வமிக்க பற்றுறுதி, போர் வீரர்கள், போர்த்தலைமை ஆகியவற்றில் காணப்பட்ட மிகவுயர்ந்த இராணுவத் தன்மை முதலியவற்றை ஜப்பானியர் விளம்பரஞ்செய்தனர். உரிமை, இராணுவத் திறமையுடன் பொருந்தாதென்றும், எதிர்காலம், ஜப்பான், ஜெர்மனி முதலிய நாடுகள் சேர்ந்து ஒரே மாதிரியாய்ப் பேரறிவிப்புச் செய்யப்பட்ட இரக்கமற்ற அதிகாரத்தின் கொள்கைகளுடன் காணப்பட்டதாவும் சிலருக்குத் தோன்றின.

நேச நாடுகளின் பக்கத்தில், ஒரு கணநேரத் தயக்கங் கூடக் காணப்படவில்லை. உடனே கிரேட் பிரிட்டன் ஜப்பானுடன் போர் அறிவிப்பைச் செய்தது. அமெரிக்கநாடுகள், அவற்றின் சிறந்த

ஜனாதிபதியான ரூஸ்வெல்டு வாயிலாக ஜப்பானின் செயலுக்கு வெறுப்புடன் கூடிய எதிர்ப்பாகும் விடையை அளித்தது. வலியத் தாக்குபவரை எதிர்த்துக் கூட்டாகப் படையெடுப்பதற்காக அதன் செல்வம், திறமை, விஞ்ஞான அறிவு, மக்கள் வலிமை முதலியவைகளை முழுமையாக முன்வைத்தன. முடிவு காண நெடுங்காலம் ஆகும் போலத் தோன்றியது.

## ஐக்கிய நாடுகளினுல் சர்வாதிகாரப் போர்

ஆனால், ஐக்கிய நாடுகள் மிகப் பெரிய விமானப்படையையும் உலகிலேயே மிகச் சிறந்த கப்பற்படையையும் அமைத்தன. ஆஸ்திரேலியாவும், நியுசீலந்தும் ஆண்மையுடன் ஒத்துழைத்தன. பிரிட்டிஷ் படைகளும் இந்தியப் படைகளும் பேரளவிற் கலந்துகொண்டன, இவற்றுடன், சீனாவின் மிகப் பெரியதும், ஆனால் துணைச் சாதனமற்றதுமான படையையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டியதாயிருந்தது. சீனாவில் சண்டை எதிர் பார்த்ததை விடக் குறைவாய் நடந்தது; ஆனால், சீனப்படை உண்டெனும் நிலையிருந்ததால், வேறிடங்களுக்கு ஜப்பானியரின் படைகளை அனுப்பவியலாதபடி செய்தது. ஜப்பான் விரைவில் வெற்றி பெறுவதை நம்பியிருந்தது; வெற்றி ஏற்படுவதாயிருக்குமானால், விரைவில் ஏற்பட வேண்டும். ஜப்பான் அதன் பகை நாடுகளிடம் காணப்பட்டதைப் போன்று பெரிய மூலவளம் ஒன்றையும் பெற்றிருக்கவில்லை; அதனுடன், காலமும், ஐரோப்பாவி லிருந்ததைப் போன்று பசிபிக்கிலும் சுதந்தர நாடுகளின் பக்கலிலிருந்தது.

## எழுச்சியின் திருப்பம்

1943-ல் இலையுதிர் காலத்திற்குள் எழுச்சியின் திருப்பம் பாராட்டுவதற்குரியதாயிருந்தது; ஆனால், ஜப்பானியருடைய எதிர்ப்பு ஒவ்வொரு முனையிலும் பிடிவாதம் நிறைந்ததாயிருந்ததுடன், சரணடைய நேர்ந்த காலை, அவர்கள் படைகள் பொதுவாகத் தற்கொலை புரிந்துகொண்டமை, இராணுவ வரலாற்றிற்குக் கொடுமை நிறைந்த புதிய கூறாயிருந்தது. 1943 நவம்பர் மாதத்தில், கெய்ரோவில், ஜனாதிபதி ரூஸ்வெல்டு, திரு. சர்ச்சில், சீனப்படைகளின் தளபதியான சியாங்-கே-ஷேக்கு என்பவர்களுடைய கூட்டம் நடந்தது. அதில், ''ஜப்பான், பசிபிக்கில் பெற்ற வெற்றிகள் பறித்துக்கொள்ளப்பட வேண்டும்; ஜப்பான் சீனாவிலிருந்து விரட்டப்பட வேண்டும். கொரியாவிற்குச் சுதந்தரம் அளிக்கக் கட்டாயப்படுத்தப்பட வேண்டும்'' என்பது அறிவிக்கப்பட்டது. 1944ஆம் ஆண்டில் நேசநாடுகள் பல முனைகளில் முன்னேறின என்றாலும், உறுதியான உண்மை அவை வான வெளியிலும் கடலிலும் பெற்றிருந்த ஆதிக்கமேயாம்.

1944 ஜூன் 19ஆம் நாள் பிலிப்பைன் கடற்சண்டை நிகழ்ந்தது. இதில் நானூறுக்கும் அதிகமான ஜப்பானிய வானவூர்திகள் அழிக்கப் பட்டதுடன், அவர்களது கப்பற்படைக்கும் மிகுந்த சேதம் விளைவிக்கப் பட்டது. பசிபிக்குப் போரில் இஃது உறுதிவாய்ந்த சண்டையா யிருந்தது போலும்! 1945 ஆம் ஆண்டின் கோடைகாலத்தில் ஓகினுவா எனுமிடத்தைக் கைப்பற்றியதுவாயிலாக நேசநாடுகள் ஜப்பானை எளிதிற் சென்று அடைவதற்கான விமானத்தளத்தைப் பெற்றன. பின்பு ஜூலைத்திங்களில், வானவெளியிலிருந்தும், கடல் வழியாகவும் ஜப்பான்மீது தாக்குதல் தொடர்ந்து ஏற்படலாயிற்று. ஜப்பானியர்க ளுடைய இழப்பு, கப்பல்கள் வானவூர்திகள் இவைகளில் ஆயிரத் திற்கும் மேலிருந்தது; தோல்வி அண்மையிலும் உறுதியாயு மிருந்தது.

## அணுக்குண்டு

போரின் இறுதிநாள்கள், வருங்கால மக்களால் உலகின் இருபாதி களிலும் போரின் மிக முக்கியமான நிகழ்ச்சியாகக் கருதப்படக்கூடி யதைக் கண்டன. 'எவ்விதப் பாதுகாப்புமில்லாத' ஒரு புதிய புனைச் செயலைப்பற்றித் தொடக்கத்திலிருந்தே மிகுதியாகப் பேசப்பட் டிருந்தது. இருபக்கங்களிலும் சிறந்த புதுப் புனைவுகள் ஏற்பட்டிருந்தன; ஆனால், அவை உறுதியான இன்றியமையாமை வாய்ந்தனவல்ல. ஆனால், இப்பொழுது, பலவாண்டுகளாக மனித இனத்தில் பேய்நட மாட்டங்கொண்டிருந்த கனவு அல்லது தீக்கனு கைவரப்பெற்ற தாயிற்று. 'அணுவைப்பிளப்ப'தால் அஞ்சத்தக்க புதியதோர் ஆற்றலைப் படைக்க இயலக்கூடியதைப் பற்றி விஞ்ஞான வல்லுநர்களும் புனைவுக் கதையாசிரியர்களும் நெடுநாளாகவே கூறியிருந்தார்கள். ஜெர்மனி யிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும், விஞ்ஞானிகள் பெரிய அளவில் துணைவர்களைக்கொண்டு, இத்திட்ட விவரங்களின் நடைமுறைப் பயிற்சியி லீடுபட்டிருந்தார்கள். இப்புதுப்புனைவுச்செயலின் பீடிகை யான நிலைகள் மறைத்து வைக்கப்பட்டிருந்த 'கன நீரை' [1] நார் வேயின்மீது ஏற்பட்ட துணிகரமான திடீர்த் தாக்குதலால் அழித்திரா விடின், இப்போட்டியில் ஓரமயம் ஜெர்மனி முதன்மை பெற்றிருக்கக் கூடும்.

பெருநடுக்கத்தை ஊட்டும் இப்பூதம் உண்மையில் அமெரிக்காவில் தோன்றியது; அமெரிக்க, பிரிட்டிஷ் ஆராய்ச்சியின் தலைமையான விளைவாயிருந்தது. 1945 ஆகஸ்டுத் திங்கள், ஐந்தாம் நாளன்று, முதல் அணுக்குண்டு ஹிரோஷிமாவில் வீசப்பட்டது; சரணடையா விடில் மற்றோர் அணுக்குண்டு வீசப்படுமென ஜப்பானியர்களுக்கு

[1] Heavy Water

எச்சரிக்கை விடுக்கப்பட்டது. ஆகஸ்டு ஒன்பதாம் நாள் நாகசாகியில் மற்ருெரு குண்டும் வீசப்பட்டது. இது போர்முறை வரலாற்றில் மிகப் புதியதென்பதும், எதிர்கால நாகரிகத்திற்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததென்பதும், முதன்முதலாக நிகழ்ந்ததென் பதும் அப்பொழுது உணரப்படவில்லை. இப்புதியகுண்டு, இலண்டன் அல்லது காவன்டிரி, அல்லது வார்ஸா, அல்லது பெர்லினில் நிகழ்ந்த வைகளையெல்லாம் பயனற்றனவாகச் செய்தது. இப்புதிய குண்டு சிறியதாயும் இலேசாயுமிருந்தது. பெர்லினையும், ஜெர்மனியில் உள்ள மற்ற நகரங்களையும் தூள்தூளாக்கிய எறிகுண்டுகளுக்குப் புது முறையில் வேறுபாடுள்ளதாயிருந்தது. ஆனுல், இக்குண்டாற்றல், ஒரு கணநேரத்தில், வானவூர்திப்படைகளாலும் பல டன் நிறையுள்ள வெடிமருந்துகளாலும் விளைவிக்கப்பட்டதையெல்லாம் விஞ்சக் கூடிய தாயிற்று. இதன் எல்லை பல மைல்களைக் கொண்டிருந்தது; இதற்குப் பலியானவர் நூருயிரக் கணக்கிலிருந்தனர். இறுதியில் ஜப்பானின் உறுதியான ஊக்கம் கீழ்ப்படிந்தது. ஆகஸ்டு, பதினைன்காம் நாள், நேசநாட்டினரின் அமைதிக்கான வாசகங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் போரும் முடிந்தது.

## VIII

## இரண்டாவது உலகப் போருக்குப்பின்

நிலப்பகுதிகளிலும் எல்லைகளிலும், இரண்டாவது உலகப் போர் பெரிய அளவில் மாறுதல்களை ஏற்படுத்தும். ஐரோப்பாவின் கிழக் கிலும் தென்கிழக்கிலுமுள்ள அரசுகளுக்குள் பெரிதளவில் எல்லை மாற்றங்கள் இருக்கின்றன. இத்தாலி, அபிசீனியாவின்மீது கொண்டிருந்த தன் பிடிப்பையும் செங்கடலின் கரையோரத்திலும் சில நிலப்பகுதிகளிலும் இழக்கிறது. பல அரசுகளின் ஒப்பீடான வலிமை யிலும் பெருமாறுதல்கள் இருக்கின்றன. ஜெர்மனி உலகமன்றங் களில் பேராதிக்கம் கொள்ளுவதற்கு நெடுநாளாகும். இத்தாலி உலக ஆதிக்கம் பெறும் கனவை எப்போதும் தவிர்க்க வேண்டும்.

## ஐரோப்பாவிலுண்டான பெரிய மாறுதல்கள்

ரஷ்யா, தன் மதிப்பையும் சத்தியையும் பெரிய அளவிற் பெற்ற துடன், புதிதாக வெற்றிபெற்ற இவ்வரசு, தென்கிழக்கு ஐரோப் பாவில், எத்தன்மையான செல்வாக்கைப் பெற வேண்டும் என்று உறுதி செய்வது என்பது வருங்காலப் பெரிய பிரச்சினைகளில் பெரிய தொன்ருயிருந்தது. நன்கு நோக்குவோமானுல், கடந்த போருக்குப் பின் உலக ஒழுங்கை நிலைபெறச்செய்யும் பொறுப்பிலிருந்து பின் வாங்கிய அமெரிக்க ஐக்கிய நாடு, இப்பொழுது அநேகமாக நாட்டு

மக்களின் ஒருமித்த முடிவின் துணைகொண்டு பொறுப்பை ஏற்றுள்ளது சீனவும், எட்டாண்டுகள் கடும்போர் புரிந்தபின், உலகவல்லரசுகளுள் ஒன்றாய் வெளிப்படுகிறது. அந்நாட்டின் முழுச்சுதந்தரம் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது; அதன் இராச்சியம் பெரிதாயிற்று. சீன மற்ற நான்கு வல்லரசுகளுடன்—ஐக்கியநாடுகள், கிரேட் பிரிட்டன், பிரான்சு, ரஷ்யா—சமமான நேசநாடாய் இயங்குவதைப் பற்றி அக்கறையுடனும் நம்பிக்கையுடனும் வருங்கால வரலாற்று சிரியர்கள் காண்பார்கள். ஐரோப்பாவில் வேறு புதிய அரசுகள் ஏற்படவில்லை. ஜெர்மனி, அளவிற்கு அதன் நிலப்பகுதி கட்டுப் படுத்தப் பெற்று, வலுவுள்ள அமைப்பாக நிலைமாறுபாடு அடைவதை ரஷ்யா, பிரான்ஸ்,கிரேட்பிரிட்டன், ஐக்கியநாடுகள் இயக்கவேண்டியதா யிருந்துங்கூட, ஐக்கியமாயிருக்கிறது. மேற்கு ஆசியா, வட ஆப்பிரிக்கா முதலியவற்றை நோக்கும்பொழுது பெருங்குழப்பத்தையும் அதன் விளைவில் தெளிவில்லாதிருத்தலையும் காண்கிறோம்.

## யூதர்கள்

அரேபிய இனத்தைச் சேர்ந்தவர்கள் உலகப் போரினல் ஆழமாகத் தூண்டப் பெற்று, பெரிதான அரேபியா அரசு ஏற்படுத்துவதை உரிமையுடன் கேட்கிறார்கள். யூதரினம், ஹிட்லரால் மிக மூர்க்க மாகவும் கொடுமையாகவும் தாக்கப்பட்டுப் பேரிழப்பையடைந்தது. ஆனல், அது தொல்லையுறுத்தியவரிடமிருந்து தப்பிப்பிழைத்தது. யூதர்களின் பிரச்சினை, நவீன அரசியல் வல்லமையுடைவர்களை எதிர் நோக்கும் அவசரமானதும் கடினமானதுமான பிரச்சினையாகும். கடந்த உலகப் போருக்குப்பின், பாலஸ்தீனத்தில் யூதர்களுக்குத் தாயகத்தைத் தோற்றுவிப்பதென்பது பெரியசோதனைகளில் ஒன்று யிருந்ததுடன், அதைப் பாதுகாத்தலிலும் மேலும் பெரிய அளவுள்ள தாக வளர்ச்சி யடையச் செய்வதிலும், சுதந்தரமானதாகச் செய் வதிலும் ஆவலுடன் உரிமை பாராட்டப்படுகிறது.

## இத்தாலி

இத்தாலியில், கவூரும், கரிபால்டியும் ஆற்றிய பணி சீர்குலையாம லிருக்கிறது. இத்தாலியின் ஒற்றுமை வெளியிலும், உள்நாட்டு இயக்கங்களாலும் அச்சுறுத்தப்படவில்லை. அதனிடமிருந்து மத்திய தரைக்கடல் பகுதியிலும் ஆப்பிரிக்காவிலும் அதற்குச் சொந்தமான வற்றில் அதிகமானது எடுக்கப்படும். பலநூற்றாண்டுகளாக முழுமை யானதும் தெளிவற்ற நிலையிலிருந்ததுமான அபிசீனியா வெளிப்பட்டு உலகில் நன்கு ஏற்றுக்கொள்ளப்பட்ட அரசுகளுடன்கூட ஒரு கிறித்துவ சமுதாயமாகத் தனக்குரிய இடத்தைப் பெறுவதாயிற்று.

## பிரான்சு

பிரான்சு மிகக்கொடிய சோதனைக்குள்ளாகியது. இதன் விளைவாக உண்டான பட்டறிவு 1870-ல் ஜெர்மானியர் பிரான்சுமீது படையெடுத்து வெற்றி கொண்டபொழுது உண்டானதைக்காட்டிலும் மிகக் கொடுமை வாய்ந்ததாயிருந்தது. பெற்ற அவமானங்கள், தொல்லைகள் முதலியவற்றுக்கு இணையாகக் காணவேண்டுமாயின், மிகக் கொடுமையான நூற்ருண்டுப் போரின் வரலாற்றிலேதான் காணமுடியும். அந்நாட்டின் புதல்வர்களுள் சிலர் செய்தவைகளைக் குறித்துத் தலை குனிந்து—குறிப்பாகப் போர்த் தலைவர் பிடெய்னும் லவாலும்—படையெடுத்தவர்களுடன் ஒத்துழைத்து, ஃபாஸிஸத்தையும் பிரான்சு அடிமை போன்று நடப்பதைத் தவிர்க்க முடியாததாயும் ஏற்றுக் கொண்டது. ஆனல், பிரான்சு வியத்தகு முறையில் தன்னிலைக்கு மீளத்திரும்பும் தன்மையையும் மீட்சி பெறுவதற்கான ஆற்றலையும் மீண்டும் காட்டியது; நம்பிக்கையை இழக்காதவரான டிகால் எனும் சிறந்த தலைவரைத் தோற்றுவித்தது. பிரெஞ்சுக்காரர் பலர் நேச நாடுகளுடன் இப்போர் முழுமையிலும் போரிட்டனர். பிரெஞ்சுக்காரர்களின் படைக்கலன்களைக் கொண்டே, நார்மண்டியின்மீது நேச நாடுகள் படையெடுத்ததன் விளைவாக ஜெர்மனியின் வலிமை அசைக்கப்பட்டிருந்தபொழுது, ஜெர்மானியர்களிடமிருந்து பாரிசு நகரம் மீட்கப்பட்டது. பிரான்சு அதன் குடியரசைச்சார்ந்த அரசியல் அமைப்பின் குறிக்கோள்களை மீண்டும் அடையும் என்பது உறுதியாயிருந்தது. இப்பொழுதாவது குடியரசு அமைப்பில் சில மாறுதல்களைத் தோற்றுவிக்கலாம் என்பது நம்பவேண்டுவதாயிருந்தது.

## போரில் இழப்புக்கள்

போர், முன் நிகழ்ந்தில்லாதவாறு கொடுமை நிறைந்ததாயும் அழிவை உண்டு பண்ணுவதாயுமிருந்தது. முக்கியமாகப் போரிட்டவர்களுக்கு ஏற்பட்ட இழப்புக்கள் சரிநிகராய் இருக்கவில்லை. முதல் உலகப் போரில் மடிந்த மக்கள் தொகையில் சற்றேறக்குறையப் பாதியளவுதான் கிரேட் பிரிட்டன் இப்போரில் இழந்தது. இதற்கு அகழிகளில் தொடர்ந்து கொலையுண்டதைப் போன்று இப்பொழுது இல்லாதிருந்தது காரணமாயிருந்தது. கிரேட்பிரிட்டனில் நகரங்களும் சிவிலியன் மக்களும் வானவெளிக் குண்டு வீச்சினல் கொடுந்துயருற்றதுடன் இலட்சக்கணக்கில் வீடற்றவர்களானர்கள்; ஆனல், இவை எல்லாம் முதலில் மிகக் கொடுமையாகத் தோன்றியபோதிலும், மத்திய ஐரோப்பாவில் நகர வாழ்க்கை முழுமையாக அழிவுற்றதுடன் ஒப்பிடும் போது மிகக் குறைவாயுமிருந்தது. கடந்தபோரைவிட, பிரான்சு இப்போரில் மிகக் குறைவான இழப்புக்களுடன் தப்பியது; இதற்குப்

போரின் பெரும்பகுதியில், பிரான்சு பெயரளவில் சமாதானமாயிருந்ததே காரணமாகும். ஆனால், போரின் தொடக்கத்திலும் இறுதியிலும் பிரான்சின் இழப்புக் கடுமையாயிருந்தது. அதனுடன், அதன் துன்பங்களில் இலட்சக்கணக்கான தொழிலாளர்கள் ஜெர்மனியில் வெடிமருந்துக் கருவிகளைச் செய்வதற்காக நாடு கடத்தப்பட்டது சிறப்புக்கூறுயிருந்தது. பெல்ஜியம், ஹாலந்து, நார்வே நாடுகள் முற்றிலும் சினமூட்டப்பெறுத நாஸிகளின் தாக்குதல்களால் கொடுந் துன்பமுற்றன. ஆனால், அவற்றுக்கு ஏற்பட்ட அவமானமும், அடிமைப்படுத்துதலும் பொறுக்க முடியாத சுமையாயிருந்தன.

## ஐரோப்பாவில் ரைன் நதிக்குக் கிழக்கில் கடுந்துன்பம் ஏற்படல்

ரைன் நதிக்குக் கிழக்கில் மத்திய ஐரோப்பா முழுவதிலும், மாஸ்கோ, லெனின்கிராடு நகரங்களின் சுற்றுப்புறங்கள்வரையிலும் போரின் அட்டூழியத்தின்தன்மை மிகத் தெளிவாகக் காணப்பட்டது. முதலில் நாஸிகளின் விமானப் படையின் மேன்மை மற்றவைகளோடு ஒப்பிடும்போது பாதுகாப்பளிப்பதாயிருந்தது. ஆனால், பருவம் மாறியபோது, அழிவு மலைப்பை உண்டுபண்ணுவதாயிருந்தது. நேச நாடுகள், இராணுவ முக்கியத்துவம் வாய்ந்தவைகளின் எல்லைக்குள் குண்டு வீசுவதற்கு முயன்றன. ஆனால், இவற்றின் தனிச்சிறப்பை அறிந்துகொள்வது கடினமாயிருந்தது. போர் முடியுமுன், ஜெர்மனியின் பெரிய நகரங்கள் வேறுபாடின்றிக் குண்டு வீச்சுக்கு இரையாயின. கொலோனும், ஹாம்பர்கும் மற்றும் பல நகரங்களும் பாழின் குவியல்களாக ஆக்கப்பட்டன. பாலங்கள் உடைக்கப்பட்டன. இரயில் போக்குவரத்துத் தடை செய்யப்பட்டன.

## ஜெர்மனி

நான்காம் நூற்றாண்டில் ஏற்பட்ட நாகரிகமற்றவர்களின் படையெடுப்புக்களுக்குப் பிறகு, நாகரிகச் சமுதாயத்தின் எப்பகுதிக்கும் இவ்வளவு அழிவு ஏற்படவில்லை. ஜெர்மனியின் கிழக்கில் அழிவு மிகவும் பெரியதாயிருந்தது. ஜெர்மானியர்கள், போலந்திலும், செக்கோஸ்லோவியாவிலும் முழுமையாக அழிக்கும் கொள்கையைப் பின்பற்றியிருந்தார்கள். உயிரிழந்தவர்களின் எண்ணிக்கையை மதிப்பிட முடியவில்லை. இரு நாடுகளிலும் யூதர்களின் தொகை பெரிதாயிருந்தது. யூதர்களை அடியோடு அழிப்பதுதான் தமது கொள்கையென ஹிட்லர் அறிவித்திருந்தார். அவர்களை எவ்விதத்திலும் அழிக்க இயலவில்லை. ஆனால், இறந்தவர்களின் எண்ணிக்கை இலட்சக் கணக்கிலிருந்தது. ரஷ்யாவும் ஜெர்மனியும் எங்கெங்குச் சச்சர

விட்டனவோ, அங்கங்கெல்லாம், மக்கள், பயிர்கள், கட்டடங்கள் எல்லாம் இருபக்கங்களிலும் அநேகமாகச் சரிநிகராக அழிவுற்றன. ரஷ்யர்கள் 'எரிக்கப்பட்ட மண்' என்று வழங்கிய கொள்கையைப் பின்பற்றினுர்கள். அஃதாவது, அவர்கள் பின்வாங்கும்பொழுது அவர்களுக்குச் சொந்தமானவைகள் பகைவருக்குப் பயனளிக்காதபடி தடுப்பதற்காக அவர்களாலேயே அழிக்கப்பட்டன. ஜெர்மானியர்களும் வானிலிருந்தும் தரைவழியாகவும் செய்த தாக்குதல்களால் எதையும் அழிக்காமல் விடவில்லை.

## ஜெர்மனியில் கொடுஞ்செயல்கள்

### தனித்து வைக்கப்பட்டிருந்த சிறைகள்

போர், மற்றொரு கொடுமையையும் தோற்றுவித்தது. இதைக் கூருமற் செல்வது, இடருதவியாயிருக்கும். போர் முடிவுற்றபின், சிறைச்சாலைகளிலும், தனித்து வைக்கப்பட்டிருந்த கைதிகளின் சிறைகளிலும் பல்வேறு துயருறுவோர்களின்மீது நம்பவியலாத அளவிற்குக் கொடுமைப்படுத்தியமை வெளிவரத் தொடங்கிற்று. இக்கொடுமைகள் ஜெர்மனியில் மிக அதிகமாயிருந்தன. ஆனுல், இவை ஜப்பானிலும், சற்றுக் கொடுமைக் குறைவாக இத்தாலியிலும் பிறவிடங்களிலும் காணப்பட்டன. எல்லாப் போர்களிலும், கைதிகளைக்கொடுமையாக நடத்தியதாக ஒவ்வொரு கட்சியும் மற்றதைக் குற்றஞ் சாட்டியது. ஆனுல் ஜெர்மனியிலிருந்து வெளியானவை, மற்றக் காலங்களிற் கூறப்பட்ட குற்றச் சாட்டுதல்களையெல்லாம் கடந்தனவாயிருந்தன. இவ்வாறு துன்புறுத்தப் பட்டவர்கள், சில தருணங்களில், நாஸி ஆட்சிக்குப் பேரிடராயிருந்தவர்களாவார்கள் : ஆனுல் ஹிட்லர் அவரது மிகக் கொடியதும், அறிவற்றதுமான, பேய்ப் போதனையைக் கொண்டு, 'யூதர்கள் மனிதவினத்தைச் சார்ந்தவர்களல்லர்; நற்செயல் புரியும் தகுதியற்றவர்கள்; மனித இனத்திற்கு, சிறப்பாக ஜெர்மனிக்குப் பகைவர்கள்,' என்று அறிவித்திருந்தார். எனவே, அவர்கள் தனித்து வைக்கப்பட்டிருந்த சிறைகளில், நாஸி ஆட்சிக்கு ஏதாவதொரு காரணத்தைக் கொண்டு பகைவராகக் கருதப்பட்டவர்களுடன் அடைத்து வைக்கப்பட்டார்கள். ஜெர்மானியர் மீது கூறப்படும் குற்றச்சாட்டுக்கள் மிகைபடக் கூறப்பட்டனவாயும், சில உண்மையல்லாதனவாயும் நம்பவேண்டியுள்ளன. ஆனுல், போருக்கு முன்னர், நடத்துவதற்கியலாதனவாயிருந்த—இப்பொழுது கொடுந்துயர்செய்யப்படுவன போன்ற கொடுமைகள், மொத்தமாகக் கொலை செய்தல் முதலியவை பேரளவு நடந்தன என்பதை உணர்த்தத் தேவையானவையுள்ளன. இக்கொடுமைகளுக்குப் பலியானவர்கள் இலட்சக் கணக்காயிருந்தார்கள். பெல்சனிலும் மற்றவிடங்களிலுமிருந்து வெளியானவற்றின் பயன்கள், மக்களின் கற்பனை

யிலும் கருத்திலும் ஜப்பானில் வீசப்பட்ட அணுக்குண்டுகளினுல் உண்டானதைப் போன்று, சிறந்த விளைவைக் கொண்டிருந்தன.

## 1918ம், 1945ம்

போரின் பெருஞ்சோர்வு அளவிட முடியாததாயிருந்தது. நாடுகள், மனிதரின் இழப்பு, செல்வம் வற்றுதல், பலவிதமான சொத்துக்களின் சேதம் முதலியவைகளைப் பெருந்துன்பத்துடன் தாங்கின. இறுதியாக வெற்றி ஏற்பட்ட பொழுது, துன்பந்தவிர்த்த உணர்ச்சியும் மிகப் பெரிதாயிருந்தது. ஆனுல் 1918 - ல் முதல் உலகப் போருக்குப் பின் காணப்பெற்ற மகிழ்ச்சியைப் போல எதுவும் எங்குமிருக்கவில்லை. அப்பொழுது 'போர்', போரை அழிக்கும் என்னும் நம்பிக்கையிருந்தது. அப்பொழுது, போரில் காணப்பட்ட மனவெழுச்சிகளை மறக்கவும், பன்னுட்டு மக்களிடையே மனிதவொற்றுமை, அமைதி நிறைந்த கூட்டுறவு முதலியவை கொண்ட காலத்தை எதிர்நோக்கவும் பொதுவான முன்னேற்பாடிருந்தது. ஆனுல், இப்போது 1918 - ன் கனவுகள் பொய்த்தன என்பது எல்லோருடைய மனத்திலுமிருந்தது. அணுக்குண்டால் விளைவிக்கப்பட்ட சேதத்தைப்பற்றிக் கதைகள், இதற்குமுன் ஒருபொழுதும் அறியப்படாத அளவிற்கு மனிதவினத்தின் எதிர்காலத்தைப்பற்றி ஐயங்களைத் தோற்றுவித்தன. சிறைக்கூடங்களில் நடந்த கொடுமைகள், மனிதவியல்பு எவ்வளவு மோசமாகக் கூடுமென்பதைக்காட்டியதுடன், அதற்கு முந்திய காலத்து மனிதப்பற்றுக் கோட்பாட்டை அழிக்கவும் துணை செய்தது. 'மனிதத் தன்மை நாம் நினைத்ததுபோலில்லை என்பதுடன், நாம் கருதியது போல நல்லதாயுமில்லை,' என ஓர் எழுத்தாளர் கூறினர்.

## புதிய கருத்துக்கள்

புது ஊழ்ப்பிரிவின் வாயிலில் நாம் இருப்பதாகவும், நாகரிகம், ரோமப் பேரரசின் வீழ்ச்சி, அன்று இடைக்காலத்தின் இறுதி இவற்ருல் குறிப்பிடப்பட்ட முக்கியமான திரும்பு கட்டத்தில் உள்ளதாயும் பொதுவாகக் கருதப்படுகின்றன. தேர்ந்து பயிலாத விளைவுகளைக் கொண்டுள்ள புதிய ஆற்றல்கள் தோன்றியுள்ளன ; தோன்றிக் கொண்டுமிருக்கின்றன. மனிதனின் அடிப்படைக் கருத்துக்களில் பெருமாற்றங்கள் உள்ளன. எப்பொழுதுமிருந்ததைவிட நாட்டுணர்ச்சி கடுமையாயும் பொறுமையற்றதாயும் உள்ளது ; ஆனுல், சுதந்தரமான அரசு இனி அமையாது. நாகரிமும் வளமும், ஒருதனி அரசு அல்லது ஒரு கண்டத்தின் முயற்சிகளைச் சார்ந்தனவல்ல. கீழ்மையான குடியேற்றங்களும் நாளடைவில் உலகச் சமுதாய அமைப்பைச் (World order) சார்ந்திருக்குமென்பது தெளிவாயுள்ளது.

நவீன அரசியல், தன் நோக்கம், எல்லை முதலியவற்றில் பன்னுட்டைச் சார்ந்ததாயும் முழு மொத்தமாயும் வளரும்பொழுது, மக்களின் வரலாற்றைப்பற்றிய கருத்தும் தனிப்பட்ட அரசின் செயல்களை மேம் படுத்துவதாயிருப்பதுடன், மனிதன் முழுமையான முதிர்ச்சி பெறுதல் நிலைத்திருக்கக் கூடிய அமைப்பை அடைவதற்குத் தட்டுத்தடுமாறித் தேடிச் செல்லுதல், மனிதன் பெற்ற சிறந்தனவும் வியக்கத்தக்கனவு மான சாதனைகளையும் பேரழிவைக்கொண்ட பலதோல்விகளையும் மிகுதியாக நோக்குகிறது. மனித இனத்தைத் தனிப்படுத்தித் தொழு தற்கான ஹிட்லரின் முயற்சிகள் தீய அறிவின் விளைவுகளை உண்டு பண்ணியதுடன், பதிவு செய்யப்பெற்றுள்ள மனித வரலாற்றில் இணையற்ற தேசியப் பேரழிவையும் விளைவித்தன. அரசியலும் போரும், கற்கவேண்டிய வரலாற்றை எவ்விதத்திலும் நிரப்பா என்பது தெளிவாயிற்று. வளைமுகட்டிற்குக் கருத்தின் வரலாறு நடுக்கல்லா யுள்ளது. நாட்டைத்தொழுதலினுல் விளைந்த கொலை கொடுமைகளி லிருந்து மனிதஇனம் ஊழ்களை நோக்கி முன்னேறுவதற்கு வழி காட்டச் சமயத்தின் உரிமைகள் ஆதரவு பெற்றன. 'தனக்கும் மேலாகத் தன்னுடைய பண்பை நிமிர்ந்து நிற்கச் செய்யாத வரை, மனிதன் எவ்வளவு சிறுமைப்பட்டவனுயிருக்கிருன்!' என்ற பழைய, கவிஞரின் கூற்று, புதுப்பொருளைக் கொண்டதாயிற்று.

## விஞ்ஞானமும் புதுப்புனைவுச் செயல்களும்

விஞ்ஞானமும், புதுப்புனைவுச் செயல்களும் போரில் பேராதிக்கம் கொண்டிருந்தன. இயற்கைச் சத்திகளின்மீது மனிதன் கொண் டிருந்த ஆட்சி இதற்குமுன் அவ்வளவு தெளிவாயில்லை. வாட்டர்லூச் சண்டையின் போர் முறைகள், டிராய் முற்றுகையின் முறைகளைப் போன்று தொலைவானவையாய்த் தோன்றின. இப்புதிய காலத்தின் சிறப்புக் கூறு வளி வெற்றியேயாகும். காற்றடைக்கப்பெற்ற ஸெப் ளின்கள் முழுமையாக மறைந்து போயின. அவை மீட்டும் தோன்றுவ தற்கு ஊழ் கூட்டாது போலும்! ஆனல், இதுவரை கனவு காணுதவாறு பேரளவிற்கு வெற்றியாக வானூர்திகள் பயன்படுத்தப்பெற்றன. இரு சாராரிடமும் வானூர்திகள் பத்தாயிரக்கணக்கிலிருந்தன. அவற்றின் வேகமும் மிக அதிகமாயிற்று. அமெரிக்கா, ஐரோப்பாவிலிருந்து சில மணி நேரத்திற் சென்றடையக்கூடியதாயிற்று. இரண்டு அல்லது மூன்று நாள்களில் உலகில் நெடுந்தொலைவிலுள்ள எல்லைகளையும் அடையக்கூடிய வசதி ஏற்பட்டது. இவ் வளர்ச்சிகளெல்லாம் மனிதனின் உயிர், செல்வம் முதலியவற்றை அழிப்பதையே நோக்க மாகக் கொண்டிருந்தன; ஆனல், இவை உலக மக்களின் பொதுநிலை யான வாழ்வில் மிகப்பெரிய பயனையளிப்பதற்காக ஊழ் கூட்டியது என்பது தெளிவாயுள்ளது.

## அணுக்குண்டு

போர் நடந்தபோது வானூர்தி எங்கும் வெடிகுண்டுடன் இணைக்கப்பட்டிருந்தது. இறுதிவரை இவை மிக அதிகமாக வளர்ந்ததுடன், கடுந்திறமையுள்ளனவாயுமிருந்தன. பழையமாதிரி வெடிகுண்டுகளாலேயே ஜெர்மனி அழிக்கப்பட்டதுடன், ஜப்பானியக் கடற்படையும் பசிபிக்குமாக் கடலிலிருந்து விரட்டப்பட்டது. பின்னர்ப் போரின் இறுதிவேளைகளில், அணுக்குண்டெனும் அருநிகழ்ச்சி ஏற்பட்டது. இஃது உடனே போரில் திடீர்ப்புரட்சியைச் செய்யவல்லது என்பது உறுதியாயிற்று. அணுக்குண்டுகள், படைகள், கடற்படைகள், அரண்கள் முதலியவை வெளிவரும் பொழுதே ஒரே தாக்குதலில் நகரங்களை முழுமையாக அழிக்கக்கூடியவை. இப்புதிய வெடிகுண்டை எதிர்த்துத் தங்கள் இயல்பை முற்றிலும் மாற்றிக்கொள்ள வேண்டும். இப்புதிய ஆற்றல் வளர்ச்சியுறும் என்பது உறுதியானது. அதனுடன் இதை ஓர் அரசோ அல்லது அரசுகளின் கூட்டமோ இரகசியமாக வைத்துக்கொள்ள இயலாது. விஞ்ஞானிகள்—'அணுவைப் பிளப்பது' என்பதைச் சரியாக முன்னறிந்துரைத்ததோடு, புதியதான இந்த அழிக்கும் சக்தியைத் தோற்றுவித்ததால், இதன் பயனைப்பற்றிக் கேட்டறிந்துகொள்வதற்கு உரிமை பெற்றுள்ளவர்கள்—இவ்வணுக் குண்டுகளைச் சமாதானமேற்பட்டதும் தொழிற்சாலைகளின் செய்முறைகட்கும் சூழ்நிலைக்கேற்றவாறு பயன்படுத்திக்கொள்ள இயலும் என்றும், இவை நிலக்கரி, பெட்ரோல் என்பனவற்றுக்குப் பதிலாகப் பயன்படக் கூடுமென்றும் உரிமை பாராட்டுகிறார்கள். எதிர்காலமெனும் மூடுபனியில் மறைந்துள்ள புதிய உலகம் வெளிவருவதை அக்கறையுடன் நாம் நோக்குகிறோம்.

## புதிய காலம்

பொருளாதார, தொழில்சார்ந்த நிறுவனங்களில் பெருமாறுதல்கள் தோன்றியுள்ளன; தோன்றவுமிருக்கின்றன. கிரேட்பிரிட்டனுக்குப் பெரிதளவு செல்வத்தையும் வளத்தையுமளித்த பழைய தனியுரிமைக் கொள்கை, காரணங்காட்டி வாதமிடுவதைவிட, நிகழ்ச்சிகளின் சத்திகளினாலேயே தோல்வியடைந்துள்ளது. 'நாமெல்லோரும் மற்றொன்றின் ஒன்றான பகுதிகள்,' என்னும் கூற்று, புதியதும் முக்கியமானதுமான பொருளை ஏற்றுக்கொண்டுள்ளது. ரஷ்யாவின் பொதுவுடைமைக் கொள்கை, அரசியல் வல்லுநர்களின் கருத்துக்களில் ஆதிக்கம் பெற்றுள்ளதுடன் செய்முறையில் விரைவான மாறுதலையும் அடைந்து வருகிறது. மனித இனத்தின் பொருளாதார வாழ்க்கை தங்கத்தை அதன் அடிப்படையாகக் கொண்டு அமையும் என்பது இனியில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டினிறுதியிலுங்கூட மனிதனின் பொரு

ளாதார வாழ்க்கைக்கு வேறெந்த அடிப்படையும் இயலுமெனத் தோன்ற வில்லை; ஆனால், இப்பொழுது உலகின் பெரிய நாடுகள் எல்லாம், 'பொன் நாணயத்திட்டத்தைக் கைவிட்டுக்' காகிதச் செலாவணித் திட்டத்தை மேற்கொண்டுள்ளன. அமெரிக்க ஐக்கிய நாடுகள், விலை யுயர்ந்த உலோகம் என்று வழக்கமாக வழங்கப்படுவதன் மிகப்பெரிய திரளைக் கொண்டுள்ளன. ஆனால், அந்நாடுகளின் மக்கள் அதைப் புதைத்துவிட்டார்கள். அவர்கள் செலாவணியை அதன் அடிப்படையில் கொள்ளுவதைக் கருத்தில் கொள்ளவில்லை.

## புதிய கருத்துக்கள்

விரைவாக ஏற்பட்டதும், அடிப்படையைப் பற்றியதுமான மாறுத லுடன், ஒழுக்கம் சட்டம் முதலியவைகளைப்பற்றிய பழைய கருத்துக்கள் தளர்வுறுதலும் தவிர்க்க முடியாததாகிவிட்டது. இரண்டாம் உலகப் போரினிறுதியில், பாழடைந்த உலகில் வெற்றி பெற்ற விஞ்ஞானம் அந்நிலையின் சுருக்கமாகத் தோன்றியது.

போரின் தொடக்கத்திலிருந்தே எதிர்காலத்தைப்பற்றிய சிந்தனை, அரசியல் வல்லுநர்களின் மனத்திற் குடிகொண்டிருந்தது. ஹிட்லர் நாஸிகளின் ஆட்சி ஓராயிரமாண்டுகள் நீடித்திருக்குமென அறிவித் தார். ஜெர்மன் இடரைத் தோற்கடித்த பொழுது, உலக ஆட்சிபற்றிய முறையின் சுருக்கத்தையாவது சிந்திப்பது அவசரமாயிருந்தது. முதலில், கிரேட்பிரிட்டன், அதன் வாழ்விற்காகப் போரிடுவதில் அதிகம் முனைந்திருந்ததால், போரின் பிற்காலத்துக்குரிய பிரச்சினைகள் பற்றிய செய்வினைச் சிந்தனைகளில் அதிகமாகக் கவனத்தைச் செலுத்த இயலாமலிருந்தது. ஆனால், ஐக்கிய நாடுகளும் போரில் கலந்து நல்விளைவுகளை உறுதிப்படுத்திய பொழுது, போரின் அவசரத் தேவை களையும், போருக்குப்பின் ஏற்படவேண்டிய திட்டத்தையும் பற்றிக் கருதுவது நிகழக்கூடியதாயிருந்தது. வின்ஸ்டன் சர்ச்சிலினுடைய செய்வினைகளின் சிறப்புக்கூறு, அடிக்கடி வானவூர்திப் பயணத்தால் சென்றடைந்தனவும் நெடுந்தொலைவிலுள்ளனவுமான இடங்களில், பெரிய நேசநாடுகளின் பிரதிநிதிகளைக் கொண்ட கூட்டங்களை ஏற்படுத்தியதாகும்.

## அட்லான்டிக்கு உரிமைப் பத்திரம்

இவ்வாறு கூட்டப்பெற்ற கூட்டங்களில், அட்லான்டிக்கு மாக் கடலின் மேற்குப் பகுதியில் 1941, ஆகஸ்டு ஜனாதிபதி ரூஸ்வெல்டுடன் கூட்டிய கூட்டம் மிகவும் முக்கியமானது. இக்கூட்டத்தின் விளைவு களில் அட்லான்டிக்கு உரிமைப் பத்திரம் எந்நிலையிலும் எல்லா நாடுக ளாலும் பின்பற்ற வேண்டியதென இங்கிலாந்து, அமெரிக்கா நாடு

களின் தலைசிறந்த அரசியல் வல்லுநர்களால் கருதப்பெற்ற கொள்கையின் அறிக்கையை எழுதியது ஒன்ருகும். அவர்கள் இக்கொள்கைகளை மனித இனத்தின் அடிப்படைக் கொள்கைகளாகக் கருதினர்கள். கருத்துச் சுதந்தரம், வழிபாட்டுச் சுதந்தரம், வறுமையின்றி வாழச் சுதந்தரம், அச்சமின்றி வாழச் சுதந்தரம் ஆகியவை இதில் அடங்கியிருந்தன. இஃது உயர்ந்த உரிமைப் பத்திரமாகும். ஆனல், இஃது எவ்வாறு நிறைவேற்றப்படவேண்டும் எனும் முறைபற்றிச் சுட்டிக்காட்டுதல் இதிலில்லை. வெற்றி உறுதியெனும் நம்பிக்கை வளர்ந்தபொழுது மேலும் கூட்டங்கள் கூடின. 1945, ஜூன் திங்களில்சான்பிரான்சிஸ்கோவில் எல்லா நேசநாடுகளின் பிரதிநிதிகளுமடங்கிய கூட்டம் மிகச் சிறப்பானது. இதில் ஐம்பது நாடுகள் பங்குகொண்டன. இக்கூட்டத்திலிருந்துதான் சருவதேச சங்கம் ஒப்பந்தத்தின் பிரதியாயமைந்துள்ள 'ஐக்கிய நாடுகளின் உரிமைப் பத்திரம்' வெளிவந்தது.

## ஐக்கிய நாடுகளின் உரிமைப் பத்திரம்

இப்புதிய உரிமைப் பத்திரம் பழைய ஒப்பந்தத்தை யொட்டித் தொடர்வதாய் இருந்தது. சருவதேச சங்கத்தின் தோல்வி தெளிவாயும் முழுமையாயுமிருந்தது. உலகில் சமாதானத்தை நிலைபெறச் செய்வது அதன் அடிப்படை நோக்கமாயிருந்தது; மற்ருெரு மிகப் பெரிய போர் வந்தது. சங்கம் சில மேற்கொள்ளுதல்களின்மீது அமைந்திருந்தது. இம்மேற்கொள்ளுதல்கள் உண்மையானவையல்ல என்பது புலனுயிற்று. சங்கம், எல்லா மனிதர்களும் சமாதானத்தில் அக்கறை கொண்டிருந்தனரென்றும், போரை விலக்குவதற்குத் தன்மதிப்புக்கு முரணில்லாத எவ்வித வாய்ப்பையும் விருப்பத்துடன் ஏற்றுக்கொள்வர் என்றும் எண்ணியது. ஆனல், பின்விளைவு போரில் எவ்வாறு எளிதில் மனவெழுச்சி ஆட்சியாளர்களோடு மக்களிடையேயும் கிளர்ச்சியுற்றதென்பதைப் புலப்படுத்தியது. அதனுடன் அது முழு உலகின் கண்டனத்தையெதிர்த்து எந்த நாடும் போர் தொடங்கத் தயங்கும் எனவும் எண்ணியது; ஆனல், ஜெர்மனியும், ஜப்பானும், இத்தாலியும் செருக்குடன் உலகக் கருத்தை எதிர்த்து நின்றதுடன், சங்கத்தின் நோக்கங்கள் முறைகளிலெல்லாம் பங்கு கொள்ளுவதையும் மறுத்தன. வல்லந்தத் தாக்குதலை அடக்குவதற்கு நாடுகள் ஒன்று சேருமெனச் சருவதேச சங்கம் எண்ணியது; ஆனல், அபிசீனியாவில் இத்தாலியின் செயலும், சீனவில் ஜப்பானின் செயலும் சருவதேச சங்கத்தின் கண்டனத்தால் எவ்விதத்திலும் தடை செய்யப்படவில்லை. ஜெர்மனியுடன் சண்டை நிகழவிருந்த பொழுது சங்கத்தின் பெயர்கூடக் குறிப்பிடப்படவில்லை. சங்கம் தோல்வியுற்றதோடல்லாமல், தவருன பாதுகாப்பில் மக்களை

அமைதிப்படுத்துவது வாயிலாகச் சமாதானத்திற்கே உண்மையில் இடரையிருந்ததாகவும் தோன்றியது. சருவதேச சங்கம் என்று ஒன்றிருந்திராவிடில், அபிசீனியாவை இத்தாலி தாக்கியதை ஒரு சமயம் தடை செய்திருக்கக் கூடும்.

## இரண்டு சங்கங்களும்

ஆகையால், ஒரு புதிய உலகமுறை அமைக்கப்படவேண்டிய பொழுது, சருவதேச சங்கத்தின் கொள்கைகளும் முறைகளும் எவ்வித மாறுதலுமின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கதாயிருக்கிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகள், சங்கத்தில் ஒரு பொழுதும் சேரவில்லை; ரஷ்யா, முதலில் அதை முழுமையாகக் கண்டித்தது எனினும், பின்பு அதிற் சேர்ந்துகொண்டது. அப்படியிருந்தும், ரஷ்யாவும் ஐக்கிய நாடுகளின் அரசியல் வல்லுநர்களும் முதன்மையான பங்கெடுத்துக்கொண்ட ஒரு கூட்டம், எதிர்கால உலகின் செயலாட்சிக்காக, கண்டனம் செயய்யப்பட்ட சங்கத்தையொட்டி நெருங்கியதானதொரு திட்டத்தைத் தோற்றுவித்தது.

## புதிய உரிமைப் பத்திரம்

ஒப்பந்தத்திற்கும் உரிமைப் பத்திரத்துக்குமிடையே உண்மையில் வியப்புத்தருகிற மாறுபாடு இருந்தது. ஒப்பந்தம் படைக்குறைப்பைச் செய்யவேண்டிய உலகத்தை எதிர் நோக்கியிருந்தது; படைக் குறைப்பைச் செய்வதில் காணப்பட்ட தோல்வி வெளிப்படையாயிருந்ததுடன், ஜெர்மனியால் கடுமையாகவும் விளக்கம் கூறப்பட்டது. உரிமைப் பத்திரம் போர்க்கருவிகளைக் கொண்ட உலகைப்பற்றி முன்கூட்டியே எண்ணியதுடன், சமாதானத்தை முறித்தவரை வலுக்கட்டாயம் செய்வதற்கு எப்பொழுதும் தயாராயுமிருந்தது.

## உலக அரசு இல்லை

உரிமைப் பத்திரத்தில், உலக அரசை நோக்கி எவ்வித முன்னேற்றமும் இருக்கவில்லை. உலகிலுள்ள எல்லா நாடுகளும் இறைமை வாய்ந்த நாடுகளாயுள்ளன; அதனுடன் போர்க்கருவி தாங்கிய படைகளையும் கொண்டுள்ளன, சருவதேசத்தைச் சார்ந்த போர்க்கருவி தாங்கிய படை இல்லை. பெரும்பான்மைப் போரின் முடிவுகளுக்குக் கீழ்ப்படிவதையும் நாடுகள் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளவில்லை. இரண்டாவது உலகப் போருக்கு வழிசெய்த நாட்டினத்தைச் சார்ந்த உரிமை கொண்டாடுதலில் எவ்விதக் குறைபாடுமில்லை. சருவதேச சங்கத்தின் வரலாறு உறுதியான

வினைவ் எழுப்புகிறது. புதிய நிறுவனத்தின் விருப்பங்களுக்குக் கீழ்ப்படி தலைக் கட்டாயப்படுத்துவதற்கு வலுவுள்ளதும், விருப்பம் கொண்டது மான சத்தி அல்லது கீழ்ப்படியும்படி செய்யப்பட்டால் எதிர்ப்பைக் கட்டாயப்படுத்தக் கூடியதான சத்தி ஏதாவது உள்ளதா? இவ்வினு விற்கு உறுதியான விடையளிப்பது கடினமானது.

இப்புதிய நிறுவனத்தின் முக்கியமான மூலக் கூறுகள் பின் வருவன :

## பொதுச்சபை

பொதுச்சபை, ஐக்கிய நாடுகளைச் சேர்ந்த எல்லா நாடுகளின் பிரதிநிதிகளையும் கொண்டது. புதிய உறுப்பினர்கள், பொதுப் பாதுகாப்பு மன்றத்தின் பரிந்துரைத்தலுடன் பொதுச் சபையிற் சேர்த்துக்கொள்ளப்படுகிருர்கள். முடிவுகள், மூன்றிலிரண்டு பங்கு கொண்ட பெரும்பான்மை வாக்களிப்பினுற் செய்யப்படுகின்றன.

## பாதுகாப்பு மன்றம்

பாதுகாப்பு மன்றம் புதிய திட்டத்தின் சாரமான பகுதியாகும். இதன் பொறுப்பு, சமாதானத்தைப் பாதுகாப்பதாயுள்ளது. இடை விடாது இது வேலை செய்து வருகிறது. இதில் நிலையான உறுப்புக் களான சீனு, பிரான்சு, ரஷ்யா, கிரேட் பிரிட்டன், ஐக்கிய நாடுகள் என்பவற்றின் பிரதிநிதிகளும் ஈராண்டுகள் பதவியிலிருப்பவர்களான ஆறு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினருமாக, பதினுேர் உறுப்பினர் உள்ளனர். இருபத்தேழாவது விதியில் பழைய பட்டறிவு மிக முக்கியமானதென எடுத்துக் காட்டிய சொற்கள் காணப்படுகின்றன; 'பாதுகாப்பு மன்றத்தின் முடிவுகள் நிலையான உறுப்பினர்களுடைய ஒத்தியங்கு வாக்களிப்புக்களைச் சேர்த்து ஏழு உறுப்பினர்களின் வாக்களிப்புடன் உடன்பாடாகச் செய்யப்படுவதாகும்.' இச்சொற்களை மீண்டும் பார்ப்போம்.

பன்னுட்டு அடிப்படையில் போர்க்கருவி தாங்கிய படை இல்லை. ஐக்கிய நாடுகளின் எல்லா உறுப்பினரும் மன்றத்தினிடம், வல்லந்தச் செயலையுடைய எவ்வரசையும் கட்டாயப்படுத்துவதற்கு எது தேவையோ அதை ஒப்படைக்கும்படி எதிர் பார்க்கப்பட்டனர். தாக்குதலை எதிர்க்கத் தனிப்பட்ட நாட்டின் உரிமை சிறப்பாகக் கட்டுப்பாட்டுடன் ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறது.

பொருளாதார, சமூக மன்றங்களைத் தோற்றுவிப்பதற்கும், சங்கத்தின் ஒப்பந்தத்தில் காணப்பட்டவைகளின் சிறந்த

முன்னேற்றங் கொண்டதாயிருந்ததும் தன்னாட்சியை மேற்கொள்ளுவதற்குத் தகுதியற்றதாயிருந்த பகுதிகளுக்குத் தருமகர்த்தா ஆட்சி முறை செய்யவும், கடைசியாகச் சருவதேச நீதிமன்றம் அமைப்பதற்கு மான விதிகள் தொடர்ந்துள்ளன.

இத்தகைய திட்டம் சான்பிரான்சிஸ்கோவில் விரிவுபடுத்தப் பெற்றது. அச்சமும் நம்பிக்கையும், உலகை அதன் நற்பேறுகளை அக்கறையுடனும் நல்லெண்ணத்துடனும் பின்பற்றுமாறு செய்கின்றன. உண்மையான அதிகாரம் ஐந்து சிறந்த வல்லரசுகளிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் உடன்படுவார்களானால், மனித இனத்தின் ஊழை நலன் கருதி அவர்கள் கட்டுப்படுத்த இயலும். அவர்களுக்குள் உடன்பாடில்லாதுபோனால், நிறுவனம் கலைந்துபோகும் இடரிலிருக்கும். மேலே குறிப்பிடப்பட்ட இருபத்தேழாம் விதி, ஐம்பேரரசுகளிடையே உடன்பாடில்லாமற் போனால், உரிமைப்பத்திரமாகும் பொறி இயக்கும் கருவிகளினின்றும் ஒன்றும் செய்ய முடியாதவாறு கழன்றுவிடும் எனத் தெளிவுறுத்துகிறது. எனினும், பெயர் குறிப்பிடப்பட்டுள்ள வல்லரசுகளுக்கிடையே உடன்பாடு ஏற்படாததற்குத் தெளிவான காரணங்கள் பல இருக்கின்றன.

## IX

## 1946-ன் எதிர்காலம்

எதிர்காலம் எப்பொழுதுமே ஒரு புதிர் போன்றுள்ளது. கிரீஸும் ரோமும் எதிர்காலத்தை எவ்விதவெற்றியைக் கொண்டும் மதிப்பிடவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டிலுங்கூட மெய்விளக்கத்துறை வல்லுநர்களாலும், நினைவாளர்களாலும் நம்பிக்கையுடன் சமுதாய விவகாரங்களில் முன்னறிவிப்பாய்க் கூறப்பட்டவைகள், வரலாற்றின் பட்டறிவின் ஆதரவு பெற்றவைகளாயில்லை. அரசு அதன் செயற் பண்புகளிற் பெரும்பகுதியை இழந்துவிடுமென்றும், எதிர்காலத்தில் தனிப்பட்டவர்களின் தானாக இயங்கும் செயல், ஆட்சியின் முக்கியச் செயலாண்மையாயிருக்குமென்றும் ஹெர்பர்ட்டு ஸ்பென்சர் நம்பிக்கை கொண்டிருந்தார்; ஆனால், அரசின் எல்லை மிகப்பெரிதாக விரிவடைந்திருப்பது இன்றைய பெரிய உண்மையாயுள்ளது. அகஸ்டே காம்டே என்பார், முக்கியமான கட்டுப்பாடு புதிய சமயத்தின்பாற்பட்டதாயிருக்கக் கூடிய உலகை எதிர்நோக்கினார்; ஆனால், இதைப்பற்றிய எந்த அடையாளமும் காணப்படவில்லை. கார்ல்மார்ஸின் போதனைகள் பெரிதளவிற்குச் சோவியத்து ரஷ்யாவில் பின்பற்றப்பட்டுள்ளன; ஆனால், அவர் கருதியவாறு உலகம் முன்னேறவில்லை. கார்லைல் பல நூற்றாண்டு வரை, ஐரோப்பாவைச் சமாதானத்துடனிருக்க பிஸ்மார்க் தோற்று

வித்த ஜெர்மனியின் வாழ்க்கைக் குறிக்கோளாயிருக்கும் என்று எண்ணினர்; இப்பொழுது மிகப்பெரிய ஐரோப்பாவின் போர்களை விளைவித்ததாக ஜெர்மனி குற்றஞ்சாட்டப்பட்டு இகழ்ந்துரைக்கப்படுகிறது.

அமெரிக்க ஐக்கிய நாடு, அதிகாரத்திலும் செல்வாக்கிலும் மிகப் பெரியதாய் வளர்ந்துள்ளது; ரோமப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் மிகச் சிறந்த வல்லரசாயுமுள்ளது. ஆனால், தன் வடிவமைப்பு உலகில் ஏனையோரால் பின்பற்றக் கூடியதாகத் தோன்றவில்லை யாதலால், விரைவாக மாறுதலைக் கொள்ளும் நடவடிக்கையிலுள்ளது. ஆனால், இன்றைய உலகின் கண்கள், இதற்கு முன்பிருந்ததைக் காட்டிலும் முனைப்பாக எதிர்காலத்தை நோக்கியுள்ளன; எதிர்காலம் பழைமையுடன் பிரிக்க இயலாதவாறு இணைக்கப்பட்டுள்ளது. 'வரலாற்று ஒற்றுமை' என்னும் சொற்றொடர், முதன்முதலாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் எப்பொருளைக் குறிப்பதாகக் கொள்ளப் பட்டதோ, அதைவிட விரிந்ததும் முக்கியமானதுமான பொருளைப் பெற்றுள்ளது.

பழைய வரலாற்றைத் தெரிந்துகொள்வதற்கு, எதிர்காலத்திற்கு அது மரபுரிமையாக விட்டுச்சென்ற பிரச்சினைகளை நோக்குவது பயனுடையதாகிறது. விடையை உரிமையுடன் கோரும் முக்கியப் பிரச்சினை பற்றி விரைவாகவும் விளக்கமாகவும் எல்லையளவைக் காண்போம்.

## கிரேட் பிரிட்டன்

போரின் கடைசி மாதங்களில், கிரேட் பிரிட்டனுடைய துரைத் தனத்தில் தனிச் சிறப்பிற்குரிய மாறுதலேற்பட்டது. வின்ஸ்டன் சர்ச்சில், போரின் நெருக்கடியின் போது, காமன்ஸ் சபையிலிருந்த மூன்று கட்சிகளிலுமிருந்து உருவாக்கப்பெற்ற அமைச்சர் குழுவின் துணை கொண்டு, நாட்டின் கொள்கையை நடத்தினர். வெற்றியேற் படுவது தெளிவான போது, நெடுநாளாகத் தள்ளி வைக்கப்பட்டிருந்த தேர்தல் நடத்தப்பெற்றது. இத்தேர்தலின் விளைவைப்பற்றி முன்னறிவிக்கக் கூடிய ஆற்றலில் நம்பிக்கை கொண்டவர்களில்லை. போரை நடத்துவதில், மக்களின் நன்மதிப்பைச் சர்ச்சில் பெற்றிருந்தா ரென்பதில் ஐயமில்லை; அதற்காக அவரிடம் காண்பிக்கப்பட்ட நன்றி யறிதல், அவர் பணிமுறைப்படி தொடர்பு கொண்டிருந்த பழமை வாதக் கட்சிக்கு (Conservative party) அப்பாலும் மிகுதியாயிருந்தது. மற்றொரு புறத்தில், மக்களுட் பெரும்பகுதியினர் தீவிரமான பல சீர்திருத்தங்களை உரிமையுடன் கோரினர் என்பதும், இவற்றை ஆதரவின்றிக் கருதினர் என்பதும் நன்கு தெரிந்தவை. எனவே,

தேர்தல் இங்கிலாந்தின் வரலாற்றில் வியக்கத்தக்க முக்கியம் கொண்டதாயிருந்தது. தேர்தல், தொழிற்கட்சிக்கு மிக்க பெரும்பான்மையை அளித்தது. அட்லி என்பார் பிரதமராஞர்.

இப்புதிய அரசாங்கம் உடனே உள்நாட்டு, வெளிநாட்டு விவகாரங்களில் தொடர்பான பெரிய சீர்திருத்தங்களைச் செய்வதிலிறங்கியது. இத்துரைத்தனம் பொதுவுடைமைக் கொள்கையைக் கொண்டிருந்தது; ஆனல், இக்கொள்கை, மாஸ்கோவின் பொதுவுடைமைக் கொள்கையை எவ்விதத்திலும் ஒத்திருக்கவில்லை. அரசாங்கம் அட்லான்டிக்கு உரிமைப் பத்திரத்தின் அவாக்களை இங்கிலாந்தில் கைவரப் பெறுவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. இங்கிலாந்து தலைமை தாங்கி, சுரங்கங்கள், மருத்துவப் பணித்துறை போன்ற பொது வாழ்வின் பெருந்துறைகளிலும் தொடர்ச்சியான நடவடிக்கையெடுப்பது வாயிலாக வறுமையை நாட்டிலிருந்து அறவே ஒழிக்க வேண்டுமெனக் கருதியிருந்தது. கிரேட் பிரிட்டனுடைய வெளிநாட்டுக் கொள்கைக்காக வகுக்கப் பெற்றிருந்த நிகழ்ச்சிநிரல் மேலும் முக்கியத்துவம் வாய்ந்ததாயிருந்தது. கிரேட் பிரிட்டன், எளிய நாடுகளின்மீது தன் விருப்பத்தைச் சுமத்த விருப்புக் கொண்டிருந்தது என்னும் பொருள்படும் 'ஏகாதிபத்திய'மாயிருந்ததெனும் குற்றம் அடியோடு அகற்றப்பட வேண்டியதாயிருந்தது. அரை நூற்றுண்டுக்காலமாகவே, பிரிட்டிஷ் படைகளை எகிப்திலிருந்து திரும்பப் பெறவேண்டுமென்று வாக்குறுதியளிக்கப்பட்டிருந்தது, இப்பொழுது உண்மையாகச் செய்யப்பட வேண்டியதாயிற்று. மிகச் சிறந்ததாக முழுச் சுதந்திரம் அளிக்கக்கூடிய துரைத்தனத்தைத் தானகவே அமைத்துக் கொள்ளுவதற்கு இந்தியாவிற்கு ஊக்கமளிக்க வேண்டும். தனிச் சிறப்பிற்குரிய அல்லது மிகக்கடினமான முடிவு காண்பதை வரலாறு இதற்குமுன் கண்டதில்லை.

## அமெரிக்க ஐக்கிய அரசுகள்

ஐரோப்பிய வரலாறு, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வளர்ச்சியைப் பற்றிச் சுருக்கிக் கூறுவதற்கு முயலக்கூடாது. ஆனல், புதிய ஊழிப் பிரிவின் அரசியலில், உலக அரசியலில் முழுமனத்துடன் தானகவே வெளிப்படையாக அஃது ஈடுபட்டிருக்கிறது என்றகூறு முக்கியமானதாயிருக்கும் எனலாம். பாலஸ்தீனத்தில் யூதர்களின் பிரச்சினையை ஆராய்வதில் கிரேட் பிரிட்டனுடன் சேர்ந்து, யூதர்களையும், அராபியர்களையும் மனநிறைவு கொள்ளும் நோக்கத்தைக் கொண்டதான புதியதோர் ஏற்பாட்டைத் தோற்றுவித்துள்ளதென்பதை நாம் குறிப்பிடலாம். எதிர்காலத்தில், யூதர்களின் பிரச்சினையைச் சார்ந்தவைகளைக் காட்டிலும், வேறெந்தப் பிரச்சினையும் நுணுகி ஆராய்வதற்கு அவ்வளவு கடினமுள்ளதாயில்லை.

## பிரான்சு

பிரான்சு, எவ்வாறு பேரவமானத்திலிருந்து தன் சுதந்தரத்தை மீட்டும் பெற உயிர்த்தெழுந்ததுடன், ஐக்கியநாடுகளின் ஸ்தாபனம் அமைவதற்கு இசைவளித்த ஐந்து வல்லரசுகளிலொன்ருக அதன் தகுதி ஏற்றுக்கொள்ளப்பட்டதென்பதையும் கண்டோம். பிரான்சு, ஜெர்மனியுடன் ஒத்துழைத்த அரசியல் வல்லுநர்களைத் தண்டித்தது மிக முதிர்ந்த வயதினரான பிடெயின், எஞ்சிய வாழ்நாளைக் கழிக்கச் சிறைக்கனுப்பப்பட்டார். அவருக்குச் செய்வினை நிறைந்த பகராளாயிருந்த லவால் என்பவர், சுட்டுக் கொலைசெய்யப்பட்டார். பிரெஞ்சு உரிமையை மீட்டும் உயிர்ப்பித்தலில் டிகாலின் பணியைப் பொதுவாக ஏற்றுக்கொண்டது என்ருலும், நாட்டின் புது வாழ்வை அமைப்பதற்குத் தலைவராக அவரை ஏற்றுக்கொள்ள மறுத்தது.

புதிய அரசியலமைப்பைத் தொகுக்க அரசியல் நிர்ணயசபை கூட்டப்பட்டது. மூன்ரும் குடியரசுத்திட்டத்தில் காணப்பட்ட குறைகள் பொதுவாக அறியப்பட்டிருந்தன. ஆனல், எவற்றில் சீர்திருத்தஞ் செய்யப்படவேண்டுமென்பது பற்றிய கருத்து வேற்றுமை மிக அதிகமாயிருந்தது. அரசியலமைப்பு ஒன்று தொடுக்கப்பெற்று, மக்களின் வாக்களிப்பிற்கு அனுப்பப்பட்ட பொழுது, உறுதியாக மறுக்கப்பட்டது; வெளிப்படையாக மாஸ்கோவின் கருத்துக்களை மிக ஒத்ததாயிருந்ததாகக் கருதப்பட்டது காரணமாயிருக்கலாம். வலிவுள்ளதும், சுதந்தரம் உடையதுமான பிரான்சின்றி ஐரோப்பியப் பண்பாட்டையும் முன்னேற்றத்தையும் கருதுவதென்பது முடியாது. ஆனல், எதிர்காலமளிக்கும் பிரச்சினைக்கு விடை காண்பதில் ஐரோப்பாவில் வேறெதுவும் இதைவிட மிகக் கடினமானதாயில்லை.

## பெல்ஜியமும் கிரீஸும்

ஐரோப்பாவின் மேற்கிலும் தெற்கிலுமிருந்த சிறிய நாடுகள் அவற்றின் சுதந்தரத்தை மீண்டும் பெற்றுள்ளன. பெரும்பாலன அவற்றின் பழைய ஆட்சி முறைகளையே ஏற்றுக்கொண்டுள்ளன. பெல்ஜியத்தில், போரின்போது மன்னரது செயல் மிகவும் வன்மையாக எதிர்க்கப்பட்டதால், அங்கு முடியாட்சியின் எதிர்காலம் ஐயத்திற்கிடமாயுள்ளது. கிரீஸில், நிலைமை குறிப்பாக மிகக் கடினமாயிருந்தது. கிரீஸ் தொடக்கத்தில் இத்தாலியர்களை எதிர்த்து நிகழ்த்திய சண்டைகளைப்பற்றி முழுமையான பாராட்டுதலையும் பின்பு ஜெர்மனியின் ஆதிக்கத்திஞலுண்டான துன்பங்களைப்பற்றி இரக்கத்தையும் பெற்றிருந்தது. ஆனல், ஐரோப்பாவின் கிழக்கு மேற்குப் பகுதிகளின் கருத்துக்கள் மிகத் தெளிவான முரண்பாடுடையனவாய் இங்கு போல்

வேறெங்கும் இருக்கவில்லை. அமெரிக்கா, கிரேட் பிரிட்டன், பிரான்சு இவற்றின் பாராளுமன்றமுறை அரசாங்கங்களும், சோவியத்து ரஷ்யாவின் ஒரு முனைப்பாக்கப்பெற்ற யதேச்சாதிகாரமும், முரண்பாடுடையனவாயிருந்தன.

இரண்டாம் உலகப் போரெனப்படும் போரில் தோல்வியுற்ற நாடுகளை நோக்கும்பொழுது, தீர்வு காணப்பெருத பல பிரச்சினைகளை மேலும் காண்கிருேம். வெற்றி பெற்ற நாடுகளுடையவும் தோற்கடிக்கப் பட்ட நாடுகளுடையவும் பிரதிநிதிகளுக்கிடையே சமாதான மாநாடு ஏற்படுவதற்கில்லை. 1918-ல் இருந்ததைவிட, மேலும் வெளிப்படையாக வெற்றி பெற்றவர்கள், தோல்வியுற்ற நாடுகளின் ஊழைத் தீர்க்க வேண்டியதாயிருந்தது.

## இத்தாலி

இத்தாலியின் ஒற்றுமை உறுதி செய்யப்பட்டது. அந்நாடு அபிசீனியாவை இழப்பதுடன், குடியேற்றங்களைக் கொண்ட அதன் பேரரசையும் இழக்க நேரிடும்; எவ்வளவு அதனிடம் மிஞ்சியிருக்கும் என்பதுபற்றி உறுதியாகக் கூறமுடியாது. பால்கன் நாடுகளுடன் அது கொண்டுள்ள நிலைமை மிக முக்கியமான பிரச்சினையாயிருந்தது. டைரோலிலும், டிரீயஸ்டீயிலும் அதன் நிலைமை எப்படியிருக்க வேண்டும்? மேற்கு வல்லரசுகளுக்கும் ரஷ்யாவின் நோக்கங்களுக்குமிடையே அங்கு மோதல் ஏற்படுவது இயைபற்றதாயிருந்தது. தீங்கு குறித்த இழப்பீட்டுப் பிரச்சினை ஏற்கெனவே தோற்றுவிக்கப் பட்டிருந்தது. உள்நாட்டில், சிலநேரங்களில் உண்மைப் பட்டினி கிடப்பதற்கொப்பான துயருடன் உயிருக்கு மன்ருட வேண்டியிருந்தது. அதன் எதிர்காலத்துத் துரைத்தன அமைப்பு எவ்விதத்திலும் உறுதி செய்யப்படவில்லை. ஃபாஸிசம் மறைந்தொழிந்ததுடன் அதன் குறிக்கோள்களும் இழித்துரைக்கப்பட்டன. பாராளுமன்ற முறை அரசாங்கத்திற்கு நாடு திரும்பும். அப்படியானல், முடியாட்சி தொடர்ந்திருக்குமா? மன்னர் தம்புதல்வருக்குச் சாதகமாகப் பதவி துறந்தார். மாஸினியின் செல்வாக்கு உயிர்த்தெழுந்துகொண்டிருக்கும் நாட்டில், எத்தன்மையான முடியாட்சியும் நிலைபெற்றிருக்க முடியுமா?

## ஜப்பான்

ஜப்பானின் மறைவு முழுமையாயிற்று. சீனுவிலிருந்தும் கொரியாவிலிருந்தும் அது விரட்டப்பட வேண்டுவதாயிருந்தது. வெற்றி பெறப்படாததாயும் வெற்றி கொள்ள முடியாததாயும் தற்பெருமை பாராட்டிய ஜப்பான், தலைமையாக அமெரிக்கப்படைகளான அந்நியர்

களின் வல்லந்தக் குடிபுகுதலுக்கு அடிபணியலாயிற்று. திறமை, வீரம், மக்களின் கட்டுப்பாடு முதலியவைகளைப்பற்றி எவ்வித ஐயமு மில்லை. ஆசியாவின் கொள்கை, வாழ்க்கை இவற்றின் போக்கில், பெருஞ்செல்வாக்குடையவர்களாக மீண்டும் அவர்கள் எழலாம். ஆனால், எம்முறையிலும் எவ்வழிகளிலும் எழுவார்கள் ?

## ஜெர்மனி

ஜெர்மனி, இப்போருக்கு மூலகாரணமாயிருந்ததுடன் மற்றைய நாடுகளைக்காட்டிலும் துன்புற்றுமிருந்தது. நாடு, நான்கு கைக் கொள்ளும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இப்பகுதிகள், ரஷ்யா, பிரான்சு, கிரேட்பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கட்டுப்பாட்டிற்குட்பட்டிருக்கிறது. ஜெர்மனியை நடத்தும் முறை யிலும், அதைப்பற்றிய கொள்கையிலும், சிறிய பெரிய போர்க் குற்ற வாளிகளின் விசாரணை செய்யப்பட்டதிலிருந்து (இவ்விசாரணைகளில் எல்லாவற்றையும்விட முக்கியமானது நூரம்பர்கில் நடந்தது) வெளிப் படுதல் பேராதிக்கம் கொண்டதாயிருக்கும். மிகப்பெரிய அளவில், விலங்குத்தன்மையுள்ள கொடுமையுடன், உண்மை, மதிப்புப்பற்றிய கடமைகளை மறுத்ததாகவும் குற்றவாளியின்மீது குற்றஞ்சாட்டப் பட்டுள்ளது. குடிபுகுந்துள்ள ஆட்சிகளின் நோக்கம், ஜெர்மனியின் ஒற்றுமை என அறிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், ஜெர்மனியின் மிகப்பெரிய பகுதியைக் கைப்பற்றியுள்ள ரஷ்யாவின் நோக்கத்திற்கும் மற்ற மூன்று அரசுகளுக்கும் உரிய நோக்கத்திற்குமிடையே மிக ஆழமான மாறுபாடு உள்ளது. எவ்வழிகளில் நாடு தன்னாட்சியை நோக்கி அழைத்துச் செல்ல வேண்டும்? நாடுகளின் தோழமைக்குள் மீட்டும் ஒற்றுமையை எவ்வாறு கொண்டு வருவது? காண்ட், பித்தோவன், கிதே, மாம்ஸன் போன்ற பேரறிஞர்களைத் தோற்று வித்த நாடும் மக்களும் மனித இனத்தின் கருவூலத்திற்கு மேலும் தெளிவான சிறந்த பங்காகக் கொடுக்கவேண்டியிருக்கிறது.

தனிப்பட்ட சில நாடுகளைப் பற்றி ஒரு சிலவார்த்தைகளைக் கூறினோம். ஆனால், நமது காலத்தில் ஒப்பற்ற குறியாயுள்ளது, தனிப்பட்ட நாடுகளை மட்டுமல்லாமல், உலகையும் மனிதவினத்தையும் சேர்த்து முழுமையாகக் கருதவேண்டுவதே என்பதை நாம் வற்புறுத்தி யுள்ளோம். வறுமையினால் மெலிந்த உருவம், வற்புறுத்துவதான பிரச்சினையை இங்குத் தோற்றுவிக்கிறது. இதற்கு முன் கண்டிராத அளவிற்கு ஐரோப்பா, வறுமையினால் அச்சுறுத்தப்படுகின்றது. இருபதாண்டுகளுக்கு முன், விலை மதிப்புள்ள வாணிகப் பொருள்களை மிக அதிகமாகப் பெற்றிருந்ததுபோலத் தோன்றியது; பிரச்சினை தெவிட்டாயிருந்ததெனக் கூறப்பட்டது. ஆனால், இப்பொழுது

எத்திசையிலும் பற்றுக்குறையுள்ளதென்பதுடன், மக்களுக்குத் தேவைக்கான உணவு உற்பத்தியைப் போரில் பாழ்படுத்தப்பட்டதும் பிளவுண்டதுமான உலகம் மேற்கொள்ளச் செய்வது பிரச்சினையாயிருந்தது. உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் இந்நிலைமை எதிர் நோக்கப்படுகிறது என்பதுடன் ஐரோப்பாவும், அமெரிக்காவும் மற்றப் பிரச்சினைகளுக்கு முன்னதாக இதை விடுவிப்பதில் ஒற்றுமையாயிருக்கின்றன என்பதையும் அறிவது ஆறுதலளிப்பதாயுள்ளது.

ஐக்கிய நாடுகளின் ஸ்தாபனமும், அதன் பல்வேறு செயலாண்மை நிலையங்களும், உலகம் முழுமைக்கும் நம்பிக்கை யூட்டுவனவாயிருக்கின்றன. இதைப் பற்றி முன்னரே கூறியுள்ளோம். இந்த ஸ்தாபனம் நிறுவப்பட்டவுடனே, ஒருபுறத்தில் ரஷ்யாவிற்கும், மற்றொரு புறத்தில் மேற்கு மக்களாட்சிகட்குமிடையே தோன்றியுள்ள தொல்லைகள் உணர்ச்சியால் பாதிக்கப்படும் கருத்தைச் சார்ந்த நன்னம்பிக்கைக் கோட்பாட்டை இயலாததாகச் செய்துள்ளன எனினும், இவை தொடக்கத்திலிருந்தே ஐ. நா. அ. (U. N. O.) என்னும் இப்புதிய அமைப்பு முறை, வருங்காலத்தில் இம்முதல் எழுத்துக்களால் அறியப்படுவதாயுள்ளது. ஆட்சி முறையில் தொடர்புள்ளவர்கள், அவர்களது பணியின் பருமனையும் தொல்லையையும் ஒருவேளை நன்குணர வேண்டுமென்பதற்குத் துணை செய்வதாயிருக்கலாம். இப்புதிய குழுவின் தலைமைச் செயலகம் அமெரிக்க ஐக்கிய அரசுகளில் இருப்பதாயுள்ளதுடன் இவ்வுண்மை ஐ நா. வின் வெற்றியும் தொடர்ந்து நடைபெறுவதும் ஐக்கிய அரசுகளின் அரசாங்கத்தின் தன்மதிப்புடன் சேர்த்து அடையாளம் காணப் பயன்படுவதாயிருக்கும். ஏற்கெனவே கடுந்தொல்லைகள் இருந்திருக்கின்றன ; இவைகளிலெல்லாம் ரஷ்யாவின் பெயர் தோன்றியுள்ளது. பாரசீகத்திலிருந்து ரஷ்யப் படைகளைத் திரும்பப் பெறுதல் பற்றியும், இத்தாலியின் வடகிழக்கு எல்லையைப் பற்றியும், சிறப்பாக டைரோல், டிரீயஸ்டீ பற்றியும், இத்தாலியின் இழப்பீடுகள், முடிவான ஒப்பந்தத்தை நோக்கிய முறையைப் பற்றியும் கடுஞ்சச்சரவுகள் ஏற்பட்டுள்ளன. இப்பிரச்சினைகளிலெல்லாம் கிரேட் பிரிட்டன், பிரான்சு இவற்றின் வரிசையில் ஐக்கிய அரசு எப்பொழுதும் சேர்ந்ததாயுள்ளது. ரஷ்யா, கிழக்கிலுள்ள நாடுகளையும் பால்கன் நாடுகளையும் அதன் கூடாரத்திற்குள் சேர்த்துக்கொள்ள அல்லது சேருமாறு வற்புறுத்தியுள்ளது.

நம்முன் காணப்படும் பல்வேறு பிரச்சினைகளும், திகைக்க வைக்கும் வினுக்களும் எதிர்காலத்தில் வரலாற்றைக் கற்பதில் பெரும்பாலும் சுவையற்றனவாயிரா.

—:(o):—

## கலைச்சொற்கள்

### அ

| | | |
|---|---|---|
| அச்சு நாடுகள் | — | Axis powers |
| அடிமைகள் விடுதலை | — | Emancipation of slaves |
| அண்மைக் கிழக்கு | — | Near East |
| அதிமேற்றிராணியார் | — | Arch-bishop |
| அமைச்சர் குழு | — | Cabinet |
| அரசத் துரோகம் | — | Treason |
| அரசியல் சட்டம் | — | Constitution |
| அரசியல் தந்திரம் | — | Diplomacy |
| அரசியல் நிர்ணய சபை | — | Constituent Assembly |
| அரசுரிமை நிர்ணயச் சட்டம் | — | Act of Settlement |
| அறிவு இயக்கம் | — | Age of reason |
| அறிவுப் பெருக்கம் | — | Intellectual current |
| அனைத்துலக உரிமை | — | International right |
| அனைத்து நாட்டுணர்ச்சி | — | Internationalism |

### ஆ

| | | |
|---|---|---|
| ஆட்பேர் | — | Speaker |
| ஆண்டுக்குறிப்பு வரலாறு | — | Annals |
| ஆயுதப் பரிகரணம் அல்லது படைக்குறைப்பு | — | Disarmament |
| ஆலோசனைக் குழுவின் உடன்பாட்டைப்பெற்ற ஆணைகள் | — | Orders in Council |
| ஆல்பர்டு அசிலியாவின் தேர்வாளர் குடும்ப ஒழுங்கு | — | Dispositio Achillea |
| ஆறு விதிகளடங்கிய சட்டம் | — | Six articles of Religion |

### இ

| | | |
|---|---|---|
| இடைக்கால ஏற்பாடு | — | The interim |
| இணக்காதார் | — | Non-conformist |
| இயங்குநர் குழு | — | Directorate |
| இயேசு சங்கம் | — | Society of Jesus |
| இருநூற்றாண்டுப் போர் | — | Two hundred years war |
| இரும்புக் கவசமணிந்த படை | — | The Iron side |

| | | |
|---|---|---|
| இளவரசன் | — | 'The Prince' |
| இறுதி உணவு விழா | — | Eucharist |

உ

| | | |
|---|---|---|
| உணர்வு ஒளிர் அறிவூட்டு | — | Enlightenment |
| உயர் ஆணை மன்றம் | — | Parliament |
| உயர் கட்டளை | — | Mandate |
| உயர் நீதி மன்றம் | — | Court of High Commission |
| உயிருள்ள கட்டளைகள் | — | Organic Articles |
| உரிமைப் பத்திரம் வழங்கப்பட்ட கம்பெனிகள் | — | Chartered Companies |
| உரிமைப் போர் அல்லது அரசியாரின் போர் | — | War of Devolution |
| உரிமை விண்ணப்பம் | — | Petition of Right |
| உரோசா மலர்ச் சண்டைகள் | — | The wars of the Roses |
| உலகச் சமுதாய அமைப்பு | — | World Order |
| உலவும் ஆயுதம் தாங்கிய படை | — | Armed Force |

எ

| | | |
|---|---|---|
| எச்சப் பாராளுமன்றம் / எச்சப் பார்லிமெண்டு | { | The Rump |
| எரிக்கப்பட்ட மண் | — | Scorched earth |

ஏ

| | | |
|---|---|---|
| ஏகாதிபத்தியம் | — | Imperialism |
| ஏழாண்டுப் போர் | — | Seven Years war |

ஐ

| | | |
|---|---|---|
| ஐரோப்பாவின் கடுந்துயர இடைப் பகுதி | — | Misery Belt of Europe |

ஒ

| | | |
|---|---|---|
| ஒருமுகப்படுத்தப்பட்ட பாசறைகள் அல்லது ஒன்று திரட்டப் பட்ட பாசறைகள் | — | Concentration Camps |
| ஒருமுகப்பாட்டுக் கொள்கை | — | Collective Responsibility |
| ஒருமுறை வழிபாட்டுச் சட்டம் | — | Act of Uniformity |
| ஒளிர் வல்லரசு | — | Enlightened Despotism |
| ஒற்றுமைப் பத்திரம் | — | Concordat |
| ஒன்றுபடும் முறை | — | Communion |

க

| | | |
|---|---|---|
| கத்தோலிக்கத் திருச்சபை | — | Catholic Church |
| கத்தோலிக்கக் கூட்டு | — | Catholic League |
| கடுந்தூய்மையாளர் | — | Puritans |
| கட்டுப்பாடற்ற தடையுரிமை | — | Liberum Veto |
| கணக்குக் கழகம் | — | Chamber of Accounts |
| காப்புறுதிச் சட்டம் | — | Iusurance Act |
| கன்வென்ஷன் | — | Convention |
| காலந் தாழ்த்திக் கடனைச் செலுத்துவது | — | Moratorium |
| காலிகன் உரிமைகள் | — | Gallican Liberties |
| கால்வினியம் | — | Calvinism |
| கிறித்துவ சமயக் கட்டளைகள் | — | Institutes of the Christian Religion |
| கீழைத் திருச்சபை | — | The Eastern Church |
| குருதி மன்றம் | — | Council of Blood |
| குறிப்பிடத் தக்கவர்கள் அல்லது முக்கியச் சிறப்புவாய்ந்தவர்கள் | — | Notables |
| குற்றத் தண்டனை அதிகாரி | — | Magistrate |
| கூட்டாளி முறை மக்களாட்சி | — | Partnership in democracy |

ச

| | | |
|---|---|---|
| சகாத்தம் | — | Era |
| சட்ட எதிர்ப்புக் கூட்டங்கள் மசோதா | — | Bill of Seditious Meetings |
| சட்ட வரம்பிற்குட்பட்ட ஆட்சி | — | Constitutional Government |
| சத்திச் சமநிலை அல்லது ஆற்றல் சமநிலை | — | Balance of power |
| சமயச் சீர்திருத்த மறுப்பு இயக்கம் | — | Counter Reformation |
| சமயத் தலைமைக் குழு | — | Consistory |
| சமய முதியோர்கள் | — | Presbyters |
| சமாதான மாநாடு | — | Peace Conference |
| சமூக வாழ்க்கை நூல் | — | Sociology |
| சர்வதேச நீதி மன்றம் | — | International Court of Justice |
| சர்வதேச சங்கம் | — | League of Nations |
| சர்வதேச உரிமைச் சாசனம் | — | International Charter of Liberty |
| சர்வதேச உறவு | — | International Relationship |
| சர்வதேச உரிமைப் பிளவு | — | Break of International Right |

| | | |
|---|---|---|
| சர்வாதிகார ஆட்சி | — | Dictatorship |
| சர்வாதிகார நாடுகள் | — | Totalitarian States |
| சாதி விலக்கு ஆணை | — | Ex-communication |
| சிறு குழுவாட்சி | — | Oligarchy |
| சுங்க வரிச்சங்கம் | — | Chamber of customs |
| சுவர்க்க நீக்கம் | — | 'Paradise Lost' |
| சூனிய வாதம் | — | Nihilism |
| செயற்குழு | — | Executive Committee |
| செயின்ட் கிளௌட் தனியரசு ஆணைகள் | — | Ordinances of St. Cloud |
| சேமப்படை | — | Reserves |

## த

| | | |
|---|---|---|
| தடையில்லா வாணிகம் | — | Free Trade |
| தண்டனை விதித் தொகுப்பு | — | Penal Code |
| தர்மகர்த்தா ஆட்சி முறை | — | Trusteeship |
| தலவாட்சி முறை | — | Local Government |
| தலைமைக் காப்பாளர் | — | Lord Protector |
| தனியுரிமைக் கொள்கை | — | Individualism |
| தன்னாட்சி மசோதா | — | Home Rule Bill |
| தானியச் சட்டங்கள் | — | Corn Laws |
| தீயிடப்பட்ட நிலம் | — | Burnt Earth |
| தீர்ப்புச் சான்றாளர் குழு | — | Jury |
| துரைத்தன அலுவலர்கள் | — | Elus |
| துரைத்தனத்தின் செயற்குழு | — | Executive Government |
| தூரக் கிழக்குப் பகுதிகள் | — | The Far East |
| தெய்விக உரிமை | — | Divine right |
| தேசியக் காவற்படைகள் | — | National Guards |
| தேசியச் சட்ட மன்றம் | — | National Assembly |
| தேசியத் தொழில் மன்றம் | — | National Workshop |
| தேர்வாளர் | — | Elector |
| தொழிற்புரட்சி | — | Industrial Revolution |

## ந

| | | |
|---|---|---|
| நடுவு நிலை நாடு | — | Arbitor |
| நட்சத்திர மன்றம் | — | Star Chamber |
| நற்செய்தி பரப்பும் சங்கம் | — | Evangelical Union |
| நன்மதிப்பு அணி | — | Legion of Honour |
| நாட்டுக்கொள்கை (or) நாட்டுணர்ச்சி | — | Nationalism |

நாட்டுப்புறக் கட்சியினர் — Whigs
நாட்டு மேற்சபை — Council of State
நான்டீஸ் கட்டளைகள் — Edicts of Nantes
நிலச் சங்கம் — Land League
நில மானிய முறை — Feudalism
நிறைவேற்றுத் துறை — Executive
நீடித்த பார்லிமெண்டு — Long Parliament
நீதி விசாரணைக் குழு — Tribunate
நூற்றாண்டுப் போர் — Hundred Years War
நேசப் படைகள் — Allies

## ப

பகர ஆட்சியாளர் — Regent
பகர ஆள் — Agent
பகுத்தறிவு வழிபாடு — Worship of Reason
படை மானிய முறை — Feudalism
பண்டைய கல்வியறிவு — Classical learning
பயங்கர ஆட்சி — Reign of Terror
பரவுகுடை — Parachute
பழமையில் பற்றுடையோர் (or) மாற்றம் விரும்பாதார் — Conservatives
பழைய போலி — Old Pretender
பன்னாட்டு ஒற்றுமையுணர்ச்சி — Internationalism
பன்னாட்டுச் சமாதானம் — International Peace
பன்னாட்டு நிகழ்ச்சிகள் அல்லது வியவகாரங்கள் — International Affairs
பாதுகாப்பு வரி — Protection Duty
பாராளு மன்றம் — Parliament
பாவமன்னிப்புச் சீட்டு — Indulgence
பிழைபடாமையாணை — Infalliability
பிராட்டஸ்டெண்டு சமயம் — Protestantism
பிரான்ஸ் கன்வென்சன் சபை — French Convention
புதிய அமைதிக் கோட்பாடு — Neo Pacifism
புரட்சி விசாரணைக்குழு — The Revolutionary Tribunal
புரோட்டகோல் — Protacol
புனிதப் பொருள் மாறும் கொள்கை — Transubstantiation
புனிதப் பொருள் மாறாக் கொள்கை — Consulestantiation
புனித ரோமப் பேரரசு — Holy Roman Empire

| | | |
|---|---|---|
| புனிதசங்கம் | — | Holy League |
| புனிதத் திரி துறவிகள் | | Friars |
| புனிதச் சடங்கு | — | Commemorative Ceremony |
| புனித நற்செய்தி பரப்பும் சங்கத்தின் சட்டம் | — | Evangelical Law |
| புனிதக் கூட்டுறவு | — | Holy Alliance |
| புனித பார்த்தலோமியா நாள் படுகொலை | — | St. Bartholomew's Massacre Day |
| பெருங்கடல் உயிரினம் | — | 'The Leviathan' |
| பெரும்பான்மை வாக்களிப்பு | — | Majority Vote |
| பெர்லின் கட்டளைகள் | — | Berlin Decrees |
| பேரவை | — | Grand Council |
| பேரரசுத் தன்மை | — | Imperialism |
| பேரவாத்தணிப்பு | — | Appeasment |
| பொதுக்காவற்குழு | — | Committee of Public Safety |
| பொது மக்கள் வாக்கெடுப்பு | — | Plebicite |
| போப்பாண்டவர் | — | Pope |
| போப்பினர் சதி | — | Popish Plot |
| போர் இழப்பீடு | — | Reparation |
| போர்மேல் விரைந்து செல்லும் பிரிட்டிஷ் படை | — | British Expeditionary Force |

## ம

| | | |
|---|---|---|
| மக்களாட்சி | — | Democracy |
| மக்களின் வாக்கெடுப்பு | — | Plebicite |
| மக்கள் உரிமைச் சாசன இயக்கம் | — | Chartist movement |
| மதச்சீர்திருத்த இயக்கம் | — | The Reformation |
| மறு சேர்க்கை | — | Reunion |
| மறு மலர்ச்சி | — | Renaissance |
| மனமார்ந்த நேசவுடன்படிக்கை | — | Entente Cordial |
| மனித உரிமைக் கோட்பாடு | — | Declaration of the right of man |
| மாகாண மன்னர்கள் | — | Intendants |
| மாநகராட்சிக் குழுச் சீர்திருத்தச் சட்டம் | — | Municipal Corporation Reform Act |
| மாபெருந்தலைவிச் சட்டம் | — | Act of Supremacy |
| மிக்குயர் தேர்வாளர் | — | Grand Elector |
| மீளப் பெறும் ஆணை | — | Edict of Restitution |
| முதலாம் சிலுவைப் போர் | — | First Crusade |
| முதியோர் ஓய்வு ஊதியச் சட்டம் | — | Old age pension Act |
| முப்பதாண்டுப் போர் | — | Thirty Years War |

| | | |
|---|---|---|
| முப்பேராயம் | — | States General |
| முழுப்பற்று நிறைவுடைய சங்கமும் ஒப்பந்தமும் | — | Colemn League and Covenant |
| முன் விதிப்புக் கொள்கை | — | Doctrine of Predestination |
| முன்னைய மன்னராட்சி | — | Ancient Regime |
| மூவாட்சியாளர் குழு | — | Triumvirate |
| மெய்யறிவு | — | Philosophy |
| மேற்பார்வையாளர்கள் | — | Superintendants |
| மேற்றிராணியார் | — | Bishop |
| மேற்றிராணியார்களின் போர்கள் | — | Bishop's Wars |

**ய**

| | | |
|---|---|---|
| யாத்திரிகர் முன்னேற்றம் | — | Pilgrim's Progress |

**லு**

| | | |
|---|---|---|
| லூதரின் சமயம் | — | Lutheranism |

**வ**

| | | |
|---|---|---|
| வட்டார ஆட்சி | — | Local Government |
| வல்லாட்சி | — | Despotism |
| வரம்பின்மை ஆட்சி | — | Absolutism |
| வன்கொலை யொறுத்தல் செய்யப்படுமிடம் | — | Chamber of Torture |
| வாக்களிப்பு | — | Vote |
| விசாரணைக் குழு | — | Tribunal |
| விலக்கு மசோதா | — | Exclusion Bill |
| விவிலியம் | — | The Bible |
| வெட்டுச் சீட்டுகள் | — | Coupons |
| ஸ்பெயின் நாட்டுக் கப்பற்படை | — | The Armada (or) The Spanish Armada |
| ஜெர்மன் வாணிகர் சங்கம் | — | Hanseatic League |
| ஹாலந்து அமைச்சர் | — | Grand Pensionary of Holland |
| ஹியூக்நோக்கள் | — | The Huguenots |
| ஹெபியஸ் கார்ப்பஸ் சட்டம் | — | Habeus Corpus Act |

— x —

# வினாக்கள்

1. சமயச் சீர்த்திருத்த இயக்கம் தோன்றி வெற்றி பெறுவதற்கு மறுமலர்ச்சி தக்க சூழ்நிலையை உண்டு பண்ணியது. விளக்கிக் கூறுக.
2. பேரரசர் ஐந்தாம் சார்லசின் வாழ்க்கை நெறியைச் சுருக்கமாகக் கூறி பிராட்டஸ்டென்டுகளைப் பற்றிய அவரது கொள்கையையும் கலந்தாய்க.
3. பதினான்காம் லூயியின் வெளிநாட்டுக் கொள்கையைப் பற்றிக் கலந்தாய்க.
4. டச்சு சுதந்தரப் போரைப் பற்றி விவரித்துக் கூறுக.
5. உணர்வு ஒளிர் வல்லாட்சியின் முக்கியக் கூறுகளை யெடுத்துக் கூறி, எடுத்துக் காட்டாக ஆஸ்திரியா மன்னர் இரண்டாம் ஜோசப்பின் ஆட்சியை விளக்குக.
6. பிரெஞ்சுப் புரட்சியின் காரணங்களைச் சுருக்கமாக விளக்கி அப் புரட்சியில் மிராபோவும், தாந்தானும் கொண்ட பங்கைப் பற்றி ஆய்க.
7. 1815-ல் கூடிய வியன்னா மாநாடு எந்தக் கொள்கைகளையும் நோக்கங்களையும் கொண்டு நாட்டெல்லைகளின் புனரமைப்பைச் செய்தது என்பதைத் தெளிவுபடுத்தி, வியன்னா ஒப்பந்தத்தின் நன்மை தீமைகளை விளக்குக.
8. சார் இரண்டாம் அலெக்சாந்தரின் உள் நாட்டுக் கொள்கையை விளக்குக.
9. பிஸ்மார்க்கின் வெளிநாட்டுக் கொள்கையின் முக்கியக் கூறு களையும் சிறப்பாக பிரான்சைக் குறித்து அக்கொள்கையை விவரிக்க.
10. ஜனாதிபதி வில்சனின் பதினான்கு கொள்கைகளை எந்த அளவிற்கு 1919-ல் நடந்த வேர்சயில்ஸ் ஒப்பந்தம் தன்னுட் கொண் டிருந்தது?
11. சமயச் சீர்திருத்த மறுப்பு இயக்கம் என்றால் என்ன? அக் காலத்திய அரசியல் நிகழ்ச்சிகளில் அவ்வியக்கங் கொண்டிருந்த செல்வாக்கை மதிப்பிடுக.
12. "பதினெட்டாண்டுகள் காலம் (1624—1642) பதினான்காம் லூயியின் முதலமைச்சரான ரிச்சிலூவின் அரசியல் நுண்ணறிவு ஐரோப்பிய அரங்கில் மேலாதிக்கம் கொண்டிருந்தது" இக் கூற்றை விளக்கி ஐரோப்பாவில் பிரான்சு ஆதிக்கம் பெற்றதற்கு ரிச்சலூ அளித்த உதவியைக் குறிப்பிடுக.
13. மகாபிரெடரிக்கின் வாழ்க்கை நெறியையும் சாதனைகளையும் சுருக்க மாகக் குறிப்பிடுக.

14. ஏழாண்டுப் போர் எவ்வாறு பிரான்சு, இங்கிலாந்து நாடுகளின் குடியேற்ற அக்கரைகளுக்குத் தீமை விளைவித்தது என்பதைக் கூறுக.

15. போலந்தின் முதலாம் பிரிவினை யேற்படக் காரணமாயிருந்த நிலைமையை ஆய்க. இப்பிரிவினை ஐரோப்பிய அரசியல் தந்திரத்தில் மிக மானக்கேடானதும் பயனற்றதுமான செயல் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்?

16. மெட்டர்னிக்கின் வெளிநாட்டுக் கொள்கையை ஆய்க. அவரது நோக்கங்கள் எந்த அளவில் வெற்றி பெற்றன வென்பதையும் ஆய்ந்து கூறுக.

17. இத்தாலிய ஒற்றுமையின் சிற்பி என்ற முறையில் கவூரைப் பற்றித் திறனாய்வு செய்க.

18. 1905-லிருந்து 1917 வரை ரஷ்யா மேற்கொண்ட அரசியலமைப்புச் சீர்திருத்த முயற்சிகளையும் அம்முயற்சிகள் ஏன் தோல்வியுற்றன வென்பதையும் சுருக்கமாகக் கூறுக.

19. 'துருக்கி நாட்டு மக்கள் போரில் வெற்றி கொண்டனர் எனினும் சமாதானத்தை (1922)ப் பெற வேண்டியவர்களாயிருந்தனர்.' இக்கூற்றை விளக்கி நவீன துருக்கியை யுருவாக்குவதில் காஸி முஸ்தாபா கமால் கொண்ட பங்கை மதிப்பிட்டுக் கூறுக

20. முதலாம் உலகப் போர் நிகழ்ந்ததற்கான முக்கிய காரணங்களையும் சூழ்நிலைகளையும் விவரி.

21. 16 ஆவது நூற்றுண்டின் தொடக்கத்தில் ஜெர்மனியில் பிராட்டஸ்டென்டு சமயச் சீர்திருத்தம் தோன்றுவதற்கான நிலையை விளக்கி, அவ்வியக்கம் வெற்றி பெற்றதற்கான காரணங்களையும் விளக்கிக் கூறுக.

22. முப்பதாண்டுப் போரின் காரணங்களையும் பயன்களையும் கூறுக.

23. ஸ்பெயின் வாரிசுரிமைப் போரில் பதினான்காம் லூயியின் பங்கை ஆய்ந்து, ஊட்ரெக்ட் சமாதானத்தின் வாசகங்களை விளக்குக.

24. மகாபிரெடரிக்கை அரசியல் வல்லுநர், சீர்திருத்தவாதி என்ற முறையில் திறனாய்வு செய்து மதிப்பிடுக.

25. நெப்போலியனால் நிறைவேற்றப்பட்ட கண்டத் திட்டத்தை (Continental System) யும் எவ்வாறு அத்திட்டம் அவரது பேரரசிற்கும் ஐரோப்பிய அரசுகளுக்கும் தீமை பயப்பதாயிருந்தது என்பதையும் விளக்குக.

26. போரிலீடுபட்டவர்களின் போர் நோக்கங்களைக் கருத்திற் கொண்டு கிரிமியாப் போரின் காரணங்களையும் பயன்களையும் விளக்குக.

27. 1870-லிருந்து 1914 வரை ஐரோப்பிய விவகாரங்களில் அண்மைக் கிழக்குப் பிரச்சினையின் முக்கியத்தைச் சுருக்கமாக கூறுக.

28. 1917-ல் சாரின் ஆட்சி கவிழ்ந்ததற்கான காரணங்களை ஆய்ந்து கூறுக.

29. இரண்டாம் உலகப் போரின் காரணங்களைச் சுருக்கமாகக் கூறுக.

30. ஐரோப்பிய வரலாற்றில் ஐந்தாம் சார்லசின் பேரரசினுடைய பரப்பையும் சிறப்பையும் விவரிக்க.

31. 16 ஆம் நூற்றூண்டில் குடியேற்றங்களின் வளர்ச்சியை சுருங்கக் கூறி ஐரோப்பியப் பொருளாதார அரசியற்றுறைகளில் அவ்வளர்ச்சியின் செல்வாக்கைத் தெளிவுபடுத்துக.

32. பிரான்சிற்கும் பிரெஞ்சு முடியாட்சிக்கும் ரிச்சிலூவும் மசாரினும் செய்த சேவைகளை விளக்குக.

33. 18 ஆவது நூற்றூண்டில் முழு இறைமையரசாயிருந்த போலந்து அழியக் காரணமென்ன?

34. 1792-ல் போர்போன் முடியாட்சியின் வீழ்ச்சியைத் தவிர்க்க முடியாததாகச் செய்த நிகழ்ச்சிகளை விளக்குக.

35. முதலாம் நெப்போலியனுடைய உள்நாட்டுக் கொள்கையையும் சீர்திருத்தங்களையும் விவரி.

36. மெட்டர்னிக்கின் வெளிநாட்டுக் கொள்கையை விவரித்து அக் கொள்கை தோல்வியுற்றதற்குக் காரணங் கூறுக.

37. இத்தாலி, ஜெர்மனி முறையே ஒற்றுமையடைந்த முறைகளைப் பரிசீலனை செய்க.

38. 19 ஆம் நூற்றூண்டின் பிற்பகுதியில் கிழக்கத்தியப் பிரச்சினை மாறிக்கொண்டிருந்த பருவங்களைத் தொடர்ச்சியாகக் கூறுக.

39. வேர்சயில்ஸ் சமாதானத்தால் (1919) தோற்றுவிக்கப் பெற்ற ஐரோப்பிய அரசியல் ஏற்பாட்டை விளக்குக.

40. சமயச் சீர்திருத்த எதிர்ப்பு இயக்கத்தின் சிறப்புக் கூறுகளைக் குறிப்பிடுக. அவ்வியக்கத்தின் அரசியல் உட்கருத்துக்களை விளக்கிக் காட்டுக.

41. சுவீடன் நாட்டு குஸ்டாவசு அடால்ஃபசின் சாதனைகளை மதிப்பிட்டுக் கூறுக.

42. பதினன்காம் லூயி மிக்குயர் மன்னரா அல்லது நுண்ணறிவற்ற பகட்டும் கொடுந்தன்மையுங் கொண்ட அறிவிலியா? ஆய்ந்து கூறுக.

43. பேரரசர் இரண்டாம் ஜோசப்பின் சீர்திருத்தங்களையும் அவை ஏன் வெற்றி பெறவில்லை யென்பதையும் விவரித்துக் கூறுக.

44. படைத்தலைவரான போனபார்ட்டு, ஆட்சித் தலைமையை யேற்றதற்கும் அவரது வீழ்ச்சிக்கும் துணையாயிருந்த சூழ்நிலையை ஆய்ந்து எழுதுக.

45. இத்தாலி ஒன்றுபடுவதற்குக் காரணமாயிருந்தவர்களைக் கூறுக.

46. 1914-க்கு முன் ஐரோப்பாவில் நிகழ்ந்த அரசியல் தந்திரஞ் சார்ந்த புரட்சியைப் பற்றி ஒரு சிறு கட்டுரை வரைக.

47. இரு உலகப் போர்களுக் கிடையில் ஐரோப்பாவில் சர்வாதிகார ஆட்சிகள் வளர்ந்ததற்குக் காரணங்கள் காட்டுக.

48. பன்னாட்டுச் சமாதானத்தை நிலைபெறச் செய்வதில் சருவதேச சங்கத்தைக் காட்டிலும் ஐக்கிய நாடுகள் நிறுவனம் எவ்வளவு மேன்மை பெற்றிருந்தது என்று தெளிவுறக் கூறுக.

49. பிரான்சிலும் சுவிட்சர்லாந்திலும் சமயச் சீர்திருத்த வியக்கத்தைப் பற்றிக் கூறுக.

50. 16 ஆவது நூற்றாண்டில் பிரான்சிற்கும் ஹாப்ஸ்பர்கு குடும்பத்தினருக்குமிடையே நடந்த போராட்டத்தின் போக்கைக் குறிப்பிடுக.

51. பெரிய தேர்வுரிமையாளர், மகாபீட்டர் இவர்களது சாதனைகளை ஒப்பிட்டு மதிப்பிடுக.

52. 1702-ல் போர்போன் முடியாட்சி, வீழ்ச்சி யுறுவதற்கான சூழ்நிலையை விவரித்துக் கூறுக.

53. ஐரோப்பாவில் (1815—1823) நடந்த ஒருமைப்பாட்டைப்பற்றி என்ன அறிந்துள்ளீர்? எவ்வித நிலையான பயன்களை அது தோற்றுவித்தது?

54. மூன்றும் நெப்போலியனுடைய சாதனையைப் பொதுவாகவும் இத்தாலியக் கொள்கையைப் பற்றிச் சிறப்பாகவும் மதிப்பிட்டுக் கூறுக.

55. நவீன ஜெர்மனியின் இரும்புச் சான்ஸலரை அறிவுமிக்க தந்தையாயும், கேடு விளைவித்த சிறப்புத் திறமை வாய்ந்தவராயும் ஆழ்ந்து ஆராய்ந்து பார்.

56. 1878-லிருந்து 1917 வரை ரஷ்யாவின் வெளிநாட்டுக் கொள்கையைத் தொடர்ந்து கூறுக.

57. இரண்டாம் உலகப் போரில் அமெரிக்க ஐக்கிய அரசுகளும் சோவியத்துப் பொதுவுடைமைக் குடியரசுகளின் ஐக்கிய நாடும் கொண்ட பங்கைத் தனித்தனியே விவரித்துக் கூறுக.

# தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

**சென்னை.**

## 1971 ஜூலை வரை வெளியிட்டுள்ள நூல்கள்

| பொருளாதாரம் | | | ரூ. | காசு |
|---|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்—I | சி. வேலாயுதம் | 6 | 50 |
| *1-A | ,, II | ,, | 9 | 00 |
| *2. | சோவியத் பொருளாதார வளர்ச்சி | டாக்டர் எம். ஜே. கே. தவராஜ் | 4 | 25 |
| *3. | அமெரிக்கப் பொருளாதாரம் | ,, | 4 | 50 |
| *4. | பொருளாதாரச் சிந்தனை வரலாறு | சோணாசலம் | 7 | 00 |
| *5. | பன்னாட்டு வாணிபம் | மு. ஆரோக்கியசாமி | 6 | 00 |
| 6. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | திருமதி. ஆர். தாமரஜாட்சி | 12 | 00 |
| 7. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்—I | தி. சி. மோகன் | 12 | 00 |
| 8. | ,, II | எம்.ஏ. அபூர்வசாமி, பி.வி. ஸ்ரீநிவாசன் | 10 | 75 |
| 9. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | க. முத்தையன் | 7 | 00 |
| *10. | பணவியலும் பாங்கியலும்—I | சி. வேலாயுதம் | 6 | 75 |
| *11. | ,, II | ,, | 11 | 50 |
| 12. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 5 | 00 |
| *13. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | பி. வி. ஸ்ரீநிவாசன் | 5 | 50 |
| *14. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4 | 75 |

*மூல நூல் (Original Book)

பொருளாதாரம்—(தொடர்ச்சி)

| | | | ரூ. | காசு |
|---|---|---|---|---|
| 15. | இந்தியப் பொருளியல்—I | எம். பாலசுப்பிரமணியன் | 10 | 00 |
| 16. | ,, II | எம். லூர்துநாதன் | 4 | 25 |
| 17. | நமது பொருளாதாரப் பிரச்சினை—I | சி. சுந்தரராஜன் | 10 | 75 |
| 18. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 10 | 50 |
| 19. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு—I | கீ. சீ. இராமசாமி | 6 | 00 |
| 20. | ,, II | ,, | 6 | 00 |
| 21. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5 | 00 |
| 22. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு—I | மு. க. சுப்பிரமணியம் | 11 | 00 |
| 23. | ,, II | பி. வி. சீநிவாசன் | 6 | 00 |
| 24. | ,, III | ,, | 6 | 50 |
| 25. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்—I | மா. குமாரசாமி | 10 | 00 |
| 26. | ,, II | அர. சேஷாசலம் | 9 | 50 |
| 27. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி—I | தே. வேலப்பன் | 10 | 00 |
| 28. | ,, II | ஜி. சிதம்பரம் | 8 | 00 |
| 29. | பணம்—சிறுவிளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10 | 00 |
| *30. | வணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடையபிள்ளை | 9 | 50 |
| 31. | பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில்-வாணிகப் புரட்சி | சு. ரா. கருப்பண்ணன் | 11 | 00 |
| 32. | பென்ஹாம் பொருளாதாரம்—I | ஏ. குழந்தை | 11 | 00 |
| 33. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 7 | 00 |
| *34. | வரவு செலவுத் திட்டம் | ஆர். ரங்காச்சாரி | 6 | 00 |
| 35. | பன்னாட்டுப் பொருளாதாரம்—I | ஏ. குழந்தை | 7 | 50 |

